# மலர்க மாநில சுயாட்சி



வழக்கறிஞர்
கே.எஸ். ஆனந்தம்

# மலர்க மாநிலசுயாட்சி

837

கே. எஸ். ஆனந்தம் பி. காம்., பி. எல்.
வழக்கறிஞர்
கோபிசெட்டிபாளையம்



தங்கம் பதிப்பகம்
கோபிசெட்டிபாளையம்

மலர்க மாநில சுயாட்சி

( ஓர் ஆய்வு நூல் )



முதற் பதிப்பு மார்ச்சு, 1975



விலை ரூ. 6()

மறைமலை அச்சகம்,
புன்செய்ப் புளியம்பட்டி,
கோவை மாவட்டம்,

## ஆசிரியரின் அன்புக் காணிக்கை

என்னைப் பெற்றெடுத்து ஆளாக்கிப் பெருமைதந்த

அன்னை அலமேலம்மா, ஐயன்குப்பு செட்டியார்,

பின்னையெம் அரசியலாசான் அறிஞரண்ணு மூவர்க்கும்

இந்நூலினை அன்புடன் படைக்கின்றேன்.



# முன்னுரை

இந்தியா—வேற்றுமைகள் நிறைந்த ஒரு நாடு. மாறுபட்ட மொழிகள், வேறுபட்ட இனங்கள், முரண்பட்ட பண்பாடுகளைக் கொண்ட தனித் தனிப் பகுதிகள்—வரலாற்றாலும் நில நூலாலும் வேறு காரணங்களாலும் பல நூற்றாண்டுகளாகப் பிணங்கி நிற்கும் பன்மொழித் தேசிய இனமக்கள்—இவையாவும் இந் நாட்டின் தனித் தன்மைகள், எனினும் அது பன்மையில் ஒருமை காண விழையும் ஒரு கூட்டுக் குடும்பம்.

இந்தியக் குடும்பத்தின் ஒருமைப்பாடு எவ்வகையிலேனும் பேணிக் காக்கப்படல் வேண்டும்; சிதைக்கப்படல் கூடாது என்பதே ஒவ்வொரு இந்தியனின் இலட்சியமாகும்.

வெள்ளையனின் அடக்கு முறையில் தோன்றி, இந்திய அரசமைப்புச் சட்டத்தால் கட்டிக் காக்கப்படும் இன்றைய "இந்திய ஒற்றுமை" உளப்பூர்வமானதா? முழுமை யானதா? நிலையானதா? உண்மைக் கூட்டாட்சியின் உயிரோட்டமான "வேற்றுமைகளில் ஒற்றுமையை" நாம் பெற்று விட்டோமா?

அடிமைத்தளை அகற்றப்பட்ட பின்னர் இந்தியர் அனைவரும் புனிதமான அரசமைப்புச் சட்டத்தின் மூலமாக உணர்ச்சி பூர்வமாக ஒருங்கிணைக்கப்பட்டு விட்டனர் என வாதிடுவோர் ஒரு பக்கம். இல்லையில்லை, பாரத நாடு சுதந்திரம் பெற்றதேயன்றி, அதன் உறுப்புக்களான மொழித் தேசிய மாநிலங்கள் நிறைவான தன்னாட்சியைப் பெறவில்லை; மெய்யானதொரு கூட்டாட்சி அரசின் கீழ் முழுத் தன்னாட்சி பெற்ற மாநிலங்களை இணைத்து, அதன் வழி எழும் இந்திய ஒற்றுமைதான் நிலையானது எனக்

கூறுவோர் மறுபக்கம். இவ்விரு முரண்பட்ட துருவக் கொள்கைகளை நிலை நாட்டுவதற்காகக் காட்டப்படும் ஆதாரங்கள், அரசியல் — வரலாற்றுச் சான்றுகள், அரசியற் சட்ட நுணுக்கங்கள் எத்தனை எத்தனையோ!

" மாநிலத் தன்னாட்சிக் கோட்பாடு " ஓர் அரசியற் கொள்கையே யன்றி ஓர் அரசியல் கட்சியின் கொள்கை யன்று. ஒரு காலத்தில் குடியாட்சிக் கொள்கையும், சமதர்மக் கொள்கையும் உலக அரங்கில் சிலபல அரசியல் கட்சிகளின் குறிக்கோள்களாக — கோரிக்கைகளாக — மட்டுமே திகழ்ந்து வந்துள்ளன. ஆனால் அவையிரண்டும் இன்றைய உலகில் பரவலாக ஏற்றுக் கொள்ளப்பட்டு விட்டன. கூட்டாட்சித்தத்துவத்தின் உயிர்க்கூறான மாநில சுயாட்சிக் கொள்கையும் இந்தியாவில் சில அரசியல் கட்சிகளின் கோரிக்கைகளாக இருப்பினும் அக்கொள்கை உலகின் பல்வேறு நாடுகளால் அரசியல், பொருளாதார, சமுதாய அடிப்படைகளில் ஏற்றுக் கொள்ளப்பட்டு, நடை முறைப்படுத்தப்பட்டு வருவது கண்கூடு.

எனவே, திரிபு இன்றி, உயர்வு நவிர்சியை நீக்கி, ஒரு சார்புநிலை தவிர்த்து, நடுநிலையில் நின்று, மாநிலத் தன்னாட்சியின் உண்மைத் தன்மைகளை முறையாக ஆய்வு செய்து, தன்னிலை விளக்கம் தருதலே இந்நூலின் நோக்கம் ஆகும்.

நான் ஓர் எழுத்தாளனல்லன்; நாள்தோறும் சட்டம் பயிலும் ஒரு வழக்கறிஞன்; அரசியற் சட்ட நுணுக்கங் களை அவ்வப்போது ஆழ்ந்து நோக்கும் வாய்ப்பைப் பெற்ற சட்ட மாணவன். இந்திய நாட்டின் ஒருமைப்பாடு குன்றாமல், குறையாமல், அதன் பல்வேறு மாநில மக்கள், சமுதாயம், அரசியல், மொழி, பொருளாதாரத் துறை களில் வளர்ச்சியையும் நல்வாழ்வையும் பெற இன்றைய இந்திய அரசமைப்புச் சட்டத்திலேயே தேவையான வழிவகைகள் உள்ளனவா என்ற சிந்தனையோட்டத்தின் விளைவாகத் தான் இந்நூலை நான் எழுதத் துணிந்தேன்.

இந்திய அரசமைப்புச் சட்டத்தின் விதிகளைப் பகுத்துப் பார்த்து, அதன் உட்கூறுகளைச் சரிவரப் புரிந்து கொள்வதற்காக இந்திய அரசமைப்பையும், அரசமைப்பு

வரலாற்றையும் (Constitutional History), அரசியல் மற்றும் பொருளாதார நூல்களையும், பல்வேறு கூட்டாட்சி நாடுகளின் அரசமைப்புகளையும், இந்திய நாட்டின் மத்திய-மாநில உறவுகள் பற்றிய ஆய்வு நூல்களையும் பயின்று அவற்றிலிருந்து திரட்டிப் பெறப்பட்ட அறிஞர்களின் கருத்துக்களைத் தொகுத்து என் ஆய்வுக்காகப் பயன்படுத்தியுள்ளேன். அவற்றில் அரசமைப்பு வல்லுநர். திரு. கே. ஆர். பாம்வால் அவர்களது "இந்தியக் கூட்டாட்சியின் அடிப்படைகள்" (The Foundations of Indian Federalism) என்ற ஆய்வு நூலில் காணப்படும் நடுநிலைக் கருத்துகளும், தமிழகத்தைச் சார்ந்த அரசமைப்பு அறிஞர் திரு. க. சந்தானம் அவர்களின் தெளிந்த ஆய்வுக் கருத்துக்களும், ஓய்வு பெற்ற உயர்நீதி மன்ற நீதிபதி. டாக்டர். இராசமன்னார் தலைமையில் நிறுவப்பட்ட மைய — மாநில ஆய்வுக்குழு அறிக்கையும் குறிப்பிடத்தக்கவை யாகும்.

அரசியல் மற்றும் அரசமைப்புச் சார்ந்த ஆய்வு நூல்கள் நம் தாய்மொழியாம் தமிழ்மொழியில் மிகமிகக் குறைவு. எனவே அன்னைத் தமிழுக்கு இவ்வெளியேனின் சிறு காணிக்கையாக இந்நூலைத் தமிழில் எழுதித்தந்துள்ளேன்.

மாநிலத் தன்னாட்சி என்ற பொருளின் செறிவையும், நுணுக்கத்தையும் அனைவரும் புரிந்து கொள்ள வேண்டுமென்ற வேட்கையால் உந்தப்பட்டு, அரசியல், வரலாறு, பொருளாதாரம் அரசமைப்புச் சட்டம், சமுதாய வளர்ச்சி, மொழி, இன்றைய அரசியற் சூழல் மாற்றுக் கருத்துக்கள் ஆகிய பல்வேறு கோணங்களில் அதனை அணுகி, இயன்ற வரை எளிய, நல்ல தமிழில் விளக்க முயற்சித்துள்ளேன்; தக்க சான்றுகளையும் எடுத்துக் காட்டுகளையும் உவமைகளையும் ஆங்காங்கே தந்துள்ளேன். தேவையான இடங்களில் தமிழ்க் கலைச் சொற்களுக்கு ஈடான ஆங்கிலப் பதங்களையும், நூலின் இறுதியில் தமிழ்—ஆங்கில அரும்பதப் பொருள் பட்டியலையும் தெளிவு கருதிச் சேர்த்துள்ளேன்.

பேரறிஞர் பெருந்தகை அண்ணா அவர்களின் மாநிலங்களவைப் பேருரையோடு துவங்கி; அரசியல் விளக்கம் தந்து; "'கூட்டாட்சி" — 'மாநிலத் தன்னாட்சிக்' கொள்

கைகளை விளக்கி; அயல்நாட்டு வரலாறுகள் மற்றும் அரசமைப்புகளுடன் ஒப்பாய்வு செய்து; இந்திய வரலாற்றில் மாநிலத் தன்னாட்சி தோன்றி, வளர்ந்து, எழுச்சி பெற்று, பின்னர் தளர்ந்து, வீழ்ச்சியுற்ற கோலத்தைக் காட்டி; மாநிலங்களைப் பொறுத்த அளவில் இன்றைய அரசமைப்பு ஓர் உரிமைப்பட்டயமல்ல — அடிமைச் சாசனமே என்பதைப் பல அறிஞர் பெருமக்களின் சான்றுகளுடன் நிலை நாட்டி; சுதந்திர இந்திய நாட்டில் அகில இந்தியக் காங்கிரஸ், ஐந்தாண்டுத் திட்டங்கள், ஆட்சி மொழி, தொழில்கள் ஆகியவைகளால் எவ்வகையில் மாநிலத் தன்னாட்சி முடமாக்கப்பட்டது என்பதையும் எடுத்துக் கூறி; வலிமையான மத்திய அரசு எது? முழு மாநிலத் தன்னாட்சி ஏன் வேண்டுமென்பதையெல்லாம் காரண, காரியங்களுடன் விளக்கிக் கூறி; மாநிலத் தன்னாட்சிக்கு மாறான வழிவகைகளையும் முறையாகத் திறனாய்வு செய்து; மாநிலத் தன்னாட்சி பற்றி அகில இந்தியக் கட்சிகளின் நிலை பற்றி எடுத்தியம்பி; தங்க வங்கம், பாக்கிஸ்தானம் ஆகிய நாடுகளில் எழுந்த மாநில சுயாட்சிப் போராட்டங்களை வரலாறு பூர்வமாக விளக்கி, இராசமன்னார் குழுவின் மைய-மாநில ஆய்வு அறிக்கையையும் தமிழக அரசின் கருத்துரைகளையும் பரிசீலித்து; இறுதியில் நிலையான இந்திய ஒற்றுமையைப் பெறுவதற்கு உரிய வழிவகைகளையும் இந்நூலில் தொகுத்துத் தந்துள்ளேன்.

நாம் ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட பொருளான ''மாநிலத் தன்னாட்சி'' நெடுங்கதையோ அல்லது புதினமோ அல்ல. அரசியல், பொருளாதாரம், வரலாறு, அரசமைப்பு, சமூகவியல், மொழியியல் ஆகியவற்றை உள்ளடக்கிய அரியதோர் கோட்பாடு ஆகும். எனவே, இந்நூலை மேலோட்டமாகப் படிக்காமல், சற்று ஆழ்ந்து படிக்குமாறு பணிவுடன் வேண்டுகிறேன்.

பல்வேறு இடையருப் பணிகளுக்குமிடையிலும் இந்நூல் முழுவதையும் படித்துப் பார்த்து, அன்புடன் அரிய அணிந்துரைகள் நல்கி, இந் நூலின் கருப்பொருளான மாநிலத் தன்னாட்சியை நடைமுறையில் அடைவதற்காக எவ்வகைத் தியாகத்திற்கும் தயாராக நின்று போராடி

வரும் என் தலைவர்கள், தமிழகமுதல்வர் மாண்புமிகு. டாக்டர் கலைஞர் அவர்களுக்கும், நடமாடும் பல்கலைக் கழகம், மாண்புமிகு. டாக்டர் நாவலர் அவர்களுக்கும், மாண்புமிகு. பேராசிரியர் அவர்களுக்கும் என் இதயங்கனிந்த நன்றியை யும் வணக்கத்தையும் காணிக்கையாக்குகின்றேன்.

இந்நூலைப் படைக்குமாறு அன்புக் கட்டளையிட்டு, அவ்வப்போது தேவைப்படும் ஆலோசனைகளும் ஊக்க மும் ஒத்துழைப்பும் நல்கி, கைப்பிரதி முழுவதையும் ஆழ்ந்து படித்து, முழு வடிவில் இந்நூல் வெளிவர முழு முதற் காரணமாக இருந்த, தமிழகத் தொழில் துறை அமைச்சர் மாண்புமிகு. எஸ். ஜே. சாதிக்பாட்சா, பி. ஏ., பி.எல்., அவர்களுக்கு நான் என்றென்றும் கடப்பாடுடைய வனவேன். இந்நூலின் சிறப்பு முழுமையும் அவரையே சாரும். குறைபாடுகளிருப்பின் அவற்றிற்கு நானே பொறுப்பு.

மாநிலத் தன்னாட்சிக் கொள்கையை நடைமுறைப் படுத்த முனைந்து நிற்கும் தமிழகச் சட்ட அமைச்சர் மாண்புமிகு. செ. மாதவன் பி.காம்., பி.எல்., அவர்களுக்கும், அறநிலைய அமைச்சர் மாண்புமிகு. மு. கண்ணப்பன் அவர் களுக்கும் என்பால் உளமார்ந்த அன்பு காட்டி அணிந் துரை வழங்கியமைக்காக என் உளங்கனிந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

மாநிலத் தன்னாட்சிக்காகவும், தமிழ்த் தேசிய உணர் வுக்காகவும் தன்னையே அர்ப்பணித்துக் கொண்ட தமிழகச் சட்டமன்ற மேலவைத் தலைவர். சிலம்புச் செல்வர். ம.பொ.சி. அவர்கள் இந்நூலை ஆழ்ந்து படித்து, என்னை அன்போடு வாழ்த்தி அரியதோர் அணிந்துரையை வழங்கியதற்காக எனது வணக்கத்தையும் அன்பு நிறை நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்திய விடுதலை இயக்கத்தில் பெரும் பங்கினை ஏற்ற வரும் அரசமைப்புச் சபையிலும் அதன் பின்னர் இது காறும் மாநிலத் தன்னாட்சிக்காக வாதாடி வருபவருமான மூதறிஞர் க. சந்தானம் அவர்களும், சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் உயர்திரு. நெ. து. சுந்தரவடிவேலு அவர்களும் என்னிடம் அன்பு காட்டி அணிந்துரைகள் வழங்கியதற்காக, எனது நன்றி கலந்த வணக்கத்தை உரித்தாக்குகிறேன்,

இந்நூல் இத்துணைச் சிறப்பாயமைவதற்குத் தோன்றாத் துணையாய் நின்று ஆக்கமும் ஊக்கமும் அளித்ததோடு, சீரிய அணிந்துரையையும் நல்கி, எனக்குப் பெருமை சேர்த்த தொழில் அதிபர் உயர்திரு. வி. எம். கைலாசம் அவர்களுக்கும், இந்நூல் கருப்பெற்று, உருப்பெற்று முழுமை பெறத் தூண்டுகோலாய் அமைந்து, எல்லா வகையிலும் எனக்கு உறுதுணையாய் நின்ற என் உடன் பிறவாச் சகோதரர், நாடாளுமன்ற உறுப்பினர். திரு. பி. ஏ. சாமிநாதன் அவர்களுக்கும் என் அன்பு கலந்த நன்றி.

இப்பெரும் நூலினை நான் எழுதி முடிப்பதற்கு எனக்குப் பல்லாற்றானும் பெரிதும் உதவி புரிந்தோர் இருவராவர். அவர்களது அரிய பணியும், ஒத்துழைப்பும் எனக்குக் கிடைக்கப்பெறாதிருப்பின், இந்நூல் இத்துணைச்சிறப்போடு அமைவுற்றிருக்குமா என்பது ஐயமே! இளம் வழக்கறிஞராகப் பணியாற்றிவரும் என் இனிய நண்பர், ந. இராமசாமி பி. ஏ., பி. எல்., அவர்கள் தமிழ்ப் பற்றும், அறிவும் ஆற்றலும் மிக்க இளைஞராவர். இந்நூல் எழுதத் தொடங்கிய காலந்தொட்டு இன்றுவரை — ஏறத்தாழ இரண்டாண்டுகள் — இரவு பகல் எந்நேரமாயினும், எவ்விடத்தும், எந்நிழலாக என்னுடனிருந்து, நான் சொல்லுவதை யெல்லாம் எழுதி, அவ்வப்போது சில கருத்துக்களைக் கூறி இந்நூல் எழுதப்பெற உதவிய அவர்தம் தன்னலங்கருதாப் பணி போற்றுதற்குரியது; என்றுல் என்றும் மறத்தற்கியலாதது. இந் நூலிற்காக எழுதித் தொகுத்த குறிப்புகளை யெல்லாம் அயராது, சலியாது, தட்டெழுத்தில் அச்சிட்டு உதவிய என் உதவியாளர் அன்புக்குரிய வி. கே. பாலு அவர்களின் பெரும்பணி பெரிதும் பாராட்டுதற்குரியது. கால நேரம் பாராது, கண் துஞ்சாது, ''என் கடன் பணி செய்து கிடப்பதே'' என்ற பொன்மொழிக்கு எடுத்துக் காட்டாக விளங்கி, எல்லா வகையானும் எனக்குதவி புரிந்திட்ட என் பாலுவின் கைமாறு கருதாப் பணியினை நான் என்றென்றும் மறவேன்.

இந்நூல் எழுதப்பெற எனக்காதரவு நல்கி, பெரிதும் உதவி புரிந்திட்ட என் கெழுதகை நண்பர், உயர்திரு. டி. ஆர். அட்டியண்ணன், பி. எஸ்சி., (Agr.)

அவர்களுக்கும், ஈரோடு சகோதரர்கள் திருவாளர்கள், என். கே. சுந்தரம், பாலு அவர்கட்கும், அன்னூர் திரு. ஜி. பாலகிருஷ்ணன், பி. காம்., அவர்கட்கும் இந்நூலின் இறுதிப்பகுதியை எழுதி முடிக்க உறுதுணையாய் இருந்து, நூல் பற்றிச் சில ஆலோசனைகளையும் நல்கிய நண்பர் கோபி வழக்கறிஞர் திரு. வி. வி. வெங்கடாசலம், பி.எஸ்சி., பி.எல்., அவர்கட்கும், எனக்கு ஊக்கமும் உற்சாகமும் அளித்து உற்ற துணையாய் நின்ற என்னன்பிற்கினிய நண்பர்கள் திருவாளர்கள். பி. எஸ். பன்னீர்செல்வம், எஸ். ஜி. கண்ணப்பா, ஜி. பி. வெங்கிடு அவர்கட்கும், மற்றும் வழக்கறிஞர்கள் கே. எம். பழனிச்சாமி, என். எஸ். சுப்பண்ணன் ஏனைய நண்பர்கட்கும் என்னன்புசால் நன்றியை உரித்தாக்குகிறேன்.

மெய்வருத்தம் பாராது, பசி நோக்காது, கண் துஞ்சாது அல்லும் பகலும் அயராது உழைத்து, தந்நூலே போல இந்நூலை எழிலாக அச்சிட்டு ஏற்றமும் எடுப்பும் பெற்று விளங்கும் வண்ணம் உரிய காலத்தே உருவாக்கி எனக்குப் பெருமை தேடித்தந்த — தனித் தமிழ் வளர்ச்சிக்கே தன்னை அர்ப்பணித்துக் கொண்ட— புன்செய்ப் புளியம்பட்டி மறைமலை அச்சகத்தின் உரிமையாளரும் என் கெழுதகை நண்பருமான, நா. த. அருணாச்சலன் அவர்களுக்கும், அவருக்குத் துணை நிற்கும் அச்சக ஊழியர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியை அன்போடு உரித்தாக்குகிறேன். அவரது அயராத தமிழ்ப்பணி ஓங்குக, ஓங்குக என நெஞ்சார வாழ்த்துகின்றேன்.

இந்நூலினை வலிவோடும் பொலிவோடும் அமைத்து, சிறப்புடன் வெளியிட்ட கோபிசெட்டிபாளையம் தங்கம் பதிப்பகத்தாருக்கு என் அன்புகலந்த நன்றி.

இந் நூல் என் கன்னி முயற்சி. பிழைகள் இருப்பின் அன்புடன் மன்னித்தருள்க!

எளியேனின் இம்முயற்சிக்குத் தமிழ் கூறும் நல்லுலகம் தக்க வரவேற்பளித்து, ஊக்கமளித்து வாழ்த்துமென உறுதியாக நம்பும்,

கோபி – 638552, அன்பன்,

23—3—1975. கே. எஸ். ஆனந்தம்.

மு. கருணாநிதி

முதலமைச்சர்




தலைமைச் செயலகம்

சென்னை

# அணிந்துரை

...o...

நண்பர் ஆனந்தன் எழுதியுள்ள 'மலர்க மாநில சுயாட்சி' எனும் இந்த நூல், சுயாட்சிப் போரில் குதித்துள்ளவர்களுக்குக் கிடைத்துள்ள மற்றுமொரு வலிமை மிக்க போர்க் கருவியாகும்.

இன்று இந்திய அரசியல் அரங்கில் மாநில சுயாட்சிக் கோரிக்கை, புது முறுக்குடன் எழுந்து நிற்கிறது. 1974-ஆம் ஆண்டு, தமிழ்நாடு சட்டப் பேரவையில் மாநில சுயாட்சித் தீர்மானத்தை நான் முன்மொழிந்த நாளும், அந்தத் தீர்மானம் பேரவையில் நிறைவேற்றப்பெற்ற நாளும் தமிழ் மாநில வரலாற்றில் மட்டுமின்றி, இந்திய நாட்டு வரலாற்றிலேயே குறிப்பிடத்தக்க நாட்கள் என்று நான் பெருமைப்படுகிறேன். நாட்டுப் பிரிவினையைத் தனது கொள்கையாகக் கொண்டிருந்த தி. மு. கழகம், இந்திய நாட்டு ஒருமைப்பாட்டுக்குக் குந்தகம் வரக்கூடாது என்பதிலும், பாதுகாப்பு ஊனமுறக் கூடாது என்பதிலும் திடமான உறுதி கொண்டு, நாட்டுப் பிரிவினைக் கொள்கையை அறவே கைவிட்டு விட்ட போதிலும் அந்தப் பிரிவினைக்காகச் சொல்லப்பட்ட காரணங்களை மறந்துவிடவில்லை. அதனால்தான் பத்திரிகையாளர்களுக்குப் பேட்டி வழங்கியபோது அறிஞர் அண்ணா அவர்கள், கழகத்தின் குறிக்கோளாக மாநில சுயாட்சியைச் சுட்டிக் காட்டினார். மத்தியில் உண்மையான கூட்டாட்சி இலங்கிட வேண்டுமானால் மாநிலங்கள் சுயாட்சித் தன்மை பெற்று விளங்கிட வேண்டும் என்பதுதான் பொருத்தமானதாகும். மண்டபத்தின் மேற்பகுதியில் பளு அனைத்தையும் வைத்துவிட்டு, பலமற்ற தூண்களை

மண்டபத்தைத் தாங்குவதற்காக அமைப்பது என்பது கேலிக்குரிய ஒன்று. இன்றுள்ள மத்திய அமைப்பும் மாநில அமைப்பும் இந்த நிலையில்தான் உருவாக்கப்பட்டுள்ளன. இதனை விவரித்து, விற்பன்னர் பலரும் மாநிலங்கள் சுயாட்சி பெற வேண்டுமென்பதற்கான சரியான வாதங்களை எடுத்து வைத்துள்ளனர். அவைகள் அலட்சியப்படுத்தப்படக் கூடியவைகள் அல்ல. மாநில சுயாட்சிக் கோரிக்கையை எதிர்க்கட்சியாக இருந்து எடுத்துவைத்த போது ஏற்பட்ட அனுபவத்தைவிட, அதிகமான அனுபவம், தி. மு. கழகம் ஆளுங் கட்சியாக மாறிய பிறகு ஏற்பட்டுள்ளது என்பதை 1967, 1968, ஆண்டுகளில் தமிழக முதல்வர் அண்ணா அவர்கள் சட்டப் பேரவை, மேலவைக் கூட்டங்களில் ஆற்றிய உரைகளின் வாயிலாகவும், அதற்குப் பிறகும் தொடர்ந்து கழக அரசு அளித்த நிதிநிலை அறிக்கைகளின் வாயிலாகவும் உணர்ந்துகொள்ள முடியும்.

இந்திய சுதந்திரத்தை யொட்டி உருவான அரசியல் அமைப்புச் சட்டத்தின்படி இயங்கிய மத்திய – மாநில அரசுகள், எதிர்பார்த்த மேன்மையை நாட்டு மக்களுக்கு அளிக்க இயலவில்லை என்பதை நமது பல ஆண்டுக் கால அனுபவம் நமக்குப் புரிய வைக்கிறது. ஆகவேதான் மத்திய மாநில உறவுகளை மீண்டும் ஆராய்ந்து மாநிலங்களை, மத்திய அரசின் முதலாளித்துவ ஆதிக்கத்திலிருந்து விடுவிப்பதற்காக, அரசியல் சட்டத்தைத் திருத்திட வேண்டும் என்று குரல் எழுந்துள்ளது. மக்களிடம் மிக நெருங்கிய தொடர்பு கொண்டுள்ள மாநில அரசுகள், அந்த மக்களுக்கு நன்மைகளைப் பெருக்கிட, சுயாட்சி உரிமையைப் பெற்றாக வேண்டும்.

அதிகாரமற்ற சூழ்நிலைக் கைதியாக மாநில முதலமைச்சர்கள் இருப்பதை எடுத்துக்கூறிய அண்ணா அவர்கள், மாநிலங்கள் உரிமைக்கொடி உயர்த்த மக்களைத் தயார்படுத்தவும், ஒரு நேரம் வரும்போது உறுதியுடன் நின்று போராடவும் தயாராக இருக்க வேண்டுமென்று, தனது இறுதிக் கட்டுரையில் குறிப்பிட்டார்.

அந்த எண்ணத்துக்குக் கொடுக்கப்பட்டுள்ள எழுச்சி வடிவம்தான் கழகம், பிரகடனம் செய்துள்ள மாநில சுயாட்சிக் கொள்கையாகும். இந்த நூல் வெளிவரும் நேரத்தில், டெல்லி நாடாளு மன்றத்தில் பிரதமர் இந்திரா காந்தி அவர்கள், மாநில சுயாட்சிக்கு இணங்க முடியாது எனத் திட்டவட்டமாகத் தெரிவித்துள்ளார்.

இதேபோன்ற திடமான மறுப்புத்தான் ஷேக் அப்துல்லாவுக்கும் சில ஆண்டுகளுக்குமுன் தெரிவிக்கப் பட்டது. ஆனல் மறுப்பு வழங்கிய அதே மத்திய அரசு இன்று அப்துல்லாவை அழைத்துப் பேசி, காஷ்மீர் சிம்மா சனத்தில் உட்கார வைத்து, தன் பிடிவாதப் போக்கி லிருந்து கீழே இறங்கி வந்துள்ளது.

ஜனநாயக முறையில் இந்தக் கோரிக்கை வெற்றி பெற வேண்டு மென்பதே நமது கருத்து.

தியாகத்தின் வாயிலாகத்தான் இந்த இலட்சியம் ஈடேற வேண்டுமென்ற நிலை பிறக்குமானல் அதற்கும் நாம் தயாராகத்தான் இருக்க வேண்டும். இருக்கிருேம்.

மக்களுக்கும், அரசியல்வாதிகளுக்கும் விளக்கமளிக் கும் வண்ணம், நமது நண்பர் வழக்குரைஞர் ஆனந்தம் அவர்கள் இந்த அரிய முயற்சியைச் செய்துள்ளார். ஏராளமான எடுத்துக்காட்டுக்கள்—மேதைகள் பலரின் மேற்கோள்கள்—அடங்கிய அருமையான கருவூலமாக இந்தப் பெரிய நூல் விளங்குகிறது.

‘மாநில சுயாட்சி’யை விரிவாக விளக்கிடப் பல நூல் கள் வெளிவந்துள்ளன. இன்னும் எத்தனை நூல்கள் வேண்டுமானலும் வரலாம். பலரும், பல கோணங்களில் ‘மாநில சுயாட்சி’ பற்றி ஆராய்ந்து அறிவிக்க வேண்டும். தெளிவு பிறக்க, அது வழி வகுக்கும்.

மெத்தச் சிரமம் எடுத்துக் கொண்டு, பேருழைப்பு நல்கி இந்தக் கருத்துப் பேழையைத் தந்துள்ள ஆனந்தம் அவர்களின் ஆர்வத்தை, ஆற்றலைப் பாராட்டுகிறேன். வாழ்த்துகிறேன்.

சென்னை - 9 அன்புள்ள,
5-3-1975. (ஒப்பம்) மு. கருணாநிதி.

இரா. நெடுஞ்செழியன்

கல்வி–சுற்றலா அமைச்சர்




தலைமைச்செயலகம்

சென்னை-9

# மதிப்புரை

****

''பெரியவர்கள் சிந்திக்கிறார்கள்—இளைஞர்கள் செய்து முடிக்கிறார்கள்'' என்பது பொதுவாகச் சொல்லப்படும் பொன்மொழி. பேரறிஞர் அண்ணா அவர்கள் சிந்தித்துச் சொல்லியதைச் செயற்படுத்திக் காட்டவேண்டிய கடப்பாடு இன்றைய தமிழக இளைஞர்களைச் சார்ந்ததாகிறது.

''மாநிலத்திலே சுயாட்சி—மத்தியிலே கூட்டாட்சி'' என்ற கொள்கை முழக்கம், பேரறிஞர் அண்ணா அவர்களின் சிந்தனையில் பிறந்து, இப்பொழுது எங்கு பார்த்தாலும் எதிரொலிக்கத் தலைப்பட்டிருக்கிறது. மனிதனது எந்தவொரு செயலுக்கும், சிந்தனைதான் அடிப்படை. சிந்தனையில் வலிவு ஏற்படாமல், செயலிலே வலிவு ஏற்படாது. ''வினைத் திட்பம் என்பது ஒருவனது மனத் திட்பம்'' என்றார் வள்ளுவப் பெருந்தகையார். நாட்டின் குடிமக்களை ஒரு குறிப்பிட்ட கொள்கைக்கு ஆதரவாக ஈர்ப்பதில் வெற்றி பெற்றால்தான், அந்தக் கொள்கையை நடைமுறைப்படுத்தும் செயல்முறையிலே வெற்றிபெற, அவர்களை ஈடுபடுத்த முடியும். செயல்முறைக்குக் கொள்கை விளக்கம் முதற் படிக்கட்டாக அமைகிறது. எனவேதான், பேறிஞர் அண்ணா அவர்கள் ''மாநிலத்திலே சுயாட்சி—மத்தியிலே கூட்டாட்சி'' என்ற கொள்கையை வெற்றிபெற வைக்க, கொள்கைவிளக்கம் செய்ய வேண்டியது, இன்றியமையாத ஒன்று என்று வற்புறுத்தி வந்தார்கள். ''தம்பியுடையான் படைக்கஞ்சான்'' என்ற உணர்வோடு, அறிஞர் அண்ணா அவர்கள்,

1969-ஆம் ஆண்டில் 'தம்பிக்கு' எழுதிய மடல்களில்,

> ''கூட்டாட்சித் தத்துவத்தை மக்களுக்குக் கற்றுத் தர வேண்டும். கொல்லைப்புற வாயில் வழியாக நுழையும் ஒருவகை இரட்டை ஆட்சியே நமது இன்றைய அரசியல் சட்டம் என்பதை, தி. மு. க. ஆட்சியிலிருப் பதன் மூலமாகச் சிந்திக்கும் ஆற்றல் படைத்த மக்க ளின் கவனத்திற்குக் கொண்டுவர முடியுமெனில், உண்மையில் அதுவே நாம் அரசியல் உலகத்திற்குச் செலுத்திய உரிய பங்காகும்''

என்று குறிப்பிட்டுள்ளார்கள்.

''மாநிலத்திலே சுயாட்சி—மத்தியிலே கூட்டாட்சி'' என்ற கொள்கை முழக்கத்தை, திராவிட முன்னேற்றக் கழகம் எதிர்க் கட்சி வரிசையிலே வீற்றிருந்த போதும் முழங்கிற்று; இப்பொழுது ஆளுங் கட்சியாகத் திகழும் போதும் முழங்குகிறது; முழங்கிக்கொண்டே இருக்கிறது.

பேரறிஞர் அண்ணா அவர்கள் தம் வாழ்நாளில் இறுதிக் கட்டத்தில் கண்ட கனவை, நனவாக்க எடுத்துக் கொள்ள வேண்டிய முயற்சிகளில், தலையாய ஒரு முயற்சி தான், ''மலர்க மாநில சுயாட்சி'' என்ற நூலின் தோற்றம். இந்த நூலை அழகாகவும், அருமையாகவும், விரிவாகவும், விளக்கமாகவும், தெளிவாகவும், திட்பமாக வும் கொண்டு வருவதிலே வெற்றி கண்டுள்ள அருமை நண்பர் வழக்கறிஞர், சே. எஸ். ஆனந்தம் அவர்களை நான் பெரிதும் பாராட்டிப் போற்றி, வரவேற்று, வாழ்த்து கிறேன்.

'இந்தியா' ஒரு கண்டமா? அல்லது ஒரு நாடா? என்ற வினா அறிஞர் பெருமக்களால் அடிக்கடி எழுப்பப் பட்டு விடையிறுக்கப்பட்டு வருகிறது. இந்தியா ஒரு கண்டத்துக்கு உரிய இலக்கணத்தைப் பெற்றிருக்கிறதா? அல்லது ஒரு நாட்டிற்குரிய இலக்கணத்தைப் பெற்றிருக் கிறதா? என்று ஆராய்ந்து பார்த்தால், 'கண்டம்' என்ப தற்கு என்ன என்ன இலக்கணங்கள் கூறப்படுகின்றதோ, அவைதான், இந்தியாவிற்குப் பொருந்தி வருமேயல்லா மல், நாட்டிற்குரிய இலக்கணங்கள் பொருந்தி வரா

என்பது வெள்ளிடைமலை. ஆசியாவைக் கண்டம் என்று குறிப்பிடும் நிலையில், இந்தியா ஒரு துணைக் கண்டம் என்று பெயர் பெறுகிறது.

இந்தியாவை வாழவைக்க ஒற்றையாட்சி முறை பொருந்தி வருமா? அல்லது கூட்டாட்சி முறை பொருந்தி வருமா? என்று ஆய்ந்து பார்த்தால், இந்தியா போன்ற துணைக் கண்டங்களுக்குக் கூட்டாட்சி முறைதான் பொருந்தி வரும் என்பது கண்கூடு. மொழி–பண்பாடு–நாகரிகம்–பழக்கவழக்கம்-நடை உடை நடிப்பு–வரலாறு போன்றவற்றில் வேறுபட்டு விளங்கும் பல்வேறு பகுதிகள், மாநிலங்கள் என்று அமைந்து, மாநில சுயாட்சியைப் பெறுவதும், அவையெல்லாம் ஒன்று சேர்ந்த பரப்பு, துணைக்கண்டம் என்று அமைந்து, கூட்டாட்சியைப் பெறுவதும் உலகில் முறையாக இருக்கக் காண்கின்றோம். இந்த அடிப்படையில்தான் அமெரிக்கா —இரஷ்யா—கனடா—சுவிட்சர்லாந்து — ஆஸ்திரேலியா போன்ற நாடுகள் அமைந்து வெற்றிகரமான அரசியல் வாழ்வை நடத்தி வருகின்றன. உட்பகுதிகளை 'மாநிலங்' கள் என்று குறிப்பிடுவதால், அவையெல்லாம் இணைந்த பரப்பை 'நாடு' என்று அழைக்கிறார்கள்.

பேரறிஞர் அண்ணா அவர்களின் கொள்கைவழி நடை போட்டுச் செல்லும் திராவிட முன்னேற்றக் கழகம் 'மாநிலத்திலே சுயாட்சி—மத்தியிலே கூட்டாட்சி' என்ற கொள்கை முழக்கத்தை எழுப்பும்போது, சிலர் தி.மு. கழகம் நாட்டுப் பிரிவினைக்குப் போராடுகிறது என்று கூறிக் குறிக்கோளைத் திசை திருப்பிவிடப் பார்க்கிறார்கள். தி. மு. கழகம் தெளிவாகவும் திட்பமாகவும் சொல்லி வருவது ''மாநிலத்திற்குத் தன்னாட்சி கேட்கிறோமே யல்லாமல் தனியாட்சி கேட்கவில்லை'' என்பதுதான். தி. மு. கழகம் 'மாநிலத்திற்குச் சுயாட்சி'தான் கேட்கிறதே யல்லாமல், 'நாட்டிற்குத் தனியாட்சி' கேட்கவில்லை. 'தன்னாட்சி' என்பது ஒன்று, 'தனியாட்சி' என்பது வேறு. இந்த விளக்கம் சிறுவர்க்கும் எளிதாகப் புரியக்கூடிய ஒன்று தான்.

'மாநிலம்' என்ற சொல்லைப் பயன்படுத்தும்போது, அது ஒரு நாட்டின் உட்பகுதி என்பது,தானே பெறப்படும்; அது தனித்தியங்கும் ஒரு நாட்டினைக் குறிப்பிடும் சொல்லாகாது.

'இந்தியா' ஒரு வலிவுள்ள நாடாக இருக்க வேண்டாமா' என்ற ஐய வினா சிலரால் அடிக்கடி எழுப்பப்படுகிறது. 'இந்தியா' ஒரு வலிவுள்ள—வளமுள்ள—வசதியுள்ள—வாய்ப்புள்ள ஒரு நாடாகத் திகழவேண்டும் என்பதைத்தான் தி. மு. கழகம் அழுத்தந் திருத்தமாகக் கூறி வருகிறது. 'இந்தியா'வை ஈடும் எடுப்புமற்ற ஒரு வலிவான நாடாக ஆக்கவேண்டும் என்பதுதான் தி. மு. கழகத்தின் குறிக்கோள். அதற்காகத்தான் இந்தியா ஒரு முழுமை பெற்ற கூட்டாட்சி நாடாக இலங்க வேண்டும் என்பதை வலியுறுத்தி வருகிறோம்.

உலகிலே புகழும், பெருமையும், வலிமையும், வளமையும், சீரும், சிறப்பும் பெற்றுத் திகழ்கிற இரண்டு பெரும் நாடுகள் அமெரிக்காவும், இரஷ்யாவும் ஆகும். அந்த இரண்டு நாடுகளும் 'மாநிலத்திலே சுயாட்சி—மத்தியிலே கூட்டாட்சி' என்ற முறையை முழுக்க முழுக்கக் கடைப்பிடித்து ஒழுகும் நாடுகளாகும்.

இந்திய மண்ணைக் காப்பாற்ற என்ன என்ன அதிகாரங்கள்—உரிமைகள்—வசதிகள்—வாய்ப்புக்கள் வேண்டப்படுமோ அவையெல்லாம் மத்திய ஆட்சியிடம் ஒப்படைக்கப்பட வேண்டும்; மக்களை வாழவைக்க என்ன என்ன அதிகாரங்கள்—உரிமைகள்—வசதிகள்—வாய்ப்புக்கள் வேண்டப்படுமோ அவை யெல்லாம் மாநில ஆட்சியிடம் ஒப்படைக்கப்பட வேண்டும். சுருக்கமாகக் கூறவேண்டுமானால், 'இந்தியாவைக் காப்பாற்ற மத்திய அரசு—மக்களை வாழவைக்க மாநில அரசுகள்' என்ற நிலை ஏற்பட வேண்டும் என்பதுதான் தி. மு. கழகத்தின் குறிக்கோளாகும்.

முழுமை பெற்ற மாநில சுயாட்சியை ஏன் பெறவேண்டும் என்பதற்கு அருமை நண்பர் வழக்கறிஞர் கே. எஸ். ஆனந்தம் அவர்கள் அடுக்கடுக்காக எடுத்து வைக்கும்

விளக்கங்கள், கூறும் காரணங்கள், மோதவிடும் வாதங்கள், காட்டும் மேற்கோள்கள், நிலைநாட்டும் கருத்துக்கள், ஒப்பிடும் எடுத்துக்காட்டுக்கள் எல்லாம் மிகமிகச் சிறந்தனவாக இந்த நூலில் மிளிர்கின்றன.

அருமை நண்பர் ஆனந்தம் அவர்களின் ஆழ்ந்த கல்வியறிவையும், விளக்கிக் காட்டும் ஆற்றல் திறனையும், வாதாடும் வன்மையையும், வெளிப்படுத்தும் உணர்ச்சிப் பெருக்கையும் நான் பெரிதும் பாராட்டுகிறேன்.

மாநில சுயாட்சிக்கான அறப் போராட்டத்தில் ஈடுபடும் அறப்போர் வீரர்கள் ஒவ்வொருவர் கையிலும் இந்த நூல் ஒளிர்வாளாகத் திகழும் என்பது மட்டும் உறுதி!

மலர்க மாநில சுயாட்சி!

சென்னை-9 (ஒப்பம்) இரா. நெடுஞ்செழியன்
5-3-1975.

க. அன்பழகன்,
மக்கள் நல்வாழ்வுத்துறை
அமைச்சர்.




தலைமைச் செயலகம்,
சென்னை-9

# அணிந்துரை

உணர்ச்சிபூர்வமான நாடு உருவாகும் வழி வகை யாது? இந்தியா அல்லது பாரத் எவ்வாறு உருப் பெற்றுள்ளது? அதன் அரசியல் அமைப்புச் சட்டம், பல்வேறு மாநில அரசுகளை உள்ளடக்கியதாயினும் எந்தெந்த வகையால் ஒருமைத் தன்மை கொண்ட, குறைபாடுள்ள கூட்டாட்சியாக வடிவம் பெற்றுள்ளது? அதன் விளைவும் பயனும் யாவை? வரலாற்று உண்மைகள் அடிப்படையில்—உரிமையுள்ள மக்களாட்சி தழைக்கக் கூடிய வகையில் — ஆட்சி நிலவ வேண்டுமெனில் அரசியல் சட்டம் எப்படி அமைந்திருக்க வேண்டும்? என்னும் வினாக்களுக்கு விடை நாடுவோர் வேண்டி விரும்பிப் பயில வேண்டியதொரு நூல்—'மலர்க மாநில சுயாட்சி' என்னும் இந்த ஏடாகும். இந்தக் கேள்விகட்கு விளக்கம் பெறும் எவரும் மாநிலத் தன்னாட்சியின் இன்றியமையாமையை ஏற்காமல் இரார்.

உலகத்திலேயே மக்கள் தொகையால் சீனாவுக்கு அடுத்த இரண்டாவது இடத்தையும், ஒரு நாட்டின் பரப்பளவினால் ஏழாவது இடத்தையும் பெற்று, மக்களின் பேச்சு மொழிகள் ஆயிரத்துக்கும் மேல் என்பதால் அந்த வகையால் முதல் தகுதியையும் பெறுகின்ற இந்தியா—இங்கு வாழ்கின்ற அறுபது கோடி மக்களின் இன வேறுபாடு—சமய மாறுபாடு—சமூக நிலை—பழக்க வழக்கம்—பண்பாடு ஆகியவற்றை எண்ணிப் பார்ப்பவர்களுக்கு ஒரு சிறிய உலகமாகவே காணப்படும். இந்தியாவை ஓர் துணைக் கண்டம் என்றே, வரலாற்று ஆசிரியர் குறிக்கும் பழக்கம், பல்வேறுபட்ட இன

மொழி, கலை, நாகரிகவரலாற்று வேறுபாடு கொண்ட மக்கள் வாழும் பரந்து விரிந்து கிடக்கும் ஒரு நிலப்பரப்பு இது என்பதையே வலியுறுத்தும்.

மக்களாட்சியில்—அதன் இறைமைத் தன்மையாகிய முடிவான அதிகாரங்கள் அதன் மக்களுக்கே உரியன. உண்மையான 'குடியரசு' அமைப்பில், மக்களின் ஆட்சி உரிமைகள் நாளும் செயல்படும் வழிவகை நிலவ வேண்டும்.

மக்களின் உரிமை விளங்கும் வண்ணம் உருவாகக் கூடிய ஆட்சி அமைப்புக்களை வழங்கும் அரசியல் சட்டத் தினாலேதான் 'குடியாட்சி' மலர முடியும். குடிமக்களுக்கு ஆட்சி அமைப்புடன் ஏற்படும் நெருக்கத்துக்கும்—அவர் தம் விருப்பை எடுத்துக்காட்டும் வாய்ப்புடையதாகும் அரசமைப்புக்கும் ஏற்பவே—'தமது அரசு' என்னும் எண்ணம் தழைக்கும். அந்த உணர்வு வளர்க்கும், பொறுப்புணர்ச்சியே—கடமையைச் செய்து உரிமையை நாட்டும் 'குடியரசுப்' பக்குவத்தை வளர்க்கும். அத்தகைய உணர்வு தழைக்க இடமில்லாது—நடுவண் அரசில் குவிக் கப்பட்ட அதிகாரங்களைக் கொண்ட குடியரசு—பரவலாக வேர்விட்டு வளரும் தருவாகாது என்பது மட்டுமல்ல; நாளடைவில் தானே பட்டுப் போகும் நிலைக்கும் ஆளாகும்.

மக்களுக்கு ஆட்சியில் உள்ள உரிமை அவர்களால் உணரப்படுவதற்கு—மக்கள் எந்தெந்த அளவில் கூடி—சில முடிவுகளை மேற்கொள்ளக் கூடுமாயினும்—அவை அங்கங்கே செயல்படுத்தக்கூடிய வகையில்—ஆட்சி அதிகாரங்கள் பரவலாக்கப்பட வேண்டும். ஊராட்சி களைக் கொண்ட சிற்றூர்கள் முதல் நடுவண் ஆட்சி அமைந் துள்ள டில்லி வரையில் அமைந்துள்ள பல்வேறு குடியாட்சி அமைப்புக்களும் தத்தம் நிலையிலும்—அளவிலும்—முறை யிலும் நன்கு செயல்படுதற்கேற்ற அதிகாரங்களைப் பெற்றுத் திகழ வேண்டும். உத்தமர் காந்தியடிகள் குறிப் பிட்டது போன்று மக்களோடு நெருக்கமுள்ள அடிமட்டத் தில் ஆட்சி அதிகாரங்கள் வழங்கப்பட்டு—அவற்றை இணைக்கும் சங்கிலியாக மேல்மட்டப் படிக்கட்டுகள் அமைய வேண்டும். மாறாக இன்றைய இந்தியாவில்

ஏற்படுத்தப் பட்டுள்ள ஆட்சிமுறை — உச்சியில் இன்றியமையாத அதிகாரங்கள் மட்டுமே கொண்ட கோபுரத்தைப் போன்ற வடிவம் கொள்வதற்கு மாறாக— பிரமிட் கோபுரத்தையே தலைகீழாக நிறுத்தி வைத்து— அரசியல் தந்திரம் என்னும் திறமையால் நான்கு பக்கமும் முட்டுக் கொடுத்துள்ளது போன்று தோற்றமளிக்கிறது.

மக்களுக்குத் தொலைவாகவும்—எட்டாத நிலையிலும் நடுவண் அரசில் குவித்து வைக்கப்பட்டுள்ள அதிகாரங்கள் அளவையும் வகையையும் கணக்கிட்டுப் பார்த்தால்— ஒற்றுமை என்னும் பெயரால் ஒருமைப் பாட்டை உருவாக்கிட முனையும் ஆதிக்க மனப்பான்மையின் புறத்தோற்றமாகவே காட்சி தரும். எனவே தான் இந்தியாவின் எந்தப் பகுதியில் வாழும் மக்களும்—மக்கள் ஆட்சியில் நம்பிக்கை இழந்து நாளும் குழப்பத்திற்கு ஆளாகி வரும் நிலையினை இன்று காண்கின்றோம்.

அதிகாரங்கள் குவிந்து கிடக்கும் டில்லிக்கு அண்மையில் உள்ள மாநில அரசுகளில் மக்கள் நம்பிக்கை கொள்ளாது டில்லியையே எதிர்பார்க்கும் நிலை ஏற்பட்டு மாநிலத் தலைநகர்கள் மதிப்பிழந்த நிலை ஏற்பட்டுள்ளது. டில்லிக்குத் தொலைவில் உள்ள மாநில மக்கள்—கிழக்குக் கோடியோ—தெற்குக் கோடியோ எதுவாயினும்—டில்லியிடம் தொடர்புகொள்ள முடியாத தொலைவில் உள்ளதால் உரிமை குறைந்த மாநில அரசுகளால் நிறைவேற்ற முடியாத பல கடமைகளுக்குங்கூட—மாநில அரசுகளையே எதிர்பார்த்து ஏமாற்றம் அடைந்து, குற்றஞ் சுமத்தும் நிலை ஏற்பட்டுள்ளது. இரண்டு வகையான நிலையும் 'குடியரசு' ஆட்சியில் தோன்றக்கூடாதவை. இதன் விளைவு—குடியரசுக் கோட்பாட்டுக்கே உலைவைத்திட ஏதுவாகி விடுமோ என்னும் 'சிந்தனை,' அறிஞர்களிடையே எழுந்துள்ளது இன்று.

மரங்களிலே விரிந்து பரந்து கிளை படர்ந்து பெருநிழல் வழங்கும் ஆலமரத்தை ஒத்துப் பரந்து விரிந்தது இந்த நாடு. அவ்வளவு விரிந்து பரந்த ஆலமரம் வீழாது நிற்பது அதன் விழுதுகளாலே. விழுதுகள் இறங்கி வேர் விட்டுத் தூணெனத் தாங்கும் நிலை பெறுவதே மரத்திற்கு

ஆதரவு. விழுதுகள் நிலத்தில் வேர்விட்டு வளரின் அவை மரம்போன்று தோன்றுமே என்று மயங்கி விழுது இறங்கும் போதே வெட்டிவிடும் செயலில் ஈடுபடுவோர் மதியுடையோராகார். அதைப் போன்றே இந்திய நடுவண் அரசுக்குப் பொருந்திய விழுதுகள் மாநில அரசுகள். அந்த விழுதுகள் வளர வாய்ப்பற்ற முறையில் மைய அரசு செயல்பட அரசியல் அமைப்பு வழிகோலுமானுல்—விளைவு என்னுகும் என்று கூறத் தேவையில்லை. மரம் நாளடைவில் கிளை முறிந்து வளங்குன்றி, படர்ந்து நிற்க முடியாது. எனவேதான்—பரந்துபட்ட தன்மையைக் குறிப்பாக ஒலிப்பது போன்றே 'பாரத்' என்று பெயர் வழங்கும் இந் நாட்டிற்கு—'கூட்டாட்சி முறையே' ஏற்றது என நல்லறிவாளர்கள் வலியுறுத்தினர். அதற்கு மாருக ஒற்றையாட்சி முறை நோக்கத்தை உள்ளீடாகக் கொண்டு ஒன்றியப் பெயர் கொண்ட போலிக் கூட்டாட்சி முறையே—அரசியல் சட்டத்தின் மூலம் உருவாக்கப்பட்டுள்ளது. அதன் வடிவத்தை மட்டுமன்றி, அதன் விளைவையும்—குறையையும் நாளும் கண்டறிந்தோரே இன்று 'மாநில சுயாட்சி'யின் தேவையை வலியுறுத்த முற்பட்டுள்ளனர்.

நாடு உரிமை பெற்றதன் பயனுக உருப்பெற்றிருக்க வேண்டிய மாநில மக்களின் உரிமை காக்கும் ஆட்சி அமைப்பு உரிமைகள் மறுக்கப்பட்ட நிலையில் உழல்வதாலேயே—அதைப் பயனும் நிறைவும் உடையதாகச் செய்ய 'மாநில சுயாட்சி' வேண்டப்படுகின்றது. 'மாநில சுயாட்சி' என்னும் தொடரே—மத்தியில் கூட்டுமுறை ஆட்சியைக் கொண்டது என்பதைத் தெளிவாக்கும். மத்தியில் இணைப்புத் தன்மையுள்ள கூட்டுமுறை ஆட்சி உருவானுல்—'மாநில சுயாட்சி' கேட்கும் நிலையே பிறந்திருக்காது. எனவே-இதனைச் சுதந்திரத் தனியாட்சி கேட்பதாகக் கற்பித்துப் பேசுவோருக்குத் தெளிவு ஏற்படுத்த—நாட்டின் ஒரு பகுதியாகும் மாநிலத்தின் சுயாட்சி உரிமைகளை விளக்கும் அவசியம் எழுகின்றது.

நாட்டுப் பிரிவினைக் கொள்கையைத் திட்டவட்டமாகக் கைவிட்டதனை—அறிவித்த தென்னுட்டுக் காந்தி பேரறிஞர் அண்ணு அவர்கள்—அன்றே—பிரிவினைக்கு இடமற்றதும்—ஒற்றுமைக்கு வலிவூட்டுவதும் மக்கள் உரிமை

தழைக்க இடமளிப்பதுமான 'மாநில சுயாட்சியே' தமது குறிக்கோள் என்று விளக்கினர்.

''மண்ணுரிமையைக் காத்து நிற்பது மைய அரசு
மக்களுரிமையைப் பேணி வளர்ப்பது மாநில அரசு''

என்னும் நல்லெண்ணத்துடன், மத்தியில் குவிக்கப்பட்டுள்ள, கூடாததும்-பயன் விளைவிக்காததுமான அதிகாரங்கள் பலவும்—பயன்படுமாறு மாநிலத்திற்கே வழங்கப்பட வேண்டும் என்று விரும்பினர். அவரது இறுதி மூச்சுடன் கலந்து வெளிவந்த உள்ளக்கிடக்கையாகிய 'உயில்'எனத் தகும் எழுத்திலும் இதனையே—தமது வேண்டுகோளாக வழங்கிச் சென்றார்.

'மக்களாட்சியின் மாட்சி' நிலவுவதற்கு—குடியரசு பொருள் உடையதாவதற்கு—'மாநில அரசு' தகுந்த உரிமைகள் பெற்ற அமைப்பாவது தவிர வேறு வழியில்லை—என்பதைத் தெளிவுபடுத்தும் நோக்குடனேயே எனது நண்பரும்—கோபி வழக்கறிஞருமான, திரு. கே. எஸ். ஆனந்தம், பி. காம்., பி. எல்., அவர்கள்—தமது நுண்ணறிவாற்றலால் அரசியல்,வரலாறு, சட்டவியல் முதலான துறைகளில் வல்லுநர்கள் வரைந்த ஏடுகள் பலவற்றைக் கற்றுத் தேர்ந்து, அரிதில் முயன்று திரட்டிய சான்றுகளைக் கொண்டு. தமது வழக்காடும் வல்லமை ஒளிவிட, இந்தச் சீரிய நூலினை எழுதியுள்ளார். இந்திய நாட்டினைப் படம் பிடித்துக்காட்டுவது போன்று விளக்கி, அரசியல் சட்டம் உருவாக்கப்பட்ட சூழ்நிலையையும் அன்று பிறந்த உள் நோக்கங்களையும் புலப்படுத்தி—கற்போர்—ஐயம் நீங்கித் தெளியுமாறு—'மாநில சுயாட்சி' கோட்பாட்டை விளக்கியுள்ளது பாராட்டுக்குரியது. ஆசிரியரின் அறிவும் ஆற்றலும்—தெளிவும் திட்பமும் ஆராய்ச்சித் திறனும் கட்டுரை வல்லமையும்—கொள்கைப் பற்றும் குறிக்கோள் உரனும்—இந்த நூலைக் கற்போரால் பாராட்டப்பெறும். அரும்பயன் விளைக்கும் இந்த உரிமைப் பொருள் குறித்து விரிவுக்கு அஞ்சி எதனையும் விடாமலும் தொகுப்புக்கு எஞ்சி எதுவும் குறைபடாமலும் விரிவான விளக்கந் தரும் ஒரு நூலாக இயற்றிய திறத்தாலேயே இது ஆயிரம் பக்கத்தினும் அகன்று செல்கின்றது.

அகில இந்திய அளவிலும், மாநில அளவிலும்—மாநில உரிமை உணர்வு முனை விட்டெழுந்த வரலாற்றுச் செய்திகளையும்—இந்தி ஆதிக்க எதிர்ப்பு உணர்வினுல் பிறந்த மொழிப்பற்று அடிப்படையிலான மாநில எழுச்சியையும்—மறைந்துவிடக் கூடியதாகக் கருதப்படும் வரலாற்று உண்மைகள் பலவற்றையும்—கல்லூரிப் பாட நூலே போன்று—ஆசிரியர்—பகுதி பகுதியாக விளக்கியுள்ளது பெரிதும் பயன்படும்.

அறிஞர் அண்ணுவின் இலட்சியத்தை இதயத்தில் தாங்கி, இன்றைய முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்களும் டாக்டர் நாவலர் அவர்களும் கழகத்தின் உரிமைக் குரலாக எழுப்பி வரும் 'மாநில சுயாட்சி—மத்தியில் கூட்டாட்சி' என்னும் மூலமொழிக்கு—விரிவுரையாய் அமைந்திருப்பது மட்டுமன்றி—பல்வேறு கருத்துக்களைக் கொண்ட அரசியல் வல்லுனர் எவரும் மறுக்கொணுது ஏற்குமாறு அமைந்துள்ளது இந்நூல் என்பது எனக்குப் பெருமகிழ்வாகும்.

இந்த நூலின் ஆங்கிலப் பதிப்பு வெளிவருவது மிகு பயன் விளைக்குமாதலின்—முயற்சி விரைவுடையதாக வேண்டும் என்பது அவா.

இதன் ஆசிரியர்—வழக்கறிஞர் ஆனந்தம் அவர்கட்கு எனது உள்ளம் நிறைந்த வாழ்த்து! அவரது முயற்சிக்கு எனது பாராட்டுதல்.

சென்னை - 9, (ஒப்பம்) க. அன்பழகன்.
20 - 2 - 1975.

ம. பொ. சிவஞானம்,
துணைத் தலைவர்,
தமிழ் நாடு சட்டமன்ற மேலவை.



தலைமைச்செயலகம்
சென்னை-9

# அணிந்துரை

xxxxxxxxxxxxxxx

''மலர்க சுயாட்சி'' என்ற வாழ்த்து முழக்கத்தையே பெயராகப் பெற்றுள்ள இந்நூலைப் பார்த்தேன்; படித்தேன்; மகிழ்ந்தேன். மாநில சுயாட்சிக்காகப் போராடுவோருக்கு இந்நூல் மிகச் சிறந்த கேடயமாகும்.

ஆசிரியர் வழக்கறிஞர் கே. எஸ். ஆனந்தம் அவர்கள் நன்கு உழைத்து இந்நூலை உருவாக்கியுள்ளார். அந்த உழைப்புக்காக அவரைப் பாராட்டுகிறேன். நூல் மிகவும் பெரியது; சுமார் 1100 பக்கங்களைக் கொண்டது. சுயாட்சி பற்றி இதுவரை வெளிவந்துள்ள நூல்களிலே இதுவே அளவில் பெரியது.

தமிழில் ஓரளவே பயிற்சியுள்ளோரும் படித்து விளங்கிக் கொள்ளக்கூடிய வகையில் எளிய நடையில் எழுதப்பட்டுள்ளது.

நூல் முழுவதும் ஐந்து பகுதிகளாகப் பகுக்கப்பட்டுள்ளதானது படிப்பதற்கு உதவிகரமாக இருக்கிறது. ஒருமுறை நூல் முழுவதையும் படித்துவிட்டு, திரும்பவும் ஏதேனும் ஒரு பிரச்சனையில் ஐயம் தோன்றினால், தெளிவு தேவைப்பட்டால், அப்போது நூல் முழுவதையும் புரட்டிப் பார்க்க வேண்டிய அவசியமில்லாமல், தேவைப்படும் பகுதியை உடனே படிக்க, பொருளடக்கம் பயன்படுவதாக இருக்கிறது.

மாநில சுயாட்சி பற்றி அண்ணா கூறிய — அவரது உயில் என்று என்னால் வருணிக்கப் பெற்ற — பொன்மொழியையே முதன் மொழியாகக் கொண்டு இந்நூலைத் தொடங்கியுள்ளார் ஆசிரியர்,

மாநிலங்களின் உரிமைப் பிரச்சனை, இரு பக்கங்களைக் கொண்ட நாணயம் போன்றது. ஒரு பக்கம், மாநில சுயாட்சி, மற்ரெரு பக்கம், மத்திய சமஷ்டி. இந்த இரண்டையுமே தனித்தனியாகவும் ஒப்பு நோக்கியும் விளக்கியுள்ளார் ஆசிரியர்.

இந்நூல், ஒருவகையில் சமஷ்டி — சுயாட்சி பற்றிய அரசியல்சாத்திரமாகவும், இன்னொரு வகையில் சுயாட்சிக் கிளர்ச்சி பற்றிய சரித்திரமாகவும் விளங்குகின்றது. இது, இந் நூலுக்குள்ள தனிச் சிறப்பாகும்.

மாநில சுயாட்சியில் ஈடுபட்டு வந்துள்ள கட்சிகள், அரசியல் தலைவர்கள், சட்டமேதைகள் ஆகியோரைப் பற்றிய தகவல்களும் இருட்டடிப்பின்றி நியாயமான அளவுக்கு இந்நூலில் தரப்பட்டுள்ளன. அவ்வகையில் — காங்கிரஸ், தமிழரசுக் கழகம், திராவிட முன்னேற்றக் கழகம், முஸ்லீம் லீக், நீதிக்கட்சி, திராவிடர் கழகம், ஆகிய அமைப்புகள் எந்த அளவுக்கு, சுயாட்சிப் பிரச்சினை யோடு தொடர்பு கொண்டு வந்துள்ளன என்பதையும் இந்நூலில் அறிய முடிகின்றது.

சுயாட்சிப் போரின் இன்றைய தளபதியான கலைஞர் மு. கருணாநிதியின் கருத்துக்களையும் தேவைப்படும் இடங் களில் எல்லாம் ஆசிரியர் எடுத்தாண்டுள்ளார்.

நடைமுறையில் சுயாட்சிப் பிரச்சனையானது இந்தியா சம்பந்தப்பட்டது தான் என்ருலும், சுயாட்சிக் கொள்கைக் குள்ள தேசிய — சர்வதேசத் தன்மைகளையும் ஆசிரியர் சற்று விரிவாகவே எடுத்துக் காட்டியுள்ளார். தமிழக சுயாட்சிக்கோரிக்கையானது குறுகிய மாகாண உணர்ச்சி யிலிருந்து பிறந்ததல்ல; அது, தேசிய — சர்வதேசியப் பிரச்சனைகளோடு பிணைந்ததுதான் என்பதை விளக்க, உலகிலுள்ள சமஷ்டி நாடுகளின் அரசியல் சட்டங்களையும் சரித்திர நிகழ்ச்சிகளையும் தனித்தனிப் பகுதிகளாகவும், மற்ற பகுதிகளின் இடையிடையே எடுத்துக் காட்டாகவும் தந்துள்ளார்.

தமிழர் மாநில சுயாட்சி கோருவது, அதிகாரப் பரவல் கொள்கையின் அடிப்படையில் அல்ல; மொழி வழித் தேசிய இனத்திற்குரிய பிறப்புரிமைப் படித்தான்

என்பதையும் ஆசிரியர் விளக்கியிருப்பது எனக்கு மகிழ்ச்சியைத் தருகிறது.

இந்நூல், சுயாட்சிக் கோரிக்கை — கிளர்ச்சி பற்றிய ஆராய்ச்சியாக மட்டும் அல்லாமல், அவற்றின் வெற்றிக்கு வழி வகுக்கும் பிரசார நூலாகவும் அமைந்துள்ளது ஆயினும், பிரசார நூல்கள் பெரும்பாலானவற்றுள் கலந்து விடும் கட்சி வழிப்பட்ட வெறுப்புணர்ச்சி இந்நூலில் இடம் பெறவில்லை.

பொதுவாக, இந்நூல் முழுவதையும் படித்து முடித்தால், ஆசிரியரின் அரிய உழைப்பும், சுயாட்சிப் பிரச்சினையில் அவருக்குள்ள ஈடுபாடும், அத்துறையில் அவர் பெற்றுள்ள தெளிவும் படிப்போரைக் கவர்ந்து விடுகின்றன.

சுயாட்சி—சமஷ்டி போன்ற அரசியல் தத்துவங்களைத் தமிழிலே எழுதவோ, பேசவோ முடியாதென்ற மூட நம்பிக்கை நிலவிய காலம் ஒன்று உண்டு. அந்த நம்பிக்கையைப் பொய்யாக்கி, ஆங்கிலத்தை விடவும் தமிழிலே தான் சாமான்யர்களும் புரிந்து கொள்ளும் வகையில் அவ் விஷயங்களை இலக்கியச் சுவையோடு எடுத்துச் சொல்ல முடியும் என்பதை ஆசிரியர் கே. எஸ். ஆனந்தம் அவர்கள் இந்நூல் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளார்.

இந்நூல், தமிழின் வளத்தையும் — வளர்ச்சியையும் காட்டுவதாகும்.

தமிழ் மக்கள் — குறிப்பாக, மாநில சுயாட்சியை விரும்புவோர் — வெறுப்போர் ஆகிய இருதரத்தாரும் இந்நூலை வாங்கிப் படிக்க வேண்டுமென்பது என் விருப்பம்.

ஆயிரத்துக்கு மேற்பட்ட பக்கங்களைக் கொண்ட ஒரு தமிழ் நூலை — குறிப்பாக, அரசியல் சாத்திரம் போன்ற ஒரு நூலை வெளியிடப் பதிப்பகங்கள் முன் வருவதில்லை. தங்கம் பதிப்பகத்தார், இந்நூலை வெளியிடப் பொறுப் பேற்றது அவர்களுக்குள்ள ஆர்வத்தையே காட்டுகின்றது.

மீண்டுமொரு முறை ஆசிரியரையும், பதிப்பகத் தாரையும் பாராட்டுகின்றேன்.

சென்னை,
8...3....1975. ம. பொ. சிவஞானம்.

கி. சந்தானம்,
('சுயராச்சியா' —
முன்னாள் ஆசிரியர்)

சென்னை.

# அணிந்துரை

—*—*—*—

சரித்திரத்தாலும் இயற்கையாலும் மொழி, கலாசாரம், பொருளாதாரம் முதலியவற்றில் மிகுந்த வேற்றுமைகளுடைய பல பிரதேசங்கள் உள்ள நாட்டில் கூட்டாட்சியே சமாதானத்தை நிலைநிறுத்தி, சமூக நலத்தை வளர்க்க வல்லது. கூட்டாட்சியில் அரசியல் அதிகாரங்கள் மத்திய-மாநில அரசாங்கங்களுக்குப் பிரித்துக் கொடுக்கப்பட்டு அவைகளால் தனித்தனியே நிர்வகிக்கப் படுகின்றன. எந்த அதிகாரங்கள், எவ்வளவு, எதற்கு வழங்கப்பட வேண்டுமென்பதற்கு எவ்வித நிலையான தத்துவங்களில்லை. நாட்டின் நிலைமைக்கும் மக்களின் விருப்பத்திற்கும் ஏற்றவாறு மாறியிருக்கும்.

இந்திய அரசியல் திட்டத்தில் மத்திய அரசாங்கத்திற்கு மித மிஞ்சிய அதிகாரங்களும் மாநிலங்களுக்குக் குறைவான அதிகாரங்களும் வழங்கப்பட்டிருக்கின்றன. இப்பிரிவினையைப் பற்றி மிகவும் விரிவாக, திரு. ஆனந்தம் தனது "மலர்க மாநில சுயாட்சி" என்ற நூலில் ஆராய்ந்திருக்கிறார்.

அரசியல் நிர்ணய சபையில் நடைபெற்ற வாதங்களையும், பின்னர் இந்தியக் கூட்டாட்சியைப் பற்றி அவ்வப்பொழுது செய்யப்பட்ட ஆராய்ச்சிகளையும் சான்றுகளுடன் எடுத்துக் கூறியிருக்கிறார்.

திரு. இராசமன்னார் தலைமையில் இப் பிரச்சினையை ஆலோசித்த குழுவின் சிபார்சுகளையும், பின்னர் தமிழ்நாடு மாநில அரசாங்கத்தின் கோரிக்கைகளையும் நன்கு விளக்கியிருக்கிறார்.

பொதுவாக இந்நூலில் சொல்லப்பட்ட விளக்கங்கள் நியாயமானவையே. ஆயினும் சிற்சில இடங்களில் மிகைப் படுத்தப்பட்டிருக்கின்றன. பூதக் கண்ணுடியில் பார்த்தால் சிறு கிருமிகளும் பெரிய பிராணிகளாகக் காணப் படுகின்றன. தற்போதைய கூட்டாட்சி முற்றிலும் பயனில்லை. அடியோடு வேறு அரசியல் திட்டம் வேண்டுமென்ற முடிவுக்கு வந்திருக்கிருர். அது சாத்திய மில்லையென்றும் காட்டியிருக்கிருர். இருப்பதை வைத்துக் கொண்டு படிப்படியாக மாநில சுயாட்சியை வலுப் படுத்துவது சாத்தியமென்பதும், வேறு வழியில்லை என்பதும் எனது அபிப்பிராயம்.

சென்னை (ஒப்பம்) க. சந்தானம்.
19—3—75.

செ. மாதவன்
உணவு-கூட்டுறவுத் துறை
அமைச்சர்




தமிழ் நாடு அரசு
தலைமைச் செயலகம்
சென்னை-600009

## அணிந்துரை

'மலர்க மாநில சுயாட்சி' என்ற அற்புதான படைப்பை ஆழ்ந்து படிப்போருக்குத் தமிழகத்தில் மாநில சுயாட்சி பெற்றுவிட்டதைப் போன்ற உணர்வு ஏற்படும். எனது அருமை நண்பர் வழக்கறிஞர் திரு. கே. எஸ். ஆனந்தன் இவ்வரிய நூலின் ஆசிரியர் என்பதில் எனக்குப் பெருமையும் மகிழ்ச்சியும் ஏற்படுகின்றது. திராவிட முன்னேற்றக் கழகத்தில் செயல் வீரராகப் பல்வேறு பொறுப்புக்களை ஏற்று பணியாற்றி வருகின்ற இனிய நண்பர். சட்ட நுணுக்கங்களை ஆராய்ந்து கருத்துச் செறிந்த இந்த நூலை உருவாக்கியுள்ளார். திராவிட முன்னேற்றக் கழகத்திற்குப் பெரும் பயன்தரும் ஒரு தொண்டினைச் செய்துள்ளார்.

எளிய இனிய தமிழில் கருத்துக்கள் எடுத்துச் சொல்லப் பட்டுள்ளன. அரசியல் கருத்துக்கள் என்றாலும் சட்ட நுணுக்கங்களோடு எடுத்து விளக்குவது கடினமல்ல என்பது நிரூபிக்கப்பட்டுள்ளது. பல்வேறு கருத்துக்களை மிக அற்புதமாக வரிசைப்படுத்தித் தந்துள்ளார். சட்டம் பயின்ற ஆசிரியரின் ஆழ்ந்த அறிவு வெளிப்படுகின்றது. சரித்திர நிகழ்ச்சிகளைக் கோவையாகச் சுவைபடக் கூறுகின்றார். ஒவ்வொரு பகுதியிலும் விவரிக்கப்படுகின்ற கருத்துக்களைத் தொடக்கத்தில் தொகுத்துக் கூறியிருப்பது படிப்பவர்களுக்கு உதவியாக உள்ளது.

இந்தியத் துணைக் கண்டத்தின் அரசியல் வரலாற்றில் புதிய அத்தியாயம் எழுதப்பட்டு வருகின்றது. திராவிட முன்னேற்றக் கழகம் அரசியல் வானில் பிரகாசிக்கத் தொடங்கிய நாளிலிருந்து புதிய சகாப்தம் தொடங்கியுள்ளது. மத்திய அரசின் அதிகார ஆதிக்கம் அகற்றப்படவேண்டும், அகில இந்தியா என்ற போர்வையில்

மாநிலங்களின்மீது செலுத்தப்படும் ஆதிக்க சக்தி அழிக்கப்பட வேண்டும் என்ற உணர்வை வித்திட்டது தி. மு. கழகம். இந்த உணர்வை இந்நூலில் பரக்கக் காணலாம். திராவிட முன்னேற்றக் கழகத்தை உருவாக்கிய அறிஞர் அண்ணு வகுத்த கொள்கைகளின் முத்திரை நிறைந்து காணப்படுகின்றது. அறிஞர் அண்ணு தமிழ் மக்களுக்கு அளித்துச் சென்ற இறுதி உயில் மாநில சுயாட்சி என்று நினைவுபடுத்தி இந்நூல் தொடங்குவது பொருத்தமாக உள்ளது.

கடினமான விவாதத்திற்குரிய பிரச்சனைகளை எளிமையாக உள்ளத்தில் பதியும்படி எழுதியிருப்பது பாராட்டுக்குரியது. மாநில சுயாட்சிப் பிரச்சனையில் கையாளப்படும் பல்வேறு சொற்களுக்கு விளக்கம் தரும் புதிய முயற்சியில் ஆசிரியர் வெற்றி பெற்றுள்ளார். இந்திய அரசியல் வரலாற்றில் மாநில சுயாட்சி, தொடர்ந்து பிரச்சனையாக உருவாகி வந்துள்ள சரித்திர நிகழ்ச்சிகளைக் கோவையாக வடித்துத் தந்திருப்பது சிறப்பான பகுதியாகும். உலக நாடுகள் பலவற்றின் அரசியல் வரலாறுகளோடு ஒப்பிட்டு மாநில சுயாட்சி வலியுறுத்தப்பட்டுள்ள முறை பொருத்தமாக அமைந்துள்ளது. இந்திய அரசியல் அமைப்புச் சட்டம் மாநில அரசுகளை முடமாக்கும் சட்டம், அடிமைப்படுத்தும் சட்டம், மாநில சுயாட்சி உரிமையை அழிக்கும் சட்டம், அடிமைச் சாசனம் என அடுக்கிக் காட்டியுள்ளார்.

சுதந்திர இந்தியாவில் இந்திய அரசமைப்புச் சட்டத்தின் கீழ் மாநில அரசுகள் படும் தொல்லைகள் வர்ணிக்கப்பட்டுள்ளன. நூலின் இறுதித் தொகுப்பு உணர்ச்சியையும், எழுச்சியையும் ஊட்டுகின்றது. பிரிவினை வாதம் என்ற சொத்தை வாதத்தைத் தவிடுபொடியாக்குகின்றார் ஆசிரியர். மாநில சுயாட்சி, பிரிவினை என்ற நச்சுவித்தல்ல நாட்டுப் பிரிவினையைத் தவிர்க்கும் நல் மருந்து என்று நிலைநாட்டுகின்றார். மத்திய அரசு அந்நியர் ஆதிக்கத்தைத் தகர்க்க வலிமையுடன் விளங்க வேண்டும். ஆனால் மாநில அரசுகளை ஆட்டிப் படைக்கும் அதிகாரங்கள் தேவையில்லை. இந்தியப் பொருளாதார வளர்ச்சிக்கு வழிகாட்ட வேண்டும். ஆனால் மாநிலங்களின் பொருளாதார வளர்ச்சிக்குத் தடைக்கல்லாக அமைந்திடல் கூடாது. மத்திய அரசின் தலைமை மாநில அரசுகளுக்கு வழிகாட்டியாக அமைந்திட வேண்டும். ஆனால் அதிகாரக்

குவியலால் ஆதிக்கம் செலுத்த விரும்பும் சர்வாதிகாரி களாக மாறிவிட வாயப்பளிக்கலாகாது. மத்திய மாநில உறவு ஆண்டே அடிமை என்ற தொடர்பல்ல. உரிமை யின் அடிப்படையில் உருவாகும் உறவாக அமைந்திடல் வேண்டும்.

இந்திய அரசமைப்புச் சட்டம் முற்றிலும் மாற்றி யமைக்கப்பட வேண்டும். புதிய உருவம் தரப்பட வேண் டும். சட்டத்தின் விதிகளல்ல முக்கியம். அடிப்படை நோக்கமே மாற்றப்பட வேண்டும். இதற்கேற்ற அடிப் படையைத் தமிழகஅரசு, தமிழ்நாட்டுச் சட்டமன்றத்தின் வரலாற்றுச் சிறப்புமிக்க மாநில சுயாட்சித் தீர்மானத்தின் மூலம் உருவாக்கித் தந்துள்ளது என்று இந்நூலுக்கு இறுதி வடிவம் தந்துள்ளார் ஆசிரியர்.

இந்திய விடுதலைக்குப் பின் கூட்டாட்சித் தத்துவத்தில் விவாதம் தொடங்கி, அரை குறைக் கூட்டாட்சிச் சட்டம் என்று விளக்கம்தந்துஉண்மையிலேயே ஒற்றையாட்சிக்கு வித்திட்டது இந்திய அரசமைப்புச் சட்டம்; இந்தச் சரித்திரம் மாற்றப்பட வேண்டும். புதிய சரித்திரம் உருவாக்கப்பட வேண்டும். மொழிவாரி மாநிலத்து மக்களுக்குப் பூர்ண சுயாட்சி வழங்கிட வேண்டும். இந்த உயிர் மூச்சான திராவிட முன்னேற்றக் கழகத்தின் கொள் கைக்கு அற்புதமான விளக்கம் இந்நூலில் தரப்பட் டுள்ளது. திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர், தமிழகத்து முதல்வர். டாக்டர் கலைஞர் அவர்களின் போர்ப் பரணிக்குப் புதிய படைக்கலமாக அமைந்துள்ளது இந் நூல். தமிழகத்தின் மாபெரும் தலைவர். பேரறிஞர் அண்ணு அவர்கள் இந்தியத் துணைக் கண்டத்தின் சரித்திரத்தில் மாநில மக்களின் உரிமை முழக்கம் என்னும் புதிய சகாப்தத்தை உருவாக்கிச் சென்றுள்ளார். தமிழ் மக்களின் உரிமைக்குரல் அவர் மூலம் ஒலிக்கத் தொடங்கியது. மாநில சுயாட்சித் தத்துவத்தைத் தனது இறுதிக் கட்டுரை யில் வலியுறுத்திச் சென்ருர். அவர் அணியில் வளர்ந்த நண்பர் ஆனந்தன் ஒரு புதிய படைக்கலத்தைத் தந்துள் ளார். ஆசிரியரின் அறிவாற்றல், ஆழ்ந்த சிந்தனை, கொள்கைப் பிடிப்பு, இடையருத உழைப்பு இவைகளின் படைப்பே ‘மலர்க மாநில சுயாட்சி’ என்ற இந்த அற்புத மான நூலாகும்.

சென்னை-600009 (ஒப்பம்) செ. மாதவன்
21—2—1975.

எஸ். ஜே. சாதிக்பாட்சா
தொழில்-மின்சார
அமைச்சர்.




தலைமைச் செயலகம்,
சென்னை-9

# அணிந்துரை

''மாநில சுயாட்சி'' திராவிட முன்னேற்றக் கழகத்தின் இலட்சிய முழக்கம்.

பேரறிஞர் அண்ணா அவர்கள் உருவாக்கிய மாநில சுயாட்சிக் கொள்கை என்ற நாற்றங்காலை, செழுமையான பயிராக்கி வளர்த்து வருகிறார் தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கள்.

''மாநிலத்தில் சுயாட்சி மத்தியில் கூட்டாட்சி'' என்ற முழக்கத்தின்மூலம் தமிழகம் இந்தியத் துணைக் கண்டத்தின் ஏனைய மாநிலங்களுக்கு வழிகாட்டி, எழுச்சியூட்டி, ஒளியூட்டி வருகிற காலமிது.

அண்ணா அவர்கள் ''உயிலை'' அமுல் நடத்த மாநில சுயாட்சித் தீர்மானத்தை, தமிழகச் சட்ட மன்றத்தில் தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கள் முன்மொழிந்து நிறைவேற்றியதன் தொடர்பாக, இந்திய வரலாற்றில் பொன்னேடு தொடங்கி வைத்த பெருமையைத் தமிழகம் பெற்றது—இது சனநாயகப் புரட்சியின் தொடக்கம்.

''மலர்க மாநில சுயாட்சி'' என்ற நூலின் ஆசிரியர் வழக்கறிஞர் நண்பர் திரு. கே. எஸ். ஆனந்தம், பி. காம்., பி.எல்., அவர்களைப் பல்லாண்டுகளாக அறிவேன். பேரறிஞர் அண்ணா அவர்களிடமும் அவர்கள் உருவாக்கிய திராவிட முன்னேற்றக் கழகத்தின் மீதும், இளமை முதற் கொண்டே நீங்காத பற்றும்—ஈடுபாடும் கொண்டிலங்கி வருகிற கழகச் செயல் வீரர் ஆவார்,

"மாநில சுயாட்சி" பற்றி நூல் ஒன்று எழுதிட வேண்டு மென அவர் கருத்துத் தெரிவித்தகாலே, என் போன்றவர் ஊக்குவித்தது, அவருக்கு ஆக்கமூட்டியது. அவர் உழைப் பின் உருவம்—அவரது இடையருத முயற்சிகளின் வடிவம் இந்நூல்.

மாநில சுயாட்சிக் கொள்கைக்கு வலிவும், வரவேற்பும் பெருகி வருகிற இந்நாளில், இந்நூல், சிந்தையைத் தொட்டுச் செயலைத் தூண்டுவதாக அமைந்துள்ளது.

பேரறிஞர் அண்ணு அவர்களின் மாநில சுயாட்சி "உயிலை" முதலாக வைத்துத் தொடங்கிய ஆசிரியர், மாநில சுயாட்சித் தத்துவத்தை, பல்வேறு கோணங்களில் ஆராய்ந்து, கூட்டாட்சியும் மாநில சுயாட்சியும், வரலாற் றில் மாநில சுயாட்சி, இந்திய அரசியல் அமைப்பில் மாநில சுயாட்சி, சுதந்திர இந்தியாவில் மாநில சுயாட்சி என்ற சீரிய தலைப்புக்களில் உலக நாடுகளின் வரலாற்றுச் சான்று களைக் காட்டி—அரசியல் பேராசிரியர்கள்—மேதைகள்—சட்டப் பேரறிஞர்களின் கருத்துக் கருவூலங்களை விளக்கி—வாதப் பிரதிவாதங்களை எடுத்து வைத்து, "மலர்க மாநில சுயாட்சி" என்று கோடானகோடி மக்களின் இதயநாதங் களை வெளிப்படுத்துகிருர் ஆசிரியர் திரு. ஆனந்தம் அவர்கள்.

இந்நூல், பொதுவாக மாணவ சமுதாயத்திற்கு ஓர் சிறந்த வரலாற்று நூலாகவும்—ஆராய்ச்சி நூலாகவும் அமையுமென நம்புகிறேன். "மாநில சுயாட்சி" பற்றிய பொருளாய்வுக்கு பிஎச். டி. (Ph.D.) பட்டம் வழங்கப் பல் கலைக் கழகங்கள் முன் வந்தால், அத்தகைய பட்டம் பெறுவதற்கு, இந்நூல் தகுந்த அடிப்படை நூலாக அமையும் என்று நம்புகிறேன்.

உரிமைகள் பெற்றிட—கடமைகள் ஆற்றிட—ஆதிக்க மற்ற சமுதாயத்தை உருவாக்கிட, எதிர்கால ஏற்றத்திற் கும், எழிலுக்கும், மாநில சுயாட்சிக் கொள்கையைப் பரப்பிவரும் திராவிட முன்னேற்றக் கழகத்தினுடைய ஓர் கேடயமாக—போர்வாளாக மட்டுமல்ல மாநில சுயாட்சித் தத்துவத்தைப் புரிந்துகொள்ள மறுப்பவருக்கு, இந்நூல் பாயும் வேலாக அமைந்துள்ளது.

எளிய இனிய தமிழ் ஓட்டத்தை மட்டுமல்ல ஓர் வழக் குரைஞரின் வாதிட்டு விளக்கிடும் திறமையும் நூல் முழுதும் இழைந்தோடுவதைக் காணலாம்.

அமைதியின் உருவமாகக் காட்சியளிக்கும், ஆரவார மில்லாத நண்பர் திரு. ஆனந்தம் அவர்கள் ஆழ்ந்து சிந்தித்து ஓர் கருத்துக் கருவூலத்தைப் படைத்துள்ள ஓர் பெட்டகமாவார்.

ஆசிரியர் உழைப்பால் உயர்ந்தவர். உழைப்பதற்குச் சலியாத கழக வீரர் அவர். அந்த உழைப்பின் உயி ரோவியமாக இலங்குகிறது ''மலர்க மாநில சுயாட்சி'' என்ற இந்நூல்.

இதன் மூலம் மாநில சுயாட்சிச் சுடரை நாடெங்கனும் பரப்பும் புனிதப் பணியின் அணியில் தன்னை இணைத்துக் கொண்ட ஒரு மணியாவார் திரு. ஆனந்தம் அவர்கள்.

சுவையும் பயனும் நிறைந்த 'மலர்க மாநில சுயாட்சி' நூலின் ஆசிரியர் நண்பர் திரு. ஆனந்தம் அவர்களை உளமாரப் பாராட்டுகிறேன்.

தொடர்க அவர் தூய பணி!

சென்னை - 9, (ஒப்பம்) எஸ். ஜே. சாதிக் பாட்சா.
14 - 3 - 1975.

மு. கண்ணப்பன்
அறநிலைய அமைச்சர்.




தலைமைச் செயலகம்
சென்னை-9

# அணிந்துரை

''மாநில சுயாட்சி''. ஆம்! இந்தியத் துணைக் கண்டத்தின் இன்றைய அரசியலில் ''கொழுந்து விட்டெரியும்'' பிரச்சனை.

கூட்டாட்சிமுறை என்ற போர்வையில் ஒற்றையாட்சி நடத்திவரும் மைய அரசின் அதிகாரக் குவியலைத் தடுத்து, மாநிலங்கள் தன்னாட்சி பெற்ற அமைப்புகளாக மாறிடும் நிலையை எய்திடவே ''மாநில சுயாட்சி''க் கோரிக்கை வேர்விட்டு வளரத் தொடங்கிற்று.

என் அருமை நண்பர் திரு. கே. எஸ். ஆனந்தம் அவர்கள் உருவாக்கியுள்ள ''மலர்க மாநில சுயாட்சி'' என்ற அழகு தமிழில் அமைந்த இந்த ஆய்வு நூல் எல்லா வகையிலும் பயன்தரத்தக்க முறையில் அமைந்துள்ளது இந்திய அரசியலின் தோற்றுவாய் தொடங்கி உலக நாடுகளில் உள்ள அரசியல் முறைமைகளை விளக்கி, மிகப் பெரிய வரலாற்று நூல் போல் அமைந்துள்ள இந்நூல் தன்னாட்சிக்கும் தனியாட்சிக்கும் வேறுபாடு தெரியாமல் மக்களை மயக்கும் குழப்ப வாதிகளுக்கு ஓர் விளக்கமாகவும், புரிந்தும் புரியாதவர்கள் போல் போலி நாடகமாடும் அரசியல் கபடதாரிகளின் முகமூடியைக் கிழிக்கும் ஓர் பேராயுதமாகவும் விளங்கும் என்பதில் ஐயமில்லை. இந்நூலைப் படிப்பவர்கள் இந்திய, மற்றும் அகில உலக அரசியல் முறைகளை உணர்ந்து கொள்வதோடு இன்றையதினம் மைய அரசு எவ்வாறு அதிகாரக் குவியலிடை அமைந்து மாநில அரசுகளை ஏவல் அரசுகளாக நடத்தி வருகின்றது என்பதைத் தெளிவாகப் புரிந்து கொள்வார்கள்.

திரு கே. எஸ். ஆனந்தம் அவர்கள் இன்றைய தினம் மிகவும் தேவைப்படும் ஓர் அருமையான அரசியல் வரலாற்று நூலை எழுதி இந்நாட்டுக்கு அளித்ததன் மூலம் மாநில சுயாட்சிப் போராட்டத்தின் முதல் கட்டத்திலேயே தன் பங்கினைச் செவ்வனே ஆற்றியதோடு, உருவாக்கப் பட்ட இம் மாநில சுயாட்சி உணர்வு மிகவும் பரவலாக விரைந்து பரவிட வழி வகுத்துள்ளார் என்றால் அது மிகை யாகாது. அவர்தம் முயற்சி பாராட்டுதற்குரியது. இது போன்ற ஆய்வு நூல்களைத் தொடர்ந்து வெளியிடுவதன் மூலம் தமிழ் மொழிக்கும், அரசியலுக்கும் பெருமை சேர்க்க வேண்டும் என்று வாழ்த்துகின்றேன்.

சென்னை - 9, (ஒப்பம்) மு. கண்ணப்பன்

20—3—75

சென்னைப் பல்கலைக் கழகம்

நெ. து. சுந்தரவடிவேலு, சென்னை-5

துணை வேந்தர்

# அணிந்துரை

தற்காலத்தில், அரசியல் உலகத்தில், அடிக்கடி பேசப்பட்டு, விவாதிக்கப்பட்டு வரும் ஒரு பொருள் குறித்து இந்நூல் விரிவாகவும் விளக்கமாகவும், தெளிவாகவும், திண்மையுடனும் எழுதப்பட்டுள்ளது. 1092 பக்கங்கள் கொண்ட இந்நூலினை ஆசிரியர் வழக்கறிஞர் திரு. கே. எஸ். ஆனந்தம் அரும்பாடுபட்டு எழுதியிருக்கிறார் என்பதனை மேலோட்டமாக ஒரு முறை இந்நூலினைப் படிப்போரும் உணர்வர். ஐந்து பெரும் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ள இந்நூலினைப் படிப்பதற்கோர் எளிய முறையினை ஆசிரியர் தொடக்கத்தில் கூறியுள்ளார். ஒவ்வொரு பகுதிக்கும் தொடக்கத்தில் அமைந்துள்ள தோற்றுவாய் அவ்வப் பகுதி கூறும் விரிவான கருத்துக்களின் சுருக்கமாக அமைந்துள்ளது. மேலும் ஒவ்வொரு பகுதியும் அதனதன் அத்தியாயங்களும் உட்தலைப்புகளும் கருத்துக் கோவையோடு சங்கிலித் தொடர் போலப் படிப்படியாக, முன்னேக்கிச் செல்லும் வகையில் அமைக்கப்பெற்றுள்ளன என்றும் நூலினைப் படிப்போர், தொடக்கத்தில் முதற் பகுதியை முழுதும் நன்கு ஆழ்ந்து'படித்தருள வேண்டும் என்றும் ஆசிரியர் முதற்கண் வேண்டுகோள் விடுத்துள்ளார்.

முதற்பகுதி, 'கூட்டாட்சியும் மாநில சுயாட்சியும்' என்பதாகும். இப்பகுதி 'அண்ணாவின் உயில்' என்று தொடங்குகின்றது. ''மாநிலங்கள் அதிக அளவில் அதிகாரங்களைப் பெறத் தக்க விதத்தில் இந்திய அரசியல் சட்டம் திருத்தி அமைக்கப்பட வேண்டும் என்பது பற்றி, வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் கூறி வருகிறேன்'' என்று பேரறிஞர் அண்ணாவின் உட்கிடக்கையுடன் இந்நூல் தொடங்குகின்றது.

''மாநில மக்களின் மொழி, இன, பண்பாட்டு உரிமைகளையும் அரசியல், பொருளாதார உரிமைகளையும் பாது

காத்துப் பேணி வளர்க்கக் கூடிய மாநில அரசிற்கு அரசியல் சட்டப்படி கொடுக்கப்பட வேண்டிய அதிகாரங் களின் சட்டத்தையே ''மாநில சுயாட்சி'' என்ற சொல் சுட்டுகிறது. அதனைப் பெறுவதற்காக எழுப்பப்படும் உரிமைக்குரல் தான் மாநில சுயாட்சி முழக்கம்'' என்று ஆசிரியர் மாநில சுயாட்சிக்கு விளக்கந் தந்திருக்கிறார்.

இந்நூலால் ஆசிரியர்தம் அறிவுக் கூர்மை, அரசியல் நுட்பம், விவாதத் திறன், அரிய பொருள்களை எளிமை யாக விண்டுரைக்கும் மேன்மை, கடினமான உழைப்பு, பல்வேறு நூல்களையும் ஆசிரியர்களையும் தாம் கூற வந்த பொருளுக்குப் பின்புலமாக எடுத்துக் காட்டித் தம் கருத்தினை அரண் செய்யும் திறம் முதலியன வெல்லாம் விளங்குகின்றன.

ஆசிரியர்தம் உழைப்பினை நான் பாராட்டுகின்றேன்.

சென்னை – 5, (ஒ-ம்.) நெ. து. சுந்தரவடிவேலு
19-3-1975.

வி. எம். கைலாசம் 128, பூங்கா வீதி
ஈரோடு.

## அணிந்துரை

வழக்கறிஞர் கே. எஸ். ஆனந்தம் அவர்களால் எழுதப்பெற்ற 'மலர்க மாநில சுயாட்சி' என்ற அருமையான பெருநூலைப் படிக்கும் வாய்ப்பைப் பெற்றேன். இது ஒரு பெருநூல் என்பது அளவால் மட்டுமல்ல; தன்மையாலும் பெரிய நூல்தான்.

இமயமலைச் சாரல் நாடான காஷ்மீரத்திற்கு இன்று ஓரளவு மாநில சுயாட்சியை மத்திய அரசு வழங்கியுள்ளது. அது குமரிமுனைவரை அமைந்துள்ள எல்லா மாநிலங்களிலும் ஏகோபித்து ஒலிக்கும் குரலாக உள்ளது. தமிழ் நாட்டில் அக்குரல் ஓங்கிய குரலில் கேட்கின்றது. அண்மையில், ஆளும் காங்கிரஸ் உறுப்பினரும், மைசூர் மூதறிஞரும், இந்திய அரசு அமைத்துள்ள நிருவாக சீர்திருத்தக் குழுவின் தலைவருமான, கே. அனுமந்தையா அவர்கள்கூட மாநிலங்களுக்கு அதிகாரம் அதிகமாக்கப்பட வேண்டும் என்ற கொள்கையைப் பாராளுமன்றத்தில் ஆதரித்துப் பேசியுள்ளார்.

படித்த சிலருக்குக்கூட—ஓரளவு அரசியல் தொடர்புள்ளவர்களுக்கும்கூட—மாநில சுயாட்சி என்றால் என்னவென்று விளங்காமலிருக்கலாம். அவ்வகையில் எழும் ஐயங்கள் அனைத்தையும் போக்கி எளிமையாக—ஆனால் ஆழமான கருத்துச் செறிவுடன், சான்றுகளுடன், புள்ளி விவரங்களுடன் — இந்நூல் விளங்குகிறது. 'மாநிலம்' — 'சுய ஆட்சி' (சுயாட்சி) ஆகிய சொற்களுக்கு ஆசிரியர் கொடுக்கும் விளக்கம் எளிமையாக ஆனால் தெளிவாக அமைந்துள்ளது.

பேரறிஞர் அண்ணா அவர்களின் பேச்சிலும் எழுத்திலும் பல்வேறு இடங்களில் மாநில சுயாட்சிக் கொள்கை மணம் வீசுவதைத் தக்க மேற்கோள்களுடன் காட்டியுள்ளார். அவர் வழி செல்லும் டாக்டர் கலைஞர் அவர்கள், தமிழகச் சட்ட மன்றத்திலும், தேசிய வளர்ச்சி மன்றக் கூட்டங்கள், வாய்ப்புநேரும் பிற இடங்களிலும் மாநில சுயாட்சி பற்றிப்

பேசிய—எழுதிய—உரைகளையும் ஏற்ற இடங்களில் காணு கின்ரேம். தமிழ்நாடு அரசு அமைத்த இராசமன்னுர் குழுவின் பரிந்துரைகளையும் தமிழக அரசின் கருத்தையும் கண்டு மகிழ்கின்ரேம்.

ஆசிரியர் ஆனந்தம் அவர்கள் மாநில சுயாட்சிக்கான தன் கருத்துக்களை மட்டும் எழுதவில்லை. தமக்கு ஆதர வாக—

கிரேக்கத்தின் பண்டைய நகர அரசு,
மௌரியப் பேரரசு,
குப்தப் பேரரசு,
பண்டைத் தமிழரசு,
விசய நகர அரசு,
மொகலாயப் பேரரசு—

காலத்தில் எவ்வாறு மாநிலங்கள் — மண்டலங்கள்— சுயாட்சி பெற்று உரிமையுடன் விளங்கின் என்று கூறு கின்ருர். இந்த இடத்தில் ஆசிரியர் தன் வரலாற்றுப் புலமையைக் காட்டும் திறம் பாராட்டுதற்குரியது.

இப்படிப் பண்டைய அரசுகள் மட்டுமல்ல, இன்றைய உலகில்—

ஐக்கிய அமெரிக்கா,
சுவிட்சர்லாந்து,
ஆஸ்திரேலியா,
சோவியத் ருஷ்யா,
கனடா—

போன்ற நாடுகளில் எவ்வாறு மாநிலங்கள் அதிக உரிமை பெற்று விளங்குகின்றன என்பதையும் தெள்ளத் தெளி வாகக் கூறுகின்ருர்.

இந்தியா ஒரு துணைக் கண்டம். ஒரே நாடு என்பது ஆங்கிலேயர் காலத்தில் ஏற்பட்டதுதான் என்று கூறும் ஆசிரியர், இங்கு உள்ள மொழி வேறுபாடு—புவியியல் வேறுபாடு—வரலாற்று வேறுபாடுகளைக் காட்டி விளக்கு கின்ருர். ஏற்பட்ட ஒற்றுமை சிதருமல் இருப்பதற்கே மாநில சுயாட்சி என்பதையும் விளக்குகின்ருர்.

மாநில சுயாட்சிக்கு ஆதரவாக

வரலாற்று ஆசிரியர்கள்,
சட்ட நிபுணர்கள்,
பொருளாதார மேதைகள்,
அரசியல் தலைவர்கள்,
அரசமைப்பு வல்லுநர்கள்

ஆகியோர் வெளியிட்டுள்ள பல்வேறு ஆதாரங்களை ஒருசேரத் திரட்டியுள்ளார்.

1857–ஆம் ஆண்டு ஏற்பட்ட முதல் சுதந்திரப் போரிலிருந்து 1947 வரை 90 ஆண்டுகள் படிப்படியாக மலர்ந்து விரிந்து வந்த மாநில சுயாட்சிக் கொள்கை இந்திய அரசியல் அமைப்புச் சபையில் 90 நாளில் எவ்வாறு மறுக்கப்பட்டது — சட்டமாக்கப்படவில்லை — என்ற வரலாற்றைச் சுவைபடக் கூறியுள்ளார்.

1935–ஆம் ஆண்டின் (அடிமை) இந்திய அரசியல் சட்டத்தின் மறுபதிப்பு—அல்லது பிரித்து மீண்டும் வேய்ந்ததுதான். 1950–ஆம் ஆண்டின் நமது குடியரசுச் சட்டம் என்பதையும், அதில் மாநில சுயாட்சிக்கு மாறான—மத்திய அரசாங்கத்தின் குவியல்—கொள்கை எவ்வாறு உள்ளது என்பதைச் சட்ட மேதைகள் பலரின் கூற்றுக்களிலிருந்தே நமக்குப் புரிய வைத்துத் தானும் ஒரு சட்ட நிபுணர் என்பதை மெய்ப்பித்துள்ளார் ஆசிரியர்!

இந்திய சுதந்திரத்திற்குப் பின் ஏற்பட்டுள்ள மத்திய மாநிலச் சிக்கல்களை யெல்லாம் முறைப்படுத்திக்கூறி, அவை ஏற்பட்டதன் காரணத்தையும் இவர் தரத் தவறவில்லை.

மத்திய அரசு மாநிலங்களுக்குக் கடன் தருகிறது. 1951-இல் மத்திய அரசு மாநிலங்கட்குக் கொடுத்த கடன் 50 கோடியாக இருந்தது. 20 ஆண்டுகள் கழித்து 1971–இல் அது 6510 கோடியாக அதாவது 130 மடங்கு பெருகி உள்ளதைக் காணுகின்றோம். இது போன்ற பற்பல புள்ளி விவரங்கள் நம்மைச் சிந்திக்க வைக்கின்றன.

நிதி ஆணைக் குழு, திட்டக் குழு, தேசிய வளர்ச்சி மன்றம் ஆகியவற்றின் நடவடிக்கைகள் எவ்வாறு

மாநிலங்களைப் பாதிக்கின்றன என்பதைக் கூறுகின்றார். மாநிலத்திலிருந்து மத்திய அரசு வாங்கும் வரிகளின் விகிதத்தில் மாநிலங்களுக்கு உதவி வருவதில்லை; எவ்வாறு அது சுருங்குகிறது என்பதையும் நூலில் காணுகின்றோம்.

ஆளுநர்—இந்தி—பற்றிக் கூறும் இடங்களில் அறிவு பூர்வமான பல விளக்கங்களைக் காணுகின்றோம்.

எல்லாவற்றிற்கும் மேலாக இந்நூலில் நம்மைக் கவர்வது வழக்கறிஞர் ஆனந்தம் கையாளும் தெளிந்த நடை—தங்கு தடையற்ற சொல்லோட்டம்—சிக்கலான பிரச்சனைகளைக்கூட எளிதாக விளக்கும் முறை—ஆங்கிலத் திற்கேற்ற தூய தமிழ்க் கலைச் சொற்கள் இவைகளே.

பொருள் விளக்கத்திற்கு உவமை கூறி விளக்குவது சிறந்த கலை. ஒற்றையாட்சி முறைக்கு ரோசாமலரை ஒப்பிட்டுக் கூறி விளக்கும் இடம் அதற்கொரு சான்று! 'அயர்லாந்தில் பாம்பு' போன்ற இடங்களில் நகைச் சுவை மிளிர்கிறது. இவைகளை யெல்லாம் பலமுறை படித்துப் படித்து ரசிக்கலாம். நூலைப்பிரித்துப் படித்தால் மூடிவைப் பதற்கே மனம் வருவதில்லை. பழைய புலவர் கூறுவது போலத் தொட்ட இடமெல்லாம் மாநில சுயாட்சிக் கொள்கை மலர்கிறது; நல்ல மணம் வீசுகிறது!

மாநில சுயாட்சிக் கருத்தினை விளக்க நூல் வடிவில் வந்திருப்பவை இதுவரை பாராளுமன்ற உறுப்பினர் முரசொலி மாறன் எழுதிய நூலும், தமிழக அமைச்சர் மாண்புமிகு சாதிக் பாட்சா எழுதிய நூலுமாகும். அந்த வரிசையில் வழக்கறிஞர் ஆனந்தத்தின் ஒப்பற்ற இந் நூலும் சேர்வது கண்டு நாமும் ஆனந்த மடைகின்றோம்!

இந்நூலில் ஐந்து பகுதிகள் இருக்கின்றன. ஐந்தும் ஐம்பெரும் காப்பியங்கள் போலவும், தமிழ்நாட்டு ஐந் திணைப் பகுப்புக்கள் போலவும் அழகு தந்து விளங்கு கிறது. தமிழின் ஐந்திலக்கணம் போல அவை முறையாக அமைந்துள்ளன.

இந்நூலைப் படித்து முடித்தபின் ஒரு நூல் நிலையத் தையே ஆழ்ந்து கற்ற பிரமிப்பு நமக்கு வருகிறது. ஆம்!

இது ஒரு மாநில சுயாட்சிக் கலைக் களஞ்சியம். வள்ளுவப் பெருந்தகையின் நூலைக் குறித்து,

''எல்லாப் பொருளும் இதன்பால் உள இதில்
இல்லாத எப்பொருளும் இல்லையால்''

என்று ஒரு புலவர் கூறியது இதற்கும் பொருந்தும். வழக்கறிஞர் ஆனந்தத்தின் உழைப்பை எண்ணி வியப்படைகின்றேன். இந்நூலை ஒருமுறை பார்க்கும் எவரும் இவ்வாறே வியப்படைவர் என்பதில் ஐயமில்லை.

வாழ்க வழக்கறிஞர் ஆனந்தம்!

''மலர்க மாநில சுயாட்சி.''

ஈரோடு, வி. எம். கைலாசம்
6 - 3 - 1975.

பி. ஏ. சாமிநாதன், எம். பி. புபுளியம்பட்டி
கோவை மாவட்டத்
தி.மு. கழகச் செயலர்.

என் கெழுதகை நண்பர் திரு. கே. எஸ். ஆனந்தம் அவர்கள் எழுதிய இந்நூலினை முழுதும் படித்தேன். அன்பு நண்பனின் அறிவுசால் திறமையும் ஆழ்ந்த ஆய்வும் பல கற்றுத் தெளிந்த நுணுக்கமான அறிவாற்றலையும் கண்டு வியந்து மகிழ்ந்தேன். அவர் வழக்கு மன்றத்திலே வழக் காடும் திறமையிற்றான் மிக்க திறன் கொண்டவர் என எண்ணியிருந்தேன். அவர் எழுதக் கையாண்டுள்ள எளிய் இனிய தமிழ் நடை; கற்றுணர்ந்த நூல்களினின்றும் தொகுத்துத் தந்துள்ள மேற்கோள்கள்; மிகப்பெரிய இந் நூலில் எங்கும் எதிலும் தொய்வும் தளர்வும் சலிப்பும் களைப்புமின்றி, தொடக்கம் முதல் இறுதி வரை அவர் கொண்டு செல்லும் முறைமை; பகுதிகள், பெருந்தலைப் புக்கள், உட்தலைப்புக்கள், சிறு தலைப்புக்கள் எனப் பிரித்து, விரித்து விளக்கிச் ]செல்லும் சங்கிலித் தொடர் போன்ற செய்திகள் அனைத்தையும் பார்க்கையில், தான் ஓர் சிறந்த நூலாசிரியன் என்பதனையும் நன்கு உணர்த்தி விட்டார்.

என் ஊரிலே பிறந்து, இளம் வயது முதல் என்னோடு பள்ளியிலே ஒன்றாகவே படித்து, இன்று கோபியிலே ஓர் சிறந்த வழக்கறிஞராகப் பணியாற்றி வரும் என் இனிய நண்பர் ஆனந்தம் அவர்கள் 1952–ஆம் ஆண்டு முதல் திராவிட முன்னேற்றக் கழக உறுப்பினராக இருக்கின்றார். வழக்காடும் தொழிலில் எவ்வாறு அயராது உழைத்துச் சிறந்தாரோ அவ்வாறே கோபியிலே தி.மு. கழகம் வளர, தளராதுழைத்து, கடுமையான எதிர்ப்புக்களிடையே தழைத்து வளர்ந்து, செழித்திட என்னோடு உழைத்த சிலருள் குறிப்பிடத்தக்கவர்.

1951 முதல் 55 வரை, கோவை அரசினர் கலைக் கல்லூரியில் பயின்று, பி.காம். பட்டம் பெற்றார். 1957-59 -இல் சட்டக்கல்லூரியிற் சேர்ந்து வழக்கறிஞராகத் தேர்ச்சி பெற்று; கடந்த 15 ஆண்டுகளாக, கோவையிலும் கோபி யிலும் வழக்கறிஞராகப் பணியாற்றி வருகின்றார்.

1959 முதல் 62 வரை, திராவிட முன்னேற்றக் கழகத் தொழிலாளர் சங்கங்களின் சட்ட ஆலோசகராகச் சிறப்

பாக பணியாற்றினர். 1971 முதல் 1974 வரை, கழகத்தின் பொதுக்குழு உறுப்பினராக இருந்துவந்தார். மாநில சுயாட்சி பற்றிய இராசமன்னர் குழுவின் அறிக்கை பற்றி ஆய்வு செய்யும் குழுவில் உறுப்பாண்மை பெற்றிருந்தார். கழகத்திற்கு இவர் ஆற்றிய, ஆற்றி வரும் பணிகளுள் இந்நூலினை எழுதியதே மிகச் சிறந்தும் உயர்ந்தும் நிற்கும் என்பதிற் சிறிதும் ஐயமில்லை. பேரறிஞர் பெருந்தகை அண்ணா அவர்களின் மாநில சுயாட்சிக் கொள்கையின் விளக்கத்தை, கழகத் தோழர்களும், பொது மக்களும் படித்துணரும் வகையில் எழுதியுள்ளார்.

நூலின் பொருளடக்கத்தினை அமைத்திருக்கும் முறையே மிகச் சிறப்புடையது. அதனைப் படிக்கும் போதே நூல் படித்த உணர்வும் முழுதும் படிக்க வேண்டும் என்ற ஆர்வமும் எழுகின்றது. கூட்டாட்சியும் மாநில சுயாட்சியும் என்று முதற் பகுதியைத் தொடங்கி, பிரிவினை வேறு சுயாட்சி வேறு என நிலைநாட்டி, கூட்டாட்சி, சுயாட்சியின் அரசியல் விளக்கங்களைக் கூறி உலக நாடுகளிலுள்ள சில கூட்டாட்சி நாடுகளை எடுத்துக்காட்டி இந்தியாவிற்குத் தேவை மாநில சுயாட்சியே என நிறுவுகின்றார். மாநில சுயாட்சி–ஸ்டேட் அட்டானமி (State Autonomy) என்பதற்கு இவர் ஆய்ந்து எழுதியிருக்கும் அரிய விளக்கம் போற்றுதற்குரியது.

இரண்டாம் பகுதியில் இந்திய வரலாற்றினையே படம் பிடித்துக் காட்டுகின்றார். சரித்திர கால வரலாறுகள், ஆங்கிலேயர் ஆதிக்கம், இந்திய விடுதலை ''விடுதலை பெற்ற இந்தியா–இன்று வரை'' இவர் தொகுத்துள்ள முறை, வழக்கறிஞர், வரலாற்றாசிரியராய் என்று மாறினர் என்னும் ஐயம் எழுகின்றது! இறுதியில் எழுதியுள்ள 90 ஆண்டுகளை வென்ற 90 நாட்கள் உணர்வைத் தூண்டி உள்ளத்தை உருக்குகின்றது.

இந்திய அரசியலமைப்பில் மாநில சுயாட்சி என்னும் மூன்றாம் பகுதியில் தனது சட்டம் பயின்ற திறமையை நன்கு வெளிப்படுத்துகின்றார். மத்திய அரசின் அதிகார பலத்தையும், மாநில அரசுகளின் அடிமை வாழ்வையும் பல சான்றுகள் காட்டிச் சாடுகின்றார்.

சுதந்திர இந்தியாவில் மாநில சுயாட்சியின் நிலைபற்றி நான்காம் பகுதியில் மிகத் தெளிவாக்குகின்றார். ஐந்தாண்டுத் திட்டங்கள், மத்திய மானியங்களும் கடன்களும், தொழில்கள், ஆட்சி மொழி பற்றி அரிய கருத்துக்களை ஆதாரத்தோடு பல அரசியல், பொருளாதார, மொழித் துறை வல்லுனர்களின் மேற்கோள்களை எடுத்துக்காட்டி எழுதியுள்ளார். இந்தி......யா? இந்தியா......வா? என்னும் பகுதி இவர்தம் மொழிப் புலமையைப் பறை சாற்றுகிறது.

இறுதியில் ''மலர்க மாநில சுயாட்சி'' என்று நூலின் பெயரையே தலைப்பாக்கி எழுதி முடித்திருக்கும் பகுதி அருமையிலும் அருமையான பகுதியாகும். மத்திய அரசு வலிமைபெற, நாட்டுப் பிரிவினை தவிர்க்கப்பட, குடியரசுத் தலைவர்—தலைமையமைச்சர் சர்வாதிகாரியாக மாறுமலிருக்க, மத்திய மாநில உறவுகள் சிறக்க, இழந்த இறைமையை மீண்டும் பெற, அரசியற் கட்சிகளின் இலட்சியக் கொள்கையாக மலரட்டும் திராவிட முன்னேற்றக் கழகத்தின் இலட்சிய முழக்கமாம் மாநில சுயாட்சிக் கொள்கை என அறை கூவலிடுகின்றார்.

தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கட்கும், அவர் வழி நடத்திச் செல்லும் கழகப் பாசறைக்கும் ஓர் அரிய போர் வாளாக்கி இந்நூலினைத் தந்துள்ள இந்நூலாசிரியர் என் அருமை நண்பன் எனச் சொல்லிக் கொள்வதில் பெருமை கொள்கின்றேன்.

வளர்க அவர்தம் பணி!

வாழ்க ஆனந்தம்!!

மலர்க மாநில சுயாட்சி!!!

புு. புளியம்பட்டி (ஒப்பம்) பி. ஏ. சாமிநாதன்

20-3-1975

## நூலினைப் படிப்பதற்கோர் எளியமுறை....

இந் நூலைப் படிக்க எடுத்தவுடன் ஆயிரத்து நூறு பக்கங்களையும் படித்து முடிப்பது எங்ஙனம்? என யாரும் அருள்கூர்ந்து மலைக்க வேண்டாம். "மாநில சுயாட்சி" என்ற பொருளின் தன்மையையும் நுணுக்கத்தையும் கருதி, இந் நூல் ஐந்து பகுதிகளாகப் பகுக்கப் பெற்றுள்ளது. முதற் பகுதி மற்ற பகுதிகளுக்குரிய முன்னுரையாகவும் கருப் பொருள் விளக்கமாகவும் திகழ்கின்றது. முதல் அத்தியாயம்,முதற் பகுதியின் தோற்றுவாயாக அமைந்துள்ளது. ஒவ்வொரு பகுதியுங் கூறும் விரிவான கருத்துக்களின் சுருக்கமாக, அவ்வப் பகுதியின் தொடக்கத்திலேயே தோற்றுவாய்கள் தரப் பெற்றுள்ளன. மேலும், ஒவ்வொரு பகுதியும் அதனதன் அத்தியாயங்களும் உட்தலைப்புக்களும், கருத்துக் கோவையோடு சங்கலித் தொடர்போலப் படிப்படியாக முன்னேக்கிச் செல்லும் வகையில் அமைக்கப் பெற்றுள்ளன. எனவே, நூலினைப் படிப்போர் தொடக்கத்தில், முதற் பகுதி முழுவதையும்,அடுத்துள்ள இரண்டு முதல் ஐந்து பகுதிகளின் தோற்றுவாய்களையும் நன்கு ஆழ்ந்து படித்தருள வேண்டுகின்றோம். "மாநில சுயாட்சி" பற்றிய பொதுப் பொருள் விளக்கங்களைப் படித்தறிந்து கொள்வதற்குப் பொருளடக்கத்தில் தரப்பட்டிருக்கும் பெரிய எழுத்துக்களிலுள்ள அத்தியாயத் தலைப்புக்களையும் சிறிய எழுத்துக்களிலுள்ள உட் தலைப்புக்களையும் தொடர்ந்து கவனமாகப் படிக்க வேண்டுகின்றோம். அதன் பின்னர், எந்த அத்தியாயத்தைப் படித்தாலும் "மாநில சுயாட்சி" பற்றிய விளக்கம் அதிலிருக்கும். நூலின் இடையிலுள்ள எந்தவொரு பகுதியை மட்டுமாவது முழுமையாகப் படிக்க விரும்பினுல், அதற்கு முன்னுள்ள அத்தியாய, உட் தலைப்புக்கள் அனைத்தையும் ஆழ்ந்து படித்து, அதன் பின்னர்,விரும்பிய பகுதியைப் படித்தால் இந் நூலின் பொருள் தொடர்ச்சியும் கருத்துக் கோவையும் சிதருமல், எளிமையாகப் படிக்க முடியும். நூல் முழுதும் படிக்கப் பெறின், அரசியல், வரலாறு, அரசமைப்பு, அயல்நாடுகளோடு ஒப்புமை, பொருளாதாரம், சட்டம், சமுதாய வளர்ச்சி, இன்றைய அரசியற் சூழல், மற்றையோரின் எதிர்ப்பு வாதங்கள் போன்ற எல்லாக் கோணங்களிலிருந்தும் மாநில சுயாட்சி பற்றிச் செய்யப்பட்ட முழு ஆய்வும் கருத்து விளக்கமும் தெளிவாகக் கிடைக்கும். படித்துப் பயன் பெறுக.

மலர்க மாநில சுயாட்சி!

# பொருளடக்கம்

## முதற் பகுதி

## கூட்டாட்சியும் மாநில சுயாட்சியும்

## இரண்டாம் பகுதி

# இந்திய வரலாற்றில் மாநில சுயாட்சி

மூன்றும் பகுதி

## இந்திய அரசியலமைப்பில் மாநில சுயாட்சி

## நான்காம் பகுதி

## சுதந்திர இந்தியாவில் மாநில சுயாட்சி

ஐந்தாம் பகுதி

## மலர்க மாநில சுயாட்சி

## பட்டியல்கள்





# 1. அண்ணாவின் உயில்

"......மாநிலங்கள் அதிக அளவில் அதிகாரங்களைப் பெறத் தக்க விதத்தில் இ ந் தி ய அரசியல் சட்டம் திருத்தி அமைக்கப்பட வேண்டும் எ ன் ப து பற்றி, வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் எடுத்துக்கூறி வருகிறேன். இதற்கான நல்லாதரவு நாளுக்கு நாள் வளர்ந்தபடி உள்ளது என்பதிலே எனக்குத் தனியான தோர் மகிழ்ச்சி; நமது கழகம் மட்டுமின்றி வேறு பல அரசியல் கட்சிகளும் க ட் சி சாராத அறிவாளர் பலரும் இதற்கு ஆதரவு காட்டுகின்றனர்......"[1]

— பேரறிஞர் அண்ணா.

மலர்க மாநில சுயாட்சி !

மாநிலங்களுக்கு சுயாட்சியா ?

ஒரு நாட்டிற்கு சுயாட்சி தேவை; நாட்டு மக்களுக்கு சுயாட்சி தேவை. ஆனால் ஒரு மாநிலத்திற்கு சுயாட்சி எதற்கு?

மாநில சுயாட்சி என்பது ஓர் அரசியல் தத்துவமா ? அல்லது ஓர் அரசினுடைய அடிப்படைக் கொள்கையா ? அ ல் ல து நாட்டுப் பிரிவினைக்கு அடிகோலும் ஒரு மூலச் சித்தாந்தமா ? மாநில சுயாட்சி என்ற சொல் அரசியல் துறையில் பழக்கத்தி லில்லாத புதிராக உள்ளதே ?

இவையெல்லாம் மக்கள் மன்றத்தில் எழக் கூடிய நியாயமான ஐயப்பாடுகள்.

மாநில சுயாட்சியென்பது பி ரி வி னை யு மல்ல; புதிரு மல்ல; புரியாத அரசியல் தத்துவமுமல்ல.

மாநில சுயாட்சியெனில் மாநிலங்களின் அடிப்படை உரிமை கள்; அஃதாவது மாநில மக்களின் அடிப்படை உரிமைகள்.

மாநில மக்களுக்கு அரசியல் சட்டப்படி தர வேண்டிய மொழி, இன, பண்பாடு, பொருளாதார, அரசியல் உரிமைகள்.

---

1 *1969-ஆம் ஆண்டு 'காஞ்சி' பொங்கல் மலர்.*

மாநில அரசுகள் நியாயமாய்ப் பெற்றிருக்க வேண்டிய அதிகார உரிமைகள்.

ஆக, மாநில மக்களின் மொழி, இன, பண்பாட்டு உரிமைகளை யும் அரசியல், பொருளாதார உரிமைகளையும் பாதுகாத்துப் பேணி வளர்க்கக் கூடிய மாநில அரசிற்கு அரசியல் சட்டப்படி கொடுக்கப்பட வேண்டிய அதிகாரங்களின் ஈட்டத்தையே ''மாநில சுயாட்சி'' என்ற சொல் சுட்டுகின்றது.

அதனைப் பெறுவதற்காக எழுப்பப்படும் உரிமைக் குரல் தான் **மாநில சுயாட்சி முழக்கம்.**

அந்த முழக்கத்தைத் தலைப்பில் தரப்பட்ட அறிஞர் அண்ணா அவர்களின் மேற்கோளும் சுருங்கக் கூறி விளங்க வைக்கிறது.

1969-ஆம் ஆண்டின் ''காஞ்சி'' பொங்கல் மலரிலும், ''ஹோம்ரூல்'' (Home Rule) என்ற ஆங்கில வார இதழிலும், தனது இறுதி அரசியல் இலட்சியமான மாநில சுயாட்சியைப் பற்றி, அண்ணா அவர்கள் தெளிவாக்குகிறார். தமிழக மக்களின் உயர்விற்காகவும் பொருளாதார வளமைக்காகவும், அரசியலில் சமத்துவத் தகுதிக்காகவும், மொழி – இன – பண் பாட்டு உறுதிக்காகவும் தமிழக மக்களுக்கு அண்ணா அவர் களால் எழுதப்பட்ட இறுதிக் கடிதங்களே அவை. அக்கடிதங் களே 'அண்ணாவின் உயில்' எனத் தமிழர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டன.

## அண்ணா தந்த விளக்கம்

அந்த உயில் எழுதப்படுவதற்கு ஆறாண்டுகட்கு முன்னர்- **திராவிட முன்னேற்றக் கழகம்** தனது திராவிட நாட்டுக் கொள் கையை வலியுறுத்திய காலத்திலே கூட – மாநில சுயாட்சி பற்றித் தெளிவாக விளக்க மளிக்கிறார் பேரறிஞர் அவர்கள். 1963-ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 25-ஆம் நாளில் பிரிவினைத் தடை மசோதாவிற்கான அரசியல் சட்டத் திருத்தத்தினை எதிர்த்து, மாநிலங்களவையில் அறிஞர் அண்ணா அவர்கள் நிகழ்த்திய வரலாற்றுப் புகழ் பெற்ற பேருரையில்,

2''அரசினுடைய 'இறைமை' (ஒப்புயர்வற்ற ஆட்சி அதிகாரம்) (Sovereignty) என்பதற்கு நாம் கொள்ளும் பொருள் என்ன? அரசியல் இறைமையானது (Political Sovereignty) பொது மக்களிடம் நிலைத்துள்ளதென நமது அரசியலமைப்பின்

---

*2 Dr. C. N. Annadurai, ''Carry on! But Remember!'' (1969) Pp 16, 17, 18, 19, and 20.*

(Constitution) முகவுரை கூறுகிறது. சட்டம் சார்ந்த இறைமை யானது (Legal Sovereignty) கூட்டாட்சி ஒன்றியத்திற்கும் (மத்திய அரசு) அதன் அங்கங்களுக்கு மிடையே (மாநிலங்கள்) பிரித்துத் தரப் பட்டுள்ளது. இன்னும் அதிகப் பயன்களே விளை விக்கும் இறைமையைப் பெற்ற அங்கங்களாக, மாநிலங்களைத் திகழச் செய்வதற்கே எங்கள் திட்டங்கள் பயன்படுகின்றன என்று நீங்கள் ஏன் எடுத்துக் கொள்ளக் கூடாது? திராவிட நாடு வேண்டும் என்ற கோரிக்கையைக் கிளப்பியவுடன், நாங்கள் 'இறைமையின்' ஆணிவேரை வெட்டுகிறோம் என நீங்கள் ஏன் எண்ணிக் கொள்கிறீர்கள்? முழுமையான இறைமை, குறிப்பிட்ட ஒரே ஓர் இடத்தில் எப்போதும் தங்கி விடுவதில்லை.''

''...நாம் ஒரு கூட்டாட்சி யமைப்பை (Federal form) ஏற்றிருக் கிறோம். அரசமைப்பை உருவாக்கியவர்கள், ஒற்றையாட்சி அமைப்புக் (Unitary form) கூடாது; கூட்டாசி யமைப்பு முறை தான் வேண்டு மென்று விரும்பினார்கள். ஏனெனில், அரசியல் தத்துவ ஞானிகள் பலர் சுட்டிக் காட்டி யுள்ளபடி, இந்தியா மிகப் பரந்து கிடக்கின்றது.''

''உண்மையில் அதனை ஒரு துணைக் கண்டம் என அழைக்கக் கூடிய அளவிற்கு அது பரந்து விரிந்து கிடக்கின்றது. எஃகால் செய்த வரைச் சட்டத்தைப்போல் வலிவான ஓர் ஒற்றையாட்சி யமைப்பை ஏற்க முடியாத அளவிற்கு, இந்நாடு மாறுபட்ட மரபுகளையும், வேறுபட்ட வரலாறுகளையும், பல திறப்பட்ட மனோ பாவங்களையும் கொண்டுள்ளது.''

''...சென்ற பதிமூன்றுண்டுகளாக நமது கூட்டாட்சி செயல்படும் தன்மையானது மாநிலங்களிடையே விரக்தி உணர்ச்சியைத் தோற்றுவித்துள்ள தென்பதே எனது குற்றச்சாட்டு. மாநிலங்கள், சுங்கத் தொகை வசூலிக்கக் கூடிய சாதாரண நகராட்சி மன்றங் களைப்போல் விரைந்து மாறி வருகின்றன. அவை, இருக்கும் இடம் தெரியாமல் பின்னணிக்குத் தள்ளப்பட்டுள்ளன. அதிக அதிகாரங் கள் தரப்பட வேண்டு மென்ற இயற்கையான உணர்வுகள் மாநிலங் களிடம் தோன்றியுள்ளன. நமது கூட்டாட்சி யமைப்பின் இவ்வகை யான நடைமுறை, மாநிலங்களை மேலும் மேலும் விரக்தியடையச் செய்துள்ளது என்பதை நான் தெளிவாக்க விரும்புகிறேன். நமது அரசியல் சட்டம் மறு பரிசீலனை செய்யப்பட வேண்டும் — மறு ஆய்வும் செய்யப்பட வேண்டும் — இதனை மத்திய அரசு உணர வேண்டும் — என்பதே மாநிலங்களின் கோரிக்கைகளாகும்...''

"...எனவே நமது அரசமைப்புச் சட்டத்தின் கூட்டாட்சி முறையிலுள்ள பல ஒற்றை ஆட்சித் தன்மைகளை எதிர்த்துப் போரிடுகின்ற ஒரு தாக்குதல் முன்னணியாகவே ( Spearhead ) நீங்கள் திராவிட முன்னேற்றக் கழகத்தைக் கருதிக் கொள்ள வேண்டுகிறேன். நாடாளு மன்றத்தின் அறிவுசால் உறுப்பினர்களாகிய நீங்கள் ( மாநிலங்களின் ) இந்தச் சிக்கலை ஏன் மூடி மறைக்கின்றீர்கள்? அதனை உயர் மட்ட அரசு மன்றத்திற்குக் கொண்டு வருவீர். அதனை (அச்சிக்கலை) தங்கு தடையின்றி நடமாட அனுமதிப்பீர் ; (தற்போதைய) கூட்டாட்சியை, ஒரு மெய்யான கூட்டாட்சியாக மலர வைப்பதற்கு வழி வகை செய்திடுவீர்......"
என முழங்கினர்.

"What is it that we mean by sovereignty ? The Preamble to the Constitution says that the political sovereignty rests with the people. The legal sovereignty is divided between the Federal Union and the Constituent units. Why not you take it that our scheme is to make the States still more effective sovereign units ? Why not you take it in that light? Why do you think that the moment we demand Dravidastan, we are cutting at the root of sovereignty ? Sovereignty does not reside entirely in one particular place. We are having a Federal Structure. That is why the framers of the Constitution wanted a Federal structure and not a unitary structure, because as many political philosophers have pointed out, India is so vast-in fact it has been described as a sub-continent - so vast, the mental health is so varied, the traditions are so different, the history is so varied that there cannot be a steel frame unitary structure here. My complaint is - and it has been endorsed by the P. S. P. Member, Mr. Gurupada Swamy and others, that the working of the Federal structure all these thirteen years has created a sense of frustration in the minds of the States. They feel-they may not side me-that the States are fast becoming dole-getting Corporations. They feel that they are relegated to the background, and there is the very natural instinct in them that they should be given more power."

"When coupled with that there is the regional disparity and added to that there is the linguistic tangle, do you not think that it is very natural for men like us to feel disillusioned and that it is not very unnatural that we should think

of separation? Well come to us half way and say: we go so far and no further. But when you say that, when you meet us half-way, give us proper answer to the puzzles that are created not by us but by the working of the Constitution to the detriment of the States."

"...I am very sorry you have lost the battle. What I want to say is that the working of the Federal structure is in such a way that the States are more and more feeling frustrated, and their demand is to make the Union Government think that there should be a review of the Constitution, a reappraisal of the Constitution...."

..."Therefore, you should take the DMK as the spearhead of the opposition to the unitary nature of the Federal structure of this Constitution. As elder Members of Parliament why should you take this into the jungle? Lift it up to the highest political arena and allow it free play; make the Federation become a Real Federation."

பதினேரு ஆண்டுகட்கு முன்பே, மாநில சுயாட்சிக் கொள்கையின் உயிர் மூலத்தை, மேற் சொன்ன வரிகளால் கோடிட்டுக் காட்டினுர் பேரறிஞர் அண்ணு அவர்கள். "திராவிடநாடு திராவிடருக்கே" என்ற முழக்கம் தென் மாநிலங்களுக்கிழைக்கப்பட்ட அநீதியையும், அவைகளுக்கேற் பட்ட வேதனையையும், விரக்தியையும் வெளிப்படுத்துகின்ற ஒரு தீவிரமான கோரிக்கையாகும் என்ருர் அவர். ஒற்றை ஆட்சித் தன்மைகளைப் பெரும்பாலும் கொண்டிருக்கும் நமது இந்திய அரசமைப்பின் கூட்டாட்சி முறையை மாற்றியமைக்க வேண்டுமெனவும் இந்திய நாட்டில் முழுமையான கூட்டாட்சி மலர வேண்டுமெனவும் அவர் வாதிட்டார். அதற்காக, இன்றைய அரசியல் சட்டம் ஆய்வு செய்யப்பட வேண்டும்; மாநிலங்களின் இழிநிலை மக்கள் மன்றத்திற்குக் கொண்டு வரப் பட வேண்டும் எனவும் அவர் குறிப்பிட்டார். இந்தியத் துணைக் கண்டத்தை மெய்யான ஒரு கூட்டாட்சியாக அமைப்பதற் குரிய தாக்குதல் அணியாகவே திராவிட முன்னேற்றக் கழகம் இனி விளங்கும் என்பதையும் அவர் மறைபொருளாகச் சுட்டிக் காட்டினுர்.

மாநில சுயாட்சிக் கொள்கை விளக்கத்தை, மாநிலங்க ளவையில் தெளிவாக்கிய பேரறிஞர் அவர்கள், அதற்குப்பின் 5 மாதங்கள் கழித்து, 1963–ஆம் ஆண்டு சூன் திங்களில், ''மொழிவழி பிரிந்த, இனவழி ஒன்றுபட்ட சுதந்திர திராவிட நாட்டை அடைய வேண்டுமென்ற'' பிரிவினைக் கொள் கையை முழுமையாகக் கைவிட்டுவிட்டார். திராவிட முன்னேற்றக் கழகமும் தனது மூலக் கொள்கையான திராவிட நாட்டுக் கொள்கையை கைவிட்டுவிட்டுமெய்யான கூட்டாட்சி யின் மூலக் கூறுன, மாநில சுயாட்சிக் கொள்கையைத் தனது அரசியற் குறிக்கோளாக ஏற்றுக் கொண்டது.

## சுயாட்சியும் பிரிவினையும்

அரசமைப்புச் சட்டத்தின் வரையறைக்குட்பட்ட இந்திய மாநிலங்கள் – இந்தியாவின் ஒற்றுமையை உள்ளடக்கிய உண்மையான ஒரு கூட்டாட்சி அமைப்பினுள் மத்திய அரசின் தலையீடும் கட்டுப்பாடுகளும் இல்லாமல் இயங்குவதற்கான தன்னுட்சி உரிமைகளையும் அதிகாரங்களையும் பெற்றுக்கொள் வதற்காக வகுக்கப்பட்ட கோட்பாடே, ''மாநில சுயாட்சிக் கொள்கை'' எனப்படும். இந்திய நாட்டினின்றும் பிரிந்து போவது என்பது அதன் பொருளல்ல.

இதனைத்தான் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் மாநிலங் களின் ''தன்னுட்சி வேறு; தனியாட்சி வேறு'' என விளக்க மளித்தார்.

மாநில சுயாட்சிக் கொள்கையின் உயிரோட்டத்தை, இந்திய வரலாற்றிலும், வேறு சில கூட்டாட்சி நாடுகளின் அரசமைப்புக்களிலும், நாம் தெளிவாகக் காணலாம். அக் கொள்கை, வரலாற்றிலும் அரசியலிலும் ஒரு சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளது.

நாட்டுப் பிரிவினை யென்றுல்,இந்தியத் துணைக் கண்டத்தி லிருந்து தனித்து ஒதுங்கி, தனி இறைமையுள்ள ஒரு தனி நாடாக மலர்வது எனப் பொருள்.எனவே தன்னுட்சி யுரிமைக் கும் பிரிவினைக் கோரிக்கைக்கும், மலைக்கும் மடுவுக்கு முள்ள மாறுபாடுண்டு. இவ்விரு கோரிக்கைகளுக்கு மிடையில் ஆழ்ந்தகன்ற பெருவெளி பரந்து கிடக்கின்றது.

ஆனால், மாநிலங்களுக்குரிய தன்னாட்சி உரிமைகளை அரசமைப்புச் சட்டப்படியும் கூட்டாட்சி அமைப்பு முறையிலும் தருவதற்கு முன் வராத மத்திய வல்லாட்சியைப் பேணும் தேசியத் தலைவர்கள், மாநில சுயாட்சிக்கும் பிரிவினைக்கும் இடையிலுள்ள இடைவெளியை நன்கு புரிந்து கொண்ட பின்னரும்,அவை யிரண்டும் ஒன்றே யெனக் குழப்புகின்றனர். அவர்கள், இல்லாத ஒன்றை இருப்பதாகச் சாற்றி, அதனாலெழும் அரசியல் குழப்பச் சூழ்நிலையைத் தங்களுக்குச் சாதகமாக்கிக் கொண்டு, மாநிலங்களின் அடிப்படை யுரிமையான சுயாட்சியுரிமையை,வேரோடுகெல்லி யெறியத்துணிகின்றனர். அதற்காக இந்திய மக்களின் அறியாமையைப் பயன்படுத்திக் கொள்கின்றனர். அரசமைப்புச் சட்டத்தின் ஆழ்ந்த நுணுக்கங்களை அறியாதவர்களாகவும், இந்தியத் துணைக் கண்டத்தின் உண்மையான வரலாற்றைப் புரிந்து கொள்ள முடியாதவர்களுமான நம் மக்களை,"நாட்டுப் பிரிவினையும் மாநில சுயாட்சியும் ஒன்றே" எனக் கூறி, அத் தலைவர்கள் திசை திருப்பி விடுகின்றனர். மாநில சுயாட்சியை, அடிப்படை இலட்சியமாகக் கொண்ட திராவிட முன்னேற்றக் கழகத்தை, "பிரிவினைக் கட்சி" என்றும் கூசாமல் கூறுகின்றனர். அதன் தலைவர்களை, "பதவிவெறி பிடித்தவர்கள்", "தேசியத்தின் எதிரிகள்", "குறுகிய பிராந்தியவாதிகள்" என்றெல்லாம் விமர்சனம் செய்கின்றனர்.

இந்தக் குற்றச்சாட்டுகளுக் கெல்லாம் அறிஞர் அண்ணா அவர்களே உரிய மறுமொழி தருகிறார். "விடியற்காலையே வாழ்க"(Hail the Dawn), என்ற மகுடமிட்டு,1969-ஆம் ஆண்டின் "ஹோம்ரூல்" (Home Rule) வார இதழில் "தம்பிக்கு" எழுதிய தன் இறுதி முடங்கலில்,

"அன்புத்தம்பி! பதவிப் பித்துப் பிடித்துத் திரிபவனல்லன் நான். வெற்றுத்தாளில் கூட்டாட்சி சார்புடையது எனக்கூறி,நடைமுறையில் மத்திய அரசிற்கு மென்மேலும் அதிகாரங்களைக் குவித்துக் கொண்டிருக்கிற (நமது) அரசியல் சட்டத்தின் கீழியங்கும் ஒரு மாநிலத்திற்கு நான் முதலமைச்சர் என்பதில் சிறிதும் மகிழ்ச்சி அடையவில்லை.இதற்காக மத்தியஅரசிற்கு எரிச்சலூட்டி,டெல்லியுடன் சச்சரவு செய்து கொள்வதே என் நோக்கம் என்று எனது நல்ல நண்பரான உயர்திரு. நம்பூதிரிபாடு கூறுவதையும் நான் விரும்ப வில்லை. அதனைச் சரியான கால கட்டத்தில் தீர்மானிக்க வேண்டுமென்பதும் இன்றியமையாதது. உண்மைதான்; அப்படித்

தீர்மானிக்கும் முன்னர், கூட்டாட்சித் தத்துவத்தை மக்களுக்குக் கற்றுத் தர வேண்டும். கொல்லைப்புற வாயில் வழியாக நுழையும் ஒருவகை இரட்டை ஆட்சியே நமது இன்றைய அரசியல் சட்டம் என்பதை, தி. மு. க. ஆட்சிப் பொறுப்பிலிருப்பதன் மூலமாக, சிந்திக்கும் ஆற்றல் படைத்த மக்களின் கவனத்திற்குக் கொண்டு வரமுடியுமெனில், உண்மையில் அதுவே நாம் அரசியல் உலகத்திற்குச் செலுத்திய உரிய பங்காகும். ''

எனத் தெளிவுபட விளம்புகிருர். மாநில சுயாட்சி பற்றி டெல்லியோடு போராடுவதற்கு முன்னர், அதனுடைய மூலச் சித்தாந்தமான கூட்டாட்சிக் கொள்கை பற்றி மக்களுக்குத் தெளிவுபட விளக்கியாக வேண்டுமென்பதே அவருடைய கனவு. அவரது கனவு நனவாகும் வகையில், வரலாற்றுச் சுவடிகளின் அடித்தளத்தில் மறைந்து கிடக்கும் மாநில சுயாட்சிக்கொள்கையை— வேற்று நாடுகளின் அரசமைப்புச் சட்டங்களில் பொன்னெழுத்துக்களால்பொறிக்கப்பட்ட மாநிலத் தன்னுட்சித் தத்துவத்தை- கூட்டாட்சி அமைப்பு என்ற பெயரால் ஒற்றை யாட்சி முறையினைப் படைத்திருக்கும் நமது அரசமைப்புச் சட்டத்தால் முடமாக்கப்பட்ட மாநில சுயாட்சியை — அரசியல் விபத்தின் காரணமாக இந்தியத் துணைக் கண்டத்தை இருபத்து ஐந்து ஆண்டுகளாக ஆட்டி வைக்கும் ஒரே ஓர் ஆளும் கட்சியின் திட்டமிட்ட சதியினுல் சிதைக்கப்பட்ட மாநிலத் தன்னுட்சியை — நாம் வகையாக முறைப்படுத்தி ஒவ்வொரு பகுதியாக, இந்நூலில் ஆய்வு செய்கிரேம்.



## 2. அரசியல் விளக்கம்

"வளர்ந்து வரும் தேசிய இன விழிப்புணர்ச்சி, ஒரு நாட்டின தொன்று தொட்ட எல்லைப் பகுதிகள் என்ற அடிப்படையிலோ அல்லது அவ்வப்போது உருவாகும் பூகோளத் தொடர்புகளின் அடிப்படையிலோ ஏற்படுவதில்லை; ஆனால் அது முழுக்க முழுக்கத் தாய் மொழியின் அடிப்படையிலேயே ஏற்படுகின்றது."[1]

— பேராசிரியர். A. J. டாயின்பீ.

சென்ற இயலிலுள்ள அண்ணா அவர்களின் மேற்கோள்களைச் சற்று ஆழ்ந்து படித்தால், அவற்றில் அரசியல் சார்புடைய சில கலைச் சொற்கள் விரவி நிற்பது நமக்குத் தெரிய வரும். அச் சொற்கள் ஒவ்வொன்றும் தனிப் பொருளையும், நுணுக்கத்தையும் பெற்றிருக்கின்றன. எனவே, அண்ணா அவர்களின் மாநில சுயாட்சிக் கொள்கை விளக்கத்தையும், அவர் தந்த பேருணர்வால் எழுதப்பட்ட இந்நூலில் வரும் பல ஆழ்ந்த கருத்துக்களையும் தெளிவாகப் புரிந்து கொள்வதற்காக அரசியல் சார்ந்த சில அரிய சொற்களின் பொருள்களையும் நுணுக்கங்களையும் நாம் ஐயந்திரிபற அறிந்து கொள்வது மிக மிக இன்றியமையாததாகும். அதற்குப் பின்னணியாக அமையும் மனித சமுதாய வளர்ச்சிக் கட்டங்களையும் நாம் தெரிந்து கொள்ள வேண்டாமா?

### சமுதாயம் (Society)

உலகின் பல பகுதிகளில் ஆதியில் தனித் தனியாகப் பிரிந்து வாழ்ந்த மக்கள் கூட்டங்கள், "மக்கள் குழுக்கள்" (Groups) என அழைக்கப்பட்டன. ஒவ்வொரு குழுவும், தங்கள் சமூகப் பிரச்சனைகளை, அக் குழுவிற்குரிய பொது நடவடிக்கைகளின் மூலமாகத் தீர்த்துக் கொள்ள முயற்சி செய்தன. ஒரு குழுவின் பொதுப் பிரச்சனைகளும், பொதுப் பரிகாரங்களும் பொதுவான வாழ்க்கை முறைகளும், அந்தக்குழுவைச்சார்ந்த மக்களுக்குரிய தனித் தன்மையாயிற்று. அத்தனித் தன்மையே, நாளடைவில்

---

1 Prof. A.J. Toynbee, quoted in "The Report of The States Reorganisation Commission" (1955) page 41.

அக்குழுவிற்குரிய தனிப் பண்பாடாக உருவாயிற்று. தனித்த பண்பாட்டைப் பெற்ற பின்னர் ஒவ்வொரு குழுவும் தனித் தனிச் சமுதாயங்களாக வரலாற்றில் நிலைத்து விட்டன.

## தேசிய இனம் (Nation)

''தேசிய இனம்'' என்ற சொல்லுக்கு ஈடான ''Nation'' என்ற ஆங்கிலச் சொல் ''Natio'' என்ற இலத்தின் மொழிச் சொல்லை மூலமாகக் கொண்டது. ''Natio'' என்றால் ''பிறந்தது'' எனப் பொருள். ஒரு குறிப்பிட்ட மூதாதையர் வழியில் பிறந்து அந்த மூதாதையரின் பாரம்பரியத்தில் வாழையடி வாழை யாகத் தோன்றிய மக்கள் வளர்ச்சியடைந்து, குறிப்பிட்ட ஒரு குழுவாகி, ஒரே வகை மரபு, தன்மை, மொழி ஆகியவற்றைப் பெற்றியங்கி,தனித்தஒரு சமுதாயமாக மாறுவதற்குரிய தனித்த தோர் இனத் தன்மையையே''Natio''என்ற சொல் சுட்டுகிறது.

பர்ஜஸ்(Burges)என்ற பேராசிரியர், ஒரு பூகோளப் பகுதிக் குள் தொடர்ந்து வாழ்ந்து வரக்கூடிய-ஒற்றுமையைப் பெற்ற- ஒரே இன மக்கள் கூட்டத்தை,'தேசிய இனம்'எனக் கூறுகிறார். பொதுமொழி, பொதுமரபு, பொதுப் பழக்கவழக்கங்கள், பொது வரலாறு, பொது இலக்கியங்கள், ஒரே வகையைச் சார்ந்த எண்ணக் கோளங்கள், ஒரே பண்பாடு ஆகியவைகளால் பிணைக்கப்பட்ட ஒரு மக்கள் கூட்டத்தை — ஓரினத்தைச் சார்ந்தவர்கள் எனக் குறிப்பிடுகின்றார். சான்றாக, தமிழகத்திலுள்ள தமிழர்கள், வடபுலத்திலுள்ள ஆரிய இனக் கலவை பெற்ற பல சமுதாய மக்கள், மராத்தியர், வங்காளிகள், மற்றும் பஞ்சாபியர் ஆகியோர் தனித்தனி தேசிய இனங்களைச் சார்ந்தவர்கள். மொழி அடிப்படையில் பார்த்தால், இந்தியத் துணைக் கண்டத்திலுள்ள வரையறுத்த நிலப்பகுதி களான மொழிவாரி மாநிலங்களில், பண்டு தொட்டு வாழ்ந்து வரும் பல சமுதாயங்களைச் சார்ந்த மக்களைத் தனித் தனித் தேசிய இனங்களெனக் குறிப்பிடலாம்.

''இந்தியா''ஒரு நாடு என அழைக்கப் பட்டாலும்,பல மொழி களைப் பேசக் கூடியதும் தனித்த பல பண்பாடுகளைக் கொண்டது மான பல தேசிய இனங்களைத் தன்னகத்தே பெற்றுள்ள ஒரு துணைக் கண்டமாகும். எனவே, அரசியல் தத்துவப்படி, தனித்தனி மொழி பேசக்கூடிய பல இந்திய மாநிலங்களை, தனித்தனி நாடுகள் எனச் சொன்னால் அது மிகையாகாது.

ஆனல், ஒவ்வொரு மாநிலத்திற்கும் தனி அரசதிகாரத்தைக் கொண்ட தனித்தனி அரசாங்கமும், தலையாய உரிமையினை நல்கும் 'இறைமை' யும் இல்லாததால், அவை தனித்தனி நாடுகளென அழைக்கப்படுவதில்லை. மாருக, அந்தப் பொருளைக் குறிக்கும் மாநிலங்களெனவே (States) அவை அழைக்கப்படுகின்றன. அரசியல் நூற்படி ஓர் அரசின் இறைமையும் (ஒரு நாட்டின் தலையாய அதிகாரம்) முழு அதிகாரங்களைப் பெற்ற அரசாங்கமும், இந்தியாவிற்குப் பொதுவாக அமைந்துவிடுவதால் இந்தியத் "துணைக் கண்டத்தை" இந்திய 'நாடு' என அழைக்கின்ருேம். அதனுள் இருக்கும் பல தனி நாடுகளையும் இந்திய மாநிலங்கள் என்றே அழைக்கின்ருேம்.

முதல் உலகப் போர் முடிந்த பின்னர், போரால் பாதிக்கப்பட்ட பல காலனி நாடுகளின் சுதந்திர உரிமைகள் ஏற்றுக் கொள்ளப்பட்டன. 1920-ஆம் ஆண்டு முதல் "ஒரு தேசிய இனம் — ஒரு தனிநாடு" (One Nation-One State) என்ற "சுய நிர்ணய உரிமைக் கொள்கை" (Right of Self Determination) நவீன உலகத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. ஒரு தேசிய இனத்தைச் சார்ந்த மக்கள், ஒரு தனி நாட்டைப் பெறுவதற்கு உரிமை பெறுகிருர்கள் என்பதே அக்கொள்கையின் அடிப்படையாகும். "ஓரினம் – ஒருநாடு" (One Nation-One State) என்ற அரசியற் கோட்பாடு, இன்றைய உலகத்தின் ஒரு சிறந்த கொள்கையாகக் கருதப்படுகிறது.

அகில உலகத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்ட "ஓரினம் — ஒரு நாடு" என்ற கொள்கையின்படி, இந்திய மாநிலங்களைப் பற்றி நடுநிலையில் நின்று நாம் ஆய்வு செய்தால், இந்திய நாட்டின் மாநிலங்கள் ஒவ்வொன்றும் தனித்தனி நாடுகளாகும் தகுதியையும், தகைமையையும் அரசியற் சிறப்பினையும் பெற்றிருக்கின்றன என்பது புலனுகும். அதனல், இந்திய மாநிலங்களெல்லாம் தனித்தனி நாடுகளாக உடனே பிரிந்து போய்விடவேண்டுமென்பது நமது கொள்கையல்ல. தனித்தனி நாடுகளின் தகுதியைப்பெற்றுள்ள மாநிலங்கள், இந்தியக் கூட்டாட்சியில் (Indian Federation) ஒன்றியிருப்பதால், ஓர் உண்மைக் கூட்டாட்சியமைப்பில் தரப்பட வேண்டிய மாநில சுயாட்சியாவது, அவை பெற்றுத் திகழ வேண்டாமா என்பதற்குரிய தர்க்கரீதியான ஆதாரத்தையே நாம் இங்கே கோடிட்டுக் காட்டினேம்.

837



## நாடு (State)

பழக்கத்தில் 'சமுதாயம்', 'தேசிய இனம்', 'அரசாங்கம்' என்பனவற்றைப் பொதுவாகக் குறிப்பிடும் வகையில் 'நாடு' என்ற சொல் முறையின்றிப் பயன் படுத்தப்படுகின்றது. ஆனல், அவை யொவ்வொன்றும் தனித்தனி இலக்கணத்தை யும் பொருளையும் பெற்று விளங்குகின்றன.

அரசியல்படி 'நாடு' என்ருல் என்ன ?

பேராசிரியர். லாஸ்கி (Professor. Laski) அவர்கள்,

" அரசாங்கம் எனவும் குடிமக்கள் எனவும் பகுக்கப்பட்டு, ஒரு குறிப்பிட்ட நில எல்லைக்குள் இயங்கும் சமுதாயம், அதற்கென ஒதுக்கப்பட்ட வெளி வரம்பிற்குள்ளிருந்து எல்லா நிறுவனங் களின் மீதும் தலையான மேலாட்சியைச் செலுத்தக் கூடிய தன்மை யைப் பெற்றிருப்பின் அது நாடு எனப்படும்." 2

என்று நாட்டினுடைய இலக்கணத்தை இயம்புகிருர்.

"A territorial Society divided into Government and subjects claiming, within its allotted physical area, a Supermacy over all other institutions".

பேராசிரியர். லாஸ்கி அவர்கள் கருத்துப்படி, 'நாடு' என்பதற்கு நால்வகை மூலப் பொருள்கள் தேவை.

1. ஒரு சமுதாயம்.
2. அச்சமுதாயம் ஒரு குறிப்பிட்ட நிலப் பகுதிக்குள் இயங்க வேண்டும்.
3. அது அரசாங்கமெனவும், குடிமக்களெனவும் தனித் தனியாகப் பிரிக்கப்பட்டிருக்க வேண்டும்; வரையறுக் கப்பட்ட அதிகாரத்தோடு அரசாங்கமும் குடிமக்களும் அவரவர் எல்லைக்குள் இயங்குதல் வேண்டும்.
4. அந்நாட்டிலுள்ள எல்லா நிறுவனங்களின் மீதும் அந்த அரசாங்கம் வரையறுத்த எல்லைக்குள்ளிருந்து மேலாட்சி செய்தல் வேண்டும்.

---

2 Quoted From 'Principles of Politiccal Science" (1973) By Mr. A. R. Kapur, Page. 39.

அஃதாவது 'நாடு' என்பது, குடிமக்களையும் ஒரு குறிப்பிட்ட நிலப் பகுதியையும் ஓர் அரசையும் அந்த அரசை இயக்கும் இறைமையையும் கொண்டியங்க வேண்டும். இந் நால்வகை மூலப் பொருள்களில் ஏதாவது ஒன்று குறைவு படினும் அச்சமுதாயத்தை 'நாடு' என அழைக்க இயலாது.

எனவே, ஒரு சமுதாயத்தில் நிலை பெற்றிருக்கும் அரசாங் கமும், அந்தச் சமுதாயத்தில் பல நிறுவனங்களின் மேல் அந்த அரசு செலுத்தும் தலையான மேலாட்சி அதிகாரமும் (இறைமை) அச்சமுதாயத்தின் மக்களை வெறும் "தேசிய இனம்" என்ற தகுதியிலிருந்து, குறிப்பிட்ட 'ஒரு நாட்டைச் சார்ந்தவர்கள்' என்ற உயர்வினை அளிக்கின்றன. இறைமையும், அரசும் இல்லாத தேசிய இனச் சமுதாயம் நாடாகி விடாது.

## அரசாங்கம் (Government)

ஒரு சமுதாயத்தைச் சார்ந்த மக்கள்–அவர்களது அரசியல் பொருளாதாரச் சமுதாயக் குறிக்கோளை அடைவதற்காக, தங்களைக் கட்டுப்படுத்தக் கூடிய பொது ஒழுக்க விதிகளை ஏற்படுத்திக் கொண்டு, அந்த விதிகளின் கட்டுப்பாட்டிற்குள், முறையாக இயங்கி வருதல் இன்றியமையாததாகும். அந்த விதிகளை அமுல் படுத்துவதற்காகவும், அந்த விதிகளுக்குச் சமுதாய மக்களை அடிபணிந்து நடக்கச் செய்வதற்காகவும், ஏற்படுத்தக் கூடிய ஓர் அமைப்பையே அரசாங்கம் எனக் கூறுகிறோம்.

ஒரு நாட்டு மக்களின் பொதுக் குறிக்கோள்கள் எல்லாம் சந்திக்கும் அதிகார மையத்தையே 'அரசு' எனக் கூறுகின்றனர்.

ஒரு நாட்டு மக்களின் பொதுக் கொள்கைகளை அந்நாட்டு அரசாங்கமே தீர்மானிக்கும்; அந்நாட்டு மக்களின் பொதுக் காரியங்களும் செயல்களும், அரசாங்கத்தாலேயே முறைப் படுத்தப் படுகின்றன; அந்த மக்களின் நலன்களும் அரசாங்கத் தாலேயே பேணிக் காக்கப்படுகின்றன.

அரசாங்கம் இல்லையெனில் அந்நாட்டு மக்களின் பொது வான செயல்முறை இல்லை; அந்நாட்டு மக்கள், முரண்பட்ட நோக்கங்களைக் கொண்ட சிறுசிறு குழுக்களாகப் பிரிந்து நின்று

தீராத போராட்டத்தை நடத்திக் கொண்டிருப்பர். எனவே, ஒரு பொதுவான தலைமையும் அதனால் தரப்படும் ஒழுங்கு முறையும் ஒரு நாட்டிற்கும், நாட்டு மக்களுக்கும் மிக மிக அடிப்படையானதாகும். ஒழுங்கை நிலைநாட்டும் அந்தத் தலைமையே அரசாங்கம் எனப்படும். அரசாங்கமின்றி ஒரு நாடிருக்க முடியாது; நாட்டு மக்கள் இயங்கவும் முடியாது.

## இறைமை (Sovereignty)

ஓர் அரசாங்கத்தின் ஒப்புயர்வில்லாத உயர் தனித் தன்மையை மற்றவற்றிலிருந்து பிரித்துக் காட்டுவது அந்த அரசாங்கம் பெற்றிருக்கக் கூடிய 'இறைமை'த் தன்மையாகும்.

குறிப்பிட்ட நிலப் பகுதியில் வாழக்கூடிய மக்கள் சமுதாயம் தனக்கென ஓர் அரசாங்கத்தைப் பெற்றிருப்பதாலேயே, அது 'நாடு' என்ற தகுதியைப் பெற்று விடுவதில்லை. அரசாங்கத்துடன் இறைமையையும் அந்நாடு பெற்றிருக்க வேண்டும். அஃதாவது, அந்த அரசும் மக்களும் உள்நாட்டளவில் யாருக்கும் அடிபணியாத தலையாய பல உரிமைகளைப் பெற்றிருக்கவேண்டும்; அது மட்டுமல்ல, அந்நாட்டிற்கு வெளியே இருக்கும் எந்தவோர் அமைப்பின் மூலமாகவும், அந்நாட்டு அரசும் மக்களும் கட்டுப் படுத்தப்படாம லிருக்கவும் வேண்டும்.

உள்நாட்டில், தலையாத உரிமைகளையும் முழு அதிகாரங்களையும் கொண்டிருக்கும் தன்மையை அந்த அரசின் "உள்நாட்டின் இறைமையெனவும்" (Internal Sovereignty) வெளிநாட்டுக் கட்டுப்பாடுகளில்லாமல் சுயமாக இயங்கும் அதிகார உரிமைகளை அரசின் 'வெளி இறைமை' (External Sovereignty) யெனவும் அரசியல் நூல் குறிப்பிடுகின்றது. இந்த இருவகை இறைமைகளையும் பெற்றிருக்கக் கூடிய அரசாங்கத்தையே 'இறைமை' கொண்ட அரசாங்க மென்று கூறப்படுகிறது.

ஆக, ஒரு நாடு, அதன் உள்நாட்டு விவகாரங்களிலும் வெளிநாட்டுறவுகளிலும், ஏகபோகமான எல்லா அரசதிகாரங்களையும் பெற்றிருக்கக் கூடிய தன்மைக்கே 'இறைமை' எனப் பெயர்.

பேராசிரியர் டியூகிட் (Duguit) அவர்கள் இறைமைக்கு இலக்கணம் வகுக்கும் போது,

> "ஒரு நாட்டினுடைய ஆணையிடும் அதிகாரமே இறைமை யெனப்படும். அந்நாட்டின் நிர்ணயிக்கப்பட்ட முழுமையான விருப்பம் இறைமை யாகும். அந்நாட்டின் எல்லைக்குள்ளிருக்கும் மக்களுக்கும் அமைப்புகட்கும், நிபந்தனை யற்ற ஆணைகளைப் பிறப்பிக்கக் கூடிய தலையாய உரிமையே இறைமை யெனப்படும்."[3]

எனக் கூறுகிறார்.

"Duguit says that Sovereignty is the Commanding Power of the State ;it is the Will of the Nation organised in the state; it is the Right to give unconditional orders to all the individuals in the territory of the state."

## முடியாட்சியும் இருவகைக் குடியரசுகளும்

முடியாட்சி நாடுகளில், அந்நாட்டின் எல்லா அதிகாரங்களும் மன்னரிடம் குவிந்திருக்கின்றன. எனவே, முடியாட்சி நாடுகட்கு அரசனே 'இறைமை' யாவான்.

மக்களாட்சி முறையைக் கொண்ட நாடுகளில் இரண்டு வகைகள் உள்ளன. அந்நாட்டினுடைய அரசியல் அதிகாரங்கட்கெல்லாம் தலைமை வகிக்கும் குடியரசுத் தலைவரை மக்களே நேரடியாகத் தேர்ந்தெடுத்து, அரசாங்கக் கருவிகளின் மூலம் நடைபெறும் ஆட்சிமுறைக்கு, குடியாட்சித் தலைவரின் குடியரசு முறை (Presidential Democracy) எனப் பெயர். அமெரிக்க ஐக்கிய நாடுகள் குடியாட்சித் தலைவரின் குடியரசு முறையைக் கொண்டியங்குகிறது.

நாட்டு மக்களில் "வயது வந்தோருக்கு வாக்குரிமை" என்ற அடிப்படையில், வயது வந்தவர்களெல்லாம் நேரடியாக வாக்களித்து, தங்கள் பிரதிநிதிகளாக அரசியல் கட்சி சார்ந்த நாடாளுமன்ற உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்து அவர்களில் பெரும்பான்மை உறுப்பினர்களால் தெர்ந்தெடுக்கப்படும்

---

3 Mr Anup Chand Kapur, "Principles of Political Science" [1973] Page, 124.

தலைமையமைச்சரைக் கொண்டு, அமைச்சரவை மூலம் ஆட்சி செய்யும் குடியாட்சி முறைக்கு, நாடாளுமன்றக் குடியாட்சி முறை (Parliamentary Democracy) என்று பெயர்.

இந்தியத் துணைக்கண்டத்தில் நாடாளுமன்றக் குடியாட்சி முறை நடைமுறையில் இருக்கிறது.

## அரசியல் இறைமை

**குடியரசு நாடுகளில் இறைமை எங்குள்ளது?**

சனநாயக முறையை ஏற்றுள்ள நாடுகளில் குடிமக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளைக் கொண்டு (By the people), அந்தக் குடிமக்களுக்காகவே (For the people), குடிமக்களுடைய (Of the people) அரசாங்கம் நடைபெறுகின்றது. எனவே, குடியரசு நாட்டின் அரசாங்கத்தின் இறைமை, அந்த அரசாங்கத்தை உருவாக்குகிற பொது மக்களிடமே நிலைத்து நிற்கிறதென அரசியல் வல்லுநர்கள் பொதுவாகக் கருதுகின்றனர்.

குடியரசு நாட்டைச் சேர்ந்த மக்கள், குறிப்பிட்ட காலத்திற்கொருமுறை (5 ஆண்டுகட்கொருமுறை) தாங்கள் விரும்பும் அரசியல் கட்சியைச் சார்ந்த சட்ட மன்ற — நாடாளுமன்ற உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்கின்றனர். அந்த உறுப்பினர்கள், தலைமையமைச்சரைத் தேர்ந்தெடுக்கின்றனர். தலைமையமைச்சர் தனக்குக் கட்டுப்படும் பல அமைச்சர்களைக் கொண்ட அமைச்சரவையைப் படைத்துக் கொள்கிறார். அரசுக் கொள்கைகள் முழுவதும் அந்த அமைச்சரவையாலேயே உருவாக்கப்படுகின்றன. அவை, அரசாங்கத்தின் ஒரு கூறான நிர்வாக இயந்திரத்தால் செயல் படுத்தப்படுகின்றன.

குறிப்பிட்ட காலம் முடிந்ததும் அந்நாட்டின் அரசியல் அமைப்புச் சட்டப்படி, தலைமையமைச்சரும், அவரது அமைச்சரவையும், அவர்களைத் தேர்ந்தெடுத்த நாடாளுமன்ற உறுப்பினர்களும் பதவி விலகுகின்றனர். அஃதாவது அரசாங்கத்தைச் செயல்படுத்தும் அமைப்புக்கள் தமது அதிகாரங்களை இழந்து விடுகின்றன. மீண்டும் தேர்தல்கள் நடைபெறுகின்றன. அதில் வெற்றியடையும் உறுப்பினர்கள் மீண்டும் மேற்சொன்ன வகையில், குடியரசு நாட்டின் அரசாங்க இயந்திரத்தை இயக்குகின்ற உரிமையினைப் பெறுகின்றனர்,

எனவே, குடியரசு நாட்டின் இறைமை யதிகாரங்கள் இறுதியாக அந்த நாட்டு மக்களிடமே நிலைபெற்று விடுகின்றன என்பது தெளிவாகும். இந்த வகை இறைமையைத்தான் அரசியல் இறைமை எனக் கூறுகிறோம்.

இந்திய அரசமைப்புச் சட்டத்தின் முகப்பில்,

> "......இந்திய மக்களாகிய நாம், 1949–ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 26-ஆம் நாளில், நமது அரசமைப்புச் சபையில் நமது அரசமைப்புச் சட்டத்தை உருவாக்கி ஏற்றுக் கொண்டு அதனை நமக்கு நாமே வழங்கிக் கொண்டோம்."

எனக் கூறப்பட்டுள்ளது. அதாவது இந்திய மக்களால் இந்திய அரசமைப்புச் சட்டம் உருவாக்கப்பட்ட தென்பதே அதன் பொருள். இந்திய அரசாங்கத்தின் பல்வேறு அங்கங்களும், அவை செயல்படும் முறைகளும், மக்களுக்கும் அரசாங்கத்திற்குமுள்ள தொடர்புகளும், அரசாங்க நிறுவனங்களைச் செயல்படுத்தும் வழிமுறைகளும் நமது அரசமைப்புச் சட்டத்தில் வரையறைப்படுத்திச் சொல்லப்பட்டுள்ளன. அவை எல்லாவற்றையும் அரசியல் சட்டத்தின் மூலமாக இயக்குகின்ற இறுதி உரிமை படைத்தவர்கள் இந்திய நாட்டின் மக்கள். எனவே, அரசியல் மரபின்படி இந்திய நாட்டின் 'அரசு இறைமை' ( Political Sovereignty ) இந்திய மக்களிடமே உள்ளது. இது பற்றி இந்நூலின் வேறு பகுதியில் திறனாய்வு செய்யப்பட்டு உள்ளது.

## சட்டம் சார்ந்த இறைமை (Legal Sovereignty)

ஒரு நாட்டினுடைய சட்டங்களால் — குறிப்பாக அரசியல் சட்டத்தால் — அந்நாட்டு அரசாங்கத்தின் 'இறைமை' அதிகாரங்கள் யாரிடம் அல்லது எந்தெந்த அரசமைப்புகளிடம் இருக்க வேண்டுமென்று நெறிமுறைப் படுத்தப் பட்டுள்ளதோ அந்த அமைப்புகள், இறைமையைப் பெறுகின்றன. இதனைச் சட்டம் சார்ந்த இறைமையென அழைக்கலாம். ஒரு நாட்டு மக்களுக்கு ஆணையிட்டு, அவர்களை அந்த ஆணைக்குக் கட்டுப்பட வைக்கக் கூடியதும், அந்நாட்டிலுள்ள எல்லா நிறுவனங்களையும் அமைப்புகளையும் மேலாட்சி

செய்யக் கூடியதுமான தலையாய அதிகாரத்தைப் பெற்ற ஏதாவது ஓர் அமைப்பு, ஒவ்வொரு நாட்டிலும் இருக்க வேண்டுமல்லவா? அந்தத் தலைமை அதிகாரத்தை அந் நாட்டுச் சட்டங்கள் வழங்குவதால், அந் நாட்டு அரசாங்கத்தின் இறைமைக்குச் சட்ட அடிப்படையே மூலமாகி விடுகிறது. சட்டங்களை அடிப்படையாக வைத்து 'இறைமை' நிலைநிறுத்தப் படுவதால் அவ்வகை இறைமைக்கு, சட்டம் சார்ந்த இறைமை எனப் பெயரிடப்பட்டுள்ளது.

இங்கிலாந்தில் மன்னரும், அமெரிக்க நாட்டில் அரசமைப்புச் சட்டத்தின்படி அமைக்கப்பட்ட பல நிறுவனங்களான 'காங்கிரஸ்' மற்றும் 'மாநிலச் சட்ட மன்றங்கள்', இன்னோரன்ன பல அமைப்புக்களும்சட்ட இறைமையைப்பெற்றுள்ளன.

## அண்ணாவும் இறைமையும்

பொதுவாகக் கூட்டாட்சி அமைப்பைக் கொண்டுள்ள நாடுகளில், மத்திய அரசும் மாநில அரசுகளும் அரசமைப்புச் சட்டத்தின் வேறு பல அமைப்புகளும் 'சட்ட இறைமை'யைப் பகிர்ந்து கொண்டுள்ளன எனச் சொல்லப்படுகிறது.

கூட்டாட்சி அமைப்பைப் போன்ற (Federal) ஓர் அரசியல் அமைப்பை இந்தியத் துணைக் கண்டம் ஏற்றுக் கொண்டுள்ளதால், அதன் சட்டம் சார்ந்த இறைமை, இந்தியத் துணைக் கண்டத்தின் மத்திய அரசிலும், மாநில அரசுகளிலும் நிலைத்திருக்கின்றன. பேரறிஞர் அண்ணா அவர்கள், மாநிலங்களவையில் நிகழ்த்திய உரையில்,இந்தியாவின் சட்டம் சார்ந்த இறைமையை மத்திய அரசும் மாநில அரசுகளும் பிரித்துக் கொண்டுள்ளன எனச் சுட்டுகிறார். இந்தியாவின் அரசியல் இறைமை—நமது அரசமைப்புச் சட்டத்தின் முகப்புக் கூறுவதுபோல்—இந்திய நாட்டு மக்களிடமே அளிக்கப்பட்டுள்ளது எனவும் அவர் தெளிவுபடுத்துகிறார்.

இந்திய அரசமைப்புச் சட்டத்தின்படி, மத்திய அரசிற்கென்று தனித்த அதிகாரங்களும் மாநில அரசிற்கென்று பல அதிகாரங்களும் பிரித்து வழங்கப்பட்டுள்ளன. மக்கள் பிரதிநிதிகளைக் கொண்ட மாநில அரசுகளும் நடைபெறுகின்றன; மாநிலச் சட்ட மன்றங்களும், நீதிமன்றங்களும்,

பல நிர்வாக அமைப்புக்களும் மாநில அரசுகளால் செயல்படுத்தப் படுகின்றன. எனவே, மாநிலங்களும், அரசியல் இறைமையைப் பெற்றுள்ளன என அண்ணு அவர்கள் சாற்றுகின்ருர். அது ''ஒரே இடத்தில் — அதாவது மத்திய அரசிடமே — எப்போதும் தங்கிவிடுவ தில்லை'' என அவர் வாதிடுகிருர். ஆனால், நடைமுறையில் இந்திய மாநிலங்கள், முழுமையான இறைமையைப் பெற்றிருக்க வில்லை என்பதே அறிஞர் அண்ணு அவர்களுடைய குற்றச்சாட்டு. எல்லா அதிகாரங்களையும் நல்கக் கூடிய தனி இறைமையை மாநிலங்கட்குக் கொடுக்கா விட்டாலும் கூட மாநில சுயாட்சி அதிகாரங்களை மட்டும் தரக் கூடியதான குறிப்பிட்ட 'இறைமை'யையாவது மாநிலங்கள் பெற்றிருக்க வேண்டும் என்பதே அண்ணுவின் கருத்தாகும்.

நமது மாநிலங்களுக்கு இறைமை அளிக்கப்பட்டுள்ளதா என்பதைப் பற்றி இந் நூலின் வேறு பகுதியில் திறனுய்வு செய்யப்பட்டுள்ளது.

## தேசியம் அல்லது நாட்டுப் பற்று (Nationalism)

'தேசியம்' என்ற சொல், பேச்சு வழக்கில் பல பொருள்களைக் குறிப்பதற்காகப் பயன் படுத்தப்படுகிறது. ஆனல் அரசியல் நூலில், அதற்கெனத் தனி இலக்கணமும் சிறப்புப் பொருளும் உண்டு. ஒரு நாட்டைச் சார்ந்த மக்களிடம் தோன்றக் கூடிய ''பொதுப் பற்றினை'' அல்லது ''உளப்பூர்வமாக ஒன்றிய உணர்வினை'', 'தேசியம்' அல்லது 'நாட்டுப் பற்று' எனப் பொதுவாக அழைக்கலாம்.

லார்டு பிரெய்சு (Lord Bryce) என்ற அரசியல் நூல் வல்லுநர்,

''ஒரு குறிப்பிட்ட சமுதாய மக்களிடையே ஒரே வகையான மொழி, இலக்கியம், கருத்துக்கள், பழக்க வழக்கங்கள், மரபுகள், மற்றும் வரலாறு ஆகியவை உளப்பூர்வமான பிணைப்பை ஏற்படுத்தி விடும். இதைப் போன்ற பிணைப்பில் கட்டுண்டிருக்கும் வேறொரு சமுதாய மக்களிலிருந்தும் தங்கள் சமுதாயம் மாறுபட்ட தனித்தன்மையைப் பெற்றுள்ளதென உணரக் கூடிய உளப்பூர்வமான பிணைப்பை அந்தச்

சமுதாய மக்கள் பெற்றிருந்தால், அந்த ஒற்றுமைப் பிணைப் புணர்வை, தேசிய உணர்வு அல்லது நாட்டுப் பற்று எனலாம்.'' 4

எனக் கூறுகிறார்.

Lord Bryce defines nationality. He says, "A nationality is a population held together by certain ties, as for example, Language and Literature, Ideas, Customs and Traditions, in such a way as to feel itself a coherent unity distinct from other populations similarly held together by like ties of their own."

ஜான் ஸ்டுவர்ட்மில் (John Stuwart Mill) என்ற அரசியல் துறை வல்லுநரும் தேசியத்தைப் பற்றி மேற்சொன்ன கருத்தையே கூறுகிறார்.

ஒரு குறிப்பிட்ட மக்கள் சமுதாயத்தை உணர்ச்சிப் பூர்வமாக ஒருமைப் படுத்த வல்ல பல சிறப்புக் கூறுகள் உள்ளன. அச் சிறப்புக் கூறுகளே அந்த நாட்டில் வாழும் மக்களுக்கு ''நாட்டுப்பற்று'' என்ற உணர்வினை உருவாக்குகின்றன. இன அடிப்படையில் உருவான இன உணர்வு, அந்தச் சமுதாயத்திற்குப் பொதுவாய் அமைந்துள்ள மொழி, பண்டைக் காலந்தொட்டு நிலவி வரும் ஒத்த மரபுகள், பண்பாடு, பல காலம் தொடர்ந்து ஒன்றிணைந்து வாழ்ந்த உறைவிடம், அம் மக்களின் ஒத்த நலன்கள், அரசியல் துறையில் ஒத்த நோக்கங்கள் ஆகிய சிறப்புக் கூறுகள், ஒரு சமுதாயத்தைச் சார்ந்த மக்களிடம் தாங்களெல்லாம் ஒரே நாட்டைச் சார்ந்தவர்கள் என்ற மனப்பக்குவத்தையும் உணர்ச்சியையும் உருவாக்கி வளர்க்கின்றன. மேலும், அவர்கள் வசிக்கும் நிலப்பரப்பிற்கு—அதாவது தங்கள் நாட்டிற்கு—அச்சமுதாய மக்களே முழுச் சொந்தக்காரர்கள் என்ற உள்ளுணர்வையும் அச்சிறப்புக் கூறுகள் ஊட்டி விடுகின்றன. இறுதியில், அந்த உணர்வோ

4 Mr. Anup Chand Kapur, "Principles of Political Science" [1973] Page 58.

டியங்கும் அம்மக்கள் அந்நாட்டோடு பின்னிப்பிணைந்து ஒன்றிப் போய் விடும் தன்மையைப் பெற்று விடுகின்றனர். அந்தச் சமுதாய மக்களின் இந்த உணர்வே 'தேசியம்' அல்லது 'நாட்டுப் பற்று' அல்லது 'தேசபக்தி' எனப்படுகிறது.

## மொழி

மேற்சொன்ன சிறப்புக் கூறுகளில், 'மொழி' தனி இடத்தைப் பெறுகின்றது. மொழியும் இனமும் ஒன்ருேடொன்று கைகோர்த்துச் செல்லும் தன்மையைப் பெற்றவை. குறிப்பிட்ட ஓர் இன மக்களின் எண்ணங்களை ஒருவருக் கொருவர் வெளிப் படுத்தி அவர்களைப் பரஸ்பரம் இணைக்கக் கூடிய தன்மையைத் தருவது மொழியாகும். எண்ணங்களின் கருப் பொருளான உணர்வுகளும், குறிப்பிட்ட மொழி பேசக்கூடிய மக்களிடையே ஏறத்தாழ ஒரே வகையைச் சார்ந்தனவா யமைகின்றன. அதனுல், ஒத்த மரபொன்று வளர்கின்றது. ஓரின மக்களின் பழைய நிகழ்ச்சிகள் அவர்களுடைய மொழியால், அந் நிலப் பகுதியின் வரலாருக மாறி விடுகின்றன. அந்த வரலாறும் அவர்களுக்கு வழிகாட்டும் முன் மாதிரியாக ஆகி விடுகின்றது. அந்த நிகழ்ச்சிகள், தொடக்கத்தில் நாட்டுப் புறக் கதைகளாக வும் பாடல்களாகவும் அந்த மக்களால் வடிக்கப்பட்டு, பின்னர் அவை அம்மக்களை யெல்லாம் ஒருமைப்படுத்தக் கூடிய மொழி இலக்கியங்களாக மாறி விடுகின்றன.

போகம் (Bohem) என்ற அரசியல் வல்லுநர் "அறிவு சார்ந்த நூல்களையும், ஆன்மீகத்துறை நினைவுகளையும் நூல்களையும், ஒரு மொழி பேசும் மக்கள் உருவாக்கிக் கொள்வதற்குத் தாய் மொழியே அடிப்படையாக அமைகிறது" எனக் கூறுகிருர்.

ஏர்னஸ்டுபார்க்கர் (Earnest Barker) என்ற அரசியல் துறை வல்லுநர்,

"குறிப்பிட்ட தேசிய இனத்திற்கும் மொழிக்கும் மிக நெருங்கிய பாசப் பிணைப்புண்டு. மொழி என்பது சாதாரண வெற்றுச் சொற்களைக் கொண்டதல்ல. அம்மொழிச் சொற்கள் ஒவ்வொன்றும் எண்ணங்களைத் தூண்டக்கூடிய தும் உணர்வுகளைத் தொடக் கூடியதுமான தொடர்புகளைத் தாங்கி நிற்கின்றன, மொழி என்ற திறவு கோலால்,

மக்களின் உளப்பூர்வமான தொடர்பெனும் பூட்டைத் திறந்து சென்றாலன்றி, அம்மக்களின் உணர்வுகளிலும் எண்ணங் களிலும், வேறொருவன் பங்கு கொள்ள வியலாது. ஒரு தேசிய இனத்தின் மொழியைத் தெரிந்து கொண்டாலன்றி, அவ்வின மக்களின் மனத்திலும் நெஞ்சத்திலும் மற்றொருவர் இடம் பெற முடியாது. இதனை வேறு வகையில் கூற வேண்டு மெனில் அம்மக்களின் மொழியை வேறொருவர் ஒருமுறை கற்றுத் தேர்ந்தால், அந்த இன மக்களிடம் ஆழமாகவும் பரவலாகவும் நிறைந்திருக்கும் ஆன்மீகத் தொடர்பினை அந்த மொழியுடன் ஒன்றி, அதன் மூலமாகவே அவன் அடைந்து விடுகிறான்.''[5]

என்ற வரிகளின் மூலமாக மொழியும், இனமும், நாடும் ஒன்றறக் கலந்து நிற்கும் தன்மையைத் தெளிவு படுத்துகிறார்.

ஒருநாட்டை உருவாக்கி அதனை வளம் பெறச் செய்வதற்கு, அந்நாட்டின் மொழியுணர்வும், அதன் வழி கிடைக்கும் இன உணர்வும் இவை யிரண்டும் தருகின்ற வலிவான நாட்டுப் பற்றும் காரணங்களாகின்றன. ஆக, ஒரு மொழி சார்ந்த மாநில மக்கள், ஓரினப் பண்பைப் பெறுகின்றனர். அதன் வழி உண்மையான நாட்டுப் பற்றையும் பெறுகின்றனர். ஒரு மொழி சார்ந்த இன மக்களை, அந்நாட்டை வளப்படுத்தும் மூலக் கருவிகளாக அவர்களது மொழியுணர்வு மாற்றி விடு கின்றது. அதற்கேற்றபடி அரசியலமைப்பும்,அரசின் அதிகாரங் களும் இயைபுடையதாக அமைந்திருத்தல் அவசியமல்லவா? மத்திய அரசென்ற அரசமைப்புக் கட்டுக்கு அம்மாநிலத்திற் குரிய அதிகாரங்கள் சிக்கிக் கொண்டதென்றால் ஒரு நாட்டிற் குரிய இலக்கணத்தைப் பெற்ற மாநிலங்கள், அரசியல் சமுதாயப் பொருளாதாரத் துறைகளில் இயற்கையாய் வளர முடியாது. இந்தியத் துணைக் கண்டத்திலிருக்கும் பல மொழி பேசும் பல்வேறு மாநிலங்களைச் சார்ந்த மக்கள், மேற்கூறிய தேசியத்தின்இலக்கணப்படிஅந்தந்த மாநிலங்களைப் பொறுத்த அளவில்தான் ''நாட்டுப்பற்றையும்'' வளர்த்துக் கொள் கின்றனர். அரசியல் அமைப்பால் உருவாக்கப்பட்ட அகில

5 **Quoted From "Principles of Political Science" (1973) Mr. Anup Chand Kapur, Page 60.**

இந்தியாவிற்கு ஏற்ற வகையில் செயற்கையான இந்தியத் தேசியத்தை மாநில மக்கள் உணர்ச்சிப்பூர்வமாய் ஏற்றுக் கொள்வதில்லை. இதனை அரசியல் நூலும் பலநாட்டுச் சரித்திரங் களும் — ஏன் இந்திய நாட்டுவரலாறும் கூட — மெய்ப்பித்துக் காட்டுகின்றன.

## அரசியலமைப்பு அல்லது அரசமைப்பு (Constitution)

ஒவ்வோர் அரசாங்கமும் ஒழுங்கு முறையோடு இயங்க வேண்டுமெனில் அதனை நிலை நிறுத்தத் தேவையான அடிப் படை ஏற்பாடொன்று அவசியமாகிறது. அரசாங்க நெறிகளில் ஒழுங்குமுறை யில்லா விட்டால் அராசகம் தாண்டவ மாடும். ஒழுங்கு முறையை உருவாக்கி அமுல் படுத்தக் கூடிய ஒரு சட்ட அமைப்பையே (ஏற்பாடு) அரசமைப்பு அல்லது அரசிய லமைப்பு என வழங்குகிறோம்.

ஆங்கிலத்தில் இந்த வகை அமைப்பை ''Constitution'' எனக் கூறுகிறார்கள். Constitution என்ற ஆங்கிலப் பெயர்ச் சொல் 'Constitute' என்ற வினைச்சொல்லிலிருந்து உருவாகிறது. ''Constitute'' என்ற சொல்லுக்குத் தமிழில் 'அமை' என்று பொருள். எனவே, 'Constitution' என்ற சொல்லுக்கு 'அமை' என்ற வினையின் பெயர்ச்சொல்லான 'அமைப்பு' என்ற பொருள் கிடைக்கிறது. இந்த அமைப்பு, அரசையும் அரசியலையும் சார்ந் திருப்பதால், 'Constitution' என்ற சொல்லிற்கு 'அரசமைப்பு' அல்லது 'அரசியலமைப்பு' எனப் பொருள் கொள்கின்றோம்.

இந்த அரசியலமைப்பை உருவாக்குவதற்கு ஓர் அடிப் படைச் சட்டம் தேவையாகிற தல்லவா? எனவே, ஒரு நாட்டின் அரசமைப்பை ஏற்படுத்தும் அடிப்படைச் சட்டத் திற்கு அரசமைப்புச் சட்டம் (Constitutional law) என வழங்கு கிறோம். அஃதாவது அரசமைப்பு என்பதே சட்ட வடிவாக இருப்பதால் அதனை அரசமைப்புச் சட்டம் எனவும் கூறலாம்,

**அரசமைப்பின் இலக்கணம்**

அரசமைப்புச் சட்டம் இல்லாத அரசாங்கமோ அல்லது நாடோ இருக்க முடியாது. அரசியல் வல்லுநரான பேராசிரியர் பிரெய்சு (Prof. Bryce) அவர்கள்,

"ஒரு நாட்டின் வாழ்க்கை நடைபெறுவதற்குரிய சம்பிரதாயங்கள் மற்றும் சட்டங்களின் மொத்தத் தொகுப்பே அரசமைப்பு எனப்படும்."

"ஒரு சமுதாயத்தை முறைப்படுத்தி, ஒன்று படுத்தி ஆட்சி செய்யும் விதிமுறைகளையும், கொள்கைகளையும் கொண்டுள்ள சட்டங்களின் மொத்த மூலப்பொருளே அரசமைப்புச் சட்டமாகும்."6

என இலக்கணம் வகுக்கிறார்.

அரசியல் சட்டமேதையான வியர் (Wheare) அவர்கள் கூறுகிறார்,

"ஒரு நாட்டின் குறிக்கோள்களையும், அந்நாட்டரசின் பல்வேறு அங்கங்களின் மூலமாகச் செயற்படுத்தப்படும் அதிகாரங்களையும், நெறிமுறைப்படுத்தும் விதிகளின் தொகுப்பையே அரசமைப்பு என்கிறோம்."7

"The body of Rules which regulates the Ends for which and the Organs through which Governmental Power is exercised."

மேற்சொன்ன அரசமைப்புப் பற்றிய இலக்கணங்களில், அரசைச் சார்ந்த சில அடிப்படைக் கூறுகள் மிளிர்ந்து நிற்பதை நாம் காணலாம். ஓர் அரசிற்கும் அதன் பல்வேறு அங்கங்களுக்குமிடையேயுள்ள தொடர்பையும், அந்த அரசிற்கும் மக்களுக்குமிடையே யுள்ள தொடர்புகளையும், ஒரு நாட்டினுடைய குறிக்கோள்களை அடைவதற்கான விதி முறைகட்கும் அரசிற்கும் இடையே இருக்கும் செயல் தொடர்பையும் அறுதியிட்டு விதிகளாக்கி அவற்றை உறுதி செய்வதே அரசமைப்புச் சட்டத்தின் தன்மையாகும்.

---

6 Mr. J. Bryce, "Studies in Jurisprudence" Vol. 1., Pages 136 & 217.

7 Prof. K. C. Wheare, "The Statute of West Minister" Page 211.

## எழுதப்பட்ட அரசமைப்புச் சட்டத்தில் இருக்கும் விபரங்கள்

அரசமைப்புச் சட்டங்களில் இருவகையுண்டு.

(1) எழுதப்பட்ட அரசியலமைப்பு.

(2) எழுதப்படாத அரசியலமைப்பு.

இங்கிலாந்து நாட்டின் அரசமைப்பு எழுதப்படாத அரசமைப்பாகும். மற்ற குடியரசு நாடுகளும் கூட்டாட்சி நாடுகளும் எழுதப்பட்ட அரசியற் சட்டத்தையே அமைத்துக் கொண்டுள்ளன. எழுதப்பட்ட அரசமைப்புச் சட்டத்தில் பொதுவாக மூவகை விவரங்கள் அடங்கி இருக்கும்.

1. மக்களுடைய அடிப்படையான உரிமைகளையும் (Fundamental Rights), அரசியல் உரிமைகளையும்(Political Rights), சிவில் உரிமைகளையும் (Civil Rights) அறுதியிட்டுக் கூறும் சட்ட விதிகள்.

2. அரசாங்க நிறுவனங்களின் பல பணிகளையும், கடமைகளையும், அதிகாரங்களையும் தொகுக்கக் கூடிய சட்ட விதிகள்.

3. அரசமைப்புச் சட்டத்தைத் திருத்துவதற்கான வழிவகைகள் (Amending procedure of constitution).

1. அடிப்படை உரிமைகள் சார்ந்த சட்ட விதிகள்

நாட்டு மக்களுடைய அடிப்படை உரிமைகளும் அரசியல் உரிமைகளும் அரசமைப்புச் சட்டத்தால் உறுதியளிக்கப்படும். நமது அரசமைப்புச் சட்டத்தில் இந்தியக் குடிமக்களுக்கு ஏறத்தாழ 36 அடிப்படை உரிமைகள் வழங்கப்பட்டுள்ளன. குடிமக்களது அடிப்படை உரிமைகளில், அரசாங்கச் சட்டங்களும், அரசாங்க நிறுவனங்களும் தலையிடக் கூடாது. இந்த அடிப்படைக் கொள்கையை வைத்தே குடிமக்களின் அரசியல் உரிமைகளும்அடிப்படை உரிமைகளும் தொகுக்கப்படுகின்றன.

ஆனல் தனிப்பட்ட மனிதனுக்குக் கொடுக்கப்பட்ட அடிப்படை உரிமைகள், முழுமையானவையாயிரா (Not absolute). நாட்டினுடைய சமுதாய மக்களின் உயர் நலன்களைப் பேணு

வதற்காகக் குடிமக்களுடைய அடிப்படை உரிமைகள் ''நியாய மான கட்டுப்பாடுகளால்'' (Reasonable Restrictions) வரை யறைப் படுத்தப்படலாம்.

குடிமக்களின் அடிப்படை உரிமைகள், அரசாங்கத்தி ஞலோ அல்லது அரசு நிறுவனங்களிஞலோ சிதைக்கப்படும் பொழுது, அரசமைப்புச் சட்டத்தை ஆதாரமாகக் கொண்டு-பாதிக்கப்பட்ட குடிமகன் நீதிமன்றங்களில் வழக்குத் தொடுக் கலாம். நீதிமன்றங்கள், சட்ட வியாக்கியானங்களை ஊன்றிப் பார்த்து அரசமைப்புச் சட்டத்தால் உறுதியளிக்கப்பட்ட (குடி மக்களின்) அடிப்படை உரிமைகளை நிலை நாட்டுகின்றன.

## 2. அரசின் அங்கங்களைச் சார்ந்த சட்ட விதிகள்

ஒரு நாட்டினுடைய அரசாங்கம்(Government)அதனுடைய பல அங்கங்களை உருவாக்கி, அவைகளுக்கான அதிகாரங்களை யும் கொடுத்து, அவற்றைச் செயல் படுத்தும் முறைகளையும் அரசியல்மைப்பில் அறுதியிட்டுத் தெளிவாக்க வேண்டும். அரசாங்கத்தின் பல துறைகள், குறிப்பிட்ட பொருளாதாரப் பணிகளைச் செய்யும் நிறுவனங்கள், பொது ஸ்தாபனங்கள், தேர்தல் முறைகள், நீதிமன்றங்கள், நிர்வாக அமைப்புகள் இவை யாவும் அரசியலமைப்புச் சட்ட விதிகளால் உருவாக்கப் படுகின்றன; உரிய அதிகாரங்களுடன் நடாத்தப்படுகின்றன.

கூட்டாட்சி நாடுகளில் மத்திய—மாநில அரசுகளினுடைய அரசியல், பொருளாதார, நிர்வாக உறவுகளை அரசியலமைப்புச் சட்டமே அறுதியிட்டுக் கூறுகின்றது. மத்திய அரசின் பணி களையும் அதிகாரங்களையும் முறைகளையும், மாநில அரசுகளின் சட்டமியற்று, அரசியல், நிதி, நிர்வாக அதிகாரங்களையும், முறையான பணிகளையும், அரசுக் காரியங்களையும் அரசியல் அமைப்புச் சட்டம் தெளிவாகப் பிரித்தொதுக்குகின்றது.

இவை போக, மத்திய — மாநில அரசுகளுக் கிடையில் சிக்கல்களும், தகராறுகளும், உரிமை வேறுபாடுகளும் ஏற்படின் அவற்றைத் தீர்த்து வைப்பதற்குரிய வழிவகைகளைப் பற்றியும் அரசமைப்புச் சட்டம் தெளிவாக்குகின்றது.

நிதித்துறையில், மத்திய—மாநிலங்களுக் கிடையில் உள்ள அதிகாரங்களையும் முறையோடு ஒதுக்கீடு செய்கின்றது அரசமைப்புச் சட்டம். கூட்டாட்சி முறையும் குடியாட்சி முறை

யும் எதிர்காலத்தில் நடைமுறைப் படுத்தப் படும்போது அவை ஏதோ ஒரு வகையில் மாற்றி யமைக்கப்பட்டு விடக் கூடாது என்ற கருத்தில்தான் இவ்வளவு ஏற்பாடுகளும் அரசமைப்புச் சட்டத்தில் முன்னரே செய்து வைக்கப்படுகின்றன.

ஆனால் நமது மத்திய அரசு, மத்திய — மாநில உறவுகளைப் பொறுத்த அளவில், அரசமைப்புச் சட்டத்தின் வரம்புகளை யெல்லாம் கடந்து கூட்டாட்சிக் கொள்கைக்குப் புறம்பாக ஒற்றை ஆட்சி முறைகளைக் கடைப்பிடித்து வருவது கண்கூடு. அவை பற்றிப் பின் வரும் 3-ஆம், 4-ஆம் பகுதிகளில் தெளிவாக் கப்பட்டுள்ளன.

### 3. அரசியல் சட்டத் திருத்தம்

ஒவ்வொரு அரசியலமைப்புச் சட்டத்திற்கும் மிக இன்றி யமையாத ஒரு பகுதியாக அமைவது, அதனுடைய சட்டவிதி களைத் திருத்துவதற்கான முறைகளாகும். அரசியலமைப்புச் சட்டம், மாற்ற முடியாத – திருத்த முடியாத - புனிதத் தன்மை வாய்ந்த வேதமல்ல. சமுதாய வளர்ச்சிக்குரிய முறையிலும், அரசாங்கங்களின் வளர்ச்சிக் கேற்ற வகையிலும், சூழ்நிலைக் கேற்பவும் அரசியலமைப்புச் சட்டவிதிகளும் அவ்வப்போது திருத்தி யமைக்கப்பட வேண்டும். ஒரு அரசியல் சட்டத்தை உருவாக்குவதற்கு ஒரு நாட்டு மக்களுக்கு உரிமையுள்ள தெனில், தேவை யேற்பட்டால் அதனைத் திருத்தவும் — விரும்பினால் அதை மாற்றி எழுதவும் — அம்மக்களுக்கு உரிமை யுண்டு.

அதனால்தான் குடியாட்சி நாட்டினுடைய மக்களிடம் அந் நாட்டின் அரசியல் இறைமை நிலை பெற்றுள்ளதெனச் சாற்றுகின்றனர். அரசியல் அமைப்புச் சட்ட விதிகளைத் திருத்துவதற்கு, அந்நாட்டு மக்களும் உரிய பங்கினைப் பெற வேண்டும். அதற்கு உரிமை இல்லை யெனில், குடியாட்சி மக்களுக்கு ‘அரசியல் இறைமை’ இல்லையென்று பொருள்.

“குடியாட்சி நாடு” என்று ஒரு நாட்டைக் கூறுவதின் பொருள் என்ன? குடிமக்கள் விரும்பினால் அரசிலயமைப் பைத் தோற்றுவிக்கலாம்; வேண்டும்போது அதனை மாற்றி யமைக்கலாம்; ஆனால் இக் கொள்கைக்கு மாறாக இந்திய அரசியலமைப்புச் சட்டத்தைத்திருத்தம் செய்வதற்கு இந்தியக் குடிமக்களுக்குப்பங்கில்லை; அதில் மாநிலங்களும் பங்கு கொள்வ

தில்லை — சில திருத்தங்களைத் தவிர. என்றாலும் நமது நாடு— 'குடியரசு நாடு தான்' — "கூட்டாட்சி நாடு தான்"—எனச் சாற்றுகிறது நமது விந்தையான அரசமைப்புச் சட்டம். அரசியல் சட்டத் திருத்த முறைகளைப் பற்றியும் வேற்று நாடுகளில் அதற்காகக் கையாளப்படும் முறைகளைப் பற்றியும் இந்நூலின் 3-ஆம் பகுதியில் 14-ஆம் அத்தியாயத்தில் தனியாக ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

## எழுதப்படாத அரசியல் சட்டம்

இங்கிலாந்து நாடு "எழுதப்படாத அரசமைப்பையே" (Unwritten Constitution) கொண்டியங்குகிறது. அந்நாட்டில் நாடாளு மன்றமே சர்வ வல்லமை வாய்ந்தது. அது முழு இறைமையையும் பெற்றுள்ளது. அந்நாட்டின் சாதாரணச் சட்டங்களும் அரசமைப்பும் நாடாளுமன்றத்திலேயே அவ்வப்போது உருவாகின்றன. "சனநாயகத் தொட்டில்" என அழைக்கப்படும் இங்கிலாந்தில், வழிவழியாய் வந்த அரசியல் பாரம்பரிய மரபுகள், முறையாகப் பின்பற்றப்படுகின்றன. அவை தவிர, சென்ற 600 ஆண்டுகளில், அரசாங்கத்தின் நடைமுறைகளை நாடாளுமன்றச் சட்டங்கள் அவ்வப்போது உருவாக்கி யுள்ளன. இவைகளையெல்லாம் அடிப்படையாக வைத்து அரசமைப்புச் சட்டம் என்ற ஒன்று தனியாக இல்லாமலேயே தூய்மையான சனநாயகம் இங்கிலாந்தில் நடை போடுகிறது.

## அரசமைப்புச் சட்டம்— மற்ற சட்டங்களின் உரைகல்

ஒரு நாட்டினுடைய எல்லாச் சட்டங்களுக்கும் அரசியலமைப்புச் சட்டமே அடிப்படையாகிறது. ஏனெனில், நாட்டின் குறிக்கோள்களைச் செயல்படுத்துவதற்கும், அரசியல் அங்கங்களின் பணிகளை முறைப்படுத்துவதற்கும் தேவையான சாதாரணச் சட்டங்களை அந்நாட்டினுடைய சட்ட மன்றங்கள் நிறைவேற்றுகின்றன. ஆனல் அந்நாட்டினுடைய குறிக்கோள்கள் எவையெவை என்பதையும், அதனுடைய அரசு சார்ந்த பல்வேறு அங்கங்கள் எவையெவை என்பதையும், அவைகளுடைய பணிகள் யாவை என்பதையும், மக்களது அரசியல், பொருளாதாரத் துறைகள் எவையெவை என்பதையும், அவற்றை ஒழுங்குபடுத்தும் முறைகள் எவையெவை என்பதை

யும் அரசியலமைப்புச் சட்டம் அறுதியிட்டுக் கூறுகின்றது. எனவே, அரசமைப்பின் அடிப்படையிலேயே நாட்டினுடைய மற்ற சாதாரணச் சட்டங்கள் இயற்றப்படும். ஆயிரக்கணக் கான சாதாரணச் சட்டங்கள் மாநிலச் சட்ட மன்றங்களாலும், நாடாளு மன்றத்தாலும் மற்ற சட்ட அமைப்புகளாலும் நாளும் நிறைவேற்றப்பட்டு வருகின்றன. ஆனால், அவை யாவும் அரசமைப்புச் சட்டத்தின் விதிகளுக்கு உட்பட்டவையாய் இருத்தல் வேண்டும். ஏனெனில் அரசமைப்புச் சட்ட விதி களுக்கு முரணாக இருக்கும் சாதாரணச் சட்டங்கள் செல்லாமற் போய்விடும்; அமுலுக்கும் வாரா. ஒரு நாட்டின் சாதாரணச் சட்டங்கள் கிணற்றில் நிறைந்த நீரைப் போன்றவை; அரசியலமைப்புச் சட்டம் அந்த நீரின் வற்றாத நீர் ஊற்றைப் போன்றது. நீர் ஊற்று இல்லாமல் கிணற்றில் நீர் தேங்காது; நீரூற்றில் வரும் தண்ணீரின் அளவையும் தரத்தையும் பொருத்தே கிணற்றில் தேங்கும் நீரின் அளவும் தரமும் அமைவதைப்போல், அரசமைப்புச் சட்ட விதிகளின் தன்மையைப் பொருத்தே அந்நாட்டின் சாதாரணச் சட்டங்களின் தரமும் தன்மையும் இருக்கும்.

எனவே, சாதாரணச் சட்டங்கள் செல்லுபடியாகத் தக்கது தானா என்பதனை நிர்ணயப்படுத்துவதற்கு அந்நாட்டின் அரசமைப்புச் சட்டம் ஓர் ''உரைகல்'' போலப் பயன்படுகிறது.

## அரசமைப்புச் சட்டக் காப்பாளன் - நீதிமன்றம்
## ( Court is Custodian of Constitution )

சட்டமன்றங்களால் இயற்றப்படும் சட்டங்கள் அரசமைப்புச் சட்டத்திற்கு உட்பட்டதா அல்லது முரண்பட்டதா என்பதைச் சரியாகக் கணித்துக் கூறுவதற்கு யார் இருக்கிறார்கள்?

ஒரு சட்டம் செல்லத் தக்கதுதானா அல்லது அரசியல் சட்டத்தை மீறியதுதானா என நிர்ணயிக்கும் அதிகாரத்தைச் சட்ட மன்றங்களுக்கு வழங்க முடியாது. ஏனெனில், அச் சட்டங்களை இயற்றுகின்ற சட்ட மன்றங்களே அந்தப் பணியினை நடுநிலையிலிருந்து ஆய்வு செய்து தெளிவாக்க முடியாது,

அந்தப் பணியைச் செய்வதற்குத்தான் நீதிமன்றங்கள் படைக்கப்பட்டுள்ளன. ஒரு சட்டம் அரசியல் சட்டப்படி செல்லுமா? செல்லாதா? என்பதனைச் சட்டநுணுக்கங்களின்படி ஆய்வு செய்யும் சீரிய பணியை நீதி மன்றங்கள் செய்து வருகின்றன. எனவே, அரசியல் அமைப்புச் சட்டத்தை அந்நாட்டின் நீதிமன்றங்கள் பாதுகாக்கின்றன. நீதி மன்றங்களுக்கு 'அரசமைப்பின் காப்பாளன்'எனப் பெயர் வழங்குவது இதனால்தான்.

கூட்டாட்சி நாடுகளில், மத்திய அரசின் அதிகாரங்களில் மாநிலங்களும் மாநில அரசுகளின் அதிகாரங்களில் மத்திய அரசும் தலையிடலாகாது. அந்நிலை யேற்படின் அதற்குரிய பரிகாரங்களைக்காண அரசியல்சட்டம் வழிவகைகளை உருவாக்கி வைத்துள்ளது. அரசமைப்புச் சட்டம் கொடுத்த அதிகாரத் துறைகளில் மாநில அரசிற்கும் மத்திய அரசிற்கும் பிணக்கு ஏற்பட்டாலும், மாநிலத்திற்கு மாநிலம் பிணக்கு ஏற்பட்டாலும், நீதிமன்றங்கள் அந்தத் தகராறுகளைத் தீர்த்து வைக்கும். ஆகவே, குடியாட்சி நாடுகளிலும், கூட்டாட்சி முறையைக் கொண்ட நாடுகளிலும் அரசியல் அமைப்புச் சட்டமே தலையானது (Supreme); முதன்மையானது. அதனை வியாக்கியானப்படுத்தும் தலைமை நீதிமன்றம் (Supreme Court) அதனினும் உயர்வானது.

## அரசமைப்புச் சட்டம் எப்படி உருவாகிறது ?

ஒரு நாட்டு மக்களுடைய பிரதிநிதிகள் கூடிய அரசியலமைப்புச் சபையில் (Constituent Assembly) அரசியலமைப்புச் சட்டம் உருவாக்கப் படுகிறது. அவ்வகை அரசமைப்புச் சட்டத்தை உருவாக்குவதற்காக, அந்த அரசியல் நிர்ணய சபைக்கு அந்நாட்டு மக்களின் அங்கீகாரம் இருக்க வேண்டும். அதாவது, அச்சபை மக்களுடைய 'இறைமை'யைப் பெற்றிருக்க வேண்டும். இது குடியரசு நாடுகளுக்குப் பொருந்தக் கூடிய முறை.

புரட்சியினாலோ அல்லது வேறுவகையினாலோ ஒரு நாட்டிலிருந்த பழைய அரசு அகற்றப்பட்ட பின்னர், புதிய அரசை உருவாக்குவதற்கு மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதிகளை வைத்து அந்நாட்டின் அரசமைப்புச் சட்டம்

இயற்றப்பட்டு நிறைவேற்றப்படுகிறது. அரசமைப்புச் சபை முறையைப்பிரெஞ்சுப்புரட்சிக்குப்பின்னர்,பிரான்சு நாடு கைக் கொண்டது. முசோலினியின் இத்தாலியைத் தவிர,மற்றெல்லா ஐரோப்பிய நாடுகளும் அரசமைப்புச் சபையின் மூலமாகத் தங்கள் அரசமைப்புச் சட்டங்களை உருவாக்கிக் கொண்டன.

அமெரிக்க ஐக்கிய நாடுகள், ஆங்கில நாட்டின் ஏகாதி பத்தியத்தை அகற்றிய பின்னர், தங்களுக்குள் ஒரு கூட்டாட்சி அமைப்பை உருவாக்கிக் கொள்வதற்காக அதன் உறுப்பு நாடுகளின் பிரதிநிதிகளைக் கொண்டு, ஓர் அரசியலமைப்புச் சபையை அமைத்து,அதில் தங்களது அரசமைப்புச் சட்டத்தை உருவாக்கிக் கொண்டன. அதன் பின்னர் அச்சட்டத்தை ஒவ்வொரு உறுப்பு நாடுகளிலுள்ள மக்களும் ஏற்றுக் கொள்ளும் வகையில், பொது வாக்கெடுப்பு நடத்தப்பட்டது. மக்களின் ஒப்புதலைப் பெற்ற பின்னர் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசமைப்புச் சட்டம் அமுல் படுத்தப் பட்டது. ஆனால் நமது அரசமைப்புச் சட்டம் உருவாக்கப்பட்ட பின்னர், இந்திய மக்களின் அங்கீகாரத்தைப் பெறுவதற்காகப் பொது வாக் கெடுப்பு நடைபெறவில்லை. இந்திய அரசியல் சட்டத்தை உருவாக்கிய அரசமைப்புச் சபை உறுப்பினர்கள் கூட முறை யாகத் தேர்ந்தெடுக்கப்பட வில்லை. நமது அரசியலமைப்பு உருவான பின்னர், அதைப் பொதுக்குடி ஒப்பத்திற்கு விட்டு ( பொது மக்கள் வாக்கெடுப்பிற்கு விட்டு - Referendum ), இந்திய மக்கள் ஒப்புதலும் பெறப்பட வில்லை. இந்திய அரசமைப்பு உருவானதும் நிறைவேறியதும், இந் நூலின் இரண்டாம் பகுதியில் தெளிவாக ஆராயப்பட்டுள்ளது.

## அரசமைப்புச் சட்டமும் அண்ணாவும்

அரசமைப்புச் சட்டத்தை மீறும் வகையில் நமது மத்திய அரசு, அதிகார பூர்வாக மாநிலங்களுக்கு அளிக்கப்பட்ட அரசி யல் சட்ட உரிமைகளில் சென்ற 24–ஆண்டுகளாக ஊடுருவி வருகிறது. மாநிலங்களுக்குக் கொடுக்கப்பட்ட சுருங்கிய மாநில சுயாட்சியும், மெல்ல மெல்ல மாநிலங்களிடமிருந்து பறிபோய் விட்டது. எனவே மாநில சுயாட்சியைக் கொண்டியங்கும் உண்மையான கூட்டாட்சி நாடாக இந்தியத் துணைக் கண்டத்தை ஆக்குவதற்காக, நமது அரசமைப்புச் சட்டம் மீண்டும் திருத்தப்பட வேண்டும்,

பேரறிஞர் அண்ணு அவர்கள் தனது மாநிலங்களவைப் பேச்சில் குறிப்பிடுவதாவது,

"சென்ற பதிமூன்ருண்டுகளாக நமது கூட்டாட்சி செயல்படும் தன்மையானது மாநிலங்களிடையே விரக்தி உணர்ச்சியைத் தோற்றுவித்துள்ள தென்பதே எனது குற்றச்சாட்டு. மாநிலங்கள், சுங்கத் தொகை வசூலிக்கக் கூடிய சாதாரண நகராட்சி மன்றங்களைப் போல் விரைந்து மாறி வருகின்றன. அவை இருக்கும் இடம் தெரியாமல், பின்னணிக்குத் தள்ளப் பட்டுள்ளன. அதிக அதிகாரங்கள் தரப்பட வேண்டு மென்ற இயற்கை யுணர்வுகள் மாநிலங்களிடம் தோன்றியுள்ளன...... நமது கூட்டாட்சியமைப்பின் இவ்வகையான நடைமுறை, மாநிலங்களை மேலும் மேலும் விரக்தியடையச் செய்துள்ளது என்பதை நான் தெளிவாக்க விரும்புகிறேன். நமது அரசியல் சட்டம் மறு பரிசீலனை செய்யப் படவேண்டும் – மறு ஆய்வும் செய்யப் படவேண்டும்."

எனச் சுட்டிக் காட்டுகிருர்.

அரசியல் விளக்கத்தைப் புரிந்து கொண்ட பின்னர், கூட்டாட்சித் தத்துவத்தைப் பற்றியும் அதன் வளர்ச்சி பற்றி யும் இனிப் பார்ப்போம்.

## குழுவிலிருந்து கூட்டாட்சி வரை

வரலாற்றின் ஒவ்வோர் காலப் பகுதியிலும், அதன் சூழ் நிலைகளுக்கும், மக்கட் சமுதாயத்தின் தேவைகளுக்கும் ஏற்ப அரசியலமைப்புக்களும் வளர்ச்சி பெற்று வந்துள்ளன. இயற்கையின் இடர்ப் பாடுகளினின்றும், வெளிச் சக்திகளி னின்றும் பாதுகாத்துக் கொள்வதற்காக அறுதியிட்ட தனித் தனிக்குழுக்களாக மக்கள் கூட்டம் பிரிந்து வாழ்ந்தன. நாகரிகம் வளர வளர, அந்தப் பாதுகாப்பை முறைப்படுத்தி நல்கும் தனி நாடுகளை அந்த மக்களினங்கள் தனித்தனியே அமைத்துக் கொண்டன. தனித்தனியே, இன அடிப்படையில் பிரிந்த நாடுகள் ஒவ்வொன்றும் நாட்டுப் பகுதியின் எல்லைக் கோடு களையும், சமுதாய உணர்வையும், மொழியையும், இனப் பண்பையும், அரண்களாக்கி அதற்குரிய தனி அரசு களையும் உருவாக்கிக் கொண்டன,

அரசியல் நிறுவனங்களையும் (Political Institutions), அரசமைப்புக்களையும் (Constitutions) உருவாக்க வேண்டும் என்ற சிந்தனைகளும் செய்வினைகளும் மக்களிடம் ஒரே நாளில் திடீரென்று தோன்றி உருவாகி விடவில்லை. இன்றைய உலகின் அரசமைப்புக்கள் பலவும், மூவாயிரம் ஆண்டுகளின் மனித இன வளர்ச்சியின் விளைபொருள்களாகும்.மாறி வரும் சமுதாயச் சூழ்நிலைகளினுல் தாக்கப்பட்ட தனி நாட்டு மக்கள், அவ்வப் போது எழக் கூடிய புதுப் புது அரசியல் சிக்கல்களையும், சமுதாயப் பிரச்சனைகளையும்,தீர்த்துக் கொள்வதற்காகத் தமது அறிவைப் பயன் படுத்தி அரசியல் அமைப்புக்களையும், அரசு நிறுவனங்களையும் வளர்த்துக் கொண்டனர்.

### ஐரோப்பிய நாடுகளின் அரசியல் வளர்ச்சி

ஐரோப்பிய நாடுகளைப் பொறுத்தளவில், ஐந்தாம் நூற்றுண்டு முதல் பதினைந்தாம் நூற்றுண்டு வரை இருட்காலம் (Middle ages) என்று கூறுவர். அக்காலப் பகுதியில் மதங்களைச் சார்ந்தே அரசியல் கோட்பாடுகளும் அமைந்திருந்தன. அந்தக் கோட்பாடுகளை அடித்தளமாகக் கொண்டு, பிரபுத்துவ முறை நிறுவனங்கள் (Feudal Institutions) நடைமுறையில் இருந்தன. மக்களின் அடிப்படை உரிமைகள் என்ற கருத்துக்கே அதில் இடமில்லாமல் இருந்தது. பின்னர் பிரபுத்துவ முறையின் கொடுமைக்குச் சாவு மணி அடிக்கப்பட்டது.

முற்றிலும் மாறிய அரசியல், பொருளாதாரத் தொடர்புகளைக் கொண்ட புதிய தேசிய நாடுகள் உருவாயின. ஆள்பவருக்கும் ஆளப்படும் மக்களுக்கும் இடையில் புது அரசியல் உறவுகள் முளை விட்டன. மொழி, இனம், கலாச்சாரம், பிறந்த நாட்டிற்குரிய பற்று ஆகியவற்றிற்குப் புது அர்த்தங்கள் தரப்பட்டன. அவை, அரசியல் வானில் புதிய விழிப்பினையும், சமுதாயத் துறையில் புது உணர்வினையும் தோற்றுவித்தன.

தொழிற் புரட்சி மலர்ந்தது. விழிப்புற்ற மக்கள் — சமுதாயங்களின் பொருளாதார — அரசியல் நிலைமைகட்கேற்ப, புதிய அரசியல் அமைப்புக்களும் அமுலுக்கு வரலாயின; பலவகை அரசாங்க முறைகள் உலகம் முழுவதும் விரவி எழுந்தன.

**கூட்டாட்சித் தத்துவம் (Federalism)**

வலுவான அரசுகள் ஒன்றுக் கொன்று போட்டி யிட்டுக் கொண்டு, குடியேற்ற நாடுகளின் மேல் போரிட்டு, அடிமைப் படுத்தி ஒடுக்கித்தங்கள் அரசமைப்புக் கட்டுக்குள் அவைகளைப் பிணைத்துக் கொண்டன. அந்தப் போட்டியில், போர்கள் தவிர்க்க இயலாதவையாயின. சின்னஞ்சிறு நாடுகள் வலிவான நாடுகளை எதிர்க்கத் தேவையான படை வலிமையையும், பொருளாதார வளர்ச்சியையும் பெற்றிருக்க வில்லை. எனவே, சூழ்நிலைகளின் அழுத்தத்திற்கேற்ப ஒரே பூகோள எல்லைக்குள் இருக்கும் சிறு சிறு நாடுகள் குறிப்பிட்ட சில அரசியல் தொடர்புகளுடன் தங்கள் தனி நலன்களைப் பேணுவதற்காக ஒன்றுடன் ஒன்று ஏதோ ஒருவகையில் இணைய வேண்டிய தாயிற்று. நாட்டுப் பாதுகாப்பையே குறிக்கோளாகக் கொண்ட அச்சிறு நாடுகள் ஒன்றுக் கொன்று விட்டுக் கொடுத்துச் சரிப்படுத்திக் கொள்ளும் (Adjust) பாங்கினையே மூலமாக வைத்து, அதனதன் தனி இயல்புகட்கும் சுதந்திரத் திற்கும் சமுதாயப் பண்புகட்கும் ஊறு நேரா வண்ணம், அவைகளுக்குள் ஒரு நேசக்கூட்டை (Confederation) ஏற்படுத்திக் கொள்ளும் முறை உருவாயிற்று. உறுப்பு நாடுகளுக் கிடையில் ஒரு தளர்ச்சியான நேசக் கூட்டுறவை ஏற்படுத்துவதற்காக மட்டுமே அது பயன்பட்டது. அவ்வகை நேசக்கூட்டு, உறுப்பு நாடுகளிடம் இறுகிய பிணைப்பை உண்டாக்க வில்லை.

அரசியல் பொருளாதாரச் சூழ்நிலைகட்கேற்ப இன்னும் சற்று நெருங்கிய ஒருங்கிணைப்பினையும், பொது நலன்களின் ஒருமைப் பாட்டினையும் பேணுகின்ற ஒரு வலுவான கூட்டமைப்பு முறை அதன் பின்னர் வளர்ந்தது. நேசக் கூட்டில்இணைந்த உறுப்பு நாடுகள் பொது நலன் கருதித் தனது தனிச் சுதந்திரத்தையும் கூடச் சற்று விட்டுக் கொடுத்து, வலிவான இணைப்பை உருவாக்கும் ஒரு மத்திய அரசின் கீழ் தங்களைத் தாங்களே பின்னர் ஆட்படுத்திக் கொண்டன. இவ் வகையில், பல தனி நாடுகளைப் பொதுவானதொரு அரசாங்கத்தினடியில், முறையாக இணைக்கத்தக்க கூட்டாட்சி முறை (Federal Setup) சூழ்நிலைக்கும் சந்தர்ப்பத்திற்கும் ஏற்ற நல்லதொரு அரசியல் ஏற்பாடு என்ற அளவில் தான் முதன்

முதலாக உலகத்திற்கு அறிமுகமாயிற்று. பல நாடுகள் சேர்ந்து ஒரு ஒப்பந்தத்தின் மூலமாக, பிணைப்பை ஏற்படுத்திக் கொண்ட ஒரு பொது நாட்டிற்கு ''கூட்டாட்சிநாடு''(Federation)எனவும் அதனுள் இயங்கும் உறுப்பு நாடுகளுக்கு 'மாநிலங்கள்'(States) எனவும் பெயர். உறுப்பு நாடுகளின் பொதுவான மத்திய—அமைப்பிற்கு 'மத்திய அரசு' (Central Government) என்ற பெயரும் ஏற்பட்டது. இந்த இணைப்பாட்சி முறைதான் கூட்டாட்சிக் கொள்கை (Federalism) எனப்படுகிறது.



# 3. கூட்டாட்சி

" மத்திய அரசும் மாநில அரசுகளும் தங்கள் கொள்கையினை உருவாக்குவதிலும் அவற்றைச் செயல்படுத்துவதிலும், பரஸ்பரக் கட்டுப்பாட்டிலிருந்தும் அதனதன் வரம்பை மீறி இன்னொன்றை ஆக்கிரமிப்புச் செய்வதிலிருந்தும் விடுபட்டுச் சுதந்திரமாயியங்க வேண்டும். இந்தச் சுதந்திரம் தான் கூட்டாட்சித் தத்துவத்தின் உயிராகும்." [1]

M. வெங்கடரங்கையா.

ஒரு சமுதாயத்தை நாடாக மாற்றுவது அதனுடைய அரசாங்கம். ஆனால் எல்லா நாடுகளிலும் ஒரே மாதிரி அரசுகள் நடைபெறுவதில்லை.

### அரசாங்க வகைகள்

அரசுகளில் பல வகையுண்டு. பொதுவாகக் குடியரசு, முடியரசு, சர்வாதிகார அரசு, இன்னோரன்ன பிறவகை அரசுகள் உலக நாடுகளில் இயங்கி வருவதை நாம் காண்கிறோம்.

அமெரிக்க ஐக்கிய நாடுகள், இங்கிலாந்து, பிரான்சு, இந்தியா, இலங்கை, ஆஸ்திரேலியா, சுவிட்சர்லாந்து, கனடா போன்ற பல நாடுகள் குடியரசு வகையைச் சார்ந்தவை.

இட்லரின் பழைய ஜெர்மனி, முசோலினியின் பழைய இத்தாலி போன்றவை சர்வாதிகார அரசு வகையைச் சார்ந்தவை. கம்யூனிஸ்டு ரஷ்யாவையும், செஞ்சீனாவையும் கூட சர்வாதிகார அரசுவகையைச் சார்ந்தவை எனக் கூறுகின்றனர்.

எதியோப்பியா, சவூதி அரேபியா, நேபாளம், ஆகியவை முடியாட்சி வகையைச் சார்ந்தவை.

---

1 Prof. M. Venkitarangaiya, "Federalism in Government", P.17.

**அரசாங்க முறைகள்**

ஓர் அரசு செயல்படுவதற்கும் பல முறைகளுண்டு. ஓர் அரசாங்கத்தின் அமைப்பும் பாணியும் சேர்ந்து, அதன் அரசு முறையை வகுக்கிறது. அரசு முறைகளைப் பொதுவாக அதன் அமைப்பையும் பாணியையும் வைத்து, ''கூட்டாட்சி முறை'' என்றும் ''ஒற்றையாட்சி முறை'' என்றும் இரண்டாகப் பிரிக்கலாம்.

அமெரிக்க ஐக்கிய நாடுகள் குடியரசு வகையைக் கொண்ட நாடு; ஆனால் அது கூட்டாட்சி முறையில் (Federal) இயங்கும் ஓர் அரசு. பிரிட்டன் குடியரசு வகையைச் சார்ந்த நாடு; ஆனால் அது ஒற்றையாட்சி முறையில் (Unitary) இயங்கும் அரசு. அமெரிக்காவும், இங்கிலாந்தும் ஒரே குடியரசு வகையைச் சார்ந்த நாடுகள் தான். இருப்பினும், அவைகளுடைய அரசு முறைகளில் மாறுபடுகின்றன.

ஒரே மத்திய அரசின் மூலமாகப் பிரிட்டானிய அரசு செயல் படுவதால் அதனை ஒற்றையாட்சி அரசு முறை எனவும், பல மாநில அரசுகளுடன் சேர்ந்து ஒரு மத்திய அரசும் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் செயல்படுவதால் அதனைக் கூட்டாட்சி அரசெனவும் கூறுகிறோம்.

ரஷ்ய நாடு சர்வாதிகார அரசு வகையைச் சார்ந்த நாடு எனப்படுகிறது. ஆனால் அது கூட்டாட்சி முறையைக் கைக் கொண்டுள்ளது.

எனவே, ஒரே வகையைச் சார்ந்த அரசாங்கங்கள் ஒரே அரசுமுறையைக் கொண்டியங்க வேண்டுவதில்லை.

அரசுகளின் வகைகள் என்பதொன்று; அதன் முறைகள் என்பது வேறொன்று. பொதுவாகப் பல இன, மொழி மக்களைக் கொண்ட பெரிய குடியரசு நாடுகள், கூட்டாட்சி முறையைக் கொண்டியங்குகின்றன.

நாம் எடுத்துக் கொண்ட மாநில சுயாட்சி ஆய்விற்கு ''அரசின் வகைகள்'' பற்றிய விளக்கங்கள் அவசியமில்லை. கூட்டாட்சி முறை, ஒற்றையாட்சிமுறை என்ற அரசின் முறைகளே மாநில சுயாட்சி விளக்கத்திற்கு அடிப்படையாக அமைந்திருப்பதால் அவைபற்றி மட்டும் இங்கே விவரிக்கப் படுகிறது.

கூட்டாட்சிக் கொள்கையின் ஒரு சிறப்புக் கூறே மாநில சுயாட்சிக் கொள்கை யாகும். கூட்டாட்சி என்பது பருப் பொருள்; ''மாநில சுயாட்சி'' என்பது அதன் 'கருப்' பொருள். பரிணும வளர்ச்சி கொண்ட எந்த வொரு பொருளுக்கும் இரண்டு பக்கங்கள் இருக்கும். அதைப் போலக் கூட்டாட்சி யென்பது அரசாங்கத்தின் ஒரு பக்க மெனில், மாநில சுயாட்சி என்பது அந்த அரசின் இன்னெரு பக்கம் எனக் கூறலாம்.

எனவே, மாநில சுயாட்சிக் கொள்கை பற்றி நாம் தெளிவாகப்புரிந்து கொள்ளவேண்டு மெனில், ''கூட்டாட்சி முறை'' (Federation) பற்றியும் அதற்கு மாருன 'ஒற்றையாட்சி முறை' (Unitary System) பற்றியும் முதலில் நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

## ஒற்றை யாட்சி முறை (Unitary System)

ஒன்று + ஆட்சி = ஒற்றை யாட்சி.

ஒரு நாடு முழுவதும் ஒரே ஆட்சியால் ஆளப்பட்டால், அந்த முறைக்கு ஒற்றையாட்சி முறை(Unitary System)எனப்பெயர்.

ஒரு அரசாங்கத்தினுடைய எல்லா அதிகாரங்களும், ஒரு குறிப்பிட்ட மையத்திலிருந்து (மத்திய அரசிலிருந்து) செயல் படுத்தப்படும்-ஒரே முகமான - ஒற்றை அமைப்பைக் கொண்ட அரசிற்கு ஒற்றையாட்சி அரசெனப் (Unitary Government) பெயர். இதனை ஒருமுக ஆட்சி எனவும் அழைக்கலாம். அஃதாவது ஒற்றையாட்சி முறை கொண்ட அரசிற்கு, மத்திய அரசே தலையானது; முதன்மையானது.

அந்நாட்டின் எல்லா அதிகாரங்களையும், மத்திய அரசே பெற்றிருக்கும். அங்கே மாநில அரசுகள் இருக்காது; மத்திய அரசு மட்டும்தான் இருக்கும்.

மத்திய அரசு விரும்பினுல், தன்னுடைய நிர்வாக வசதிகளுக்காக, அந்நாட்டைப் பல பகுதிகளாகப் பிரித்து அந்தப் பகுதிகளுக்குத் தனது அதிகாரங்களை ஒப்படைக்கலாம். மத்திய அரசால் வழங்கப்பட்ட அந்த அதிகாரங்களை மத்திய அரசு விரும்பினுல் கூட்டலாம்; அல்லது குறைக்கலாம்; மேலும் நிர்வாகப்பகுதிகளின் எல்லைகளைக்கூட மாற்றியமைக்கலாம்,

அந்த நிர்வாக நிலப்பகுதிகளுக்குத் தனியான அரசியல் தகுதியோ (Political Status) அல்லது நிலையான அரசியல் வாழ்வோ (Political Existence) கிடையாது. அவை, மத்திய அரசாலேயே படைக்கப்பட்டு, மத்திய அரசு கொடுக்கும் அரசியல் தகுதியும் அதிகாரங்களையும் பெற்றே இயங்கிவருகின்றன. மத்திய அரசு, தனக்குச் சொந்தமான சில அதிகாரங்களைப் பிரித்து அந்த நிர்வாகக் கூறுகளுக்கு ஒப்படைசெய்வதால்,அவை எப்போதும் மத்திய அரசிற்குக் கீழ்ப்படிந்தவையாகவே இருக்கும்.

ஒற்றையாட்சி நாட்டின் பல நிர்வாகப் பகுதிகள் பெற்றிருக்கும் அதிகாரங்கள், அரசியலமைப்புச் சட்டத்தால் பிரித்தளிக்கப்பட்டவை யல்ல. மாறாக, அந்த அதிகாரங்களை மத்திய அரசின் குறிப்பான ஒப்புதலோடும் இணக்கத்தோடும் மத்திய அரசே கொடுக்கிறது. எனவே, ஒற்றை ஆட்சிமுறை கொண்ட ஒரு நாட்டினுடைய பல பிரிவுகள்–அவை மாகாணங்களானாலும் சரி; மாவட்டங்களானாலும் சரி; நகரப் பகுதிகளானாலும் சரி; மத்திய அரசாங்கத்தின் தலையான அதிகாரத்தை ஏற்றுக்கொள்கின்றன. அதனால் அவை மத்திய அரசினுடைய அனுமதி பெற்ற முகவர்களாகவே(ஏஜெண்ட்)இயங்குகின்றன.

சுருங்கக் கூறின் மத்திய அரசு என்ற ஒரே அமைப்பின் மூலமாக, ஒரு நாட்டின் பல அங்கங்களும் பல நிறுவனங்களும் இயங்கக்கூடிய ஆட்சி முறையை, ஒற்றை ஆட்சிமுறை (Unitary Form) எனக் கூறலாம்.

அந்த ஒற்றையாட்சி முறையை ஏற்றுக் கொண்ட நாட்டிற்கு, ''ஒற்றையாட்சி நாடு'' (Unitary State) என்று பெயர்.

ஒற்றையாட்சி நாட்டில், நிர்வாக வசதிக்காக மத்திய அரசின் ஆணையைத் தலைமேல் தாங்கிய பல நில எல்லைப் பகுதிகளிருக்குமே யல்லாமல், கூட்டாட்சி அமைப்பி லிருப்பதைப் போல் மாநிலங்களோ (State), அரசமைப்புச் சட்டத்தால் அதிகாரப் பாகுபாடுகள் செய்யப்பட்ட தன்னாட்சிப்பகுதிகளோ

இருக்காது. ஒற்றையாட்சிமுறை பெரும்பாலும் ஒரே தன்மையினைக் கொண்டதும், ஒரே இனத்தைச் சார்ந்ததும், ஒரேவகை மக்களைப் படைத்த நாடுகளுக்கே ஏற்றதாகும். பிரிட்டன், பிரான்ஸ், இத்தாலி, பெல்ஜியம், ஜப்பான், ஆப்கானிஸ்தானம், ஈராக் ஆகிய நாடுகள் ஒற்றை ஆட்சி முறையைக் கொண்டு இயங்குகின்றன.

## ஒற்றை ரோசாவும் ஒற்றை ஆட்சியும்

ஒரு ரோசா மலரை எடுத்து, அதன் அமைப்பைச் சற்று உற்று நோக்கினல், ஒற்றை ஆட்சி முறையை அது தெளிவாக விளக்கும்.

ரோசாவின் அடுக்கடுக்கான செவ்விய இதழ்கள், வெளிப்புறத்தே விரிந்து; தனித்துத் தோன்றினும், அந்த இதழ்களின் இறுதிமுனை கூம்பி, ரோசா மலரின் காம்போடு இயைந்த புல்லி வட்டத்தினுள் (பூவின் உள்வட்டம்) இறுகிப்பிணைந்து நிற்கின்றன. இன்னும் கூர்ந்து பார்த்தால், மலரின் நடு வட்டமான புல்லி வட்டத்தினின்றும் ரோசா இதழ்கள் முகிழ்த்து வெளிப்படும் தன்மையை, நாம் காணலாம். ரோசா மலர் அரும்பாய்இருக்கும் போதே, அடுத்து மலரும் அம்மலரிதழ்களின் சுரும்புகளை அதன் புல்லி வட்டமே தாங்கி நிற்கும்.

ரோசா மலரின் இதழ்களை இறுகிப் பிணைத்து நிற்கும் புல்லி வட்டம் முதலில் தோன்றுவதைப் போல, ஒற்றை ஆட்சி முறை கொண்ட ஒரு நாட்டிற்கு அதன் மத்திய அரசே முதலில் தோன்றுகிறது.

மலரின் புல்லி வட்டத்தின்றும் இதழ்கள் முகிழ்த்து விரிவடைவதைப்போல், மத்திய அரசினின்றும் அதனுடைய அதிகார முகவர்களான (Power Agents) பலநிர்வாகப் பகுதிகள் மலர்கின்றன.

ரோசா இதழ்களுக்குரிய ஆக்கத்தையும் செழிப்பையும், மலரின் உள்வட்டம் தருவதைப்போல, நிர்வாக வசதிகளுக்காகப்பிரிக்கப்பட்டஓர் ஒற்றையாட்சி நாட்டின் பல பகுதிகளுக்கான அதிகாரங்களை அதன் மத்திய அரசே வழங்குகின்றது.

ரோசா இதழ்கள்யாவும் மலரின் புல்லி வட்டத்தினுள் இறுகிப் பிணைந்து விடுவதைப்போல, ஓர் ஒற்றைஆட்சி நாட்டினுடைய பல அங்கங்களும், நிர்வாகப் பிரிவுகளும், மத்திய அரசுடனேயே இயற்கையாகப் பிணைந்து விடுகின்றன.

மலரின் புல்லி வட்ட மில்லையேல் பூவிதழ்களும் இல்லை; அதைப்போலவே, ஒற்றை ஆட்சி நாட்டில் மத்திய அரசு இல்லையெனில் அதன் மற்ற பிரிவுகளும் இல்லை

எப்படி ரோசா இதழ்களுக்குத் தனித்து நிலைபெறும் தன்மையில்லையோ, அதைப்போலவே ஒற்றை ஆட்சி நாட்டின் நிர்வாகப் பகுதிகளுக்கும் சுயமாக இயங்கும் தனி அரசியல் அதிகாரங்கள் இருப்பதில்லை.

தனி இதழ்களெல்லாம் சேர்ந்து மலராகி விடாது; புல்லி வட்டத்திலிருந்து பிறந்து அதனோடு பிணைந்து நிற்கும் அடுக்கடுக்கான இதழ்கள்தான் ரோசாமலரை உருவாக்குகிறது. அதைப்போலவே மத்திய அரசிலிருந்து பிறந்து, அது கொடுக்கும் உயிர்ச்சத்தான அரசியல் அதிகாரங்களைப் பெற்று, மத்திய அரசுடனேயே பிணைந்து நிற்கும் நிர்வாகப் பிரிவுகள் எல்லாம் சேர்ந்தே ஒற்றை ஆட்சி நாடாகத் திகழ்கிறது.

ரோசா மலரின் இதழ்களின் பிணைப்பு இயற்கையானது; அது செயற்கையாக இணைக்கப்படுவதில்லை. ஒற்றையாட்சி அமைப்பிலுள்ள மத்திய அரசின் பிணைப்பும் இயற்கையானது. கூட்டாட்சி நாடுகளைப்போல் பல நாடுகளின் செயற்கை இணைப்பால் அது தோன்றுவதில்லை.

ரோசாமலரின் இதழ்கள் ஒரே நிறத்தையும் குணத்தையும் மணத்தையும் கொண்டதைப் போல ஒற்றை ஆட்சி நாட்டின் பல பகுதிகளும், ஒரே வகையான மொழி, இனப் பண்பாடு கொண்ட மக்களைக் கொண்டுள்ளன.

எனவே, ஒரே வகைப் பண்பாட்டை அல்லது மொழியினத்தைச் சார்ந்த மக்கள்; ஒரே தன்மைத்தான அதிகாரப் பிரிவுகளைக் கொண்ட அங்கங்கள்; ஒரே மத்திய அரசிலிருந்து தரப்படும் அரசியல் அதிகாரங்கள்; ஒரே அமைப்பு முறை இவையெல்லாம் ஒற்றை யாட்சிக் குரிய லட்சணங்கள். அதனால்தான் அந்த அரசியல் முறைமைக்கும் ஒற்றை யாட்சி முறை யென்றே பெயர் வழங்கப்படுகிறது.

**கூட்டாட்சி அல்லது இணைப்பாட்சி — மூலக் கூறுகள்**

"வேற்றுமைகளில் ஒற்றுமை காணுதலே", (Unity in Diversity) கூட்டாட்சி முறையின் அடிப்படை இலக்கணமாகும்.

பரந்து விரிந்த நிலப்பரப்பைப் பெற்ற நாடுகளில், இன வேறுபாடுகளும் பண்பாட்டு வேற்றுமைகளும் சமய மாறுபாடுகளும் மொழி வேற்றுமைகளும் நிறைந்த பல தரப்பட்ட மக்கட் சமுதாயங்களை, அவர்தம் தனித் தன்மைக்கு இடையூறில்லாமல், ஓர் ஆட்சியின் கீழ் (கூட்டாட்சி அரசு) இணையும் கொள்கைக்குக் கூட்டாட்சிக் கொள்கை எனப் பெயர்.

அமெரிக்க ஐக்கிய நாடுகள், ஆஸ்திரேலியா, கனடா, சுவிட்சர்லாந்து, ரஷ்யா போன்ற நாடுகள் பல இனங்களையும் மொழிகளையும் பூகோள மாறுபாடுகளையும் கொண்டவை. அந்த நாடுகள் கூட்டாட்சி அரசுகளைப் பெற்றுள்ளன.

கூட்டாட்சி நாட்டிற்கு இருவகை அம்சங்கள் தேவை. ஒன்று —மாநிலங்கள் (உறுப்பு நாடுகள்); இன்னொன்று—அந்த மாநிலங்களை (உறுப்பு நாடுகளை) இணைக்கும் தேசியக் கூட்டுச் சர்க்கார்.

மாநில மக்களுடைய தனிச் சிறப்புக்களையும் பண்புகளையும் மாநில அரசுகள் பேணிக் காக்கின்றன. தேசிய மட்டத்தில், அக் கூட்டாட்சி நாட்டின் எல்லா மக்களுடைய பொது நலன்கள், பொருளாதார நிலை, அரசியல் நிலை இன்னோரன்ன பொதுவான அரசாங்க அலுவல்களை, மத்திய அரசு, தனது அதிகார எல்லைக்குள் நின்று செயற்படுத்துகின்றது.

ஆகவே, கூட்டாட்சி நாட்டில் மத்திய அரசு ஒரு புறமும், மாநிலங்களுடைய அரசுகள் இன்னொரு புறமும் ஒருங்கே, ஆனால் தனித்துச் செயல் படுகின்றன.

ஒரு கூட்டாட்சி அரசாங்கத்தில் மத்திய அரசிற்கும், மாநில அரசுகளுக்குமிடையே அந் நாட்டின் அரசியல் அதிகாரங்களை அரசமைப்புச் சட்டம் பிரித்துக் கொடுக்கும்.

அப்படி அரசமைப்புச் சட்டத்தால் பிரித்து வழங்கப்பட்ட அதிகாரங்களைக் கொண்டு மத்திய அரசு, தன்னுடைய அதிகார எல்லைக்குட் பட்டும், மாநில அரசு அதனுடைய அதிகார எல்லைக்குட்பட்டும் செயல்படுகின்றன.

மாநிலங்களுக் கொதுக்கப்பட்ட அதிகாரங்களிலும் நிர்வாகப் பணிகளிலும் மத்திய அரசு குறுக்கிடக் கூடாது; ஆக்கிரமிக்கவும் கூடாது. மாநில அரசுகளும், மத்திய அரசின் அதிகார வட்டத்திற்குள் உட் செல்லக் கூடாது. ஏனெனில் கூட்டாட்சி நாட்டில் மத்திய அரசும் மாநில அரசும் சம அந்தஸ்து கொண்டவை.

அரசியலமைப்புச் சட்டத்தால் பிரித்துக் கொடுக்கப்பட்ட அதிகார வட்டத்திற்குள் இயங்குகின்ற மாநில அரசுகள் சுதந்திரமாகவும், தன்னாட்சியுடனும் – மத்திய அரசைச் சார்ந்து கிடக்காமல் - ஆட்சி செய்கின்றன. அஃதாவது, மாநில அரசுகள் இயங்குவதற்காக மத்திய அரசே கதியென அண்டிக் கிடக்க வேண்டியதில்லை. தமக்கெனக் கொடுக்கப் பட்ட அதிகாரப் பிரதேசத்தில் மாநிலங்கள் சுயாட்சியோடு இயங்குகின்றன.

## மலரும் மாலையும்

கூட்டாட்சிக் கொள்கையையும், கூட்டாட்சி அரசையும், கூட்டாட்சி அரசமைப்பையும், தன்மையையும் நடைமுறை யிலுள்ள ஓர் எளிதான எடுத்துக் காட்டின் மூலமாகத் தெளிவு படுத்தலாம். ஒரு கதம்ப மலர் மாலையிலுள்ள மலர்களின் தொடுப்பையும் அதன் அமைப்பையும் உற்று நோக்கினல் கூட்டாட்சிக் கொள்கையும், கூட்டாட்சியின் அடிப்படைக் கூறுகளும் புலனாகும்.

மலர்களிலே பல வகையுண்டு.

மல்லிகை, முல்லை, இருவாட்சி, செண்பகம் இப்படிப் பல வகை மலர்கள்.

ஒவ்வொரு மலருக்கும் தனித்த அமைப்பும், தனிச் சுவை கொண்ட மதுவும், குணமும், மணமும் இருக்கின்றன.

அதைப் போலவே நாடுகளிலும் பல வகையுண்டு.

ஒவ்வொரு நாட்டிற்கும் தனித்த இயற்கை அமைப்பும், மொழி யும், இனமும், தனிச் சிறப்பு கொண்ட பண்பாடும் உள்ளன.

தனி மலர்கள் மாலையாகி விடுவதில்லை. பல மலர்கள் ஒன்ருகத் தொடுக்கப்பட்டே ஒரு மாலையாகின்றது. அதனுல் மாலையும் அழகு பெறுகிறது. அம்மாலையிலுள்ள மலர்களும் சிறப்பைப் பெறுகின்றன.

அதைப்போலவே சின்னஞ்சிறிய பல நாடுகள் ஒரு கூட்டாட்சி நாடாக ஆவதில்லை. பல நாடுகள் இணைக்கப்பட்டே ஒரு கூட்டாட்சி நாடாகிறது. உருவான கூட்டாட்சி நாடு வலிமையையும், பொருளாதார வளத்தையும் பெறுகின்றது. அக்கூட்டாட்சி நாட்டின் பல உறுப்பு நாடுகளும் (மாநிலங்களும்) சிறப்பையும், பாதுகாப்பையும் பெறுகின்றன.

பல வண்ண மலர்களைத் தொடுக்க நாரொன்று வேண்டும். அதைப்போலவே பல மொழி, இன, பண்பாடுகளைக் கொண்ட பல தனி நாடுகளை இணைப்பதற்கு ஒரு மத்திய அரசு வேண்டும்.

மலர்களை மாலையாகத் தொடுக்கும் பணியினைச் செய்ய நளினமான கை விரல்கள் வேண்டும். அதைப் போலவே, பல தனி நாடுகளை ஒரு மத்திய அரசின் கீழ் இணைக்கும் பணியைச் செய்யவும், கூட்டாட்சி நாட்டிலுள்ள மத்திய அரசிற்கும் உறுப்பு நாடுகட்கும் இடையேயுள்ள உரிமைகளையும் அதிகாரங்களையும் முறையாகப் பகிர்ந்தளிக்கவும் ஓர் எழுதப்பட்ட அரசியலமைப்புச் சட்டமும் இன்றியமையாததாகிறது.

பல மலர்களால் தொடுக்கப்பட்ட ஒரு மலர் மாலை, "மாலை" என்ற புதிய உருவமைப்பைப் பெறுகின்றது; புதிய அழகினையும் பெறுகின்றது; அதிலுள்ள பல மலர்கள், "தனி மலர்கள்" என்ற பெயரினை யிழந்து "மாலையிலுள்ள மலர்கள்" என்ற பொதுப் பெயரிணைப் பெறுகின்றன.

அதைப் போலவே, இணைக்கப்பட்ட பல நாடுகளின் கூட்டமைப்பு 'கூட்டாட்சி நாடு" என்ற புதிய பெயரைப் பெறுகின்றது; அந்தக் கூட்டாட்சி நாட்டிலுள்ள பழைய தனி நாடுகள் "மாநிலங்கள்" அல்லது "மாகாணங்கள்" என்ற புதிய பொதுப் பெயரைப் பெறுகின்றன.

மலர்களுக்குத்தான் மணமுண்டு. அம் மலர்களை இணைக்கும் நாருக்குத் தனியாக மணம் இல்லை. அதைப் போலவே, கூட்டாட்சி நாட்டின் மாநிலங்களுக்குத் தனித்த பண்பாடும், அரசுப் பணிகளும் உண்டு. அவைகளை இணைக்கும் மத்திய அரசிற்கு தனித்த ஒரு பண்போ, அரசியல் தன்மையோ, அதிகாரப் பணிகளோ இயற்கையாகக் கிடையாது. ஆனல் பூவோடு சேர்ந்து நாரும் மணத்தலைப் போல, கூட்டாட்சி நாட்டின் மத்திய அரசு, பல மாநிலங்களை இணைக்கும் போது அந்த மாநிலங்கள் விட்டுக் கொடுத்த சில சுயாட்சி அதிகாரங்களைப் பெற்றுத் திகழ்கின்றது.

தனி மலர்கள் மாலையுடன் இணைந்துவிட்டாலும் அந்த மலர்கள் தங்களது தனித்த அமைப்பையும், இன்சுவை மதுவையும், குணத்தையும், மணத்தையும் முழுமையாக இழந்து விடுவதில்லை. அந்தந்த மலரில் இவையெல்லாம் தனித்தே நிலைத்து நிற்கின்றன.

அதைப் போலவே, கூட்டாட்சி நாட்டின் அங்கங்களாக மாநிலங்கள் ஆகிவிடுவதால், அவற்றின் தனித்தன்மையான இயற்கை அமைப்பையும், மொழியையும், இனப் பண்பையும், பண்பாட்டையும் அவை முழுமையாக இழந்து விடுவதில்லை. கூட்டாட்சி நாட்டினுடைய மாநிலங்களின் தனிப் பண்புகளும் சிறப்புக் கூறுகளும், சுயாட்சிக்குரிய தனி உரிமைகளும் அழிந்துவிடாமல் நிலைத்து நிற்கின்றன.

பல மலர்களின் தொகுப்பு, காட்சிக்கு அழகாகவும் நுகர்விற்குப் புதுமையாகவும் அமைகின்றது. ஆனல் அந்த மலர்கள் தங்கள் தனித் தன்மைகளை அறவே அழித்துக் கொள்வதில்லை. மத்திய அரசால் பிணைக்கப்பட்ட மாநிலங்களின் தனித் தன்மைகள் தோற்றத்திற்குச் சற்று மறைந்து, அவைகளின் முழுச் சுதந்திர உரிமைகள் சற்றுச் சிதைந்திருந்தாலும் அவை கூட்டாட்சி நாட்டின் பொது நலன் கருதி மாநிலங்களால் தானுக விட்டுக் கொடுக்கப்பட்டவை. மத்திய அரசின் புதிய எழுச்சியும், புதிய அதிகாரங்களும் மாநிலங்களிட்ட நன்கொடைகள். நாட்டின் பொது நலன் கருதி மாநிலங்கள் சில அதிகாரங்களை மத்திய அரசிற்குத் தந்து விடுவதால், அவை யாவும் தங்களது சுயாட்சியை அறவே விட்டுக் கொடுத்து விட்டன என்று பொருளல்ல,

தனி மலர்களின் மணமின்றி மாலைக்கேது புதிய மணம்? தனி மலர்களின் வண்ணமின்றி மாலைக்கேது புதிய அழகு வண்ணம்?

தனித் தன்மையும், சுயாட்சியும் பெற்ற மாநிலங்களில்லாமல் கூட்டாட்சி நாட்டிற்கேது புதிய வலிவு? மாநில அரசுகளில்லாத கூட்டாட்சி அரசிற்கேது புதிய பொலிவு?

மலர்களை மாலையாகத் தொடுப்பதில் நுட்பமும் நளினமும் இருத்தல் மிக அவசியம். நளினமில்லா முரட்டு விரல்கள் நுட்பத்தோடு செயல்படா விட்டால், நாரின் முடிச்சிருகி மலர்க் காம்புகள் அறுந்து விடும்; மலரும் துண்டாகி மாலையினின்றும் பிரிந்து விடும்.

அதைப் போலவே பல பண்பாடுகளைக் கொண்ட தனி நாடுகளை மாநிலங்களாக்கி, அவற்றை ஓர் உண்மையான கூட்டாட்சி நாடாகச் சமைக்கும் போது மத்திய அரசிற்கும், மாநிலங்கட்கும் தனித் தனியான அதிகாரங்களையும் ஓர் எழுதப்பட்ட அரசியல் சட்டம் நுட்பமாகவும் முழுமையாகவும் பிரித்தொதுக்க வேண்டும்.

மாநிலங்களின் தன்னாட்சியுரிமைகளை ஊடுருவிப் பாய்ந்து மாநிலங்களைச் சிதைக்காத அளவிற்கு, தேவையான அதிகாரங்களைப் ,பெற்ற நடுநிலை மத்திய அரசு ஒன்றும் அரசமைப்புச் சட்டத்தால் முறையாக உருவாக்கப்படல் வேண்டும். அந்த அரசமைப்புச் சட்டம் மாநில சுயாட்சியினை அழிக்கக்கூடிய ஒரு மத்திய அரசை உருவாக்கி விட்டால், மாநில அரசென்ற மலர்க்காம்பு அறுபட்டு, மாநிலங்கள் என்ற மலர்கள் தன்னாட்சியை யிழந்து, தனி ஆட்சியை மேற்கொண்டு, கூட்டாட்சி நாட்டிலிருந்து பிரிந்து போய் விடும்.

மலர்களைப் பிணைக்கின்ற நார், தேவையை விட அதிகமான வலிமையுடனும், முருக்குடனும் இருந்தால், மலர்களைத் தொடுக்கும் போது, விரைப்பான நாரின் முடிச்சிறுகி, அதனாலும் மலர்க்காம்புகள் அறுந்து போகும்;மலரும் துண்டாகி மாலையினின்றும் பிரிந்து விடும்,

வலிமையென்ற பெயரால், ஒற்றுமையென்ற பெயரால் மாநிலங்களின் உரிமைகளைப் பறிக்கும் வல்லாட்சி கொண்ட மத்திய அரசு, அரசமைப்புச் சட்டத்தையும் மீறித் தானுகவே வன்மையைப்பெற்றுக் கொண்டாலும் மாநிலங்களின் சுயாட்சி மறைந்து போகும்; விரக்தியடைந்த மாநிலங்கள் கூட்டாட்சி நாட்டிலிருந்து துண்டாகிப் பிரிந்தும் போய் விடும்.

ஆக, மாலை தொடுக்கும் கைவிரல்களில் நுணுக்கமில்லா விட்டாலும் மலர்கள் அறுந்து போகும்; பூச்சரத்தின் நாரில் பக்குவமில்லா விட்டாலும் மலர்கள் அறுந்து வீழ்ந்து படும். அதைப் போலவே, வலிமையான ஒரு மத்திய அரசை, அரசமைப்புச் சட்டம் உருவாக்கினுலும் அல்லது மத்திய அரசே தன்னை வன்மையான ஓர் ஒற்றையாட்சி போன்று மாற்றிக் கொண்டாலும், நாட்டுப் பிரிவினை தவிர்க்க இயலாததாகி விடும்.

ஆகவே மலர்களின் தொடுப்பும் மாநிலங்களின் இணைப்பும் ஒன்றுதான். மலர்த்தொடுப்பு—புதுமணம் வீசும் மலர் மாலையையும் மாநிலங்களின் இணைப்பு—புதிய வலிவினையும் பொலிவினையும் கொண்ட ஒரு கூட்டாட்சி நாட்டையும் உருவாக்குகின்றன.

நல்ல மலர் மாலையிலிருக்கும் பூக்களைப்போல, உண்மையான கூட்டாட்சி நாட்டிலிருக்கும் மாநிலங்களும் ஒன்றுடன் ஒன்று பிணையாமல் – ஆனுல் – இணைந்திருக்க வேண்டும்; மத்திய அரசால் இறுக்கப்படாமல்–ஆனுல்-மத்திய அரசோடு பிணைந்தும் இருக்கவேண்டும்; மத்திய அரசும் மாநில அரசுகளும் ஒருமையாக (Uniformity) இல்லாமல்–ஆனுல்–ஒற்றுமை (Unity) யோடு இயங்க வேண்டும். நல்லதொரு கூட்டாட்சி நாட்டில் மாநிலங்கள் தனி ஆட்சியின்றி, தன்னுட்சியோடு செயல்பட வேண்டும். மாநில அரசுகளும் மத்தியக் கூட்டாட்சி அரசும் ஒன்றினுடைய அதிகார வட்டத்தினுள் இன்னென்று ஆக்கிரமிப்புச் செய்யாமலும் ஒன்றுக் கொன்று முரண்பாடு கொள்ளாமலும் ஒரே இணக்கத்துடனும் நடைபெற வேண்டும்.

மலரும் மாலையும் இதனைத்தான் விளக்குகின்றன.

## ஒற்றையாட்சியிலிருந்து உருவாகும் கூட்டாட்சி

பல்வேறு மொழி சார்ந்த மக்களையும் பல இனங்களையும் கொண்ட சின்னஞ் சிறு நாடுகள் ஒரு பொது ஒப்பந்தத்தின் மூலமாகத் தங்கள் தனித்தன்மை கெடாமல்,ஒரு பொது அரசின் கீழ் இணைந்து ஓர் கூட்டாட்சி நாடாக அமைந்து செயல்படு வதைப் பற்றி நாம் பார்த்தோம். அவ்வகை ஒப்பந்தத்தின் மூலமாக இல்லாமல் வேறு வகையிலும் ஒரு கூட்டாட்சி நாடு உருவாகலாம்.

''வேற்றுமைகளில் ஒற்றுமை காணுதல்'' என்பதே கூட்டாட்சிக் கொள்கைக்கு உயிர்நாடியாகும் எனக் கண் டோம். பல இன மக்களைக் கொண்டதும், பல மொழி பேசும் பகுதிகளை உள்ளடக்கியதுமான பரந்த ஒரு நாடு பல்வேறு அரசியல் சூழ்நிலைகளால் தாக்கப்பட்டு அதன் காரணமாக வேறு வழியின்றி ஒரே அரசின் கீழ் இயங்கக் கூடிய ''ஒற்றை யாட்சி முறை''யைக் கொண்ட ஒரு நாடாகவும் நடைபெறுவ துண்டு. ஆனால் அந் நாட்டு மக்கள் நாளடைவில் வரலாற்றுக் காரணங்களால் உந்தப்பட்டு, அரசியல் விழிப் பெய்தினால், தங்களது தனி இனப்பண்புகளையும் மொழி சார்ந்த அரசியல் உரிமைகளையும் பேணிக் காப்பதற்காகத் தனித்தனி மாநில அரசுகளை உருவாக்கிக் கொள்வதற்கு முனைவர். அப்போது ஒற்றை ஆட்சி கொண்ட அந்த நாட்டில் கூட்டாட்சிக் கொள் கையும் உருவெடுக்கும். வாய்ப்பு நேரும் போது ஒற்றை ஆட்சி முறையினைக் கொண்டியங்கும் அந்த நாடு, தனி எல்லை களைக்கொண்ட பல மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டு ஒரு மத்திய அரசின் அதிகார வட்டத்திற்குள் மாநிலத் தன்னாட்சியோடு இயங்குவதற்காகக் கூட்டாட்சி அரசியல் சட்டத்தை ஏற்படுத்திக் கொள்ளும். அதனைத் தான் ஒற்றையாட்சி முறை நாட்டிலிருந்து உருவாகும் கூட்டாட்சி நாடு என்கிறோம்.

இவ்வகையில் ஒற்றையாட்சியிலிருந்து பிறக்கும் கூட் டாட்சியில், ஏற்கனவே மத்திய அரசு கைக் கொண்டிருந்த பல்வேறு அதிகாரங்களை மாநிலங்கட்குத் தந்துவிட்டுத் தேசிய நலனுக்கான சில குறிப்பிட்ட அதிகாரங்களை மட்டும் தன்னகத்தே இருத்தி வைத்துக் கொள்ளும்.

ஒப்பந்தத்தால் உருவான கூட்டாட்சியில், உறுப்பு நாடுகளிலிருந்து (மாநிலங்கள்), சில பொது அதிகாரங்களை மத்திய அரசு பெறுகின்றது. ஆனால் ஒற்றையாட்சியிலிருந்து பிறக்கும் கூட்டாட்சியில் தேசிய நலன்களுக்கான சில அதிகாரங்களைத் தவிர மற்ற அதிகாரங்களை யெல்லாம் மத்திய அரசிலிருந்து மாநிலங்கள் பெற்றுக் கொள்கின்றன.

**மேற்சொன்ன இரண்டு வகைகளில் எந்த வகையில் ஒரு கூட்டாட்சி நாடு உருவானாலும், கூட்டாட்சிக் கொள்கையின் அடிப்படைத் தத்துவமான மாநில சுயாட்சி மாறுவதில்லை.**

கனடா நாடு ஆங்கிலப் பேரரசின் கீழ் அடிமைப்பட்டிருந்த காலத்தில் ஒற்றையாட்சி நாடாகத்தான் இயங்கியது. அஃதாவது, ஒரே மத்திய சர்க்கார்தான் அதனை ஆண்டு வந்தது. ஆனால் அந்நாடு விடுதலை யடைந்த போது தனித் தனி மொழி, பண்பாடுகளை அடிப்படையாகக் கொண்ட பல மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டு, அவை ஒன்று சேர்ந்து ஒரு புதிய கூட்டாட்சியைத் தனது அரசியல் சட்டத்தின் மூலமாக அமைத்துக் கொண்டன. ஒற்றையாட்சிமுறை நாடாக இருந்து கூட்டாட்சி நாடாக மலர்ந்ததற்கு, கனடா நாடு ஒரு சிறந்த சான்று.

1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டம் (Government of India Act-1935) இந்தியத் துணைக் கண்டத்தை முதன் முதலாக ஓர் கூட்டாட்சி நாடாக உருவாக்க முனைந்தது. இந்திய நாட்டிற்கு விடுதலையைத் தந்துவிட முடிவு செய்த இங்கிலாந்து நாட்டின் தொழிற்கட்சி அரசு, இந்திய நாட்டிலிருந்த பல மாகாணங்களையும் 526 சுதேச மன்னர்களின் சமஸ்தானங்களையும் மாநிலத் தன்னாட்சி கொண்ட தனி உறுப்புக்களாக்கி (மாநிலங்கள்), அவற்றை யெல்லாம் இந்திய மத்திய அரசின் அதிகார வட்டத்தினுள் இணைத்து — இந்தியத் துணைக்கண்டத்தை—ஓர் கூட்டாட்சி நாடாக உருவாக்க முன் வந்தது.

அகில இந்தியக் காங்கிரஸ் கட்சியினரின் ''டொமினியன் தகுதி கூடாது'' என்ற பிடிவாதக் கொள்கையினால் 1934-ஆம் ஆண்டிலேயே கிடைக்க வேண்டிய இந்திய விடுதலை மேலும் பதிமூன்று ஆண்டுகட்குத் தள்ளிப் போடப்பட்டு விட்டது.

சுதேச சமஸ்தான மன்னர்கள் தங்கள் தனி ஆட்சிக்கு ஊறுநேரும் எனக் கருதி, 1935–ஆம் ஆண்டின் அரசுச் சட்டத்தால். ஏற்பாடு செய்யப்பட்ட மத்தியக் கூட்டாட்சியில் சேர முன் வரவில்லை. எனவே, அச்சட்டத்தின் மத்திய அரசுப் பகுதி செயலுக்கு வரவில்லை.

மாநிலத் தன்னாட்சியின் சட்டப் பகுதி மட்டும்தான் அமுல் படுத்தப் பட்டது. ஆங்கில அரசு இயன்றவரை கூட்டாட்சிப் பண்புகளைக் கொண்டதும் கட்டுப்படுத்தும் மாநிலத் தன்னாட்சியைக் கொண்டதுமான சிறந்த ஓர் அரசியல் சட்டத்தை நமக்களித்தது. அந்தக் காலகட்டத்தில் இந்திய நாடு ஓர் அடிமை நாடாக இருந்தாலும் கூட இந்திய மாகாணங்கள் கட்டுப் படுத்தப்பட்ட தன்னாட்சியைப் பெற்றுத் தனி மாநில அரசுகளோடு இயங்கத் தொடங்கின.

இன்றைய நம் அரசியல் சட்டம், 1935–ஆம் ஆண்டின் அரசுச் சட்டத்தின் மறுபதிப்பே. எனவே, 1937–ஆம் ஆண்டிலிருந்த இந்திய மாகாணங்கள் பெற்றிருந்த அதே தன்னாட்சியைத்தான் சுதந்திர நாட்டின் அரசியற் சட்டமும் மாநிலங்களுக்கு வழங்கியுள்ளது. ஆக, ஒற்றையாட்சி கொண்ட இந்திய நாடு 1937–ஆம் ஆண்டிலிருந்தே கூட்டாட்சி நாடாக மாறி விட்டது.

### கூட்டாட்சிக் கொள்கை

20-ஆம் நூற்றாண்டின் இணையற்ற அரசியல் வித்தகரான பேராசிரியர். கே. சி. வியர்(K.C.WHEARE)அவர்கள், கூட்டாட்சிக் கொள்கையின் இலக்கணத்தைக் கூறும் போது,

> "பொது அரசாங்கமும், பிராந்திய அரசுகளும், ஒவ்வொன்றும் ஒரு குறிப்பிட்ட அதிகார வட்டத்திற்குள் சுதந்திரமாகவும் சம தகுதியோடும் இயங்கத் தக்க வகையில் அரசினுடைய அதிகாரங்களைப் பங்கீடு செய்து கொள்ளும் முறையினையே, கூட்டாட்சிக் கொள்கையென நான் பொருள் கொள்கிறேன்."2

என்கிறார்.

---

2. Prof. K. C. Wheare, "Federal Government" (1971) Page 10.

" By the Federal Principle, I mean the method of dividing powers; so that the General and Regional Governments are each, within a sphere, co-ordinate and independent."

அவர் மட்டுமல்ல; பல அரசமைப்பு விற்பன்னர்களுங் கூட இதனைத் தான் கூறுகின்றனர்.

### கூட்டாட்சி அரசு

அரசியல் வல்லுனர் சர். ராபர்ட் கேரன் (Sir. ROBERT GARRAN) அவர்கள் கூட்டாட்சி அரசின் இலக்கணத்தைக் கூறும்போது,

" மத்திய அரசிற்கும், மாநில அரசுகளுக்கு மிடையே அரசாங்கத்தின் இறைமையை அல்லது அரசியல் அதிகாரங் களைப் பிரித்துக் கொண்டு அவை யொவ்வொன்றும், ஒன்றை மற்றது சார்ந்திருக்காமல் அதனதனுடைய சொந்த அதிகார வட்டத்திற்குள் சுதந்திரமாக இயங்கக் கூடிய முறையைக் கொண்ட அரசாங்கமே கூட்டாட்சி அரசாகும்."[3]

என எடுத்தியம்புகிறார்.

"A Federal Government is a form of Government in which, soveriegnty or political power is divided between the Central and the Local Governments. So that each of them within its own sphere is independent of the other."

### கூட்டாட்சி நாடு

இந்திய அரசமைப்பு வல்லுனரான, திரு. பி. எம். சர்மா கூட்டாட்சி நாட்டின் தன்மையைப் பற்றி விளக்கும் போது,

" வெளிப்புறமாய் ஒன்றை யொன்று தொட்டுக் கொண்டும் உட்புறமாய் ஒன்றை யொன்று தொடாததுமான சிறு வட்டங் களைப் போல மாநிலங்களும், அந்த வட்டங்களை யெல்லாம் (வெளிப்புறத்தே) வளைத்துக் கொள்கின்ற ஒரு பெரு வட்டத் தைப் போல மத்திய அரசும் ஒரு கூட்டாட்சி நாட்டில் இருக்கும்."[4]

---

3 Sir. Robert Garran's short definition, Quoted in the " Report of the Royal Commission on the Australian Constitution " [ 1929 ] Page 230.

4 Prof. B. M. Sharma, "Federal Polity" [1967] Page 15.

"We can say that in a Federation, the States are like circles touching each other externally and not internally; the circle of the Central Government surrounding them all."

**பி. எம். சர்மா அவர்களின்**
**கூட்டாட்சி நாட்டின் விளக்கம்**




1, 2, 3, மாநில அரசுகள்.

படத்தில் காட்டப்பட்ட சிறு சிறு வட்டங்கள் தான் மாநிலங்கள். அந்த வட்டங்கள் ஒன்றை யொன்று தொட்டுக் கொண்டிருக்கின்றன. ஆனல், அவை உட்புறமாய் ஒன்றை மற்ருென்று தொட்டுக் கொண்டிருக்க வில்லை ; வெளிப்புறத்தில் மட்டும் தான் தொட்டுக் கொண்டிருக்கின்றன. அதைபோல், கூட்டாட்சி நாட்டிலுள்ள மாநிலங்கள், ஒரு மாநிலத்துடன் இன்ஞெரு மாநிலம் தொடர்பு கொண்டதாயிருக்கும். ஆனல் (படத்திலுள்ள சிறு வட்டங்கள் ஒன்றை யொன்று உட்புறமாய்த் தொடாமலிருப்பதைப் போல்) ஒன்றினுடைய அதிகார எல்லைக்குள் இன்ஞெரு மாநிலம் பிரவேசிக்காது.

இந்தச் சிறு வட்டங்களை யெல்லாம் ஒரே ஒரு பெருவட்டம் வளைத்துக் கொண்டுள்ளது. ஆனல் அந்தப் பெருவட்டம், உள்வட்டங்களைத் தொடுவதே இல்லை. அதைப்போல ஒரு கூட்டாட்சி நாட்டின் மத்திய அரசு பெரிய வட்டம். அது மாநிலங்களை யெல்லாம் வளைத்துக் கொண்டு அரண்படுத்து

கிறது. ஆனல், (படத்திலுள்ள பெருவட்டம், சிறு வட்டங்களைத் தொடாதது போல) மத்திய அரசும், மாநிலங்களின் உரிமைகளிலும் அதிகாரங்களிலும் தலையிடாமல் தனித்தே இயங்கும். அதனுள் இருக்கும் மாநில அரசுகளும் தனித் தனியே இயங்கும்.

எனவே, கூட்டாட்சி நாட்டில் மாநில அரசுகளும், மத்திய அரசும் தனித் தனியாகவும் செயல்படுகின்றன; அதே நேரத்தில் ஒருங்கேயும் செயல்படுகின்றன. ஆகவே மாநிலங்களின் இணைப்பே மத்திய அரசு. மாநிலங்களின் இணைப்புக்காக மத்திய அரசேயன்றி, மத்திய அரசின் ஆளுகைக்கும் அடக்குமுறைக்கும் மாநில அரசுகள் உருவானவை யல்ல.

## கூட்டாட்சியும் பிரிவினையும்

கூட்டாட்சிக் கொள்கை நடைமுறைக்கொவ்வாத வெறும் தத்துவமல்ல. அரசியலமைப்பின் பரிணம வளர்ச்சியினுடைய முதிர்ந்த நிலையே கூட்டாட்சிக் கொள்கையாகும்.

பல சிறு நாடுகளின் தனித்த பண்பிற்கும் தனித்தன்மைகளுக்கும், தனி இனங்களின் மொழி, பண்பாட்டிற்கும் எவ்வகையிலும் இடையூறு ஏற்படா வண்ணம் அதே நேரத்தில், அந்நாடுகளின் பொருளாதார உயர்விற்கும் பாதுகாப்பிற்கும் அரசியல் தகுதிக்கும் வலிவுக்கும் ஆதாரமாக அமையும் முறையிலும் ஒரு கூட்டாட்சி நாடு உருவாகிறது.

சரித்திரம், நிலநூல் காரணங்கள், சூழ்நிலைகள், நாடுகளின் அரசியல் நிலை, அவை கண்ட சிக்கல்கள், நல்ல தலைமை, ஒற்றுமையடைய வேண்டுமென்ற உணர்வு, இவை யாவும் பல நாடுகளை இணைத்து ஒரு கூட்டாட்சி நாடாக ஆக்குவதற்குத் தூண்டக் கூடிய காரணங்களாகும்.

கூட்டாட்சி நாட்டை உருவாக்க வேண்டுமென்ற பேரவாவிஞல் உந்தப்பட்டும், பொது வலிவினையும் பொது நலனையும் பொதுப் பாதுகாப்பையும் பெற வேண்டுமென்ற நோக்கத்தின் பாற்பட்டும், தனி இறைமை கொண்ட பல தனி நாடுகள், ஒரு கூட்டாட்சி நாடாக மாறியதேயல்லாமல், அவை தனித்தனி

நாடாகப் பிரிந்து போகும் உணர்ச்சிகளுக்கு ஆட்பட்டிருப்பின் கூட்டாட்சி நாடே உருவாகி யிருக்காது. எனவே, பிரிவினைக் கொள்கை என்பது கூட்டாட்சி முறைக்கு முரணானதாகும்.

ஆனால், ஒரு கூட்டாட்சி நாடு உண்மையான கூட்டாட்சிக் கொள்கையைச் செயற்படுத்தா விட்டால், அந்தக் கூட்டாட்சி நாட்டில் மாநிலங்களுக்குரிய பல நன்மைகள் கிடைக்காமல் போய் விடும். மாநிலங்களிடையே பொருளாதார ஏற்றத் தாழ்வுகளும், மாநில அரசுகளில் மத்திய அரசின் ஊடுருவல்களும், மாநில மக்களின் மொழி, பண்பாடுகளுக் கெதிராகச் செயல்படும் மத்திய அரசின் ஒற்றை ஆட்சிப் போக்கும், அக் கூட்டாட்சி நாட்டிலிருந்து மாநிலங்களைப் பிரிந்து போகச் செய்து விடும்.

## வலிவான மத்திய அரசுக்கு வலிவான மாநிலங்கள்

கூட்டாட்சி முறையினைக் கொண்ட நாடுகளுக்குத் தேசிய ஒற்றுமை எந்த அளவிற்கு வேண்டப்படுகிறதோ, அந் நாட்டின் மாநிலங்களின் சுயாட்சியும் அந்த அளவிற்கு இன்றி யமையாததாகும். தேசிய ஒற்றுமையின்றேல் கூட்டாட்சி நாடில்லை. அதைப்போலவே மாநில சுயாட்சி யின்றேல், கூட்டாட்சி முறை அரசுமில்லை; அக் கூட்டாட்சி நாடும் நிலைத்து நிற்காது. காலப் போக்கில் கூட்டாட்சி நாட்டின் மாநிலங்களும் பிரிந்து போகும். எனவே கூட்டாட்சிக் கொள் கையின் முழுப் பயனையும் பெறுவதற்காக, ஒரு கூட்டாட்சி அரசு உருவாக வேண்டுமெனில், அக் கூட்டாட்சி நாட்டின் மாநில சுயாட்சிக்குக் குந்தகம் ஏற்படாத வகையிலும், தேசிய ஒற்றுமைக்கு ஊறு ஏற்படாத வகையிலும், ஓர் அரசமைப்புச் சட்டம் இயற்றப்பட்டிருக்க வேண்டும். மேலும் மாநிலங்களின் சுயாட்சியினைக் குறுக்கும் வகையிலோ, கட்டுப்படுத்தும் வகை யிலோ, அடக்கியாளும் தன்மையுடனோ, அந்தக் கூட்டாட்சி அரசின் மத்திய அரசு செயல்படக் கூடாது. ஒருக்கால் மாநிலங்களின் சுயாட்சியில் தலையிடும் அளவிற்குச் சில அத்து மீறிய உரிமைகளை அரசியலமைப்புச் சட்ட விளக்கத்தின் மூலமாக மத்திய அரசு பெற்று விட்டால், அது செயல்படும் போது மாநில சுயாட்சி உரிமைகளில் தலையிடாத வகையில் செயல்பட வேண்டும்.

எனவே, மாநில சுயாட்சியோடு இயங்கும் உண்மையான கூட்டாட்சி அரசிற்கு இரண்டு அடிப்படையான ஆதாரங்கள் தேவை. வலிவான மத்திய அரசும் வேண்டும்; அதைப்போலவே தன்னுட்சி யிழக்காத வலிவான மாநிலங்களும் வேண்டும்.

இவையிரண்டில் எது குறைந்தாலும் கூட்டாட்சி நாடு, காலப் போக்கில் சின்னு பின்னமாகி விடும்.



# 4. மாநில சுயாட்சி

"மேல் அதிகாரங்கள் அனைத்தும் டில்லியில் இருப்பதை மாற்றிடத்தான் மாநில சுயாட்சித் தத்துவம் பிறந்திருக்கிறது. மாநில சுயாட்சி என்பது தேவையின் அடிப்படையில் எழுந்த அரசியல் கோரிக்கையே தவிர அரசியல் கட்சிக் கோரிக்கை அல்ல."1

— பேரறிஞர் அண்ணா.

மாநில சுயாட்சி......!

விவாதத்திற்குரிய ஒரு சொல்; எனவே அதனை வேரிலிருந்து ஆய்வது பொறுத்த முடையதாக இருக்கும்.

இந்திய அரசமைப்புச் சட்டத்தை வகுத்த காலத்தில் இந்தியா ஒரு கூட்டாட்சி அமைப்புக் கொண்ட நாடுதான் என்பதை மற்றவர் நெஞ்சத்தில் ஏற்றுவதற்காக ஆங்கில ஆதிக்கத்திலிருந்த போது ஒற்றை ஆட்சி நாட்டின் பகுதி போல் இயங்கிவந்த 'மாகாணம்' (Province) என்ற நிலப் பகுதியை — கூட்டாட்சி நாட்டின் ஓர் அங்கம் என்ற பொருள் படக்கூடிய வகையில் "மாநிலம்" (State) என்று மாற்றினர். இந்தியாவையும் "மாநிலங்களைக் கொண்ட ஒன்றியம்" Union of States (கூட்டாட்சி) என அழைத்தனர்.

நமது அரசமைப்புச் சட்டத்தின் முதல் விதியின் முதல் வரி,

"இந்தியா அதாவது பாரதம் — மாநிலங்களைக் கொண்ட ஓர் ஒன்றியமாய் இருக்கும்." 2

"India that is Bharath shall be a Union of States"

---

1 21—7—1968-ஆம் நாளில் சென்னையில் நடைபெற்ற "மாநில சுயாட்சி மாநாட்டில்" பேசிய கருத்துரையின் ஒரு பகுதி.
ஆதாரம்: 21—7—1968 "முரசொலி"

2 Article 1. Constitution of India.

இந்திய அரசமைப்பில் ''கூட்டாட்சி''(Federation) என்ற சொல் பயன்படுத்தப்படா விடினும், ஒன்றியம் (Union) என்ற சொல்லால் இந்தியா ஒரு கூட்டாட்சி நாடு தான் என்பது தெளிவாக்கப்பட்டுள்ளது.

## மாகாணங்கள் எப்போது மாநிலங்களாயின?

" State Autonomy " (ஸ்டேட் அட்டானமி) என்ற தொடரில் "State" (ஸ்டேட்) என்ற ஆங்கிலச் சொல்லுக்கு 'நாடு' அல்லது 'மாநிலம்' என்ற இரு பொருள் உண்டு.

" State " (ஸ்டேட்) என்ற ஆங்கிலச் சொல் ஒரு நாட்டையும் சுட்டுகிறது; ஒரு மாநிலத்தையும் சுட்டுகிறது.

பிற நாட்டு அரசமைப்பு வரலாறுகளில் தனித்தனியான பல நாடுகள், ஒரு கூட்டாட்சி யமைப்பினுள் இணைந்த போது அந்த உறுப்பு நாடுகளுக் கிருந்த 'நாடுகள்' என்ற பெயர் மாறி 'மாநிலங்கள்' என்ற பெயர் ஏற்பட்டன. அமெரிக்காவில் பதின்மூன்று காலனி நாடுகள், முதன் முதலாகக் கூட்டாட்சி அமைப்பினுள் இணைந்தபோது, அதற்கு ''United States of America'' (யுனைடெட் ஸ்டேட்ஸ் ஆப் அமெரிக்கா) என்ற பெயர் ஏற்பட்டது.

ஆனால், இந்திய அரசியல் வரலாற்றை நாம் ஆழ்ந்து படித்தால், இந்தியாவின் பல நாடுகள் ஒன்றாக இணைக்கப்படவு மில்லை; பல உறுப்பு நாடுகள் இணைந்து இந்தியக் கூட்டாட்சி யாக மாறவுமில்லை என்பது தெரிய வரும்.

இந்தியாவிலிருந்த பல தனி நாடுகள் ஆங்கிலேயரின் கைப் பிடிக்குள் அடங்கி விட்டன. இந்தியாவின் பல பகுதிகளும், தத்தம் சுதந்திரத்தை இழந்து விட்டன. ஆங்கில ஏகாதிபத்தியம் இந்தியா முழுமைக்குமாக ஒரே மத்திய அரசால் ஆளப் படும் ஒற்றை ஆட்சியை (Unitary Government) உருவாக்கிற்று. ஆங்கிலப் பேரரசு ஒற்றை ஆட்சி முறையினை இந்தியாவில் கைக் கொண்ட போது மொழி, இன, பண்பாட்டு அடிப்படையில் இந்தியாவை மாகாணங்களாகப் பிரிக்கவில்லை. மாறாக நிர்வாக வசதியையே அடிப்படையாக வைத்து, முழு இந்தியாவையும் சென்னை, பம்பாய், கல்கத்தா என்ற மூன்றே மூன்று தலை மாகாணங்களாகப் (Presidencies) பிரித்திருந்தது.

பல்லாண்டுகள் கழித்து, வசதிக்கும் தேவைக்கும் ஏற்ற முறையில் அந்த மூன்று தலை மாகாணங்களும் அவ்வப்போது பல மாகாணங்களாக ( Provinces )ப் பிரிக்கப்பட்டன. நாட்டுப் பிரிவினையில் 5 மாகாணங்களைப் பாகிஸ்தான் பெற்றுக்கொண்டது. வெள்ளையன் வெளியேறியவுடன் இந்தியாவில் எஞ்சியிருந்த அதே ஒன்பது மாகாணங்களுக்கு நமது அரசமைப்புச் சட்டத்தில் ‘மாநிலங்கள்’ (States) எனப் பெயர் சூட்டப்பட்டன.

இப்படிக் கூட்டாட்சி நாட்டின் இலக்கணத்திற்கொவ்வாத பல பழைய மாகாணங்கள் அரசியல் சட்டத்தின் தயவில் திடீரென்று மாநிலங்களாகி விட்டன. ‘மாகாணங்களிலிருந்து’ ‘மாநிலங்கள்’ என்ற இந்தப் பெயர் மாற்றம், ஆட்சி மாற்றத்தின் ஒரு கால கட்டத்தைத் தான் காட்டிற்றே யன்றி, இந்திய மாகாணங்களின் பழைய அரசியல் தன்மையை மாற்றிவிட வில்லை. அரசியல் ரீதியாக இந்திய மாநிலங்களை (States) யும் சுதேச சமஸ்தானங்களையும் இணைத்து உண்மையான இந்தியக் கூட்டாட்சி உருவாகவுமில்லை. ஆனால் ஏற்கனவே ஒற்றையாட்சி முறையினைப் பெரும்பாலும் கொண்டிருந்த இந்தியா, ஓர் அரை குறைக் கூட்டாட்சியாக (Quasi Federation) அரசமைப்புச் சட்டத்தால் மாற்றப்பட்டது.

அண்மைக்காலம் வரையும் இந்திய மாநிலங்கள், மொழி, இன வாரியாக மக்களின் தனிக் கலாச்சார அடிப்படையில் பிரிக்கப்படாமலேயே இருந்து வந்தன. 1947-ஆம் ஆண்டு ஆகஸ்ட்டு 15-ஆம் நாளில், இந்தியத் துணைக்கண்டம் சுதந்திரம் அடைந்தபோது அதில் 9 மாகாணங்களும் ஏறத்தாழ 520-க்கும் மேற்பட்ட சுதேச சமஸ்தானங்களும் அடங்கியிருந்தன. சுதேச சமஸ்தானங்களை யெல்லாம் இந்திய மாகாணப் பகுதிகளோடு இணைத்து, 1952-ஆம் ஆண்டில் இந்தியாவின் முதல் பொதுத் தேர்தல் நடந்த போது அதில் A-B-C என்ற அதிகாரங்களின் தகுதி வாரியாகப் பிரிக்கப்பட்ட 28 மாநிலங்கள் இருந்தன. 1956-ஆம் ஆண்டில் மாநிலச் சீரமைப்புக் குழு கொடுத்த அறிக்கையை அனுசரித்துமொத்தம் 14 மாநிலங்களாக இந்தியா பிரிக்கப்பட்டது. 1972-ஆம் ஆண்டின் இறுதியிலிருந்து 21 மாநிலங்களும் (States) மத்திய அரசின் நேரடி ஆட்சிக்குட்பட்ட 9 பகுதிகளும் (Union Territories) இந்திய வரை படத்தை அலங்கரிக்கின்றன. ஆக, ஆதியில் இருந்த 3 தலை மாகாணங்கள் (Presidencies) பின்னர் மாகாணங்களாகி (Provinces), இந்திய

அரசமைப்புச் சட்டம் அமுலுக்கு வந்த 26—1—1950-இல் பல மாநிலங்களாகி, அவை பின்னர் 1952-இல் எண்ணிக்கையிலும் தரத்திலும் உயர்ந்து, 1956-இல் மீண்டும் எண்ணிக்கையில் சுருங்கி, 1973-இல் 21 மாநிலங்களாகவும், 9 மத்திய அரசின் ஆட்சிப் பகுதிகளாவும் மாறியுள்ளன.

தமிழ்நாடும் கூட, 1953-ஆம் ஆண்டுவரை வேற்றுமொழிப் பகுதிகளையும் தன்னோடு இணைத்துக்கொண்ட ''சென்னை மாகாணமாகத்தான்'' இருந்தது. அதே போல் இந்தியாவின் மற்ற பழைய மாகாணங்களும் மொழிவாரி மாநிலங்களாக, பல காலகட்டங்களில் மாற்றியமைக்கப்பட்டன. ஆகவே இந்திய 'மாகாணங்கள்' கூட்டாட்சி நாட்டுக்கேற்ற வகையில் அரசியல் ரீதியாக எப்போது இந்திய 'மாநிலங்களாக' உண்மையில் மாறின என்பது இன்றுமே ஒரு புரியாத புதிராகும்.

டாக்டர் ஐவர் ஜென்னிங்ஸ் அவர்கள் கூறுவதாவது,

''மாகாணங்கள் — மாநிலங்களாக எப்போது ஆகத் தொடங்கிற்று என்பதைச் சொல்ல முடியாது.'' 3

''It was not possible to start afresh when provinces became States.''

## State (ஸ்டேட்) = கூட்டாட்சி நாட்டிலுள்ள மாநிலம்

விடுதலை பெற்ற பின் பல்லாண்டுகள் கழித்து—இன்றைய நிலையில் — இந்தியாவிலுள்ள மாநிலங்கள் ஒரு கூட்டாட்சி நாட்டினுடைய மாநிலங்களின் இலக்கணத்தை ஓரளவிற்குப் பெற்றிருக்கின்றன. மேலும் தற்போதிருக்கும் அரசியலமைப்புச் சட்டம் இந்தியாவை 'மாநிலங்களைக் கொண்ட ஒன்றியம்' (Union of states) எனக் கூறி இந்தியாவை ஒரு கூட்டாட்சி நாடுதான் எனப்பொருள் கொள்ள வைப்பதாலும், தற்போதைய மாநிலங்களை இந்தியக் கூட்டாட்சியின் அங்கங்களான மாநிலங்களென்றே (States) நாம் கூறலாம்.

---

3 ''Some characteristics of Indian Constitution'' by *Dr.* Ivar Jennings. Page 56

எனவே, இந்தியாவைப் பொருத்தவரை'State Autonomy' (ஸ்டேட் அடானமி) என்ற தொடரிலுள்ள 'State' (ஸ்டேட்) என்ற சொல்லிற்கு, '**கூட்டாட்சி நாட்டிலுள்ள ஒரு மாநிலம்**' என்று பொருள் கொள்வதுதான் பொருத்தமான தாகும்.

மாநிலத்திற்குத் தேவையான 'தன்னாட்சி' பற்றி நாம் ஆய்வு செய்வதால், 'State' (ஸ்டேட்) என்ற ஆங்கிலச் சொல் குறிப்பிடும் இன்னொரு பொருளான, "நாடு"என்ற அர்த்தத்தில் "State Autonomy" (ஸ்டேட் அட்டானமி) என்ற சொல்லுக்கு '**ஒரு நாட்டினுடைய தன்னாட்சி**' என நாம் பொருள் கொள்ளவில்லை.

## Autonomy (அடானமி)—அகராதி அர்த்தங்கள்

State Autonomy (ஸ்டேட் அடானமி) என்ற தொடரில், "Autonomy" (அடானமி) என்பது அடுத்த சொல்.

இது ஒரு சட்டச் சொல் அல்ல. அதாவது இச் சொல்லுக்கு வியாக்கியானம் கூறப்பட்டுள்ளதே யன்றி, சட்டப் பூர்வமான இலக்கணம் இது வரை தரப்படவில்லை.

"Autonomy" (அடானமி) என்றால் பொதுவாக, "**தன்னாட்சி**" (Self - Government) என்று பொருள்.

20-ஆம் நூற்றாண்டின் சேம்பர்ஸ் அகராதியில் (Chamber's Twentieth Century Dictionary), "Autonomy" என்ற பதத்திற்கு "The power or right of self Government, especially partial self Govt." என்ற பொருள் சொல்லப்பட்டுள்ளது.

அதாவது "**தன்னரசின் அதிகாரம்**", "**தன்னரசின் உரிமை**", "**குறிப்பாக அரை குறைத் தன்னரசு**" என்று அதில் பொருள் கூறப்பட்டுள்ளது.

தமிழகச் சட்டத்துறை ஆட்சி மொழி ஆணைக்குழுவால் இயற்றப்பட்ட, **சட்டச்சொல் அகராதியில்**,

"Autonomy" = "The state of Independence, especially the political Independence of a Nation or a State."
என்றே கூறப்பட்டுள்ளது.

''Autonomy'' 'தன்னாட்சி'என்று தமிழிலும் அதற்குப்பொருள் கூறப்பட்டுள்ளது. ''சுதந்திர நிலை, குறிப்பாக ஒரு நாட்டின் அரசியல் சுதந்திரம் அல்லது ஒரு மாநிலத்தின் ஆட்சிச் சுதந்திரம்" என அதற்குத் தமிழில் விளக்கமும் தரப்பட்டுள்ளது.

எனவே, "Autonomy" (அடானமி) என்ற சொல்லுக்குப் பொதுவாக, 'தன்னரசு' அல்லது 'தன்னாட்சி' என நாம் பொருள் கொள்ளலாம்.

## மாநில சுயாட்சியின் (State Autonomy) பொருள்

State = கூட்டாட்சி நாட்டிலுள்ள மாநிலம்;
Autonomy = தன்னரசு அல்லது தன்னாட்சி. எனவே, ''State Autonomy'' (ஸ்டேட் அடானமி) என்ற தொடருக்கு ''ஒரு கூட்டாட்சி நாட்டிலுள்ள மாநிலத்தில் தன்னாட்சி'' என்று பொருள்படுகிறது.

ஆனால் இந்த அத்தியாயத்தின் தலைப்பில் 'மாநில சுயாட்சி' எனப் பொறிக்கப்பட்டுள்ளது.

''சுயாட்சி'' எனில் சுதந்திரத்தையும் குறிக்கிறதே?

ஆகவே ''மாநில சுயாட்சி'' என்றால் ''மாநிலத்தின் சுதந்திர ஆட்சி''யென ஏன் பொருள் கொள்ளக்கூடாது?

சொற்களிலிருந்து தத்துவம் பிறப்பதில்லை. தத்துவம் பிறந்த பின் அதனை விளக்கிக் காட்டவே சொற்களைத் தேடுகிறோம்; கூடிய வரை சரியான சொற்களைப் பயன் படுத்து கிறோம். எனவே தத்துவம்தான் மூலமே தவிரச் சொற்கள் அல்ல.

மேலே குறிப்பிடப்பட்டுள்ள அகராதிகளின் சில அர்த்தங்கள் கூட, ''State Autonomy''க்கு (''மாநில சுயாட்சி" அல்லது '' மாநிலத் தன்னாட்சி'') என்பதற்கு முழு இலக்கணமாக அமைந்து விடுவதில்லை. அவை பொதுவான விளக்கத்தை மட்டுமே கொடுக்கின்றன,

'State-Autonomy' அல்லது 'மாநிலத் தன்னாட்சி' என்ற சொற்றொடருக்கு, சட்ட ரீதியாகவும் அரசியல் ரீதியாகவும் உள்ள இலக்கணத்தை (Definition) வெறும் அகராதி அர்த்தங்களை வைத்து மட்டுமே நாம் வகுத்துவிட முடியாது. ஆழமாகப் போய் உண்மைப் பொருளை உய்த்துணர வேண்டும்.

சுயம் + ஆட்சி = சுயாட்சி.

'சுயம்' என்ற வடமொழிச் சொல்லுக்கு, "தானாக", "தனித்து", "சொந்தமான", "சுதந்திரமான" என்பன போன்ற பல பொருள்கள் வழக்காற்றில் இருந்து வருகின்றன.

'சுயாட்சி' என்ற சொல்லுக்கு வழக்காற்றிலுள்ள அர்த்தங்களின் அடிப்படையில் நாம் பொருள் கொண்டால், "தானாக இயங்கும் ஆட்சி", "தனித்து இயங்கும் ஆட்சி", "சொந்தமான ஆட்சி", "சுதந்திரமான ஆட்சி" என்று கூடப் பொருள் கொள்ளலாம்.

அதேமாதிரி, "Autonomy" (அடானமி) என்ற ஆங்கிலச் சொல்லுக்கு ஒப்பாகக் கொடுத்திருக்கும் "Self Government" (செல்ப் கவர்ன்மெண்டு) என்பதற்கும் "தான் ஆளும் அரசு" "தன்னுடைய அரசு", "தானே இயங்கும் அரசு", 'தனி அரசு' என்று கூட இடத்திற்கேற்றபடி நாம் வலிந்து பொருள் கொள்ள முடியும்.

ஆகவே "சுயாட்சி" யென்றால் வேறு; "சுதந்திரம்" என்றால் வேறு; சுயாட்சியென்றால் தன்னாட்சியைக் குறிக்கிறது; சுதந்திரமென்றால் தனியாட்சியைக் குறிக்கின்றது என்றெல்லாம் வகை பிரித்து வலிந்து பொருள் கொள்வதில் பயனில்லை. அதனுடைய மூலத்தத்துவத்தையே நாம் ஆழ்ந்து பார்த்தல் வேண்டும்.

"State Autonomy" (ஸ்டேட் அடானமி), "மாநில சுயாட்சி" "மாநிலத் தன்னாட்சி", ஆகிய இந்த மூன்று சொற்றொடர்களிலும், "Autonomy", "சுயாட்சி", "தன்னாட்சி" ஆகிய பெயர்ச் சொற்களுக்கு முன்னால் "State" அல்லது "மாநில" என்ற அரசியல் ரீதியான பெயரடைகள் (Adjective) உள்ளன,

அந்தப் பெயரடையான "மாநில" என்ற சொல் குறிக்கக் கூடிய அரசியல் ரீதியான பொருளுடன் சேர்த்தே, "சுயாட்சி" அல்லது "தன்னாட்சி" என்ற சொற்றொடர்களுக்கு நாம் உண்மையான பொருள்களைக் காண வேண்டும். "மாநிலம்" என்ற சொல் அரசியல் ரீதியாக, "கூட்டாட்சி நாட்டிலுள்ள ஒரு மாநிலம்" என்ற விரிவான பொருளைக் கொடுக்கிறது என்பதைத் தெளிவு படுத்தினோம்.

எனவே "மாநில" என்ற பெயரடைச் சொல்லுடன் "சுயாட்சி" என்ற பெயர்ச் சொல்லையும் சேர்த்து; "மாநில சுயாட்சி" என்ற சொற்றொடருக்கு 'கூட்டாட்சி நாட்டிலுள்ள மாநிலத்தின் சுய ஆட்சி' அல்லது "கூட்டாட்சி நாட்டிலுள்ள மாநிலத்தின் சுதந்திர ஆட்சி" என்ற அரசியல் ரீதியான பொருள் கிடைக்கும்.

கூட்டாட்சி நாட்டிலுள்ள ஒரு மாநிலத்தின் சுயாட்சி யென்றாலும் கூட்டாட்சி நாட்டிலுள்ள மாநிலத்தின் சுதந்திரம் என்றாலும் ஒரே பொருள் தான். அவை இரண்டுமே ஒன்று தான். அவை இரண்டின் தத்துவப் பொருளும் அரசியல் அடிப்படையும் மூலக் கூறுகளும் வெவ்வேறானவை யல்ல. எப்படி?

பல தனி நாடுகள் சேர்ந்து தங்கள் சுதந்திரத்தைச் சற்று விட்டுக் கொடுத்து, பொதுவானதொரு மத்திய அமைப்பை உருவாக்கி—அதில் இணைந்து—நடாத்தக் கூடிய அரசு முறையைக் கொண்ட நாட்டையே "கூட்டாட்சி நாடு" (Federation) என்கிறோம். எனவே கூட்டாட்சி நாட்டினுடைய உறுப்புக்கள் (Units) தனி நாடுகள் அல்ல; அவை மாநிலங்கள் (States).

அந்த உறுப்புக்கள் கனடாவில் மாகாணங்கள் எனவும் சுவிட்சர்லாந்தில் காண்டன்கள் என்றும் பெயரைக் கொண்டுள்ளன. அவை எந்தப் பெயரை ஏற்றிருந்தாலும் கூட்டாட்சி நாட்டின் மாநிலங்கள் என்றுதான் அவைகளுக்குப் பொருள். அவைகளை இணைக்கும் மத்திய அரசிற்குத் தங்கள் சுதந்திரத்தின் ஒரு பகுதியை விட்டுக் கொடுத்து விடுகின்றன. ஆக, கூட்டாட்சியின் மாநிலங்கள் என்றாலே தனி இறைமை கொண்ட—சர்வ சுதந்திரமும் கொண்ட—தனி நாடுகள் அல்ல என்பது புலனாகிறதல்லவா?

எனவே ''மாநில சுயாட்சி'' யென்ருல் கூட்டாட்சிக் கொள்கையை ( Federalism ) ஏற்றுக் கொண்ட ஒரு கூட்டாட்சி அரசிலுள்ள (Federal Government) உறுப்புக்களின் தன்னுட்சி அல்லது '' மாநிலங்களின் தன்னுட்சி '' ( தனி ஆட்சி யல்ல ) என்ற தெளிவான ஒரே பொருள் தான் கிடைக்கிறது.

**கூட்டாட்சி அரசமைப்பின் (Federal Constitution) மூலப் பொருள் எது ?**

மத்திய அரசிற்குள்ள அதிகாரங்களையும் மாநில அரசிற்குள்ள அதிகாரங்களையும் தனித்தனியாக வரையறுக்கப் பட்ட அதிகார வட்டத்தினுள் நின்று, மத்திய அரசும் மாநில அரசுகளும் ஒன்றை மற்றென்று அண்டிக்கிடக்காமல் தனித் தனியாகவும் சுதந்திரமாகவும் இயங்கி வர வேண்டு மென்பதே கூட்டாட்சி நாட்டின் அரசியல் கோட்பாடாகும். இதனைச் சென்ற அத்தியாயத்தில் தெளிவுபட ஆய்வு செய்துள்ளோம்.

ஒரு கூட்டாட்சி நாட்டின் மத்திய அரசும் மாநில அரசுகளும், வரையறுக்கப்பட்ட தங்களது அதிகார எல்லைகளுக்குள் அப்படித் தனித்தனியாகவும் சுயமாகவும் இயங்கா விட்டால்— அது கூட்டாட்சி நாடுமல்ல; அந்த அரசு கூட்டாட்சி அரசுமல்ல.

எனவே, ''சுயாட்சியா ?'' ''சுதந்திரமா?'' என்ற சொற்சிலம்பத்திலும் அதன் வியாக்கியானங்களிலும் மாநில சுயாட்சியின் மூலப் பொருள் இல்லை. ''மாநில சுயாட்சி'' என்ருலும் ''மாநிலத் தன்னுட்சி'' என்ருலும், ஒரு கூட்டாட்சி நாட்டமைப்புக்குள், தனக்கென அளிக்கப்பட்ட அதிகார வட்டத்திற்குள் மாநிலங்கள் மத்தியத் தலையீடின்றி, சுதந்திரமாக — சுயமாக — தாளுகச் செலுத்தக் கூடிய ஆட்சியையே கூட்டாட்சி அரசமைப்பு (Federal Constitution) குறிக்கிறது.

இதை வேறு வகையிலும் நாம் விளக்கலாம்.

சுயாட்சி — தன்னுட்சி என்ற சொற்களுக்கு முன்னிருக்கும் '' மாநிலம் '' என்ற சொல்தான் மாநில சுயாட்சி என்ற சொற்றெடரின் உண்மையான இலக்கணத்தை (Definition), தத்துவத்தை விளக்கிக் காட்டுகிறது என்பதைப் பார்த்

தோம். ''மாநில சுயாட்சி'' என்ற சொற்றொடரில் இருக்கும் ''மாநிலம்'' என்ற சொல், கூட்டாட்சி நாட்டையே நம்முன் உருவகப்படுத்திக் காட்டுகிறது.

இதனை எதிர் மறையாகக் கூற வேண்டுமெனில், ஒரு நாட்டில் உண்மையான கூட்டாட்சிக் கொள்கை அமுல் படுத்தப்படாவிடில், அக் கொள்கை வலியுறுத்தும் இலக்கணத்தைக் கொண்ட அரசியல் ரீதியான உறுப்புக்கு ( Unit ) ''மாநிலம்'' என்ற தகுதி இல்லாமல் போய்விடும். அஃதாவது, ஒரு நாடு உண்மையான கூட்டாட்சி நாடாக இல்லாவிடில், ''மாநிலம்'' என்ற சொல்லுக்குக் கூட்டாட்சிக் கொள்கையின் மெய்யான பொருளில்லாமல் போய் விடுகிறது. "சுயாட்சி" என்ற சொல் மட்டுமே உண்மையில் எஞ்சி நிற்கும். அப்போது ''மாநில சுயாட்சிக் கோரிக்கை'' என்றால் வெறும் "சுயாட்சிக் கோரிக்கையாக" ஆகிவிடும்.

எனவே, ''மாநில சுயாட்சி'' என்ற சொற்றொடர், உண்மைக் கூட்டாட்சி நாட்டிலுள்ள மாநிலத்தின் தன்னாட்சியையே அறுதியிட்டு உறுதியாகக் கூறுகிறது.

**மத்திய அரசின் தலையீடென்றால் என்ன ?**

மாநில அரசிற்கென்று வரையறை செய்யப்பட்ட அதிகாரங்களிலும் உரிமைகளிலும் எந்தவொரு அமைப்பாவது (அது மத்திய அரசாகவுமிருக்கலாம் அல்லது மத்திய அரசு சார்ந்த மற்ற நிறுவனங்களாகவும் இருக்கலாம்) செய்யக் கூடிய குறுக்கீடுகளையும் கட்டுப்பாடுகளையும் பொதுவாக ''வெளித் தலையீடு'' (Central interference) எனக் கொள்ளலாம்.

மத்திய அரசின் அந்தத் தலையீடு நேரடியானதாகவும் இருக்கலாம்; மறைமுகமானதாகவும் இருக்கலாம். எனவே, மாநில அரசின் வரையறுக்கப்பட்ட அதிகாரங்களிலும் உரிமைகளிலும், மத்திய அரசோ அல்லது அதன் வேறு பல நிறுவனங்களோ, நேரடியாகவோ அன்றி மறைமுகமாகவோ தலையிட்டு மாநிலங்களின் உரிமைகளையும் அதிகாரங்களையும் நெருக்கிச் சுருக்கிக் கட்டுப்பாடு செய்யாத மாநில சுயாட்சியைத்தான் உண்மையான ஒரு கூட்டாட்சி அரசமைப்பு (Federal Constitution) உருவாக்குகிறது.

போர்க் காலங்களிலும் நெருக்கடிக் காலங்களிலும் தேசத்தின் ஒட்டு மொத்தமான நலன் கருதி, மத்திய அரசு அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சில மாநில உரிமைகளைத் தற்காலிகமாகக் கையகப் படுத்திக் கொள்வது எந்தவொரு கூட்டாட்சியிலும் தவிர்க்க இயலாததாகும். அந்தக் குறிப்பிட்ட அரசியற் சூழ்நிலை தீர்ந்த பிறகு, தற்காலிகமாக மத்திய அரசால் கைக் கொள்ளப்பட்ட மாநில அதிகாரங்களும் உரிமைகளும் மீண்டும் மாநிலங்களிடமே திரும்பி வந்து விடும்.

ஆனால், எல்லாவற்றையுமே மத்திய மயமாக்கக் கூடிய பண்பையும் பெரும்பாலான ஒற்றை ஆட்சிக் கூறுகளைக் கொண்டதுமான நமது மத்திய அரசை உண்மைக் கூட்டாட்சி அரசாக, பல அரசியல் வல்லுநர்கள் ஏற்றுக் கொள்வதில்லை; இந்தியாவையும் ஓர் உண்மைக்கூட்டாட்சி நாடாக ஏற்பதில்லை. மாறாக அதை ஓர் அரை குறைக் கூட்டாட்சி (Quasi Federation) என்றே பல அரசியல் வல்லுநர்களும் கருதுகின்றனர்.

எனவே, ''மலர்க மாநில சுயாட்சி'' என்றால் ''மத்திய அரசின் தலையீடில்லாத உண்மையான கூட்டாட்சி முறை, இந்திய நாட்டில் மலரட்டும்'' என்று தான் பொருள்.

## அகில இந்திய ஒற்றுமை — மாநில சுயாட்சியின் அடித்தளம்

மாநில சுயாட்சி என்பது மாநிலத்தின் தனியாட்சியுமல்ல; மாநிலத்தின் பிரிவினையுமல்ல; இந்திய அரசமைப்புச் சட்டத் திற்குட்பட்ட மாநிலங்களின் தன்னாட்சி; உண்மைக் கூட்டாட்சி.

ஆக, மாநில சுயாட்சி என்றாலே ''மத்தியிலே உண்மைக் கூட்டாட்சி'' என்பது தானாகவே பெறப்படும்.

மாநிலத் தன்னாட்சி உரிமையைக் கோருவது என்றால், அகில இந்திய மட்டத்தில் தூய்மையான கூட்டாட்சிக் கொள்கை யோடு இயங்கக் கூடிய "தேசிய அரசை" (மத்திய அரசை)க் கோருவது என்றும் பொருள். கூட்டாட்சி நாட்டினுடைய சிதைவுறா ஒற்றுமை தான் நமது மாநில சுயாட்சிக் கொள் கையின் — கோரிக்கையின் — முழக்கத்தின்—அடிப்படை அம்சம்.

ஏனெனில், ''அகில இந்திய ஒற்றுமை" என்ற உறுதியான அடித்தளத்தின் மேல் தான் முழுமையான மாநில சுயாட்சியை யும் உண்மையான கூட்டாட்சியையும் எழுப்ப முடியும்.

## கூட்டாட்சிக் கொள்கையின் மூலக் கூறே மாநில சுயாட்சியின் தத்துவ விளக்கம்

கூட்டாட்சிக் கொள்கையின் ஒரு சிறப்புக் கூறான மாநில சுயாட்சியை, ஒரு தனி அரசியல் கொள்கை என்று சொல் வதைக் காட்டிலும் கூட்டாட்சித் தத்துவத்திற்குள் அடங்கிய ஒரு துணைக் கோட்பாடாக ( Corollary ) நாம் எடுத்துக் கொள்ளலாம்.

**அரசமைப்புச் சட்டத்தின் வரையறைக்குட்பட்டு, இந்தியாவின் ஒற்றுமையை உள்ளடக்கிய உண்மையான ஒரு கூட்டாட்சி அமைப்பினுள், மத்தியத் தலையீடும் கட்டுப்பாடுகளும் இல்லாமல், இந்திய மாநிலங்கள் தன்னாட்சியுடன் இயங்குவதற்குத் தேவையான உரிமைகளையும். அதிகாரங்களையும் பெறுவதற்காக வகுத்துக் கொண்ட கொள்கையே, மாநில சுயாட்சிக் கொள்கை.**

மேற்சொன்ன துணைக் கோட்பாடு மாநில சுயாட்சியின் விளக்கமே தவிர, மாநில சுயாட்சியின் இலக்கண மல்ல.

"மாநில சுயாட்சி" என்பது உண்மைக் கூட்டாட்சிக் கொள்கையின் ஒரு முக்கியக் கூறு என்ற தெளிவைப் பெறுவதற்காகவும், சுயாட்சியா? பிரிவினையா? என்பதின் வேறுபாடுகளை அரசியல் ரீதியில் பிரித்துக் காட்டுவதற் காகவும், ''மலர்க மாநில சுயாட்சி'' என்றால் ''உண்மைக் கூட்டாட்சியே மலர்க'' என்பதே பொருள் என்பதனை எடுத்துக் காட்டுவதற்காகவும், மாநில சுயாட்சிக்கு மேற் சொன்ன விளக்கம் தரப்பட்டுள்ளது.

### மாநில சுயாட்சியின் உயிர்க் கூறுகள்

1. மாநிலங்கள் தன்னாட்சி உரிமைகளையும் அதிகாரங்களையும் பெறவேண்டும்.

2. அந்த அதிகாரங்களும் உரிமைகளும், மாநிலங்கள் தன்னுட்சியுடன் இயங்குவதற்குத் தேவையான அளவினதாக இருக்க வேண்டும்.

3. அந்த உரிமைகளிலும் அதிகாரங்களிலும், மத்தியத் தலை யீடும் கட்டுப் பாடுகளும் (அதாவது மத்திய அரசினுடைய தலையீடோ அல்லது மத்திய அரசைச் சார்ந்த வேறு நிறுவனங்களின் குறுக்கீடுகளோ அல்லது இன்னபிற அமைப்புக்களின் தலையீடுகளோ) இருத்தல் கூடாது.

4. தன்னுட்சியுடன் இயங்கும் மாநிலங்கள், உண்மையான ஒரு கூட்டாட்சி அமைப்பினுள் இருக்கும்.

5. அந்த உண்மையான கூட்டாட்சி அமைப்பு, இந்தியாவின் ஒற்றுமையை உள்ளடக்கிக் கொண்டிருக்கும்.

6. தன்னுட்சியுடன் இயங்கும் மாநிலங்கள் அரசமைப்புச் சட்டத்தின் வரையறைக்குட் பட்டதாக இருக்கும்.

இதுதான் உண்மைக் கூட்டாட்சிக் கொள்கை - முழுமையான மாநில சுயாட்சிக் கோட்பாடும் ஆகும்.

### "மாநிலத்தில் சுயாட்சி - மத்தியிலே கூட்டாட்சி"

இன்றைய நமது அரசமைப்புச் சட்டம், உண்மையான கூட்டாட்சி அமைப்பைக் கொண்டிருக்க வில்லை. அரசமைப்பு வல்லுநர் வியர் (K. C. Wheare) அவர்கள், இந்தியக் கூட்டாட்சி முறையை ஓர் 'அரை குறைக் கூட்டாட்சி' (Quasi Federation) என்றே குறிப்பிடுகிருர். அதனை ஒற்றை யாட்சித் தன்மைகளைக் கொண்ட — கூட்டாட்சி அமைப்பின் சாயலை மட்டும் பெற்ற— ஓர் அமைப்பெனவே (Federal with Unitary Bias) துறைபோகிய பல அரசமைப்பு வல்லுனர்களும், தர்க்க ரீதியான ஆதாரங்களைக் காட்டி மெய்ப்பிக்கின்றனர். அஃதாவது இந்தியா உண்மையான ஒரு கூட்டாட்சி யல்ல; கூட்டாட்சியின் நிழல் போன்றது என அதனை விளிக்கின்றனர். இந்நூலின் பல பகுதிகளிலும்—குறிப்பாக மூன்ரும் பகுதியில்— இந்தியக் கூட்டாட்சி, பெயரளவிலுள்ள ஒரு கூட்டாட்சி நாடு

என்பதையும் இந்திய அரசமைப்புச் சட்டம் நமது மத்திய அரசை ஒற்றையாட்சிப் பண்போடு உருவாக்கி வைத்து, மாநிலங்களை அடிமைப்படுத்தி யுள்ளது என்பதனையும் ஆதார பூர்வமான சான்றுகளைக் காட்டி விளக்க முற்பட்டுள்ளோம்.

அதுமட்டுமன்றி, இந்திய அரசு சென்ற 24 ஆண்டுகளில், நமது அரசமைப்புச் சட்டத்தை அமுல் படுத்திய போது, முற்ற முழுக்க ஓர் ஒற்றையாட்சி அரசாகவே செயல்பட்டு வருகிறதென்பதை யாரும் மறுக்க முடியாது. இந்நூலின் நான்காம் பகுதியில் இது பற்றி ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

ஆகவே இந்திய அரசமைப்புச் சட்டமும் பெரும்பாலான ஒற்றையாட்சித் தன்மைகளை ஏற்படுத்தியுள்ளது. அதன் மூலம் உண்மையான கூட்டாட்சி அமைப்பை இந்திய நாடு பெற வில்லை; மாநிலங்களும் உண்மையான மாநில சுயாட்சியைப் பெற வில்லை. அவை கட்டுப்படுத்தப்பட்ட— சுருக்கப்பட்ட— சுயாட்சியை மட்டும் பெற்றிருக்கின்றன. மத்திய அரசின் கடந்த கால ஒற்றையாட்சி நடவடிக்கைகளால் மாநிலங்களுக் களிக்கப்பட்ட ஓரளவு சுயாட்சியும் சிதைக்கப்பட்டு விட்டது.

இந்நிலையில்தான் இந்திய நாட்டில் உண்மையான கூட்டாட்சி அமைய வேண்டும் என்ற கொள்கையின் அடிப் படையில் ''மாநில சுயாட்சி'' முழக்கம் எழுந்துள்ளது. அந்தத் தூய்மையான மாநில சுயாட்சிக் கோரிக்கையை அரசியல் சட்டம், வரலாறு, பொருளாதாரக் காரணங்களுக்கு மாருக, பிரிவினை வாதமெனத் திரிபு படுத்திச் சொல்லவும் பலர் துணிந் துள்ளனர். இதனைத் தெளிவு படுத்துவதற்காகவே டாக்டர். கலைஞர். மு கருணாநிதி அவர்கள்,

> ''அதிகாரங்கள் வேண்டும் என்பது எங்களுக்கல்ல; மாநிலத்திற்குக் கேட்கிறோம். அது புரிய வேண்டும் என்ப தற்காகத்தான் மாநில சுயாட்சி என்று சொல்கிறோம். அது மேலும் தெளிவாகப் புரிய வேண்டும் என்பதற்காகத்தான் "இந்தியாவிலே உள்ள எல்லா மாநிலங்களுக்கும் சுயாட்சி" என்கிறோம் அது அழுத்தந்திருத்தமாகப் புரிய வேண்டும் என்பதற்காகத்தான் ''மத்தியிலே கூட்டாட்சி'' என்று சொல்லுகின்றோம். ''மத்தியிலே கூட்டாட்சி—மாநிலத்திலே

சுயாட்சி'' என்று கூறுகிற நேரத்தில், அங்குப் பிரிவினைக்கு எள்ளளவும் இடம் இல்லை என்பது மிகத் தெளிவாகத் தெரிகிறது.''4 எனக் கூறுகிறார்.

## எது மாநில சுயாட்சி?

நாம் முழக்கும் மாநில சுயாட்சி எது?
அது அரசமைப்புச் சட்டத்திற்குட்பட்ட மாநில சுயாட்சி;
இந்திய ஒற்றுமையைப் பேணும் மாநில சுயாட்சி;
மத்திய அரசின் கட்டுப்பாடும் தலையீடும் இல்லாத மாநில சுயாட்சி;
உண்மையான கூட்டாட்சி அமைப்பினுள் இயங்கும் மாநில சுயாட்சி;
தன்னாட்சி உரிமைகளை, அதிகாரங்களைக்கொண்ட மாநில சுயாட்சி.

இவ்வகை மாநில சுயாட்சியினைத்தமிழகம் மட்டுமல்ல, இந்தியாவின் எல்லா மாநிலங்களும் பெறுவதற்குத் தான் திராவிட முன்னேற்றக் கழகம் போராடுகிறது. இந்திய நாட்டினின்று வெட்டிக் கொண்டு பிரிந்து போவதற்குத் தமிழகம் உள்ளிட்ட எந்த மாநிலமும் விரும்ப வில்லை; அது அவசியமுமில்லை.

இந்தப்பகுதியின் ''அண்ணாவின் உயில்'' என்ற அத்தியாயத்தில் எடுத்துக் காட்டப்பட்ட பேரறிஞர் அண்ணா அவர்களின் மேற்கோளும் இதனைத் தான் சுட்டிக் காட்டுகின்றது. இங்கே அதனை மீண்டும் நினைவு கூர்வோம்.

> ''......மாநிலங்கள் சுங்கத் தொகையை வசூலிக்கக் கூடிய சாதாரண நகராட்சி மன்றங்களைப் போல விரைந்து மாறி வருகின்றன. அவை, இருக்குமிடம் தெரியாமல் பின்னணிக்குத் தள்ளப்பட்டுள்ளன. அதிக அதிகாரங்கள் தரப்பட வேண்டுமென்ற இயற்கை உணர்வுகள் மாநிலங்களிடம் தோன்றியுள்ளன... நமது அரசியல் சட்டம் மறுபரிசீலனை செய்யப்பட வேண்டும்; மறு ஆய்வும் செய்யப்பட வேண்டும்... மாநிலங்களின் இந்தச்சிக்கலை ஏன் மூடி மறைக்கின்றீர்கள்... (தற்போதைய) கூட்டாட்சியை ஒரு மெய்யான கூட்டாட்சியாக மலர வைப்பதற்கு வழி வகை செய்தீடுவீர்."

---

4 *தமிழக முதல்வர், தமிழகச் சட்டப் பேரவையில் மாநில சுயாட்சித் தீர்மானத்தின் மேல் நடந்த விவாதத்திற்கு 20-4-1974-ஆம் நாளில் பதிலளித்த பேருரையின் ஒரு பகுதி. ஆதாரம்: 16-5-1974, ''தமிழரசு'' மாநில சுயாட்சி இணைப்பு. பக்கம் 16.*

# 5. சில கூட்டாட்சி நாடுகள்

"அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அமைப்பு முறையே விரிவான கூட்டாட்சி ஆகும்......மத்திய அரசிற்கு இன்னின்ன அதிகாரங்கள் என்று குறிப்பிட்டு வழங்கி விட்டு மீதியுள்ள அதிகாரங்கள் அனைத்தையும் மாநிலங் களுக்கே விட்டுக் கொடுக்கப்பட்டிருக்கின்றன......"

"சுவிட்சர்லாந்து அரசியல் சட்டத்தில் அந்த நாடு—கூட்டாட்சிக்குச் சிறிது மாறுபட்ட இணைப்புக் கூட் டாட்சி (Confederation) என்ற வார்த்தையால் அழைக் கப்படுகிறது. ஆனால் உண்மையில் அது கூட்டாட்சி தான்".

"சோவியத் கூட்டாட்சி என்பது சம அதிகாரமுள்ள மாநிலங்களின் ஒன்றியம்; மக்கள் தொகை, தொழில்கள், கலை, கலாச்சாரத்தில் அவை மாறு பட்டிருந்தாலும் அரசு, அரசியல், பொருளாதார வாழ் வில் அம்மாநிலங்கள் சம உரிமை பெற்றுள்ளன......"

"உலகம் தரும் பாடத்தையும், பண்டித நேரு தரும் எச்சரிக்கையையும் கவனத்தில் கொண்டு, நமது அரசியல் சட்டத்தைத் திருத்திட முயல்வது சாலச் சிறந்த ஒன்றாகும். அவ்விதம் திருத்தி மாநில சுயாட்சி காண்பதுதான் இந்தியாவின் நலனுக்கு ஏற்றது; வாழ்விற்கு ஏற்றது; புகழுக்கு ஏற்றது என்பது உறுதி." 1

— *தமிழக அமைச்சர்* S. J. சாதிக்பாட்சா.

கூட்டாட்சி மற்றும் மாநில சுயாட்சி ஆகியவைகளின் மூலக் கூறுகளைப்பற்றிச் சென்ற அத்தியாயங்களில் பரிசீலித் தோம். உலகின் பல நாடுகள் கூட்டாட்சி முறையில் இயங்கு கின்றன. ஆனால் உண்மைக் கூட்டாட்சித் தத்துவத்திற்கும் முழு மாநில சுயாட்சிக்கும் அமெரிக்க ஐக்கிய நாடுகள்,

---

1 "மாநில சுயாட்சி ஏன்?" (1974) *பக்கங்கள்* 91, 92, 94, 97, 100.

சுவிட்சர்லாந்து, ஆஸ்திரேலியா, கனடா, ரஷ்யா ஆகிய நாடுகள் மட்டுமே நல்ல எடுத்துக் காட்டுகளாகத் திகழ்கின்றன. எனவே மேற்சொன்ன ஐந்து நாடுகளின் அரசமைப்புகளும், அரசு நடவடிக்கைகளுமே அரசியல் விற்பன்னர்களால் கூட்டாட்சித் தத்துவ விளக்கத்திற்கு முன்னுதாரணமாகக் கையாளப்படுகின்றன.

கூட்டாட்சி மற்றும் மாநில சுயாட்சியின் விளக்கத்தை ஓரளவிற்குப் புரிந்து கொள்வதற்காகக் கூட்டாட்சிக் கொள்கையை உலகுக்கீந்த அமெரிக்க ஐக்கிய நாடுகளில் கூட்டாட்சி முறை தோன்றி வளர்ந்த வரலாற்றுக் குறிப்புகளையும், ரஷ்யா, கனடா மற்றும் சுவிட்சர்லாந்து நாடுகளின் அரசியல் குறிப்புக்களையும் பண்டைய வரலாற்றில் நிலைபெற்றிருந்த சில கூட்டாட்சி நகர அரசுகள் பற்றிய குறிப்புக்களையும் இவண் சுருக்கமாய்த் தந்துள்ளோம்.

## பண்டைய நகர அரசுகளின் கூட்டமைப்பு

பண்டைக் காலத்தில் உலக நாடுகள் பலவற்றிலும் முடியாட்சி முறையே சிறப்புற்று விளங்கிற்று. ஆனால் அதற்குச் சில விதிவிலக்குகளும் இருந்தன. அங்கொன்றும், இங்கொன்றுமாகக் கூட்டாட்சி முறையைக் கைக்கொண்ட சில குடியரசு நாடுகளும் இருந்து வந்தன. ஆனால், அவை இன்றைய உலகில் காணப்படும் வளர்ச்சி பெற்ற கூட்டாட்சிக் கொள்கை முறையை அன்று பெற்றிருக்கவில்லை. சில சின்னஞ் சிறு நாடுகள் சேர்ந்து, தளர்ச்சியான ஒரு கூட்டமைப்பை (Confederation) மட்டுமே அக்காலத்தின் கூட்டாட்சி முறையாக ஏற்றுக் கொண்டிருந்தன.

அரசமைப்பு வல்லுநரான ஜேம்ஸ் பிரைசு (JAMES BRYCE) அவர்கள், பண்டைய கூட்டாட்சி நாடுகளைப் பற்றி விளக்கும் போது,

> "கிறித்து பிறப்பதற்கு 400 ஆண்டுகட்கு முன், லிசியா (Lycia) நாட்டினுடைய நகர அரசுகள் இணைந்து உருவாக்கிய கூட்டமைப்பு மிகப் பழைமையான கூட்டாட்சியாகும்,

கூட்டாட்சி அரசாங்கங்கள் மிகப் பழைமை யானவையா யினும்,படை வலிவினைக் காட்டும் பெருமைக்காக சில சிறிய குடியரசுகள் சேர்ந்த ஒரு சங்கம் (Society) என்ற அளவிற்கு மட்டுமே அவை இணைந்தன. அவ்வகைக் கூட்டாட்சிகள் தான் அப்போது இருந்து வந்தன.''2

என்கிருர்.

''கிரேக்க நாட்டில் பல பழமையான கூட்டாட்சிகள் இருந்து வந்தன. ''தெசாலி'' (Thessally), ''போசியா'' (Boetia), ''அக்ரமேனியா'' (Acramania), ''ஒலிந்தஸ்'' (Olynthus), ''அர்காடியா'' (Arcadia), ''அடாலியா'' (Aetolia), ''அச்சியா'' (Achaea) ஆகியவை சிறப்பான கூட்டாட்சி களாக இருந்தன. இவைகளின் அமைப்பு முறையில் முழுமை யான கூட்டாட்சியாக ''அட்டோலியன் கழகமும்'' (Aetolian League), ''அச்சியாவின் கழகமும்'' (Achaean League) சீரோடும் சிறப்போடும் இயங்கி வந்தன.''3

ஏறத்தாழ 2,500 ஆண்டுகட்கு முன் கிரேக்க நாட்டில் பல நகர அரசுகள் (City States) இருந்து வந்தன. அந்நகர அரசுகளின் பொது நிர்வாகத்திற்கும் சட்ட ஆக்கத்திற்கும் தேவையான அதிகாரங்களைப் பெற்ற பிரதிநிதிகளை நகர மக்கள் வாக்களித்துத் தேர்ந்தெடுத்தனர். நேரடியான குடியாட்சி முறை அமுலில் இருந்து வந்தது.

இந்நகர அரசுகள், அதன் எல்லைகளுக்குள் முழுச் சுதந்திரத்தைப் பெற்றிருந்தன. ஆனல் சில நேரங்களில் ஏற்பட்ட வெளிநாட்டுப் படையெடுப்பிலிருந்து தற்காப்பு செய்து கொள்வதற்காகப் பல நகர அரசுகள் ஒன்றோடொன்று இணைந்து கொள்ளலாயிற்று. பொதுவாக நகர அரசுகளை இணைப்பதற்குப் பொதுப் பழக்க வழக்கங்களும் பொதுவான ஒரு மொழியும், மதமும் காரணமாயின.

---

2 Mr. James Bryce, "Constitutions" Page 271

3 "Encyclopaedia Britannica", 13th Edition, Vol. I Page 234

ஆனுல் கிரேக்கத்தின் பல நகர அரசுகள், தத்தம் வரலாற்றில் பொற்காலத்தைப் படைத்துக் கொண்டிருந்த போது, முழுமையான சுதந்திரத்தோடு விளங்க வேண்டும் என்ற ஆவலினுல் ஒன்ருக இணைய வில்லை. அந்நகர அரசுகளின் முழுச் சுதந்திரத்திற்கும் ஆபத்து ஏற்பட்டபோது மட்டுமே தேவையினுல் உந்தப்பட்டு, சில வகைப் பிணைப்புக்களை அவை தமக்குள் உண்டாக்கிக் கொண்டன. இந்த இணைப்புத் தொடர்ந்து இருக்கவில்லை. எனவே வெளிநாட்டுப் படையெடுப்புகள் நீங்கிய போது, அவைகளிடையே ஏற்பட்ட இணைப்பு மீண்டும் மறைந்து போயிற்று. இவ்வகையில், குடியாட்சி வகையைச் சார்ந்த அன்றைய பல நகர அரசுகள் தேவையான போது மட்டும் தங்கள் சுதந்திரத்திற்கு இடையூறு இல்லாமல், ஒன்ருேடொன்று இணைந்து ஒரு நேசக்கூட்டை (Confederation) ஏற்படுத்திக் கொண்ட முறையே பழைய கூட்டாட்சி முறை எனப்படுகிறது

## அமெரிக்க ஐக்கிய நாடுகள்
## கூட்டாட்சிக் கொள்கையின் பிறப்பிடம்

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தேசியக் கொடியில் 50 விண்மீன்கள் பொறிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். அமெரிக்கக் கூட்டாட்சியில் இணைந்து நிற்கும் 50 தனி நாடுகளையே (மாநிலங்களையே) அந்த நட்சத்திரங்கள் சுட்டிக் காட்டுகின்றன. அமெரிக்கக் கொடியில் முதலில் 13 நட்சத்திரங்களே இருந்தன. அதாவது தொடக்கத்தில் 13 நாடுகள் ஒன்றுகூடி, அமெரிக்கக் கூட்டாட்சி உருவாயிற்று என்று அதற்குப் பொருள். பிறகு வேறு பல மாநிலங்கள் அவ்வப்போது இணைந்து, தற்போது 50 மாநிலங்களைக் கொண்ட ஓர் அரிய கூட்டாட்சி நாடாக அது விளங்குகிறது. புதிய உலகமான அமெரிக்காவில் தான் முதன் முதலில் இன்றைய புதிய கூட்டாட்சிக் கொள்கையும் பிறந்தது.

### நேசக் கூட்டமைப்பு (Confederation) உருவாயிற்று

ஐரோப்பாவில் பல நாடுகளிலிருந்தும் அமெரிக்காவில் குடியேறிய மக்கள் முதலில் 13 குடியேற்ற நாடுகளை இன்றைய ஐக்கிய அமெரிக்க நாட்டில் ஏற்படுத்திக் கொண்டு வாழ்ந்தனர். கி. பி. 1776-ஆம் ஆண்டு வரை, அவை ஒன்ருே

டொன்று தொடர்பு கொண்டிருக்கவில்லை; தனித்தே இயங்கின. ஆனால் அவை ஆங்கில அரசிற்கு மொத்தமாய் அடிமைப்பட்டிருந்தன.

இங்கிலாந்து நாட்டின் பொருளாதாரச் சுமையைக் குறைப்பதற்காக, குடியேற்ற நாடுகளின் மேல் வரியை விதித்து 'முத்திரைச் சட்டத்தை' (Stamp Act) பிரிட்டானிய நாடாளுமன்றம் நிறைவேற்றியது. அதுவரையும் இணைந்து செயல்படாத குடியேற்ற நாடுகள், இங்கிலாந்தின் வரிவிதிப்புச் சட்டத்தால் ஒன்ருகப் பாதிக்கப்பட்டதால் அவற்றின் பொது உரிமைகளைக் காத்துக் கொள்ளும் நோக்கத்துடன் இங்கிலாந்து நாட்டின் வரிச் சட்டத்திற்குத் தங்கள் ஒருமித்த எதிர்ப்பைத் தெரிவித்தன. ''பிரதிநிதித்துவமின்றி வரி கிடையாது'' ("No Taxation Without Representation") என்ற முழக்கத்தினடிப்படையில் குடியேற்ற நாடுகள் ஒருங்கிணைந்தன. "குடியேற்ற நாடுகளுக்கு இங்கிலாந்து நாடாளுமன்றத்தில் பிரதிநிதித்துவமில்லை; எனவே உரிமையின்றி வரி கட்டும் கடமையுமில்லை" என்று அவை வாதிட்டன.

குடியேற்ற நாடுகளின் உரிமை முழக்கத்திற்கு அடிபணிந்த ஆங்கில அரசு இறுதியில் முத்திரைச் சட்டத்தை ரத்து செய்தாலும், குடியேற்ற நாடுகளின் மேல் தனது ஆதிக்கம் உண்டென்பதற்கு அடையாளமாகத் 'தேயிலை வரியை' விதித்து வசூலிக்க முற்பட்டது. அந்த வரி மிகக்குறைந்த தொகையைத் தருவதென்ருலும், தனது உரிமைகள் பாதிக்கப்படுகிறதென்ற கொள்கையடிப்படையில் குடியேற்ற நாடுகள் அந்தச் சிறிய வரியையும் தர மறுத்து விட்டன. தகராறு முற்றியது. 1773–ஆம் ஆண்டில் போஸ்டன் நகரில் ( Boston ) ஏற்பட்ட ஒரு சாதாரண நிகழ்ச்சி பிரிட்டனுக்கும், குடியேற்ற நாடுகளுக்குமிடையே நடந்த பெரும் போருக்கு வித்திட்டது.

1776–ஆம் ஆண்டு ஜுலைத் திங்கள் 4–ஆம் நாளில் குடியேற்ற நாடுகளின் காங்கிரஸ் கூடி வரலாற்றுப் புகழ் பெற்ற, தங்கள் சுதந்திரப் பிரகடனத்தை [Declaration of Independence] வெளியிட்டன. இங்கிலாந்திற்கும் அமெரிக்கக் குடியேற்ற நாடுகளுக்கும் போர் தொடங்கியது; அது 1781–ஆம் ஆண்டு வரை நடைபெற்றது. போரில் தோல்வியுற்ற பிரிட்டானியப் பேரரசு, 1783–ஆம் ஆண்டில் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் சுதந்திரத்தையும் தனி இறைமையையும் ஏற்றுக் கொண்டது.

போர் நடைபெற்ற சில ஆண்டுகளில், அமெரிக்க அரசியலில் பல அரசமைப்பு மாற்றங்கள் (Constitutional Changes) நிகழ்ந்தன. அமெரிக்காவின் பதிமூன்று குடியேற்ற நாடுகளும் ஒன்றுக இணைந்து, 1777-ஆம் ஆண்டு நவம்பர்த் திங்களில் மொத்தம் 13 சட்டப் பிரிவுகளைக் கொண்ட "நேசக் கூட்டின் உறுப்புக்கள்" (Articles of Confederation) என்ற ஓர் அரசியல் ஒப்பந்தத்தை உருவாக்கிக் கொண்டன.

> "உறுப்பு நாடுகளின் பரஸ்பர நலனுக்காகவும் அந்நாடுகளின் சுதந்திர உரிமைகளைப் பாதுகாப்பதற்காகவும் பொதுவான படை வசதிக்காகவும், ஓர் உறுதியான நட்புக் கழகத்தை (League of Friendship) அமெரிக்க உறுப்பு நாடுகள் தங்களிடையே ஏற்படுத்திக் கொண்டன."4

அமெரிக்கக் காங்கிரஸ்

உறுப்பு நாடுகளின் பொதுக்காரியங்களை நடத்துவதற்காகக் காங்கிரஸ் (Congress) என்ற ஒரு மத்திய அமைப்பு முதன் முதலில் உருவாக்கப்பட்டது. ஒவ்வொரு உறுப்பு நாடும் குறிப்பிட்ட தங்கள் பிரதிநிதிகளையே காங்கிரஸிற்கு (மத்திய அமைப்பு) அனுப்ப வேண்டும். குடியேற்ற நாடுகளில் மத்திய அமைப்பான காங்கிரஸிற்கு வெளிநாட்டு விவகாரங்களில் ஈடுபடவும் எல்லா உறுப்பு நாடுகளின் நாணயங்கள், எடை அளவுகள் ஆகியவற்றை முறைப்படுத்தவும், கடற்படை, மற்றும் தரைப்படையின் பொறுப்புக்களை ஏற்றுக் கொள்ளவும், இரண்டு உறுப்பு நாடுகளுக் கிடையே ஏற்படும் தகராறுகளைத் தீர்த்து வைக்கவும், வணிகத்தையும் அஞ்சல் நிலையங்களை யும் ஒழுங்கு படுத்தவும், நாட்டின் பொதுச் செலவை உறுப்பு நாடுகளுக்குப் பங்கீடு செய்யவும் தனித்த உரிமைகள் வழங்கப்பட்டிருந்தன.

மத்திய அமைப்பான காங்கிரசிற்கு உறுப்பு நாடுகளால் வழங்கப்பட்ட மேற்சொன்ன அதிகாரங்கள் போக மீதி அதிகாரங்களெல்லாம் உறுப்பு நாடுகளுக்கே உரித்தானவை யாகும். உறுப்பு நாடுகளின் இறைமையையும் சுயாட்சியையும், சுதந்திர அதிகாரங்களையும் உறுப்பு நாடுகளே தங்களிடத்தில் தக்க வைத்துக் கொண்டன.

---

4 Article 3, Articles of Confederation.

இவ்வகை நேசக்கூட்டு (Confederation) ஏற்பாட்டினால் அமெரிக்கா மத்திய அரசு (காங்கிரஸ்) சில பொது அதிகாரங்களைப் பெற்றுக் கொண்டதேயல்லாமல், அரசாங்கத்தினுடைய பணிகளை நடத்துவதற்கான வரிவிதிப்பு (நிதி) அதிகாரத்தைப் பெறவில்லை. காங்கிரஸ் என்ற மத்திய அரசாங்கத்திற்கு உறுப்பு நாடுகளிலுள்ள பொது மக்கள் மேல் அதிகாரம் செலுத்தும் உரிமையும் கொடுக்கப்படவில்லை. மத்திய அரசு அமெரிக்க உறுப்பு நாடுகளின் மேல் தனது வரையறுக்கப்பட்ட அதிகாரங்களைச் செலுத்தியதே யன்றி, அமெரிக்க மக்களின் மேல் அது நேரடியாக அதிகாரம் செலுத்த முடியவில்லை.

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் முதன் முதலாக உருவான நேசக்கூட்டு அரசியல் சட்டத்தில் (Constitution of Confederation) மாநில அரசுகளுக்கு (உறுப்பு நாடுகளின் அரசுகள்) பொது அரசாங்கமான மத்திய அரசு, கீழ்ப்படிந்த தன்மையைத்தான் பெற்றிருந்தது. மாநில அரசுகளோடு மத்திய அரசு சம அந்தஸ்தில்கூட வைக்கப்பட்டிருக்க வில்லை. ஆதியில் அமெரிக்க மாநிலங்களில் தன்னாட்சியே மத்திய அரசைக் காட்டிலும் உயர்ந்தோங்கி நின்றிருந்தது என்பது இங்கு நினைவு கூறத் தக்கது.

மத்திய அரசு, மாநிலங்களைக்காட்டிலும் தாழ்ந்த நிலையைப் பெற்றிருந்ததால் அது உறுதியான ஒரு மத்திய அரசாக இயங்க முடியவில்லை. அமெரிக்கக் காங்கிரசினால் மாநிலங்களின் ஒற்றுமையையும், தேசிய அரசாங்கத்தின் பொது நலன்களையும் முறையாக வளர்க்கவும் முடியவில்லை. பலமற்ற மத்திய அரசால் வெளிநாட்டு விவகாரங்களிலும் உள்நாட்டுக் குழப்பங்களிலும் உறுதியான கொள்கையைக் கடைப்பிடிக்க முடியவில்லை. இங்கிலாந்தை எதிர்த்து நடத்திய போரைக்கூட அமெரிக்க மத்திய அரசால் முழு வலிமையுடன் நடத்த முடியவில்லை. ஆங்கிலேய நாட்டை எதிர்த்து நடந்த போருக்கு உறுப்பு நாடுகள் முழு ஒத்துழைப்பையும் தர முன் வராததால், அமெரிக்கப் படைகளின் தளபதியான வாஷிங்டன் அந்தப் போரைச் செவ்வனே நடத்த முடியவில்லை. எனவே பதவியில் இருந்து 'விலகவும்கூட ஒரு சமயம் அவர் தீர்மானித்தார்,

**கூட்டாட்சித் தத்துவம் பிறந்தது**

அமெரிக்கச் சிந்தனையாளர்களான வாசிங்டன், ஹேமில்டன் ( Hamilton ), மாடிசன் ( Maddisson ) மற்றும் பல அரசியலமைப்பு வித்தகர்கள், அமெரிக்க உறுப்பு நாடுகளை இணைக்கும் தளர்ச்சியான நேசக் கூட்டமைப்பை முற்றிலும் திருத்தி அமைக்க வேண்டும் என்று கருதினார்கள். வாசிங்டன் அவர்கள் ஒரு புதிய அரசமைப்பையே உருவாக்க வேண்டுமெனக் கருத்துத் தெரிவித்தார்.

"மாநில அரசுகளுடைய அதிகாரங்கள், மாநிலங்கள் மேல் படர்ந்திருத்தலைப்போல், 'அமெரிக்கா' என்ற முழு நாட்டிற்கும் பரவக்கூடிய அதிகாரத்தை,ஏதாவது ஒரு மத்திய மட்டத்தில் தோற்றுவிக்காவிடில், நாம் ஒரு நாடு என்ற தன்மையோடு நிலைத்திருக்க முடியாது என நான் கருதுகிறேன்." என வாஷிங்டன் அவர்கள்,மத்திய அரசிற்குப் பல தேசிய அதிகாரங்கள் தரப்பட வேண்டுமென்பதை வலியுறுத்தினர்.

1786-ஆம் ஆண்டில் மாநில வணிகங்களை ஒழுங்குமுறைப் படுத்துவதற்கான அதிகாரங்கள் மத்திய அரசிற்குத் தரப்பட வேண்டுமென்பதை ஆலோசிக்க "அன்னபோலிஸ்" (Annapolis) நகரத்தில் ஒரு கருத்தரங்கை நடத்த வேண்டுமென வர்ஜினிய மாநிலம் முதன் முதலாகக் குரல் கொடுத்தது.இந்தக் கருத்தரங்கும் நடைபெற்றது. ஆனால் அது மாநிலங்களின் வணிக ஒழுங்கு முறையைப் பற்றி எவ்வகையான பரிந்துரைகளையும் செய்யவில்லை;மாறாகக் கருத்தரங்கின் நோக்கங்கட்கும் மீறிய சில தீர்மானங்களை மட்டும் அன்னபோலிஸ் கருத்தரங்கு நிறைவேற்றி விட்டுக் கலைந்தது. அதாவது மத்திய அரசிற்கு மேலும் வலிவை ஊட்டவும் எல்லா அரசுப் பணிகளையும் நிறைவேற்றுவதற்கு ஏற்றதாகவும், அது மாற்றி அமைக்கப்பட வேண்டுமென்று அத்தீர்மானங்கள் வலியுறுத்தின.

அன்னபோலிஸில் செய்யப்பட்ட தீர்மானங்களின் அடிப்படையில் அன்றிருந்த "நேசக் கூட்டு" அரசியல் சட்டத்தை மாற்றியமைப்பதற்குரிய வழி வகைகளைக் கண்டு அறிவதற்காக, அமெரிக்காவின் எல்லா உறுப்பு நாடுகளின் பிரதிநிதிகளும் கூடி விவாதிக்கத் தக்க ஒரு கருத்தரங்கை, பிலடெல்பியாவில் ( Philedelphea ) நடத்த வேண்டுமென்று

கருதிய அமெரிக்கக் காங்கிரஸ், எல்லா மாநிலங்கட்கும் அழைப்பனுப்பியது. நேசக் கூட்டின் அரசமைப்பைத் திருத்துவதற்காகக் கூடிய பிலடெல்பியா மாநாட்டின் பிரதிநிதிகள் புதியதோர் அரசு முறையைத் தாங்கள் உருவாக்குகிறோம் என்பதைக் கூட அறியாமலேயே, மிகச் சிறந்த ஒரு புதிய கூட்டாட்சி அரசமைப்பைப் படைத்து விட்டார்கள். அகில உலகத்திற்கும் பொருந்தக் கூடியதும் சாலச் சிறந்ததுமான மாநில சுயாட்சியையும் மத்தியக் கூட்டாட்சியையும் ஒன்றாக இணைத்துப் புதியதோர் அரசு முறையை அவர்கள், 1787-ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்களில் உலகிற்கு அறிமுகமாக்கினார்கள். அந்தப் புதிய அரசு முறையே கூட்டாட்சி முறை எனப்படுகிறது. அதன் மூலக் கூறுதான் மாநில சுயாட்சி.

> **"ஐக்கிய அமெரிக்க நாடுகளின் "மக்களாகிய நாங்கள்" ஒரு சிறந்த கூட்டமைப்பை உருவாக்குவதற்காகவும் நீதியை நிலைநிறுத்தவும் உள்நாட்டு அமைதிக்கு உத்தரவாதம் அளிக்கவும் பொதுப் பாதுகாப்பிற்கு வழிவகை செய்யவும் பொது நலன்களைப் பேணவும் விடுதலையின் நல்வாழ்த்தை எங்களுக்கும் எங்களது வருங்காலச் சந்ததியினருக்கும் வழங்கிக் கொள்வதற்காகவும் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் இந்த அரசமைப்பை உருவாக்கி உறுதி யளிக்கிறோம்."**

என்ற வரலாற்றுப் புகழ் கொண்ட முன்னுரையோடு அமெரிக்கக் கூட்டாட்சி அரசமைப்புச் சட்டம் உருவாயிற்று. அது 1788-ஆம் ஆண்டு ஜுன் 21-ஆம் நாளில் இறுதியாக நிறைவேற்றப்பட்டு, 1789-ஆம் ஆண்டு மார்ச்சு 4-ஆம் நாளில் அமுலுக்கு வந்தது.

**நேசக் கூட்டமைப்பும் (Confederation)**
**கூட்டாட்சியமைப்பும் (Federation)**

1777-ஆம் ஆண்டில் உருவான நேசக்கூட்டு அரசமைப்பு, "அமெரிக்க ஐக்கிய நாடுகளின் உறுப்பு நாடுகளின் பிரதிநிதிகள் காங்கிரசில் கூடி........ நேசக் கூட்டமைப்பின் சட்ட விதிகளைச் செய்ய..." என்ற முன்னுரையோடு தொடங்கிற்று.

பின்னால் உருவாக்கப்பட்ட கூட்டாட்சி அமைப்பின் முன்னுரையில் கண்ட வாசகத்தையும் முன்னால் எழுதப்பட்ட நேசக் கூட்டமைப்பின் முன்னுரை வாசகத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தால் இவ்விரண்டிற்கும் இடையேயுள்ள மிகப் பெரிய ஓர் அடிப்படை மாற்றம் புலனாகும்,

நேசக் கூட்டமைப்பை உருவாக்கி ஏற்றுக் கொண்டவர்கள் அமெரிக்க உறுப்பு நாடுகளின் பிரதிநிதிகள். ஆனால் கூட்டாட்சி அமைப்பை உருவாக்கி ஏற்றுக் கொண்டவர்கள் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் பொதுமக்கள்.

அமெரிக்கா, பல தனி உறுப்பு நாடுகளைப் பெற்றிருந் தாலும், எல்லா உறுப்பு நாடுகளும் சேர்ந்து ஒரே நாடாக இணைந்து விட்டது என்ற உயர் தத்துவத்தை ''அமெரிக்க ஐக்கிய நாடுகளின் மக்களாகிய நாங்கள்'' என்ற முன்னுரை வாசகம் சுட்டிக் காட்டுகிறது. எனவே, உறுப்பு நாடுகளின் மக்கள், அமெரிக்காவின் மக்கள் என்றாயிற்று. அந்த மக்களே தங்களுக்கு வேண்டிய அரசமைப்புச் சட்டத்தையும் தங்கள் பிரதிநிதிகளின் மூலமாக உருவாக்கிக் கொண்டனர் என்ற சீரிய கொள்கையும் அவ்வாசகத்திலிருந்து வெளிப்படுகிறது.

கூட்டாட்சிக் கொள்கையின் வளர்ச்சியில் இது ஒரு மிக முக்கியமான கட்டம். குறிப்பிட்ட சில நோக்கங்களுக்காகவும் பொதுப் பணிக்குத் தேவையான அளவோடு மட்டும், பல தனி நாடுகள் ஓர் ஒப்பந்தத்தால் தளர்ச்சியான முறையில் இணைந்து கொள்ளும் முறை மாறி, அந்நாடுகளெல்லாம் ஒன்று சேர்ந்து கூட்டாட்சி முறையில், புதியதோர் நாடாக மாறிவிடும் தன்மையும், அந்தப் புதிய நாட்டிலுள்ள மக்கள் யாவரும் ஒரே நாட்டினுடைய மக்களென்ற பண்பையும், அந்தக் கூட்டாட்சி நாட்டினுள் இணைந்த தனி நாடுகள் யாவும் மாநிலங்களாகும் பான்மையும், இந்த வளர்ச் சிக் கட்டத்தின் சிறப்புக் கூறுகள். சுருங்கக் கூறின், மாநிலங் களுக்கு அடிபணிந்து கிடந்த மத்திய அரசு இந்த வளர்ச்சிக் கட்டத்தின் மூலமாக, மாநிலங்களுடன் சம அந்தஸ்தைப் பெற்று விடுகிறது. இந்த மிகப் பெரிய அரசியல் சித்தாந்தத் தை, பிலடெல்பியாவில் நடைபெற்ற மாநாடு உருவாக்கி உண்மையான கூட்டாட்சித் தத்துவத்தை உலகிற்கு அளித்தது.

ஒரு கூட்டாட்சி நாட்டில் மாநில அரசுகளும், அவை களை இணைப்பதற்காக ஒரு மத்திய அரசும் தனித்தனியாக ஒரே நேரத்தில் இயங்குதல் வேண்டும் என்ற கொள்கை பிலடெல்பியாவில் அமெரிக்க அரசியல் சட்டத்தில் உருவா யிற்று.

**பிலடெல்பியாவில் பிறந்த அமெரிக்கக் கூட்டாட்சி அரசமைப்பின் சில மூலக் கூறுகள் :-**

1. மாநிலங்களோடு சம தகுதியைப் பெற்றே மத்திய அரசு விளங்கும். மத்திய அரசிற்குரிய அதிகாரங்கள், பணிகள் எவையெவை என்பதை மட்டும்அரசமைப்பு அறுதியிட்டுக் கூறியது.

2. மற்றபடி, அரசாங்கத்தின் எல்லாப் பணிகளும் அதிகாரங் களும் எஞ்சிய அதிகாரங்களும் மாநிலங்களுக்கே சொந்த மானவை.

3. ஒரு நாட்டினுடைய எல்லாப் பகுதிகளுக்கும் பொருந்தக் கூடிய "நாணயமும் – நோட்டச்சடித்தலும்", "வணிகத்தின் ஒழுங்கு முறையும்", "போர்ப் பிரகடனம் செய்தலும்", "சமாதானம் செய்து கொள்ளுதலும்", "சிலவரிகளை விதித்து வசூலித்தலும்", மத்திய அரசின் அதிகார வட்டத் திற்குள் அமைக்கப்பட்டுள்ளன.

4. தனக்களிக்கப்பட்ட அதிகார எல்லைக்குள் நின்று, நாடு முழுவதற்குமான சட்டங்களைச் செய்வதற்காக மத்தியச் சட்ட மன்றம் அளிக்கப்பட்டுள்ளது.

5. மத்தியச் சட்ட மன்றத்தால் இயற்றப்பட்ட சட்டங்களை முறையாக அமுல்படுத்த ஒரு தலையான நிர்வாக அமைப் பையும் மத்திய அரசு பெற்றுள்ளது.

6. மத்திய அரசிற்கும் மாநில அரசுகளுக்கும் இடையே நடு நிலை வகிக்கக்கூடிய ஒரு நீதித்துறையும் அமைக்கப் பட்டுள்ளது.

7. அவ்வகை நீதிமன்றங்கள் அரசமைப்புச் சட்டத்தைப் போற்றிக் காக்க வல்லதாய் உள்ளன.

8. மத்திய அரசு, அமெரிக்க ஐக்கிய நாட்டின் வாக்காளப் பெருமக்களின் ஆதரவோடு இயங்குவதற்காகவும், நாட்டு மக்களுக்குத் தேவையான பல பணிகளை நேரடியாகச் செய்வதற்காகவும், அந்த நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் உள்ள வயது வந்த வாக்காளப் பெருமக்களால் மத்தியச் சட்டமன்ற உறுப்பினர்கள் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப் படுகின்றனர்.

மேற்சொன்ன வகைகளில் இயங்கக்கூடிய ஒரு கூட்டாட்சி மத்திய அரசும், மாநில அரசுகளும் சமதகுதியோடும் இணையாகவும் இருக்க வேண்டுமென்ற அடிப்படைக்கொள்கையையும் அதற்கு ஆதாரமாக மாநில சுயாட்சியையும் அமெரிக்க ஐக்கிய நாடுகள், முதன் முதலில் கண்டு பிடித்து உலகினுக்கு வழங்கிற்று. ஏறத்தாழ ஒன்றே முக்கால் நூற்ருண்டுக்கு மேல் தூய்மையான கூட்டாட்சி நாடாகப் பழுதடையாமல் இயங்கியும் வருகின்றது. எனவே, அமெரிக்க ஐக்கிய நாடுகள், ஒரு கூட்டாட்சி நாட்டிற்குரிய முன்னுதாரணமாய் இன்றும் விளங்குகிறது.

## சுவிட்சர்லாந்து

பல மொழி பேசும் மக்களையும் பல தனி நாடுகளையும் இணைத்துக் கொண்ட அமெரிக்கக் கூட்டாட்சியின் அரசு முறை மிகச் சீர்மையாக இயங்கத் தொடங்கியவுடன், அதே சூழல்களைக் கொண்ட மற்ற நாடுகளும் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் கூட்டாட்சி முறையைப் பின்பற்றத் தொடங்கின. முதன் முதலாக அதனைச் செய்த நாடு சுவிட்சர்லாந்து.

1847-ஆம் ஆண்டில், சுவிட்சர்லாந்து நாட்டின் கத்தோலிக்கக் காண்டன்கள் (Catholic Cantons) என்றழைக்கப்படுகின்ற 7 மாநிலங்கள், பிரிந்து செல்ல வேண்டுமெனப் பெருங்கிளர்ச்சி செய்தன. சவுந்தர்பண்டு ( Sounder Bund ) என்று பெயரிடப்பட்ட ஒரு தனிக் கழகத்தையும் அந்தப் பிரிவினை கோரும் மாநிலங்கள் அமைத்திருந்தன. பெரும்பான்மைப் பலத்தினைக் கொண்ட பிராடஸ்டண்டு (Protestant) மதத்தினர் அப்பிரிவினைக் கிளர்ச்சியை அடக்கினர். பிரிவினை கோரும் கத்தோலிக்க மாநிலங்கள் முறியடிக்கப்பட்ட பின்னர் சுவிட்சர்லாந்து நாட்டின் ஒற்றுமைக்கான ஒரு வழி வகையும் பிறந்தது.

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் கூட்டாட்சி அரசமைப்பை ஒத்ததோர் புதிய அரசியல் சட்டத்தை 1848-ஆம் ஆண்டில் சுவிட்சர்லாந்தின் தேசிய சபை (Swiss Diet) உருவாக்கி ஏற்றுக் கொண்டது. அதன் மூலம் உண்மையான கூட்டாட்சி முறையையும் முழுமையான மாநில சுயாட்சியினையும் சுவிட்சர்லாந்து ஏற்றுக் கொண்டது. அது சென்ற 125 ஆண்டுகளுக்கு மேலாக ஒரு சிறந்த கூட்டாட்சி நாடாகத் திகழ்ந்து வருகிறது.

மாநில சுயாட்சிக் கோரிக்கைக்கும், மொழிச்சிக்கலுக்கும், மாறுபட்ட இனச்சிக்கலுக்கும் எல்லாராலும் ஏற்றுக்கொள்ளப் படக் கூடிய ஒரு சிறந்த தீர்வு வேண்டுமெனில், சுவிட்சர் லாந்து நாட்டின் கூட்டாட்சி அரசமைப்பிலிருந்தும் அதன் அரசாங்க நடை முறையிலிருந்தும் நாம் பெற முடியும்.

சுவிட்சர்லாந்து நாடு, பத்தொன்பது முழுக் கான்டன்களை யும் (Full Cantons) (முழு மாநிலங்களையும்) ஆறு அரைக் கான்டன்களையும் (Half Cantons - அரைகுறை மாநிலங்கள்) கொண்டியங்குகின்றது. முழுக் கான்டன், சுவிட்சர்லாந்தில் மத்திய அமைப்பிற்கு இரண்டு பிரதிநிதிகளையும் அரைக் கான்டன், மத்திய அமைப்பிற்கு ஒரு பிரதிநிதியையும் முறையே அனுப்பும்.

சுவிட்சர்லாந்தின் கூட்டாட்சி அரசிற்கு [மத்திய அரசு], குறிப்பிட்ட அதிகாரங்கள் மட்டுமே ஒதுக்கப்பட்டிருக்கின்றன. மற்றவை யெல்லாம் மாநிலங்களுக்கே உரியவை. இவை தவிர மாநிலங்களுக்கும் மத்திய அரசிற்கும் சில பொதுவான அதி காரங்களும் உண்டு. அவை, பொதுப்பட்டியல் அதிகாரங்கள் எனப்படுகின்றன. இவை போக எஞ்சிய அதிகாரங்கள் (Residuary Powers) யாவும் மாநிலங்களுக்கே உரியவை. சுவிஸ் நாட்டின் அரசியல் சட்டப்படி, சுவிட்சர்லாந்தின் கான்டன்களுக்கு (மாநிலங்களுக்கு), தனி இறைமை (Sovereignty) அளிக்கப்பட்டுள்ளது. எனவே மத்திய அரசிற்குத் தரப்படாத மற்ற எல்லா அதிகாரங்களையும் பயன்படுத்தும் பேருரி மையைக் கான்டன்கள் (மாநிலங்கள்) பெற்றுள்ளன. அது மட்டு மல்ல; நீண்ட நெடு நாட்களாக நிலை நிறுத்தப்பட்ட அரசியல் சம்பிரதாயங்களின்படி மத்திய அரசிற்கு ஒதுக்கப்பட்ட சில அதிகாரங்களைக்கூட, கான்டன்களே பயன்படுத்திக் கொண்டு வருகிற உன்னதமான நிலைமையை இன்றும் நாம் சுவிட்சர் லாந்து நாட்டில் காணலாம்.

## ரஷ்யா

உலக நாடுகளில் எழுதப்பட்ட அரசியல் சட்டங்களிலேயே மிக மிக அதிக அளவு சுயாட்சியையும் சுயாதிபத்தியத்தையும் மாநிலங்கட்குத் தருவது சோவியத் ரஷ்ய நாட்டின் அரசிய லமைப்புச் சட்டம். ரஷ்ய மாநிலங்கள், குடியரசுகள் (Republics)

என்றே அழைக்கப்படுகின்றன. அந்த நாட்டின் பெயரே கூட சோவியத் சோஷலிசக் குடியரசுகளின் ஒன்றியம் (Union of Soviet Socialist Republics) என்பதாகும்.

முழு இறைமையைக் (Sovereignty) கொண்ட பதினைந்து குடியரசுகள் (15 மாநிலங்கள்) ரஷ்ய ஒன்றியத்தில் இணைந்து நிற்கின்றன. அவையாவன:

1. உக்ரேன் (Ukraine), 2. பைலோ ரஷ்யா (Byelo Russia), 3. உஸ்பெக்கிஸ்தான் (Uzbekistan), 4. காஜக்ஸ்தான் - (Kazakhstan), 5. ஜார்ஜியா (Georgia), 6. அஜர்பெய்ஜான் - (Azerbaijan), 7. லிதுவேனியா (Lithvania), 8. மோல்டோவியா (Moldovia), 9. லாத்வியா (Latvia), 10. கிர்ச்சியா - (Kirghiz), 11. தாஜிக்ஸ்தான் (Tadzhik), 12. ஆர்மீனியா - (Armenia), 13. தர்க்மெனிஸ்தான் (Turkmenstan), 14. எஸ்டோனியா (Estonia), 15. ரஷ்யக்குடியரசு - (Russia).

ரஷ்ய நாட்டில் இரட்டைக் குடியுரிமை உண்டு (Dual Citizenship). சோவியத் நாட்டில் வாழும் ஒருவன் சோவியத் நாட்டின் குடிமகனுவான். அதே நேரத்தில் அவன் வாழுகின்ற குடியரசின் (மாநிலத்தின்) குடிமகனும் ஆவான். சோவியத் நாட்டிற்குக் குடியுரிமைச் சட்டம் இருப்பது போலவே, ஒவ்வொரு மாநிலத்திற்கும் தனித்தனியான குடியுரிமைச் சட்டம் உண்டு. எல்லாக் குடியரசுகளையும் (மாநிலங்களையும்) இணைத்த சோவியத் நாட்டிற்கு ஒரு பொது அரசியல் சட்டம் இருப்பதைப் போலவே, ஒவ்வொரு குடியரசிற்கும் (மாநிலத் திற்கும்) தனித்தனியான அரசியல் சட்டம் உண்டு.

இவைகளில் 'உக்ரேனியன்' குடியரசின் அரசியல் சட்டம், பல தனி உரிமைகளைக் கொண்டுள்ளது. உக்ரேனியன் மாநிலம் தன் பொருளாதாரத் திட்டத்தைத் தானே உருவாக்கிக் கொள்கிறது. வங்கிகள், தொழில், விவசாயம் மற்றும் வாணிக நிறுவனங்களைத் தன் கட்டுப்பாட்டினுள் வைத்துக் கொண்டுள்ளது. ஆனால் வரி போடுதல், நிதிநிலை அறிக்கை (Budget) ஆகியவற்றை மட்டும் ஒன்றிய அரசின் (மத்திய அரசின்) ஒப்புதலோடு அமுல்படுத்துகிறது. நிலம், கனி வளம், பாதைகள், மக்கள் நலன், செய்தித் தொடர்பு, காடுகள்,

நீர், உள்நாட்டுப் பாதுகாப்பு, கல்வி, திருமணம், குடும்பம், நீதித்துறைச் சட்டங்கள், குற்றவியல் சட்டங்கள் இன்னோ ரன்ன பல அதிகார இனங்களையும் உக்ரேன் மாநிலம் பெற்று விளங்குகிறது. தனக்கென ஒரு "குடியரசு இராணுவத்தை யும்" (Republican Army) அம்மாநிலம் வைத்துக் கொண் டுள்ளது.

எல்லா மாநிலங்களுக்கும் சம உரிமைகளும் சம அதிகாரங் களும் உண்டு. அஃதாவது பரப்பளவு, மக்கள் தொகை, தொழில்கள், கலை மற்றும் பண்பாடு ஆகியவைகளில் மாநிலத் திற்கு மாநிலம் மாறுபாடுகள் இருந்தாலும், அரசியல் சமுதாயப் பொருளாதாரத் துறைகளில் அவை சம உரிமை கொண் டுள்ளன. ரஷ்ய நாட்டின் குடியரசுகள், வெளி நாடுகளோடு வாணிகம் மற்றும் வர்த்தக உறவுகளை ஏற்படுத்திக் கொள்ளவும் தூதுவரகத் தொடர்புகளை வைத்துக் கொள்ளவும் உரிமை பெற்றுள்ளன. தனித்தனி மாநிலக் கொடிகளையும் கொண்டுள்ளன.

உக்ரேன் குடியரசும், பைலோரஷ்யாவும் ஐக்கிய நாட்டுச் சபையில் அங்கம் வகிக்கின்றன. வெளிநாட்டு விவகாரங்களிலும் பங்கு ஏற்கின்றன. ஐக்கிய நாட்டு அமைப்பின் பல நிறுவனங் களிலும் (U.N. Institutions) ரஷ்யாவின் இவ்விரு மாநிலங்களும் தனித்தனியாகப் பங்கேற்கின்றன.

மற்ற கூட்டாட்சி நாடுகளைக் காட்டிலும் சோவியத் ரஷ்ய ஒன்றியத்திற்குத் தனிச்சிறப்பு ஒன்றுண்டு. சோவியத் நாட்டின் மாநிலங்கள் அவை விரும்பும் போது, ரஷ்ய நாட்டின் ஒன்றியத் திலிருந்து பிரிந்து விடலாம். ஒரு மாநிலத்தின் மக்கள், ரஷ்ய நாட்டிலிருந்து தனி நாடாகப் பிரிந்து செல்ல வேண்டுமெனில், ரஷ்ய நாட்டு அரசியல் சட்டப்படியும் குடியரசுகளின் (மாநிலங் களின்) அரசியல் சட்டங்களின்படியும் அதற்கு முழு உரிமை பெறுகின்றனர். ஆனால், இதுவரையும் எந்த மாநிலமும் ரஷ்ய ஒன்றியத்திலிருந்து அரசியல் சட்டத்தால் கொடுக்கப்பட்ட இந்தப் பேருரிமையைப் பயன்படுத்திப் பிரிந்துபோக விழைய வில்லை.

**இதற்கென்ன காரணம்?**

ரஷ்ய நாடு ஒரு சர்வாதிகார நாடாக இருப்பதால் அதன் மாநிலங்கள் பிரிந்து போக இயலவில்லையெனப் பல இந்திய தேசியவாதிகளால் திரித்துக் கூறப்படுகின்றது. ஆனால் அது முழு உண்மை அல்ல. பல இனங்களையும் பல மொழிகளையும் பல பண்பாடுகளையும் உள்ளடக்கிய ரஷ்ய நாடு அதன் மாநிலங்களுக்கு முழுமையான மாநில சுயாட்சி அளித்திருப்பதன் மூலம் அந்த மாநில மக்களின் தனித்தன்மைகளுக்கும் பண்பாட்டிற்கும், மொழி மற்றும் அடிப்படை உரிமைகளுக்கும் ரஷ்ய மத்திய அரசு இடையூறேதும் விளைவிப்பதில்லை. மாறாக, அவை பேணிக் காக்கப்படுகின்றன. ரஷ்ய நாட்டின் மத்திய அரசு, மாநிலங்களின் தனித்தன்மைகளை அழித்து ஒழித்தும் விடுவதில்லை. அதே நேரத்தில் ஓர் உண்மைக் கூட்டாட்சி நாட்டினுடைய எல்லா நலன்களையும் மாநிலங்கள், தங்கள் தனிப்பண்பு, மொழி, பண்பாடு ஆகியவைகளுக்குக் குந்தகம் ஏற்படாமல் மத்திய அரசிலிருந்து பெற்றுக் கொள்கின்றன.

மத்திய அரசோடும் மற்ற மாநிலங்களோடும், ஒவ்வொரு மாநிலமும் சம தகுதியையும் அரசியல், பொருளாதார, சமுதாய சமத்துவத்தையும் பெற்றுக் கொள்கின்றன. மேலும் பொருளாதார முன்னேற்றம், பாதுகாப்பு அரண் மற்றும் தேசிய நலன்கள் ஆகியவை ரஷ்யக் குடியரசுகளுக்கு மத்திய அரசால் உறுதி செய்யப்பட்டு, சரிசமமாக வழங்கப்படுகின்றன. எனவே, பிரிவினை உரிமை ரஷ்யக் குடியரசுகளுக்கு அளிக்கப்பட்டிருப்பினும் அவை, அந்த உரிமையைப் பயன் படுத்தி ரஷ்ய ஒன்றியத்தினின்றும் துண்டாக்கிக் கொண்டு, தனி நாடாகப் பிரிந்து செல்வதற்கு விழைவதில்லை.

மாநிலங்களுக்குத் தன்னாட்சி அளிப்பதால் அவை பிரிந்து போக இடம் ஏற்படும் என்ற நமது தேசியத் தலைவர்களின் சொத்தை வாதத்திற்கு, ரஷ்யக் குடியரசுகளுக்கு அளிக்கப்பட்ட சுயாட்சியும் பிரிவினை உரிமையும், அவைகளைப் பயன் படுத்திக் கொள்ளாத அம் மாநிலங்களின் தகுநிலையும், தர்க்க ரீதியான மறு மொழி பகர்கின்றன. மாநிலங்களுக்கு முழு சுயாட்சி வழங்காவிட்டால் தான், நாட்டுப் பிரிவினை தவிர்க்க இயலாது என்பதும், முழு சுயாட்சி அளிக்கப்பட்ட மாநிலங்கள்

கூட்டாட்சியினின்றும் பிரிந்து போக விழையாது என்பதும் வெறும் தத்துவங்களல்ல ; நடைமுறையில் நிரூபிக்கப்பட்ட உண்மைகள் என்பதை ரஷ்யாவும் ரஷ்ய மாநிலங்களும் கண்கூடாகக் காட்டுகின்றன.

**கனடா**

கூட்டாட்சி அரசு முறையை ஏற்றுக் கொண்டதால் சிறப்பைப் பெற்ற அடுத்த நாடு கனடா. இந்தியாவைப் போலவே கனடா நாட்டிலும் ஒற்றை யாட்சி முறை முதலில் அமுலில் இருந்து வந்தது. இங்கிலாந்து நாட்டிற்கு அது அடிமைப் பட்டிருந்தது.

ஆங்கில இனத்தைச் சார்ந்தவர்களுக்கும் பிரஞ்சு இனத்தைச் சார்ந்த தேசியக் குழுக்களுமிடையில் தீராத இனப் போராட்டங்கள் நடைபெற்றன. கனடிய நாட்டில் ஆங்கில அரசாங்கம் நடைபெற முடியாத சூழ்நிலை உருவாயிற்று. கனடா நாடு ஆங்கிலேயக் குடியேற்ற நாடாக இருந்ததால் அதன் அரசியல் சட்டம், ஆங்கில அரசால் அமுல் படுத்தப்படாமல் நிறுத்தி வைக்கப்பட்டு, லார்டு–டர்காம் (LORD DURHAM) அவர்களை ஆங்கில அரசு அனுப்பியது. இரண்டாண்டுகளில் கனடா நாட்டினுடைய சிக்கல்களைக் கண்டறிந்த டர்காம் அவர்கள், கனடா வரலாற்றிலேயே புகழ் பெற்ற அறிக்கை யொன்றினைத் தயாரித்து,ஆங்கில அரசின் பரிசீலனைக்கு அனுப்பி வைத்தார்.

பிளவு பட்ட கனடாவில் பொருளாதாரச் சீர் குலைவும் கொடும் பஞ்சமும் தலை விரித்தாடியது. 1840-ஆம் ஆண்டில், கீழ்க் கனடா, மேல் கனடா ஆகியவற்றை இணைக்கக்கூடிய ஒரு சட்டத்தை ஆங்கில நாடாளு மன்றம் நிறைவேற்றியது. இதன் மூலமாக ஒற்றையாட்சி நாட்டின் பகுதிகளான இரண்டு மாநிலங்கள் கூட்டாட்சியில் இணைந்தன.

ஆனல், கனடாவின் மக்களுக்கு இது முற்றிலும் திருப்தி அளிக்கவில்லை. கனடா நாட்டிலிருந்த எல்லாக் குடியேற்றங்களையும், ஒரு கூட்டாட்சி அமைப்பில் இணைக்க வேண்டுமென அவர்கள் தீவிரமாகப் போராடினர்கள். இறுதியில் க்யூபெக் (QUBEC), நோவாஸ்கோசியா (Novascotia), நியூபிரண்ட்ஸ்விக் (New Brunswick) ஆகிய மாநிலங்களை உள்ளடக்கிய பெரும்

பாலான குடியேற்றப் பகுதிகளின் பிரநிநிதிகள் க்யூபெக் நகரில் கூடினர். கனடாவைக் கூட்டாட்சியாக உருவாக்கும் பணியில் பல இடையூறுகள் இருந்தன. மொழிச் சிக்கல், மதச் சிக்கல், பொருளாதாரச் சிக்கல் ஆகியவை கனடா நாட்டை ஓர் உண்மைக் கூட்டாட்சியாக மாற்றுவதற்கு இடையூறுகளாய் நின்றன. நீண்ட நெடிய விவாதங்களுக்குப் பிறகு, வரலாற்றுப் புகழ் பெற்ற க்யூபெக் தீர்மானங்களை (Qubec Resolutions) அவர்கள் நிறைவேற்றினர். கூட்டமைப்பை உருவாக்குவதற் குரிய நிபந்தனைகளை அத் தீர்மானங்கள் வலியுறுத்தின.

குடியேற்றங்களின் பிரதிநிதிகளும், மாநில முதலமைச்சர் களும் இங்கிலாந்து சென்று க்யூபெக் தீர்மானங்களைப் பற்றி ஆங்கில அரசு அமைச்சர்களோடு விவாதித்தனர்; அவை பயனளித்தன. 1867-ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் 29-ஆம் நாளில் பிரிட்டானிய வட அமெரிக்கச் சட்டம் (British North America Act 1867) என்ற அரசமைப்புச் சட்டம் ஆங்கில நாடாளுமன்றத்தால் நிறைவேற்றப்பட்டது. டொமினியக் கனடா நாடு உருவாயிற்று.

அச்சட்டம் கனடா நாட்டிற்கு ஒரு கூட்டாட்சி அமைப்பை வழங்கலாயிற்று. அமெரிக்கக் கூட்டாட்சி முறையில் ஓரளவிற்கு மாறுபட்ட பாணியைக் கனடியக் கூட்டாட்சி ஏற்றுக் கொண் டது. அதன் அரசியல் சட்டத்திலுள்ள கூட்டாட்சி முறையின் பெரும் பங்கை நமது இந்திய அரசியல் சட்டமும் ஏற்றுக் கொண்டுள்ளது. மத்திய அரசிற்கும் மாநிலங்களுக்குமிடையே அதிகாரங்கள் பிரிவினை செய்யப்பட்டு, மத்திய அதிகாரப் பட்டியல் எனவும் மாநில அதிகாரப் பட்டியல் எனவும் தொகுக் கப்பட்டுள்ளன. அவை போக எஞ்சிய அதிகாரங்கள் முழுவ தும் மத்திய அரசிற்கே தரப்பட்டுள்ளன.

கனடிய அரசமைப்புச் சட்டம் இந்திய அரசமைப்புச் சட்டத்தைப் போல ஒரு வலிமையான மத்திய அரசைத்தான் உருவாக்கியுள்ளது. ஆனல் கனடியச் சட்டம் அமுலுக்கு வந்த பின்னல்-அது நடைமுறைப் படுத்தப்பட்ட போது மத்திய அரசிற்குச் சார்புள்ள பல சட்ட விதிகள் அமுல் படுத்தப்பட வில்லை. எனவே, மத்திய அரசினைச் சார்ந்திருக்கும் ஒரு கூட்டாட்சி அமைப்பைக் கனடா நாடு ஏற்றுக் கொண்டிருந்தாலும் கூட, கனடியக் கூட்டாட்சி அரசாங்கம் அவைகளைப் பின்பற்ற வில்லை. அஃதாவது அங்கு மாநிலத் தன்னாட்சி முழுமையாகச் செயல்படுகிறது. எனவே

கனடா நாட்டின் அரசமைப்புச் சட்டம் ஓர் அரைகுறைக் கூட்டாட்சியை வலியுறுத்தினுலும் — வலிமையுள்ள மத்திய அரசை ஏற்றிருந்தாலும் — கனடா நாட்டின் அரசாங்கம் அவைகளை வலியுறுத்தாமல் விட்டு விட்டதால் அது உண்மைக் கூட்டாட்சி நாட்டின் அரசாங்கமாகச் சென்ற ஒரு நூற்ருண்டிற்கு மேலாகத் திகழ்கின்றது.

ஆனுல் இந்திய நாட்டின் அரசமைப்புச் சட்டமும் உண்மைக் கூட்டாட்சியை உருவாக்க வில்லை; இந்தியாவில் நடைபோடும் மத்திய அரசாங்கமும் உண்மையான மாநில சுயாட்சியைச் செயல்படுத்த வில்லை என்பது இங்கு நினைவு கூறத்தக்கது. ''அரசமைப்பில் மாநில சுயாட்சி'' என்ற மூன்ரும் பகுதியில் இந்திய அரசியல் சட்டத்தைப் பற்றியும் அதன் பல்வேறு சட்ட விதிகள் பற்றியும் தெளிவாக ஆராயப் பட்டுள்ளன. மேலும் பல கூட்டாட்சி நாடுகளின் அரசியற் சட்ட விதிகளும்,இந்திய நாட்டின் அரசியற் சட்ட விதிகளோடு சேர்த்து ஒப்பாய்வு செய்யப்பட்டுள்ளன. எனவே, அவை பற்றி இங்குக் குறிப்பிடப்படவில்லை.

இந்தியக் கூட்டாட்சி எப்படி உருவாயிற்றென்பதையும், இந்திய வரலாற்றில் மாநில சுயாட்சி எவ்வகையில் தோன்றி வளர்ந்து எழுச்சி பெற்று இறுதியில் வீழ்ந்துபட்ட தென்பதையும் இந்நூலின் இரண்டாம் பாகத்தில் பல அத்தியாயங்கள் வாயிலாக ஆய்வு செய்யப்பட்டுள்ளதால், இந்தியக் கூட்டாட்சி பற்றிய வரலாற்றுச் சுருக்கம் இங்கு விடப்பட்டுள்ளது. "வரலாற்றில் மாநில சுயாட்சி" என்ற இரண்டாம் பகுதியில் அதனைப் பார்ப்போம்.



## 6. இந்தியா... அதாவது பாரத்...[1]

"அப்படி ஒரு நாடு இல்லை. பல நாடுகளின் கூட்டத்தைக் கொண்ட ஒரு பெரு நிலப்பரப்பிற்கு நாம் (ஆங்கிலேயர்) கொடுத்த பெயர்தான் இந்தியா."[2]

— சர்ஜான்ஸ்ட்ரேசி.

"இந்தியாவின் வேற்றுமைகள் மகத்தானது ; அது வெளிப்படையானதும் கூட; அதுமேலெழுந்த வாரியாகப் படிந்துள்ளது ; எவரும் அதைக் காணலாம்."[3]

— பண்டித நேரு.

### I

இந்தியத் துணைக் கண்டம், ஒரே தேசியத் தன்மையையும் ஓரினப் பரிணமத்தையும் இறுகிய உளப்பூர்வமான ஒரே பிணைப்பையும் ஒரே வரலாற்றையும் கொண்ட ஒரு தனித்த நாடா? அன்றிப் பல தேசியங்களையும் பல மொழிகளையும் பல இனங்களையும் பல வேறுபாடுகளையும் பல வரலாறுகளையும் உள்ளடக்கிய ஒரு துணைக் கண்டமா? இதனை இங்கு ஆய்வோம்.

சர். ஜான்ஸ்ட்ரேசி (SIR JOHN STRACHY) அவர்கள் இந்தியாவின் பல வேற்றுமைகளைப் பற்றிக் கூறும் போது,

"இந்திய நாடுகளுக் கிடையிலான வேற்றுமைகளைக் காட்டிலும், ஐரோப்பிய நாடுகளிடம் இருக்கும் வேற்றுமைகள் ஐயமின்றி மிகக் குறைவானது தான். வங்கம், பஞ்சாப்பை ஒத்திருப்பதைக் காட்டிலும், ஸ்காட்லேண்டு, ஸ்பெயினை

---

1 Article 1, Opening Line, "Constitution of India."

2 Sir. John Strachey,
"India its Administration and Progress"
[3rd Edition, London 1903] Page 2.

3 Pandit Jawaharlal Nehru,
"The Discovery of India" (1960) Page 48.

ஒத்துள்ளது..... மத, இன வேறுபாடுகள் ஐரோப்பாவைப் போலவே இந்தியாவிலும் விரவியுள்ளன. சீக்கியர்களிட மிருந்து தமிழர்கள் மாறுபடும் அளவிற்கு, நாகரிகம் பெற்ற ஐரோப்பியக் கண்டத்திலுள்ள பல நாடுகளின் மக்கள் மாறு பட்டு இருக்கவில்லை. தென்இந்திய மொழிகள், இலண்டனில் எத்துணையளவு பொருளற்றவையாய்த் தோன்றுகிறதோ, அத்துணையளவு லாகூரிலும் பொருளற்றதாய்த் தோற்ற மளிக்கின்றன. பாரிஸிலும், ரோமிலும், ஆங்கிலேயன் எப்படி ஓர் வெளிநாட்டவனோ அப்படி பெஷாவரிலும், டெல்லியிலும், கல்கத்தாவைச் சார்ந்த ஒருவன் வெளி நாட்டவனே."...4

என்று குறிப்பிடுகிறார்.

"இருபது தேசிய இனங்களையும், இருபது வேறுபட்ட மொழி களையும் கொண்ட ஓர் மிகப் பெரிய நாடுதான் இந்தியா,"

என இந்தியாவைப் பற்றி ஜான் பிரெய்த் (John Bright) குறிப்பிடுகிறார்.

காஷ்மீரம் முதல் கன்னியாகுமரி வரை இந்தியத் துணைக் கண்டத்தின் தென்வடல் நீளம் ஏறத்தாழ 2010 கற்கள்; குசராத் மேற்கு முனை முதல் வங்கத்தின் கீழ்க் கடற்கரை வரை அதன் அகலம், சுமார் 1900 கற்கள்; அதன் பரப்பளவு சுமார் 20, 50, 300 சதுரக் கற்கள். ரஷ்யா நீங்கலான ஐரோப்பாவின் பரப்பு—இந்தியாவின் பரப்பிற்கு ஒத்ததாகும்; இங்கிலாந்தைக் காட்டிலும் 20 மடங்கு இந்தியா பெரியது. இதற்கிடையில் வாழும் மக்கள் தொகை ஏறத்தாழ 54. 8 கோடி. 5

1971–ஆம் ஆண்டின் மக்கட் கணிப்பின்படி (Census), இந்தியத் துணைக் கண்டத்தில் பேசப்படும் மொத்தத் தாய் மொழிகள் 1652 ஆகும். இவற்றை ஐந்து வகைகளாகப் பிரித்துள்ளனர். 6

---

4 Sir. John Strachey.
"India its Administration and Progress (1903) Pp. 2-3.

5 "India A Reference Annual 1973" Publications Division, Govt. of India, Page 17.

6 Ibid, Pp. 13 - 14.

அ. இந்திய அரசமைப்புச் சட்டத்தில் தேசிய மொழிகள் (National Languages) என்ற தனித் தகுதியளிக்கப்பட்ட பெரு மொழிகள் 14; இந்தப் 14 தேசிய மொழிகளில், 380 தாய் மொழிகள் அடங்குகின்றன.

ஆ அரசமைப்புச் சட்டத்தில் தேசிய மொழிகள் என்ற தகுதியைப் பெருத பெரு மொழிகள் 17. இந்தப் 17 பெரு மொழிகளில் 241 தாய்மொழிகள் அடங்குகின்றன. ஒவ்வொரு தாய்மொழியும் 5 இலட்சத்திற்கும் மேற்பட்ட மக்களால் பேசப்படுகின்றன.

இ. ஒரு இலட்சம் முதல் 5 இலட்சம் பேர் பேசக்கூடிய மற்ற தாய்மொழிகள் 71. இவை மற்ற 19 மொழிக் கூட்டத்தில் அடங்குகின்றன.

ஈ இவை தவிர, ஒரு இலட்சம் பேருக்கும் குறைவாகப் பேசப்படும் தாய்மொழிகள் 857. இதில் 244 தாய்மொழிகளை வகைப் படுத்தப்பட்ட 60 மொழிகளாகவும், மீதியுள்ள 613 தாய்மொழிகளை வகைப்படுத்த முடியாத தாய்மொழிகளாகவும் வரிசைப் படுத்தி மொத்தம் 673 மொழிகள் ஓர் தனி இனமாக வகுக்கப்பட்டுள்ளன.

உ. இந்திய மொழிகளல்லாத தாய் மொழிகள் 103.

ஆக, 1652 மொத்தத் தாய்மொழிகளும் 826 பெருமொழிக் கூட்டங்களாக வகைப்படுத்தப்பட்ட பான்மை, வேறு எந்த நாட்டிலும் காணக் கிடைக்காத தோர் தனிச் சிறப்பு.

> **மக்கட் தொகையில் உலக நாடுகளில் இரண்டாம் தகுதியையும் பரப்பளவில் 7–ஆம் தகுதியையும் மொழிகளில் 1652-ஐயும் பெற்ற இந்தியத் துணைக் கண்டம் நில நூல் கோட்பாடுகளுக்கு மாருக ஒரே நாடு. அதாவது 'இந்தியா' என்ற பெயரைத் தாங்கியுள்ளது. எந்த அடிப்படையில் ஆய்ந்தாலும் இந்தியா என்ற நிலப்பரப்பு ஓர் துணைக்கண்டமே என்பது மறுக்க முடியாத உண்மை.7**

இனி, புவியியல் சான்றுகளைப் பார்ப்போம்.

---

7 Ibid, Pp. 13 - 14

## II
## அரசியல் காரணங்கள்

ஆரியத்தின் ஊடுருவலுக்கு முன்பிருந்து ஆங்கிலேயரின் ஆதிக்க காலம் வரை, இந்தியாவின் பல தேசிய இனங்களின் தனித்த பண்புகளையும் சிறப்புக்களையும் இந்திய அரசியல் வரலாறு பேணிக் காத்து வந்துள்ளது. பல மொழிகள் மட்டுமல்ல; இனக் கூறுகளின் பாரம்பரியமான பழக்க வழக்கங்கள், தொன்று தொட்ட மரபுகள், பண்பாடுகள், சால்புடை நாகரிகங்கள் இவையெல்லாம் அந்தந்த நிலப்பகுதிகளில் தனித்தனியே பேணிக் காக்கப்பட்டன. இவை யனைத்தும் ஒன்றறக் கலந்து விட்டதென மேலோட்டமாகத் தென்படினும், உள்ளூர அவை உயிரோட்டத்துடன் இயங்கி வருவதை இன்றும் நாம் காணலாம்.

வரலாற்றாசிரியர், ரோனால்டு சேகால் ( RONALD SEGAL ) இந்தியாவைக் காணும் போது,

> ''இன்றைய இந்தியா, மொழிவாரி மாநிலங்களைக் கொண்ட ஓர் கூட்டாட்சி ஒன்றியம். வேறுபட்ட பல மக்கள் குழுக்களையும்,பழக்க வழக்கங்களையும் மொழிகளையும்,மரபுகளையும், ஒன்றாக இணைத்த ஒரு நாடுதான் இந்தியா. அதற்கு மொழி வாரி மாநிலங்களே சான்று பகிர்கின்றன. இந்திய முனைக் கோடிகளில் ( Extremes ), அதன் வேறுபாடுகள் மிக ஆழமாய்த் தெரிகின்றன. வட இந்திய விவசாயி, உருவம்; அளவு, நிறம், உடை, மொழி, மரபு ஆகியவைகளால் தென்னிந்தியனுக்கு மாறுபடுகிறான்...''

> ''...ஆரியத்தின் வழி வந்த இந்தியை, நாட்டின் ஆட்சி மொழியாக ஏற்க மறுத்த தென்னகத்துத் திராவிடர்களால் நடத்தப்படும் மொழிப் போராட்டம், பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே வெளிப் படையெடுப்புக்களை எதிர்த்து ஆதிமக்கள் நடாத்திய போராட்டத்தையே பெரிதும் ஒத்திருக்கிறது.''[8]

எனக் குறிப்பிடுகிறார்.

---

8 Ronald Segal, " The Crisis of India " [1971] Pp 20, 21.

### முப்பெரும் இயற்கைப் பிரிவுகள்

எந்த நாட்டின் வரலாறும் அதன் நிலநூற் கூறுகளின் அடிப்படையில் வளர்ந்ததேயாகும். இந்திய நாட்டின் வரலாறும் அதற்கு விதிவிலக் கல்ல. நெடுகப் பரவிய நிலப்பரப்பின்மேல், கிடைநிலையான ஆறுகள் குறுக்கேபாய்கின்றன. இவை தவிர விண்ணை முட்டும் முகடுகள் படைத்த நீண்ட நெடிய மலைக்கூட் டங்கள், அந்தத்தனி நிலப்பிரிவுகளுக்கு அரணாக அமைகின்றன.

இந்தியாவின் இயற்கைக் கூறுகளை ஓர்ந்து பார்க்கின், அது மூன்று பெரும் பிரிவுகளைக் கொண்டது என்பது தெற்றென விளங்கும். அவை வட இந்தியா, தென் இந்தியா, இரண்டிற்கும் இடைப்பட்ட தக்காணம். இந்த ஒவ்வொரு பெரும் நிலப் பிரிவும், பல தனித்தனி நிலப்பகுதிகளைக் கொண்டுள்ளன.

பேரரசுகள், தங்கள் ஆட்சி எல்லைகளை விரிவுபடுத்தும் காலங்களில் தவிர, மற்ற நேரங்களில் இத்தனி நிலப்பகுதி கள் தனித்தனி மொழி, இன, அரசியல் பண்புகளைப் பேணி, நிலைநாட்டி வந்துள்ளன.

### (அ) வட இந்தியா

வட இந்தியாவில், சிந்து கங்கைச் சமவெளியும், அசாமும், வங்காளமும், பஞ்சாபும், குசராத்தும் தனித்தனி நிலப்பகுதி களாக அமைந்துள்ளன.

வளங் கொழிக்கும் சிந்து கங்கைச் சமவெளிக்கு 'ஆரிய வர்த்தம்' எனப் பெயர். நடு ஆசியாவிலிருந்து வந்த ஆரியர்கள் இதைத் தங்கள் தாயகமாக்கிக் கொண்டனர். இங்கு, இந்துப் பேரரசுகள் பல தோன்றி மறைந்தன. ''ஆரிய வர்த்தம்'' வட இந்தியா முழுவதிலும் தனது ஆதிக்கத்தைப் பேரரசுகள் மூல மாக நிலைநாட்ட முயன்றது. ஆனால் அது மற்ற நிலப்பகுதிகளைத் தன்னகத்தே ஆட்கொள்ள முனைந்தபோது, முழுமையாக அதில் வெற்றி காண முடிய வில்லை. இந்துப் பேரரசுகள் வீழ்ந்த போது வட இந்தியாவிலிருந்த தனி நிலப்பகுதிகள் மீண்டும் தமது தனித்த பண்பாடுகளையும் மொழி மற்றும் மரபுகளையும் எல்லைகளையும் காத்துக் கொண்டன.

இன்றைய இந்தியாவில் பரவலாக இந்தி மொழி பேசும் உத்திரப் பிரதேசம், மத்தியப்பிரதேசம், ராசஸ்தானம் மற்றும் பீஹார் ஆகிய மாநிலங்கள் பழைய ஆரியவர்த்தத்தின் அன்றைய உட்பிரிவுகள். இந்துப் பேரரசுகள், வரலாற்றுத் தொடக்கத்தில் தங்கள் அரசு ஆதிக்கத்தின் மூலம், மற்ற நிலப் பகுதிகளின் மேல் தங்களது மொழி மற்றும் கலாச்சாரத்தை எப்படித் திணிக்க முயன்றதோ, அதே முறையில் இன்றும் அவை மற்ற மாநிலங்களின் மேலும் ஆதிக்கம் செலுத்த முனைந்து நிற்பது கண்கூடு.

அசாம், வங்காளம், குசராத் ஆகிய மற்ற வட இந்திய நிலப் பகுதிகள் பலமுறை ஆரிய வர்த்தத்தின் படையெடுப்புகளுக்கு இலக்கானலும் வரலாற்றில் அவை இன்றுவரை தனித்தே நின்று, தத்தம் மொழி, இன, பண்பாடுகளை வளர்த்துக் கொண்டன, அவை தங்களது தனித்தன்மைகளை முழுமையாக இழந்துவிட வில்லை.

அசாம் பகுதி, மலைகளுக்கிடையில் தனித்து நிற்பதால் மலைவாழ் மக்கள் சார்ந்த பல குழுக்கள் அங்குத் தனித்தனியாய் வாழ்ந்தன. மங்கோலிய இனக் கலப்பைப் பெற்ற பண்பாடும் இங்கே மிகுதியாகத் தென்படுகிறது.

பல நூற்றுண்டுகளாக வலிமை கொண்ட வடக்கத்திய அரசுகளை எதிர்த்து நின்று, தன்னுட்சியையும் தனித்த தன் மொழியையும் உணர்ச்சிமிகு பண்பாட்டையும் போற்றி வந்த நிலப்பகுதி வங்காளம்.

கப்பல் வாணிகம் கொண்டு வளம் பெருக்கிய குசராத், மற்ற அரசுகளுக்கு ஓர் தாக்குதல் இலக்காய் அமைந்தது. ஆரிய வர்த்த அரசுகளும், தக்காண அரசுகளும், அரேபிய இனத்தவர்களும் குசராத்தைப் பலமுறை தாக்கிடினும், தனது சுதந்திரத்தை மீண்டும் மீண்டும் அது நிலை நாட்டிக் கொண்டது. குசராத்தின் மொழியையும் பண்பாட்டையும் எந்த வெளி அரசாலும் சிதைக்க முடிய வில்லை.

பஞ்சாப், பலமுறை மொழிப் போராட்டங்களையும், பண்பாட்டின் மோதல்களையும் கண்ட நாடு. வெளிநாட்டவரின் படையெடுப்புகளுக்கு இலக்காகி, சிக்கலான கலாச்சாரப் பின் விளைவுகளுக்கு அது மையமாய் விளங்கிற்று. பின்னல், மத மாச்சரியங்களுக்கு ஆட்பட்டு, இந்து முஸ்லீம் தீராப்பகையை

இந்தியாவில் உருவாக்கிய ஒரு முதல் நாடு பஞ்சாப் என்றால் அது மிகையாகாது. இறுதியில், இந்து — முஸ்லீம் மதங்களின் இணைப்பிலேயே 'சீக்கியம்' உதித்தது, இந்தியா விடுதலை அடைந்த போது பஞ்சாப், மத அடிப்படையில் இரண்டு தனித் தனி மாநிலங்களாயின. பாக்கிஸ்தான் பிரித்துக்கொண்டது போக எஞ்சிய பஞ்சாப், மீண்டும் இரண்டாகப் பிளந்தது. இப்போது, இந்து அரியானாவாகவும் சீக்கியப் பஞ்சாப் ஆகவும் உருவெடுத்து நிற்கின்றன.

ஆக, வடஇந்தியா என்கிற தனிப் பெரும் பகுதி இந்தியத் துணைக்கண்டத்தின் ஓர் இயற்கைக்கூறாக அமைந்திடினும், அவற்றினுள் அடங்கிய ஐவகைத் தனி நாடுகள் நிலநூல் அடிப்படையிலும் வரலாற்றிலும் தனித்தன்மை கொண்டிருந்தன. ஒரே நாட்டிற்குரிய – இனத்திற்குரிய – இறுகிய பிணைப்புகள் வட இந்தியப் பகுதிகளில் கூட இருந்ததில்லை.

(ஆ) தக்காணம்

இயற்கை அன்னை, தக்காணத்தை அரசியல், மொழி, அடிப்படைகளில் நான்கு தனி நாடுகளாகக் கோலமிட்டுக் காட்டுகிறாள். கீழக் கடற்கரையை அடுத்த அடர்ந்த காடுகள், ஒரிசாவைத் தக்காணத்தின் மற்ற பகுதிகளிலிருந்தும், தனித்தொதுக்கி வைத்து விடுகின்றது. தென் பகுதியில் கரிசல் மண் பகுதிகளும், கிழக்கே ஆந்திரத்தின் இயற்கை எல்லையும் மராட்டியத்தைப் பகிர்ந்து விடுகிறது. தக்காணத்தின் தென்புலப் பீடபூமி, கர்நாடகத்தையும் ஆந்திரத்தையும் பகுத்துக் காட்டுகிறது. மொத்தத்தில் தக்காணம் வடபுலத்தின் நாகரிக மிளிர்ச்சியையும், தென்னகத்தினது பண்பாட்டுச் சிறப்புகளையும் ஒரு சேரத் தாங்கி நிற்கிறது. வட இந்தியப் பேரரசுகள் தெற்கே வேர்விட்ட போதும், தென்னகத்து அரசுகள் வடக்கே தன் எல்லையைப் பரப்பியபோதும், இடையேயிருந்த தக்காணம் அதன் விளைவுகளை ஏற்றுக் கொண்டது.

தக்காணத்தினுள் இருந்த நிலப்பகுதிகள் ஒவ்வொன்றும், வரலாற்றில் பொற்காலத்தைப் படைத்திருக்கின்றன. தக்காணத்தின் தனி நாடுகள் அதனதன் பேரரசுகளை உருவாக்கி ஒன்றை மற்றொன்று அடிமைப்படுத்த முயன்றதையும், பின்னர்

அவை வீழ்ந்து பட்டதையும் தக்காண வரலாறு தனித்துக் காட்டுகிறது. தக்காணத்தில் ஓரிய மொழியும், கண்டை நிகர் கன்னடமும், சுந்தரத் தெலுங்கும், வீறுகொள் மராத்திய மொழியும் தனி மொழிகளாய்த் தழைத்தன.

தக்காண வளர்ச்சி நிலையை வரலாறு பூர்வமாகத் தேர்ந்து பார்த்தால், மராட்டியமும் ஓரிசாவும் வட இந்தியப் பேரரசு களின் அழுத்தத்தத்திற் கேற்ப வடக்கத்திய மொழி, இனப் பண்புகளின் நெருக்கத்தைப் பெற்றுள்ளதையும் ஆந்திரமும், கர்நாடகமும் தென்னகப் பண்பாட்டின் பிணைப்பைப் பெற் றுள்ளதையும் தெளிவாக நாம் காணலாம். இந்திப் போர் தென்னகத்தைப் பற்றி எரித்த போது, கர்நாடகமும் ஆந்திர மும் தமிழகத்தைப் போல் தங்கள் மொழி காக்க இந்தியை எதிர்த்து நின்ற பான்மை, இவை தென்னகத்தோடு வரலாற் றுல் தொடர்பு கொண்டிருந்ததை விளக்கும்.

(இ) தென்னகம்

முப்புறமும் கடல் சூழ்ந்த தமிழகம், தனித்த ஓர் நாகரிகத் திற்குத் தாயகம்.இதன் இயற்கைக் கூறுகள் ஓர் பழைமையான இனத்தைப் படைத்தது. அந்த இனத்திற்குச் சொந்தமான தமிழ் மொழி, உயர் தனிச் செம்மொழிகளில் ஒன்று. தமிழ் மொழி, பல மொர்ழிகளுக்குத் தாய் மொழி. "மனித இனம், முதன் முதலில் தோன்றத் தக்க தட்ப வெட்ப நிலையைத்தென் னகம் பெற்று நின்றது; முதல் மனிதன் இங்கு தான் தோன்றி னுன்" என, சில ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

தெற்கே ஈழத்தையும் ஆஸ்திரேலியாவையும், கிழக்கே சாவகத்தையும் மலாய்ப் பகுதிகளையும் 'இணைத்து' குமரிக்கண்ட மாக ஆதியில் இப்பகுதி பரந்திருந்தது என வரலாற்றுசிரியர் ந. சி. கந்தையா பிள்ளை போன்ற ஆராய்ச்சி வல்லுனர்கள் கருதுகின்றனர். இந்தியாவின் வடபகுதியில் ஆரியர்கள் நுழைந்த காலம் வரை,தென்னகத்துத் திராவிடர்களே இந்திய துணைக்கண்டம் முழுவதிலும் வரலாற்றுக் காலத்திற்கு முன் பிருந்து வதிந்து வந்தனர் என நில நூல் மற்றும் புதைபொருள் ஆய்வாளர்கள் நிலைநாட்டுகின்றனர்.

தமிழகம், கிறித்து பிறப்பதற்கு ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே ஓர் மிகப் பெரிய கடல் ஆதிக்க நாடாக விளங்கிற்று என நேரடி வரலாற்றுச் சான்றுகள் விளக்குகின்றன. கடல் வாணிகம் தமிழகத்தின் செல்வத்தைக் குவித்தது. தமிழகம் தனது மேலை, கீழைக் கடற்கரை வாயிலாக, கிழக்கே சாவகம், கடாரம் - சைனு வரையும், மேற்கே கிரேக்கம், ரோம், சுமேரியா, மெசபொடோமியா நாடுகள் வரையும் வாணிகத்தை நடாத்தி வந்தது. காவேரி தந்த வளமையும் கடல் வாணிபம் கொடுத்த செல்வமும் தென்னகத்தில் மொழி, கலை, இலக்கியம் மற்றும் நுண் கலைகள் வளரப் பின்னணியாய் அமைந்தன.

மேற்குத் தொடர்ச்சி மலை, கேரளத்தின் கிழக்கரண்; முன்னர், அது தமிழகத்தின் ஒரு பகுதியான சேர நாடு. பன்னிரண்டு நூற்றுண்டுகளுக்கு முன்னர் வரலாற்றுத் திருப்பங்களின் காரணமாக அது தன் இயற்கை அரண்களோடு இயைந்த, தனித்த ஓர் நாடாகத் தமிழகத்தினின்றும் பிரிந்து நின்று விட்டது. ஏறத்தாழப் பத்து நூற்றுண்டுகளுக்கு முன்னர், தமிழின் சிதைந்த வடிவம் கேரளத்தில் உருமாறி ‘மலையாளம்’ என்ற ஒரு தனி மொழியாய் மலர்ந்தது. எழுத்தச்சனின் ஆற்றலால் மலையாள எழுத்து முறை உருவாயிற்று. 13–ஆம் நூற்றுண்டில் மலையாள மொழி, தனி இலக்கியம் கண்டது.

தென்னிந்தியாவின் ஒரு தனி நிலப்பகுதியாய் விளங்கிய கேரளம் மொழி, இன, பண்பாடு, பழக்க வழக்கங்கள், தொன்மைத் தொடர்புகள் ஆகியவைகளில் இன்றும் தமிழகத்தோடு ஒன்று பட்டு இருத்தலை நாம் காணலாம்.

பாரத்

இந்தியத் துணைக் கண்டத்தின் மூவகை இயற்கைப் பிரிவுகளிலும் தனித்தனி நாடுகளையும், தனி மொழிகளையும், பண்பாடுகளையும் தனித்தன்மைகளையும் நிலநூல் உருவாக்கியதை நாம் ஆய்ந்தோம். இவை என்றுமே ஒரே நாட்டெல்லைப் பகுதிக்குள் நிலநூல் அடிப்படையில் அமைந்திருக்க வில்லை. எனவே, தனித்தனியான பல நாடுகளை உள்ளடக்கிய ஒரு பெருநாடு தான் இந்தியத் துணைக்கண்டம். இந்தியா என்ற

சொல், வெகு அண்மையில் ஆங்கிலேயரால் உருவாக்கப்பட்ட சொல். பாரதம் அல்லது பாரதவர்ஷம் என்ற பெயரும் இந்தியத் துணைக் கண்டத்திற்குள் அடங்கிய நிலப்பரப்பு முழுவதையும் சுட்டுகிறதெனக் கருதுவதற்கு மூலச் சான்றுகள் ஏதும் இல்லை. 'இந்துஸ்தானம்' என்பதும் 'இந்துக்களின் நிலம்' எனச் சுட்டுகிற தேயன்றி ''இந்தியர்கள்'' வாழ்ந்த முழுநிலப் பகுதியையும் அது குறிக்கவில்லை. ஆகவே நமது இந்திய அரசமைப்புத் தான் 'பாரத்' என்ற பெயரை முதன் முதலாக வரலாற்றில் நிலை நிறுத்தியுள்ளது.

இனி வரலாற்றுச் சான்றுகளை ஆராய்வோம்.

## III

## வரலாற்றுச் சான்றுகள்

இந்தியத் துணைக் கண்டத்தில் தனித்தனி இனங்கள், மொழிகள், பண்பாடுகள் பல தோன்றியதற்கும் வளர்ந்ததற்கும் இந்தியாவின் நிலநூல் சிறப்பியல்புகளே மூல காரணங்களாயின. அத்தனி நாடுகள் ஒவ்வொன்றின் வளமார்ந்த வரலாறுகளால் அவைகளின் தனித் தன்மையும், தனி இன உணர்வுகளும் பின்னர் பேணிக் காக்கப்பட்டன. அத்தனி இயல்புகள் இன்றும் ஒவ்வொரு மாநில மக்களிடமும் உள்ளார்ந்து ஊடுருவி நிற்கின்றன. அதற்கு வரலாறு எவ்வகையில் துணை செய்தது என இனிப் பார்ப்போம்.

### வரலாறும் தனிநாடுகளும்

இந்தியத் துணைக் கண்டத்தில் அடங்கிய பல தனிநாடுகள், நிலைத்த ஓர் ஐக்கியத்தைத்தம்மிடம் உருவாக்கிக்கொள்வதற்கு இந்திய வரலாறும், நிலநூலும் என்றுமே துணை புரிந்ததில்லை. மாறாக ஒன்றினின்றும் மற்றொன்று பிணங்கி நிற்கவும், ஒன்றை மற்றொன்று அடிமைப் படுத்தவும், முரண்பாடுகளைப் பெருக்கவும் தான் நிலநூலும், வரலாறும் துணை செய்தன. சில பேரரசுகள் இந்தியாவின் பல நாடுகளையும் தற்காலிகமாக ஒன்றாக இணைத்து அவைகளைத் தன்னுள் ஒருமைப்படுத்த முனைந்த நாட்களில்கூட, அத்தனி நாடுகள் ஒவ்வொன்றும் வரலாற்று நிகழ்ச்சிகளால் தனித்த நிலைமையையே விரும்பி ஏற்றுக் கொண்டன. அத்தனித் தன்மையை விரிவாக்கும்

வகையில், அத்தனி நிலப் பகுதிகள் ஒவ்வொன்றும் தம் சொந்தச் சரித்திரங்களில் பெற்ற வெற்றி தோல்விகளையும், காலத்தால் அழிக்க முடியாத தனித்த பண்பாடுகளையும் தொன்மைச் சிறப்பியல்புகளையும் சூழலுக்கு ஏற்ப மீண்டும் மீண்டும் புதிய வேகத்துடன் நிலைநாட்டி வந்திருக்கின்றன. பலதிறப்பட்ட அரசியல் நிகழ்ச்சிகளினூடே அவைகளின் தனித் தன்மை மங்கியதே தவிர, முழுமையாக மறைந்து விடவில்லை.

டாக்டர். அமல்ரே அவர்கள்,

> ''அவை ( தனி நிலப் பகுதிகள் ) வரலாற்றின் உருப்படிகள் ( Historical Entities ); பேரரசுகள் தோன்றி ஒருமுக ஆட்சியை ஏற்படுத்த முனைந்த போதெல்லாம் சரித்திரத் தடுமாற்றங்களால், (அந்நாடுகளின் தனித்தன்மை) மாய்ந்து போகவில்லை.''9

எனக் குறிப்பிடுகிறார்.

அந்த நிலப்பகுதிகள் தங்கள் அரசியல் சுதந்திரத்தைத் தொடர்ந்து துய்த்து வர விழைந்தன. அவை, அவ்வப் போது வலிமையை இழந்தாலும் தமது மகிமையை இழக்க வில்லை. அந்தந்த இன மக்களின் பழம் பெருமைகள் அந்தந்த மொழி இலக்கியங்களில் பொறிக்கப்பட்டும், மக்களிடையே அன்றாடப் புழக்கத்திலிருக்கும் சரித்திரக் கதைகள், நாட்டுப் புறப் பாடல்கள் வாயிலாகப் பிற்காலச் சந்ததிகளுக்காகப் போற்றிக் காக்கப்பட்டும், வழிவழியாகப் பேணி வளர்க்கப் பட்டும் வந்தன.

தமிழகத்தில், சங்க கால வரலாறும், பல்லவப் பேரரசும், சோழர்களின் பொற்காலமும், அந்தக் காலங்களில் இயற்றப் பட்ட இறவா இலக்கியங்களும் தமிழர்களின் இரத்தத்தில் இன்றும் இன உணர்வை ஊட்டிக் கொண்டிருக்கின்றன. வங்கத்தில் பாலப் பேரரசுகளின் பழம் பெருமை நினைவுகளும், மராத்தியத்தில் சிவாஜியின் வீரமிகு வரலாறும், ஆந்திரத்தில் விசயநகரப் பேரரசின் சான்றுகளும், கர்நாடகத்தில் ஒய்சாள மன்னர்களின் சிற்பக் கோயில்களும் அந்தந்த மாநிலங்களின் இன்றைய சமுதாய மக்களின் இரத்த நாளங்களில் இன உணர்வைப் பாய்ச்சுகின்றன. இவையெல்லாம் நீண்ட தனி வரலாற்றின் விளைவுகளாகும்.

---

9 Dr. Amalray,
"Inter Governmental Relations in India". [1966], Page 10.

(அ) 1800 ஆண்டுகளின் வடஇந்திய வரலாறு

மௌரியப் பேரரசு, கி. மு. நான்காம் நூற்றுண்டில் மகதத்திலிருந்து நர்மதை நதிக்கரை வரையில் தனது ஆதிக்கத்தைப் பரப்பியது. கலிங்கம் நீங்கலாகத் தக்காணத்தில் மற்ற பெரும் பகுதியைப் பிந்துசாரன் தன்னுட்சிக்குக் கொண்டு வந்தான். அசோகன் கலிங்கத்தை வென்ருன். ஆக, தமிழகத்தின் மூவேந்தர் ஆட்சியைத்தவிர இந்தியத் துணைக்கண்டத்திலிருந்த எல்லாத் தனி நாட்டுப் பகுதிகளும் மௌரியர்களால் ஒரு குடையின் கீழ்க் கொண்டு வரப்பட்டன. ஆனுல் அரசியல் விற்பன்னர்களான மௌரியர்கள், தங்களது பேரரசை நிலை நாட்டியவுடன், தமது மைய அரசின் கீழ் சில இன்றியமையா அதிகாரங்களை மட்டும் வைத்துக் கொண்டு, அந்தந்த தனி நிலப்பகுதிகள் தன்னுட்சியை இழக்காத நிலையில் மத்தியத்தின் மேலாட்சியை மட்டும் நிறுவினர். தனி நாடுகளின் சுதந்திரத்திற்கும், மொழி, பண்பாடுகளுக்கும் எவ்வகையிலும் ஊறு நேரா வண்ணம் மௌரியர்களின் ஆட்சி நடைபெற்றது. பிற்காலக் கூட்டாட்சித் தத்துவத்தின் மூல மாதிரியாக மௌரியர்களின் மைய ஆட்சி விளங்கிற்று.

மௌரியப்பேரரசும் கனிஷ்கர் அரசும் வீழ்ந்த பின்னர் 400 ஆண்டுகள் கழித்து, குப்தப் பேரரசு தோன்றியது. இடைப்பட்ட நான்கு நூற்றுண்டுகளில் வட இந்தியா முழுவதும் பல நாடுகளின் தனியாட்சிகளே நிலவின.

குப்தர்களின் நிர்வாக ஆட்சியும், ஏறத்தாழ மௌரியர்களின் ஆட்சியைப் போன்றதே. இந்தியாவின் மற்ற தனிப் பகுதிகள் அதனதன் தனித் தன்மையை அரசியல் கலாச்சார ரீதியில் இழக்கவில்லை.

6–ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் குப்தர்கள் ஆட்சி வீழ்ந்த பின்னர், 7–ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் வலுப் பெற்ற ஹர்சவர்த்தனர் காலம் வரை, ஏறத்தாழ 100 ஆண்டுகளில் வடஇந்தியாவில் மீண்டும் தனி நாடுகள் தான் தனி அரசுகளோடு கோலோச்சின,

கி. பி. 647-இல் ஹர்சவர்த்தனரின் பேரரசு வீழ்ந்த பின்னர், கி. பி. 13–ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் ஏற்பட்ட முகம் மதியர் ஆதிக்கம் வரை, ஏறத்தாழ 550 ஆண்டுகள் வடஇந்திய வரலாற்றில் வேறு எந்தப் பேரரசும் தோன்ருத காரணத்தால் பல சிற்றரசுகள் தனியாட்சி செய்து வந்தன. அவைகளிடையே ஒருமை நிலேயேதும் உண்டாகவில்லே. பின்னர் கி. பி. 13–ஆம் நூற்ருண்டின் தொடக்கத்திலிருந்து 16-ஆம் நூற்ருண்டின் தொடக்கம் வரை, சுமார் 300 ஆண்டுகள் டெல்லி சுல்தான் களின் ஆட்சி வட இந்திய முழுவதும் — அவ்வப்போது தக்காணத்திலும்—நடந்து வந்தது. அலாவுதீன் கில்ஜி, முகம்மது பின் துக்ளக் ஆகியோர் காலங்களில் தென்னகம் வரையும் அவர்கள் பேரரசு பரவி யிருந்தது. துக்ளக் வம்ச முடிவில், வடஇந்தியா மற்றும் தக்காணப் பகுதிகளில், பேரரசுக்குக் கீழ் ஆங்காங்கே இருந்த ஆளுநர்கள், அந்தந்தப் பகுதிகளில் தனி ஆட்சிகளுக்கு வழி கோலினர்.

கி. மு. 300 முதல் கி. பி. 1500 வரை மொத்தம் 1800 ஆண்டுகளின் வடஇந்திய வரலாற்றை நாம் ஆய்வு செய்தால் மௌரியப் பேரரசும் கனிஷ்கர் ஆட்சியும் குப்தப் பேரரசும் ஹர்ஷவர்த்தனர் ஆட்சியும் டெல்லி சுல்தான்களும் அலாவு தீன் கில்ஜி மற்றும் முகமது பின் துக்ளக்கும் கோலோச்சிய ஏறத்தாழ 800 ஆண்டுகள் நீங்கலாக மீதி ஓராயிரம் ஆண்டு களுக்கு வடஇந்தியாவில் பல நாடுகளின் வரலாறுகள் மட்டுமே எஞ்சி நின்றன. வடஇந்தியா முழுவதற்குமான ஒரே சரித்திரம், ஓராயிரம் ஆண்டுகளுக்கு உருவாக வில்லே. எனவே இந்தியா ஒரே நாடு என்ற தத்துவம் வடபுலத்திற்குக் கூடப் பொருந்துவ தில்லே என்பது கண்கூடு.

(ஆ) 1500 ஆண்டுகளின் தக்காண வரலாறு

மௌரியப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பின்னர்த் தக்காணம் தலே தூக்கியது. பேரரசுகள் ஏதுமின்றி வடஇந்தியா காரிருளில் கலங்கியபோது மராத்தியத்தை மையமாகக் கொண்ட தக்காணப் பேரரசுகள் மலர்ந்தன. முழுத் தக்காணத்தையும் வடபுலத்தின் ஒரு பகுதியையும் சாதவாகனர் என்ற ஆந்திரர் கள் கைப்பற்றி, ஒரு பேரரசை உருவாக்கி, ஏறத்தாழ நான்கு நூற்ருண்டுகள் பேராட்சி செய்தனர், கலிங்கம் என்ற ஒரிசாவில்,

வன்மை மிக்க காரவேலன் கலிங்கப் பேரரசை உருவாக்கிப் புகழோடு ஆண்டான். கலிங்கம் வடபுலத்தின் பேரரசுகளுக்குப் பணிய மறுத்தது. அசோகன் கலிங்கத்தை வென்றான். ஆனால் கலிங்கப்போர் அசோகனை வென்று விட்டது.

சாதவாகனர்களின் ஆந்திர சாம்ராஜ்யம் வீழ்ந்த பின்னர், தக்காணத்தின் தனிநாட்டுப் பகுதிகளில் தனித்தனி அரசுகள் அவ்வப்போது தோன்றி வலிவு பெற்றுப் பேராட்சி நடாத்தின. மராத்தியத்தில் வாதாபியைத் தலைநகராகக் கொண்ட சாளுக்கியரும், ஆந்திரத்தில் வெங்கியைத் தலைநகராகக் கொண்ட கீழைச் சாளுக்கியரும், பின்னர் ராஷ்டிரகூடர்களும், கர்நாடாகத்தில் கங்கர்களும் கடம்பர்களும், ஒரிசாவில் கங்கர்களும் தனித்தனி அரசு கண்டனர். இவ்வரசுகள் கி. பி. 5-ஆம் நூற்றாண்டிலிருந்து 13-ஆம் நூற்றாண்டு வரை, தக்காண வரலாற்றை ஒளி பெறச் செய்தன. இவர்களுடைய காலங்களில் தென்னகத்தோடு ஏற்பட்ட கலைத் தொடர்பால், தக்காணத்திலும் திராவிடர் கலை தழைத் தோங்கியது. கன்னட மொழியும், ஒரியா மொழியும், மராத்தி மற்றும் களிதெலுங்கும் சிறப்பாக வளர்ச்சியுற்றன.

சாளுக்கியரின் ஆட்சிக்குப் பின்னிட்டு ஒய்சாளப் பேரரசு கர்நாடாகத்தில் சிறந்து விளங்கி, கன்னட மொழியையும் சிற்பம், சித்திரம் போன்ற கலைகளையும் சிறக்கச் செய்தது.

ஆனால், கி. பி. 13-ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் வட இந்தியாவிலிருந்து வந்த முகமதியரின் படையெடுப்பு, இந்தப் பேரரசுகளை நிலைகுலையச் செய்தது. இதனால் தக்காணத்தின் வரலாற்றில் புதிய திருப்பம் ஒன்று உருவாயிற்று. 14-ஆம் நூற்றாண்டில், தக்காணப் பகுதியின் வரலாற்றிலேயே முதன் முறையாக முகமதியர் மதம் வேர் விட்டது. கர்நாடகத்தின் வடபகுதியையும் மராட்டியத்தின் பெரும் பகுதியையும் ஆந்திரத்தின் தற்போதைய தெலுங்கானப் பகுதியையும் உள்ளடக்கிய தக்காணத்தின் வடபகுதி, பீசப்பூர் சுல்தானின் ஆளுகைக்குள் வந்தது.

முகம்மதியரின் அரசியல் ஆதிக்கம் மற்றும் மத ஆதிக்கத்தைத் தடுத்து நிறுத்த, விசய நகரத்தைத் தலைநகராகக்கொண்டு தக்காணத்தின் தென்பகுதியை உள்ளடக்கிய விசய நகரப்

பேரரசு உருவாயிற்று. கர்நாடாகம், ஆந்திரா இவைகளின் தென்பகுதிகளை மையமாகக் கொண்ட விசயநகரப் பேரரசு தென்னகத்தின் பெரும் பகுதியைத் தன் வயப்படுத்திக் கொண்டிருந்தது.

முதல் நூற்ருண்டு முதல் 15-ஆம் நூற்ருண்டு வரை ஏறத் தாழ 1500 ஆண்டுகளின் தக்காண வரலாற்றைப் பகுத்துப் பார்த்தால், தக்காணத்திற் கென்று ஒரு முழுமையான வரலாறு அமையவில்லை என்பது தெளிவாகும். தக்காணத்திலிருந்த தனி நாடுகளின் தனித்தனி வரலாறுகளின் தொகுப்பே தக் காணத்தின் வரலாருகத் திகழ்கிறது. தனித்த தேசிய இனங் களின் திறம்பட்ட வளர்ச்சிக்கும் அதனதன் மொழி, கலை, கலாச் சார வளர்ச்சிக்கும் அந்தந்தப் பகுதி வரலாறுகள் எப்படித் துணை நின்றன என்பதை முதல் பதினைந்து நூற்ருண்டுத் தக்காண நாடுகளின் வரலாறு நமக்குத் தெளிவாக எடுத் தியம்புகிறது.

**(இ) தென்னக வரலாறு**

தமிழகத்தின் வரலாறு – தமிழ் மொழியின் வரலாறு ஆகும். தமிழ் தோன்றிய காலம், சரித்திரத்தில் வரையறுக்கப்பட வில்லை. ஆக, தென்னகத்தின் வரலாறு மிகத் தொன்மை யானது. தொல்காப்பியச் சான்றுகளும், வெளிநாடுகளிற் கிடைக்கும் நேரடிச் சான்றுகளும் தமிழகத்தை ஓர் இன அடிப் படையில், மூவேந்தர்கள் பண்டு தொட்டு ஆண்டு வந்தனர் எனச் செப்புகின்றன. பன்னெடுங் காலமாகத் தனித்த நாகரிக வரலாறு படைத்த தமிழ் மன்னர்களை, மூன்ரும் நூற்ருண்டில் களப்பிரர்கள் வென்றனர். ஏறத்தாழ இருநூறு ஆண்டுக் கால, களப்பிரர்களின் ஆட்சி, தமிழகத்தின் இருண்ட காலம் என வழங்கப்படுகிறது. பின்னர் மதுரையில் பாண்டியர்களும், காஞ்சியில் பல்லவர்களும் அரியணை ஏறினர். மகேந்திர பல்லவனும் நரசிம்ம பல்லவனும் தமிழகத்தின் பொற்காலத் தைப் படைத்தார்கள். பல்லவர்கள் சாளுக்கியப் பேரரசின் தலைநகரான வாதாபி வரை சென்று, சாளுக்கியரை வெற்றி கண்டனர். குகைக் கோயில்களும் சிற்பங்களும் ஓவியமும் நுண்கலைகளும், சைவ - வைணவ சமயங்களும் வளர்ச்சி யுற்றன.

ஒன்பதாம் நூற்ருண்டின் இறுதியில் சோழர்கள் தலை தூக்கி, பல்லவர்களையும் பாண்டியர்களையும் வெற்றி கொண்டு, சோழப் பேரரசை நிறுவினர். இராசராச சோழனும் அவன் மைந்தன்

இராசேந்திரனும் சோழப் பேரரசை தலை நிமிரச் செய்தனர். ஈழம், மலேயா, கடாரம், பர்மா, மற்றும் பல வட இந்தியப் பகுதிகளையும் வெற்றி கொண்டனர். பல்லவர் காலத்தில் வளர்ச்சி பெற்ற கட்டிடக் கலை, சிற்பம், ஓவியம் ஆகிய நுண்கலைகளும், தமிழ் இலக்கியங்களும் சோழப் பேரரசினால் பேணி வளர்க்கப் பட்டன. சோழர்களின் காலத்தில் தமிழர்களின் பொற்காலம் உயர்நிலையை அடைந்திருந்தது.

14-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் முகமதியரின் படையெடுப்பால் தமிழகம் சிதருண்டு போய்ப் பேரரசுகள் கண்ட மூவேந்தர்கள், சிற்றரசர்களாக ஆக்கப்பட்டனர்.

15-ஆம் நூற்றாண்டில் உச்ச நிலையிலிருந்த தக்காணத்து விசயநகரப் பேரரசு, தமிழகத்தையும் தன்னோடு இணைத்துக் கொண்டது.

1500 ஆண்டுகளின் தென்னக வரலாற்றை நாம் ஆய்வு செய்தால் வடபுலத்துப்பேரரசுகள் என்றுமே இதைத்தன்னகப் படுத்தவில்லை என்பது புலனாகும். தமிழ் இனமும், தமிழ் மொழியும், அதன் பண்பாடும் ஒவ்வொரு கால கட்டத்திலும் வரலாற்றுச் சுமைகளையும் விளைவுகளையும் தாங்கிக் கொண்டன. முதல் 15 நூற்றாண்டுகளின் தென்னக வரலாறு, தமிழர்களின் நீண்ட வரலாற்றின் பிற்பகுதியே யாகும். தமிழகத்தைப் பொறுத்த வரை, வரலாற்றுக் காலத்திற்கு முன்னரே தமிழ் மொழியும், தமிழ் இனமும், நாகரிகமும் அதனுடைய உச்சத்தை அடைந்து சிறந்திருந்தாலும், பிற்பட்ட வரலாறு அவற்றை முழுமையாக வளர்க்க வில்லை என்பது கண்கூடு. உலகின் பண்டைய இனங்களின் பிற்பகுதி வரலாற்றுத் திருப்பங்கள் அவற்றின் வீழ்ச்சியையே மெத்தவும் காட்டுகின்றன. ஆனால் தமிழினம், வரலாற்றின் நெருக்கடிகளில் கூட, சில சிதறல்களைச் சந்தித்ததே தவிரத் தன்னை என்றும் முழுமையாக இழந்து விட வில்லை. தன் பண்பாட்டோடு மற்ற பண்பாடுகளையும் ஏற்றுக் கொண்டதே யன்றி, தனது தனித்த பண்பை என்றும் மாற்றிக் கொண்டதில்லை.

ஆகவே, நில நூலின் சிறப்பியல்புகளும் வரலாற்றுச் சான்றுகளும், பேரரசுகளின் எழுச்சியும் வீழ்ச்சியும் தனி நாடுகளின் பல மொழிகளும் பல தேசிய இனங்களும் அவைகளின் தனித்த வர

லாறுகளும் இன்னோரன்ன பலவும், ''இந்தியா'' 'ஒரு நாடு' அல்ல என்பதையும், அது ஒரு துணைக்கண்டமே என்பதையும் ஐயந் திரிபற நிலை நாட்டுகின்றன.

## IV

## 'இந்திய ஒற்றுமை'-பெற்றுவிட்ட முடிவல்ல; பெறவேண்டிய இலக்கு.

இந்தியத் துணைக் கண்டத்தின் பல்வேறு பகுதிகள் நீண்ட காலமாகத் தனித்தனி வரலாற்றையும், மொழி, இன, தேசிய பாரம்பரியத்தையும் பெற்றுத் திகழ்ந்தன என்பதை நாம் கண்டோம். ஆனால், அத் தனி நாடுகள் இன்றைய இந்திய வரை படத்தில் தென்படவில்லையே? இந்தியா என்ற பூபாகம் ஒற்றுமையுடன் வதியும் ''இந்தியர்கள்'' என்ற ஓரின மக்களை மட்டுமே பெற்றுத் திகழ்கிறதே? இந்தியாவில் வதிந்த பற்பல மொழி, இன, தேசிய மக்களின் இயற்கையான வேறுபாடுகள் யாவும் மங்கி மறைந்து, தற்போது 'அகில இந்திய ஒற்றுமை' உருவாகி விட்டதல்லவா? அப்படியிருக்க, இந்திய மக்களின் மொழி, இனம், வரலாறு சார்ந்த வேற்றுமைகளைப் பற்றிப் பெருக்கிக் கூறுவதில் பயன் என்ன விளைகிறதென நமக்குத் தோன்றும். ஆனால் உண்மை யென்ன?

இந்திய நாட்டின் பல வேற்றுமைகளில் இயல்பாகவே ஓர் ஒற்றுமை உண்டென்பதும், அது அகில இந்தியத் தேசியத்தை யும்,இயற்கையான பிணைப்பையும், உளப்பூர்வமான ஒற்றுமை யையும் இந்திய நாட்டின் பல்வேறு மொழி-இன மக்களிடையே வளர்த்துள்ளதெனக் கூறுவதும் அடிப்படையற்ற வெறும் சந்தர்ப்பவாதங்களாகும். அதனை இங்கு ஆய்வோம்.

### அகில இந்தியா?

முதலில் 'அகில இந்தியா' எது என்பதைப் பார்ப்போம். ''அகில இந்தியா'' என்று குறிப்பிடப்படக்கூடிய ஒரு பெரு நிலப் பரப்பு, ஆதியில் எந்தெந்தப் பகுதிகளைக் கொண்டிருந்தது? அதற்குப் புராண, இதிகாச மூலங்களைத் தவிர வேறு சான்றுகள் ஏதேனும் உண்டா? இந்தியா என்ற பெயரே ஆங்கிலேயர் இட்ட பெயர். எனவே அகில இந்தியாவிற்கு வரலாற்று விளக்கம் கூறிட இயலாது.

''பரத கண்டம்'' என்ற புண்ணிய பூமிக்கு எல்லைகள் எவை? இந்துக்கள் வாழ்ந்த ''இந்துஸ்தானம்'' எங்கு தொடங்கி எதில் முடிவடைகிறது? அங்கம், வங்கம், கலிங்கம் எனத் தொடங்கி 56 தேசங்களைக் கொண்ட இந்தியப் பகுதி எது? இன்றைய ஆப்கானிஸ்தானம் வரையும், ரஷ்ய நாட்டின் தென் பகுதி வரையுமே பரந்து நின்ற நிலப்பகுதியா பரத கண்டம்? அல்லது தமிழகம் நீங்கலாக மௌரியப் பேரரசின் ஆளுகையிலிருந்த நிலப்பகுதிதான் புனித இந்துஸ்தானமா? அல்லது ஒரு காலப்பகுதியில் நர்மதை நதிக்கும் வடக்கே முகம்மதியர்களால் ஆளப்பட்ட நிலப்பரப்பிற்குப் பெயர் தான் புனித இந்துஸ்தானமா?

வெள்ளையன் வெற்றிமேல் வெற்றியைக் குவித்து, இன்றைய ஆப்கானிஸ்தானத்தின் பாதிப் பகுதி வரையும் தன் பேரரசின் எல்லைகளை விரிவுபடுத்தினானே, அந்தப் பகுதிகளையும் உள்ளடக்கியதுதான் நமது அகண்ட இந்தியாவா? கி. பி. 1824-ஆம் ஆண்டு தொடங்கி கி. பி. 1866-ஆம் ஆண்டிற்குள் ஏறத்தாழ 42 ஆண்டுகளில், இன்றைய பர்மா நாட்டில் போர்கள் பலவற்றை நடாத்தி அந்தப் பகுதியையும் வென்று, அதனையும் கல்கத்தாவுடன் சேர்த்து ஆங்கிலேயன் ஆண்டானே, அந்தப் பர்மா நாட்டையும் அகண்ட பாரதத்தின் ஒரு பகுதிதான் எனக் கூறலாமா?

கி. பி. 1798-ஆம் ஆண்டில் வெள்ளையனின் காலடியில் வீழ்ந்துபட்ட இன்றைய இலங்கை நாடும், ஒரு மாவட்டம் என்ற தகுதியில் கூட அல்ல - ஒரு வட்டம் என்ற அடிப்படையில் தமிழகத்தின் தஞ்சை மாவட்ட ஆட்சித்தலைவரால் (கலெக்டர்) ஆணைகள் பிறப்பிக்கப்பட்டு – வெள்ளையனின் பேரரசால் இந்தியாவுடன் சேர்த்து அண்மைக்காலம் வரையும் ஆட்சி செய்யப்பட்டு வந்ததே, அந்த இலங்கையையும் சேர்த்து இந்திய நாடு எனக் கணக்கிட்டுக் கொள்ளலாமா? அல்லது பர்மா தனித்தொதுங்கிய பின்னர் — இலங்கை தனி நாடான பின்னர் — பாக்கிஸ்தானம் பிரிந்து சென்ற பின்னர்—எஞ்சி நிற்கிறதே இன்றைய ''இந்தியா எனப்படும் பாரதம்'' — அதுதான் உண்மையான அகில இந்தியாவா? எது அகண்ட பாரதம்?

வரலாற்றின் பல்வேறு கால கட்டங்களில் பலப்பல பேரரசுகள் தோன்றிய போதும்—பின்னர் வீழ்ந்த போதும்—தென்கிழக்கு ஆசியப் பகுதியிலிருந்த பல தனித்தனி நாடுகளது எல்லைக்கோடுகள் அவ்வப்போது மாறிக் கொண்டே

வந்துள்ளன என்பதுதான் வரலாறு காட்டும் உண்மையே யன்றி, ''பாரதம்'' என்ற ஒரே ''அகண்ட இந்தியா'' என்றுமே இருந்ததில்லை.

**மாயத் தோற்றம்**

அகில இந்தியா இல்லையெனில், இன்றைய ஒருமைப்பாடு எவ்வகையில் தோன்றிற்று ?

பதினாறும் நூற்றாண்டின் தொடக்கத்தில் உருவான மொகலாயப் பேரரசு, இந்தியத் துணைக் கண்டத்தின் பல பகுதிகளை ஒன்றன்பின் ஒன்றாக வென்று, தமிழகம் நீங்கலாக, மற்ற எல்லாப் பகுதிகளையும் தன்னகத்தே ஆட்கொண்டு விட்டது. மொகலாயப் பேரரசர்களில் தலை சிறந்தவரான அக்பர் ஒரு வலிமையான மைய அரசின் மூலமாக, இந்தியத் துணைக்கண்டத்தின் பெரும் பகுதியை ஒற்றுமைப்படுத்த முயன்றார். வாள் முனையாலும் அரச தந்திரத்தாலும் அவர் ஓரளவு அதில் வெற்றியும் கண்டார். மொகலாயர்களின் கடைசிப் பேரரசரான ஔரங்கசீப் காலத்தில் மத்திய அரசினுடைய ஒருமுக வல்லாட்சி முழுமை பெற்றது; ஆனால் முடிவும் பெற்றது.

இந்தியச் சரித்திரத்திலேயே, இந்தியா முழுவதற்குமான ஒற்றையாட்சியை (Unitary Government) முதன் முதலாக உருவாக்கி அதில் ஓரளவு வெற்றியும் கண்டு, பின்னர் இயற்கையான மொழி, இன, தேசிய உணர்வுகள் கிளர்ந்தெழுந்ததால் ''அகில இந்தியாவை'' நிலை நாட்டுவதில் தோல்வியைத் தழுவிக் கொண்டவர்களும் முகலாயர்களே.

முகலாயர் காலத்தில் இந்தியத் துணைக்கண்டம், ஒரே மத்திய ஆட்சிக்குட்பட்ட பற்பல கூறுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவை யெல்லாம் மத்திய அரசின் பிரதிநிதிகளால் நேரடியாகவும் ஆளப்பப்பட்டன. எனவே மொழித் தேசிய அடிப்படையில் தனி ஆட்சியோடு அதுவரை இயங்கி வந்த தனி நாடுகள் யாவும் தத்தம் தனித்தன்மையையும் சுயாட்சியையும் முகலாயப் பேரரசின் பொற்காலத்தில் தற்காலிகமாக இழந்து நின்றன. இந்தியத் துணைக்கண்டம் தோற்றத்திற்கு ஒற்றுமை கொண்ட ஒரு நாடு போலவே தென்பட்டது.

மொகலாயரை அடுத்து வந்த ஆங்கிலேயரும் அவர்களைப் பின்பற்றி இந்தியத் துணைக் கண்டத்தை 'ஒரே நாடு' எனவும் அதில் வதிந்த மக்களை, 'ஓரின மக்கள்' எனவும் கொண்டு ஒரே மத்திய வல்லாட்சியின் கீழ் அதனை இயக்கத் தலைப்பட்டனர். ஆனால், இறுதியில் ஆங்கிலேயர்களும் தாம் செய்த தவறை உணர்ந்து இந்தியத் துணைக்கண்டத்தின் பல்வேறு மொழி சார்ந்த தேசிய இனங்களுக்கேற்ற வகையில் மத்திய அரசின் அதிகாரங்களைப் பரவலாக்கி மாநிலங்களுக்கு, "கட்டுப்படுத்தப் பட்ட சுயாட்சியை" வழங்கி மத்தியிலே ஒரு கூட்டாட்சியை நிறுவ முயன்றனர்.

எனினும், மொகலாயர் காலத்திலும் ஆங்கிலேயர் காலத்திலும் ஏறத்தாழ 500 ஆண்டு காலமாக மத்திய வல்லாட்சி முறை (ஒற்றையாட்சி முறை) இந்தியத் துணைக்கண்டத்தில் நடைமுறைப் படுத்தப்பட்டு விட்டதால் தனித் தன்மைகளைக் கொண்ட பல மொழிப் பகுதிகளில் பண்பும், பாரம்பரியமும், சுயாட்சியுரிமையும், இன மொழிப் பாகுபாடும் சற்றுச் சிதைந்து உருமாறி நின்றன. இந்தியா பல நாடுகளைக் கொண்ட ஒரு துணைக் கண்டமென்ற ஒரு நிலைமாறி, இடைக்காலத்தில், ஒருமைப் படுத்தப்பட்ட ஒரே நாடு போல் தோற்றமளித்தது.

இந்த நிழலைத்தான் 'அகில இந்திய ஒற்றுமை' எனக் கூறுகின்றனர். உண்மையில் அது ஒருமைப்பாடல்ல; ஒற்றுமையைப் போன்ற ஒரு வெறும் மாயத் தோற்றமே; அது செயற்கையானதும் மிக்க பலவீனமானது மாகும். நில நூலாலும், நெடிய வரலாற்றாலும், தனித்த மொழிகளாலும், பண்பாட்டாலும், உருவாக்கப்பட்டதும், பேணி வளர்க்கப் பட்டதுமான தனித் தேசிய இனங்கள் ஒரு வலிமையான மத்திய அரசின் ஆட்சியால் ஒன்றோடொன்று கலந்து விட்டதெனக் கருதுவதும் அதன் வழி உண்மையான அகில இந்திய ஒற்றுமை மலர்ந்து விட்டதெனக் கொள்வதும் பேதமையிலும் பேதமை.

'இந்திய ஒற்றுமை' — பெற்றுவிட்ட முடிவல்ல ;
பெறவேண்டிய இலக்கு.

பழைய பாரதப் பிரதமர் பண்டித நேரு அவர்கள், இந்தியத் துணைக் கண்டத்திலுள்ள பல வேற்றுமைகளின் ஆழத்திலும், ஏதோ ஓர் ஒற்றுமை இழையோடுவதாகக் கருதினர். அதனையே அவர் ''வேற்றுமைகளில் ஒற்றுமை'' ( Unity in Diversity ) எனக் குறிப்பிட்டார். அந்த "ஒற்றுமையை" அவர் இனம் தெரியாத ஓர் இறுகிய பிணைப்பு எனக் கூடச் சுட்டுகிருர். அதனைத் தெளிவுபடக் கூறுவதானல் இந்திய நாட்டில் இயற்கையாயிருக்கும் பல வேறுபாடுகளின் உட் கூறுகளில் "அந்த ஒருமை உணர்வு" தொக்கி நிற்கிறது என்பதுதான் அதற்குப் பொருள். உண்மையில் பல மொழித் தேசிய இனங்களைச் சார்ந்த பல மக்களின் அந்தப் பிணைப்பு ஆதனதன் தனித்த பண்புகளையும் மீறி, புற வேறுபாடுகளுக்கும் அப்பாற்பட்டு, பண்டித நேரு அவர்கள் கூறுவதைப் போல் உட்கருவாய் இயங்குகின்றதா? இல்லை.

அரசியல் வித்தகர் திரு. ஹேயஸ் (PROF. HAYES) அவர்கள்,

> ''தேசியம் ( நாட்டுணர்ச்சி ) என்பது ஆதி நாகரிகத்தின் தொடக்கத்திலிருந்த பழங்குடி மக்களின் உணர்வைப் போன்றதாகும். ஒரே வரலாற்று மரபையும் பழக்க வழக்கத்தையும் மொழியையும் கொண்ட ஓர் சமுதாயத்தைச் சார்ந்தவர்களது வாய்மை தவருத உன்னதமான பற்றுறுதியை (பக்தியை)க் குறிப்பது தான் தேசியம்.''10

எனத் தேசியத்திற்கு இலக்கணம் வகுக்கிருர்.

இந்தியத் தேசியத்தை ஓர்ந்து பார்த்தால் இந்திய நாட்டு மக்கள் யாவரும் மேற்சொன்ன வாய்மை தவருத பற்றுறுதியை ஒரு சேரக் கொண்டிருக்கவில்லை என்பது தெரிய வரும். எனவே இந்தியத் துணைக் கண்டம் பல வேற்றுமைகளுக்கிடையிலும் ஓர் ஒற்றுமையைப் பெற்றிருக்கவில்லை என்பதும் புலனகும். இந்தியத் தேசியத்தைப்பற்றி ஆய்வு செய்யும்போது,

---

10 'Nationalism', Encyclopaedia of Social Sciences, XI, Page 241

டாக்டர் திரு. அமல்ரே அவர்கள் குறிப்பிடுகிருர்,

> ''ஆனல், இந்தியத் தேசியம் இந்த உருவத்தை(உண்மையான இந்தியத் தேசப்பற்றை) எப்போதும் ஏற்றுக் கொண்டதில்லே. பண்டைக் காலத்தைப் பொறுத்தவரை அதன் (இந்தியத் தேசபக்தி) ஆற்றல் குறைந்த அளவினேயுடையதே; பொதுவாக அது நிகழ்காலத்திற்கும் அதன் பின்னர் எதிர்காலத்திற்கும் தொடர்பாக அமையும் அளவிற்கு மட்டுமே இருந்தது.''11

என விளக்குகிருர்.

> "But Indian Nationalism seldom took this form; its appeal was only to a lesser extent to the past; By and large, its appeal was to the present and the future."

இந்திய வேற்றுமைகளில் இயல்பாகவே ஒற்றுமை இருந்திருப்பின், 'இந்திய நாடு' என்ற அடிப்படையில் அதன் எல்லாப்பகுதி மக்களிடமும் ஒரே தன்மைத்தான நாட்டுப்பற்று 3000 ஆண்டு வரலாற்றின் ஒவ்வொரு கால கட்டத்திலும் வெளிப்பட்டிருக்க வேண்டுமல்லவா? அல்லது குறைந்த அளவிலாவது அவ்வகை உண்மைத் தேசப்பக்தி எல்லாரிடமும் அவ்வப்போது ஒரே சீராக வெளியாயிருக்க வேண்டுமல்லவா? இல்லேயே?

எனவே, இந்திய வரலாற்றின் பல காலப்பகுதிகளில் இந்தியப் பேரரசர்கள், சிந்தனேயாளர்கள் மற்றும் அரசியல் வல்லுனர்களெல்லாம் இந்தியாவை எவ்வகையிலாவது ஒருமைப்படுத்த வேண்டுமென்ற சீரிய எண்ணத்துடன் தான் ''வேற்றுமைகளில் ஒற்றுமை'' என்ற கோட்பாட்டை உருவாக்கி அதனேக் கடைப்பிடிக்க முயன்றனர். அதற்காகப் பல பேரரசர்கள் ஒரே மத்திய ஆட்சியையும் இந்தியா முழுவதற்குமாக உருவாக்கினர். ஆனல் வன்மையான மையத்தாலும் அதிகார பலத்தாலும் இந்திய ஒற்றுமையை இறுதி வரை ஏற்படுத்த அவர்களால் இயலவில்லே.

---

11 Doctor. Amalray, Inter Governmental Relations in India, [1966], Page 14.

நமது முதல் குடியரசுத் தலைவர் திரு.பாபுராசேந்திரப் பிரசாத் அவர்கள்,

''நமது வரலாற்றில் இந்துப் பேரரசுகள் காலத்திலும் முகமதியரின் ஆட்சிக் காலத்திலும் வாழ்ந்த வெற்றி கொண்ட வேந்தர்களும்,மற்ற இந்தியப் பேரரசர்களும் மற்றும் இந்தியா மீது படையெடுத்தவர்களும் இந்திய நாட்டினுடைய எல்லாப் பகுதிகளிலும் தங்களது பேரரசுகளை விரிவாக்க முயற்சித்து அதில் ஓரளவு வெற்றியும் கண்டார்கள். இந்தியாவின் எல்லாப் பகுதிகளையும் அவர்களுடைய நேரடி ஆளுகைக்கு அவர்களால் கொண்டு வர இயலாவிடினும், அந்தந்தப் பகுதிகளின் மேல் 'மேலாட்சியைச்' செலுத்தும் அளவிற்காவது அதிகாரத்தைப் பெற ஒவ்வோர் அரசர்களும் விழைந்தனர். முகமதியர் மற்றும் இந்துப் பேரரசுகளுடைய பழைமையான இந்த வழியைப் பின்பற்றியே ஆங்கிலேய அரசும் அனைத்திந்தியா முழுமைக்கும் தங்கள் மேலாட்சியை நிறுவுவதில் வெற்றி கண்டனர்.''12

எனத் தன் ''இந்தியா பிரிக்கப்பட்டால்'' என்ற நூலில் தெளிவாக்குகிறார்.

பேராசிரியர். K. R. பாம்வெல் அவர்கள் இந்தியாவின் அரசியல் ஒருங்கிணைப்பைப் பற்றித்தனது கருத்தை அறிவிக்கும் போது,

''ஆங்கிலேயர்களால் முழுமையான இந்திய அரசியல் ஒருங்கிணைப்பை (Unification) உருவாக்கும் காலம் வரையிலும் அந்தக் குறிக்கோளை அடைவதற்காகப் பலமுறை பலரால் முயற்சி எடுக்கப்பட்டன; அதில் அவர்கள் ஓரளவு அல்லது முழுமையாக வெற்றி பெற்றிருந்தாலும், அவர்களால் அதை நிலையாக அடைய முடியவில்லை.''13

எனக் குறிப்பிடுகிறார்.

---

12 *Dr.* Rajendra Prasad, ''India *Divided*'' [3rd Edition 1947] Page 67.

13 The Foundations of Indian Federalism, (1967) Page 33.

ஆகவே,இந்தியத் துணைக் கண்டத்தைச் சார்ந்த மக்களிடம் ''அகில இந்திய ஒருமைப்பாடு'' இயற்கையாகவும் உளப் பூர்வமாகவும் எப்போதும் இருந்ததில்லை. வெளிநாட்டுப் படையெடுப்பாளர்களாலும் ஆதிக்க வெறிகொண்ட அயல்நாட்டு அரசர்களாலும் ஒவ்வொரு காலப் பகுதியிலும் இந்தியர்கள் அடிமைப் படுத்தப் பட்டார்கள் என்பதையும் இந்தியர்களின் சுதந்திரம் அப்போதெல்லாம் ஒருசேரப் பறிபோய் நின்றது என்பதையும் தான் பெரும்பகுதி இந்தியச் சரித்திரம் நமக்குக் காட்டுகிறது. எதிர்காலத்தில் மீண்டும் அச்சோக வரலாறு திரும்பி விடக்கூடாது என்பதற்காகவே இந்திய மக்களிடம் இயற்கையான பல வேற்றுமைகள் இருப்பினும்,''இனந்தெரியாத ஓர் ஒற்றுமை'' உண்டென நமது தேசியத் தலைவர்களால் உருவமைத்துக் காட்டப் பட்டது. விடுதலை இயக்க காலத்தில் ''இந்திய ஒருமைப்பாடு'' என்ற உணர்வு இந்திய மக்களுக்கு ஊட்டப்பட்டது. ஆனால் அந்தத் தீவிர உணர்வு இந்திய நாடு விடுதலை பெறும் வரையிலும் தற்காலிமாக நிலைத்திருந்ததே யன்றி, அதன் பின்னர் அது மறைந்து விட்டது. எனவே இன்றைய பாரதத் தேசியமும் இந்திய ஒருமைப்பாடும் அரை குறையானதே யன்றி முழுமையானதல்ல; உளப்பூர்வமான உணர்ச்சி பூர்வமான பிணைப்பு அல்ல.

ஆங்கிலேயர் காலத்தில் இந்திய ஒருமைப்பாடு உருவானதைப் போன்ற தோற்றத்தைப் பெற்றதற்கு உண்மைக் காரணங்கள் என்ன?

வெள்ளை ஏகாதிபத்தியத்தின் அடக்குமுறை, எல்லா இந்திய இன, மொழி மாநில மக்களையும் அடிமைப் படுத்தி விட்டது. அவர்களது தனிச் சுதந்திரமும் தவிடு பொடியாகி விட்டது. அடிமைத் தனத்தின் துன்பத்தை இந்திய மக்கள் அனைவரும் ஒருசேர உணர்ந்தனர். பொது ஆபத்தை அவர்கள் எண்ணினர். அதன் விளைவாக இன, மொழிப் பாகுபாடுகளைக் கடந்து, ஓர் பொது அரசியல் விழிப்புணர்ச்சி எல்லாரிடமும் ஏற்படலாயிற்று. வெள்ளையன் பொது எதிரியானன். இந்தியாவின் அனைத்துப் பகுதி மக்களுக்கும் ஒரே நோக்கமும் ஒரே இலக்கும் தான் அன்று இருந்தது. ''சுதந்திரம் பெற்றேயாக வேண்டும்; வெள்ளை யேகாதிபத்தியத்தை இந்திய மண்ணிலிருந்து அகற்றியாக வேண்டும்'' என்பதுதான் அந்தப் பேருணர்ச்சி. அந்த இலக்கினையடைய அரசியலிலும் பொது நோக்கு, பொது முறைகள் ஆகியவற்றிலும் பெரும்பான்மை மக்கள் ஒன்று சேரலாயினர். அப்போது எல்லா இன, மொழி மக்களிடமும் ஒரே வகை அரசியல் வாழ்வு மேம்பட்டு நின்றது.

விடுதலை இயக்கம் உருப்பெற்றுத் தீவிரமாயிற்று. தியாகங்கள் மலர்ந்தன. அதற்கேற்றாற் போல் விடுதலை இயக்கம் சில எதிர்காலப் பொதுக் குறிக்கோள்களையும் மக்கள் மன்றத்தில் உறுதிப்படுத்தியது. ஜனநாயகம், சமத்துவம், சுயநிர்ணய உரிமை, மாநில சுயாட்சி மற்றும் கூட்டாட்சி போன்ற உயர்ந்த இலட்சியங்களைப் பெற வேண்டுமென்ற உணர்வு மக்களிடையே நிலவின.

வெள்ளை ஏகாதிபத்தியத்தை இந்திய மண்ணிலிருந்து அகற்றுவதற்கு இந்திய ஒற்றுமை அச்சாணி போன்றதாகும் என்பதை மையமாக வைத்து, இந்திய விடுதலை இயக்கத் தலைவர்கள் ''வேற்றுமையில் ஒற்றுமை'' என்ற மாயத் தோற் றத்தை மெய்ப்படுத்தும் வகையில், "இந்தியா ஓர் நாடு" என்ற ஓர் உருவத்தைக் கொடுத்து, அதற்கென "ஓர் தேசியத் தையும்" படைத்து, அதனைப் 'பாரதத் தேசியம்' அல்லது 'பாரதத் தேசபக்தி' என அழைத்தனர். ''பாரத மாதாவிற்கு ஜே'' என்ற தாரக மந்திரத்தை மக்களுக் கீந்தனர். அரசியல், பொருளாதார விடுதலையைத் தேசிய ஒற்றுமையால் தான் பெற இயலும் என்பதை நன்குணர்ந்திருந்த பண்டித நேரு அவர்களும் மற்ற விடுதலை இயக்கத் தலைவர்களும் அவ் விந்தியத் தேசிய உணர்வைத் தங்களது சொல்லாலும் செயலாலும் உருவாக்கிக் காட்டினார்கள் என்பது மறுக்க முடியாத உண்மையே.

இதற்கு வேறு சில சிறப்புக் கூறுகளும் பின்னணியாக அமைந்தன. ஆங்கிலேயரின் நிர்வாக வசதிக்காக ஆங்கில மொழி இந்தியத் துணைக் கண்டத்தின் ஆட்சி மொழியாயிற்று; வேறுபட்ட பல இந்திய மொழி மக்களுக்குக் கிடையில் உலக மொழியான ஆங்கிலம் ஓர் இணைப்புப் பாலமாயிற்று. இந்தியா வின் பல பகுதிகள், செய்தித் தொடர்புகளாலும் போக்கு வரத்து மற்றும் இரயில் பாதைகளாலும் இணைக்கப்பட்டன. ஆங்கிலேயர்களின் அகில இந்திய அரசு ஒரே மாதிரியான நிர்வாக இயந்திரத்தை எல்லாப் பகுதிகளிலும் நிறுவியது. வெள்ளை ஏகாதிபத்தியம் தனது பேரரசை நீண்ட நாட்களுக்கு நிலைபெறச் செய்ய வேண்டும் என்ற எண்ணத்தில் முழு இந்தியாவிற்குமான ஓர் முக ஆட்சியை நிறுவி, சட்டங்கள், திட்டங்கள், பொருளாதாரக் கொள்கைகள் ஆகியவற்றை யெல்லாம் அகில இந்திய ரீதியில் உருவாக்கிற்று.

இந்து மதத்தைச் சார்ந்தவர்கள் இந்தியத் துணைக் கண்டத்தில் 100-க்கு 83 பேர். அவர்கள் பல இந்திய மாநிலங்களில் ஒருமுகமாகப் பரவி, அதனைத் தன் உயிரிலும் மேலாகப் போற்றி வந்தனர். இந்து மதத்தின் ஆணிவேரான வர்ணாசிரம முறை, அகில இந்தியாவிலும் ஒரே மாதிரியாகப் பரவி யிருந்தது. இந்து மதத்தின் அதன் நல்ல தத்துவங்கள் எல்லாருக்கும் ஒரே சீராய் அமைவுற்றதோ இல்லையோ, அதன் ஆண்டாண்டு காலத்து மூடப் பழக்க வழக்கங்கள், தேவையற்ற சம்பிரதாயங்கள், சாதிப் பாகுபாடுகள் ஆகியவை இனம், மொழி ஆகியவற்றை யெல்லாம் கடந்து இந்திய நாட்டின் அனைத்து மக்களையும் தொத்து நோய் போலப் பற்றிக் கொண்டிருந்தது. இந்தியாவில் பெரும்பான்மை மக்களின் அன்றாட வாழ்க்கை முறை அவர்களது பொருளாதார வசதியை அனுசரித்து நடைபோடவில்லை. மாறாக, அதனையும் மீறி அவர்களின் சமுதாய வாழ்க்கை இந்து மதத்துடன் நெடுங்காலமாகப் பின்னிப் பிணைந்து விட்டது. கொட்டும் வறுமை இந்தியா முழுமையிலும் சமத்துவத்தை உருவாக்கியது. அடிமைத்தனம் இந்திய மக்களிடம் சகோதரத்துவத்தைப் படைத்தது.

இவ்வகையில், இந்து சமயமும், வறுமையும், அடிமைத் தனமும் இந்தியர்கள் எல்லாம் ஓர் இனத்தை—ஒரு நாட்டைச் சார்ந்தவர்கள் என்ற ஒரு தோற்றத்தை ஏற்படுத்தின. ''வேற்றுமைகளில் இனந்தெரியா ஓர் இணைப்பு'', ''வேறுபாடுகளின் ஆழத்தில் இழையோடும் ஒருமைப்பாடு" ஆகியவை மேற்சொன்ன மத, அரசியல், பொருளாதார, சமுதாயக் காரணக் கூறுகளால் செயற்கையாக உருவானவையே யன்றி, இயற்கையான பிணைப்பின் பாற்பட்டவை யல்ல. எனவே, ''வேற்றுமைகளில் மெய்யான ஒற்றுமை'' என்பதும் ''உண்மையான அகில இந்திய ஒற்றுமை" என்பதும் நாம் இனிப் பெறவேண்டிய இலக்கே தவிர, பெற்று விட்ட முடிவல்ல.

## V

## இந்திய வேற்றுமைகளில் நிலையான ஒற்றுமை காண....

இந்திய விடுதலை இயக்க காலத்தில் உருவாக்கப்பட்ட இந்தச் செயற்கையான இந்திய ஒருமைப்பாட்டை அடிப்படையாக வைத்தே, பாரதத் தேசியம் ( பாரதத் தேசபக்தி ) உருவாயிற்று. அதற்கு முன்னர் பரந்த பாரதத் தேசிய

உணர்வு இந்தியாவில் எப்போதுமே இருந்ததில்லை. தமிழர்களிடம் தமிழ்த் தேசிய உணர்வும், மராத்தியர்களிடம் மராத்தியத் தேசிய உணர்வும், வங்காளிகளிடம் வங்கத் தேசிய உணர்வும் தான் அன்றும் இருந்து வந்தது; இன்றும் மேலோங்கி நிற்கின்றது. அதைப் போலவே, இந்தியாவின் பல மொழிவாரி மாநிலங்களிலும் அந்தந்த மொழியினத் தேசிய உணர்வுகளே இன்றும் மேலோங்கி யுள்ளன.

தற்போதைய இந்தியாவில் மத்திய அரசின் வல்லாட்சி ஓங்கியிருக்கும் காரணத்தால், முரண்பட்ட தேசியங்களைக் கொண்ட மாநிலங்கள் அதனதன் அரசியல், பொருளாதார நோக்கங்களை அவ்வப்போது நிறைவேற்றிக் கொள்வதற்காகவே பாரதத் தேசிய மென்ற பட்டுப் போர்வையை, சந்தர்ப்பத்திற்கேற்றபடி பயன்படுத்துகின்றன. இந்தியாவிற்குப் 'பாரத்' எனப் பெயரிட வேண்டுமென்று அரசியலமைப்புச் சபையில் தீவிர உணர்வோடு போரிட்டவர்கள் கூடத் தங்களது மொழி சார்ந்த தேசிய உணர்வால் உந்தப்பட்டே தங்களது நோக்கத்தை நிறைவேற்றிக் கொண்டார்கள். ஆனால், அந்த இனத் தேசிய உணர்வைப் 'பாரதத் தேசியம்' என்ற பட்டுப்போர்வையால் மூடி மறைத்துக் கொண்டனர். ''மாநில சுயாட்சி'' என்ற வரலாற்றுப் பூர்வமான மொழித் தேசிய உணர்வைக் கூட ''பாரதத் தேசியம்'' என்ற மாயத்திரையால் வெகுகாலம் மறைத்துவிட முடியாது. அகில இந்தியத் தேசியத்தில் ஊறித் திளைத்திருந்த தியாகி சங்கரலிங்கனூர் அவர்கள் தமிழ் நாட்டிற்கு ''தமிழ்நாடு'' எனப் பெயரிடக்கோரி அதனை அரசு ஏற்க மறுத்ததால், உண்ணாநோன்பிருந்து தனது இன்னுயிரையும் ஈந்து, தமிழ்த் தேசியத்தை நிலைநாட்டினாரே, அவரது அந்த உயிர்த்தியாகமும் இதனைத்தான் நிரூபிக்கின்றது. எனவே இந்தியத் தேசியம் அல்லது இந்தியத் தேசபக்தி என்பது அண்மைக் காலத்துப் பயிர். அது இந்திய வரலாற்றின் பரிணாம வளர்ச்சியில் ஊடுருவி நின்று நிலை பெற்றுவிட வில்லை.

இந்தியா விடுதலை அடைந்தவுடன் அதனையே ஒரு வாய்ப்பாக்கிக் கொண்டு அது வரையும் உருவமைத்துக் காட்டி வந்த ''அகில இந்திய ஒற்றுமை'' யென்ற நிழலையே அடிப்படையாக வைத்து,இந்தியத் துணைக்கண்டத்தின் பலமொழி தேசிய மாநிலங்களுக்கு முழு சுயாட்சி வழங்காததும் கூட்டாட்சிச்

சாயலை மட்டும் கொண்டதுமான ஓர் அரசமைப்பை உருவாக்கி விட்டனர். பாகிஸ்தான் பிரிவினை அன்றைய தேசியத் தலைவர்களுக்குத் தீராத அச்சத்தைக் கொடுத்திருந்தது. இனியும் இந்திய நாடு பிரிக்கப்பட்டு விடக்கூடாது என்ற அச்சத்திற் காட்பட்டு எஞ்சியிருந்த இந்திய மாநிலங்களை யெல்லாம் அடிமைப்படுத்தி மேலாட்சி செய்யும் வகையில், பெரும் பான்மையான அரசதிகாரங்களை மத்திய அரசில் குவித்து வைத்து மாநிலங்களின் நலன்களுக்கும் நியாயமான மொழி, இன, அரசியல், பொருளாதார உரிமைகளுக்கும் எதிராக அது இயங்கும் வண்ணம், கூட்டாட்சித் தத்துவத்திற்கு முரணான ஒரு மத்திய அரசை, நமது இன்றைய அரசமைப்பில் உண்டாக்கி வைத்து விட்டனர்.

நமது அரசமைப்பு பல ஒற்றையாட்சித் தன்மைகளைப் பெற்றிருந்தாலும் கூட, உண்மையான கூட்டாட்சி அரசியல் சட்டமென அதனைத் திரித்துச் சொல்லி இந்தியாவை முழு மாநில சுயாட்சியுடன் கூடிய கலப்படமற்ற ஓர் கூட்டாட்சி நாடுதான் எனக் கூசாமல் கூறி வருகின்றனர். முழு மாநில சுயாட்சிக் கொள்கை கூட்டாட்சித் தத்துவத்தின் உயிர்க் கூறாயிருந்தாலும் அது பிரிவினைக் கொள்கையின் மூலப் பொருள் எனச்சாற்றிப் பொய்மையை மெய்மையாக்கிக் காட்டு கின்றனர். இன்றைய அரசியலமைப்பில் கொடுக்கப்பட்ட அதிகாரங்களே, மாநிலத் தேவைகளுக்கும் மீறியவை என்றும் மத்திய அரசிற்கு அளிக்கப்பட்ட அதிகாரங்களின் ஈட்டம் இந்தியாவின் வலிமையைக் காட்டுகிறது எனவும் அதற்கு நொண்டிக் காரணங்களும் கூறுகின்றனர்.

ஆனால் இரண்டாயிர மாண்டுகளின் இந்திய வரலாறு காட்டும் பேருண்மைகளை மறைத்து, வன்மையான தொரு மத்திய வல்லாட்சியைக் கொண்டே உணர்ச்சி பூர்வமான இந்திய ஒற்றுமையை உருவாக்கி நிலை நிறுத்த இயலாதென் பதை நமது தேசியத் தலைவர்கள் முற்றிலும் மறந்து விட்டனர். மொகலாயப் பேரரசின் மத்திய அரசைக் காட்டிலும் - ஏகாதிபத்தியத்தை அடிப்படையாகக் கொண்ட ஆங்கிலப் பேரரசின் மத்திய அரசைக்காட்டிலும் - வலிமை மிக்க இன்னொரு மத்திய அரசை, விடுதலை பெற்ற இந்தியாவில் படைத்து விடமுடியுமா? மொகலாயரின் ஒற்றையாட்சி யரசும் வெள்ளையரின் சர்வாதி கார மத்திய அரசும் இன்று சரித்திரத்தின் பொன்னேடுகளில் மறைந்துபோய் வெறும் வரலாற்று வடிவங்களாகி விட்டன.

மத்திய மயமாக்கப்பட்ட அகில இந்திய காங்கிரஸ் கட்சி சென்ற 27 ஆண்டு காலமாக மத்திய அரசில் நிலைத்து நின்று கோலோச்சி விட்ட காரணத்தினுல் உண்மைக்கும், வரலாற்றிற்கும், அரசியல் தத்துவங்களுக்கும் முரணுகக் கூறப்படும் அவர்களது புரட்டு வாதங்களுக்கு ''தேசபக்தி'' – ''அகில இந்திய ஒற்றுமை'' என்ற அழகான வண்ணத்தைப் பூசிக் கொள்கின்றனர். அரைகுறைக் கூட்டாட்சி அரசமைப்பை ( Quasi Federal Constitution ) கொண்டியங்கி வந்த இந்தியா, சென்ற கால் நூற்ருண்டு காலத்தில் அகில இந்தியக் காங்கிரஸ் கட்சியின் மத்திய மய மாக்கப்பட்ட அரசியல் பொருளாதாரக் கொள்கைகளினுல் ஏறத்தாழ ஓர் ஒற்றை ஆட்சி நாடு போலவே மாற்றியமைக்கப்பட்டு விட்டது. இவ்வளவுக்கும் பின்னர் கூட இந்திய நாட்டின் பல்வேறு வேற்றுமைகளிடையே நிலையான ஓர் ஒற்றுமையை நாம் பெற்று விடவில்லை.

மத்திய அரசின் அரசியல் அழுத்தங்களும், ஆதிக்க வல்லாண்மையின் நெருக்கடிகளும் அந்தந்த மாநில மக்களின் தனிமொழித் தேசிய உணர்வுகளைப் பழுதாக்க முனையும் போது, அவை பாரதத் தேசியத்தையும் மீறி வெடித்துக் கிளம்பிவிடும். அவற்றை வெறும் பிராந்திய வாதங்கள் எனத் தள்ளிவிடுவது உண்மையை மறைப்பதாகும். தமிழகத்தில் இந்தி எதிர்ப்புப் புரட்சியும், பழைய பம்பாய் மாநிலத்தை இரு மொழி மாநிலங்களாக ஆக்கக்கோரி நடைபெற்ற பேரியக்கமும், ஆந்திரத்தை சென்னை மாகாணத்திலிருந்து பிரிக்கக் கோரி ஆந்திரர்கள் நடாத்திய பெரும் போரும், பொட்டி ஸ்ரீராமுலுவின் உயிர்த் தியாகமும், மொழிவாரி மாநிலங்களின் எல்லைப் பகுதிப் போராட்டங்களும், ஆந்திரப் பிரதேசத்திலிருந்து 'தெலிங்காளு'ப் பகுதி தனியாகப் பிரிய வேண்டுமென்ற கோரிக்கையும், பீகார் மாநிலத்தினின்றும் பிரிந்து தனி மாநிலமாக வேண்டுமென்ற'ஜார்கண்ட்'மக்கள் கோரிக்கையும்'குசாரத்திலிருந்து 'சௌராஷ்டிரப்' பகுதியும், ராசஸ்தானத்தினின்று 'சித்தகார்' நிலப்பகுதியும், மகாராட்டிர மாநிலத்திலிருந்து 'விதர்ப்பமும்', உத்திரப் பிரதேசத்திலிருந்து 'உத்தர்கண்டும்', 'பந்தல் கண்டும்' பிரிந்து, தனி மாநிலங்களாக வேண்டுமென்ற கிளர்ச்சிகளும், நதி நீர்ப் பங்கீட்டுச் சிக்கல்களும், நாகாலாந்து மற்றும் காஷ்மீரம் போன்ற பகுதிகளின் தனி ஆட்சிக் கோரிக்கைகளும்,தமிழகத்தின் தற்போதைய மாநில சுயாட்சி எழுச்சியும்,இன்னோரன்ன பல சமீபகால அரசியல் நிகழ்ச்சிகள் யாவும்

தனித்தேசிய இனங்களின் எழுச்சிக்கும் விழிப்புணர்ச்சிக்கும், எடுத்துக் காட்டுகள். இந்திய வேற்றுமைகளில் நிலையான ஒற்றுமையைக் கண்டு விட்டோம் எனக் கூறுபவர்களுக்கு அண்மைக் கால வரலாறு காட்டுகின்ற எச்சரிக்கைகள்.

எனவே அகில இந்திய ஒருமைப்பாடென்பது ''வேற்றுமைகளில் ஒற்றுமை'' என்ற வெறும் உணர்ச்சி முழக்கத்தினுல் மட்டும் உருவாகி விடாது; வலிமையான மத்திய அரசாலும் அதனை அடைந்திட இயலாது. மாருக, பல மொழி சார்ந்த மக்களையும் பல தேசிய இனங்களையும் – அதனதன் தன்னுட்சி உரிமைக்கு ஊறு நேரா வண்ணம் – அரசியல் அடிப்படையில் பிணக்கும் உண்மையான கூட்டாட்சியால் மட்டுமேதான் அதை நிலையாக அடைந்திட முடியும்.

இந்தியத் துணைக் கண்டத்திலுள்ள மாநில மக்களின் வரலாறு தழுவிய தனித்தன்மை என்னவெனில், தத்தம் தனிப் பண்புகளையும் மொழி, இன, தேசியத் தன்மைகளையும் என்றும் அழியா வகையில் நிலை நிறுத்திக் கொள்ளும் பான்மையே யாகும். அவற்றை எளிதில் மாற்றிட இயலாது. ஆனுல், தேசிய ஒற்றுமை என்ற மெய்யான விழிப்புணர்ச்சியின்றேல், அரசியல் பொருளாதார ஒருமைப்பாடும் உருவாகாது. எனவே மாநில மக்களின் தனித் தன்மைகளுக்கு இடையூறு ஏற்படா வகையிலும் அதே நேரத்தில் தேசிய ஒருமைப் பாட்டை உளப்பூர்வமாக அம்மக்கள் ஏற்றுக் கொள்வதற்கும் உரிய வழி என்ன?

அரசியல் வித்தகர். திரு. கே. சி. வியர் அவர்கள் அந்த வழியினைக் கூறுகிருர்,

> ''கூட்டாட்சி அரசு பலவகைத் தனித்தன்மைகளைக் காப்பதற்கென்றே அமைந்ததல்ல. பன்மையில் ஒருமை காண்பதற்கும் அது வழி வகை செய்கிறது. ஒற்றுமை தேவைப்படும்போது, அந்த ஒற்றுமையை நல்குகிறது; ஆனுல் ஒருமைப்பாடும் சீர்மையும் அத்துணை அவசியமில்லை என்பனவற்றில், பல்வகைத் தன்மையையும் அவற்றின் சுதந்திரத்தையும் காப்புறுதி செய்கிறது.''

''வேறுபட்ட தனித்தன்மைகளை—அவற்றின் நலன் கருதியோ, அல்லது அவை விரும்பத் தகாததாய் இருந்தால் அவற்றை அழித் தொழிக்க முடியாததினுலோ–நாம் பேணிக் காத்திடல்

வேண்டும். அதே நேரத்தில் அந்த வேற்றுமைகளுக்கிடையில் ஏற்படும் மோதல்களைத் தவிர்ப்பதற்கும், கூட்டுறவை வளர்ப்பதற்கும் தேவையான ஒற்றுமையையும் நாம் உருவாக்கிடல் வேண்டும். இன்றைய நிலையில் மிக விரைந்து தீர்க்கப்பட வேண்டிய அகில உலகப் பிரச்சனைகளில் இதுவும் (வேற்றுமைகளில் மெய்யான ஒற்றுமை காணும் பிரச்சனையும்) ஒன்று. இவ்விரு முரண்பட்ட எதிர் முனைகளையும் ஒன்று சேர்த்துச் சரிப்படுத்துவதற்கு உரியதொருவழி மெய்யான கூட்டாட்சித் தத்துவமே.''14

"Federal Government, after all does not stand for Multiplicity alone. It stands for Multiplicity in Unity. It can provide unity where unity is needed, but it can ensure also that there is Variety and Independence in matters where unity and uniformity is not essential."

"...One of the most urgent problems in the world today is to preserve diversities either where they are worth preserving for themselves, or where they cannot be eradicated even if they are not desirable, and at the same time to introduce such a measure of unity as will prevent clashes and fecilitate Co-operation Federalism is one way of reconciling these two ends......"

எனவே உண்மையான கூட்டாட்சி முறையை இந்தியத் துணைக் கண்டத்தில் முழுமையாகச் செயல்படுத்தினாலன்றி மாநில மக்களின் தனித்தன்மைகளையும் காக்க முடியாது; உண்மையான தேசிய ஒற்றுமையையும் அடைய முடியாது.

வரலாறு தந்த பாடங்களை மறைத்து, அதற்கு முரணான புதியதோர் முறையை—அதாவது வலிமை வாய்ந்த மத்திய அரசை—இனியும் போற்றுவதில் பயனில்லை. இந்திய அரசியல் ஒருங்கிணைப்பைப் பொருத்த அளவில் முகலாயப் பேரரசும் ஆங்கிலப் பேரரசும் செய்த தவறை, அவர்கள் விட்ட இடத்திலிருந்து மீண்டும் நாம் தொடர்ந்து செய்தால், அவர்களுக்கு ஏற்பட்ட சரித்திர விளைவுகள் தான் இன்றைய தலைமுறையினருக்கும் எதிர்காலச் சந்ததியினருக்கும் ஏற்படும் என்பது

14 Federal Government [4th Edition 1971] Pp. 244 and 245

திண்ணம். இந்திய வேற்றுமைகளில் இயல்பாகவே ஒற்றுமை உண்டு என்கிற மாயத் தத்துவமும் நடைமுறை இந்திய அரசியலுக்கு ஏற்றதன்று. மாநிலங்களின் தனித்தன்மைகளை அழிக்கும் வகையில் சர்வசக்தி வாய்ந்த மத்திய அரசை நமது அரசியலமைப்பில் உருவாக்கியதால் மட்டுமே இந்தியத் தேச ஒற்றுமையை ''உணர்ச்சி பூர்வமாக'' நாம் ஏற்படுத்தி விடமுடியாது.

"அரை குறையான—கட்டுப்படுத்தப்பட்ட–சுயாட்சி"யை மாநிலங்களுக்கீந்து அவைகளின் மேல் பேராதிக்கம் செலுத்தும் ஒரு வலிமையான மத்தியக் கூட்டாட்சியைப் படைத்திருக்கும் தற்போதைய அரசமைப்பால் இந்திய ஒற்றுமை தழைத்துவிடாது. ஒருமுக மத்திய ஆட்சியின் சாயலைக் கொண்டதும் வலிவற்ற மாநிலங்களைப் படைத்ததுமான தற்போதைய இந்திய அரசமைப்பை உண்மையான கூட்டாட்சி அரசமைப்புத் தான் எனக்கூறி, இந்திய ஒருமைப் பாட்டை நிலைநிறுத்தக் கூடிய சிறந்த அரசமைப் பொன்றை உருவாக்கி விட்டதாக இறும்பூதெய்தி, நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வதிலும் பயனில்லை.

தற்போது, தனித்தன்மைகள் கொண்ட இந்திய மாநிலங்கள், வன்மை மிக்க மத்திய அரசினுல் உரிமையிழந்து கிடப்பது வெள்ளிடைமலை. வரலாற்றின் வாய்ப்புக்களுக்காக அவை காத்து நிற்பதையும் நாம் மறைப்பதற்கில்லை. மைய அரசின் நிதி, நிர்வாக அழுத்தங்களும் மாநிலங்களின் தனித்தன்மைகளை அழிக்கும் அரசியல் முயற்சிகளும், நெருக்கடிச் செயல்களும் ஒரு சேர வளர்ந்தால் இந்திய ஒருமைப்பாடு என்பது கேலிக் கூத்தாகி விடும். வாய்ப்பேற் பட்டால் உரிய விலையினைக் கொடுத்துக் கூட மாநிலங்கள் இந்திய நாட்டிலிருந்து பிரிந்து போகத் துணியும்.

ஆகவே மையத் தலையீடு இல்லாததும்-சட்ட ஆக்கம்,அரசியல், நிர்வாகம், நிதி, பொருளாதாரம் ஆகிய துறைகளில் முழுமையான அதிகாரங்களைக் கொண்ட தன்னுட்சி பெற்றதுமான - மாநிலங்களையும், நாட்டின் பொது நலன்களை மட்டும் பேணுவதற்குரிய இன்றியமையாத சில அதிகாரங்களைக் கொண்ட மைய அரசையும் இணைத்த ஓர் உண்மைக் கூட்டாட்சி தான், இந்திய் வேற்றுமைகளில் மெய்யான ஒற்றுமையை நிலைக்கச் செய்யும். பலமொழி, இன மக்களைக் கொண்ட தேசிய இனங்களை,அதனதன் தன்னுட்சி

கட்கு ஊறுநேராவண்ணம் பிணைக்கும் முழு மாநில சுயாட்சியுடன் கூடிய உண்மையான கூட்டாட்சியில் மட்டுமே தான் அகில இந்திய ஒற்றுமையை அடைய முடியும். முழு சுயாட்சி பெற்ற மாநிலங்கள் உளப்பூர்வமாக அக்கூட்டாட்சியில் ஒன்றினுல்தான் உண்மையான அனைத்திந்தியாவும் உருவாகும். அப்போது தான் வரலாற்றுக் காலங்களில் நிலை நிறுத்த முடியாத இந்திய ஒருமைப் பாட்டை நம் காலத்திலாவது நிலை நாட்டிட முடியும்.

எனவே வேற்றுமைகளில் மெய்யான – நிலையான - ஒற்றுமை காணவும் இந்திய ஒருமைப்பாட்டை உளப்பூர்வமாக உருவாக்கவும் வேண்டுமெனில் முழு மாநில சுயாட்சியும் வேண்டும்.

மலர்க மாநில சுயாட்சி !



# இரண்டாம் பகுதி

# இந்திய வரலாற்றில் மாநில சுயாட்சி

# இரண்டாம் பகுதியின் தோற்றுவாய்

இந்திய நாட்டின் மாநில சுயாட்சிக் கொள்கைக்கு ஒரு பரிணும வளர்ச்சியுண்டு; நெடிய வரலாறும் உண்டு.

பதினேழாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் மேற்கத்திய நாடுகளில் முளைத்தெழுந்த கூட்டாட்சித் தத்துவம் (Federalism) இந்தியாவில் பழங்கால வரலாற்றில் இடம் பெற்றிருக்கவில்லை. பல நூற்றுண்டுக் காலமாக இந்தியத் துணைக் கண்டத்திலிருந்த பல தனி நாடுகள் முடியரசர்களால் தனியாட்சி செய்யப்பட்டு வந்தன. இடையிடையே சில பேரரசுகள் (Empirs) தோன்றி, இந்திய எல்லைக்குள் அடங்கிய பல நாடுகளையும் போரில் வென்று சில ஆண்டுகள் சாம்ராச்சியங்களாகத் திகழ்ந்திருந்தன.

அவ்வகைப் பேரரசுகளின் மத்திய ஆட்சிக்கும் அதற்குட்பட்ட சிற்றரசுகளின் தனியாட்சிக்கும் இடையே ஒருவகை அரசியல் உறவுகள் (Political Relationship) நிலவி இருந்தன என்பதுஉண்மையே. ஆனல் இன்றைய கூட்டாட்சித் தத்துவத்தின்இலக்கணத்தை யொட்டி, அந்த உறவு முறைகள் அமைந்திருக்கவில்லை. எனினும், தோல்வியைத் தழுவிய சிற்றரசு நாடுகள், பேரரசிற்குரிய திறையையும் வணக்கத்தையும் செலுத்திவிட்டு, தத்தம் நாடுகளில் தன்னுட்சியையே கொண்டியங்கி வந்தன. பேரரசுகளின் மத்திய அரசும் சிற்றரசர்களின் தன்னுட்சியில் குறுக்கிடவில்லை. இவ்வகையில் முழு மாநில சுயாட்சியின் சில அம்சங்கள் அன்றைய இந்தியாவின் அரசு நடவடிக்கைகளிலும் ஓரளவிற்கு இடம் பெற்றிருந்தன என்பதை வரலாறு காட்டுகிறது.

முதன் முதலில், முகலாயப் பேரரசின் காலத்தில்தான் இந்தியாவிலிருந்த பல தனி நாடுகளின் தன்னுட்சி மறைந்தது. அப்போதும் தமிழகம் மட்டும் தனியாட்சியுடனேயே இயங்கிற்று. ஏறத்தாழ இந்தியா முழுவதையும் ஒருமுக மத்திய வல்லாட்சியின் (Unitary Government) மூலம் முகலாயப் பேரரசு ஆட்சி செய்தது. இந்தியத் தனி நாடுகளின் பண்புக்கு, ஒரு

முக மத்திய வல்லாட்சி முற்றும் முரணனதால் ஔரங்கசீப்பிற்குப் பின்னர் முகலாயப் பேரரசின் ஒரு முக ஆட்சியும் வீழ்ந்தது. அதனை யடுத்த 66 ஆண்டுகளில் இந்தியத் துணைக்கண்டத்தைக் கட்டி ஆளும் '' ஒரு மத்திய அரசு '' ஏற்படவில்லை.

இந்திய நாட்டை ஆங்கிலேயர் கைப்பற்றினர்கள். இந்தியாவிலிருந்த பல தனி நாடுகள் தத்தம் சுதந்திரத்தை ஒன்றன்பின் ஒன்ருக இழந்தன. முகலாயர்களைப் போலவே ஆங்கிலேயரும் ஒருமுக மத்திய ஆட்சியையே முதலில் உருவாக்கினர். கிழக்கிந்தியக் கம்பெனி ஆட்சியில் இந்தியா முழுவதும் மத்திய அரசிற்குக் கட்டுப்பட்ட சென்னை, பம்பாய், கல்கத்தா என்ற மூன்றே மூன்று தலை மாகாணங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. மூன்று தலை மாகாணங்களுக்கும் மத்திய அரசிற்கும் இடையில் அடிக்கடி பல பிணக்குகள் தோன்றலாயின. எனவே 1858-ஆம் ஆண்டிற்குள், இந்திய நாடு பல மாகாணங்களாக (Provinces) பிரிக்கப்பட்டது. ஆனல் ஆங்கிலேயர் பல்வேறு சட்டங்களின் மூலமாக மாகாணங்களின் அரசு அதிகாரங்களை யெல்லாம், அதற்குள் மையப்படுத்தி, மத்திய அரசில் குவித்து விட்டனர்.

கி. பி. 1858-ஆம் ஆண்டில் வெடித்த சிப்பாய்க் கலகம் என்ற முதல் சுதந்திரப் புரட்சிக்குப் பின்னர், ஆங்கிலேயர் விழிப்புற்றனர். ஆங்கிலேய ஏகாதிபத்தியம் அது முதல் மெல்ல மெல்ல ஆளும் உரிமைகளை இந்தியர்களுக்குத்தர முன் வந்தது. முதலில் மத்திய அரசில் குவிந்து கிடந்த அதிகாரங்களை மெல்ல மெல்ல மாகாணங்களுக்குப் பரவலாக்கி (Decentralisation) வழங்கினர். மத்திய அரசாங்கத்தின் அங்கங்களைப் போன்று அதுவரை செயல்பட்ட மாகாண நிர்வாகங்களுக்குப் பின்னல் அளிக்கப்பட்ட ''பரவலாக்கப்பட்ட அதிகாரங்கள்'' (Decentralised Powers) அவற்றைத் தன்னட்சி நடத்துவதற்குரிய நிலப்பகுதிகளாய் மாற்றியமைத்தன. மாகாணங்களில் தன்னட்சி உருவாகக் கூடிய சூழ்நிலையும் தோன்றியது.

மாநில சுயாட்சிக் கொள்கைக்கு 1911-ஆம் ஆண்டில் அரசுப் பிரதிநிதி ஆர்டிஞ்ச் (Viceroy Lord Hardinge) அவர்கள் முதன் முதலாக இலக்கணம் கொடுத்தார். 1918-ஆம் ஆண்டின் மாண்டெகு செம்ஸ்போர்டு சீர்திருத்தங்களின் விளைவாக மாகாணங்கள் தன்னட்சியின் நிறுவனங்களாக மெல்ல

மெல்ல மாறத் தொடங்கின. குறிப்பிட்ட தொகுதிகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் பிரதிநிதிகளும் ஆங்கில ஆளுநரின் குழுவும் (Governor in Council) சேர்ந்து மாகாணங்களுக்கெனத் தனித் தொதுக்கிய அதிகார இனங்களில், இரட்டையாட்சி முறையில் ஆட்சி நடத்துவதற்கு, 1919-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டம் ( Government of India Act — 1919 ) முதன் முதலாக வழி செய்தது. மாகாணங்கள் மாநிலங்களாகத் தொடங்கின. மாநில சுயாட்சிக் கொள்கையும் முகிழ்த் தெழுந்தது.

1921-ஆம் ஆண்டு முதல் 1937-ஆம் ஆண்டு வரையும் அந்த இரட்டை ஆட்சி முறை நீடித்தது. மாநில சுயாட்சிக் கொள்கையும் மெல்ல மெல்ல வளர்ச்சி அடைந்தது. முஸ்லீம் லீக்கின் அரசியல் கொள்கைகளும் சுதேச மன்னர்களின் பிரச்சனைகளும் மொழி வாரியாக மாநிலங்கள் பிரிக்கப்பட வேண்டுமென்ற கோரிக்கை உணர்வும் மாநில சுயாட்சியினை ஆக்கத்தோடு வளர்த்தன. இம் மூன்று சிறப்புக் கூறுகளின் கலப்புத் தொடர்பாலும் விடுதலை இயக்கத்தின் விளைவாலும், ஆங்கிலப் பேரரசு பல அரசியல் ஆணைக் குழுக்களின் பரிந்துரைகளையும் அரசமைப்புத் திட்டங்களையும் இந்திய மக்களுக்கு வழங்கியது. அடிப்படையான சில அதிகாரங்களை மட்டும் தன்னிடம் இருத்தி வைத்துக் கொண்டு, இந்திய மாநிலங்களுக்குரிய சில அரசுரிமைகளையும் அதிகாரங்களையும் வெள்ளையர் ஆட்சி அவ்வப்போது வழங்கி வந்தது. எனவே, ஆங்கிலேயர் வழங்கிய அரசமைப்புகளும் ஒருவகையில் மாநில சுயாட்சியின் வளர்ச்சிக்குத் துணை செய்தன. அவைகளில் 1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டம் மிகமிகச் சிறப்பான ஓர் அரசமைப்பாகும்.

1935-ஆம் ஆண்டு இந்திய அரசுச் சட்டத்தின் (Government of India Act - 1935) மாநிலப் பகுதி மட்டும் 1937-ஆம் ஆண்டில் அமுலுக்கு வந்தது. இந்திய மாநிலங்களில், தன்னாட்சி ஊக்கத்துடன் வளர்வதற்கு அச்சட்டமே பெரிதும் காரணமாயிற்று; அச் சட்டம் மாநில அரசுகளையும் மத்திய அரசையும் தனித்தனி அமைப்புக்களாகப் படைத்து அதனதன் அதிகாரங்களைத் தனித் தனியாய்த் தொகுத்து, “கட்டுப்படுத்தப்பட்ட மாநில சுயாட்சியினை” மாநிலங்களுக்கு வழங்கிற்று.

ஏறத்தாழ, தற்போதைய மாநிலங்கள் பெற்றிருக்கும் சுயாட்சியினை ஆங்கில அரசின் கீழிருந்த அன்றைய மாகாணங்களும் பெற்றிருந்தன. அச்சட்டத்தின் அடிப்படையில் 1939-ஆம் ஆண்டின் இறுதி வரை காங்கிரஸ் கட்சி பல மாநிலங்களில் அரசோச்சிற்று. நல்ல வளர்ச்சியைக் கொண்டதும் வரையறுக்கப்பட்டதுமான மாநில சுயாட்சிக் கொள்கை 1937 முதல் 1939-ஆம் ஆண்டு வரை, காங்கிரஸ் அரசுகளால் நடைமுறையில் செயல் படுத்தப்பட்டது.

1939-ஆம் ஆண்டு முதல் 1947-ஆம் ஆண்டு மே மாதம் வரை, பாகிஸ்தான் பிரிவினைக் கோரிக்கைக்கும் அகில இந்திய ஒற்றுமைக்கும் நடுவே, அவை இரண்டையும் இணைக்கும் ஒரு பாலத்தைப் போல் மாநில சுயாட்சிக் கொள்கை வளர்ச்சி பெற்று அதனுடைய முழு எழுச்சியினையும் அடைந்தது. பிரிவினையைத் தவிர்ப்பதற்காகக் கொடுக்கப்பட்ட பல அரசியல் சூத்திரங்களினால் (Political Formulas) மாநில சுயாட்சிக் கொள்கை மேலும் எழுச்சியோடு விளங்கிற்று. பிரிட்டானிய அமைச்சரவைத் தூதுக்குழு (British Cabinet Mission) முழு மாநில சுயாட்சியினையே, இந்தியப் பிரிவினைக்கு மாற்றுத் திட்டமாகப் பரிந்துரை செய்தது. 1946-ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்களில் அரசமைப்புச் சபையின் முதல் தொடர்க் கூட்டத்தில் நமது அரசமைப்புச் சட்டத்திற்கு அடிப்படையான கொள்கையினை எடுத்தியம்பிய பண்டித நேருவின் "குறிக்கோள் தீர்மானத்தால்" (Objective Resolution) மாநில சுயாட்சிக் கொள்கை அதன் உச்சத்தை அடைந்தது.

ஆனால் 1947-ஆம் ஆண்டு மேத் திங்களில் நாட்டுப் பிரிவினை உறுதியாக்கப்பட்டவுடன் காங்கிரஸ் கட்சி தன் வண்ணத்தை மாற்றிக் கொண்டது. மாநில சுயாட்சிக் கொள்கையின் நெடும் பயணமும் தடைப்பட்டது; அது இறங்கு முகத்தைக் கண்டது. அகில இந்தியக் காங்கிரஸ் கட்சி, இந்திய அரசமைப்புச் சபையில் (Indian Constituent Assembly) தனக்கிருந்த மிருகப் பெரும்பான்மை பலத்தின் மூலமாக மாநில சுயாட்சிக் கொள்கையின் கழுத்தை முறித்து, அதனை நிலைகுலையச் செய்து, 1947-ஆம் ஆண்டு ஆகஸ்ட்டு 15-ஆம் தேதிக்குள் அதனை இன்றைய அவல நிலைக்கு ஆளாக்கிவிட்டது. அதன் பின்னர் உருவான இன்றைய 'நமது' அரசமைப்புச் சட்டம், 1935-ஆம்

ஆண்டுச் சட்டத்தின் மூல உருவினை ஏற்றுக்கொண்டு, மத்திய அரசின் வல்லாட்சியால் உருக்குலைக்கப்படும் மாநில அரசு களையும், கட்டுப்படுத்தப்பட்ட மாநில சுயாட்சியையும் நமக் களித்திருக்கின்றது.

ஆங்கிலப் பேரரசிடமிருந்து படிப்படியாக அதிகாரங்களைப் பெற்று, மெல்ல மெல்ல வளர்ந்து, இறுதியில் பூரணமாக மலர்ந்தது தான் இந்தியச் சுதந்திரம். அப்படி வளர்ச்சி பெற்ற காலப்பகுதியில் பல சட்டங்களின் வாயிலாகவும் அரசுத் திட்டங்களின் மூலமாகவும், ஆங்கிலப் பேரரசிட மிருந்து பல அதிகாரங்கள் இந்தியத் துணைக் கண்டத்திற்குக் கிடைத்தன. அரசியல் மாற்றங்களும் அவ்வப்போது நிகழ்ந் தன. இந்திய அரசமைப்பு வளர்ச்சியில் மெல்ல மெல்ல அவ் வகை மாற்றங்கள் நிகழ்ந்த போதெல்லாம், ஆங்கில அரசால் தரப்பட்ட அரசதிகாரங்கள் மாநிலங்களுக்கே கிடைத்தன. எனவே அந்த அரசியல் மாற்றங்களினூடே அவற்றின் கருப் பொருளாய் மாநில சுயாட்சிக் கொள்கையும் விரவி நின்று வளர்ந்துள்ளது.

கி. பி. 1858-ஆம் ஆண்டு முதல் இந்திய அரசமைப்புச் சட்டம் முன்மொழியப்பட்ட 1947-ஆம் ஆண்டு முற்பகுதி வரை — ஏறத்தாழ 90 ஆண்டுகளில் — மாநில சுயாட்சிக் கொள்கை தோன்றி, முகிழ்த்து, வளர்ந்து, எழுச்சி பெற்று, பின்னர் 1947-ஆம் ஆண்டு மேத் திங்கள் தொடங்கி 1947-ஆம் ஆண்டு ஆகஸ்டு 15-ஆம் தேதிக்குள்-அதாவது 90 நாட்களில்-வீழ்ச்சியுற்றது.

இந்திய அரசியலமைப்பை (Constitution) உருவாக்கிய வர்கள், வரலாற்றின் பின் விளைவுகளைச் சற்றும் எதிர்நோக் காமல் இந்திய மக்களின் தன்மையையே மாற்றி அமைக்க எண்ணங் கொண்டு மாநில சுயாட்சிக் கோட்பாட்டைப் பழுது பட்டவகையில் திரிபு செய்து எல்லா வன்மையும் கொண்ட மைய அரசு (Central Government) ஒன்றைப் படைத்து விட் டார்கள். மாநிலங்களுக்கு அவர்கள் அளித்த குறைவான அதிகாரங்கள் கூட, சென்ற 24 ஆண்டு காலத்தில், காங்கிரஸ் கட்சியின் கட்டுக்குள்ளிருந்த மத்திய அரசின் அரசியல், பொருளாதார, நிதி, நிர்வாகக் கட்டுப்பாடுகளினுல் குலைக்கப் பட்டுவிட்டன. இந்திய மாநிலங்கள் தற்போது அரைகுறைத் தன்னுட்சியைக்கூட இழந்து நிற்கும் அவல நிலைக்கு ஆளாக் கப்பட்டுள்ளன.

அதனைத் தன் கூர்ந்த மதி நுட்பத்தால் ஓர்ந்தறிந்த பேரறிஞர் அண்ணு அவர்கள், வலிவற்ற மாநிலங்களை வலிவுள் ளவைகளாக ஆக்கி, அவற்றை வளமான மாநிலங்களாக அமைத்து, அதன் வழி ஓர் வலிமையுள்ள மையத்தைப் படைக்க நமக்குக் கொடுத்த ஓர் கொள்கை விளக்கம்தான் தற்போதைய ''மாநில சுயாட்சிக் கொள்கை''. அந்தக் கொள்கையின் இயக்கம்தான் திராவிட முன்னேற்றக் கழகம். மாநில சுயாட்சிக் கொள்கையின் நெடிய வரலாற்றில் ஓர் இன்றியமையாக் கால கட்டத்தின் விளக்ககர்த்தா தான் அறிஞர் அண்ணு அவர்கள். ஏனெனில் அது அவரால் உரு வாக்கப்பட்ட மூலக் கொள்கையன்று. அக்கொள்கையின் உயிர்க் கூறுகள் இந்திய வரலாற்றின் ஒரு நூற்ருண்டு கால வளர்ச்சியில் தோன்றியதாகும்.

மாநில சுயாட்சிக் கொள்கையின் வரலாற்றையும் அதன் பரிணும வளர்ச்சியையும் பல கட்டங்களாகப் பகுத்து ''இந்திய வரலாற்றில் மாநில சுயாட்சி'' என்ற இப்பகுதியில் தெளிவாக ஒவ்வொரு பிரிவும் ஆய்வு செய்யப்பட்டுள்ளது. வரலாற்று நிகழ்ச்சிகளையும் சட்டப் பகுதிகளையும் பள்ளிப் பாடம் போலத் தொகுத்துச் சொல்லப்படவில்லை. ஆனுல் ஒவ்வொரு கால கட்டத்திலும் மாநில சுயாட்சிக் கொள்கையின் வளர்ச்சிக்குப் பின்னணியாக அமைந்த சில வரலாற்று நிகழ்ச்சிகளின் கருப் பொருளை மட்டுமே அதன் கொள்கை விளக்கங்களுக்காக, ஆங்காங்கே ஆய்வுக்கெடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது. மாநில சுயாட்சிக் கொள்கையின் வளர்ச்சிக்கு உறுதுணை செய்த சில அரசுச் சட்டங்களின் பகுதிகளும் இன்றைய அரசமைப்பின் பொதுவான சிறப்புக் கூறுகளும் ஆங்காங்கே ஒப்பு நோக்கப் பட்டுள்ளன. இனி வரலாறு பேசும்.



## 1. இந்தியப் பேரரசுகளில் மத்திய அரசும் மாகாணங்களும்.

" மொகலாயர் காலம் வரை, வடபுலத்துப் பேரரசர்கள், தத்தம் சொந்த நாட்டிற்கு அப்பாலுள்ள (வெற்றி கொண்ட)நிலப்பகுதிகளின் மேல் மிக மிகத் தளர்ச்சி யானதொரு அரசியல் கட்டுப்பாட்டினையே நிலை நாட்டியிருந்தனர்.செல்வாக்கை வளர்த்துக் கொள்ள வேண்டு மென்பது (Aggrandi sement) இந்த மன்னர் களுக்குரிய உயர்ந்த குறிக்கோள் தான்; ஆனுல் மற்ற நாடுகளை ஆக்கிரமித்துத் தம் நாட்டுடன் சேர்த்துக் கொள்வதல்ல (Not Annexation) அவர்களது நோக்கம்.........

.........இந்துப் பேரரசர்களால் வெற்றி கொள்ளப்பட்ட வேறு நாடுகள், பேரரசற்குரிய திறை மற்றும் வணக்கத்தை மட்டும் செலுத்திவிட்டு,தனித் தன்மை யோடு கூடிய தத்தம் சுயாட்சியைக் தக்க வைத்துக் கொண்டன. அவை அந்தந்த அரசர்களின் ஆட்சி யிலேயே இருந்தன. அவை வெற்றி பெற்ற பேரரசிற் குள் சேதமடையாமல் அப்படியே இருந்து வந்தன. பேரரசு குலைந்த பின்னர் இழந்த சுதந்திரத் தனித் தகுதியை அவை மீண்டும் நிலைநாட்டிக் கொண்டன."[1]

செலிக். எஸ். ஹேரிசன் (Selig. S. Harrison)

கூட்டாட்சி முறை இந்தியாவில் தோன்றியது அல்ல. இந்தியப் பேரரசுகள் மன்னராட்சி முறையால் இயங்கின. தனி நாடுகளிலும் பொதுவாக முடியாட்சி தான் இருந்தது. மௌரியப் பேரரசு, குப்தப் பேரரசு, விசயநகரப் பேரரசு, தமிழ்ப் பேரரசு ஆகியவை சிற்றரசு நாடுகளைத் தம்மோடு

---

1 **Mr. Selig. S. Harrison,**
**" India, The Most *Dangerous Decades* " [1968],**
**Page - 19**

இணைத்துக் கொண்ட பொழுதெல்லாம், அந்தப் பேரரசுகளின் மத்திய அரசிற்கும் சிற்றரசுகளுக்கும் இடையே ஏதோ ஒரு வகையான அரசியல், நிர்வாக உறவுகள் தோன்ற வேண்டிய கட்டாயச் சூழ்நிலை உருவாயிற்று.

சில நேரங்களில் சிற்றரசர்களின் தன்னுட்சி உரிமைகளுக்கு ஊறு ஏற்படா வண்ணம், பேரரசின் மத்திய நிர்வாக முறை அமைந்திருந்தது. மௌரியர், குப்தர், விசயநகரப் பேரரசு போன்ற பல இந்துப் பேரரசுகளின் ஆட்சி, இவ்வகை மத்திய ஆட்சியையே கொண்டிருந்தன. மொகலாயர் போன்ற வேறு சில பேரரசர்கள் காலத்தில் சிற்றரசர்களின் தன்னுட்சி முழுதும் அழிந்து விடும் வகையில் பேரரசின் மத்திய ஆட்சித் தொடர்புகள் அமைந்திருந்தன.

தற்பொழுது, அரசமைப்புச் சட்டத்தால் (Constitution) மத்திய - மாநில அரசுகளுக்கிடையே அதிகார வரம்புகளும் அரசியல் தொடர்புகளும் தெளிவாகப் பிரிக்கப்பட்டிருப்பதைப் போன்று, அன்றைய நாட்களில் இருந்த பேரரசு - சிற்றரசர் களுக்கிடையிலான நிர்வாக உறவுகள் கூட்டாட்சி அடிப்படையில் இருக்கவில்லை என்பது உண்மையே. ஆனுல், இன்றைய கூட்டாட்சித் தத்துவத்தின் சில அடிப்படைக் கொள்கைகளான ''தனி நாட்டரசுகளின் (மாநிலங்களின்) சுயாட்சி'', 'அந்தச் சுயாட்சியை ஏற்றுக் கொள்ளும் மத்திய அரசு', அதன் 'மேலாட்சிக் கொள்கை', இன்னோரன்ன அரசியல் தொடர்புகள் இந்துப் பேரரசர்கள் காலத்தில் இருந்து வந்தன என்பது சாணக்கியனின் அர்த்த சாத்திரம், குப்தர்களின் செப்பேடுகள், ஹர்ஷர் காலத்திய சான்றுகள் ஆகியவைகளிலிருந்து தெளிவாகின்றன.

வரலாற்று ஆசிரியர். எச். என். சின்ஃகா (Prof. H. N. Sinha) அவர்கள் பழைய இந்துப் பேரரசுகளுக்கும் அதனுள்ளடங்கிய சிற்றரசுகளுக்கும் உள்ள அரசியல் உறவைக் கூறும்போது,

> ''சாம்ராச்சியங்களை உருவாக்குவதற்கான "திக்விசய" முறையே (இந்துப் பேரரசர்களால்) கைக் கொள்ளப்பட்டது. அவ்வகைத் திக்விசயங்கள், பாதுகாப்பு என்ற எல்லைகளுக்குள்ளேயே பெரிதும் நடைபெற்றன. மற்ற நாடுகளை வெற்றி கொள்ள, மரபு சார்ந்த ஆறுவகை நற்கோட்பாடுகளை,

இந்துப் பேரரசர்கள் கைக் கொண்டனர். படையெடுப்பு முற்றுப் பெற்றபின் சீரிய கொள்கையின் அடிப்படையில் தோல்வி கண்ட மன்னர்கள், அவரவர்கள் நாடுகளில் மீண்டும் அரசர்களாக ஆக்கப்பட்டனர். எல்லா நடைமுறை நோக்கங்களைப் பொறுத்த மட்டிலும், அந்தச் சிற்றரசர்கள் சுதந்திர மானவர்களே. அவரவர்களது நாடுகளைப் பொறுத்த வரை அந்தந்தச் சிற்றரசர்களே நிகழ்வு நிலையிலும் (Defacto) சட்ட நிலையிலும் (Dejure) ஆட்சி செலுத்துபவர்களென அப்பேரரசுகளால் ஒப்புக் கொள்ளப்பட்டனர். அவர்கள் திறை செலுத்தும் வகையிலும், சேவை செய்யும் வகையிலும் மட்டும் தான், வெற்றி பெற்ற வேந்தர்களுக்குக் கீழ்ப்படிதல் உள்ளவர்கள். அந்த அளவில் மட்டுமே அவர்கள் சுதந்திரம் கட்டுப்படுத்தப்பட்டது. அவ்வகைப் பேரரசுகள், ஒருமைப் பாடு கொண்ட பல கட்டுப்பாடுகளைச் சிற்றரசர்களின் மேல் அமுல்படுத்த வில்லை. பேரரசுகளின் செல்வாக்கிற்கு இணை யான நிர்வாக இயந்திரத்தையும் அந்தப் பேரரசுகள் பெற்றிருக்க வில்லை. மைய அரசு, தன் கொள்கையால் மட்டும் (சிற்றரசுகளுக்கு) வழிகாட்டி வந்தது.........

வெற்றி கொண்ட வேந்தர்களின் அரசுகளும், தோற்ற அரசர் களின் அரசும் தனித் தனியானவை. அரசாங்கங்களைப் பொருத்த வரை அந்தந்த நாடுகள் தனித்து இயங்கினாலும் வெற்றி கொண்ட மன்னரின் அரசு முறை மட்டும் எல்லா நாடுகளுக்கும் ஒன்றுயிருந்தது. மற்ற நாடுகளைப் பொது வான கட்டுப்பாட்டில் வைத்துக் கொள்வதற்காக மட்டும் மாகாண அரசுப் பிரதிநிதிகளைப் பேரரசு நியமித்திருந்தது... அந்தந்தத் தனி நாடுகளின் பெருமைக்குக் குந்தகம் விளையா மல், 'சாமந்தர்கள்' என்று அழைக்கப்பட்ட மத்திய அரசுப் பிரதிநிதிகள் நடந்து கொண்டனர்...... பேரரசர்கள் மேலாண்மை கொண்டவர்களாக இருந்தாலும் அவர் களுடைய மாட்சி உண்மையில் அவர்களுடைய சொந்த நாட்டெல்லைக்குள் தான் நிலவியது. அந்தப் பேரரசரின் மேலாண்மை மற்ற தனி நாடுகளில் இருக்கவில்லை. பேரரசர் "மன்னர்களுக்கு மன்னராக" இருந்ததால் சக்கரவர்த்தி எனப்பட்டார்; ஆனால் அப்பேரரசர்கள் மற்ற நாடுகளுக்கு மன்னர் அல்லர்."[2]

எனத் தெளிவாக்குகிருர்.

---

2 Prof. H. N. Sinha, "The Developement of Indian Polity" [1963] Pp. 13, 14

## மௌரியப் பேரரசு

இந்தியத் துணைக் கண்டத்தின் பெரும் பகுதியை மௌரியப் பேரரசு, தன் வயப்படுத்திக் கொண்டிருந்த போதும் கூட அதன் மத்திய அரசு அந்தந்தப் பகுதிச் சிற்றரசுகளின் தன்னாட்சியில் தலையிடாத ஓர் நல்லாட்சியை நிறுவியிருந்தது. அமைச்சர்கள், சேனைத் தலைவர்கள், மற்றும் பல அதிகாரிகள் ஆகியோரின் துணை கொண்டு மௌரியப் பேரரசர் தன் சாம்ராஜ்யம் முழுவதையும் மத்திய அரசு மூலம் ஆட்சி செய்து வந்தார்கள். ஆனால் தனித்தனி மாநிலப் பகுதிகளுக்குரிய தனது ஆளுநர்களை மௌரிய அரசர்கள் நியமித்திருந்தனர். அரசுப் பிரதிநிதிகள் அல்லது ஆளுநர்கள் பொதுவாக அரச வம்சத்தை சார்ந்திருந்தனர். அந்தந்த வட்டாரத்தைச் சார்ந்தவர்களும் அரசுப் பிரதிநிதிகளாக இருந்தனர். மைய அரசின் ஆணைகளுக்குக் கூடக் காத்திராமல், அந்தந்த வட்டார ஆளுநர்கள் தங்கள் அமைதிக் கால அரசியல் நடவடிக்கைகளையும், ஏன், போர்க்கால நடவடிக்கைகளையும் கூட மேற் கொண்டனர். மௌரியர் காலத்தில் வட்டார அரசுகளின் தன்னாட்சி, அதன் உயரிய நிலையைப் பெற்றிருந்தன. மௌரியப் பேரரசின் காலத்தில் அந்தந்தப் பகுதிகளின் தன்னாட்சிக்குக் கொடுக்கப் பட்ட முக்கியத்துவத்தைப் பற்றி ஆசிரியர் அல்டேகர் (ALTEKAR) அவர்கள் குறிப்பிடுகையில்,

> "மாநிலங்களுக்கு முழு சுயாட்சி அளிக்கப்பட்ட ஒரு வலிமையான ஒற்றுமை கொண்ட இந்தியா எப்படி நமது தற்போதைய கோட்பாடாக உள்ளதோ, அதைப்போலவே அன்றும் மௌரிய ஆட்சியின் கொள்கையாக மாகாணத் தன்னாட்சி இருந்து வந்தது."[3]

என விளக்குகிறார்.

தவிர, மௌரியப் பேரரசில் மத்திய அரசால் பாதுகாப்பு அளிக்கப்பட்ட "காப்பாளர் ஆட்சிப் பகுதிகளும்" குறுகிய சிற்றரசுப் பகுதிகளும் சுயாட்சி பெற்று விளங்கின என்பதற்குச் சான்றுகள் உள்ளன.

---

3 Prof. A. N. Altekar, "State and Government in Ancient India" [1955], Page 370

## குப்தப் பேரரசு

குப்தப் பேரரசு காலத்திலும், இந்தியா பெரிய மாகாணப் பகுதிகளாகவும் குறு நிலப்பகுதிகளாகவும் நிர்வாக வசதிக் கேற்ற முறையில் பிரிக்கப்பட்டிருந்தது. அரசவம்சத்தைச் சார்ந்தவர்கள் அரசுப் பிரதிநிதிகளாக நியமிக்கப்பட்டு, அவர்கள் மூலமாக மாகாண ஆட்சிகள் நடைபெற்று வந்தன. குப்தர்கள் ஆட்சியிலும் மௌரியப் பேரரசில் இருந்ததைப் போலவே, அரசுப் பிரதிநிதிகள் மாகாணங்களில் மேலாட்சி செய்தனரே தவிர, மற்ற வகையில் அந்தந்தப் பகுதிகளில் தன்னாட்சி முறைகளே பெரிதும் ஓம்பப்பட்டு வந்தன. அதற்குரிய மத்திய அரசே குப்தர்களின் காலத்திலும் இயங்கி வரலாயிற்று.

> ''குப்தர்களின் கீழ் அரசுப் பிரதிநிதிகள், பிராந்திய ஆளுநர் கள், மாகாண நிர்வாகிகள் பேரரசின் அமைச்சர்கள் ஆகியவர்களிருந்தனர் என்பதற்குரிய நேரடிக் குறிப்புகள் நமக்குக் காணக்கிடைக்கின்றன. 'மகாமத்தியர்கள்' என்ற மாகாண அரசுப் பிரதிநிதிகள், மௌரியர்கள் காலத்தி லிருந்து 12-ஆம் நூற்றாண்டு வரையிலுமே தொடர்ந்து இருந்து வந்தார்கள். இந்தப் பதவிகள் மத்தியப் பேரரசின் மிக உயர்ந்த பதவிகள்...... 'சிக்ரசுவாமி' ஓர் ஆளுநர். ''பாணதத்தர்'' ஸ்கந்த குப்தனுடைய ஆணைகளுக்கு ஏற்ப 600 ஆண்டுகளுக்கு முன்னால் சந்திரகுப்த மௌரியனால் தோற்றுவிக்கப்பட்ட 'சுதீஸ்ஞ' என்ற ஏரியைப் பழுது பார்த்தான். அவர் சௌராஷ்டிரத்தின் ஆளுநர்.''[4]

என வரலாற்றாசிரியர் கே. எம். பணிக்கர் அவர்கள் இது பற்றிச் சான்று கூறுகிறார்.

---

4 Mr. K. M. Panikkar,
" A Survey of Indian History " (1971), Pp. 55 - 56

## தமிழ்ப் பேரரசுகள் *

சங்க காலத் தமிழகம் சேரநாடு, சோழநாடு, பாண்டிய நாடு என மூன்று தனித்தனிப் பெரு நாடுகளைக்கொண்டிருந் தது. இவை தவிர, சோழ நாட்டிற்கு வடக்கே தொண்டை நாடும் மேற்கே கொங்கு நாடும் இருந்தன.

சேர, சோழ, பாண்டியப் பெருநாடுகள் ஒவ்வொன்றும் பல உறுப்புக்களாகப் பகுக்கப்பட்டிருந்தன. அந்த உறுப்புக் களுக்கும் 'நாடுகள்' என்றே பெயர். இந்த "நாடுகள்" என்ற சிறுசிறு நிலப்பகுதிகள், ஆதியில் தனி ஆட்சியைக் கொண்டிருந்தன என்றும் பின்னர் தமிழ்ப் பேரரசர்களால் வெற்றி கொண்டு அடிமைப்படுத்தப்பட்ட பிறகு, அவை வெற்றி கொண்ட பேரரசின் உறுப்பு நாடுகளாகி, பழைய "நாடுகள்" என்ற பெயரையே தாங்கி இயங்கின என்றும் வரலாற்றுசிரியர்கள் கருதுகின்றனர். சான்ருக, இன்றைய நாகப்பட்டினத்தைச் சார்ந்த நிலப்பகுதி, "பன்றி நாடு" என்ற பெயரோடு சோழப் பேரரசின் ஒருறுப்பு நாடாகத் திகழ்ந்தது. "கற்கா" (பாலக்காடு), "வேள் நாடு" (திருவாங் கூர்ப்பகுதி), "குட்டம்" (கொச்சி), "குடம்" (தெற்குமலபார்) "பூழிநாடு" (வடக்கு மலபார்) ஆகியன போன்ற பல "நாடு களை"ப் பெற்றிருந்தது பழைய சேரநாடு. தொண்டைநாடு— இன்றைய மாவட்டங்களைப்போல்— நிர்வாக வசதிக்காகக் "கூற்றம்" அல்லது "கோட்டம்" என்ற சிறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு 'கூற்றத்திலும்', 'நாடு' என்ற பகுதியிலும் பல சிற்றூர்கள் இருந்தன.

இவை தவிர, சேர, சோழ, பாண்டிய நாடுகளுக்குள்ளேயே பல குறுநில மன்னர்களும் ஆங்காங்கே தன்னுட்சியுடன் இயங்கி வந்தனர். அச்சிற்றரசுகள், அந்தந்தப் பெருநாட்டரசு களுக்கு அடங்கி, திறைமற்றும் வணக்கத்தைச் செலுத்திவிட்டு, அந்தந்த நில எல்லைப் பகுதிகளுக்குள் முழுத் தன்னுட்சியுடன் இயங்கி வந்தன.

---

* ஆதாரம்: **Prof. T. V. Mahalingam, South Indian Polity (1967)**

பிற்காலத் தமிழகத்தில் பேரரசுகள் உருவான போதெல்லாம் மற்றையத் தனி ஆட்சி கொண்ட தனிநாடுகள் அப்பேரரசால் வெற்றி கொள்ளப்பட்டு, பின்னர் அந்தத் தனி நாடுகள் தமிழ்ப் பேரரசின் உறுப்புகளாக மாற்றப்பட்டன. அவை இன்றைய மாகாணங்களைப் போலவே அப்போது ''மண்டலங்களாகப்'' பகுக்கப்பட்டிருந்தன. சோழப் பேரரசின் பொற்காலத்தில் அது 9 மண்டலங்களாக (மாநிலங்களாக)ப் பிரிக்கப்பட்டிருந்தது.

அவையாவன: [1] செயங்கொண்ட சோழ மண்டலம் [தொண்டை நாடு]; [2] இராசராச பாண்டி மண்டலம் [பாண்டியநாடு]; [3] மும்முடிச் சோழ மண்டலம் [இலங்கை]; [4] முடிகொண்ட சோழ மண்டலம் [கங்கபாடி]; [5] நிகரிலிச் சோழ மண்டலம் [நுளம்பபாடி]; [6] சோழ மண்டலம் [தஞ்சாவூர், திருச்சி மற்றும் தென்னுற்காட்டின் தென் பகுதி கொண்ட சோழ நாடு]; [7] வெங்கி மண்டலம் [பழைய கீழைச் சாளுக்கிய நாடு]; [8] மலை மண்டலம் [இன்றைய கேரள மாநிலமான பழைய சேரநாடு]; [9] அதிராசராச மண்டலம் [கொங்கு நாடு — இன்றைய கோவை — சேலம் மாவட்டப் பகுதிகள்]. ஒவ்வொரு மண்டலமும் பல ''வளநாடு'' களாகப் பிரிக்கப்பட்டிருந்தன. சங்ககாலத் தொண்டைநாடு 13–ஆம் நூற்ருண்டின் சோழப் பேரரசு காலத்தில் தொண்டை மண்டலம்என்ற பெரியமாகாணமாக்கப்பட்டு, அதன் பழைய 24கோட்டங்களும் 24 வள நாடுகளாக ஆக்கப்பட்டன. சோழப் பேரரசின் ஒரு மாகாணமான "சோழ மண்டலம்" 9 வளநாடுகளாகப் பிரிக்கப் பட்டிருந்தன. ஒவ்வொரு வளநாடும் பல "நாடு" என்ற சிறு பிரிவுகளாகவும் பிரிக்கப் பட்டிருந்தது. ஒவ்வொரு "நாடும்" பல "சிற்றூர்களாக"ப் பிரிக்கப்பட்டிருந்தன. இந்தப் பிரிவினைகள் யாவும் நிர்வாக வசதிக்காகவே ஏற்படுத்தப்பட்டிருந்தன.

ஒவ்வொரு மண்டலத்தையும் ஆட்சி செய்வதற்காகப் பேரரசர்களின் குடும்பத்தைச் சார்ந்தவர்களையோ அல்லது மூத்த அதிகாரிகளையோ அல்லது தோற்ற நாடுகளின் அரச குடும்பத்தைச் சார்ந்தவர்களையோ, ஆளுநர்களாக நியமித்திருந்தனர். ஆனல் முதலாம் குலோத்துங்க சோழன் காலத்திலிருந்து, சோழப் பேரரசின் குடும்பத்தைச் சார்ந்தவர்களை ஆளுநர்களாக நியமிக்கும் பழக்கம் கை விடப்பட்டது. தோல்வியைத் தழுவிக் கொண்ட நாடுகள் சோழப் பேரரசின்

(மத்திய அரசின்) மேலாட்சியை (Supermacy) மட்டும் ஏற்றுக் கொண்டால் போதும்; அந் நாட்டு அரசர்களே அந்த நாடுகளுக்குரிய அரசர்களாகச் சோழப் பேரரசால் (மத்திய அரசால்) நியமிக்கப்பட்டனர். இதனுல், அந்தந்த நாடுகளின் தனித் தன்மைகளுக்கேற்ற தன்னுட்சி மறையவில்லை. அவை மத்திய அரசிற்குத் திறை மட்டும் செலுத்தி, பேரரசின் மேலாட்சியை ஏற்றுக் கொள்ள வேண்டும்; அவ்வளவே.

ஆக, சோழப் பேரரசின் பொற்காலத்தில் கூட, அந்தந்தப் பெரும் பகுதிகள் முழுத் தன்னுட்சியுடன் இயங்கி வந்தன. அந்த உறுப்பு நாடுகளின் அரசர்களும் வழிவழியாக ஆட்சி செய்தனர். அவர்களது நிர்வாகத்தில் சோழ மத்தியப் பேரரசு தலையிடுவதில்லை.

கொங்கு நாட்டைச் சோழப் பேரரசு வெற்றி கொண்ட போதும் கூட அதன் பழைய மன்னர்களே அதன் நிர்வாகத்தை நடத்தினர். ஆனுல் அவர்களது பட்டங்கள் மட்டும் கொங்குச் சோழர்கள் என மாறிற்று. கொங்குச் சோழர்கள் கொங்கு நாட்டை மத்திய சோழப் பேரரசிற்குட்பட்டு முழுமையான தன்னுட்சியுடன் வழிவழியாக ஆண்டு வந்தனர். தமிழகத்திலிருந்த சேர, சோழ, பாண்டியர் மற்றும் பல்லவப் பேரரசுகளின் கீழிருந்த மாகாணங்கள் மற்றும் குறுநிலச் சிற்றரசர்கள் கூட அந்தந்தப் பேரரசுகளின் மேலாட்சியை மட்டும் ஏற்றுக் கொண்டு, முழுத் தன்னுட்சியுடன் இயங்கி வந்தன என்பதைத் தென்னக வரலாறு தெளிவாக்குகிறது.

### விசயநகரப் பேரரசு

14-ஆம் நூற்ருண்டு முதல் 16-ஆம் நூற்ருண்டு இறுதி வரை, பெரும் புகழோடு விளங்கிய விசயநகரப் பேரரசு, அதனுடைய மைய அரசு நிர்வாகத்தையும் அதன் கிளை நிர்வாகங்களையும் மிக்க கவனத்துடன் அமைத்திருந்தது. 'ராஜ்யம்', 'மண்டலம்', 'சாவடி' என்று வழங்கப்பட்ட பகுதிகளுடன் மொத்தம் 6 மாகாணங்களாக அப்பேரரசு பிரிக்கப்பட்டிருந்தது. மொத்தம் 200 பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன எனக் கூறுவோரும் உண்டு. அந்த மாகாணங்கள் ஒவ்வொன்றும் 'வெந்தே', 'நாடு', 'சீமை', 'கிராமம்', 'ஸ்தலம்',

என்ற சிறு பகுதிகளாகக் கர்நாடாகத்திலும், 'கோட்டம்', 'பரு', 'நாடு', 'சிற்றூர்' என்ற சிறு பகுதிகளாகத் தமிழகத்திலும் பிரிக்கப்பட்டிருந்தன. ஒவ்வொரு மாகாணமும், 'நாயகம்' அல்லது 'நாயக்கர்' என்ற மத்திய அரசுப் பிரதிநிதிகளால் ஆட்சி செய்யப்பட்டு வந்தது.

அந்தந்த மாகாணங்களின் உள் நிர்வாகம், படை, நிதி போன்ற அதிகாரங்கள் முழுவதும் அந்தந்த அரசுப் பிரதிநிதிகளுக்கே தரப் பட்டிருந்தன. உள்நாட்டு விவகாரங்களில் பேரரசின் மத்திய அரசமைப்பு தலையிடுவதில்லை. ஆனால், அரசுப் பிரதிநிதிகள் அவ்வப்போது மாகாணங்களின் வரவு செலவுக் கணக்குகளை மட்டும் மத்திய அரசிற்கு ஒப்படைக்க வேண்டும். அது தவிர மத்திய அரசிற்குத் தேவை ஏற்படும் போது மாகாண அரசுப் பிரதிநிதிகள் தங்கள் படைகளை, மைய அரசிற்குக் கொடுத்துதவ வேண்டும். சிற்றூர்களை அடிப்படையாக வைத்த உள்ளாட்சித் துறை, ஏறத்தாழக் குடியரசு முறையில் இயங்கியது. மகாநாயக்காச்சாரியா என்ற அதிகாரி மூலமாக உள்ளாட்சிப் பகுதிகளுடன் பேரரசு நேரடியாகத் தொடர்பு கொண்டிருந்தது. அந்தந்த மாகாணங்களிலிருந்த தனி நாடுகளுக்கு ஏற்பத் தன்னாட்சி நடைபெற்று வந்தது. விசயநகரப் பேரரசில் மைய அரசு தலையிடாத தன்னாட்சி முறை, மாநிலங்களில் அமுலில் இருந்ததால் கர்நாடகமும் தமிழகமும் அப் பேரரசின் கூறுகளாக இருந்தபோதிலும் அதனதன் மொழி, இன, பண்பாடுகளுக்கு ஊறு ஏற்படவில்லை.

விசயநகரப் பேரரசில் மத்திய அரசும் மாகாணங்களும் எவ்வகை அரசியல் தொடர்புகளுடன் இயங்கின என்பதை வரலாற்றுப் பேராசிரியர். T. V. மகாலிங்கம் அவர்கள் கூறும் போது,

''இத்தகைய மண்டலங்களில் (மாகாணங்களில்) இருந்த ஆளுநர்கள், தத்தம் எல்லைப் பகுதிகளின் அரசவைகளைத் தாங்களே நடாத்தி வந்தனர்; அந்தந்த மாகாணங்களுக்குரிய எல்லா அதிகாரிகளையும் தாமே நியமித்து வந்தனர். தத்தம் நிலப் பகுதிகளுக்கான தனிப்படைகளையும் வைத்து இருந்தனர். மத்தியப் பேரரசுக்குரிய கடமைகளை ஒழுங்காக

நிறைவேற்றக் கூடிய காலம் வரையிலும், மத்திய அரசின் குறுக்கீடுகளும் கட்டுப்பாடுகளும் இன்றித் தங்களுடைய நிலப் பகுதிகளுக்குள் முழுத் தன்னுட்சியுடன் இயங்கி வந்தனர்.''5

எனத் தெளிவுபடுத்துகிறுர்.

## மொகலாயப் பேரரசு

மொகலாயர்களின் மத்திய அரசு இந்தியா முழுவதற்கும் டெல்லி பீடத்திலிருந்து ஒரே ஆட்சியை அமுல் படுத்தியது. ஆகவே முகலாயர்களின் ஆட்சி, ஒரு முக ஆட்சியாகும். இந்திய வரலாற்றில், மொகலாயப் பேரரசில்தான் முதன் முதலாக மற்ற தனி நாடுகளின் அதிகாரங்கள் முழுவதும் மத்திய ஆட்சிக்குக் கொண்டு சேர்க்கப்பட்டு ஒற்றை வல்லாட்சி அமைக்கப்பட்டது.

தொடக்கத்தில் மொகலாயப் பேரரசு உருவாகும் நிலேயில் இருந்த போது, பிராந்தியத் தலேவர்களும் சிற்றரசர்களும் மிக இன்றியமை யாதவர்களாகவும் மைய அரசில் பங்கு பெறுபவர்களாகவும் மதிக்கப்பட்டனர். ஆனல் பேரரசு உருவானவுடன், மத்திய–மாகாண அரசியல் உறவுகள் முற்றிலும் மாற்றப்பட்டன. எல்லா அதிகாரங்களும் மத்திய அரசிடமே குவித்து வைக்கப்பட்டன. அதன் விளேவு மாகாணங்களே நிர்வகித்த அதிகாரிகள், மத்திய அரசாங்கத்தின் வெறும் நிர்வாக முகவர்களாகவும் (Administrative Agents) கைப் பாவைகளாகவும் ஆக்கப்பட்டனர். இந்திய நாடுகளின் தன்னுட்சியும் அடியோடு அழிக்கப்பட்டது.

அக்பரின் ஆட்சித் தொடக்கத்தில் முகலாயப் பேரரசு, 12 மாகாணங்களாகப் பகுக்கப்பட்டிருந்தது. பின்னர் அவருடைய இறுதி நாட்களில் 15 மாகாணங்களாகவும், ஜகாங்கீர் காலத்தில் 17 மாகாணங்களாகவும், ஒளரங்கசீப் காலத்தில் 21 மாகாணங்களாகவும் உயர்ந்தன. உள்ளாட்சி மற்றும் படை

5 Prof. T. V. Mahalingam,
"South Indian Polity" [1967] Page 325

நிர்வாகங்களை, மத்திய ஆட்சிக்குக் கட்டுப்பட்டு மாகாண ஆளுநர்கள் நிர்வகித்து வந்தனர். அவருக்குக் கீழ் அவருக்குத் துணை புரிய அதிகாரிகள் பலர் இருந்தனர். வருவாய்த்துறை அதிகாரியான 'திவான்' பல சமயங்களில் ஆளுநருக்கு எதிராகச் செயல்படுவது முண்டு. ஒருவரை மற்றொருவர் மறைமுகமாகக் கண்காணிக்கும் பொருட்டும், மத்திய அரசை மீறாமலிருக்கும் பொருட்டும், மாகாண அதிகாரிகளை மத்திய அரசே நியமித்து வந்தது. மாகாண ஆட்சியின் அதிகாரங்கள் மூன்று உயர் அதிகாரிகளுக்குப் பிரித்துக் கொடுக்கப்பட்டிருந்தன. அப்படித் தனித்தனியே இயங்கும் அதிகாரிகளான 'சுபேதார்', 'திவான்' 'பக்ஷி' ஆகியோர் மத்திய அரசின் ''கண்களாகவும் காதுகளாகவும்'' (Eyes and Ears) மாகாணங்களில் இருந்து வந்தனர்.

**மொகலாயர் ஆட்சியும் இந்திய ஒருமைப்பாடும்**

ஒற்றையாட்சி முறைதான் மொகலாயப் பேரரசின் வேர் போன்றது. இந்தியாவின் பெரும் பகுதிகள் ஒரே அரசியல் நிர்வாக முறையால் ஆளப்பட்டன. அதில் எழுந்த இந்திய ஒருமைப்பாடு, தனிநாடுகளின் அரசுகளைப் புதைத்து, அதன் மேல் எழுப்பப்பட்ட சமாதியிலிருந்து பெற்ற பெரும் பேருகும். ஆங்கிலேயர் இந்தியாவை அடிமைப்படுத்திய பின், இங்கிலாந்திலிருந்து இந்தியாவை ஆண்டபோது, ''இங்கிலாந்தும் இந்தியாவும், ஒற்றுமை கொண்ட ஒரே நாடாகத்தான் திகழ்ந்தது'' என்று யாராவது கூறினால் அது எத்துணை வெற்று வாதமாகக்கருதப்படுமோ அதைப் போலவே மொகலாயரும் (பல தனிநாடுகளை அழித்த பின்னர்) ''இந்திய ஒருமைப்பாட்டை உருவாக்குவதிலும் வெற்றி பெற்றார்கள்'' எனக் கூறுவதும் பொருந்தா வாதமாகும். இந்தியாவின் பல நாடுகளில், தனி ஆட்சி மறைந்த பின்பும் அந் நாடுகளின் தனித்தன்மையும் பண்பும் மறையவில்லை. அரசியல் வாய்ப்புகளை அந்நாடுகள் எதிர் நோக்கிக் காத்திருந்தன. அந்தத் தனி நாடுகளில் பொங்கி எழுந்த, தந்நாட்டுத் தேசிய உணர்வே மொகலாயப் பேரரசின் அழிவிற்குக் காரணம். வரலாற்று ஆசிரியர் திரு. கே. எம். பணிக்கர் அவர்கள் மொகலாயர்கள் இந்தியாவின் ஒருமைப்பாட்டைக் கத்திமுனையில் உருவாக்க முனைந்ததால் ஏற்பட்ட விபரீத விளைவைப் பற்றிக் கூறும்போது,

"மொகலாயப் பேரரசர்கள் இந்தியத் துணைக் கண்டத்தை ஒருங்கிணைக்கும் முயற்சியில் என்றுமே தளர்ந்ததில்லை. ஆனால் அதில் அவர்கள் முழுமையாக வெற்றி பெற்றது மில்லை. முடிவில்லாத தக்காணத்தின் போர்கள் மொகலாயப் பேரரசின் வலிமையைச் சிதைத்தன; ஔரங்கசீப்பையும் கொன்றது. இந்திய ஒருமைப்பாடு என்பதின் நேரடியான விளைவுகள் இவை இரண்டுதான்."6

எனக் குறிப்பிடுகிறார். ஔரங்கசீப் இறந்தவுடன் அத்துணை இந்திய நாடுகளும் தனி இறைமை கொண்ட தனி நாடுகளாக மாறி விட்டன.

## பேரரசுகள் புகட்டும் பாடம்

பழைய வரலாற்றில் உருவான இந்துப் பேரரசுகளின் மைய ஆட்சியின் தன்மையையும், பின்னர் ஏற்பட்ட மொகலாயப் பேரரசின் மைய வல்லாட்சியையும் ஓர்ந்து பார்த்தால் முன்னதில், பல சுதந்திர நாடுகளின் [மாகாணங்கள்] சுயாட்சிக்கு இடர்ப்பாடு இல்லாமல் இயங்கிய மையப் பேரரசும் பின்னதில் தனி நாடுகளின் தனித் தன்மைகள், இனப்பாகு பாடுகள் முழுவதும் அழிக்கப்பட்ட ஒருமுக மைய வல்லாட்சி யும் அமைந்திருந்தது தெளிவாகும்.

இந்துப் பேரரசர்களின் மைய ஆட்சியையும் மொகலாயர் களின் வல்லாட்சியையும் விவரிக்கையில் சர். ஜாதுநாத்சர்க்கார் அவர்கள்,

"தளர்ந்த இணைப்புக் கொண்ட பல சுதந்திர மாகாணங்களைக் கொண்டது தான் இந்துப் பேரரசுகள். ஒவ்வொரு மாகாணமும் அதற்கே இயல்பான வாழ்க்கையையும், அதற்கே உரிய பழக்கப்பட்ட அரசு முறையையும் தொடர்ந்து கைக் கொண்டிருந்தன. அந்தந்த மொழிகளே அதற்காகப் பயன் படுத்தப்பட்டன. இதற்கு மாறாக 200 ஆண்டுகள் மொகலாய ஆட்சியில் வட இந்தியா முழுமைக்கும் தக் காணத்தின் பெரும் பகுதிக்கும் ஒரே ஆட்சி மொழியையும்,

6 K. M. Panikkar,
"A Survey of Indian History"; [1971] Page 171

நிர்வாக முறையையும் நாணய முறையையும், (இந்து சாதுக்கள் மற்றும் கிராம மக்கள் நீங்கலாக) மற்ற அனை வருக்கும் ஒரு பொதுத் தொடர்பு மொழியையும் முகலா யர்கள் ஏற்படுத்தி விட்டார்கள். "7

எனக் குறிப்பிடுகிறுர்.

மொகலாயர் ஆட்சிக் காலத்தில் வாள் முனையில் 'இந்திய ஒருமைப்பாடு' தோற்றுவிக்கப்பட்டது. அவர்களைப் பின் பற்றிய ஆங்கிலேயர்களும் துப்பாக்கி முனையில் 'இந்திய ஒருமைப் பாட்டைக் கண்டனர். மொகலாயர்கள் ஆட்சியும் ஒருமுக வல்லாட்சி; பிரிட்டானியப் பேரரசின் ஆட்சியும் வன்மைமிகு மத்திய அரசைக் கொண்ட ஓர் ஆதிபத்திய ஆட்சி.

மொகலாயர் மற்றும் ஆங்கிலப் பேரரசுகளைப் பின்பற்றி, ஓர் முக ஆட்சியின் சிறப்பியல்புகளைக் கொண்ட வன்மை மிகு மைய அரசையே நமது அரசமைப்புச் சட்டத்திலும் உருவாக்கியிருக் கின்றனர்.

இந்தியப் பொது ஆட்சி மொழியாக "உருது மொழியை" மற்ற மொழி சார்ந்த நாடுகளின் மேல் தங்கள் மத்திய வல்லாட்சியின் துணைகொண்டு மொகலாயர்கள் திணித்தனர். ஆங்கிலத்தைப் பிரிட்டானியர்கள் "ஆட்சிமொழி" என்ற பெயரால் நம்மீது ஏற்றி வைத்தனர். வரலாற்றில் நேர்ந்த விபத்தால் முகலாயரால் பொது மொழியாக ஆக்கப்பட்ட உருது போய், பின்னர் ஆங்கிலம் அந்த இடத்தை நிரப்பிக் கொண்டது. ஆனல், ஆங்கிலேயர் போன பின்பும் ஆங்கிலம் இந்தியாவில் நின்று விட்டது. தற்போது இந்திய அரசமைப்புச் சட்டத்தால் இந்தியைப் பொது மொழியாக ஆக்கி யுள்ளனர். இன்றைய மத்திய அரசாங்கம் இந்திய மாநிலங்கள் முழுவதி லும் — அவை விரும்பியோ, விரும்பாமலோ — கடந்த கால் நூற்றுண்டாக இந்தியை முறையின்றித் திணித்து வருவது நமக்குத் தெரிந்த ஒன்றே.

மொகலாயர் அரசு முடியரசு; வெள்ளையர் அரசு ஆதிபத்திய அரசு; நமது இன்றைய அரசு குடியரசு. அரசுகளும், அரசுகளின் தன்மைகளும் மாறுபடுகின்றன. ஆனல் மாநிலங்களுக்குப் போதிய

---

7 Sir. R. Jadun Satharkar, "Mogul Administration" (1935) page 238.

உரிமையளிக்காமல் வன்மை கொண்ட மத்திய அரசின் கீழ் அவைகளை அடிமைப்படுத்திக் கொள்வதில், இம் மூவகை அரசுகளும் எவ்வகையிலும் மாறுபட வில்லை.

3000 ஆண்டுகளின் இந்திய வரலாற்றில் "முழு இந்திய ஒற்றுமை"யை இந்த மூவகை அரசுகளின் காலத்தில் தான் இந்தியா பெற்றிருந்தது எனப் பெருமைப்படுகிறோம்.

அந்த''அகில இந்திய ஒருமைப்பாட்டை'' அடைவதற்காக வலிமை கொண்ட மைய அரசுகளையே இம்மூவகை அரசுகளும் தோற்றுவித்துக் கொண்டன. ஆனால் 'ஒருமைப்பாடு கொண்ட' இந்தியாவின்மொகலாய ஆட்சி ஔரங்கசீப்புடன் அழிந்து விட்டது. நாட்டுப் பிரிவினையுடன் விடுதலை பெற்ற 'பாரதம்' தோன்றியது.

வலிமை கொண்ட மைய அரசு, தன்னிடம் குவிந்துள்ள அதிகாரங்களைப் பயன்படுத்தி மாநிலங்களைத் தனக்கடங்கிய கைப்பொம்மைகளாக்கி, அதன் பேரில் இந்திய ஒருமைப்பாட்டை நிலைக்கச் செய்வது வரலாற்றுக்கு முரண்பட்டதாகும்.

டெல்லிப் பட்டணத்தில் ஆட்சி செய்யும் 'உயர் மனிதர்கள்' (Supermen) மாறுபடின், மாகாணங்களும் தனி ஆட்சியைத் தோற்றுவித்துக் கொள்ளும் என்பதற்கு மொகலாயப் பேரரசின் எழுச்சியும் வீழ்ச்சியுமே சிறந்த வரலாற்றுச் சான்றுகள்.



## 2. மத்திய அரசின் தோற்றமும் அதிகாரங்களைக் குவித்தலும்

"பலவழிகளிலும், மொகலாயர்களுக்கு நேரடியான சீடர்களைப் போன்ற ஆங்கிலேயர், இந்தியத் துணைக் கண்டத்தில் தேர்ந்தெடுத்த ஒற்றையாட்சிமுறையைப் புகுத்தத் தொடங்கினர். ஆனால் மத்திய - மாநிலத் தொடர்புகளில் கூட்டாட்சிக் கொள்கையை மெல்ல மெல்ல மேற்கொள்ள வேண்டிய கட்டாயத்திற்கு அவர்கள் ஆளானார்கள். சுருங்கக் கூறின், "அதிகாரங்களை மையப்படுத்துதல்" (Centralisation) இந்திய மக்களின் சிறப்புப் பண்பிற்கு முற்றிலும் முரணானதாகும்."[1]

பேராசிரியர் கே. ஆர். பாம்வால்.

### I

வர்த்தகம் செய்ய வந்த ஆங்கிலேயர், இந்தியாவில் பேரரசு ஒன்றை உருவாக்கிய பல நிகழ்ச்சிகளை 'வரலாறு' எனச் சொல்வதைக் காட்டிலும் அதனைச் சுவையானதொரு "புதுமைக் கதை" எனக் கூறிடின் அது சாலப் பொருந்தும். இந்தியாவின் செழுமையையும் செல்வத்தையும் கேள்வியுற்ற ஆங்கிலேயர், அதனுடன் வர்த்தகத் தொடர்புகளை ஏற்படுத்திக் கொள்ள 1—12—1600-இல் ஓர் வாணிபக் கழகத்தைக் கண்டனர். எலிசபெத் அரசியின் சாசனத்தின் மூலம் கிழக்கத்திய நாடுகளில் வாணிகம் செய்ய, கிழக்கிந்தியக் கம்பெனி தனி உரிமை பெற்றது. அதன் பாதுகாப்பிற்காகக் குறிப்பிட்ட ஓர் கடற்படையை வைத்துக் கொள்ளும் அதிகாரமும் கம்பெனியை நிர்வகிக்கத் தேவையான சில சட்டங்களைச் செய்யும் உரிமையும் அதற்கு வழங்கப்பட்டிருந்தது.

கம்பெனியினர், இந்திய அரசர்களிடம் உரிமை பெற்று இந்தியக் கடற்கரை ஓரமாகத் தனது வர்த்தகக் குடியேற்றங்களை ஏற்படுத்திக் கொண்டனர். கி. பி. 1613-இல் முதன்

---

1 **Prof. K. R. Bombwall,**
**"The Foundations of Indian Federalism" [1967] P. 324**

முதலாக சூரத்திலும் பின்னர், கி. பி. 1616-இல் மசூலிப் பட்டினத்திலும், கி. பி. 1633-இல் மகாநதி முகத்துவாரத் திலுள்ள அரிகர்பூரிலும், கி. பி. 1640-இல் சென்னையிலும், கி.பி. 1669-இல் பம்பாயிலும், கி.பி.1686-இல் கல்கத்தாவிலும் தனது வர்த்தகக் குடியேற்றங்களை ஆங்கிலேயர் நிறுவிக் கொண்டனர்.

உள்நாட்டு அரசுகளோடு மோதல்களைத் தவிர்க்கும் பொருட்டுத் தொடக்கத்தில் ஆங்கிலேயர், வர்த்தக அளவி லேயே தங்கள் நடவடிக்கைகளை நிறுத்திக் கொண்டனர். ஆனால், இந்தக் கொள்கை வெகு நாட்கள் நீடிக்கவில்லை. முதன் முதலில் கி. பி. 1686-இல் சிட்டகாங்கை எதிர்த்துத் தாக்குதல் நடத்தினர். அதில் ஆங்கிலேயர்கள் முறியடிக்கப் பட்டனர். ஆங்கிலேயரை இந்தியாவிலிருந்து அகற்ற ஔரங்கசீப் ஆணை பிறப்பித்தார்.

கி. பி. 1707-இல் ஔரங்கசீப் இறந்தவுடன் இந்தியாவின் நாடுகள் முழுவதும் சுதந்திர நாடுகள் ஆயின. அனைத்திந்தியத் தலைமையும் மறைந்தது. இந்தியத் துணைக் கண்டத்தில் இருந்த வெறுமைச் சூழ்நிலையைப் பயன்படுத்திக் கொண்ட ஆங்கிலேயர், தங்களை மெல்ல மெல்ல அரசியல் துறையில் உயர்த்திக் கொண்டனர்.

கி. பி. 1749-இல் இராபர்ட்கிளைவால் ஆற்காடு பிடிபட்டது. தொடர்ந்து 12 ஆண்டுகளில், தென்னிந்தியாவில் நடத்திய போர்கள் மூலமாகத் தென்னகத்தின் சில பகுதிகளும் ஆங்கி லேயர் வசமாயின. கர்நாடகப் போர்கள் ஆங்கிலேயருக்கு ஆந்திரத்தின் பெரும் பகுதியை அளித்தன. வெற்றிகளைக் குவித்த கிளைவ் வடபுலத்திற்கு அனுப்பப்பட்டார். கி. பி. 1757-இல் பிளாசி சண்டையில் வங்கம் வீழ்ந்தது. அந்த வெற்றியே இந்தியாவில் ஆங்கிலப் பேரரசிற்குக் கால்கோள் நாட்டியது. பிளாசிப்போருக்குப் பின்னர் உருண்டோடிய ஒரு நூற்றாண்டில் முழு இந்தியாவும் ஆங்கிலேயரின் காலடியில் வீழ்ந்தது.

3000ஆண்டுக்கால இந்திய வரலாற்றில் அடைய முடியாத ''இந்திய ஒற்றுமை''யை ஆங்கிலப் பேரரசு, துப்பாக்கி முனை யில் உருவமைத்துக் காட்டியது.

''சிந்து நதியிலிருந்து பிரம்மபுத்திரா வரையிலும் – இமயத்திலிருந்து, குமரி வரையிலும்—பாரத வர்ஷம் முழுவதிலும் எதிர்ப்பற்ற ஆங்கிலேய ஆதிக்கம் கொடி கட்டிப் பறந்தது. கிறித்து பிறப்பிற்குப் பல நூற்றுண்டுகளுக்கு முன்பே, இந்துக்களின் புனித நூல்களில் எழுதப்பட்டதும் - அசோகராலும் அக்பராலும் அடைய முடியாததும்-மராத்தியர்களால் ஏற்றுக் கொள்ளப்படாததுமான ''இந்தியாவின் ஒற்றுமை'' நிகழ்வு நிலையில் உருவாயிற்று. 18-ஆம் நூற்றுண்டில் இந்தியர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்ட அகில இந்தியத் தேசியக் கோட்பாடானது, ஆங்கிலேயரின் துப்பாக்கி முனையில் உருவானதே.''2

என்று, 'இந்திய ஒற்றுமை' எவ்வகையில் ஏற்பட்டதெனத் திரு. கே. எம். பணிக்கர் அவர்கள் விளக்குகிறுர்.

## வணிகக் கழகமும் ஆங்கிலேய அரசும்

''இயக்குனர் குழு''(Court of Directors)என்று அழைக்கப்பட்ட இங்கிலாந்திலிருந்த கம்பெனியின் நிர்வாகக் குழுவிடமே கிழக்கிந்தியக் கம்பெனியின் முழு நிர்வாகமும் தொடக்கத்தில் இருந்து வந்தது. கி. பி. 1773-ஆம் ஆண்டு வரை வணிகத்துடன் சேர்த்து இந்திய நாட்டுப் பகுதிகளின் ஆட்சியையும் கம்பெனியின் 'இயக்குனர் குழுவே' நேரடியாகக் கவனித்து வந்தது. ஆங்கில அரசு, கம்பெனியின் நிர்வாகத்தில் அது வரை தலையிடவில்லை.

கம்பெனி நடத்திய பல போர்களாலும், இந்தியப் பகுதிகளின் ஆட்சியை ஒரு வணிகக் கழகம் நடத்திச் செல்ல வேண்டிய நெருக்கடியான நிலை இருந்தமையாலும், கம்பெனியின் நிதி நிலை பெரிதும் பாதிக்கப்பட்டிருந்தது. ஆகவே கம்பெனியார், கடன் பெறுவதற்காக இங்கிலாந்து அரசை அணுகினர். அதனை ஒரு வாய்ப்பாகப் பயன்படுத்திய ஆங்கில அரசு, கம்பெனியின் நிர்வாகத்தில் கட்டுப்பாடுகளை விதிக்கும் வகையில் ''1773-ஆம் ஆண்டின் ஒழுங்கு முறைச் சட்டத்தை''

---

2 Mr. K. M. Panikkar,
"A Survey of Indian History" [1971] Page 222.

இயற்றியது. பின்னர் ஏற்பட்ட 'பிட் இந்தியச் சட்டத்தால்' கம்பெனியின் நடவடிக்கைகள், 'வாணிகத்துறை' என்றும் 'அரசியல்துறை' என்றும் இரு வகைகளாகப் பிரிக்கப்பட்டன. அதன்படி, வாணிகத் துறையைப் பொருத்தவரைக் கம்பெனியின் இயக்குனர் குழுவும் (Court of Directors), இந்தியப் பகுதிகளின் நிர்வாக நடவடிக்கைகளைப் பொருத்தவரை இங்கிலாந்து அரசால் நியமிக்கப்பட்ட 6 ஆணையர்களைக் கொண்ட ஒரு 'கட்டுப்பாட்டுக் குழுவும்' (Board of Control) தனித்தனியாக நிர்வாகம் செய்தன.

கம்பெனியின் வாழ்வுக் காலத்தை நீட்டித்தர வேண்டுமென்று இங்கிலாந்து அரசைக் கம்பெனி கோரிய போதெல்லாம், பல "சாசனச் சட்டங்களின்" மூலமாகக் கம்பெனியின் நிர்வாக நடவடிக்கைகளின் மேல் கட்டுப்பாடுகளையும், ஒழுங்கு முறைகளையும் ஆங்கில அரசு விதித்ததோடு, இந்தியப் பகுதிகளின் ஆட்சிஅதிகாரங்களை மெல்ல மெல்லக் கம்பெனியிடமிருந்து இங்கிலாந்து அரசு ஏற்றுக்கொண்டது. இறுதியில் 1853-ஆம் ஆண்டில் கம்பெனியின் வாழ்வுக் காலத்தை ஆங்கில அரசு புதுப்பித்துத் தர மறுத்துவிட்டு, 1858-இல் இந்திய நாட்டு நிர்வாகம் முழுவதையும் இங்கிலாந்து அரசே நேரடியாக ஏற்றுக் கொண்டது.

இந்தியப் பகுதிகளின் ஆட்சி, கம்பெனி அரசிடமிருந்து ஆங்கில அரசுக்கு மாற்றப்பட்ட பின்னர், அதற்கு முன்னர் செயல்பட்ட "கட்டுப்பாட்டுக் குழுவினர்" பணிகளும், "இயக்குனர் குழுவின்" பணிகளும் ஒன்ருக்கப்பட்டு இங்கிலாந்திலுள்ள "இந்திய நாட்டு அரசுச் செயலர் கழகம்" (Secretary of State for India in Council) என்ற நிர்வாக அமைப்பின் பொறுப்பில் விடப்பட்டது. இந்திய நாட்டு நிர்வாகத்தைப் பொருத்தவரை இந்திய அரசுச் செயலரே (Secretary of State) ஆங்கில அமைச்சரவைக்குப் பொறுப்பானவராக ஆக்கப்பட்டார். அவரே இங்கிலாந்தின் அமைச்சரவையில் இந்தியநாட்டிற்கும் ஆங்கிலப் பேரரசிற்கும் தொடர்புத்துறை அமைச்சரும் ஆனுர். இந்தியாவின் உள்ளாட்சி, படை, சட்ட மியற்றுதல், பொருளாதாரம் இன்னேரன்ன பிற அதிகாரங்களைக் கொண்டியங்கும் இந்திய அரசிற்கு (Government of India) ஓர் உயர்மட்ட அரசு அமைப்பாகப் பிற்காலத்தில் 'இந்திய நாட்டு அரசுச் செயலர் கழகம்' மாறிவிட்டது.

## II

## மத்திய அரசு தோன்றியது

மொகலாயப் பேரரசின் ஒருமுக ஆட்சிக்கு நிலைக்களமாய்த் திகழ்ந்த டெல்லி மத்திய அரசு, ஔரங்கசீப்பின் மறைவோடு இந்திய அரசியல் வரலாற்றிலிருந்து அழிந்து போயிற்று. அதற்குப் பின்னர் 66 ஆண்டுகள் – அதாவது கி. பி. 1773 வரை—அனைத்திந்தியாவையும் ஆட்சி செய்யும் ஒரு மத்திய அரசு இந்தியாவில் உருவாக வில்லை. அந்த இடைக்காலத்தில், ஆங்கிலேயர் ஆளுகைக்குட்பட்ட இந்திய மாகாணங்கள் தன்னாட்சியுடன் அரசோச்சின. ஆங்கிலேயரின் மேலாட்சிக்குக் கட்டுப்பட்ட சிற்றரசுப் பகுதிகளிலும் தனியாட்சியே நிலவின.

கம்பெனி ஆட்சிக்குட்பட்ட இந்தியப் பகுதிகள், சென்னை, பம்பாய், கல்கத்தா என்று மூன்று தலை மாகாணங்களுள் [Presidencies] அடங்கி யிருந்தன. கம்பெனியின் வெற்றிகளால் அவ்வவ்போது ஈட்டப்பட்ட நிலப்பகுதிகளும், இடத்திற்கும் வசதிக்கும் ஏற்ற வகையில் மூன்று தலை மாகாணங்களுடனேயே சேர்க்கப்பட்டன. அத்தலை மாகாணங்களின் முழு நிர்வாகத்தையும் ஆளுநர்களே [Governors] ஏற்றிருந்தனர். அந்தந்தத் தலை மாகாணத்திற்குரிய சட்டங்களை இயற்றுவதற்கும் முழு நிர்வாக நடவடிக்கைகளை மேற்கொள்வதற்கும் போர்ப்பிரகடனம் செய்வதற்கும் சமாதான உடன்படிக்கைகளைச் செய்து கொள்ளுவதற்கும் பொதுவாக மாகாணத்திற்குத் தேவையான எல்லா ஆட்சிப் பணிகளையும் ஆற்றுவதற்கும் தேவையான அதிகாரங்களையும் அந்தந்த மாகாண ஆளுநர்களே பெற்றிருந்தனர். மாகாண ஆளுநர்கள் இங்கிலாந்திலுள்ள கம்பெனி நிர்வாகிகளுக்கு மட்டுமே நேரடியாகப் பொறுப்பானவர்கள்.

**ஆக, ஆங்கிலேயர்களின் தொடக்ககால இந்திய ஆட்சி முறை, மாகாணத் தன்னாட்சியின் அடிப்படையில் தான் அமைக்கப் பட்டிருந்தது. மத்திய அரசு என்ற ஓர் அமைப்புப் பிற்காலத்தில் தோன்றியதாகும்.**

18-ஆம் நூற்ருண்டில் ஆங்கிலேய அரசு, தனது ஆதிக் கத்தை இந்தியாவில் நிரந்தரமாக நிலை நிறுத்தவும், அதனடிப் படையில் பேரரசு ஒன்றை அமைத்திடவும் உறுதி பூண்டது. பேரரசை நிர்மாணிக்கும் போது இந்திய மக்களிடையே இயற்கையாக உருவாகும் தேசியப்பற்றைத் தவிர்ப்பதற்காக வும் அதனை நீண்ட நெடுங் காலம் நிலைக்கச் செய்வதற்காகவும் உரிய ஓர் அரசியற் கொள்கையாகவே ஒருமுக மத்திய வல்லாட் சியை [Unitary Government] நிறுவுவதற்கு ஆங்கில அரசு திட்டமிட்டது. அதன் முதற்படியாக அகில இந்தியாவிற்கு மான மத்திய அரசு [Government of India] ஒன்றை உரு வாக்கி, அதுவரை மாகாண அரசுகள் பெற்றிருந்த அதி காரங்களை யெல்லாம் அந்த ''மைய அமைப்பில் குவிக்கும் கொள்கையை'' [Centralisation Policy] ஆங்கில அரசு முதன் முதலில் கடைப் பிடிக்கலாயிற்று. அக்கொள்கையை அமுல் படுத்தும் வகையில் தான் 1773-ஆம் ஆண்டு தொடங்கி 1858-ஆம் ஆண்டு வரை, 85 ஆண்டுக் காலத்தில் பல்வேறு சட்டங்களை ஆங்கில அரசு நிறைவேற்றிற்று.

1773-ஆம் ஆண்டின் ஒழுங்குமுறைச் சட்டத்தால் [Regulating Act 1773] இந்திய நிர்வாகத்தில். அதிகாரங்களை மையப்படுத்தலின் முதல் கட்டம் ஆரம்பமாயிற்று. இந்தியா வில் அதுவரை இல்லாமலிருந்த ஒரு மத்திய அரசு, இச்சட்டத் தின் வாயிலாகத் தோற்றமெடுத்தது, வங்க மாகாணத்தின் ''வில்லியம் கோட்டையின் [Fort of William] கவர்னரே'' சென்னை, பம்பாய் ஆகிய மாகாணங்களையும் மேற்பார்வை செய்வதற்கும் அவைகளின் மேல் கட்டுப்பாடுகளை விதிப் பதற்கும் தேவையான அதிகாரங்களைப் பெற்று ''கவர்னர் ஜெனரல்'' [Governor General] ஆகவும் ஆனுர்.

ஆனுல் சில குறிப்பிட்ட அதிகார இனங்களில் மட்டுமே மாகாண ஆளுநர்களின் மேலாளராகக் கவர்னர் ஜெனரல் செயல்பட்டார். அதுவரை தலை மாகாண ஆளுநர்க் கிருந்த போர் அறிவிக்கும் அதிகாரமும், சமாதானம் மற்றும் இதர உடன்படிக்கைகள் செய்து கொள்ளும் உரிமையும் இந்தச் சட்டத்தின் மூலமாக ரத்து செய்யப்பட்டன. அந்த அதிகாரங்க ளெல்லாம் கவர்னர் ஜெனரலைத் தலைவராகக் கொண்ட ''மத்தியக் குழுவினிடம்" ஒப்படைக்கப் பட்டது. அந்தக் குழுவிற்குப் பெயர் தான் ''கவர்னர் ஜெனரல் குழு'' [Governor General in Council].

மேலும் மூன்று தலைமாகாணங்களின் அதிகார எல்லைகளிலிருந்து வரும் வழக்குகளைத் தீர்க்கக் கல்கத்தாவில் ''ஒரு தலைமை நீதி மன்றம்'' அமைக்கப்பட்டது. கம்பெனியின் ஆளுகைக்குட்பட்ட இந்தியப் பகுதிகளின் பொது நிர்வாகத்திற்கும் மற்றும் கம்பெனியின் அதிகாரிகள், சொத்துக்கள் ஆகியவற்றை முறைப்படுத்தத் தேவையான ஒழுங்கு முறை விதிகளை இயற்றுவதற்கும், கவர்னர் ஜெனரலுக்கு இச்சட்டம் முதன் முறையாக அதிகாரங்களைக் கொடுத்தது.

இந்திய நாட்டின் முதல் மத்திய அரசாங்கம் இந்தியக் கவர்னர் ஜெனரல் மற்றும் நான்கு நிர்வாக உறுப்பினர்களைக் கொண்ட ''கவர்னர் ஜெனரல் குழுவின்'' மூலமாகவே தொடக்கத்தில் இயங்கி வந்தது. அந்நான்கு உறுப்பினர்களும் ஆங்கிலப் பேரரசால் நியமிக்கப்பட்டு, 5 ஆண்டுக் காலம் பொறுப்பை வகித்தனர். அவர்களை நீக்கும் அதிகாரம் ஆங்கில அரசுக்கு மட்டுமே இருந்தது. ஐவரைக் கொண்ட இந்த மத்திய அரசுக்குழு தான் பின்னால் பல அதிகாரங்களைப் பெற்று விரிவடைந்து இன்றைய ''இந்திய மத்திய அரசாக" உருவெடுத்துள்ளது.

III

## மத்திய அரசில் அதிகாரங்கள் குவிகின்றன

''கவர்னர் ஜெனரல் குழுவின்'' [மத்திய நிர்வாகக் குழு] ஒருமித்த முடிவையும் மீறி அதன் அனைத்து அதிகாரங்களையும் செயல்படுத்தும் உரிமையை 1789—ஆம் ஆண்டுச் சட்டம் கவர்னர் ஜெனரலுக்கே வழங்கிற்று. பின்னர் இயற்றப்பட்ட ''1793-ஆம்ஆண்டு சாசனச் சட்டம்,1813-ஆம்ஆண்டின் சாசனச் சட்டம்'' ஆகியவைகள் மூலமாக இன்னும் பல அதிகாரங்களை மத்திய அரசு பெற்று, அது மேலும் வலுவாக்கப்பட்டது. பின்னர் இயற்றப்பட்ட '1833-ஆம் ஆண்டின்சாசனச்சட்டத்தில்' ஆங்கிலேய அரசின் ''அதிகாரங்களை மத்திய மயமாக்கும் கொள்கை" முழுமையைப் பெற்றது; இச் சட்டம் இந்திய மத்திய அரசின் உண்மையான 'ஒருமுக வல்லாட்சியை' இறுதியாக நிலை நாட்டி விட்டது.

மாகாணங்களின் உள்ளாட்சி அதிகாரங்களும் படை நிர்வாகமும் நிதி மற்றும் பொருளாதாரத் திட்ட விதிகளின் அமைப்பு முறைகளும் சட்டமியற்றும் அதிகாரங்களும், இச் சட்டத்தின் மூலமாகப் பறிக்கப்பட்டு விட்டன. சுருங்கக் கூறி ஞல் இந்திய மாகாணங்களே, மத்திய அரசின் எடுபிடி ஆட்களாக இச்சட்டம் மாற்றியமைத்து விட்டது. மத்திய அரசிடும் நிர்வாக அரசியல் கட்டளைகளைத் தலை மேல் தாங்கி, அவற்றை அமுல் படுத்தும் மைய அரசின் வெறும் நிர்வாக உறுப்புகளாக மாகாணங்கள் ஆக்கப்பட்டன. நிதி மற்றும் பொருளாதாரத் துறைகளிலும் மாகாணங்கள், மைய அரசால் முழுமையாகக் கட்டுப்படுத்தப்பட்டு விட்டன.

அதையடுத்து நிறைவேறிய "1853-ஆம் ஆண்டின்சாசனச் சட்டத்தின்படி", "மத்தியக் குழு" மேலும் விரிவாக்கப்பட்டது. ஒவ்வொரு மாகாணமும் மத்தியக் குழுவிற்கு ஒவ்வோர் உறுப் பினரை அனுப்ப அச்சட்டம் வழி செய்தது. மத்தியக் குழு விலிருந்த சட்ட உறுப்பினர் "நிரந்தர உறுப்பினராகவும்" ஆக்கப்பட்டார். தலைமை நீதி மன்றத்தின் தலைமை நீதிபதியும் மத்தியக் குழுவில் இடம் பெற்ருர். சட்டம் இயற்றும் அதிகாரத் தைப் பெற்ற மத்தியக் குழு [மத்திய சபை] மொத்தம் 12 உறுப்பினர்களைக் கொண்டதாக மாறிற்று. அகில இந்திய நிர்வாகத்தை ஏற்றுக் கொண்ட [ஆங்கில அரசால் நியமிக்கப் படும்] நான்கு உறுப்பினர்களும் கவர்னர் ஜெனரலும் மற்றும் மாகாணத்திலிருந்து அனுப்பப்பட்ட நான்கு உறுப்பி னர்களும் இந்தியத் தளபதியும் தலைமை நீதி மன்றத்தின் தலைமை நீதிபதியும் துணை நீதிபதியும் மத்தியக் குழுவில் இடம் பெற்றனர்.

இப்போதைய 'குடியாட்சித் தலைவர்' மற்றும் மத்திய அமைச்சரவையைப் போலவே அன்றைய 'கவர்னர் ஜெனரலும்' அவருடைய நான்கு நிர்வாகக் குழு உறுப்பினர் களும் சேர்ந்து அப்போதைய அகில இந்திய நிர்வாகத்தை நடத்தினர். இன்றைய நாடாளு மன்றத்தைப் போலவே, அன்றைய நிர்வாகக்குழுவின் 12 உறுப்பினர்களின் மூல மாக அனைத்திந்தியாவிற்குரிய சட்டங்களும் நிறைவேற்றப் பட்டன.

## IV

## அதிகாரங்களை மையப்படுத்தலினால் ஏற்பட்ட விளைவுகள்

மேற்கூறிய பல சட்டங்கள் மூலமாக அதிகாரங்கள் யாவும் மையப் படுத்தப்பட்டாலும் சென்னை, பம்பாய், கல்கத்தா போன்ற பெரிய மாகாணங்கள் தன்னாட்சி உரிமைகளைத் தம்மகத்தே தக்க வைத்துக் கொண்டன. இங்கிலாந்திலுள்ள ''இந்திய அரசுச் செயலாளரிடம்'' [Secretary of State] மேல் முறையீடுகளைச் [Appeals] செய்யவும் நேரடியாகக் கடிதப் போக்குவரத்துக்களை வைத்துக் கொள்ளவும் முக்கியமான மாகாண அதிகாரிகளை நியமிக்கவும் அம் மூன்று மாகாணங் களும் அதிகாரங்களைப் பெற்றிருந்தன. சென்னை, பம்பாய் போன்ற தலை மாகாணங்கள், தங்கள் மீது மேலாதிக்கம் செலுத் தும் மைய நிர்வாக அமைப்பை விரும்பவில்லை. ஏனெனில் மாகாண மக்களின் தனிப் பிரச்சனைகளை அன்றைய மைய அரசால் சரியாக இனம் கண்டு கொள்ள முடியவில்லை. அனைத் திந்தியாவிற்கும் பொருத்தமான பொதுக் கொள்கைகளை மட்டும் மைய அரசால் உருவாக்க முடிந்ததே யன்றி அவற்றை முறையாக அமுலாக்க அதனால் இயல வில்லை.

''அதிகாரங்களை மையப்படுத்தல்'' என்ற கொள்கை, பல்வேறு மாறுபாடுகளைக் கொண்ட அகன்ற இந்தியத் துணைக் கண்டத்திற்கு ஏற்றதல்ல என்பதால், மைய அரசால் கட்டுப் படுத்தப்பட்ட மாகாண நிர்வாகங்கள் அந்தந்த மாகாண மக்களுக்கேற்ற வகையில் சமுதாயப் பணிகளை சரி வரச்செய்ய முடிய வில்லை. ஆகவே மாகாண சுயாட்சி அதிகாரங்களை முன்னரே பெற்று விளங்கி வந்த மாகாணங்களான சென்னை, பம்பாய் போன்ற தலை மாகாணங்கள், பல நேரங்களில் மைய அரசின் ஆணைகளுக்குக் கூடக் கட்டுப்படாமல் அதனுடன் கருத்து வேறுபாடு கொண்டு, இங்கிலாந்திலிருந்த கம்பெனி நிர்வாகிகளிடம் நேரடியாக மேன் முறையீடுகளைச் (Appeals) செய்துள்ளன. மேலும் மாகாணங்கள், தங்கள் தன்னாட்சியை நிலைநிறுத்திக் கொள்வதற்காகச் செய்த பல கிளர்ச்சிகளும் வரலாற்றில் இடம் பெற்றுள்ளன.

இந்தியாவில் மைய — மாகாண மோதல்களைத் தவிர்ப்பதற்காகக் கம்பெனி நிர்வாகிகள் அவ்வப்போது கவர்னர் ஜெனரலுக்குப் பல குறிப்பாணைகளை (Despatches) அனுப்பி வந்தனர். அந்தக் குறிப்பாணைகளில், மத்தியச் சட்டங்களுக்கு ''விரிவாகப்'' பொருள் கொள்ள வேண்டுமென்றும் மத்திய அரசு, மாகாணங்களின் மேல் தனது நடவடிக்கைகளைச் சற்று யோசனையுடன் அமுல்படுத்த வேண்டும் என்றும் தெளிவாக்கப்பட்டுள்ளன. மேலும், அகில இந்தியாவிற்கான சட்டங்களை இயற்றும் அளவுடன் மத்திய அரசு நின்றுவிட வேண்டுமென்றும் மற்றைய ஆட்சிப் பணிகளில் மாகாண அரசுகளின் எல்லைகளில் மத்திய அரசு தலையிடலாகாது என்றும் அக்குறிப்பாணைகள் வலியுறுத்தின.

மத்திய — மாகாண உறவுகளில் பிணக்குகள் ஏற்படுவதைத் தவிர்ப்பதற்காக,

> ''இந்தியா முழுவதையும் ஆட்சி செய்யும் போதும், கண்காணிக்கும் போதும் மைய அரசிற்குரியவை[அதிகாரங்கள்] எவையென்றும் அதன் கீழுள்ள மாகாணங்களுக் குரியவை [அதிகாரங்கள்] எவை எவை யென்றும் வேறுபடுத்தித் தெளிவு செய்து கொண்டு, அதைக் கருத்தில் கொண்டு, சரியான வழியை எதிரொலிக்கும் முறையிலேயே கவர்னர் ஜெனரல் செயல்பட வேண்டும்''3

எனக் கம்பெனி நிர்வாகிகள் கவர்னர் ஜெனரலுக்கு அனுப்பிய குறிப்பாணையில் கோடிட்டுக் காட்டியுள்ளனர்.

மேலும் மைய—மாகாண அரசு உறவுகளைப் பற்றிய கொள்கையைக் கம்பெனி நிர்வாகிகள் குறிப்பிடும்போது, மாகாணங்களுக்குரிய நிர்வாக சுதந்தரத்தைக் கூடியவரையில் மத்திய அரசு நிலை நிறுத்த வேண்டும் என்பதையும் பல முறை வலியுறுத்தியுள்ளனர்.

28—3—1838-ஆம் நாளில் கம்பெனி நிர்வாகிகளால் அனுப்பப்பட்ட 3-ஆவது ஆணைக் குறிப்பில்,

---

3 **Despatch No. 44, *Dated* 10-12-1834, Para 80.**

"மாகாணங்களில் நடைபெறும் ஒவ்வோர் அரசுக் காரியத்திற்கும் மத்திய அரசே (Government of India) பொறுப்புடையதாகும். ஆனால் குறிப்பாணையின் 80 மற்றும் 83-ஆவது பத்திகளில் சுட்டிக் காட்டியுள்ளபடி, மாகாண அரசுகளின் வரம்பிற்குள் வரும் பொருள்கள் எவையெவை என்பதைப் பகுத்துப் பார்த்து, தவிர்க்க முடியாத நிலையிலிருக்கும் மாகாணக் காரியங்களில் மட்டுமே மைய அரசு தலையிட வேண்டும். மற்றவைகளில் மைய அரசின் கட்டுப்பாடுகள் மிகத் தெளிவானவையாயும் ஒரே சீரானவையாயும் இருக்க வேண்டும்."4

என வலியுறுத்தப்பட்டுள்ளது

1773-ஆம் ஆண்டு முதல் 1858-ஆம் ஆண்டு முடிய மொத்தம் 85 ஆண்டுகளின் இந்திய வரலாற்றை நாம் ஆய்வு செய்தால், பிரிட்டானிய ஆதிக்க அரசில் கூட மத்திய மாகாணப் போராட்டங்கள் இருந்து வந்தன என்பது நன்கு புலனாகிறது.

அந்தக்கால கட்டத்தில் மாகாணங்கள், மொழி அடிப்படையிலோ அல்லது அதனதன் தனித்தன்மையை நிலைநாட்டும் வகையிலோ பிரிக்கப்பட்டிருக்க வில்லை. அந்தந்த மாகாண மக்களின் கருத்தை எதிரொலிக்கும் 'சட்ட சபைகள்' பற்றி மக்களுக்குத் தெரியாத காலம் அது. குடியரசு முறையே இந்தியாவில் உருவாக வில்லை. ஆள்பவர்களுக்கும் ஆளப்படுபவர்களுக்கும் தொடர்பே இல்லாத சூழ்நிலை. அந்த நிலையில் கூட ஓர் அனைத்திந்திய மைய அரசாங்கத்தின் வல்லாட்சியை மாகாணங்கள் ஏற்றுக் கொள்ளவில்லையெனில், விடுதலை பெற்ற இந்தியாவின் - அரசமைப்புச் சட்டத்தின் மூலமாய் - அவ்வகை மத்திய வல்லாட்சியை இன்றைய மொழி சார்ந்த தனி மாநிலங்கள் மீது திணித்திடத்தான் முடியுமோ?

எனவே, முகலாயப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பின்னர் உருவான ஆங்கிலேயக் கிழக்கிந்திய வணிகக் கழகத்தின் ஒரு முக வல்லாட்சியும், அதிகார மனைத்தும் மையப்படுத்தப்பட்ட ஒரு மத்திய அரசும், இந்தியத் துணைக் கண்டத்திற்கு ஏற்றவையல்ல என்ற பேருண்மையைத் தான் ஆங்கில வணிகக் கழகத்தின் வரலாறும் உறுதிப்படுத்துகின்றன.

---

4 *Despatch No. 3, Dated 28-3-1838.*

## 5. அதிகாரங்களைப் பரவலாக்குதல்
### ( DECENTRALISATION )

"மாறுபட்ட தன்மைகளைக் கொண்ட ஐரோப்பிய நாடுகளைப் போலத் தனிப் பண்புகளைக் கொண்ட, பல பகுதிகளை உள்ளடக்கிய இந்தியா முழுவதற்கும் பொருளற்ற சீர்மையை (Uniform Policy) திணிக்க முனையும் ஓர் ஏற்பாட்டை அழித்தொழிப்பதற்காகவும், (மாகாண)தன்னாட்சி அரசுகளை ஊக்குவிப்பதற்காகவும் அதிகாரங்களை மையப்படுத்தும் கொள்கையை (Centralisation Policy) முற்றிலும் நாம் கைவிட வேண்டுமென்று நான் பெரிதும் விழைகிறேன்."[1]

.. ...கவர்னர் ஜெனரல் குழு உறுப்பினர் சாமுவேல்லெய்ங்.

ஆங்கில ஏகாதிபத்தியத்தை இந்தியாவில் உருவாக்கி நிலை நிறுத்துவதற்காக ஆங்கிலேயர்கள் கடைப்பிடித்த பல பயங்கரமான அரசியற் கொள்கைகள் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைக்காலத்தில் இந்திய மக்களிடையே தீவிரமான விழிப்புணர்ச்சியைத் தோற்றுவித்தன. மொகலாய அரசின் இறுதி வழித் தோன்றல்களும் வீர மிகு மராத்தியர்களும் வீறு கொண்ட வங்கத்தினரும் மற்ற மொழி பேசும் மாநிலத்தவர்களும் நாட்டுப் பற்றுக் கொண்ட சில சுதேச மன்னர்களும் இந்தியப் படைப் பிரிவுகளில் பணியாற்றிய வீரர்களும் சேர்ந்து எவ்வகையிலும் வெள்ளையனை இந்திய மண்ணிலிருந்து விரட்டியடிக்க உறுதி பூண்டனர். அதற்குச் சூழலும் துணை நின்றது. ஆங்கிலப் பேரரசின் நச்சுக் கொள்கைகள் இந்திய மக்களுடைய நெஞ்சை நெருப்பிட்டுக் கொளுத்தியிருந்தன.

---

1 Mr. Samuel Laing, Minutes Dated 28-1-1861, Page 58 " A Selection of Papers Relating to the Constitution And Functions of Indian Legislative Councils". [1886]

1757-ஆம் ஆண்டில் பிளாசிப் போரில் தொடங்கி மெல்ல மெல்லப் பறிபோன இந்தியச் சுதந்திரம் ஒரு நூற்றாண்டு கழித்து 1857-ஆம் ஆண்டில் மீண்டும் புத்துயிர் பெறத் துடித்தது. இந்திய மண்ணில் புரட்சி பூத்தது. 1857-ஆம் ஆண்டில் ''சிப்பாய்க் கலகம்'' என்ற பெயரில் ''முதல் இந்தியச் சுதந்திரப் போர்'' வெடித்தது. புரட்சிக் கனல் இந்தியத் துணைக் கண்டத்தின் பெரும் பகுதியைப் பற்றி எரித்தது. ஆனால் ஏகாதிபத்திய வெறி கொண்ட வெள்ளையர் அரசு அதனைத் தன் இரும்புக் கரத்தால் அடக்கிற்று,

முதல் சுதந்திரப் போரின் விளைவு—அதுவரை கிழக்கிந்தியக் கம்பெனியினிடமிருந்து வந்த இந்தியத் துணைக்கண்டத்தின் பல பகுதிகள், ஆங்கிலப் பேரரசின் நேரடி ஆட்சிக்கு மாற்றப்பட்டன. ஆளுநர்களின் ஆளுகையில் இருந்த சென்னை, பம்பாய், கல்கத்தா போன்ற தலை மாகாணங்களும், லெப்டினென்ட் ஆளுநர்கள் மூலமாக ஆட்சி செய்யப்பட்ட வடமேற்கு மாகாணம், பஞ்சாப், வங்காளம், பர்மா ஆகிய சிறு மாகாணப் பகுதிகளும், ஆணையர்களால் நிர்வாகம் செய்யப்பட்ட மத்திய மாகாணம், அஸ்ஸாம், பலுசிஸ்தானம், வடமேற்கு எல்லைப் பகுதி ஆகியவையும் மற்றும் மத்திய நிர்வாகத்தின் நேரடி ஆட்சியிலிருந்த குடகு, ஆஜ்மீர், அந்தமான், நிக்கோபர்த் தீவுகள், டெல்லி ஆகிய நிலப் பகுதிகளும் ஆங்கிலப் பேரரசின் நேரடி நிர்வாகத்தின் கீழ்க் கொண்டுவரப்பட்டன.

ஆங்கிலத்துரைத் தனத்தினரிடம் புதியதோர் விழிப்புணர்ச்சியும் தோன்றியது. அதனால் அவர்களது ஆட்சிக் கொள்கைகளும் மாற்றத்தைப் பெற்றன. ஆள்வோருக்கும் ஆளப்படும் மக்களுக்கும் இடையில் அதுவரை நிலவியிருந்த ஆழ்ந்தகன்ற பெரு வெளியை மெல்ல மெல்லக் குறைக்கும் வகையில் இந்தியர்களுக்குச் சில பல அதிகாரங்களையும் தன்னாட்சி உரிமைகளையும் வழங்க ஆங்கிலேய ஆட்சியாளர்கள் முடிவு செய்தனர்.

I

## அதிகாரங்கள் பரவலாக்கப்பட்டதேன்?

பொங்கி எழுந்த இந்தியச் சுதந்திர உணர்வின் வேகத்தைத் தணிக்க ஆங்கில ஏகாதிபத்திய அரசு, தனது ராசதந்திரமாக இரண்டு மூலக் கொள்கைகளைக் கடைப்பிடித்தது. அதில்

ஒன்று ''பிரித்தாளும் சூழ்ச்சி'' (Divide and Rule). இன்னொன்று சூழ்நிலைக்கேற்ப அதிகாரச் சலுகைகளை அவ்வப்போது மாநிலங்களுக்கு வழங்கும் கொள்கை (Policy of giving Autonomous powers to States).

இந்திய வரலாறும் நில நூலும் உருவாக்கிய இயற்கையான மத, மொழி, இன வேறுபாடுகளைக் கொண்டியங்கி வந்த இந்திய மக்களை, சூழலுக்கு ஏற்பப் பிரித்து வைத்து, அவர்களுக்குள் இயற்கையாய் நிலவி வந்த முரண்பாடுகளைப் பேணி வளர்த்து, தங்கள் ஆதிக்கத்தை இந்திய மண்ணில் என்றென்றும் நிலை நிறுத்திக் கொள்வதற்காக, ஆங்கிலேயரால் கையாளப்பட்ட திறன் படைத்த ஒரு ராசதந்திரக் கொள்கையே ''பிரித்தாளும் சூழ்ச்சி'' (Divide and Rule) எனப்பட்டது.

ஆதிக்க அரசிற்கு உயிர்நாடியான சில மூலாதார அதிகாரங்களை மட்டும் தன்னிடத்தில் இருத்திக் கொண்டு, அவ்வப்போது உருவாகும் அரசியற் சூழலுக்கு ஏற்ப, நிலைமையைச் சமாளிக்கத் தேவையான சில அதிகாரச் சலுகைகளை மட்டும் இந்திய (மாகாண) அரசமைப்புக்களுக்கும் (Political Institutions) கொடுத்து, அதன் மூலம் பெருகி வரும் நாட்டுப்பற்றுக்குத் தடைபோட முயன்ற ராசதந்திரமே வெள்ளையரின் இன்னொரு மூலக் கொள்கையாயிற்று,

1857-ஆம் ஆண்டில் நடந்த முதல் இந்தியச் சுதந்திரப் போருக்குப் பின்னர் விழிப்படைந்த ஆங்கிலேய ஆளும் வர்க்கத்தினர், இந்திய நாட்டை விட்டு வெளியேறும் வரையிலும் மேற்சொன்ன இருவகை அரசியற் கொள்கைகளை வெற்றிகரமாகச் செயல் படுத்தினர். மேற் சொன்ன இரண்டாவது வகையைச் சார்ந்த அரசியற் கோட்பாட்டின் ஒரு கூறாகவும் மத்திய வல்லாட்சியின் வலுவைத் தளர்த்தும் வகையிலும் அதுவரை மத்திய அரசில் குவிந்திருந்த பல அதிகாரங்கள் மெல்ல மெல்லப் பரவலாக்கப்பட்டன. அதிகாரங்களை மாகாணங்களுக்களிக்கும் கொள்கை ஆங்கில அரசால் ஏற்றுக்கொள்ளப்பட்டதெனினும் தங்கள் ஏகபோக ஆதிக்கத்தை உடனடியாக இழந்து விடவும் அவர்கள் விரும்பவில்லை. ஆகவே இங்கிலாந்துக்குக் கட்டுப்பட்ட ''இந்திய மத்திய அரசை'' முழுமையாகவும் அவர்கள் மாற்றி அமைக்க விரும்ப வில்லை,

எனவே, இந்திய நாட்டில் உருவாகிவிட்ட நாட்டுப்பற்றுக்கு, ஏதோ ஒரு வகையில் ஈடு கொடுக்கும் முறையிலேயே மாகாணங்களில் எழும் பிரச்சனைகளையும் தேவைகளையும் அவர்கள் ஓரளவிற்கு அணுக முயன்றனர். அதன் அடிப்படையில் ஆதிக்க அரசமைப்பின் உறுப்புகளாகத் திகழ்ந்த, அன்றைய மாகாணங்களுக்குச் சிற்சில அதிகாரங்களை மட்டும் அரசு மட்டத்தில் பங்கிட்டுக் கொடுக்க ஆங்கில அரசு முன் வந்தது. அதனைத்தான் அதிகாரங்களைப் பரவலாக்குதல்[Decentralisation]என அரசமைப்பு வல்லுனர்கள் குறிக்கின்றனர்.

## II

## " அதிகாரங்களைப் பரவலாக்குதல் "

## ( DECENTRALISATION )

ஓர் அரசாங்கத்தின் நிர்வாக வசதிக்காக அதன் மத்திய அமைப்பில் குவித்து வைத்திருக்கும் அதிகாரங்களைக் கீழ்மட்ட அரசு நிறுவனங்களுக்கும், மற்ற அரசு அமைப்புக்களுக்கும் பகிர்ந்து கொடுப்பதைத் தான் "அதிகாரங்களைப் பரவலாக்குதல்" எனப் பொதுவாகக் குறிப்பிடுகிறோம்.

ஒற்றையாட்சி அரசு, தனது மத்திய அமைப்பிலிருக்கும் அரசாங்கப் பொறுப்புகளின் சுமை தாங்க முடியாமல்—நிர்வாக வசதியை அடிப்படையாக வைத்து — அந்த நிர்வாகச் சுமையைக் கீழ் மட்ட அரசு அமைப்புக்களுக்குப் பிரித்துக் கொடுப்பதும் "அதிகாரப் பரவல் முறை"தான்.

ஆகவே ஒரே தலைமை அரசின் கீழ் வருகிற பல அதிகாரங்களை அதனுடைய அடுத்த மட்டத்திற்கும், அதற்கடுத்த மட்டத்திற்கும் பரப்பி வைக்கும் அரசுக் கொள்கையை 'அதிகாரங்களைப் பரவலாக்குதல் (Decentralisation) எனலாம். சான்றாக மத்திய அரசு மட்டும் செயல்படும் நாடுகளில், அவற்றின் உள்ளாட்சி அமைப்புக்களான, "மாவட்ட வாரியங்கள்", "ஊராட்சி ஒன்றியங்கள்", "ஊராட்சி மன்றங்கள்", "நகராட்சிகள்", "மாநகராட்சிகள்" ஆகியவைகளுக்குப் பல அதிகாரங்கள் பிரித்துக் கொடுக்கப்பட்டுள்ளன. இவை யாவும் சாதாரண நிர்வாக ஆணைகளின் மூலமாகவே பெறப்படுகின்றன. ஆனால் வேறொரு சூழ்நிலையில் இவ்வகை அதிகாரப்

பரவலாக்கம் அவசியமில்லை எனக் கருதப்பட்டால் — அதே நிர்வாக வசதியின் காரணமாக-வேறொரு நிர்வாக ஆணையைப் பிறப்பிப்பதன் மூலம் அவற்றை மாற்றியமைத்துக் கொள்ளவும் முடியும். கீழ்மட்ட அமைப்புகளுக்குப் பரவலாக்கித் தரப்பட்ட அதே அதிகாரங்களை, ஒரு சாதாரண நிர்வாக உத்தரவின் மூலம் (Administrative Order) மீண்டும் அந்நாட்டின் மத்திய அமைப்பு, பறித்துக் கொள்ளலாம்.

ஆனால் கூட்டாட்சி நாடுகளிலுள்ள மாநிலங்களுக்கு, முறையாகப் பிரித்து வழங்கப்பட்ட அதிகாரங்கள் எல்லாம்அரசமைப்புச் சட்டத்தால் உறுதி செய்யப்பட்டவை. அரசமைப்புச் சட்டத்தையே மாற்றினாலன்றி அல்லது திருத்தினாலன்றி அந்த மாநில அதிகாரங்களை மத்திய அரசு பறிக்க முடியாது. அதற்கு மாறாக, ''பரவலாக்கப்பட்ட அதிகாரங்களை'' ஒரு சாதாரண உத்தரவின் மூலமே மத்திய அமைப்பிலிருந்து மற்ற அரசு நிறுவனங்கள் பெற்றுக் கொள்ளுகின்றன. எனவே அவை நிரந்தரமானதுமல்ல; காப்புறுதி அளிக்கப்பட்டவையுமல்ல; வெறும் நிர்வாக ஏற்பாடு மட்டும் தான்.

ஆங்கிலேயரிடம் அடிமைப்பட்டுக் கிடந்த அன்றைய இந்தியாவில் வல்லாட்சியை ஓம்பும் மத்திய அரசிடமே எல்லா அரசதிகாரங்களும் குவித்து வைக்கப்பட்டிருந்தன. மாகாணங்கள் யாவும் அந்த மத்திய அரசின் ஏஜெண்டுகளைப் போன்றிருந்தனவே யன்றி, தமக்குரிய தனித்த அதிகாரங்களைச் சுயமாக இயங்கத்தக்க அளவில் பெற்றிருக்கவில்லை. 1858-ஆம் ஆண்டிற்குப் பின்னர் உருவான அரசியற் சூழ்நிலைகளால் '' அதிகாரங்களைப் பரவலாக்கும் கொள்கை" ஆங்கில அரசின் பேரரசைக் காப்பதற்காகவே அமுல்படுத்தப்பட்டது. மேலும் பலவகை மக்களைக் கொண்ட பெருநாட்டிற் கேற்ற வகையில் ஒரே மத்திய அரசால் எல்லா அதிகாரங்களையும் சுமந்து கொண்டு முறையாகச் செயல்படவும் முடியவில்லை.

எனவே "அதிகாரப் பரவல் முறை" ஆங்கிலேயரின் ராச தந்திரக் கொள்கையின் அடிப்படையிலும் சுயநலத்தாலும் வேறு வழியின்றியும் அன்றைய நிலையில் மெல்ல மெல்ல அமுலாக்கப் பட்டது. ஆனாலும் அது மாநில சுயாட்சியின் தோற்றத்திற்கு நல்லதோர் அரசியற் சூழலாக அமைந்து விட்டது. இனி ஆங்கிலப் பேரரசால் ''அதிகாரப் பரவலாக்கம்'' எவ்வகையில் செயல்படுத்தப்பட்டது என்பதைப் பார்ப்போம்.

## இந்திய மன்றங்களின் சட்டம் (1861)
## (INDIAN COUNCILS ACT-1861)

அதிகாரப் பரவல் கொள்கையின் முதல்படியாக 1861-ஆம் ஆண்டின் "இந்திய மன்றங்களின் சட்டத்தை" ஆங்கில நாடாளு மன்றம் நிறைவேற்றியது. 1773-இல் இயற்றப்பட்ட "ஒழுங்கு முறைச் சட்டம்" எல்லா அதிகாரங்களையும் மையப்படுத்தும் (Centralisation) செயல்முறையைத் தொடங்கி வைத்ததெனில், "இந்திய மன்றங்களின் சட்டம்" அதற்கு நேர் முரணுக, அதிகாரங்களைப் பரவலாக்கும் (Decentralisation) செயல் முறையைத் தோற்றுவித்தது. மிகப் பெரிய உரிமைகளை இந்தியர்களுக்கு இந்தச் சட்டம் வழங்கிடாவிடினும் 20-ஆம் நூற்றுண்டில் வளர்ந்த மாகாணச் சட்ட மன்றங்களின் வளர்ச்சிக்கு இது ஒரு மூலச் சாசனமாக அமைந்திருந்தது.

சென்னை, பம்பாய் போன்ற தலை மாகாணங்கள், இழந்த தங்கள் சட்டமியற்றும் அதிகாரங்களை மீண்டும் பெற்றன. மத்திய அரசின் நேரடிஆட்சியிலிருந்த மற்ற மாகாணங்களிலும் கூட, புதுச் சட்ட மன்றங்களை ஏற்படுத்த இச் சட்டம் வழி செய்தது. அதன் பயனுய் வங்கத்திலும் வடமேற்கு மாகாணத்திலும் பஞ்சாப்பிலும் புதிய சட்டமன்றங்கள் அமைந்தன. அரசுப் பிரதிநிதிக்கு (வைஸ்ராய்) புது மாகாணங்களைத்தோற்றுவிக்கவும் அவற்றிற்குச் சட்டமியற்றும் அதிகாரங்களைக் கொடுக்கவும், லெப்டினெட் ஆளுநர்களை நியமிக்கவும் அதிகாரங்கள் தரப்பட்டன.

ஆனல் மாகாணச் சட்ட மன்றங்களின் சட்டமியற்றும் உரிமை, கடுமையாக வரையறைப் படுத்தப்பட்டிருந்தது. சில இனங்களில் மாகாணங்கள் சட்டமியற்றும் முன்னரே அரசுப் பிரதிநிதியின் (Viceroy) அனுமதியைப் பெறவேண்டும். இன்றைய அரசமைப்பிலும் இத்தகைய அனுமதியைப் பெற வேண்டிய சட்டங்கள் உள்ளன. மாகாணச் சட்டமன்றத்தால் நிறைவேற்றப்பட்ட எல்லாச் சட்டங்களும் அரசுப்பிரதிநிதியின் இசைவைப் பெறவேண்டும்.

சட்டம் செய்யும் அதிகார இனங்கள் மைய அரசிற்கென்றும், மாகாண அரசுகளுக் கென்றும், தனித் தனிபாகப் பிரிக்கப்பட்டிருக்க வில்லை. சட்டம் இயற்றக்கூடிய எல்லாத் துறைகளிலும், இருவகை அரசுகளும் (மத்திய அரசும் மாகாண அரசுகளும்)

ஒரே நேரத்தில் சட்டம் இயற்றலாம். ஆனல் 'நாணயம்' 'அஞ்சல்துறை', 'மதம்', 'கப்பல்' மற்றும் 'ராணுவத்துறை', 'படி உரிமை' (Copy rights), 'வெளிநாட்டுறவு' மற்றும் 'இந்தியச் சிற்றரசர்கள் தொடர்பு' ஆகிய இனங்களில் மாகாண மன்றங் களுக்குச் சட்டமியற்ற அதிகாரம் கொடுக்கப்படவில்லை.

மொத்தத்தில் மாகாணங்கள் தன்னுட்சி உரிமைகள் சிலவற்றைப் பெறுவதற்கு, இச்சட்டம் முதற்படியாய் அமைந்தது.

### காங்கிரஸின் தோற்றமும் மாகாணத் தீர்மானமும்

19-ஆம் நூற்ருண்டின் இறுதியில் இந்திய அரசியல் சூழ் நிலை கொந்தளித்திருந்தது. ஏகாதிபத்திய அரசின் பொருளா தாரச் சுரண்டற் கொள்கையினல், இந்தியாவின் செல்வம் ஆங்கிலேயரால் கொள்ளையடித்துச் செல்லப்பட்டது. அதன் விளைவாக 1877-இல் மிகக் கடுமையான பஞ்சம் இந்தியாவைப் பற்றிக் கொண்டது. இந்திய மக்களிடையே அரசியல் விழிப் புணர்ச்சி மீண்டும் ஏற்படலாயிற்று. மேல் நாடுகளில் வளர்ந்த அரசியல் தத்துவ உணர்வுகள் இந்தியாவின் படித்த இளைஞர் களைச் சிந்திக்கத் தூண்டின. ஓரளவிற்கு உருவான அச்சகம், பத்திரிகைகள், செய்தித் தொடர்புகள் ஆகியவை மக்களின் எண்ணப் பறிமாற்றங்களையும் ஒருமை உணர்ச்சியையும் தோற்றுவித்தன. மாகாணங்களுக்கு ஓரளவு அதிகாரங்கள் பரவலாக்கிக் கொடுக்கப்பட்டுங் கூட, புதிய விழிப்புணர்ச்சி யால் உந்தப்பட்ட இந்தியர்களை அது திருப்திப்படுத்த வில்லை. அரசு நிர்வாகத்தில் உரிய பங்கைப் பெறுவதற்கு இந்தியர் கள் துடித்தனர்.

. கற்ற சில இளைஞர்கள் வெள்ளை ஏகாதிபத்தியத்தை எதிர்ப்பதற்காக ஓர் இயக்கத்தை உருவாக்கி, அதன் மூலம் அவர்களைப்புரட்சியில் ஈடுபடுத்தும் ஒரு தீவிர அரசியற் சூழலும் இந்தியாவில் உருவானது. ஆனல் எவ்வகையிலாவது அதனைத் தவிர்ப்பதற்காகவே, வெள்ளைக்காரர் திரு. ஹியூம் (Hume) அவர்களால் 1885-ஆம் ஆண்டில் அகில இந்தியத் தேசியக் காங்கிரஸ் (Indian National Congress) உருவாக்கப்பட்டது.

பம்பாயில் நடந்த முதற் காங்கிரஸ் மாநாட்டிலேயே மாகாணத் தீர்மானம் தான் முதலாவதாக நிறைவேற்றப் பட்டது. ''மாகாணச் சட்ட மன்றங்களில், மக்களால் தேர்ந் தெடுக்கப்பட்ட உறுப்பினர்களை அதிகமாக அனுமதிக்கும் வகையில் மாகாணச் சட்ட மன்றங்களை மேலும் விரிவு படுத்த வேண்டும்'' எனவும் ''சட்டசபையில் பெரும்பான்மை உறுப் பினர்கள், மாகாண நிர்வாகிகளை [கவர்னரையும் அவரது சபையையும்] கண்டனம் செய்தால், அத்தகைய கண்டனங் களையும் விமர்சனங்களையும் பரிசீலிப்பதற்காக இங்கிலாந்தின் பொதுச் சபையில் 'நிலைக்குழு' (Standing Committee) ஒன்று உருவாக்கப்படல் வேண்டும்'' என்றும் வற்புறுத்தி ஓர் தீர் மானத்தை நிறைவேற்றியது. சிந்தனையாளர் ஜான்பிரெய்த் (JOHN BRIGHT) போன்றவர்களுடைய தீவிரக் கருத்துக் களும் ஆங்கில அரசின் போக்கை மாற்றியமைத்தது.

### இந்திய மன்றங்களின் சட்டம் (1892)

அதிகாரப்பரவல் கொள்கையின் இரண்டாவது கட்டமாக ''1892-ஆம் ஆண்டின் இந்திய மன்றங்களின் சட்டம்'' இயற்றப் பட்டது. சென்னை, பம்பாய் மாகாணங்களின் சட்டசபைகளில் 8 முதல் 20 அதிக உறுப்பினர்கள் சேர்க்கப்பட்டனர். கவர் னர் ஜெனரலின் மத்திய சபையில் 10 முதல் 16 அதிக உறுப் பினர்கள் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். தேவையானல் இந்திய அரசுச் செயலரின் [Secretary of State] ஒப்புதலுடன் இன்னும் அதிக உறுப்பினர்களையும் அந்தந்த அவைகளில் சேர்த்துக் கொள்ள, அரசுப் பிரதிநிதிக்கு [வைஸ்ராய்] இச் சட்டம் உரிமை அளித்தது. 'மாநகராட்சிகள்', 'நகராட்சிகள்'' 'மாவட்ட வாரியங்கள்' [District Boards], 'சாதிச் சங்கங்கள்', 'வர்த்தகக் கழகங்கள்', 'நிலக்கிழார்கள்', 'பல்கலைக் கழகங் கள்' ஆகியவைகளின் கருத்துக்களையும் பரிந்துரைகளையும் மாகாண ஆளுநர்களும் அரசுப் பிரதிநிதியும், பரிசீலித்த பின்னரே மாகாண—மத்தியச் சட்ட சபைகளுக்கு உறுப் பினர்கள் நியமிக்கப்பட வேண்டும். ஒவ்வோர் ஆண்டின் நிதிநிலை அறிக்கை [பட்ஜெட்] பற்றிய விவாதங்களை நடத்தவும், நிர்வாக நடவடிக்கைகள் பற்றி வினக்களைத் தொடுக்கவும் சட்டமன்ற உறுப்பினர்களுக்கு, இச்சட்டம் உரிமை வழங்கிற்று.

விளைவுகள்

ஆங்கிலேய நிர்வாகத்தின் அடிப்படையில், மாகாணங்களில் மிகப் பெரிய மாற்றங்களை இந்தச் சட்டம் கொண்டு வராவிடினும், மாகாணச் சட்ட மன்றங்களின் அளவு விரிவாக்கப்பட்டது. மறைமுகத் தேர்தல் மூலமாகத் தேர்ந்தெடுக்கப்படும் இந்திய உறுப்பினர்களையும் அந்தச் சபைகளில் பங்கு கொள்ளச் செய்தது இச்சட்டம். இவ்வகையில் மாகாண நிர்வாகத்தில் இந்தியர்களை அதிகப் பொறுப்புக்களில் ஈடுபடச் செய்யும் அளவில் இச்சட்டம் பயன் விளைவித்தது.

முழுமையான அதிகாரப்பரவல் [Copmlete Decentralisation] இந்த இரண்டு சட்டங்களினாலும் ஏற்படவில்லை. அக்கொள்கை முறைப்படியும் அமையவில்லை. மாகாணங்களுக்குச் சட்டப்பூர்வமாக வரையறுக்கப்பட்ட தன்னாட்சியும் வழங்கப்படவில்லை. வரலாற்றாசிரியர், ''கீத்'' [Keeth] அவர்கள் கூறியது போல் ''சட்டமியற்றுத் துறையிலும், நிர்வாகத் துறையிலும், மாகாண அரசுகள் முற்ற முழுக்க மத்திய அரசிற்குக் கீழ் நிலைப்பட்டதாகத் தான் இருந்தன.'' தவிர மத்திய அரசு மாகாண நிர்வாகங்களின் மேல் கட்டுப்பாடுகளையும் செயல்படுத்திற்று. ஆனால் மத்திய அரசின் ஏகபோக அதிகாரங்களை மாநிலங்களுக்குப் பரவலாக்கும் கொள்கையை அமுல்படுத்தும் முறையில், இச் சட்டம் இரண்டாம் படியாக அமைந்தது.

## III

## கர்சானின் ''அகில இந்தியச் சேவைகள்''

## [ALL INDIA SERVICES]

20-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இந்திய அரசுப் பிரதிநிதியாக [வைஸ்ராயாக]ப் பொறுப்பேற்ற கோமகன் கர்சான் அவர்கள், இந்திய மன்றச் சட்டங்களினால் மாகாணங்களுக்கு வழங்கப்பட்ட சொற்ப அதிகாரங்களில்கூட மாகாண அரசுகள் செயல்பட இயலாத வகையில் மீண்டும் வலிமை கொண்ட ஒரு மத்திய அரசைப் படைக்க முனைந்தார். அவரது

கொள்கைகள் மாகாணங்களை மீண்டும் முழுமையான அளவிற்கு, மத்திய அரசிற்குக் கட்டுப்பட வைத்தது. பேராசிரியர் பாம்வெல் அவர்கள் கர்சானின் ஆட்சிக் காலத்தில் ஏற்பட்ட அரசியற் சூழ்நிலையை விவரிக்கையில்,

> ''கர்சானின் கீழ் இந்தியாவின் நிர்வாகம், அமைப்பிலும், நடப்பிலும் ஒருமுக ஆட்சி யாயிற்று. மாகாணங்களின் நிர்வாகங்களைப் பொறுத்துச் சில பொதுக் கொள்கைகளை இந்திய அரசு வகுத்ததுடன், மாகாண நிர்வாகங்களின் உள்வட்ட விவகாரங்களின் பேரில், [மத்திய அரசு] சில கடுமையானதும் நிலையானதுமான கட்டுப்பாடுகளை அமுலாக்கிற்று.''2

எனக் கூறுகின்றார். ஆனால் அமுலில் இருந்த சட்டங்களை கர்சான் அவர்கள் மாற்றி அமைக்கவில்லை.

சட்டங்களை மாற்றாமல் அவரால் மத்திய அரசை வலுப்படுத்த எப்படி முடிந்தது? தற்போதைய நமது இந்திய மத்திய அரசு, எப்படி ''அனைத்திந்தியாவிற்கும் ஒரே சீர்மைக் கொள்கை'' என்ற அடிப்படையில் பல அகில இந்தியத் துறைகள் மற்றும் சேவைகள் மூலமாக மாகாண அரசுகளின் மேல் மேலாட்சி செலுத்துகிறதோ அதைப்போலவே, கவர்னர் ஜெனரல் கர்சான் அவர்களும், மாகாணத் துறைகளையும் சேர்த்து மத்திய அரசே நிர்வகிக்கும் பல ''அகில இந்திய அதிகாரிகளையும்'' மற்றும் அகில இந்திய சேவைகளையும் [All India Services] உருவாக்கினர்.

நாட்டின் அடிப்படையான எல்லாத் துறைகளையும் நிர்வகிக்க அகில இந்திய மட்டத்தில் தனித்தனி நிர்வாகத் துறைகள் அமைக்கப்படலாயின. "இந்திய மருத்துவத்துறை", ''குற்றப் புலனாய்வுத்துறை'', ''கல்வித்துறை'' மற்றும் ''நில அளவைத்துறை'' ஆகியவைகளில் தலைமை இயக்குனர்களையும் (Directors);'காட்டுத்துறை',"பொதுத்துறை", '.கால்நடைத் துறை'', ''வேளாண்மைத்துறை'', ''நீர்ப்பாசனத்துறை'', '' உப்பு, கலால் துறை " ஆகியவைகளில் இந்தியத் தலைமை அதிகாரிகளையும், வரலாற்றிலேயே முதன்

---

2 Prof. K. R. Bombwall,
The Foundations of Indian Federalism, Page 80.

முதலாக அகில இந்திய ரீதியில் கர்சான்தான் நியமனம் செய்தார். இதனுல் "மாகாண நிர்வாகத்துறை" முழுவதும் மைய அரசின் அகில இந்திய நிர்வாகத்துறையோடு இரண்டறக் கலந்து விட்டன. மாகாண அரசுகளுக்கு, அந்தத் துறைகளைப் பொறுத்த மட்டிலும் தனிச் சட்டங்களை இயற்றவோ, தனி நிர்வாகத்தை நடத்தவோ இயலவில்லை.

**கர்சானும் நமது அரசமைப்பும்**

கர்சானுக்குப் பின்னர் ஏறத்தாழ 45 ஆண்டுகள் கழித்து உருவாக்கப்பட்ட இன்றைய இந்திய அரசமைப்புச் சட்டத்தில் கர்சானுல் அமைக்கப்பட்ட சில அகில இந்தியத் துறைகள் ( All India Services) அதன் வளர்ந்த நிலையில் நிரந்தரமாக்கப் பட்டு விட்டன. கூட்டாட்சி முறை (Federal) கொண்டதாகக் கருதப்படும் இந்தியக் குடியரசு நாட்டின் இப்போதைய மைய அரசின் கீழுள்ள அனைத்திந்தியச் சேவைகளும், (All India Services) அகில இந்திய அதிகாரிகளும் மாநிலங்களின் தன்னுட்சி உரிமைகளைப் பெரிதும் பாதித்து விட்டன என்ருல் அது மிகை யாகாது. அது பற்றி இந்நூலின் 3-ஆம் பகுதியில் தெளிவாக விளக்கப் பட்டுள்ளது.

''அரசுப் பிரதிநிதி கர்சானின் பதிவிக்கால—ஓய்வு, இந்திய அரசமைப்பு வளர்ச்சியின் [மாநில சுயாட்சி வளர்ச்சியின்] ஒரு முக்கிய நிகழ்ச்சியாகக் கருதப்படுகிறது.''

என்று ஆசிரியர் பாம்வெல் அவர்கள் கருதுகிருர்கள்.

கர்சான் ஓய்வு பெற்று, சற்றேறக்குறைய 68 ஆண்டுகள் ஆயின. ஆனுல் கர்சானின் கொள்கையான 'அனைத்திந்திய சேவைகள்' இன்றும் ஓய்வு பெறவில்லை. மாருக, இன்றைய மைய அரசால் அவை நாளும் வளர்க்கப்பட்டு வருகின்றன.

இந்திய நிர்வாகச் சேவையும் (Indian Administrative Service), இந்தியக் காவல்துறைச் சேவையும் (Indian Police Service), நமது அரசியலமைப்புச்சட்டத்தின் 312-ஆம்விதியின் மூலமாக இன்றும் அப்படியே வைத்துக் கொள்ளப்பட்டன. இவை தவிர ''இந்தியப் பொறியியல் சேவை'' (Indian Engineering Service), ''இந்திய மருத்துவச் சேவை''(Indian

Medical Service), ''இந்திய வேளாண்மைச் சேவை'' (Indian Agricultural Service), ''இந்திய வனச் சேவை'' (Indian Forest Service), "இந்தியக் கல்விச் சேவை" (Indian Educational Service) ஆகிய ஐந்து அகில இந்தியச் சேவைகளையும் [அதிகாரிகளையும்] நமது அரசமைப்பின் 312-ஆம் சட்டவிதிப் படி இன்றைய மத்திய அரசு மீண்டும் உருவாக்க முனைந்திருப் பது இங்கு நினைவு கூறத்தக்கது. மாநில சுயாட்சி வளர்ச்சியில் அகில இந்தியச் சேவைகளின் பதவிக்கால—ஓய்வு இனி என்று வருமோ?

## IV

## சுயாட்சிக்கேற்ற சூழ்நிலை

வைஸ்ராய் கர்சானின் ஆட்சி முறை நடவடிக்கை களாலும் வங்கப் பிரிவினையாலும் இந்தியச் சுதந்திர இயக்கம் தீவிர மடைந்தது. 1906–ஆம் ஆண்டில் இந்தியத் தேசியக் காங்கிரஸ் 'சுயராச்சியத் தீர்மானத்தை' நிறைவேற்றி நாட் டிற்கு ஒரு விடுதலை முழக்கத்தைக் கொடுத்தது. இந்தியாவின் புதிய அரசியல் சூழ்நிலைக்குப் பழைய அதிகாரப் பங்கீடுகளின் சட்டங்கள் [மன்றச் சட்டங்கள்] ஈடு கொடுக்க முடியவில்லை.

எனவே. இன்னும் அதிக அதிகாரங்களையும் குடியரசு முறை யிலான பிரதிநிதித்துவ முறை அரசாங்கத்தையும் இந்தியர்களுக்கு வழங்குவதாக அறிவித்ததோடு, அதற்கு ஏற்ற வகையில் நிதி, நிர்வாக, சட்டமியற்றுத் துறைகளில் ஏற்பட்டிருக்கும் மத்திய—மாகாண உறவுகளின் தன்மைகளை மறுபரிசீலனை செய் வதற்காகவும் அதனடிப்படையில் அதிக அதிகாரங்களை மாகாணங்களுக்குப்பரவலாக்கிக்கொடுக்கும் (Decentralisation) வழி முறையைக் காண்பதற்காகவும் ''மன்னர் ஆணைக்குழுவை'' (Royal Commission) ஆங்கில அரசு நியமித்தது.

"மன்னர் ஆணைக்குழு", சில நிதித்துறை சார்ந்த பரிந் துரைகளை மட்டும் செய்தது. ஆனால் இந்தியத் தலைவர்களால் மிகுதியாக எதிர்பார்க்கப்பட்டபடி, ''பிரதிநிதித்துவ அரசாங் கத்தை''ப் பற்றியும் (Representative Government), முழுமை யாகப் பரவலாக்கப்பட்ட அதிகாரங்களை (Decentralised Powers)

மாகாணங்களுக்குக் கொடுப்பது பற்றியும், இந்திய நிர்வாகத்தில் பெரியதொரு மாற்றத்தை (Administrative Changes) உருவாக்கவல்ல கொள்கைகளைப் பற்றியும், மன்னர் ஆணைக் குழு அதிகமாகப் பரிந்துரைக்கவில்லை. எனினும் அன்றைய இந்தியத் துணைக் கண்டத்தின் நிர்வாக நிலையினைப் பற்றிய தனது கருத்தை அது தெளிவாக விளக்கியுள்ளது.

மன்னர் ஆணைக்குழு, தன்னுடைய அறிக்கையில், "ஒரு மத்திய பீடத்தில் அமர்ந்து, பரந்த இந்தியத் துணைக் கண்டத்தை நிர்வகிக்க இயலாது. அந்த முயற்சியை மேற்கொண்டால் நிர்வாகம் திறன் இழந்து விடும்... பல மாகாணங்களில், மாறுபட்ட தேசிய இனங்களும் மொழிகளும் மரபுகளும் தனி நலன்களும் (Interests) முரண்பாடுகளைக் கொண்டவையாக இருத்தலால், அவைகளினுடைய வளர்ச்சி ஒரே சீராக அமையவில்லை.மாகாணங்களிலும், உள்ளாட்சிக் கழகங்களிலும் அதிகப் பொறுப்பை, இந்திய மக்களுக்கு வழங்க வேண்டும்" என்று தெளிவாகச் சுட்டிக் காட்டியது.

மிண்டோ மார்லி சீர்த்திருத்தங்களும் மாகாணங்களும்

மன்னர் ஆணைக்குழு செய்த பரிந்துரைகளை மையமாக வைத்து, மிண்டோ மார்லி சீர்திருத்தங்கள் என்ற "1909-ஆம் ஆண்டின் இந்திய மன்றங்கள் சட்டம்" இங்கிலாந்தில் நிறைவேற்றப் பட்டது. ஆங்கிலப் பேரரசின் அடிப்படை நிர்வாகக் கொள்கைகளை இச் சட்டமும் மாற்றவில்லை; மாகாணங்கள் மேலுள்ள மைய அரசின் மேலாண்மையை இச்சட்டம் குறைக்கவுமில்லை. ஆனால் மைய—மாகாணச் சட்டசபைகளின் உறுப்பினர் எண்ணிக்கையை, இது விரிவு படுத்திற்று. அவர்கள் "நியமனம்" மற்றும் "தேர்ந்தெடுக்கப்படும் முறைகளிலும்" முன்னேற்றம் செய்தது. மத்தியச் சட்ட மன்றத்தில் 60 உறுப்பினர்களையும், பெரிய மாகாணங்களிலியங்கும் சட்ட மன்றங்களில் மொத்தம் 50 உறுப்பினர்களையும், சிறிய மாகாணச் சட்ட மன்றங்களில் 30 உறுப்பினர்களையும் நியமனம் செய்வதற்கும், அவர்களைத் தேர்தல்களின் மூலம் தேர்ந்தெடுப்பதற்கும் இச்சட்டம் வழி வகுத்தது. குறிப்பிட்ட வாக்காளர் தொகுதிகளிலிருந்து சட்டமன்ற உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் முறையை முதன் முதலாக இந்திய மாகாணங்களுக்கு அறிமுகப் படுத்தியதுதான் இச்சட்டத்தின் சிறப்புக் கூறு.

சட்ட மன்றங்களின் பணிகளைப் பொறுத்தவரை, நிதிநிலை அறிக்கையை [பட்ஜெட்] இறுதியாக வடிவமைக்கு முன்னர், நீண்ட விவாதங்களை நடத்தவும் பொது முக்கியத்துவம் வாய்ந்த பிரச்சனைகளைப் பற்றித் தீர்மானம் நிறைவேற்றவும் விவாதிக்கவும் வினாக்களுடன் துணை வினாக்களைக் கேட்கவும் சட்ட மன்ற உறுப்பினர்களுக்கு இச்சட்டம் உரிமையளித்தது.

ஆனால், மிண்டோ மார்லி சீர்திருத்தங்கள் இந்திய விடுதலை உணர்வுக்கு ஓர் கண்துடைப்பாய் அமைந்ததே தவிர, ஆங்கில ஏகாதிபத்தியத்தின் மைய அரசுப் பிடியிலிருந்த, மூலமான பல அதிகாரங்களை அது சற்றும் தளர்த்திக் கொடுக்க வில்லை. இச்சட்டம் இந்திய மக்களுக்கு, மிகப் பெரிய ஏமாற்றத்தை ஆட்சித் துறையில் கொடுத்தாலும் மாகாணங்களைப் பொறுத்த வரை, மாகாணச் சட்ட மன்றங்களை மேலும் விரிவு படுத்திய வகையில் மாகாண சுயாட்சிக்குப் பின்னணி வகுத்துக் கொடுத்தது.

### அதிகாரப் பரவலும் மாகாண சுயாட்சியும்

இந்தியத் துணைக் கண்டத்தை எவ்வகையிலாவது தனது ஆதிக்கப் பிடியில் நெடுங்காலம் வைத்துக் கொண்டிருக்க வேண்டும் என்பதே ஆங்கில அரசின் உள்நோக்கம் எனப் பார்த்தோம். அதற்கேற்றாற் போல், ஓர் ஏகாதிபத்திய வல்லாட்சியை இந்தியாவில் பேணிக் காத்திட, வலுவான மத்திய அரசு ஒன்று ஆங்கிலேயத் துரைத்தனத்திற்குத் தேவைப் பட்டது. எனவே, கி. பி. 1861-ஆம் ஆண்டு தொடங்கி 1909 வரை இயற்றப்பட்ட பல 'இந்திய மன்றங்களின் சட்டங்களால்' மாகாணங்களுக்கு அளிக்கப்பட்ட அதிகாரப் பங்கீடுகள் முழுவதும் மிகமிகக் குறைவான அளவினதாயும், மிக எச்சரிக்கையோடு வழங்கப் பட்டனவையாயும் இருந்தன. ஆதிபத்திய வெள்ளை அரசின் நிர்வாகத்தில் — குறிப்பாக இந்தியப் பொது மக்கள் அதிகமாகப் பங்கேற்காத ஓர் நிர்வாகத்தில்—உண்மையான அதிகாரப் பங்கீடுகள் முழுமையாகத் தரப்பட முடியாது. ஒரு கூட்டாட்சி நாட்டில் (Federation) மைய - மாகாண அரசுகளுக்கிடையில் அடங்க வேண்டிய அதிகாரங்களின் எல்லையை, இந்திய மன்றங்களின் சட்டங்கள் வகைப்படுத்த வில்லை என்பது உண்மைதான்.

எனினும் ''அனைத்திந்திய முக்கியத்துவம்'' பொருந்திய அதிகாரங்களையும் மாகாண ஆட்சிக்குத் தேவையான அதிகாரங்களையும் இனம் கண்டு கொள்ளத் தக்க அளவில், ''மூன்று இந்திய மன்றங்களின் சட்டங்களும்'' உருவாக்கப்பட்டன. மேலும் மாகாணத் தனித் தன்மையை, இச் சட்டங்கள் வெளிப்படுத்தின. மாகாண நிர்வாகங்களின் அதிகாரங்களைத் 'தனது' என்ற அழுத்தத்தோடு நிலை நாட்டுவதற்கு இவை ஏதுவாயும் அமைந்தன. அதிகாரப் பரவல் முறையை (Decentralisation) அடுத்து உருவான மாகாண சுயாட்சிக் கொள்கைக்கு, இச்சட்டங்கள், நல்லதோர் அரசியல் பின்னணியை அமைத்துக் கொடுத்தன. அரை நூற்றுண்டுக்காலம் தொடர்ந்து நடைபெற்ற "அதிகாரங்களைப் பரவலாக்குதல்", இந்தியத் துணைக்கண்டத்தில் மாகாண சுயாட்சி தோன்றுவதற்குரிய நல்ல சூழலாயிற்று.



## 4. மாநில சுயாட்சிக் கொள்கையின் தோற்றம்.

" இந்திய நாட்டின் நிர்வாகத்தில் இந்தியர்கள் அதிக அளவு பங்கு பெற வேண்டு மென்ற இந்தியர்களின் நியாயமான கோரிக்கைகளை நாம் ஏற்றுத்தான் தீர வேண்டும். கவர்னர் ஜெனரல் குழுவின் (Governor General in Council) (மத்திய அரசின்) உயர் அதிகாரங்களுக்குக் குந்தகம் விளையாமல் (இந்தியர்கள் கோரும்) அதிக அதிகாரங்களைத் தருவது எப்படி என்பதே நம் முன்னிருக்கும் பிரச்சனையாகும். மாகாணங்களைச் சார்ந்த எல்லாக் காரியங்களிலும், சுயாட்சியுடன் இயங்கும் பல(மாகாண)நிர்வாகங்கள் இந்தியாவில் இறுதியாக ஏற்படும் காலம் வரை, மாகாணங்களுக்கு அதிகபட்சமான தன்னாட்சியை மெல்ல மெல்லத் தருவதுதான் அந்தப் பிரச்சனையைத் தீர்ப்பதற்குரிய ஒரே பரிகாரம். மாகாணங்களுக்கு மேல் இயங்கும் இந்திய (மத்திய) அரசு, அம்மாகாணங்கள் முறை தவறி ஆட்சி செய்யும் போது மட்டும் அதில் தலையிடும் அதிகாரத்தைப் பெற்றிருக்க வேண்டும். மற்றபடி சாதாரண நிலையில், நாட்டின் இறைமைத் தொடர்புகளைப் பேணும் அளவுடன் மத்திய அரசு தன் பணிகளைக் கட்டுப் படுத்திக் கொள்ள வேண்டும்... .."

" இந்திய நாட்டை முழு சுயாட்சியுடன் கூடிய பல மாகாணங்களைக் கொண்ட ஒரு கூட்டாட்சியாகத் (Union of Autonomous Provinces) திகழச் செய்யும் முறையிலேயே, இனி ஆங்கில அரசின் கொள்கை நடைமுறைப் படுத்தப்படும். "[1]

— வைஸ்ராய் கோமகன் ஹார்டிஞ்ச் (25-8-1911).

---

1 **Government of India Despatch to Secretary of State *Dated* 25-8-1911 (*CMD* 5979) Page 6 - 7**

ஆங்கிலத் துரைத்தனத்தார் மத்திய அரசினிடம் குவிந்திருந்த பல அதிகாரங்களை மாகாணங்களுக்குப் பரவலாக்கித் தந்த பான்மை பற்றியும், 19-ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியில் இந்தியத் துணைக்கண்டத்தில் முகிழ்த்தெழுந்த நாட்டுப்பற்றும் அரசியல் விழிப்புணர்ச்சியும் இந்தியர்களை நிர்வாகத்தில் பொறுப்பேற்பதற்கான சூழ்நிலையை உருவாக்கிய நிலைமை பற்றியும், ''இந்திய மன்றச் சட்டங்கள்'' மாகாண மக்களின் அன்றாட வாழ்க்கைப் பிரச்சனைகளை அணுகுவதற்குரிய வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்த தன்மை பற்றியும், அதனால் மாகாணங்களின் 'தனித் தன்மை'' உருவாகி நிலை பெறத் தொடங்கிய சிறப்பைப் பற்றியும் இந்திய அரசியலரங்கில் மாநில சுயாட்சிக் கொள்கை தோன்றுவதற்குரிய நல்ல சூழ்நிலை அமைந்த வகை பற்றியும், நாம் சென்ற அத்தியாயத்தில் தெளிவு படுத்தினேம். இனி மாநில சுயாட்சிக் கொள்கை இந்தியத் துணைக்கண்டத்தில் எவ்வகையில் முகிழ்த் தெழுந்தது என்பதைப் பற்றி இவண் ஆய்வு செய்வோம்.

## I

## அரசமைப்பு வளர்ச்சியின்
## ( CONSTITUTIONAL DEVELOPMENT )
## நான்கு கட்டங்கள்.

இந்திய நாட்டின் விடுதலை இயக்கம் (Freedom Movement) இந்தியச் சரித்திரத்தில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப் படவேண்டிய ஓர் அரிய பகுதியாகும். இந்தியச் சுதந்திரம் திடீரென்று ஒரே நாளில் தோன்றிய புரட்சியால் பூத்து விட்டதல்ல. ஏகாதிபத்தியக் கொள்கையைக் கொண்டிருந்த ஆங்கிலப் பேரரசிடமிருந்து இந்திய மாகாணங்கள் படிப்படியாகவும் மெல்ல மெல்லவும் பல அதிகாரங்களை அவ்வப்போது பெற்று வளர்ந்தன. அதன் பயனாக இந்தியச் சுதந்திரமும் மெல்ல மெல்ல அலர்ந்து, இறுதியில் முழுமையாக மலர்ந்தது.

இந்திய மக்களின் அடிமைத்தளை படிப்படியாக அகற்றப் பட்ட காலங்களில் ஆங்கில அரசிடமிருந்து அரசாங்கச் சட்டங்களின் வாயிலாகவும், வேறு சில அரசியல் திட்டங்களின் மூலமாகவும் இந்திய நாட்டின் நிர்வாக அமைப்புக்களுக்கு அதிகார மாற்றங்கள் கிடைத்தன. அதன் முதல்

படியாக, இங்கிலாந்திலிருந்த இந்திய அரசுச் செயலர் குழுவுக்கு ( Secretary of State ) கீழியங்கிய இந்திய மத்திய அரசில் (Government of India) குவிந்திருந்த பல அதிகாரங்களை, மாகாணங்களுக்குப் பரவலாக்கித்தரும் முறை(Decentralisation) 19-ஆம்நூற்றுண்டின் பிற்பகுதியிலிருந்து தொடங்கியது; அதன் பின்னர் ஏறத்தாழ 50 ஆண்டுகளில் அதிகாரங்கள் பரவலாவதும் வளர்ந்தன. அப்படி வளர்ந்த அதிகாரப் பரவலாக்கும் முறையின் முதிர்ந்த நிலையே, மாநில சுயாட்சிக் கொள்கையின் தோற்றத்திற்குப் பெரிதும் அடிகோலியது எனலாம். அக்கொள்கை, இந்திய வரலாறு படைத்த சில சிறப்புக் கூறுகளால் பின்னர் வளர்ந்தோங்கி, ஆங்கிலேயர் காலத்திலேயே ஓரளவிற்கு அது நடைமுறைக்கும் கொண்டு வரப்பட்டது.

இந்திய வரலாற்றில் ஒரு விந்தைக்கூறு என்னவெனில், அரசமைப்பின் வளர்ச்சி முறையில் [Constitutional Dovelopments] பூர்ண சுயராச்சியத்தைக் குறிக்கோளாகக் கொண்டு பல அரசியல் மாற்றங்கள் நிகழ்ந்த போதெல்லாம், அம்மாற்றங்கள் யாவும் மாநிலங்களின் சுயாட்சி நோக்கியே விரைந்து நடைபோட்டன. ''மாநில சுயாட்சி'' என்ற அரசியற் கொள்கை இந்தியச் சுதந்திரத்தை விரைந்து பெறுவதற்காக, ஒரு வகையில் நடைமுறையளவில் வழி வகுத்தது என்று சொன்னால் அது மிகையாகாது. இந்தியாவைப் பொறுத்தவரை, மாநிலங்களின் தன்னாட்சிக் கொள்கை என்பது ஒரு வெறும் அரசியல் கொள்கை மட்டுமல்ல; விடுதலை இயக்கத்தின் ஒவ்வோர் காலகட்டத்திலும் சுதந்திரத்தின் கருப்பொருளாகவும் அனைத்துக் கட்சித் தலைவர்களால் ஒருமித்து ஏற்றுக் கொள்ளப்பட்ட ஓர் அடிப்படைக் கோட்பாடாகவும் திகழ்ந்து வந்துள்ளது.

மற்ற கூட்டாட்சி நாடுகளைப் போலின்றி இந்திய மாநிலங்களின் சுயாட்சி வளர்ச்சி இந்தியக் கூட்டாட்சி (Indian Federation) உருவாவதற்கு இன்றியமையாத ஓர் சிறப்புக் கட்டமாய் விளங்கியதால் இந்திய அரசமைப்பு வரலாற்றில் அது தனித்ததோர் இடத்தைப் பெற்று விட்டது.

இந்திய அரசமைப்பு வரலாற்றை நாம் கூர்ந்து ஆய்வு செய்தால், அது நான்கு கட்டங்களில் வளர்ந்து வந்துள்ளதென்பது தெரிய வரும்.

அவையாவன :—

1. ஆங்கிலப் பேரரசின் ஒற்றையாட்சி கொண்ட மத்திய அரசினின்றும் அதிகாரங்கள் பரவலாக்கப் பட்டதன் விளைவாக மாகாணங்கள் அதிக அதிகாரங்களைப் பெற்றன. —இது முதல் கட்டம்.

2. மெல்ல மெல்லக் கிடைக்கலான பிரதிநிதித்துவ அரசாங்க ( Representative Government ) மாகாணச் சட்ட மன்றங்கள் தனி நிர்வாகத்தையும் பொறுப்பான தன்னுட்சி உரிமையையும் [ Responsible Government ] பெற்றது — அடுத்த கட்டம்.

3. கிடைத்த அதிகாரங்களையும், பெற்ற குடியரசு முறை உரிமைகளையும் இணைத்து, மாகாணங்கள் ஆட்சி செய்ததினுல் மாநில சுயாட்சிக் கொள்கை [ State Autonomy ] தோற்ற மெடுத்தது - மூன்ருவது கட்டம்.

4. உருவான மாநில சுயாட்சி வளர்ச்சியடைந்து, எழுச்சி பெற்ற பின்னர்-அவ்வகையில் சுயாட்சி கொண்ட மாநிலங்களை யெல்லாம் ஒருங்கிணைத்து, இந்தியக் கூட்டாட்சி நாடாக[Indian Federation] நிறுவ முயற்சித்தது—இறுதிக் கட்டம்.

படிப்படியான இந்நான்கு கட்டங்களையும் கடந்த பின்னர்தான் சுதந்திர இந்தியாவின் இன்றைய அரசமைப்பு உருவாயிற்று. ஆனுல் இறுதியில் துரதிர்ஷ்ட வசமாக அதில் முழு மாநில சுயாட்சி, கை விடப்பட்டு விட்டது.

இன்றைய இந்திய அரசியலமைப்பு எவ்வகையில் வளர்ந்து வந்துள்ளது என்பதை அரசமைப்பு வல்லுனரும் பேராசிரியருமான கே. ஆர். பாம்வெல் அவர்கள் ஆய்வு செய்யும்போது,

“அதிகாரங்களைப் பரவலாக்குதல் [Decentralisation], மாநில சுயாட்சி [ State Autonomy ], கூட்டாட்சிக் கொள்கை [ Federalism ] ஆகிய அரசியற் சொற்ருெடர்கள் ஒவ்வொன்றும் அரசைச் சார்ந்த மூன்று வேறுபட்ட தத்துவங்களைக் குறிப்பவை யாகும். இவைகளில் ஒன்றிலிருந்து

இன்றுென்று பிறந்ததல்ல. ஆனாலும், இந்தியாவைப் பொறுத்தவரை இம் மூன்றும் [அதிகாரங்களைப் பரவலாக்குதல், மாநில சுயாட்சி மற்றும் கூட்டாட்சி] வரையறுக்கப் பட்ட தனித்தனிக் கட்டங்களாகி, அதன் மூலம் இன்றைய நமது அரசமைப்பு உருவாகி யுள்ளது.''2

எனத் தெளிவுபடுத்துகிருர்.

அரசமைப்பு வளர்ச்சியின் முதலிரண்டு கட்டங்களும் மூன்ருவது கட்டமான மாநில சுயாட்சிக்குரிய சூழ்நிலையை உருவாக்கியது பற்றி, சென்ற அத்தியாயத்திற் குறிப்பிட்டோம். மூன்ரும் கட்டமான மாநில சுயாட்சியின் தோற்றத்தை இனிப் பரிசீலிப்போம்.

## II

## மாநில சுயாட்சிக் கொள்கைப் பிரகடனம்

இருபதாம் நூற்ருண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த பல ஆங்கிலேய அரசியல் விற்பன்னர்களும் சிந்தனையாளர்களும், இந்தியர்களுக்கு நிர்வாகத்தில் பெரும்பங்கு தர வேண்டு மென்ற கருத்தைத் தெரிவித்தனர். ஆனல் அடிப்படையான அதிகாரங்கள் எல்லாம் ஆங்கிலேயரின் ஆதிபத்திய அரசிடமே இருக்க வேண்டு மெனவும் அவர்கள் கருதினுர்கள். இவ்விரு வேறுபட்ட கொள்கைகளைச் சரி செய்து கொள்வதற்கேற்ற பற்பல யோசனைகளையும் ஆங்கில நாட்டின் அரசியல்வாதிகளில் சிலர் அன்றைய நாட்களில் வெளியிட்டனர்.இந்திய மாகாணங் களுக்குக் குடியாட்சி முறை ஏற்பாடுகளை நல்கி, அம் மாகாணச் சட்ட மன்றங்களின் மூலமாகப் பொறுப்பான அரசையும், அதனை நிர்வகிக்கத் தேவையான சுயாட்சி அதிகாரங்களையும் மாகாணங்களுக்குக் கொடுப்பதுதான், அரசாங்கத்தில் இந்தியர்களுக்குரிய பங்கைத் தருவதற்குரிய வழியாகும் என அவர்கள் ஒருமித்த கருத்தைத் தெரிவித்தனர்.

இந்திய அரசியலையும் சிக்கல்களையும் ஆங்கிலேயக் கண் ணேட்டத்துடன் ஊடுருவிப் பார்த்த சிந்தனையாளர் ஜான் பிரெய்த் [JOHN BRIGHT] அவர்கள், ஆங்கிலேயர் இந்திய

2 Prof. K. R Bombwall,
The Foundations of Indian Federalism [1967] Page 93

அரசின் நிர்வாகத்தை முறையாக நடத்துவதற்குரிய ஆலோசனைகளைக் கூறும்போது,

> "தற்போது இருப்பதைக் காட்டிலும் இன்னும் அதிகமான சுதந்திரத்தை யளிக்கின்ற பல அதிகாரங்கள், மாகாணங்களுக்கு நாம் வழங்கவில்லை யெனில் இந்தியத் துணைக் கண்டத்தை முன்னேற்றப் பாதையில் ஓரடி கூட இட்டுச் செல்ல முடியாது."[3]

எனக் குறிப்பிட்டார்.

மேலும் இந்தியாவிலிருக்கும் ஒரு மத்திய அரசிற்குட்பட்டு இந்திய மாகாணங்கள் இயங்குவதற்கு மாருக இங்கிலாந்திலிருக்கும் இந்திய அரசுச் செயலாளருக்கு ( Secretary of State ) நேரடியாகவே கீழ்ப்பட்டு அம் மாகாணங்கள் இயங்கும் வகையில் சம உரிமைகளையும், அதிக அதிகாரங்களையும் கொடுத்து, அவைகளை இணைத்த ஒரு கூட்டாட்சியை இந்தியாவில் உருவாக்க வேண்டும் என்றும் அவர் கருதினர்.

> "வைஸ்ராய்க்குக்(Viceroy) கீழ் அப்போது இயங்கிக் கொண்டிருந்த மத்திய அரசையே முற்றும் அழித்து விடவேண்டுமென்றும் இந்தியாவை, ஐந்து தனிப்பெரும் பகுதிகளாகப் பிரித்து, அதில் ஒவ்வொன்றிலும் தனித்தனி அரசாங்கங்களை உருவாக்கி, அவற்றை யெல்லாம் ஆங்கில 'அணி' முடியின்(British Crown) கீழ் ஒரு கூட்டாட்சியில் இணைத்து விடவேண்டும் என்பதும் இந்த அறிஞனுடைய தீர்க்க தரிசனமான ஆலோசனை ஆகும்."[4]

அவருடைய புரட்சிகரமான கருத்துக்கள் முழுவதையும் ஆங்கில அரசாங்கம் அன்று ஏற்றுக் கொள்ளாவிடினும், அதன் கருப்பொருளான, "ஒவ்வொரு மாகாணமும் தனித்தனியாக, தன் சொந்த அரசுகளால் நிர்வகிக்கப்படல் வேண்டும்" என்ற பகுதியையும் "அந்த மாகாண ஆட்சியில் மிகக் குறைந்த பட்ச அளவிலேயே வெளித் தலையீடு [ மத்திய அரசுத் தலையீடு ] இருக்க வேண்டும் என்ற பகுதியையும், தனது எதிர்கால அரசியல் கொள்கையால் ஆங்கில அரசு வகுத்துக் கொண்டது.

---

3 Quoted in "India Its Administration and Progress", [1903), by Sir John Strachy, Page 63.

4 " Life of John Bright (1913], Page 226, by G. M. Trevelyan.

**ஆர்டிஞ்சின் ஆணைக் குறிப்பில் மாநில சுயாட்சியின் வித்து**

எதிர்கால இந்தியாவின் அரசமைப்பும் ஆங்கில அரசின் நோக்கமும் எவ்வகையில் இருக்கவேண்டும் என்பதை ஆய்ந்து தெளிவு படுத்த முயன்ற வைஸ்ராய் ஆர்டிஞ்சு கோமகன் (Viceroy Lord Hardinge) பல அரிய கொள்கைகளை ஆங்கிலப் பேரரசிற்குத் தந்தார். ஆங்கில ஆதிக்கமும் குறையாமல், அதே நேரத்தில் இந்தியர்களுக்கு அரசாங்க மட்டத்தில் தன்னாட்சி அதிகாரங்களையும், வழங்குவதற்காக வைஸ்ராய் ஆர்டிஞ்சு அவர்களால் கொடுக்கப்பட்ட அரசியற் கொள்கையில்தான் மாநில சுயாட்சிக் கோட்பாட்டின் உயிர்க்கூறுகள் முதன் முதலாகத் தென்பட்டன.

வைஸ்ராய் ஆர்டிஞ்சு அவர்களால், இங்கிலாந்திலிருந்த இந்திய அரசுச் செயலருக்கு அனுப்பப்பட்ட வரலாற்றுப் புகழ் பெற்ற, 25-8-1911–ஆம் நாளிட்ட ஆணைக்குறிப்பில்,

**''இந்திய நாட்டின் நிர்வாகத்தில் இந்தியர்கள் அதிக அளவு பங்கு பெற வேண்டுமென்ற இந்தியர்களின் நியாயமான கோரிக்கைகளை நாம் ஏற்றுத்தான் தீர வேண்டும். கவர்னர் ஜெனரல் குழுவின் (Governor General in council)[மத்திய அரசின்]உயர் அதிகாரங்களுக்குக் குந்தகம் விளைவிக்காமல் [ இந்தியர்கள் கோரும் ] அதிக அதிகாரங்களைத் தருவது எப்படி என்பதே நம் முன்னிருக்கும் பிரச்சனை யாகும். மாகாணங்களைச் சார்ந்த எல்லாக் காரியங்களிலும் சுயாட்சியுடன் இயங்கும் பல [மாகாண] நிர்வாகங்கள் இந்தியாவில் இறுதியாக ஏற்படும் காலம் வரை... மாகாணங்களுக்கு அதிக பட்சமான தன்னாட்சியை மெல்லத் தருவது தான் அந்தப் பிரச்சனையைத் தீர்ப்பதற்குரிய ஒரே பரிகாரம். மாகாணங்களுக்கு மேல் இயங்கும் இந்திய மத்திய அரசு (Government of India) அம் மாகாணங்கள் முறை தவறி ஆட்சி செய்யும்போது மட்டும், அதில் தலையிடும் அதிகாரத்தைப் பெற்றிருக்க வேண்டும். மற்றபடி சாதாரண நிலையில் நாட்டின் இறைமைத் தொடர்புகளைப் பேணும் அளவுடன் மத்திய அரசு தன் பணிகளைக் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டும்..''**

> "...இந்திய நாட்டை முழு சுயாட்சியுடன் கூடிய பல மாகாணங்களைக் கொண்ட ஒரு கூட்டாட்சியாகத் (Union of Autonomous Provinces) திகழச் செய்யும் முறையிலேயே, இனி ஆங்கில அரசின் கொள்கை நடைமுறைப் படுத்தப் படும்......" *

எனக் கண்டுள்ளது.

வைஸ்ராய் ஆர்டிஞ்சு அவர்களால் கொடுக்கப்பட்ட இந்தத் தெளிவான மாகாண சுயாட்சி விளக்கத்தை ஆங்கில அரசு வேண்டுமென்றே திரித்து, மாகாணங்களுக்கு அதிக அதிகாரங்களை மட்டும் வழங்குவதைத்தான் ஆர்டிஞ்சு அவர்கள் இப்படிக் கூறினர் என்ற புதியதோர் விளக்கம் கூறிற்று. ஆனல் மாகாண மக்களின் உள்ளக் கிடக்கையை எதிரொலிக்கும் வகையில் அமைந்த ஆர்டிஞ்சினுடைய மாநில சுயாட்சிக் கொள்கையின் இலக்கணம், இன்றும் அதற்கொரு தெளிவான விளக்கமாகவே திகழ்கின்றது. மேலும் பல அகில இந்தியத் தலைவர்களும் கோமகன் ஆர்டிஞ்சு அவர்களால் தரப்பட்ட மாநில சுயாட்சியின் மூலக் கருத்தை முழுக்க முழுக்க ஏற்றுக் கொண்டனர்.

### கோகலே கேட்ட மாநில சுயாட்சி [1915]

மிதவாதிகளின் பெருந்தலைவராக இருந்த கோபாலகிருஷ்ண கோகலே அவர்கள், 1915-ஆம் ஆண்டில் எழுதிய தனது 'அரசியல் ஏற்பாடு' (Political Testament) என்ற நூலின் தொடக்கத்தில்,

> "டெல்லிக் குறிப்பாணை, கோடிட்டுக் காட்டும் மாகாண சுயாட்சி, முதல் உலகப்போர் முடிந்த பின்னர் இந்திய மக்களுக்குக் கொடுக்கப்பட இருக்கும் பொருத்தமானதோர் சலுகையாகும். இது இருவகைச் செயல் திட்டத்தை உள்ளடக்கி யுள்ளது. இந்திய நாட்டின் உள்துறை நிர்வாகத்தைப் பொருத்தமட்டில், இந்திய அரசுச் செயலராலும் இந்திய

---

* தலைப்பு மேற்கோள்.

அரசாலும் மாகாணங்கள் மீது செயல் படுத்தப்படும் கட்டுப்பாடுகளிலிருந்து, மாகாண அரசுகளை, விடுதலை செய்வது இதன் முதல் செயல் திட்டம். அப்படி விடுவிக்கப் பட்ட கட்டுப்பாடுகளின் இடத்தை, மாகாணச் சட்ட மன்றங்களின் மூலமாக வரி கொடுப்போரின்[மக்கள்] பிரதிநிதிகள் நிரப்பிக் கொள்வது இன்னொரு செயல் திட்டம்.''5

என ஆர்டிஞ்சு அவர்களின் குறிப்பாணை பற்றி, தனது கருத்தை அறிவித்தார்.

மத்திய அரசின் தலையீடுகள் இல்லாத முழு அதிகாரங்களைப் பெறுவதுதான் மெய்யான மாகாண சுயாட்சி என்று அற்றைய நாளிலும் கருதப்பட்டது. மேலும் மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் மாகாணச் சட்ட மன்றமே மாகாண நிர்வாகங்களை முறையாகக் கட்டுப்படுத்த வல்லது. அதாவது, சட்ட மன்றங்களைத் தவிர மாகாணங்களுக்கு வேறு எசமானர் கிடையாது. மாநில சுயாட்சி பற்றிய இந்த விளக்கங்களைத்தான் கோகலே அவர்களும் வற்புறுத்தினர்கள்.

இன்னும் சிலர் அமெரிக்க ஐக்கிய நாடுகளைப் போல் முழுத் தன்னுட்சியைப் பெற்ற பல இந்திய மாநிலங்களை இணைத்து, அதை இந்தியக் கூட்டாட்சி நாடாக (United States of India) உருவாக்கலாம் என்றும் கூட ஆர்டிஞ்சின் குறிப்பாணைக்கு விளக்க மளித்தனர்.

**காங்கிரஸ்—லீக் ஒப்பந்தம் கோரிய மாநில சுயாட்சி (1916)**

29—12—1916-ஆம் நாளில் காங்கிரஸ் கட்சியாலும், 31—12—1916-ஆம் நாளில் முஸ்லீம் லீக் கட்சியாலும் ஏற்றுக் கொள்ளப்பட்டு உருவான ''லக்னே ஒப்பந்தத்தில்'' (Lucknow pact) ஆர்டிஞ்சு அவர்களின் மாகாண சுயாட்சிக் கருத்துக்கள் முழுவதும் ஏற்றுக் கொள்ளப்பட்டன.

---

5. Mr. Gopalakrishna Gokale, "Political Testament" [ 1915 ].

லக்னோ ஒப்பந்தத்தின் மாநில சுயாட்சி பற்றிய கோரிக்கைகள் :—

(i) சில வருவாய்த் தலைப்புகளில் (Head of Accounts) வரிகளை வசூல் செய்யும் முறை கைவிடப்படல் வேண்டும். மாகாணங்களே வரிகள் முழுவதையும் வசூலித்து, மைய அரசிற்குரிய பங்கைச் செலுத்த வேண்டும்.

(ii) வரிகளை விதிக்கவும் நீக்கவும் கடன்களை நாடிப் பெறவும் மாகாணச் சட்ட மன்றங்களுக்கே அதிக உரிமைகள் கொடுக்கப் பட வேண்டும்.

(iii) மாகாணச் சட்டசபையில் ஒரு தீர்மானத்தை ஓராண்டுக்குள் இரு முறை நிறைவேற்றினால், அதற்கு ஆளுநர் இசைவு (Governor's Consent) தனியாகப் பெறத் தேவை இல்லை.

(iv) மாகாண எல்லைக்குள் முழு சுயாட்சியை வழங்கும் அதிகாரங்கள் அனைத்தும் மாகாணங்களுக்கே கொடுக்கப்பட வேண்டும்.

(v) மாகாணங்களை மேற்பார்வை செய்ய மட்டும் தான் மைய அரசிற்கு அதிகாரம் இருக்க வேண்டும்.

(vi) இன்னோரன்ன பல்வேறு துறைகளில் மாகாண நிர்வாகங்கள் மைய அரசின் கட்டுப்பாடுகளிலிருந்து விடுபடல் வேண்டும்.

மாநில சுயாட்சி பற்றிய இக்கொள்கைகளை ஆங்கில (மத்திய) அரசு ஏற்க வேண்டுமென்று, 60 ஆண்டுகளுக்கு முன்பே காங்கிரஸ் கட்சியும் முஸ்லீம் லீக்கும் ஒருசேர வற்புறுத்தி வந்தன.

### அன்றும் இன்றும்

ஆனால் ஏறத்தாழ 34 ஆண்டுகள் கழித்து, காங்கிரஸ் கட்சியின் பெரும்பான்மை உறுப்பினர்களைக் கொண்டு உருவாக்கப்பட்ட நமது தற்போதைய இந்திய அரச்மைப்புச் சட்டத்தில் மாநில அரசுகளுக்குத் தனித்து ஒதுக்கப்பட்ட 66 அதிகார இனங்களில், மத்திய அரசு, தலையிடும் அவல நிலையும் சில மாநிலச் சட்ட மசோதாக்கள் மாநிலச் சட்ட மன்றங்களில் நிறைவேறுவதற்கு முன்பே குடியரசுத் தலைவர் மூலமாக மைய

அரசின் அனுமதியைப் பெற வேண்டு மென்ற பரிதாப நிலையும், மாநில அரசுகள் தத்தம் நிதி மூலங்கள் போதாமல் மைய அரசிடமிருந்து 'மானியங்கள்' என்ற பெயரால் பிச்சை எடுக்கும் கொடுமையும், மத்திய அரசு விரும்பிய போது "நெருக்கடி நிலை" (Emergency) என்ற பெயரால் மாநிலங் களின் முழுநிர்வாகத்தையும் மைய அரசே எடுத்துக் கொள்ளும் கொடூரத் தன்மையும், மாநிலங்களின் நிதி நிர்வாகத் துறை களில், மைய அரசு தனது சிறப்பாணைகள் (Directives)மூலமாக, தான் நினைத்த போதெல்லாம் கட்டுப்பாடுகளை விதிக்கும் கீழ் நிலையும் ஏற்படுத்தப்பட்டு, அதனைப் பயன்படுத்தி மாநிலங் களைத் தற்போது ஆட்டிப் படைக்கும் அவலச் சிறப்பும் இங்கு நினைவு கூறத்தக்கது. இவை பற்றிய முழு ஆய்வையும் இந் நூலின் மூன்றும் பகுதியில் காணலாம்.

**பத்தொன்மரின் குறிப்பறிக்கையில் மாநில சுயாட்சி (1916)**

1916-ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் இந்தியப் பெருந் தலைவர்களான மதன்மோகன் மாளவியா, டேஜ்பகதூர் சாப்ரு, வி. எஸ். சீனிவாசன். முகமதலி ஜின்னு இன்னும் பல பேரறிஞர்களும் கூடி மொத்தம் 19 பேர்கள் கையெழுத்திட்டு, இந்திய அரசிற்கு ஒரு குறிப்பறிக்கையைக் கொடுத்தார்கள். அது வரலாற்றில் பத்தொன்மரின் குறிப்பறிக்கை (Memorandum of Nineteen) எனப் பொறிக்கப்பட்டது. அந்தப் புகழ் பெற்ற அறிக்கையில், "25-8-1911-இல் ஆர்டிஞ்சுகோமகனல் கொடுக் கப்பட்ட ஆணைக் குறிப்பில் கண்டிருக்கும், மாகாண சுயாட்சி முழுமையாகவும் உடனடியாகவும் இந்திய மாகாணங்களுக்குத் தரப்படல் வேண்டும்" என்று மத்திய அரசிற்கு அறை கூவல் விடுக்கப்பட்டுள்ளது.

இவ்வாறுக அறுபது ஆண்டுகளுக்கு முன்பே கட்சி பேத மின்றி, இந்திய அரசியல் தலைவர்களால் மாநில சுயாட்சிக் கொள்கை ஏற்றுக் கொள்ளப்பட்டது. இதன் விளைவாக இந்தியப் பொது மக்களிடமும் மாகாண சுயாட்சி பற்றிய கோரிக்கை விளக்கங்கள் ஒரு வலிமை கொண்ட பொதுக் கருத்தாய் உருவாயிற்று. ஆங்கிலேயரின் நிர்வாக வசதிக்காக, ஆதிபத்திய அரசின் கூறுகளான மாகாணங்களுக்கு, அதிகாரங் கள் பரவலாக்கிக் கொடுக்கப்பட வேண்டும் என்ற சூழ்நிலை மாறி,

விடுதலை பெறும் இந்தியாவில் எதிர்காலக் கூட்டாட்சியின் அங்கங்களான மாநிலங்களுக்கு முழு சுயாட்சியும் தந்து தீர வேண்டும் என்ற ஓர் வரலாற்றுத் திருப்பு மையமாக மாநில சுயாட்சிக் கொள்கை உருவாயிற்று.

மாகாணச் சட்ட மன்றங்களில் இந்தியர்கள் அதிகமாகக் பங்கு கொள்ளக் கூடிய குடியாட்சி முறையும் மாகாணத் தன்னுட்சிக் கொள்கையும் வருங்கால இந்தியச் சுதந்திரத்தின் ஒருங்கிணைந்த சிறப்பியல்புகளாக, கட்சி—மத வேறுபாடுகளைக் கடந்த எல்லாராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டன. மேலும் மாகாணங்களின் மேல் "மத்திய அரசு கட்டுப்பாடுகளை விதிக்கும் முறை மாகாண அரசுகளைச் சுதந்திரமாக இயங்க வைக்கும் ஒரு கொள்கை மத்திய அரசால் கைக்கொள்ளப்பட வேண்டு மென்றும்; இல்லாவிடில் மாகாணங்களுக்கு அளிக்கப்படும் அதிக அதிகாரங்களும் பயனற்றவை ஆகிவிடுமென்றும்; மத்திய அரசின் கட்டுப்பாடுகளால், மாகாண அரசின் நிர்வாகத்தில் மக்கள் பங்கு கொள்ளும் ஓரளவுக் குடியாட்சி முறையும் தடைபட்டுப் போகு மென்றும்; ஆகவே மாகாணங்களில் குடியாட்சி முறையை உள்ளபடியே செயல்படுத்த வேண்டு மெனில் மாகாணங்களின் மேல் மத்திய அரசு விதிக்கும் கட்டுப் பாடுகளும் தளர்த்தப்பட வேண்டுமென்றும் அன்றைய நாட்களில் எல்லா அரசியல் விற்பன்னர்களும் தேசியத் தலைவர்களும், அறிஞர் பெருமக்களும், கட்சிப் பாகுபாடின்றி ஆங்கில அரசை வலியுறுத்தி வந்தனர்.

## III

## மாநில சுயாட்சியின் தோற்றம்

வைஸ்ராய் ஆர்டிஞ்சு அவர்களின் மாநில சுயாட்சிக் கொள்கை விளக்கத்தை அன்றைய இந்திய அரசுச் செயலராயிருந்த மாண்டேகு அவர்கள் ஏற்றுக் கொண்டார். 1917–ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் 20–ஆம் நாளில் இங்கிலாந்து நாடாளு மன்றத்தின் பொதுச் சபையில் (House of Commons) மாண்டேகு அவர்கள் இந்திய நாட்டைப்பற்றிய ஆங்கிலப்

பேரரசின் அரசியற் கொள்கையை விளக்கும் போது,

"இந்திய நிர்வாகத்தின் ஒவ்வொரு துறையிலும் இந்தியர்களை அதிகப்படியாக ஈடுபடுத்துதலும், ஆங்கிலப் பேரரசின் ஒரு முக்கியப் பகுதியாக இந்திய நாட்டை ஆக்குவதற்காகப் பொறுப்பான அரசுத் துறைகளில் இந்தியர்களைப் பயிற்று வித்தலும், தன்னாட்சி அதிகாரங்களைக் கொண்ட நிர்வா கங்களைப் படிப்படியாக வளர்த்தலுமே ஆங்கிலேய அரசின் சீரிய கொள்கையா யிருக்கும்." 6

எனக் குறிப்பிட்டார்.

இக் கொள்கையினடிப்படையில் இந்திய நாட்டின் அரசு அமைப்பை உருவாக்குவதற்காக மாண்டேகு - செம்ஸ்போர்டு குழு அமைக்கப்பட்டது. அக் குழு தனது அறிக்கையை வெளியிட்டது. அதில்,

"பொறுப்புள்ள அரசாங்கத்தைப் பற்றி (Responsible Government) இந்தியர்களுக்கு மெல்ல மெல்ல உணர்த்து வதற்காக, மாகாண மட்டத்திலேயே அதன் முதற் கட்ட நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும். சட்டமியற்றல், நிதி, நிர்வாகம், ஆகிய துறைகளில் மாகாணங்கள் தாராள மான சுதந்திரத்தை இந்திய அரசிடமிருந்து பெற வேண் டும். இந்திய மத்திய அரசும் தனது பொறுப்புகளைச் செவ்வனே செயல்படுத்துவதற்கு அது உகந்ததாக இருத்தல் வேண்டும்." 7

எனத் தெளிவாக்கப்பட்டது.

பின்னர் மாண்டேகு-செம்ஸ்போர்டு அறிக்கையின் அடிப் படையில் 1919-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தை இயற்றி ஆங்கில அரசு நிறைவேற்றியது. அச் சட்டம் முழு மாகாணத் தன்னாட்சியையும், குடியரசு முறையில் நிர்வாகம் நடத்தும் முழு உரிமைகளையும் மாகாணங்களுக்கு வழங்கவில்லை என்பதும் இந்திய மக்களின் ஒரு சில கோரிக்கைகளை மட்டுமே அது அரைகுறையாக நிறைவேற்றியது என்பதும் உண்மைதான். ஆனால் அரசாங்கத்தின் பணிகளை யெல்லாம் அச் சட்டத்தின் ஒரு முக்கிய விதி மூலமாக, மத்திய அரசுக் கென்றும் மாகாணங்

---

6. Quoted from "Constitutional History of India" [1972] Page 52. By Prof. M. N. Pylee.

7 Report of Indian Constitutional Reforms, [1918] Para 189

களுக்கென்றும் பிரித்தொதுக்கப்பட்டு, முதல் முதலாக வரையறை செய்யப்பட்டது. மேலும் மாகாணங்களின் மேலிருந்த மைய அரசின் கட்டுப்பாடுகளையும் அது ஓரளவிற்குத் தளர்த்தியது.

குறிப்பிட்ட தொகுதி மக்களால் (மொத்த மக்களில் ஏறத்தாழ 3 சதவிகிதம்) தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைக் கொண்ட சட்ட மன்றங்களின் மூலமாக மாகாணங்களின் உள் துறை நிர்வாகம் — சட்டமியற்றும் அதிகாரத்துடன் — செயல்படுவதற்கும் அது வழி வகை செய்தது. சட்ட மன்ற உறுப்பினர்களால் அமைக்கப்பட்ட அமைச்சரவையும், ஆளுநரால் நியமிக்கப்பட்ட நிர்வாகிகளின் அவையும் (Councils) சேர்ந்து, இரட்டை ஆட்சி முறையால், மாகாணங்களின் நிர்வாகங்கள் நடைபெறவும் அது முதன் முதலாக வழி வகுத்தது. குடியாட்சி முறையின் ஒரு பகுதியையும் மாகாண சுயாட்சியின் ஒரு கூறையும் சேர்த்து ஆனால் இரண்டிலும் முழுமையற்றதோர் அடிப்படையில் 1919-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டம் இரட்டையாட்சி முறையை மாகாணங்களில் உருவாக்கிற்று. ஆனால் அன்றிருந்த நிலையில், மத்திய அரசின் மேலாதிக்கம் நீங்கத் தொடங்கி, மாகாண ஆளுநருக்கு அந்த மேலாண்மை தரப்பட்டது.

அனைத்திந்தியா முழுமைக்கும் பொருந்தக்கூடிய அரசுப் பணிகளை மைய அரசின் அதிகாரப் பட்டியலுக்கும், மாகாணங்களின் தனித் தன்மையைப் பொறுத்த பணிகளை மாகாண அதிகாரப் பட்டியலுக்கும் வழங்கும் வகையில் அரசாங்கப் பணிகள் தொகுக்கப்பட்டிருந்தன. இவ்விரண்டு பட்டியல்களிலும் வராத பொதுவான மீதி அதிகாரங்கள் ‘‘எஞ்சிய அதிகாரங்கள்’’ எனப்பட்டன. எஞ்சிய அதிகாரங்கள், அந்தந்த மத்திய — மாநிலப் பட்டியலைச் சார்ந்த கொள்கையின் அடிப்படையில், தேவை ஏற்படும் போது கவர்னர் ஜெனரலின் கட்டளைப்படி மாகாண அரசுகளாலும் மத்திய அரசாலும் நிர்வகிக்கப்பட்டன.

### மத்திய அரசிற்கொதுக்கப்பட்ட அரசுப் பணிகள்

நாட்டின் பாதுகாப்பு; வெளிநாட்டு உறவு; பொதுக் கடன்; சுங்கம்; அஞ்சல் துறை; படி உரிமை (Copy rights); நாணயம் மற்றும் நோட்டு அச்சடிப்பு; செய்தித் தொடர்புகள்;

வணிகமும் கப்பல் துறையும் ; சிவில் மற்றும் கிரிமினல் சட்ட நடை முறைகள் ; பெருந் துறைமுகங்கள் இவையும் இன்ன பிறவும் மத்திய அரசின் அதிகாரப் பட்டியலுக்குள் அடங்கும்.

**மாகாண அரசிற்கொதுக்கப்பட்ட அரசுப் பணிகள் 8**

உள்ளாட்சித் துறை; மருத்துவ நிர்வாகம்; பொதுநலம்; துப்புறவு; இந்தியாவிற்குள் சுற்றுலா; கல்வி; பொதுப்பணித் துறை; வேளாண்மை; கால்நடைத் துறை; மீன் இலாக்காத் துறை; கூட்டுறவு அமைப்புகள்; காடு மற்றும் நிலம் கையகப் படுத்தல்; கலால்; பத்திரப் பதிவுகள்; இந்துமத அறநிலையங் கள்; உண்டி (Hundhis); உணவுப் பொருள்களின் கலப்படம்; எடை மற்றும் படி அளவைகள்; நூலகம்; கால் நடை நுழைவுத் தடுப்பு; குடிநீர் வழங்குதல்; பாசனமும் கால்வாய்களும்; கழிவு நீர் வழியமைத்தல்; நீர்த் தேக்கங்கள்; நீர் விசை; நிலவரு வாய் நிர்வாகம்; பஞ்ச நிவாரணம்; நீதி நிர்வாகம்; மாகாண சட்ட அறிவிக்கைகள்; நிர்வாகிகளின் மேலாளர்; அதிகாரப் பூர்வமான பொறுப்பாளர்கள்; நீதித்துறை சார்ந்த முத்திரை கள்; பிறப்பு இறப்பு மற்றும் திருமணப் பதிவுகள்; கனிவள வளர்ச்சி; தொழில் வளர்ச்சி; தொழில் விவகாரங்கள்; சிறு துறைமுகங்கள்; உள்நாட்டு நீர் வழிகள்; காவல் துறை; செய்தித்தாள் கட்டுப்பாடு; புத்தகமும் அச்சும்; தவிர்க்கப் பட்ட பகுதிகள் (Reserved Areas) குற்றப் பிரிவைச் சார்ந்த மக்கள்; ஐரோப்பியர்கள்; சிறையும் சீர்த்திருத்தங்களும்; கரு வூலம்; பொருட் காட்சி நிலையங்கள்; மாகாண அரசின் அச்சகங்கள் ; மாகாணங்கள் மற்றும் இந்தியச் சபைகளின் தேர்தல்கள்; மருத்துவத் தொழில்; மற்றும் வேறு தொழில் களின் தகுதியும் தரங்களும்; உள்நாட்டு நிதித் தணிக்கை; உள்ளரசு விதிகளுக்குட் பட்ட மாகாணப் பொறுப்பில் பெறும் கடன் ஆகியவையும் இன்னோரன்ன மற்றவையும் சேர்ந்து மொத்தம் 52 அதிகாரப் பணிகள் மாகாண அரசின் அதிகாரப் பட்டியலில் அடங்கும்.

---

8 *Devolution Rules*, Schedule I Part II of Government of India Act - 1919.

இவை தவிர மத்திய அரசின் அதிகாரப் பட்டியலைச் சார்ந்த எந்த இன அதிகாரமாயினும் அரசுப் பிரதிநிதியினல் (Viceroy)மாகாணங்களுக் கென்று அறிவிப்பு செய்யப்பட்டால் மாகாண அரசுகள் அதிலும் சட்டமியற்றலாம்.

மாகாணப் பட்டியலைச் சேர்ந்த மொத்த நிர்வாக அதிகாரங்களை மீண்டும் இரண்டாகப் பிரித்து, மாகாணப் பட்டியலில் மேற் சொன்ன முதல் 20 அதிகாரங்களையும் அவை போன்ற சிலவற்றையும் ''மாற்றப்பட்ட அதிகாரங்கள்'' (Transferred group) எனவும்; மற்றவற்றை ''இருப்பு அதிகாரங்கள்'' (Reserved group) எனவும் ஒதுக்கப்பட்டது. மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட மாகாணச் சட்ட மன்ற உறுப்பினர்களால் அமைக்கப்படும் ''அமைச்சர்கள்'', ''மாற்றப்பட்ட அதிகாரங்களில்'' நிர்வாகம் செய்தனர். ஆளுநரால் நியமிக்கப்பட்ட உறுப்பினர்கள், ''இருப்பு அதிகாரங்களை'' நிர்வகித்தனர்.

தேர்ந்தெடுக்கப்பட்ட அமைச்சர்கள் மாகாணச் சட்ட மன்றத்திற்குக் கட்டுப்பட்டவர்கள் சட்ட சபைகளின் மூலம் மக்களுக்கும்பொறுப்பானவர்கள்.ஆனல் ஆளுநரால்நியமிக்கப்படும் நியமன உறுப்பினர்குழு(Council)வைச் சேர்ந்த நிர்வாகிகள் சட்ட மன்றத்திற்குக் கட்டுப்பட்டவர்களல்லர். மக்களுக்கும் பொறுப்பானவர்களல்லர். மாருக ஆளுநருக்கே பொறுப்புடையவர்கள். மாகாண அமைச்சரவையையும் கவுன்சிலையும் ஆளுநர் இணைத்து, மாகாண நிர்வாகத்தை நடத்துவார். இதுவே இரட்டை ஆட்சி எனப்பட்டது.

மாகாணங்களின் மாற்றப்பட்ட அதிகார இனங்களைப் பொறுத்தவரை மத்திய அரசாங்கத்தின் கட்டுப்பாடுகளும் தலையீடுகளும் ஏறத்தாழ நீக்கப்பட்டிருந்தன. அதற்கு மாருக, மாகாணச் சட்ட மன்றங்களின் பொறுப்பின் கீழ் அவை விடப்பட்டன. மாகாணப் பட்டியலில் கண்டுள்ள எல்லா அதிகார இனங்களிலும் மாகாண அரசுகளே நிர்வாகம் செய்யலாம்.

ஆனல் அவற்றில் மத்திய அரசால் கட்டுப்பாட்டுக்குள்ளாக்கப்படும் சில அதிகார இனங்களில் மட்டும் மாகாணச் சட்ட சபைகள் எதேச்சையாகச் சட்ட மியற்றுதல் கூடாது.

1919-ஆம் ஆண்டில் இந்திய அரசுச் சட்டத்திலுள்ள முதல் அட்டவணையின் 2-ஆம் பகுதியில் (Schedule I Part II) கண்டுள்ளபடி, மாகாணப் பட்டியலின் எண் வரிசை 15, 19, 21, 34, 37, 38, 39, 45, 46 ஆகிய மாகாண அதிகாரங்கள் முழுமையாக மத்தியச் சட்டசபையினுல் கட்டுப்படுத்தப்பட்டன. மேலும் மாகாண அதிகார எண் வரிசையில் 1, 3, 5, 6, 7, 10, 14, 17, 20, 22, 26, 28, 29, 31, 33 மற்றும் 50 ஆகிய 16 அதிகாரங்கள் மத்திய அரசால் ஓரளவிற்குக் கட்டுப்படுத்தப் பட்டன. மொத்தம் 25 மாகாண அதிகாரங்களைப் பொறுத்த வரை, மத்திய அரசிற்குட்பட்ட மாகாணச் சட்ட மன்றங்கள் சட்ட மியற்ற வேண்டியிருந்தது.

தனித்தனிப் பட்டியல்கள் வாயிலாக மாகாணத்திற் கென்றும் மைய அரசிற்கென்றும் அதிகாரங்கள் பகுக்கப்பட்டிருப் பினும், அப்பகுப்பு ஐயத்திற் கிடமில்லாத வகையிலும், ஒன் ருேடொன்று கலப்பற்ற வகையிலும், தெளிவைக்கொண்டிருக்க வில்லை. ஒரு பட்டியலிற் சில அதிகாரங்களின் மேல் மற்ருெரு பட்டியலின் அதிகாரங்கள் படிந்திருந்ததோடு, ஒரு பட்டியலின் வரம்பெல்லை மற்ற பட்டியலின் வரம்பை, அரைகுறையாக மங்கச் செய்வதாகவும் இருந்தது.

ஆகவே சுயாட்சி பெற்ற பல மாநிலங்களைக் கொண்ட ஒரு கூட்டாட்சி அமைப்பில் மத்திய—மாநில நிர்வாக இனங்களின் தெளிவான பகிர்வைப் போல், 1919-ஆம் ஆண்டின் அதிகாரப் பட்டியல்கள் அமைக்கப்படவில்லை. மத்திய அரசிலிருந்து, அதன் தனிப்பகுதிகளான மாகாணங்களுக்கு வழங்கப்படும் அதிகாரங்களாகவே மேற்சொன்ன சட்டத்தின் மாகாண அதிகாரப் பட்டியல் விளங்கியது. தவிரவும், இந்திய மத்திய அரசே (Government of India) கூட ஆங்கில அரசிற்குக் கட்டுப்பட்டது. அன்றைய இந்திய நாடும், முழு சுதந்திரத்தைப் பெற்ற நாடல்ல; அது ஆதிக்க அரசின் கீழ் இயங்கி வந்த ஓர் அடிமை நாடு. ஆகவே 1919-ஆம் ஆண்டின் அரசுச் சட்டம் கூட்டாட்சிக் கோட்பாடுகளின் (Federal Principles) அடிப் படையில் மத்திய—மாகாண அதிகாரப் பிரிவுகளைப் பெற்றிருக்க வில்லை.

எனினும், மாகாணங்களுக்கென்று, ஓர் தனி அதிகாரம் படைத்த அரசையும் மத்திய அரசின் கட்டுப்பாடுகள் ஓரள விற்குக் குறைந்த மாகாண அதிகார வரம்பெல்லையையும்

அச் சட்டம் அறுதியிட்டுக் காட்டிற்று. மாகாணச் சட்ட மன்ற உறுப்பினர்கள் மாகாண மக்களால் (குறிப்பிட்ட தொகுதிகளி லிருந்து) தேர்ந்தெடுக்கப்பட்டனர். மாகாணச் சட்ட சபை களின் அமைச்சர்களால் மாகாணப் பட்டியலின் 'மாற்றப்பட்ட அதிகாரங்கள்' நிர்வகிக்கப்பட்டன. ஆகவே, பழைய ஒரு முக மத்திய வல்லாட்சியின் பகுதிகளாக அதுவரை இயங்கி வந்த மாகாணங்கள் — அந்நிலையினின்றும் மாறி — தன்னரசு களைப் பெறத்தக்க மாநிலங்களாகி விட்டன; அவை சுயாட்சி யின் தோற்றுவாயிலும் அடியெடுத்து வைத்தன. சுருங்கக் கூறின், மத்திய அரசின் ஆணைகளையே அதுவரை நிறை வேற்றிக் கொண்டிருந்த மாகாணங்கள் 1919-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தால் ஓரளவிற்குக் கட்டுப்படுத்தப்பட்ட சுயாட்சி பெற்ற மாநிலங்களாக மாறி விட்டன. எனவே 'மாநில சுயாட்சியும்' முதன் முறையாக முகிழ்தெழுந்தது.

> ''மாண்டெகு—செம்ஸ்போர்டு சீர்திருத்தங்களின்(1919-ஆம் ஆண்டுச் சட்டம்) மூலமாக இந்திய அரசியலமைப்புக்குச் சிறு அளவு மாநில சுயாட்சி என்ற மருந்து செலுத்தப்பட்ட தால் மாநிலத் தன்னுரிமை ஆட்சியை, அதிக அளவில் விரிவு படுத்த வேண்டுமென்ற நல்ல பசி [கோரிக்கை] நாட்டில் உருவாயிற்று.'' 9

என ஆசிரியர் பாம்வெல் கருத்துத் தெரிவிக்கிறார்.

பல சிந்தனையாளர்களின் கருத்துக்கள் என்ற புது மண்ணில் ''அதிகாரத்தைப் பரவலாக்கும் கொள்கை'' என்ற ஏர் கொண்டு உழுது ''ஆர்டிஞ்சு கோமகனின்–பிரகடனத்தால்'' வெளியிடப்பட்ட மாநில சுயாட்சிக் கொள்கை என்ற வித்தை ஊன்றி ''கோகலேயின் அரசியல் ஏற்பாடு'' ''காங்கிரஸ்—லீக் திட்டம்'' மற்றும் ''19 தலைவர்களின் குறிப்பறிக்கை" என்ற எருவையிட்டு இந்திய மக்களின் பொதுக்கருத்து என்ற நீரைப் பாய்ச்சி ''1919–ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டம்'' என்ற சூரிய வெப்பத்தை ஏற்றியதால் மாநில சுயாட்சிக் கொள்கை விதை மெல்ல முளைத்தெழுந்தது. மாநில சுயாட்சியும் தோன்றியது.

---

9 Prof K. R. Bombwall, The Foundations of Indian Federalism (1967) Page 122

## 5. முளைவிட்ட மாநில சுயாட்சியில் நடைபோட்ட நீதிக்கட்சி

"நான் வளர்ச்சிப் பணிகளுக்கான அமைச்சர். ஆனால் "காடுகள்" என் அதிகாரத்திற்குட் பட்டவையல்ல. 'நீர்ப்பாசனத்துறை' நீங்கலான விவசாயத்திற்கு மட்டுமே நான் அமைச்சர். ஆனால், "சென்னை விவசாயிகளின் கடன் சட்டம்" மற்றும் "சென்னை நில அபிவிருத்திக் கடன் சட்டம்" ஆகியவைகளுக்கும் எனக்கும் தொடர்பில்லை, நீர்ப்பாசனம், விவசாயக் கடன்கள், நில அபிவிருத்திக் கடன்கள், பஞ்ச நிவாரணம் ஆகியவைகளுக்கு எவ்வகைத் தொடர்பு மில்லாத ஒரு விவசாய அமைச்சர் எப்படித் திறமையுடன் பணியாற்ற முடியும் என்பதை நான் விவரிப்பதை விட நீங்கள் கற்பனை செய்து பார்த்தாலே புரியும். நான் தான் தொழிற்துறை அமைச்சர். ஆனால் தொழிற்சாலைகள், கொதிகலன்கள், மின் விசை, நீர்விசை, சுரங்கங்கள், தொழிலாளர்கள் ஆகியவை எனது இலாக்காவிற்குள் வருவதில்லை அவையெல்லாம் (கவர்னரால் நியமனம் செய்யப்படும் அமைச்சர்களின்) இருப்பு அதிகாரங்களைச் சார்ந்தவை."[1]

— சர். கே. வி. ரெட்டி.

1919–ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டம் தந்த மாகாண இரட்டை ஆட்சி முறை, தேசியத் தலைவர்களின் கடுமையான கண்டனத்திற்கு இலக்காயிருந்த தென்பது உண்மையே. ஆனால் அந்தக் கால கட்டத்தில் அது மாகாணங்களைப் பொறுத்தவரை சில சிறப்புத் தன்மைகளையும் தந்துதவிற்று என்பதை மறுக்க முடியாது. அதுவரை நிர்வாகத்தைப்

---

1 Quoted in KERALA Putra, "The Working of Dyarchy in India" Page 45,

பற்றிய நேரடி அனுபவம் பெற்றிராத மாகாண மக்கள், நிர்வாகத்தின் சிக்கல்களையும் பொறுப்பான அரசை நிர்வகிக்கும் முறையையும் அனுபவ பூர்வமாக உணரலாயினர். 30 ஆண்டுகள் கழித்து உருவான சுதந்திர இந்தியாவின் நிர்வாக முறைகளுக்கு அன்றைய இரட்டையாட்சி, இந்திய மக்களைப் பயிற்றுவித்தது எனில் அது மிகையாகாது.

## நீதிக் கட்சி

1920–ஆம் ஆண்டு முதல் ஏறத்தாழ 16 ஆண்டுக் காலம் இந்தியாவின் 9 மாநிலங்களில் ஓரளவு தன்னாட்சி முறையில், நிர்வாகம் நடைபெற்றது. இந்தியத் தேசியக் காங்கிரஸ் கட்சி இதில் பங்கு பெறு விட்டாலும், அதன் ஓர் உறுப்பான 'சுயா ராஜ்யா' கட்சி, பல மாகாண அரசுகளை நிர்வகித்து வந்தது. மேலும் அகில இந்தியக் கட்சிகள் அல்லாத மாநில அரசியல் கட்சிகளான [சென்னை மாகாணத்தின்] நீதிக் கட்சியும், [பஞ்சாப்பின்] 'யூனியனிஸ்ட் கட்சியும், 1919–ஆம் ஆண்டுச் சட்டத்தால் கொடுக்கப்பட்ட குறைந்த அதிகாரங்களின் வரம்பினுக்குள் இருந்து அந்தந்த மாகாண மக்களின் பல பிரச்சனைகளை, ஓரளவு அணுக முனைந்தன.

கட்டுப்பாட்டுடன் இயங்கும் மாகாண அரசியல் கட்சிகளின் அன்றையத் தலைவர்கள், அப்போது உருவான மாநில சுயாட்சி அதிகாரங்களைத் தக்க வகையில் பயன்படுத்திக் கொண்டனர். சர். பஸ்ஸில் உசேன் (Sir. Fazil Hussain) மற்றும் சௌத்திரி சோத்ராம் ( Chowdry Chothram ) ஆகியோர்களைத் தலைவர்களாக ஏற்றிருந்த ''பஞ்சாப் யூனியனிஸ்ட் கட்சி'', பஞ்சாபில் — கல்வித்துறையில் பல சீர்திருத்தங்களையும் விவசாயிகளின் உரிமைகளைப் பாதுகாக்கும் சட்டங்களையும் நிறைவேற்றி அமுல்படுத்திற்று. சென்னை மாகாணமும் நீதிக் கட்சியின் அரசால் பல நலன்களைப் பெற்று விளங்கியது.

சர். பி. தியாகராய செட்டியார், டாக்டர் டி. எம். நாயர், அவர்களால் நிறுவப்பட்ட 'தென்னிந்திய நல உரிமைச் சங்கம், 1916–ஆம் ஆண்டின் அறிக்கையை மையமாக வைத்து, 1920-ஆம் ஆண்டில் நடைபெற்ற முதல் பொதுத் தேர்தலில் மிக அதிகான இடங்களைக் கைப்பற்றி, ஓர் நிலையான அமைச்சரவையைச் சென்னை மாகாணத்தில் அமைத்தது. தென்னிந்திய நல உரிமைச் சங்கத்தின் சட்ட மன்ற அங்கமே

'நீதிக்கட்சி' என்ற பெயர் பெற்றது. சட்ட மன்றத்தின் பெரும்பான்மை பலத்தைப் பெற்ற நீதிக்கட்சியின் தலைவரான சர். பி. தியாகராஜ செட்டியாரை, ஆளுநர். வில்லிங்டன், அமைச்சரவையை அமைக்க அழைத்தபோது, அவர் தனது கட்சியின் மற்றத் தலைவர்கள் அந்த அரிய வாய்ப்பைப் பெறச் செய்யும் நோக்கத்துடன் அந்த அழைப்பை ஏற்கவில்லை. ஏ. சுப்பராயலு செட்டியார், சென்னை மாகாணத்தில் முதல் அமைச்சரவையை அமைத்தார். பனகல் அரசரான திரு. ராஜா ராமநிங்கர் மற்றும் திரு. சர். கே. வி. ரெட்டி அவர்களும் அமைச்சர்களாயினர். குறுகிய காலத்திற்குள் ரெட்டியார் மறைந்ததால் பனகல் அரசர் முதல்வர் ஆனார். கே. வி ரெட்டியும், ஏ. பி. பாட்ரோவும் அமைச்சர்களாயினர். மிக உயர்ந்த சனநாயக மரபுகளுடன் சென்னை மாகாணச் சட்டமன்றம் நடைபெற்றது. அமைச்சர்களும் பழுதின்றி நிர்வாகம் செய்தனர். 1923-ஆம் ஆண்டில் நடந்த இரண்டாவது பொதுத் தேர்தலிலும் சென்னை மாகாணச் சட்ட மன்றத்தில் நீதிக்கட்சியே பெரும்பான்மை உறுப்பினர்களைப் பெற்றது. மீண்டும் பனகல் அரசரே முதல்வரானார்.

## முனைவிட்ட மாநில சுயாட்சியில் நீதிக்கட்சி

நீதிக்கட்சியின் ஆட்சியில் "சென்னைப் பல்கலைக் கழக மசோதாவும்", பின்னர் 1924-ஆம் ஆண்டில் "ஆந்திரப் பல்கலைக் கழக மசோதாவும்", 1926-ஆம் ஆண்டில் "இந்து மத அறநிலைய மசோதாவும்", நிறைவேற்றப்பட்டுச் சட்டங்களாயின. பல எதிர்ப்புக்களுக்கு இடையில் நிறைவேற்றப்பட்ட "இந்துமத அறநிலையச் சட்டத்தின்" மூலமாக, சென்னை மாகாணத்திலிருக்கும் இந்துமதக் கோயில்களிலும் அறநிலையங்களிலும் வெகுகாலத்துக்கு முன்னரே பல சீர்திருத்தங்கள் செய்யப்பட்டன.

சென்னைச் சட்டப் பேரவையின் பல தமிழ் உறுப்பினர்கள் தமிழின் வளர்ச்சியை மையமாகக் கொண்ட, தென் மாவட்டங்களுக்கென்று ஒரு பல்கலைக் கழகம் அமைக்கப்படல் வேண்டும் எனக் கோரினர். இராமநாதபுரம் அரசரைத் தலைவராகவும், அமரர் தமிழவேள் பி. டி. ராஜன் அவர்களைச் செயலராகவும் கொண்ட ஒரு குழு அதற்காக அமைக்கப்பட்டது. அந்தக்

குழுவின் பரிந்துரையின் பேரில் டாக்டர் சுப்பராயன் அவர்கள் முதலமைச்சராக இருந்த போது ''அண்ணுமலைப் பல்கலைக் கழக மசோதா'' சட்டமாக்கப்பட்டது. தமிழகத்தில் இரண்டாவது பல்கலைக் கழகமும் உருவாயிற்று.

சென்னை மாகாண 'அரசு—ஊழியர் தேர்வாணைக்குழுவை (Public Service Commission) நிறுவுவதற்காக, 1929-ஆம் ஆண்டில் ஒரு தனிச் சட்டம் இயற்றப்பட்டது. அரசு ஊழியர் தேர்வு ஆணைக்குழுவை இந்தியாவிலேயே முதன் முதலாகத் தோற்றுவித்த பெருமை நீதிக்கட்சி அரசையே சாரும்.

மூன்ருவது பொதுத் தேர்தல்களில் நீதிக் கட்சி, பெரும் பான்மை பலத்தை இழந்தது. நீதிக் கட்சியைச் சார்ந்த டாக்டர் சுப்பராயனை நிலை தடுமாற வைத்து, அவரைத் தன்னகத்தே ஈர்த்த வகையில், இந்தியத் துணைக் கண்டத்திலேயே முதன் முதலாக ''கட்சி மாறும்'' கீழ் நிலையைத் தோற்றுவித்த பெரும் பேற்றைக் காங்கிரஸ் சுயராச்சியக் கட்சி அன்றே தேடிக் கொண்டது.

1930-ஆம் ஆண்டில் நடந்த பொதுத் தேர்தலை அடுத்து பி. முனுசாமி நாயுடு அவர்கள் முதலமைச்சர் ஆனுர். பெரும் பான்மைச் சட்ட மன்ற உறுப்பினர்களைப் பெற்று, நீதிக் கட்சி யின் தலைவர் அமரர் பி. டி. ராஜன் அவர்களும், குமாரசாமி ரெட்டியார் அவர்களும் அமைச்சர்களாயினர். நீதிக் கட்சியில் ஏற்பட்ட சில சிக்கல்களை அடுத்து, பொப்பிலி அரசர் முனுசாமி நாயுடு அவர்களுக்குப் பதிலாக முதலமைச்சர் ஆனுர். 1937-ஆம் ஆண்டில் 1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டம் அமுலுக்கு வந்தது. அதன் அடிப்படையில் நடை பெற்ற பொதுத் தேர்தலில், நீதிக் கட்சி வெற்றி வாய்ப்பை இழந்ததினுல், அமரர் இராசாசி அவர்கள் தலைமையில் காங்கிர சுக் கட்சி அரியணை ஏறியது.

இரட்டை ஆட்சி முறையில், மாகாண அமைச்சர்கள் முழு ஆட்சி அதிகாரங்களைப் பெற்றிருக்கவில்லை. ஆளுநரால் நியமிக் கப்படும் 'கவுன்சிலர்கள்' மாகாணப் பட்டியலின் மிக முக்கிய மான 'நிதி' போன்ற தனித்தொதுக்கப்பட்ட அதிகார இனங் களில் நிர்வாகம் செய்ததால், ஒவ்வொரு இன்றியமையாச் சட்ட ஆக்கத்திற்கும், ஆளுநரின் துணையையே மக்களால்

தேர்ந்தெடுக்கப்பட்ட அமைச்சர்கள் நாடவேண்டிய தாயிற்று; நிதித்துறை மக்கள் அமைச்சரவையின் கையில் இல்லை. அந்த அமைச்சர்கள், பல திட்டங்களை உருவாக்கினாலும், அதற்குரிய நிதியை பல இன்னல்களுக்கிடையே கவுன்சிலிடமிருந்து பெற வேண்டியிருந்தது. ஆனால், அமைச்சர்களோ, சட்ட மன்றத்திற்கும் அதன் மூலம் மக்களுக்கும் பொறுப்பானவர்கள். எனவே இரட்டை ஆட்சி முறையில் ஏற்பட்ட அமைச்சரவைகள் மிக்க வலிவும், அரசியல் கட்சியின் கட்டுப்பாடும் திறனும் பெற்றிருந்தாலும் கூட, மக்களுக்கும் ஆளுநருக்கும் இடையே சிக்கிக் கொண்டு ''இருதலைக் கொள்ளி எறும்பு'' போல் தவித்தனர்.

சென்னை மாகாணத்தில் நீதிக் கட்சியைச் சார்ந்த அமைச்சர் சர். கே. வி. ரெட்டி அவர்கள், மாகாணங்களில் முழுமையான சுயாட்சி உரிமையை நல்காத ''இரட்டையாட்சியால்'' ஏற்பட்ட சிக்கல்களைப் பற்றி இந்த அத்தியாயத்தின் தலைப்பு மேற்கோளில் கூறப்பட்டவைகளைச் சுட்டிக் காட்டுகிறார். எனவே 1927-ஆம் ஆண்டு கோயமுத்தூரில் நடைபெற்ற நீதிக்கட்சி மாநாட்டில், 1917-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தால் வழங்கப்பட்ட மாகாண இரட்டை ஆட்சியைக் கண்டித்தும் முழு மாகாண சுயாட்சி வேண்டுமென்றும் கோரிய வரலாற்றுப் புகழ் பெற்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

இவ்வகையில் நீதிக் கட்சியின் அமைச்சர்கள் சுருக்கப்பட்ட மாநில சுயாட்சியின் வரம்பிற்குள்ளிருந்தே கூட மக்கள்தேவைகளை இயன்ற வரையில் நிறைவேற்றினர்.

இரட்டை ஆட்சியின் தனிமையை முழுமையாக அறிந்திருந்த காங்கிரஸ் கட்சி, மாகாணங்களின் ஆளும் பொறுப்பை ஏற்றுக் கொள்ளாததால் - ஆங்காங்கே நிலைத்திருந்த (மாகாண) எதிர்க் கட்சிகளை ஒடுக்குவதற்கும், அவைகளின் மேல் மக்கள் வைத்திருந்த செல்வாக்கை அகற்றுவதற்கும், அக்கால கட்டத்தை ஒரு சிறந்த வாய்ப்பாகப் பயன்படுத்திக் கொண்டது. ஆனால் முளைவிட்ட மாநில சுயாட்சியில் கூட வளத்தோடு நடைபோட்டது நீதிக் கட்சி. அவை அரசியல் வரலாற்றின் தொகுப்புகளில் வெகுவாக மங்கியிருப்பினும், முழுமையாக மறைந்துவிட வில்லை.

# 6. மாநில சுயாட்சிக் கொள்கையின் வளர்ச்சி

— முஸ்லீம் லீக்கின் பங்கு —

" சுதந்திர இந்தியாவிற்கு ஒற்றையாட்சி முறை அரசு தான் ஏற்றதென என்னல் எண்ணிப் பார்க்கவும் இயலவில்லை. எஞ்சிய அதிகாரங்கள் (Residuary Powers) எனப்படும் அரசதிகாரங்களை யெல்லாம் சுயாட்சி கொண்ட மாநிலங்களுக்கே தர வேண்டும். மாநிலங்கள் தமது முழு ஒப்புதலோடு தெளிவுடன் விட்டுக் கொடுக்கும் சில குறிப்பிட்ட அதிகாரங்களை மட்டுமே மத்திய அரசு பெற்றுக் கொள்ள வேண்டும். உண்மையான கூட்டாட்சிக் கொள்கையை மறுக்கக் கூடிய எந்த ஓர் அரசியலமைப்பையும்—அது வெள்ளையரின் மூலத்திலிருந்து வந்தாலும் சரியே; அல்லது இந்திய அடிப்படையிலிருந்து வந்தாலும் சரியே — ஏற்றுக் கொள்ளும்படி நான் இந்திய முஸ்லீம்களை ஒரு போதும் அறிவுறுத்த மாட்டேன்."[1]

— கவிஞர். சர். முகம்மது இக்பால்.

## I

## மாநில சுயாட்சியைப் பேணி வளர்த்த சிறப்புக் கூறுகள்

ஆங்கிலேயரின் பிரித்தாளும் கொள்கையினல், இந்திய அரசியலில் மூவகைப் பிரச்சனைகள் தலையெடுத்தன. மத – இன உணர்வுகளை மையமாக வைத்த முஸ்லீம் லீக்கின் வகுப்பு வாதமும் – கோனட்சி முறைக்கு இடுக்கண் ஏற்படா வகையில்

---

1 "The Meaning of Pakistan", By F. K. Kahn Dhurrani, Page 73 In His Presidential Address at Allahabad Session (1930) of The All India Muslim League.

தங்கள் தனி நாட்டாட்சிகளை எவ்வகையிலேனும் பாதுகாத்துக் கொள்வதற்கு முனைந்த சுதேச மன்னர்களின் பிரச்சனைகளை யும் மொழி அடிப்படையில் இந்திய மாநிலங்கள் பிரிக்கப்பட வேண்டுமென்ற மொழிவாரி மாநில உணர்ச்சியும், ஆங்கிலத் துரைத்தனத்தாரின் பிரித்தாளும் கொள்கையினால் ஏற்பட்ட அரசியல் விளைவுகளாகும்.

அகில இந்திய மட்டத்தில், இம்மூன்று சிக்கல்களும் தீர்க்க முடியாதனவாக இருந்தாலும், மாநிலங்களைப் பொறுத்தவரை இம் மூவகை அரசியற் பிரச்சனைகளும் மாநிலங்களின் சுயாட்சியைப் பேணி வளர்க்கும் மூன்று சிறப்புக் கூறுகளாயின. இச் சிறப்புக் கூறுகளின் அரசியல் அழுத்தங்களும் உணர்ச்சிப் பேரலைகளும் அகில இந்திய அரசியல் அரங்கத்தில்,மாநிலங்கள் தன்னாட்சி பெறுவதைத் தவிர்க்க முடியாத ஓர் உச்ச கட்ட வளர்ச்சிக்குக் கொண்டு சேர்த்து விட்டன.

> ''இந்தக் கொள்கைள் [ஆங்கில அரசின் பிரித்தாளும் கொள்கை மற்றும் அதிகாரச் சலுகைகள் வழங்குதல் என்ற கொள்கை] எதிர்கால இந்தியக் கூட்டாட்சியமைப்புக்கு ஓர் அரசியல் அடிப்படையாக அமைந்த தோடல்லாமல், மொழி யுணர்வு, முஸ்லீம்களின் பாகுபாட்டுணர்ச்சி, இந்திய மன்னர்களின் பிரச்சனை ஆகிய மற்ற சிறப்புக் கூறுகளையும் தோற்றுவித்தன. இம் மூன்று வகையான சிக்கல்களையும் ஆங்கிலேயர் முறையாகத் தீர்த்து வைப்பதற்கு முனையாமல், அவைகளை மேலும் தீவிரமாக உணர்ச்சி கொள்ளச் செய்ய வும், ஊக்கப்படுத்தவும் முயன்றனர். இம் மூன்று சிறப்புக் கூறுகளின் கலப்புத் தொடர்பான நடவடிக்கைகளால், பிற் காலத்தில் இந்தியாவில் ஒரு வகையான கூட்டாட்சி உருவாகித் தீர வேண்டிய கட்டாயச் சூழ்நிலை ஏற்பட்டது. குறிப்பிட்ட சில குறைவான அதிகாரங்களை மட்டுமே பெற்ற ஒரு மத்திய அரசாங்கத்தைக் கொண்ட கூட்டாட்சி அமைப்பு அநேகமாக இந்தியாவில் [இச் சிறப்புக் கூறுகளின் பயனாக] உருவாகி யிருக்கும்.''2

என அரசமைப்பு வல்லுனர், கே. ஆர். பாம்வெல் அவர்கள் தெளிவு படுத்துகிறார்.

---

2 Prof. K.R. Bombwall, 'The Foundations of Indian Federalism, [1967] Page 56.

இம்மூன்று சிறப்புக் கூறுகளும் இந்தியத் தேசியக் காங்கிரஸ் கட்சியின் அரசியல் சமுதாயப் பொருளாதாரக் கோட்பாடுகளுடன் பல நேரங்களில் முரண்பட்டு நின்றிருந்ததையும் சிலநேரங்களில் இசைந்து நின்றிருந்ததையும் வரலாறு விளக்குகிறது. ஆனால் எல்லா அரசியற் சக்திகளும் இந்தியாவின் பூரண சுயராச்சியத்தை நோக்கியே விரைந்து நடைபோட்டன. இச்சக்திகள் ஒன்றுடனொன்று முரண்பட்டு நின்றோ அல்லது இயைந்தோ, இயங்கிய போதெல்லாம் அவைகளுக்கீடு கொடுக்கும் வகையில் ஆங்கிலப் பேரரசும் இந்தியச் சுதந்திரத்திற்கான பல்வகைத் திட்டங்களையும் அரசமைப்புச் சட்டங்களையும் இந்தியத் துணைக் கண்டத்தின் அரசியல் அமைப்புக்களுக்கு (Political Institutions) அவ்வப்போது வழங்கி வந்தது.

இந்திய வரலாற்றில் நாம் மாநிலங்களைப் பற்றி ஆய்வு செய்கையில், ஒவ்வொரு கால கட்டத்திலும் ஆங்கில அரசு நல்கிய அதிகாரங்கள் மாநில சுயாட்சியின் வளர்ச்சியையே பெரிதும் ஊக்குவித்து வந்துள்ளது என்ற பேருண்மை புலனாகும். ஆங்கில அரசு இந்தியாவுக்கு வழங்கிய பல அரசியல் கொள்கைகளும் அரசமைப்புச் சட்டங்களும் திட்டங்களும் மற்றும் ஆணைக் குழுக்களின் பரிந்துரைகளும் மாநில சுயாட்சி வளர்ச்சியில் ஒரு பெரும் பங்கை வகிக்கின்றன.

எனவே, மாநில சுயாட்சியை வளர்க்க உதவிய முஸ்லீம் லீக் கட்சியின் வகுப்பு வாதம், சுதேச மன்னர்களின் பிரச்சனை, மொழி வாரி மாநிலங்களின் கோரிக்கை மற்றும் அவைகளின் கலப்புத் தொடர்பின் விளைவாக ஆங்கில அரசு அளித்த பல அரசமைப்புச் சட்டங்கள் அரசியற் கொள்கைகள் ஆகிய நால் வகைச் சிறப்புக் கூறுகளைப் பற்றி இனித் தனித் தனியாக ஆய்வோம்.

## II

## அகில இந்திய முஸ்லீம் லீக்

நாட்டுப் பிரிவினைக்கு முன்னர், இந்தியாவின் மொத்த மக்கட் தொகையில் நான்கில் ஒரு பங்கு மக்கள் இஸ்லாம் மதத்தைத் தழுவியவர்கள். அவர்கள் பொதுவாகச் சிறுபான்மையரா யிருப்பினும், குறிப்பிட்ட சில மாநிலங்களில் மிகப்

பெரும்பான்மையினராக விளங்கினர். 1857-ஆம் ஆண்டில் நடந்த முதல் இந்திய விடுதலைப் போரில் [சிப்பாய்க் கலகம்] இந்திய முஸ்லீம்கள் பெருவாரியாகப் பங்கெடுத்துக் கொண்டனர். தொடக்கத்தில் ஆங்கில ஏகாதிபத்தியத்தை எதிர்க்கும் முறையில் தான் இந்திய முஸ்லீம்களின் அரசியல் உணர்வுகளும் இருந்தன. ஆனால் நாளடைவில் அவர்களுடைய அரசியல் நடவடிக்கைகளெல்லாம் இஸ்லாம் மதமென்ற உள் வட்டத்திற்குள்ளேயே வரையறைப் படுத்தப்பட்டன. மேலும் பெரும்பான்மை முஸ்லீம்கள் வறுமையிலும் அறியாமையிலும் மூழ்கி விட்டனர். இந் நிலையில் தான் இந்திய முஸ்லீம்களுக்கு, ஓர் அரசியல் வழிகாட்டியாய், இனச் சுடராய் சர். சையத் அகமத்கான் தோன்றினர்.

சர். சையத் அகமத்கான் அவர்கள், தான் எழுதிய சில நூல்களின் மூலமாகவும் பல மாநாடுகளின் வாயிலாகவும் முஸ்லீம் இனத்தில், அரசியல் விழிப்புணர்ச்சியைத் தோற்றுவித்தார். 1873-ஆம் ஆண்டில் முஸ்லீம் மக்களுக்கான ''அலிகார் பல்கலைக் கழகத்தையும்'' கண்டார். இந்துக்களே பெரும் பங்கை வகித்த இந்தியச் சுதந்திர இயக்கத்தில் முஸ்லீம்கள் பங்கு பெறக் கூடாதெனவும் அதற்கு மாறாக அன்றைய ஆங்கிலேய அரசுடன் அவர்கள் இணைந்து செயல்பட வேண்டுமெனவும் இச் சிந்தனையாளர் வலியுறுத்தினர். இந்திய நாடு விடுதலை பெற்றால் அதில் இந்துக்களின் அரசாங்கமே அமையும் என்பதும் அப்போது அந்த இந்து அரசாங்கம், மதத்துறையிலும் அரசியல் மற்றும் சமுதாயத் துறைகளிலும் முஸ்லீம்களுக்கு எதிராகவே செயல்படும் என்பதும் இவரது தீர்க்கமான முடிவாகும். அவர் உருவாக்கிய இந்தப் பாகுபாட்டு உணர்ச்சியை அலிகார் பல்கலைக் கழகத்தின் முதல் தலைவராயிருந்த 'பெக்' என்ற வெள்ளையரும் முஸலீம் மக்களிடையே போற்றி வளர்த்தார்.

30—12—1906-ஆம் நாளில் அகில இந்திய முஸ்லீம் லீக் கட்சியை, டாக்காவைச் சார்ந்த நவாப் சலீம் உல்லாகான் தோற்றுவித்தார். முகம்மதிய அரசரான முகம்மது பின் காசீம் முதன் முதலாக இஸ்லாமிய மதத்தின் விளக்கை ஏற்றி வைத்த புண்ணியத் தலமென்று கருதப்படும் பழைய சிந்து மாகாணத்தில் உள்ள கராச்சியில் 29—12—1907-இல் அகில இந்திய முஸ்லீம் லீக்கின் முதல் மாநாடு நடைபெற்றது.

மாகாணச் சட்ட மன்றங்களுக்கு முஸ்லீம் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பதற்காகத் "தனி முஸ்லீம் தொகுதிகள்" வேண்டுமெனக் கோரி, அன்று இந்திய அரசுச் செயலாளராயிருந்த "மார்லி" அவர்களிடமிருந்து அச்சலுகையைப் பெற்றனர். 1909–ஆம் ஆண்டில் வெளியான "மிண்டோ – மார்லி சீர் திருத்தங்களில்" அதனை இடம் பெறவும் செய்த பெருமை முஸ்லீக் லீக்கையே சாரும். இதுவே முஸ்லீம் லீக் கட்சியின் முதல் சாதனையாகும்.

1916–ஆம் ஆண்டில் காங்கிரஸ்—முஸ்லீம் லீக்கினிடையே ஏற்பட்ட 'லக்னோ ஒப்பந்தத்தின்' (Lucknow Pact) வாயிலாக முஸ்லீம்களுக்கான தனித்தேர்தல் தொகுதிகளையும், பெரும்பான்மையான இந்துக்கள் இருக்கும் மாநில – மத்தியச் சட்ட சபைகளில் முஸ்லீம் உறுப்பினர்களுக்கான குறிப்பிட்ட பங்காச் சார எண்ணிக்கையையும் முஸ்லீக் லீக் பெற்றுக் கொடுத்தது.

காங்கிரசும் லீக்கும் மதமாச்சரியங்களை அகற்றி ஒன்றுபட்டியங்க 'லக்னோ ஒப்பந்தம்' உதவியது. காந்தியடிகளின் ஆதரவோடு "அலி சகோதர்களின்" தலைமையில் உருவான "கிலாபத் இயக்கம்" இந்து முஸ்லீம் உறவை மேலும் வலிவு படுத்தியது. ஆனாலும் 1922-ஆம் ஆண்டின் டெல்லி, குல்பர்க்கா, லக்னோ அலகாபாத், ஜபல்பூர், கௌகாத்தி ஆகிய இடங்களில் நடைபெற்ற இந்து முஸ்லீம் கலவரங்கள் காங்கிரஸ் – லீக் பிணைப்பையும் இந்து – முஸ்லீம் ஒற்றுமையையும் சிதைத்து விட்டன.

## III

## முஸ்லீம் லீக்கும் மாநில சுயாட்சி வளர்ச்சியும்

அகில இந்திய முஸ்லீம் லீக்கின் வகுப்புவாதக் கொள்கையினால் முஸ்லீம் மக்கள், தங்களைத் தனி இனமாகக் கருதியதுடன் தனித்த அரசியல் சமுதாயப் பண்புகளைப் பெற்ற தனி மக்கள் கூட்டமாகவும், எண்ணத் தலைப்பட்டனர். "பெரும்பான்மையினரான இந்துக்களால் உருவாக்கப்படும் சுதந்திர இந்தியாவின் மாநில – மத்திய அரசுகளின் மூலமாக முஸ்லீம்களின் மொழி, இன, மத உரிமைகள் நசுக்கப்பட்டு விடும்; அவர்களுக்குரிய எல்லாச் சலுகைகளும் அவர்களுக்குக் கிடைக்காமல் போய் விடும்" என்ற ஆழ்ந்த அச்சம் அவர்களிடம்

தோன்றி வளர்ந்தது. அந்த அச்சத்தை எல்லா முஸ்லீம் தலைவர்களும் அம் மக்களிடையே தோற்றுவித்து, நெடுங்காலம் அதனைப் போற்றி வளர்த்து விட்டனர். அதனால் கூட்டாட்சி முறையில் உருவாக்கப்படும் ஓர் அரசமைப்பே இந்திய முஸ்லீம் களின் மத, இன உரிமைகளையும் நிலையாகப் பாதுகாக்கும் என்ற அரசியற் கொள்கையை முஸ்லீம் லீக் கட்சி ஏற்றுக் கொண்டது.

கூட்டாட்சித் தத்துவத்தின்படி (Federalism) முழு சுயாட்சி பெற்ற மாநிலங்கள் இந்தியத் துணைக்கண்டத்தில் உருவானால் முஸ்லீம்கள் பெரும்பான்மையினராக உள்ள பல மாநிலங் களில், முஸ்லீம்களே ஆளுகின்ற வாய்ப்பினைப் பெறுவர். அம் மாநிலங்களில். முஸ்லீம்களின் மதம், இனம் மற்றும் மரபுகள், முழுவதும் முஸ்லீம் அரசுகளால் பாதுகாக்கப்படும். மேலும் முஸ்லீம்கள் சிறுபான்மையினராக உள்ள மாநிலங்களில் கூட கூட்டாட்சி முறை ஏற்பாடுகளின் மூலமாக முஸ்லீம்களின் உரிமைகள் பறிபோகாதவாறு பாதுகாக்க முடியும் என்ற கருத் துக்களின் அடிப்படையில் இந்தியத் துணைக் கண்டத்துக்கு ஏற்றதோர் அரசமைப்பு "முழுமையான சுயாட்சி பெற்ற மாநிலங்களைக் கொண்ட கூட்டாட்சி அமைப்புத் தான்" என முஸ்லீம் லீக் தலைவர்கள் தெளியலாயினர். அதன் வழியே முஸ்லீம் லீக்கின் அரசியல் கொள்கையும் உருவாயிற்று. அந்த அரசியற் கொள்கையை விளக்கப் போந்த முஸ்லீம்லீக் தலைவர் களுள் ஒருவரான கவிஞர் இக்பால் அவர்கள்,

> "இந்தியத் துணைக்கண்டத்தின் மிகச் சிக்கலான பிரச்சனை, இந்து—முஸ்லீம் பிரச்சனையாகும்; இச் சிக்கலான பிரச்சனை யை முற்றிலும் தீர்ப்பதற்குரிய சிறந்த வழி கூட்டாட்சித் தத்துவம் தான். எனவே கூட்டாட்சி அமைப்பு முறையையே முஸ்லீம்கள் கோரினர். இந்திய ஒற்றுமையைப் பலரது இசைவிணக்கத்தாலும், ஒத்துழைப்பாலும் தான் பெற முடியு மே தவிர, எதிர்மறைக் கொள்கையினால் பெற முடியாது."3

எனக் கூறினார்.

---

3 Dr Sir. Mohamad Iqbal, As Quoted in "Mitra's Indian Annual Register" [1931] Vol, II, Page 342.

**முஸ்லீம் லீக்கின் மாநில சுயாட்சித் தீர்மானம் (1924)**

எதிர்கால இந்திய அரசமைப்பில் ''முழுமையான சுயாட்சியைப் பெற்ற மாநிலங்களைக் கொண்ட ஒரு கூட்டாட்சி அமைப்பு முறையையே ஏற்படுத்த வேண்டும்'' என்ற அரசியல் கோரிக்கையை அகில இந்திய முஸ்லீம் லீக் கட்சி 1920-ஆம் ஆண்டிற்குப் பின்னர் தீவிரமாக வலியுறுத்தத் தொடங்கிற்று. 1924-ஆம் ஆண்டில் திரு. ஜின்னு அவர்களின் தலைமையில் நடைபெற்ற முஸ்லீம் லீக் மாநாட்டில், கூட்டாட்சித் தத்துவத்திற்கு உருக்கொடுக்கும் வகையில் மாநிலங்களுக்கு முழுமையான சுயாட்சி அளிக்கப்பட வேண்டிய அவசியத்தை அறுதியிட்டுக் கூறும் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அத் தீர்மானத்தின் மூலமாக மாநில சுயாட்சி பற்றிய தனது நிலையை முஸ்லீம் லீக் உறுதியாகத் தெளிவு படுத்தியது.

> ''இந்தியத் துணைக்கண்டத்திலிருக்கும் மாநிலங்கள் ஒரு கூட்டாட்சி அமைப்பின் கீழ் ஒருங்கிணைக்கப்பட வேண்டும். எல்லா மாநிலங்களும் முழுமையான சுயாட்சியுடன் கூடிய தன்னரசைக் கொண்டியங்குதல் வேண்டும். இவைகளை இணைத்த கூட்டாட்சி அமைப்பில் பொதுவானதும் முக்கியமானதுமான அதிகாரங்களை மட்டும், மைய அரசு பெற்றிருக்க வேண்டும்.'' 4

முழு மாநில சுயாட்சி கிடைத்தால் முஸ்லீம்களை அதிகமாகக் கொண்ட மாநிலங்களில் அவர்களது பண்பாடு, மொழி மற்றும் மதம் ஆகியவைகளுக்கு ஊறு ஏற்படாத வகையில் முஸ்லீம் அரசுகளே அமையும் என்ற உள்நோக்கத்துடனேயே முஸ்லீம் லீக் இத் தீர்மானத்தை நிறைவேற்றிற்று. ஆயினும் மாநிலங்களுக் கெல்லாம் முழுமையான சுயாட்சி கிடைக்க வேண்டுமென்ற எதிர்கால இந்திய அரசமைப்பின் அடிப்படைத் திட்டத்தையும் அத்தீர்மானம் மறைமுகமாக ஏற்றுக் கொண்டது. பின் வரலாற்றில், இந்திய நாட்டின் பிரிவினையைத் தவிர்க்கக் கருதிய காங்கிரஸ் கட்சி, முழு மாநில சுயாட்சியை இறுதியாக ஏற்றுத் தீர வேண்டிய நிர்ப்பந்தச் சூழ்நிலையை முஸ்லீம் லீக்கின் இந்த ''மாநில சுயாட்சித் தீர்மானம்'' தொடங்கி வைத்தது என்றுல் அது மிகையாகாது.

---

4. Quoted in "India - A Restatement" [1945] Page 74, By R. Coupland,

முஸ்லீம் லீக்கின் மேற் சொன்ன மாநில சுயாட்சித் தீர் மானத்திற்குரிய பின்னணியை உருவாக்குவதற்காக, முஸ்லீம் கள் பெருவாரியாக இருக்கும் பகுதிகளை வகுப்புவாரித் தனி மாநிலங்களாகப் பிரிக்க வேண்டும் என்றும் முஸ்லீம் லீக் வலியுறுத்திற்று. பம்பாயும், சிந்துவும் இணைந்திருந்த பழைய பம்பாய் மாகாணத்திலிருந்து முஸ்லீம்கள் பெருவாரியாக இருந்த சிந்துப் பகுதியைத் தனி மாநிலமாக ஆக்க வேண்டும் என்றும், பலுசிஸ்தானம் மற்றும் வடமேற்கு எல்லைப்புற மாகாணத் தில் தன்னாட்சியை நிலை நிறுத்தும் சூழ்நிலையை உருவாக்கு வதற்காக அவற்றை ஆளுநர் மாகாணங்களின் தகுதிக்கு உயர்த்த வேண்டும் என்றும், பஞ்சாப்-வங்காளம் போன்ற மாகாணங்களில் முஸ்லீம்கள் பெருவாரியாக இருக்கும் பகுதி களைப் பிரித்துத் தனி மாநிலங்களாகச் சீரமைக்க வேண்டும் என்றும் கோரி இன்னும் சில தீர்மானங்களை முஸ்லீம் லீக் அம் மாநாட்டில் நிறைவேற்றிற்று. இந்தத் தீர்மானங்கள் மூலமாக முஸ்லீம் லீக் கட்சி, முழு மாநில சுயாட்சிக் கொள்கையைத் தனது அடிப்படையானதோர் அரசியல் கொள்கையாக (இந்தியப் பிரிவினைக்குப் பல ஆண்டுகள் முன்னரே) ஏற்றுக் கொண்டது என்பது தெரிய வரும்.

லீக்கும் ‘‘நேரு குழு’’ அறிக்கையும்

இந்திய அரசியல் நிலையை ஆராய்வதற்காக 1927–ஆம் ஆண்டில் முற்றும் வெள்ளையர்களையே கொண்ட சைமன் குழு இந்தியாவிற்கு வந்தது. அது இந்திய மக்களிடம் மிகக் கொடிய எதிர்ப்பைப் பெற்றது. இதனால் வெகுண்டெழுந்த ஆங்கிலப் பேரரசின் மூன்றும் அரசுச் செயலரான பிரிக்கன்ஹெட் (Brickenhead) அவர்கள், ‘‘இந்தியாவின் எல்லா மக்களும் அரசியல் கட்சிகளும் ஏற்றுக் கொள்ளக்கூடிய ஓர் அரசமைப்பை இந்தியர்களால் உருவாக்க இயலாது என்ற காரணத்தால் தான், சைமன் கமிஷனில் எந்த இந்தியனும் சேர்த்துக் கொள்ளப்படவில்லை’’ எனச் செருக்கோடு கூறினர்.

இதனைக் கேள்வியுற்ற நமது தேசியத் தலைவர்கள் கடுஞ் சீற்றம் கொண்டனர். பிரிக்கென்ஹெட் அவர்களின் கூற்றைப் பொய்யாக்கக் கருதிய சர்வ கட்சித் தலைவர்கள், ஓர் அனைத்து அரசியல் கட்சி மாநாட்டை 19—5—1928-இல் பம்பாயில் கூட்டினர். அம் மாநாட்டிற்கு இந்தியாவின் அனைத்து அரசி

யல் கட்சிகளும் வர்த்தகக் கழகங்களும் பொது மக்களின் அமைப்புகளும் தொழிற் சங்கங்களும் சமயக் குழுக்களும் மொத்தம் 70-க்கும் மேற்பட்ட பிரதிநிதிகளை அனுப்பி வைத்தன. எதிர் கால இந்திய அரசமைப்பை உருவாக்குவதற்காக அம் மாநாடு ஒரு குழுவை நியமித்தது. அக் குழுவிற்குப் பண்டித மோதிலால் நேரு தலைமை வகித்தார். திரு. சாப்ரு, திரு. அலிஇமாம், திரு. ஆனே, திரு. மங்கல் சிங், திரு. குர்சி, திரு. பிரதான், நேதாஜி சுபாஸ்சந்திரபோசு ஆகிய அரசியல் சட்ட விற்பன்னர்களும் அந்தக் குழுவில் இடம் பெற்றனர். இந்தக் குழுவையே வரலாற்றில் ''நேரு குழு'' எனக் கூறுகின்றனர்.

அரசமைப்பு எப்படி இருக்க வேண்டுமென்ற அடிப்படைக் கொள்கைகளைத் தோற்றுவித்த பின் 25 முறை இந்தக் குழு கூடியது. இறுதியில் 28—1—1928-இல் லக்னேவில் கூடிய அனைத்து அரசியல் கட்சி மாநாட்டில் இந்தக் குழு தனது ''இந்திய அரசமைப்பைப் பற்றிய அறிக்கையை'' அளித்தது. அந்த அறிக்கையே, ''நேரு குழு அறிக்கை" என வழங்கப்படுகிறது. அந்த அறிக்கையை அனைத்துக் கட்சி மாநாடும் முழுக்க ஏற்றுக் கொண்டது.

நேரு குழுவின் அறிக்கையை அகில இந்தியக் காங்கிரஸ் கட்சியும் அப்படியே ஏற்றுக் கொண்டது. அதை ஓர் ஆண்டுக்குள் அமுல் படுத்தித் தீர வேண்டுமென்றும் ஆங்கில அரசைக் காங்கிரஸ் பணித்தது.

ஆங்கிலேய ஆட்சிக்கு நேரடியாக உட்பட்டிருந்த அன்றைய இந்திய மாநிலங்களும் அவை போக அன்றிருந்த 562 சுதேச மன்னர்களின் தனி ஆட்சிக்குட்பட்டிருந்த நிலப் பகுதிகளும் தன்னாட்சியோடு இயங்கி, அவையனைத்தும் இணைந்து ஓர் மத்திய அரசை உருவாக்கிக் கொண்டு, ஆங்கிலப் பேரரசின் கீழ் டொமினியன் தகுதியோடு இயங்கக் கூடிய ஓர் அரசமைப்பையே நேரு குழு உருவாக்கிற்று.

''இந்திய நாட்டின் தனி இயல்புகளைக் கருதி, இந்தியத் தேசிய நலன்களுடன் ஒத்துப்போகத் தக்கதும், முடிந்த அளவிற்கு மாகாணங்களின் அரசியல் வாழ்க்கையை முழுமையாக வளரச் செய்யத் தக்கதுமான வழி முறைகளை நாங்கள் செய்துள்ளோம். மாகாணங்களின் செயல்கள் மற்றும் நடவடிக்கைகள், செயல்படக் கூடிய அதிகார

எல்லைகளை மிக விரிவானதாகவும், அந்த எல்லைகளுக்குள் மைய அரசின் கட்டுப்பாடுகளில்லாமல் மாகாண அரசுகள் (சுயமாக) இயங்கக் கூடிய வகையிலும் முறைப்படுத்தி யிருக்கிறோம். ஆனால், மாகாணங்களுக்கிடையில் ஏற் படும் முரண்பாடுகளை நேர் செய்யக் கூடியதும் தேசிய நலன் களைப் பேணக் கூடியதுமான ஒரு மத்திய அரசையும் உரு வாக்கியிருக்கிறோம் என்பதும் வெள்ளிடைமலை.'' 5

"We have borne in mind the peculiar position of India and have provided for the development of the fullest possible provincial life compatible with national interests... ..The limits we have provided for provincial activities and functions are very wide and, within these limits, provincial Governments will be masters of their houses, free from the control of the Central Government. It is obvious, however, that there is a very large field of state activity which, in any system of stable administration; must be covered exclusively by the central Government which alone can safeguard national interests and reconcile conflicting claims between province and province......"

என்று நேரு குழுவின் அறிக்கை முழு மாநில சுயாட்சியைப் பற்றியும் வலிமை மிக்க மத்திய அரசைப் பற்றியும் தெளிவாகப் பேசுகிறது.

நேரு குழுவின் அறிக்கை இந்திய நாட்டிற்கு எந்த வகை அரசமைப்பைப் பரிந்துரை செய்துள்ளது என்பது பற்றி, அரச மைப்பு வல்லுனர் டாக்டர் பி. எம். சர்மா அவர்கள் கருத்துக் கூறும் போது,

''இந்தியாவில் ஒரு கூட்டாட்சி அரசமைப்பை உருவாக்கும் அடிப்படையிலேயே நேரு குழுவின் திட்டங்கள் அமைக்கப் பட்டுள்ளன.'' 6

எனத் தெளிவாக்குகிறார்.

---

5 All Parties Conferance-1928, "Supplementary Report of the Committee [1928] Pp 11-12.

6 Prof. B. M. SHARMA, "The Indian Federation" [1932]. Page 268.

ஆனல் முஸ்லீம்களின் நலன் கருதி, நேரு குழுவின் அறிக்கையில் சில அடிப்படை மாற்றங்களைச் செய்ய வேண்டும் என்று ஜனுப் ஜின்னுவும், அவரது குழுவும் வேறு முஸ்லீம் குழுக்களும் வலியுறுத்தினர். அஃதாவது, ''மத்தியச் சட்ட மன்றத்தின் மொத்த உறுப்பினர்கள் எண்ணிக்கையில் 1/3 பங்கு முஸ்லீம் உறுப்பினர்கள் இருத்தல் வேண்டும். நேரு குழுவால் பரிந்துரைக்கப்பட்ட வயது "வந்தோர்களுக்கு வாக்குரிமை" என்ற கோட்பாட்டை ஒருக்கால் ஆங்கில அரசு ஏற்றுக் கொள்ளவில்லையெனில் வங்காளம், பஞ்சாப் ஆகிய மாநிலங்களின் மொத்த மக்கள் தொகையில் முஸ்லீம்களின் எண்ணிக்கை எந்த விகிதாச்சாரப்படி உள்ளதோ, அதே விகிதத்தில் அந்த மாநிலச் சட்டமன்றங்களின் முஸ்லீம் உறுப்பினர் எண்ணிக்கையும் இருத்தல் வேண்டும். சிந்து மாகாணம் பிரிக்கப்படுவதை அரசியற் சட்டம் அமுலுக்கு வரும்வரை தள்ளி வைத்தல் கூடாது'' என்று ஜின்னு அவர்கள் நேரு குழு அறிக்கைக்கு மூன்று திருத்தங்களைக் கொண்டு வந்தார்.

இவைபோக, மாநில சுயாட்சியில் அடிப்படை உரிமைகளைக் காக்கும் இரண்டு இன்றியமையாத் திருத்தங்களையும் ஜின்னு அவர்கள் முன்மொழிந்தார். அவையாவன:–

(i) அரசு அதிகாரங்களை மத்திய-மாநில அரசுகளுக்கிடையே தனித்தனியாகப் பிரித்து ஒதுக்கியது போக, மீதியுள்ள ''எஞ்சிய அதிகாரங்களை'' (Residuary Powers) மாநிலங்களுக்கே கொடுக்க வேண்டும்.

(ii) நாடாளுமன்றத்தின் இரு சபைகளில் ஒவ்வொரு சபையிலும் உள்ள உறுப்பினர்களில் 4/5 பங்கு பேர் சேர்ந்து, தனித்தனியே தீர்மானம் நிறைவேற்றினலன்றி, இந்திய அரசமைப்பில் (Constitution) திருத்தங்கள் (Amendments) எதுவும் செய்யப்படக் கூடாது.

1928–ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் கல்கத்தாவில் நடைபெற்ற அனைத்துக் கட்சிக் கருத்தரங்கில் (All Party Convention) மேற்சொன்ன 5 திருத்தங்களையும் ''நேரு குழுவின் வரைவு அறிக்கையில்'' (Draft Report) இடம் பெறச் செய்வதற்காக ஜின்னு அவர்கள் இறுதியாக முயற்சி செய்தார்.

ஆனால் ''அனைத்துக் கட்சி மாநாடும்'', ''நேரு குழுவும்'' அதில் இருந்த காங்கிரஸ் உறுப்பினர்களும் ''இந்து மகாசபைக் கட்சியின்'' செல்வாக்கினால் அன்று இயக்கப்பட்டதினால், ஜின்னாவின் 5 திருத்தங்களும் ஏற்றுக் கொள்ளப்படவில்லை.

மாநிலங்களுக்கே 'எஞ்சிய அதிகாரங்கள்' தரவேண்டுமென்ற திருத்தத்தைப் பொறுத்தவரை, நாட்டினுடைய எதிர்கால அரசமைப்பின் மாநில சுயாட்சியின் ஒரு பகுதியாக அது அமைவதால், ஜின்னா அவர்கள் அத்திருத்தத்தை முன்மொழிந்து, அதிகச் சொல்வன்மையுடன் அதனை நேரு குழு ஏற்றுக் கொள்ளுமாறு வாதாடினார். ''அனைத்துக் கட்சிக் கருத்தரங்கு'' அதனை எவ்வகையிலும் ஏற்றுத்தான் தீரவேண்டுமென்று மிக உருக்கமாகவும் வேண்டிக் கொண்டார். ஆனால் அது பயனற்றுப் போய்விட்டது. ஜின்னாவின் ''எஞ்சிய அதிகாரத் திருத்தமும்'' தோற்கடிக்கப்பட்டு விட்டது.

1927-ஆம் ஆண்டில் நேரு குழு அறிக்கையின் அடிப்படைக் கோட்பாடுகளை வகுக்கும்போது தரப்பட்ட டில்லிக் கருத்துக்களில் (Delhi Proposals) காங்கிரஸ் கட்சி ஏற்றுக் கொண்ட அடிப்படைக் கொள்கைக்கு முற்றிலும் மாறுபட்ட வகையில், ஜின்னாவின் 'எஞ்சிய அதிகாரத்' திருத்தத்தைக் காங்கிரஸ் கட்சியும் சேர்ந்து தோற்கடித்துவிட்டது. ''எஞ்சிய அதிகாரங்கள்'' மாநிலங்களுக்கு அளிக்கப்பட்டால் வலிவான மத்திய அரசையும் அமைக்க முடியாது. மாநிலங்களை ஆட்டிப்படைக்கவும் முடியாது என்ற உள்நோக்கத்துடன் காங்கிரஸ் கட்சி ஜின்னாவின் அந்தத் திருத்தத்தைத் தோற்கடித்து விட்டது என்றால் அது மிகையாகாது.

ஜனாப் ஜின்னாவால் கொடுக்கப்பட்ட திருத்தங்களின் தோல்வி இந்திய விடுதலை வரலாற்றில் ஓர் திருப்பு மையத்தைப் படைத்துவிட்டது. எப்படி?

1916-ஆம் ஆண்டில் (காங்கிரஸ்-லீக்) ''லக்னோ ஒப்பந்தத்தில்'' தொடங்கி அதன் பின்னர் 9 ஆண்டுகளில் 'கிலாபத்' இயக்கத்தால் வளர்க்கப்பட்ட இந்து - முஸ்லீம் ஒற்றுமை, ஜின்னாவின் திருத்தங்கள் ஏற்கப்படாததால் சுக்கு நூறுகச் சிதறிப் போயிற்று. அன்றிலிருந்து காங்கிரஸ் - லீக்கட்சி

களிடையே ஆழ்ந்தகன்ற ஓர் இடைவெளியும் தோன்றி விட்டது. முஸ்லீம்களின் இன, மத, நலன்கள் இந்துக்களின் பெரும்பான்மை பலத்தால் அழிக்கப்பட்டு விடும் என்ற பழைய ஐயமும், அச்சமும் மீண்டும் முஸ்லீம்களைப் பற்றிக் கொண்டது. பாகிஸ்தான் தனி நாடாக வேண்டுமென்ற ''நாட்டுப் பிரிவினை'' உணர்ச்சி, பிற்காலத்தில் தோன்றியதற்கு இதுவே மூல காரணமாயிற்று எனக் கூறிடின் அது மிகையாகாது. காந்தியின் ஒத்துழையாமை இயக்கத்தையும் இந்து முஸ்லீம் ஒற்றுமையையும் தீவிரப்படுத்திய பெருந்தலைவரான முகம்மதலியும், அதுவரை காந்தியக் கொள்கைகளை முழுக்க முழுக்க ஏற்றிருந்தவரும் பிரிட்டானிய ஏகாதிபத்தியத்தை எதிர்த்தவருமான ஜின்னா அவர்களும் மனமுடைந்து இனிக் காங்கிரஸ் கட்சியுடன் ஒத்தியங்க இயலாது என்ற முடிவை மேற்கொண்டார்கள். காங்கிரஸ், லீக்கின் வழிகளும் தனித்தனியே பிரியலாயிற்று.

''வலிவுபெற்ற மைய அரசு'' வேண்டும் என்ற கோட்பாட்டை காங்கிரஸ் கட்சி பிடிவாதமாகக் கைவிடாததினால், பிற்காலத்தில் நாட்டுப் பிரிவினை, தவிர்க்க இயலாமல் போய்விட்டது என்ற கருத்திற்கு இதுவே முதல் சான்றாயிற்று.

### ஜின்னாவின் 14 அம்சத் தீர்மானம்

ஜின்னாவின் திருத்தங்கள் நேரு குழுவினரால் ஏற்றுக் கொள்ளப்படாததால், அதுவரை சிதறி முரண்பட்டிருந்த பல முஸ்லீம் குழுக்களை ஒன்றாகப் பிணைப்பதற்கு ஜின்னாவிற்கு ஒரு நல்ல வாய்ப்பேற்பட்டது. நேரு குழு அறிக்கைக்கு ஜின்னாவால் தரப்பட்ட ஐவகைத் திருத்தங்களே முஸ்லீம் லீக்கின் எதிர்காலக் கொள்கைகளாகி விட்டன. அக்கொள்கைகளையே ''ஜின்னாவின் 14 அம்சக் கோரிக்கை'' ( 14 Points of Jinnah ) என வழங்கலாயிற்று.

*1—1—1929*-ஆம் நாளில் திரு. ஆகாகான் அவர்கள் தலைமையில், அகில இந்திய முஸ்லீம்களின் மாநாடு டெல்லியில் நடைபெற்றது. அதில் ஜின்னாவின் 14 அம்சத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

ஜின்னாவினால் தரப்பட்ட 14 புள்ளிகளில், மாநில சுயாட்சியின் வளர்ச்சி பற்றிய சில அம்சங்களும் அடங்கி யிருப்பதை நாம் காணலாம்.

அவையாவன :—

(i) "எஞ்சிய அதிகாரங்கள்" முழுவதும் மாநிலங்களுக்கே தரப்பட வேண்டும்; மாநிலங்கள் முழு சுயாட்சி கொண்டவையாய் விளங்க வேண்டும்.

(ii) சுயாட்சி பெற்ற மாநிலங்களை ஒன்றாக இணைத்துக் கூட்டாட்சி முறையில் எதிர்கால இந்திய அரசியலமைப்பு இயற்றப்படல் வேண்டும்; அந்த இந்தியக் கூட்டாட்சியில் எல்லா மாநிலங்களுக்கும் ஒரே சீரான, சமமான சுயாட்சி யுரிமைகள் அளிக்கப்படல் வேண்டும்.

(iii) இந்தியக் கூட்டாட்சியில் உறுப்புக்களாய் இருக்கும் மாநிலங்களின் ஒப்புதல் (Concurrance) இல்லாமல் இந்திய நாடாளு மன்றம் இந்திய அரசியல் சட்டத்தில் எவ்வகை மாற்றங்களையும், திருத்தங்களையும் செய்தல் கூடாது.

"நேரு குழுவின்" அறிக்கையில் கண்ட மாநில சுயாட்சியைப் பொறுத்த சில குறைபாடுகளை, ஜின்னாவின் தீர்மானத்தில் கண்ட மேற்சொன்ன அம்சங்கள் அகற்றுகின்றன. மேலும் மாநிலங்கள் முழு உரிமையைப் பெறத்தக்க முறையிலும் அவ்வுரிமைகளை மத்திய அரசு நினைக்கும் போதெல்லாம் பறித்துக் கொள்ள முடியாத வகையிலும், மாநில அரசுகளுக்கிடையில் வேறுபாடுகளின்றி ஒரேசீரான சுயாட்சி அளிக்கப்பட வேண்டுமென்ற நெறி முறையிலும் மாநிலத் தன்னாட்சி வளர்ச்சியுற ஜின்னாவின் புள்ளிகள் வழிகாட்டின.

28-3-1929-ஆம் நாளில் நடைபெற்ற அகில இந்திய முஸ்லீம் மாநாட்டில், ஜின்னாவின் 14 புள்ளிகள் மீண்டும் வலியுறுத்தப்பட்டன; அந்தப் "14 அம்சத்திட்டத்தை" ஏற்றுக் கொள்ளாமல் உருவாக்கப்படும் எந்த ஓர் அரசமைப்பையும் இந்திய முஸ்லீம்கள் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள் என்றும் அங்கு

தெளிவுபடுத்தப்பட்டது. மற்றும் அம்மாநாட்டில் மாநில சுயாட்சியைப் பற்றிய மேற்சொன்ன மூவகைக் கோட்பாடுகளும் மீண்டும் வலியுறுத்தப்பட்டன. அத்தீர்மானமும் ஒருமனதாக நிறைவேற்றப்பட்டது.

### ஆகாகானின் கடிதம்

அகில இந்திய முஸ்லீம் லீக்கின் மாநில சுயாட்சி பற்றிய கோரிக்கைகள் எல்லா உரிமைகளையும் கொண்ட மாநிலங்கள் உருவாவதற்கும் நாட்டின் பொது நலனுக்குரிய சில குறிப்பிட்ட அதிகாரங்களை மட்டும் மத்திய அரசு பெறுவதற்கும் உரிய கோட்பாட்டை வகுத்துக் கொடுத்தது. 1935–ஆம் ஆண்டுக்குப் பின்னர்கூட முஸ்லீம் லீக்கின் மாநில சுயாட்சிக் கொள்கை பல முஸ்லீம் தலைவர்களால் மீண்டும் அறுதியிட்டு உறுதிப்படுத்தப்பட்டது. பஞ்சாப் முஸ்லீம் தலைவரான சர். பசல்உசேன் (Sir. Fazl Hussain) அவர்களுக்கு ஆகாகான் அவர்கள் எழுதிய கடிதத்திலிருந்து முஸ்லீம் மக்களின் அரசியல் கோரிக்கைகள் எப்படி முழு மாநில சுயாட்சியை மையமாகக் கொண்டியங்கியது என்பது தெரிய வரும்.

அக்கடிதத்தில் ,

> ''இந்திய முஸ்லீம்களின் எதிர்காலக் கொள்கை என்ன? இந்தியாவில் நாம் சிறுபான்மையினர்......நம்முடன் இந்து மதத்தைச் சார்ந்த பெருவாரியான மக்கள் இருந்து வருகின்றனர். இந்தியாவின் மொத்த மக்கட்தொகையில் 25% ஆன முஸ்லீம் மக்கள்; நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் பரவி சிறுபான்மையினராக இருந்திருப்பின், உள்ளபடியே அது மிக இன்னல் தரத் தக்கதாயிருந்திருக்கும். ஆனால் இப்போதுள்ள நிலையில் அதிர்ஷ்டவசமாக அந்தச் சிக்கல் இல்லை; இவ்வளவு சிறிய எண்ணிக்கையில் நாம் இருப்பினும், சில இந்தியப் பகுதிகளில் மட்டும் நாம் அழுத்தமான பெரும்பான்மையைப் பெற்றிருக்கிறோம். எல்லைப்புற மாகாணம் தனித்த மாநிலங்களைத் தொட்டு இருக்கிறது. அதன் அருகிலிருக்கும் இன்னொரு மாநிலம் கடலை முத்தமிடுகிறது. கடல் வாணிகத்தால் பெரும் வளம் கொண்ட வங்காளத்தில் நாம் பெரும்பான்மையினராக இருக்கிறோம்.

இந்தச் சூழ்நிலையில் நாம் செய்ய வேண்டுவது என்ன? இந்த விஞவிற்கு ஒரே விடைதான். வங்காளத்திலும் வடஇந்தியப் பகுதியிலும், அமைந்திருக்கும் நமது பெரும்பான்மை நிலைமையினை நாம் பயன் படுத்திக் கொள்ள வேண்டும். முதலாவதாக அனைத்திந்திய விவகாரங்களில் நாம் முழுக்க முழுக்க கூட்டாட்சியைப் போற்றுபவர்களாக ( Federalists ) இருத்தல் வேண்டும். எதிர்காலக் கூட்டாட்சியில் சுதேச மன்னர்கள் எத்துணைத் தன்னுட்சியினைத் துய்ப்பார்களோ அந்த அளவிற்கு நாம் பெரும்பான்மையாய் உள்ள மாநிலங்களும் சுயாட்சி பெற்றவையாக மலர்வதற்கு நமது இந்தச் செல்வாக்கினைக் கருவியாக்கிக் கொள்ள வேண்டும். இரண்டாவதாக, இந்தியப் படைகளின் தன்மையை மெல்ல மெல்ல மாற்றி, அவை மாநிலங்களுக்குப் பொருந்தக்கூடிய மாநில எல்லைப் படைகளாக உருவாகும் வகையைக் காண வேண்டும். பழைய ஜெர்மானியப் பேரரசில் 'பவேரியா' எத்துணை பயன் அடைந்ததோ அவ்வகைப் பயனை மாநிலங்கள் பெற வேண்டும். நாம் இந்த நியாயமான குறிக்கோளை அடைவதற்கு நமது வலிமையை யெல்லாம் பயன்படுத்தி உண்மையில் தற்போது இந்தியா இருக்கும் நிலையிலேயே அதனை ஒரு தென் ஆசிய நாடுகளின் ஒன்றியமாக ஆக்க வேண்டும்.'' 7

என ஆகாகான் திட்ட வட்டமாகக் கூறுகிருர்.

சர். சபாத் அகமத்கானின் ''கடற் பெருவிலங்கு''

''வலிமையுள்ள மைய அரசா? அல்லது வலிமை கொண்ட மாநிலங்களா?'' என்ற கொள்கைப் போராட்டம் 1920 முதல் 1937–ஆம் ஆண்டு வரை அதன் உச்சகட்டத்தை அடைந்திருந்தது எனச் சில அரசமைப்பு வல்லுனர்கள் கருத்துத் தெரிவிக்கின்றனர். இந்திய நாடு விடுதலை பெறுவதற்குக் கால் நூற்ருண்டுக்கு முன்னரே, உரிமையற்ற மாநிலங்களை அடக்கும் வன்மையான மத்திய அரசு வேண்டுமென்ற அணியில்இந்தியத் தேசியவாதிகளும் காங்கிரஸ் கட்சியும் இருந்தன. முழு உரிமை கொண்ட மாநிலங்களும் பொதுவாக அவைகளை இணைக்கும் மத்திய அரசும் வேண்டுமென்ற அணியில் முஸ்லீம் லீக் உள்

---

7 Quoted in Azim Hussain ''Fazal I Hussain - A Political Biography'' (1946) Page 301 and 302

ளிட்ட வேறு பல சிறுபான்மை அரசியற் கட்சிகளும் இருந்தன. இவ்வகையில் இரு அணிகளாகப் பிரிந்து நின்று, எதிர்கால இந்திய அரசமைப்பைப் பொறுத்த கொள்கைப் போராட்டத்தை அவர்கள் நடத்தினர்'' என அரசியல் வல்லுனர், சர். சபாத் அகமத்கான் அவர்கள் கருதுகின்றார்.

1919-ஆம் ஆண்டின் மாண்டேகு – செம்ஸ்போர்டு சீர்திருத்தங்களுக்குப் பின்னால் 1937–ஆம் ஆண்டு வரை வன்மையான ''மைய அரசைப் போற்றுபவர்களுக்கும் மாநில சுயாட்சியாளருக்கும்'' நடந்த கொள்கைப் போராட்டத்தைப் பற்றி, சர். சபாத் அகமத்கான் (Sir. Shafa'at Ahamed Khan) தனது ''இந்தியக் கூட்டாட்சி'' (Indian Federation) என்ற நூலில் குறிப்பிடுகிறார். அந்நூலில்,

> ''முழு மாநில சுயாட்சி வேண்டுமென இந்திய முஸ்லீம்கள் மட்டுமல்லாமல் வேறு பல பகுதியினரும் தீவிரமாகக் கூறினார்கள்.. ...மாநிலங்களுக்குச் சுயாட்சி கொடுக்கப்பட்டால் இந்தியா, பல முரண்பட்ட மதங்கள், மொழிகள், இனங்கள் ஆகியவற்றைத் தன்னகத்தே கொண்டுள்ளதால், ஒற்றுமையின்றிச் சிதறிவிடும் என்று வலிமையான மைய அரசைப் போற்றுபவர் வாதிட்டனர்.''
>
> ''...ஆனால் மாநிலங்களுக்குச் சுயாட்சி அளிப்பதால் இந்திய நாடு துண்டு துண்டாகச் சிதறி விடாது. மத்திய அரசு மாநிலங்களை அடக்கும் வன்மையான அதிகாரங்களைக் கொண்டிருந்தால் தான் நாடு சிதருண்டு போகும் என மாநில சுயாட்சியாளர்கள் வலியுறுத்தினர்''

எனவும் கூறினார்.

அதனை விளக்கிக் கூறும் போது, ''மாநிலங்களின் தனித்தன்மை கொண்ட தேவைகளைப் பற்றித் தொடர்ந்து கருத்தில் கொள்ளாததும், அதிகாரங்களை யெல்லாம் ஒரு முகமாக்கிக் கொண்டதுமான மத்திய அரசின் நிர்வாகத்தால் உண்மையான இந்தியத் தேசிய வளர்ச்சி மிகப் பெருமளவில் பாதிக்கப்பட்டு விட்டது. ஒன்றரை நூற்றுண்டுக் காலத்தில், நீராவியால் இயக்கப்படும் கல் உருளையைப் போன்ற மத்திய அரசின் அடக்குமுறையால் மாநிலங்களின் தனித்தன்மையும்

ஊக்க வளர்ச்சியும் முழுமையாக அழிக்கப்பட்டு விட்டன. மாநிலங்களுக்குச் சக்தியையும் நல்ல வலிமையையும் கொடுப்பதற்குப் பதிலாக ஓர் ராட்சச இயந்திரத்தைப் போல மத்திய அரசு நடந்து கொண்டதால், முன்னர் மாநிலங்கள் பெற்றிருந்த ஊக்கத்தையும் அவற்றின் சுதந்திரத்தையும் கூட மத்திய அரசே ஈர்த்துக் கொண்டது''

எனத் தெளிவுபடுத்துகிறார்.

''........கூட்டாட்சியின் உறுப்புக்களான மாநிலங்களின் உரிமைகளை, (மத்திய அரசு) கழுத்தை நெறித்து, களைப் படையச் செய்ததால், மெல்ல மெல்லச் செத்துக் கொண் டிருக்கிற மாநிலங்கள் சாதாரண ஊராட்சி மன்றங்களின் கீழ்நிலைக்குத் தள்ளப்பட்டுள்ளன. அவ்வகை மத்திய அரசு விரும்பத் தகாதது; தேவை யற்றது. அத்தகையதொரு மத்திய அரசானது மாநிலங்களின் சிறப்புரிமைகளை யெல்லாம் விழுங்கி ஏப்பம் இடும் ஒரு கடற் பெருவிலங்கைப் போன்றதே யாகும். 1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தில், சுதேச மன்னர்களின் உள்விவகாரங்களில் மைய அரசின் தலையீடில்லாத சுயாட்சி அளிக்கப்பட்டிருக்கின்றது. அந்த அளவு சுயாட்சியை (ஆங்கில ஆளுகையிலுள்ள) இந்திய மாகாணங்களும் துய்க்க வேண்டும். அவை தன் இறைமை யையும் வளர்க்க வேண்டும்.''8

என மாநிலங்கள் பிரிந்து போவதற்கு வன்மை கொண்ட மத்திய அரசே காரணம் என்பதை, சர். சபாத் அகமத்கான் அவர்கள் ''மாநில சுயாட்சியாளர்'' வாயிலாகப் பேசுகிறார்.

### லீக் தந்த ஆக்கம்

முழு மாநில சுயாட்சியையே தனது அரசியல் குறிக்கோள் களில் ஒன்றாகக் கொண்டிருந்த அகில இந்திய முஸ்லீம் லீக், 1940-ஆம் ஆண்டில் ''நாட்டுப் பிரிவினைதான் தனது ஒரே லட்சியம்" என முழங்கியதற்குக் காங்கிரஸ் கட்சியும் ஒரு காரண மாகும். இந்திய ஒருமைப்பாடு என்ற பெயரால் மாநிலங்களை அடக்கியாளும் வல்லமை கொண்ட ஓர் மத்திய அரசை எதிர்

---

8 Sir Shafa'at Ahamed Khan, "The Indian Federation" [1937] Page 86 - 87

கால இந்திய அரசமைப்பில் படைக்க வேண்டுமென்ற காங்கிரஸ் கட்சியின் உள்நோக்கக் கொள்கையும் அதன் அரசியல் நடவடிக்கைகளும் நாட்டுப் பிரிவினைக்கே ஒருவகையில் மூலக் காரணமாயிற்று.

முஸ்லீம் லீக்கின் ''பாகிஸ்தான் கோரிக்கைக்கு'' பல நாட்களுக்கு முன்னர் எழுதப்பட்ட சர். சபாத் அகமத்கானின் தீர்க்க தரிசனமான சொற்றொடர்கள் இன்றைய நிலைமைக்கும் கூடப் பொருத்தமான ஓர் எச்சரிகையாகும். சான்றாக, நாட்டுப் பிரிவினையில் உருவான பாக்கிஸ்தான் தனது பழைய வரலாற்றை மறந்து கிழக்கு வங்க மாநிலத்தைத் தனது கடுமையான மைய அரசால் அடக்க முனைந்ததினால் 'பங்களா தேசம்' ஒரு சுதந்திர நாடாகப் பாக்கிஸ்தானத்திலிருந்து பிரிந்து போயிற்று.

ஆக, அண்மைக் காலத்து வரலாறும் இந்த உண்மையைத்தான் தெளிவுபடுத்துகிறது. எனவே, இந்திய மாநிலங்களுக்கு சுயாட்சி அளிக்கப்படாமல், ஒருமைப்பாடு என்ற பெயரில் அரசமைப்புச்சட்டத்தின் வாயிலாக மாநிலங்களை ஒடுக்க முனைந்ததால் அதன் இறுதி விளைவுகள் பிரிவினைக்கே கொண்டு சேர்த்துவிடும் என்ற வரலாற்றுப் பேருண்மை மீண்டும் மீண்டும் நிலைநிறுத்தப்படுகிறதல்லவா ?

முஸ்லீம் லீக் கட்சி, வகுப்புவாதக் கோரிக்கைகளையும் பிரிவினைக் கொள்கையினையும் மையமாகக் கொண்டியங்கினாலும், அதன் தோற்றத்திலிருந்து ஏறத்தாழ 35 ஆண்டுக்கால வரலாற்றை நாம் ஆய்வு செய்தால், மாநில சுயாட்சி வளர்ச்சிக்குத் தேவையான ஆக்கத்தை முஸ்லீம் லீக் கட்சி நல்கியுள்ளது என்பது தெளிவாகிறது. ஆனால் மாநில சுயாட்சி மறுக்கப்பட்ட போது 1940–ஆம் ஆண்டில் முஸ்லீம் லீக், ஒரு பிரிவினை சக்தியாக மாறி விட்டது. அக்கால கட்டத்தில், எவ்வகையிலேனும் நாட்டுப் பிரிவினையைத் தவிர்த்தே தீர வேண்டும் எனக் கங்கணம் கட்டிக் கொண்ட காங்கிரஸ், முழுமையான சுயாட்சியை மாநிலங்களுக்கு அளிப்பதெனத் தீர்மானித்து, அதை அரசியல் அமைப்பில் உருவாக்கவும் துணிந்தது. ஆனால் காலம் கடந்து விட்டது.

எனினும், மாநில சுயாட்சிக் கொள்கையின் ஆக்கத்திற்காக அகிலஇந்திய முஸ்லீக் லீக் கட்சியும் தனது பங்கைச் செலுத்தி, அதனை மேலும் வளர்ச்சியுறச் செய்துள்ளது. அது மட்டுமல்ல; முழு மாநில சுயாட்சிக் கோரிக்கைக்குத்தொடக்கத்திலிருந்தே பிடிவாதமாக செவி சாய்க்க மறுத்த காங்கிரஸ் கட்சியையும், முஸ்லீம் லீக் தனது பிடிவாதமான பிரிவினைக் கோரிக்கை மூலம் இறங்கி வரச் செய்து, 1940–ஆம் ஆண்டிற்குப் பின்னர் முழு மாநில சுயாட்சியை ஏற்றுக்கொள்ளத் தேவையான நிர்ப்பந்த மானதோர் அரசியற் சூழலை உருவாக்கிய வகையில், மாநில சுயாட்சிக் கொள்கையின் வளர்ச்சிக்கு மட்டுமல்ல, அதன் எழுச்சிக்கும் முஸ்லீம் லீக் மறைமுகமாகத் துணை நின்றுள்ளது. அதன் விளைவாக 1940–ஆம் ஆண்டு தொடங்கி 1947–ஆம் ஆண்டு வரை [ முஸ்லீம் லீக்கிற்கு மாறாக ] அகில இந்தியக் காங்கிரஸ் கட்சியே முழுமையான மாநில சுயாட்சியின் எழுச்சிக்கும் காரணமாயிருந்தது.



# 7. மாநில சுயாட்சிக் கொள்கையின் வளர்ச்சி

## — சுதேச மன்னர்களின் பங்கு —

" சுதேச மன்னர்களுக்குப் பொதுமக்கள் ஆதரவில்லை. எனவே மெழுகுவர்த்தியின் கரிந்த திரியைக் கத்தரித்து எரிவதுபோல, சுதேச மன்னர்களையும் இந்தியாவிலிருந்து அகற்றி விட்டார்கள். (1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டம் உருவாக்கிய மத்தியக் கூட்டாட்சியில் சேராமல்) சுதேச மன்னர்கள் ஒதுங்கி விட்ட தவறுக்காக ஒருக்கால் இந்தியா அவர்களுக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளது. (இந்திய நாட்டைக் கூட்டாட்சியாக்கும் முயற்சியில்) சுதேச மன்னர்கள் ஒத்துழைக்கத் தவறியதால் தான், 1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தின் மத்தியக் கூட்டாட்சி அரசு,நடைமுறைக்கு வரவில்லை. 1947-ஆம் ஆண்டில், அகில இந்தியக் காங்கிரஸ் கட்சியே நாட்டின் எல்லா அதிகாரங்களையும் ஏற்றுக் கொண்டதற்கும், அக் கட்சி ஒரு வலிவு மிக்க மத்திய அரசைப் படைப்பதற்கும் சுதேச மன்னர்கள் இந்தியக் கூட்டாட்சியில் சேராததே காரணமாயிற்று.வலிமை கொண்ட மத்திய அரசு படைக்கப்படாமல் இருந்திருந்தால் இன்றைய இந்தியாவாக (அடிமை இந்தியா) வளர்ந்திருக்காது. இந்தியக் கூட்டாட்சியில் பழைய சுதேச மன்னர்கள் முன்னர் சேர்ந்திருந்தால், இந்தியாவில் வலிமையான மத்திய அரசே இருந்திருக்காது."[1]

— பேராசிரியர். பெர்சிவல் ஸ்பியர்.

(Prof. PERCIVAL SPHEAR)

---

1 India-A Modern History, Pp. 393-394.

இந்திய விடுதலைக்கு முன்பிருந்த இந்தியாவின் வரை படத்தை உற்று நோக்கின், அதில் இருவேறு இந்தியாக்கள் தென்படும். பிரிட்டானிய நேரடி ஆட்சிக்கு உட்பட்ட இந்தியப் பகுதிகள் — மாகாணங்கள் — எனவும், பிரிட்டானிய மேலாட்சிக்கு உட்பட்ட சுதேசமன்னர்களின் ஆளுகையிலிருந்த இந்தியக் குறுநிலப்பகுதிகள்—சமஸ்தானங்கள்—எனவும்அதில் இடம் பெற்றிருந்தன. ஏறத்தாழ 562 பெரிதும் சிறிதுமான இந்திய சமஸ்தானங்களில்1941-ஆம்ஆண்டு மக்கள் தொகைக் கணக்குப்படி, சற்றேறக்குறைய 10 கோடி மக்கள் வாழ்ந் தனர். இந்தியத் துணைக் கண்டத்தின் பரப்பில் சுமார் 2/5 பங்கு நிலப்பகுதி, சுதேச மன்னர்களின் ஆளுகையில் இருந்தது.

## I

## ஆங்கில அரசின் மேலாண்மை

### [ BRITISH PARAMOUNTCY ]

ஆங்கிலேயர்கள் பல சிற்றரசு நாடுகளைப் போர்களால் முறியடித்து, அடிமைப்படுத்திக் கொண்டனர். ஆங்கில அரசின் ஆதிக்கத்தை ஏற்றுக் கொள்ளும் இன்னும் சில சிற் றரசுப் பகுதிகளை, பல வகையான உடன்படிக்கைகளின் வாயி லாக ஆங்கிலேயர் தம் மேலாட்சியின் கட்டுக்குள் கொண்டு வந்தனர். சூழ்நிலைக்கு ஏற்றபடி, சிற்றரசுகளின் உள்நாட்டு விவகாரங்களில் அவ்வப்போது தலையிட்டு, இன்னும் சில சுதேச மன்னர்களைக் கௌரவமான அடிமைகளாக்கிக் கொண்டனர்.

1857-இல் வெடித்த முதல் இந்திய சுதந்திரப் போருக்குப் பின்னர் வெளியான விக்டோரியா ராணியின் சாற்றுரையால், சுதேச மன்னர்களின் பேரில் ஆங்கிலப் பேரரசின் மேலாண்மை (PARAMOUNTCY) முறையாக நிலைநிறுத்தப்பட்டு விட்டது. அந்தந்த சிற்றரசு நாடுகளில் 'ரெசிடெண்ட்' (RESIDENT) என்ற ஆங்கிலேய அதிகாரிகள் நியமிக்கப்பட்டு, அவர்களது "ஆலோசனைகள்" என்ற பெயரால், சுதேச மன்னர்களின் தனி ஆட்சியுரிமைகள் கட்டுப் படுத்தப்பட்டன. 'ரெசிடெண்ட்' கள் சுதேச மன்னர்களுக்கு ஆலோசனை நல்குவதற்குப் பதிலாக, சுதேச நாடுகளைத் தாமே ஆட்சி செய்து வந்தனர்.

ஆங்கில அரசின் உரிமம் (License) இல்லாமல் சிற்றரசு நாடுகளின் மக்கள் வெளி நாடுகளுக்குச் செல்ல இயலாது. போர்க் கருவி மற்றும் தளவாடங்களைச் சுதேச மன்னர்கள் தனித்து வைத்துக் கொள்வதற்கு, ஆங்கில அரசின் முறையான உரிமம் பெற்றாக வேண்டும். சுதேச நாடுகளின் மிகப் பெரிய அதிகாரிகளான திவான், அமைச்சர்கள் போன்றவர்களது நியமனங்கள் இந்திய அரசின் ''அரசியல் துறையால்'' (Political Department) அங்கீகரிக்கப்பட வேண்டும். ஆங்கிலேய (இந்திய) அரசின் அனுமதியைப் பெற்ற பின்பே சுதேச நாடுகளின் முக்கியச் சட்டங்கள் இயற்றப்படவேண்டும். இப்படிப் பல்வேறு வகைகளிலும் பிரிட்டானியப் பேரரசு இந்தியச் சுதேச மன்னர்களின் மீதும் அவர்களது தனியாட்சியின் மீதும் மேலாண்மையைச் செலுத்தி வந்தது.

ஆங்கிலேயரின் மேலாண்மையை ஏற்றுக்கொள்ளும் வகையில், சுதேச மன்னர்கள் சன்னத்துகளைப் (Sanads) பெற்றுக் கொள்ள வேண்டும். சுதேச நாடுகளுக்கு வெளி நாட்டுக் கொள்கை என்ற ஒரு தனிக்கொள்கை இல்லை. அவற்றின் உள்நாட்டுப் பாதுகாப்பின் பொறுப்பும் ஆங்கில அரசையே சார்ந்ததாகும். சுதேச மன்னர்களுக்கு 'சன்னத்து'கள் வழங்கப்பட்டு ஆங்கில அரசின் மேலாதிக்கத்திற்குள் வந்து விடுவதால் அம் மன்னர்களும் அவர்கள் தம் தனி ஆட்சியும் பிரிட்டானியப் பேரரசைத் தவிர, மற்றவர்களது தலையீடுகள் இல்லாத வகையில் நிலைபெற்று விட்டன. குறுநில மன்னர்களின் உள்நாட்டுக் கொள்கை, பழைய பாரம்பரிய முறையில் முடியரசைச் சார்ந்த கொள்கையாகவே இருந்து வந்தது. இருபதாம் நூற்றாண்டின் ஜனநாயக்கொள்கைகளோ,அரசியல், பொருளாதார, சமுதாய சுதந்திரங்களோ, சிற்றரசுகளின் எல்லைகளுக்குள் வாழ்ந்த மக்களுக்குக் கிடைக்கவில்லை. பெரும்பாலும் அவர்கள் சிற்றரசுகளின் அடக்கு முறையாலேயே ஆளப்பட்டு வந்தனர்.

இந்தியத் துணைக் கண்டம், ஆங்கில ஆதிபத்தியத்திற்கு உட்பட்ட அடிமைக் குடியேற்ற நாடாய் இருந்ததால் பிரிட்டானியப் பேரரசிற்கு,அவர்களது ஆதிக்கத்தை நிலைநிறுத்திக் கொள்ள உற்ற துணைவர்கள் சிலர் இந்தியாவினுள் தேவைப்பட்டனர். சுதேச மன்னர்கள் அந்த ''உற்ற துணைவர்கள்'' ஆனார்கள். சிற்றரசர்களும் தங்கள் கோனாட்சிகளை இழக்க ஒப்பவில்லை, எனவே அவர்கள் கோனாட்சிக்கு எவ்வகை

இடையூறும் இல்லாத பாதுகாப்பும் அதனை வழங்கும் உற்ற துணையும், அவர்களுக்கும் இன்றியமையாதனவாய் இருந்தன. அது பிரிட்டானியப் பேரரசின் உருவத்தில் அவர்களுக்குக் கிடைத்தது.

ஆயினும், ஆங்கிலப் பேரரசின் மேலாண்மைக் கொள்கையால் சிற்றரசர்களின் தனிச் சுதந்திரமும், உரிமையும், பெருமளவிற்குக் கட்டுப் படுத்தப்பட்டிருந்தது. அம் மேலாட்சியின் கொடுமைகளிலிருந்து, விடுதலை பெற சுதேச மன்னர்கள் வரலாற்றின் வாய்ப்புக்களுக்காக ஏங்கி நின்றனர்.

## II

## சுதேச மன்னர்களும் மாநில சுயாட்சியும்

1928-ஆம் ஆண்டில் வந்த சைமன் குழு ( Simon Commission ) சுதேச மன்னர்களின் பிரதிநிதிகளையும், மாகாணங்களின் பிரதிநிதிகளையும் கொண்ட ஒரு மத்திய நாடாளு மன்றம் அமைக்கப்பட வேண்டும் என்று பரிந்துரை செய்தது. ஆதிக்க நோக்கம் கொண்ட பிரிட்டானிய அரசின் அடிவருடிகளான சுதேச மன்னர்களின் பிரதிநிதிகள் மத்திய நாடாளு மன்றத்தில் பெரும்பான்மையாக இருப்பின், அவர்களைத் தமக்குச் சாதகமாக்கிக் கொண்டு, சுதந்திரம் கோரும் சக்திகளுக்கு எதிராக அவர்களைத் திருப்பி விட்டு, இந்தியாவை என்றென்றும் ஆங்கிலேயருக் கடிமையாக வைத்துக் கொள்வதற்காகவே சைமனின் திட்டம் பயன்பட்டிருக்கும். ஆனால் அது வேறு ஒரு பயனையும் அளித்தது.

முரண்பட்ட இவ்விரு இந்தியப் பிரிவுகளையும் அரசியல் துறையில் ஒன்றாக இணைக்க வல்லது கூட்டாட்சி அமைப்புமுறை தான் என்ற புதுக்கோட்பாட்டை, சைமன் அறிக்கை தெளிவாக்கியது. சுயாட்சி கொண்ட மாகாணங்களையும், தனி ஆட்சி விரும்பும் சிற்றரசுகளையும், கூட்டாட்சித் தத்துவத்தில் பிணைத்து, அனைத்திந்தியாவிற்கும் உரிய ஒரு கூட்டாட்சி அரசை உருவாக்குவதற்கு சைமன் குழு முதன் முறையாக வித்திட்டது.

சுதேச மன்னர்கள், தங்கள் தனி ஆட்சியைக் காத்துக் கொள்ளவும், பிரிட்டானிய மேலாட்சியிலிருந்து எவ்வகையிலேனும் விடுதலை பெறவும், எதிர்கால இந்தியக் கூட்டாட்சி அமைப்பை விரும்பி வேண்டி ஏற்றுக் கொள்ளலாயினர்.

தங்களுக்கும் ஆங்கிலப் பேரரசுக்கும் இடையே ஏற்பட்ட பழைய சமாதான உடன்படிக்கைகளிலும், ஒப்பந்தங்களிலும் பெற்ற உரிமைகளை வைத்து, அதன் அடிப்படையில் அதிகச் சலுகைகளையும் நிறைந்த உரிமைகளையும் எதிர்கால இந்திய அரசமைப்பில் பெறுவதற்குப் பேரம் நடத்திக்கொள்வதற்கும், கூட்டாட்சி அரசமைப்பே தங்களுக்கு வாய்ப்பை ஏற்படுத்து கிறது என்ற சுயநல நோக்கமும் சுதேச மன்னர்களை எதிர்கால இந்தியக் கூட்டாட்சியில் இடம் பெறத் தூண்டியது.

வட்ட மேசையில் மன்னவர்களின் கூட்டாட்சி

சுதேச மன்னர்களின் இந்நிலை, இந்தியக் கூட்டாட்சியின் மற்ற உறுப்புகளான மாநிலங்களில் முழுமையான சுயாட்சியை வளர்ப்பதற்குரிய மறைமுகமான ஓர் ஆக்கக் கூறாயிற்று. தனி ஆட்சி கொண்ட சிற்றரசுகளும், தன்னாட்சி கொண்ட மாநிலங் களும் சேர்ந்து இந்தியக் கூட்டாட்சியை உருவாக்கும் என்ற கருத்து 1930-ஆம் நூற்றாண்டிலிருந்தே அனைத்திந்திய, தேசி யத்தலைவர்களையும், அரசியல் விற்பன்னர்களையும் ஏன்? வெள்ளை ஏகாதிபத்தியத்தையும் கூட ஈர்த்து நின்றது. எதிர் கால விடுதலை பெற்ற இந்தியா கூட்டாட்சி அடிப்படையில் உருவாகும் என்ற வலிமையான பொது எண்ணமும் உருவாகி வளர்ந்து நின்றது. அவ்வகை எதிர்காலக் கூட்டாட்சியில் முழுமையான மாநில சுயாட்சி பொதிந்து இருக்கும் என்பது வெள்ளிடை மலை.

இதனடிப்படையில் 'முதல் வட்ட மேசை மாநாடு', லண்டனில் கூடியது. மொத்தம் 85 இந்தியப் பிரதிநிதிகளில், 16 பேர் சுதேச மன்னர்களின் பிரதிநிதிகள். மாநாட்டின் முக்கிய நிகழ்ச்சிகள் முழுவதும் இந்தியாவுக்கு டொமினியன் தகுதி அளிப்பது பற்றியும், இந்தியக் கூட்டாட்சி அமைப்பு பற்றியுமே இருந்தன. அதற்கு வழி விடும் வகையில் சுதேச மன்னர்களின் ஒருமித்த கருத்தை மாநாடு எதிர் நோக்கி யிருந்தது.

சர்தேஜ்பகதூர் சாப்ரு அவர்கள் சுதேச மன்னர்களை இந்தியக் கூட்டாட்சியில் சேரக் கோரி அறைகூவல் விட்டார். பிகானிர் மன்னர் ஒருமுக மத்திய வல்லாட்சியைக் கொண்ட இந்தியாவில் சிற்றரசுகள் இடம்பெற இயலாது என்றும், முழுமையான சுயாட்சி பெற்ற உறுப்புக்களைக் கொண்ட இந்தியக் கூட்டாட்சியில்தான் சுதேச சமஸ்தானங்களும் இடம் பெற முடியும் என்பதை எடுத்துக் காட்டினார்.

''இந்தியச் சிற்றரசுகளாகிய நாங்கள் அகில இந்தியாவினுடைய நிறைந்த வளத்திற்கும் விடுதலைக்கும் எங்கள் பங்கைச் செலுத்துவோம். அதற்குரிய பொறுப்பை ஏற்றுக் கொள்வதற்கும் நாங்கள் விருப்பம் உள்ளவர்களாக இருக்கிறோம். இந்திய மாகாணங்களையும் இந்தியச் சிற்றரசுப் பகுதிகளையும் கொண்ட—ஒரு கூட்டாட்சி முறை அரசின் வாயிலாக—இந்தியாவிற்கான ஓர் அரசமைப்பை உருவாக்குவதுதான் சாலச் சிறந்தது என நாங்கள் கருதுகிறோம்.''2

எனப் பிகானிர் இளவரசர் எடுத்து இயம்பினர்.

''கூட்டாட்சியைத் தவிர வேறு மாற்றுமுறை இருப்பதாக என் மனதிற்குப் படவில்லை.''3

எனக் காஷ்மீர் இளவரசரும்,

''நாமெல்லாம் விரும்பியபடி, இந்திய மாகாணங்களும், இந்தியச் சிற்றரசுகளும், ஓர் அகண்ட இந்தியாவில் இணைவதற்கு ஒரு கூட்டாட்சி வாயிலாகத் தான் முடியும் என்பதை நான் நன்கு புரிந்து கொண்டதனுல், ஒரு கூட்டாட்சி உருவாவதற்கு உரிய பணியை ஆற்ற முன் வந்திருக்கிறேன்.''4

எனப் பாட்டியாலா அரசரும்,

முதல் வட்ட மேசை மாநாட்டில் சுதேச மன்னர்களின் நிலையைத் தெளிவாக்கினுர்கள். சுதேச மன்னர்கள் கூட்டாட்சியை ஏற்றுக் கொள்வதற்கு அவர்களது தனியாட்சி பறிபோய் விடக் கூடாதே என்ற சுயநலமே காரணமாகும். எனினும் கூட்டாட்சியமைப்பை அவர்கள் ஏற்றுக் கொள்வதினுல் இந்திய மாநிலங்களும் முழுமையான சுயாட்சியைப் பெறுவது, தவிர்க்க முடியாததாகி விட்டதால் சுதேச மன்னர்களது இந்திய ஐக்கியம், மாநில சுயாட்சி வளர்ச்சியில், ஒரு பெரும் பங்கை வகித்தது எனலாம்.

---

2 **Indian Round Table Confrance - Page. 232 12-11-30 - 19-1-31 - 166 F'F.**

3 **Ibid - Page 245 - 167 F'F.**

4 **Page 72 Indian Round Table Conferance (12-11-30 - 19-1-31) - 166, F'F.**

மொத்த சிற்றரசுகள் எண்ணிக்கையில் பகுதியையும், சமஸ்தானங்களின் மொத்த மக்கட் தொகையில் பகுதியையும், எதிரொலிக்கத் தக்க முறையில் இந்திய நாடாளு மன்றத்தில், சுதேச மன்னர்களின் பிரதிநிதிகளின் எண்ணிக்கை இருத்தல் வேண்டும் என்று மூன்று வட்ட மேசை மாநாடுகளுக்குப் பின்பு முடிவாக்கப்பட்டது. ஆனால் சுதேச மன்னர்கள் கருதியபடி, அவர்கள் உட்கிடக்கை அமுலுக்கு வரவில்லை.

### இந்திய அரசுச் சட்டத்தில் இணையாத மன்னர்கள்

வட்ட மேசை மாநாடுகளின் முடிவுகளுக்கேற்ப, 1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டம் (Government of India Act-1935) உருவாயிற்று. அதில் தனி ஆட்சி கொண்ட சுதேச சமஸ்தானங்களையும், தன்னாட்சி கொண்ட மாகாணங்களையும் இணைத்து ஒரு கூட்டாட்சி அரசு உருவாக்கப்பட்டு இருந்தது. இந்திய நாடாளுமன்றத்தின் ஒரு பகுதியான மத்தியச் சட்ட மன்றத்தில் மொத்தம் 200 உறுப்பினர்கள் இடம் பெறுவர். அதில் சுதேச மன்னர்களுக்கு 125 இடங்கள் ஒதுக்கப்பட்டன. நாடாளு மன்றத்தின் இன்னொரு கூறான மாநிலங்கள் அவையில் மொத்தம் இருந்த 260 இடங்களில், 104 இடங்கள் மன்னர்களின் பிரதிநிதிகளுக்காக ஒதுக்கப்பட்டன.

இந்திய மாகாணங்களைச் சார்ந்த நாடாளு மன்ற உறுப்பினர்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப்படுவர். சுதேச மன்னர்களின் பிரநிதிகள், மன்னர்களாலேயே நியமனம் செய்யப்படுவர்.

இந்த அரசமைப்பின் மிக விந்தையான பகுதி என்னவெனில், மன்னர்கள் விரும்பினால் மட்டுமே அவர்கள் இந்தியக் கூட்டாட்சி அமைப்பில் சேரலாம். இன்றேல், அவர்களைக் கட்டாயப் படுத்திக் கூட்டமைப்பில் இணைக்க முடியாது. சுதேச மன்னர்கள் எப்பொழுது மத்தியக் கூட்டாட்சியில் சேர விரும்புகிறார்களோ, அப்போது அவர்கள் ஒவ்வொருவரிடமும் தனித் தனி உரிமைக் கட்டுப்பாடுகளைக் கொண்ட ''இணைப்பு ஒப்பந்தங்கள்'' (Instrument of Accession) மூலமாக இந்தியக் கூட்டாட்சியில் இணைத்துக் கொள்ளப்படுவர். அவர்களது தனியாட்சியின் இறைமையளவு (Degree of Sovereignty), பிரிட்டானியப் பேரரசுடன் முந்தைய நாட்களில் ஏற்பட்ட உடன்படிக்கைகளால் நிர்ணயிக்கப்படுகின்றன. எனவே அந்த உடன்

படிக்கைகளின் அடிப்படையில், சுதேச மன்னர்கள் இந்தியக் கூட்டாட்சியோடு சேருவதற்குத் தனித் தனி இணைப்பு ஒப்பந்தங்கள் வேண்டுமென்ற முறையும், 1935–ஆம் ஆண்டுச் சட்டத்தில் இடம் பெறலாயிற்று.

குறுநில மன்னர்களின் சுயநல நோக்கங்களை இச் சட்டம் நிறைவேற்றுததால், அவர்கள் மேற்சொன்ன ''விருப்பச் சட்ட வாசகத்தை''ப் பயன் படுத்தி இந்தியக் கூட்டாட்சியில் இறுதி வரை சேரவில்லை. மாநிலங்களுக்கு ஒரு வகையாகவும், மன்னர்களுக்கு ஒரு வகையாகவும் அரசு அமைப்பு முறை மாறுபட்டதால், இந்திய விடுதலை இயக்கத்தினரும் 1935–ஆம் ஆண்டுச் சட்டத்தின் மத்திய அமைப்புமுறையை ஏற்றுக் கொள்ளவில்லை. இதன் மொத்த விளைவாக அச் சட்டத்தின் மத்திய அரசமைப்பு முறை இறுதி வரை அமுலுக்கு வரவில்லை.

அணையும் சுடர்

10—4—1942-இல் இந்திய அரசர்கள், தங்கள் தனி நாட்டுப் பகுதிகளை (சுதேச சமஸ்தானங்களை) மட்டும் சேர்த்து, முழு உரிமையோடு கூடிய ஒரு தனிக் கூட்டாட்சி நாட்டை (**Union of Princely States**) இந்தியத் துணைக் கண்டத்திற்குள்ளேயே உருவாக்கிக் கொள்வதற்கு அனுமதி கோரக் கூடிய ஒரு தீர்மானத்தை இயற்றி, இந்தியப் பிரச்சனையைத் தீர்க்க வந்த ''கிரிப்ஸ் தூதுக்குழு'' (Cripps Mission) வின் முன்னிலையில் படைத்தனர். ஆனால் கிரிப்ஸ் தூதுக் குழுவினர் அதனை ஏற்றுக் கொள்ளவில்லை. இந்திய நாட்டிற்கு விடுதலை நல்கும் வழிவகைகளைக் கண்டறிய வந்த கிரிப்ஸ் குழுவின் முயற்சியும் தோல்வியைக் கண்டது. இருப்பினும் அத் தூதுக்குழு ஒன்றைத் தெளிவாக்கிற்று. ''இந்திய மாகாணங்களுக்கும், சுதேச மன்னர்களுக்கும், இந்திய எதிர்கால அரசமைப்பைப் பொறுத்தவற்றில் பிணக்குகள் ஏற்படின், ஆங்கில அரசு இந்திய மாகாணங்களின் அரசமைப்பு முறையையே ஏற்றுக் கொள்ளும்; மன்னர்கள் அதற்குத் தடையாய் இருப்பதைப் பேரரசு அனுமதிக்காது'' என, கிரிப்ஸ் குழு தெளிவு படுத்தினர். எனவே இந்தியக் கூட்டாட்சிக்குள்ளேயே இன்னொரு தனிக் கூட்டாட்சி நாட்டை உருவாக்கும் சுதேச மன்னர்களின் திட்டமும் பாழாயிற்று.

அதன் பின்னர், 1946-ஆம் ஆண்டில் இந்தியாவிற்குச் சுதந்திரம் வழங்கும் சாத்தியக் கூறுகளைக் கண்டறிய, ஆங்கில அரசால் அனுப்பப்பட்ட "பிரிட்டானிய அமைச்சரவைத் தூதுக் குழுவிடம் (British Cabinet Mission)", எதிர்காலத்தில் ஏற்பட இருக்கும் சுதந்திர இந்திய அரசு, சுதேச மன்னர்களின் தனி ஆட்சி உரிமைகளிலும் அதிகாரங்களிலும் தலையிடாமல் இருக்கும் அடிப்படையில் தான் சுதேச சமஸ்தானங்களும் இந்திய நாட்டுடன் இணைக்கப்பட வேண்டும். ஒருக்கால் இந்தியா விடுதலை பெற்றால் சிற்றரசுப் பகுதிகளின் மேலுள்ள பிரிட்டானிய மேல் ஆட்சியை, இந்திய சுதந்திர அரசிற்கு ஆங்கில அரசு மாற்றித் தரக்கூடாது" என்றும் வலியுறுத்தி 2—4—1946-ஆம் நாளில் போபால் நவாப்பும் மற்றவர்களும் கோரிக்கை விடுத்தனர்.

ஆனால் பிரிட்டானிய அமைச்சரவைக் குழு அதனை ஏற்றுக் கொள்ளவில்லை. "இந்தியாவிற்குச் சுதந்திரம் வழங்கும் நாளில், சுதேச மன்னர்களின் மேல், ஆங்கிலப் பேரரசு அதுவரை கொண்டிருந்த மேலாட்சி தானாகவே முடிவு பெற்றுவிடும். அம்மேலாண்மையைச் சுதந்திர இந்திய அரசிற்கு ஆங்கில அரசு மாற்றியும் தராது, தன்னிடத்தில் இருத்தியும் வைத்துக் கொள்ளாது" எனத் தெளிவாக்கினர். மேலும் "சுதேச மன்னர்களின் எதிர்கால அரசியல் உறவுகள் சுதந்திர இந்தியாவுடன் அவர்கள் வைத்துக் கொள்ளும் புதிய உறவுகளைப் பொருத்தே அமையும். இந்தியா சுதந்திரம் பெற்றால் பிரிட்டானியப் பழைய உறவுகளும் அத்துடன் மாய்ந்து போகும்" எனவும் விளக்கம் தந்தனர்.

எதிர்காலச் சுதந்திர இந்தியாவைப் பற்றிய ஆங்கிலப் பேரரசின் இப் புதுக்கொள்கையால் சுதேச மன்னர்களின் தனி ஆட்சி, ஆட்டம் கண்டது. தங்கள் சுயநல நோக்கங்களுக்காக இந்தியக் கூட்டாட்சியுடன் இணையக் கருதிய மன்னர்கள், பின்னர் பல சிறு நாடுகளை இந்திய மண்ணிற்குள் பாம்புப் புற்றுக்களைப் போல் தோற்றுவிக்க எண்ணங்கொண்டு அதற்குத் துணை நிற்க ஆங்கிலப் பேரரசையும் தேடி அழைத்தனர். ஆனால் ஆங்கில அரசு, அவர்களைக் கைவிட்டு விட்டது. பின்னர் இந்திய அரசமைப்புச் சபையில் அகண்ட இந்தியாவிற்கான அரசமைப்புச் சட்டத்தை உருவாக்கும் போது, தமது உரிமைகளை வேண்டிப் பெறுவதற்காக, சிற்றரசர்கள் சில பேர் அதிற் பங்கு பெற வேண்டியதாயிற்று. இதற்கான பேச்சு வார்த்தைகளை இந்திய அரசமைப்புக் குழுவிடம்

நடத்துவதற்கு மன்னர்களும் ஒரு தனிக் குழுவைத் தோற்றுவித்துக் கொண்டனர். அதன் பயனுகச் சில மன்னர்கள் அரசமைப்பவையிலும் சேர்ந்தனர்.

வல்லவன் வல்லபாய் வகுத்த வழி

1947-ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் 15-ஆம் நாளில் ஆங்கிலேயர்கள் இந்திய மண்ணை விட்டு அகன்று விடுவர் எனப் புரிந்து கொண்ட சுதேச மன்னர்களிற் சிலர், ஆங்கிலேய மேலாதிக்கம் நீங்கியதும் தங்கள் தனி நாடுகளும் முழு இறைமை கொண்ட சுதந்திர நாடுகளாக ஆகிவிடும் என அறிவித்தனர். 1947-ஆம் ஆண்டு சூன் திங்களில் இந்தியத் துணைக்கண்டம், பல துண்டுகளாகச் சிதறிப் போகும் நிலையிலேயே இருந்தது. 11—6—1947-இல் போபால் நவாப், தனது (சுதேச) நாடு விடுதலை பெற்றது என அறிவித்தார். சி. பி. இராமசாமி அய்யர் மூலமாகத் திருவாங்கூர் – கொச்சியும் தனி நாடு ஆகும் என அறிவிக்கப்பட்டது. ஹைதராபாத் நிஜாமும், சுனுகத்தும் (Junakath) அதைத் தொடர்ந்தனர்.

இரும்பு மனிதன் வல்லபாய் பட்டேலின் கீழ், இராசதந்திரி வி. பி. மேனனைச் செயலாளராகக் கொண்டு 'சுதேச நாடுகளின் அமைச்சகம்' ஒன்று தனியாக நிறுவப்பட்டது. அரசுச் செயலாளர், திரு. மேனன் ஒரு திட்டத்தை உருவாக்கினர். வெளி நாட்டுக் கொள்கை, பாதுகாப்பு, செய்தித் தொடர்புகள் ஆகியவற்றைத் தவிர்த்த மற்றைய அதிகாரங்கள் யாவும் சுதேச சமஸ்தானங்களின் ஆளுகையில் இருக்கும்; மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்களைக் கொண்ட சபைகள் மூலமாகச் சுதேச சமஸ்தானங்களில் மன்னராட்சி இயங்கலாம் என்று மன்னர்களுக்குத் தூண்டி விட்டார். அதற்கு அரசுப் பிரதிநிதி மௌண்ட் பேட்டனும் துணை நின்ருர். அது பெரும் பயனை விளைவித்தது.

பட்டேலின் கூர்த்த மதியும், வியத்தகு செயலாற்றும் திறமையும், மேனனின் நிர்வாக அனுபவமும், மௌண்ட் பேட்டனின் கவர்ச்சியான சாகசமும், சுதேச மன்னர்களின் கையறு நிலையும், இந்திய சுதந்திரத்தின் மலர்ச்சியும் ஒருங்கிணைந்ததால், காஷ்மீர், ஹைதராபாத், சுனகாத் ஆகியவை தவிர மற்ற அனைத்து மன்னர் பகுதிகளும் இந்திய அரசுடன்

இணைக்கப்பட்டன. சில மணித்துளிகளில் 'சுனகத்' இந்தியாவுடன் இணைக்கப் பட்டது. மூன்று நாட்களில் காவல்துறை நடவடிக்கையால் ஐதராபாத் அணைத்துக் கொள்ளப்பட்டது. இந்திய நாட்டுடன் காசுமீரமும் சட்டநிலையில் (De Jure) இணைக்கப்பட்டது. ஆனால் பாகிஸ்தானத்தின் படையெடுப்பால் இந்திய - காஷ்மீர் இணைப்பு நிகழ்வு நிலையில் (De Facto) உருவாக வில்லை. சுதந்திர இந்தியாவின் தீராத் தலைவலியாகக் காஷ்மீரத்தின் ஒரு பகுதி இந்தியாவுடன் இணைந்தது. இவ்வகையில், உலக வரலாற்றிலேயே நடந்திராத பெரு நிகழ்ச்சியாக ''இந்தியத் தேசிய ஒற்றுமை'' மிக அமைதியுடனும் குருதி சிந்தாமலும் வல்லபாய் பட்டேல் அவர்களால் உருவாக்கப்பட்டு விட்டது.

ஆனால் கொடுக்கப்பட்ட வாக்குறுதிகளுக்கு மாறாக, மன்னர் பகுதிகளுக்குத் தன்னாட்சி அளிக்கப்பட வில்லை. சில மானியங்களுடனும் விருதுகளுடனும் இந்திய மன்னர்கள் அமைதியடைய வேண்டியதாயிற்று. மன்னர்களின் ஆட்சி முறை இந்தியத் துணைக் கண்டத்திலிருந்து பூண்டோடு அழிக்கப்பட்டது. 21—2—1948–இல் இந்திய அரசமைப்பு வரைவு மசோதா [நகல் மசோதா] அரசமைப்புச் சபையில் தாக்கல் செய்யப்படும் முன்பே, 562 மன்னர் பகுதிகளும், 19 பிரிவுகளாக வகைப்படுத்தப்பட்டு, சுதந்திர இந்திய அரசுப் பகுதிகளாக ஆக்கப்பட்டு விட்டன. மன்னர்களின் உள்நாட்டு நிர்வாகமும், முழுமையாக ஒழிக்கப்பட்டன. 1949–ஆம் ஆண்டின் இறுதியில் அரசமைப்புச் சட்டம் இறுதி வடிவம் எடுத்தபோது மன்னர் பகுதிகள் எல்லாம் எட்டு 'B' பிரிவு மாநிலங்கள் ஆகவும், மைய நேரடி ஆட்சிக்குட்பட்ட ஒன்பது 'C' பிரிவு மாநிலங்களாகவும் வகைப்படுத்தப்பட்டு இந்திய அரசமைப்புச் சட்டத்தில் இடம் பெறலாயிற்று.

மொத்தம் இரண்டு கோடி மக்கள் தொகையைக் கொண்ட 216 மன்னர் நிலப்பகுதிகள் அருகிலிருக்கும் 'A' பிரிவு மாநிலங்களுடன் இரண்டறக் கலந்து விட்டன. ¾ கோடி மக்கள் தொகையைக் கொண்ட 61 மன்னர் நிலப்பகுதிகள் மைய அரசின் நேரடி ஆட்சிக்குட்பட்ட 'C' பிரிவு மாநிலங்களுடன் ஐக்கியமாகி விட்டன. மொத்தம் 3½ கோடி மக்கள் தொகையைக் கொண்ட 275 மன்னர் நிலப் பகுதிகள் புதிதாக உருவாக்கப்பட்ட 'B' பிரிவு மாநிலங்களான ராஜஸ்தான், மத்திய

பாரத், திருவாங்கூர் கொச்சி, சௌராஷ்டிரா, பெப்சு, ஐதராபாத், ஜம்மு – காஷ்மீர் மற்றும் மைசூர் ஆகியவற்றுடன் இணைக்கப்பட்டு விட்டன.

பின்னர் உருவாக்கப்பட்ட மாநிலங்களின் சீரமைப்புக் குழுவின் பரிந்துரைகளால் இவை யெல்லாம் மற்ற மாநிலங்களுடன் சேர்ந்து மொழிவாரி அடிப்படையில், தனித்தனி மாநிலங்கள் ஆகி விட்டன. சுதேச மன்னர்களுக்கு அளிக்கப்பட்ட மன்னர் மானியங்களும் சலுகைகளும் இந்திய நாடாளு மன்றத்தால் அண்மையில் பறிக்கப்பட்டு விட்டன. பழைய அரச வம்சங்களையும், ''கட்டுக் கதையோ'' என வியக்கத்தக்க பல பழங்கதை வரலாறுகளையும் கொண்ட இந்திய சுதேச மன்னர்களின் ஆட்சி, வல்லவன் வல்லபாய் படேல் அவர்கள் வகுத்த வழியினுல் இறுதியில் வெறும் வரலாருகி விட்டது.

## III
## சுயாட்சியில் சுதேச மன்னர்களின் பங்கு

விடுதலை வரலாற்றுடன் குறுநில மன்னர்களின் வரலாறும், ஒன்றுடன் ஒன்று பின்னிப் பிணையாமல், முரண்பட்ட இருவேறு முனைகளாகவே இருக்கக் கண்டோம். இந்திய மக்களின் அரசியல் சுதந்திரத்தை வெள்ளையனிடமிருந்து மெல்ல மெல்லப் பெறுவதற்கு, விடுதலை இயக்கம் வழிவகை கண்ட போதெல்லாம், ஆங்கிலப் பேரரசின் ஆதிக்கம் இந்திய மண்ணில் உறுதியாக நிலை பெற வேண்டும் என இந்தியச் சுதேச மன்னர்கள் பணியாற்றினர். ஆனுல், அதே நேரத்தில், தங்களைக் கட்டுப் படுத்தும் ஆங்கில மேலாட்சியும் ஒழிய வேண்டும் எனவும் எண்ணினர். இறுதியில் இந்திய விடுதலை இயக்கம் வெற்றி பெற்று, மன்னர் ஆட்சியை முழுமையாக அழித்து விட்டது.

ஆனுல் முரண்பட்ட இவை இரண்டும் ஓர் கால கட்டத்தில் ஒரு முனையில் நின்றன. கூட்டாட்சி முறை என்ற தத்துவத்தின் அடிப்படையில் ஒருங்கிணைக்கப் பட்டிருக்கும். அவ்வகை இணைப்பினையே 1935–ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டமும் வற்புறுத்திற்று. இந்தியாவையும் அது கூட்டாட்சியாக உருவாக்கிற்று. ஆனுல் அதற்கு முற்றிலும் மாருகத் தங்கள் சொந்த ஆட்சியையே இந்திய மன்னர்கள் நிலை நிறுத்திக்

கொள்ளப்பேராசைப்பட்டதன் விளைவாக அச்சட்டம் உருவாக்கிய கூட்டாட்சி மத்திய அரசில்—மன்னர்கள் சேராமல்-இறுதியில் அவர்கள் தங்கள் அழிவைத் தழுவிக் கொண்டனர்.

எனினும், நமது இந்திய விடுதலை வரலாற்றை ஆழ்ந்து நோக்கினால், ''கூட்டாட்சித் தத்துவம்'', இந்திய மண்ணில் சிறந்து வளம் பெறுவதற்கு, சுதேச மன்னர்களும் மூலக் கருவியாக அமைந்தார்கள் என்ற பேருண்மை தெரிய வரும். ஆங்கில ஆட்சிக்குட்பட்ட மாகாணங்களும், மன்னர்கள் பகுதிகளும் தனித்தனி ஆட்சி அமைப்பின் கீழ் அமைந்து விட்ட காரணத்தால் ஒன்றின் விடுதலை உணர்வு மற்றொன்றைப் பாதிக்கவில்லை. ஆனால் அனைத்திந்திய மக்களின் சுதந்திரமே எல்லாருடைய நோக்கமுமாகும். மாகாணங்களும், சமஸ்தானங்களும் ஒன்றோடொன்று இணைந்திருக்க வேண்டிய சூழ்நிலை முழு இந்திய சுதந்திரத்திற்கு இன்றியமையாததாயிற்று எனவே, கூட்டாட்சித் தத்துவமே, இவ்விரு வேறுபட்ட பகுதிகளையும் அரசியலமைப்பில் இணைந்ததற்குச் சாலச் சிறந்த ஓர் முறையாயிற்று.

இவ்விரு முனைகளையும் இணைத்து ஓர் இந்தியக் கூட்டாட்சியை உள்ளபடியே உருவாக்க, நாட்டின் பொது நலனுக்கு உகந்த மிகக் குறைந்த சில அதிகாரங்களை மட்டும் கொண்ட ஒரு மத்திய அரசு அமைக்கப்பட வேண்டியதாயிற்று. வேறு சொற்களில் அதனைக் கூற வேண்டுமெனில் மன்னர்கள் இணைந்த இந்தியக் கூட்டாட்சியில் அனைத்திந்திய நலன்களுக்குத் தேவையான சில அதிகாரங்கள் நீங்கலாக மற்ற அரசியல், சமுதாய, பொருளாதார சட்டமாக்கம், நிதி, நிர்வாக அதிகாரங்கள் முழுவதையும் மாநிலங்களே பெற்றாக வேண்டுமென்ற கட்டாயச் சூழ்நிலை இந்திய அரசியல் வரலாற்றில் ஒரு கட்டத்தில் உருவாயிற்று. ஆனால் மன்னர்கள் செய்த தவறால் அது மலர வில்லை.

கோனாட்சி கொண்ட மன்னர்கள் ஒருகால் கட்டத்தில் கூட்டாட்சி இயக்கத்தை இயங்க வைத்த காரணத்தால், அவர்களும் மாநில சுயாட்சி வளர்ச்சியில் மறைமுகமாகப் பங்கேற்றுக் கொண்டவர்களாவர். ஒருக்கால் சுதேச மன்னர்கள் இந் நாட்டில் இல்லாமலேயே போயிருந்தால், மாநில சுயாட்சியை வழங்கத் தக்க அரசியல் அழுத்தங்கள், விடுதலை இயக்கத்தில் இல்லாமலேயே போயிருந்திருக்கும் அன்றோ?

ஒருமுக ஆட்சியையே பேணும் மிகப் பெரிய மத்திய மயமாக்கப்பட்ட அரசியல் கட்சியான காங்கிரஸ் கட்சியே விடுதலை இயக்கத்தில் பெரும் பங்கேற்றிருந்ததால், சுதேச மன்னர்களின் தனியாட்சிக் கோரிக்கை, வரலாற்றின் ஒரு கட்டத்தில் வலுப் பெற்றிருக்காவிடில் நமது தேசியத் தலைவர்கள் இந்தியத் துணைக் கண்டத்தை ஒரு கூட்டாட்சிச் சாயலைக் கொண்ட நாடாக உருவாக்காமல் ஒருமுக வல்லாட்சியைக் கொண்டதொரு ஒற்றையாட்சி நாடாக அமைத்திருப்பார்கள் என்ற பேருண்மை இங்கு ஆழ்ந்து நோக்குதற்குரிய தாகும்.

காங்கிரஸ் கட்சி பல கால கட்டங்களிலும், தான் கொடுத்த பல்வேறு வாக்குறுதிகளையும் மீறி அரசியல் சூழ்நிலையைத் தனக்கு வாய்ப்பாக்கிக் கொண்டு, 90 ஆண்டு காலமாக மெல்ல மெல்ல வளர்ச்சி பெற்ற மாநில சுயாட்சியை முழுக்க முழுக்க மாற்றியமைத்து, ஒரு வன்மை மிகு மைய அரசைப் படைத்து விட்டதெனில், இந்தியச் சுதேச மன்னர்களின் அரசியல் அழுத்தங்களும் ஒருக்கால் இல்லாமல் போயிருந்தால் என்றென்றும் நிலைத்திருக்கத் தக்க ஒருமுக வல்லாட்சியையே அவர்கள் படைத்திருப்பார்கள் என்பது திண்ணம். இந்த இயலின் தலைப்பில் தரப்பட்டிருக்கும் பேராசிரியர். பெர்சிவல் ஸ்பியர் (Prof. PERCIVAL SPHEAR) அவர்களின் கருத்துரையும் அதனைத்தான் நமக்கு எடுத்துரைக்கின்றது.



# 8. மாநில சுயாட்சிக் கொள்கையின் வளர்ச்சி

## — மொழிவாரி மாநிலங்களின் பங்கு —

"மாநில மொழிகள் செழித்து வளர வேண்டுமெனில் மொழிவாரியாக மாநிலங்கள் மாற்றியமைக்கப்பட வேண்டியது மிக மிக இன்றியமையாததாகும். இந்தியாவின் தேசிய மொழியாக-பொது மொழியாக-இந்துஸ்தானி இருக்க வேண்டும். ஆனுல் இந்துஸ் தானி மாநில மொழிகளின் இடத்தைக் கைப்பற்றிக் கொள்ளக் கூடாது. மாகாணங்களில் போதனு மொழியாகவும், இந்துஸ்தானி இருக்க முடியாது. அப் பொதுமொழி, அனைத்திந்திய மட்டத்தில், மா நிலங்கள் ஒன்றை யொன்று புரிந்து கொள்ளக்கூடிய அளவிற்கு மட்டும் உயிரோட்டமுள்ள தொடர்பை உருவாக்கப் பணி புரிய வேண்டும். தமிழர்களென் றும், மராத்தியர்களென்றும், குசராத்தியர்களென்றும் (மாகாணங்களைப்பற்றி) வெளியுலகிற்குத் தெரியாது. இந்தியர்கள் என்று மட்டும் தான் வெளியுலகத்திற் குத் தெரியும். எனவே, பிரிவு மனப்பான்மையை அறவே விடுத்து, (நாம்) இந்தியர்கள் என உணர்ந்து, இந்தியர்களாகவே செயல்பட வேண்டும். இந்தக் கருத்திற்கு முதன்மையைத் தந்த பின்னர் செய்யப் படும் மொழிவாரி மாநிலகளின் புனரமைப்பே கல்விக்கும், வர்த்தகத்திற்கும், உயர்வினை அளிக்கும்."[1]

— மகாத்மா காந்தி அடிகள்.

## I

ஐரோப்பாக் கண்டத்திலுள்ள பல நாடுகளில் ரஷ்யாவை யும் யூகோஸ்லேவியாவையும் தவிர, மொழி அடிப்படையில் தனி அரசியல் தகுதியைப் பெறுவதற்குரிய ஒரே மொழி பேசும் குறிப்பிட்ட மக்கள் சமுதாயங்களைக் கொண்ட தனி

1 "*Delhi Diary*" (25-1-1948), P. 37

நாடுகள் அதிகமாக இல்லை. அப்படியிருந்தும் சமுதாய வாழ்க்கையின் மிக முக்கியமான மூலக் கூருகவும் தனித்ததொரு தேசிய உணர்வு மற்றும் உளப் பாங்கினை உருவாக்க வல்லதாகவும் ''தாய் மொழி'' அமைகிறது என்பதை ஐரோப்பிய வரலாறு தெளிவாக எடுத்துக் காட்டுகிறது. மேற்கு ஐரோப்பா மற்றும் மத்திய ஐரோப்பாவின் வரலாறுகளைப் பற்றிக் குறிப்பிடுகையில் பேராசிரியர் டாயின்பீ அவர்கள்,

> ''வளர்ந்து வரும் நாட்டுப்பற்றின் (தேசபக்தி) விழிப்புணர்ச்சி, ஒரு நாட்டின் தொன்று தொட்ட எல்லைகள் என்ற அடிப்படையிலோ அல்லது அவ்வப்போது உருவாகும் பூகோளத் தொடர்புகளின் அடிப்படையிலோ ஏற்படுவதில்லை. ஆனுல் அது முழுக்க முழுக்கத் தாய் மொழியின் அடிப்படையிலேயே ஏற்படுகின்றது.'' 2

எனக் கூறுகின்றுர்.

மேலும் இரு மொழிகள் அல்லது பல மொழிகள் பேசும் பகுதிகளைக் கொண்ட நாடுகளில், பிரிவினை இயக்கங்கள் தோன்றித் தீவிர மடைந்து, அப்பகுதிகள் மொழியடிப்படையில் தனி நாடுகளாக்கப்பட வேண்டும் என்ற போராட்டங்கள் கூட, பல ஐரோப்பிய நாடுகளில் நடைபெற்றுள்ளன. அதற்குப் பெல்ஜியமும் ஸ்பெயினும் குறிப்பிடத் தக்க சான்றுகள்.

கேட்லான் (Catalone) பிரிவினை மிக வன்மை கொண்ட ஓர் இயக்கமாக உருவெடுத்ததை ஸ்பெயின் வரலாறு குறிப்பிடுகிறது.

அதைப் போன்றே, வட அமெரிக்காவில் கனடா நாட்டின் பிரஞ்சு மொழி பேசும் க்விபெக் (Quibec) மாநிலமும், பிரிவினைச் சக்திகளை உருவாக்கித் தீவிரமான மொழி, இன உணர்வுகளின் அடிப்படையில் தனி உரிமை நாட்டைக் கோரும் பான்மையையும் தற்போதைய வரலாறு நமக்கு நினைவு படுத்துகிறது. எனவே, மொழி, இன அடிப்படையில் தன்னுரிமை வேண்டும் எனக் கோருகிற மாநிலங்களையும், அதில் சுயாட்சி அரசுகள் உருவாக வேண்டும் என்ற தீவிர இயக்கங்களையும் ''குறுகிய கண்ணேட்டம் கொண்டவை'' எனக் கூறி ஒதுக்கி வைக்க முனைவதும், அதற்குரிய அரசியல்

2 Ibid, Note-1 page. 11, of This Book

பரிகாரங்களைக் காணுமல் முழுமையாகப் புறக்கணிப்பதும், பின்னர் நாட்டுப் பிரிவினையையே தோற்றுவித்து விடும். பல மொழிகளையும் இனங்களையும் கொண்ட இந்திய நாடும் இதற்கு விதிவிலக் கல்ல.

### உயிரும் உடலும்

''மொழி வாரியாக மாநிலங்கள் உருவாக்கப்பட வேண்டும்'' என்ற வலிமையான அரசியல் பேருணர்வு, இந்தியத் துணைக் கண்டத்திலும் ஏறக்குறைய ஒரு நூற்றாண்டு காலத்திற்கு மேல் விரவி நின்றிருந்தது. வெள்ளையனிடம் இந்திய நாடு அடிமைப்பட்டிருந்த காலத்திலேயே அந்தந்த மொழி பேசும் பகுதிகளில் மொழித் தேசிய உணர்வுகள் தீவிரத்தைப் பெற்றிருந்தன. ''முழுமையான சுயாட்சியைக் கொண்ட மாநிலங்களை இணைக்கும் ஓர் கூட்டாட்சி அமைப்புத்தான் இந்தியத் துணைக் கண்டத்திற்கு ஏற்றதொரு அரசமைப்பு'' என்ற மூலக் கொள்கை வளர வளர, அந்தந்த மொழி சார்ந்த மக்களின் தனித் தன்மைகளுக் கேற்ற வகையிலும், நிர்வாக நலனுக்கு உறுதுணை யாயிருக்கும் முறையிலும் இந்திய மாநிலங்கள் மொழி அடிப்படையில் பிரிக்கப்பட வேண்டுமென்ற கோரிக்கையும் கூடவே வலுப் பெற்று வளர்ந்து வந்துள்ளது. எதிர்கால இந்தியக் கூட்டாட்சியில் ஒரே சீரான நிர்வாகப் பகுதிகளைப் படைக்க வேண்டுமென்ற இயற்கையான கோரிக்கையே மொழி வாரியாக மாநிலங்கள் பிரித்து வகுக்கப்பட வேண்டுமென்ற கோரிக்கையாகும்.

தவிரவும், மெல்ல மெல்லக் குடியரசு முறைகள் மாநிலங்களில் வளர்ச்சி பெற்றதால், மாநிலங்களில் தனித் தன்மைகளும் வளரலாயிற்று. மொழி சார்ந்த மக்கள் தாய் மொழியின் அடிப்படையில் தங்களுக் கென்று தனித் தாயகங்களைப் புனைந்து கொள்வதற்கும் அதன் வழியில், தங்கள் பண்பாட்டையும், மரபுகளையும் பேணிக் காத்துக் கொள்வதற்குமான முயற்சியில் ஈடுபட்டனர். மொழிவாரி மாநிலக் கோரிக்கை, அம் மக்களின் சுயநலத்தை மட்டும் நோக்கமாகக் கொண்டதல்ல. மொழி வாரி மக்களுடைய பழைய பண்பாட்டின் புதிய வேகத்தையும் அக்கோரிக்கை வெளிப்படுத்தலாயிற்று. அது மட்டுமன்றி, இந்தியாவில் பல திறப்பட்ட மொழி சார்ந்த மக்கள், அரசியல்

மற்றும் பொருளாதாரத் துறைகளில் சமநீதிகளைப் பெறுவதற்காக, ''தத்தம் தாயகங்களுக்குரிய தன்னாட்சியை அமைத்துக் கொள்ள வேண்டும்'' என்ற பரந்த கண்ணோட்டத்தையும் மொழிவாரி மாநிலக் கோரிக்கைகள் தெற்றெனக் காட்டி நின்றன.

ஒரு மொழி பேசும் மக்களை உள்ளடக்கிய மொழிவாரி மாநிலத்தில் தான் அதன் மக்களுக்கும் அரசிற்கும் இடையில் நல்லிணக்கமும் பரஸ்பர அக்கரையும், சுமுகமான அரசியல் தொடர்புகளும் நிலவ முடியும் என்பதை பண்டித நேரு அவர்களால் நியமிக்கப்பட்ட ''மாநிலச் சீரமைப்புக் குழுவும்'' (States Reorganisation Commission) சுட்டிக் காட்டுகின்றது.

மொழிவாரியாகப் பிரிக்கப்பட்ட மாநிலங்களில், அதற்குரிய மொழித் தேசிய உணர்வு (தேசப் பற்று) வளர்வதும், அதனால் அம் மாநிலங்களின் ஆட்சி அமைப்பு சிறப்புறுவதும் இயற்கையின் நெறியாகும். ஆகவே மொழியும் மொழி சார்ந்த மாநிலங்களும் அவற்றின் இயக்க சக்தியான அம் மொழி பேசும் மக்களும் பல துறைகளிலும் பேணிக் காக்கப்பட வேண்டுமெனில், அம் மாநில அரசிற்குத் தன்னாட்சியுரிமைகளும் அதிகாரங்களும் இயற்கையாகவே இன்றியமையாத் தேவைகளாக ஆகின்றன. எனவே ''மாநில சுயாட்சி'' ஒரு மொழி பேசும் மக்களின் உயிரெனில், அதன் உடல் மொழிவாரி மாநிலமாகும்.

இந்திய மாநிலங்களை, மொழியடிப்படையில் திருத்தி அமைக்க வேண்டுமென்ற இந்திய மக்களின் நெடு நாளைய கோரிக்கைகளும் அவற்றை அடைவதற்காக நடத்தப்பட்ட பல போராட்டங்களும், பெற்ற வெற்றிகளும் மாநில சுயாட்சியின் வளர்ச்சிக்கு அடித்தளமாய் அமைந்தன. ஒவ்வொரு கால கட்டத்திலும் மொழிவாரி மாநிலக் கோரிக்கைகள் எவ்வகையில் மாநில சுயாட்சிக் கொள்கையை ஓங்கி வளரச் செய்தது என்பதை இவண் ஆய்வோம்.

## கற்றுறையில் திராட்சை

ஆங்கிலேயர், இந்தியத் துணைக் கண்டத்தின் பல மாகாணங்களை மொழி அடிப்படையில் பிரிக்க வில்லை. தனது பேரரசின் எல்லைகளை விரிவு படுத்திச் செல்வது தான் அவர்களின் நோக்கமாய் இருந்ததே தவிர, அவர்களால் கையகப்

படுத்தப்பட்ட இந்தியப் பகுதிகளின் எல்லைக் கோடுகள், குறிப்பிட்ட ஒரு கொள்கையின் அடிப்படையில் வகுக்கப்பட வில்லை. அதற்கு மாறாக வரலாற்று விபத்துக்களும் ஆங்கில அரசின் நிர்வாகத் தேவைகளும், பாதுகாப்பு நடவடிக்கை களுமே அன்றைய நாளில் மாகாண எல்லைகளை உருவாக்கின.

ஆங்கிலப் பேரரசு, ஓர் ஆதிபத்திய அரசாக இருந்ததி னாலும், அன்றைய மாகாணங்களின் நிர்வாகம் மைய அரசின் முகவர்களைப் போல் இயங்கியதாலும் மொழிவாரி மாகாணங் கள் உருவாக்கப்பட வேண்டுமென்ற இயக்கங்கள் தொடக்கத் தில் பெரிதும் வளர்ச்சி அடையவில்லை.

ஆதியில், ஆங்கில ஆட்சியிலிருந்த இந்தியப் பகுதிகள் யாவும் சென்னை, பம்பாய், வங்காளம் ஆகிய மூன்றே மூன்று தலைமாகாணங்களுக்குள் அடங்கி இருந்தன. ஆனால் ஒவ்வொரு தலை மாகாணமும், பல மொழி பேசும் நிலைப் பகுதிகளை உள்ளடக்கி யிருந்தன. வங்கத் தலைமாகாணம் இன்றைய வங் காளம், பீகார், ஒரிசா ஆகிய பல மொழிப் பகுதிகளைக் கொண் டிருந்தது. பின்னர், உத்திரப் பிரதேசமும், அஸ்ஸாமும் கூட அத் துடன் இணைக்கப்பட்டன. 1874-ஆம் ஆண்டில் அசாம் அத னிடமிருந்து நிர்வாக வசதிக்காகப் பிரிக்கப்பட்டது. கிழக்கு வங்காளம் என்ற பெரும்பான்மையான முஸ்லீம்களைக் கொண்ட பகுதி மீதியுள்ள வங்கத் தலைமாகாணத்திலிருந்து வகுப்புவாத அடிப்படையில் பிரிக்கப்பட்டது. வடமேற்கு எல்லைப்புற மாகாணம் 1849-ஆம் ஆண்டிலிருந்து பஞ்சாப்பின் ஒரு பகுதியா யிருந் தது. ஆனால் அது 1901-ஆம் ஆண்டில் பஞ்சாப்பிலிருந்து பிரிக்கப்பட்டுத் தனி மாகாணம் ஆயிற்று. சிந்து மொழி பேசும் சிந்துப் பகுதியும் ஒரு காலத்தில் பம்பாய் மாகாணத்துடன் இருந்தது. பின்னர், அரசியல் மற்றும் வகுப்புவாதக் கண்ணோட் டத்தில் 1936-ஆம் ஆண்டில் சிந்து, தனி மாகாணமாயிற்று. ஒரிய மொழி பேசும் ஒரிசாப் பகுதி 1936-இல் தனி மாகாணம் ஆக் கப்பட்டது, சென்னைத் தலைமாகாணம் 1953-ஆம் ஆண்டு வரை யும் 9 தெலுங்கு பேசும் மாவட்டங்களையும் திருவாங்கூர் கொச்சி அரசுப் பகுதி நீங்கலான மற்ற கேரளப்பகுதியையும் கர்நாடத் தின் சில பகுதிகளையும் தமிழகத்தையும் உள்ளடக்கிக் கொண் டிருந்தது. மொழிவாரி மாநிலங்கள் அமைக்கப்பட்ட பின்பு, தமிழகம் தனி மாநிலம் ஆயிற்று,

19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில், இந்திய மொழிகளின் சிறப்பான வளர்ச்சிக் காலம் தொடங்கியது. அமைதியான மொழி வளர்ப்பியக்கங்களால் மொழி சார்ந்த மக்களிடையே பல இலக்கியங்களும் மொழி ஆய்வுகளும் வளரலாயின. மொழி யுணர்ச்சியால் ஒரு மொழி பேசும் மக்களை, மொழியுணர்வு ஒற்றுமைப்படுத்திற்று. அவர்களிடம் தனி இனத்தைச் சார்ந்த வர்கள் என்ற விழிப்புணர்ச்சியும் தோன்றிற்று. மொழி ஒருமைப்பாட்டுணர்ச்சியால் உந்தப்பட்ட ஒவ்வொரு மொழி சார்ந்த நிலப்பகுதி மக்களும் அரசியல் — நிர்வாகம் — சமூகத் துறைகளில் ஒரே சீரான வளர்ச்சியைப் பெற வேண்டும் என்ற நோக்கத்துடன், ''இந்திய மாகாணங்கள் மொழிவாரியாகச் சீரமைக்கப்பட வேண்டும்''என்ற மாநிலப் பற்றைத் தீவிரமாக வளர்த்து வந்தனர்.

25-8-1911-ஆம் நாளில் ''வைஸ்ராய் ஆர்டிஞ்சு'' அவர் களால் வெளியிடப்பட்ட அரசுக் குறிப்பாணையின் ''முழு சுயாட்சி கொண்ட மாநிலங்கள்'' என்ற கொள்கையால் மொழி வாரி மாநிலப் பற்று இன்னும் ஊக்கத்தைப் பெற்றது. பின்னர் உருவான "1919-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தில்" மாகாணங்களுக் களிக்கப்பட்ட குறைவான அதிகாரங்களும் கூட மாகாணப் பற்றை மேலும் வளர்க்கத் தக்க ஒரு தூண்டு கோலாயமைந்தது.

1918-ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்களில், ஆந்திரத்தைச் சார்ந்த உறுப்பினரான திரு. பி. என். சர்மா அவர்கள், ''மொழி வாரி அடிப்படையில் இந்திய மாகாணங்கள் சீரமைக்கப்பட வேண்டும்'' என்ற தீர்மானத்தை இந்திய மத்தியச் சட்டமன்றத்தில் கொண்டு வந்தார். இந்திய அரசியல் ஒற்றுமைக்கு அத்தீர் மானம் ஊறு விளைவிக்கும் என்ற உட்கருத்தில், திரு. தேஜ் பகதூர் சாப்ருவும், ஜனாப். ஜின்னாவும், திரு. எஸ். என். பானர்ஜியும், திரு. வி. எஸ். சீனிவாச சாஸ்திரியும் சேர்ந்து அத்தீர்மானத்தைத் தோற்கடித்தனர். ஆனால் இரண்டாண்டு கள் கழித்து 20—2—1920-ஆம் நாளில் திரு. சச்சிதானந் சின்கா அவர்கள் 'ஒரிய மொழி பேசும் மக்களை' ஒரு தனி மாநிலத்திற்குள் இணைப்பதற்காக, "குழு" ஒன்று அமைக்கப் படவேண்டுமென்ற தீர்மானத்தை மத்தியச் சட்டமன்றத்தில் கொண்டு வந்தபோது, அதனை திரு. எஸ். என். பானர்ஜி

அவர்கள் உடனே ஏற்றுக் கொண்டார், மேலும் ஒரிய மொழி பேசும் ஒரிய மக்களுக்குத் தனி ஒரு மாநிலமும் உடனே அளிக்கப்பட வேண்டும் என்ற தீர்மானத்தையும் மத்தியச் சட்ட மன்றத்தில் கொண்டுவர வேண்டுமென்றும் அவர் யோசனை கூறினர்.

இங்கிலாந்தின் ''சமுதாயச் சங்கமான வட்ட மேசைக் குழு'' (Round Table Group) உலக நாடுகள் பலவற்றிலும் கிளைகளைக் கொண்டியங்கி வந்தது. அக்குழுவைச் சார்ந்த அறிஞர் திரு. லைனல்கர்டிஸ் (LIONAL CURTIS) அவர்கள் இந்தியாவின் அரசியல் பிரச்சனைகளை நேரில் கண்டறிவதற்காக இங்கு வந்தார். அவர் சில சீரிய கருத்துக்களையும் கொள்கைகளையும் ஆங்கிலப் பேரரசிற்கு வழங்கினர்.

அவர் இந்திய மாகாணங்களை மொழிவாரியாகப் பிரிக்கப்பட வேண்டிய அவசியத்தை வலியுறுத்தினர். அவரது அரிய யோசனைகள், ஆங்கிலப் பேரரசின் எதிர்கால மாகாணச் சீரமைப்புக் கொள்கைக்கு ஒரு மூலக் கொள்கையாயிற்று. மேலும், இந்திய மக்களின் உள்ளார்ந்த மொழிவழி மாகாணப்பற்றையும் அவரது கருத்துக்கள் எதிரொலித்தன.

> ''அன்றிருந்த இந்திய மாகாணங்கள் இங்கிலாந்திலிருந்த ஆங்கிலத் துரைத்தனத்தினரால் இயக்கப்பட்ட மத்திய அரசின் வல்லாட்சியால் செயற்கையாக உருவாக்கப்பட்டவை. குடியரசு அமைப்பு முறையால், மாகாண மக்களின் தன்னாட்சி உள்ளபடியே பயன் தரும் வகையில் வளர வேண்டுமெனில் அம்மாகாணங்கள், மொழி, இன, மத அடிப்படையில் பகுக்கப்பட வேண்டும்.''[3]

எனவும் அவரது கருத்துக்கள் தெளிவாக்கின.

மேலும் ''பல்வகை மதங்கள், மொழிகள், மற்றும் பண்பாடுகள் ஆகியவைகளைக் கொண்ட மிகப் பெரிய பரப்பெல்லைகளைப் பெற்ற மாகாணங்களை நிர்வகிக்கும் மாகாண அரசுகள், ஒரு தொல்லை மிகுந்த ஒருமைப் பாட்டையே அம்மக்கள்

---

3 Mr. Lional Curtis, ''Letters To The People of India on Responsible Government'' [1918], P. 68

மேல் திணிக்கின்றன. அதனைத் தடுத்திடல் வேண்டும். அவ்வகை பல மொழி பேசும் மாகாணங்களைச் சிறுசிறு தன்னாட்சி உறுப்புக்களாகப் பகுக்க வேண்டும்.''4

என்ற சீரிய கருத்தையும் திரு. லைனல் கர்டிஸ் அவர்கள் வெளியிட்டார்.

பிரிட்டானிய மேலாட்சியைக் கொண்ட இந்திய அரசை, ஒரு மக்களரசாக மாற்றுவதற்குரிய வழிவகைகளை லைனல் கர்ட்டிஸ் அவர்கள் கூறும்போது,

''மராத்தியத்தைப் போல சிந்தி மொழி பேசும் மக்களையும் கன்னட மொழி பேசுபவர்களையும் ஒரே மாகாணத்திற்குள் இணைத்துக் கட்டிப் போட்டு, அப்பகுதியை, ''தன்னாட்சி கொண்ட மாகாணம்'' எனக்கூறி, அவற்றைப் போன்ற பல மாகாணங்களை உள்ளடக்கிய ஒரு இந்தியக் கூட்டாட்சியை [United States of India]எண்ணிப்பார்க்கவும்இயலவில்லையே தமிழ்மொழியையும், தெலுங்கு மொழியையும், பேசக்கூடிய மக்களுக்கு அவரவர் மொழிக்குச் சொந்தமான தனித்தனி மாநிலங்கள் இருக்க வேண்டாமா? ஒரிய மொழி பேசும் மக்களை வெவ்வேறு மூன்று மாகாணங்களில் பிரித்து வைத்திருப்பதைத் தடுக்க வேண்டாமா? அவர்களில் பெரும்பான்மை மக்கள் பீகார் மக்களால் அடிமைப்படுத்தப் பட்டிருப்பதை, இன்னும் நாம் விட்டு வைக்கத்தான் வேண்டுமா? இப்படிப்பட்ட மாநிலங்களில் பொறுப்பான தன்னாட்சியை அமைப்பதென்பது மற்ற டொமினியன் நாடுகளின் அனுபவத்தைப் புறக்கணிப்பதாக மட்டுமல்ல; உலகப் பெரும் போரில் நாம் எந்தக் கொள்கைகளுக்காகப் போராடினோமோ, அந்தக் கொள்கைகளுக்கே முரணாக உள்ளது. பொறுப்புள்ள [குடியரசு முறை] அரசாங்கத்தை (Responsible Government) இவ்வகை மாகாணங்களில் நிலைபெறச் செய்வதென்பது, குடியரசு முறைக் கோட்பாடுகளுக்கே எதிர்மறையான செயலாகும். முட்புதர்களில் அத்திப் பழத்தையும், கற்றுழையில் திராட்சையையும் விளைவிக்க முடியாது.''5

---

4 Ibid Opp. Cited Note 3

5 Ibid, Opp. Cited, Note 3. Page 73

என்ற வரிகளில் மாகாணத் தன்னுட்சிக்கு அடிப்படையான அம்சம், மொழிவாரி மாநிலங்களே என்பதைத் திட்டவட்டமாக எடுத்தியம்பினர்.

மொழி அடிப்படையில் மாகாணங்கள் பிரிக்கப்பட வேண்டுமென்ற இந்திய மக்களின் எண்ணங்களுக்கு, திரு. லைனல் கர்ட்டிஸ் அவர்களின் தெளிவான கருத்துக்கள் உயிர்ப்பையும் ஆக்கத்தையும் அளித்தன. பின்னர் உருவான ''1918–ஆம் ஆண்டின் இந்திய அரசமைப்புச் சீர்திருத்தங்களின் அறிக்கை (Report of Indian Constitutional Reforms) யிலும்'', ''1925-ஆம் ஆண்டின் சீர்திருத்தங்களின் குழு அறிக்கையிலும்'', (Report of Reforms Enquiry Committee) *1930*–ஆம் ஆண்டின் ''சைமன் குழு அறிக்கையிலும் (Report of Simon commission)'', திரு. லைனல் கர்ட்டிஸ் அவர்களின் பெரும்பான்மையான கொள்கைகள் ஏற்றுக் கொள்ளப்பட்டிருப்பதை நாம் காணலாம்.

சைமன் குழுவின் அறிக்கையில்,

> ' ஒரு மொழி பேசக் கூடிய மக்களை ஒன்று சேர்த்து இணக்கமானதும் தன்னடக்கம் கொண்டதுமான தனி மாகாணம் அமைக்கப்பட்டால், அந்த மாகாணத்தின் மொழியே அம் மாகாணத்தினுடைய தனித் தன்மையைக் காட்டக் கூடிய இயற்கையான அடிப்படையாக அமைந்து விடும் என்பதில் எவ்வகை ஐயப்பாடும் இல்லை.''6

என மொழிவழி மாகாணத்தின் இலக்கணம் கூறப்பட்டுள்ளது.

இந்திய அரசியல் வானில் மொழி உணர்ச்சி இன்று போலவே அன்றும் மிக முக்கியமான தனி இடத்தை வகித்தது. மாகாண மக்களின் அரசியல் நோக்கங்களையும் தேவைகளையும் முறையாக நிறைவேற்றுவதற்கும், மாகாணங்களில் தன்னுட்சியை வளரச் செய்வதற்கும், மொழிவாரி மாநிலங்கள் இன்றியமையாதவை யாயின. மொழிவாரி மாநிலக் கொள்கை, கட்சி — மத வேறுபாடுகளையும் தாண்டி இந்திய மக்களின் பொதுக் கருத்தாய் ஏற்றுக் கொள்ளப்பட்டது. அதனுல் இந்திய மாகாணங்கள், மொழி அடிப்படையில் பிரித்து வகுக்கப்பட வேண்டுமென்ற கோரிக்கையும் தீவிரமாயிற்று. அந்தக் கோரிக்கை, மாநில சுயாட்சியின் வளர்ச்சிக்கு உறுதுணை செய்தது.

---

6 **Report of The Indian Statutory Commission [1930], Vol II Para, 38.**

## III

## வட்டமேசையில் மொழிவாரி மாநிலங்கள்

மொழிவாரி மாநிலக் கோரிக்கைகள், வட்டமேசை மாநாடு களிலும்பேசப்பட்டன; ஆனால் தொடர்ந்து அவை வலியுறுத்தப் படவில்லை. முதல் வட்ட மேசை மாநாட்டில், பர்லாகிமேடி (PARLAKIMEDI) அரசர், ஒரியா மொழி பேசக்கூடிய மக்களைக் கொண்ட ஒரு தனி மாநிலம், உருவாக்கப்பட வேண்டிய அவசியத்தை எடுத்துரைத்தார். தெளிவான தொரு வரலாற்றுப் பின்னணியையும், ஒரு தனித்தன்மையுள்ள பண்பாட்டையும் உருவாக்கிய ஒரிய மொழிப்பகுதிகள், பீகார், வங்காளம், மத்திய மாகாணம் மற்றும் சென்னை ஆகியவற்றோடு ஒட்டப் பட்டிருக்கும் தன்மையை மாற்றியமைத்து, ''ஒரு மொழி, ஓர் இனம், ஒரு மாநிலம்'' என்ற அடிப்படையில் ஒரிசா மாநிலம் அமைக்கப்படல் வேண்டும் என்று அவர் வலியுறுத்தினர்.

இரண்டாம் வட்டமேசை மாநாட்டில், மொழிவாரி மாகாணக் கோரிக்கை மிக்க வலுவடைந்தது. பல குறிப்புரைகளும் தாக்கல் செய்யப்பட்டன. எதிர்கால இந்தியக் கூட்டாட்சியின் உறுப்புகளாக மாநிலங்கள் திகழ வேண்டுமெனில், மொழிவாரி மாநிலங்களே அதற்கு அடிப்படையாக அமையும் என்ற பொதுக் கொள்கையை, திவான்பகதூர் ராமச்சந்திரராவ் அவர் கள் வற்புறுத்தினர். முன்னாள் இந்தியக் குடியரசுத் தலைவ ரான வி. வி. கிரி அவர்களும், பொப்பிலி ராஜா அவர்களும், ''ஆந்திரம்'' தனி மாநிலமாக ஆக்கப்படல் வேண்டும் என்ற கோரிக்கையை அழுத்தம் திருத்தமாக இரண்டாம் வட்ட மேசை மாநாட்டில் முன்னிலைப் படுத்தினர்.

> ''அகில உலகத் தேசிய இனங்களைப் போன்று ஒளி மிகுந்த, பண்டு தொட்ட வரலாற்றைப் பெற்ற மிகப் பழைமையான இனத்தைச் சேர்ந்தவர்களே ஆந்திரர்கள்...... ஆந்திரர்கள் ஒரு காலத்தில் பேரரசை உருவாக்கி ஆட்சி செலுத்தி னார்கள்''[7]

என்றார் வி. வி. கிரி அவர்கள்.

மேலும் ''எதிர்கால இந்தியக் கூட்டாட்சி வெற்றிகரமாக அமைவதற்கு, மொழிவாரி மாநிலங்கள் மிக்க இன்றியமை யாதன'' எனவும்

---

7 President V. V. Giri, 'Proceedings of Federal Structure Committee and Minorities Committee'' Vol. III [1932], Annexture-3 P. 1448

''தெலுங்கு மொழி பேசுபவர்களை ஒரு தனித்த நிலப்பகுதிக்குள் சேர்த்து, ஆந்திர மாநிலமாக உருவாக்குவது, மாநில சுயாட்சியின் குறிக்கோளுக்கு ஒத்த இயைபுடையதே.''8

என்றும் மொழிவாரி மாநிலங்கள் மாநில சுயாட்சிக்கு, எவ்வகையில் அடித்தளத்தை அமைத்துக் கொடுக்கிறது என்பதை வி. வி. கிரி அவர்கள் தெளிவாக அந்த மாநாட்டில் விளக்கினார்.

கர்நாடக மாநிலத்தைச் சார்ந்தவரும், அரசியல் வல்லுனருமான திரு. பி. சிவராவ் அவர்கள் கன்னடமொழி பேசும் கர்நாடக மாநிலம் தனியாக உருவாக்கப்பட வேண்டும் என்பதை வட்ட மேசை மாநாட்டில், அன்றே வலியுறுத்தினர்.

வட்டமேசை மாநாடுகளிலும் அதற்கு முன்னரும் இருந்த மொழிவாரி மாநில உணர்ச்சி, ஒரு பேரியக்கமாக உருவாவதை இந்திய நாட்டின் ஒற்றுமையைக் கருத்தில் கொண்ட தேசியத் தலைவர்கள் அவ்வளவாக விரும்பவில்லை. மொழிவாரி மாநில உணர்வு, மாநிலப் பற்றையே அதிகமாக வளர்க்கும் என்ற காரணத்தாலும், அதன் விளைவாக அனைத்திந்திய தேசியம், (இந்தியத் தேசபக்தி) முறையாக உருக்கொள்ளாமல் போய், நாட்டின் பொது எதிரியான வெள்ளையனை வெளியேற்றும் ஒருமுகமான முயற்சி பாழடிக்கப்பட்டு விடும் என்ற அச்சத்தினாலும், மாநில சுயாட்சி வளர்ச்சியின் இன்றியமையாச் சிறப்புக் கூறான, மொழி தழுவிய தன்னாட்டுப் பற்றைத் தணிக்க, அனைத்திந்தியத் தலைவர்கள் அன்றே முயன்றனர். ஆனால், இயற்கை உணர்வான தன்னாட்டின் தாய்மொழிப் பற்று, அத்தலைவர்களிடம் தங்களையும் மீறி வெளிப்பட்டது,

கூட்டாட்சித் தத்துவ நிழலடியில் ''அகில – இந்திய ஒற்றுமையை'' உருவாக்குவதென்ற 'பரந்த நோக்கத்தைக்' காட்டி வட்டமேசை மாநாடுகளில் ''குறுகிய கண்ணோட்டம் கொண்ட'' மொழிவாரி மாநிலக் கோரிக்கைகளை அகில இந்தியத் தேசியத் தலைவர்களே வலியுறுத்தினர். ஆனால் அக்கோரிக்கைகளை அவர்கள் வன்மையோடு தொடர வில்லை. ''இந்திய விடுதலைக்குப் பின்னர் இந்திய அரசியல் சட்டம் உருவாகும் போது, மொழிவாரி மாநிலக் கோரிக்கைகளைப் பரிசீலித்துக் கொள்ளலாம்'' எனக்கூறி, அக்கோரிக்கைகளெல்லாம் பின் வரலாற்றிற்காக ஒத்தி வைக்கப்பட்டன. ஆனால், அதன்

8 Ibid, Opp. Cited, Note 7, P. 1448

பின் வரலாறு, மாநில சுயாட்சியின் நெடும் பயணத்தில், ஒரு மிக முக்கியப் பகுதியைப் படைத்து விட்டது. மாநில சுயாட்சியின் வளர்ச்சிக்கு உருக் கொடுத்த மொழிவாரி மாநிலக் கோரிக்கை, அதன் எழுச்சிக்கும் உறுதுணையாக நின்றது.

## IV

## காங்கிரசும் மொழிவாரி மாநிலங்களும்

1905-ஆம் ஆண்டிலேயே மாநிலங்கள் மொழி அடிப்படையில் பிரிக்கப்பட வேண்டும் என்ற கருத்திற்குக் காங்கிரஸ் மறைமுகமாகத் தனது ஆதரவை வழங்கியுள்ளது. முஸ்லீம் மக்களுக்கு ஒரு தனிப் பகுதியை வழங்க வேண்டுமென்ற முஸ்லீம்களின் வகுப்புவாதக் கோரிக்கைக்குச் செவி சாய்க்கும் வகையில், 1906-ஆம் ஆண்டில் அரசுப் பிரதிநிதி கர்சான் அவர்கள், வங்கத் தலை மாகாணத்தை இரண்டாகப் பிரித்தார். அப் பிரிவினை, மொழி அடிப்படையில் நடைபெற்றதல்ல. எனவே, பிரிக்கப்பட்ட வங்கத்தை மீண்டும் ஒன்றாக இணைக்க வேண்டுமென்று கோரி, மாபெரும் அரசியல் இயக்கமொன்று 5 ஆண்டுகளுக்கும் மேலாக நடைபெற்றது. அப்பேரியக்கத்திற்குக் காங்கிரசு, தன் முழு ஆதரவையும் நல்கிற்று.

"பீகார்—பீகாரிகளுக்கே" என்ற உணர்ச்சிப் பூர்வமான கோரிக்கையை 1909-ஆம் ஆண்டில் காங்கிரஸ் ஒத்துக் கொண்டது. அதற்கிணங்க, தனது கட்சியின் ஓர் மாநில அமைப்பைப் பீகார் மாநிலத்தில் நிறுவியது. அதைப் போன்றே, சிந்து, ஆந்திரா, மாநிலங்களிலும் காங்கிரஸ் கமிட்டிகளையும் அகில இந்தியக் காங்கிரசு நிறுவிற்று.

1920-இல் கூடிய நாகப்பூர் காங்கிரஸ், இந்திய மாநிலங்கள் மொழி அடிப்படையில் அமைய வேண்டுமென்ற கருத்திற்கு "அரசியல் வடிவம்" கொடுத்தது. அத் தீர்மானத்தைப் பின்பற்றி, இந்தியத் துணைக் கண்டத்தில் அதுகாறும் இயங்கி வந்த காங்கிரசுப் பிரதேச அமைப்புக்களையெல்லாம் மாற்றியமைத்து, மொழிவாரி அடிப்படையில் தனது கட்சி மாநில அமைப்புக்களை அது உருவாக்கிக் கொண்டது.

1927-ஆம் ஆண்டில் ''சைமன் குழு'' அமைக்கப்பட்ட போது, ''அன்றைய இந்திய மாகாணங்கள் மொழிவாரி மாநிலங்களாக மாற்றி அமைக்கப்பட வேண்டும்'' என்று கோரி, காங்கிரஸ் கட்சி ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது. அத் தீர்மானத்தில், ''மொழி அடிப்படையில் மாகாணங்களைப் பிரித்து வகுப்பதற்கு உற்ற தருணம் வந்துவிட்டது'' எனக் கூறி மொழிவாரி மாநிலங்கள் உருவாக்கப்பட வேண்டிய காலத்தைக் கூட அது கணித்தது. அதனைத் தொடங்கி வைக்கும் முறையில் ஆந்திரா, உத்கல், சிந்து, கர்நாடகம் ஆகிய பகுதிகளைத் தனி மாநிலங்களாக அமைக்க வேண்டுமென அத் தீர்மானம் மேலும் வற்புறுத்திற்று.

1929-ஆம் ஆண்டில் வெளியான ''நேரு குழு அறிக்கையும்'' மொழி அடிப்படையில் மாநிலங்கள் பிரித்து வகுக்கப்பட வேண்டுமென்ற கொள்கையை வெகு தீவிரமாக வலியுறுத்திற்று. மொழிவாரி மாநிலங்கள் அமைப்பதற்குரிய அடிப்படைக் கருத்துக்களைக் கூறும் போது, அந்தப் பகுதி மக்களின் மொழி சார்ந்த ஒற்றுமைக்கும், மக்கள் விருப்பத்திற்கும் முதலிடம் தர வேண்டுமென்றும் நேரு குழு விளக்கியது.

> ''ஒரு மாகாணம், தன்னைத் தானே புரிந்து கொள்வதற்கும், அதன் அன்றாடப் பணிகளை, அதன் மொழியிலேயே செவ்வனே செய்வதற்கும் ஒவ்வொரு பகுதியும் மொழிவாரிப் பகுதியாய் இருத்தல் வேண்டும். அது பன்மொழி பேசும் ஒரு பகுதியாய் இருந்தால், பல தொல்லைகள் தொடர்ந்து உருவாகும். மேலும் அதன் போதன மொழியும் அரசுப் பணிகளும் இரண்டு அல்லது அதிகமான மொழிகளாலேயே நடைபெற வேண்டியிருக்கும். எனவே மொழி அடிப்படையில் மாகாணங்களைப் பகுத்து அமைக்க வேண்டுவது சாலப் பொருத்தமுடையதாகும். தனித்த பண்பாட்டுடனும், மரபுடனும், இலக்கியத்துடனும் எப்போதும் ஒரு மொழி இசைந்திருக்கும். மொழிவாரிப் பகுதியில், இச் சிறப்புக் கூறுகளெல்லாம் மாநிலத்தின் பொது முன்னேற்றத்திற்குத் துணைபுரியும்.'' 9

என, நேரு குழு அறிக்கை மொழிவாரி மாநிலங்களின் அவசியம் பற்றித் தெளிவு படுத்துகிறது.

---

9 '' All Parties Conference '' - Report of The Committee Set up by Conference [1928], Page 62

1927–ஆம் ஆண்டுக்குப் பின்னர் 1945–ஆம் ஆண்டு வரையும் ''மாநிலங்கள் மொழி அடிப்படையில் பிரிய வேண்டும்'' என்ற கொள்கையைப் பலமுறை காங்கிரஸ் உறுதி செய்தது. 1937-ஆம் ஆண்டில் ஆந்திரமும், கர்நாடகமும் தனி மாநிலங்களாக ஆக்கப்பட வேண்டும் என்று ஆங்கில அரசைக் காங்கிரஸ் வற்புறுத்திற்று. கேரளம், கர்நாடகம், ஆந்திரம் ஆகிய பகுதிகளிலிருந்து—மொழிஅடிப்படையில் மாநிலங்கள் அமைக்கப்பட வேண்டும்—என்ற கோரிக்கையுடன் வந்த தூதுக் குழுவிற்கு 1938-ஆம் ஆண்டு கூடிய காங்கிரசுக் காரியக் கமிட்டி, ''காங்கிரசுக்கட்சி, ஆட்சிப் பொறுப்பேற்கும் போது மொழி அடிப்படையில் மாநிலங்களைப் பிரித்துக் கொடுக்கும்'' என்ற உத்தரவாதத்தையும் கொடுத்தது.

இப்படி அகில இந்தியத் தேசியக் காங்கிரஸ் கட்சி, அதன் பல தீர்மானங்களின் மூலமாகவும், மக்கள் இயக்கங்களுக்கு முழு ஆதரவைக் கொடுத்த வகையிலும், பல அரசியற் சூழ்நிலைகளில் மக்களுக்கு அவ்வப்போது உறுதிமொழிகளை வழங்கியதன் வாயிலாகவும், ஆங்கில அரசை மொழிவாரி மாநிலக் கொள்கையை ஏற்றுக் கொள்ளுமாறு பலமுறை வற்புறுத்திய பான்மையாலும், மொழி அடிப்படையில் இந்திய மாநிலங்கள் பிரித்து வகுக்கப்பட வேண்டுமென்ற சீரிய கொள்கையைத் தனது குறிக்கோளாக மட்டுமின்றி ஒரு முக்கிய செயல் திட்டமாகவும் 1945-ஆம் ஆண்டு வரையும் ஏற்றுக் கொண்டிருந்தது.

வழுவிய நெறி

1945-ஆம் ஆண்டிலிருந்து, காங்கிரசுக் கட்சி மெல்ல மெல்ல அக்கொள்கையினின்றும் வழுவிச் செல்லலாயிற்று. இந்திய வரலாற்றில், பேரரசு ஒவ்வொன்றும் உருவான போது எந்தக் கொள்கையின் அடிப்படையில் அவை தன்னைத்தானே (ஏ)மாற்றிக்கொண்டதோ, அதே கொள்கையின் அடிப்படையில் அஃதாவது மிக்க வலிமை கொண்ட மத்திய அரசைப் படைத்து, அதன் வழி பல்வேறு மொழி, இன, மக்களை ஒருமைப் படுத்தலாம் என்ற மாயக் கருத்தின் அடிப்படையில் காங்கிரஸ் கட்சியும் ஆட்சிக் கட்சியாகும் வாய்ப்புக் கிடைத்தவுடன், அனைத்திந்திய மாநிலங்களை யெல்லாம் வன்மை கொண்ட மைய அரசின் கீழ் அடிமைப்படுத்திக் கொள்ள எண்ணியும் அம் மாநிலங்கள் மொழி வழியில் உருவானுல்

அதன் தன்னுட்சிக்குரிய சூழ்நிலையை மொழித் தேசிய உணர்வு தோற்றுவித்து, பாரதத் தேசியத்தை விழுங்கிவிடும் என்ற உள்நோக்கத்தால் உந்தப்பட்டு, "மொழிவாரி மாநிலங்கள்" என்ற மாநில மக்களின் உயிர்ப் பிரச்சனையைக் காங்கிரஸ் கட்சி, காற்றிலே பறக்க விட்டு விட்டது.

1945–ஆம் ஆண்டின் காங்கிரசுக் கட்சியின் தேர்தல் அறிக்கையில் காங்கிரஸின் 'வழுவிய நெறி' பற்றி மறைமுகமாகக் கோடிட்டுக் காட்டப்பட்டது. அத்தேர்தல் அறிக்கையின் மூன்றும் பத்தியில்,

> "...ஒவ்வொரு சமூகப் பிரிவுகளினுடையதும் நாட்டெல்லைப் பகுதிகளினுடையதுமான தனி வாழ்க்கை நிலையையும் பண்பாட்டையும் வளர்ப்பதற்காகவே அந்தந்த நிலப் பிரிவின் சுதந்திரத்திற்காகக் காங்கிரசுக் கட்சி போராடி வந்துள்ளது. இந்த நோக்கத்திற்காக, முடிந்த அளவில் ( As far as possible ) அந்தந்த நிலப்பகுதிகளும், மாகாணங்களும் பண்பாட்டு அடிப்படையிலும், மொழி அடிப்படையிலும் பிரித்தமைக்கப்படும் "10

என்று கூறப்பட்டது.

அதுவரையில் திட்ட வட்டமாகவும், அழுத்தந் திருத்தமாகவும் மாநிலங்கள் மொழிவாரி அடிப்படையில்தான் பிரிக்கப்பட வேண்டும் என்பதை உறுதிப்படுத்தி வந்த காங்கிரசுக் கட்சி, தனது தெளிவான தேர்தல் அறிக்கையில் "முடிந்த அளவில்" என்ற சொற்றொடரைப் பயன்படுத்தி, அக்கொள்கையின் ஆணித்தரமான உறுதிப்பாட்டை நீக்கிவிட்டு உறுதி சொல்ல முடியாத ஒரு பின் நிகழ்ச்சியாக அதைத் திருத்திக் கூறியதிலிருந்தே, காங்கிரசு தனது பழைய பாதையிலிருந்து வழுவிச் சென்றமை நன்கு புலனுகும்.

இவ்வழுவலின் எதிரொலி, இந்திய அரசமைப்புச் சபையிலும் பரவியிருந்தது. மாநிலங்கள் மொழி அடிப்படையில் பிரிக்கப்பட வேண்டும் என்ற விவாதம் அரசமைப்புச் சபையில் வந்தபோது, பண்டித நேரு அவர்கள், "முதலில் வர வேண்டிய பொருள்கள் முதலாவதாக வர வேண்டும்; அந்தப் பொருள்கள் எவையெனில் இந்திய நாட்டின் நிலைத்த உறுதிப்

10 Mr B. Pattabi Sitaramayya, "History of Indian National Congress" [1947], Vol. II, Appendix Page [i] - [ii]

பாடும் பாதுகாப்புமேயாகும்'' எனக்கூறி 27—11—1947-இல் காங்கிரசின் கொள்கை மாற்றத்தைத் தெளிவாக்கினர். ஆனால் இந்திய அரசமைப்புச் சபையிலிருந்த தென்னகத்தைச் சார்ந்த உறுப்பினர்கள் நேருவின் சொல்வன்மையால் திருப்தியடைய வில்லை. அவர்கள், ''அரை நூற்றாண்டுக் காலம் காங்கிரசால் போற்றி வளர்க்கப்பட்ட மொழிவாரி மாநிலக் கொள்கையை ஆட்சி உரிமை கிடைத்ததும் அடியோடு கைவிடுதல், காங் கிரஸின் சால்புக்கு ஏற்றதன்று'' எனக்கூறி, ஓர் தீவிரச் சூழலை அரசமைப்புச் சபையில் உருவாக்கினர்.

ஆனால் வல்லபாய் பட்டேல், அமரர் இராசாசி, பண்டிதர் நேரு, பாபு இராசேந்திர பிரசாத் போன்ற பெருந்தலைவர்கள் '' இந்திய ஒற்றுமையை '' மொழிவாரி மாநிலச் சீரமைப்பு அழித்தொழித்து விடும் என்ற காரணத்தைக் காட்டி, அதனை எதிர்த்தனர். மற்ற மாநிலங்களைச் சார்ந்த அனைத்திந்தியத் தலைவர்கள் அதை மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் தவித்தனர்.

வட்டமேசை மாநாடுகளில் இக்கோரிக்கையை எடுத் தியம்பிய பின்னர், எப்படி அதைத் தொடர்ந்து வலியுறுத்தத் துணிய வில்லையோ, அதைப் போன்றே இந்திய அரசமைப்புச் சபையிலும், பல அகில இந்தியத் தேசியத் தலைவர்கள் மொழி வாரி மாநிலக் கோரிக்கையைத் தொட்டுப் பேசினாலும், தொடர்ந்து வலியுறுத்த வில்லை. இறுதியில் கட்சிக் கட்டுப் பாட்டைக் காட்டி, ஏதோ ஒருவகை இடைக்கால ஏற்பாட்டின் மூலமாக மொழிவாரி மாநிலச் சீரமைப்பை ஒத்தி வைக்கக் காங்கிரஸ் தலைவர்கள் முடிவு செய்தனர்.

### '' வெந்த புண்ணிலே வேல் ''

50 ஆண்டுகளாக உறுதிப் படுத்தப்பட்ட ஒரு சீரிய கொள்கையை ''மீண்டும் ஆய்வதற்காக''17—6—1948-ஆம் நாளில் அரசமைப்புச் சபையின் தலைவரால் ''தார்'' கமிஷன் ( Dhar Commission ) அமைக்கப்பட்டது. 1948-ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்களில் தார் கமிஷனின் அறிக்கையும் அர சமைப்புச் சபையில் தாக்கல் செய்யப்பட்டது.

தேசியத் தலைவர்கள் எதிர்பார்த்தபடியே "மொழிவாரி மாநிலச் சீரமைப்பு, தற்போது அவசியமில்லை" என்ற முடிவுக்கு, தார் கமிஷன் வந்திருந்தது. மொழித் தேசிய உணர்வுகளைக் கொண்ட அரசமைப்புச் சபை உறுப்பினர்களை, இம் முடிவும் திருப்திப்படுத்த வில்லை.

அவர்களின் கண் துடைப்பிற்காகக் காங்கிரஸ் பெருந் தலைவர்கள் அடங்கிய "ஜே. வி. பி." (J. V. P. Committee) குழுவை ஜெயப்பூர் காங்கிரசில் அமைத்தனர். திரு. வல்லபாய் பட்டேல், பண்டித நேரு மற்றும் திரு. பட்டாபி சீதாராமையா ஆகியவர்கள் J.V.P.குழுவில் இடம் பெற்றனர். தார் கமிசனின் பரிந்துரைகள் முழுவதையும் J. V. P. குழுவின் அறிக்கையும் ஏற்றிருந்தது.

> "மொழி அடிப்படையில் மாநிலங்கள் பிரித்து வகுக்கப்பட வேண்டுமென்ற கொள்கை—நடைபெறப் படுத்தப்பட்டால் ஏற்படும் உள்விளைவுகளை எதிர்க்கத்தக்க நிலைமையில் இல்லாத போது—காங்கிரஸ், அக்கொள்கையினை ஏற்றுக் கொண்டது. ஆகவே அதனால் ஏற்படும் விளைவுகளைக் காங்கிரசு அப்போது சரியாக உணர முடியவில்லை. தற்போது நிர்வாகத்தில் ஏற்படும் பிரத்யட்ச நிலையினையும் சுதந்திரத்தால் ஏற்பட்ட விளைவுகளையும் நேருக்கு நேர் காணும் போது, (மொழிவாரி மாநிலச் சீரமைப்பைக் காட்டிலும்) இந்திய ஒற்றுமை, பொருளாதார வளமை, பிரிவினைச் சத்திகளை வலிவோடு ஒடுக்க வேண்டிய செயல் முறை ஆகியவைகளுக்கே முதலிடம் தரப்பட வேண்டும்." 11

என்று கூறி, J. V. P. குழு, மொழிவாரி மாநிலங்கள் தேவையற்றது என்பதை நிலைநாட்டிற்று.

"மொழி, ஒருமைப் படுத்துவதற்குரிய ஒரு சக்தி மட்டுமல்ல, பிரிப்பதற்கும் உரிய ஒரு சக்தியாகும்" என்ற புதுக் கருத்தைப் பெருந்தலைவர்களின் அறிக்கை எடுத்துக்காட்டிற்று. இவ்வறிக்கையைக் காங்கிரசுக் காரியக் கமிட்டியும் ஏகமனதாக ஏற்றுக் கொண்டது. இறுதியில் மொழிவாரி மாநிலங்கள் என்ற நீண்ட நாளைய கோரிக்கை, வெறும் பகற் கனவாகப் போய் விட்டது.

---

11 As Quoted in "Select Constitutions - Government of Indian Republic" (1971), Page 282, by Mr. A. C. Kapur

விடுதலை பெற்ற இந்தியாவில் நடைபெற்ற முதல் பொதுத் தேர்தலுக்காகக் காங்கிரஸ் கட்சியில் வெளியிடப்பட்ட 1951-ஆம் ஆண்டின் காங்கிரஸ் தேர்தல் அறிக்கையிலும் காங்கிரசின் மேற்சொன்ன ''புதிய கொள்கையே'' வலியுறுத்தப் பட்டிருந்தது. முதலாம் ஐந்தாண்டுத் திட்டத்திலேயே மதி மயங்கி இருந்த காங்கிரசுத் தலைவர்கள், காங்கிரசின் இப்புதிய கொள்கையை மேலும் விரிவுபடுத்தி, ஐதராபாத் காங்கிரசில் ஒரு தீர்மானம் போட்டனர். மொழி ஒன்றையே அடிப்படை யாகக் கொண்டு மாநிலங்கள் பகுக்கப்பட வேண்டும் என் றிருந்த கொள்கை, இடையில் அரசமைப்புச்சபையில் உருமாறி, முடிவில் ஐதராபாத் காங்கிரஸ் மாநாட்டில் அது முழுமை யாகவே மறுக்கப்பட்டு விட்டது. மாநிலங்களைப் பிரித்தமைக்க மொழி அடிப்படையைத் தவிர வேறு சில சிறப்புக் கூறு களையும் கணக்கில் கொள்ள வேண்டுமென அத்தீர்மானம் விளக்கியது.

''இந்திய ஒற்றுமை'', ''தேசியப் பாதுகாப்பு'', ''நாட்டுப் பாது காப்பு, பண்பாட்டு மொழித் தொடர்புகள்'', ''நிதி மூலங்கள்'', ''பொருளாதார வளர்ச்சி'' ஆகிய அடிப்படைக் கூறுகளையே வரிசையாக வைத்து மாநிலங்கள் சீரமைக்கப்பட வேண்டும் என்ற புதியதோர் சித்தாந்தத்தை அத்தீர்மானம் உருவாக்கியது.

இவை தவிர ''மாநிலப் பிரிவுகளையும் அகில இந்தியாவை யும் ஒன்ருகச் சேர்த்த ஒரு பரந்த கண்ணோட்டத்தையும் கருத்தில் கொண்ட மாநிலங்கள் புனரமைக்கப்பட வேண்டும்'' எனவும் அத் தீர்மானம் கூறிற்று. ''இந்தித் திணிப்பை அடியோடு ஒழிப் பேன்; மொழிவாரி மாநிலங்களே உண்மைக் குடியரசை உரு வாக்கும்'' என்ற கோட்பாடுகளுக்காகப் பிற்காலத்தில் போராடிய திரு. இராசாசி அவர்கள் ''மொழிவாரி மாநிலங் கள், உண்மையில் ஒரு காட்டு மிராண்டி மனப்பான்மையையே காட்டுகிறது'' என அப்போது கருத்தறிவித்தார் என்பதும் இங்கு நினைவு கூறத் தக்கது.

1953-ஆம் ஆண்டு மேத் திங்களில், காங்கிரஸ் காரியக் கமிட்டி அதன் புதிய சித்தாந்தத்தை மீண்டும் உறுதிப்படுத் திற்று. காங்கிரசின் இத்தகைய நடவடிக்கைகள் மாநிலங் களின் ''வெந்த புண்ணிலே வேலைப் பாய்ச்சியதைப்'' போல் இருந்தது.

மொழிக் கனல்

ஆந்திரத்தைச் சார்ந்த பொட்டி ஸ்ரீ ராமுலு, ''ஆந்திர மாநிலம்'' மொழியடிப்படையில் பிரிக்கப்படும் வரை உணவை ஏற்கேன் எனச் சூளுரை கூறி, 1953–ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்களில் உண்ணுநோன்பை மேற்கொண்டார். நேரு அவர்கள் ''இந்தக் கட்டாய நடவடிக்கைகளால் என்னை அச்சுறுத்த முடியாது'' எனத் தமது அமைச்சரவைச் சகாக்களிடம் கூறினர்; பொட்டி ஸ்ரீ ராமலு 58-நாட்கள் உணவின்றி நோன்பிருந்து, 16—12—1952-இல் உயிர் துறந்தார். மொழிக்கனல் ஆந்திரத்தையே பற்றி எரித்தது. தெலுங்கு நாட்டின் புரட்சிக் கனலைத் தாங்க முடியாத நேரு அவர்கள், தியாகி. பொட்டிஸ்ரீ ராமலுவின் பொன்னுடல் முழுமையாகச் சாம்பலாகு முன்னரே 1—10—1953-இல் புதிய ஆந்திர மாநிலத்தைப் பிரித்துக் கொடுத்து விட்டார்.

ஆந்திரம் பிரிந்தவுடன் நாடு முழுவதும் மொழிவாரி மாநிலங்கள் அளிக்கப்பட வேண்டுமென்ற கோரிக்கைகள் புதிய வீரியத்துடன் கிளர்ந்தெழுந்தன. போராட்டங்கள் நடைபெற்றன. 50 ஆண்டுகள் நீறு பூத்த நெருப்பாய் இருந்த மொழித் தேசியம், மீண்டும் உயிர்த்தெழுந்தது. மொழித் தேசியத்தை நசுக்கிவிட, பகற்கனவு கண்ட தேசியத் தலைவர்கள் அதன் புரட்சிக் கனலுக்குப் பணிய வேண்டியவர்களாயினர். 'பசுல் அலி'யை (Fazl Ali) தலைவராகவும், திரு. குன்சுரு மற்றும் திரு. கே.எம். பணிக்கர் அவர்களை உறுப்பினர்களாகவும் கொண்ட ''மாநிலச் சீரமைப்புக் குழு'' (States Reorganisation Commission) அவசரமாக அமைக்கப் பட்டது. 1955–ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்களில் வரலாற்றுப் புகழ் பெற்ற அதன் அறிக்கையை, அக்குழு இந்திய மக்களுக்கு வழங்கியது.

1956–ஆம் ஆண்டில், மாநிலச் சீரமைப்புக் குழு கொடுத்த அறிக்கையின்படி இந்திய நாடு, மொத்தம் 14 மொழிவாரி மாநிலங்களாகப் பகுக்கப்பட்டது. ஆனால் இந்திய நாட்டின் பல தேசிய இன மக்கள் மாநிலச் சீரமைப்புக் குழு தந்த மாநிலங்களை ஏற்றுக் கொள்ள வில்லை. பல போராட்டங்கள் தொடர்ந்தன, 1957–ஆம் ஆண்டு முதல் 1973–ஆம் ஆண்டு

வரை இந்திய நாட்டின் பல பகுதிகளில் மாநில எல்லைக் கோடுகள் மீண்டும் மாற்றியமைக்கப்பட வேண்டுமென்ற கிளர்ச்சிகளை மத்திய அரசு இரும்புக் கரத்தால் அடக்க முயன்றும் அந்த எழுச்சியினைத் தகர்க்க முடியவில்லை. அவ்வப்போது, சூழ்நிலைக் கேற்ப, மத்திய அரசும் சிற்சில மாநில எல்லைக் கோடுகளை மாற்றியமைத்தது. இன்றைய நிலையில் இந்தியத் துணைக் கண்டத்தில் 21 மாநிலங்களும், மத்திய அரசாங்கத்தின் நேரடி ஆட்சிக்குட்பட்ட 9 பகுதிகளும் அடங்கியுள்ளன.

அவையாவன :—

1. ஆந்திரப் பிரதேசம்; 2. அஸ்ஸாம்; 3. பீகார்; 4. குஜராத்; 5. கேரளா; 6. மத்தியப் பிரதேசம்; 7. தமிழ்நாடு; 8. மகாராஷ்டிரம்; 9. கர்நாடகம்; 10. ஒரிசா; 11. பஞ்சாப்; 12. இராசஸ்தானம்; 13. உத்திரப் பிரதேசம்; 14. மேற்கு வங்காளம்; 15. சம்மு மற்றும் காஷ்மீரம்; 16. நாகாலாந்து; 17. அரியானு; 18. இமாசலப் பிரதேசம்; 19. மணிப்பூர்; 20. திரிபுரா; 21. மேகாலயா ஆகிய மாநிலங்கள்.

1. டெல்லி; 2. அந்தமான் நிக்கோபார்த் தீவுகள்; 3. லட்சத் தீவு மற்றும் மினிக்காய்; 4. தாத்ரா மற்றும் நாகர் ஆவேலி; 5. கோவா டையூ டாமன்; 6. புதுச்சேரி; 7. சண்டிகார்; 8. மிசோராம்; 9. அருணசலப் பிரதேசம் ஆகிய மத்திய நேரடி ஆட்சிக்குட்பட்ட பகுதிகள்.

மொழிவழி மாநிலக் கோரிக்கையின் நீண்ட வரலாறு, சில ஆழ்ந்த நுண் கருத்துக்களையும் வெளிப்படுத்துகின்றது. மாநில சுயாட்சி என்ற 'கருவினை'ச் சிதைத்திட, மொழிவாரி மாநிலங்களென்ற அதன் 'உருவினை'க் குலைக்க முற்பட்டனர் தேசியத் தலைவர்கள். ஆனால், அது, 'மொழித் தேசியம்' என்ற உயிர்ப் பகுதியைத் தொட்டு விட்டது. மொழித் தேசியம் சிலிர்த்தெழுந்தது; உருவினைக் காத்தது; எனினும் கரு, சிறிது சிதைந்து போயிற்று. அந்தச் சிதைந்த கருவை, இப்போது, மொழித் தேசியம், செப்பனிட்டுக் கொண்டிருக்கின்றது. சிதிலமடைந்த மாநிலத் தன்னாட்சியினை, மொழித் தேசிய உணர்வு, உயிர்ப்பித்துக் கொண்டுள்ளது. மத்திய அரசை நோக்கிச் சாய்ந்த இந்திய அரசமைப்பைக் கொண்டு, மாநில சுயாட்சியை, இனிமேலும், முழுமை பெற விடாமல், நெருக்கிச்சுருக்க முனைந்தால், அம்முயற்சி மீண்டும் மொழித்தேசியத்தை

இடரி விடும். மொழித் தேசியம் உலுக்கப்படின், அது மீண்டும் ஒருமுறை சிலிர்த்தெழும். அதன் பின் விளைவுகளைப் பற்றி, வரலாறு தெளிவாக்குகிறது. இந்தியத் தேசியப் பெருந் தலைவர்களான, பண்டித நேரு அவர்களும் பட்டேல் அவர்களும் வியத்தகு வகையில் ஒரே குழுவிலிருந்து (G. V. P. குழு), தூர நோக்குடன் வரலாற்றின் காலக்குறியைச் சுட்டிக் காட்டியுள்ளனர்.

> ''மொழி, ஒருமைப்பாட்டை உருவாக்குவதற்கான ஒரு வழி மட்டுமல்ல; பிரிவினையைச் செய்து விடும் ஒரு சக்தியுமாகும்.''12



12 Ibid, opp, cited, Note, 11

## 9. மாநில சுயாட்சிக் கொள்கையின் வளர்ச்சி

— ஆங்கில அரசு தந்த மாநில சுயாட்சி —

"...1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டமும் அதன் நடைமுறை யாக்கமும் அதனதன் தன்மை களினுல் மட்டுமே, பெரும் முக்கியத்தைப் பெற்றுவிட வில்லை. ஆங்கில ஆதிக்கத்தின் விலகலும் இந்திய நாட்டின் அறுவை மருத்துவமும் (பிரிவினையும்) ஒரே நேரத்தில் நிகழ்ந்து முடிந்த பின்னர், இந்திய அரசிய லமைப்பைப் புனைந்தவர்கள், 1935-ஆம் ஆண்டின் சட்டத்தால் கட்டப்பட்ட அடித்தளத்தின் மேல், ஒரு புதுக் கூட்டாட்சி யமைப்பினைப் பரவலாக எழுப்பி னுர்கள். 1950-ஆம் ஆண்டின் அரசமைப்பில் சேர்க் கப்பட்டுள்ள மத்திய - மாநில உறவுகள் என்ற வடிவத்தின் மாதிரி வார்ப்படமாக, 1935-ஆம் ஆண்டின் சட்டம் அமைந்திருத்தலை நாம் காண் கிறேம்."[1]

— பேராசிரியர். கே. ஆர். பாம்வெல்.

ஆங்கிலப் பேரரசின் இராச தந்திரக் கோட்பாடான "பிரித் தாளும் சூழ்ச்சி" யினுல், முஸ்லீம் லீக்கின் வகுப்பு வாதமும் சுதேச மன்னர்களின் சிக்கலும் மொழிவாரி மாநில உணர்ச்சி யும் இந்திய அரசியலில் பெரும் விளைவுகளைக் கொடுத்தது என்பதைப் பற்றியும், அவை ஒவ்வொன்றும் மாநில சுயாட்சி வளர்ச்சிக்கு, எவ்வகையில் பெரிதும் காரணமாக அமைந்தன என்பதைப் பற்றியும், சென்ற அத்தியாயங்களில் தெளிவாக ஆய்வு செய்தோம்,

---

1 Prof. K. R. Bombwall, The Foundations of Indian Federalism (1967), Page 222

இம் மூவகைச் சிறப்புக் கூறுகளின் கலப்புத் தொடர்பால் அவ்வப்போது உருவான அரசியற் சூழலுக்கு ஏற்ப ஆங்கிலப் பேரரசும் நிலைமையைச் சமாளிக்கத் தேவையான சில அரசமைப்புச் சலுகைகளை இந்திய நாட்டுக்கு வழங்கியது. ஆங்கிலப் பேரரசால் நியமிக்கப்பட்ட பல குழுக்களின் பரிந்துரைகளை அடிப்படையாகக் கொண்டே, இந்திய அரசு அமைப்புக்களுக்கு அவ்வப்போது அந்தச் சலுகைகள் அளிக்கப்பட்டன. அக் குழுக்களின் பரிந்துரைகளும் அதன் மேல் கட்டப்பட்ட ஆங்கில அரசமைப்புச் சட்டங்களும் ஒருங்கிணைந்து கூட்டாட்சித் தத்துவத்தை ஒருவகையில் இந்திய நாட்டில் உருவகப் படுத்தின. உண்மைக் கூட்டாட்சி அமைப்பின் உறுப்புக்களான மாநிலங்களின் முழுமையான சுயாட்சி வளர்ச்சிக்கும் அவை ஏதுவாய் அமைந்தன. எனவே, அவை மாநில சுயாட்சிக் கொள்கையினை வளர்க்கவும், அந்தந்தக் காலப் பகுதியில் செயல்படுத்தவும் துணையாக நின்றன. அவை பற்றி இவண் ஆய்வோம்.

## I

## ஆங்கில அரசின் சில அறிக்கைகளில் மாநில சுயாட்சி

இந்திய மக்களின் எண்ணங்களை எதிரொலித்த இருவேறு முரண்பட்ட அரசியல் கட்சிகளான இந்தியத் தேசியக் காங்கிரசும் முஸ்லீம் லீக்கும், மாநில சுயாட்சிக் கொள்கையின் வளர்ச்சியில் முறையே, லக்னோ ஒப்பந்தத்திலும், நேரு குழு அறிக்கையிலும் லீகின் 14 கொள்கைகளிலும் அதன் பல்வேறு தீர்மானங்களிலும், எப்படிப் பங்கேற்றன என்பதைப் பற்றி நாம் இதன் முன்னத்தியாயங்களில் அறிந்து கொண்டோம். இவை இரண்டுக்கும் எதிரிடையாகச் செயல்படும் ஆங்கிலப் பேரரசும் 1927-ஆம் ஆண்டில் இந்தியாவுக்குச் சில உரிமைகள் நல்குவதென முடிவு செய்தது.

### 1. சைமன் குழு அறிக்கை

முற்றும் வெள்ளையர்களையே கொண்ட ''சைமன் குழு'' வை ஆங்கில அரசு அமைத்தது: சைமன் குழு 1930-ஆம் ஆண்டில் வெளியிட்ட தனது அறிக்கையிலும் கூட்டாட்சி அரசமைப்புத்தான் இந்தியாவின் விடுதலைக்குப் பரிகாரமாகும் எனப் பரிந்துரைத்தது.

'' இந்திய அரசமைப்பு ஓர் ஒற்றை ஆட்சி அமைப்பாக இருத்தல் கூடாது; அனைத்திந்தியாவின் பல நிலக் கூறுகளை ஒருங் கிணைக்கவும் மாநிலப் பற்றின் வளர்ச்சிக்கு உருக் கொடுக்க வும் இந்தியாவின் அரசமைப்புக் கூட்டாட்சியமைப்பாக இருத்தல் வேண்டும். ஆங்கிலப் பேரரசின் ஆளுகைக்குட் பட்ட இந்தியப் பகுதிகளும் குறுநில மன்னர் பகுதிகளும் இணைவதற்குக் கூட்டாட்சி அமைப்பு முறை ஒன்றே உற்ற வழியாகும்.''

எனவும்,

'' மைய அரசு வலுவுள்ளதாகவும், நிலையானதாகவும் இருக்கத் தக்க வகையில், மாகாணங்கள் தனது நடவடிக்கைகளில் தன்னாட்சி பெற்றிருத்தல் வேண்டும்......''

எனவும்,

'' எதிர் காலத்தில் அந்தந்த மாகாணங்கள் என்கிற இல்லங் களில் மாகாண அரசுகள் ஒவ்வொன்றும் இல்லத்தரசிகளா கத் திகழ்வர். ......ஆக, மாகாணங்களுக்குச் சுதந்திரமான வாழ்க்கையை நாங்கள் வழங்கும் முகத்தான், அம் மாகாணங் கள் ஒரு புதிய இணைப்பாட்சி அரசமைப்பின் கருவாக விளங் கும் என்பதே எங்களது கருத்து. ” 2

எனவும், சைமன் குழு இந்தியக் கூட்டாட்சி பற்றியும் மாநில சுயாட்சி பற்றியும் தனது கருத்தை விளக்கிற்று. ஆனால் மத்திய அரசின் கட்டுப்பாடுகள் நீங்கிய முழு மாநில சுயாட்சியையும் சைமன் குழு பரிந்துரைக்க வில்லை. ஏனெனில், ஆங்கிலேய ஆதிபத்திய ஆட்சிக்கு முழுமையான சுயாட்சி கொண்ட மாநிலங்கள் இடையூறாக இயங்கி விடும் என்ற அச்சத்தினால் சைமன் குழு, முழு மாநில சுயாட்சியை வலியுறுத்த வில்லை. எனினும் அக்குழு, இந்திய மாநிலங்களுக்கு அரைகுறை சுயாட்சியினை நல்குவதற்கு வழிவகைகளைக் கூறியது.

2. முதல் வட்ட மேசை மாநாடு

இங்கிலாந்தில் தொழிற் கட்சி ஆட்சிக்கு வந்தது. 1931–ஆம் ஆண்டில் ராம்சேமெக்டொனால்டு ஆங்கில நாட்டின் தலைமையமைச்சராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இந்தியா

---

2 Report of The Indian Statutory Commission [1930] Vol. II, Page 16, Para 27

விற்கு ஏதோ ஒரு வகையில் விடுதலையளிக்கத் தொழிற் கட்சி அரசு முடிவு செய்தது, அதன் விளைவே முதல் வட்ட மேசை மாநாடு. அது 1930-ஆம் ஆண்டு நவம்பர் 12-ஆம் நாளில் இலண்டனில் கூடியது. இந்திய மாகாணங்களிலிருந்து 57 அரசியல் தலைவர்களும் சுதேச மன்னர்கள் பதின்மூவரும், அவர்கள் பிரதிநிதிகள் மூவரும் ஆக மொத்தம் பதினாறு உறுப்பினர்களும், பிரிட்டானியப் பிரதிநிதிகள் 16 பேரும் அதில் கலந்து கொண்டனர். அதில் காங்கிரஸ் கலந்து கொள்ளவில்லை. ஆனால் அந்த மாநாட்டின் கலந்துரையாடல்கள் இந்தியக் கூட்டாட்சி அமைப்பு முறையையே வெளிப்படுத்தியது.

ரீடிங் பிரபு (Lord Reading) அவர்கள்,

> "இந்தியாவின் கூட்டாட்சி தான் இந்திய அரசியல் இயக்கங்களின் ஆத்மாவாகும்"

என்றார். தலைமையமைச்சர், ராம்சேமெக்டொனால்டும்,

> "இந்தியக் குறுநில மன்னர்களையும் ஆங்கிலப் பேரரசின் இந்தியப் பகுதிகளையும் உள்ளடக்கிய இரு சபைகளைக் கொண்ட ஓர் மத்தியச் சட்டமன்றத்தின் வாயிலாக அமைக்கும் ஓர் கூட்டாட்சி அமைப்பாக (இந்திய) மத்திய அரசை ஆக்குதல் தான் ஆங்கில அரசின் கொள்கை."

என அறிவித்தார்.

முதல் வட்ட மேசை மாநாடு மூன்று அடிப்படைக் கொள்கைகளை வகுத்தது.

அவையாவன :—

1. இந்திய மாநிலங்களும், இந்தியக் குறுநில மன்னர் பகுதிகளும் இணைந்த ஓர் அனைத்திந்தியக் கூட்டமைப்பாக இந்திய அரசு ஆக்கப்படல் வேண்டும்.

2. மாநிலங்கள் தங்களது எல்லைக்குள் தன்னாட்சி பெற்றவைகளாகத் திகழ வேண்டும்.

3. மத்தியக் கூட்டாட்சி அரசு, மைய—நாடாளு மன்றத்திற்கு மட்டுமே பொறுப்பானதாகும்.

### 3. காந்தி இர்வின் ஒப்பந்தம்

முதல் வட்ட மேசை மாநாட்டில் பரிசீலிக்கப்பட்ட இந்திய அரசியல் சாசனத் திட்டத்தை மீண்டும் பரிசீலிக்கவும், மற்ற இந்தியப் பிரச்சனைகளைப்பற்றி விவாதிக்கவும் 5—3—1931-இல் காந்தியடிகளுக்கும் வைஸ்ராய் இர்வின் அவர்களுக்கும் வரலாற்றுப் புகழ் பெற்ற ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. அதுவே ''காந்தி – இர்வின் ஒப்பந்தம்'' என அழைக்கப் படலாயிற்று. ''இந்திய அரசாங்க உள்ளாட்சித்துறை எஸ்.481/1931 அரசியல் 5—3—1931'' என்ற அரசாணைக் குறிப்பின் இரண்டாம் பத்தியில்,

> ''......முதல் வட்ட மேசை மாநாட்டில், வரையறுக்கப்பட்ட திட்டத்தில், கூட்டாட்சி ஒரு முக்கியப் பகுதியாக விளங்கிற்று...''

எனக் கண்டுள்ளது. எனவே காந்தி – இர்வின் ஒப்பந்தத்தின் வாயிலாக, காந்தியடிகளும் ''இந்திய நாடு கூட்டாட்சி நாடாக இருக்கவேண்டும்'' என்ற பொதுவான அடிப்படையிலேயே இரண்டாம் வட்டமேசை மாநாட்டில் விவாதிக்க ஒப்புக் கொண்டார் என்பது தெளிவாகிறது.

### 4. இரண்டாம் வட்ட மேசை மாநாடு

தலைமை அமைச்சர் ராம்சேமெக்டொனல்டு இரண்டாம் வட்ட மேசை மாநாட்டின் முடிவுரையில்,

> ''இந்திய நாட்டின் எதிர்கால ஆளுநரின் மாநிலங்கள், தங்களது எல்லைக்குள் தங்களது சொந்தக் கொள்கைகளை அமுலாக்குவதில், வெளித் தலையீடும், மேல் ஆணைகளும் இல்லாமல் அதிக அளவு சுயாட்சியைக் கொண்டிருக்கும்; பொறுப்புடன் நிர்வகிக்கப்படும் அரசின் உறுப்பினர்களையும் அம் மாநிலங்கள் கொண்டிருக்கும் என்பதில் நாமெல்லாம் ஒத்த கருத்துக் கொண்டிருக்கிறோம்.''

என்றார்.

ஆனால் இரண்டாவது வட்ட மேசை மாநாட்டில் பூரண சுதந்திரத்தையே காந்தியார் வற்புறுத்தினார். ஆங்கில அரசு அதை ஏற்க மறுத்தது. முடிவு - மாநாடு தோல்வியுற்றது.

முதலாம் மற்றும் இரண்டாம் வட்ட மேசை மாநாடுகளில் ஏற்றுக்கொள்ளப்பட்ட இந்திய அரசியல் சாசனத் திட்டங்களுக்கு இறுதி வடிவம் கொடுக்க, மூன்றும் வட்ட மேசை மாநாடு கூட்டப்பட்டது. அதில் காங்கிரஸ் கலந்து கொள்ளவில்லை. எனவே அதுவும் பயனற்று முடிந்தது.

ஆக, மூன்று வட்ட மேசை மாநாடுகளிலும், காந்தி-இர்வின் ஒப்பந்தத்திலும் மாநிலங்களுக்குத் தன்னாட்சி அளிக்கும் பிரச்சனையில் கருத்து வேறுபாடு அதிகம் இருக்கவில்லை என்பது தெளிவாகும். ஆனால் இந்திய நாட்டின் மத்திய அரசு ஆங்கிலப் பேரரசின் டொமினியன் அந்தஸ்திற்குக் (Dominion Status) கட்டுப்பட்டதா? அன்றி முழு விடுதலை கொண்டு விளங்குவதா? என்ற கருத்து முரண்பாடுகளினாலும் வேறு சில பிணக்குகளினாலும் மூன்று வட்ட மேசை மாநாடுகளின் நடவடிக்கைகளும் பலனளிக்க வில்லை.

**1933-இன் வெள்ளையறிக்கையும் (White paper proposals-1933), 1934-இன் நாடாளுமன்ற இணைப்புப் பொறுக்குக் குழுவின் அறிக்கையும் (Parliamentary Joint Select Committee Report–1934).**

மூன்று வட்டமேசை மாநாடுகளுக்குப் பிறகு, இந்திய அரசமைப்பைப் பற்றிய சீர்த்திருத்தங்கள் ஆங்கிலத் துரைத்தனத்தால்முடிவுசெய்யப்பட்டன. 1933-ஆம்ஆண்டின்வெள்ளை அறிக்கைக் கருத்துக்கள் (White Paper Proposals of 1933) என்ற பெயரில் 202 பத்திகளில் அவை வெளியிடப்பட்டன. அதில் இந்திய அரசமைப்புப் பற்றி 3 அடிப்படைக் கொள்கைகள் மிளிர்ந்து நின்றன.

அவையாவன :—

1. இந்தியக் கூட்டாட்சி; 2. மாநிலத் தன்னாட்சி; 3. மத்திய — மாநில நிர்வாகங்களில் நிலைபெற்ற தனிப் பொறுப்புக்களும் பாதுகாப்புக்களும் என்பவை.

காந்தியடிகள் பூர்ண சுதந்திரம் கோரியதாலும், ஜின்னா அவர்கள் முஸ்லீம்களுக்குரிய விகிதாச்சாரத் தன்மை அதில் காணப்படவில்லை என்ற கருத்தை அறிவித்ததாலும் இந்த வெள்ளை யறிக்கைக் கருத்துக்களும் செயல்பட வில்லை,

இதன் விளைவாக (1934 Parliamentary Joint Select Committee) நாடாளுமன்ற இணைப்புப் பொறுக்குக்குழு லின்லித் கோவின் தலைமையில் அமைக்கப்பட்டது. 18 மாத உழைப் பிற்குப் பின், 1934-ஆம் ஆண்டு நவம்பர்த் திங்களில் அந்த இணைப்புப்பொறுக்குக்குழு தனது அறிக்கையை வெளியிட்டது. அந்த அறிக்கையிலும் ஆங்கில ஆட்சிக்கு உட்பட்ட 11 இந்திய மாநிலங்களில் முழுமையான பொறுப்புள்ள அரசாங்கங்கள் நிறுவப் படல் வேண்டுமென்றும் சுதேச மன்னர்களில் 50%க்கு அதிகமாக மத்தியக் கூட்டாட்சியில் சேரும் பொழுது மத்தியக் கூட்டாட்சி அமைப்பு நிறுவப்படல் வேண்டுமென்றும் தெளிவாக்கப்பட்டது.

முழு மாநில சுயாட்சியைப் பற்றித் தெளிவாக எப்போதும் தனது கருத்தைக் கூறுத ''அகில இந்தியக் காங்கிரசுக் கட்சி'' ஆங்கிலப் பேரரசினல் இந்தியர்களுக்கு அவ்வப்போது வழங் கப்பட்ட பரிந்துரைகளைப் பற்றிக் கருத்துரைக்கும் போதெல் லாம் பொதுவான முறையிலேயே அவற்றைக் கண்டனம் செய்து வந்தது. 1935-ஆம் ஆண்டு சூலைத் திங்களில் கூடிய காங்கிரஸ் காரியக் கமிட்டி நிறைவேற்றிய தீர்மானத்தில்,

> ''ஆங்கில அரசின் அரசமைப்புத் திட்டங்களும் சீர்திருத்தங் களும் இந்திய மக்களின் விருப்பத்தை வெளிப்படுத்தாத முறையில் இருந்ததினல்தான் காங்கிரசு அவற்றைப் பல முறை மறுத்தளித்திருக்கின்றது. அரசமைப்புச் சபையில் முழுமையாக உருவாக்கப்படும் ஓர் அரசமைப்பையே காங்கிரஸ் எப்போதும் வலியுறுத்தி வந்திருக்கிறது.'' 3

என ''வெள்ளை அறிக்கையின் கருத்துக்களைப்'' பற்றிக் காங் கிரசு விமர்சனம் செய்தது.

அதற்கு முன்னர், 1934-ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்களில் நிறைவேற்றப்பட்ட காரியக் கமிட்டித் தீர்மானத்தில்,

> ''வயது வந்தோர்க்கு வாக்குரிமை என்ற அடிப்படையிலோ, அல்லது கூடிய வரை அது மாதிரியான தொரு வகையிலோ, தேவை ஏற்பட்டால் சிறிபான்மையினத்தைச் சார்ந்த வாக்

3 Mr. B. Pattabi Sitaramayya,
"The History of Indian National Congress" (1935)
Vol. II, Page 1016

காளர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அச்சபை உறுப்பினர்களை யும் சேர்த்துக் கொண்டியங்கும் ஓர் அரசமைப்புச் சபையில் வரையப்படும் இந்திய அரசமைப்புத்தான் (Indian Constitu--tion) 'வெள்ளைக் கருத்துக்களுக்கு' சரியானதொரு மாற்றுத் திட்டமாகும்.'' 4

என வலியுறுத்திற்று.

காங்கிரசின் இவ்விரு தீர்மானங்களும், ஓர் அரசமைப்புச் சபையால் உருவாக்கப்படும் இந்திய அரசமைப்பை வலியுறுத் துகிறதே யன்றி, இந்தியக் கூட்டாட்சியைப் பற்றி விமர்சிக்க வில்லை. இந்தியா விடுதலை பெற்ற பின்னர், தங்களுக்குப் பொருந்தக் கூடிய வகையிலும், தனது வன்மையான மத்திய அரசுக் கொள்கைக்குக் குந்தகம் ஏற்படாமலும் கூட்டாட்சி யமைப்பின் முறைகளை இந்தியாவில் உருவாக்கிக் கொள்ளலாம் என்ற காங்கிரஸின் உட் கருத்து அத்தீர்மானங்களில் தொக்கி யுள்ளது நமக்கு நன்கு புலனாகும்.

## II

## 1935-ஆம் ஆண்டு இந்திய அரசுச் சட்டத்தின் மாகாண சுயாட்சி

### [ GOVERNMENT OF INDIA ACT-1935 ]

நாடாளுமன்ற இணைப்புப் பொறுக்குக் குழுவால் வெளியிடப் பட்ட அறிக்கையின் அடிப்படையில் 1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்ட மசோதா உருவாக்கப்பட்டது. அம் மசோதா, 1935-ஆம் ஆண்டு ஜூன், ஜூலைத் திங்களில் இங்கிலாந்து நாடாளுமன்றத்தில் முன்னிலைப் படுத்தப்பட்டு, சில திருத்தங்களுடன் நிறைவேறி, 2—8—1935-ஆம் நாளில் ஆங்கில அரசின் இசைவையும் பெற்று, '1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டம்' என்ற பெயரைத் தாங்கி, புகழ் மிக்க ஓர் இந்திய அரசமைப்பாக வெளி வந்தது. விடுதலை பெற்ற இந்தியாவில் உருவாக்கப்பட்ட, நமது அரசமைப்புச் சட்டத் தின் மூல மாதிரியாக இச்சட்டம் திகழ்கிறது.

---

4 Ibid, OPP. Cited in Note 3, Page, 964

மொத்தம் 451 உறுப்புகளும் 15 அட்டவணைகளும் கொண்ட இச்சட்டம் பிரிட்டானிய நாடாளுமன்றத்தால் நிறைவேற்றப்பட்ட எல்லாச் சட்டங்களைக் காட்டிலும் நெடியதும் சிக்கல் மிக்கதும் பொருள் பொதிந்ததுமாகும். பின்னால் இந்திய அரசியல் அமைப்புச் சபையால் 1950–இல் உருவாக்கப்பட்ட நமது இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் நூற்றுக்கு எண்பது பகுதிகள் இந்தச் சட்டத்தின் நகல் பதிப்பேயாகும். இந்த 1935–ஆம் ஆண்டுச் சட்டத்தின் அமைப்பு, உருவம் மற்றும் செயல்முறை ஆகியன, நமது தற்போதைய அரசமைப்புச் சட்டத்தில் பெருவாரியாகக் கையாளப்பட்டுள்ளன.

''1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டம்,''இந்தியத் துணைக்கண்டத்தில் ஓர் இந்தியக் கூட்டாட்சியை உருவாக்கும் நோக்கத்துடனேயே வரையப்பட்டது. கூட்டாட்சி அரசியல் முறையை நிறுவி, இந்திய மாநிலங்களில் தன்னாட்சி நிலவ வழிவகை செய்தலே இதன் கொள்கை ஆகும்.

அன்றிருந்த இந்திய அரசின் ஒற்றையாட்சியை மாற்றி, அதனைத் தன்னாட்சி கொண்ட மாநில ஆட்சிகளாகப் பகுத்து, அவைகளைச் சுதேச மன்னர்களின் அரசுகளோடு இணைத்து, மீண்டும் அவைகளையெல்லாம் ஒரு கூட்டாட்சியின் கீழ் நிறுவி, மாநிலங்களிலும் சுதேச சமஸ்தானங்களிலும் தன்னாட்சியை நிலை நிறுத்துவதுதான் இந்த 1935-ஆம் ஆண்டுச் சட்டத்தின் அடிப்படை அமைப்பு முறையாகும்.

1919–ஆம் ஆண்டின் சட்டத்தில் உருவான இந்திய மத்திய அரசின் மூலமாகவே மாநிலங்கள் தனது நிர்வாகச் சட்டமியற்றும் அதிகாரங்களைப் பெற்றன. அன்றைய இந்திய அரசு, லண்டனில் இருந்த இந்திய அரசுச் செயலர் குழுவால் இயக்கப்பட்டது. ஆனால் 1935–ஆம் ஆண்டின் அரசமைப்புச் சட்டத்தால் இந்திய மாநில அரசுகளும் மத்திய அரசும் கட்டுப்படுத்தப்பட்ட ஆட்சியுரிமைகளை நேரடியாக ஆங்கில அரசிடமிருந்தே பெற்றன.

இந்திய அரசுச் செயலர் குழுவும் இச்சட்டத்தால் அழிக்கப்பட்டது. மாநில ஆளுனரும், மத்திய அரசுப் பிரதிநிதியும் (வைஸ்ராய்) அவரவர்களின் விருப்பு அதிகாரங்களைப் (Discre–-tionary Powers) பொருத்த மட்டிலுமே லண்டனில் இருந்த

இந்திய அரசுச் செயலருக்குப் பொறுப்பானவர்கள். மற்ற வகையில் மாநில ஆளுநர்களும் மத்திய அரசின் அரசுப் பிரதிநிதியும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்ட மன்றங்களின் அமைச்சர் குழுவின், ஆலோசனை மற்றும் உதவியின் பேரிலேயே இயங்க வேண்டும். அஃதாவது, மாநில அரசுகளுக்கு ஆளுநர்களும், மத்திய அரசுக்குக் கவர்னர் ஜெனரலும் அரசமைப்புத் தலைவர்களாக இருப்பர்.

மாநில நிர்வாகம் கவர்னரது பெயரால் மாநில அமைச்சரவையாலும், மத்திய அரசின் நிர்வாகம் கவர்னர் ஜெனரலின் தனி அதிகாரங்களைத் தவிர்த்து மற்ற வகையில், கவர்னர் ஜெனரலின் பெயரால் — மத்திய அமைச்சரவையாலும் நிர்வகிக்கப்படும். மத்திய அமைச்சரவை மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட நாடாளுமன்றத்திற்குப் பொறுப்பானது. மாநில அமைச்சரவை மாநிலச் சட்டமன்றங்களுக்குப் பொறுப்பானது. அஃதாவது குறிப்பிட்ட பல தொகுதிகளிலிருந்து, தேர்ந்தெடுக்கப்படும் மக்கள் பிரதிநிதிகள் அங்கம் வகிக்கும் நாடாளுமன்றமும் மாநிலச் சட்டமன்றங்களும் மக்களுக்காக, மக்களரசை நிருவகிக்கும் நாடாளுமன்றக் குடியாட்சி முறையில் (Parliamentary Democracy) ஆட்சி நடாத்த இச்சட்டம் முதன் முறையாக வழிவகை செய்தது.

ஆனால் மத்திய அரசமைப்பில், இரட்டை ஆட்சிமுறை உருவாக்கப்பட்டது. நாட்டுப் பாதுகாப்பு, வெளிநாட்டுக் கொள்கை, பழங்குடிப் பகுதிகளின் நிர்வாகம் மற்றும் மத விவகாரங்கள் ஆகிய இந்நான்கு அதிகார இனங்களை மட்டும் கவர்னர் - ஜெனரலால் நியமிக்கப்பட்ட மூன்று உறுப்பினர்களைக்கொண்ட ''கௌன்சில்'' மூலமாக, கவர்னர் ஜெனரலே தனித்து நிர்வகிப்பார். மற்ற எல்லா அதிகார இனங்களிலும், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அமைச்சர்களே நடத்துவர்.

இந்திய நாடாளுமன்றத்தில் — மத்தியச் சட்டப் பேரவை, மாநிலங்களின் அவை என்ற இரு சபைகள் இருக்கும். மத்தியச் சட்ட மன்றத்தில் இந்திய மாநில மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட 250 உறுப்பினர்களும் சுதேச மன்னர்களின் பிரதிநிதிகளான 125 உறுப்பினர்களும் அங்கம் வகிப்பர். மாநிலங்களின் அவையில், இந்திய மாநிலங்களை எதிரொலிக்கும் 156 உறுப்பினர்களும் இந்திய மன்னர்களின் பிரதிநிதிகள் 104 பேரும் அங்கம் வகிப்பர்.

வட்ட மேசை மாநாடுகளில் கூட்டாட்சி அமைப்பு முறையை முழுக்க ஏற்றுக் கொண்ட சுதேச மன்னர்கள் 1935-ஆம் ஆண்டின் சட்டத்தால் ஏற்படுத்தப்பட்ட இந்தியக் கூட்டாட்சி அரசமைப்பை ஏற்றுக் கொள்ளாததால், இந்திய நாடாளு மன்றத்திற்குத் தங்களது பிரதிநிதிகளை அனுப்ப வில்லை. இந்தியக் கூட்டாட்சியுடன் தனித்தனி ஒப்பந்தங்கள் மூலமாக சுதேச மன்னர்கள் இணைந்து கொள்ளவுமில்லை. எனவே, மத்தியக் கூட்டாட்சி அமைப்பு—அதாவது நாடாளு மன்றத்தால் இயக்கப்படும் மத்திய அரசு — இறுதி வரை அமுலுக்கு வரவில்லை.

ஆளுநர் மாநிலங்களில் இருசபைகள் உருவாக்கப்பட்டன. ''வயது வந்தவர்களுக்கு வாக்குரிமை'' என்ற பரந்த குடியரசு முறை அன்றிருக்க வில்லை. மதச் சார்பு கொண்ட தொகுதிகள், பால் (Sex) சார்ந்த தொகுதிகள், தனி நலன்களுக்கான தொகுதி கள் ஆகியவைகளிலிருந்தே மாநிலச் சட்டசபைக்கு உறுப்பி னர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அவை தவிரத் தாழ்த்தப் பட்டவர்களுக்கும் பெண்களுக்கும் தனி இடங்கள் ஒதுக்கப் பட்டிருந்தன. தொழிலாளர்கள், பல்கலைக் கழகங்கள், நிலக் கிழார்கள், தொழில் மற்றும் வாணிகத் துறையினர் ஆகியவர் களுக்கும், இந்தச் சபைகளில் '' தனிப் பிரதிநிதித்துவம் '' கொடுக்கப்பட்டது.

''1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டம் '' உரு வாக்கிய மாநிலச் சட்ட மன்றங்களுக்கு நடைபெறும் தேர்தல் களில், மொத்த மக்கள் தொகையில் 100-க்கு ஏறத்தாழ 14பேர் மட்டுமே வாக்காளர்களாக இருந்தனர். சுருங்கக் கூறின், 'வயது வந்தவர்களுக் கெல்லாம் வாக்குரிமை' என்பதைத் தவிர்த்து, மற்றபடி அமைப்பு, நிர்வாகப் பாணி, முறைமை, நடவடிக்கைகள், சட்டமன்ற ஏற்பாடுகள், மரபுகள், ஆட்சியமைப்பு முதலிய எல்லா வகைகளிலும்—இன்றிருக்கும் சட்ட மன்றங்களும் அமைச்சரவை யும் எவ்வகையில் இயங்குகிறதோ, அதேவகையில் 1935-ஆம் ஆண்டின் அரசுச் சட்ட அமைப்பிலும் மாநிலச் சட்ட மன்றங்களும் அமைச்சரவையும் ஆட்சிமுறையும்—இயங்கி வந்தன.

1935-ஆம் ஆண்டின் அரசுச் சட்டத்தால் ''கட்டுப்படுத்தப் பட்ட முழு மாநில சுயாட்சி'' மாநிலங்களுக்குக் கிடைத்தன. மத்திய அரசும் மாநில ஆளுநர்களும், மாநிலங்களுக்கென

ஒதுக்கிய அதிகார இனங்களில் தலையிடவும் அவைகளைக் கட்டுப்படுத்திடவும், இச் சட்டத்தில் வழி வகைகள் செய்யப் பட்டன. அக் கட்டுப்பாடுகள் நீங்கலாக மற்ற அனைத்து வகைகளிலும் மாநிலங்கள், தனக்கென ஒதுக்கப்பட்ட அதிகார இனங்களில் முழு சுயாட்சியுடன் நிர்வாகம் நடத்தலாம். மாநில நிர்வாக அமைப்புகளின் தரத்தையும் தகுதியை யும் அதிகாரங்களையும் நிர்வாகத்தையும் முழு சுயாட்சி கொண்ட தால், இச்சட்டம் மாற்றியமைத்து விட்டது. இந்தியாவின் மத்திய அரசைப் போலவே மாநில அரசுகளும் அதன் தன்மைகளையும் அதிகாரங்களையும் அமைப்பு முறைகளையும் அரசியல் சட்டத்தின் மூலமாகப் பெற்றுக் கொண்டன. மத்திய அரசு கொடுக்கும் அதிகாரங்களைக் கொண்ட மாநிலங்களாக அது வரை இருந்து வந்த நிலைமை மாறி, அரசியல் சட்டத்தால் பிரித்தளிக்கப்பட்ட அதிகாரங்களைக் கொண்ட தனி மாநிலங்களாக [இச் சட்டத்தின் மூலமாக] மாறி விட்டன.

### சட்டம் செய்யும் அதிகாரப் பிரிவினை

1935-ஆம் ஆண்டுச் சட்டத்தில், சட்டமியற்றும் அதிகா ரங்களை மூன்று பட்டியல்களாகப் பகுத்துள்ளனர். மத்திய அரசிற்கு 59 அதிகார இனங்களும் மாநிலங்களுக்கு 54 அதிகார இனங்களும் மத்திய அரசும் — மாநில அரசும், தேவை யேற் படும்போது சட்டமியற்றிக் கொள்ளப் பொதுவான 36 அதிகார இனங்களும் முறையே மத்தியப் பட்டியல், மாநிலப் பட்டியல், மைய — மாநிலப் பொதுப்பட்டியல் எனத் தொகுக்கப்பட்டன. இவை போக வரையறுக்கப்படாத "எஞ்சிய அதிகாரங்கள்" (Residuary Powers) கவர்னர் ஜெனரலிடம் ஒப்படைக்கப் பட்டன. அவர், இந்திய நாட்டின் பொதுவான நலன் குறித்து, தேவைக்கும் சூழ்நிலைக்கும் காலத்திற்கும் ஏற்ப மத்திய அரசிற்கும் — மாநில அரசிற்கும் அவ்வப்போது அந்தந்த எஞ்சிய அதிகாரங்களை வழங்குவார்.

### மத்திய அரசின் மேலாட்சி

1935-ஆம் ஆண்டுச் சட்டத்தில் மத்திய அரசுச் சட்டங் களுக்கும் அச்சட்டங்களைத் தழுவிய மத்திய அரசின் நிர்வாகத் திற்கும் குந்தகம் ஏற்படாத முறையிலேயே மாநில நிர்வாகங்

கள் இருத்தல் வேண்டுமென்ற அடிப்படை விதிகளிருந்தன. அவைகளை அமுல்படுத்தத் தேவையான எல்லாக் கட்டளைகளையும் மத்திய அரசு மாநிலங்களின் மேல் பிறப்பித்து, மாநிலங்களை அதன்படி ஒழுகும் வகையில் நிர்ப்பந்திக்கலாம். மத்திய அரசின் செய்தித் தொடர்புகள் (Means of Communications) முதலானவைகளை, மாநிலங்கள் பேணிக் காக்க வேண்டும். அதற்குரிய கட்டளைகளை மாநில அரசுகளின் மேல் மத்திய அரசு பிறப்பிக்கலாம்.

### மாநிலங்களின் நெருக்கடி நிலை

"போர் மற்றும் நாட்டுக் குழப்பம்" என்ற பெயரால், மாநிலங்களின் அமைதிக்கு ஊறு ஏற்பட்டுள்ளது எனக்கூறி, "நெருக்கடி நிலை" (Emergency) யைப் பிரகடனப்படுத்தி ஆளுநரின் மூலமாக மத்திய அரசே மாநிலங்களின் நிர்வாகத்தைப் பறித்துக் கொள்வதற்கும் 1935-ஆம் ஆண்டுச் சட்டத்தில் வழிவகை செய்யப்பட்டிருந்தது.

### ஆளுநர்

மாநிலச் சட்ட மசோதாக்களை, மாநிலச் சட்ட மன்றங்கள் நிறைவேற்றினாலும் கவர்னர் ஜெனரலின் இசைவிற்காக (Assent) மாநில ஆளுநர் அவைகளை ஒதுக்கி வைத்துவிடலாம். அதைக் கவர்னர் ஜெனரல் ஏற்கலாம்; அல்லது மறுக்கலாம்.

1935-ஆம் ஆண்டுச் சட்டத்தில் மாநில ஆளுநர்களுக்கு மூவகை உரிமைகள் கொடுத்திருந்தனர். அவற்றில் ஒன்றுதான் மாநில அமைச்சரவையின் ஆலோசனையுடனும் உதவியுடனும் (In Aid and Advice of Cabinet) ஆளுநர் செயல்படுவதாகும். இன்னொரு வகையான "தனித்த அதிகாரங்களைப்" பயன்படுத்தி மாநில அமைச்சரவைகளை உருவாக்கவும் கலைக்கவும், அதிகாரிகளையும் சிறுபான்மையினரையும் காக்கவும், கவர்னர் ஜெனரலின் கட்டளைகளை அமுல்படுத்தவும் ஆளுநர்களுக்கு உரிமையுண்டு. "விருப்பு அதிகாரங்களின்" மூலமாக "அவசரச் சட்டங்களைப்" (Ordinances) பிறப்பிக்கவும் "அரசு ஊழியர்களின் தேர்வாணைக் குழுவை" (Public Service Commission) நியமிக்கவும் ஆளுநர்களுக்கு உரிமையுண்டு. ஆளுநரின் "விருப்பு அதிகாரங்கள்" இவையிவை எனத் தெளிவுபடக் கூறும் கவர்னர் ஜெனரலின் 'குறிப்பு ஆணைகளும்' (Instrument of Instructions) அன்று இருந்தன.

நிதியுறவுகள்

மத்திய மாநிலங்களுக் கிடையில் நிதிப் பங்கீடுகள், மானியங்கள் (Grants) வரிவிதிப்பு மற்றும் வரி வசூல் செய்யும் வகைகள் ஆகியவை 1935-ஆம் ஆண்டுச் சட்டத்தில் எவ் வகையில் இருந்ததோ, ஏறத்தாழ அவ்வகையிலேயே சிற் சில மாற்றங்களுடன் இன்றைய நமது அரசமைப்பிலும் கைக் கொள்ளப்பட்டுள்ளன.

நமது இன்றைய அரசியல் சட்டம் 1935-ஆம் ஆண்டின் அரசுச் சட்டத்தை அப்படியே பெயர்த் தெடுத்துக் கொண் டுள்ளது. இன்றைய அரசியற் சட்டம்,அதன் அமைப்பு (Form), பிரிவுகள் (Articles), மொழி அமைப்பு (Language), உட் கூறு ( Contents ) மற்றும் நடை ( Style ) ஆகியவைகளில் ஏறத்தாழ நூற்றுக்கு எண்பது பங்கை ஆங்கிலேயரின் ''1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தையே ஏற்றுக் கொண்டுள்ளது.''

ஆங்கில அரசு தந்த''1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தால்" படைக்கப்பட்ட மத்திய அரசு, எவ்வகையில் மாநிலங்களையும் மாநில அரசுகளையும் மாநில சுயாட்சியையும் நிர்வாகக் கட்டுப்பாடுகளாலும் சட்டமியற்றுத்துறை ஊடுருவல் களாலும் நெருக்கிச் சுருக்கிக் கட்டுப்படுத்தி வந்ததோ—அதே முறைகளில், ஏன்? ஒருவகையில் அதற்கும் அதிகமாகக்கூட— சுதந்திர நாட்டின் மத்திய அரசு, இன்றைய மாநிலங்களையும் மாநில சுயாட்சியையும் ஆட்டிப் படைத்து வருகின்றது.

1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தின்படி மாநில அதிகார இனங்கள் தனித்த பட்டியலில் வகுப்பட்டிருந் தாலும் அன்றைய (ஆதிபத்திய) மத்திய அரசு தன்னுடைய ஆணைக் கட்டுப்பாடுகள் மூலமாகவும் நெறி முறைப்படுத்தும் கட்டளைகள் மூலமாகவும் மாநிலங்களின் அதிகார வரம்பெல்லைக் குள் தலையிடலாம் என்ற நிலை இருந்தது. தேவை யேற்படின் மாநில சுயாட்சியைக் கூட மத்திய அரசு, தடைப்படுத்தலாம். நிதித் துறையில் மாநிலங்கள் அன்றைய மத்திய அரசையே அண்டிக் கிடக்கும் நிலையும், 'நெருக்கடி நிலை' என்ற பெயரால் மாநிலங்களின் முழு நிர்வாகத்தையும் மத்திய அரசு செயலற்ற தாகச் செய்து விடும் பான்மையும், 'ஆளுநர்கள்' மூலமாக

மாநிலங்களின் சட்டமியற்றுத் துறையும் நிர்வாகத் துறையும் மத்திய அரசின் கவர்னர் ஜெனரலால் ஆட்டி வைக்கப்படும் தன்மையும், 1935-ஆம் ஆண்டுச் சட்டத்தின் மாநில சுயாட்சியைக் கட்டுப்படுத்தும் தனிச் சிறப்புகளாயிருந்தன.

காரணம் — அது அந்நிய அரசு; ஆதிக்க அரசு; ஆனால் இன்றைய " நமது சுதந்திர அரசில் " —குடியரசில்—மாநிலங்களை அடிமையாக்கும் அதே சட்ட விதிகள் எடுத்தாளப் பட்டுள்ளனவே, ஏன்? மாநிலங்களைப் பொறுத்தவரை இன்றைய டெல்லி அரசும் ஒருக்கால் ஆதிக்கம் கொண்ட ஓர் அந்நிய அரசோ?

இவ்வினாவிற் குரிய தெளிவான விடையையும் விளக்கத்தையும் இந்நூலின் மூன்றும் பகுதியின் முதல் அத்தியாயத்தில் காண்க.



## 10. "வளர்ச்சி பெற்ற மாநில சுயாட்சியில் கிளர்ச்சி செய்த காங்கிரசுக் கட்சி"

" 1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டப்படி மகாணங்களுக்குக் கொடுக்கப்பட்ட அதிகாரங்கள், (மாகாண) சுயாட்சி என்றுதான் அழைக்கப்பட்டது. ஆனால் அந்த "மாகாண சுயாட்சியை" அன்றையத் தேசியவாதிகள் - காங்கிரஸ் தலைவர்கள் யாரும் மாகாண சுயாட்சி என்று ஏற்றுக் கொள்ளவில்லை. அதனைக் " கவர்னர் சுயாட்சி " என்ற செல்லப் பெயரிட்டே அன்றைக்கு அழைத்தார்கள். ஆனால் காங்கிரஸ் கட்சியினரால் கண்டிக்கப்பட்ட அந்தக் " கவர்னர் சுயாட்சி " இன்றைய (நமது) அரசியல் சட்டத்திலிருந்து நீக்கப்பட்டு விட்டதா என்றால், நீக்கப்படவில்லை........... "

"......அந்த 1935-ஆம் ஆண்டுச் சட்டம்தான் இன்றைக்கும் ( நமது அரசியல் சட்டமாக ) இருக்கிறது. அன்றைக்கு - 'உடைத் தெரியப்பட வேண்டும்' - 'நொறுக்கப்பட வேண்டும்' - 'கிழித்தெரியப்பட வேண்டும்' - 'அதனை எதிர்த்து நாடெங்கும் அர்த்தால் அனுஷ்டிக்கப்பட வேண்டும்' என்றெல்லாம் கூறினோம்...... அது ( அச்சட்டத்தைப் போன்ற நமது இன்றைய அரசியல் சட்டம் ) திருத்தப்பட வேண்டாமா என்பதுதான் நம்முடைய கேள்வி?".1

... டாக்டர். கலைஞர் கருணாநிதி அவர்கள்.

---

1. தமிழக மேலவையில் 28-4-1974-ஆம் நாளில் ஆற்றிய பேருரையின் ஒரு பகுதி. 16-5-1974, தமிழரசு இணைப்பு. 'மாநில சுயாட்சி' பக். 57—59.

1935–ஆம் ஆண்டின் அரசுச் சட்டத்தால் மாநிலங்களுக்கு வழங்கப்பட்ட "கட்டுப்படுத்தப்பட்ட மாநில சுயாட்சி" குறித்தும், அதன் குறைநிறைகளைப் பற்றியும் நாம் சென்ற அத்தியாயத்தில் பரிசீலனை செய்தோம். அச்சட்டம் தந்த மாகாண சுயாட்சியில் காங்கிரஸ் கட்சி செய்த "சாதனைகளை" இங்கு பரிசீலிப்போம்.

1935–ஆம் ஆண்டுவரை மாநிலச் சட்ட மன்றங்களிலும் மத்திய சட்டப்பேரவையிலும் அகில இந்தியக் காங்கிரஸ் கட்சி பங்கேற்றுக் கொள்ளவில்லை. அரசாங்கப் பொறுப்புக்களின் சிக்கல்களை உணராமல் ஆங்கில அரசால் கொடுக்கப்பட்ட எல்லாச் சலுகைகளையும் அரசமைப்பு முறையையும் அடியோடு எதிர்த்து, காங்கிரஸ் கட்சி விமர்சித்துக் கொண்டிருந்தது. இந்திய அரசியலமைப்பு முறை பற்றிய திட்டத்தைப் பொருத்தவரை அக்கட்சி எதிர்மறைக் கொள்கைகளையே (Negative Policy) வெகுகாலம் கைக்கொண்டு இயங்கி வந்தது. ஆனால் இந்தியாவின் மிகப் பெரிய அரசியல் கட்சியாக விளங்கிய காங்கிரஸ், வெறும் எதிர்மறைக் கொள்கைகளினாலேயே தனது அரசியல் குறிக்கோளை நிறைவேற்றிக் கொள்ள முடியவில்லை. அதுவும் அரசியலின் சில நிர்ப்பந்தச் சூழ்நிலைக்குக் கட்டுப்பட வேண்டியதாயிற்று. எனவே மாநில சுயாட்சி பற்றித் திட்டவட்டமான எந்தக் கருத்தையும் கூறாதிருந்த காங்கிரஸ் கட்சி, தானே மாநிலங்களின் ஆட்சியை ஏற்றுக் கொள்ள வேண்டிய நிலைக்கு 1937–ஆம் ஆண்டில் தன்னை ஆட்படுத்திக் கொண்டது.

1937-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் முதல் நாளில் இந்திய அரசுச் சட்டத்தின் **மாநில அமைப்பு** அமுலுக்கு வந்தது. அதனடிப்படையில் 1937–ஆம் ஆண்டு நடைபெற்ற மாநிலச் சட்ட மன்றங்களுக்கான பொதுத் தேர்தலில் காங்கிரஸ் கட்சியும் போட்டியிட்டது. பெருவாரியாக வெற்றியும் பெற்றது. காங்கிரசுக் கட்சி 8 மாநிலங்களில் அமைச்சரவையை அமைத்தது. மாநிலங்களின் அரசுப் பொறுப்புக்களையும் ஏற்றுக் கொண்டன.

ஆனால் "கட்டுப்படுத்தப்பட்ட சுயாட்சியினைக்" கொண்ட மாநில அரசுகளை இயக்கும்போது — ஆங்கிலேய ஏகாதிபத்தியம் தன் முழு வலிவுடன் அவ்வரசுகளில் தலையிடாதிருந்தும்

கூட—மத்திய அரசின் இடையூறுகளையும் கட்டுப்பாடுகளையும் அரசியற் கட்டளைகளையும் தனது இருபத்தேழு மாத ஆட்சிக் காலத்திலேயே காங்கிரஸ் கட்சியால் தாங்கிக் கொள்ள முடியவில்லை.

''தலைவலியும் காய்ச்சலும் தனக்கு வந்தால்தான் தெரியும்'' என்பது வழக்காற்றில் உள்ள கொச்சைப் பழமொழி. மாநில அரசுப் பொறுப்பை ஏற்றிருந்த காங்கிரஸ் கட்சி மாநில ஆளுநர்களுடனும் மத்திய அரசுடனும் குறுகிய கால அளவிலேயே மோதிக் கொண்டது. அதனுல் ஏற்பட்ட விளைவுகள் என்ன? மாநில சுயாட்சியின் வளர்ச்சிக்கு அவை எவ்வகையில் அவை துணை நின்றன என்ற வரலாற்றுப் பகுதியை இவண் ஆய்வோம்.

புதுச் சட்டத்தை முறியடிக்க

1935–ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தைஇந்தியத் தேசியக் காங்கிரஸ் முழுமையாக ஏற்க மறுத்து விட்டது.

> ''இந்திய மக்களை என்றென்றும் அடிமைப்படுத்தி வைப்பதற்கும், இந்திய மக்களைச் சுரண்டுவதற்கும் செய்யப்பட்ட ஏற்பாடு அச்சட்டம்.'' 2

எனக்கூறி, காங்கிரஸ் அதை முதலில் உதறித் தள்ளி விட்டது.

காந்தியடிகள் 1934-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்திலேயே ஒத்துழையாமை இயக்கத்தைத் திரும்பப் பெற்றுக்கொண்டார்.

> ''ஒத்துழையாமை இயக்கத்தைப் போலவே சட்ட மன்றங்களில் பொறுப்பேற்றுக் கொள்ளவும் காங்கிரசுத் திட்டத்தில் — பிரிக்க முடியாத, ஆனுல் தனித்தியங்கக் கூடிய — பகுதி இயங்கும்...... ஆனுல், சூழ்நிலையாலும், நண்பர்களுடைய அன்புக்கும் வேண்டியே சட்டமன்றங்களில் நுழைவதை நான் ஏற்றுக் கொள்கிறேன்.'' 3

எனவும்,

---

2 The Indian National Congress Resolutions, 1934-'36, Page. 77

3 Quoted in "Pilgrimage to Freedom" (1967), Page. 373, By Dr. K. M. Munshi

''கற்றறிந்த மக்களைத் துருப்பிடிக்க வைக்கும் நிலையை நாம் விலக்கிட வேண்டும் என்பதே என்னுடைய அசைக்க முடியாத கருத்தாகும். சட்ட மன்றங்களில் நுழையும் திட்டத்திற்கு நான் கருத்து வேறுபாடு கொண்டவனாக இருந்தாலும், காங்கிரசுக் கட்சியின் ஒரு பகுதியினர் திருப்தியுற்று, செயலற்று, சோம்பலோடு இருப்பதைக் காட்டிலும் சட்டமன்ற நுழைவுத் திட்டத்தை அவர்களும் பின்பற்றுவதற்காக நான் வரவேற்கிறேன்." 4

எனவும், காந்தியடிகள் காங்கிரஸ் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொள்வதைப் பற்றி வரவேற்றுக் கூறினார்.

அகில இந்தியக் காங்கிரசின் ஒரு பகுதியான ஆட்சி மன்றக் குழு (Parliamentary Board) 1934-ஆம் ஆண்டு மேத் திங்களில் நடைபெற்ற அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியால் உருவாக்கப்பட்டு, அதில் 25 தலைவர்கள் இடம் பெற்றனர்.

இறுதியில் 1936-ஆம் ஆண்டு டிசம்பரில் பெய்ஸ்பூரில் (Faizpur)நடைபெற்ற50-ஆவது அகில இந்தியக் காங்கிரஸ் கட்சி மாநாட்டில் 1935-ஆம் ஆண்டுச் சட்டத்தில் ஏற்படுத்தப்பட்ட மாகாணச் சட்ட மன்றங்களுக்கான பொதுத் தேர்தல்களில் கலந்து கொண்டு, வெற்றி பெற்றுப் பின்னர், சட்டசபைக்கு உள்ளே யிருந்தும் வெளியே இருந்தும் அந்த வெள்ளையனின் சட்டத்தை எதிர்த்துப் போராடி முறியடிப்பது என்ற முடிவைக் காங்கிரஸ் கட்சி மேற்கொண்டது.

1937-ஆம் ஆண்டின் துவக்கத்தில் நடைபெற்ற மாநிலச் சட்ட மன்றத் தேர்தல்களில், சென்னை, பம்பாய், ஒரிசா, பீகார், உத்திரப் பிரதேசம், மத்தியப் பிரதேசம் போன்ற 8 மாநிலங்களில் காங்கிரசுக் கட்சி நிகரப் பெரும்பான்மையைப் பெற்றது. அசாம், வங்காளம், வடமேற்கு எல்லைப்புற மாகாணம் ஆகியவைகளில் காங்கிரசுக் கட்சி மிக அதிகமான இடங்களைக் கைப்பற்றினாலும் அமைச்சரவை அமைக்கத்தக்க நிகரப் பெரும்பான்மையைப் பெற வில்லை.

அதன் பின்னர் மாநிலங்களில் அமைச்சரவையை அமைப்பது பற்றியும் மாநில அரசுகளின் பொறுப்பை ஏற்றுக் கொள்வது பற்றியும் காங்கிரஸ் தலைவர்களிடையே இருவேறு

4 Gandhiji's Letter to *Dr.* Ansari, 'Hindustan Times', [5-4-1934]. Quoted in Ibid, Note 3, Page. 37

முரண்பட்ட கருத்துக்கள் நிலவின. இராசாசி, பட்டேல், இராசேந்திர பிரசாத் ஆகியோர், விடுதலை இயக்கத்தை வலிமை செய்யக்கூடிய நோக்கத்தில் மாநில அரசுப்பொறுப்புக் களைக் காங்கிரஸ் கட்சி ஏற்றுக் கொள்ள வேண்டுமென்றும், பண்டித நேரு, நேதாஜி சுபாஸ் சந்திரபோஸ் ஆகியோர் மாநில ஆட்சிப் பொறுப்பினைக் காங்கிரஸ் ஏற்றுக் கொள்ளக் கூடாது என்றும் வாதாடினார்கள்.

இறுதியில், 1937-ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் நடை பெற்ற காங்கிரஸ் காரியக் கமிட்டியும் அகில இந்தியக் காங்கிரசும், காங்கிரஸ் கட்சி மாநில ஆட்சிப் பொறுப்புக்களை ஏற்றுக் கொள்வதற்குரிய இசைவைத் தந்தன.

''காங்கிரஸ் அமைச்சரவைகளிலும், அரசு நடவடிக்கை களிலும் மாநில ஆளுநர்கள் தலையிட மாட்டார்கள்'' என்பதைச் சட்ட மன்றக் காங்கிரஸ் கட்சியின் தலைவர் முதலில் தெளிந்து — அதனை அவர் வெளிப்படையாக அறிவித்த பின்னரே—காங்கிரஸ் கட்சியினர் மாநிலச் சர்க்கார்களில் அமைச்சர்களின் பொறுப்பை ஏற்றுக் கொள்ள வேண்டுமென அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி, தனது தீர்மானத்தில் நிபந்தனை (!) விதித்தது.

1937–ஆம் ஆண்டு சூலை மாதத்தில் கூடிய காரியக் கமிட்டியின் முடிவுப்படி,''புதுச் சட்டத்தை எதிர்ப்பதற்காகவும் நிர்வாகத் திட்டங்களை அமுல் படுத்துவதற்காகவும்'' மாநில அரசுகளில் காங்கிரஸ் கட்சி பதவி ஏற்றுக் கொண்டது.

> ''ஆனால் எந்த வொரு மாநிலக் காங்கிரஸ் அமைச்சரும் 1935–ஆம் ஆண்டின் இந்திய அரசுச் (அடிமைச்) சட்டத்தை எதிர்த்து முறியடிப்பதற்காக எந்த வகை முயற்சியையும் செய்ய வில்லை.'' 5

எனப் பழம் பெரும் காங்கிரஸ் தலைவராயிருந்த திரு. கே. எம். முன்ஷி அவர்கள் காங்கிரஸ் அமைச்சரவைகளைப் பற்றிக் கருத்துத் தெரிவிக்கிறார்.

---

5 "Pilgrimage to Freedom" (1967), Page. 44, By K. M. Munshi

## அது தியாகம்! இது தேசத் துரோகமா?

எட்டு மாநிலங்களில் காங்கிரஸ் அமைச்சரவைகளும், பஞ்சாப்பில் கூட்டு அமைச்சரவையும், வங்காளத்தில் கிருஷிக் பிரஜா கட்சியின் அமைச்சரவையும் பதவி யேற்றன. காங்கிரஸ் அமைச்சரவைகள் 1939-ஆம் ஆண்டின் இறுதியில் பதவி விலகும்காலம் வரையிலும்,மாநிலங்களின் சுயாட்சியைப் பாதிக்கும் வகையில் மாநில ஆளுநர்கள் தங்கள் தனித்த அதிகாரங்களைப் பயன் படுத்தவில்லை. மாநிலக் காங்கிரஸ் அரசுகள்—பல்வேறு சர்ச்சைக்குரிய சட்டங்களை நிறைவேற்றிய போதும், பல எதிரிடையான நிர்வாக நடவடிக்கைகளை எடுத்த போதும், பொதுவாக ஆளுநர்கள் தலையிடத் தக்க சூழ்நிலைகள் ஏற்பட்ட போதும்கூட — ஆளுநர்கள் மாநில அரசுகளின் செயல்களில் தலையிடாமலேயே இருந்தனர். ஆனால் காங்கிரஸ் கட்சியின் ஆட்சியாளர்கள் — அவர்களது நிர்வாக வசதிக்காக முழுமையான மாநில சுயாட்சியையே — அன்றைய நிலையில் கேட்டு நின்றனர். அதனால் பல சிக்கல்களும், மோதல்களும் தவிர்க்க இயலாதனவாய் இருந்தன. அவை இன்றைய நிலைக்கும் பொருந்துபவையாக இருப்பதால் அவைகளிற் சிலவற்றை இங்கே குறிப்பிடுகிறோம்.

1935–ஆம் ஆண்டு இந்திய அரசுச் சட்டத்தின் பிரிவு 126 (5)-இன்படி, கவர்னர் ஜெனரல், தன்னுடைய மாநிலப் பொறுப்புகளை ஒழுங்காக நிர்வகிப்பதற்காக "மத்தியப் புலனாய்வு"த் துறை (C.I.D.)என்ற ஒரு தனி இலாக்கா, மத்திய அரசால் ஏற்படுத்தப்பட்டிருந்தது. மாநிலக் காவல் துறை (Provincial Police) மாநில அரசுகளுக்குக் கட்டுப்பட்டு விடுவதால், மாநில அரசின் நடவடிக்கைகளை மத்திய அரசு சரிவரத் தெரிந்து கொள்வதற்காகவே இந்த சி.ஐ.டி. நிறுவப்பட்டது. ஆனால் மத்திய அரசு, சி. ஐ. டி. மூலம் மாநில அரசுகளின் நடவடிக்கைகளைக் கண்காணிப்பதைக் காங்கிரஸ் அமைச்சரவைகளும் காங்கிரஸ் கட்சியின் மேலிடமும் விரும்ப வில்லை. எனவே, சி. ஐ. டியை ஒழிக்க வேண்டுமென்று காங்கிரஸ் போராடிற்று. காங்கிரஸ் அமைச்சர்களைக் கண்காணிக்கும் பிரிட்டானிய உளவாளிகள் என்ற சி. ஐ. டி. அதிகாரிகளை காங்கிரஸ் கட்சி விமர்சித்தது.

ஆனால், விடுதலை பெற்ற இந்தியாவில் தலைமை அமைச்சருக்குக் கீழே தற்போது இயங்கும் தனிப் புலனாய்வுத் துறையும் (Central Bureau of Intelligence) மத்திய அரசின் கீழ் இயங்கும் 'என்போர்ஸ்மென்ட் ஆப் டைரக்டரேட்' (Enforcement of Directorate) என்ற தனிப் பிரிவும் மாற்றுக் கட்சியைச் சார்ந்த மாநிலத் தலைவர்கள் மற்றும் காங்கிரசை எதிர்க்கும் பெரு மக்கள் ஆகியோர் மீது, காங்கிரஸ் அரசால் வேண்டும் போது விடப்படும் ஏவுகணைகளாக இயங்கி வருவதைப் பார்க்கிறோம். பழைய ஆங்கில அரசான சி. ஐ. டியுடன் தற்போதைய தனிப் புலனாய்வுத்துறை, ஒப்பிட்டுப் பார்க்கத் தக்க ஒன்றாகும். மத்திய அரசிலிருக்கும் ஆளும் கட்சியினுடைய அரசியல் கைப் பாவைகளாகவே அந்தத் துறைகள் இன்றும் பயன்படுத்தப் படுவது வெள்ளிடை மலை.

1939-ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்களில் உத்திரப் பிரதேசத்தில், காங்கிரஸ் கட்சியைச் சார்ந்த 15அரசியல் குற்றவாளிகளையும் பீகாரில் 23குற்றவாளிகளையும் அவர்களின் தண்டனைக் காலங்களைக் குறைத்து விடுதலை செய்ய வேண்டுமென்று உத்திரப் பிரதேசம் மற்றும் பீகார் மாநில அரசுகள் ஆளுநர்களுக்கு ஆலோசனை அளித்தபோது, அவற்றை ஏற்பதற்கில்லையென ஆளுநர்கள் மறுத்து விட்டனர். இதனால் "அரசு அமைப்பு நெருக்கடி" [Dead Lock] உருவாயிற்று. கவர்னர் ஜெனரல் தலையிட்டார். இது கொள்கை அளவில், மற்ற மாநிலங்களிலும் பரவிவிடும் என்பதை உணர்ந்த கவர்னர் ஜெனரல், நாட்டின் "அமைதியைப் பாதுகாத்தல்" என்ற அடிப்படையில்,தனது தனித்த அதிகாரங்களைப் பயன்படுத்தி, உத்திரப் பிரதேசம் மற்றும் பீகார் மாநில ஆளுநர்களுக்கு, குற்றவாளிகளை விடுதலை செய்யக்கூடாது என உத்தரவு பிறப்பித்தார். அவ்விரு மாநிலக் காங்கிரஸ் முதலமைச்சர்களும், இதனை எதிர்த்துப் பதவி விலகினர். ஆனால் இறுதியில், காங்கிரஸ் கட்சிக்கும் கவர்னர் ஜெனரலுக்கும் ஏற்பட்ட சமரசத்தின் பேரில் அக் குற்றவாளிகளின் மேல் விதிக்கப்பட்ட தண்டனைக்குரிய காரணத் தகுதிகளின் அடிப்படையில் மெல்ல மெல்ல விடுதலை செய்வதற்குக் கவர்னர் ஜெனரல் ஒத்துக் கொண்டார். காங்கிரஸ் முதலமைச்சர்களும் பதவி ஏற்றனர்.

ஆனால் 1968-ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்களில், மத்திய அரசு ஊழியர்களின் வேலை நிறுத்தம், கேரளாவில் நடைபெற்ற போது கேரள மாநில அரசின் ஒப்புதல் இல்லாமலேயே

“மத்தியக் காவல்துறைப் படை” கேரளாவிற்கு அனுப்பப் பட்டது. வேலை நிறுத்தம் செய்யும் ஊழியர்களை, மத்திய அரசின் கட்டளைகளுக்கு இணங்கக் கேரள அரசு கைது செய்து காவலில் வைக்கவில்லை என்பது மத்திய அரசின் குற்றச்சாட்டு. அவர்களைக் கைது செய்யாமலேயே மாநில அதிகாரத்திற்குட் பட்ட “மாநிலத்தின் சட்ட ஒழுங்கை” (Law and Order) நிலை நாட்ட முடியும் என்பது கேரள கம்யூனிஸ்டு முதலமைச்சரின் வாதம். அன்றிருந்த மத்திய உள்துறை அமைச்சர் திரு. சவான் அவர்கள், மத்திய அரசிற்கு மாநில நடவடிக்கைகளில் “கட்டளைகள்” பிறப்பிக்க அரசமைப்பு வகை செய்கிறது எனக் கூறி, அக்கட்டளையை மறுத்த மாநில அரசைக் கலைத்துவிடக் கூட ஆலோசனை வழங்கினர்.

1969-ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்களில், துர்க்காபூர் எஃகு ஆலை நிர்வாகக் கட்டிடத்திலிருந்த ஒரு கூட்டத்தின் மேல் மத்தியக் காவல்துறைப் படையினர் துப்பாக்கிப் பிரயோ கம் செய்தமையால் 60 பேர் காயமுற்றனர். மேற்கு வங்க அமைச்சர் திரு. ஜோதிபாசு அவர்கள், மாநில எல்லைக்குள் ளிருந்து மத்தியக் காவல்துறைப் படை வெளியேற வேண்டும் எனப் பணித்தார். மாநிலத்தின் “சட்டம் மற்றும் ஒழுங்கு” மாநில அதிகாரத்தின் எல்லைக்குட்பட்டன என்பது அமைச்சர் ஜோதிபாசு அவர்களின் வாதம். ஆனால் இந்திய அரசமைப்புப் படி, “மத்திய அரசிற்குச் சொந்தமான சொத்துக்களைப் பாது காப்பது மாநில அரசுகளின் பொறுப்பாகும். அதற்கு ஊறு நேரும்போது மத்திய அரசு, மாநிலங்களுக்குக் கட்டளையிட லாம். அதைத் தடுப்பதற்கு எந்த மாநிலங்களுக்கும் உரிமை யில்லை”, என மத்திய அமைச்சர் சவான் அவர்கள் நாடாளு மன்றத்தில் அறிவித்து அதை ஓர் அரசமைப்பின் கொள்கை யாக மாற்றி விட்டார். இவை, இன்றைய மாநிலங்களின் நிலை.

காங்கிரஸ் கட்சியைச் சார்ந்த சில குற்றவாளிகளைத் தங்களது மனம் போல் விடுதலை செய்வதற்கு அன்றைய ஆளுநர் மறுத்த காரணத்தால் அதை எதிர்த்துக் காங்கிரஸ் முதல்வர்கள் பதவி விலகினர். அதனைப் பிரிட்டானிய ஏகாதி பத்திய மத்திய அரசின் கொடுமை என்றும், மாநிலங்களின் தன்னுட்சி பறிபோகிற தென்றும் அன்றையக் காங்கிரஸ் தலை வர்கள் கூக்குரலிட்டனர். ஆனால், இன்றையக் காங்கிரஸ் மத்திய

அரசு, மாநிலங்களின் "சட்ட ஒழுங்கு" பிரச்சனையில் கூட நேரடியாகத் தலையிட்டு, அத்தலையீடு அரசியல் அமைப்புப்படி நியாய மானது தான் எனக் கொள்கை வகுக்கின்றனர். அன்றைய மத்திய அரசு, வன்மை கொண்ட ஏகாதிபத்திய அரசு என்றால், மாநிலங் களைப் பொறுத்த வரை — இன்றைய மத்திய அரசின் பெயரென்ன ?

பீகார் மாநிலத்தில் ஒரு படைப் பயிற்சிப் பள்ளியை மாநில அரசு தோற்றுவிக்க முயன்றதால் அன்றைய பீகார் மாநில அரசுக்கும் மத்திய அரசுக்கும் மோதல் ஏற்பட்டது. மாநில அரசு, படைப் பயிற்சிப் பள்ளியைத் தோற்றுவித்ததை மத்திய அரசு எதிர்த்தது. "பாதுகாப்பு" என்ற அதிகார இனம் மத்திய அரசைச் சார்ந்தது எனக் காரணம் காட்டி, பீகார் மாநில அரசுகளின் நடவடிக்கைகளில் அன்றைய மத்திய அரசு தலையிட்டது.

இன்றைய நிலை என்ன ?

அவ்வகையான முயற்சிகளை யெல்லாம் இன்றைய மாநில அரசுகளால் எண்ணிப் பார்க்கக் கூட முடியாது. மாநிலப் பட்டியலில் சேர்க்கப்பட்டுள்ள "கல்வி" என்ற மாநில அதிகார இனத்தில் கூட "இந்தியா முழுவதற்குமான ஒரே சீரான கொள்கை" என்ற பெயரால் மத்திய அரசு, தலையிட்டுப் பல திட்டங்களை உருவாக்கி, மானியங்களை வழங்கி, அவற்றை ஏற்கச் செய்வதற்காக மாநில அரசுகளைப் பலவந்தப்படுத்து கின்றது. இவ்வகையில் மாநிலத் தன்னாட்சியை முடமாக்கும் இன்றைய மத்திய அரசு நமது சுதந்திர நாட்டின் மத்திய அரசல்லவா ?

அன்று முழுமையான மாநில சுயாட்சி அதிகாரங்கள் வேண்டு மென்பதற்காக அடிமைப்படுத்தப்பட்ட இந்தியாவி லிருந்த காங்கிரஸ் கட்சி வெள்ளை ஏகாதிபத்திய அரசை எதிர்த் துப் போராடியது. ஆனால், விடுதலை பெற்ற இந்தியாவின் மாநிலங்கள் மேல் ஆணைக் கட்டளைகள் (Directives) மற்றும் கட்டுப்பாடுகளை விதித்து மாநில சுயாட்சியினை நொண்டியாக் கும் மேலாண்மை மிக்க ஒரு மத்திய அரசை அதே காங்கிரஸ் கட்சியினர் 1950-ஆம் ஆண்டின் இந்திய அரசமைப்பில் படைத்து வைத்துள்ளது ஏனோ ?

அன்று மாநிலக் காங்கிரஸ் அரசுகள் நடத்திய அதே மாநில சுயாட்சிப் போராட்டத்தைத் தான் இன்றைய மாநில அரசுகளும் அரசியல் கட்சிகளும் நடத்துகின்றன. அன்றைய போராட்டங்கள் மிக்க நியாயமானவை என்றும், சத்தியத்தின் பாற்பட்டவை என்றும், தியாகத்தை அடிப்படையாகக் கொண்டவை என்றும் புகழ் பெற்ற தென்றால்—இன்றைய ''மாநில சுயாட்சி''ப் போராட்டங்கள் யாவும் ''குறுகிய பிராந்திய உணர்ச்சி", ''நாட்டுப் பிரிவினை முயற்சி'', ''இந்தியத் தேசியத் துரோகம்" என அழைக்கப்படுவதற்குக் காரண மென்னவோ? காங்கிரஸ் செய்ததெல்லாம் தியாகமென்றால், மாநில சுயாட்சி கோரும் மற்ற கட்சிகளின் செயல்களெல்லாம் தேசத் துரோகமா?

## அன்றைய அரசு ஆதிபத்திய அரசு; இன்றைய அரசு......?

1939-ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்களில் இரண்டாம் உலகப் போர் துவங்கியது. ஆங்கில அரசு இந்திய நாட்டையும் போரில் ஈடுபட்ட நாடாக அறிவித்தது. ஆனால் இந்திய மக்களின் பிரதிநிதிகளையோ, அரசியல் கட்சிகளையோ கலந்து அந்த முடிவினை மேற்கொள்ளாமல், ஆங்கில அரசு திடீரென்று அந்த முடிவை அறிவித்ததால் இந்திய மாநிலங்களில் அரசியல் சிக்கல் உருவாயிற்று. மாநிலக் காங்கிரசு அரசுகள் இரண்டாம் போரில் ஆங்கில அரசுடன் ஒத்துழைக்க மறுத்த காரணத்தால், ''இந்திய அரசுச் சட்டத்தில்'' 126 (ஏ) என்ற ஒரு பிரிவைச் சேர்த்துவதற்காக, சட்டத் திருத்தத்தைக் கொண்டுவர, ஆங்கில அரசு நடவடிக்கை எடுத்தது.

அச்சட்டத் திருத்தத்தின்படி, போரினால் இந்திய நாட்டின் அமைதிக்குப் பங்கம் ஏற்படும்போது மத்திய அரசால் ''நெருக்கடி நிலை'' எனப் பிரகடனப்படுத்தப் படலாம்; ''நெருக்கடி நிலை'' அமுலில் இருக்கும்போது மாநில நிர்வாகம் எவ்வழிகளில் இயக்கப்பட வேண்டுமென்று, மத்திய அரசு — மாநில அரசுகளுக்கு ஆணைகளைப் பிறப்பிக்கலாம். மாநிலப் பட்டியலில் கண்ட அதிகார இனங்களில் மத்தியச் சட்ட மன்றம், சட்டங்களை இயற்றலாம். தேவை ஏற்படின் மாநில ஆட்சியைக் கூட மத்திய அரசு தானே மேற்கொண்டு நடத்தலாம். இவ்வகையில் 1935-ஆம் ஆண்டின் அரசுச் சட்டத்தால் முதலில் அளிக்கப்பட்ட மாகாண சுயாட்சிக்கு இத்திருத்தம் ஊறு விளைவித்தது.

இந்தியாவைக் கலந்து கொள்ளாமலேயே ஆங்கில அரசு இந்தியாவையும் இரண்டாம் உலகப் போரில் ஈடுபடுத்தி விட்டதால் இச்சட்டத் திருத்தத்தின் துணை கொண்டு இந்திய மாநிலக் காங்கிரஸ் அரசுகளின் மேல் "நெருக்கடி நிலை" என்ற பெயரால் ஆங்கில மத்திய அரசு, தலையிடும் என்பதைப் புரிந்து கொண்ட காங்கிரஸ் கட்சி, மாநிலக் காங்கிரஸ் அரசுகள் ''போர்'' ஒத்துழைப்பில் பங்கேற்க இயலா நிலையில், இறுதியாகப் பதவி விலக முடிவு செய்தன. அந்தச் சட்டத் திருத்தம் மாநிலத் தன்னாட்சியின் வேரை அறுத்து, மாநிலங்களை, ஏகாதிபத்திய மத்திய அரசின் வலுவற்ற ஏஜெண்டுகளாக மாற்றிவிடும் என்ற காரணத்தாலும் மாநிலக் காங்கிரஸ் அரசுகள் அத்திருத்தத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. காங்கிரசின் மேலிடம் எடுத்த முடிவிற்கிணங்க, 1939–ஆம் ஆண்டு அக்டோபர் இறுதியில் சென்னையில் இராசாசி அவர்களால் பதவி விலகல் தொடங்கப் பெற்று, நவம்பர் 15-ஆம் நாளுக்குள் எல்லா மாநிலக் காங்கிரஸ் அமைச்சரவைகளும் பதவி துறந்தன.

ஆனால் 1949-இல் அதே காங்கிரஸ் கட்சியின் உறுப்பினர்களைப் பெரும்பான்மையாகக் கொண்ட நமது அரசமைப்புச் சபையில் வடிக்கப்பட்ட இன்றைய இந்திய அரசமைப்பில், 1935-ஆம் ஆண்டின் அதே சட்டத் திருத்த விதி, நமது அரசியல் சட்ட விதி 356 ஆக நிரந்தரமாக நிலைநிறுத்தப்பட்டுள்ளது. அதைக்காட்டிலும், கொடூரமான முறையிலும் 356–ஆம் சட்ட விதி தயாரிக்கப்பட்டுள்ளது. தற்போதைய மத்திய நாடாளுமன்றம், மாநிலச் சட்ட அதிகார இனங்களில் சட்டமியற்றலாம். மாநில அதிகாரங்கள், பணிகள் முழுவதையும் இந்தியக் குடியரசுத் தலைவரே எடுத்துக் கொள்ளலாம். அப்பணிகளை அவர் எந்த அதிகாரிக்கு வேண்டுமெனிலும் ஒப்படைத்து விடலாம். மொத்தத்தில் மாநில அரசுகளின் சுயாட்சியையே 'நெருக்கடி நிலை' என்ற பெயரால் நிறுத்தி வைக்கத் தக்க பேரதிகாரங்களை இன்றைய மைய அரசு பெற்றிருக்கின்றது.

அன்றைய (பிரிட்டானிய ஏகாதிபத்திய) மத்திய அரசாங்கத்தின் கொடுமை நிறைந்த இந்த ''நெருக்கடி நிலை'' அதிகாரத்தை ''மாநில சுயாட்சியையே சிதைக்கும் மத்திய அரசின் பயங்கர ஆயுதம்'' எனச் சாற்றி அன்றையக் காங்கிரஸ் கட்சி அதனை முழு மூச்சுடன் எதிர்த்து அதனை நீக்கிட வேண்டுமென்று போராடியும் அச்சட்டவிதியை அகற்ற முடியாததினால்

மாநில ஆட்சிப் பொறுப்பினின்றும் காங்கிரஸ் அமைச்சரவைகள் விலகிவிட்டன. ஆனால் அதைக் காட்டிலும் கூடுதல் அதிகாரங்களைக் கொண்ட நமது சுதந்திர இந்திய மத்திய அரசு சாதாரண காலங்களில் கூட ''மாநிலத்தில் நெருடிக்கடி நிலை'' என்று பிரகடனப்படுத்தி, இன்றைய மாநில அரசுகளை மட்பாண்டங்களை உடைப்பதைப் போல் கலைத்தெறிவதைக் காணும்போது, தற்போது இயங்கும் அரசு விடுதலை பெற்ற நாட்டின் கூட்டாட்சி அரசா? அல்லது மாநிலங்களை வதைக்கும் ஓர் பேராண்மை கொண்ட மத்திய அரசா? என்ற அச்சமும் ஐயப்பாடும் நமக்கு எழுகின்றன.

காங்கிரஸ் பெற்ற வெற்றி — உண்மையில் முழுமையான மாநில சுயாட்சியின் வெற்றி; மத்திய அரசை எதிர்த்து அன்று காங்கிரஸ் நடத்திய போராட்டங்கள் — மாநில சுயாட்சிக்காக நடாத்திய போராட்டங்கள்; அன்றைய காங்கிரஸ் அமைச்சர்களின் பதவி விலகல் , முழு மாநில சுயாட்சி வேண்டுமெனக் கோரி மத்திய அரசை எதிர்த்து ஏவி விடப்பட்ட கண்டனக் கணைகள்.

காங்கிரஸின் பதவி விலகலுக்கு வேறு சில அரசியற் சூழ்நிலைகளும் காரணமாயிருந்தன என்பதும் உண்மையே. ஆனால், மாநில சுயாட்சியில் தலையீடு செய்யும் சட்டவிதியை எதிர்த்து, அது நீக்கப்பெற வேண்டுமென்று போரிட்டு, அதற்காகவே இறுதியில் காங்கிரஸ் அமைச்சரவைகள் பதவி விலகியதால் மாநில சுயாட்சிக் கொள்கை அன்று நெடிது வளர்ந்ததேயன்றித் தேய வில்லை.

ஆனால் அதே அகில இந்தியக் காங்கிரஸ் கட்சி, இந்திய அரசமைப்புச் சபையில் நிறைவேற்றிய இன்றைய இந்திய அரசியற் சட்டத்தின் மூலமாக முழு மாநில சுயாட்சியை முற்றும் முடமாக்கி விட்டது. மேலும் சென்ற 24 ஆண்டுகளாகக் காங்கிரஸ் கட்சியால் இயக்கப்படும் 'நமது' சுதந்திர இந்தியாவின் மத்திய அரசால் ( முடமாக்கப்பட்ட ) மாநில சுயாட்சியும் கூட மெல்ல மெல்லச் சிதைக்கப்பட்டு உருமாறி விட்டது. காங்கிரஸ் கட்சியினால் எவ்வகையில் மாநில சுயாட்சி

சிதில மடைந்தது என்பதைப் பற்றியும், இ ந் தி ய த் துணைக் கண்டத்தில் ''ஒற்றையாட்சி முறைகளும்'', ''மாநில அடக்கு முறைகளும்'' எவ்வகையில் வளர்க்கப்பட்டன என்பதைப் பற்றியும் இந்நூலின் நான்காம் பகுதியில் ''ஒரு கட்சி ஆட்சி யினுல் ஏற்பட்ட ஒற்றை யாட்சி''என்ற அத்தியாயத்தில்,தொடக்க முதல் இறுதிவரை விரிவாக ஆராயப்பட்டுள்ளன.



# 11. மாநில சுயாட்சியின் எழுச்சிக்கேற்ற சூழ்நிலை — தற்கொலையா? தனி நாடா? —

"பாக்கிஸ்தான் தனி நாடாவதை உலகின் எந்த ஒரு சக்தியும் தடுத்து நிறுத்திவிட முடியாது என 1940-ஆம் ஆண்டில் ஜின்னு அவர்கள் பிரகடனப் படுத்தியபோது, கற்பனை உலகில் திரியும் ஒருவனுடைய தற்புகழ்ச்சி என எண்ணி, அதனை எள்ளி நகையாடினர். ஆனால் ஜின்னுவே 'எனக்குப் பாக்கிஸ்தான் வேண்டாம்' என்று கூறியிருந்தாலும், பாக்கிஸ்தான் தனித்துப் பிரிவதைத் தடுத்திருக்க முடியாது என்ற அளவிற்கு 1946-ஆம் ஆண்டில் பிரிவினை இயக்கத்தின் பேராற்றல் வளர்ந்து விட்டது.1"

—பேராசிரியர் K. R. பாம்வெல் அவர்கள்

இந்தியா விடுதலை பெறுவதற்கு முன், உருண்டோடிய 10 ஆண்டுகள் இந்திய வரலாற்றின் மிக நெருக்கடியான காலப்பகுதியாகும். 1937-ஆம் ஆண்டிலிருந்து 1947-ஆம் ஆண்டு முடியப் 10 ஆண்டுகளில் இந்தியத் துணைக் கண்ட வரலாற்றில் திருப்புமையத்தைப் படைத்த, சிக்கல் மிகுந்த பல அரசியல் நிகழ்ச்சிகள் நடைபெற்றன. சில வெற்றிகள்; பல தோல்விகள்; இமாலயத் தவறுகள்—நாட்டுப் பிரிவினை ஆகியவையே அந்த நெருக்கடியான கால கட்டத்தின் அரசியல் விளைவுகள்.

பல அரசியல் விற்பன்னர்களும், சரித்திரப் பேராசிரியர்களும், இந்தக் காலப் பகுதியை வெவ்வேறு கோணங்களில் நுணுகி ஆய்ந்து, பல முரண்பட்ட முடிவுகளை வெளிப்படுத்து கின்றனர். ஏனெனில் அக்கால கட்டத்தில் சூல் கொண்ட இந்தியத் தாய், சுதந்திரத்தை ஈன்றெடுப்பதற்காகப் பேறு

---

1 The Foundations of Indian Federalism (1967), P. 232

கால வேதனையைத் தாங்கிக் கொண்டாள். ஏகாதிபத்திய அரசின் இறுதிச் சாகசங்களும், விடுதலை இயக்கத்தின் விபரீத முடிவுகளும், அரசியற் கட்சிகளின் கடைசிப் போராட்டங்களும் தேசியத் தலைவர்களின் இமாலயத் தவறுகளும் ஒன்றுக்கொன்று முரண்பாடு கொண்டும், ஒன்றுடனொன்று பிணைந்து கொண்டும், ஒன்றை மற்றொன்று ஆட்கொண்டும்—சில நேரங்களில் வெற்றி கொண்டது எது? தோல்வியைத் தழுவியது எது? எனக் கூற இயலாத நிலையில், ஒன்றின் தளர்ச்சியை இன்னொன்றின் எழுச்சியாக்கிக் கொண்டும் — இயங்கியதால், எதிர்பாராததோர் இக்கட்டான அரசியற் சூழ்நிலை இந்திய நாட்டைப் பற்றிக் கொண்டிருந்தது.

1937–ஆம் ஆண்டில் நடந்த மாநிலச் சட்ட மன்றங்களுக்கான தேர்தலில் காங்கிரஸ் கட்சி மிகப் பெரிய வெற்றியைப் பெற்றது. முஸ்லீம் லீக் மிகக் கொடிய தோல்வியைத் தழுவியது. 1937-ஆம் ஆண்டின் பிற்பகுதியில் பல மாநிலங்களில் காங்கிரஸ் அரியணை ஏறியது. ஏறத்தாழ 27 மாதங்கள் அவை கோலோச்சின. ஆனால் காங்கிரசும் லீகும் இணைந்த கூட்டு அமைச்சரவை எந்த மாநிலத்திலும் நடைமுறைக்கு வரவில்லை.

வெற்றிப் போதையில் திளைத்து நின்ற காங்கிரஸ் கட்சி, சுருண்டு கிடந்த முஸ்லீம் லீக்கை உருத்தெரியாமல் அழித்து விடக் கங்கணம் கட்டிக் கொண்டு, அதற்கான திட்டங்களை வகுத்து, தீவிரமான அரசியல் நடவடிக்கைகளில் இறங்கிற்று. சிறுகச் சிறுகச் செத்துக் கொண்டிருந்த முஸ்லீம் லீக், அதன் தோல்வியினை மறந்து, மீண்டும் புத்துயிர் பெறுவதற்காக "இரு நாடுகளின் கோட்பாடு" (Two Nation Theory) என்ற புதிய சித்தாந்தத்தை உருவாக்கிற்று. "நாட்டுப் பிரிவினை" என்ற தாரக மந்திரத்தை முஸ்லீம் மக்களுக்கு ஜின்னா அளித்தார். அவர்களது உள்ளுணர்ச்சியை "மதம்" என்ற அபினியினால் கிறங்க வைத்தார். அவர்களது வெறி உணர்ச்சிகளைப் பாக்கிஸ்தான் என்ற தனி நாட்டுத் தத்துவத்தால் தட்டி எழுப்பி, வீறு கொள்ள வைத்தார். அதனால் வகுப்புவாதம் உச்ச கட்டத்தை அடைந்தது. சில ஆண்டுகளில் நாட்டைத் துண்டாட வேண்டுமென்ற கொள்கை, ஒரு வெறி கொண்ட பேரியக்கமாக எழுச்சியடைந்து விட்டது. அது இந்தியத் தாயின் மணி வயிற்றுக்குள்ளிருந்த சுதந்திரக் குழந்தையை வெளியே வராமல் தடுத்து நிறுத்தியது.

இந்தியாவை இருவேறு கூறுகளாகப் பிளக்கும் இறுதி அறுவைச் சிகிச்சைக்கு முன்பாக, வேறு பல அரசியல் திட்டங்களும், இந்திய நாட்டுப் பிரிவினைக்கு மாற்று மருந்து களாகத் தரப்பட்டன. காங்கிரஸ், அதுவரை தனது உள் நோக்கமாய்க் கொண்டிருந்த ''வலிமையான மத்திய அரசு'' என்ற கொள்கையை இனியும் தொடர்ந்து வலியுறுத்தினால், நாட்டுப் பிரிவினை தவிர்க்க முடியாததாகி விடும் என்ற ஞானோதயத்தைப் பெற்றது. ''வலிமையான மாநிலங்கள்—அம் மாநிலங்களின் இணைப்புக்குத் தேவையான – குறிப்பிட்ட சில அதிகாரங்கள் கொண்ட ஒரு மைய அரசு'' என்ற கொள்கையை காங்கிரஸ் கட்சியும் மெல்ல மெல்ல ஏற்றுக் கொண்டது.

நாட்டுப் பிரிவினையைத் தவிர்ப்பதற்காகவும் இந்திய நாட்டின் ஒற்றுமையை ஏதோ ஒரு வகையில் நிலை பெறச் செய்வதற்காகவும் பல அறிஞர் பெருமக்களாலும். ஆங்கில அரசாலும் காங்கிரசுக்கட்சியாலும் பலவகை அரசியற் சூத்திரங்கள் ( Political Formulas ) தரப்பட்டன். மாநில சுயாட்சிக் கொள்கை அச்சூத்திரங்களால் நல்ல எழுச்சியுற்று, அதன் மகோன்னதமான நிலையை அடைந்தது. அஃதாவது இந்திய ஒற்றுமைக்கும் நாட்டுப் பிரிவினைக்கும், இடைப்பட்ட பெரு வெளியை நிரப்புவதற்குரிய ஒரு பெரும் இணைப்புப் பாலமாக ''முழு மாநில சுயாட்சிக் கொள்கை'' எழுச்சியுடன் திகழ்ந்தது. மாநிலத் தன்னாட்சிக்கு எழுச்சி தந்த பல சுவையான வரலாற்றுச் சம்பவங்களையும், நாட்டுப் பிரிவினையைத் தவிர்ப்பதற்காகத் தரப்பட்ட சில சூத்திரங்களையும், அவை யிரண்டும் உருவாக்கிய சக்தி வாய்ந்த அரசியல் பின்னணியையும் இவண் ஆய்வோம்.

### இரு நாட்டுக் கொள்கை
### (TWO NATION THEORY)

''இந்து முஸ்லீம் பிரச்சனைக்குத் தீர்வு காண்பதற்கு முழு சுயாட்சியினைக் கொண்ட மாநிலங்களை இணைத்து உருவாக்கப் படும் இந்தியக் கூட்டாட்சி தான் சாலச் சிறந்த ஒரே வழி'' என 1937-ஆம் ஆண்டு வரையும் முஸ்லீம் லீக் உட்பட மற்ற அரசியல் கட்சிகளும் அறிஞர் பெருமக்களும்—ஏன்?—ஆங்கில அரசும் கூடக் கருதியிருந்தன.

இந்திய முஸ்லீம்கள் தனி மத, இனப் பண்புகளைக் கொண்டொழுகி வந்தமையால், அவைகளுக்கு எவ்வகையிலும் ஊறு நேரா வண்ணம், முஸ்லீம்கள் மிகப் பெரிய சிறு பான்மையர் என்ற அடிப்படையில் அவர்களது பல கோரிக்கைகள் ஆதியில் ஏற்றுக் கொள்ளப்பட்டன. வட்ட மேசை மாநாடுகளிலும் அதன் பின்னர் ஏற்பட்ட 1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்திலும் முஸ்லீம் மக்களைப் பெருவாரியாகக் கொண்ட தனித்த மாநிலங்களும் தனி முஸ்லீம் தொகுதிகளும் சட்ட மன்றங்களில் முஸ்லீம்களுக்காக ஒதுக்கப்பட்ட தனி இடங்களும் அரசு ஊழியங்களில் குறிப்பிட்ட விகிதாச்சாரப் பங்குகளும் தரப்பட்டன.

அவர்கள் அனைத்திந்தியாவின் ஒரு பகுதி மக்கள் என்ற முறையில்தான், முஸ்லீம் மக்களின் இத்தனித்த கோரிக்கைகள் ஏற்றுக் கொள்ளப்பட்டனவே யன்றி, அவர்கள் தனி நாடு கோரும் தகைமை வாய்ந்த ஒரு தனி இனத்தைச் சார்ந்தவர்கள் என்பதனுல் அல்ல. இந்திய நாட்டைப் பிரித்து, அதில் தனி '' முஸ்லீம் நாடு '' என்றும், தனி ''இந்து நாடு'' என்றும், உருவாக்குவற்கான நில நூல் — அரசியல் — சரித்திர — மூலங்கள் எவையும் பாக்கிஸ்தான் பிரிவினைக்குக் காரணமாகவில்லை. ''நாட்டைத் துண்டாட வேண்டும்'' என்ற கோரிக்கை, திடீரென்று இடையில் ஏற்பட்ட ஒன்றுதான் என்பது பல ஆய்வாளர்களின் துணிந்த முடிவாகும். ஆனுல், அதற்கான பல வரலாற்றுக் காரணங்களும் உண்டு. 1937-ஆம் ஆண்டில் இருந்து 1940-ஆம் ஆண்டு வரைக் காங்கிரஸ் கட்சியால் கடைப் பிடிக்கப்பட்ட அரசியல் கொள்கையும், அக்கட்சியால் எடுக்கப்பட்ட நடவடிக்கைகளுமே நாட்டுப் பிரிவினைக் கோரிக்கை எழுந்ததற்கு ஓர் அடிப்படைக் காரணமாகும் எனப் பல வரலாற்று ஆசிரியர்கள் கருத்துத் தெரிவிக்கின்றனர்.

1937-ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் லக்னேவில் நடந்த முஸ்லீம் லீக் மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட பல தீர்மானங்களில் கூட முஸ்லீம் லீக்கின் 'ஏக இந்தியாத்' தத்துவமே மேலோங்கி நின்றது.

> ''முஸ்லீம்கள் மற்றும், இதர முக்கியமான சிறு பான்மையர்களது உரிமைகளும் தனி நலன்களும் போதுமான அளவிற்கு, நல்ல முறையில் பாதுகாக்கப்பட வேண்டும். அப்படிப் பாது

காப்பதற்குரிய மக்களாட்சியினைக் கொண்ட மாநிலங்களை ஒருங்கிணைக்கக் கூடிய ஒரு கூட்டாட்சி அமைப்பான முழு சுதந்திர இந்திய நாட்டை உருவாக்குவதே அகில இந்திய முஸ்லீம் லீக்கின் குறிக்கோளாகும்.''2

என்ற தனது 8-ஆவது தீர்மானத்தில் முஸ்லீம் லீக்கின் 'ஏக இந்தியக் கொள்கை' விளக்கப்படுகிறது.

ஆனால் அந்த மாநாட்டிற்குப் பின்னர், ஓராண்டிற்குள் முஸ்லீம் லீக்கின் 'ஏக இந்தியக் கொள்கை' போய், இரு நாட்டுக் கொள்கை உருப்பெற்று விட்டது எப்படி?

உண்மையில், இரு நாட்டுக் கொள்கையின் மூலகர்த்தா ஜின்னா வல்லர்; இந்து மகாசபை, இந்தியா இருவேறு முரண்பட்ட தனி இனங்களைக் கொண்டது என வலியுறுத்திய முதல் அரசியல் தலைவர், இந்து மகாசபைக் கட்சியின் தலைவரான வி. டி. சாவர்க்கர் அவர்கள். 1937-ஆம் ஆண்டில் அகமதாபாத்தில் நடைபெற்ற இந்து மகாசபைக் கட்சியின் மாநாட்டின் தலைமையுரையில் வி டி. சாவர்க்கர் அவர்கள்,

''இந்தியத் துணைக் கண்டத்தில் இரண்டு முரண்பட்ட நாட்டினங்கள் [இந்து—முஸ்லீம்] அருகருகே வாழ்கின்றன. பிரதியட்ச உண்மைகள், கசப்பாக இருப்பினும் அவைகளைத் தைரியத்துடன் அணுகுவோம். இந்திய மக்களெல்லாம் ஒரே இனத்தைச் சார்ந்தவர்கள் என்று நாம் கொள்வதற்கில்லை. மாறாக இந்தியாவில் தனியான இரண்டு தேசிய இனங்கள் உள்ளன. அவை இந்துக்களும் முஸ்லீம்களும் ஆகும்.''3

என, இந்திய நாட்டின் இரு தேசியத் தன்மையை விளக்கினார்.

தேசிய இனங்கள், தனித்த நிலப் பகுதியைச் சார்ந்தனவா

---

2 Quoted in Dr. B R Ambedkar, "Pakistan or Partition of India" (1946), P. 357

3 Sri. V. D. Savarkar, "Hindu Rashtra Darshan", (1949), Page. 26

யிருக்கும் என்ற கொள்கையை மறுக்கும் திரு. வி.டி.சாவர்க்கர் அவர்கள்,

> ''ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியைச் சார்ந்தவர்களும், தமது இனம், மொழி, கலாச்சாரம், சகோதரத்துவம் ஆகியவைகளைப் பேணும் தன்மையைக் கொண்டிருப்பவர்களுமான ஒரு சமுதாய மக்களே தேசிய ஒற்றுமையையும் நிலையாகப் பேணி வளர்க்கின்றனர்......இந்த அடிப்படையில் பார்த்தால் இந்துக்களும் ஒரு தனி இனத்தைச் சார்ந்தவர்கள்தான்.''4

எனத் தெளிவாக்குகிருர்.

இந்துக்களின் தாய்நாடு இந்தியா ; இந்துக்களுக்குள் சீக்கியர்களும், புத்தர்களும் சமணர்களும் அடங்குவார்கள். ஆனுல் கிறித்தவர்கள், முஸ்லீம்கள், பார்சிகள், யூதர்கள் ஆகியோர், வேற்றினத்தைச் சார்ந்தவர்கள். அவர்களுக்குத் தாய்நாடு இந்திய நாடு அல்ல, என்று ஒரு புதிய சித்தாந்தத்தையும் அவர் முதன் முதலாக வெளியிட்டார்.

''இந்து'' என்பவன் யார்? என்பதைத் தெளிவுற விளக்கப் போந்த திரு. வி. டி. சாவர்க்கர் அவர்கள்,

> ''சிந்து முதல் கடல் வரை பரவியிருக்கும் பாரத பூமியை, தனது தந்தையர் நாடு எனவும் தனது புண்ணிய பூமி எனவும் எவன் ஏற்றுக் கொள்கிருனே அவனே இந்து ஆவான். அஃதாவது அவனுடைய இந்து சமயம் தோன்றிய நாடாகவும் அவனது சமய நம்பிக்கையின் தொட்டிலாகவும் திகழ்வதே புண்ணிய பூமி எனப்படும்.''5

எனக் கூறுகிருர்.

இந்திய மகாசபையைச் சார்ந்தவர்கள்,மதவெறிகொண்ட இந்தக் கொள்கையை, அடிப்படையாக வைத்து, இந்திய முஸ்லீம்களை வெளிநாட்டவர்போல் வெறுத்தொதுக்கினர். அப்பகையுணர்ச்சியை இந்துக்களிடமும் தீவிரமாக வளர்த்தனர். அதன் கொள்கையை ஏற்றுக் கொண்ட பலபேர், காங்கிரஸ் கட்சியிலும் இடம் பெற்றிருந்தனர். சூழ்நிலை உருவான போது, அவர்கள் தங்கள் செல்வாக்கைக் காங்கிரஸ் கட்சியின் கொள்கைத் திட்டங்களுக்குள் ஏற்றி வந்தனர்.

---

4 Idid, Opp cited Note. 3

5 Ibid, Opp. cited, Note. 3. Page. 54

காங்கிரஸ் கட்சி, பெருமளவில் இந்துக்களைக் கொண்ட கட்சி; தேசிய முஸ்லீம்களையும் காங்கிரஸ் பிரதிபலிக்கிறது என அக்கட்சி எவ்வளவுதான் நெஞ்சத் தூய்மையுடன் கூறினாலும், பொதுவாக முஸ்லீம்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. அதன் கொள்கைகள், முஸ்லீம்களின் ஐயத்தையும் அச்சத்தையும் இறுதிவரை நீக்க வில்லை. பெரும்பான்மையான இந்துக்களால் முஸ்லீம்களின் மத நம்பிக்கைக்கும் தனித்த பண்பாட்டிற்கும் எப்போதும் ஆபத்து ஏற்படலாம் என்றே முழுமையாக அவர்கள் நம்பினார்கள். இந்த மகாசபைக் கட்சியின் ''மதஞ் சார்ந்த ஈரினக் கொள்கைகளும்'' பகையுணர்வும், முஸ்லீம் மக்களை மேலும் அச்சம் கொள்ளச் செய்தது. எனவே, காங்கிரஸ் இயக்கத்தின் சில தவறும் கூட, முஸ்லீம்களின் மத, இன உணர்ச்சிகளைப் பாதிப்பதாக இருந்தது.

### நேருவின் ''இமாலயத் தவறு''

இந்நிலையில் 1937-ஆம் ஆண்டில் நடைபெற்ற பொதுத் தேர்தல்களில், காங்கிரஸ் மிகப் பெரிய வெற்றியைக் குவித்தது. முஸ்லீம் லீக் பரிதாபமாகத் தோற்றது. மாநிலச் சட்டமன்றங்களுக்கான மொத்தம் 1585 இடங்களில் காங்கிரஸ் 711 இடங்களைக் கைப்பற்றியது. முஸ்லீம்கள் மட்டும் வாக்களிக்கும் 489 முஸ்லீம் தனித் தொகுதிகளிலிருந்து 104 இடங்களை மட்டுமே முஸ்லீம் லீக் பெற்றது. வங்காளத்தில் முஸ்லீம்கள் வாக்களிக்கும் 119 தொகுதிகளில் 34 இடங்களிலும், பஞ்சாப்பில் 86 தொகுதிகளில் ஒரே ஓர் இடத்தில் மட்டுமே லீக் வெற்றி பெற முடிந்தது. சிந்து மாகாணத்திலும் வடமேற்கு எல்லைப் புற மாகாணத்திலும் ஓர் இடத்தைக் கூட முஸ்லீம் லீக்கினால் பெற முடிய வில்லை. முஸ்லீம்கள் பெரும்பான்மையாயுள்ள மாகாணங்களில் லீக் அதிக இடங்களில் வெற்றி பெற முடிய வில்லை. ஆனால் இந்துக்கள் பெரும்பான்மையாக இருந்த மாகாணங்களில், முஸலீம்களின் தனித் தொகுதிகளிலிருந்து 'லீக்' நல்ல வெற்றியை நிலை நாட்டியது.

தேர்தலுக்கு முன்னர், காங்கிரஸ்—லீக் கட்சிகளிடையே தேர்தலைப் பொறுத்துப் பரவலான—ஆனால் உறுதியற்ற—கருத்தொற்றுமை நிலவிற்று. உத்திரப் பிரதேசத்தில், ஒரே மேடையில் இரு கட்சிகளும் வாக்குக் கேட்டன. ஜின்னா அவர்கள் தேர்தலுக்குப் பின்னர் கூட்டமைச்சரவைக்கான வழிவகையை

மெல்லக் காணலுற்ருர். அதை உறுதிப் படுத்தியிருந்தால், காங்கிரஸ் — லீக் ஒற்றுமை, வளர்ந்திருக்கும்; கசப்புணர்ச்சி கள் மாய்ந்திருக்கும்.

ஆனல் வெற்றியின் போதை தலைக்கேறிய காங்கிரஸ்கட்சி அந்தச் சூழ்நிலையைப் பயன்படுத்திக் கொள்ளாதது மிகக் கடுமையான பின் விளைவுகளை உருவாக்கி விட்டது என, சி.எச். பிலிப்ஸ் ( C .H. PHILIPS ), சர் - ஜார்ஜ் தன்பார் ( SIR. GEORGE DUNBAR ), ரிச்சார்டு சைமன்ஸ் ( RICHARD SIMONS ), இராம கோபால், கப்லெண்டு ( COUPLAND ) அகியவர்களும் இன்னும் பல வரலாற்று ஆசிரியர்களும் கருதுகின்றனர்.

கூட்டமைச்சரவைக்கு உடன்பாடு செய்து கொள்வதற் காக மிகக் கிழிறங்கி வந்த முஸ்லீம் லீக் கட்சி மேல் நடை முறைக் கொவ்வாத, பல நிபந்தனைகளைக் காங்கிரஸ் கட்சி விதித்தது. முஸ்லீம் லீக் ஓர் அரசியல் கட்சியாகச் செயல்பட முடியாத அளவிற்கு அதை நிலைகுலையச் செய்து, வலிய வந்த ஒருமைப்பாட்டைக் காங்கிரஸ் ஏற்றுக் கொள்ளாமல், காலால் எட்டி உதைத்தது.

உத்திரப் பிரதேசத்தில் மொத்த முஸ்லீம் சட்டமன்ற இடங்களில் 64-இல் லீக் 24 இடங்களையும், சுயேச்சை முஸ்லீம் கள் 30 இடங்களையும், காங்கிரஸ் 1 இடத்தையும் தேசிய உழவர் கட்சி 9 இடங்களையும் கைப்பற்றியிருந்தன. காங்கிரஸ் லீக் கூட்டமைச்சரவை அமைக்க வேண்டுமென்றும் அதில் முஸ்லீம் லீக்கைச் சார்ந்த இரண்டு அமைச்சர்கள் மட்டும் இடம் பெற்ருல் போதும் என்றும், முஸ்லீம் லீக் காங்கிரசை வேண்டியது. அதற்கேற்ற அறிகுறியாக, பஞ்சாப் மாநிலத் தில் யூனியனிஸ்ட் கட்சியின் முஸ்லீம் தலைவரான சர். சிக்கந்தர் ஹையத்கான் அவர்கள், இந்து மகாசபைக் கட்சித் தலைவர் ஒருவரைத் தன் அமைச்சரவையில் சேர்த்துக் கொள்வதாக வும் அறிக்கை விட்டார். பேச்சு வார்த்தைக்கு வந்த முஸ்லீம் லிக்கிடம், அதன் கோரிக்கையைக் காங்கிரஸ் மறுத்துச் சொல்லி யிருந்தாலும் கூட மிகப் பெரிய விளைவுகள் ஏற்பட்டிருக்காது. பண்டித நேரு அவர்கள் இப்பிரச்சனையில் தானே ஈடுபட்டதன் விளைவோ என்னவோ, காங்கிரஸ் மிகக் கடுமையான நிபந் தனைகளை லீக்கிற்கு விதித்தது.

உத்திரப் பிரதேசத்தில் காங்கிரஸ்—லீக் கூட்டமைச்சரவை ஏற்பட வேண்டுமாயின், அங்குள்ள முஸ்லீம் லீக்கின் ஆட்சி மன்றக் குழுவினையே (Parliamentary Board) லீக் கலைத்துவிட வேண்டும் எனவும் பின்னர் ஏற்படும் இடைத் தேர்தல்களில், முஸ்லீம் லீக் தனது வேட்பாளர்களை நிறுத்தக் கூடாது எனவும், இடைத் தேர்தல்களில் காங்கிரஸ் நிறுத்தும் வேட்பாளர் களையே, லீக் முழுமையாக ஆதரிக்க வேண்டும் எனவும், உத்திரப் பிரதேசச் சட்டசபையில் இருந்த முஸ்லீம் லீக் உறுப்பினர்கள் சட்டமன்றக் காங்கிரஸ் கட்சியுடன் இணைந்து விட வேண்டும் எனவும், முஸ்லீம் லீக் சட்ட மன்ற உறுப்பினர் கள் தனித்தியங்காமல் காங்கிரஸ் கட்சி விதிக்கும் நெறிமுறை களுக்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டும் என்றும், காங்கிரஸ் காரியக் கமிட்டி சட்டமன்றத்தில் எந்தக் கொள்கையைப் பின் பற்ற வேண்டும் என்று ஆணையிடுகிறதோ, அக்கொள்கை யையே சட்டமன்ற லீக் கட்சியும் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றும் இன்னோரன்ன பல கடுமையான நிபந்தனைகளை லீக் கின் மேல் காங்கிரஸ் விதித்தது.

சுருங்கக் கூறின், இரண்டு அமைச்சர்களுக்காக முஸ்லீம் லீக் தன்னைத்தானே தற்கொலை செய்து கொள்ள வேண்டிய பெரு விலையைக் காங்கிரஸ் கோரியது.

வரலாற்று ஆசிரியர் திரு. மூன் (Moon) அவர்களின் கருத்துப்படி, ''லீக்கிற்குக் காங்கிரஸ், பங்குரிமையைத் தர முன்வரவில்லை. மாறாக, முஸ்லீம் லீக்கைத் தன் வயப்படுத்திக் கொள்ள'' காங்கிரஸ் முயற்சித்தது,

ஜின்னா அவர்களின் தனித் தலைமைக்கு இது பெருங் களங் கத்தைக் கற்பித்தது. முஸ்லீம் லீக் கட்சி நாகத்தால் தீண்டப் பட்டதை போல் துடித்தது. வாய்ப்புக் கிடைத்தால் இந்துத் தலைவர்கள், முஸ்லீம்களையே அழித்து விடுவார்கள் என்ற முஸ்லீம்களின் ஐயமும் பீதியும் மெய்ம்மையாக்கப்பட்டு விட்ட தென முஸ்லீம்கள் கருதினர். இதன் விளைவு — முஸ்லீம் லீக், தன்னைத்தானே தற்கொலை செய்து கொள்வதற்கு மாறாக எதிர்முனை யான தனிநாட்டை நோக்கிச் சென்று விட்டது. இந்தியத் துணைக் கண்டத்தில் பின்னர் நடக்க விருந்த சோக முடிவுக்கு (நாட்டுப் பிரிவினைக்கு) க்காங்கிரசின் கொள்கையும், நடவடிக் கையுமே மூல காரணமாயிற்று.

''காங்கிரஸ் கட்சி பேருந்து வண்டியை ( Bus ) மட்டும் தவறவிட வில்லை. அது தான் போகவேண்டிய வழியையும் தவற விட்டுவிட்டது. எப்படியிருப்பினும், பதவிப் பொறுப் பினின்றும், முஸ்லீம் லீக் தனிமைப் படுத்தப்பட்டு விட்டதால் அது மனம் வெதும்பி, பின்னர் நேரடி எதிர்ப்பு நடவடிக்கை களிலேயே இறங்கி விட்டது.'' 6

எனக் காங்கிரசின் புத்திசாலித்தனமற்ற இந்த நட வடிக்கையைக் குறித்து டாக்டர். அம்பேத்கார் அவர்கள் அன்று கருத்துத் தெரிவித்தார்.

''ஐக்கிய மாகாண லீக் ஒத்துழைக்க முன் வந்ததை ஏற்றுக் கொண்டிருந்தால் முஸ்லீம் கட்சியானது நடைமுறை சம்பந் தப்பட்டவரை காங்கிரசுடன் கலந்திருக்கும்...... ஐக்கிய மாகாணத்திலிருந்து தான் (உத்திரப் பிரதேசம்) முஸ்லீம் லீக் மாற்றியமைக்கப்பட்டது என்பதை இந்திய அரசியல் நிலைமை களைக் கவனித்து வந்துள்ள எல்லாரும் அறிவர். இந்த நிலைமையை ஜின்னு முழுதும் பயன் படுத்திக் கொண்டு, மேற்கொண்ட தாக்குதல் தான் இறுதியாகப் பாக்கிஸ்தான் ஏற்படுவதில் கொண்டு போய்விட்டது.'' 7

என்றும்,

''1937-இல் ஜவகர்லால் இழைத்த தவறு படுமோசமானது.''8

என்றும் காங்கிரஸ் கட்சியின் தலைவரான திரு. அபுல்கலாம் ஆசாத் அவர்கள், பண்டித நேரு அவர்கள் செய்த இமாலயத் தவறைச் சுட்டிக் காட்டுகிறுர்.

## பிரிவினைக் கீதம்

''முஸ்லீம் லீக் கட்சி–மூழ்கிக் கொண்டிருக்கும் ஒரு படகு–'' எனக் கணக்கிட்ட காங்கிரஸ் கட்சி அதனை முற்றிலும் மூழ் கடித்துவிடக் கூடிய அரசியல் நடவடிக்கைகளை மேற்கொண் டது. 'உரிந்த காயத்திற்கு உப்பைத் தடவினதைப் போல்'

---

6 **Ibid, Opp, cited, Note, 2, Page. 407**

7–8 *திரு. மௌலாஞு அபுல்கலாம் ஆசாத், ''இந்திய விடுதலை வெற்றி (1961), பக்கம் 198-199.*

காங்கிரஸ் கட்சி அகில இந்திய மட்டத்தில் முஸ்லீம் லீக்கை எதிர்த்து – சூருவளிப் பிரச்சாரத்தைத் திட்டமிட்டு நடத்திற்று. அரசியல், பொருளாதாரக் கொள்கை எதுவும் இல்லாமல், மத உணர்ச்சியையே மையக் கோட்பாடாக ஏற்றிருந்த முஸ்லீக் லீக் இக் கட்டான இந்தச் சூழ்நிலையிலிருந்து, ஏதோ ஒரு வகையில் விடுபட விழைந்தது.

காங்கிரஸ் வெற்றியையும் மக்கள் செல்வாக்கினையும் அழித்தொழிக்கவும், கடுமையான எதிர்ப் பிரச்சாரத்தை முறியடிக்கவும் ஜின்ஞ அவர்களுக்கு, முஸ்லீம் மக்களை வெறி கொள்ளச் செய்யும் ஒரு புதிய அரசியல் தத்துவம் அவசரமாகத் தேவைப்பட்டது. ''இஸ்லாம் மதத்திற்கு ஆபத்து'', என்ற முழக்கம் முஸ்லீம் லீக்கிற்கு நல்ல விளைச்சலைக் கொடுத்தது. முஸ்லீம்களுக்கு இனி வரும் பேராபத்தைத் தடுப்பதற்குரிய, ஒரே வழி ''தனி நாடு தான்'' என்ற புதிய சித்தாந்தத்தை அவர் உருவாக்கினர். பாக்கிஸ்தான் உருவானல், இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் சேர்ந்து விடுதலை கிடைக்கும் என்றார் அவர். இந்தியா பிரிக்கப்படாவிட்டால் இந்துக்களின் ஆட்சியும் முஸ்லீம்களின் அடிமைத்தனமும் என்றென்றும் நிலைபெற்றுவிடும் என அதற்கு விளக்கமும் தரப்பட்டது.

1938-ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில், சிந்து மாகாண முஸ்லீம் லீக் மாநாடு, ஜின்ஞ தலைமையில், கராச்சியில் நடைபெற்றது. அம் மாநாட்டில், இந்தியத் துணைக் கண்டம் இரு கூட்டாட்சிகளாகப் பிரிக்கப்பட வேண்டும் என்று - பாக்கிஸ்தான் என்ற பெயரைக் கூடக் கூறமல் – ஜின்ஞ அவர்கள் முழக்கமிட்டார். ''மதங்களின் அடிப்படையிலும் அந்தந்த மதஞ் சார்ந்த மக்களின் அரசியல், சமுதாய, பொருளாதார, பண்பாட்டு வளர்ச்சி நலன்களை உத்தேசித்தும் இந்தியத் துணைக் கண்டத்தில் இந்துக்களுக் கென்று ஒரு தனிக் கூட்டாட்சி நாடும் முஸ்லீம் மக்களுக்கென்று ஒரு தனிக் கூட்டாட்சி நாடும் அமைக்கப்பட வேண்டும்'' என்ற கருத்து அறிவிக்கப் பட்டது.

1939–ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில், மீரட்டில் நடைபெற்ற முஸ்லீக் லீக் காரியக் கமிட்டியில், பிரிவினைக் கொள்கைக்கான பல திட்டங்களைப் பரிசீலிக்கக் குழு ஒன்றும் நிறுவப்பட்டது. 23—3—1940–ஆம் நாளில், லாகூரில் கூடிய அகில இந்திய முஸ்லீம் லீக் மாநாட்டில் 'பாக்கிஸ்தானின் பிரிவினைத் தீர்மானம்'

நிறைவேற்றப்பட்டது. ஆனால், பாக்கிஸ்தான் என்ற பெயரே அத்தீர்மானத்தில் இல்லை. எந்தெந்தப் பகுதிகளைச் சேர்த்து ஜின்னு ஒரு தனி நாட்டைக் கேட்டார் என்ற விளக்கமும் அத் தீர்மானத்தில் இருக்க வில்லை.

காங்கிரசின் தீவிரப் பிரச்சாரத்தை எதிர்ப்பதற்காக முஸ்லீம் லீக் கட்சி, காங்கிரஸ் அரசுகளை சில அரசியல் சோதனைகளுக்குள்ளாக்கிற்று. காங்கிரஸ் ஆளத் தொடங்கிய ஒரு வருடத்திற்குள், அக்கட்சி பல ஊழல் குற்றச்சாட்டுக்களைச் சந்திக்க வேண்டியதாயிற்று. 1938–ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்களில், 'பிர்பூர்' (Firpur) அரசரான முகமது மேதியைத் தலைவராகக் கொண்ட ஒரு குழு, முஸ்லீம் லீக்கினுல் நிறுவப்பட்டது. காங்கிரஸ் அரசுகளின் ஊழல்களையும் முஸ்லீம்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளையும், ஆய்ந்தறிந்து அறிக்கை கொடுக்க வேண்டுமென்று அதற்கு ஆணையிடப்பட்டது.

காங்கிரஸ் கட்சி சார்ந்த இந்துக்களின் பெரும்பான்மைப் பலத்தால் அடக்குமுறையும் கொடுமைகளும் முஸ்லீம்களுக்கு இழைக்கப்பட்டன என அக்குழு முடிவுக்கு வந்தது.

பீகாரில் நிறுவப்பட்ட இன்னெரு முஸ்லீம் லீக் குழு, காங்கிரசைப் பற்றி இன்னும் பயங்கரமான ஒரு குற்றப்பட்டியலை வெளியிட்டது. அதிகாரிகளின் துணை கொண்டு, கதர்த் திட்டம் பரப்பப்படுவதும், எல்லா அரசு நடவடிக்கைகளிலும், "வந்தேமாதரம்" என்ற கீதம் முழக்கப்படுவதும் அரசாங்கக் கட்டிடங்கள் மேல், காங்கிரஸ் கொடி பறக்க விடப்படுவதும் மொழித் துறையில் மாநில மக்களின் மீது இந்தி திணிக்கப்படுவதும் கல்வித் துறையில் காந்தியத் திட்டமும்—வார்தா திட்டமுறையும் திணிக்கப் படுவதும் நிர்வாக இயந்திரம், காங்கிரஸ் கட்சியின் வளர்ச்சிக்குப் பயன்படுத்தப்படுவதும் அன்றைய மாநிலக் காங்கிரசு அரசுகளின் திட்டமிட்ட நடவடிக்கைகள் என அதில் சுட்டிக் காட்டப் பட்டுள்ளன.

தமிழகத்தில் 1939-ஆம் ஆண்டில் இராசாசியால் கொண்டு வரப்பட்ட கட்டாய இந்தித் திணிப்பு, இங்கு நினைவு கூறத்தக்கது.

முஸ்லீம் லீக்கின் பிரிவினைக் கொள்கையும் "இஸ்லாம் மதத்திற்கு ஆபத்து" என்ற முழக்கமும் காங்கிரஸ் அரசுகளின் மேல் சாட்டப்பட்ட குற்றச்சாட்டுகளும் குறுகிய காலத்தி

லேயே முஸ்லீம் மக்களின் உணர்ச்சியைத் தொட்டுத் தீண்டி, பின்னர் அதனை மத வெறியாக மாற்றி விட்டன. முஸ்லீம் அரசர்களும் முதலாளிகளும் நிலக்கிழார்களும் இதற்குத் துணை நின்றனர். முஸ்லீம் பத்திரிக்கைகள் முழுவதும் முஸ்லீம் லீக்கின் பயங்கரப் பிரச்சாரத்தை முழக்கிற்று. அலிகார்ப் பல்கலைக் கழகம் பிரிவினைத் திட்டங்களுக்குக் கேந்திரமாயிற்று. பல நூல்கள், ஆய்வுகள், கட்டுரைகள் வெளியிடப்பட்டன. ‘‘பாகிஸ்தான்’’ இல்லாத பொது மேடையில்லை,

சில அகில இந்தியத் தலைவர்களும் அரசியல் கண்ணோட்டத்தில் நாட்டுப் பிரிவினைக்கு ஆதரவளித்தனர். நமது அரசு அமைப்பைத் தயாரித்த சட்ட வல்லுனர் டாக்டர்.அம்பேத்கார் அவர்கள், இந்திய ஒற்றுமையைக் காக்கக் கருதி, வலிமை கொண்ட ஒரு மத்திய அரசைப் படைத்த பெருமையைப் பிற்காலத்தில் தேடிக் கொண்டார். இந்திய ஒருமைப்பாட்டை வாழ்விக்க வந்த ஒரு மகாத்மாவாக 1947-க்குப் பின்னர் உருவான அரசமைப்பவையில் அவர் திகழ்ந்தார். ஆனால் 1941-ஆம் ஆண்டில், இந்தியா வெட்டப்பட வேண்டும் என்ற பிரிவினைக் கோரிக்கையைத் தீவிரமாகப் போற்றி வளர்த்த பெருமையும் இந்த ‘‘அகில இந்தியத் தலைவரையே’’ சாரும். ‘‘பாக்கிஸ்தானைப் பற்றிய சிந்தனைகள்’’ என்ற ஒரு நூலை இவர் எழுதினர். பல அசைக்க முடியாத வாதங்களை அதில் பெய்து, தனிநாடான பாக்கிஸ்தான் உருவாகியே தீர வேண்டும் என அந்நூலைத் தொகுத்துள்ளார்.

> ‘‘பேரம் பேசுவதற்காக முஸ்லீம்களால் பாக்கிஸ்தான் கொள்கை உருவாக்கப்பட்டுள்ளது என்பது இந்துக்களின் வாதம்......முஸ்லீம்கள் இக்கருத்தை மறுக்கின்றனர். பாக்கிஸ்தானுக்கு, ஈடு இணையானது வேறென்றுமில்லையென அவர்கள் (முஸ்லீம்கள்) கூறுகிறார்கள். ஆகவே அவர்கள் பாக்கிஸ்தானத்தை அடைந்தே தீருவார்கள்.” 9

என 1947-க்குப் பின்னர் அகில இந்திய ஒற்றுமையை நிலை நாட்டிய தலைவரான அம்பேத்கார் அவர்கள் 1941-இல் பிரிவினையைப் பற்றிப் பேசுகிறார்.

---

9 Quoted in Prof. V. D. Mahajan's
“ Constitutional History of India (1971), Page 368

## இராசாசியின் பிரிவினைத் தீர்மானங்கள்

டாக்டர் அம்பேத்கார் அவர்கள், பாக்கிஸ்தான் பிரிவினை, பல கோணங்களிலும் நியாயமானது என வலியுறுத்திய இக்கட்டான நேரத்தில்தான் அமரர் இராசாசி அவர்களும், பாக்கிஸ்தானத்தைப் பிரித்துக்கொடுத்துவிட வேண்டும் எனக் காங்கிரஸ் தலைவர்களை வற்புறுத்தினர்.

காங்கிரசிடமிருந்து பெறவேண்டிய சலுகைகளையெல்லாம் முஸ்லீம்கள் பெறுவதற்காக — அதாவது பேரம் பேசுவதற்காக தனிநாட்டுக் கோரிக்கை ஜின்னு அவர்களால் உருவாக்கப் பட்ட ஓர் அரசியல் யுக்தி என்று காங்கிரஸ் தலைவர்கள் கருதினர். உண்மையான பிரிவினையை ஜின்னு விரும்பமாட்டார் என எண்ணி, தேசியத் தலைவர்கள் தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொண்டனர். தொடக்கத்தில் பாக்கிஸ்தான் என்பது ஒரு வெறும் முழக்கமாய் இருந்தாலும், பிரிவினைக் கொள்கை வளர வளர ஜின்னு அதில் இரண்டறக் கலந்து விட்டார். இராசாசி அவர்களின் கூர்த்த மதியும்; இராச தந்திரமும், வருங்காலத்தைச் சரியாகக் கணித்தது. நாட்டுப் பிரிவினை இல்லாமல் இந்தியச் சுதந்திரம் இல்லை என்பதே அவரது தீர்க்க தரிசனம் ஆகும்.

பாக்கிஸ்தான் பிரச்சனையில் நியாயம் இருக்கிறது என்று அம்பேத்காரைப்போல் இராசாசி அவர்கள் எண்ணவில்லை. மாருக ஆங்கிலேயரின் பிரித்தாளும் சூழ்ச்சியும், முஸ்லீம் லீகின் மதவெறி உணர்ச்சியும், அகில உலகப் போரின் சூழ்நிலையும் நாட்டுப் பிரிவினை இல்லாமல் இந்தியாவிற்கு விடுதலை நல்காது என்பதைத் தொலை நோக்கோடு, புரிந்து கொண்ட இராசாசி அவர்கள் தனி பாக்கிஸ்தான் பிரிய வேண்டும் என்று ஆணித்தரமாகத் தனது கருத்தை அறிவித்தார்.

காங்கிரஸ் கட்சியிலிருந்த பல வடநாட்டுத் தலைவர்கள் இராசாசி அவர்களின் கருத்திலிருந்த உண்மையினை உய்த்துணராமல், முஸ்லீம் லீகிற்குச் சாதகமான சூழ்நிலையையே இராசாசி தோற்றுவிக்கிருர் எனக் கண்டனம் செய்தனர். அகில இந்தியக் காங்கிரஸ், இராசாசியை இதனுல் வெறுத்தது. தமிழ்நாடு காங்கிரசில் இராசாசிக்கு முழு பலமில்லை. இந்திய நாட்டின் விடுதலையை விரைவாகப் பெற வேண்டும் என்று விரும்பிய இராசாசி, அவருக்குச் செல்வாக்குள்ள சென்னைச்

சட்டசபைக் காங்கிரசில் 23—4—1942–ஆம் நாளில் இரண்டு தீர்மானங்களை நிறைவேற்றினர். அதில் முதல் தீர்மானம் பாக்கிஸ்தான் பிரிவினையை ஏற்றுக் கொள்வதாயிருந்தது; முஸ்லீம் லீக்கின் பிரிவினைக் கோரிக்கையினைக் காங்கிரஸ் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றும், அப்போதிருந்த அரசியல் மற்றும் போர் நெருக்கடி நிலைமையைச் சமாளிக்க, முஸ்லீம் லீக்குடன் காங்கிரஸ் உடன்பாட்டிற்கு வர வேண்டும் என்றும், அதன் பேரில் ஒரு தேசிய அரசாங்கத்தை அமைப்பதற்காக, முஸ்லீம் லீகுடன் உடனடியாகச் சமரசப் பேச்சு வார்த்தையைத் தொடங்க வேண்டும் என்றும் இராசாசியின் தீர்மானம் வலியுறுத்தியது.

> ''பேரபாயம் நிறைந்த இத்தருணத்தில், நாட்டின் சிறந்த நலனை முன்னிட்டு, இப்போதைய நிலைமையைச் சமாளிக்கக் கூடிய ஒரு தேசிய நிர்வாகம் ஏற்பாடாவதற்குக் குறுக்கே நிற்கும் எல்லாத் தடைகளையும் அகற்ற, சாத்தியமான நடவடிக்கைகளை யெல்லாம் காங்கிரஸ் கட்சி செய்ய வேண்டியது அவசரமும், அவசியமுமாகும்......... இந்தியாவின் ஐக்கியத்தைப் பற்றிய சர்ச்சை தொடர்ந்து இருந்து வருவதற்கு நாம் வழிவகை செய்வதால், (நமக்கு) நன்மை, கிடைக்கும் என்பது நிச்சயமில்லை. இந்தப் பெரிய நெருக்கடியில் அதை வற்புறுத்தித் தேசிய சர்க்காரை அமைப்பதற்கான வாய்ப்புக்களைப் பலியிடுவது அடியோடு புத்திசாலித்தனமற்ற கொள்கையாகும். இரண்டு தீமைகளில், எது குறைந்த தீமையோ அதை ஏற்றுக் கொண்டு, முஸ்லீம் லீக்கின் பிரிவினைக் கோரிக்கையை ஒப்புக் கொள்வது அவசியமாகி விட்டது.'' 10

என அத்தீர்மானம் கூறிற்று.

இத்தீர்மானத்தில் பிரிவினைக் கோரிக்கையை ஏன் காங்கிரஸ் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதற்கான காரணத்தையும் இராசாசி தெளிவாக்கினர்.

தனது இரண்டாவது தீர்மானத்தில், சென்னை மாகாணத்தில் பொறுப்பான அரசு மீண்டும் செயல்படத் தக்க சூழ்நிலையைக் காண வேண்டும் என இராசாசி அவர்கள் வற்புறுத்தினர்.

---

10 Ibid, Opp. cited, Note 7, Page 83 - 84

1942-ஆம் ஆண்டு ஏப்ரல் 29-ஆம் தேதியில், அலகாபாத்தில் நடைபெற்ற காங்கிரஸ் காரியக் கமிட்டியில் மேற்கூறிய இரண்டு தீர்மானங்களையும் இராசாசி அவர்கள் முன் வைத்த போது அவரது அரசியல் வாழ்க்கையிலேயே அதுவரை நேராத பேரதிர்ச்சியினை அடைந்தார். கடுமையான கண்டனத்திற்கு ஆளானார். காரியக் கமிட்டி, அதை ஏற்றுக் கொள்ள வில்லை; இராசாசி அவர்கள் காரியக் கமிட்டி உறுப்பினர் பதவியிலிருந்து விலகினர். 30—4—1942-இல் காங்கிரஸ் தலைவருக்கு அனுப்பிய பதவி விலகல் கடிதத்தில்,

> ''என் உணர்ச்சி எவ்வளவு பலமானதாக இருக்கிறது என்பதை, தங்களிடம் விளக்கிக் கூறியுள்ளேன். என் திட சித்தமானது எந்தத் திசையில் கொண்டு போகிறதோ, அவ் வழியில் மக்கள் சிந்திந்துச் செயலாற்றும்படி செய்ய நான் பாடுபடாவிடில் கடமை தவறினவன் ஆவேன்...... எனவே காரியக் கமிட்டியிலிருந்து என் பதவியை இராசினாமாச் செய்கிறேன்.'' 11

எனக் கூறி, தன் நெஞ்சத் தூய்மையை அம்மாமேதை கோடிட்டுக் காட்டினர். ஆனல் வடக்கத்திய காங்கிரஸ் தலைவர்கள் அவருடைய எண்ணத்திற்கு உள்நோக்கம் கற்பித்ததோடு ''தேசத் துரோகி'' எனக்கூட இராசாசியை அழைத்தனர்.

அதே காரியக் கமிட்டியில், மற்ரெரு பிரிவினைத் தீர்மானத்தையும், இராசாசி அவர்கள் கொண்டு வந்தார். தென்னிந்திய மாநிலங்கள் அரசியல் மற்றும் இதரத் துறைகளில், ஏன்? விடுதலை இயக்கத்தில் கூட, புறக்கணிக்கப்படுகிற தென்று பரவலாகப் பேசப்பட்டது.

> ''வட இந்தியத் தலைவர்களால் சென்னை மாகாணம் தொடர்ந்து புறக்கணிக்கப்பட்டு வருவதால் தனி பாக்கிஸ்தான் பிரிவினைக் கோரிக்கை போன்று இந்தியத் துணைக் கண்டத்திலிருந்து தனி சென்னை மாகாணமும் பிரிவினை செய்யப்பட வேண்டும் என்பதே அத்தீர்மானம். இதனை எதிர்த்த சத்தியமூர்த்தி அவர்கள் பிரிவினை வாதத்தை எழுப்பும், நச்சு

11 Ibid, Opp. cited, Note 7, Page 85

மனிதன் இராசாசியைக் காங்கிரஸ் கட்சியிலிருந்தே விலக்க வேண்டும் என்ற ஒரு நம்பிக்கையில்லாத் தீர்மானத்தைக் கொண்டு வந்தார்.'' 12

அதன் பின்னர் நடைபெற்ற அலகாபாத் அகில இந்தியக் காங்கிரஸ் மாநாட்டின் முன், இராசாசி அவர்கள் தன் தீர் மானங்களை வைத்தார். கடுமையான கண்டனங்களுடன் அவர் அங்கிருந்தும் வெளியேற்றப்பட்டார்.

ஆனால், 2—4—1942-இல் அதே காங்கிரஸ் காரியக் கமிட்டி, ''கிரிப்ஸ் தூதுக்குழுவின்'' கருத்துக்களை ஏற்றுக் கொள்ள முடியாது என்று கண்டு இராசாசியின் தீர்மானத் திற்கு எதிர்த் தீர்மானம் ஒன்றைக் கொண்டு வந்தது. அத்தீர்மானத்தில்,

> ''வெளிப்படையாகக் கூறியுள்ள திடமான கருத்துக்களுக்கு எதிராக இந்தியாவின் எந்த மாநிலத்தைச் சார்ந்த மக்களை யும் அவர்களுடைய ஆழ்ந்த விருப்பத்திற்கு மாருக இந்திய யூனியனில் இருக்க வேண்டும் என்று வற்புறுத்துவது காரியக் கமிட்டியால் சிந்திக்கவும் இயலாதது."13

என்ற விநோதமான ஒரு பகுதியையும் அத்தீர்மானத்தில் காங் கிரஸ் சேர்த்தது. எந்த ஓர் இந்திய மாநிலமும் மக்கள் விரும்பா விட்டால் அகில இந்தியாவுடன் சேராமலிருக்கலாம். அதாவது எந்த ஒரு மாநில மக்கள் விரும்பினாலும், அனைத்திந்தியாவிலிருந்து தனித்துப் போய்விடலாம் என்பதையே இப்படி மறைமுகமாகச் சுட்டிக் காட்டுகிறது. அதன் பொருள் என்னவோ? காங்கிரசின் இரட்டை நாக்குத் தீர்மானங்களில் இதுவும் ஒன்று.

இராசாசியின் பாக்கிஸ்தான் பிரிவினைத் தீர்மானத்தைப் பற்றி விமர்சனம் செய்யும்போது, டாக்டர் கே. எம். முன்சி அவர்கள்,

> ''சென்னைத் தலைவரிடம், சரியான தர்க்கவாதம் இருந்தது. ஆனால், இந்தியா பிரிவினை செய்யப்படக் கூடாது என்ற உணர்ச்சி அதைக் காட்டிலும் வலுவாயிருந்தது. எனவே,

---

12 மூலம் ''தமிழ் முரசு'' நாளிதழ் - 25—8—1973, பக்கம் 4, திரு. சந்தனத் தேவனின் ''இராசாசி கேட்ட பிரிவினை''

13 Ibid, Opp. cited, Note 7, Page 86

தெளிவாக எழுதப்பட்டிருந்த இந்திய எதிர்காலத்தைக் காங்கிரசால் படித்துத் தெரிந்து கொள்ள முடியவில்லை. இராசாசியிடம் இருந்த உள்ளொளியே இந்திய விடுதலைப் பயணத்தின் இறுதி முடிவை அவருக்குக் காட்டிற்று.''

எனக் கூறுகிறார்.

1973-ஆம் ஆண்டுத் தேர்தலில் வங்காளத்தில், 34 இடங்களையும் பஞ்சாப்பில் ஓர் இடத்தையும், வடமேற்கு எல்லைப்புற மாகாணத்திலும் சிந்துவிலும் ஓரிடத்தையும் கூடப் பெருததுமான முஸ்லீம் லீக் பிரிவினைக் கீதம் இசைத்த ஆறே ஆண்டுகளில்—வங்காளம், பஞ்சாப் ஆகிய மாநிலங்களின் முதல் அமைச்சர்களையும், வடமேற்கு எல்லைப்புற மாகாணம் மற்றும் சிந்து மாகாணங்களில் அமைச்சரவைகளையும், 1946-ஆம் ஆண்டில் கைப்பற்றியது.

'' கனவுக் கொள்கை '' எனக் கூறப்பட்ட '' பாக்கிஸ்தான் பிரிவினை இயக்கம் " 1946-ஆம் ஆண்டிற்குள் பேயுரு வெடுத்து 1947-ஆம் ஆண்டில் ஜின்னாவே அதை வேண்டாம் என்று தடுத்திருந்தாலும் கூட, பாக்கிஸ்தான் உருவாகியே தீரும் என்ற சூழ்நிலையை முஸ்லீம் லீக் கட்சி ஏற்படுத்திவிட்டது.

ஒரு மாநில அமைச்சரவையில் இரண்டு முஸ்லீம் லீக் அமைச்சர்களுக்கு, இடமளிப்பதற்காக, முஸ்லீம் லீக் கட்சியின் தற்கொலையையே விலையாகக் கேட்ட காங்கிரஸ் 1947-ஆம் ஆண்டு ஆகஸ்டில், பல மாநிலங்களைக் கொண்ட பாக்கிஸ்தான் என்ற ஒரு தனி நாட்டையே இந்தியச் சுதந்திரத்திற்கான விலையாக முஸ்லீம் லீக்கிற்குக் கொடுத்தது. தன்னாட்சியைத் தராத காங்கிரஸ், தனியாட்சியைக் கொடுத்தது. இந்த வரலாற்றுப் பின்னணியில் மாநில சுயாட்சியின் எழுச்சியினைப் பற்றி அடுத்த அத்தியாயத்தில் பார்ப்போம்.



# 12. மாநில சுயாட்சிக் கொள்கையின் எழுச்சி

"...சில அதிகாரங்களும் பணிகளும் மத்திய அரசின் பொறுப்புக்களாக இருக்க வேண்டுவது அத்தியாவசியமானது. மற்றவை யெல்லாம் மாகாணங்களின் பொறுப்புக்களாகவே இருக்க வேண்டும். இன்னும் சில பொறுப்புக்கள் இரண்டில், எதனிடமாவது (மத்திய அரசிடமோ அல்லது மாகாண அரசிடமோ) இருக்கலாம். ஆனால் மாகாணங்களின் சம்மதத்தின் பேரிலேயே இவ்வகை (மூன்றும் வகை) அதிகாரங்களை மத்திய அரசோ அல்லது மாகாணங்களோ நிர்வகிக்கலாம்... தேசப் பாதுகாப்பு, போக்குவரத்து, அயல் நாட்டு விவகாரங்கள் ஆகியவை அகில இந்திய மட்டத்தில் (மத்தியச் சர்க்காரால்) மட்டுமே சரிவரக் கவனிக்கப்படக் கூடியவை. இதேபோல் வேறு பல அதிகாரங்கள் மாகாணங்களுக் கென்றே ஒதுக்கப்பட வேண்டிய பொறுப்புகளாகத் தான் இருக்கும். ஆனால், (இவை இரண்டும் தவிர) மூன்றாவது பட்டியல் ஒன்றும் இருக்க வேண்டும். அதிலுள்ள (மூன்றும் பட்டியலில் உள்ள) அதிகாரங்கள் மாகாணங்களின் பொறுப்பில் இருக்க வேண்டுமா ? அல்லது மத்திய அரசிடம் ஒப்படைக்கப்பட வேண்டுமா? என்பதை மாகாணச் சட்ட மன்றங்களே முடிவு செய்யும்." 1

— மௌலானா. அபுல்கலாம் ஆசாத் அவர்கள்.

முஸ்லீம் லீக்கின் "பாக்கிஸ்தான் கொள்கை," தீவிரத்தைப் பெறு முன்னர், இந்தியத் துணைக் கண்டத்தை இரு கூறுகளாக வெட்டிப் பிரிக்காமலேயே, இந்து - முஸ்லீம்

---

1 "இந்திய விடுதலை வெற்றி" (மௌலானா அபுல்கலாம் ஆசாத் சுயசரிதை) (1961) பக்கம் 171 — 174.

பிரச்சனைக்கு வேறு வகைகளில் தீர்வு காண்பதற்குப் பல அரசியல் விற்பன்னர்கள் முயற்சிகளை மேற்கொண்டனர். அதற்கான திட்டங்களையும் மக்கள் மன்றத்தில் படைத்தனர். அந்தத் திட்டங்களில் சில ''வட்டாரத் திட்டங்கள்'' (Regional Schemes) என வழங்கப்படுகின்றன.

இந்திய மாநிலங்களுக்கு முழு சுயாட்சியினைக் கொடுத்து, அவற்றை யெல்லாம் சில வட்டாரங்களாக (Regions) அமைத்து, வன்மையற்றதும் அகில இந்திய நலன்களை மட்டும் பேணக் கூடிய சில குறிப்பிட்ட அதிகாரங்களைக் கொண்டதுமான ஒரு மத்திய அரசின் கீழ் அந்த வட்டாரங்களை இணைத்து, ''பல கூட்டாட்சிகளைக் கொண்ட ஒரு தளர்ந்த கூட்டமைப்பை'' (Confederated Federations) உருவாக்குவதே வட்டாரத் திட்டங்களின் குறிக்கோளாகும்.

தீராத இந்து-முஸ்லீம் பிரச்சனையை, சுமுகமாகத் தீர்த்து வைக்கவும், இந்திய ஒற்றுமையை எவ்வகையிலேனும் நிலைநிறுத்தவும் மெய்யான மாநில சுயாட்சியை இந்திய மாநிலங்களுக்கு வழங்குவதுமே வட்டாரத் திட்டங்களின் உயர் நோக்கங்கள்.

டாக்டர். இக்பால் அவர்களின் ''இரு வட்டாரங்களின் திட்டமும்'' யூனியனிஸ்ட் கட்சியைச் சார்ந்த, பஞ்சாப் மாகாண முதல்வர் சர். சிக்கந்தர் ஹையத்கான் அவர்களின், ''ஏழு வட்டாரங்களின் திட்டமும்,'' இந்திய அரசின் ஆலோசகராயிருந்த ரெஜினால்ட் கப்லெண்டு அவர்களின் ''நான்கு வட்டாரங்களின் திட்டமும்'' அத்திட்டங்களில் மிகச் சிறந்தவை எனக் கருதப்படுகின்றன.

இவை தவிர இந்திய நாட்டிற்குச் சுதந்திரம் வழங்க விரும்பிய ஆங்கிலப் பேரரசும் நாட்டுப் பிரிவினையைத் தவிர்ப்பதற்காகவும், இந்து—முஸ்லீம் சிக்கலைத் தீர்ப்பதற்காகவும் சில அரசியற் சூத்திரங்களைப் (Political Formulas) பரிகாரங்களாகத் தந்தது. அவற்றில் '' கிரிப்ஸ் தூதுக் குழுத் திட்டமும் '' (Cripp's Mission Scheme) பிரிட்டானிய அமைச்சரவைத் தூதுக் குழுத் திட்டமும் (British Cabinet Mission Scheme) தலை சிறந்தவை. ஆங்கில அரசின் இத்திட்டங்கள், அகில இந்திய நலன்களுக்கான குறிப்பிட்ட சில அதிகாரங்களை

மட்டும் மத்திய அரசிற்குக் கொடுத்து, மற்றெல்லா அதிகாரங்களையும் முழு சுயாட்சி கொண்ட மாநிலங்களுக்குத் தந்து, உண்மையானதொரு கூட்டாட்சியை இந்திய நாட்டில் உருவாக்க முனைந்தன.

காங்கிரஸ் கட்சி, பிடிவாதமாக வற்புறுத்தி வந்த ''வலிமையான மத்திய அரசுக் கொள்கையும்,'' முஸ்லீம் லீக்கின் நாட்டுப் பிரிவினை இயக்கம் தீவிரமடைந்ததால், 1942-ஆம் ஆண்டு முதல் ஆட்டம் கண்டது. நாட்டுப் பிரிவினையை எவ்வகையிலேனும் தகர்க்க விரும்பிய காங்கிரஸ் கட்சியும் தனது பழைய ''வலிமை வாய்ந்த மத்திய அரசுக்'' கொள்கையை மாற்றிக் கொண்டு, முழு மாநில சுயாட்சியைப் போற்றும் சில திட்டங்களை, தனது தீர்மானங்கள், திட்டங்கள் மற்றும் தேர்தல் அறிக்கை ஆகியவைகள் மூலமாக நாட்டிற் கீந்தது. இந்தியப் பிரிவினைக்கு மாற்றாக அத்திட்டங்கள் காங்கிரஸ் கட்சியினால் தரப்பட்டாலும், அவற்றில் குறைந்த பட்ச அதிகாரங்களைக் கொண்ட மத்திய அரசும், மற்ற எல்லா அதிகாரங்களையும் பெற்ற மாநிலங்களும் மறைமுகமாக வலியுறுத்தப்படுகின்றன, ''கிரிப்ஸ் திட்டத்தை மறுக்கும் தீர்மானம்,'' ''வெள்ளையனே வெளியேறு (Quit India) தீர்மானம்,'' ''1945-ஆம் ஆண்டின் காங்கிரஸ் தேர்தல் அறிக்கை,'' ''அபுல்கலாம் ஆசாத் அவர்களின் அருந் திட்டம்'' மற்றும் ''பண்டித நேரு அவர்களின் குறிக்கோள் தீர்மானம்'' (Objective Resolution) ஆகியவை அகில இந்தியக் காங்கிரஸ் கட்சியால் தரப்பட்ட முழு மாநில சுயாட்சித் திட்டங்களாகும். இவ்வகையில் 1940-ஆம் ஆண்டிலிருந்து 1974-ஆம் ஆண்டு மேத் திங்கள் ஈறாக அரசினர் வல்லுனர்களாலும், ஆங்கில அரசாலும், அகில இந்தியக் காங்கிரஸ் கட்சியாலும் தரப்பட்ட பல திட்டங்களும் அரசியற் சூத்திரங்களும் கொள்கைத் தீர்மானங்களும் மாநில சுயாட்சிக் கொள்கையை மென்மேலும் எழுச்சியுறச் செய்து, அதன் உச்ச நிலைக்கு உயர்த்தின. அவை பற்றி ஈண்டு ஆய்வோம்.

# I

# வட்டாரத் திட்டங்களில் மாநில சுயாட்சியின் எழுச்சி

## 1. இக்பால் திட்டம்

பஞ்சாப், வடமேற்கு எல்லைப்புற மாகாணம், சிந்து, பலுசிஸ்தானம் ஆகிய வடமேற்கு இந்தியப் பகுதிகளை ஒன்றாக இணைத்து, ஒரே முஸ்லீம் வட்டார நிலப்பகுதியாக அமைத்தல் வேண்டும். முஸ்லீம்கள் அதிகமில்லாத அம்பாலா டிவிசன் போன்ற நிலப் பகுதியை அவைகளிலிருந்து நீக்கி விடுதல் வேண்டும். மீதியுள்ள இந்தியப் பகுதிகள் தனித்த ஒரு வட்டாரப் பகுதியாக்கப்பட வேண்டும். இந்தியத் துணைக் கண்டத்தில் இவ்விரு வட்டாரங்களும் (முஸ்லீம் வட்டாரமும்—இந்து வட்டாரமும்) முழு சுயாட்சிகளைக் கொண்டவையாக இயங்கும்; எஞ்சிய அதிகாரங்களையும் பெற்றிருக்கும். ஓர் அகண்ட இந்தியக் கூட்டாட்சியினுள் முஸ்லீம்களது வடமேற்கு வட்டாரப் பகுதியும் மற்ற இந்தியப் பகுதிகளும் ஒரே மத்திய அரசைப் பெற்றிருக்கும். வட்டார அரசிற்குட்பட்ட பல மாநிலங்களும் தன்னாட்சியுடன் இயங்கும். இதுவே டாக்டர் இக்பால் அவர்களின் திட்டம்.

## 2. சர். சிக்கந்தர் ஹையத்கான் திட்டம் 2

*1939*-ஆம் ஆண்டு சூலைத் திங்களில் சர். சிக்கந்தர் ஹையத்கான் தனது திட்டத்தை வெளியிட்டார். இவருடைய திட்டத்தில் ஓர் அனைத்திந்தியக் கூட்டாட்சிக்குட்பட்டு (All India Federation) பல தனித்தனி வட்டாரக் கூட்டாட்சிகள் (Regional Federation) இயங்கும். இந்தியாவை 7 வட்டாரங்களாகப் பிரிக்க வேண்டும்.

(i) அசாம், வங்காள சுதேச மன்னர் பகுதிகள், சிக்கிம் ஆகியவை சேர்த்து முதல் வட்டாரப் பகுதியாகவும்;

(ii) ஒரிசா, பீகார் ஆகிய இவ்விரு மாகாணங்களைச் சேர்த்து இரண்டாவது வட்டாரப் பகுதியாகவும் ;

---

2 " Outlines of A Scheme of Indian Federation " Page 6 & 9. Sir Sikandar Hayat Khan.

(iii) உத்தரப் பிரதேச மாநிலத்தையும், அதனுள்ளிருந்த சுதேச மன்னர் பகுதிகளையும் சேர்த்து மூன்றுவது வட்டாரப் பகுதியாகவும்;

(iv) சென்னை மாநிலம், திருவாங்கூர், குடகு, அங்கிருக்கும் மற்ற சுதேச மன்னர் பகுதிகளையும் சேர்த்து 4-ஆவது வட்டாரப் பகுதியாகவும்;

(v) மேற்கு இந்திய சமஸ்தானங்கள், பம்பாய் மாகாணத்திலுள்ள சமஸ்தானங்கள் (மன்னர் பகுதிகள்) பம்பாய், ஐதராபாத், மைசூர், மத்திய மாநிலம் ஆகியவைகளைச் சேர்த்து 5-ஆவது வட்டாரப் பகுதியாகவும்;

(vi) பிக்கானிர், ஜெய்சால்மீர் பகுதிகள் நீங்கலாக மற்ற ராஜபுதன சுதேச மன்னர் பகுதிகள், குவாலியர், மத்திய இந்திய மன்னர் பகுதிகள், பீகார் சுதேச மன்னர் பகுதிகள், ஒரிசா, மத்திய மாகாணம் இவைகளைச் சேர்த்து 6-ஆவது வட்டாரப் பகுதியாகவும்;

(vii) சிந்து, பஞ்சாப், வடமேற்கு எல்லைப்புற மாநிலம் ஆகியவைகளைச் சேர்த்து 7-ஆவது வட்டாரப் பகுதியாகவும் உருவாக்க வேண்டும்.

இவற்றில் 2 முஸ்லீம் வட்டாரப் பகுதிகளும் 5 இந்துப் பகுதிகளும் இருக்கும். சுதேச மன்னர்களின் பிரதிநிதிகளையும் மாநிலங்களிலிருந்து மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களையும், ஒவ்வொரு வட்டாரச் சட்ட மன்றமும் பெற்றியங்க வேண்டும்.

இவை யெல்லாவற்றையும் உள்ளடக்கிய இந்திய மத்திய அரசிற்கு அதன் நிர்வாக வசதியை அனுசரித்து, நாட்டின் பொது நலன்களுக்குத் தேவையான முக்கிய அதிகாரங்கள் மட்டும் கொடுக்கப்பட வேண்டும். அஃதாவது நாட்டுப் பாதுகாப்பு, வெளிநாட்டு விவகாரங்கள், நாணயம், நோட்டச்சடித்தல் போன்றவையே மத்திய அரசின் அதிகாரங்கள் ஆகும். மற்ற அதிகார இனங்கள் முழுவதும் வட்டாரப் பகுதிகளுக்கு வழங்கப்பட வேண்டும்.

மத்திய அரசின் அமைச்சரவையில் ஏழு வட்டாரங்களினுடைய பிரதிநிதிகளும் வட்டாரத்திற்கு ஒருவர் என்ற அளவில் இடம் பெற வேண்டும். மொத்த மத்திய அமைச்சர்கள் 9 பேருக்கும் மேற்படாதபோது சுதேச மன்னர்களின் பிரதிநிதிகள் இருவர் மத்திய அமைச்சரவையில் இடம் பெறுவர்.

இந்த வகை அரசியல் அமைப்பில் மிக முக்கியமான சிறப்புக் கூறு என்னவெனில், ஒவ்வொரு வட்டாரப் பகுதிகளுக்குள்ளிருக்கும் மாநிலப் பகுதிகளும் மன்னர் பகுதிகளும் முழு சுயாட்சி பெற்ற, தனித் தனி நிர்வாக அமைப்புக்களுடன் இயங்கும்.

சர். சிக்கந்தர் ஹையத்கானின் ''ஏழு வட்டாரங்களின் திட்டம்'' மிகச்சிக்கல் வாய்ந்ததாக இருப்பினும் அதனுடைய அடிப்படைக் கொள்கையில் முழு மாநில சுயாட்சியும் சிறந்த மத்திய அரசமைப்பும் அகில இந்திய ஒற்றுமையும் இருப்பதை நாம் காணலாம். முன்னுள் இந்தியக் குடியரசுத் தலைவர் டாக்டர். இராசேந்திரப் பிரசாத் அவர்கள், இத் திட்டத்தை ஏற்றுக் கொண்டதோடு,

> ''இத் திட்டம், அரசியல்—கலாச்சார அடிப்படைகளில் நாட்டைத் துண்டாக்காமல், ஏக இந்தியாவையும் அதன் ஒற்றுமையையும் வலியுறுத்துகிறது.'' 3

எனக் குறிப்பிட்டார்.

3. ரெஜினல்டு கப்லண்டுத் திட்டம்

அன்றைய நாட்களில் வெளியிடப்பட்ட வட்டாரப் பகுதி அரசுகளின் திட்டத்தையும், குறைவான அதிகாரம் கொண்ட மத்திய அரசையும், ஒருங்கிணைத்து இந்திய அரசின் ஆலோசகராயிருந்த திரு. ரெஜினல்டு கப்லெண்டு (REGINALD COUPLAND) அவர்கள், இந்திய அரசமைப்புப் பிரச்சனையைத் தீர்ப்பதற்காக ஒரு சீரிய திட்டத்தை வழங்கினர். இவரது திட்டப்படி, இந்தியா நான்கு பகுதிகளாகப் பிரிக்கப்படும். சிந்து நதிப் பகுதி, கங்கை நதிப் பகுதி, டெல்டாப் பகுதி, தக்காணம் ஆகிய நான்கு வட்டாரங்களையும் ஓர் இந்தியக் கூட்டாட்சி இணைக்கும். இவைகளை ''மேற்பார்வையிடும் மத்திய அரசு'' பாதுகாப்பு, வெளிநாட்டு விவகாரங்கள், வெளிநாட்டு வாணிகம், வரி, வெளிநாட்டுக் கொள்கை, நாணயம் ஆகிய அதிகாரங்களை மட்டுமே கொண்டிருக்கும். அந்தந்த வட்டாரப் பகுதியினுள் இருக்கும் மாநிலப் பகுதிகளும், வட்டாரப் பகுதிகளும், எஞ்சிய அதிகாரங்களைக் கொண்டு தன்னுட்சியுடன் இயங்கும்.

---

3 *Dr*. Rajendra Prasad, "India *Divided*" (1947) Page 199

இத் திட்டங்கள் யாவும் முஸ்லீம் லீக்கினல் ஆய்வு செய்யப் பட்டன. ஆனுல் முஸ்லீம் லீக் அவைகளை ஏற்றுக் கொள்ள வில்லை. பிரிவினைக் கோரிக்கை வலுப்பெற்று வருவதை உணர்ந்த காங்கிரஸ், வலுவான தேசிய அரசைக் கொண்ட ''ஏக இந்தியாவிற்கும்,'' ''நாட்டுப் பிரிவினைக்கும்'' இடையில் சிக்கிக் கொண்டு ''இருதலைக் கொள்ளி எறும்பு'' போலத் தவித்ததே யன்றி, இத்திட்டங்களைப் பற்றிக் கவலைப்பட வில்லை ஆனுல், அதன் ''வலிமையான மத்திய அரசு'' என்ற பழைய கொள்கை முற்றிலும் சிதிலமடைந்து விட்டது.

## II

## காங்கிரஸ் கட்சி தந்த கொள்கைத் திட்டங்களில் — மாநில சுயாட்சியின் எழுச்சி —

### 1. வெள்ளையனே வெளியேறு தீர்மானம் (QUIT INDIA RESOLUTION)

1942–ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்களில் வரலாற்றுப் புகழ்பெற்ற, ''வெள்ளையனே வெளியேறு'' என்ற தீர்மானத்தைக் காங்கிரஸ் கட்சி நிறைவேற்றியது. அதில் மாநில சுயாட்சி பற்றிய தனது மாறி வரும் கொள்கையைக் காங்கிரஸ் வெளிப்படுத்துகிறது.

> ''... ஓர் அரசியல் நிர்ணய சபையை, இடைக்கால சர்க்கார் அமைக்கும். எல்லாப் பிரிவுகளும் ஒப்புக் கொள்ளக் கூடிய இந்திய அரசியல் சட்டம் ஒன்றை அந்தச் சபை தயாரிக்கும். இந்தச் சட்டம் கூட்டாட்சித் தன்மை (Federal) கொண்டதாக இருக்க வேண்டும் என்பது காங்கிரசின் கருத்து. கூட்டாட்சியில் சேரும் உறுப்புக்களுக்கு, அதிகபட்ச சுயாட்சி இருந்து வரும். வரையறுக்கப்படாத ''மிச்ச அதிகாரங்கள்'' (Residuary Powers) இந்த உறுப்புகளுக்கே (மாநிலங்களுக்கு) அளிக்கப்படும் ..'' [4]

என அத்தீர்மானம் முழு மாநில சுயாட்சி பற்றிப் பேசுகிறது.

---

4. *மௌலாஞ அபுல்கலாம் ஆசாத் அவர்கள், ''இந்திய விடுதலை வெற்றி'' (1961) இணைப்புப் பட்டி. பக்கம், 302.*

அதிகபட்ச சுயாட்சி அளிக்கப்படும் என்பதும், அத்துடன் வரையறுக்கப்படாத எஞ்சிய அதிகாரங்களும் மாநிலங்களுக்கே தரப்படும் என்பதும், இத் தீர்மான வாசகத்திலிருந்து வெளிப்படுகிறது. ‘‘கிரிப்ஸ் திட்டத்தை’’ ஏற்றுக் கொள்ள இயலாது எனக் கண்டு, காங்கிரசால் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்திற்கு இரண்டு மாதங்கள் கழித்து, காங்கிரஸ் தனது இறுதி விடுதலைப் போராட்டத்தைத் துவங்குவதற்கு முன்னர், மாநிலங்களின் சுயாட்சியைப் பற்றிய தனது தெளிவான கருத்தைத் தெரிவிக்கிறது. ஆகவே, வலிமையான மத்திய அரசு என்ற கொள்கையிலிருந்து காங்கிரசு வழுவிச் சென்று முழு மாநில சுயாட்சிக் கொள்கையினை மெல்ல மெல்ல ஏற்றுக் கொள்வதற்குரிய தொடக்கத்தை இத் தீர்மானம் காட்டுகிறது.

## 2. 1945-ஆம் ஆண்டின் காங்கிரஸ் தேர்தல் அறிக்கை

1942-ஆம் ஆண்டு ஆகஸ்டில் ‘‘வெள்ளையனே வெளியேறு’’ என்ற இயக்கம் இந்தியாவை ஆட்டிப்படைத்தது. பல தலைவர்கள் சிறை புகுந்தனர்.

1943-ஆம் ஆண்டில் ஜின்னு ‘‘நாட்டைப் பிரி, வெளியேறு’’ என்ற புதுக் கொள்கை முழக்கத்தைச் செய்தார். இந்திய அரசியலில் முடக்கநிலை தொடர்ந்தது. 1945-ஆம் ஆண்டு சூன் திங்களில் இந்திய அரசுப் பிரதிநிதி ‘‘இறுகிய அரசியல் சூழலைச் சற்றுத் தணித்து, இந்தியர்களின் குறிக்கோளான முழுச் சுதந்திரத்தை நோக்கி இந்தியாவை ‘‘முன்னேறச் செய்கின்ற’’ தனது முடிவை வெளியிட்டார்.

இரண்டாம் போருக்குப் பின்னர் இங்கிலாந்தில் தொழிற் கட்சி ஆட்சிக்கு வந்தது. ஆட்லி தலைமையமைச்சரானார்.

முடங்கிக் கிடந்த ‘‘1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டம்’’ மீண்டும் 6 ஆண்டுகளுக்குப் பின்னர், புத்துயிர் பெற்றுச் செயல்படத் துவங்கியது. காங்கிரஸ் காரியக் கமிட்டி 11—12—1945-இல் சட்ட மன்றங்களின் தேர்தல் குறித்து ஒரு தேர்தல் அறிக்கையை வெளியிட்டது. அதனைத் தொடர்ந்து மாகாண–மத்தியச்சட்ட மன்றங்களின் தேர்தலுக்கான முழுமையான தேர்தல் அறிக்கை ஒன்றையும் அது அறிவித்தது. தேர்தல் வெகு அண்மையில் நடைபெற விருந்தன. அனைந்திந்திய

காங்கிரஸ் மாநாடு குறுகிய காலத்தில் நடக்க இயலாததால், காங்கிரஸ் காரியக் கமிட்டி வெளியிட்ட தேர்தல் அறிக்கையையே அனைத்திந்தியக் காங்கிரஸின் அறிக்கையாக ஏற்றுக் கொள்ளப்பட்டது.

### தேர்தல் அறிக்கையில் அனைவருக்கும் சம உரிமைகள்

இந்திய அரசமைப்பைப் பொறுத்தும், மாகாணங்களின் அரசியல் நிலை குறித்தும், அவற்றின் முழு மாநிலத் தன்னாட்சி அதிகாரங்கள் குறித்தும், காங்கிரஸ் கட்சியின் 1954-ஆம் ஆண்டின் தேர்தல் அறிக்கை தெளிவாக எடுத்து இயம்புகிறது.

தேர்தல் அறிக்கையின் மூன்றும் பத்தியில், "அனைவருக்கும் சம உரிமைகள்" என்ற தலைப்பின் கீழ்,

> "...அகன்ற வரையமைப்புக்குள், ஒவ்வொரு சமூகப் பிரிவுகளினுடையதும் நாட்டெல்லைப் பகுதிகளுடையதுமான தனி வாழ்க்கை நிலையையும் பண்பாட்டையும் வளர்ப்பதற்காக அந்தந்த நிலப் பிரிவுகளின் சுதந்திரத்திற்காகக் காங்கிரஸ் போராடி வந்துள்ளது. இந்த நோக்கத்திற்காக முடிந்த அளவில் அந்தந்த நிலப்பகுதிகளும், மாநிலங்களும், பண்பாட்டு அடிப்படையிலும் மொழி அடிப்படையிலும் பிரித்தமைக்கப்படும். அரசியல் அமைப்பில், அடிப்படை உரிமைகளும் சுதந்திரங்களும் எல்லா மக்களுக்கும் கிடைக்க உறுதியளிக்கும் வகையில் ஒரு விடுதலை பெற்ற சனநாயக நாட்டைக் காணவே காங்கிரஸ் முனைந்துள்ளது. காங்கிரஸ் கண்ணோட்டத்தில், தன்னாட்சி கொண்ட உறுப்புக்களுடன் (Units அஃதாவது மொழி, பண்பாடு, அடிப்படையில் பிரிக்கப்பட்ட மாநிலங்களும், சுதேச மன்னர் நிலப்பகுதிகளும்) 'வயது வந்தோருக்கு வாக்குரிமை' என்ற அடிப்படையில் — தேர்ந்தெடுக்கப்பட்ட, சட்டமியற்றும் மன்றங்களோடு கூடிய — ஒரு கூட்டாட்சியாய் அவ்வகை அரசமைப்பு இருக்கும். "அந்த இந்தியக் கூட்டாட்சி, அதன் பல்வேறு பகுதிகளால் மனமொப்பி ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு கூட்டமைப்பாகவும் இருக்கும்,"

''அதன் உயிர்நிலையான பகுதிகளுக்கு (மாநிலங்களுக்கு) அதிகபட்ச சுதந்திரம் கொடுப்பதற்காக வேண்டி அந்தப் பகுதிகள் எல்லாவற்றிற்கும் பொருந்துவதான மத்திய அரசிற்குத் தரப்படும் அதிகார இனங்கள் பொதுவானதும் முக்கியமானதுமான ஒரு சிறிய பட்டியலாக இருக்கும். மேலும், அந்த உறுப்புக்களில் மாநிலங்களால் விரும்பி ஏற்றுக் கொள்ளப்படக் கூடிய பொதுப் பொருள்களைக் கொண்ட ஓர் விருப்பப் பட்டியலும் இருக்கும்.'' 5

எனத் தெளிவாகச் சொல்லப்பட்டுள்ளது.

நால்வகைக் கோட்பாடுகளில் மாநில சுயாட்சி

இந்தத் தேர்தல் அறிக்கையில் இந்திய அரசமைப்புப் (Constitution)பற்றிய நால்வகைக் கோட்பாடுகள் வலியுறுத்தப் படுவதை நாம் காணலாம்.

1. தனித்தனி மொழி, பண்பாடு கொண்ட நிலப் பகுதிகளாக விளங்கும் வகையில், மாகாணங்கள் சீரமைக்கப்படும். அவ்வகை மாநிலங்களின் வாழ்க்கை முறையும், பண்பாடும், மொழியும், மத்தியத் தலையீடு இன்றி, சிறப்புறும் வகையில் எல்லா உரிமைகளையும் பெற்ற மாநில அமைப்புக்களாய் இருக்கும். அதாவது மாநிலங்களுக்கு முழுத் தன்னாட்சி வழங்கப்படும்.

2. இந்தியக் கூட்டாட்சியின் மத்திய அமைப்பு, தன்னாட்சி கொண்ட மாகாணங்களை இணைக்கத் தக்கதாக மட்டுமே இருக்கும்.

3. அந்த மத்தியக் கூட்டாட்சியானது மாநிலங்கள் அல்லது பல்வேறு நிலப் பகுதிகளாலும் விரும்பி ஏற்றுக் கொள்ளப்படுவதாகவே இருக்கும்.

4. மாநிலங்களுக்கும் — மைய அரசிற்கும் பொதுவான அதிகாரங்களைக் கொண்ட ஒரு விருப்பப் பட்டியல் இருக்கும். மேலும் மத்திய அரசிற்கு என்று சில குறிப்பிட்ட அதிகாரங்

---

5 Mr. B. Pattabhi Sitaramayya, ''History of Indian National Congress'', Vol. II, Appendix, Pp. (I) - (II)

கள் மட்டுமே இருக்கும். எனவே எஞ்சிய அதிகாரங்கள் முழுவதும் மாகாண அரசுகளுக்கே உரித்தானது என்று இதனுல் பெறப்படுகிறது.

இந்த நால்வகைக் கோட்பாடுகளும், முழுமையான மாநில சுயாட்சியையும் அதிகமான அதிகாரங்களைப் பெற்ற மாநிலங்களையும் அமைக்க வல்லது என்பது சொல்லாமலே விளங்கும்.

முழுத் தன்னுட்சியோடு கூடிய மாநிலங்களைக் கொண்ட கூட்டாட்சி அமைப்பை, அடிப்படைக் கொள்கையாகத் தனது தேர்தல் அறிக்கையில் வைத்த, அனைத்திந்தியக் காங்கிரஸ், 1945–ஆம் ஆண்டின் இறுதியில் தேர்தல் களத்தில் இறங்கியது.

இந்திய மாகாணங்களுக்குத் தன்னுட்சிக் கனியைத் தருவதாகக் காங்கிரஸ் கட்சியினர் உறுதி யளித்தார்கள். விளைவு – சென்னை, பம்பாய், உத்தரப் பிரதேசம், மத்தியப் பிரதேசம், வடமேற்கு எல்லைப்புற மாகாணம், ஒரிசா, பீகார் ஆகிய 8 மாநிலங்களில் காங்கிரஸ் கட்சி ஆட்சியைக் கைப்பற்றியது. 1946–ஆம் ஆண்டினிடையில் ''அமைச்சரவைத் தூதுக்குழு'' கொடுத்த திட்டத்தின்படி, மாநிலச் சட்ட மன்ற உறுப்பினர்கள் விகிதாச்சாரப் பிரதிநிதித்துவ முறைப்படி வாக்களித்து, மத்தியச் சட்ட மன்ற உறுப்பினர்களைப் பொறுக்கி எடுத்தனர்.

காங்கிரஸ் தனது தேர்தல் அறிக்கையின் அடிப்படையில் மாநிலத் தேர்தல்களில் பெற்ற பெரு வெற்றியே, மத்தியச் சட்ட மன்றத்திற்கும் பெருவாரியான காங்கிரஸ் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்க வகை செய்தது என்பது கண்கூடு. அது மட்டுமன்று; அந்த மையச் சட்ட மன்றமே இந்தியத் துணைக் கண்டத்தின் தலைவிதியை நிர்ணயிக்கும் இன்றைய அரசியல் அமைப்பை உருவாக்கக் கூடிய அரசியல் நிர்ணய சபையாகவும் (Constituent Assembly) இயங்கியது.

வலிமை கொண்ட மத்திய அரசை உருவாக்க வேண்டும் என்ற உள்நோக்கத்துடனிருந்த காங்கிரஸ், அதனை 1930–ஆம் ஆண்டுவரை மக்கள் மன்றத்தில் வைக்காமல் பின்னர் அரசியல் சூழலுக்கு ஏற்ப இரு பொருள்படும்படியான தீர்மான வாசகங்களை வெளியிட்டு, நாட்டுப் பிரிவினை இயக்கம் தீவிரமானவுடன், வன்மை கொண்ட மத்திய அரசுக் கொள்கையை

வேறு வழியில்லாமல் சற்று விட்டுக் கொடுத்து, இரட்டை நாக்கினுல், நேரத்திற்கேற்றபடி திரித்துக் கூறி, 1945-ஆம் ஆண்டுத் தேர்தல் அறிக்கையினுல் மறைபொருள்பட மாநில சுயாட்சிக் கொள்கையினை ஏற்றுக் கொண்டது. ஆனுல் பின்னர் அது முழு மாநில சுயாட்சியை நல்கியதா? இல்லை.

3. அபுல்கலாம் ஆசாத் அவர்களின் அருந் திட்டம்

1946-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் மூன்ரும் நாளில் ''அமைச்சரவைத் தூதுக் குழுவினரிடம்'' அன்றையக் காங்கிரஸ் தலைவரான அமரர். மௌலானு அபுல்கலாம் ஆசாத் அவர்கள் இந்திய அரசமைப்பை உருவாக்கத் தேவையான சில அடிப்படைக் கருத்துக்களை வழங்கினுர்.

நாட்டின் பாதுகாப்பு (Defence), அனைத்திந்தியப் போக்கு வரத்து (Communications) மற்றும் வெளிநாட்டுக் கொள்கை (Foreign Affairs) ஆகியன மட்டுமே மைய அரசின் அதிகாரத் திற்கு உட்பட்டவையாகும். இது தவிர ஒரு விருப்பு அதிகாரப் பட்டியல் (Discretionary List) இருக்கும். அந்த விருப்ப அதிகாரப் பட்டியலிலுள்ள அதிகாரங்களை மாகாணங்கள் தாங்களே வைத்துக் கொள்வதா? அல்லது மத்திய அரசிற்கு ஒப்படைத்து விடுவதா? என்பது பற்றி மாகாணங்கள் விரும்பி, மைய அரசிற்கு ஒப்படைத்த அதிகாரங்கள் தவிர மற்ற அதிகாரங்கள் அனைத்தும் மாகாணங் களின் அதிகாரத் துறைக்கே சேரும்.

என்பதே ஆசாத் அவர்களின் திட்டம்.

மத்திய அரசிற்கு விடப்பட்ட மூன்றே மூன்று அதிகாரங்கள் தவிர ஏனைய எல்லா வகை அதிகாரங்களையும் மாநிலங்களே பெரும் பெற்றியை ஆசாத் அவர்களின் இத் திட்டத்தில் நாம் காணலாம்.

ஆசாத் அவர்கள் இந்தத் திட்டத்தை, பிரிட்டானிய அமைச்சரவைத் தூதுக் குழுவிடம் வைக்கும் முன்னர், காங்கிரஸ் காரியக் கமிட்டியை அவர் கலந்து கொள்ள வில்லை என்றும், ஆனுலும், அக்குழுவிடம் இத்திட்டம் பற்றித் தெரிவிக் கப்பட்ட பின்னர், காங்கிரஸ் காரியக் கமிட்டியை அவர் சரிக்கட்டி விட்டார் என்றும் திரு. கே. எம். முன்சி அவர்கள் கருதுகிருர்கள்.

ஆனால் ஆசாத்தின் திட்டத்தை, "அமைச்சரவைத் தூதுக் குழு" அப்படியே ஏற்றுக் கொண்டது என்றும் அதன் அடிப் படையிலேயே 16—5—1946-இல் வெளியிட்ட "அமைச்ச ரவைத் தூதுக்குழுவின் திட்டம்" உருவாக்கப்பட்டது என்றும், ஆசாத் அவர்கள் அவரது சுய சரிதையான "இந்தியா விடுதலை வெற்றி" என்ற நூலில் தெளிவுபடக் கூறுகிறார். எது எப்படி யிருப்பினும், காங்கிரசின் அதிகாரப் பூர்வமான தலைவரால் இத் திட்டம் முன்மொழியப்பட்டது என்பது மட்டும் உண்மை.

அறிஞர் ஆசாத் அவர்களின் இத்திட்டம், வரலாற்றில் தெளிவான இடத்தைப் பெறவில்லை; மறைக்கப்பட்டுள்ளது. அதிகாரப் பூர்வமற்ற பல கருத்துக்கள் அது பற்றி கூறப்படு கின்றன. எனவே, அவர் அமரர் ஆன பின்னர் வெளிவந்த "இந்தியா விடுதலை வெற்றி" (தமிழ் மொழி பெயர்ப்பு - மௌலானா அபுல்கலாம் ஆசாத் சுயசரிதை 1961) என்ற அவரது நூலின் 171, 172, 173, 174 ஆகிய பக்கங்களில் காணும் முக்கியப் பகுதிகளை அவர் தம் சொற்களாலேயே கீழே தந்துள்ளோம்.

"உலகமெங்கும் அரசியல் அதிகாரத்தைப் பிரித்து வினி யோகிக்கும் போக்குத்தான் காணப்பட்டது. இந்தியா பெரிய நிலப்பரப்பு உள்ள தேசம். மொழி, பழக்க வழக்கங்கள், பூகோள நிலைமைகள் ஆகியவற்றில் நிறைய வேறுபாடுகள் உண்டு. எனவே, இந்தியா முழுவதற்குமாக ஓர் ஐக்கிய சர்க்கார் (ஒற்றையாட்சி) இருந்து வருவது சிறிதும் சரிப்படாது என்பது தெளிவு. ஒரு பெடரல் ஆட்சி (கூட்டாட்சி) அமைப்பின் கீழ், அதிகாரங்கள் பரவலாக வினியோகிக்கப் பட்டிருப்பது தான் சிறுபான்மையோரின் பயத்தைத் தணிக்க உதவும்படி யாக இருக்கும்..."

"விவகாரத்தின் தன்மையைக் கருத்திற் கொண்டு பார்த் தால், இந்தியாவின் அரசியல் அமைப்பானது, சமஷ்டி (கூட் டாட்சி) அமைப்பாகத்தான் இருக்க இயலுமென்ற முடிவுக்கு நான் வந்தேன். கூடியவரை அதிகபட்ச இனங்கள் விஷயத் தில் மாகாணங்களுக்குச் சுயாட்சியை உறுதி செய்யும் வகை யில் அது அமைக்கப் பெற வேண்டும். மாகாண சுயாட்சியின் தேவைகள் தேசிய ஐக்கியத்தின் தேவைகள் ஆகிய இரண்டை யும் சமரசப்படுத்த வேண்டி யிருந்தது. மத்திய — மாகாண

சர்க்கார்களிடையே அதிகாரங்களையும், பணிகளையும் வினியோகிப்பதற்குத் திருப்திகரமான ஓர் அடிப்படையைக் கண்டு பிடிப்பதன் மூலமாகத்தான் அதைச் செய்ய முடியும்.''

''சில அதிகாரங்களும் பணிகளும் மத்தியப்பொறுப்புகளாக இருக்க வேண்டியது அத்தியாவசியம். மற்றவை மாகாணங்களின் பொறுப்புகளாக இருக்க வேண்டும். சில பொறுப்புக்கள் இரண்டில் எதனிடமாவது இருக்கலாம்.(மாகாண) சம்மதத்தின் பேரில் இந்த அதிகாரத்தை மாகாணமோ மத்திய ஆட்சியோ வகிக்கலாம். மத்திய சர்க்காரில் அத்தியாவசியமான பொறுப்புகள் என்று குறைந்த எண்ணிக்கை இனங்களைத் தொகுக்கும் ஓர் அடிப்படையைத் தயாரிப்பது முதல் நடவடிக்கையாக இருக்க வேண்டும். இவை, கட்டாயமாக யூனியன் சர்க்காரிடம்(மத்திய அரசிடம்) இருக்க வேண்டும். மேலும், மாகாணங்கள் விரும்பும் பட்சத்தில், மத்திய ஆட்சியினர் தம் பொறுப்பில் நிர்வகிப்பதற்கு ஒரு தனி ஜாபிதா தயாரிக்கப்பட வேண்டும். இது மத்திய அரசின் இஷ்டபூர்வமான அதிகார ஜாபிதா என்று கருதலாம். இந்த விஷயங்கள் சம்பந்தப்பட்ட வரை எல்லா அதிகாரங்களை அல்லது சிலவற்றை மத்திய சர்க்காரிடம் எந்த மாகாண சர்க்காரும் ஒப்படைக்கலாம்.''

''தேசப் பாதுகாப்பு, போக்குவரத்து, அயல் நாட்டு விவகாரங்கள் ஆகியவை அகில இந்திய அடிப்படையில் மட்டுமே சரிவரக் கவனிக்கக் கூடியவை என்பது எனக்குத் தெளிவாகப் பட்டது. மாகாண அந்தஸ்தில் அவற்றை வகிக்க முயற்சித்தால் பெடரல் சர்க்காரின் நோக்கமும் அடிப்படையும் தகர்ந்து விடும். இதேபோல் வேறு சில விஷயங்கள் மாகாணப் பொறுப்புகளாகத்தான் இருக்க முடியும். ஆனால் மூன்றாவது ஜாபிதா ஒன்று இருக்க வேண்டும். அதிலுள்ள விஷயங்கள் மாகாணப் பொறுப்புகளாக இருக்க வேண்டுமா? அல்லது மத்திய ஆட்சியிடம் ஒப்படைக்கலாமா? என்பதை மாகாண சட்டசபை முடிவு செய்வதாக இருக்க வேண்டும்.''

மாகாணங்களுக்கு முழுத் தன்னாட்சி கொடுக்கக் கூடிய இந்திய அரசமைப்பு, வகுப்புவாதப் பிரச்சனைக்கு மட்டும் தீர்வு காணக்கூடிய ஒரு முறையல்ல. பல மொழிகளையும் பல இனங்

களையும் படைத்த இந்தியப் பெருநாட்டுக்கேற்ற ஒரு முறையு மாகும் என்பதையும் திரு. ஆசாத் அவர்கள் தெளிவுபடுத்து கிறார்.

''வகுப்பு விவகார விஷயங்கள் ஒருபுற மிருக்க, இந்தியா போன்ற ஒரு நாட்டுக்கு இதுவே மிகச் சிறந்த ராஜீயப் பரிகாரம் என்ற திருப்தி எனக்கு ஏற்பட்டது. இந்தியா,விஸ்தீர்ணம் மிகுந்த தேசம். ஜனத்தொகை அதிகம். ஏறக்குறைய ஒரே தன்மையுள்ள பிரிவுகளாக வெவ்வேறு மாகாணங்களில் மக்கள் வசிக்கின்றனர். எனவே, அரசியல் நிலைமையையும், நிர்வாக நடைமுறைச் சௌகரி யத்தையும் பொதுப்படையாகக் கருத்திற் கொண்டு, அதிக பட்ச சுயாட்சியை மாகாணங்களுக்கு உறுதி செய்ய வேண்டியது அவசியம்.''

''ஏப்ரல் மாதம் 12-ஆம் நாள் காங்கிரஸ் கமிட்டி கூடியது. மந்திரி சபைத்தூதுக் கோஷ்டியுடன் நான் நடத்திய பேச்சைப் பற்றி,கமிட்டிக்குத் தெரிவித்தேன். வகுப்புப் பிரச்சனைக்கு நான் சொன்ன யோசனையை இன்னும் அதிகமான விளக்கங்களுடன் கூட வருணித்தேன்.''

''காந்திஜி இதை முழுவதும் ஒப்புக் கொண்டார்.''

''அதுவரை எவராலும் வழிகாண முடியாமல் இருந்த ஒரு பிரச்சனைக்கு, நான் தீர்வு கண்டுவிட்டதாக காந்திஜி என்னைப் பாராட்டினார்... இந்தியா போன்ற நாட்டில் பெடரல் அரசியல் அமைப்புத்தான் செயலாற்றக் கூடியது என்று காந்திஜி நிச்சயமாக நம்பினார்.''

காந்தியடிகளும் மாநிலங்களின் தன்னாட்சியை ஒத்துக் கொண்டிருந்தார் என்பது ஆசாத் அவர்களின் மூலம் தெளிவாகிறது.

### ஆசாத்தின் திட்டமும் தி.மு.க.வின் திட்டமும்

திரு. அபுல்கலாம் ஆசாத் அவர்கள், நாடு துண்டாடப் படக் கூடாது எனக் கருதித்தான் குறைந்த பட்ச மூன்று அதிகாரங்களான நாட்டுப் பாதுகாப்பு, வெளிநாட்டுக் கொள்கை மற்றும் செய்தித் தொடர்பு ஆகிய மூன்றை மட்டும்

மத்திய அரசு பெறவேண்டும் எனவும், அதுவும் மாநிலங்களால் ஒப்புக் கொள்ளப்பட்ட பின்னரே அந்த மத்திய அரசின் அதிகாரங்கள் தரப்பட வேண்டும் என்றும், மற்ற அதிகாரங்கள், அனைத்தும் மாநிலங்களே பெற வேண்டும் எனவும் கண்டே இந்த முழு மாநில சுயாட்சித் திட்டத்தை, பிரிட்டானிய அமைச்சுக் குழுவிடம் தந்தார். அதனைப் பெரும்பாலும் காங்கிரஸ் கட்சியும் ஏற்றுக் கொண்டது.

இன்றையத் திராவிட முன்னேற்றக் கழகமும் ஆசாத் அவர்களின் திட்டத்தையே தனது மாநில சுயாட்சிக் கொள்கையாக நாட்டின் முன் படைத்துள்ளது. தமிழக அரசும் அதன் கொள்கையாக ஆசாத் அவர்களின் பழைய திட்டத்தையே தனது "மாநில சுயாட்சிச் சட்ட மன்றத் தீர்மானத்தின்" மூலம் ஏற்றுக் கொண்டுள்ளது. ஆனால் ஒரே ஒரு வேறுபாடு; ஆசாத் அவர்கள் மத்திய அரசிற்குத் தர வேண்டு மென்ற மூன்று அதிகாரங்களுடன் சேர்த்து நான்காவது அதிகாரமான "நோட்டச்சடித்தல் — நாணயம்" ஆகியவற்றைக் கூட மத்திய அரசே பெற்றுக் கொள்ளலாம் எனக் கூறுகிறது திராவிட முன்னேற்றக் கழகம். ஆசாத் அவர்களின் அருந் திட்டம் — இந்திய நாட்டின் பிரிவினையைத் தவிர்ப்பதற்காகக் கொடுக்கப்பட்ட நல்ல திட்டம் என்றால், திராவிட முன்னேற்றக் கழகத்தின் மாநில சுயாட்சிக் கோரிக்கை, பிரிவினையைத் தூண்டி விடும் கோரிக்கையா? ஆசாத் அவர்களின் திட்டம் அன்று இறுதியில் கைவிடப்பட்டதால் பின்னர் நாடு துண்டாயிற்று. எனவே, கழகத்தின் மாநில சுயாட்சித் திட்டம் நாடு பிரிக்கப்படக் கூடாது என்பதையே அடிப்படையாகக் கொண்டுள்ளது என்பது தெளிவாகப் புலனாகும்.

## III

## ஆங்கில அரசு தந்த அரசியற் திட்டங்களில் மாநில சுயாட்சியின் எழுச்சி

### 1. கிரிப்ஸ் திட்டம் (Cripp's Plan)

இரண்டாம் உலகப் பெரும் போரில் இங்கிலாந்தும், அமெரிக்காவும் நேசநாடுகளாக இணைந்தன. இந்திய விடுதலை பற்றிய அரசியல் பிரச்சனையைத் தீர்த்து வைக்க வேண்டுமென ஆங்கில அரசை அமெரிக்கக் குடியரசுத் தலைவர் ரூஸ்வெல்ட்

அவர்கள் வற்புறுத்தினர். இரண்டாம் உலகப் போரில் இந்தியா வின் மனப்பூர்வமான ஒத்துழைப்பை, பிரிட்டன் எவ்வகை யிலும் பெற்ருக வேண்டும் என்றும் அவர் தெளிவாக்கினர். இதற்காக இந்தியச் சுதந்திரத்தின் ஓர் அறிகுறியையாவது, ஆங்கில அரசு காட்டித் தர வேண்டும் என்பதை அன்றைய இங்கிலாந்தின் பிரதம அமைச்சரான வின்சென்ட் சர்ச்சில் அவர் களும் உணர்ந்திருந்தார்.

இந்திய அரசியற் கட்சிகளுக்கும், சமுதாயப் பிரிவுகளுக்கும் இடையில் பேச்சு வார்த்தைகளை நடத்தித் தீர்வு காண்பதற் காகவும், அதனடிப்படையில் இந்தியாவிற்கு விடுதலை நல்கு வதற்கான சூழ்நிலையை உருவாக்குவதற்காகவும், இங்கிலாந் தின் பாதுகாப்பு அமைச்சகத்தின் உறுப்பினரான (Member of Defence Ministery) சர். ஸ்டாபோர்டு கிரிப்ஸ் (Sir. STAFFORD CRIPPS) இந்தியாவிற்கு அனுப்பப் பட்டார். 22—3—1942-இல் அவரால் "கிரிப்ஸ் திட்டம்" வெளியிடப்பட்டது. அத்திட்டத்தில்,

''டொமியன் தகுதியோடு கூடியதும், பிரிட்டானியப் பேர ரசிற்குக் கீழ்ப்படித லில்லாததுமான சமநிலைத் தகுதி பெற்ற இந்திய ஒன்றியத்திற்கு (Indian Union) அடிப்படை அரசமைப்பை (Constitution) உருவாக்குவது தான் ஆங்கிலப் பேரரசின் நோக்க மாகும்.''

''அப்படி உருவாக்கப்பட்ட அரசியலமைப்பே எந்த வொரு மாகாணம் ஏற்றுக் கொள்ள வில்லையோ, அதனுடைய தற்போதைய தனி ஆட்சி உரிமை அப்படியே நிலை நிறுத்தப்பட்டுவிடும். பின்னர் ஒருக்கால் அம்மாகாணம் இந்திய ஒன்றியத்தோடு இணைந்து கொள்ள முடிவெடுத்தால் விரும்பும்போது அது இந்தியக் கூட்டாட்சி யுடன் இணைந்து கொள்ளலாம்; இந்திய ஒன்றியத்தோடு அப்படி இணையாத மாநிலங்கள் இந்திய அரசுக்கு, சம தகுதியோடு கூடிய தனித்தனி அரசமைப்புக்களைத் தாமே உருவாக்கிக் கொள்ளலாம். பிரிட்டானிய அரசு அதற்குப் பொறுப்பேற்றுக் கொள்கிறது.''

என்று அதில் கூறப்பட்டது. ஆனல் இந்தத் திட்டத்தில் நாட் டுப் பிரிவினைக்குரிய அணுக்கள் தென்படுகிறது எனக் கூறிக் காங்கிரஸ் அதை ஏற்க மறுத்து விட்டது.

2—4—1942-ஆம் நாளில் கிரிப்ஸ் திட்டத்தை ஆய்வு செய்த காங்கிரஸ் கட்சி, முரண்பாடுகளைக் கொண்ட தீர்மான மொன்றை நிறைவேற்றியது.

அத்தீர்மானத்தில்,

''ஒரு மாநிலம் இந்தியக் கூட்டாட்சியில் சேராமலிருக்க லாம் என்ற கிரிப்ஸ் திட்டத்தின் புதுமையான கொள்கையை நாம் முன் கூட்டியே ஏற்பது, இந்திய ஐக்கியம் என்ற தத்துவத்தைக் கடுமையாகத் தாக்குவது போலாகும். அகவே, அது வேற்றுமையை வளர்க்கும் சாதனமாகி விடும். மாநிலங் களில் பல தொல்லைகளைத் தோற்றுவித்து வளரச் செய்து விடும்......ஆயினும் நாம் வெளிப்படையாகக் கூறியுள்ள (காங்கிர சின்) திட்டவட்டமான கருத்துக்களுக்கு எதிராக எந்த மாநிலத் தைச் சேர்ந்த மக்களையும் அவர்களது விருப்பத்திற்கு மாருக இந்தியக் கூட்டாட்சியில் இருந்தே தீர வேண்டும் என்று வற்புறுத் துவதைக் காரியக் கமிட்டியால் நினைத்துப் பார்க்கக்கூட இயலாது. இக்கொள்கையை ஏற்றுக் கொள்ளும் போதே இந்தியாவின் உறுப்புகளான மாநிலங்கள் பொதுவான கூட்டுறவுத் தன்மை யுள்ள—தேசிய வாழ்வை வளர்ப்பதற்கு உதவக் கூடிய—பல சூழ்நிலைகளைத் தோற்றுவிப்பதற்குரிய எல்லா முயற்சிகளும் செய்யப்பட வேண்டும். இந்தக் கொள்கையை ஒப்புக் கொண்டால் ஒரு பகுதிக்குள் கணிசமான எண்ணிக்கையில் இருக்கும் பிறரை (முஸ்லீமை) வற்புறுத்தி, புதிய பிரச்சனை களை உண்டாக்கக் கூடிய வகையில் எந்த மாறுதல்களையும், செய்யக் கூடாது என்பதை ஒப்புக் கொண்டுதான் ஆக வேண்டும். மத்திய அரசின் வரம்பிற்கு உட்பட்ட, சக்தி வாய்ந்த தேசிய அரசாங்கத்தின் தேவைகளுக்கு முரணில்லாத வகையில் இயன்ற அளவு முழு சுயாட்சியை ஒவ்வொரு மாநிலமும் பெற வேண்டும். கிரிப்ஸ் தயாரித்துள்ள திட்டம், கூட்டாட்சி தொடங்கும் போதே பிரிவினையையும், அதற்கான முயற்சி களையும் ஊக்குவிப்பதாக இருக்கிறது. அதிக பட்ச ஒத்துழைப்பும் நல்லெண்ணமும், மிகுதியாகத் தேவைப்படும் இத்தருணத்தில்(பல புதிய)தகராறுகளை இத்திட்டம் உருவாக்கு கிறது...இப்போதைய (ஆங்கிலேயரின் கீழ் இயங்கும்) இந்திய சர்க்காரும் அதன் மாகாணப் பிரிவுகளும் (போர் ஒத்துழைப் பிற்கு)தகுதி யற்றவை. இந்திய மக்கள் தமது நம்பிக்கைக்குப் பாத்திரமான பிரதிநிதிகள் மூலம் தான் இந்தப் பளுவை (போர்ப் பளுவை)ச் சிறப்பாக வகிக்கக் கூடியவர்கள். ஆனல் அப்படி நிகழ வேண்டுமாயின், இப்பொழுதே சுதந்திரம் கிடைக்க வேண்டும். எனவே, கிரிப்ஸ் திட்டத்தைக் காரியக் கமிட்டியால் ஏற்க முடியவில்லை.''[6] எனக் குறிப்பிட்டிருந்தது.

---

6 Ibid, Opp. cited, Note 4, Pp, 75 to 78

இத்தீர்மானத்தில் முதல் பகுதியில்—கிரிப்ஸ் திட்டத்தைக் காங்கிரஸ் ஏற்க மறுத்தாலும், அது எத்தனை முரணானது என்பதை அத்தீர்மானத்தின் இரண்டாம் பகுதி விளக்குகிறது. தீர்மானத்தின் இரண்டாம் பகுதி — இந்தியக் கூட்டாட்சியில் சேராத எந்த ஒரு மாநிலத்தையும் பலவந்தமாக இந்தியாவுடன் சேர வைப்பதில்லை என ஒத்துக் கொள்கிறது. ஆனால் அதே நேரத்தில் தீர்மானத்தின் கடைசிப் பகுதி—முழு மாநில சுயாட்சியைப் பற்றிய காங்கிரசின் எதிர்மறைக் கொள்கையையும் விளக்குகிறது. அதாவது மாநில சுயாட்சியைக் கட்டுப்படுத்தும் வலிமையான மத்திய அரசுதான் வேண்டும் எனக் கூறுகிறது.

காங்கிரஸ் கட்சி மாநில சுயாட்சிக் கொள்கைக்கு என்றுமே தனது ஆதரவைத் தானாக மனமுவந்து அளிக்கவில்லை. ஆனால், வரலாற்றின் இயற்கை நெருக்கடிகளும் சூழ்நிலை அழுத்தத்தின் விளைவுகளும்தான் மாநிலத் தன்னாட்சிக் கொள்கையை ஒவ்வொரு கட்டத்திலும் காங்கிரசை ஏற்றுக் கொள்ள வைத்தன என்பதை இத்தீர்மானத்திலிருக்கும் இரண்டு முரண்பட்ட கொள்கைகளும் விளக்குகின்றன.

தீர்மானத்தின் முற்பகுதியில் மறுப்பும், இரண்டாம் பகுதியில் முழு மாநிலத் தன்னாட்சி பற்றிய ஒப்புதலும், மூன்றும் பகுதியில் மாநில சுயாட்சியைக் குறுக்கும் வாசகங்களும், காங்கிரஸ் கட்சியின் முரண்பட்ட கொள்கைக் குழப்பத்தைத் தெளிவாக்குகின்றன.

ஒருக்கால் காங்கிரஸ் கட்சி, 'கிரிப்ஸ் திட்டத்தை' ஏற்றுக் கொண்டிருந்தால் இந்திய மாநிலங்கள் யாவும் முழுத் தன்னாட்சி பெற்ற உறுப்புகளாகி முஸ்லீம்கள் அதிகமுள்ள மாநிலங்களும் தன்னாட்சியை அடைந்து அவை அனைத்தும் இணைந்து ஓர் உண்மையான அனைத்திந்தியக் கூட்டாட்சி அமைப்புக்குள் ( All India Federation ) செயல் பட்டிருக்கும் நாட்டுப் பிரிவினையும் அதனால் தவிர்க்கப்பட்டிருக்கும் என்பது திரு. ஜான்கோட்மேன், திரு. பாம்வெல் போன்ற பல அரசியல் வல்லுனர்களின் முடிவான கருத்தாகும்.

## 2. பிரிட்டானிய அமைச்சரவைத் தூதுக்குழுத் திட்டம் (British Cabinet Mission Scheme)

இந்திய நாட்டிற்கு விடுதலை அளிக்கும் முயற்சியில் முஸ்லீம் லீக்கின் 'நாட்டுப் பிரிவினைக் கொள்கை' இடையூருக நின்றது. இரண்டாம் உலகப் பெரும்போர் முடிந்த பின்னர் இங்கிலாந்தில் தொழிற் கட்சி ஆட்சிக்கு வந்தது. இந்திய நாட்டின் அரசியல் சிக்கலை ஏதோ ஒரு வகையில் தீர்த்து அதற்கு சுதந்திரத்தை விரைவில் வழங்குவதற்காகப் பிரிட்டானிய அரசு முனைந்து நின்றது. ஆனுல், நாடு துண்டாடப் படாமலும் வலிமையான தொரு மத்திய அரசுடனும் சுதந்திரம் வேண்டுமென்று காங்கிரஸ் கட்சி கோரி நின்றதாலும், அதனை எதிர்த்து முஸ்லீம் கட்சி இந்தியாவைப் பிரித்து 'இந்துஸ்தான்' 'பாக்கிஸ்தான்' என்ற இரு புதிய நாடுகளை அதில் உருவாக்கிய பின்னரே சுதந்திரம் தர வேண்டுமென்று போராடியதாலும், இதனுல் நாடெங்கிலும் இந்து முஸ்லீம் கலவரங்களும், சட்ட ஒழுங்கின்மையும், நிலையற்ற அரசியற் தீவிரச் சூழ்நிலையும் நிலவியதாலும், எல்லாக் கட்சிகளையும் எல்லாப் பகுதி மக்களையும் திருப்திப்படுத்தக் கூடிய ஒரு சுதந்திரத் திட்டத்தை 'ஆங்கிலேய அரசால்' உருவாக்கித் தர முடியவில்லை. இறுதியாக இந்திய அரசுச் செயலாளர் பெதிக்லாரன்ஸ் பிரபு அவர்கள் இங்கிலாந்து நாட்டின் ''பிரபுக்கள் சபையில்'' (House of Lords) செய்த அறிவிப்பை ஒட்டி, இந்திய விடுதலைச் சிக்கலுக்கு இறுதிப் பரிகாரம் தேட ஆங்கில நாட்டரசின் அமைச்சர்களைக் கொண்ட ''பிரிட்டானிய அமைச்சரவைத் தூதுக்குழு'' என்ற ஆணைக்குழு அமைக்கப்பட்டது. அதில் பெதிக்லாரன்ஸ் பிரபுவும், சர். ஸ்டாபோர்டு கிரிப்ஸும், ஏ. வி. அலெக்சாண்டர் அவர்களும் அங்கம் வகித்தனர்.

அக்குழு 24—3—1946-ஆம் நாளில் இந்தியா வந்து சேர்ந்தது. அது காங்கிரஸ் கட்சி, முஸ்லீம் கட்சியுட்படப் பல்வேறு அரசியற் கட்சிகளுடனும் சமுதாயக் குழுக்களுடனும் மக்கள் பிரதிநிதிகளுடனும் ஆறு வாரங்கள் பேச்சு வார்த்தை நடத்திற்று. நீண்ட விவாதங்களுக்குப் பின்னரும், இந்திய விடுதலை பற்றிய அனைத்துத் தரப்பினரும் ஏற்றுக் கொள்ளக்கூடிய ஒரு சுமுகமான தீர்வை அக்குழுவால் காண முடியவில்லை. எனவே இறுதியில் 1946-ஆம் ஆண்டு மேத் திங்களில் 16-ஆம் நாளில் அதன் வரலாற்றுப் புகழ்பெற்ற திட்டமான ''பிரிட்டானிய அமைச்சரவைத் தூதுக்குழுத் திட்டத்தை'' இந்திய நாட்டிற்

குச் சுதந்திரம் வழங்கும் திட்டமாகவும் அரசியலமைப்புச் சிக்கலைத் தீர்ப்பதற்குரிய வலிவான ஒரு தீர்வாகவும் இந்திய மக்களிடையே வெளியிட்டது.

அத் திட்டம் மூன்று பகுதிகளைக் கொண்டது. அவை யாவன :-

1. இந்திய நாட்டைத் துண்டாடி, புதிய பாக்கிஸ்தான் அமைப்பதைப் பற்றிப் புனராய்வு செய்தல்.

2. ஓர் இடைக்கால அரசை இந்தியாவில் அமைத்தல்.

3. நீண்ட காலத் தீர்வுக்கான திட்டம் ஒன்றைக் கொடுத்தல்.

பாக்கிஸ்தான் தனியாகப் பிரிந்து போவதைப் பொறுத்தவரை பிரிட்டானிய அமைச்சரவைத் தூதுக்குழு ஆழ்ந்த ஆய்வுக்குப் பின்னர் அதனை ஏற்றுக்கொள்ள வில்லை.

நீண்ட காலத் தீர்வுத் திட்டத்தைப் பொறுத்த வரையில், கீழே விவரிக்கப்பட்ட வழிமுறைகளை அக் குழு பரிந்துரைத்தது:-

1. பிரிட்டானிய ஆளுகைக்குட்பட்ட இந்திய மாகாணங்களும், சுதேச மன்னர் பகுதிகளும் அடங்கிய ஓர் இந்தியக் கூட்டாட்சி உருவாக்கப்பட வேண்டும். பாதுகாப்பு (Defence), வெளிநாட்டுக் கொள்கை (Foreign Policy), அனைத்திந்தியப் போக்குவரத்து — செய்தித் தொடர்புகள் (Communications) ஆகிய அதிகாரங்கள் மட்டும் மத்திய அரசுக்குத் தரப்பட வேண்டும்.

2. மத்திய அரசிற்கு அளிக்கப்பட்ட மேற்சொன்ன மூன்று அதிகாரங்களைத் தவிர மற்ற அதிகார இனங்கள் முழுவதும்— எஞ்சிய அதிகாரங்கள் உள்பட — மாகாணங்களுக்கே தரப்பட வேண்டும்.

3. ஒன்றுக்கு மேற்பட்ட சில மாகாணங்கள் சேர்ந்து மாகாணக் குழுக்களை (Group) உருவாக்கிக் கொள்ளலாம். ஒவ்வொரு மாகாணக் குழுவுக்கும் பொதுவான ஒரு கூட்டாட்சி (Group Federation) அரசைத் தமக்குள் வகுத்துக் கொள்ள

வேண்டும். ஒவ்வொரு மாகாணக் குழுவும், அந்தந்த மாகாணக் குழுவிற்குரிய பொது அதிகாரங்களையும் அதன் உறுப்புக்களான மாகாணத்திற்குரிய தனி அதிகார இனங்களையும், சட்டமியற்று, நிர்வாகத் துறையையும் தாமே நிர்ணயித்துக் கொள்ள வேண்டும். அப்படித் தனித் தனியாக அமைக்கப்பட்ட மாகாணக் குழுக் கூட்டாட்சிகள் எல்லாம் சேர்த்து இறுதியில் கூட்டாட்சிகளின் தளர்ச்சியானதோர் இந்தியக்கூட்டமைப்பை (Confederated Federation) உருவாக்க வேண்டும்.

ஆனால் 10 ஆண்டுகள் கழித்து அல்லது ஒவ்வொரு பத்து ஆண்டுக் கால இடைவெளியிலும் மாகாணங்கள் தங்களது அரசியல் அமைப்பைப் புனராலோசனை செய்ய விரும்பினால், தனது சட்ட மன்றத்தின் மூலமாக அவ்வகைத் தீர்மானம் ஒன்றை நிறைவேற்றி, அமுல் படுத்தலாம். அந்தத் தீர்மானத்தை அமுல் ஆக்குவதற்குகந்த வகையில் இந்தியக் கூட்டரசு அமைப்பிலும் (Confederated Federal Constitution) மாகாணக் குழு அரசமைப்பிலும் (Constitution of Provincial Group) தேவையான வழி வகைகள் செய்யப்பட வேண்டும்.

4. இவ்வகையான அரசியல் அமைப்புக்களை உருவாக்க, மறைமுகத் தேர்தல் மூலமாக-அதாவது விகிதாச்சாரப் பிரதிநிதித்துவ அடிப்படையில்-மாகாணச் சட்ட மன்ற உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளைக் கொண்ட ஓர் அரசியல் நிர்ணய சபையை உருவாக்க வேண்டும்.

5. அச் சபை புது டில்லியில் ''அ'', ''ஆ'', ''இ'' என்ற பகுதிகளாகப் பிரிந்து கொள்ளும்.

''அ'' பிரிவில் சென்னை—பம்பாய், உத்தரப் பிரதேசம், மத்திய மாகாணம், பீஹார், ஒரிசா ஆகிய ஆறு மாகாணப் பிரதிநிதிகள் தனித்துக் கூடுவர்.

''ஆ'' பிரிவில் பஞ்சாப், வடமேற்கு எல்லைப்புற மாகாணம், சிந்து மாகாணங்களைச் சார்ந்த பிரதிநிதிகள் தனித்துக் கூடுவார்கள்.

''இ'' பிரிவில் அசாம், வங்கப் பிரதிநிதிகள் ஆகியோர் தனித்துக் கூடுவர்.

'அ' பிரிவிலுள்ளவர்கள் அந்த ஆறு மாகாணங்களைக் கொண்ட ''மாகாணக் குழுவிற்குரிய'' கூட்டாட்சி அரசமைப்பையும்,

'ஆ' பிரிவிலுள்ளவர்கள் அந்த மூன்று மாகாணங்களைக் கொண்ட இரண்டாவது மாகாணங்களுக்குரிய கூட்டாட்சி அரசமைப்பு ஒன்றையும்,

'இ' பிரிவிலுள்ளவர்கள் அந்த இரு மாகாணங்களைக் கொண்ட மூன்றாவது மாகாணக் குழுவிற்குரிய கூட்டாட்சி அரசமைப்பையும் தனித் தனியாக ஏற்படுத்திக் கொள்வார்கள்.

6. இந்த ''அ'', ''ஆ'', ''இ'' என்ற மூன்று தனித் தனி மாகாணக் குழுக்களும் மூன்று தனித்தனியான கூட்டாட்சிகளை (Federation) உருவாக்கிக் கொண்ட பின்னர், மூன்று மாகாணக் குழுக்களின் கூட்டாட்சிகளும் (3 Provincial group Federations) சேர்ந்த ''ஓர் அகில இந்தியக் கூட்டாட்சிகளின் தளர்ச்சியான கூட்டமைப்பை'' உருவாக்கிக் கொள்ளும்.

7. அனைத்திந்திய அரசியல் கட்சிகளின் ஆதரவு பெற்ற இடைக்கால அரசாங்கம் ஒன்றையும் அமைக்க வேண்டும். அரசியல் அமைப்புகள் உருவாகி முடியும் வரை அந்த அரசாங்கமே இந்தியாவில் மத்திய அரசாகத் திகழும்.

இவ் வகையில் 'பிரிட்டானிய அமைச்சரவைத் தூதுக் குழுவின் திட்டம்' இந்தியத் துணைக் கண்டத்தை மூன்று தனிக் கூட்டாட்சிகளாக்கி விடுகிறது. அதில் இரண்டு முஸ்லீம் நாடுகளினுடைய கூட்டாட்சிகளாகவும் ஓர் இந்து நாடாகவும் பிரிந்து, அம் மூன்று கூட்டாட்சிகளும் சேர்ந்து மூன்று நாடுகளிடையிலான கூட்டரசாக (Confederation) பிணைந்து கொள்ளும். இதைத் தான் Confederated Federation அல்லது கூட்டாட்சிகளின் நேயக் கூட்டிணைப்பு என்பர்.

இத் திட்டத்தில் முழு மாநில சுயாட்சிக் கொள்கை உயர்ந்தோங்கி வளர்ந்து, அதன் முற்றிய-தெளிந்த - எழுச்சி பெற்ற உச்ச நிலைமையைத் தொட்டு நின்றது.

தூதுக் குழுத் திட்டமும் காங்கிரசின் உள்நோக்கமும்

முஸ்லீம் லீக், இத்திட்டத்தைச் சில விதி விலக்குகளுடன் ஏற்றுக் கொண்டது. 25—6—1949-இல் கூடிய காங்கிரஸ் காரியக் கமிட்டி ''மாகாணக் குழுக்களின் ஏற்பாட்டை'' ஏற்றுக் கொள்ளாவிடினும், மற்ற வகையில் இந்திய அரசமைப்புச் சட்டத்தை உருவாக்க ஓர் அரசியல் நிர்ணய சபையை ஏற் படுத்துவதை ஒத்துக் கொண்டது. 6—7—1946-இல் பம்பாயில் கூடிய அனைத்திந்தியக் காங்கிரஸ் மாநாடும் அதன் காரியக் கமிட்டி யின் தீர்மானத்தை அப்படியே அங்கீகரித்தது. அதில், பண்டித நேரு அவர்கள் காங்கிரஸ் கட்சியின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

நேரு தனது தலைமையுரையில்,

''நான் பார்த்த அளவில், அமைச்சரகத் தூதுக்குழுத் திட்டத் தைக் காங்கிரஸ் ஏற்றுக் கொள்வதா இல்லையா என்பது அல்ல தற்போதைய பிரச்சனை. முஸ்லீம் லீக் அந்த அரசியல் நிர்ணய சபையில் இடம் பெறுவதற்கு ஒத்துக் கொள்ளுமா என்பதுதான் உண்மையான பிரச்சனை. அதற்குமேல் அதில் வேறொன்று மில்லை. தற்சமயம் உள்ள நிலையில் அரசியல் அமைப்புச் சபையில் காங்கிரஸ் கட்சியும் பங்கேற்க முடிவு செய்துள்ளதே யன்றி, வேறு யாதொரு வகையிலும் அது தன்னைத்தானே [ பிரிட்டானிய அமைச்சரவைத் தூதுக் குழுத் திட்டத்தில் ] கட்டுப்படுத்திக் கொள்ள வில்லை.''

என்றார். காங்கிரசின் உள்நோக்கத்தோடு கூடிய இந்தக் கருத்தை 10—7—1946-ஆம் நாளில், பம்பாயில் ஒரு செய்தி யாளர் கூட்டத்தில் பண்டித நேரு அவர்கள் விரிவு படுத்திக் கூறினார்.

''மாகாணங்கள் [ மூன்று ] குழுக்களாக அமையக் கூடிய பிரச்சனையே இருக்காது...ஒப்பந்தத்தினை எதுவும் அடியோடு இல்லாமல், எந்த நிலைமையையும் சமாளிக்கும் சுதந்திரத் தோடு கூடிய அரசியல் நிர்ணய சபையில் தான் காங்கிரஸ் கலந்து கொள்ளும்... மேலும் அரசியல் நிர்ணய சபையில்

தனக்குச் சிறந்ததெனத் தோன்றும் வகையில் தூதுக் குழுத் திட்டத்தை மாற்றவோ திருத்தவோ அச்சபைக்குச் சுதந்திரம் உண்டு.'' 7

என்று கூறினார்.

நேரு அவர்களின் அறிக்கையையும் இதைப் போன்ற வேறு சில காங்கிரஸ் தலைவர்களின் கருத்துக்களையும் கூர்ந்து கேட்ட ஜனாப். ஜின்னா அவர்கள்,

''அரசியல் நிர்ணய சபையில் தனக்கிருக்கக் கூடிய பெரும் பான்மை பலத்தின் மூலம் தூதுக் குழுத் திட்டத்தைக் காங்கிரஸ் மாற்றிக் கொள்ளலாம் என்று காங்கிரஸ் தலைவர் இப்போது அறிவிப்பதால், பெரும்பான்மையினரின் தயவில் சிறுபான்மையினர் வைக்கப்படுவதாகப் பொருள்படுகிறது... தூதுக் குழுவின் திட்டத்தைக் காங்கிரஸ் நிராகரித்து விட்டது என்பதுதான் நேரு வெளியிட்ட அறிக்கையின் பொருள்.''

என அறிக்கை விட்டார்.

அதுபற்றி அவர் ஆங்கில அரசிடம் விளக்கம் கேட்டு, அதன் பேரில் திருப்தி அடையாததால், 1946–ஆம் ஆண்டு ஜூன் 27–ஆம் நாளில் பம்பாயில் கூடிய முஸ்லீம் லீக் கட்சி செய்த முடிவுப்படி, பிரிட்டானிய அமைச்சரவைத் தூதுக் குழுத் திட்டத்தை முழுமையாக ஜின்னா அவர்கள் நிராகரித்து விட்டார்.

அமைச்சரவைத் தூதுக் குழுத் திட்டத்தில் தரப்பட்ட முழு மாநில சுயாட்சியுடன் கூடிய இந்திய அரசியலமைப்பு நேருவினால் திரிபு படுத்தப்பட்டதினால் அகண்ட இந்தியா பின்னால் துண்டாயிற்று. இதனை அப்பட்டமாகக் கண்டிக்கும் வகையில்,

''சரித்திரத்தின் போக்கை மாற்றக் கூடிய துரதிர்ஷ்ட நிகழ்ச்சிகளில் இதுவும் ஒன்று... ஜவகர்லாலின் அறிக்கை தவறானது என்பதை நான் சொல்லித் தானாக வேண்டும்...

7 Ibid. Opp. cited. Note 4, Page 190

ஜவகர்லாலின் அறிக்கை ஒரு திடீர் வெடிகுண்டைப் போன்ற அதிர்ச்சியைக் கொடுத்தது.'' 8

என்று நேருவின் நடவடிக்கைகள் பற்றி, மௌலானு அபுல்கலாம் ஆசாத் அவர்கள் கருத்துத் தெரிவிக்கிருர்.

''வெண்ணெய் திரண்டு வரும் போது, தாழி உடைந்த கதையாயிற்று.'' பிரிவினை இல்லாத ஒரே இந்திய நாடு என்ற கொள்கை, இதன் மூலம் பகற் கனவாகி விட்டது. அகில இந்தியக் கூட்டாட்சி என்ற தத்துவமும், முழுமையான சுயாட்சி கொண்ட மாநிலங்கள் என்ற அடிப்படைக் கோட்பாடும் நேருவின் இராசதந்திர மற்ற கண்ணேட்டத்திஞல் — காங்கிரஸ் கட்சியின் பிடிவாதத்திஞல் — தகர்த் தெறியப்பட்டது. இறுதியில் நாட்டுப் பிரிவினை, தவிர்க்க முடியாததாகி விட்டது.

## IV

## நேருவின் குறிக்கோள் தீர்மானத்தில்

### [OBJECTIVE RESOLUTION]

### — மாநில சுயாட்சியின் எழுச்சி —

தூதுக் குழுத் திட்டத்தில் குறித்தபடி மத்தியச் சட்ட மன்றத்திற்கான தேர்தல்கள் நடைபெற்றன. நேரு தலைமை யில் 2—9—1946-இல் இடைக்கால அரசும் அமைக்கப்பட்டது. நேருவும் மற்ற முக்கியக் காங்கிரஸ் தலைவர்களும் அமைச்சர் கள் ஆனுர்கள். அந்த மத்தியச் சட்ட மன்ற உறுப்பினர்களே பிரிட்டானியத் தூதுக் குழுத் திட்டப்படி அரசியல் நிர்ணய சபை ( Constituent Assembly ) உறுப்பினர்களும் ஆனுர்கள். அரசியல் நிர்ணய சபை ''பிரிட்டானிய அமைச்சரவைத் தூதுக் குழுத் திட்டத்தில்'' நிர்ணயிக்கப்பட்ட கொள்கை களின் அடிப்படையிலேயே, இந்திய அரசியல் சட்டத்தை உருவாக்கத் தொடங்கிற்று. பிரிட்டானிய அமைச்சரவைக் குழுவின் திட்டத்தை ஒட்டி நடைபெற்ற மத்திய சட்டப் பேரவைத் தேர்தலில் மொத்தம் 296 இடங்களில் காங்கிரஸ் 208 இடங்களையும் முஸ்லீம் லீக் 73 இடங்களையும் பெற்றன. மீதி 15

8 Ibid, Opp. cited, Note 4, Page. 190-191

இடங்களுக்கு மற்ற அரசியல் கட்சிகளின் பிரதிநிதிகளும் சில சுயேட்சையாளர்களும் தேர்ந்தெடுக்கப் பட்டனர். இந்திய சுதேச மன்னர்களின் குறுநிலப் பகுதிகளுக்கு ஒதுக்கப்பட்ட 93 இடங்களும் நிரப்பப்பட வில்லை.

இடைக்கால அரசு அமைந்த பின் இந்திய அரசமைப்புச் சபை முதன் முதலாக 9—2—1946-இல் கூடியது. இந்த அவை முழுமையான இறைமை (Sovereignty) கொண்ட அவை அல்ல. அது பிரிட்டானிய அமைச்சரவைத் திட்டத்தின் எல்லைகளுக் குள்ளேயே பணியாற்ற வேண்டியிருந்தது. மேலும் அதன் பிரதி நிதிகள், ''வயது வந்தவர்களுக்கு வாக்குரிமை'' என்ற அடிப்படை யில் இந்திய மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களும் அல்லர். 100-க்குப் 14 பேர் மட்டுமே குறிப்பிட்ட தொகுதிகளிலிருந்து வாக்குச் செய்து — தேர்ந்தெடுக்கப்பட்ட மாகாண மன்றங்களின் உறுப்பினர்களாலேயே — அரசமைப்புச் சபையின் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டிருந்தார்கள். உண்மையில் மொத்த இந்திய ஜனத்தொகையில் 14% மக்களையே இந்தச் சபையின் உறுப்பினர்கள் பிரதிபலித்தனர்.

முதன் முதலாகக் கூடிய இந்த அரசமைப்புச் சபையில் 207 உறுப்பினர்கள் மட்டுமே கூடியிருந்தனர். அதில் முஸ்லீம் லீக் மற்றும் சுதேச மன்னர்களின் உறுப்பினர்கள் பங்கேற்க வில்லை.

13—12—1946-ஆம் நாள் இந்திய அரசமைப்புச் சட்டத் தின் ஓர் வரலாற்றுச் சிறப்பு மிக்க நாள். மாநில சுயாட்சிக் கொள்கையின் சரித்திரத்தில் பொன்னெழுத்துக்களால் பொறிக் கப்பட வேண்டிய ஒரு நாள். இந்தியத் துணைக்கண்டத்தின் தலைமை அமைச்சரும்—மக்கள் தலைவருமான—பண்டித ஜவகர்லால் நேரு அவர்கள் காங்கிரசாலும் வல்லுனர் குழுவினாலும் முழு மனதோடு ஏற்றுக் கொள்ளப்பட்ட வரலாற்றுச் சிறப்புமிக்க குறிக்கோள் தீர்மானத்தை அரசமைப்புச் சபையில் வைத்து முன்மொழிந்தார். அந்தத் தீர்மானம் அரசமைப்புச் சபையால் எதிர்காலத்தில் உருவாக்கப்பட இருந்த இந்திய அரசமைப்புச் சட்டத்தின் கருப் பொருளையும் மூலக் கொள்கைகளையும் அடிப்படைக் கோட்பாடுகளையும், வரையறுத்துக் கூறிற்று. அதில் முழு மாநில சுயாட்சி வலியுறுத்தப் பட்டிருந்தது.

குறிக்கோள் தீர்மானம் வருமாறு 9

1. ''இந்தியாவைச் சுதந்திர இறைமைநிறை குடியரசு நாடாய் அறிவிக்கவும், அதன் எதிர்கால ஆளுகைக்கான ஓர் அரசமைப்பை வரையவும், இந்த அரசமைப்புச் சபை, பெரு மிதத்துடனும் உறுதியோடும் அதன் முடிவை வெளி யிடுகிறது.''

2. ''தற்போது பிரிட்டானிய இந்தியாவை உள்ளடக்கிய நாட்டாட்சிப் பகுதிகளையும், தற்போது இந்திய சமஸ்தானங் களாக இருக்கும் ஆட்சிப் பகுதிகளையும் மற்றும் பிரிட்டானிய இந்தியாவிற்கும் சமஸ்தானங்களுக்கும் வெளியிலிருக்கும் மற்ற இந்தியப் பகுதிகளையும் மற்றும் இறைமை கொண்ட சுதந்திர இந்தியாவின் அமைப்புக்குள் இனிமேல் அமையவிருக்கும் வேறு பகுதிகளையும் சேர்த்து அவை எல்லாவற்றின் ஒன்றிய மாக (கூட்டாட்சியாக) இந்தியா திகழும்.''

3. ''தங்களுடைய தற்போதைய எல்லைகளுடனே அல்லது அரசமைப்புச் சபையாலும் அதற்குப் பின்னர் அர சமைப்புச் சட்டத்தாலும் நிர்ணயிக்கப்படும் எல்லைகளுடனே, மேற்சொன்ன நாட்டாட்சிப் பகுதிகள் எல்லாம் சுயாட்சி கொண்ட உறுப்பினர்களின்(மாநிலங்களின்)தகுதியோடு விளங்கும். எஞ்சிய அதிகாரங்களையும் பெற்று அவற்றைத் தன்னகத்தே வைத்துக் கொள்ளும். ஒன்றியத்திற்கு வழங்கப்பட்டோ அல்லது ஒன்றியத் திற்கு இயற்கை வழியாய்க் கிடைத்தோ அல்லது ஒன்றியமே மறைமுகமாகப் பெற்றோ அல்லது அந்த மறைமுக நிலையின் விளைவால் ஒன்றியத்திற்கு உரித்தாக்கப்பட்டோ உள்ள அதி காரங்களும் இணைச் செயல்களும் நீங்கலாக அரசாங்கத்தின் மற்ற எல்லா அதிகாரங்களையும் வினைச் செயல்களையும் சுயாட்சி நிறைந்த உறுப்புகளே (மாநிலங்கள்) கைக்கொள்ளும்.''

4. ''இறைநிறை சுதந்திர இந்தியா, அதனுடைய அமைப்புப் பகுதிகள், அரசாங்க உறுப்புக்கள், ஆகியவை யாவும் அவற்றின் எல்லா அதிகாரங்களையும், ஆணையுரிமை களையும் (இந்திய) மக்களிடமிருந்தே பெறுகின்றன.''

---

9 *Dr.* K. M. Munshi. '' Indian Constitutional *Docu* ments '' - Munshi Papers - Vol. II (1967), Pp. 113

5. ''அனைத்து மக்களுக்கும், சமுதாய, பொருளாதார அரசியல் நீதியும்; வாய்ப்பும், தகுதி, மற்றும் சட்டத்தின் முன் னிலையில் சமத்துவமும்; கருத்து, பேச்சு, சமய நம்பிக்கை, சமய உணர்ச்சி, வழிபாடு, வாழ்க்கைத் தொழில் மற்றும் சட்டத்திற்கும் பொது ஒழுக்கத்திற்கும் உட்பட்ட சங்கம் அமைத்துக்கொள்ளுதல் ஆகியவைகளின் அடிப்படை உரிமை களையும்; இந்த அரசமைப்பு உத்தரவாதம் செய்யும்.''

6. ''சிறுபான்மையினருக்கும் பிற்பட்ட பகுதியினருக்கும் மற்றும் நாகரிக மற்ற குழுக்கள் வாழும் பகுதிகளுக்கும் தாழ்த்தப்பட்ட, பிற்பட்ட வகுப்புகளுக்கும் தேவையான காப்பமைதியை இந்த அரசமைப்புத் தரும்.''

7. ''குடியாட்சி எல்லைகள் கூறுபடாமலும், நிலம், கடல், ஆகாயம் ஆகியவைகளின் இறைமை உரிமை—நீதிக்கும், பண்பாடு கொண்ட நாடுகளின் சட்டத்திற்கும்—ஏற்ற வகை யிலும் தொடர்ந்து செயல்படும்.''

8. ''அகில உலக அரங்கத்தில் நியாயமான—மதிப்பிற் குரிய—ஓரிடத்தை இந்தப் பழைமையான் நாடு பெறவும், மனித இனத்தினுடைய நலனையும் உலக அமைதியையும் பேணி வளர்க்கவும், அதனுடைய ஒப்புதல் பெற்ற முழுமையான பங்கைச் செலுத்துகின்றது.

1. This Constituent Assembly declares its firm and solemn resolve to proclaim India as an Independent Sovereign Republic and to draw up for her future governance a Constitution;

2. WHEREIN the territories that now comprise British India, the territories that now form the Indian States, and such other parts of India as are outside British India and the States as well as such other territories as are willing to be constituted into the Independent Sovereign India, Shall be a Union of them all; and

3. WHEREIN the said territories, whether with their present boundaries or with such others as may be determined by the Constituent Assembly and thereafter according to the Law of the Constitution, *shall possess and retain the status of autonomous Units, together with residuary powers*, and exercise all powers and functions of government and administration, save and except such powers and functions as are vested in or assigned to the Union, or as are inherent or implied in the Union or resulting thereform; and

4. WHEREIN all power and authority of the Sovereign Independent India, its constituent parts and organs of Government, are derived from the people and

5. WHEREIN shall be guaranteed and secured to all the people of India Justice, social, economic and political; equality of status, of opportunity, and before the law; freedom of thought, expression, belief, faith, worship, vocation, association and action, subject to law and public morality; and

6. WHEREIN adequate safeguards shall be provided for minorities, backward and tribal areas, and depressed and other backward classes; and

7. WHEREBY shall be maintained the integrity of the territory of the Republic and its sovereign rights on land, sea, and air according to Justice and the law of civilised nations, and

8. This ancient land attains its rightful and honoured place in the world and make its full and willing contribution to the promotion of world peace and the welfare of Mankind."

இக்குறிக்கோள் தீர்மானத்தை அரசியலமைப்புச் சபையில் பண்டித நேரு அவர்கள் முன்மொழிந்து விளக்கவுரை

ஆற்றியபோது,

"உங்கள் முன்னிலையில் சமர்ப்பிக்கப்படும் இந்தத் தீர்மானம் நமது குறிக்கோள்களை வரையறைப்படுத்துகிறது. நமது திட்டத்தின் வரைவிற்குள் நாம் இனி நடைபோடவிருக்கும் பாதையின் புள்ளிகளையும் அது விளக்குகிறது. அது ஓர் தீர்மானம் மட்டுமல்ல; அதனினும் மேற்பட்ட தொன்று. அது ஓர் உறுதிமொழி; ஓர் உறுதிப்படுத்தப்பட்ட முடிவு; அது ஓர் சூளுரை, ஒரு காணிக்கை என்று நான் நம்புகிறேன். இந்தத் தீர்மானத்தை இந்தச்சபை, குறுகியதோர் சட்ட உரை என்ற எண்ணத்தோடு ஆய்வு செய்யாமல், தீர்மானத்திற்குள் பொதிந்திருக்கும் தத்துவத்தைக் காணுமாறு வணக்கத்துடன் வேண்டுகிறேன்.

......இந்தத் தீர்மானத்தை நமது பெருமைக்குரிய பழைமையின் அடிப்படையிலும், இன்றிருக்கும் சிக்கல்களின் ஊடேயும் இன்னும் முகிழ்க்காததும்–அண்மையில் நிகழ இருப்பதுமான– எதிர்காலத்தின் நல்நோக்குடனும், ஆய்வு செய்ய வேண்டும் என நான் வேண்டுகிறேன்."[10]

என்று தெளிவாக்கினர்.

### தீர்மானத்தின் மூன்றும் பத்தியில் மாநில சுயாட்சி

நேருவின் குறிக்கோள் தீர்மானத்தின் 3–ஆம் பத்தியில் மாநிலங்களைப் பற்றியும் அவற்றின் அதிகார வரம்புகளைப் பற்றியும் சொல்லப்படுகிறது. மாநிலங்களின் எல்லைகள் வரையறுக்கப்பட்டு, அளவுகள் நிர்ணயிக்கப்பட்ட பின்னர், மைய அரசிற்குச் சில அதிகாரங்களை மட்டும் மாநிலங்கள் ஒப்படைசெய்யும். ஆனால் அந்த மாநிலங்கள் சுயாட்சியோடு கூடிய உறுப்புக்களாக இயங்கும் மத்திய அரசுக்கு அளிக்கப்பட்ட அதிகாரங்கள் போக—எஞ்சிய அதிகாரங்கள் உள்பட — மற்ற எல்லா அதிகாரங்களும், சட்ட நெறிவினைச் செயல்களும் மாநிலங்களையே சார்ந்ததாக இருக்கும். சுருங்கக் கூறின் பாதுகாப்பு, அனைத்திந்தியச் செய்தித் தொடர்பு, வெளிநாட்டுக் கொள்கை ஆகியவை தவிர மற்ற எல்லா முழு அதிகாரங்களையும் மாநிலங்களே கையாளும். அஃதாவது, முழுமையான மாநில சுயாட்சியையே நேரு அவர்களின் தீர்மானம் தெளிவாக்குகிறது.

---

10 Ibid, Opp. cited, Note 9, Pp. 110, 111, 114 & 122

நேருவின் குறிக்கோள் தீர்மானம், மாநில சுயாட்சியின் முதிர்ந்த வளர்ச்சியின் எல்லையையே தொட்டு நின்றது. எனவே, தன்னாட்சி இதன் மூலம் பேரெழுச்சியினைப் பெற்றது. இந்தத் தீர்மானம் அரசமைப்புச் சபையின் இரண்டாம் கூட்டத் தொடரில் 22—1—1947-ஆம் நாளில் ஒருமனதாக நிறைவேற்றப்பட்டது.

1919-ஆம் ஆண்டில், முகிழ்த்தெழுந்த 'மாநில சுயாட்சிக் கொள்கை' வகுப்பு வாதம் கொண்ட முஸ்லீம் லீக் கட்சியின் அரசியல் கொள்கைகளாலும் — தீர்மானங்களாலும், சுதேச மன்னர்களின் பிரச்சனைகளில் தோன்றிய (இந்தியச்) சூழ்நிலையாலும் — மொழிவாரியாக மாநிலங்கள், பிரிக்கப்பட வேண்டுமென்ற மொழித் தேசியத்தின் பேருணர்ச்சியாலும் பேணி வளர்க்கப்பட்டு—ஆங்கில அரசு வழங்கிய அரசியல் கொள்கைகள், அரசமைப்புச் சட்டங்கள் மற்றும் பரிந்துரைகளினால் அவ்வப்போது நடைமுறையில் செயலாக்கப்பட்டு நாட்டுப் பிரிவினைக்கும் — ஒற்றுமைக்கும் தரப்பட்ட, பல அறிஞர்களின் வட்டாரத் திட்டங்களாலும்,கிரிப்ஸின் கொள்கையாலும், காங்கிரஸ் கட்சியின் பல்வேறு தீர்மானங்களாலும் தேர்தல் அறிக்கையிலும் ஆசாத் அவர்களின் அருந்திட்டத்தாலும் ஆங்கிலேய அமைச்சரவைத் தூதுக் குழுவின் அரசியல் சூத்திரத்தாலும் நேருவின் குறிக்கோள் தீர்மானத்தினாலும் பேரெழுச்சியினைப் பெற்றது. இவ்வகையில் எழுச்சி பெற்ற மாநிலத் தன்னாட்சித் தத்துவம் ஆங்கில ஏகாதிபத்தியம் இந்திய மண்ணிலிருந்து அகன்ற பின்னர் இந்திய அரசமைப்பில் வடிக்கப்பட்டு அமுலுக்கு வந்ததா? அடுத்துக் காண்போம்.



# 13. மாநில சுயாட்சிக் கொள்கையின் தளர்ச்சி

"இந்தியத் துணைக் கண்டம் பிரிவினை செய்யப்பட்ட தால் ஏற்பட்ட விளைவு என்னவெனில், ஊசல் ஒரு முனையிலிருந்து எதிர்முனைக்கு ஆடிச் சென்றுவிட் டது. குறைந்த பட்ச அதிகாரங்களைக் கொண்ட 'மத் திய அரசிலிருந்து' அதிக பட்ச அதிகாரங்களைக் கொண்ட ஒரு மத்திய அரசை நோக்கி, எல்லாத் தலைவர்களும்—தலைவர்களைக் காட்டிலும் தொண்டர் களும்—விரைந்து செல்ல விரும்பினர்கள்." 1

— திரு. கே. சந்தானம்.

## I
## ஊஹறியின் முடிவு

பிரிட்டானிய அமைச்சரவைத் தூதுக் குழுவின் திட்டத்தை முஸ்லீம் லீக் கட்சி முன்னர் ஏற்றிருந்தாலும் பண்டித நேரு அவர்கள் பம்பாயில் செய்தியாளர்களுக்குக் கொடுத்த பேட் டிக்குப் பின்னர், 1946-ஆம் ஆண்டு ஜூலையில் கூடிய, முஸ் லீம் லீக் செய்த முடிவுப்படி, தூதுக் குழுத் திட்டத்தை ஜின்னு அவர்கள் முழுமையாக நிராகரித்து விட்டார். "நேரடி நடவடிக்கை தினம்" என்று ஆகஸ்டு 16-ஆம் தேதியைப் போராட்ட நாளாக ஜின்னு குறிப்பிட்டார். ஆனல் அது எவ் வகைப் போராட்டம் என்பது யாருக்கும் தெரியாது.

இதற்கிடையில், இடைக்கால சர்க்காரை அமைக்குமாறு, பண்டித நேரு அவர்களை 12-8-1946-இல் இந்திய வைஸ்ராய் அவர்கள் கேட்டுக் கொண்டார். இடைக்கால அரசில் பங் கேற்க ஜின்னு மறுத்து விட்டார். ஆகஸ்டு 16-ஆந் தேதி இந்து முஸ்லீம் கலவரங்கள் நாடெங்கும் பரவிற்று. கொலை,

1 Mr. K. Santhanam, "Union State Relations in India" (1963) Page 4

கொள்ளைகள், கற்பழிப்பு, தீவைப்பு அன்றாட நடவடிக்கைகளாயின. எனினும் 1946–ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் இரண்டாம் நாள் பண்டித நேரு அவர்களின் தலைமையில், வல்லபாய் பட்டேல், இராசேந்திர பிரசாத், இராசாசி ஆகியோருடன் இடைக்கால அமைச்சரவை இந்திய நிர்வாகப் பொறுப்புக்களை ஏற்றுக் கொண்டது. முதலில் இடைக்கால அரசில் சேராத முஸ்லீம் லீக் 1946 அக்டோபர் மாதம் பிற்பகுதியில் சேர்ந்து கொண்டது.

ஆனால், இடைக்கால அமைச்சரவையில் பெரும் பிளவு நிலவிற்று. நிதியிலாக்கா, முஸ்லீம் லீக் தலைவர்களில் ஒருவரான லியாகத் அலிகான் அவர்களிடம் ஒப்படைக்கப்பட்டதால், அரசின் முழு லகானும் அவரிடம் சிக்கி விட்டது. பட்டேலின் கீழிருந்த உள்நாட்டு அமைச்சகம், செயலற்று நின்றது. காங்கிரஸ் அமைச்சர்கள் முஸ்லீம் லீக்குடன் இணைந்து நிர்வாகம் நடத்த இயலாதென்ற முடிவுக்கு வந்தனர்.

பிரிட்டானிய அமைச்சரவைத் திட்டப்படி அமைந்த இடைக்கால சர்க்காரில் முஸ்லீம் லீக் பங்கு கொண்டாலும், அரசமைப்புச் சபையில் அது பங்கேற்காமல் நழுவிக் கொண்டே சென்றது. அதே திட்டத்தின்படி, உருவாக்கப்பட்ட அரசமைப்புச் சபையின் நடவடிக்கைகளும் தேங்கிக் கிடந்தன. அத்திட்டத்தை முறையாக அமுல் படுத்த விடாமல் முஸ்லீம் லீக் தடைக்கல்லாக நின்றது.

இந்த முட்டுக் கட்டையை ஏதோ ஒரு வகையில் நீக்குவதற்குரிய பல முயற்சிகளையும் ஆங்கிலப் பேரரசு மேற்கொண்டது; பயனில்லை. ஜின்னா அவர்கள் தனிப் பாக்கிஸ்தான் நாட்டிற்கும் குறைவான எந்தவொரு திட்டத்தையும் ஏற்க மறுத்து விட்டார். நாடு, உள்நாட்டுப் போரை நோக்கி நகர்ந்து கொண்டிருந்தது. வைஸ்ராய் வேவல் அவர்கள் தனது பணி முடிவாகாமலேயே இங்கிலாந்து திரும்பினர்.

22—3—1947–இல் கூர்த்த மதியும் கவர்ச்சியும் கொண்ட மௌண்ட்பேட்டன் அவர்கள், வைஸ்ராயாகி இந்தியா வந்தார். அவர் மாநிலங்களையும் சுதேச மன்னர்களையும் இணைத்த ஓராட்சியை, 1947-ஆம் ஆண்டு அக்டோபர் முதல் நாளுக்குள் உருவாக்க வேண்டும். அதற்குள் இந்தியச் சிக்கலுக்கு ஒரு

தீர்வு ஏற்படாவிடின் 1948-ஆம் ஆண்டு ஜுன் மாதத்திற்குள் ஆங்கில அரசின் அதிகாரங்களை இந்தியர்களுக்கு மாற்றிக் கொடுக்கும் ஒரு திட்டத்தை மௌண்ட்பேட்டனே உருவாக்கி, தயாரித்துத் தர வேண்டுமென்று ஆங்கில அரசால் மௌண்ட் பேட்டனுக்கு ஆணையிடப்பட்டிருந்தது,

காங்கிரசும் — லீக்கும் அமைச்சரவைத் தூதுக் குழுவின் திட்டத்தை முழுமையாக அமுல் படுத்தத் தயாராக இல்லை. அத்திட்டத்தால் பயனேதும்விளையாது என மௌண்ட்பேட்டன் அவர்கள் கருதினுர்கள். எனவே, அதற்கு மாற்றுத் திட்டம் ஒன்றை உருவாக்க அவர் முனைந்தார்.

ஏற்கனவே இக்கட்டிலிருந்த காங்கிரஸ் தலைவர்கள் இந்தியப் பிரிவினை தவிர்க்க முடியாதது என்ற கருத்தினை உணரும் வகையில் மௌண்ட்பேட்டன் அவர்கள் செயல் பட்டார். அத்தருணத்தில், இனி முஸ்லீம் லீக்குடன் சேர்ந்து உழைக்க முடியாது என்ற முடிவுக்கு, திரு பட்டேல் அவர்கள் தள்ளப் பட்டிருந்தார்.

> "முஸ்லீம் லீக்கை விட்டுத் தொலைப்பதற்கேனும் இந்தியாவின் ஒரு பகுதியைக் கொடுக்கத் தயார் என்று வெளிப்படை யாகவே பட்டேல் கூறினுர்... பண்டித நேரு அவர்கள் சில சமயங்களில் உணர்ச்சிவசப்பட்டு நடக்கக் கூடியவர். பட்டேலின் வாதங்கள் ஓரளவு அவர் விஷயத்தில் பயனுள்ள வையாக இருந்திருக்க வேண்டும். ஆனுல் திடமான மாறுதலை அவை நேருவிடம் ஏற்படுத்தி யிருக்க முடியாது. ஜவகர்லாலை மௌண்ட் பேட்டன் பெரிதும் கவர்ந்திருந்தார். ஆனுல் அவரி டம் (நேருவிடம்) இன்னும் அதிகமான செல்வாக்கு லேடி மௌண்ட் பேட்டனுக்கு இருந்தது. அவர் மிகச் சிறந்த புத்திசாலி. மிகக் கவர்ச்சிகரமான நேசப்பான்மை நிறைந்த சுபாவம் படைத்தவர். தம் கணவரைப் பெரிதும் போற்றுபவர். அவருடன் ஒத்துப்போக மறுப்பவருடனும் அவரது சிந்தனை யின் போக்கை விளக்கிக் கூற அவர் பலமுறை முயன்ற துண்டு." 2

2 மௌலானு அபுல்கலாம் ஆசாத், "இந்திய விடுதலை வெற்றி" (1961), பக்கம் 227.

''காந்தியடிகள் மார்ச்சு 31–இல் மௌண்ட்பேட்டனைச் சந்தித்தார். மறுபடியும் ஏப்ரல் 2-ஆம் தேதி கண்டு பேசினார். முதல் கூட்டத்திற்குப் பின் பட்டேல் வந்தார். 2 மணிநேரம் காந்திஜியும் பட்டேலும் பேசிக் கொண்டிருந்தார்கள். என்ன பேசினார்கள் என்பது எனக்குத் (ஆசாத்துக்கு) தெரியாது. ஆனால் மறுபடியும் காந்திஜியை நான் (ஆசாத் அவர்கள்) கண்ட போது என் (ஆசாத்தின்) வாழ்விலேயே மிகப் பெரிய அதிர்ச்சியை அடைந்தேன். அவரும் (காந்தியடிகளும்) நாட்டுப் பிரிவினையின் ஆதரவாளராக மாறி விட்டிருந்தார்.'' 3

காங்கிரஸ் தலைவர்கள் இந்தியப் பிரிவினைக் கோரிக்கைக்கு எவ்வகையில் தனித்தனியாக ஆட்பட்டு விட்டனர் என்று மேற்சொன்ன முறையில் ஆசாத் அவர்கள் கூறுகிறார். ஆனால் பாக்கிஸ்தானைப் பிரித்துக் கொடுப்பது பற்றி, காங்கிரஸ் தலைவர்கள் ஒன்றுகூடி ஒரே இறுதி முடிவெடுக்க வில்லை.

இதற்கிடையில், மௌண்ட் பேட்டன், தன்னுடைய தனி அரசியல் ஆலோசகர்களான லார்டு இஸ்மே, ( LORD ISMAY ), சர், எரிக்மிவில்லி(SIR. ERIOMIEVILLE),கேப்டன் ஆர். வி. புரோக்மன் (Captain. R. V. BROCKMAN), எர்ச்கின்கிரம் (Lt. Colonol. ERSKINCRUM), ஆலன். காம்ப்பெல் ஜான்சன் (ALLAN. CAMPBEL JOHNSON) ஆகியவர்களை அமைச்சரவைத் தூதுக் குழுத் திட்டத்திற்கு மாற்றுத் திட்டம் ஒன்றை உருவாக்கப் பணித்தார். அக்குழுவின் பெயரே இஸ்மேக் குழு.

இந்திய அரசின் சீர்திருத்தச் செயலரும் கவர்னர் ஜெனரலின் அரசமைப்பு ஆலோசகருமாயிருந்த திரு. வி. பி. மேனன் அவர்களை, இஸ்மேக் குழுவுடன் ஒத்துழைக்க, கவர்னர் ஜெனரல் ஆணையிட்டார். இஸ்மேக் குழுவின் சில கூட்டங்களில் கலந்து கொண்ட திரு. வி. பி. மேனனுக்கு, ஆங்கில அரசின் எல்லா அதிகாரங்களையும் இந்திய மாநிலங்களுக்கே நேரடியாக மாற்றிக் கொடுப்பதற்குரிய வழி செய்யும் திட்டத்தை இஸ்மேக் குழு உருவாக்குவது தெரிய வந்தது. எனவே, அக்குழுவோடு இணைந்து பணியாற்ற மேனன் விரும்ப வில்லை. அக்குழுவின் பணியிலிருந்து அவர் விலகிக் கொண்டார்.

---

3 Ibid, Opp. cited, Note 2, Page 231

1947-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் முடிவதற்குள், இஸ்மேக் குழு மாற்றுத் திட்டம் ஒன்றை வரைந்து, மௌண்ட்பேட்ட னிடம் கொடுத்தது. ஆங்கிலத் துரைத்தனத்தினரின் அங்கீ காரத்தைப் பெறுவதற்காக 2—5—1947-இல் இஸ்மே பிரபு, இலண்டனுக்கு மௌண்ட்பேட்டனல் அனுப்பப்பட்டார். இஸ்மேத் திட்டத்திற்கு ஆங்கில அரசின் அங்கீகாரம் கிடைத்த வுடன் இந்திய அரசியல் கட்சித் தலைவர்களின் கூட்டத்தைக் கூட்டி அத்திட்டத்தை ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டுவதற்கு 17—5—1947-ஆம் தேதியையும் மௌண்ட்பேட்டன் அவர் கள் கணித்து விட்டார். அதற்கிடையில் ஓய்வெடுக்க அவர் சிம்லா சென்றார்.

### இஸ்மேத் திட்டம்[4]

பிரிட்டானியப் பேரரசினிடமிருந்து சகல அதிகாரங்களையும் மாகாணங்களுக்கே நேரடியாக மாற்றம் செய்துவிட வேண்டும் அல்லது எங்கெந்த மாகாணங்கள் கூட்டரசுக் குழுக்களாகச் சேருகின்றனவோ, அந்தந்த மாகாணக் குழுக் கூட்டரசுகளிடம் எல்லா அதிகாரங்களையும் ஒப்படைத்துவிட வேண்டும். பஞ்சாப்பை யும், வங்காளத்தையும் இரண்டாகப் பிரிக்க வேண்டும் என்பதே இஸ்மேத் திட்டம்.

இஸ்மேத் திட்டத்தின்படி, மத்திய அரசே, இந்தியத் துணைக் கண்டத்தில் இல்லாமல் போகும். அந்தந்த மாகாணங்களே பிரிட் டானிய அரசிலிருந்து சகல அதிகாரங்களையும் பெற்று, தனியாட்சி கள் செலுத்தும் தனித்தனி நாடுகளாக ஆகிவிடும்.

ஒருக்கால் சில நாட்களில் காங்கிரஸ், ''நாட்டுப் பிரிவினைக்கு'' ஒப்புக் கொள்ளாமல் இருந்திருந்தால் இத் திட்டம் ஆங்கிலேயரால் அமுல் படுத்தப்பட்டிருக்கும். அதன் விளைவு, இந்தியாவின் 11 மாகாணங்கள் முழுவதும் தன்னாட் சியைத் தவிர்த்த—பூரண சுதந்திரம் கொண்ட தனியாட்சிகளாக— தனி நாடுகளாக—உருவாகியிருக்கும். இத்திட்டம் ஓர் அரசியல் விபத்தல்ல; சரித்திரப் பேருண்மை. இது வரலாற்றில் மறைக்

---

4 *Dr.* K. M. Munshi, Pilgrimage to Freedom [1967] Page 123

கப்பட்டாலும் மாநிலங்களுக்குத் தன்னாட்சி மறுக்கப்பட்டால் ஏற்படும் எதிர்கால விளைவுகளுக்கு ஓர் எடுத்துக்காட்டாக, இன்னும் நிலைத்து நிற்கும் ஓர் அபாயக்குறி.

**மேனன் திட்டம்**

இஸ்மேத் திட்டத்தின் பயங்கர விளைவைக் கண்டு நடுங்கிய மேனன், தான் தன் பதவியிருந்து இராசினாமா செய்துவிடத் துணிந்தார். அதை மௌண்ட்பேட்டன் சீமாட்டியிடம் தெரிவித்தார். மௌண்ட்பேட்டன், சிம்லாவில் ஓய்வு கொள்ளும் போது மேனனின் மாற்றுக் கருத்துக்களை அவரிடம் கூறத் தான் வழி செய்வதாக அந்த அம்மையார் மேனனுக்கு வாக்களித்தார். மேனனும் பண்டித நேருவும் சிம்லா சென்றனர். ஓய்வெடுத்துக் கொண்டிருந்த மௌண்ட்பேட்டனிடம், ''இஸ்மேத் திட்டம்'' இந்தியத் துணைக்கண்டத்தைப் பல கூறுகளாகத் துண்டாக்கிவிடும் என்று மேனன் எடுத்தியம்பி, அதற்குமாறுகத் தனது திட்டத்தையும் வெளியிட்டார்.

இந்தியத் துணைக்கண்டம்-இந்தியா என்றும் பாக்கிஸ்தான் என்றும் இரு நாடுகளாகப் பிரியும். அவைகளுக்குத் தனித் தனியாக இரண்டு அரசியல் அமைப்புச் சபைகள் ஏற்படும்; பிரிட்டானியப் பேரரசின் அதிகாரம் முழுவதும் அந்த இரு அரசியலமைப்புச் சபைகளுக்கு வழங்கப்படும். அந்தச் சபைகளால் உருவாக்கப்படும் தனித்தனி அரசமைப்புச் சட்டங்கள் அமுல் படுத்தப்படும் வரை, இரு நாடுகளும் பிரிட்டனுடன் சம உரிமையோடு கூடிய டொமினியன் தகுதியைப் பெற்றிருக்கும். இதுவே மேனன் திட்டம்.

இதை மௌண்ட்பேட்டனும் ஏற்றுக் கொண்டார். நேருவோடு இத்திட்டத்தை மேனன் கலந்த போது அதற்குக் கொள்கை அளவில் நேருவும் ஒப்புதல் கொடுத்தார். ஏற்கனவே மௌண்ட்பேட்டனின் கருத்தை ஏற்றிருந்த காங்கிரஸ் தலைவர்களும், முஸ்லீம் லீக் மற்றும் சீக்கியத் தலைவர்களும் இத்திட்டத்திற்கு ஒப்புதல் அளித்தனர். 1947–ஆம் ஆண்டு மே மாதம் 18–ஆம் நாளில் மௌண்ட்பேட்டன் இத்திட்டத்தை ஆங்கில அரசு ஏற்றுக்கொள்ள வழி செய்வதற்காக, இலண்டன் பயணம் ஆனார். சிம்லாவில் மௌண்ட்பேட்டன் சீமாட்டி உதவியுடன் நாட்டுப் பிரிவினை துளிர்த்தது.

மேனனின் இந்தியப் பிரிவினைத் திட்டம் ஆங்கிலம் பேரரசால் ஏற்றுக் கொள்ளப் பட்டது. அத்திட்டமே "மௌண்ட் பேட்டன் திட்டம்" என வழங்கலாயிற்று. இங்கிலாந்தின் நாடாளு மன்றத்தில் "15—8—1947-ஆம் நாளில் இந்தியா விடுதலை பெறும்" என்று 1947-ஆம் ஆண்டு சூன் மாதம் முதல் வாரத்தில் ஆட்லி அறிவித்தார்.

16—8—1946-இல் தொடங்கிய இந்து—முஸ்லீம் கலவரம் நாடெங்கிலும் காட்டுத் தீபோல் பரவிற்று. கொலை, கொள்ளை, கற்பழிப்பு, அராஜகம் இந்தியாவை ஆட்கொண்டன. பிரிட்டானியப் பேரரசு, இந்தியா விரைந்து விடுதலை பெறும் வகையில் 18—7—47-இல் இந்திய விடுதலைச் சட்டத்தை நிறைவேற்றியது. அதன்படி இந்தியாவும் பாக்கிஸ்தானும் இரு தனித்தனி டொமினியன் அந்தஸ்து பெற்ற நாடுகளாயின.

இறைமையற்ற இந்திய அரசமைப்புச் சபையும் 14—8—1947 முதல் முழு இறைமை பெற்ற அவையாயிற்று.

1947-ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் பதினைந்தாம் நாள் இந்திய வானில், சுதந்திர வெள்ளி முளைத் தெழுந்தது. பல்லாயிரக் கணக்கானோரை வெஞ்சிறையில் வாட்டி வதைத்து, தியாகிகள் பலரின் இரத்தத்தையும் உயிரையும் பலியாக ஏற்றுக் கொண்ட பின்னர், விடுதலை இயக்கம் தனது நீண்ட நெடிய பயணத்தை முடித்துக் கொண்டது.

" எங்கள் பேரரசில் சூரியன் எப்போதும் மறைவதில்லை " என ஆர்ப்பரித்து வந்த ஆங்கில ஆதிபத்தியத்தின் ஊழியும் இந்தியாவில் முடிவு பெற்றது.

## II

## மாநில சுயாட்சிக் கொள்கையின் தளர்ச்சி

" ஏக இந்தியாவின் விடுதலையையே " தனது உயிர் மூச்சாகக் கொண்டிருந்த அகில இந்தியக் காங்கிரஸ் கட்சி இறுதியில், " துண்டாடப்பட்ட குறை இந்திய நாட்டின் " விடுதலையை ஏற்றுக் கொண்டதேன் ?

“வலிமையான மத்திய அரசுதான் வேண்டும், முழு மாநில சுயாட்சி கூடாது” என்ற பிடிவாதமான அதன் கொள்கையும் அக்குறிக்கோளை அடைவதற்காகக் காங்கிரஸ் கட்சி அவ்வப் போது கடைப்பிடித்த முரண்பாட்டுக் கோட்பாடுகளுமே இந்திய நாடு இரு கூறுகளாகப் பிரிக்கப்பட்டதற்கு மூல காரணங்களாகும்.

முரண்பாட்டுக் கொள்கை

ஆதியில் வலிமை கொண்ட ஒரு மத்திய அரசை உருவாக்க வேண்டும் என்பதே காங்கிரஸ் கட்சியினுடைய மூலக் கொள்கை.

1930-ஆம் ஆண்டு வரை அக்கொள்கை மக்கள் மன்றத்தில் வைக்கப் படவில்லை. எனினும் அது அகில இந்தியக் காங்கிரஸ் கட்சியின் குறிக்கோளாக இருந்தது.

கூட்டாட்சிக் கொள்கையின் அடிப்படையில், இந்திய நாடு ஓர் உண்மையான கூட்டாட்சியாக மலர வேண்டுமென்ற அரசியல் சூழ்நிலை 1930-ஆம் ஆண்டில் இந்தியாவில் உருவாகி வலுப்பெற்றவுடன், காங்கிரஸ் தனது செயற்கையான மவுனத்தை மாற்றிக் கொள்ள வேண்டிய தாயிற்று. உடனே மாநில சுயாட்சி பற்றியும் கூட்டாட்சி பற்றியும் இரு பொருள் படும்படியான தீர்மான வாசகங்களை வட்டமேசை மாநாட்டிலும் தனது கட்சித் தீர்மானங்களிலும் வெளியிட்டது.

1937-ஆம் ஆண்டில் மாநிலங்களில் அரசோச்சுவதற்குக் காங்கிரஸிக்கு வாய்ப்புக் கிடைத்தவுடன்– 1935-ஆம் ஆண் டின் அரசுச் சட்டத்தில் கொடுக்கப்பட்ட மாநிலத் தன்னாட்சி, தனக்குப் போதுமானதாக அமையவில்லை என்ற காரணத்தால்- அதை அடைய ஆங்கில மத்திய வல்லாட்சியுடன் போராட்டம் நடத்தியது. இறுதியில் அதற்காகப் பதவியை விட்டே விலகி ஓடியது.

பதவி விலகியபின் பாக்கிஸ்தான் கோரிக்கையும் கிளர்ந் தெழுந்ததால், தனது வன்மை கொண்ட மத்திய அரசுக் கொள் கையை வேறுவழியில்லாமல் காங்கிரஸ் சற்று விட்டுக் கொடுத் தது. மீண்டும் மாநில சுயாட்சி பற்றிய – கூட்டாட்சி பற்றிய-

கொள்கையைத் தனது இரட்டை நாக்கினுல் திரித்துக் கூறி 1945-ஆம் ஆண்டுத் தேர்தல் அறிக்கையினுல், மறைபொருள் படும்படி முழு மாநில சுயாட்சியினை ஏற்றுக் கொண்டது.

1946-ஆம் ஆண்டில் வெளியிடப்பட்ட முழு மாநில சுயாட்சியினைக் கொண்ட பிரிட்டானிய அமைச்சரவைத் தூதுக் குழுத் திட்டத்தினை, முழுமையாக ஏற்பதைப்போல் பாசாங்கு செய்து, ஆட்சிப் பொறுப்பின் ஒளிக் கீரல்கள் அரசியல் அடிவானில் தெரிந்தவுடன், கிடைத்த வாய்ப்பைப் பயன்படுத்தி, அரசியல் நிர்ணய சபையையும் உருவாக்கிக் கொண்டது.

நாடு பிரிந்தவுடன் அதனையே காரணமாகக் காட்டித் தனது வெகு நாளைய உள்ளக் கிடக்கையைக் காங்கிரஸ் கட்சி மீண்டும் நிறைவேற்றிக் கொண்டது. அஃதாவது, எந்த அளவிற்கு இந்திய மாநிலங்களை அடிமை கொள்ள முடியுமோ அந்த அளவு கடுமையோடு கூடிய ஒரு வன்மை கொண்ட மத்திய அரசை இன்றைய அரசியல் அமைப்புச் சட்டத்தில், அன்றே உருவாக்கி வைத்துக் கொண்டது.

''நல்ல சமயமடா — நழுவ விடுவாயோ?''

பாரத நாட்டைப் பிரிவினை செய்வதற்குச் சற்றும் இடம் கொடுக்காத காங்கிரஸ், பாக்கிஸ்தானைப் பிரித்துக் கொடுப்பதற்குத் தன் முழு ஒப்புதலையும் அளித்த மூல காரணமே மீதியுள்ள இந்தியாவையாவது வலிமையான மத்திய அரசைக் கொண்டு இயங்க வைக்க வேண்டு மென்ற நப்பாசையால் தான்.

வலிமையான மத்திய அரசு வேண்டு மென்பதற்குத்தான், நாட்டுப் பிரிவினையை ஏற்றுக் கொண்டார் என்பதை அமரர் அபுல்கலாம் ஆசாத் அவர்கள் தன் சுயசரிதையில் தெளிவாக்குகிருர் எனத் திரு. K. சந்தானம் அவர்கள் கூறுகிருர்.

> ''மௌலாஞ அபுல்கலாம் ஆசாத் அவர்கள் எழுதிய நூலை (இந்தியாவின் விடுதலை வெற்றி) நான் படிக்க வேண்டிய தேற்பட்டது. பிரிட்டானிய அமைச்சரவைத் தூதுக் குழுத் திட்டத்தை ஏற்றிருந்தாலும், அல்லது கிரிப்ஸ் திட்டத்தின்

அடிப்படையில் அரசியலமைப்பு உருவாக்கப்பட்டிருந்தாலும், ஒரு வலிமையற்ற மத்திய அரசை மட்டுமே உருவாக்கக் கூடிய சாத்தியக் கூறுகள் இருந்தன. அதற்கு மாருக இந்தியா பிரிக்கப்பட்டால் ஒரு வலிமையான மத்திய அரசை ஏற்படுத்துவதற்கு ஒரு நல்ல வாய்ப்பு நமக்குக் கிடைக்கும் என்ற காரணத்திஞல் தான் பாக்கிஸ்தான் பிரிவினேக்கு, சர்தார்பட்டேல் அவர்கள் ஒத்துக் கொண்டார் என்ற மௌலாஞ அபுல்கலாம் ஆசாத் அவர்கள் அந்நூலில் கூறியுள்ளார்.'' 5

எனச் சந்தானம் அவர்கள் தனது நூலில் குறிப்பிடுகிருர்.

மைக்கேல் பிரீசர் (MICHEAL BREACHER) என்பவர் பண்டித நேரு அவர்களின் வாழ்க்கை வரலாற்றை எழுதியுள்ளார். இந்திய நாட்டைப் பிரிவினே செய்வதற்கு, பண்டித நேரு அவர்கள் ஏன் ஒத்துக் கொண்டார் என்ற காரணத்தைத் தனது வாழ்க்கை வரலாற்ருசிரியரான மைக்கல் பிரீசரிடம் 6-6-1956 -இல் நேரு அவர்களே கூறுகிருர்.

''மேலும் அந்தப் பின்னணியில், இந்தியா விடுதலையைப் பெற்ருல் அது ஒரு வலிமையற்ற இந்தியாவாகத்தான் இருக்கும். அதாவது கூட்டாட்சி உறுப்புகளினிடத்தில் (மாநிலங்களிடத்தில்) மிக அதிகமான அதிகாரங்கள் இருக்கக் கூடிய ஒரு கூட்டாட்சி இந்தியாவாகத்தான் அது (பிரிக்கப்படாத இந்தியா) இருந்திருக்கும். பரந்த பாரத தேசத்தில் தீராத சிக்கல்களும் ஒற்றுமைக்கு முரணுன பல சக்திகளும் இருந்திருக்கும். அது தவிர, அண்மைக் காலத்தில் இந்தியா விடுதலே பெறுவதற்கு (பிரிவினேயைத் தவிர) வேறு வழியொன்றும் எங்களுக்குப் புலப்பட வில்லே. ஆகவே, நாங்கள் பிரிவினேக்கு ஒத்துக் கொண்டோம். வலிமை கொண்ட இந்தியாவை உருவாக்குவோம். அப்படி வலிமை கொண்ட இந்தியாவினுள் இருப்பதற்கு மற்றவர்கள் விரும்பாவிடில் நாம் அவர்களே எப்படித் தடுக்க முடியும்? நாம் ஏன் அவர்களேத் தடுக்க வேண்டும்?'' 6

---

5 Mr. K. Santhanam, "Union State Relations in India" (1963) Page 60

6 Micheal Breacher, "Nehru - A Political Biography" [Abridged Edition - 1969], Page 183

எனவே, ''வலிமையான மத்திய அரசா?'' அல்லது ''நாட்டுப் பிரிவினையா?'' — இவை யிரண்டில் எது வேண்டுமென்ற அரசியற் பெருவினா எழுந்தபோது ''நாடு துண்டாடப் பட்டாலும் பரவாயில்லை; எஞ்சியிருக்கும் இந்திய மாநிலங்களை அடிமை கொள்ளக் கூடிய வலிமையான மத்திய அரசுதான் வேண்டும்.'' என்ற பழைய கொள்கையினையே காங்கிரஸ் கட்சி மீண்டும் புதுப்பித்து நிலைநாட்டிக் கொண்டது. எனவே, ஆங்கில ஆதிபத்தியத்தின் 'ஊழி' (Era) முடிந்த பின்னரும் இந்திய மாநிலங்கள் அடிமைப் படுத்தப்பட்டே கிடந்தன. அது முதல் மாநில சுயாட்சிக் கொள்கையின் தளர்ச்சியும் தொடங்கியது. காங்கிரஸ் கட்சி நாட்டுப் பிரிவினையை நல்ல சமயமாக்கிக் கொண்டு அதை நழுவ விடாமல் மாநில சுயாட்சியைத் தளரச் செய்யும் ''நல்ல பணியைத்'' தொடங்கியது.

**சிதைந்த சித்திரம்**

மாநில சுயாட்சிக் கொள்கையினை, அதன் உச்சிக்கு உயர்த்திய பண்டித நேரு அவர்களின் குறிக்கோள் தீர்மானம் 1947-ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 22-ஆம் நாளில் இந்திய அரசமைப்புச் சபையில் முழு மனதாக நிறைவேற்றப்பட்டது, சரித்திரச் சக்கரம் வெகுவேகமாகச் சுழன்றது. ஆனால் இந்திய நாடு, இரு துண்டுகளாக ஆக்கப்படுவதற்குரிய அரசியல் பின்னணியில், அகில இந்தியக் காங்கிரஸ் கட்சியால் காலமெல்லாம் போற்றி வளர்க்கப்பட்ட, '' வலிமை கொண்ட மைய அரசு '' என்ற கொள்கையின் இரும்புக் கரங்களில், மாநிலத் தன்னாட்சித் தத்துவம் மீள முடியாமல் சிக்கிக் கொண்டது.

காங்கிரஸ் கட்சியின் '' மிகப் பெரும்பான்மை '' உறுப்பினர்களைக் கொண்ட இந்திய அரசமைப்புச் சபையின் மூலமாக, முழுமையான மாநில சுயாட்சிக் கொள்கையின் குரல்வளை நெறிக்கப்பட்டது. காங்கிரசின் நெடுநாளைய ஆசையும் நிறைவேறியது.

இந்தியத் துணைக் கண்டத்தில் செயற்கையான ஒருமைப்பாட்டை மொகலாயர்கள் வாள்முனையில் ஈட்டினார்கள். ஆங்கிலேயர்கள் துப்பாக்கி முனையில் நிலை நிறுத்தினார்கள். ஆனால், இந்தியக் காங்கிரஸ் கட்சி, சுதந்திரம் மற்றும் நாட்டு ஒற்றுமை என்ற பெயரால் அதனைப் பேனா முனையில் உருவாக்க முனைந்தது.

பாரத மாதாவிற்கு அறுவை சிகிச்சை நடப்பதற்குத் 90 நாட்களுக்கு முன்பிருந்தே (1947-ஆம் ஆண்டு மேத் திங்கள் 20-ஆம் நாள்) அதுவரையும் அல்லல் பட்டு வடிக்கப்பட்டிருந்த மாநில சுயாட்சிக் கொள்கையினை, அகில இந்திய ஒற்றுமை என்ற பெயரால் அழித்தொழிக்கத் தொடங்கி விட்டனர், காங்கிரஸ் தலைவர்கள்.

எப்படி? பண்டித நேருவின் குறிக்கோள் தீர்மானத்தின் அடிப்படையில், அரசமைப்புச் சட்டத்தை உருவாக்கு வதற்காகப் பலகுழுக்கள் ஏற்கனவே அமைக்கப்பட்டிருந்தன. அவற்றின் அறிக்கைகளும் அரசமைப்பவையில் சமர்ப்பிக்கப் பட்டிருந்தன. ஆனால் நாட்டுப் பிரிவினை இனி ஏற்பட்டுவிடும் என்றறிந்து கொண்ட தேசியத் தலைவர்கள் பாக்கிஸ்தான் நீங்கலாக மீதமிருந்த அகில இந்தியாவை ''நிர்மாணிப்பதற் காக,'' அவசர அவசரமாக அக்குழுக்களின் பழைய அறிக் கைகளை எல்லாம் அடியோடு மாற்றி அமைத்தனர். முழு மாநில சுயாட்சியை அடிப்படைக் கொள்கையாக ஏற்றுக் கொண்டு தயாரிக்கப்பட்ட அக்குழுக்களின் பழைய அறிக்கைகள் யாவும் வெறும் வரலாற்றுச் சின்னங்களாகி விட்டன. வலிவற்ற — சுயாட்சியற்ற — மாநிலங்களும் அவற்றை அடக்கி ஒடுக்கும் வன்மை கொண்ட மத்திய அரசும் புதிதாகப் படைக்கப் பட்டன.

அதன் பின்னர்தான் இந்தியத் தாய் அறுவை மருத்துவத் திற்குத் தயாரானாள். இந்தியத் தாய்க்கு, இரத்தக் களரியுடன் அறுவை சிகிச்சையும் நடந்து முடிந்தது. சுதந்திரக் குழந்தையும் முடமாய்ப் பிறந்தது. வெட்டிப் பிரித்தெடுக்கப்பட்ட முடமான விடு தலைக் குழந்தைக்குத் தன்னாட்சித் தத்துவத்தின் சத்தேற்றப்படா மல், மத்திய வல்லாட்சி யென்ற பகட்டான பட்டுச் சட்டை மட்டும் அணிவிக்கப்பட்டது. அதைப் பார்த்து அழகொழுகும் சித்திர மென — இந்திய ஒருமைப்பாடென — சொல்லிக் காங்கிரசின் பெருந் தலைவர்கள் எல்லாம் அகமகிழ்ந்து போனார்கள். ஆனால், மாநில சுயாட்சிக் கொள்கை, முற்றும் தளர்ந்துபோய் குற் றுயிரும் குலையுயிருமாய் அரசியல் நிர்ணய சபையில் கேட்பாரற் றுக்கிடந்தது. மாநில சுயாட்சிக் கொள்கையின் வீழ்ச்சி பற்றி அடுத்த இயலில் பார்ப்போம்.



# 14. மாநில சுயாட்சிக் கொள்கையின் வீழ்ச்சி

## — நமது அரசமைப்புச் சபையில் —

"இந்திய நாடு - ஒரு சுதந்திர நாடு என்ற அடிப்படையில் அமைக்கப்படுவதும், இந்திய மக்களுடைய தேவைகளுக்கும் விருப்பங்களுக்கும் ஏற்ற வளர்ச்சியை நல்கக்கூடியதும், இந்திய மக்களாலேயே உருவாக்கப்படக் கூடியதுமான ஒரு குடியரசு நாடாக ஆக்குவதற்காகவே, காங்கிரசுக் கட்சி முனைந்துள்ளது. அரசாங்க அதிகாரங்கள் முழுவதும், அந்தக் (இந்தியக்) குடியரசின் மக்களுக்கே மாற்றப்படவேண்டும். அவ்வகையில் மாற்றப்பட்ட அதிகாரங்களை (இந்திய மக்களின்) அரசாங்கமே நிர்வகிக்கும். 'வயது வந்தோர்க்கெல்லாம் வாக்குரிமை' என்ற கொள்கையின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைக் கொண்டதும், இறுதியாக இந்திய நாட்டினுடைய அரசியலமைப்புச் சட்டத்தை நிறைவேற்றுவதற்குரிய அதிகாரத்தைப் பெற்றதுமான ஓர் அரசியலமைப்புச் சபையின் மூலமாகத் தான், அப்படிப்பட்ட (குடியரசு) நாட்டை உருவாக்க முடியும்." 1

—(28—12—1936) அகில இந்தியக் காங்கிரஸ் (பெய்சூர்) மாநாட்டுத் தீர்மானம்.

"அளவிற்கதிகமான பேரதிகாரங்களை—தேவையற்ற முறையில் மத்திய அரசிற்கு வழங்கப்பட்டுள்ள (அரசமைப்புச் சபையின்) பான்மையானது, மாநிலங்களுக்குப் பெருந் தீங்கைத் தருவதோடல்லாமல்,

---

1 As quoted in "Constitutional History of India" (1971) Part II, The Constitution of India, Page 2 - 3, by Prof. V. D. Mahajan.

நம்மால் அரசியலமைப்பில் உருக் கொடுக்கப்படுவதாக, மிகைப்படப் பாராட்டப்படும் "குடியரசு அமைப்புக் கொள்கைக்கே" கூட, அது கேடு விளைவிப்பதாய் உள்ளது."2

—பேராசிரியர் கே. டி. ஷா.

வலிமை கொண்ட சில நாடுகள் — வேற்று நாடுகளின் மேல் போர் தொடுத்து வெற்றி கொண்டு — தோற்ற நாடுகளை அடிமைப்படுத்தி ஆட்சி செய்ததும்; அடிமைப்பட்ட நாடுகள் பின்னர் விழித்தெழுந்து புரட்சி செய்து, ஆதிக்க ஆட்சிகளை மாற்றி அமைத்ததும்; வரலாற்றுச் சூழ்நிலைகளினாலும் அரசியற் காரணங்களினாலும், வெற்றி பெற்ற நாடுகள், அடிமைப்படுத்தப்பட்ட நாடுகளுக்குத் தாமாகவே விடுதலை வழங்கி வந்துள்ளதும்; இவ்விரு முனைகளுக்குமிடையில் அடிமை நாடுகளே தன்னரசுகளை ஏற்படுத்திக் கொண்டதும்; உலகச் சரித்திரத்தில் ஏராளமாகக் காணக் கிடைக்கின்றன.

மனித சமுதாய வரலாற்றின் பரிணாம வளர்ச்சியில் குடியரசுத்தத்துவமும் நாட்டாட்சி முறைகளும், மக்களின் அடிப்படை உரிமைகளும், இருபதாம் நூற்றாண்டில் மிக உயர்ந்து நிற்பதை யாரும் மறுக்க முடியாது. அடிமைப் படுத்தப்பட்ட ஒரு நாட்டின் ஆதிபத்திய அரசு மாறுகையில், அந்த நாட்டு மக்களின் உரிமைகளும், சமுதாய, அரசியல், பொருளாதாரச் சுதந்திரங்களும் மீண்டும் மலர்கின்றன. விடுதலை பெற்ற நாட்டு மக்கள், அந்த நாட்டின் பொது நலனுக்கும், அதனுறுப்புக்களின் தனி நலன்களுக்கும் ஊறு ஏற்படாத வகையில், மக்களது அடிப்படைச் சுதந்திர உரிமைகளைப் போற்றி, புதியதோர் அரசமைப்புச் சட்டத்தை உருவாக்கி, அதன் வழி நலன் நாடும் தங்கள் சொந்த அரசைப் படைத்து, அச்சட்டத்தின் நாற்புற எல்லைகளுக்குள் பின்னர் வாழ்ந்து வருவதுதான் இந்தப் புதுயுகத்தின் ஆட்சி முறையாகும்.

அவ்வகை அரசமைப்புச் சட்டத்தை உருவாக்க, முதலில் ஓர் அரசமைப்புச் சபையை மக்கள் தோற்றுவிக்க வேண்டும். சனநாயகத்தைப் போற்றக் கூடிய எந்த ஒரு மக்கள் சமுதாய

2 Prof. K. T. Shah, "Constituent Assembly Debates", VII, 7, Page 438

மானுலும், அவர்களுக்குரிய அரசையும், அரசின் அங்கங்களையும், அரசுச் சட்டத்தையும் படைக்கக்கூடிய அரசமைப்புச் சபையை அந்த மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளைக் கொண்டே அமைத்துக் கொண்டிருப்பதைத்தான், பொதுவாக வரலாறு காட்டுகிறது. அதிற் சில விதிவிலக்குகளும் இல்லாமலில்லை. ஆனுல் விதிவிலக்குகள் எல்லாம் பொது விதியாகி விடாதல்லவா?

குடியரசினையே பெறவேண்டுமென்று காலமெல்லாம் விடுதலைப் போர் நடாத்திய இந்திய மக்கள்–'சுதந்திரமே எங்கள் பிறப்புரிமை'என்ற மூல முழக்கத்தின் அடிப்படையில் சுதந்திரப் போரை நடத்தி வெற்றி கொண்ட மக்கள் – அடிமைத்தளை நீங்கி, தமக்கான தன்னுட்சியினை அமைக்கும் போது மட்டும், தங்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்படாத பிரதிநிதிகளை வைத்து உருவாக்கப்பட்ட ஓர் அரசியலமைப்புச் சபையின் மூலமாகத்தான் தங்களது அரசியல் சட்டத்தை ஏற்படுத்திக் கொள்ள வேண்டுமா?

"ஆம்" என்று கூறியது ஆட்சிப் பொறுப்பினை ஏற்றுக்கொண்டிருந்த அன்றைய அகில இந்தியக் காங்கிரஸ் கட்சியின் மேலிடம். ஆனுல் அதே காங்கிரஸ் கட்சி, அரசியலமைப்புச் சபையைப் பற்றி மக்களிடையே அதுவரை நடமாடவிட்டிருந்த கொள்கைகள் யாவை? அவை பின்னுல் எவ்வகை மாற்றத்தைப் பெற்றன? அதனுல் மாநில சுயாட்சிக் கொள்கை எவ்வகையில் வீழ்ச்சியுற்றது? என்பனவற்றை இவண் ஆய்வோம்.

## I

## பச்சோந்தி

அரசமைப்புச் சபையைப் பற்றிய முதல் சிந்தனைகளை இந்திய நாட்டில் தோற்றுவித்த பெருமை திரு. எம். என். ராய் (M. N. Roy) அவர்களையே சாரும். 1928–ஆம் ஆண்டு'வரையும் 'அரசமைப்புச் சபை' என்பது ஓர் ஆலோசனை என்ற அளவில்தான் இருந்தது. அரசியல் கட்சிகள் அதனை ஏற்றுக் கொள்ளத் துணியவில்லை.

பின்னர் ராஞ்சியில்(Ranchi)புத்துயிர் பெற்ற சுயராச்சியக் கட்சி 1934–ஆம் ஆண்டில், அரசியலமைப்புச் சபைக்கான அரசியல் வடிவத்தைக் கொடுத்தது. இந்தியர்களின் "சுய நிர்ணய உரிமையையும்" அது எடுத்து விளம்பிற்று.

''மற்ற சுதந்திர நாடுகளைப் போலவே இந்திய மக்களுக்கும் சுய நிர்ணயஉரிமை(Right of Self Determination)உண்டு. எல்லாராலும் ஒப்புக் கொள்ளப்படக் கூடிய ஓர் அரசு அமைப்புச் சட்டத்தை உருவாக்குவதற்காக, எல்லாப் பகுதி இந்திய மக்களின் பிரதிநிதித்துவம் கொண்ட ஓர் அரசு அமைப்புச் சபையை ஏற்படுத்துவதுதான் 'சுய நிர்ணய உரிமைக் கொள்கையினை' செயல்படுத்துவதாகும்.''3

என்ற தீர்மானத்தின் மூலமாக, சுயராச்சியக் கட்சி அரசு அமைப்புச் சபையைப் பற்றிய தனது திட்டத்தை நாட்டுக்குக் கொடுத்தது.

1934–ஆம் ஆண்டு மே மாதம் பாட்னுவில் நடந்த அகில இந்தியக் காங்கிரஸ் மாநாட்டில் இந்திய அரசமைப்புச் சபையைப்பற்றிய சுயராட்சியக் கட்சியின் மேற்சொன்ன தீர்மானம், அகில இந்தியக் காங்கிரஸ் கட்சியாலும் அப்படியே ஏற்றுக் கொள்ளப்பட்டது. அதன் பின்னர், காங்கிரசின் பொது மேடைகளில் இக் கொள்கைக்குரிய பல வகைப்பட்ட விளக்கங்கள் அதன் தலைவர்களால் அவ்வப்போது தரப் பட்டன. சில காங்கிரஸ் தலைவர்கள், ''அரசமைப்புச் சபை'' என்பது ''ஓர் அனைத்துக் கட்சி மாநாடு போன்றதாகும்'' என்று கூடக் கருதினார்கள்.

அரசமைப்புச் சபையைப் பற்றிய பல வகையான முரண் பட்ட வியாக்கியானங்களைத் தவிர்க்கக் கருதிய பண்டித நேரு அவர்கள்,

''பரந்த மக்கள் சமுதாயத்தின் அடிப்படையிலிருந்தே அரசு அமைப்புச் சபை தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். அச்சபை தனது வலிமையையும் உணர்வையும் மக்களிடமிருந்தே பெற வேண்டும்.''4

எனத் தெளிவாக்கினார்.

---

3 Select Constitutions [1971] by A. C. Kapur [Constitution of Indian Republic] Page 4

4 Pandit Jawaharlal Nehru, ''An Autobiography'', Page 574

இந்திய மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளை வைத்தே இந்திய அரசமைப்புச் சபை உருவாக வேண்டும் என்ற அடிப்படைக் கோட்பாட்டை, காங்கிரஸ் கட்சி தனது மூலக் கொள்கைகளில் ஒன்ருக 1936–ஆம் ஆண்டிலேயே ஏற்றுக் கொண்டது.

பெய்சுபூரில் 28—12—1936–இல் நடைபெற்ற 50–ஆவது அகில இந்தியக் காங்கிரஸ் கட்சியின் மாநாட்டில் இந்த அத்தியாயத்தின் தலைப்பு மேற்கோளில் தரப்பட்ட "அரசியல் அமைப்புச் சபை பற்றிய தீர்மானத்தைக்" காங்கிரஸ் நிறைவேற்றிற்று. அத் தீர்மானத்தில், இந்திய அரசியலமைப்பு (Constitution) எப்படி இயற்றப்பட வேண்டு மென்பதையும், இந்திய அரசியலமைப்புச் சபை (Indian Constituent Assembly) எப்படி உருவாக்கப்படல் வேண்டும் என்பதையும் காங்கிரஸ் கட்சி மக்களிடம் தெளிவுபட எடுத்துக் கூறியது.

காங்கிரஸ் ஆட்சிப் பொறுப்பேற்றிருந்த அன்றைய மாநிலச் சட்ட மன்றங்களிலெல்லாம் அகில இந்தியக் காங்கிரஸ் கட்சியின் மேற்சொன்ன "அரசமைப்புச் சபை பற்றிய தீர்மானம்" முறையாக நிறைவேற்றப்பட்டு முழுமையாக அங்கீரிக்கப்பட்டது.

பின்னர் 1939–ஆம் ஆண்டு நவம்பர்த் திங்களில் காங்கிரஸ் அரசுகள் பதவி விலகிய போதும்கூட, அரசமைப்புச் சபை பற்றிய காங்கிரசின் அதே கொள்கை, காங்கிரஸ் காரியக் கமிட்டியால் மீண்டும் உறுதிப்படுத்தப் பட்டது.

> "பிரிட்டானிய ஆதிபத்தியக் கொள்கையை அகற்றுவதற்காக இந்திய நாடு அதனுடைய அரசமைப்புச் சட்டத்தை ஓர் அரசமைப்புச் சபையின் மூலமாக உருவாக்கிக் கொள்ள வேண்டியது மிக இன்றியமையாததாகும்... விடுதலை பெற்ற ஒரு நாட்டினுடைய அரசியல் அமைப்புச் சட்டத்தை உருவாக்குவதற்குரிய ஒரே ஜனநாயக வழி, அரசியல் அமைப்புச் சபைதான் என இந்திய மக்கள் கருதுகின்றனர். ஜனநாயகத்திலும் சுதந்திரத்திலும் நம்பிக்கையுள்ள யாரும் இதை மறுக்க மாட்டார்கள்...வயது வந்தவர்களுக்கெல்லாம் வாக்குரிமை கொடுத்து, அந்த உரிமை பெற்ற மக்களாலேயே அரசமைப்புச் சபை தேர்தெடுக்கப்படும்."[5]

---

5 A. I. C. C. Working Committee Resolution, Nov. 19 to 23, 1939, "Congress and the war crisis" [A. I. C. C. Allahabad] Page 137 138

என்ற காரியக் கமிட்டியின் தீர்மான வாசகம் அரசமைப்புச் சபை பற்றி, காங்கிரஸ் எத்தனே அழுத்தமான வாக்குறுதியை மக்களுக்குக் கொடுத்திருந்தது என்பதைத் தெளிவுபடுத்தும்.

இந்திய அரசமைப்புச் சபை அதன் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளைக் கொண்டே அமைக்கப்படல் வேண்டும் என்பதை, காந்தியடிகள் கூட பல சமையங்களில் வற்புறுத்தியுள்ளார். 10—11—1939-இல் 'அரசின்' பத்திரிக்கையில் ''ஒரே வழி'' (Only Way) என்ற தலைப்பிட்டுக் காந்தி அடிகள் எழுதிய கட்டுரையில்,

> ''இந்தியாவில் வயது வந்த ஆண்களுக்கும் பெண்களுக்கும் கலப்படமற்ற வாக்குரிமை வழங்கப்படும். அவர்களால் தேர்ந்தெடுக்கப்படும் ஒரு சபையே இந்தியாவின் முரணுன கோரிக்கைகளை நீதியுடன் தீர்த்து வைக்கும்...... இந்திய நாட்டின் தனித்தன்மையைக் காட்டவல்லதும், இந்திய மக்களைப் பிரதிபலிக்கும் தன்மையைக் கொண்டதுமான ஓர் அரசமைப்புச் சட்டத்தை இந்தச் சபையால் மட்டுமே உருவாக்க முடியும். அப்படிப்பட்ட ஓர் அரசமைப்புச் சட்டம், நமது வெறும் குறிக்கோள் மட்டுமல்ல; நடைமுறையில் நிகழ இருக்கும் ஒரு பேருண்மை.'' 6

எனத் தெளிவுபடுத்தினர்.

இக்கருத்தை வேறு வகையில் விளக்கப் போந்த பண்டித நேரு அவர்கள், இன்னும் அழகான சொற்ருெடர்களால் ''அரசமைப்புச் சபை'' பற்றிய கோரிக்கையை வலியுறுத்துகிருர். 1940-ஆம் ஆண்டில் பண்டித நேரு அவர்களால் எழுதப்பட்ட "UNITED INDIA" என்ற நூலில்,

> ''நாம் உண்மையான சனநாயக சுதந்திரத்தை அடைய விரும்பினுல் ஓர் அரசமைப்புச்சபை மூலமாகத்தான் அதனைப் பெற முடியும். அதனைத் தவிர வேறு வழியொன்றும் இல்லை யென்றே எனக்குப்படுகிறது. ஒரு புதிய நாட்டினை உருவாக்கு வது என்பதே அதன் பொருள். ஏகாதிபத்தியத்தினுடைய பொருளாதார அடித்தளத்திலிருந்தும்—அமைப்பிலிருந்தும்—

6 Quoted in "Constitutional History of India" (1971) Part II, Page 3, by Prof. V D. Mahajan.

நாம் விடுபட்டுக் கொள்வதென்பதே அதனுடைய இன்னொரு பொருள். கூர்த்தமதி கொண்ட பல வழக்கறிஞர்கள் அமர்ந்து இதனை ( அரசமைப்புச் சபையில் ) ஏற்படுத்திவிட முடியாது. சில நலன்களை மட்டும் சீர் செய்ய முயற்சிக்கும் சிறிய குழுக்களின் மூலமாகவும் அதனைச் செய்திட முடியாது. அப்படிச் செய்வதை அரசியல் அமைப்புச் சட்டத்தின் ஆக்க முறைஎனவும் அழைக்க இயலாது. ஆதிபத்திய அதிகாரத்தின் நிழலில் அதனை உருவாக்கவும் முடியாது. அரசியல் மற்றும் மனோநிலைச் சூழல்கள் அதற்குகந்ததாய் அமைந்து, மக்களிடமிருந்து அதற்குரிய அதிகாரத்தையும் —ஆர்வத்தையும்— பெற்றால் மட்டுமே, அதனைப் பயன்தரத் தக்க வகையில் உருவாக்கிட முடியும். எனவே வயது வந்தவர்களுக்கு வாக்குரிமையின் முக்கியத்துவம் நமக்குப் புலனாகும். நாம் யாரிடமும் அதனைப் பிச்சை கேட்கவில்லை. ஒரு காலத்தில் நாம் அதனைப் பெறத்தான் போகிறோம். அதனுடைய முன்மொழிதல் பணியினை இன்றே தொடங்குகிறோம். நாம் தேவையான அளவிற்கு வலிமை பெற்ற பின்னர், அதனை அடைவோம். அநேகமாக நமது போராட்டம் முடிந்ததும், உடனே அதனை உருவாக்குவோம்." 7

எனப் பண்டித நேரு அவர்கள் அவருக்கே உரித்தான இலக்கிய நயத்தோடு அரசமைப்புச் சபையின் தன்மையையும் முறையையும் ஆணித்தரமாக எடுத்து இயம்புகிறார்.

அரசமைப்புச் சபையை ''யாரிடமும் பிச்சை கேட்காத'' நேரு அவர்கள் 1946-ஆம் ஆண்டில் ''பிரிட்டானிய அமைச்சரவைத் திட்டம்" தந்த பிச்சையை வைத்தே ''ஆதிபத்திய அதிகார நிழலில்'' நமது அரசியல் அமைப்புச் சபையை ஏற்படுத்தினார். அது மட்டுமல்ல; விடுதலை பெற்ற பின்னரும் கூட அந்த அடிமைச் சபையையே இறுதிவரை அவர் தொடர வைத்தார். நாடு விடுதலை பெற்ற பின்னரும்கூட அந்த அடிமைச் சபை அழிக்கப்பட வில்லை.

1947-ஆம் ஆண்டு ஆகஸ்டு 15-ஆம் நாளுக்குப் பின்னர் இந்திய மக்களின் ''அரசியல் சார்புடைய மனோநிலை" முழுமையாக மாறிவிட்டிருந்தது. அடிமை விலங்கொடிக்கப்பட்ட விடுதலை உணர்வென்ற வெள்ளத்தில் இந்திய மக்கள் திளைத்

---

7 Ibid, Opp. cited, Note 6, Page 4.

திருந்தனர். தங்கள் ''தேவைகளையும், விருப்பங்களையும் நல்கக் கூடிய" ஓர் அரசியல் அமைப்புச் சட்டத்தை உருவாக்குவதற்காக—"வயது வந்தவர்களுக்கெல்லாம் வாக்கு செய்து" உண்மையான ஓர் அரசமைப்புச் சபையை ஏற்படுத்துவதற்குத் தேவையான '' ஆர்வத்தையும் அதிகாரத்தையும் " இந்திய மக்கள், காங்கிரஸ் கட்சிக்குக் கொடுத்திருந்தார்கள். ஆனல் காந்தியடிகளாலும், காங்கிரஸ் காரியக் கமிட்டியாலும், இலக்கிய நயத்துடன் எழுதிய நேரு அவர்களாலும் கொடுக்கப்பட்ட மேற் சொன்ன சொற்களைத் தாங்கிய வாக்குறுதிகள் மட்டும் இறுதி வரை நடைமுறைப் படுத்தப்பட வில்லை. பொருளற்ற வெறும் சொற்களாகவே அவை நிலைத்து விட்டன.

விடுதலை இந்தியாவின் வயது வந்த மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசமைப்புச் சபை இன்னும் உருவாக்கப்படவில்லை. ஒருக்கால், இனிமேல் உருவாகலாமோ என்னவோ?

பச்சோந்தி, அதன் சூழ்நிலைக் கேற்பத் தன் வண்ணத்தை மாற்றிக் கொள்ளுமாம். அதைப் போலவே காங்கிரஸ் கட்சியும் அன்றைய ''அரசியல் சூழ்நிலைக்கேற்பத்'' தனது பழைய கொள்கை என்கிற 'நிறத்தையும்' மாற்றிக் கொண்டது.

அரசமைப்புச்சபை பற்றி இத்துணைத் தீவிரமான கருத்துக்களையும் அடிப்படைக் கொள்கைகளையும் விடுதலை இயக்க காலத்தில் மக்கள் மன்றத்தில் வைத்த காங்கிரஸ் கட்சி—தனது பழைய வரலாற்றையும், பழைய வாக்குறுதிகளையும், இந்திய விடுதலை பற்றிய பழைய கொள்கைகளையும் — அரசியற் சந்தர்ப்பங்களுக்கேற்பப் பின்னுல், மாற்றிக் கொண்டது. தன்னிடம் ஆட்சிப் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டு விடும் என்ற மெல்லிய ஒளிக்கீரல்கள் இந்திய அரசியல் வானில் மெல்ல மெல்லத் தெரிந்தவுடன் அரசமைப்புச் சபை பற்றிய தனது நீண்ட காலக் கொள்கையையும், அரசியல் சட்டம் பற்றிய தனது பல வாக்குறுதிகளையும் அவசர அவசரமாகக் காங்கிரஸ் கட்சி மாற்றிக் கொண்டது. இந்திய சுதந்திரத்திற்குப் பின்னர், ஓர் ஆதிபத்திய அரசை இயக்கும் அரசியல் கட்சியாகவே காங்கிரஸ் கட்சி மாறிவிட்டது.

முகப்பும் நடப்பும்

இந்திய அரசமைப்புச் சட்டத்தின் பொருள் பொதிந்த கோட்பாடுகளைக் கொண்ட முகப்பினை (Preamble) நாம் பார்த்தால், அதில்,''இந்திய மக்களாகிய நாம்...நமது அரசமைப்புச்

சபையில் இந்த அரசமைப்பை இயற்றி, அங்கீகரித்து, அதனை நமக்கு நாமே வழங்கிக் கொள்கிறோம்.'' எனத் தெளிவாகக் கூறப்பட்டிருப்பதைக் காணலாம்.

''இந்திய மக்களாகிய நாம்'' எனவும்; ''நமது அரசமைப்புச் சபை'' எனவும்; ''அரசமைப்பை இயற்றி, அங்கீகரித்துக் கொண்டு...'' எனவும்; அதில் குறிப்பிடப்பட்டுள்ளதே, அச் சொற்றொடர்கள் உண்மை நிலையைத் தெளிவாக்குகின்றனவா? இல்லை.

நமது அரசமைப்புச் சட்டத்தை உண்மையில் இந்திய நாட்டு மக்கள் தான் உருவாக்கினார்களா ?

நமது அரசமைப்பை இயற்றியவர்கள், இந்திய மக்களால் அதிகாரப் பூர்வமாகத் தேர்ந்தெடுக்கப் பட்டவர்கள் தானா ?

அந்த அரசமைப்புச் சபை மக்களது அங்கீகாரத்தைப் பெற்ற சட்டம் தானா ?

நம்து அரசமைப்புச் சட்டமும் மக்களது அங்கீகாரத்தைப் பெற்ற சட்டம் தானா ?

என்ற வினாக்களும் கூடவே எழுகின்றன.

இந்த வினாக்கள் சென்ற 24 ஆண்டுகளாகப் பல அரசமைப்பு விற்பன்னர்களாலும், அரசியற் கட்சிகளாலும், அறிஞர் பெரு மக்களாலும் பல முறை கேட்கப்பட்ட வினாக்களாகும். ஆனால் அவ் வினாக்களுக்குரிய மெய்யான மறுமொழியை யாரும் மனம் விட்டுத் தருவதில்லை. ஏன் ?

நமது அரசமைப்பை உருவாக்குவதற்காக, ''வயது வந்தோர்க்கு வாக்குரிமை'' என்ற ஜனநாயக முறைப்படி, இந்திய அரசமைப்புச் சபை உறுப்பினர்கள், இந்திய மக்களால் தேர்ந்தெடுக்கப்பட வில்லை. இந்தியா சுதந்திரம் பெற்றபின், மறைமுகத் தேர்தல் மூலமாகவும் அச் சபையின் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட வில்லை. நமது அரசியலமைப்புச் சட்டம், பொது மக்களால் தேர்ந்தெடுக்கப்படாத உறுப்பினர்களைக் கொண்டே உருவாக்கப்பட்டது. அதன் பின்னர் ''பொதுக்குடி ஒப்பம்'' – அதாவது ''Referendum'' என்ற முறையினாலும் அந்த அரசமைப்புச் சட்டத்திற்குரிய அங்கீகாரத்தையும் இந்திய நாட்டு மக்களிடமிருந்து பெறவில்லை.

ஆக இன்றிருக்கும் நமது அரசியல் சட்டத்தை, மக்கள் பிரதிநிதிகளும் உருவாக்கவில்லை; அதிகாரப் பூர்வமான அரசியலமைப்புச் சபையும் வடித்தெடுக்கவில்லை; மக்களது அங்கீகாரமும் அதற்கு வழங்கப்பட வில்லை. என்றாலும் இந்திய மக்களாகிய 'நாம்' 'நமது' அரசமைப்புச் சபையில் 'நமது' ''அரசியலமைப்பை உருவாக்கி'', ''நமக்கு நாமே வழங்கிக் கொண்டோம்''!!!

ஒரு சில அகில இந்தியத் தலைவர்களால் ஆட்டுவிக்கப்படும் பொம்மைகளாயிருந்த (நமது அரசமைப்புச் சபையின்) அன்றைய உறுப்பினர்கள், சனநாயகமுறைப்படி மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்டிருந்தால்—ஒரு நூற்றாண்டுக் காலம் இந்தியாவில் வளர்ச்சி பெற்றதும் விடுதலை இயக்கத்தால் பல கால கட்டங்களில் உறுதியாக்கப் பட்டதுமான —''உண்மைக் கூட்டாட்சிமுறையும், மாநிலசுயாட்சியும்'' நமது அரசமைப்புச் சட்டத்தில் உருக்குலைக்கப் பட்டிருக்காது.

அரசியல் நிர்ணய சபையில் காங்கிரசுக் கட்சி பெற்றிருந்த ''மிருகப் பெரும்பான்மை'' இந்திய மக்களின் நேரடித் தீர்ப்பால் உருவானதல்ல. நிலக்கிழார்கள் வரி மட்டும் செலுத்துவோர், மத, இன, பால் அடிப்படையில் தனித் தொகுதியைச் சார்ந்தவர்கள், இன்ன பிறவகையினர் — அதாவது — இந்திய மக்களில் 100-க்கு 14 பேர் மட்டுமே 1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தினடிப்படையில் ''சுதந்திரம் ஒரு வெறுங்கனவு'' என்று கருதப்பட்ட காலத்தில், ''இந்தியா பிரிக்கப்படுமா?'' ஒன்றாயிருக்குமா? என்று ஆருடம் கூடக் கணிக்கப்படாத நேரத்தில்—இந்திய அரசமைப்புச்சட்டத்தையும்,இந்திய அரசியல் நிர்ணய சபையையும் யாரும் நினைத்துக் கூடப் பார்க்காத கால கட்டத்தில்–1945-ஆம் ஆண்டில் அடிமை நாட்டின் மாநிலச் சட்டசபைகளுக்கான உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்தனர். ஆங்கில ஏகாதிபத்தியம், இந்தியப் பிரச்சனைகளுக்குத் தீர்வு காணக் கொடுத்த ஒரு திட்டத்தின்(பிரிட்டானியத் தூதுக் குழுத் திட்டத்தின்)அடிப்படையில் மேற்சொன்ன மாநிலச் சட்டமன்ற உறுப்பினர்கள், 1946-ஆம் ஆண்டில், மறைமுகத் தேர்தலின் மூலமாக வாக்களித்து 'நமது' அரசமைப்புச் சபையின் உறுப்பினர்களை 'நமது' அரசமைப்பை உருவாக்குவதற்காகத் தேர்ந்தெடுத்தனர்.

இதில் விந்தைக் கூறு என்னவெனில், அந்தப் ''பிரிட்டானிய அமைச்சரவைத் திட்டமே,'' 1947-ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் கைவிடப்பட்டு விட்டது. ஆனால், அத்திட்டத்தின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்ட அடிமை நாட்டு அரசமைப்புச் சபை மட்டும் உயிரோடு நிலைத்து விட்டது.

அப்படித் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களும், இந்தியத் துணைக்கண்டத்தின் 3/5 நிலப் பகுதியினையே, ஒரு வகையாகப் பிரதிபலித்தனர். அது தவிர அம்மன்றத்தின் மொத்த உறுப்பினர்களின் நான்கில் ஒருபங்கு முஸ்லீம் லீக் உறுப்பினர்கள் இறுதிவரை அம்மன்றத்தில் பங்கேற்க வில்லை. இன்னும் கூறப்போனால் 9—12—1946-இல் தொடங்கிய இந்திய அரசமைப்புச் சபை 14—8—1947-ஆம் நாள் வரை, பிரிட்டானியப் பேரரசின் கைக்குள் அடங்கிய ஒரு சாதாரணச் சபையாகத்தான் இயங்கியது. முழு அரசதிகாரங்களும் அதற்குக் கொடுக்கப் பட்டிருக்க வில்லை. எனவே அச்சபை மக்களையும் பிரதிபலிக்க வில்லை —சுதேச மன்னர்களையும் எதிரொலிக்க வில்லை; இறைமையையும் பெற்றிருக்கவில்லை — நிறைமையையும் கொண்டிருக்கவில்லை; உரிமையையும் பெற்றிருக்க வில்லை — சட்டமுறையையும் கொண்டிருக்க வில்லை.

அந்த இறைமையற்ற — முறைமையற்ற — அரசமைப்புச் சபையில்தான் இந்திய மாநிலங்களின் மூல அங்கங்களும், சிதைக்கப்பட்ட மாநில சுயாட்சியும் கருப்பெற்று உருவாகிவிட்டன. அப்போதே வலிவான மத்திய அரசுக் கொள்கையின் வரைச் சட்டமும் படைக்கப்பட்டு விட்டது.

ஆங்கிலப் பேராதிபத்தியம், இந்திய மண்ணை விட்டு வெளி யேறிய பின்னரும் கூட இந்திய மக்களினால் தேர்ந்தெடுக்கப் பட்ட புதிய அரசமைப்புச் சபை உருவாக்கப்பட வில்லை. விடுதலை உரிமை பெற்ற இந்திய மக்களை எந்தக் கோணத்தி லும் பிரதிபலிக்காததும், அடிமை நாட்டின் மாநிலச் சட்ட மன்ற உறுப்பினர்களால் மறைமுகமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட உரிமையற்ற உறுப்பினர்களைக் கொண்டதுமான பழைய அரசமைப்புச் சபைக்கு — 40 கோடி மக்கள் சமுதாயத்தின் எதிர்காலக் குடியரசு அமைப்புச் சட்டத்தை உருவாக்கக் கூடிய முழு உரிமையினையும் இறைமையையும் அதிகாரத்தையும் மக்கள் பிரதிநிதித்துவத்தையும், சுதந்திரத் திருநாளுக்கு ஒரு

நாள் முன்னர் அதாவது 14—8—1947–ஆம் நாளில் அச்சபையிலிருந்த அதிகாரப் பூர்வமாகத் தேர்ந்தெடுக்கப்படாத காங்கிரஸ் உறுப்பினர்களே சட்டத்திற்கும் ஜனநாயக முறைக்கும் முரணாக – எதேச்சதிகார – முறையில் திடீரென வழங்கி விட்டனர்.

''நாடு துண்டாடப்படும்'' என்ற திட்டத்தை, 1947–ஆம் ஆண்டு மேத் திங்களிலேயே உணர்ந்து கொண்ட காங்கிரஸ் தலைவர்கள் – அதிலிருந்து ஏறத்தாழ 90 நாட்களில், மக்கள் பிரதிநிதித்துவத்தைப் பெற்றிராத அதிகாரம் பெற்றிராத, அதிகாரப் பற்றற்ற மேற்சொன்ன அரசமைப்புச் சபை மூலமாகத் தான் இந்திய மாநிலங்களின் தன்னாட்சியை முழுமையாகப் பறித்துக்கொள்ளும் புதிய கொள்கைகளை உருவாக்கிக் கொண்டனர்.

அந்த ''மாற்றப்பட்ட கொள்கைகளின்'' அடிப்படையில் தான் 14—7—1947 முதல் 26—11—1949 முடிய நடைபெற்ற 'நமது' இந்திய அரசமைப்புச் சபை மாநில சுயாட்சியை அழித்த இன்றைய அரசமைப்புச் சட்டத்தைப் பெற்றெடுத்துள்ளது. ஆகவே இன்றைய அரசமைப்பில் பொறிக்கப்பட்டுள்ள ''முகப்பிற்கும்'' உண்மையில் நடந்த ''நடப்பிற்கும்'' ஒன்றுக் கொன்று எவ்வகைத் தொடர்பு மில்லை. சுருங்கக் கூறின் அரசமைப்பின் 'முகப்பில்' கூறப்பட்டிருப்பவை உண்மைக்கும் சட்ட நியாயத்திற்கும் முரணானவை.

## III

## 1 + 1 = 1

### அரசமைப்புச் சபை + நாடாளு மன்றம் = காங்கிரஸ் காரியக் கமிட்டி

அரசமைப்புச் சபையிலிருந்த பெரும்பான்மைக் காங்கிரஸ் உறுப்பினர்கள் மாநிலங்களை ஒடுக்கும் வலிமை கொண்ட மத்திய அரசை இந்திய அரசமைப்பில் படைத்துவிட வேண்டும் என்ற " புதிய ஏற்பாட்டை," பொதுவாக ஏற்றுக் கொண்டிருந்தாலும் கூட, இயற்கையான மாநிலத் தேசிய உணர்வால் உந்தப்பட்ட பல உறுப்பினர்கள் மாநில சுயாட்சிக் கொள்கையினை அரசமைப்புச் சபையில் வலியுறுத்தத் தவற வில்லை. மாநில சுயாட்சி பற்றிய தர்க்க ரீதியான சான்றுகளை யும் வரலாற்று நிகழ்ச்சிகளையும், அதன் பரிணாம வளர்ச்சியினை யும், அவர்கள் எடுத்தியம்பி அரசியலமைப்புச் சபையில்

வாதாடினார்கள். ஆனால் இங்கொன்றும் அங்கொன்றுமாக ஒலித்த அவர்களது ''தனிக்குரல்கள்'' அரசமைப்புச் சபையில் கேட்பாரற்று, பாலை நிலத்தில் பெய்த நிலவொளி போலாயிற்று.

பல அறிஞர் பெருமக்கள், வல்லுனர்கள், கல்வியாளர்கள் மற்றும் சட்டப் பேரறிஞர்கள் நமது அரசமைப்புச் சபையிலும் இடம் பெற்றிருந்தார்கள் என்பது மறுக்க முடியாத உண்மையே. ஆனால் அவர்கள் அரசியல்வாதிகளின் கைக்குள் அடங்கிய வெற்று விசைகளாகவே இருந்தனர்.

அடிப்படைக் கொள்கைகளை வகுப்பதற்கு, அரசியல் தலைவர்கள், அதிலும் குறிப்பாகப் பண்டித நேரு அவர்களும் வல்லபாய் பட்டேல் அவர்களும் அரசமைப்புச் சபையை ஆட்டுவிக்கும் மூலச் சக்திகள். அந்தச் சபையிலிருந்த வல்லுனர்கள் எல்லாம் அவ்விரு தலைவர்களின் கருத்தை ஒலி பரப்பும் பெரிய ஒலிபெருக்கிகள். பெரும்பான்மையினரின் பேரிசைச்சலிலும் வல்லுனர்கள் என்ற ஒலி பெருக்கிகளால் ஒலிக்கப்பட்ட இசை வெள்ளத்திலும் மாநிலத் தன்னாட்சிக் குயில்களின் மெல்லிய ஓசை மங்கி மறைந்து போயிற்று.

அடிப்படைக் கொள்கைகளை வல்லுநர்கள் விளம்பியபின், அக்கொள்கைகளை நாட்டின் எதிர்கால நலனையும் - அரசியல் சமுதாயப் பொருளாதார வளர்ச்சியையும் – அதில் ஏற்படும் சிக்கல்களையும் – ஓர்ந்து கணிக்கக் கூடிய அரசியல் மேதைகள் ஆய்ந்தறிந்து பார்த்து, அதன் பின்னர் ஜனநாயக முறையில் நாட்டின் பெரும்பான்மையான மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்ட மக்கள் பிரதிநிதிகள் அந்த ஆய்ந்தறிந்த கொள்கைகளை அரசியலமைப்புச் சபையில் முழு உரிமையோடு விவாதித்து, இறுதியாக அவர்களால் ஏற்றுக் கொள்ளப்படும் கொள்கைகளையும் முடிவுகளையும் நாட்டின் அரசமைப்புச் சட்டத்தில் செதுக்குவதுதான் உண்மையான அரசியலமைப்புச் சபைகளின் தூய்மையான பணிகளாகும். ஆனால் 'நமது' அரசு அமைப்புச் சபையில் அவ் வகையான மரபுகளும், பணிகளும் முறையாகச் செயல்படுத்தப்பட வில்லை. நாட்டின் பரந்த மக்கள் சமுதாயத்திலிருந்து இந்திய அரசமைப்புச் சபை உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படாமல், காங்கிரஸ் கட்சியின் ஆதரவோடு அச் சபையின் உறுப்பினர்களாக அவர்கள் ஆக்கப்பட்டதே அதற்குக் காரணமாகும்.

மிகப் பெரிய விவாதங்களும் உணர்ச்சி தேங்கும் பிரச்சனை களும், ஆழ்ந்த கொள்கை விளக்கங்களும் தீவிரமான வாதப் பிரதிவாதங்களும், நமது அரசமைப்புச் சபையிலும் இடம் பெருமலில்லை. ஆனல் அச் சபையின் விவாதங்கள் எல்லாம் ஒரே அரசியல் கட்சி சார்ந்த உறுப்பினர்கள், அக்கட்சியினுள் கொள்கைப் போராட்டம் எழும்போது – ஏற்கெனவே ஏற்றுக் கொண்ட ஒரு முடிவினைப்பற்றி விரிக்கவும், சுருக்கவும் தேவை யேற்படின் திருத்தவும் – தம் கட்சி மட்டத்திற்குள் எவ்வகை யான தீவிரத் தன்மையுள்ள விவாதங்களை நடத்துவார்களோ அவ் வகையான விவாதங்களைப் போலவே அரசியலமைப்புச் சபையின் விவாதங்களும் நடைபெற்றன என்ருல் அது மிகை யாகாது.

அரசமைப்புச் சபையே, இந்திய நாடாளு மன்றமாகவும் செயல் பட்டது. நாடாளு மன்றத்தால் பொறுக்கி எடுக்கப்பட்ட காங்கிரஸ் அமைச்சர்கள் நாட்டின் அன்றைய நிர்வாக நட வடிக்கைகள் முழுவதையும் ஒருபுறம் கவனித்தனர். அந்த அமைச்சரவையில் பங்கேற்றிருந்தவர்களே அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் அரும் பெரும் தலைவர்களாகவும் இருந் தனர். காங்கிரசின் உயர் மட்டக்குழுவான காரியக் கமிட்டி யிலும் அத் தலைவர்களே முழுவதும் நிரம்பி யிருந்தனர்.

அன்றைய நாடாளு மன்றம் அரசமைப்புச் சட்டத்தைப் பற்றி விவாதிக்கும் போது, ''அரசமைப்புச் சபை'' என்ற தனித்த தொரு பெயரை ஏற்றுக் கொண்டது. நிர்வாகம் மற்றும் நாட்டின் அன்றைய அரசியல் பிரச்சனைகளை அதுவே விவா திக்கும்போது, அது''நாடாளு மன்றம்''என அழைக்கப்பட்டது. இப்படி ஒரே அமைப்பிற்கு இரண்டு பெயர்கள். ஒன்று நாடாளு மன்றம்; இன்னென்று அரசமைப்புச் சபை. அதாவது ஒரே புட்டியில் இரண்டு தைலங்கள். அத்தைலங்களுக்கான மூலப் பொருள்களை அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் மேலிடமே ( Congress High Command ) வழங்கியுள்ளது. அதாவது நாடாளு மன்ற முடிவுகளையும் அரசமைப்புச் சபையின் கோட் பாடுகளையும் கூட்டினல், காங்கிரஸ் காரியக் கமிட்டியால் எடுக்கப்பட்ட முடிவுகள் என்ற ஈவுதான் வரும். கணக்கியலில் ஒன்றையும் ஒன்றையும் கூட்டினல் 'இரண்டு' என்ற விடை வரும். ஆனல் காங்கிரசின் கணக்கில் $1+1=1$ என்ற விடைதான் அரசமைப்பை உருவாக்கும் காலத்தில் கிடைத்து வந்தது!

எனவே, காங்கிரஸ் கட்சியின் காரியக் கமிட்டியால் எடுக்கப்படும் முடிவுகள், மத்திய அரசின் அமைச்சரவையினுடைய-நாடாளு மன்றத்தினுடைய-நிர்வாகக் கொள்கைகளாயிற்று. அத்தோடு இந்திய அரசமைப்புச் சபையின் கோட்பாடுகளுமாகவும் அவை திகழ்ந்தன.

காங்கிரஸ் காரியக் கமிட்டியின் முடிவுகளும் கொள்கைகளும் அரசமைப்புச் சபையில் ''கட்சிக் கட்டுப்பாடு'' என்ற வட்டத்திற்குள் இயங்கிய காங்கிரஸ் உறுப்பினர்களின் கொள்கைகளாகவும் முடிவுகளாகவும் ஆனதில் வியப்பொன்றுமில்லையல்லவா? அன்றைய அரசமைப்புச் சபையில் இருந்த மொத்த உறுப்பினர்களில் காங்கிரஸ் கட்சியைச் சார்ந்த உறுப்பினர்கள் மட்டும் நூற்றுக்கு 92 பேர், காரியக் கமிட்டியின் முடிவுகளையும் அதனுல் உருவாக்கப்படுகிற கொள்கைகளையும் அவர்கள் சிரமேற் கொண்டொழுகி வந்தார்கள். இவ்வகை உறுப்பினர்களைக் கொண்ட அரசமைப்புச் சபையில்தான் இன்றைய அரசியல் சட்டம் உருவாயிற்று. காங்கிரஸ் கட்சியின் காரியக் கமிட்டி முடிவுகளும் அக்கட்சித் தலைவர்களின் கொள்கைகளும் அன்றிருந்த சூழலுக் கேற்றபடி, தன்னிச்சையான போக்கில் நமது அரசமைப்பில் அன்றே ஏற்பட்டு விட்டது. ஆண்டாண்டு காலத்திற்கும் அழியாததோர் அரசியல் சட்டத்தை நிறைவேற்றுவதற்குக் கூட இவ்வகை முறைகள் தான் அன்றைய தலைவர்களால் மேற்கொள்ளப்பட்டன,

இது தவிர, அன்றிருந்த அரசியற் சூழலும் நமது அரசமைப்பு, இன்றைய நிலையில் உருவாவதற்குப் பின்னணியாக அமைந்தது. காஷ்மீரத்தின் போர்; தெலுங்கானு, கம்யூனிஸ்டுப் பிரச்சனை; சுதேச மன்னர்களை இணைக்கும் தீவிரமான நடவடிக்கைகள்; இந்து — முஸ்லீம் பிரச்சனைகளால் உருவான கொலை, கொள்ளை, இரத்தக் களரி; நாட்டுப் பிரிவினையால் ஏற்பட்ட அகதிகள் பிரச்சனை; இரண்டாம் உலகப் போரால் விளைவிக்கப்பட்ட பொருளாதாரச் சரிவு; ஆங்கில அரசு வெளியேறிய பின் பாக்கிஸ்தான் — இந்தியப் பங்கீடுகளில் ஏற்பட்ட சிக்கல்கள்; அகில உலக மட்டத்தில் இந்தியாவின் நிலை; நிர்வாகத்தில் புதிய பிரச்சனைகளுக்குத் தீர்வு காண முடியாத அனுபவமின்மை; ஆட்சி கிடைத்தவுடன் காங்கிரஸ் கட்சி சந்தித்த பதவிப் போர்கள்; அவைகளினுல் உதித்த உட்கட்சிக் கோஷ்டிப் பூசல்கள்; காந்தியடிகளின் எதிர்பாரா மறைவு; காங்கிரஸ் பெருந் தலைவர்களிடையே இணக்கமின்மை

இன்னேரன்ன பல இயற்கை மற்றும் செயற்கைச் சிறப்புக் கூறு களும், அன்றைய இந்திய அரசியற் சூழ்நிலையை அணைத்து நின்றன. இவை யெல்லாவற்றையும் வலிவான தொரு மத்திய அரசால்தான் தீர்க்க முடியும் என்ற எண்ணமும் தேசியத் தலைவர்களின் நெஞ்சங்களில் புகுந்து கொண்டு அவர்களைத் தந்நிலை மறக்கச் செய்தது. இத்தனைக்கும் இடையில்தான் அவசரக் கோலமாக நமது அரசமைப்பின் " விவாதங்களும் " நடைபெற்றன.

அன்றிருந்த நிலையில், அரசமைப்புச் சட்டத்திற்கு அடிப் படையான சில கொள்கைகளை அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி, தன் கட்சி மட்டத்தில் முடிவு செய்தது. அந்த முடிவு களின் கீதத்திற் கேற்பவே, அரசமைப்புச் சபையும் நாட்டியம் ஆடிற்று. அச்சபையில், காங்கிரஸ் காரியக் கமிட்டியினுல் அங்கீகரிக்கப்பட்ட முடிவுகளுக்குப் பொருத்தமான விவாதங் கள் நடைபெற்றனவே யன்றி, சுயமான விவாதங்களினுல் அரசமைப்பு விதிகளின் இறுதிக் கொள்கைகளும் முடிவுகளும் எடுக்கப்பட வில்லை.

அரசமைப்புச் சபை சில சமயங்களில் இக்கட்டான கட்டத்தைச் சந்திக்கும் போதெல்லாம், சர்தார். வல்லபாய் பட்டேல் அவர்களும் பண்டித நேரு அவர்களும் தனித் தனியாகவோ அல்லது இணைந் தோ ஆய்ந்து முடிவெடுத்து அம்முடிவினை அரசமைப்புச் சபையில் அமுலாக்குவதற்காகப் பயன்படுத்தி உரிய பரிகாரங்களையும் செய்து வந்தனர். எனவே, அரசமைப்புச் சபையின், "விவாதங்கள் எத்துணைச் சிறப்புப் பொருந்தியதாக இருப்பினும், "வாக் கெடுப்புக்கு" வரவேண்டிய அளவிற்கு அவை சிக்கல்களைக் கொண்டதாக இருப்பினும், இறுதி முடிவெடுக்கும் உரிமை நேரு அவர்களுக்கும் பட்டேல் அவர்களுக்குமே இருந்தது.

ஆக, இன்றைய இந்திய அரசமைப்புச் சட்டம், ஒருவகையில் அன்றைய (1948—1949-ஆம் ஆண்டுகளில் இயங்கிய) "காங் கிரஸ் காரியக் கமிட்டியின் முடிவுகள்"—"பட்டேல் மற்றும்—நேரு அவர்களின் ஆலோசனைகளைக் கொண்டதொரு தொகுப்பின் விரிவாக்கம்" — என்று சொன்னுல் அது மிகையாகாது. அத் தலைவர்களுக் கிடையே நடைபெற்ற பல ஆலோசனைக் குறிப்புகள் இந்திய அரசியலமைப்பின் வடிவத்தையே மாற்றியமைக்கத்

தக்கவையாய் இருந்தும்கூட, அவை வரலாற்றுப் பொன்னேடு களிலிருந்து மறைக்கப்பட்டு, நீக்கப்பட்டுள்ளன. எந்த அரசாங்கக் குறிப்பேடுகளிலும் அவை காணப்பட வில்லை.

டாக்டர் மஜூம்தார் அவர்கள், இதுபற்றிக் குறிப்பிடும்போது,

> "அரசமைப்புச் சபையில் நடந்த விவாதங்களும், குழுக்களின் அறிக்கைகளும் மிக்க பொருள் பொதிந்தவையாயும், விளக் கங்களைக் கொண்டவையாயும் இருந்தும்கூட, மிக முக்கிய மான அடிப்படை முடிவுகளெல்லாம் அதிகாரப் பற்றின்றி, பண்டித நேரு அவர்களாலும், சர்தார். பட்டேல் அவர் களாலுமே எடுக்கப்பட்டு வந்தன என்பதை நாம் கருத்தில் கொள்ள வேண்டும். அத் தலைவர்களின் சந்திப்புக்களில் உருவான அரசமைப்புப் பற்றிய பல கொள்கை விளக்கங் களின் குறிப்பேடுகள், என்ன காரணத்தினாலோ பாதுகாக்கப் பட்டு வைக்கப்பட வில்லை. அக் குறிப்பேடுகளை யெல்லாம் மீண்டும் தற்போது தேடிப் பெற்று ஆராய முடியாது." 8

என மனம் நொந்து கூறுகிறார்.

## IV

## அரசமைப்புச் சபையின் சில முக்கிய நடவடிக்கைகள்

பிரிக்கப்படாத அடிமை இந்தியாவில் 1946-ஆம் ஆண்டில் அமைக்கப்பட்ட அரசமைப்புச் சபையின் மொத்த உறுப்பினர் கள் 389 பேர். அதில் இந்திய சமஸ்தானங்களுக்காக 93 உறுப்பினர்களும், மற்ற மாநிலப் பகுதிகளுக்கு 296 உறுப்பினர் களும் அடங்கி யிருந்தனர். அந்த அரசமைப்புச் சபை பிரிட் டானிய அமைச்சரவைத் தூதுக் குழுத் திட்டத்தின் அடிப்படை யில் உருவாக்கப்பட்டது.

1946-ஆம் ஆண்டு ஜூலை—ஆகஸ்டு மாதங்களில் மாநிலச் சட்ட மன்றங்களின் உறுப்பினர்களால் அரசமைப்புச் சபைக் குரிய 296 உறுப்பினர்கள் மறைமுகத் தேர்தல் மூலமாகத் தேர்ந்

---

8 Dr. A. K. Majumdar "Historical Introduction" to - "Indian Constitutional *Documents* - Munshi Papers" [1967] Vol II, Page XXIX.

தெடுக்கப்பட்டனர். இத் தேர்தல் முறை, தற்போது மாநிலச் சட்டமன்ற உறுப்பினர்கள் (M. L. A.) நாடாளுமன்றத்தின் மாநிலங்கள் அவைக்கு (இராச்சிய சபை) உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பதைப் போன்றதே யாகும்.

மாநிலச் சட்டமன்றங்களின் மூலமாக மத்தியச் சட்டமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட மொத்தம் 296 உறுப்பினர்களில், அரசியற் கட்சி வாரியாகக் கூற வேண்டுமெனில், காங்கிரஸ்—208; முஸ்லீம்–73; பஞ்சாப் யூனியனிஸ்டுக்கட்சி–1; யூனியன் முஸ்லீம் கட்சி—1; யூனியனிஸ்டு செட்யூல்டு கட்சி—1; கிரிஸிக் பிரஜா கட்சி—1; மற்றும் சுயேட்சைகள்—8.

நாட்டுப் பிரிவினைக்குப் பின்னர், அரசியலமைப்புச் சபையின் மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கையில் மாற்றம் ஏற்பட்டு, 235 ஆகச் சிறுத்து விட்டது.

1946–ஆம் ஆண்டு டிசம்பர் 9-ஆம் நாளில் இந்திய அரசமைப்புச் சபை, முதன் முதலாகக் கூடியது. மொத்தம் 207 உறுப்பினர்கள் மட்டுமே அதில் கலந்து கொண்டனர்.

டிசம்பர் 11-ம் தேதி பாபு ராசேந்திரப் பிரசாத் அவர்களை அரசமைப்புச் சபையின் நிலையான தலைவராகத் தேர்ந்தெடுத்தனர்.

டிசம்பர் 13-ஆம் நாளில் வரலாற்றுப் புகழ்பெற்ற 'குறிக்கோள் தீர்மானத்தை' பண்டித நேரு அவர்கள் முன் மொழிந்தார்.

அரசமைப்புச் சபையின் முதல் தொடர்க்கூட்டம் டிசம்பர் 9-ஆம் தேதி முதல் டிசம்பர் 23–ஆம் தேதி வரை நடந்தேறியது.

இரண்டாம் தொடர்க்கூட்டம் 1947-ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 20-ஆம் நாள் முதல் 25-ஆம் நாள் வரை நடைபெற்றது, 22—1—1947-இல் நேருவின் குறிக்கோள் தீர்மானம் ஒருமனதாக நிறைவேற்றப்பட்டது. இத்தொடர்க் கூட்டத்தில் ஒரு 'நடவடிக்கை நெறிக்குழுவையும் (Committee On Order of Business), வழிப்படுத்தும் குழுவையும் (Steering Committee), சிறுபான்மையினர் ஆலோசனைக் குழுவையும்' அரசமைப்புச் சபை நிறுவிற்று.

பிரிட்டானிய அமைச்சரவைத் தூதுக்குழுத் திட்டத்தின் அடிப்படையில், மத்திய அரசுக்குக் கொடுக்கப்படவேண்டிய அதிகாரங்களைத் தொகுத்தெழுத "மத்திய அதிகாரக் குழுவை" (Union Powers Committee) அரசமைப்புச் சபை நிறுவிற்று. இது மிக முக்கியமான ஒரு குழு. இக்குழு நேரு அவர்கள் தலைமையில் தனது பணியை மேற்கொண்டது.

அரசமைப்புச் சபையின் மூன்ருவது தொடர்க் கூட்டம் 22—4—1947 முதல் 2—5—1947 முடிய நடைபெற்றது. முஸ்லீம் லீக் உறுப்பினர்கள் முதலிலிருந்தே சபை நடவடிக்கைகளிற் கலந்து கொள்ளவில்லை. எனவே, அதுவரை முஸ்லீம் லீக்கிற்கு மாறுபாடான எந்தப் பிரச்சனைகளையும் அரசமைப்புச் சபை விவாதிக்கவில்லை. ஆனால் நாட்டுப் பிரிவினை உறுதியாகி விட்டபடியால், இந்தத் தொடர்க் கூட்டத்திலிருந்து அரசு அமைப்புச் சபை, தனது பணிகளை மிக வேகமாக முடுக்கிற்று.

28—4—1947-இல் மத்திய அதிகாரக் குழுவின் முதல் அறிக்கை (First Report of Union Powers Committee) அரசு அமைப்புச் சபையில் தாக்கல் செய்யப்பட்டது. பிரிட்டானியத் தூதுக்குழுத் திட்டத்தால் வகுக்கப்பட்ட முறையில் "நாட்டுப் பாதுகாப்பு," "வெளிநாட்டுக் கொள்கை" மற்றும் "செய்தித் தொடர்புகள்" ஆகிய மூன்று அதிகாரங்களை மட்டும் மத்திய அரசு பெற்று, மற்ற எல்லா அதிகார இனங்களையும், மாநிலங்களே பெறத்தக்க வகையில் மத்திய அதிகாரக் குழுவால் இந்த முதல் அறிக்கை தயாரிக்கப்பட்டிருந்தது.

ஆனால், இரண்டொரு மாதங்களில் ஏற்பட விருக்கும் நாட்டுப் பிரிவினையைக் கருதி, அப்போது மாநில சுயாட்சி முழுவதையும் நீக்கி "வலிமை கொண்ட மத்திய அரசைப் படைக்கும் ஒரு புதிய அறிக்கை" தாக்கல் செய்யப்பட இருந்ததால், "மத்திய அதிகாரக் குழுவின்" முதல் அறிக்கையை அரசு அமைப்புச் சபை விவாதிக்கவில்லை.

ஏனெனில், அக்குழுவைச் சார்ந்த திரு. கோபாலசாமி அய்யங்கார் அவர்கள் 'முதல் அறிக்கை' பற்றிய எந்த விவாதமும் அவசியமில்லை என்ற கருத்தையும் சபையில் தெரிவித்தார். அத்தோடு, எதிர்காலத்தில் வரவிருக்கும் "மிகப்

பெரிய மாற்றத்தை'' அனுசரித்து முழுமையாக மாற்றப்பட, இரண்டாவது அறிக்கை தாக்கல் செய்யப்பட இருப்பதாகவும் அன்றே அவர் சூசகமாகச் சபைக்குச் சுட்டிக் காட்டினர்.

அக்கருத்தை யொட்டி மேலும் இரண்டு தனிக் குழுக்கள் நிறுவப்பட்டன. மத்திய அரசமைப்பை நிறுவத் தேவையான கொள்கைகளை வகுத்துஅறிக்கை சமர்ப்பிப்பதற்காக,''மத்திய அரசமைப்புக் குழுவை'' (Union Constitution Committee) பண்டித நேருஅவர்களின் தலைமையிலும் மாநில அரசமைப்பை பற்றிய கொள்கைகளை வடித்து, அறிக்கை யொன்றைத் தயாரிப்பதற்காக, ''மாநில அரசமைப்புக் குழுவை'' (Provincial Constitution Committee) சர்தார். பட்டேல் அவர்கள் தலைமையிலும் உருவாக்கினர்கள்.

நான்காவது தொடர்க் கூட்டம் 14—7—1947-ஆம் தேதி முதல் 31—7—1947-ஆம் தேதி முடிய நீடித்தது. இதில் மாநில அரசமைப்புக் குழுவும், மத்திய அரசமைப்புக் குழுவும், மற்ற குழுக்களும், நாட்டுப் பிரிவினைக் கருத்தின் அடிப்படையில் வலிமை யான மத்திய அரசைச் சார்ந்த அறிக்கைகளையும் வலிமை யற்ற மாநிலங்களைச் சார்ந்த அறிக்கைகளையும் முதன் முதலாக அரசமைப்புச் சபையில் தாக்கல் செய்தன. மாநிலக் குழு அறிக்கை பற்றி,பொதுவாக விவாதம் நடைபெற்றது.தேசியக் கொடியை நிர்ணயித்த பின்னர், வேறு சில நடவடிக்கைகளுடன், அரசமைப்புச் சபை ஒத்தி வைக்கப்பட்டது.

அரசியலமைப்புச் சபையின் ஐந்தாவது தொடர்க் கூட்டம் இந்திய விடுதலைத் திருநாளின் முதல் நாளான 14-8-1947-இல் தொடங்கி 29—8—1947 முடிய நடைபெற்றது. வரலாற்றில் இடம் பெறத்தக்க பல நடவடிக்கைகள் இந்தத் தொடர்க் கூட்டத்தில் நடைபெற்றன. மாநில சுயாட்சி வீழ்ச்சியின் சோக நாடகமும்,இந்தத் தொடர்க்கூட்டத்தில் தான் முதன் முதலாகஅரங் கேற்றப்பட்டது. மத்திய அதிகாரக் குழுவினல் புதிதாக உருவாக்கப் பட்ட மாநிலத் தன்னுட்சியை அழித்தொழித்த இரண்டாவது அறிக்கையை, அரசமைப்புச் சபை விவாதித்தது.

அடுத்த நாள் நாட்டுப் பிரிவினை நாள்; அதாவது சுதந்திர நாள். அரசமைப்புச் சபை ''முழு இறைமை கொண்ட சபை'' என ''உரிமை யற்ற உறுப்பினர்களால்'' அன்று அறிவிக்கப்பட்டது. வெட்டப் பட்ட இந்தியா, காங்கிரஸ் கட்சியின் ஆட்சிக் கரங்களில் அன்றைய நடு இரவில் திணிக்கப்பட இருந்ததால், இந்திய அரசமைப்புச் சபை எந்த வகை அரசமைப்புச் சட்டத்தை வேண்டுமென்றாலும், இயற்றிக் கொள்ளலாம் என்ற ''உரிமை யினைக்'' காங்கிரசின் தயவால் அச்சபை பெற்றுக் கொண்டது.

''வலிமையான மாநிலங்கள் — வலிமையற்ற மத்திய அரசு'' என்ற பழைய கொள்கை தலைகீழாக மாற்றப்பட்டு, பிரிவினை செய்யப்பட்ட பாரதத்திற் கேற்ற(?) ''வலிமையான மத்திய அரசும் — வலுவற்ற மாநிலங்களும்'' என்ற புதுக் கொள்கை அன்று (14-8-1947) முதல் அமுலுக்கு வரலாயிற்று. அதற்கு மத்திய அதிகாரக் குழுவின் இரண்டாம் அறிக்கையே மூலமாக இருந்தது.

திரு. மௌண்ட் பேட்டன் அவர்கள் முதல் இந்தியக் கவர்னர் ஜெனரல் ஆனார். பண்டித நேரு அவர்கள் விடுதலை இந்தியாவின் முதல் பிரதமரானார். எதிர்கால இந்திய ஒற்று மையை வாழ்விக்க வந்தவரும், அதுவரை எதிர்க் கட்சியில் இருந்து காங்கிரசை எல்லா வகையிலும் எதிர்த்தவருமான சட்ட வல்லுநர், டாக்டர். அம்பேத்கார் அவர்கள், காங்கிரசிற் குள் ஈர்க்கப்பட்டு, முதல் சட்ட அமைச்சர் ஆனார்.

உண்மையான மக்களின் பிரதிநிதித்துவத்தைப் பெறாத அரசமைப்புச் சபையே, அன்று முதல் விடுதலை பெற்ற இந்திய நாடாளு மன்றமாகவும் பணியாற்றிற்று. அதாவது 14-8-1947 முதல் 26-11-1949 முடிய ஒரே சபை, அரசமைப்புச் சட்டத் தை உருவாக்கும் அரசமைப்புச் சபையாகவும் அகில இந்தி யாவை நிர்வாகம் செய்யும் எல்லாப் பொறுப்புக்களையும் கொண்ட நாடாளு மன்றமாகவும் இயங்கிற்று.

அன்று இரவு 12மணி அடித்தவுடன் இந்திய நாடு விடுதலை பெற்றது. அரசமைப்புச் சபை உறுப்பினர்கள் உறுதிமொழி எடுத்துக் கொண்டனர். அக் கூட்டத் தொடரின் இறுதி நாளான 29—8—1947–ஆம் நாளில் திரு. அல்லாடி கிருஷ்ண சாமி அய்யர், திரு. என். கோபாலசாமி அய்யங்கார், திரு பி. ஆர். அம்பேத்கார், திரு. கே. எம். முன்சி, திரு. முகம்மது சாதுல்லா,

திரு. பி. எல். மிட்டர் ( B. L. MITTAR ) மற்றும் திரு. டி. பி. கைட்டான் (D. P. KHAITAN) ஆகியவர்களைக் கொண்ட இந்திய அரசமைப்பு வரைவுக்குழு (Draft Committee), வரைவு அரசியல் சட்டத்தைத் தயாரிப்பதற்காக அமைக்கப்பட்டது. பின்னர், திரு. எஸ். மாதவராவ் அவர்களும் அக்குழுவில் சேர்த்துக் கொள்ளப்பட்டார். திரு. டி. பி. கைட்டான் இறந்ததால், அவருக்குப் பதிலாக திரு. டி. டி. கிருஷ்ணமாச்சாரி அவர்கள் வரைவுக் குழுவில் இடம் பெற்றார்.

30—8—1947-இல் சபை ஒத்தி வைக்கப்பட்டது. அன்றிலிருந்து (27—1—1948-ஆம் நாள், ஒரு நாளைத் தவிர) 4—9—1948-ஆம் நாள் வரை அரசமைப்புச் சபை கூடவில்லை.

வரைவுக் குழுவால் எழுதப்பட்ட வரைவு அரசமைப்புச் சட்டம் (Draft Constitution) 1948-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் தயாராகி, வெளியிடப்பட்டது. அதன் பின்னர் பல தனிக் குழுக்கள் நியமிக்கப்பட்டன. பல திருத்தங்கள் சேர்க்கைகள், நீக்கங்கள் அந்த வரைவுச் சட்டத்தில் இடம் பெற்றன.

மொத்தத்தில் 11 அரசமைப்புக் கூட்டத் தொடர்கள் நடைபெற்றன. 165 நாட்கள் அரசமைப்புச் சபை நடைபெற்றது. வரைவு அரசமைப்பு (Draft Constitution) மொத்தம் 315 சட்ட விதிகளையும்(Articles), 13 அட்டவணைகளையும் (Schedules) கொண்டிருந்தது. வரைவுச் சட்டத்தை விவாதிக்க மட்டும் 114 நாட்கள் ஆயின. அரசமைப்புச் சட்டத்தை உருவாக்க மொத்தம் 2 ஆண்டுகள் 11 மாதங்கள் 18 நாட்களாயின. மொத்தம் 7365 திருத்தங்கள் வைக்கப்பட்டதில், 2473 திருத்தங்கள் விவாதத்திற்கு எடுக்கப்பட்டன. **இறுதியில் 395 சட்ட விதிகளையும் 8 அட்டவணைகளையும் கொண்ட இந்திய அரசமைப்புச் சட்டம், 1949-ஆம் ஆண்டு நவம்பர் 26-ஆம் நாளில் அரசமைப்புச் சபையால் அங்கீகரிக்கப் பட்டது. 1950-ஆம் ஆண்டு சனவரி 26-ஆம் நாளில் அது அமுலுக்கும் வந்தது.**

இந்தியத் தேசியக் காங்கிரஸ் 26—1—1930-ஆம் நாளில் அதன் லாகூர் மாநாட்டில் வரலாற்றுப் புகழ்பெற்ற ''பூர்ண சுயராச்சியத் தீர்மானத்தை'' நிறைவேற்றிற்று. அதன் பின்னர் அத் தீர்மானத்தை ஒவ்வோர் ஆண்டிலும், காங்கிரஸ் கட்சியின் பல மாநாடுகளில் இந்தியா விடுதலை அடையும் காலம்

வரை தொடர்ந்து நிறைவேற்றி வந்தது. அந்த நினைவின் சின்னமாக, அதே நாளான சனவரி 26-ஆம் நாளில் (1950 ஆண்டு) இந்திய அரசமைப்புச் சட்டம் அமுலுக்கு வந்தது.

நேரு அவர்களின் குறிக்கோள் தீர்மானத்தில் முழுமையாக இடம் பெற்றதும், மத்திய அதிகாரக் குழுவின் முதல் அறிக்கையிலும், மற்ற குழுக்களின் முதல் அறிக்கைகளிலும் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட்டிருந்ததுமான முழு மாநில சுயாட்சி, பின்னர் 1947–ஆம் ஆண்டு சூன் மாதத்திற்கு மேல் சமர்ப்பிக்கப்பட்ட மேற்சொன்ன குழுக்களின் இரண்டாம் அறிக்கைகளில் முழுக்கச் சிதைக்கப்பட்டு விட்டது. 1947-ஆம் ஆண்டு மே மாதம் வரை, பேரெழுச்சியைப் பெற்றிருந்த மாநில சுயாட்சி, அதன் பின்னர் எழுதப்பட்ட அரசியல் சட்டத்தில் இடம் பெருமல், சின்னு பின்ன மாக்கப்பட்டு, 1950–ஆம் ஆண்டு சனவரி 26-ஆம் நாளில் [அரசமைப்பு அமுலுக்கு வந்த நாளில்] இந்திய மாநிலங்கள் முழு சுயாட்சி யற்றவையாய் மாற்றப்பட்டு விட்டன. மாநில சுயாட்சிக் கொள்கையும் நமது அரசமைப்புச் சபையிலும் அரசியல் சட்டத்திலும் அதன் வீழ்ச்சியினைத் தழுவிக் கொண்டது.

90 ஆண்டுகள் வளர்ந்து எழுச்சி பெற்ற மாநில சுயாட்சிக் கொள்கை 1947-ஆம் ஆண்டு மே மாதம் 15-ஆம் நாள் தொடங்கி 1947-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15-ஆம் நாளுக்குள் 90 நாட்களில் வெட்டி வீழ்த்தப்பட்டு விட்டது. அதனை அடுத்த இயலில் பார்ப்போம்.



# 15. மாநில சுயாட்சிக் கொள்கையின் வீழ்ச்சி

## — 90 ஆண்டுகளை வென்ற 90 நாட்கள் —

"(நேருவின்) குறிக்கோள் தீர்மானம் நிறைவேற்றப் பட்ட பின்னர், பல குழுக்கள் அமைக்கப்பட்டன. அவற்றில் மிக முக்கியமான ஒரு குழு, 'மத்திய அதி காரக் குழு' (Union Powers Committee) ஆகும். அக்குழு, தனது (முதல்) அறிக்கையை 1947-ஆம் ஆண்டு சூலைத் திங்கள் 4-ஆம் நாளில் தான் வெளி யிட்டது. ஆனால், அந்த அறிக்கை 1947-ஆம் ஆண்டு மே மாதத்திலேயே தயாராகி விட்டது. அந்த அறிக்கையில் இந்தியா - ஒரு சுதந்திரக் கூட்டாட்சி நாடென்றே கூறப்பட்டிருந்தது. பல மாநிலங்கள் இணைந்த ஒரு கூட்டாட்சியாகவே (Federation) இந்தியா திகழு மென்பதுதான் அதற்குப் பொருள். முழு உரிமை பெற்ற பல மாநிலங்கள் அடங்கிய கலப்பில்லாத தொரு கூட்டாட்சியை உருவாக்கு வதைத்தான் அந் நேரத்தில் நாம் விரும்பி யேற்றுக் கொண்டோம். ஆனால் இடையில் பல (எதிர்பாரா) நிகழ்ச்சிகள் நடைபெற்று விட்டன. இந்தியா துண்டாடப்பட்டது....

...திடீரென்று வலிமை மிக்க ஒரு மத்திய அரசு நமக்கு வெகு அவசரமாகத் தேவைப்பட்டது......அது நமது முதல் விடுதலைப் பட்டயத்தை(குறிக்கோள் தீர்மானத் தை) மாற்றி யமைத்ததோடு நம்மை யெல்லாம் வேறு வழியிலும் இட்டுச் சென்று விட்டது. நமக்கெல்லாம் தேவையானதும், ஏற்கனவே நம்மால் நிர்ணயிக்கப் பட்டதுமான இலட்சியத்தினின்றும் (அதாவது முழு

மாநில சுயாட்சியோடு கூடிய மத்தியக் கூட்டாட்சி என்ற இலட்சியம்) நம்மை அது வழுவிச் செல்ல வைத்து விட்டது.......''[1]

—முன்னாள் மத்திய அமைச்சர். திரு. எச். வி. படாஸ்கர்.

## I

## தோல்வியைத் தழுவிய 90 ஆண்டுகள்

1857-ஆம் ஆண்டில் வெடித்துப் பரவிய முதல் சுதந்திரப் புரட்சிக்குப் பின்னர், ஆங்கில ஏகாதிபத்தியத்தின் அரசியல் கொள்கைகள் மாற்றத்தைப் பெற்றதால் மத்திய அரசில் குவித்து வைக்கப்பட்ட அதிகாரங்கள் மெல்ல மெல்ல மாநில மட்டத்திற்குப் பரவலாக்கித் தரப்பட்டன. இந்த அதிகாரப் பரவல் முறைக் கொள்கை 1858-ஆம் ஆண்டு தொடங்கி, அரை நூற்றாண்டுக் காலம் தொடர்ந்து செயல்படுத்தப்பட்ட தால் ''மாநில சுயாட்சி'' தோன்றுவதற்குரிய நல்லதோர் அரசியல் சூழ்நிலை இந்தியத் துணைக் கண்டத்தில் ஏற்பட்டது.

அதிகாரப் பரவலாக்கத்தைப் பின்னணியாகக் கொண்டு இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்த பல சிந்தனை யாளர்களின் கருத்துக்களி னடிப்படையில் 'அரசுப் பிரதிநிதி ஆர்டிஞ்சுக் கோமகனின் பிரகடனத்தால்' மாநில சுயாட்சிக் கொள்கை முதன் முதலாக வெளியிடப் பட்டது. 'கோகலே யின் அரசியல் ஏற்பாடு' - 'காங்கிரஸ் - லீக் திட்டம்', 'பத் தொன்மரின் குறிப்பறிக்கை' மற்றும் 'இந்திய மக்களின் பொதுக் கருத்து' என்ற அரசியல் சிறப்புக் கூறுகளால் உருப்பெற்று, 1919-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தால் மாநில சுயாட்சிக் கொள்கை முகிழ்த் தெழுந்தது. சென்னை மாகா ணத்தில் நீதிக் கட்சியும், பஞ்சாப்பில் யூனியனிஸ்டுக் கட்சியும், சுயராச்சியக் கட்சியும், முகிழ்த் தெழுந்த மாநில சுயாட்சியில் சிறப்பாகத் தளிர் நடைபோட்டன.

ஆங்கிலப் பேரரசு, கடைப்பிடித்த 'பிரித்தாளும் சூழ்ச்சி யின்' விளைவாக உருவான 'முஸ்லீம் லீக்கின் வகுப்புவாதமும்' 'சுதேச மன்னர்களின் அரசியல் சிக்கலும்', 'மொழிவாரி

---

1 Constituent Assembly Debates, Vol. XI, [1949], Pp. 670-673 (இனி C. A. D. என்றே குறிக்கப்படும்)

மாநில உணர்ச்சியும்', மாநில சுயாட்சிக் கொள்கையை செம்மையுற வளர்ச்சி பெறச் செய்தன. ஆங்கில அரசால் அவ்வப்போது அளிக்கப்பட்ட பல குழுக்களின் பரிந்துரைகளும், அரசுச் சட்டங்களும் வட்ட மேசை மாநாட்டின் முடிவுகளும் மாநில சுயாட்சிக் கொள்கையின் வளர்ச்சிக்குப் பெருந் துணை செய்தன.

பின்னர் வந்த ''1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தால்'',மாநில சுயாட்சிக் கொள்கை மேலும் தழைத்துச் செழித்து வளர்ந்தோங்கிற்று. 1937-ஆம் ஆண்டில் மாநில அரசுப் பொறுப்புக்களை ஏற்றுக் கொண்ட காங்கிரசு அமைச்சரவைகளால் 'கட்டுப் படுத்தப்பட்ட மாநில சுயாட்சி' நடைமுறையில் செயல் படுத்தப்பட்டது. மாநிலங்களுக்குத் தரப்பட்ட அதிகாரங்களும் உரிமைகளும் போதாதென்று அதனைக் 'கவர்னர் சுயாட்சி' எனக் கூறி ஆட்சிப் பொறுப்பிலிருந்த காங்கிரசுக் கட்சி முழு மாநில சுயாட்சி உரிமைகளுக்காகவும், அதிகாரங்களுக்காகவும் போராடி அவை கிடைக்கப் பெருததால் நமது கண்டனக் கணைகளை அன்றைய வெள்ளையரின் மத்திய அரசின் மேல் தொடுத்து, பின்னர் அதற்காகப் பதவியை விட்டே விலகிச் சென்று விட்டன. அதனல் நடைமுறையிலிருந்த கட்டுப்படுத்தப்பட்ட மாநில சுயாட்சியும் நெடிது வளர்ந்தோங்கிற்று.

இந்தியப் பிரிவினையைத் தவிர்ப்பதற்காகப் பல அரசியல் விற்பன்னர்கள் தந்த 'வட்டாரத் திட்டங்களினுலும்', 'ஏக இந்தியாவைக்' காத்துக் கொள்வதற்காகக் காங்கிரசுக் கட்சி தந்த 'வெள்ளையனே வெளியேறு தீர்மானம்','கிரிப்ஸ் திட்டத்தை மறுக்கும் தீர்மானம்', 1945-ஆம் ஆண்டின் காங்கிரஸ் தேர்தல் அறிக்கை' மற்றும், 'அபுல்கலாம் ஆசாத் அவர்களின் அருந் திட்டம்', ஆகிய திட்டங்களினுலும், இந்திய நாட்டிற்கு விடுதலையை வழங்கிவிட முடிவு செய்த ஆங்கில அரசால் தரப்பட்ட 'கிரிப்ஸ் திட்டம்', மற்றும் 'பிரிட்டானிய அமைச்சரவைத் தூதுக்குழுத் திட்டம்' ஆகிய கொள்கைத் திட்டங்களாலும், மாநில சுயாட்சிக் கொள்கை, பேரெழுச்சியினைப் பெற்று விளங்கியது.

வருங்கால சுதந்திர இந்திய நாட்டிற்கான அரசியல் அமைப்புச் சட்டத்தை உருவாக்குவதற்காக, பண்டித நேரு அவர்களால் முன் மொழியப்பட்டு இந்திய அரசியல் அமைப்புச் சபையில் 1947-ஆம் ஆண்டு சனவரித் திங்களில் ஒருமனதாக நிறைவேற்றப்பட்ட 'குறிக்கோள் தீர்மானத்தின்' (Objective Resolution) வாயிலாக மாநில சுயாட்சிக் கொள்கை அதன் உச்சத்தையும், முழுமையையும் அடைந்தது.

பிரிட்டானிய அமைச்சரவைத் தூதுக்குழுத் திட்டத்தின் அடிப்படையில் 'பாதுகாப்பு', 'வெளி நாட்டு விவகாரங்கள்' மற்றும் 'செய்தித் தொடர்புகள்' ஆகிய மூவகை அதிகாரங்களை மட்டும் மத்திய அரசு பெற்றுக் கொண்டு, எஞ்சிய அதிகாரங்கள் உட்பட மற்றெல்லா அதிகாரங்களையும் மாநிலங்களே பெற்றுக் கொள்ளும் வகையில் 1947-ஆம் ஆண்டு ஏப்ரல் மாத இறுதியில் உருவாக்கப்பட்ட 'மத்திய அதிகாரக் குழு'வின் முதல் அறிக்கையின் மூலமாக மாநில சுயாட்சிக் கொள்கை சுதந்திர இந்திய அரசியல் சட்டத்தின் அடிப்படை அம்சமாக ஏற்றுக் கொள்ளப்பட்டும் விட்டது.

இவ்வகையில் 1858-ஆம் ஆண்டு தொடங்கி 1947-ஆம் ஆண்டு மேத் திங்கள் முதல் பகுதிவரை — ஏறத்தாழத் தொண்ணூறு ஆண்டுகளில் - மாநில சுயாட்சிக் கொள்கை முகிழ்த்து, தழைத்து, வளர்ந்து, எழுச்சி பெற்று, இறுதியாக அதன் உச்சத்தையும் அடைந்து நின்றது. இந்திய அரசமைப்புச் சரித்திரத்தில் அதன் பொற்காலத்தையும் படைத்தது. ஆனால் அம்மாநிலத் தன்னாட்சிக் கொள்கை இறுதியில் நமது இந்திய அரசமைப்பில் இடம் பெற்றதா? இல்லை. 90 ஆண்டுகள் - இறுதித் 90 நாட்களில் தம் தோல்வியைத் தழுவிக் கொண்டன.

## II

### வெற்றியை நாட்டிய 90 நாட்கள்

90 ஆண்டுக்கால வளர்ச்சியில் முழுமையை அடைந்த மாநில சுயாட்சிக் கொள்கை இந்திய நாட்டின் அரசியல் அமைப்புச் சட்டத்தில் மூலக் கூறாகப் படைக்கப்படுவதற்கு மாறாக, முற்றிலும் புதியதோர் அரசியல் சூழ்நிலை (நாட்டுப் பிரிவினை) இந்திய நாட்டைப் பற்றிக் கொண்ட காரணத்தால்,

பின்னர் முடமாக்கி ஒடுக்கப்பட்டு விட்டது. 1947–ஆம் ஆண்டு மேத் திங்கள் பதினைந்தாம் நாள் தொடங்கி, ஆகஸ்டு மாதம் பதினைந்தாம் நாளுக்குள் — அதாவது 90 நாட்களில் — மாநில சுயாட்சிக் கொள்கை, தனது முழுமையான வீழ்ச்சியினைத் தழுவிக் கொண்டது.எப்படி?

இந்திய மாநிலங்களை யெல்லாம் ஓர் உண்மையான கூட்டாட்சிக்குள் இணைத்து, 90 ஆண்டுக் கால அரசமைப்பு வரலாற்றால் தரப்பட்ட முழு மாநில சுயாட்சியினை அக் கூட்டாட்சியின் உறுப்புக்களான மாநிலங்களுக்கு ஈந்து, குறிப்பிட்ட அதிகாரங்களை மட்டும் பெற்றுக் கொள்ளும் ஒரு மத்திய அரசை அதற்கேற்ற வகையில் படைத்து, அதன் வழி 'அகண்ட நவபாரதத்தை' அமைப்பதுதான் நாட்டுப் பிரிவினையைத் தவிர்க்கும் சாலச்சிறந்த பரிகாரமென அகில இந்தியத் தேசியத் தலைவர்களாலும், அரசமைப்பு விற்பன்னர்களாலும், ஒருமுகமாக ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்தது. ஆனால், நாட்டுப் பிரிவினையைத் தவிர்க்க இயலாது என 1947 மேத் திங்களில் முடிவாகி விட்டவுடன் காங்கிரஸ் தலைவர்கள் மீண்டும் ''வலிமையான தொரு மத்திய அரசு — அடிமையாக்கப்பட்ட மாநிலங்கள்'' என்ற பழைய பத்தாம் பசலிக் கொள்கைக்குத் தாவியோடி விட்டனர். வேதாளம் மீண்டும் முருங்கை மரம் ஏறிவிட்டது.

''மிகப் பெரும்பான்மை''க் காங்கிரஸ் உறுப்பினர்களைக் கொண்டிருந்த அரசியலமைப்புச் சபையும் வலிமையான மத்திய அரசுக் கொள்கையை நோக்கி ஊசலாடிச் சென்று விட்டது.

> ''எல்லா அதிகாரங்களையுமே மைய அரசிற்கு அளிக்கக் கூடிய ஒரு 'குடியரசு' உடனே வேண்டும்.'' 2

என்கிறார், கிருஷ்ண சின்கா.

நமது முன்னாள் குடியரசுத் தலைவர், டாக்டர். இராதா கிருஷ்ணன் அவர்கள்,

> ''வலிமை மிக்க ஒரு மைய அரசு உடனே தேவை.'' 3

என்றார்.

---

2 C. A. D. Vol. V. 3. Appendix P. 88
3 C. A. D. Vol. I, P. 273

நமது இன்றைய அரசியல் சட்டத்தை உருவாக்கிய டாக்டர் அபேத்கார் அவர்கள்,

"1935–ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தால் (வெள்ளை ஏகாதிபத்தியத்தால்) உருவாக்கப்பட்ட மத்திய அரசைக் காட்டிலும், இன்னும் வலிமையான மத்திய அரசொன்று வேண்டும்." 4

என அழுத்தம் திருத்தமாக அரசமைப்புச் சபையில் வாதாடினார். இந்திய நாட்டிற்கு "கூட்டாட்சி" (Federation) என்ற பெயர்கூடத் தரப்படக் கூடாது என்றார் அவர்.

தேசியத் தலைவர்கள் என்ற சூச்சுமக் கயிற்றால் ஆட்டி வைக்கப்பட்ட பொம்மைகளான காங்கிரஸ் கட்சி சார்ந்த (அரசியலமைப்புச் சபையின்) உறுப்பினர்கள் 'வலிமையான மத்திய அரசுதான் குறை இந்தியாவை வலிவு படுத்தும்' என்ற பழைய பாட்டைப் பல புதிய ராகங்களில் பாடிக் காட்டினர்—ஒரு சிலரைத் தவிர.

காங்கிரசின் இவ்வகைத் திடீர்க் கொள்கை மாற்றத்தைப் பற்றி, தமிழகத்தின் தலைசிறந்த அரசமைப்பு வல்லனரும், அன்றையக் காங்கிரஸ் தலைவர்களில் ஒருவருமான திரு. கே. சந்தானம் அவர்கள் குறிப்பிடும்போது,

"இந்தியத் துணைக்கண்டத்தின் பிரிவினையால் ஏற்பட்ட விளைவு என்னவெனில், ஊசல் ஒரு முனையிலிருந்து எதிர்முனைக்குத் தாவிச் சென்று விட்டது. மிகக் குறைவான அதிகாரங்களைக் கொண்ட மத்திய அரசிலிருந்து, அதிக பட்ச அதிகாரங்களைக் கொண்டதொரு மத்திய அரசை நோக்கி எல்லாத் தலைவர்களும்—தலைவர்களைக் காட்டிலும் தொண்டர்களும்—விரைந்தோடிச் செல்ல விரும்பினார்கள்."5

எனத் தெளிவாக்குகிறார்.

---

4 C. A. D. Vol. I, 8, P. 101

5 Mr. K. Santhanam, "Union State Relations in India" [1963], Page-4

காங்கிரஸ் கட்சியின் கைப்பாவையாக இயங்கிய அரசியல் அமைப்புச் சபை மேற்சொன்ன புதிய மாற்றத்திற் கேற்ற வகையில் பல புதிய திருத்தப்பட்ட அறிக்கைகளைத்தயாரித்துக் கொள்ள விரும்பிற்று. எனவே அது வலிமை கொண்ட மத்திய அரசைப் படைக்கக் கூடிய சில குழுக்களையும் தோற்றுவித்துக் கொண்டது. நேருவின் தலைமையில் இயங்கி வந்த (பழைய) ''மத்திய அதிகாரக் குழுவால்'' தயாரிக்கப்பட்ட முதல் அறிக்கை யில் முழு மாநில சுயாட்சி உயர்த் துடிப்போடு மேத் திங்கள் வரை இயங்கி வந்தது. ஆனால் பின்னர் அதனை மாற்றியமைக் கும் முகத்தான் மத்திய அரசமைப்புக் குழு (Union Constitution Committee) என்ற ஒரு குழுவையும் மாநில அரசமைப்புக் குழு (Provincial Constitution Committee) என்ற பிரிதொரு குழுவை யும் முறையே பண்டித நேரு மற்றும் வல்லபாய் பட்டேல் அவர் களின் தலைமையில் அரசமைப்புச் சபை புதிதாக அமைத்துக் கொண்டது.

ஆனால், 1947-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் இறுதியில் தாக்கல் செய்யப்பட்ட 'மத்திய அரசு அதிகாரக் குழுவின்' முதல் அறிக்கை-நாட்டுப் பாதுகாப்பு, வெளிநாட்டு விவகாரங் கள், செய்தித் தொடர்புகள் ஆகிய மூன்று அதிகாரங்களையும் அவற்றின் விரிவாக்கங்களையும் மட்டும் மத்திய அரசிற்கு வழங்கி யிருந்தது. தேவை யேற்பட்டால் இன்னும் எட்டு விரிவாக்க அதிகாரங்களையும் (Extensions) மாநிலங்களின் ஒப்புதலுடன் மத்திய அரசு பெற்றுக்கொள்ள வேண்டும் என்ற கருத்தையும் அது தனது அறிக்கையில் தெரிவித்திருந்தது. அஃதாவது 1947-ஆம் ஆண்டு மேத் திங்கள் முதல் வாரத்தில், மத்திய அரசின் மூன்று அதிகாரங்களைத் தவிர மற்றெல்லா அதிகாரங்களையும் மாநிலங்களே பெறத்தக்க தொரு சூழ்நிலை இருந்தது. ஆனால் 1947-ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் மூன்றும் நாளில் ''இந்தியப் பிரிவினைத் திட்டத்தை'' ஆங்கிலப் பேரரசு பிரகடனப்படுத்தியது. பழைய பிரிட்டானிய அமைச் சரவைத் தூதுக் குழுத் திட்டமும் முழுமையாகக் கைவிடப் பட்டது. ஆங்கில அரசு பிரிவினைத் திட்டத்தை அறிவிக்கும் முன்பே மேத் திங்கள் இடையில் அப் பிரிவினைத் திட்டம் பற்றித் தேசியத் தலைவர்கள் அறிந்து கொண்டனர்,

எனவே, 'மத்திய அதிகாரக் குழு' தனது முதல் அறிக்கையைக் காங்கிரசின் புதிய கொள்கைக் கேற்ப மாற்றித் தீர வேண்டிய கட்டாயத்திற்கு ஆளாக்கப்பட்டது. உடனே, அக் குழு முற்றிலும் புதியதான தனது இரண்டாம் அறிக்கையைத் தயாரித்தது. அக் குழுவால் முன்னர் தாக்கல் செய்யப்பட்ட முதல் அறிக்கையை அரசமைப்புச் சபை விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளாமல், கை கழுவி விட்டது. அத்தோடு முழு மாநில சுயாட்சிக் கொள்கையையும் கை கழுவி விட்டது.

புதியதாக உருவாக்கப்பட்ட 'மத்திய அரசமைப்புக் குழுவும்', 'மாநில அரசமைப்புக் குழுவும்,' 'நாட்டுப் பிரிவினைத் திட்டம்' அறிவிக்கப்பட்ட இரண்டு நாட்கள் கழித்து (சூன் திங்கள் முதல் வாரத்தில்) ஒன்று கூடிக் கலந்தாலோசித்து,

> ''இந்திய அரசமைப்புச் சட்டம் ஒரு வலிமை கொண்ட மத்திய அரசுடன் கூடிய கூட்டாட்சி அமைப்பாகத் தான் இருத்தல் வேண்டும்.''[6]

என்ற புதிய முடிவிற்கு வந்தன.

இந்த இரண்டு குழுக்கள் எடுத்த முடிவின்படி, மத்திய அரசின் அதிகாரக் குழுவும் (முந்தைய குழு) தனது இரண்டாவது அறிக்கையைப் புதிதாகத் தயாரித்தது.

1947-ஆம் ஆண்டு சூலைத் திங்கள் 5-ஆம் நாளில் பழைய 'மத்திய அதிகாரக் குழுவால்' புதிதாக உருவாக்கப்பட்ட இரண்டாவது அறிக்கையை அதன் தலைவரான பண்டித நேரு அவர்கள் அரசமைப்புச் சபையில் சமர்ப்பித்து, அதன் தலைவருக் கெழுதிய இணைப்புக் கடிதத்தில்,

> ''28—4—1947-இல் எங்கள் குழுவின் (மத்திய அதிகாரக் குழு) சார்பில் முதல் அறிக்கை யொன்று அரசமைப்புச் சபையில் தாக்கல் செய்யப்பட்டது. எங்கள் குழுவைச் சார்ந்தவரான திரு. கோபால்சாமி ஐயங்கார் அவர்கள் அரசியல் சூழ்நிலையில் ஏற்படக் கூடிய மாற்றங்களைத் தொட்டுக் காட்டி, அது எங்கள் குழுவின் பரிந்துரைகளின் தன்மையையும் பாதிக்கும் எனக் கூறி, எங்கள் இரண்டாம் அறிக்

6 Mr. B. Shiva Rao, ''The Framing Of India's Constitution,'' Select *Documents*, Vol. II, 1967, P. 608

கையைப் பின்னர் தருவதற்கேற்ற அனுமதியையும் அன்றே வேண்டிக் கொண்டார்...... இப்போது நாட்டுப் பிரிவினை என்பது முடிவான உண்மையாகி விட்டது. அமைதியை நிலைநாட்ட முடியாததும், அனைத்திந்தியாவின் முக்கியமான பொது விவகாரங்களை இணைக்க முடியாததும், அகில உலக அரங்கத்தில் அழுத்தமாகப் பேச முடியாததுமான ஒரு வலி வற்ற மத்திய அரசை உருவாக்குவது இந்திய நாட்டின் நலன்களுக்குக் கேடு விளைவிப்பதாகும்...மத்திய அரசமைப்புக் குழுவினால், மேற்கொள்ளப்பட்ட முடிவைப் போலவே, நாங்களும் ஒரு முடிவுக்கு வந்துள்ளோம். நமது அரசமைப்புக் கான சீரிய வரைச்சட்டம் ஒரு வலிமையான மத்திய அரசைக் கொண்ட கூட்டாட்சி அமைப்பே யாகும்.... வரையறுக்கப் படாத எஞ்சிய அதிகாரங்கள், மத்திய அரசிற்கே தரப்பட வேண்டும் என நாங்கள் கருதுகிறோம்... இதனைக் கொள்கை யாக வைத்து 1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத் தைத் தழுவி, மூன்று நீண்ட அதிகாரப் பட்டியல்களைத் தயாரித்து இருக்கிறோம்.''7

என மாநில சுயாட்சியைப் பற்றிய 'மாநிலக் கொள்கையை' விளக்கினார்.

அந்த இரண்டாம் அறிக்கையின் இணைப்புப் பட்டியலில் 86 அதிகாரங்கள் மத்தியப் பட்டியலிலும், 58 அதிகாரங்கள் மாநிலப் பட்டியலிலும், 36 அதிகார இனங்கள் பொதுப்பட்டிய லிலும் காட்டப்பட்டிருந்தன. பின்னர் அரசமைப்புச் சட்டம் உருவாகி முடிந்தபோது மத்தியப் பட்டியலின் அதிகாரங்கள் 86-இலிருந்து 98 ஆக உயர்த்தப்பட்டன. மத்திய அதிகாரக் குழுவின் முதல் அறிக்கையில் சில அதிகாரங்கள் மட்டுமே மத்திய அரசிற்குக் கொடுக்கப் பட்டிருந்ததையும் எஞ்சிய அதிகாரங்கள் உட்பட மீதி எல்லா அதிகாரங்களும் மாநிலங்களுக்கே வழங்கப் பட்டிருந்ததையும் இங்கு நினைவு கூறத் தக்கது.

மத்திய அரசின் அதிகாரக் குழுவின் இந்த இரு அறிக்கை களில் ஏற்பட்ட அடிப்படை மாறுதல்களே,இந்திய அரசமைப்புச் சட்டத்தில் எதிர்காலத்தில் அமையப் போகும் மாநிலத் தன்னாட்சி யின் முடக்கத்தைக் கோடிட்டுக் காட்டி நின்றன. பிரிக்கப்பட்ட

---

7. Ibid, Opp, cited. Note. 6. Page. 777

இந்தியாவின் மத்திய அரசு, எல்லா அதிகாரங்களையும் பெற்று மிக்க வலிமை கொண்டதாக – உருவாக்கப்பட வேண்டும் என்று திட்டமிட்டதன் விளைவுதான் நேரு தலைவராயிருந்த மத்திய அதிகாரக் குழுவின் இரண்டாவது அறிக்கையில் ஏற்பட்ட அடிப்படை மாறுபாடு.

அதன் முதல் அறிக்கை மாநிலங்கள் முழுமையாகத் தன்னாட்சி பெறுவதற்கும், குறைந்த அதிகாரங்கள் கொண்ட மைய அரசுடன் உண்மைக் கூட்டாட்சியாக மலர்வதற்கும் வழி செய்தது. ஆனால் அது இடையில் கைவிடப்பட்டு, வலிவும் சுயாட்சியும் இல்லாத மாநிலங்கள் உருவாவதற்கும், வலிமை கொண்ட மத்திய அரசு ஏற்படுவதற்கும் நேருவின் இரண்டாவது அறிக்கை வழி செய்தது.

''மத்திய அதிகாரக் குழுவின்'' இரண்டாவது அறிக்கையின் கருத்துக்களுக் கேற்றாற் போல், முன்னர் அமைக்கப்பட்ட வேறு பல அரசமைப்புக் குழுக்களும் வலிமையான மத்திய அரசுக் கொள்கையை நோக்கி விரைந்து சென்று விட்டன. அவற்றின் பழைய அறிக்கைகளை யெல்லாம் திருத்தியமைத்து, வலிமை கொண்ட மத்திய அரசிற் கேற்ற புதிய அறிக்கைகளாக மாற்றியமைத்துக் கொண்டன.

அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியாலும், அரசமைப்பு வல்லுநர் குழுவாலும்(**Expert Committee**)முழு மனதோடு ஏற்றுக் கொள்ளப்பட்டு, இந்திய நாட்டின் முடிசூடா மன்னராக விளங்கிய **பண்டித ஜவகர்லால் நேரு** அவர்களால் 1946-ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் 13-ஆம் நாளில் முன் மொழியப்பட்ட 'குறிக்கோள் தீர்மானத்தை'—எதிர்காலத்தில் உருவாக்கப்பட விருந்த சுதந்திர இந்தியாவின் அரசமைப்புச் சட்டத்தின் கருப் பொருளாகவும், முகப்பாகவும், மூலக் கொள்கையாகவும், திகழத் தக்க வகையில் உருவாக்கப்பட்ட தீர்மானத்தை — அரசமைப்புச் சபையால் முழுமனதோடு 1947–ஆம் ஆண்டு சனவரித் திங்களில் நிறைவேற்றப்பட்ட அத் தீர்மானத்தை — 1947-ஆம் ஆண்டு மே மாதத்திற்குப் பின்னர் உருண்டோடிய 90 நாட்களில் உருத் தெரியாமல் சிதைத்தெழுதி மாற்றி யமைத்து விட்டனர்.

''நமது அரசியலமைப்பில் நாம் இனி நடைபோட விருக்கும் பாதையைக் காட்டக் கூடியது''; ''ஒரு தீர்மானம் மட்டுமல்ல, அதனினும் மேம்பட்ட ஒன்று''; ''அது ஓர் உறுதிமொழி''; ''அறுதியிட்டுக் கூறப்பட்ட முடிவு''; ''ஒரு குளுரை'';

''காணிக்கை''என்றெல்லாம் பண்டித நேரு அவர்கள் போற்றிப் புகழ்ந்து, அரசமைப்புச் சபை உறுப்பினர்கள் அத் தீர்மானத்தை ஏற்றுத்தான் தீரவேண்டு மென்று வலியுறுத்திய'அக் குறிக்கோள் தீர்மானம்', கரைபட்ட மூன்று திங்களுக்குள் கருவிலேயே அழிந்து விட்டது.

நமது இன்றைய அரசமைப்பின் முகப்பிற்கென்றே நேருவால் படைக்கப்பட்ட அத் தீர்மானம் இன்றைய அரசியல் அமைப்புச் சட்டத்தில் இருக்கும் இடம் தெரியவில்லை. ஏன்?

**அத் தீர்மானத்தில் முழு மாநில சுயாட்சிக் கொள்கையின் உயிரோட்டம் இருந்த காரணத்தினுல் தான்.**

நேருவின் குறிக்கோள் தீர்மானத்தின் இரண்டாம் பத்தியில்,

> **''மேற்சொன்ன ஆட்சிப் பகுதிகள் (மாநிலங்கள்) தற்போதுள்ள எல்லைகளுடனே, (அல்லது) அரசமைப்புச் சபை இனிமேல் வரையறுக்கும் எல்லைகளுடனே (அல்லது) பின்னர் அரசமைப்புச் சட்டத்திற் கிணங்க உருவாகும் எல்லைகளுடனே, சுயாட்சி பெற்ற மாநிலங்களாக விளங்கி எஞ்சிய அதிகாரங்களுடன் (Residuary Powers) அரசாங்க நிர்வாக அதிகாரங்கள் அனைத்தையும் பெற்றிருக்கும்.''**

என முழு மாநிலத் தன்னுட்சி அறுதியிட்டு உறுதி செய்யப்படுவதோடு அதனடிப் படையிலேயே இந்திய அரசமைப்புச் சட்டமும் உருவாக்கப்படும் என்பதும் தெளிவாகச் சுட்டிக் காட்டப் பட்டுள்ளது.

**ஆனுல் நமது இன்றைய அரசமைப்புச் சட்டத்திலுள்ள புதிய முகப்பில் மேற்சொன்ன நேருவின் குறிக்கோள் தீர் மானத்திலிருந்த முழுமையான மர்நில சுயாட்சிப் பகுதி அறவே நீக்கப்பட்டு விட்டது.**

**விடுதலை இயக்க காலத்தில் அகில இந்தியக் காங்கிரஸ் கட்சி இந்திய மக்களுக்குக் கொடுத்த பல வாக்குறுதிகளை ஆட்சிப் பொறுப்பினை ஏற்றுக் கொண்ட பின் காற்றிலே பறக்க விட்டு விட்டது. ''வயது வந்தவர்களெல்லாம் வாக்களித்துத் தேர்ந்தெடுக்கும் உறுப்பினர்களைக் கொண்டே இந்திய அரசமைப்புச் சபை உருவாக்கப்படும். கலப்பற்ற, மெய்யான கூட்டாட்சியே இந்தியாவில் அமைக்கப்படும். வெள்ளை ஏகாதி**

பத்தியத்தால் பறிக்கப்பட்ட மக்களது உரிமைகள் மீண்டும் திருப்பித் தரப்படும். மொழி, இன, பண்பாட்டிற் கேற்ற வகையில் மாநில மக்களது உரிமைகள் போற்றிக் காக்கப்படும். மொழி வழியில் மாநிலங்கள் பகுக்கப்படும். அந்தந்தத் தாய்மொழிகளுக்கு ஊறு நேராது, இந்தியக் கூட்டாட்சியில் இணைக்கப்பட்ட மாநிலங்கள் முழுமையான தன்னாட்சியைப் பெற்று விளங்கும்.'' என்பன போன்ற பல இலட்சிய உறுதி மொழிகளைத் தந்த காங்கிரஸ் ஆட்சி, அவற்றை யெல்லாம் உள்ளடக்கிய தோர் அரசமைப்புச் சட்டத்தை உருவாக்க வில்லை. விடுதலை இயக்கத்தின் புகழ் பெற்ற தலைவனாக விளங்கிய பண்டித நேரு அவர்களின் அடிப்படைத் தீர்மானமே கூட, பின்னர் அழித்தொழிக்கப்பட்டு விட்டது.

ஆக, காங்கிரசுக் கட்சியின் தலைவர்கள் தாங்கள் கொடுத்த வாக்குறுதிகளால் இந்திய அரசியலமைப்பைத் தொடுக்க உரிமை பெற்றனர். ஆனால் அதனை அவர்கள் தொடுத்த போது, கொடுத்த பல வாக்குறுதிகள் அவர்களால் பொடித்துத் தூளாக்கப்பட்டன.

இவ்வகையில் 90 ஆண்டுகளாக வளர்க்கப்பட்ட முழு மாநில சுயாட்சிக் கொள்கை குறுகிய 90 நாட்களுக்குள் வெட்டி வீழ்த்தப்பட்டு விட்டது.

அந்தத் தொண்ணூறு நாட்களில் நடந்த சோகச் சரித்திரத்தை மத்திய அமைச்சராக இருந்தவரும், மத்தியப் பிரதேச ஆளுநராயிருந்தவரும் அரசமைப்புச் சபையின் உறுப்பினராக இருந்தவருமான திரு. எச். வி. படாஸ்கர் அவர்கள், அரசமைப்புச் சபையில் நிகழ்த்திய தனது பேருரையில் எடுத்துக் காட்டும் போது,

''குறிக்கோள் தீர்மானம் நிறைவேற்றப்பட்ட பின்னர் பல குழுக்கள் அமைக்கப்பட்டன. அவற்றில் மிக முக்கியமான ஓர் குழு, 'மத்திய அதிகாரக் குழுவாகும்'. அது தன்து அறிக்கையை 4—7—1947-இல் தான் வெளியிட்டது. ஆனால் அந்த அறிக்கை 1947–ஆம் ஆண்டு மே மாதத்திலேயே தயாராகி இருந்தது. அந்த அறிக்கையில் இந்தியா, ஓர் சுதந்திரக் கூட்டாட்சி எனக் கூறப்பட்டு உள்ளது. பல மாநிலங்கள் இணைந்த கூட்டாட்சியாக

இந்தியா திகழும் என்பதுதான் அதன் பொருள். அந்த நேரத்தில் நான் ஏற்கனவே கூறியபடி முழுமையான பல மாநிலங்கள் அடங்கிய கலப்பில்லாத கூட்டாட்சி ஒன்றை உருவாக்குவதையே நாம் விரும்பி வந்தோம் என்பது நம் எல்லாருடைய ஒருமுகமான எண்ணம் ஆகும். ஆனல் இடையில் பல நிகழ்ச்சிகள் நடைபெற்று விட்டன. இந்தியா பிரிக்கப்பட்டது. நாம் நமது பணியைத் தொடங்கி " இந்திய விடுதலையின் பட்டயம் " என்று அழைக்கப்பட்ட தீர்மானத்தையும் நிறைவேற்றிய பின்னர் தான், மேற் சொன்ன நிகழ்ச்சிகள் நடந்தன. ......ஒருக்கால் இந்த நிகழ்ச்சிகள் இடையிலே ஏற்படாமல் இருந்திருந்தால் மாநிலங்களின் விஞ்ஞான ரீதியான—முறையோடு கூடிய—முழுமையான கூட்டாட்சியாக அமைக்கும் நமது முதல் திட்டத்தையே நாம் வைத்துக் கொண்டிருந்திருப்போமோ என்னவோ? ஆனல் இந்த நிகழ்ச்சிகள்......நமது கண்ணேட்டத்தை அதிகமாகப் பாதித்து விட்டன. நமது பணிகளையும் பாதித்து விட்டன. எதிர்பாரா வகையில் குறுக்கிட்ட நிகழ்ச்சிகள், ஓரளவிற்கு நமது தூரநோக்கை மங்கச் செய்து விட்டன. திடீரென்று நமக்கு வலிமை மிக்க ஒரு மைய அரசு வெகு அவசரமாகத் தேவையாகி விட்டது... ஆனல், இடையிலே குறுக்கிட்ட நிகழ்ச்சிகள், பிரிவினையால் ஏற்பட்ட சோகச் சம்பவங்கள் இவையெல்லாம் நமது முதல் விடுதலைப் பட்டயத்தை (நேருவின் குறிக்கோள் தீர்மானம்) மாற்றியமைக்க — நம்மையெல்லாம் வேறு வழியில் இட்டுச் சென்றதோடு, நமக்கெல்லாம் உரியதும் நம்மால் ஏற்கனவே நிர்ணயிக்கப் பட்டிருந்ததுமான நமது இலட்சியத்தினின்றும் (முழு மாநில சுயாட்சியோடு கூடிய மத்தியக் கூட்டாட்சி), நம்மை வழுவிச் செல்ல வைத்து விட்டது...... அதன் முடிவு மாநிலங்களின் சுயாட்சியே—ஓர் பயங்கரமான அபாயமாகக் கருதப்பட்டது. நாம் கூட்டாட்சியின் உருவத்தை மட்டும்தான் வைத்துக் கொண்டோமே யன்றிக் கூட்டாட்சியின் சத்தையும் உட்பொருளையும் மாற்றி விட்டோம். (உண்மையான கூட்டாட்சி யென்ற) கருத்துடன் தான் மாகாணங்களின் பெயர்களைக் கூட, நாம் மாநிலங்கள் என்று மாற்றினேம். ஆனல் மாநிலங்கள் என்ற பெயர் தான் இப்போது உள்ளனவே யன்றி—மாநிலங்

களின் அதிகாரங்கள் எந்த அளவிற்குக் குறைக்கப்பட்டு உள்ளன என்ருல் இனிமேல் அவற்றை 'மாநிலங்கள்' என்று அழைப்பதே கூடத் தவருக வழங்கும் பெயராகி விடும்.'' 8

எனக் கூறி மாநில சுயாட்சியின் வீழ்ச்சிக்காகக் கண்ணீர் விடுகிருர். ஆக 90 ஆண்டுகளை, கரைபட்ட 90 நாட்கள் வென்று விட்டன.

## III

## வரலாறு திரும்பும்

இறைமையற்ற அரசமைப்புச் சபையில் இந்தியப் பொது மக்களால் முறையோடு — நேரடியாகத் — தேர்ந்தெடுக்கப் படாத "பொம்மைக்" காங்கிரஸ் உறுப்பினர்களைப் பெரும் பான்மையாகப் பெற்றிருந்த ஒரே காரணத்தினுல், காங்கிரஸ் கட்சி ஏதேச்சாதிகாரப் பாணியில் தான் நினைத்தபடி யெல்லாம் இன்றைய அரசமைப்புச் சட்டத்தை உருவாக்கி வைத்துக் கொண்டது. அரசமைப்பு வரலாற்றில் 90 ஆண்டுக்கால வளர்ச்சியைப் பெற்றிருந்த முழு மாநில சுயாட்சியினை இந்தியச் சுதந்திரத்திற்கு (1947 ஆகஸ்டு 15)ப் பின்னர் அரசமைப்புச் சபையில் அடியோடு அழித்தொழித்தும் விட்டது. அரைகுறை யான அதிகாரங்களை மட்டும் மாநிலங்களுக்கு வழங்கி, மற்ற எல்லாப் பேரதிகாரங்களையும் மத்திய அரசிற்குத் தந்து, முடமானதோர் கூட்டாட்சியையும் நமது அரசமைப்பில் உருவாக்கி வைத்து விட்டது.

ஆனல் மாநில சுயாட்சி அடியோடு வீழ்த்தப்படுவதற்கு முன்னர், சில அவலக் குரல்களும், அரசமைப்புச் சபையில் ஒலித்தன. அந்த அவலக் குரல்கள் அமைதியாகத்தான் ஒலித் தன. ஆனுல் அவை வீரத்தோடும் தீர்க்க தரிசனத்தோடும் விளங்கின.

எதிர்க்கட்சியைச் சார்ந்திருந்த, திரு. சோமநாத்லாகிரி அவர்கள் நேருவின் குறிக்கோள் தீர்மானத்தின் மூன்ரும் பத்திக்கு ஒரு திருத்தத்தைக் கொண்டு வந்தார். "வேண்டும்

8 Ibid. Opp. cited. Note. 1

போது அனைத்திந்தியாவிலிருந்து, மாநிலங்கள் பிரிந்து போகக் கூடிய உரிமையை'' பெறத்தக்க வகையில் அத்திருத்தம் அமைந் திருந்தது.

இந்தியத் துணைக்கண்டத்தின் பல மொழி–பல இனங்கள் சார்ந்த தனித்தனி நாடுகள் இணைக்கப் பட்டிருந்தமையால் மொழித் தேசிய அடிப்படையில்தான் அந்தந்த மாநிலப் பகுதி கள் இயங்க வேண்டும் என்பது கம்யூனிஸ்டுக் கட்சி அன்று ஏற்றிருந்த தனித் தேசியக் கொள்கையாகும். ரஷ்ய நாட்டின் மாதிரியாக இந்தியத் துணைக் கண்டத்தின் தனி நாட்டுப் பகுதி களும் மாநிலங்களாகி, அவை வேண்டும் போது பிரிந்து செல்வதற்குரிய உரிமைகளைப் பெற வேண்டும் என்ற அன்றை யக் கம்யூனிஸ்டுக் கட்சி ஏற்றுக் கொண்ட சித்தாந்தத்தின் அடிப்படையிலேயே லாகிரி அவர்களும் தனது திருத்தத்தைக் கொண்டு வந்தார்.9

இந்திய முஸ்லீம் லீக் உறுப்பினர்களான கே. டி. எம். அகமது இப்ரகீம் மற்றும் பி. போக்கர், ஆகியோர் காயிதேமில்லத் முகம்மது இஸ்மாயில் அவர்கள் தலைமையில் அரசமைப்புச் சபையில் இயங்கினர். அவர்கள் மாநிலத் தன்னாட்சி உரிமை பற்றி வலிவான தனது வாதங்களை நிலைநாட்டினர்.

> ''கூட்டாட்சி அமைப்பு முறையே நமது அரசியல் சட்டத்தின் திட்டமெனச் சொல்லப்பட்டாலும், உண்மையிலும், நடை முறையிலும், அது ஒருமுக ஆட்சியைக் கொண்ட அமைப் பாகவே உள்ளது. அது நாட்டின் மேல் இனி திணிக்கப்பட விருக்கிறது.''10

என்றார், திரு. அகம்மது இப்ரகீம் அவர்கள்.

திரு. போக்கர் சாயபு அவர்கள், அரசமைப்புச் சபையின் மாநில சுயாட்சியை அழித்தொழிக்கும் முயற்சியையும் எல்லா அதிகாரங்களையும் மத்திய அரசில் குவிக்கக் கூடிய தன்மை யையும்,

---

9 Mr Somanath Lahiri, C.A.D., Vol, I, 9, P 136

10 Mr, K.P.M Ahamed Ibrahim, C A D Vol, VII, 28, Pp, 1120 - 1121

''சர்வாதிகாரத்துக்குச் சமமானது'' என்ருர்.

தன்னுட்சியினை மாநிலங்களுக்கு அளிப்பதால் இந்தியா சிதறிப் போய்விடும் என்ற கருத்தினை வெறும் சத்தற்ற வாதம் எனவும்,மாநிலங்களின் மேல் பேராண்மை செலுத்தும் அதிகாரங்களைப் பெற்ற மைய அரசால் தான் இந்திய ஒருமைப்பாடு காக்கப்படும் என்ற கோட்பாட்டைத் தகர்க்கும் வகையிலும் தமிழகத்தைச் சார்ந்த திரு. கே. சந்தானம் அவர்கள்,

> ''நாட்டிற்கு ஒரு வலிவான அரசு வேண்டுமென்பது தான் என்னுடைய ஆசையுமாகும். ஆனுல் 'மத்திய அரசின் வலிமை' என்பதற்கு நான் சொல்லும் பொருள் 'மத்திய அதிகாரக் குழு' வின் அறிக்கையினுல் சொல்லப்படும் பொருளுக்கு மாருனதாகும். எல்லாவற்றிற்கும் மத்திய அரசே பொறுப்பு ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதை நான் விரும்பவில்லை. மாநிலங்களில் வாழும் மக்களது நலனுக்கான முதல் தரப் பொறுப்புகள் யாவும், மாநில அரசுகளுடனேயே இருத்தல் வேண்டும். வரையறுக்கப்பட்ட அகில இந்திய இனங்களில் மட்டுமே மத்திய அரசின் நடவடிக்கைகளும் பொறுப்புகளும் இருக்க வேண்டும். ஆகவே. அகில இந்தியக் காரியங்களுக்குப் போதுமான அதிகாரங்களுடன், அனைத்திந்திய நலன்களைச் சாராததும் ஆனுல் உண்மையில் மாநிலத் துறைக்கே சேர்த்தப்பட வேண்டியதுமான அதிகார இனங்களில் மத்திய அரசு பொறுப்பேற்காமல்,விடுதலை பெற்றதாக இருக்கும் தன்மையில் தான் மத்திய அரசின் வலிமை உள்ளது என நான் கருதுகிறேன்.''[12]

என்ருர்.

திரு. ஓமஸ் குமார்தாஸ் அவர்கள்,

> ''மாநிலங்களை முடமாக்கி மத்திய அரசை வலுப்படுத்துவது சரியான கொள்கை யல்ல.''[13]

என வாதிட்டார்.

---

11 Mr B. Pocker Sahib. C.A.D., Vol. VII, 29, 1129

12 Mr. K. Santhanam, C A D Vol, V, 3, P. 54

13 Mr. Omes Kumar Das, C A D Vol, V, 4, P.94

சர். ஏ. இராமசாமி முதலியார் அவர்கள்,

> "ஒரு வலிமையான மத்திய அரசை இங்கு யாருமே மறுக்க வில்லை. ...அப்படி யிருந்தும், மாநில சுயாட்சியினைப் பற்றிய சில குரல்கள் கேட்கின்றன, ...மிக அமைதியான குரல்கள் தான் – ஆனல் வீரியமிகு குரல்கள். இந்த ஆய் பொருளுக்கு (வலிமை மிக்க மத்திய அரசுக் கொள்கைக்கு) எதிரானதும், இந்தச் சிறப்புமிகு மாமன்றத்தால் பாராட்டப்பட வேண் டியதுமான வேறு ஒரு சிறப்புக் கூறும் (மாநில சுயாட்சி) இருக்கின்ற காரணத்தினுல் தானே என்னவோ, அக்குரல்கள் ஒரு வேளை அஞ்சாமையைக் காட்டுகின்றதோ?"14

என அரசமைப்பு அவையில் எழுந்த மாநில சுயாட்சியின் வலிவான கோரிக்கைக் குரல்களைப் பற்றி மறைமுகமாகவும் அழுத்தமாகவும் கூறினுர்.

திரு. எச். என். குன்சுரு அவர்கள்,

> "மத்திய அரசிற்கு முழுமையான அதிகாரங்களை வழங்கிவிட வேண்டும் என்ற நமது பேராசையினுல், மாநில அரசுகளை மத்திய அரசின் அடிமைகளாக ஆக்கக் கூடிய 'நெருக்கடி நிலை' பற்றிய விதிகளைச் செய்யும் அளவிற்கு நாம் செல்லக் கூடாது." 15

என வாதிட்டார்.

மாநில சுயாட்சியில் மத்திய அரசு தலையிடக் கூடிய விதிகள் விவாதத்திற்கு வந்த போதெல்லாம்,

> "அது அரசமைப்புத் தத்துவத்திற்கே முரணுனதாகும்." 16

என, எச். வி. காமத் அவர்கள் கடுமையாக வாதிட்டார்.

திரு. பி. டி. சாக்கோ அவர்கள், வலிமைபெற்ற மத்திய அரசைப் பற்றி விமரிசிக்கும்போது அதை "கொடுமைக்காரியான மாமியாருக்கு" ஒப்பிட்டார். மேலும் அரசமைப்பு அவையில்

---

14 Dr. A. Ramaswamy Mudaliar, C A D Vol. V, 4, Pp80—81
15 Mr. Hridaynath Kunzru, C A D Vol. VIII, 28, P. 1123
16 Mr H. V. Kamath, C A D Vol IX, 4, P. 138

உருவாக்கப்பட்ட நமது அரசமைப்புச் சட்டத்தைப் பற்றி அவர் குறிப்பிடும்போது,

**"நாம் உருவாக்கி யிருப்பது கூட்டாட்சியின் வெறும் உருவத்தைத்தான். உண்மையில் அது ஓர் ஒற்றையாட்சி அரசமைப்பாகும். எல்லா அதிகாரங்களும் மைய அரசின் நாடாளுமன்றத்திற்கே தரப்பட்டுள்ளன. உண்மையில் மாநிலச் சட்டமன்றங்களுக்கு எந்த அதிகாரமும் தரப்படவில்லை."** 17

எனக் கூறினர்.

**திரு. கே. டி. ஷா** அவர்கள் அதிகாரங்களை யெல்லாம் மத்திய அரசிடம் குவிப்பதைப் பற்றிக் கூறும்போது,

**"அளவுக்கதிகமாகவும் தேவையற்ற முறையிலும், அதிகாரங்கள் மைய அரசிற்கு வழங்கப்படுகின்றன" எனவும் "அந்தப் போக்கு இந்திய மாநிலங்களுக்கு எதிரிடையானது மட்டுமல்லாமல் அரசியல் சட்டத்தில் நாம் ஏற்றி வைத்திருக்கிறோம் என்று எல்லாரும் பெருமைப் படக் கூடிய குடியரசுத் தத்துவத்திற்கே முரணானதாகவும் இருக்கிறது."**

எனவும் சுட்டிக் காட்டினர்.

அவர் மேலும் கூறியதாவது,

**"தற்போதைய உறுப்புக்களாக இருக்கும் மாநிலங்களின் பெயர்களையோ, எல்லைகளையோ, பரப்புக்களையோ, மாற்ற வேண்டிய பிரச்சனைகள் வந்தால் அதனால் பாதிக்கப்படும் மக்களிடமிருந்தே முதன்மையாக அவ்வகைக் கோரிக்கைகள் வர வேண்டுமே யல்லாது, மத்திய அரசின் ஆட்சி பீடத்திலிருந்து அக்கோரிக்கை செல்லலாகாது. ஏனெனில் அந்தந்தப் பகுதிகளினுடைய நிலைமைகள் மத்திய அரசின் அதிகாரப் பீடத்திற்குத் தெளிவாகத் தெரியாது. மத்திய அரசு விதிக்கும் வழி முறைகளுக்கு மாறுபாடான ஒரு**

---

17 Mr. P. T. Chacko, C A D Vol. IX. 7. P 745

கண்ணோட்டமும், எண்ணங்களும், அந்தந்தப் பகுதியில் இருக்கலாம்.'' 18

என மாநில மக்களினுடைய சுயாட்சி உரிமைகளைத் தெளிவாக்கினார்.

பேராசிரியர். என். ஜி. ரங்கா அவர்கள்,

''அதிகாரங்களை ஒருமுகப்படுத்தி மத்திய அரசை வலுப்படுத்துவதினால் ஏற்படக் கூடிய விளைவுகள் என்னவெனில், மத்திய அரசின் செயலகத்திற்கே அந்த அதிகாரங்கள் தரப்படுகின்றன. உண்மையில் அவை மத்திய அரசிற்குக் கிடைப்பதில்லை. மத்திய அரசு செயலகத்திலிருக்கக் கூடிய தபேதாரிலிருந்து அரசுச் செயலர் வரை ஒவ்வொருவரும் மாநில முதலமைச்சர்களைக் காட்டிலும், தாங்களே மிக முக்கியமான நபர்கள் எனக் கருதிக் கொள்வார்கள். மத்திய அரசின் கருணை நோக்கினைப் பெறுவதற்காக, மத்திய அரசின் ஓர் அலுவலகத்திலிருந்து இன்னோர் அலுவலகத்திற்கு மாநிலங்களின் மாண்புமிகு முதலமைச்சர்கள் சுற்றித் திரிய வேண்டியிருக்கும். ...மத்திய வல்லாட்சியின் கருணைக்கும் மத்திய அரசின் செயலகத்தின் அருள் நோக்கிற்கும் காத்துக் கிடக்கத் தக்க வகையில் மாநில முதல்வர்களை அடிமையாக்குவது மிக ஆபத்தான ஒன்றாகும்.'' 19

என மாநில அரசுகளின் தன்னாட்சி இழந்த பரிதாப நிலையைச் சுட்டிக் காட்டினார்,

மநிலங்கள் தத்தம் நிதி மூலங்களுக்காக மத்திய அரசை அண்டிக் கிடக்க வேண்டிய அவல நிலையைப் பற்றித் திரு. கே. சந்தானம் அவர்கள் குறிப்பிடும்போது,

''மத்திய அரசின் வாயிற்படியில் நின்று பிச்சை கேட்கும் பிச்சைக்காரர்களாக, மாநிலங்களாகி விடும்.'' 20

என விளக்கினார்.

---

18 Prof. K.T. Shah, C A D Vol. VII, 7, P. 438
19 Prof. N. G Ranga, C A D Vol. VII, 5, P. 350
20 Mr. K. Santhanam, C A D Vol. V, 3, P. 55

திரு. விசுவநாதத்தாஸ் அவர்கள் மாநிலங்களின் கீழான நிலையைப் பற்றிக் குறிப்பிடுகையில்,

> ''மத்திய அரசுச் செயலகத்தின் வடபுற 'பிளாக்கில்' (North Block) நிற்கும் தர்மக் குழந்தைகளைப்போல் (Charity Boys) மாநிலங்கள் நடத்தப்படும்,''21

என்றார்.

மாநில சுயாட்சியின் வீழ்ச்சியைப் பற்றி அன்றைய அரசமைப்புச்சபை உறுப்பினர்களிற் சிலர் விடுத்த எச்சரிக்கைகள் எத்துணைத் தீர்க்க தரிசனமான உண்மைகள் என்பதைக் காலம் காட்டிவிட்டது.

அன்று ஒலித்த மாநிலத் தன்னாட்சியின் சில அவலக் குரல்கள் கால் நூற்றாண்டுக்குப் பின்னர் இன்றைய இந்திய நாட்டின் தீவிர அரசியல் முழக்கங்களாக மாறிவிட்டன.

காலச் சக்கரம் சுழல்கிறது.. ...வரலாறு திரும்பும்.

மாநில சுயாட்சியும் மலரும்!



21 Mr. Viswanatha Das, C A D Vol, IX, 6, P 207

## மூன்றும் பகுதியின் தோற்றுவாய்

நமது இன்றைய அரசமைப்புச் சட்டம் ஒரு கூட்டாட்சி அரசமைப்பினையே (Federal Constitution) உருவாக்கியுள்ளது எனக் கூறுகின்றனர். ஆனால், உண்மையில் அதில் ஒற்றையாட்சிப் போக்குகளே (Unitary Trends) மிகுதியாக உள்ளன என்பதை யாரும் மறுக்க முடியாது. ஓர் உண்மைக் கூட்டாட்சி நாட்டில், அதன் உறுப்புக்களான மாநில அரசுகளும், அவைகளை இணைக்கும் மத்திய அரசும் சமத்துவ அடிப்படையில் தான் இயங்க வேண்டும். ஒன்றின் அதிகார வட்டத்தினுள் இன்னொன்று தலையிட்டு ஆதிக்கம் செலுத்துவதற்கு, அரசமைப்புச் சட்டம் இடந்தரலாகாது.

ஆனால், சட்டமியற்றுத் துறை, நிர்வாகம், மற்றும் நிதித்துறை ஆகியவைகளைப் பொறுத்த மட்டிலும் மாநிலங்களின் வரையறுக்கப்பட்ட அதிகாரங்களில் மத்திய அரசு ஒரு தலைப்பட்சமாக ஊடுருவி, அவற்றை ஆக்கிரமித்துக் கொள்வதையே நமது அரசமைப்பில் பெரிதும் நாம் காண்கிறோம். மேலும் மத்திய – மாநில அரசுகளின் அதிகாரங்களின் பங்கீட்டிலும் கூட நமது அரசமைப்புச் சட்டத்தின் தராசு முனை, மத்திய அரசின் பக்கமே அதிகமாகச் சாய்ந்து நிற்கின்றது.

மாநில அரசுகள் மத்திய அரசிற்குக் கட்டுப்பட்டு நடப்பதோடல்லாமல், கீழ்ப்படிந்தும் நடக்க வேண்டிய நெறி முறைகளை, நமது அரசமைப்புச் சட்டம் வகுத்து வைத்துள்ளது. இந்திய அரசமைப்புச் சட்டத்தில் மாநிலங்களுக்குத் தனித்தொதுக்கப்பட்ட அரசாங்க அலுவல்களில் கூட, மத்திய அரசு, நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ மேலாண்மை செலுத்துகின்ற சூழ்நிலைகளையும் மாநில நிர்வாகத்தின் பல முக்கியமான அதிகார இனங்களில் மத்திய அரசு, தன் அடக்குமுறையைச் செலுத்தத் தக்க வாய்ப்புக்களையும் மத்திய அரசு விரும்பினால் மாநிலங்களின் முழு நிர்வாகத்தையும் செயலற்றதாக்கும் தன்மையையும் பெற்றுக் கொண்டுள்ளது.

அவைகளை ஆயுதமாகக் கொண்டு, மாநிலங்களையெல்லாம் அடக்கி ஒடுக்கி, அவற்றின்மேல் (ஒற்றையாட்சி முறையில்)

மேலாதிக்கத்தைச் செலுத்தி வருகிறது இந்திய மத்திய அரசு. அதன் விளைவாகத் தற்போதைய மாநிலங்களில் முழு சுயாட்சி நடைபெறுவதில்லை.

கூட்டாட்சி நாடுகளில், மத்திய நாடாளு மன்றத்திற்கும் மாநிலச் சட்ட மன்றங்களுக்கும் இடையிலுள்ள சட்டமியற்றும் உறவுகள் தான், மத்திய - மாநில அரசுகளுடைய மற்றெல்லா அதிகார உறவுகளையும் நிர்ணயிக்கின்றன. ஏனெனில், ஒரு மாநில அரசினுடைய ஆட்சி செய்யும் (நிர்வாகம் செய்யும்) அதிகாரத்தின் அளவு, அதன் சட்டமியற்றும் அதிகாரத்தை ஒட்டியே, பொதுவாக அமைகின்றது. அதாவது மாநிலங்கள் எந்த அளவிற்குச் சட்டமியற்றும் அதிகாரத்தைப் பெறுகின்றனவோ, அதே அளவெல்லைக்குள் தான், அவற்றின் நிர்வாக அதிகாரமும் இயங்க முடியும். இதனைத்தான்,

> ''மாநிலத்தினுடைய நிர்வாக அதிகாரம் - அதனுடைய சட்டமியற்றும் அதிகாரத்துடன் இணைந்த அளவினதாகும்.''
> —(சட்ட விதி 162).

என, நமது அரசமைப்புச் சட்டம் கூறுகிறது.

எனவே, மாநில அரசுகளுடைய சட்டம் செய்யும் அதிகாரங்களே, அதன் மற்றெல்லா அரசதிகாரங்களுக்கும் அடிப்படையாக அமைந்துள்ளதென்பது தெளிவாகப் பெறப்படுகிறதல்லவா?

கூட்டாட்சி நாட்டில் அதன் அரசமைப்பே முதன்மையானது. அதனினும் தலையாயது அந்நாட்டின் தலைமை நீதிமன்றம். நம் நாட்டில் மத்திய - மாநிலத்திற்கு இடையே ஏற்படும் தகராறுகளை இந்தியத் தலைமை நீதிமன்றமே (Supreme Court of India) தீர்த்து வைக்கிறது. அரசமைப்புச் சட்ட விதிகளை ஆய்ந்து நோக்கி, அப் பிணக்குகளின் மூலத்தைச் சமநோக்குடன் கண்டறிந்து, உரிய தீர்ப்பினை அந்நீதி மன்றமே வழங்குகிறது. அஃதாவது, மத்திய அரசும் — மாநில அரசுகளும், சம தகுதியைக் கொண்ட வாதி பிரதிவாதிகள் என்றுதான் நீதிமன்றம் கருதுகிறது. அதற்கேற்றபடியே அரசமைப்புச் சட்டவிதிகளையும் அது வியாக்கியானப் படுத்திக் கொள்கிறது. மேலும் நீதிமன்றம் வழங்கிய தீர்ப்புக்கள் மத்திய அரசையும் மாநில அரசையும் ஒரே அளவில் கட்டுப்படுத்து

கின்றன. எனவே, கூட்டாட்சி அரசமைப்பு முறையில் மத்திய அரசும், மாநில அரசுகளும் சமநோக்குள்ள இரு கண்கள் போன்றவை.

ஆனால், நமது அரசமைப்புச் சட்டத்தில் இவ்விரு அரசுகளும் (மத்திய அரசும் மாநில அரசுகளும்) சம உரிமையையும் சமதகுதியையும் பெறவில்லை. உண்மையில் மத்திய அரசின் காலடியின் கீழ் மாநில அரசுகள் மிதி பட்டுக் கிடக்கின்றன. சட்டத் துறையிலும் ஆட்சித் துறையிலும் நிதித்துறையிலும் மற்ற அரசியல் உறவுகளிலும், மாநிலங்கள் மத்திய அரசையே பெரிதும் அண்டிப் பிழைக்கத்தக்க அவலநிலையைத் தான் பெற்றுள்ளன. வேறு கூட்டாட்சி நாடுகளிலுள்ள மாநிலங்களைக் காட்டிலும், இந்திய மாநிலங்கள் எல்லா வகையிலும் மத்திய அரசிற்கு அடிமைப்பட்டுக் கிடக்கின்றன. எனவே, அவை முழு மாநில சுயாட்சியின்றி வளம்பெற முடியா நிலையில் தவிக்கின்றன. ஆக, நமது அரசமைப்புச் சட்டத்தில் பெயரளவில்தான் மாநிலத் தன்னாட்சி இடம் பெற்றுள்ளது என்பது வெள்ளிடை மலை.

இப்பகுதியில் சட்ட வல்லுனர்களைப் போல் அரசமைப்புச் சட்டத்தின் எல்லா நுணுக்கங்களையும் ஆய்வது நமது நோக்கமல்ல. நமது அரசியல் சட்டத்தின் ஒவ்வொரு விதியைப் பற்றியும் பல வியாக்கியான விளக்கங்களுடன் தனிக் கட்டுரைகள் எழுதத் தக்க அளவிற்கு அவை மிக மிக நுட்பமாகப் படைக்கப் பட்டுள்ளன. அந்த வறட்சி கொண்ட சட்டத் தத்துவங்களின் ஓட்டத்தை எடுத்து விளக்குவது மல்ல நமது நோக்கம். மாநில சுயாட்சி எப்படிக் கொள்ளை போகின்றது; மாநிலங்கள் எப்படி அடிமையாக்கப் பட்டுள்ளன என்பதை யெல்லாம் தக்க ஆதாரங்களுடன் நிலை நிறுத்துவதற்குத் தேவையான சட்ட விதிகளை மட்டும் இப்பகுதியில் நாம் ஆய்வுக்கு எடுத்துக் கொண்டுள்ளோம். இந்திய அரசியலமைப்பிலுள்ள மத்திய – மாநில உறவுகளைச் சார்ந்த சில முக்கியப் பகுதிகளையும் (Parts) சட்ட விதிகளையும் (Articles) மட்டும் தனித்தனியாகப் பிரித்தெடுத்து, இயன்ற வரை எல்லாருக்கும் புரியும் வகையில் அவைகளை எளிமைப்படுத்தி, மாநில சுயாட்சி பற்றிய ஆய்வுக்கேற்ற வகையில் அவைகளைக் கோர்வையான தொரு தொகுப்பாக்கித் தந்துள்ளோம். அவை, வேற்று நாட்டு அரசமைப்புச் சட்ட விதிகளோடும் ஆங்காங்கே ஒப்பாய்வு செய்யப்பட்டுள்ளது.

நமது அரசியலமைப்பை ஆழ்ந்து படித்து, ஆய்வு செய்யச் செய்ய, அது மாநிலங்களின் உரிமைப் பட்டயமல்ல என்பது தெளிவாகிறது. மாருக, அது மாநிலங்களின் ஓர் அடிமைச் சாசனம் என்றே நிலை நாட்டப்படுகிறது. இது வெறும் உயர்வு நவிற்சியல்ல; ஒரு தலைப்பட்சமான முடிவுமல்ல; சட்ட விதிகளால் நிலை நிறுத்தப்பட்ட பேருண்மை.

நமது அரசியல் சட்டம், கூட்டாட்சி நாட்டின் அரசமைப்பா? அல்லது மாநிலங்களின் கொத்தடிமைச் சாசனமா? என்பதை இனிவரும் இயல்களில் பரிசீலிப்போம்.



# 1. அடிமை இந்தியாவின் அரசுச் சட்டமே — விடுதலை இந்தியாவின் — அரசியல் சட்டம்

"1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தின் பெரும்பான்மையான பகுதிகள், நமது அரசமைப்பில் அப்படியே தரப்பட்டுள்ளன...... அப்படிக் காப்பியடிப்பதற்கு நாம் வெட்கப்படத் தேவையில்லை. அதை, ஒரு கருத்துத் திருட்டு என்று யாரும் கருதிக் கொள்ளக் கூடாது. அரசியல் சட்டத்தின் அடித்தளமான கருத்துக்களில் தனிப்பட்ட பதிப்புரிமை, யாருக்கும் கிடையாது." 1

— டாக்டர். அம்பேத்கார் அவர்கள்.

## I

1947-ஆம் ஆண்டு, ஆகஸ்டுத் திங்கள் 15-ஆம் நாளில் இந்தியத் துணைக் கண்டம் விடுதலை யடைந்தது. 1950-ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 26-ஆம் நாளில் அது "ஓர் இறைமை கொண்ட குடியரசு நாடாக" (A Sovereign Democratic Republic) மலர்ந்தது. அதாவது "இந்திய அரசியலமைப்புச் சட்டம்" அமுலுக்கு வந்தது.

1946-ஆம் ஆண்டு, டிசம்பர்த் திங்கள் 9-ஆம் நாளில் இந்திய அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்குவதற்காகக் கூடிய இந்திய அரசியலமைப்புச் சபை நீண்ட நெடிய நமது அரசியலமைப்புச் சட்டத்தைத் தயாரித்து 1949-ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 11-ஆம் நாளில் அரசியலமைப்புச் சபையின் முழு ஒப்புதலையும்பெற்று, தலைவரின் கையெழுத்தோடுநிறைவேறியது. 1950-ஆம் ஆண்டு ஜனவரி 26-ஆம் நாளிலிருந்து, இந்தியக் குடியரசு அரசியலமைப்புச் சட்டத்தின்படி, செயல்படத் தொடங்கிற்று.

---

1 Doctor, Ambedkar, C A D Vol - VIII, P. 38

**அரசியல் சட்டத்தின் சில சிறப்புக் கூறுகள்**

மொத்தம் 395 சட்டவிதிகளையும் (Articles), 8 இணைப்புக் களையும் ( Schedules ) தாங்கி வெளிவந்த இந்திய அரசிய லமைப்புச் சட்டம், சென்ற இருபத்து நான்கு ஆண்டுகளில் ஏறத்தாழ இருபத்து ஒன்பது முறை திருத்தப்பட்டுள்ளது. தற் போது 394 சட்டவிதிகளுடனும் 9 அட்டவணைகளோடும் அது இயங்கி வருகின்றது. இந்திய அரசியலமைப்புச் சட்டம், பல நாடுகளின் அரசியல் சாசனங்களைக் காட்டிலும், அளவிலும் நுணுக்கத்திலும் நீண்டது; சிறந்தது.

''இந்திய மக்களாகிய நாம் இந்தியாவை ஓர் இறைமை கொண்ட குடியரசு நாடாக ஆக்குவதற்கு உறுதி பூண்டு.........'' என்று தொடங்கக் கூடிய அதன் முகப்பின் ( Preamble )மூலமாக, இந்தியா ஒரு குடியரசு நாடாகிறது.

அரசியல், சமுதாய, பொருளாதாரத் துறைகளில்—சமநீதியும், எண்ணம், கருத்து, சமயம், வழிபாடு இன்னோரன்ன மனித அடிப்படைத் தேவைகளில் — சம உரிமையையும், வாய்ப்பிலும், தகுதியிலும் — சமத்துவத்தையும், இந்திய மக்களுக்கு அளிக்கக் கூடிய ஒரு சேமநல அரசாக ( Welfare State ) இந்திய அரசு இயங்கும் என்பதை, தனது முகப்பின் மூலமாக இந்திய மக்களுக்கு உறுதியளிக்கிறது.

மக்களுடைய '' அடிப்படை உரிமைகளை '' (Fundamental Rights) அதன் மூன்றும் பகுதியும் (III Part), அரசாங்கத்தின் பொருளாதாரத்துறை''நெறிமுறைக்கோட்பாடுகளை''(Directive Principles) அதன் நான்காம் பகுதியும் நாடாளுமன்ற ஜன நாயக முறையில் இயங்குவதற்கான, சில சட்டவிதிகளை அதன் வேறு பகுதிகளும் உறுதி செய்கின்றன.

அரசமைப்பின் முதல் அத்தியாயத்திலுள்ள முதல் சட்ட விதியில், ''இந்தியா, அதாவது பாரதம் — மாநிலங்களுடைய ஓர் ஒன்றியம்''என்று பொறிக்கப் பட்டிருப்பதன் மூலமாக,இந்தியத் துணைக் கண்டம் ஒரு கூட்டாட்சி நாடென்று அழைக்கப்படு கிறது. ஆகவே, இந்தியா ஒரு கூட்டாட்சி அரசு முறையை அதன் அரசியல் சட்டத்தில் ஏற்றுக் கொண்டுள்ளது எனக் கொள்ளலாம்.

மத்திய அரசிற்கும், மாநிலங்களுக்கு மிடையே யுள்ள அரசியல், நிர்வாகம், சட்டமியற்றுத் துறை, நிதி, மற்றும் இன்னபிற உறவுகளையும் தொடர்புகளையும் அறுதியிட்டுக் கூறும், பல சட்டவிதிகளையும் இந்திய அரசமைப்புச் சட்டம் பெற்றுள்ளது.

அதுமட்டுமா? தேவை யேற்பட்டால், இந்திய நாடு முழுவதையும் ஒரே சர்க்கார் (மத்திய அரசு) ஆட்சி செய்யக் கூடிய வகையில், மாநில அரசாங்கத்தினுடைய எல்லா அதிகாரங்களையும் மையப்படுத்தக் கூடிய ( Centralise ) பல சட்டவிதிகளும் அதில் செய்யப்பட்டுள்ளன.

சட்டம் செய்யும் மொத்த அதிகாரங்கள் எல்லாம் மூன்று தனித்தனிப் பட்டியல்களில் தொகுக்கப் பட்டுள்ளன. மத்திய அரசு மட்டும் தனித்துச் சட்டமியற்றி — நிர்வாகம் செய்யக் கூடிய அதிகாரங்களை—தொகுத்து'' முதற் பட்டியல்'' என்று சொல்லப்படும் மத்திய அரசின் அதிகாரப் பட்டியலாகவும் (Union List), மாநில அரசுகள் சட்டம் செய்து, அரசோச்சும் அதிகாரங்களைத் தொகுத்து''இரண்டாம் பட்டியல்''என்றழைக் கப்படும் மாநில அதிகாரப் பட்டியலாகவும் (State List).இவை இரண்டிற்கும் பொதுவான அதிகாரங்களைச் சேர்த்து ''பொதுப் பட்டியல்'' (Concurrent List) என்று சொல்லப்படும் மூன்றுவது பட்டியலாகவும், இந்திய அரசமைப்புச் சட்டம் உருவாக்கி வைக்கப் பட்டுள்ளது.

மத்திய அரசிற்கும், மாநிலங்களுக்கும், பிணக்கு ஏற்படும் போதும் ஒன்றினுடைய அதிகார வட்டத்திற்குள் அத்து மீறிப் பிரவேசிக்கும் போதும் அதை ஒழுங்கு படுத்துவதற்காகத் தனித்தியங்கும் தலைமை நீதிமன்றத்தையும் நமது அரசியல் அமைப்பு ஏற்படுத்தி யுள்ளது. அதன் கீழியங்கும் பல உயர்நீதி மன்றங்களையும், பல துணை நீதிமன்றங்களையும் படைத்து அவைகளுக்குரிய அதிகார எல்லைகளையும் செயப்பாட்டு முறை களையும் நமது அரசியலமைப்புச் சட்டம் தெளிவாகக் கூறு கின்றது.

நமது அரசமைப்புச் சட்டத்தில், வேறு பல நாடுகளின் அரசமைப்புக்களிலுள்ள பல அடிமைத் தத்துவங்களும், முறை களும் மேற்கொள்ளப்பட்டுள்ளன. அதன் நாடாளுமன்றக் குடி யாட்சி முறை,இங்கிலாந்து நாட்டின் அரசமைப்பைச் சார்ந்துள்ளது.

நமது அரசியலமைப்புச் சட்டத்தின் மிகச் சீரிய பகுதியாகக் கருதப்படும், ''அடிப்படை உரிமைகள்'' (Fundamental Rights) பற்றிய விதிகள் அமெரிக்க ஐக்கிய நாடுகள் மற்றும் ஐரிஸ் நாட்டு அரசியல் சாசனங்களிலிருந்து, பெரும்பாலும் கையாளப்பட்டுள்ளன.

நமது கூட்டாட்சி முறை அரசு, பொதுவாகக் கனடா நாட்டின் கூட்டாட்சி அரசமைப்பையே தழுவி நிற்கிறது. அதில், ஆஸ்திரேலியச் சட்டத்திலிருந்தும் சில சட்டத் துளிகள் தெளிக்கப்பட்டிருக்கின்றன,

**வெள்ளையன் தந்த அடிமைச் சட்டத்தின் மறுபதிப்பே இன்றைய அரசியல் சட்டம்**

இங்கிலாந்தின் பல அரசியலமைப்புச் சட்ட நிபுணர்களின் கடும் உழைப்பால் உருவாக்கப்பட்டதும், சுதந்திரம் கிடைப்பதற்கு முன்னர் இந்திய நாட்டின் அரசியல் சட்டமொன்று ஏற்றுக் கொள்ளப்பட்டதுமான ''1935-ஆம் ஆண்டினுடைய இந்திய அரசுச் சட்டம்'' (Government of India Act-1935) நமது சுதந்திர இந்தியாவின் அரசியலமைப்புச் சட்டத்திற்கு (Indian Constitution) அடிப்படையாகவும்—அமைப்பு முறையாகவும்—அமைந்துள்ளது.

அதில் பயன் படுத்தப்பட்டுள்ள பல சட்ட விதிகளின் வாசகங்கள் கூட அப்படியே நமது சட்டத்தில் பெயர்த்தெழுதப்பட்டுள்ளன. அத்தியாயங்களின் அடுக்கில் மாறுதல் உள்ளதே தவிர, நமது இன்றைய அரசமைப்பிலுள்ள நூற்றுக்கு எண்பது பங்குச் சட்டவிதிகள், ''1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்திலிருந்து ''காப்பி'' (Copy) அடிக்கப்பட்டுள்ளன. சுருக்கமாக, தற்போதைய நமது இந்திய அரசமைப்புச் சட்டம் 1935-ஆம் ஆண்டு இந்திய அரசுச் சட்டத்தின் ''மறுபதிப்பு'' எனச் சொன்னால் அது மிகையாகாது.

பேராசிரியர் சீனிவாசன் அவர்கள்,

> ''நமது இன்றைய சட்டம், 1935-ஆம் ஆண்டுச் சட்டத்தைப் பிரித்து மீண்டும்இரண்டாம் முறையாக மேயப்பட்டதாகும்.''[2]

எனக் கூறுகிறார்.

2 Prof. N. Srinivasan, "*Democratic Government in India*" [1954], P. 143

“நமது இந்திய அரசியல் சட்டத்தினுடைய கோலத்தின் மூலமே, 1935–ஆம் ஆண்டுச் சட்டம் தான் என்று சொன்னால் அது மிகையாகாது”எனக் கூறுகிறார் திரு. சந்தானம் அவர்கள்.

“நமது இந்திய அரசமைப்புச் சபையில் அமைக்கப்பட்ட மிக முக்கியமான ஒரு குழு “ மத்திய அதிகாரக் குழு ” (Union Powers Committee). மத்திய அரசின் அதிகாரங்களைத் தொகுப்பதற்காகவே அது நிறுவப்பட்டது. அதன் உறுப்பினரான திரு. கோபாலசாமி அய்யங்கார் அவர்கள், ‘மத்திய அதிகாரக் குழுவின் இரண்டாம் அறிக்கையை’ அரசமைப்புச் சபையில் 20–8–1947-இல் தாக்கல் செய்து பேசும்போது,

> “(நமது அரசியல் சட்டத்தில் எழுதப்பட இருந்த) அதிகாரப் பட்டியல்களை, 1935-ஆம் ஆண்டுச் சட்டத்தில் கண்ட அதிகாரப் பட்டியல்களோடு மாண்புமிகு உறுப்பினர்கள் ஒப்பிட்டுப் பார்ப்பீர்களேயானால், இரண்டொரு விதி விலக்குகளைத் தவிர, 1935–ஆம் ஆண்டுச் சட்டத்தில் மாநிலங்களுக்கு ஒதுக்கப்பட்ட பட்டியலின் அதிகாரங்களில் எதையும் இன்றைய ( உருவாக்கப்பட இருக்கும் ) மத்திய அரசு ஆக்கிரமித்துக் கொள்ளவில்லை என்பதைப் புரிந்து கொள்வீர்கள்......”3

என்று கூறி நமது அரசியல் சட்டம், 1935–ஆம் ஆண்டுச் சட்டத்தின் மறுபதிப்பு என்பதை ஒத்துக் கொண்டார். அஃதாவது 1935-ஆம் ஆண்டுச் சட்டத்தில் மத்திய அரசிற்குத் தரப்பட்ட எல்லா அதிகாரங்களையும் நமது அரசமைப்புச் சட்டமும் ஏற்றுக் கொண்டதேயன்றி, அச்சட்டத்தால் மாநிலங்களுக்குத் தரப்பட்ட அதிகாரங்களில் எதையும் தற்போது எடுத்துக் கொள்ளவில்லை என்கிறார். “குதிரை கீழேதான் தள்ளியது; நல்லவேளை குழி பறிக்கவில்லை.”

அரசமைப்பு வரலாற்று ஆசிரியர், வி. டி. மகஜன் அவர்கள், 1935–ஆம் ஆண்டின் சட்டத்தையும், தற்போதைய இந்திய அரசமைப்புச் சட்டத்தையும் ஒப்பிட்டு ஆய்வு செய்யும் போது,

---

3 Mr. B. Shivarao, "The Framing of India's Constitution" Select Documents, Vol - II, [1967] P, 801

"1935-ஆம் ஆண்டுச் சட்டம், பல வழிகளில் வருங்கால சுதந்திரத்தின் முதல் நிலைப்படிவமாகும். 1950-ஆம் ஆண்டு ஜனவரித் திங்களில் நடைமுறைக்கு வந்த புதிய இந்திய அரசமைப்பின் பல உறுப்புக்கள் 1935-ஆம் ஆண்டுச் சட்டத்திலிருந்து பெயர்த்தெடுக்கப்பட்டதாகும். இதுவே 1935-ஆம் ஆண்டுச் சட்டத்தின் பெருமையை விளக்கும். புதிய இந்திய அரசமைப்பின் பொது உருவம், 1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தின் கோலத்தைக் கொண்டதாகும்." 4

எனக் கூறுகிருர்.

குறிப்பாக மத்திய – மாநில உறவுகளைப் பொறுத்தவரை, ஆங்கில ஏகாதிபத்தியம் நமக்களித்த ஓர் "அரைகுறைக் கூட்டாட்சி முறையை" (Quasi Federation) விடுதலை பெற்ற இந்தியத் துணைக் கண்டத்தின் கூட்டாட்சி முறையாக இன்றைய அரசிலமைப்புச் சட்டம் அப்படியே ஏற்றுக் கொண்டுள்ளது.

நமது அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்கிய டாக்டர். அம்பேத்கார், அவர்கள், 1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தின் பல பகுதிகளை, தற்போதைய இந்திய அரசமைப் புச் சட்டமும் ஏற்றுக் கொண்டதற்குரிய காரணங்களை அரசமைப்புச் சபையில் எடுத்துக் கூறும் போது,

"1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தின் பெரும்பான்மையான பகுதிகள், நமது வரைவு அரசமைப்பில் (Draft constitution) மீண்டும் அப்படியே தரப்பட்டுள்ளன... அப்படிக் காப்பியடிப்பதற்கு நாம் வெட்கப்படத் தேவையில்லை. இதை ஒரு "கருத்துத் திருட்டு" என்று யாரும் கொள்ளலாகாது. அரசியலமைப்பினுடைய அடித்தளமான கருத்துக்களில், தனிப்பட்ட பதிப்புரிமை, யாருக்கும் கிடையாது. 1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்திலிருந்து நிர்வாகத்தைப் பற்றிய விவரங்களையே பெரும்பாலும் நாம் எடுத்துக் கொண்டிருக்கிறோம் என்பதுதான் எனக்கு மிக்க

---

4 Prof. V. D. Mahajan, "Constitutional History of India" (1971), P. 167

கவலையையளிக்கிறது. அரசியலமைப்பில், நிர்வாக விவரங்கள் இருந்து தீரவேண்டிய அவசியமில்லை என்பதை நானும் ஒத்துக் கொள்கிறேன். முடிந்தவரை, நிர்வாகத்தைப் பற்றிய விவரங்களை (அரசமைப்புச் சட்டத்தில்) தவிர்ப்பதற்கு நாம் முயற்சி செய்வோம். ஆனால் அவை நமது அரசமைப்புச் சட்டத்தில் ஏன் ஏற்றி வைக்கப்பட்டுள்ளன என்பதனை விளக்குவதற்காகவே இவைகளை நான் குறிப்பிட வேண்டியுள்ளது.'' 5

எனத் தெளிவாக்குகிறார்.

ஆனால், டாக்டர். அம்பேத்கார் அவர்களுடைய இந்த விளக்கம், முழு உண்மையையும் வெளிப்படுத்த வில்லை. ஆங்கிலேய ஏகாதிபத்திய அரசு, இந்திய நாட்டை நிலையாக அடிப்படுத்தி வைத்திருக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் தான் அதனுடைய மாநிலங்களுக்கு முழு சுயாட்சியையும் கொடுக்காமல் விட்டு விட்டது. ஆங்கிலேய மத்திய அரசின் கைப் பிடிக்குள் மாநிலங்களைக் கட்டிப் போட்டு வைப்பதற்காகவே மற்ற கூட்டாட்சி நாடுகளின் அமைப்புகளில்லாத சில வெறுக்கத் தக்க (ஆதிபத்திய) ஏற்பாடுகளை ''1935-ஆம் ஆண்டு இந்திய அரசுச் சட்டம்'' அற்புதமாகச் செய்து வைத்திருந்தது.

பாகிஸ்தான் பிரிவினையோடு இந்தியா விடுதலை பெற்றது. அதனைக் காரணமாகக் காட்டி, நமது தேசியத் தலைவர்கள் இந்திய நாட்டிலுள்ள மாநிலங்களுக்கு சுயாட்சியைக் கொடுக்க முன் வரவில்லை. எனவே ஆங்கிலேயரின் 1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தைப் போன்ற மத்திய வல்லாட்சியைப் பேணும் சட்டமொன்று, நமது அன்றையக் காங்கிரஸ் தலைவர்களுக்கு உடனடியாகத் தேவைப் பட்டது. பல சட்ட வல்லுநர்கள் அரும்பாடு பட்டுத் தயாரித்த அந்த அடிமைச் சட்டமும்(1935-ஆம் ஆண்டுச்சட்டம்)நமது காங்கிரஸ் தலைவர்களின் கைவசம் இருந்தது. வாய்ப்பும் ஏற்பட்டது; வரைச் சட்டமும் தயாராயிருந்தது. கூட்டாட்சி என்ற பெயரில் அந்த ஆங்கிலேயனின் இந்திய அரசுச் சட்டமும் அப்படியே நமது சட்டத்தில் காப்பி யடிக்கப்பட்டு விட்டது. இதுதான் முழு உண்மை.

---

5 Ibid, Opp, Cited. Note - I

## இயற்கையும் செயற்கையும்

அரசமைப்புச் சட்ட வல்லுநரான திரு. அமல்ரே (AMAL RAY) அவர்கள் கூறுகிறார்,

> "1935-ஆம் ஆண்டுச் சட்டத்தில்; கூட்டாட்சி முறையின் அடிப்படைகள் இருந்தன. அப்போதிருந்த (1935-ஆம் ஆண்டிலிருந்த) இந்திய நாட்டின் பெரும்பாலான சிக்கல்கள் மாறிவிட வில்லை. விரிவான ஒரு கூட்டாட்சி அமைப்பும் கைவசம் இருந்தது. அது நமது அரசமைப்பை உருவாக்கியவர்களுக்கு ஆவலையும் தூண்டியது. எனவே, அந்தச் சட்டத்தில் கண்ட இன்றியமையாப் பகுதிகளையும் அதிகாரங்களின் பிரிவுகளையும் இந்திய அரசமைப்பை உருவாக்கியவர்கள் அப்படியே ஏற்றுக் கொண்டது இயற்கைதானே?" 6

ஆம்! இயற்கைதான். ஒற்றை வல்லாட்சி முறையைப் பேணிக் காக்க விழைந்த ஆங்கில ஏகாதிபத்தியம் எதிர்பாரா வகையில் இந்திய மண்ணிலிருந்து வெளியேறி விட்டதால், அதற்குப் பதிலாக ஒரு "டெல்லி ஏகாதிபத்தியம்" உருவாக்கப் படவேண்டுமென, பல காலம் காத்திருந்த காங்கிரஸ் தலைவர்கள் 'சுதந்திரம்' என்ற பெயரில் — 'சுதந்திர நாட்டின் கூட்டாட்சி அரசமைப்பு' என்ற பெயரில் — ஆங்கிலேயரின் 1935-ஆம் ஆண்டுச் சட்டத்தை அப்படியே ஏற்றுக் கொண்டது இயற்கைதான். ஏற்கெனவே அடிமைப்பட்டுக் கிடந்த மாநிலங்களுக்கு, மீண்டுமோர் அடிமைச் சாசனமாக நமது இன்றைய அரசியலமைப்பும் அமைந்து விட்டது என்பதும் உண்மைதான்.

ஆனால், "அது அடிமைச் சாசன மல்ல; புனிதமானது; தெய்வீகத் தன்மை வாய்ந்தது இந்திய நாட்டின் மரியாதைக் குரியது;" என்றெல்லாம் கூறி "அது ஓர் அதியற்புதமான கூட்டாட்சி அரசமைப்பாகும்;" என நமது தேசியத் தலைவர்கள் இன்றும் நிலை நாட்ட முயற்சிப்பதும், அதனடிப் படையில் மாநில சுயாட்சியைஇன்னும் மறுத்து வருவதும் தான்செயற்கையானவை.

---

6 *Dr. Amalray*, "Inter Governamental Relations in India" (1966) Page. 24

**இந்திய வரலாற்றின் விந்தைக் கூறு**

வரலாற்றில் பல விந்தைகள் நடக்கின்றன. அடிமைத் தனத்தை அடியோடு அகற்ற வேண்டுமெனப் பல்லாண்டு களாகப் போராடினர், நமது தேசியத் தலைவர்கள். இறுதியில் அடிமைப் படுத்திய வெள்ளை ஏகாதிபத்தியமும் மறைந்தது. ஆனால் அடிமைத்தனத்தை எதிர்த்துப் போரிட்டவர்களே, சூழ்நிலையால் ஆண்டான்களாக மாறிவிட்டனர்.

பின்னால் அவர்கள் ஏகாதிபத்திய வாதிகளாகவும் ஆகி விட்டனர். ஒரு குறிப்பிட்ட கால கட்டத்தில் ஒரு நாட்டின் வரலாறு வெட்டுண்டு, அந்நாட்டினுடைய அரசாங்கத்தில் பெரிய மாற்றம் ஏற்பட்ட பின்னும் கூட, அதே அடிமை வரலாறு, மீண்டும் தொடர்ந்து நடக்கின்ற நிலையைத்தான் விந்தையிலும் விந்தையெனக் கூறலாம். இந்திய அரசியல் சட்ட வரலாற்றிலும் இந்த விந்தைக் கூறு இடம் பெற்று விட்டது. நமது அரசமைப்பு வல்லுனரான, திரு. கே. சந்தானம் அவர்கள் கூறுகிறார்,

> "பழைய வரலாறு மாறிவிட்ட போதும்கூட, அவ்வரலாற்றின் பின்னணி (Historical Background) எப்படி அம்மக்களைப் பாதிக்கிறது என்பதற்கு இதுவே தனித்ததோர் எடுத்துக் காட்டாகும். மேலாதிக்கம் (Paramountcy) என்ற கொள்கையை நமது தேசியத் தலைவர்கள் வெகு காலமாகவே எதிர்த்து வந்தனர். ஆனால், (அவர்களால் அமைக்கப்பட்ட) நமது அரசியலமைப்புச் சபை, மேலாதிக்கம் செய்வதற் கேற்ற அதே அதிகாரங்களை நமது அரசமைப்புச் சட்டத்தி லும், தீவிரமாக உருவாக்கி வைத்து விட்டது." 7

This is a peculiar illustration of how the Historical back ground affects the people even when they breakaway from the History. The National Leaders had always agitated against the doctrine of Paramountcy, but the constituent assembly has effectively installed those powers in the constitution.

---

7 K. Santhanam, "Union State Relations in India" [1963] P. 13

## II

# அடிமைச் (1935) சட்டமும் — சுதந்திரச் (1950) சட்டமும் — ஓர் ஒப்புமை

மத்திய—மாநில உறவுகளைப் பொறுத்தவரை ஆங்கிலேய னின் 1935-ஆம் ஆண்டுச் சட்டத்தை இன்றைய நமது அரசமைப்புச் சட்டம் அப்படியே ஏற்றுக் கொண்டதால் அதில் கண்ட நிறைவற்ற மாநில சுயாட்சியைத்தான் சுதந்திர இந்தியாவிலுள்ள இன்றைய மாநிலங்களும் பெற்று நிற்கின்றன.

### 1935-இல் அதிகாரப் பிரிவினை

1935-ஆம் ஆண்டுச் சட்டத்தில், சட்டமியற்றும் அதிகாரங்கள் மூன்று பட்டியல்களாகப் பகுக்கப்பட்டிருந்தன. மத்திய அரசிற்கு 59 அதிகார இனங்களும், மாநிலங்களுக்கு 54 அதிகார இனங்களும், மத்திய அரசும், மாநில அரசும், தேவை ஏற்படும்போது சட்டமியற்றிக் கொள்வதற்காகப் பொதுவான 36 அதிகார இனங்களும் முறையே ''மத்தியப் பட்டியல்,'' ''மைய — மாநிலப் பொதுப் பட்டியல்'' எனத் தொகுக்கப்பட்டிருந்தன. இவைபோக வரையறுக்கப்படாத ''எஞ்சிய அதிகாரங்கள்'' (Residuary Powers) கவர்னர் ஜெனரலிடமே ஒப்படைக்கப்பட்டன. அவர் இந்திய நாட்டின் ஒருமுகமான நலன் குறித்துத் தேவைக்கும் சூழ்நிலைக்கும் காலத்திற்கும் ஏற்ப மத்திய அரசிற்கும், மாநில அரசுக்கும் அவ்வப்போது வழங்குவார்.

### 1950-இல் அதிகாரப் பிரிவினை

சுதந்திர இந்தியாவின் அரசமைப்புச் சட்டத்தில், மத்திய அரசின் சட்டமியற்றும் பட்டியலில் 97 அதிகார இனங்களும், மாநிலப் பட்டியலில் 66 இனங்களும், பொதுப்பட்டியலில் 46 இனங்களும், வழங்கப்பட்டுள்ளன. இவையல்லாத எஞ்சிய அதிகாரங்கள் முழுவதும் மத்திய அரசிற்கே வழங்கப்பட்டுள்ளன.

1935-ஆம் ஆண்டுச்சட்டத்தில் மாநிலப்பட்டியலில் இருந்த ''தேசியப் பெருவழித்துறை'' (National High Ways) மாநிலங் களுக் கிடையிலான வாணிகங்கள், (Inter—State commerce) இன்னோரன்ன சில மாநில அதிகாரங்கள் கூட, தற்போதைய சட்டத்தில் மத்தியப் பட்டியலில் சேர்க்கப்பட்டு விட்டன.

இவை தவிர, சீரான பொருளாதார முன்னேற்றத்தைக் கருதி, ''தொழிற்சாலைகள்,'' மற்ற பொருளாதாரத் துறையைச் சார்ந்த 'வாணிகம்', 'தொழில்கள்' ஆகியவை பற்றிய அதிகாரக் சட்டுப்பாடுகள் முழுவதும் நமது சட்டத்தில், மத்திய அரசிற்கே உரித்தானவை யாக்கப்பட்டன.

பொதுப் பட்டியலில் உள்ள 47 இனங்களிலும், மைய அரசே சட்டங்களை இயற்றி, அவற்றில் மாநிலங்கள் செயல்படமுடியாத சூழ்நிலையையும் உருவாக்கி யுள்ளனர். நடைமுறையில் அவ் வகை அதிகாரங்கள் பலவற்றை மத்திய அரசே தனதாக்கிக் கொண்டது,

ஆக, மத்திய அரசுப் பட்டியலின் 97 அதிகாரங்களோடு 'மத்திய—மாநிலங்களுக்கான' பொதுப்பட்டியலில் காணும் 47 இனங்களையும் சேர்த்து, மத்திய அரசு தற்போது 144அதிகாரங் களையும் தன்னகத்தே கொண்டுள்ளது என்றால், மாநிலங்களின் இன்றைய பரிதாப நிலையை நாம் தெளிவாக அறிந்து கொள்ள முடியும்.

### 1935-ஆம் ஆண்டுச் சட்டத்தின் மத்திய அரசின் மேலாட்சி

1985-ஆம் ஆண்டுச் சட்டத்தில், மத்திய அரசுச் சட்டங் களும், அச்சட்டங்களைத் தழுவிய மத்திய அரசின் நிர்வாகத் திற்கும், குந்தகம் ஏற்படாத முறையிலேயே மாநில நிர்வாகங்கள் இருத்தல் வேண்டும் என்ற அடிப்படை விதியிருந்தது.

அவைகளை அமுல் படுத்தத் தேவையான எல்லாக் கட்டளை களையும், மத்திய அரசு மாநிலங்கள் மேல் பிறப்பித்து, மாநிலங்களை அதன்படி ஒழுகும் வகையில் நிர்ப்பந்திக்க வகை செய்யும் சட்ட விதியும் இருந்தது.

மத்திய அரசின் ''செய்தித் தொடர்புகள்'' முதலானவை களை மாநிலங்கள் பேணிக் காக்க வேண்டும். அதற்குரிய கட்டளைகளையும் மைய அரசு மாநிலங்களின் மேல் பிறப்பிக் கலாம்.

மொத்தத்தில் மாநிலங்களின் சுயாட்சி — மத்திய அரசின் கட்டளைகளுக் குட்பட்டு நடைபெற வேண்டுமென்ற விதி முறைகள் அதில் இருந்தன.

## 1950-ஆம் ஆண்டுச் சட்டத்தில் மத்திய அரசின் "மேலாட்சி"

பழைய ஆங்கில அரசுச் சட்டத்தைக் காட்டிலும் மிக்க வலிமை கொண்ட நிர்வாகக் கட்டுப்பாடுகளை, மாநிலங்களின் மேல் விதிக்கும் உரிமைகளை நமது தற்போதைய இந்திய அரசமைப்புச் சட்டம், மத்திய அரசிற்கு வழங்கியுள்ளது. மேற்கூறிய அவ்வளவையும், அதன் உருவமும், அமைப்பும் மாறாமல்—இன்னும் சற்று அதிகப்படுத்தி—விடுதலை பெற்ற இந்தியாவின் நமது அரசமைப்புச் சட்டத்தில், அப்படியே பெயர்த்து வைக்கப் பட்டுள்ளன.

## 1935-இல் "அவசர நிலை"

'போர்' அல்லது 'உள்நாட்டுக் குழப்பம்' என்ற பெயரால், மாநிலங்களின் அமைதிக்கு ஊறு ஏற்பட்டுள்ளது எனக்கூறி, "அவசரநிலை"யைப் (Emergency) பிரகடனப்படுத்தி, ஆளுநரின் மூலமாக மத்திய அரசே மாநிலங்களின் ஆட்சியைப் பறித்துக் கொள்வதற்கும் 1935-ஆம் ஆண்டுச் சட்டத்தில் வழிவகை செய்யப்பட்டிருந்தது.

மாநிலச் சட்ட மசோதாக்களை, மாநிலச் சட்டமன்றங்கள் நிறைவேற்றினாலும், கவர்னர் ஜெனரலின் இசைவிற்காக (Assent) மாநில ஆளுநர் அவைகளை ஒதுக்கி வைக்கலாம். அதை, அரசுப் பிரதிநிதி (கவர்னர் ஜெனரல்) ஏற்கலாம் அல்லது மறுக்கலாம்.

## 1950-இன் "அவசர நிலை"

போர் மற்றும் உள்நாட்டுக் குழப்பம் மட்டுமல்ல; காரணமேயில்லாமற் கூட மாநிலங்களில் அரசியலமைப்பு (நிர்வாக) இயந்திரம் பழுதுபட்டுப் போய்விட்டதெனக் கூறி, அதை "மாநிலங்களில் அவசர நிலை" என்று பிரகடனப்படுத்தி மாநில ஆட்சியை இன்றைய மத்திய அரசு எடுத்துக் கொள்ளலாம்.

இன்றைய அரசியலமைப்புச் சட்டப்படி, மத்திய அரசின் நிதிக் கொள்கைகளால் மாநிலங்கள் பாதிக்கப்பட்டாலும், "நிதி நெருக்கடி நிலை" எனப் பிரகடனப்படுத்தி மாநில அரசுகளின் நிதித் துறை நிர்வாகத்தை, மத்திய அரசே கைப்பற்றிக் கொள்ளலாம்.

மாநிலச் சட்ட மன்றங்கள் நிறைவேற்றிய எந்தச் சட்டத்தை வேண்டுமாஞலும் மத்திய அரசின் தலைவரான குடியரசுத் தலைவர் ஒப்புதலைப் பெறுவதற்காக, மாநில ஆளுநர் ஒதுக்கி வைத்து விடலாம்.

### 1935-இல் "ஆளுநர்" [Governor]

1935-ஆம் ஆண்டுச் சட்டத்தில், மாநில ஆளுநர்களுக்கு மூவகை உரிமைகள் கொடுத்திருந்தனர். அவற்றில் ஒன்றுதான் மாநில அமைச்சரவையின் ஆலோசனையுடனும், உதவியுடனும் ஆளுநர் செயல்படுவதாகும். இன்னொரு வகையான "தனித்த அதிகாரங்களை"ப் பயன்படுத்தி அமைச்சரவைகளை உருவாக்கவும் கலைக்கவும், அதிகாரிகளையும் சிறுபான்மையினரையும் காக்கவும், கவர்னர் ஜெனரலின் அதிகாரங்களின் (Discretionary Powers) மூலமாக அவசரச் சட்டங்களைப் பிறப்பிக்கவும், பொதுச் சேவைகளை நியமிக்கவும் (Appointment of Public Service Commission) ஆளுநருக்கு உரிமையிருந்தது. ஆளுநரின் "விருப்பு அதிகாரங்கள்" இவையிவை எனத் தெளிவு படக் கூறும் கவர்னர் ஜெனரலின் "குறிப்பு ஆணைகளும்" (Instrument of Instructions) அன்று இருந்தன.

### 1950-இல் "ஆளுநர்"

நமது இந்திய அரசமைப்புச் சட்டத்தின் தற்போதைய ஆளுநர்களுக்குச்சில விதிவிலக்குகளுடன்பழைய ஆளுநர்களைப் போலவே எல்லா அதிகாரங்களும், கொடுக்கப்பட்டுள்ளன. அன்றைய கவர்னர் ஜெனரலுக்குப் பதிலாக, இன்றையக் குடியரசுத் தலைவர்; வேறுபாடு இவ்வளவே. அன்றைய ஆளுநர்களை ஆங்கிலப் பேரரசு நியமித்தது; இன்றைய ஆளுநர்களை (மத்திய அரசின் அமைச்சரவையினுடைய ஆலோசனைப்படி) குடியரசுத் தலைவர் நியமிக்கிருர்.

### 1935-ஆம் ஆண்டுச் சட்டத்தின் நிதி ஏற்பாடும் 1950-ஆம் ஆண்டுச் சட்டத்தின் நிதி ஏற்பாடும் ஒன்றே

மத்திய மாநிலங்களுக்கிடையில் நிதிப்பங்கீடுகள், மானியங்கள், வரிவிதிப்பு, மற்றும் வசூல் செய்யும் வகைகள் 1935–ஆம் ஆண்டுச் சட்டத்தில் எவ்வகையில் இருந்ததோ, ஏறத்தாழ அவ்வகையிலேயே சிற் சில மாற்றங்களுடன், இன்றைய அரசமைப்பிலும் கைக் கொள்ளப்பட்டுள்ளது. மாநிலங்களையும் மாநில

அரசுகளேயும், மாநிலத் தன்னுட்சியையும், 1935–ஆம் ஆண்டுச் சட்டத்தின் மத்திய அரசு தனது கட்டுப்பாடுகளாலும், நிர்வாகக் கட்டளேகளாலும், நிதிச் சார்புகளினுலும், எவ்வகையி லெல்லாம் நெருக்கிச் சுருக்கிக் கட்டுப்படுத்தி வந்ததோ, அதே முறைகளில் ஏறத்தாழ அதே நிதிக் கட்டுப்பாடுகள், நிர்வாகக் கட்டளேகள் ஆகியவை மூலமாக ஒருவகையில் அதற்கும் அதிகமாகக் கூட மாநில சுயாட்சியையும் மாநில அரசுகளேயும் இன்றைய மத்திய அரசு, ஆட்டிப் படைத்துக் கொண்டிருக்கிறது.

## III

## புதிய மொந்தையில் பழைய கள்

1935–ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டம், ஆங்கில ஏகாதிபத்தியவாதிகளால் உருவாக்கப்பட்ட சட்டம் என்பது நினேவு கூறத் தக்கது. நாட்டின் மூல அதிகாரங்களேயும் இந்திய அரசமைப்பின் ஆதார நிலேகளேயும் ஆங்கில அரசின், இறுக்க மான பிடியினுள் வைத்துக் கொண்டு, அதன் குடியேற்ற நாடான இந்தியாவிற்கு 'டொமினியன்' தகுதிக்கும் குறைந்த ஒரு தகுதியை வழங்குவதற்காகவே 1935–ஆம் ஆண்டுச் சட்டம் அரைகுறைக் கூட்டாட்சி அமைப்பு முறையோடு இயற்றப்பட்டது. அச் சட்டத்தின் நாற்புற எல்லேகளுக்குள் மாநில அரசுகளும் மத்திய அரசும்—சற்று உயிரோட்டத்துடன் இயங்கினுலும்—அதனே இயக்குவது, உண்மையில் ஆங்கிலப் பேரரசே. தன் கட்டுக்குள்ளிருந்து இந்திய நாடு, எப்படியும் விடுபட்டுச் சென்று விடக் கூடாது என்பதே அன்றைய ஆங்கில அரசின் நோக்கம்.

அது ஆதிக்க அரசு என்ற காரணத்தால் ''கொடுப்பதைப் பெற்றுக் கொள்ளலாம்'' என்று அச்சட்டத்தால் கொடுக்கப்பட்ட **''கட்டுப்படுத்தப்பட்ட மாநில சுயாட்சியை''**, அந்தக் கால கட்டத்தில் அடிமை நாடான இந்தியா ஏற்றுக் கொண்டது. ஒருக்கால் அதை இந்தியா ஏற்றுக் கொள்ளாமல் விட்டிருந்தாலும் கூட 1935–ஆம் ஆண்டுச் சட்டத்தின் அரசமைப்பை ஆங்கிலேயர்கள் இங்கு அமுல் படுத்தியிருப்பார்கள்.

ஆனுல் விடுதலே பெற்ற இந்திய நாட்டிலுள்ள மாநிலங்கள் குடியேற்ற நாடுகளேப் போன்றவை அல்ல; குடியரசு முறையிலும், கூட்டாட்சி அரசமைப்பிலும் இன்றைய மாநிலங்கள் இயங்குகின்றன. எனவே, பிரிட்டானிய ஆதிக்கப் பேரரசின் அரசியல்

கட்டுப்பாடுகளும், விரும்பத்தகாத தலையீடுகளும், மாநிலங்களின் சுயாட்சியை அழிக்கக்கூடிய சட்ட விதிகளும் நமது சுதந்திர இந்திய அரசமைப்பிலும் தேவைதானா?

"ஆம், தேவைதான்", "இந்திய ஒற்றுமை அப்படித்தான் காப்பாற்றப்படும்" எனக் கூறுகின்றனர். நமது தேசியத்தலைவர்கள்.

பெரும்பான்மைக் காங்கிரசு உறுப்பினர்களே நிரம்பியிருந்த நமது அரசியலமைப்புச் சபையால் உருவாக்கப்பட்ட - சுதந்திர இந்தியாவின் அரசமைப்பிலும், ஆங்கிலேய ஆதிபத்தியத்தால் கொடுக்கப்பட்ட - (மாநில சுயாட்சியை அடக்கி யொடுக்கும்) சட்ட விதிகளை அப்படியே உருக்குலைக்காமல், முழுமையாக அவர்கள் முறையின்றி ஏற்றி வைத்து விட்டனர்.

மாநிலங்களைப் பொறுத்த அளவில், இங்கிலாந்தின் ஆதி பத்திய மத்திய அரசிற்கும், தற்போதைய டெல்லி மத்திய அரசிற்கும், சிற்சில வேறுபாடுகள் தவிர அதிகமான மாறுபாடு கள் இல்லை. அன்றைய மாகாணங்கள்—ஆங்கில ஆதிக்கத்தால் இயக்கப்பட்ட கைப்பாவைகள் என்ருல், இன்றைய மாநிலங்கள் டெல்லி ஆதிபத்தியத்தால் ஆட்டுவிக்கப்படும் 'சுயாட்சி' என்ற பெயர் கொண்ட வெறும் கைப் பொம்மைகள். வழக்காற்றி லுள்ள சற்றுத் தூய்மையற்ற மொழியில், மாநிலங்களின் தற் போதைய உண்மை நிலையைக் கூற வேண்டுமெனில் நமது அரசியல் சட்டம் என்ற புதிய மொந்தையில், ஆங்கில ஆதிக்கத் தால் உருவாக்கப்பட்ட 1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டவிதிகள் என்ற பழைய கள்ளே நிரப்பப்பட்டுள்ளது. ஆகவே, மொந்தை புதியது, அதன் உள்ளடக்கமான கள் பழையது; "புதிய மொந்தையில் பழைய கள்."

இலண்டனிலிருந்து..........டெல்லிக்கு

தற்போதைய இந்திய மத்திய அரசு ஆங்கிலேயப் பேரர சிற்கு எவ்வகையிலும் மாறுபட்டிருக்க வில்லை என்பதை எடுத்துக் காட்டும் வகையில் இந்திய அரசமைப்புச் சபையின் உறுப்பினராக இருந்தவரும், பின்னர், இரண்டாம் நிதி ஆணைக்

குழுவின் தலைவராய் இருந்தவருமான திரு. கே. சந்தானம் அவர்கள்,

> ''மொத்தத்தில், இந்திய மாநிலங்களின் மேலும் இந்தியச் சமஸ்தானங்கள் மேலும், பிரிட்டானியப் பேரரசு செலுத்திக் கொண்டிருந்த மேலாட்சி முழுவதையும் இந்திய அரசிற்கு மாற்றித் தர வேண்டுமென்ற ஓர் அடிப்படை வேறுபாட்டுடன், 1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தின் மற்ற எல்லாச் சிறப்புக்களையும் அப்படியே விடாமல் (இந்திய அரசமைப்பிலும்) வைத்துக் கொள்வதுதான் சாலச் சிறந்தாகும் என்ற முடிவினுக்கு இந்திய அரசியல் நிர்ணய சபையும் வந்தது.''8

என்று கூறுகிறார்.

பண்டித நேரு அவர்கள், 1935-ஆம் ஆண்டுச் சட்டத்தைப் பற்றித் தனது கருத்தை அறிவிக்கையில்,

> ''இந்த 1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டம் ஒரு வகையான மாநில சுயாட்சியையும் கூட்டமைப்பையும் தந்துள்ளது. ஆனால் அதில் அரசியல், பொருளாதார அதிகாரங்கள் முழுவதும் ஆங்கிலப் பேரரசின் கரங்களிலேயே குவிந்து கிடக்கும் வகையில் சில இனங்கள் ஒதுக்கப்பட்டும், தணிக்கை செய்யப்பட்டும் இருக்கின்றன. அச்சட்டம் சில வழிகளில் ஆங்கில அரசிற்கு முழுவதும் பொறுப்பாக உள்ள நிர்வாக அதிகாரங்களை உள்ளபடியே உறுதிப்படுத்தி விரிவு செய்கிறது... சுதேச மன்னர்களுக்கும் நிலக் கிழார்களுக்கும் இந்தியாவிலுள்ள மற்ற பிற்போக்குச் சக்திகளுக்கும் ஆங்கில அரசிற்கும் இடையிலுள்ள கூட்டணியையே இச்சட்டம் வலிவு படுத்துகிறது ...''9

என்ற வரிகளால் அச்சட்டத்தின் அடிப்படை அம்சத்தைச் சுட்டிக் காட்டுகிறார்கள்.

''அரசியல், பொருளாதார, சட்டமியற்றும் அதிகாரங்கள் முழுவதும் பேரரசின் கரங்களில் குவிந்து கிடக்கும்' '1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தின் ''சில இனங்களின் ஒதுக்கீடுகளையும் தணிக்கைகளையும்'' பற்றி நாம் இவ்வத்தியா

---

8 Ibid, opp. cited, Note. 7, Page. 5
9 ''The Discovery of India,'' P. 368-369

யத்தின் முன் பகுதியில் மேலோட்டமாக ஆய்வு செய்தோம். அதனைத்தான் நேரு அவர்களும் இந்த மேற்கோளால் சுட்டிக் காட்டுகிறார்.

ஆனால் ஆங்கில வல்லாட்சியை எதிர்த்த பண்டித நேரு அவர்களும், வல்லபாய் பட்டேல் அவர்களும் தயாரித்த இன்றைய நமது அரசமைப்புச் சட்டத்தில், அக் "கட்டுப்பாடுகளும்", "ஒதுக்கீடுகளும்", "தணிக்கைகளும்" நீக்கப்பட வில்லையே, ஏன்?

ஒருக்கால் நேரு அவர்களால் குறிப்பிடப்பட்ட அந்த "அரசியல், பொருளாதார அதிகாரங்களின் குவியல்" முழுவதும், ஆங்கில ஆதிக்கத்திலிருந்து டெல்லி ஆதிபத்தியத்திற்கே தற்போது வந்து விட்ட காரணத்தினலா? அல்லது அந்த மேற்கோளின் பிற்பகுதியில் நேரு அவர்களாலேயே தெளிவாகச் சுட்டிக்காட்டியபடி, இந்தியப் பெருநிலக் கிழார்களும், மற்ற பிற்போக்குச் சக்திகளும் (ஆங்கில அரசிற்குப் பதில் தற்போது) டெல்லி அரசோடு கூட்டணி ஒப்பந்தம் செய்து கொண்ட காரணத்தினலா?

மாநிலங்களைப் பொறுத்தவரை — மாநில சுயாட்சியினைப் பொறுத்தவரை—மத்திய அரசின் கட்டுப்பாடுகளும், தணிக்கைகளும், அரசியற் கட்டளைகளும் 1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்திலும், 1950-ஆம் ஆண்டின் நமது அரசமைப்பிலும், ஒரே தன்மையைக் கொண்டவைகளாகக் காணப்படுவதால், பண்டித நேருவின் மேற்கோளில் சுட்டிக் காட்டப்பட்ட காரணங்களின்படி பழைய (ஆங்கிலேய) ஏகாதிபத்தியம், 1950-ஆம் ஆண்டிற்குப் பின்னர் (டெல்லியின்) ஏகாதிபத்தியமாக மாற்றப்பட்டுள்ளது என்பது நன்கு விளங்கும்.

எனவே, அடிமைப்படுத்தப்பட்ட இந்தியாவிலிருந்த மாநிலங்களும் விடுதலை பெற்ற இந்தியாவிலிருக்கும் இப்போதைய மாநிலங்களும், ஒரே தன்மை வாய்ந்த ஆதிபத்திய அரசையே தமக்கு மேல் பெற்றிருப்பது கண்கூடு. ஒருக்கால் இந்திய நாட்டிற்குத் தரப்பட்ட சுதந்திரம் மாநிலங்களுக்கு வரவில்லை போலும்.

முன்னாள் மத்திய அமைச்சரும், இந்திய அரசமைப்புச் சட்டத்தை உருவாக்கியவர்களில் ஒருவருமான

திரு. கே. எம். முன்ஷியவர்கள்,

''ஆங்கில (அரசிடமிருந்த) ஆட்சி அதிகாரங்கள், இந்தியத் துணைக் கண்டத்திற்கு மாற்றப்பட்டபோது, உண்மையில் அந்த அதிகாரங்கள் முழுவதும் காங்கிரஸ் கட்சியின் மேலிடத்துத் தலைமைக்கும் முஸ்லீம் லீக்கின் மேலமைப்புக்கும் தான் முறையே வழங்கப்பட்டன.''10

என அறுதியிட்டுக் கூறுகிறார்.

திரு. K. M. முன்ஷி அவர்களின் கருத்தையும், நேரு அவர்களின் வாசகத்தையும், சந்தானத்தின் முடிவினையும் சூத்திரமாக வைத்து, 1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்ட விதிகளையும் நமது அரசமைப்பிலுள்ள சட்டக் கூறுகளையும், ஒப்பிட்டு ஆய்வு செய்தால், மாநில சுயாட்சியைப் பொறுத்தவரை, மாநிலங்களின் மேலாட்சி செய்யும் மத்திய அரசின் ஆதிக்கம், இலண்டனிலிருந்து — டெல்லிக்கும், ஆங்கிலேயரிடமிருந்து அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் மேலிடத்திற்கும் மாற்றப்பட்டிருக்கும் ''தகைமை'' விளங்கும்.



10 *Dr. K. M. Munshi*, "Pilgrimage to Freedom" (1967) Page 196

## 2. மாநிலத்தை அழிக்கும் முதல் நான்கு விதிகள்

"கூட்டாட்சிக் கொள்கைகளைச் சார்ந்த எந்த ஒரு சிறப்பு அம்சத்தையும் நமது இந்தியஒன்றியம் பெற்று விளங்க வில்லை. அரசமைப்புச் சட்டத்தின் ஆரம் பத்திலிருக்கும் முதல் நான்கு சட்ட விதிகளே, அது ஓர் ஒற்றை ஆட்சி கொண்ட அரசமைப்புச் சட்டம் தான் என்பதைத் தெளிவு படக்கூறுகின்றன. இந்திய ஒன்றியத்தின் பல நிலப் பிரிவுகளை, எந்தப் பெயரினை இட்டு அழைத்தாலும் சரியே,ஒன்றியத்திற்கும் அதன் அங்கங்களான மாநிலங்களுக்கும் தரப்பட்ட அதிகா ரங்கள் எப்படிப் பிரித்து வழங்கப்பட் டிருந்தாலும் சரியே, அவை யெல்லாம் (மத்திய அரசின்) நிர்வாக வசதிக்காகவே ஏற்படுத்தப் பட்டவை யாகும்.அவை (மத்திய) நிர்வாகத்திற்குத் துணை செய்யாமல் இடை யூறு விளைவித்தால் அரசியல் சட்டத்தின் துணை கொண்டு, அந்த மாநிலங்களும், அதிகாரப் பாகு பாடும் (மத்திய அரசால்) திரும்பப் பெற்றுக் கொள்ளப்படும், அல்லது மாற்றப்பட்டு விடும். அல்லது அடியோடு ஒழிக்கப்பட்டு விடும்."

— டாக்டர். கிருஷ்ண முகர்ஜி.

கூட்டாட்சியின் உயிர் மாநில சுயாட்சி. உயிரின்றி உட லில்லை. மாநில சுயாட்சி யின்றி, கூட்டாட்சிக்குப் பொருள் இல்லை. ஒரு நாட்டினுடைய அரசாங்கம், கூட்டாட்சி முறை யில் தான் இயங்குகின்றதா என்பதை அதன் அரசியலமைப்பே உறுதி செய்கிறது. கூட்டாட்சி நாட்டிலிருக்கும் மத்திய-மாநில அரசுகளின் அதிகாரப் பிரிவினையையும்,நிர்வாக உறவுகளையும், சட்டம் செய்யும் உரிமைகளையும் நிதி சார்ந்த தொடர்புகளையும்

---

1 Dr. P. Krishna Mukherjee, "Is India a Federation?" — Indian Journal of Political Science, July, September, 1954, P. 179

அந்நாட்டின் அரசியல் சட்டமே வரையறை செய்கிறது. மத்திய–மாநில அரசுகளுக்கு இடையேயுள்ள அரசியல், நிதி, நிர்வாகம் மற்றும் சட்டத் துறைத் தொடர்புகள் ஆகியவை மத்திய–மாநில உறவுகள் ( Union State Relations ) எனப்படு கின்றன. ஒவ்வொரு கூட்டாட்சி அரசியல் சட்டத்திலும் மத்திய-மாநில உறவுகள் பற்றிய சட்ட விதிகள் தெளிவாகவும் அறுதியிட்டும் எழுதப்பட்டிருக்கும். இந்திய அரசியல் சட்டத் திலும், மத்திய–மாநில உறவுகள் பற்றிய சட்ட விதிகள் மிக முக்கியக் கூறாக விளங்குகின்றன.

## I

## மத்திய - மாநில உறவுகள் பற்றிய அரசியல் சட்ட விதிகள்

நமது இன்றைய அரசமைப்புச் சட்டத்தின் பல பகுதிகளி லும் (Parts), சில சட்ட விதிகளிலும் மத்திய – மாநில உறவுகள் இடம் பெற்றுள்ளன. அவை போக, சில அத்தியாயங்களும் கூட (Chapters) மத்திய – மாநில உறவுகள் குறித்துப் பேசுகின்றன. மாநில சுயாட்சி பற்றிய நமது ஆய்விற்கு அந்தத் "தனிப் பகுதிகளும்," "சில அத்தியாயங்களும்" மிக மிக இன்றியமை யாதவை.

அவையாவன :-

1) **சட்டவிதி 1 :-**
"ஒன்றியம்" ( Union ).

2) **சட்டவிதிகள் 3 மற்றும் 4 :-**
மாநிலங்களின் நிலப்பரப்புகளைக் கூட்டுவதையும் குறைப்பதையும் மாற்றுவதையும் பற்றிப் பேசுகின்ற சட்ட விதிகள் (Formation of new States, Alteration of Area. Boundaries or names of states ).

3) **VI-ஆம் பகுதியின் 2-ஆம் அத்தியாயம் சட்ட, விதிகள் 154 முதல் 160 முடிய :-**
மாநில நிர்வாகத் தலைவரான ஆளுநரைப் பற்றியும்

அவரது அதிகாரங்களைப் பற்றியும் குறிப்பிடப்படும் சட்ட விதிகள் .

4) சட்ட விதி 162 :-

மாநிலத்தினுடைய நிர்வாக அதிகாரத்தின் அளவு .
( Extent of Executive power of State ).

5) சட்ட விதி 163 மற்றும் 164 :-

மாநில அமைச்சரவை பற்றிக் குறிப்பிடும் விதிகள்.
( Council of Ministers and other provisions ).

6) XI-ஆம் பகுதி - முதல் அத்தியாயம் :-

சட்டமியற்றுத் துறையில் மத்திய – மாநில உறவுகள் (Legislative Relations).

7) XI-ஆம் பகுதி – இரண்டாம் அத்தியாயம் :-

மத்திய - மாநில நிர்வாக உறவுகள் .
(Administrative Relations).

8) XII - ஆம் பகுதி - முதல் அத்தியாயம் :-

நிதி உறவுகள் . (Financial Relations).

9) XII-ஆம் பகுதி - இரண்டாம் அத்தியாயம் :-

மத்திய அரசும் மாநில அரசுகளும் முறையே கடன் பெறுதல். (Borrowing).

10) XIII-ஆம் பகுதி :-

வர்த்தக வாணிகத்தைப் பற்றிய உறவுகள்.
(Trade commerce and inter course within India).

11) XVII-ஆம் பகுதி:-

ஆட்சிமொழி மற்றும் நீதிமன்ற மொழி, வட்டார மொழிகள், பற்றிய சட்டவிதிகள், தனி நெறிமுறைகள். (Official Language, Regional Language, Languages of Supreme Court and High Courts; Special Directions).

12) XVIII-ஆம் பகுதி :-
நெருக்கடி நிலை பற்றிய சட்ட விதிகள்.
(Emergency Provisions).

13) XX-ஆம் பகுதி :-
அரசமைப்புச் சட்டத்தின் திருத்தங்கள்.
(Amendment of the Constitution).

14) VII-ஆம் அட்டவணை VII Schedule:-
1. முதற் பட்டியலான மத்திய அரசின் அதிகாரப் பட்டியல்.
2. இரண்டாம் பட்டியலான மாநில அரசின் அதிகாரப் பட்டியல்.
3. மூன்றும் பட்டியலான மத்திய - மாநில அரசுகளுக்கான பொதுப்பட்டியல்.
[List I - Union List; List II - State List; List III - Concurrent List].

15) மற்ற தனிச் சட்ட விதிகள் :-
அரசமைப்புச் சட்டத்தில் ஆங்காங்கே உள்ளவை.

இந்தப் பகுதியில் மத்திய-மாநில உறவுகள் பற்றிய புல சட்ட விதிகளையும், பகுதிகளையும், அத்தியாயங்களையும் மாநில சுயாட்சிக் கொள்கையின் அடிப்படையில் தனித் தனியாக ஆய்வு செய்யப்பட்டுள்ளன.

## II

## "கூட்டாட்சியுமல்ல"; "ஒற்றையாட்சியுமல்ல"—இரண்டுமுள்ள புதிய கலவை

இந்தியா, முழு மாநில சுயாட்சியுடன் கூடிய ஒரு கூட்டாட்சி நாடா?

நமது அரசியலமைப்பை உருவாக்குவதற்காகக் கூடிய அரசியல் நிர்ணய சபையின் முதற் கட்டத்திலிருந்து இன்று வரை, பல அரசியல் சட்ட நிபுணர்களையும் அரசியல்வாதிகளையும் ஆட்டிப் படைக்கிறது, இந்தச் சிறு வினா?

நமது அரசியலமைப்புச் சட்டத்தின் "கூட்டாட்சி" (Federation) என்ற சொல், எங்குமே காணக் கிடைக்க வில்லை. இந்தியாவின் பெரிய சட்ட மூளைகள் எல்லாம் சேர்ந்து, ஏறத்தாழ மூன்று ஆண்டுக் காலம் செலவிட்டு உருவாக்கிய அரசியலமைப்பில், "கூட்டாட்சி" என்ற வார்த்தையை ஒருக்கால் தவருக நழுவ விட்டு விட்டார்களா? இல்லை.

"கூட்டாட்சி" என்ற சொல்லை வேண்டு மென்றேதான் நமது அரசமைப்பில் சேர்த்தாமல் விட்டு விட்டார்கள். குறிப்பாக "அதைப் பயன் படுத்தக் கூடாது" என்ற தெளிந்த நோக்கத்தோடுதான் நமது அரசமைப்புச் சட்டத்திலிருந்து அச்சொல்லை அகற்றி விட்டார்கள்.

முதலில் எழுதப்பட்ட வரைவுச் சட்டத்தில் (Draft Constitu-tion) கூட அது இடம் பெற்றிருந்தது. ஆனல், டாக்டர் அம்பேத்கார் அவர்கள், அச்சொல்லால் பல பின் விளைவுகள் நேர்ந்து விடும் எனக் கூறி, பிடிவாதமாகக் 'கூட்டாட்சி' என்ற சொல்லை ஏற்க மறுத்து விட்டார். அரசியல் நிர்ணய சபையும் அச்சொல் தேவை யில்லை என்ற முடிவுக்கு வந்தது.

அப்படியெனில், நமது அரசியல் சட்டத்தின் கர்த்தாக்கள் "கூட்டாட்சி" என்ற சொல்லை அதில் பயன் படுத்தாததினுல், இந்தியா—"ஒரு கூட்டாட்சி நாடல்ல" என்று தானே பொருள்? அதனுல், "இந்திய மாநிலங்களுக்கு சுயாட்சியும் வழங்கப்பட வில்லை என்றுதானே அதன் அர்த்தம்" —என்ற அவசர முடிவுக்கு யாரும் வந்துவிட வேண்டாம்.

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசமைப்புச் சட்டத்திலும் கூட, "கூட்டாட்சி (Federation)" என்ற சொல் பயன் படுத்தப் பட வில்லை என்ருலும், கூட்டாட்சி முறைக்கே அதன் அரசியல் சாசனம் ஓர் இலக்கணமாகத் திகழ்கின்றது.

சோவியத் ரஷ்ய நாட்டின் அரசமைப்புச் சட்டத்திலும், "கூட்டாட்சி" என்ற சொல் பயன் படுத்தப்பட வில்லை. ஆனுல் அதனை, ஒரு கூட்டாட்சி நாடென்று தான் எல்லாரும் அழைக் கிருேம்.

சுவிட்சர்லாந்து நாடும்கூட, "கூட்டாட்சி நாடு" என அதன் அரசமைப்புச் சட்டத்தால் அழைக்கப்படுவ தில்லை. மாருக "நேசக்கூட்டு" (Confederation) என்ற பதமே அதன்

அரசியல் சாசனத்தில் பயன் படுத்தப்பட்டுள்ளது. எனினும், ஒரு சிறந்த கூட்டாட்சி நாட்டிற்கு, சுவிட்சர்லாந்து நாடும் முன்னுதாரணமாய்த் திகழ்கிறது.

இந்த வாதங்களின் அடிப்படையில் பார்க்கும் போது, நமக்கு மற்றுமொரு கருத்தும் முன் வந்து நிற்கும். ''கூட்டாட்சி'', என்ற பெயரில்லாமல், பல நாடுகள் கூட்டாட்சி நாடுகளாக இருக்கின்றன. இந்திய அரசியல் சாசனத்திலும் ''கூட்டாட்சி'' என்ற சொல், வேண்டுமென்றே விடப்பட்டுள்ளது. எனவே, ''இந்தியாவும் மாநில சுயாட்சி கொண்ட ஒரு கூட்டாட்சி நாடென்று நாம் ஏன் ஏற்றுக் கொள்ளக் கூடாது'' என்பதே அந்த இன்னொரு கருத்து. அந்தக் கருத்தும் சரியல்ல; ஏன்?

ஒரே சர்க்கார் ஆளக் கூடிய சில ஒற்றை ஆட்சிமுறை களையும் நமது அரசமைப்புச் சட்டம் படைத்து வைத்துள்ளது. மாநிலங்களின் சுயாட்சியை நெருக்கிச் சுருக்கக் கூடிய பல ஏற்பாடுகளையும் அது வேண்டுமென்றே செய்து வைத்துள்ளது.

ஐக்கிய அமெரிக்க நாடுகளின் அரசியல் சாசனத்தில் அந்த ஒற்றை ஆட்சி முறைகள் இல்லை. சுவிட்சர்லாந்து நாட்டு அரசமைப்புச் சட்டத்திலும் அந்த ஒற்றை ஆட்சி ஏற்பாடுகள் இல்லை. சோவியத் ரஷ்ய நாட்டின் அரசியல் சாசனத்தில், மாநிலங்கள் விரும்பினால் ரஷ்யக் கூட்டாட்சியிலிருந்து தனித்துப் பிரிந்து போகக்கூட, அதில் மாநிலங்களுக்கு உரிமை யளிக்கப்பட்டுள்ளது.

எனவே, ''கூட்டாட்சி'' என்ற சொல்லின் பதப் பிரயோகத்தினால் மட்டுமே, ஒரு நாட்டின் அரசமைப்புச் சட்டம் அந்நாட்டிற்குக் கூட்டாட்சி முறையை வழங்கி விடுவ தில்லை. ஏனெனில் ''கூட்டாட்சி'' என்ற சொல், பயன் படுத்தப் படாமலேயே கூடப் பல அரசியல் சாசனங்கள், உண்மைக் கூட்டாட்சி நாடுகளாக இயங்கி வருகின்றன. ஆக, சொற் சிலம்பத்தில் அடிப்படைப் பொருளில்லை; அரசியலமைப்புச் சட்டத்தில் விரவி நிற்கும் உட்பொருளைக் கொண்டே ஒரு நாடு கூட்டாட்சி நாடா? அல்லது ஒற்றையாட்சி நாடா? அல்லது அரைகுறைக் கூட்டாட்சி நாடா? என்பதை முடிவு செய்ய வேண்டும்.

இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தில் ''கூட்டாட்சி'' என்ற சொல் பயன் படுத்தப்படாததால் அது ஓர் ஒற்றையாட்சியைக் கொண்ட நாடல்ல. ஒருக்கால் இப்போதிருக்கும் இதே அரசியல் சட்டத்தில் '' கூட்டாட்சி '' என்ற சொல் பயன் படுத்தப்பட் டிருந்தாலும், அது உண்மையான ஒரு கூட்டாட்சி நாடாக ஆகி விடாது.ஏனெனில்,இந்திய அரசியலமைப்பில் இவை யிரண்டுமே (கூட்டாட்சி முறையும் ஒற்றையாட்சி ஏற்பாடுகளும்) '' கலவை '' செய்யப்பட்டுள்ளது. அதில் கூட்டாட்சிப் பாணியும் உண்டு. ஒற்றை யாட்சி முறைகளும் உண்டு. அதனுல்தான் '' கூட்டாட்சி '' என்ற சொல் நமது அரசியலமைப்பில் பயன் படுத்தப்பட வில்லை.

## III

## யூனியன் [ Union ] அல்லது ஒன்றியம் !

இந்தியாவின் பல இனங்களையும் பல மொழிகளைப் பேசும் மக்கள் சமுதாயங்களையும் தனி வரலாறுகளைக் கொண்டதும் தனித் தட்பவெட்ப நிலை கொண்டதுமான, பல மாநிலப் பகுதிகளையும், ஒன்ருக இணைப்பதற்கு ஒரு கூட்டாட்சி முறை அமைப்புத்தான் சாலச் சிறந்ததென இந்தியா விடுதலை யடைவதற்குப் பல ஆண்டுகளுக்கு முன் பிருந்தே பெரும்பாலான தேசியத் தலைவர்களும் அரசியல் வித்தகர்களும், வலியுறுத்தி வந்தனர். ஆனுல் வரலாற்றின் அழுத்தத்தால் பாக்கிஸ்தான் தனிநாடாகப் பிரிந்து போயிற்று. வேறு பகுதிகளும் இந்தியாவிலிருந்து இனிப் பிரிந்து போய்விடுமோ எனத் தேசியத் தலைவர்கள் ஐயமுற்றனர்; அச்சமும் கொண்டனர். '' கூட்டாட்சி '' என்பது பல நாடுகளின் '' இணைப்பை '' மட்டுமே குறிக்கிறது. இணைப்பென்ருல் ''பிரிவினை''என்ற உட்பொருளும் அதில் தொக்கி நிற்கின்றது. ஆகவே, பாகிஸ்தான் பிரிந்த பின்னுல், இனிமேல் ''அழிக்க முடியாத ஒரு கூட்டாட்சியை'' (Indestructable Union) இந்தியாவில் உருவாக்கி விட வேண்டு மென்ற முடிவுக்கு அவர்கள் வந்தனர் ; அதற்குரிய ஓர் அரசியலமைப்பையும் படைக்க வேண்டும் என்று நமது எல்லாத் தலைவர்களும் அரசியல் மற்றும் சட்ட வித்தகர்களும் கருதினுர்கள். எனவே, ''பிரிவினைக் கிடமில்லாத கூட்டாட்சி'' என்ற பொருளைக் கொடுக்கின்ற ஒரு சொல்லைத் தேடிக் கண்டு பிடித்தனர். அச் சொல்லை நமது அரசமைப்புச் சட்டத்தின் முதல் சட்ட விதியிலும் பயன்படுத்தினர். அந்தச் சொல்தான் ''யூனியன்'' (Union) அதாவது ''ஒன்றியம்'' என்ற சொல்.

**இந்தியா - "மாநிலங்களைக் கொண்ட ஓர் ஒன்றியம்?"**

பெடரேசன் (Federation) என்ற ஆங்கிலச் சொல், இலத்தீன் வார்த்தையான "போடஸ்" (Foedus) என்பதிலிருந்து பிறந்தது. அதற்கு "உடன்படிக்கை" அல்லது "ஒப்பந்தம்" என்று பொருள். யூனியன் (Union) என்ற ஆங்கிலச் சொல் "யுனி" (Uni) என்ற வேர்ச் சொல்லிலிருந்து உருவாகியுள்ளது. 'யுனி' என்றால் 'ஒன்று' எனப் பொருள். அஃதாவது, "ஒன்றிப் போதல்" — "ஒன்றோடொன்று கலத்தல்" — என்ற ஒருமைத் தன்மையை அச்சொல் காட்டுகிறது. "பெடரேசன்" அல்லது "கூட்டாட்சி" என்ற சொல் வெறும் 'இணைதலை' மட்டும் குறித்தால், 'யூனியன்' அல்லது 'ஒன்றியம்' என்ற சொல், "ஒன்றறக் கலந்து விடுதல்" என்ற பொருளைக் கொடுக்கிறது.

இந்தியா, பல மாநிலங்களை இணைத்துக் கொண்ட ஒரு நாடு மட்டுமல்ல; அதிலுள்ள பல மாநிலங்களும் ஒன்றித்துப் போய்ப் பிரிக்க முடியாதபடி ஒன்றறக் கலந்துவிட்ட தன்மையைக் கொண்ட ஒரு நாடு என்பதனைக் காட்டவே, இன்றைய அரசியலமைப்புச் சட்டத்தின் முதல் விதியில்,

"இந்தியா அதாவது பாரதம், மாநிலங்களைக் கொண்ட ஓர் ஒன்றியம்" "India that is Bharath shall be A UNION OF STATES" எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

அதன் விளக்கத்தை, அதனை உருவாக்கியவரான, டாக்டர் அம்பேத்கார் அவர்கள், அரசியலமைப்புச் சபையில் எடுத்துக் கூறும் போது,

> "தென் ஆப்பிரிக்க நாடு ஓர் ஒற்றை ஆட்சி நாடாக இருந்தாலும் அது 'ஒன்றியம்' என்றே குறிக்கப்படுகிறது. ஆனால், கூட்டாட்சி நாடாக உள்ள கனடாவும், ஒன்றியம் என்றே அழைக்கப்படுகிறது. அதைப்போல, இந்திய அரசமைப்பும் 'கூட்டாட்சி முறையைச் சார்ந்ததாக' இருந்தாலும், அதை 'ஒன்றியம்' என அழைத்தால், அது வழக்காற்றிற்கு எதிரானதல்ல. ஆனால், 'ஒன்றியம்' என்ற சொல் ஏன் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பது தான் முக்கியமானது. கனடிய அரசுச் சட்டத்தில் ஒன்றியம் என்ற சொல் ஏன் பயன்படுத்தப்பட்டது என்று எனக்குத் தெரியாது. ஆனால், நமது

அரசமைப்பை வரைந்தவர்கள் ஒன்றியம் என்ற சொல்லை, ஏன் பயன்படுத்தினார்கள் என்று என்னால் சொல்ல முடியும். இந்தியா ஒரு கூட்டாட்சிதான் என்பதை அவர்கள் தெளிவு படுத்த விரும்பினாலும், அந்தக் கூட்டாட்சி, பல நாடுகள் இணைந்ததால் ஏற்பட்ட ஒரு நாடல்ல. ஓர் ஒப்பந்தத்தின் மூலமாகப் பல நாடுகள் இணையப் பெற்று இந்தியக் கூட்டாட்சி உருவாகாததால், இந்தியாவிலிருந்து பிரிந்து போகக் கூடிய உரிமை எந்த மாநிலத்திற்கும் இல்லை. அது அழிக்க முடியாத ஒரு கூட்டாட்சி என்பதால், அது 'ஒன்றியம்' எனப்படுகிறது. நிர்வாக வசதியை உத்தேசித்து இந்த நாடும், அதன் மக்களும், பல்வேறு மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தாலும், இந்திய நாடு ஒன்றறக் கலந்து விட்ட முழுமையான ஒரு நாடு; அதன் மக்கள்-ஒரே மூலத்திலிருந்து பிறந்த தனித்தவோர் ஆட்சி பீடத்தின் கீழ் வாழ்ந்து வருகிற ஒரே மக்கள். அமெரிக்க மக்கள் தங்களது கூட்டாட்சியை அழிக்க முடியாத கூட்டாட்சி என்று நிலை நாட்டுவதற்கும் அதிலிருந்து எந்த மாநிலமும் பிரிந்து போவதற்கு உரிமை கொண்டவை யல்ல என்பதை நிலை நாட்டுவதற்காகவும் ஓர் உள்நாட்டுப் போரையே நடத்த வேண்டியதாயிற்று. பின்னால் அதை யூகத்திற்குரிய ஒரு பிரச்சனையாகவும் விவாதத்திற்குரிய ஒரு சிக்கலாகவும் விட்டு வைக்காமல், அவைகளை இப்போதே தெளிவாக்கி விடுவதுதான் சிறந்ததாகும் என்றே நமது வரைவுக் குழுவும் கருதிற்று.''[2]

எனத் தெளிவாக்குகிறார்.

டாக்டர். அம்பேத்கார் அவர்களின் விளக்கத்தில் மாநில சுயாட்சி பற்றிய நமது ஆய்வுக்கு வேண்டிய பல மூலக் கூறுகள் தெளிவாக்கப்பட்டிருப்பது தெரிய வரும்.

அவையாவன:

1. ''இந்தியா ஒப்பந்தத்தால் ஏற்பட்ட ஒரு கூட்டாட்சி யல்ல.''

---

2 C A D Vol, VII, P. 43

அதனால், மாநிலங்களுக்கென்று இயற்கையான - தனித்த - உரிமைகளில்லை, என்பது தெளிவாகிறது.

2. ''எனவே, மாநிலங்களுக்குப் பிரிந்து போகும் உரிமை யில்லை.''

அதனால், மாநிலங்களுக்கு முழுத் தன்னாட்சி கிடைக்காது.

3. ''நிர்வாக வசதிக்காகவே இந்தியா பல மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது'.'

எனவே, மாநிலங்களைத் தனி அரசியல் உருப்படிகள் (Political Entities) எனக் கூற முடியாது.

4. ''இந்திய மக்கள் ஒரே மூலத்திலிருந்து பிறந்த தனித்த தோர் ஆட்சி பீடத்தின் கீழ் வாழ்கின்ற ஒரே மக்கள்.''

எனவே, பல மாநிலங்களின் மக்கள், பல மொழிகளைப் பேசினாலும், பல பண்பாடுகளைப் பெற்றிருந்தாலும் பல இனங்களைச் சார்ந்தவர்களாக இருந்தாலும் அவர்களெல் லாம் ஒரே மூலத்தைக் கொண்ட, ஒரே ஆட்சியின் கீழ் இயங்கும் ஒரே மக்கள். அவர்களுடைய தனித்தன்மைகள், ஆட்சியளவிலும் அரசியல் மட்டத்திலும் ஏற்றுக் கொள்ளப் படவில்லை. இந்தியாவின் ஆட்சி முறை ''ஏறக்குறைய ஒற்றை ஆட்சி முறையின் இலக்கணத்தைத் தான் பெற் றிருக்கும். மொழி, இன, பண்பாட்டு பேதங்கள் இல்லாமல், எல்லா மக்களும் ஒருமைப் படுத்தப்பட்டு விடுவர்.

ஆக, இந்திய மாநிலங்கள் தனித்த அரசியல் பகுதிகள் அல்ல என்பதையும் தனித்த உரிமைகளைப் பெற்றவைகளல்ல என்பதையும் தன்னாட்சிக்கு ஏற்றவையல்ல என்பதையும் அதன் மக்களும், தனித் தன்மைகளுக்கு லாயக்கற்றவர்கள் என்பதையும் அரசியல் சட்டத் தில் பயன் படுத்தப்பட்டுள்ள 'ஒன்றியம்' என்ற சொல்லும் அதற் களிக்கப்பட்ட அம்பேத்காரின் விளக்கமும் தெளிவாக்குகின்றன.

## IV

## வன்மையான மத்திய அரசு — அரசியற் சட்டத்தின் முதன்மைப் படைப்பு

மேற்சொன்ன நான்கு அம்சங்களையும் அடிப்படையாக வைத்தே நமது இந்தியக் கூட்டாட்சியும் உருவாக்கப்பட் டுள்ளது. அதாவது ஒரே மக்களுக்கான ஒரே மூலத்திலிருந்து

பிறக்கக்கூடிய, ஒரே சர்க்காரான ''வலிமையான மத்திய அரசே''இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் முதன்மையான படைப்பாகும். அப்படிப்பட்ட வலிமையான ஒரு மத்திய அரசிற்குத் தேவையான பல ஏற்பாடுகளும் இன்றைய அரசமைப்பில் உருவாக்கப்பட்டுள்ளன. அந்த ஏற்பாடுகளைத் தான் ஒற்றையாட்சி ஏற்பாடுகள் எனக் கூறுகிறார்கள்.

உண்மையான கூட்டாட்சியைக் கொண்ட அரசியல் சாசனங்கள், மிக்க வலிமையான மத்திய அரசுக்குத் தேவையான ஒற்றையாட்சி முறைகளை ஏற்றுக்கொள்வதில்லை. ஏனெனில், மத்திய அரசும் மாநில அரசுகளும் தனித்தனிபாகவும் சம உரிமையுடனும் சுயாட்சியுடனும் ஒன்று பட்டு இயங்க வேண்டும் என்பதே கூட்டாட்சிக் கொள்கையின் மூலத் தத்துவம். அதாவது முழு மாநில சுயாட்சியே உண்மைக் கூட்டாட்சியின் உயிர் போன்றது. ஆனால் உண்மைக் கூட்டாட்சிக்குரிய வகையில் இன்றைய நமது அரசியல் அமைப்பு,படைக்கப்பட வில்லை. மாறாக, வலிமையான ஒரு மத்திய அரசின் கீழ் இயங்கும் வலிவற்ற மாநிலங்களையும் முழுத் தன்னாட்சியற்ற மாநில அரசுகளையும் அது படைத்து வைத்துள்ளது. அதனை உருவாக்கியவர்கள் மத்திய அரசினுடைய பேராதிக்கத்தையும் அந்தப் பேராதிக்கத்தை மாநிலங்கள் ஏற்றுக்கொள்ள வைப்பதற்குரிய வழி வகைகளையும் அதிற் செய்து வைத்துள்ளனர்.

அம்பேத்காரின் விளக்கத்தில் கண்ட இந்த நடைமுறை ஏற்பாடுகள் (வன்மை கொண்ட மத்திய அரசுக்கான ஏற்பாடுகள்) இன்றைய அரசியல் சட்டத்தின் எல்லாப் பகுதிகளிலும், ஊடுருவி — இழையோடி, விரவி — நிற்பதை, நாம் எளிதில் காணலாம்.

அதனால்தான், மிகப் பெரிய அரசியல் சட்ட நிபுணரான திரு. K. C. வியர் ( K. C. WHEARE ) அவர்கள், இந்தியக் கூட்டாட்சி அரசமைப்பை,

''அரைகுறைக் கூட்டாட்சி (Quasi Federation).''[3]

எனக் குறிப்பிடுகிறார்.

---

3 Prof. K. C. Wheare, "Federal Goverament" [1971] Page.28

"In practice, the Government like The Constitution of India is Quasi Federal, not strictly Federal."

திரு. K. சந்தானம் அவர்கள்,

" மேலாதிக்கம் படைத்த கூட்டாட்சி ( Paramount Federation )." 4

என்ற இந்திய நாட்டை விளிக்கிறார்.

"So it will be appropriate to call our federation a "Paramount Federation". It may be a new phrase, but it describes correctly the existing state of affairs."

டாக்டர் B. M. குப்தா அவர்கள்,

"ஒரு கூட்டாட்சி நாடல்ல; அதிகாரங்கள் பரவலாக்கப்பட்ட ஓர் ஒற்றையாட்சி நாடு."5

என இந்திய நாட்டை அழைத்தார்.

"India would be not a federal state but a decentralised unitary state."

திரு. சியாமானந்தன் சகே அவர்கள் இந்தியக் கூட்டாட்சி முறையைப் பற்றி விமரிசிக்கும்போது,

"ஒற்றை ஆட்சி முறையை மொத்தமாகச்சார்ந்திருக்கக்கூடிய கூட்டாட்சி மற்றும் ஒற்றை ஆட்சி அமைப்புக் (Federo and Unitary System) கொண்டது. அதன் (கூட்டாட்சியின்) மாநிலங்கள் மத்திய அரசையே நிரந்தரமாக அண்டிக் கிடக்கும்." 6

எனக் கூறுகிறார்.

"The constitution had created a kind of federo-Unitary system leaning heavily towards a unitary system and the units would be perpetual wards of the centre."

---

4 Mr. K. Santhanam, "Union-State Relations in India" [1963] Page, 12

5 Mr. B. M. Gupte, C. A. D., Vol. XI Page. 844

6 Mr. Shymanandan Sahay, C. A. D, Vol. XI Page. 788

திரு. கிருஷ்ண முகர்ஜி அவர்கள் இந்தியாவைப் பற்றிக் கூறும்போது,

"அது கூட்டாட்சி முறையைக் கொண்டதல்ல; ஒற்றை ஆட்சி அரசமைப்பையே கொண்டது."7

என்று குறிப்பிடுகின்றார்.

"The Constitution that emerged out of the August Deliberations of The Constituent Assembly of India in January 1950, is a definitely unfederal or unitary constitution."

இந்திய அரசியல் சட்டத்தை உருவாக்கியவர்களில் ஒருவரான திரு. கே. எம். முன்சி அவர்கள் 1953-ஆம் ஆண்டில் எழுதிய கட்டுரை ஒன்றில்,

"இந்தியா ஒரு கூட்டாட்சி நாடல்ல; அது ஓர் ஒன்றியம். அதனுடைய மத்திய அரசு கூட்டாட்சி அரசாங்கம் அல்ல. ஆனால் சமுதாயக் காரியங்களுக்காக நிறைந்த அதிகாரங்களைக் கொண்ட ஓர் அரசாங்கம் (Government of plenary powers and social purposes)." 8

என்று அண்மைக் காலத்தில் அதனை அழைத்தார்,

"India is NOT A FEDERATION but a Union...... The central is NOT A FEDERAL GOVERNMENT but a Government of pleanery powers and social purposes."

மத்தியப் பிரதேசத்தின் ஆளுநராயிருந்த, திரு. K.V.பட்டாஸ்கர் அவர்கள்,

"நமதரசமைப்புச் சட்டம், ஒரு கூட்டாட்சி அரசமைப்பல்ல என்று எனக்குத் தோன்றுகிறது." 9

எனக் கூறுகிறார்.

---

7 Mr. P. Krishua Mukarjee, "Is India A federation?" The Indian Journal of Political Science, July—September issue, 1954 P. 177

8 Quoted in Prof. K. R. Bombwall's "The Foundations of Indian Federalism" (1967) Page 5

9 Mr. H. V. Pataskar, "The Hindustan Times", 24-12-1964 Page. 5

"to my mind our constitution is not a federal one."

எனவே, இந்திய அரசியல் சட்டம்-நெருக்கிச் சுருக்கப்பட்ட மாநில சுயாட்சியைக் கொண்ட ஓர் அரைகுறைக் கூட்டாட்சி அமைப்பு, என்பது தெளிவாகப் புலனுகிறது.

## V

## மாநிலத்தின் நிலப்பகுதிகள் மாநிலத்திற்குச் சொந்தமானவை யல்ல

அரசமைப்புச் சட்டத்தின் மூன்ருவது மற்றும் நான்காம் சட்டவிதிகள் (Articles 3 and 4) கூட இன்றைய அரசியல் சட்டம் ஓர் அரைகுறைக் கூட்டாட்சியைத்தான் படைத்துள்ளது என்பதை மேலும் தெளிவாக்குகின்றன. அவை பற்றி இனிப் பார்ப்போம்.

**சட்டவிதி 3**

இந்திய நாடாளுமன்றம் தனது சட்டத்தின் மூலமாக,

(அ) வேறொரு மாநிலத்திலிருந்து அதன் எல்லேப் பகுதியைப் பிரிவிணே செய்து, ஒரு புதிய மாநிலத்தை உருவாக்கலாம்.

(ஆ) இரண்டு அல்லது இரண்டிற்கும் மேற்பட்ட மாநிலங்களேச் சேர்த்தோ, அல்லது மாநிலப் பகுதிகளேச் சேர்த்தோ அல்லது ஒரு மாநிலத்தின் நிலப் பகுதியையும் மற்ற நிலப் பகுதியையும் ஒன்று சேர்த்தோ ஒரு புதிய மாநிலத்தை உருவாக்கலாம்.

(இ) ஒரு மாநிலத்தின் பரப்பளவை அதிகப்படுத்தலாம்.

(ஈ) ஒரு மாநிலத்தின் பரப்பளவைக் குறைக்கலாம்.

(உ) ஒரு மாநிலத்தின் பெயரையும் மாற்றலாம்; மாநிலங்களேப் பிரிக்கவும் அல்லது சேர்க்கவும் சிதைக்கவும் அழிக்கவும் தேவையான ஒரு மசோதாவைக் குடியரசுத் தலேவர் பரிந்துரையின் பேரில், நாடாளுமன்றத்தின் எந்தவோர் அவையிலும் தாக்கல் செய்யலாம். அந்த மசோதா பற்றிய கருத்துக்களேத் தருமாறு கேட்டு, அந்த மசோதாவில் பாதிக்கப்பட்ட மாநிலங்களின்

சட்டப் பேரவைகளுக்குக் குடியரசுத் தலைவர் அதனை அனுப்பி வைப்பார். அந்த மாநிலங்கள், அந்த மசோதா பற்றித் தங்கள் கருத்துக்களை வழங்குவதற்காக ஒரு குறிப்பிட்ட காலக் கெடுவையும் குடியரசுத் தலைவரே நிர்ணயம் செய்வார். சம்பந்தப்பட்ட மாநிலங்களின் கருத்துக்கள் குடியரசுத் தலைவரால் குறிப்பிடப்பட்ட காலக் கெடுவுக்குள் சமர்ப்பிக்கப்பட வேண்டும்; இல்லையெனில், அந்த மசோதாவால் பாதிக்கப்பட்ட மாநிலங்கள் தங்கள் ஒப்புதலை அதற்குத் தந்துவிட்டதாகப் பொருள். மாநிலங்களை மாற்றியமைக்கும் அந்த மசோதா, குடியரசுத் தலைவரின் இசைவைப் பெற்று, பின்னர் சட்டமாக ஆகி விடும்.

**சட்டவிதி 4**

'மேற்குறிப்பிட்ட சட்டத்தில் ஏற்படும் மாற்றங்களை அனுசரித்து அரசமைப்புச் சட்டத்தின் முதலாவது நான்காவது அட்டவணைகளில் ( I & IV Schedules ) ஏற்படும் மாற்றங்களைக் கொண்ட சில துணை விதிகளையும் அந்த மசோதாவில் குறிப்பிடப் பட்டிருக்க வேண்டும்'.

'மாநிலங்களை மாற்றியமைக்கக் கூடிய மேற்கூறிய சட்டத்தை அரசமைப்புச் சட்டவிதிகளைத் திருத்தக் கூடிய 368-ஆம் சட்ட விதியில் சொல்லப்பட்ட ஓர் அரசியல் சட்டத் திருத்தமாகக் கொள்ளலாம்.'

மேற்சொன்ன மூன்றும், நான்காம், சட்டவிதிகளை ஊன்றிப் படித்தால் மத்திய அரசின் அங்கமான நாடாளுமன்றம், மாநில எல்லைப் பகுதிகளையும் அதன் பரப்பளவையும், கூட்டவும் குறைக்கவும் மாற்றவும் தேவையான எல்லா அதிகாரங்களையும் பெற்றுள்ளது என்ற பேராபத்து நமக்குத் தெரிய வரும். மாநிலங்களின் எல்லைக் கோடுகளை மாற்றக் கூடிய மசோதா, வாக்கெடுப்பிற்காக வரும் போது, நாடாளுமன்றத்தில் ஆசராகியிருக்கும் உறுப்பினர்களில் பகுதிப் பேர்களுக்கு மேல் ஒருவர் வாக்களித்தால் கூட, **ஒரு மாநிலத்தின் எல்லையை—அல்லது அதன் பரப்பளவை—மாற்றியமைத்து விடலாம் அல்லது வேறொரு மாநிலத்தோடு இணைத்து விடலாம். ஏன்? ஒரு மாநிலத்தையே இல்லாமற் செய்து விடலாம்.**

மேற்சொன்ன சட்ட முறையைப் பயன்படுத்திச் சட்டம் செய்து — இந்திய நாட்டின் வரை படத்திலிருந்து ஒரு மாநிலத்தையே கூட நம் நாடாளுமன்றம் புதியதாக உருவாக்கலாம்; (நமது மத்திய அரசு நினைத்தால்) ஒரு மாநிலத்தையே கூட இல்லாமலும் செய்து விடலாம். இந்தியத் துணைக் கண்டத்தில் குறிப்பிடப்பட்டதொரு மாநிலம் இருக்கவேண்டுமா? அல்லது வேண்டாமா? என்று தீர்மானிப்பதற்குக் கூட ஒரு மாநிலத்திற்கு உரிமை யில்லை. அந்த உரிமை மத்திய நாடாளு மன்றத்திற்கே அளிக்கப்பட்டுள்ளது.

சான்ருக, தமிழகத்தின் பகுதிகளான கோவை, சேலம், திருச்சி ஆகிய மாவட்டங்களைத் தமிழ் நாட்டைச் சேர்ந்தவை யல்ல என்று கூறி, அவை இன்றைய கர்நாடக மாநிலத்தின் ஒரு பகுதியாகத்தான் இனி இருக்க வேண்டும் என்ற விதிகளோடு நாளையே நமது நாடாளுமன்றம் ஒரு சாதாரணச் சட்டத்தை நிறைவேற்றினுலும் போதும் அவை தானுகவே கர்நாடக மாநிலத்திற்குச் சேர்ந்து விடும். ''தமிழ்நாடு'' என்ற ஒரு மாநிலமே வேண்டாம் எனத் தீர்மானித்து அதன் பல மாவட்டங்களை அண்டைய மாநிலங்களுக்குப் பகுத்துக் கொடுத்து விடுவதற்குரிய ஒரு சாதாரணச் சட்டத்தை ஒரே ஓர் அதிக வாக்குடன், நாடாளுமன்றம் நிறைவேற்றினுல், இந்தியத் துணைக் கண்டத்திலிருந்து தமிழ்நாடு என்ற பகுதியே இல்லாமற் போய் விடும்.

இப்படி ஒரு மாநிலத்தின் உருவினையே சிதைக்கக் கூடிய நாடாளுமன்றச் சட்டம் நிறைவேற்றப்படும் போதும், அச்சட்டத்தினை எதிர்க்கவோ—மாற்றவோ—அந்த மாநில அரசிற்கு வாய்ப்புண்டா? இல்லை.

ஒரு மாநிலத்தை உருக்குலைக்க வேண்டும்—அல்லது பிரிக்க வேண்டும்—என்ற சட்டத்தைச் செய்ய வேண்டும் என மத்திய அரசு கருதினுல் குடியரசுத் தலைவர் அதற்குரிய பரிந்துரையைச் செய்ய வேண்டும். குடியரசுத் தலைவருக்கென்று தனி அபிப்பிராயங்கள் கிடையாது. அந்த முடிவை மத்திய அரசுதான் (மத்திய அமைச்சரவை) மேற்கொள்ள வேண்டும். அவ்வகையில் மத்திய அரசு முடிவு செய்தவுடன், குடியரசுத் தலைவர் மூலமாக, அதற்குரிய பரிந்துரை செய்யப்படும். உடனே அதற்குத் தேவையான மசோதா ஒன்றும் தயாரிக்கப்படும்.

குடியரசுத் தலைவர் மாநிலங்களின் கருத்துக்களை அறிவதற்காக மட்டும், அந்த மசோதாவை (அதனால் பாதிக்கப்படும்) மாநிலச் சட்டமன்றங்களுக்கு அனுப்பி வைப்பார். குறிப்பிட்ட அந்த மசோதாவை (பாதிக்கப்பட்ட) மாநிலச் சட்டமன்றத்தில் வைத்து விவாதம் நடத்திய பின்னர், ஏற்கனவே குடியரசுத் தலைவரால் குறிப்பிட்ட ஒரு காலக் கெடுவிற்குள், அந்த மசோதாவால் பாதிக்கப்பட்ட மாநிலம் தனது கருத்துக்களை குடியரசுத் தலைவருக்குத் தெரிவிக்கும். அத்தோடு அந்த மாநில அரசின் வேலை முடிந்தது. ஆனால் அந்த மாநிலத்தின் கருத்துக்களை, குடியரசுத் தலைவர் (மத்திய அரசு) விரும்பினால் ஏற்கலாம்; அல்லது ஏற்காமலும் விட்டு விடலாம்.

அந்த மசோதாவைப் பற்றி மாநிலங்களின் கருத்துக்கள் ''அறியப்படுகிறதே யன்றி'' அக்கருத்துக்கள் குடியரசுத் தலைவரால் ''ஏற்கப்பட வேண்டும்'' என்ற கட்டாயம் கிடையாது. பாதிக்கப் பட்ட மாநிலச் சட்டசபைகளின் ஒப்புதலை (consent) குடியரசுத் தலைவர் பெற வேண்டிய தில்லை,

ஆகவே, இன்றைய அரசமைப்புச் சட்டத்தின்படி, மாநிலங்களின் நிலப்பகுதிகள் மாநில அரசுக்குச் சொந்தமானவையல்ல. அவை மத்திய அரசிற்குச் சொந்தமானவை. மத்திய அரசு நினைத்தால். மாநிலங்களையே மாற்றும்; சிதைக்கும்; பிரிக்கும்; அழித்தும் விடும்.

அமெரிக்காவில்

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசமைப்பில் ஒரு மாநிலத்தின் பகுதிகளை மாற்றி யமைக்கவோ, பிரிவினை செய்யவோ அல்லது இன்னொரு மாநிலத்தோடு இணைக்கவோ வேண்டுமெனில் அச்செயல்களால் பாதிக்கப்படக் கூடிய மாநிலச் சட்ட மன்றத்தின் ஒப்புதலை முதலில் பெற வேண்டும். அத்தோடு, அமெரிக்கக் காங்கிரசினுடைய ஒப்புதலும் தேவை [சட்டவிதி IV பிரிவு (1).]

சம்மந்தப்பட்ட மாநிலச் சட்ட மன்றம், தனது ஒப்புதலைத் தராவிடில் மாநிலப் பகுதிகளை அதிலிருந்து பிரிக்கவும் முடியாது; மாற்றவும் முடியாது; மாநிலப் பெயரைக் கூடத் திருத்தவும் முடியாது.

## ஆஸ்திரேலியாவில்

ஆஸ்திரேலிய நாட்டில், பாதிக்கப்பட்ட மாநிலச் சட்ட மன்றங்கள் மட்டும் அதற்கு இசைவு கொடுத்தால் போதாது; அந்த மாநிலத்தைச் சார்ந்த பெரும்பான்மையான வாக்காளர்களும் மாநிலப்பகுதிகளை மாற்றவோ பிரிக்கவோ ஒப்புதல் தர வேண்டும். அஃதாவது மாநிலங்களின் நிலப்பகுதிகளின் பரப்பு அல்லது எல்லை பற்றிய எந்த வகை மாற்றம் செய்ய வேண்டுமென்றாலும், அதனால் பாதிக்கப்படும் மாநிலச் சட்ட மன்றங்களும், அந்த மாநிலத்தினுடைய பெரும்பான்மையான பொது மக்களும் ஒப்புதல் தர வேண்டும். இவ்விரண்டில் எது குறைந்தாலும், மாநிலத்தைப் பற்றிய மாற்றங்களைச் செய்ய முடியாது.

## சட்டத் திருத்தம் தேவை யில்லை

மற்றக் கூட்டாட்சி நாடுகளில் மாநிலப் பரப்பெல்லைகளிலும், மாநிலப் பகுதிகளிலும், மத்திய அரசு கை வைக்கும் போது, வெறும் நாடாளு மன்றச் சட்டத்தின் மூலமாகச் செய்துவிட முடியாது. அந் நாட்டின் அரசியல் சட்டமே அதற்கேற்றபடி திருத்தப்பட்டாக வேண்டும். ஆனால் இந்திய அரசமைப்புச் சட்டத்தால் உருவாக்கப்பட்ட நமது மத்திய அரசிற்கு, மாநிலத்தின் அளவுகளை மாற்றுவதும், அழிப்பதும், புது மாநிலங்களைப் படைப்பதும் சர்வ சாதாரணமான நிகழ்ச்சிகள்; அரசியல் சட்டத் திருத்தமெதுவும் அதற்குத் தேவை யில்லை. அதற்கு ஒரு சாதாரணச் சட்டமே போதுமானது.

ஒரு மாநில உயர்நீதி மன்றத்தினுடைய நீதிபதியின் பதவியில் காலி ஏற்பட்டால் கூட அந்த இடத்தில் தற்காலிகமான வேறு நீதிபதியை குடியரசுத் தலைவர் நியமிப்பார். இது ஒரு சாதாரணமான நிர்வாகப் பிரச்சனை. ஆனால் இந்தச்சட்ட விதியை மாற்ற வேண்டுமானால் கூட இந்திய அரசியலமைப்புச் சட்டத்தில் திருத்தம் செய்யப்பட வேண்டும். ஆனால் ஒரு மாநிலத்தையே பிரித்து, அழித்து ஒழித்துவிடக் கூடிய ஓர் அசாதாரணமான காரியத்துக்கு அப்படியோர் அரசியல் சட்டத் திருத்தம் தேவை யில்லை. இதுதான் நமது 'ஒன்றிய' அரசமைப்புச் சட்டத்தின் அற்புத விதிமுறை.

அரசியல் சட்டத் திருத்தம் என்ற அத்தியாயத்தில் இவை பற்றித் தெளிவுபடக் கூறப்பட்டுள்ளது. அதனையும் காண்க.

**படைத்தல் - காத்தல் - அழித்தல்**

படைத்தல் — காத்தல் — அழித்தல் ஆகிய சர்வ சக்திகளை யும், இறைவன் பெற்றிருக்கிறார் என்று தத்துவ ஞானிகள் கூறுகின்றனர். அந்தச் சக்திகள் எல்லாம் இறைவனுக்கு மட்டுமே சொந்தமானதல்ல! இந்திய மாநிலங்களைப் படைக்க வும், காக்கவும், அழிக்கவும் தேவையான சர்வ சக்தியையும் நமது இந்தியக் குடியரசுக் கூட்டாட்சி நாட்டின் மத்திய அரசும் பெற்றுள்ளதென்று நமது அரசியல் சட்டத்தை எழுதியவர்கள் நமக்குக் கூறுகின்றனர்.

1953-ஆம் ஆண்டில், சென்னை மாநிலத்திலிருந்து புதிய ஆந்திர மாநிலம் உருவாயிற்று; 1956-ஆம் ஆண்டின் மாநிலப் புனரமைச் சட்டத்தின்படி (States Reorganisation Act-1956) இந்திய நாட்டின் வரைபடமே மாற்றியமைக்கப் பட்டது. பம்பாய் மாநிலம் 1960-இல் இரண்டாகப் பிரிக்கப்பட்டது; புதிய மாநிலங்களான மகாராஷ்டிரமும் குஜராத்தும் உருவாயின. 'அரியானா' வென்றும் பஞ்சாப் மாநிலம் என்றும் இரு மாநிலங் களாகப் பழைய பஞ்சாப் பிரிந்தது. அவைகளின் தலைநகர மான சந்திகார் இரண்டு மாநிலங்களுக்கும் சேராமல் மத்திய அரசைச் சார்ந்த நிர்வாகப் பகுதியாக மாற்றப்பட்டது. அசாம் மாநிலம், மேகாலயா, அருணாசலப் பிரதேசம் போன்றவை, தனித்தனி மாநிலங்களாக மாற்றப்பட்டன. தனித் தகுதி பெற்ற ஒரு மாநிலமாக நாகாலாந்து உருவாயிற்று. தமிழகத் திற்கு, ''தமிழ்நாடு'' என்ற பெயரும், மைசூர் மாநிலத்திற்கு ''கர்நாடகம்'' என்ற பெயரும் ஏற்பட்டன. இவை யெல்லாம் மத்திய அரசிடமிருக்கும் ''படைத்தல்—காத்தல்—அழித்தல்'' என்ற (சட்டவிதி 3-இன்) சர்வ சக்தியினால்தான்.

அரசியலமைப்பு உருவான காலத்தில், சுதேச மன்னர் களின் சமஸ்தானங்கள் முழுமையாக இந்தியாவுடன் இணைக்கப் படவில்லை; மாநிலங்கள் முழுவதும் மொழி அடிப்படையில் மாற்றி அமைக்கப்படவில்லை. எனவே, பிற்காலத்தில் மாநிலப் பகுதிகளை மாற்றியமைக்கவும், மொழி வாரி மாநிலங்களாகப் பிரிக்கவும் புதிய மாநிலங்களை உருவாக்கவும், இந்தச் சட்ட விதிகள் (மூன்றும் நான்காம் விதிகள்) மிகமிக அவசியமெனக் கூறப்பட்டது. ஆனால், அவ்விதிகளுக்கு வரையறை என்பதே இல்லாமல், இப்போதும் அப்படியே இயங்க வேண்டிய அவசிய மென்னவோ?

மாநிலப் பகுதிகளை மாற்றும் மத்திய அரசின் அதிகாரத்தைப் பற்றிக் கருத்துத் தெரிவிக்கும்போது,

> ''(மாநிலத்தை ஆக்குவதற்கும் அழிப்பதற்குமுரிய) இந்தச் சட்டவிதி இப்போதிருக்கும் நிலையிலேயே தொடர்ந்து இருக்க வேண்டுமா என்று ஆலோசிக்க வேண்டிய தருணம் வந்து விட்டது. சென்ற ஒன்பது ஆண்டுகளாக நிறைவேற்றப் பட்ட அரசமைப்புச் சட்டத்தின் ஏழு திருத்தங்களின் மூல மாக நாடாளுமன்றத்தின் அதிகாரங்கள் மேலும் மேலும் விரிவு படுத்தப்பட்டன. அப்படிச் செய்வதற்கு மாருக, நாடாளுமன்றத்தின் அதிகாரங்களைக் கட்டுப்படுத்தக் கூடிய ஓர் அரசியலமைப்புச் சட்டத் திருத்தத்தை நாம் ஏன் நாடக் கூடாது.'' 10

> ''I think it is time to consider whether this provision should continue to be there as it is; whether, for once, the Parliament should not seek an amendment of the Constitution to restrict its own powers rather than extend it as it has done in all the seven amendments to the Constitution which have taken place during the last nine years.''

சந்தானத்தின் இந்த யோசனையை நமது மத்திய அரசு காதில் கூடப் போட்டுக் கொள்ள வில்லை. சென்ற பதினுன்கு ஆண்டு களில் அரசியல் சட்டத் திருத்தங்கள் மூலமாக இன்னும் பல பேரதிகாரங்களை நமது நாடாளு மன்றம் அதிகப் படுத்திக் கொண்டுள்ளதே தவிரக் குறைத்துக் கொள்ள வில்லை.

மொழிவாரி மாநிலங்களின் சீரமைப்பு ஏறத்தாழ முடிந்து விட்டது. மாநிலங்களினுடைய அடித்தளத்தைப் போன்ற மாநிலப் பகுதிகளை, நினைத்தவாறு உருக்குலைக்கும் இந்த அசாதாரணமான சட்டவிதி இனியாவது அடியோடு ரத்து செய்யப்பட வேண்டும். அல்லது ''மாநிலங்களுடைய ஒப்புதல் அதற்குத் தேவையென'' அச் சட்டம் மாற்றப்பட வேண்டும். இல்லாவிடில் மாநிலங்களின் உருவத்தையே சின்ன பின்னப்

---

10 ''Union State Relations in India'' [1963], P. 7

படுத்தப்படக் கூடிய இந்த பயங்கரமான உரிமையையும் அதிகாரத்தையும் மத்திய அரசு, தொடர்ந்து தன்னகத்தே வைத்துக் கொண்டு,மாநிலங்களை இனியும் ஆட்டிப் படைக்காது என்பதற்கு எந்தவித உத்தரவாதமு மில்லை.

**யானையும், மணியோசையும்**

அரசமைப்புச் சட்டத்தின் ஆரம்பத்திலிருக்கும் முதலாவது, மூன்ருவது மற்றும் நான்காம் சட்டவிதிகள் இனி வரப்போகும் மற்ற சட்டவிதிகளின் கொடுமை பற்றிக் கட்டியம் கூறுகின்றன. மாநிலத் தன்னுட்சியை ஒடுக்குவதற்குரிய பேராதிக்கத்தை, நமது மத்திய அரசு பெற்றுள்ளது என்பதற்கான ''வெள் ளோட்டத்தை முதல் நான்கு சட்டவிதிகள் சித்தரித்துக் காட்டுகின்றன.''

''யானைவரும் பின்னே ; மணியோசை வரும் முன்னே!'' என்பது பழமொழி. யானையினுடைய (நமது அரசமைப்புச் சட்டத்தினுடைய) மணியோசையே (முதல் நான்கு விதி களே) இவ்வளவு கர்ண கடூரமாயுள்ளது. பின்னே வரக்கூடிய யானையின் (அரசமைப்புச் சட்டத்தின் மற்ற விதிகளின்) பூதா கார உரு,எப்படிக் கொடுமை பயப்பதாக இருக்கும் என்பதை நாம் காண வேண்டாமா? அதனைப் பற்றி, ஒவ்வோர் அங்க மாகப் பகுத்து, தனித்தனி அத்தியாயங்களில் இனி ஆய்வு செய்வோம்.



## 3. அடிமைச் சாசனத்தின் முதற் கட்டளை

[ சட்டமியற்றுத் துறை ]

"மத்திய அரசிடம் ஏற்கனவே, பெருமளவு அதிகாரங்கள் குவிந்திருப்பதற்கு அரசமைப்புச் சட்டம், வகை செய்துள்ளது. அரசமைப்புச் சட்டத்தை உருவாக்கியவர்கள் கூட எண்ணியிராத புதிய வகைகள் மூலம் - மாநிலங்களின் நிலை குறித்துக் கவலை கொள்ளும் அளவிற்கு - மத்திய அரசு, மேலும் அதிக அளவு அதிகாரங்களை அடைந்துள்ளது."[1]

— பேரறிஞர் அண்ணா அவர்கள்.

கூட்டாட்சி அரசமைப்பில், ஈர் அடிப்படைக் கூறுகள் இன்றியமையாதன. அவை, மாநில அரசுகளும் அவற்றை இணைக்கும் மத்திய அரசும் ஆகும். இவையிரண்டும், அதனதன் அதிகார வரம்பிற்குள் முறையோடு இயங்குவதற்காக, அரசாங்கத்தின் எல்லா அதிகாரங்களையும் மொத்தமாக எடுத்து அவற்றிலிருந்து மாநில அரசுகளுக்கு மட்டும் உரியவை எனவும், மத்திய அரசிற்கு மட்டும் உரியவை என்றும், ஒன்றின் மீது ஒன்று படியாமல், தெளிவாகப் பிரித்து ஒதுக்குவதையே, சட்டமியற்றும் அதிகாரப் பங்கீடு எனக் குறிப்பிடுகிறோம்.

பிரிக்கப்பட்ட அதிகாரங்களைத் தனித்தனியாகத் தொகுத்து அவற்றைத் தனிப் பட்டியல்களாக்கி நமது அரசியலமைப்புச் சட்டத்தில் வடிக்கப்பட்டுள்ளன. மாநில அரசிற்கான சட்டமியற்றும் அதிகாரங்களின் தொகுப்பை, மாநிலப் பட்டியல் (State List) எனவும், மத்திய அரசிற்குரிய சட்டமியற்றும் அதிகாரங்களின் தொகுப்பை மத்தியப் பட்டியல் (Union List) எனவும், மாநில அரசுகளும், மத்திய அரசும் அவையவை வேண்டும் போது சட்டமியற்றக் கூடிய அதிகாரங்களின் தொகுப்பைப் பொதுப் பட்டியல் ( Concurrent List ) எனவும் வழங்கப்படுகின்றன.

---

1 *17—6—1967-இல் தமிழகச் சட்ட மன்றத்தில் ஆற்றிய பேருரையிலிருந்து ஒரு பகுதி.*

ஆனால், எத்துணைக் கூர்த்த மதி படைத்த சட்ட வல்லுநர்களாலும் ஒரு நாட்டினுடைய எல்லா அதிகாரங்களையும் ஒன்று விடாமல் - சேர்த்து, தவறேதும் ஏற்பட்டு விடாமல் – இந்த மூன்று பட்டியல்களிலும், தொகுத்துவிட முடியாதல்லவா? இம் மூன்று பட்டியல்களிலும் விட்டுப் போன அதிகாரங்கள் அவ்வப் போது சூழ்நிலைக் கேற்ப வெளிப்படும். அந்த விட்டுப் போன அதிகாரங்கள், ஓர் அரசியல் சட்டத்தின் நுட்பமான பட்டியல்களிற் கூட ,வரையறுக்கப்படாமல் போய்விடக் கூடும். அந்த வரையறுக்கப்படாத அதிகாரங்கள் தான் "எஞ்சிய அதிகாரங்கள்" (Residuary Powers) எனப்படுகிறது.

## I

## அயல் நாடுகளின் அதிகாரப் பட்டியல்கள்

### 1. அமெரிக்க ஐக்கிய நாடுகள்

அரசின் சட்டமியற்று அதிகாரங்களைப் பட்டியல்களாகத் தொகுக்கும் முறைகளில் பல உள்ளன. அந்தந்த நாட்டின் வரலாற்றுக் கேற்பவே, அதிகாரப் பட்டியல்களின் தொகுப்பு முறையும் அமைகின்றது. உண்மையான கூட்டாட்சி அமைப்பிற்கு முன்னுதாரணமாய் விளங்கும் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் (U.S.A.), நாம் மேலே குறிப்பிட்ட மூவகைப் பட்டியல்களின் தொகுப்புக் கிடையாது.

தொடக்கத்தில் அமெரிக்காவின் ஒவ்வோர் உறுப்பு நாடும், அதனதன் முழு இறைமையையும் அஃதாவது, அரசாங்கத்தின் எல்லா அதிகாரங்களையும் தம்மகத்தே கொண்டிருந்தன. பின்னர் அவை யெல்லாம் சேர்ந்து கூட்டாட்சி அமைப்பு முறையில் ஒரு தேசிய அரசாங்கத்தை அமைத்துக் கொண்டன. அந்தப் பல உறுப்பு நாடுகளின் பொது நலனுக்கேற்ற முறையில், அந்தத் தேசிய அரசாங்கம் (மத்திய அரசு), இயங்க வேண்டியதாயிற்று. ஆகவே, எல்லா உறுப்பு நாடுகளையும் இணைப்பதற்காக மட்டும், சில குறிப்பிட்ட அதிகாரங்கள், அமெரிக்க மத்திய அரசிற்குத் தேவைப்பட்டது.

உறுப்பு நாடுகளுக் கெல்லாம் சேர்த்து மொத்தமாகப் பொது நலன் தரக் கூடிய அதிகாரங்கள் சிலவற்றை மட்டும், தங்கள் தங்கள் சொந்த அரசாங்கத்தின் அதிகாரங்களிலிருந்து, அவை, மத்திய அரசிற்கு விட்டுக் கொடுத்தன. இவ் வகையில் எல்லா

உறுப்பு நாடுகளாலும், மத்திய அரசிற்காகக் கொடுக்கப்பட்ட குறிப்பிட்ட சட்டமியற்றும் அதிகாரங்களை மட்டும் ஒரு பட்டியலில் தொகுத்தார்கள். அந்தப் பட்டியலே இணைப்பரசாங்கத்தின் (Federal Govt.) சட்டமியற்றுத் துறை அதிகாரப் பட்டியலாயிற்று. **அந்த மத்திய அரசுப் பட்டியலில் தெளிவாகவும் வரையறுத்தும் குறிப்பிட்டும் கூறப்பட்ட சில அதிகாரங்களைத் தவிர, மற்ற எல்லா அதிகாரங்களும் அந்தந்த உறுப்பு நாடுகளுக்கே (மாநிலங்களுக்கே) விடப்பட்டன.**

எனவே, அமெரிக்காவில் 'மாநிலப்பட்டியல்', 'பொதுப் பட்டியல்', 'எஞ்சிய அதிகாரங்கள்' எனத் தனித்தனியாக வகைப்படுத்த வேண்டிய தேவை யில்லாமல் போய் விட்டது. மத்திய அரசிற்குரிய அதிகாரப் பட்டியல் ஒன்றை மட்டும் அங்கு உருவாக்கிக் கொண்டு மேற் சொன்ன பகுப்புகளில் அடங்கிய மற்ற அதிகாரங்கள் அனைத்தையும் மாநிலங்களே வைத்துக் கொண்டன. **அதாவது மாநிலங்கள் கொடுத்து, மத்திய அரசு சில அதிகாரங்களைப் பெற்றுக் கொண்டது. மத்திய அரசிலிருந்து மாநிலங்கள் எந்த அதிகாரத்தையும் பெற்றுக் கொள்ளவில்லை.**

ஆனால், உறுப்பு நாடுகளின் பொது நலன் கருதி, சில சமயங்களில் மத்திய அரசின் பட்டியலில் இடம் பெறாத—(ஆனால் சட்டவிதி வியாக்கியானத்தின் மூலம் அதில் இடம் பெறுவதாகக் கருதப்படும்) — மிகச் சில அதிகார இனங்களில் கூட மத்திய அரசு சட்டங்களை இயற்றியது. மாநில அரசுகள்—மத்திய அரசின் போக்கினை 'வரம்புக்கு மீறிய செயல்' எனச் சாற்றி, நீதி மன்றத்தில் வழக்குகளை இட்டபோது வழக்கு மன்றங்கள் அதை ஆய்ந்து நோக்கி, சில அதிகார இனங்களில், மத்திய அரசும் கூட சட்டமியற்றலாம் என அவ்வப்போது தீர்ப்புக்களை வழங்கியுள்ளன. அமெரிக்க ஐக்கிய நாடுகளில், நீதி மன்றங்களின் தீர்ப்புக்களில் குறிப்பிடப்பட்டிருக்கும் சில அதிகாரங்களையும் சேர்த்து மத்திய—மாநில அரசுகளுக்குப் பொதுவான சில அதிகாரங்கள் சென்ற இரண்டு நூற்றாண்டுக் காலத்தில் வளர்ந்துள்ளன. எடை அளவைகள் (Weights & Measures), துறைமுக ஒழுங்கு முறைகள், (Harbour Regulations), குடிமக்களின் பொருளாதார நொடிப்பு நிலை, (Bankruptcy) இன்னோரன்ன சில அதிகார இனங்களில் மட்டும், மத்திய அரசும் சட்டம் இயற்றலாம்; மாநில அரசுகளும் சட்ட மியற்றலாம்.

**2. ஆஸ்திரேலியா**

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் (U.S.A ) ஒற்றைப் பட்டியல் முறையையே, ஏறத்தாழ ஆஸ்திரேலியாவும் பின்பற்றியுள்ளது. 51 மற்றும் 52 ஆகிய சட்டவிதிகளில், ஆஸ்திரேலிய மத்திய அரசினுடைய சட்டமியற்றும் அதிகாரங்கள் தொகுக்கப்பட்டு ஒரு பட்டியலாக ஆக்கப்பட்டுள்ளது. 51–ஆம் விதியில் மத்திய அரசிற் கென்று 39 அதிகார இனங்கள் மட்டுமே குறிக்கப் பட்டுள்ளன. மத்திய அரசு இந்த 39 இனங்களில் சட்ட மியற்றலாம்.

ஆனுல், அமெரிக்க முறையிலிருந்து ஆஸ்திரேலிய முறை ஓரளவிற்கு மாறுபடுகிறது. ஆஸ்திரேலிய மத்தியப் பட்டியலி லுள்ள அதிகார இனங்கள் முழுமையாகவும் தனித்தும் (Exclusively Absolutely) மத்திய அரசிற்கு மட்டுமே சேர்ந்ததாகக் கருதப்படுவ தில்லை.

" மத்திய நாடாளு மன்றத்திற்குத் தனித்ததெனவும் " " மாநிலங்களிடமிருந்து, குறிப்பாக நீக்கப்பட்டவைகள் " எனவும், அரசியலமைப்புச் சட்டத்தில் தெளிவாகக் குறிப்பிட்டுச் சொல்லப்பட்ட — சிற்சில அதிகார — இனங்களில் மட்டும் தான் மத்திய அரசு, தனித்துச் சட்டமியற்ற முடியும்.

இதனடிப்படையில் பார்க்கும் போது, ஆஸ்திரேலிய மத்தியப் பட்டியலில் குறிப்பிடப்பட்ட எல்லா இனங்களிலும் மத்திய அரசே தனித்துச் சட்டமியற்றும் உரிமையைப் பெறுவ தில்லை. மாநிலங்களும் கூட, மத்தியப் பட்டியல் அதிகாரங்கள் பலவற்றில் சட்ட மியற்றலாம். எனவே, ஆஸ்திரேலிய மத்திய அரசுப் பட்டியல் அதிகாரங்கள் மத்திய அரசும் மாநில அரசு களும், அவையவை விரும்பும்போது சட்டமியற்றிக் கொள்ளக் கூடிய ஒரு பொது அதிகாரப் பட்டியல் போலவே தான் நடை முறையில் இயங்கி வருகின்றன.

**3. சுவிட்சர்லாந்து**

சுவிட்சர்லாந்தில், மத்திய நாடாளுமன்றத்திற்குத் தனித்துச் சட்டமியற்றுவதற்காகக் கொடுக்கப்பட்ட சில அதிகாரங்களைத் தவிர, மற்ற எல்லாச் சட்ட மியற்றுத் துறை அதிகாரங்களும்,

காண்டன்கள் ( Contons ) என அழைக்கப்படுகின்ற மாநிலங்களிடமே வைத்துக் கொள்ளப்பட்டன. சட்டமியற்றும் அதிகாரங்கள் மட்டுமல்ல; நிர்வாக, நிதி அதிகாரங்கள் கூட, மத்திய அரசிற்கு மாநிலங்களால் வெளிப்படையாகக் கொடுக்கப்பட்டவை. அவைபோக மற்றவை யெல்லாம் மாநில அரசுகளுக்கே முழுமையாகப் பாத்தியப்பட்டவை.

"மத்திய அரசமைப்புச் சட்டத்தால் மாநிலங்களின் முழு இறைமையும் ( Sovereignity ) கட்டுப்படுத்தப்படாத அளவில் தான், காண்டன்கள் ( மாநிலங்கள் ) முழு இறைமையையும் கொண்டுள்ளன" என சுவிட்சர்லாந்து அரசமைப்புச் சட்டத்தின் 3–ஆம் விதி, மாநிலங்களின் முழு சுயாட்சி உரிமைகளைப் பற்றித் தெளிவாக வலியுறுத்திக் கூறுகிறது. எனவே, அதிகாரங்களைப் பகுக்கும் பட்டியல் முறையே சுவிட்சர்லாந்தில் இல்லை.

### 4. சோவியத் யூனியன்

சோவியத் ரஷ்யாவில், குறிப்பான சில சட்டமியற்றும் அதிகாரங்கள் மட்டும்தான் சோவியத் யூனியன் அரசிற்கு ( மத்திய அரசிற்கு ) வரையறுத்துத் தரப்பட்டுள்ளது. மற்ற எல்லா அதிகாரங்களும் அதன் உறுப்பு நாடுகளான, குடியாட்சிகளுக்கே ( Republics ) வழங்கப்பட்டுள்ளன. ரஷ்ய நாட்டின் அரசமைப்புச் சட்டத்தின் 14–ஆம் விதியில், இருப்பத்து நான்கு வகைகளான அதிகாரப் பொருள்கள் மட்டுமே, சோவியத் யூனியன் அரசிற்கு வழங்கப் பட்டுள்ளன, அந்த விதியில் குறிக்கப்பட்ட துறைகளைத் தவிர, மற்றெல்லா வகைகளிலும், ரஷ்ய மாநிலங்கள் முழுமையான இறைமை கொண்ட ( எல்லா அதிகாரங்களையும் கொண்ட) நாடுகளாக இயங்குகின்றன.

### 5. கனடா

கனடா நாட்டின் சட்டமியற்று அதிகாரங்களின் பாகுபாட்டு முறை, அமெரிக்கா, ரஷ்யா, ஆஸ்திரேலியா மற்றும் சுவிட்சர்லாந்து ஆகிய நாடுகளின் முறைகளிலிருந்து முற்றும் மாறுபடுகின்றது. டொமினியன் அரசிற்கு (மத்திய – அரசிற்கு), 31 அதிகார இனங்களில் சட்டமியற்று உரிமைகள் வழங்கப்பட்டுள்ளன. மாகாணங்களுக்கு (Provinces) 16 இனங்கள் மட்டுமே ஒதுக்கப்பட்டுள்ளன. இவை நீங்கலாக வேளாண்மை

(Agriculture), குடியேற்றம் (Immigration) மற்றும் முதுமை ஊதியம் (Oldage Pension) ஆகிய மூன்று இனங்களில் மட்டும், மத்திய அரசும் மாகாண அரசுகளும் சட்டமியற்றலாம். வரை யறுக்கப்படாத ''எஞ்சிய அதிகாரங்கள்'' மத்திய அரசையே சார்ந்தவை.

## II
## இந்திய அதிகாரப் பட்டியல்களின் வரலாறு

சட்டமியற்றுத்துறை அதிகாரங்களைப் பற்றிய நமது அரசிய லமைப்புச் சட்டத்தின் நிலையென்ன? அதற்கும் ஒரு சிறு வரலாறு உண்டு. சட்டமியற்று அதிகாரங்கள், மற்றெல்லா அதிகாரங் களுக்கும் மூலமாக அமைவதால் நமது அரசமைப்புச் சட்டத் தில் இவை எப்படி இடம் பெற்றன என்பதை நாம் தெளிவாகப் புரிந்து கொண்டால்தான், மாநிலங்களின் சுயாட்சி எத்துணை அளவிற்குக் குறுக்கப்பட்டுள்ளது என்பதைப் பற்றி நாம் புரிந்து கொள்ள முடியும். எனவே, அரசியலமைப்பு வரலாற்றின் அப்பகுதியை, சுருக்கமாக இங்கு பார்ப்போம்.

இந்திய அரசின் அதிகாரங்களைத் தொகுத்த முதல் சட்டம் 1917-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டம். ஆனால் அப் போது ஒற்றை ஆட்சிமுறை தான் அமுலில் இருந்தது. மத்திய அரசே எல்லாப் பணிகளையும் செய்தது. மாகாணங்கள் அதன் (Agents) முகவர்களாக இயங்கின. எனவே, பாகுபாடு செய் யப்பட்ட தனித்த அதிகாரப் பட்டியல்கள் முறை அன்றில்லை. நிர்வாகப் பணிகள் (Governmental Functions) மட்டும் மத்திய அரசுப் பணிகளென்றும், ''மாகாண அரசுப் பணிகளென்றும்'', 45 (அ) விதி மூலம் பிரிக்கப்பட்டிருந்தன. அந்த மத்திய மாகாணப் பணிகளைத் தெளிவாக்குவதற்காக, அப்பணிகள் சார்ந்த அதிகாரங்கள் ''மத்தியப் பணி அதி காரங்கள்'' எனவும், ''மாகாணப் பணிகளின் அதிகாரங்கள்'' எனவும் பிரிக்கப்பட்டிருந்தன. பொதுப் பட்டியல் என்று ஒன்று இருக்கவில்லை. மேற் சொன்ன அரசுப் பணிகளின் இரு தொகுப்புகளிலும் இடம் பெறாத இனங்கள், மத்திய அர சிடம் விட்டு வைக்கப்பட்டிருந்தன. இந்த ஏற்பாடே, பின்னர் வரையப்பட்ட 1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்திற் கும் மூலமாயமைந்தது.

இன்றைய நமது அரசமைப்புச் சட்டம் 1935-ஆம் ஆண்டின், இந்திய அரசுச் சட்டத்தின் நகல் பதிப்பு என்பதை இப்பகுதியின் முதல் அத்தியாயத்தில் நாம் விரிவாக ஆய்ந்திருக்கிறோம். 1930-ஆம் ஆண்டுக்குப் பின்னர் உருவான இந்திய அரசியல் சூழ்நிலைக்கு ஏற்ப 1935-ஆம் ஆண்டுச் சட்டம் இயற்றப்பட்டது.

தேசியவாதிகள் வலிமையான மத்திய அரசு வேண்டுமென்றனர். முஸ்லீம் லீக்கும் மாநிலக் கட்சிகளும் வலிமையான மாநில அரசு வேண்டுமென்றன. அப்போது, மூன்று பட்டியல் முறை பரவலாகத் தெரியாத நேரம். எனவே, வரையறுக்கப்படாமல் விடப்படும் எஞ்சிய அதிகாரங்கள், எந்தப் பக்கம் சாய்கிறதோ அந்த அரசே வலிமையானதாகக் கருதப்பட்டது. மாநில அரசுகளுக்கு எஞ்சிய அதிகாரங்கள் வழங்கப்பட வேண்டுமென்று—மாநில சுயாட்சியைப் போற்றுபவர்களும்— அவை மத்திய அரசிற்குத்தான் தரப்பட வேண்டுமென்று, வலிமையான மத்திய அரசை வற்புறுத்துபவர்களும் முரண்பட்டு நின்றனர். இந்த இரண்டு முரண்பட்ட கோரிக்கைகளைத் தீர்ப்பதற்குரிய பரிகாரமாக மாநிலங்களின் அதிகாரங்களைக் கூடுமானவரை முழுமையாகத் தொகுத்தெழுதி மாநிலப் பட்டியலாகவும் மத்திய அரசிற்கான அதிகாரங்களைத் தொகுத்து மத்திய அரசுப் பட்டியலாகவும் ஆங்கில அரசு 1935-ஆம் ஆண்டுச் சட்டத்தில் வடித்தது. கூடிய வரை, வரையறுக்கப்படாத எஞ்சிய அதிகாரங்கள், மீத்து நிற்காத முறையில் இவ்விரு பட்டியல்களும் நீண்ட பட்டியல்களாகத் தொகுக்கப்பட்டன. இவை தவிர, மத்திய - மாநில அரசுகள் சட்டமியற்றக் கூடிய பொதுவான அதிகாரங்களைத் தொகுத்தெழுதி "பொதுப்பட்டியல்" என்ற ஒன்றையும் அப்போதுதான் முதன் முதலாக உருவாக்கினர்.

1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தின் அடிப்படைக் கொள்கைகளைத் தொகுப்பதற்காக இங்கிலாந்து நாட்டின் நாடாளுமன்ற இணைப்புக் குழு (Joint Parliamentary Committee) ஒன்று அமைக்கப்பட்டது. அக்குழு மத்திய மாநிலங்களுக்குப் பொதுவான அதிகாரங்களை வரையறுக்கும் ஒரு "பொதுப் பட்டியல்" இந்திய அரசமைப்பில் ஏன் இடம் பெற வேண்டும் என்பதின் காரணத்தை, முதன் முறையாக விளக்கிற்று.

''வெளிநாடுகளிலும் இந்தியாவிலும் பெற்ற அனுபவத்தை வைத்துப் பார்த்தால், சில அதிகார இனங்கள் மத்திய அரசுக்கோ, மாநிலச் சட்ட மன்றங்களுக்கோ, தனித் தொதுக்கப்பட முடியாது என்பது தெளிவாகிறது. மாநிலச் சட்ட மன்றங்களுக்கே அந்தக் குறிப்பிட்ட அதிகாரங்கள் வழங்கப்படுவது நியாயமான தென்றாலும், நாடு முழுமைக்குமான சீர்மையை நல்கும் சில சட்டங்களை இயற்றுவதற்காக, மாகாண முயற்சிகளை ஊக்கப்படுத்தி மாநிலங்களுக்கு வழிகாட்டுவதற்கு வகை செய்வதற்கான சில இனங்களிலும், மாகாணத் துறைகளில் இயற்கையாய் உருவாகும், சில தொல்லைகளுக்குப் பரிகாரம் காணக்கூடிய இன்னும் சில இனங்களிலும் அந்த மத்திய அரசும் சேர்ந்து, சட்டமியற்றக் கூடிய முறையில் மத்தியப் பாராளு மன்றத்திற்கு வரம்பளிப்பது மிக மிகத் தேவையானதாகும்''[2]

என அக் குழு, பொதுப்பட்டியலின் தேவை பற்றி விளக்கம் கொடுத்தது.

அதை மூலமாக வைத்து, பொதுப் பட்டிய லொன்று இந்திய அரசமைப்புச் சட்ட வரலாற்றில் முதன் முதலாக 1935-ஆம் ஆண்டு இந்திய அரசுச் சட்டத்தின் மூலமாக உருவாயிற்று. இம் மூவகைப் பட்டியல்களிலும் அநேகமாக எல்லா அரசதிகாரங்களும் இடம் பெற்றிருந்ததால், எஞ்சிய அதிகாரங்கள் என்பதே ஏறத்தாழ இல்லாமற் போயிற்று. எனினும், பின்னரேனும் மாநில — மத்தியத் தகராறை முன்னரே எண்ணிப் பார்த்து, ஏதாவது எஞ்சிய அதிகாரங்கள் மீதியிருந்தால், அவை, கவர்னர் ஜெனரலால் அந்தந்த சூழ்நிலைக்கும் காலத்திற்கும் ஏற்ப மாநிலங்களுக்கோ அல்லது மத்திய அரசிற்கோ வழங்கப்படலாம் என்ற சட்டவிதியும் அச்சட்டத்தில் இடம் பெறலாயிற்று.

## III
## நமது அரசியலமைப்பின் மூவகை அதிகாரப் பட்டியல்கள்

1935-ஆம் ஆண்டுச் சட்டத்தின் அதிகாரப் பட்டியல்களின் ஏற்பாட்டினையே, நமது அரசமைப்புச் சட்டமும் மத்திய அரசை நோக்கிச் சாயும் சில மாறுதல்களுடன் ஏற்றுக் கொண்டது.

2 Joint Parliamentary Committee Report, Para. 51.

கவர்னர் — ஜெனரலிடம் அன்று விட்டு வைக்கப்பட்டிருந்த எஞ்சிய அதிதாரங்கள் நமது அரசமைப்பில் மத்திய அரசை வலுப்படுத்தும் நோக்கத்துடன், தற்போது மத்திய அரசிற்கே அளிக்கப்பட்டு விட்டது. (சட்ட விதி 248 மற்றும் மத்தியப் பட்டியல் 97-ஆவது இனம்.)

சட்டமியற்றுத் துறையில் மத்திய — மாநில அரசுகளின் உறவுகள், இந்திய அரசமைப்புச் சட்டத்தின் 11-வது பகுதியில் முதல் அத்தியாயத்திலும் இன்னும் சில இடங்களிலும் குறிப்பிடப் பட்டுள்ளன.

மாநில அரசுகள் சட்டமியற்றுவதற்குத் தேவையானவை என்று கருதப்பட்ட ஒரு சில அதிகாரங்களை மட்டும் தொகுத்து, மாநில அதிகாரப் பட்டியலாகவும் (2-ஆம் பட்டியல்), முக்கிய மான மற்ற எல்லா அதிகாரங்களையும் தொகுத்து மத்திய அரசுப் பட்டியலாகவும் (1-ஆம் பட்டியல்), ஓரளவிற்கு முக்கியமான பொது அதிகாரங்களைத் தொகுத்து, பொதுப் பட்டியலாகவும் (3-ஆம் பட்டியலாகவும்), நமது அரசமைப்புச் சட்டத்தின் VII-ஆவது இணைப்பில் (VII Schedule) பங்கீடு செய்யப் பட்டுள்ளது.

முதல் பட்டியலான மத்திய அதிகாரப் பட்டியலில், நாட்டின் அடிப்படை அதிகாரங்களை யெல்லாம் பொதுவாகத் தன் வயப் படுத்திக் கொள்ளும் மிக முக்கியமான 97 அதிகார இனங்களும், இரண்டாம் பட்டியலான மாநிலப் பட்டியலில் மிகச் சாதாரணமான 66 அதிகார இனங்களும், மூன்றும் பட்டியலான பொதுப் பட்டியலில் 47 அதிகார இனங்களும் சேர்க்கப்பட்டுள்ளன.

மத்தியப் பட்டியலின் 97 அதிகாரங்களில், 12 இனங்கள் இந்திய நாட்டின் எல்லா மக்கள் மேலும் வரிவிதிக்கும் உரிமை களைக் கொடுக்கும் அதிகார இனங்களாகும். அதன் 97-ஆவது இனம் 'எஞ்சிய அதிகாரங்களை', மத்திய அரசிற்கு வழங்குகிறது. மாநிலப் பட்டியலின் 66 இனங்களில், 19 இனங்கள் மாநில அரசு கள் (அதன் எல்லைகளுக்குள்) வரி விதிக்கக் கூடிய அதிகார இனங் களைச் சுட்டுகின்றன. பொதுப் பட்டியலில், வரிவிதிப்பு இனங்களே கிடையாது.

இந்த மூன்று பட்டியல்களும், தனித்தனியாகக் கீழே தரப் பட்டுள்ளன. மாநில சுயாட்சி எவ்வகையில், மத்திய அரசால் முடக்கம் செய்யப்பட்டுள்ளது என்பதைச் சரியாக அறிந்து கொள்வதற்குக் கீழே தரப்பட்டுள்ள மூவகைப் பட்டியல்களையும் ஆழ்ந்து படிக்க வேண்டியது மிகமிக இன்றியமையாததாகும்.

## மத்திய அரசின் அதிகாரப் பட்டியல்

—: முதற் பட்டியல் :—

1. இந்தியாவின் பாதுகாப்பும் அதன் ஒவ்வொரு பாகத்தின் பாதுகாப்பும் பாதுகாப்பிற்கு ஆயத்தம் செய்தலும்; போர்க் காலங்களில் போரை நடத்துவதற்கும் போர் முடிந்த பிறகு, படைகளைக் கலைத்தற்கும் வசதியாயுள்ள எல்லாக் காரியங்களும் உட்பட.
2. கடற்படைகள், இராணுவப் படைகள், விமானப் படைகள், மத்திய அரசின் மற்றெந்த ஆயுதப் படைகளும்.
3. கன்டோன்மெண்டுப் பிரதேசங்களின் எல்லைகளை வரையறுத்தலும் அத்தகைய பிரதேசங்களில் ஸ்தல சுய ஆட்சியும், அத்தகைய பிரதேசங்களுக்குள் கன்டோன்மெண்டு அதிகார நிலையங்களின் அமைப்பும் அதிகாரங்களும்; அத்தகைய பிரதேசங்களில் (வாடகைகளின் கட்டுப்பாடு உட்பட) வீட்டு வசதியை முறைப்படுத்தலும்.
4. கடற்படை, இராணுவப் படை, ஆகாய விமானப் படை இவற்றின் மராமத்து வேலைகள்.
5. ஆயுதங்கள், சுடுபடைக் கலங்கள், வெடி மருந்து, வெடி குண்டுகள்.
6. அணுவின் சக்தியும், அதை உற்பத்தி செய்வதற்கு அவசியமாயுள்ள கனிப் பொருட் சாதனங்களும்.
7. பாதுகாப்பின் பொருட்டு அல்லது போரை நடத்துவதற்காக, அவசியமெனச் சட்டத்தினுல் பாராளுமன்றம் அறிவித்த தொழில்கள்.
8. துப்பறிதல், துப்பாராய்ச்சி இவற்றிற்கான மத்தியக் காரியாலயம்.

9. பாதுகாப்பு, அந்நிய நாட்டு விவகாரங்கள் அல்லது இந்தியாவின் பாதுகாப்பு, இவை பற்றிய காரியங்களுக்காகத் தடைப்பாதுகாவல். அத்தகைய பாதுகாவலுக்கு உட்பட்டவர்கள். 8, 9-ஆவது பிரிவுகள் ஜம்மு—காஷ்மீர் அரசிற்குப் பிரயோகப்படாது.

10. அந்நிய நாட்டு விவகாரங்களும், ஓர் அந்நிய நாட்டுடன் மத்திய அரசைச் சம்பந்தப்படுத்தும் எல்லாக் காரியங்களும்.

11. ராஜதந்திரம், ராஜரீகம், வியாபாரம் இவை பற்றிய பிரதிநிதித்துவம்.

12. ஐக்கிய நாட்டு ஸ்தாபனம்.

13. சர்வதேச மாநாடுகளிலும் கழகங்களிலும் இதர நிலையங்களிலும் கலந்து கொள்ளுதலும், இவைகளில் செய்யப்பட்ட தீர்மானங்களைச் செயல்படுத்தலும்.

14. அந்நிய நாடுகளுடன் சமாதான ஒப்பந்தங்களையும் உடன்பாடுகளையும் செய்து கொள்ளுதலும், அந்நிய நாடுகளுடன் செய்து கொண்ட ஒப்பந்தங்களையும் உடன்பாடுகளையும் செயல்படுத்தலும்.

15. போரும் சமாதானமும்.

16. அயல் நாட்டில் விசாரணை அதிகாரம்.

17. குடிமையும், குடியாதலும், அந்நியர்களும்.

18. அயல் நாட்டிடம் ஒப்புவிப்பு. (Extradition)

19. இந்தியாவிற்குள் வர அனுமதித்தலும்; இந்தியாவிலிருந்து குடியேறுதலும் வெளியேற்றுதலும். பாஸ்போர்ட்டுகள், நுழைவிசைவுகள் (Visas).

20. இந்தியாவிற்கு வெளியேயுள்ள இடங்களுக்கு யாத்திரைகள்.

21. மகா சமுத்திரங்களில் அல்லது ஆகாயத்தில் நிகழும் கொள்ளைகளும் குற்றங்களும் நிலத்தில் அல்லது மகா சமுத்திரங்களில் அல்லது ஆகாயத்தில் — சர்வ தேசச் சட்டத்திற்கு விரோதமாக நிகழும் குற்றங்கள்.

22. இருப்புப் பாதைகள்.

23. தேசியப் பெருவழித் துறைகள் என்று நாடாளுமன்றத்தால் செய்த சட்டத்திலோ அல்லது அதன் கீழோ அறிவிக்கப்படும் பெருவழிகள்.

24. இயந்திர சக்தியினுல் ஓட்டப்படும் மரக்கலங்கள் சம்பந்த மாக, தேசிய நீர்ப் பாதைகள் என்று பாராளுமன்றத்தால் அறிவித்த உள்நாட்டு நீர்ப் பாதைகளிற் செல்லும் கப்பல் களும் அவற்றைச் செலுத்தலும்; அத்தகைய பாதைகளின் வழியைப் பற்றிய விதி.

25. ஏற்றமற்ற நீர்களில் செல்லும் கப்பல்களும் அவற்றைச் செலுத்தலும் உட்பட, சமுத்திரங்களில் செல்லும் கப்பல் களும் அவற்றைச் செலுத்தலும். வியாபாரக் கப்பல்களை ஓட்டுபவர்களின் கல்விக்கும் பயிற்சிக்கும் ஏற்பாடு செய் தலும்; அரசுகளாலும் மற்றைய நிறுவனங்களாலும் ஏற் படுத்தப்பட்ட அத்தகைய கல்வியையும் பயிற்சியையும் முறைப்படுத்தலும்.

26. கலங்கரை விளக்கு, கப்பல்கள் உட்பட எச்சரிக்கை ஒளி கள், கப்பல்கள், விமானங்கள் இவற்றின் பாதுகாப்பிற் கான மற்றைய ஏற்பாடுகள்.

27. நாடாளுமன்றத்தால் செய்யப்பட்ட சட்டத்தினுல் அல்லது ஏற்கனவே உள்ள சட்டத்தினுல் அல்லது அதன் கீழ்ப் பெருந் துறைமுகங்கள் என்று அறிவிக்கப்படும் துறைமுகங் கள்; அவைகளின் எல்லைகள் வரையறுத்தலும்; அவற்றில் துறைமுக அதிகாரிகளை அமைத்தலும்; அந்த அதிகாரி களின் அதிகாரங்களும் உட்பட.

28. துறைமுகத் தொத்து நோய் ஒதுக்கம், அதுபற்றிய வைத்தியசாலைகள் உட்பட; கப்பலோட்டிகளின் வைத்திய சாலைகள், கடற்கரை வைத்திய சாலைகள்.

29. ஆகாயப் பாதைகள்; விமானங்களும் விமானங்களைச் செலுத்தலும்; விமான நிலையங்களை ஏற்படுத்தல்; விமானப் போக்கு வரத்தையும் விமான நிலையங்களையும் முறைப் படுத்தலும் ஏற்படுத்தலும்; விமானம் செலுத்துவதற்கான கல்விக்கும் பயிற்சிக்கும் ஏற்பாடு செய்தலும்; அரசுகளாலும் மற்றைய நிறுவனங்களாலும் ஏற்படுத்தப்பட்ட அத்தகைய கல்வியையும் பயிற்சியையும் முறைப்படுத்தலும்.

30. இரயில், கடல் அல்லது ஆகாய வழியே அல்லது இயந்திர சக்தியினுல் செலுத்தப்படும் மரக் கலங்களில் தேசிய நீர்ப் பாதைகளின் வழியே பிரயாணிகளையும் பண்டங்களையும் ஏற்றிச் செல்லல்.

31. தபால்கள், தந்திகள், டெலிபோன்கள், கம்பியில்லாத் தந்தி, ஒலிபரப்பு, இவை போன்ற மற்றைய செய்திப் போக்குவரத்துச் சாதனங்கள்,

32. மத்திய அரசின் சொத்தும் அதிலிருந்து கிடைக்கும் வருவாயும், ஆனால் ஓர் அரசிலிலுள்ள சொத்தைப் பற்றி, பாராளுமன்றம் சட்டத்தினல் வேறு விதமாய் ஏற்பாடு செய்யும் வரையன்றி, அந்த அரசுச் சட்டம் செய்வதற்கு உட்பட்டு.

33. இப்பிரிவு, அரசியல் அமைப்பு (ஏழாம் திருத்தச்) சட்டத்தால் விட்டு விடப்பட்டது.

34. இந்தியச் சமஸ்தானங்களின் அதிபதிகளுடையஎஸ்டேட்டுகளுக்கான பரிபாலன நிலையங்கள் (இப்பிரிவு ஜம்மு—காஷ்மீர் அரசிற்குப் பொருந்தாது).

35. மத்திய அரசின் தேசியக் கடன்கள்.

36. பணச் செலாவணியும் நாணயம் செய்யும் முறையும்; சட்டம் ஒப்பிய செலாவணியும்; அந்நிய நாட்டுச் செலாவணிப் பரிவர்த்தனை.

37. அந்நியக் கடன்கள்.

38. இந்தியாவின் ரிசர்வ் வங்கி.

39. தபால் அலுவலகச் சேமிப்பு வங்கி.

40 இந்திய அரசாங்கத்தால் அல்லது ஓர் அரசின் அரசாங்கத்தால் தொடங்கி நடத்தப்படும் லாட்டரிகள்.

41. அந்நிய நாடுகளுடன் வர்த்தகமும் வாணிபமும்; சுங்க எல்லைகளைக் கடக்கும் இறக்குமதியும் ஏற்றுமதியும்; சுங்க எல்லைகளை வரையறுத்தல்.

42. அரசுகளிடையே வர்த்தகமும் வாணிபமும்.

43. வர்த்தகக் கம்பெனிகளைச் சட்டப்படி இணைத்தலும் முறைப்படுத்தலும் கலைத்தலும் — பாங்கிங் இன்சூரன்ஸ், நிதிக் கம்பெனிகள் உட்படவும் ஆனல் கூட்டுறவுச் சங்கங்கள் நீங்கலாகவும். ஜம்மு — காஷ்மீர் அரசிற்குப் பிரயோகப் படுத்துகையில் இவ்வினத்தை (43-க்குக் கீழ்க்காணும் முறையில் அமைத்துக் கொள்ள வேண்டும். ''43 கூட்டுறவுச் சங்கங்கள் நீங்கலாக பாங்கிங் இன்சூரன்ஸ், நிதிக் கம்பெனிகளைச் சட்டப்படி இணைத்தலும் முறைப்படி கலைத்தலும்.'')

44. ஓர் அரசிற்கு மட்டுமே பிரயோகப்படாதவையான நோக்கங்களையுடைய வியாபாரம் செய்யும் அல்லது செய்யாதவையான கம்பெனிகளைச் சட்டப்படி இணைத்தலும்

முறைப்படுத்தலும் கலைத்தலும்; பல்கலைக் கழகங்கள் நீங்கலாக. (ஜம்மு — காஷ்மீர் அரசிற்கு இது பிரயோகப் படாதது.)

45. வங்கி நடவடிக்கைகள்.

46. மாற்று உண்டியல்கள், காசோலைகள், கடனுறுதிச் சீட்டுகள் இவைபோன்ற மற்ற சாசனங்கள்.

47. இன்சூரன்ஸ்.

48. பங்கு மார்க்கெட்டுகள், வாய்தா மார்க்கெட்டுகள்.

49. பேடெண்டுகளும், (Patents) இன்சூரன்சுகளும், டிசைன் களும்; காபிரைட்; வியாபார அடையாளங்களும் வர்த்தகப் பண்ட அடையாளங்களும்.

50. எடைகளுக்கும் அளவைகளுக்கும் அலகுகளை ஏற்படுத்தல். (ஜம்மு—காஷ்மீருக்குப் பொருந்தாது).

51. இந்தியாவிற்கு வெளியே ஏற்றுமதி செய்வதற்காக-அல்லது ஓர் அரசிலிருந்து மற்றோர் அரசிற்கு அனுப்புவதற்கான - பண்டங்களின் தரத்தின் அலகுகளை ஏற்படுத்தல்.

52. பொது நலத்திற்காக எந்தக் கைத் தொழில்களை மத்திய அரசின் மேல் அதிகாரத்திற்கு உட்படுத்துதல் உசிதமாய் இருக்குமென நாடாளு மன்றம் சட்டத்தினல் அறிவிக் கின்றதோ, அந்தக் கைத் தொழில்கள். (ஜம்மு காஷ் மீருக்குப் பொருந்தாது.)

53. எண்ணெய்ப் புலங்கள், கனி எண்ணெய்ப் பொருட் சாதனங்கள் — இவற்றை முறைப்படுத்தலும் விருத்தி செய்தலும்; பெட்ரோலியமும் பெட்ரோலியப் பொருள் களும், அபாயகரமாகத் தீப்பற்றக் கூடியவை என நாடாளு மன்றச் சட்டத்தினல் அறிவிக்கப்பட்ட மற்றையத் திரவங் களும் பொருள்களும்.

54. மத்திய அரசின் மேலதிகாரத்திற்குக் கீழ்ப்பட்டுப் பொது நலனின் பொருட்டு உசிதம் என நாடாளு மன்றத்தின் சட்டத்தினல் அறிவிக்கப்படும் அளவிற்குச் சுரங்கங்களை முறைப்படுத்தலும் கனிப் பொருள்களை அபிவிருத்தி செய்தலும்.

55. சுரங்கங்களிலும் எண்ணெய்ப் புலங்களிலும் வேலை செய் தலையும் பாதுகாப்பையும் முறைப்படுத்தல் (ஜம்மு - காஷ் மீருக்குப் பிரயோகப்படாது.)

56. மத்திய அரசின் மேலதிகாரத்திற்குக் கீழ்ப்பட்டுப் பொது நலத்தின் பொருட்டு உசிதம் எனப் பாராளு மன்றத்தால் சட்டத்தினுல் அறிவிக்கப்படும் அளவிற்குப் பல அரசுகளி லுள்ள ஆறுகளையும் ஆற்றுப் பள்ளத் தாக்குகளையும் முறைப்படுத்தலும் அபிவிருத்தி செய்தலும்.

57. ஆட்சிப் பரப்பின் நீர்களுக்கு அப்பால் மீன் பிடித்தலும் மீன் பண்ணைகளும்.

58. மத்திய அரசின் அதிகாரத்திற்குட்பட்ட நிலையங்கள் உப்பை உற்பத்தி செய்தலும், சப்ளை செய்தலும், வினி யோகித்தலும்; மற்ற நிலையங்கள் உப்பை உற்பத்தி செய் தல் சப்ளை செய்தல் வினியோகித்தல் இவற்றை முறைப் படுத்தலும், மேல் அதிகாரத்திற்கு உட்படுத்தலும்.

59. அபினியின் சாகுபடியும் உற்பத்தியும், ஏற்றுமதிக்கான விற்பனையும்.

60. சினிமாப் படங்களைக் காட்டுவதற்கு அனுமதி கொடுத்தல் (ஜம்மு - காஷ்மீருக்குப் பொருந்தாது).

61. மத்திய அரசின் வேலையாட்களைப் பற்றிய தொழில் தகராறுகள்.

62. இந்திய அரசியலமைப்பின் தொடக்கத்தில் தேசிய நூல் நிலயம், இந்திய மியூசியம், இம்பீரியல் யுத்த மியூசியம் விக்டோரியா மெமோரியல், இந்திய யுத்த மெமோரியல் என வழங்கும் ஸ்தாபனங்களும் — முழுவதுமோ ஒரு பாக மோ — இந்திய அரசாங்கத்தின் செலவில் நடைபெறுவன வும், தேசிய முக்கியத்துவம் வாய்ந்த ஸ்தாபனம் எனப் பாராளு மன்றத்தால், சட்டத்தினுல் அறிவிக்கப்படுவது மான அவை போன்ற மற்றெந்த ஸ்தபானமும்.

63. இந்த அரசியலமைப்பின் தொடக்கத்தில் பெனுரஸ் இந்துப் பல்கலைக் கழகம், அலிகார் முஸ்லீம் பல்கலைக் கழகம், டெல்லி பல்கலைக் கழகம் என வழங்கும் ஸ்தாபனங்களும் தேசிய முக்கியத்துவம் வாய்ந்தது என நாடாளு மன்றத்தால் சட்டத்தினுல் அறிவிக்கப்பட்ட மற்றெந்த ஸ்தாபனமும்.

64. விஞ்ஞான அல்லது கைத்தொழில் பயிற்சிக் கல்விக்காக - என்று ஏற்படுத்தப் பட்டவையும் - முழுவதுமோ ஒரு பாக மோ - இந்திய அரசாங்கத்தின் செலவில் நடைபெறுபவை யும், தேசிய முக்கியத்துவம் வாய்ந்த ஸ்தாபனங்கள் எனப் பாராளு மன்றத்தால் சட்டத்தினுல் அறிவிக்கப்படுபவை யுமான ஸ்தாபனங்கள்.

65. (அ) உத்தியோகம், வேலை அல்லது கைத்தொழில் இவை பற்றிய பயிற்சி–போலீஸ் உத்தியோகஸ்தர்களின் பயிற்சி உட்பட; அல்லது,

(ஆ) தனிப் படிப்புக்களை அல்லது ஆராய்ச்சியை அபி விருத்தி செய்தல்; அல்லது,

(இ) குற்றத்தை ஆராய்தல் அல்லது கண்டு பிடித்தல் இவற்றில் விஞ்ஞான அல்லது தொழில் முறையில் உதவி புரிதல் இவற்றிற்கான யூனியன் நிலையங்களும் ஸ்தாபனங்களும்.

66. உயர்தரக் கல்வி அல்லது ஆராய்ச்சிக்கான ஸ்தாபனங்கள், விஞ்ஞான ஸ்தாபனங்கள், தொழில் பயிற்சி ஸ்தாபனங்கள் இவற்றின் தரங்களை ஒருமைப் படுத்தலும் நிர்ணயித்தலும்.

67. தேசிய முக்கியத்துவம் வாய்ந்தவை எனப் பாராளு மன்றச் சட்டத்தினுல் (அல்லது அதன் கீழ்) அறிவிக்கும் புராதனமானவையும், சரித்திர சம்பந்தமானவையும் ஆன ஞாபகச் சின்னங்களும் தஸ்தாவேசுகளும், பழம்பொருள் இடங்களும் சிதைவுகளும். ஜம்மு – காஷ்மீருக்குப் பிரயோகப் படுகையில் 67-ஆம் பதிவிற்குப் பதிலாக, கீழ்க்கண்ட பதிவை அமைத்துக் கொள்ள வேண்டும்.

தேசிய முக்கியத்துவம் வாய்ந்தவை எனப் பாராளு மன்றம் சட்டத்தினுல் அறிவிக்கும் புராதனமானவையும் சரித்திர சம்பந்தமானவையுமான ஞாபகச் சின்னங்களும் பழம் பொருள் சிதைவுகளும்.

68. இந்தியாவின் சர்வே இலாகா, இந்தியாவின் நில நூல், தாவர நூல், விலங்கு நூல், மானிட நூல், இவை பற்றிய இந்தியாவின் சர்வே இலாக்காக்கள்; வானிலை ஆராய்ச்சி ஸ்தாபனங்கள்.

69. மக்கட் கணக்கெடுப்பு. (ஜம்மு - காஷ்மீருக்குப் பொருந்தாது).

70. மத்திய அரசின் பொதுச் சேவை வர்க்கங்கள் ; அகில இந்திய சேவை வர்க்கங்கள். யூனியன் பப்ளிக் சர்வீஸ் கமிஷன்.

71. மத்திய அரசின் பென்ஷன்கள், இந்திய அரசாங்கத்தால் அல்லது இந்தியாவின் திரண்ட நிதியிலிருந்து கொடுக்கலாகும் பென்ஷன்கள்.

72. நாடாளு மன்றத்திற்கும் அரசுகளின் சட்ட சபைகளுக்கும் ஜனாதிபதி, உப - ஜனாதிபதி இவர்களின் பதவிகளுக்குத் தேர்தல்கள் – தேர்தல் கமிஷன்.

73. நாடாளு மன்றத்தின் உறுப்பினர்கள், ராஜ்ய சபையின் தலைவர், உப-தலைவர், மக்கட் சபையின் சபாநாயகர், உப-சபாநாயகர் இவர்களின் சம்பளங்களும் படிகளும்.

74. ஒவ்வொரு நாடாளு மன்றச் சபை – ஒவ்வொரு சபையின் உறுப்பினர்கள் கமிட்டிகள் இவற்றின் அதிகாரங்களும்; சிறப்புரிமைகளும் பாதுகாப்புக்களும்; பாராளு மன்றக் கமிட்டிகளின் முன்னிலையிலோ பாராளு மன்றத்தால் நியமிக்கப்பட்ட கமிஷன்களின் முன்னிலையிலோ சாட்சியம் கொடுப்பதற்கோ தஸ்தாவேசுகள் கொணருவதற்கோ– நபர்கள் வந்திருக்கும்படி செய்தல்.

75. குடியரசுத் தலைவர், ஆளுநர்கள் இவர்களின் ஊதியங்களும் படிகளும் சிறப்புரிமைகளும், லீவு பற்றிய உரிமைகளும்; யூனியன் அமைச்சர்களுடைய சம்பளங்களும், படிகளும்; மாபெரும் –கணக்கர் –பரிசோதகருடைய சம்பங்களும் படிகளும்; விடுப்பு ( Leave ) உரிமைகளும், மற்றய சேவை நிபந்தனைகளும்.

76. மத்திய அரசு, மாநில அரசுகள் இவற்றின் கணக்குகளைத் தணிக்கை செய்தல்.

77. தலைமை நீதி மன்றத்தின் அமைப்பும் ஒழுங்கும் விசாரணை அதிகாரமும் (அம் மன்றத்தின் அவமதிப்பு உட்பட); அங்கே வாங்கப்படும் கட்டணங்களும் தலைமை நீதி மன்றத்தின் முன்னிலையில் வாதம் செய்ய உரிமை உடையவர்கள்.

78. உயர்நீதிமன்ற அலுவலர்களைப் பற்றியும் சேவையாளர்களைப் பற்றியுமானவை நீங்கலாக, உயர் நீதி மன்றங்களின் அமைப்பும் ஒழுங்கும், உயர்நீதி மன்றங்களின் முன்னிலையில் வாதம் செய்யும் உரிமை உடையவர்கள் (ஜம்மு—காஷ்மீருக்குப் பிரயோகிக்கப்படாது).

79. ஓர் உயர்நீதிமன்றத்தின் விசாரணை அதிகாரத்தை மத்திய அரசின் அதிகாரத்திலுள்ள ஆட்சிப் பரப்பிற்கு வியாபிக்கச் செய்தலும், மத்திய அரசின் அதிகாரத்திலுள்ள அந்த விசாரணை அதிகாரப் பரப்பிலிருந்து விலக்குதலும்.

80. ஓர் அரசிற்குரிய காவல் படை ஒன்றைச் சேர்ந்தவர்களின் சக்திகளையும் விசாரணை அதிகாரத்தையும், அந்த அரசிற்கு வெளியேயுள்ள ஒரு பிரதேசத்திற்கு—ஆனால் ஓர்

அரசின் காவல்துறையினர், அந்த அரசிற்கு வெளியேயுள்ள ஒரு பிரதேசம் உள்ள அரசின் அரசாங்கத்தின் சம்மதமின்றி அப்பிரதேசத்தில் சக்திகளையும் விசாரணை அதிகாரத்தையும் செலுத்த முடியாமலிருக்கும்படியாக வியாபிக்கச் செய்தல்; ஓர் அரசைச் சேர்ந்த காவல்படைகளிலுள்ளவர்களின் சக்திகளையும் விசாரணை அதிகாரத்தையும் அந்த அரசிற்கு வெளியேயுள்ள ரெயில்வேப் பிரதேசங்களுக்கு வியாபிக்கச் செய்தல்.

81. அரசுகளிடையே மக்களின் இடமாற்றம்; அரசுகளிடையே குவாரண்டைன். (ஜம்மு—காஷ்மீருக்குப் பொருத்துகையில் ''அரசுகளிடையே குவாரண்டைன்' என்னும் சொற்களை விட்டுவிட வேண்டும்).

82. வேளாண்மை வருமானமல்லாத மற்றைய வருமானத்தின் மீது வரிகள்.

83. ஏற்றுமதித் தீர்வைகள் உட்படச் சுங்கத் தீர்வைகள்.

84. (அ) மனிதர்கள் உட்கொள்ளும் மதுபானங்களும்;

(ஆ) அபினியும் இந்தியச் சணலும் போதை உண்டாக்கும் இதர மருந்துச் சரக்குகளும், போதைப் பொருள்களும், தவிரவும் — ஆனால் மது சாரம் அல்லது இப்பதிவின் (ஆ) உப பாராவில் சேர்ந்துள்ள ஒரு வஸ்து அடங்கியுள்ள மருந்துப் பொருள்களும், வண்ண நறும் பொருள்களும் உட்படவும்—இந்தியாவில் தயார் செய்யப்படும் அல்லது உற்பத்தி செய்யப்படும் புகையிலை, மற்றப் பண்டங்கள் இவற்றின் மீது கலால் தீர்வைகள்.

85. கூட்டுரும வரி. (Corporation Tax)

86. தனி மனிதர்களுடையவும் கம்பெனிகளுடையவுமான ஆஸ்திகளின், விவசாய நிலம் நீங்கலாக, மூலதன மதிப்பின் மீது வரிகள்; கம்பெனிகளின் மூலதனத்தின் மீது வரிகள்.

87. விவசாய நிலமல்லாத மற்றைய சொத்துப் பற்றி எஸ்டேட்டுத் தீர்வைகள்.

88. விவசாய நிலமல்லாத மற்றைய சொத்திற்கு வாரிசு பாத்தியம் பற்றிய தீர்வைகள்.

89. ரெயில், கடல் அல்லது ஆகாய மார்க்கமாக ஏற்றிக் கொண்டு போகப்படும் பண்டங்கள் அல்லது பிரயாணிகளின்மீது ஆதி–

அந்த வரி; ரெயில்வேக் கட்டணங்கள், கேவுகளின் மீது வரிகள்.

90. பங்கு மார்க்கெட்டுகளிலும் வாய்தா மார்க்கெட்டுகளிலும் நடைபெறும் காரியங்கள் மீது ஸ்டாம்புத் தீர்வைகளல்லாத மற்றைய வரிகள்.

91. மாற்று உண்டியல்கள், செக்குகள், கடனுறுதிச் சீட்டுகள், வார்நாமாக்கள், பண அனுமதிச்சீட்டுக்கள், இன்சூரென்சு பாலிசிகள், பங்குகளின் மாற்றம், டிபெஞ்சர்கள், பிரதிநிதிச் சீட்டுக்கள், ரசீதுகள் இவை பற்றிய ஸ்டாம்புத் தீர்வை விகிதங்கள்.

92. செய்தித் தாள்களின் விற்றல் அல்லது வாங்குதல் மீதும், அவைகளில் வெளியாகும் விளம்பரங்கள் மீதும் வரிகள்.

92, (அ) செய்தித்தாள்கள் நீங்கலாகப் பண்டங்களை விற்றல் அல்லது வாங்குதல் அரசுகளிடையே வியாபாரம் அல்லது வர்த்தகம் நடைபெறுகையில் நிகழ்ந்தால் அப்படி விற்றல் அல்லது வாங்குதல் பற்றிய வரிகள்.

93. இந்தியப் பட்டியலில் உள்ள எவை பற்றியேனும் செய்த சட்டங்களுக்கு விரோதமான குற்றங்கள்.

94. இந்தப் பட்டியலில் உள்ளவைகளில் எதன் பொருட்டு விசாரணைகளும் சர்வேக்களும் புள்ளி விவரங்களும்.

95. இந்தப் பட்டியலில் உள்ளவைகளில் எது பற்றியேனும் எல்லா நீதிமன்றங்களின் — தலைமை நீதிமன்றம் தவிர— விசாரணை அதிகாரமும் சக்திகளும்; கடற்படைத்துறை விசாரணை அதிகாரம்.

96. இந்தப் பட்டியலில் உள்ளவைகளில் எது பற்றியேனும் கட்டணங்கள். ஆனால் ஒரு நீதி மன்றத்திலே வாங்கப்படும் கட்டணங்கள் நீங்கலாக.

97. இரண்டாவது பட்டியலிலாவது மூன்ருவது பட்டியலிலாவது குறிப்பிடாத மற்றெதுவும் — இந்த இரண்டு பட்டியல்களில் எதிலும் கூறப்படாத எந்த வரியும் உட்பட (எஞ்சிய அதிகாரங்கள். Residuary Powers).

# மாநில அரசு அதிகாரப் பட்டியல்

—: இரண்டாம் பட்டியல் :—

1. பொது அமைதி (ஆனால் உரிமையியல் அதிகாரத்திற்கு உதவி புரியும் மத்திய அரசுக் கடற்படைகளின் அல்லது இராணுவப் படைகளின் விமானப் படைகளின் அல்லது மற்றெந்த ஆயுதப்படைகளின் உபயோகம் இதில் அடங்காது).

2. காவல் துறை — இருப்புப் பாதைக் காவல்துறை, கிராமக் காவல்துறை,

3. நீதி நிர்வாகம்; தலைமை நீதி மன்றத்தையும் உயர்நீதி மன்றத்தையும் தவிர மற்றெல்லா நீதிமன்றங்களின் அமைப்பும் ஒழுங்கும்; உயர்நீதி மன்றத்தின் அலுவலர்களும் சேவையாளர்களும்; வாடகை அல்லது குத்தகை நீதி மன்றங்கள்; வருவாய்த் துறை நீதி மன்றங்கள் இவற்றின் நடைமுறையில் தலைமை நீதி மன்றம் தவிர மற்றெல்லா நீதி மன்றங்களிலும் வாங்கப்படும் கட்டணங்கள்.

4. சிறைச்சாலைகளும், பார்ஸ்டல் ஸ்தாபனங்களும், அவற்றைப் போன்ற இதர ஸ்தாபனங்களும், அவற்றில் வைக்கப்பட்டிருப்பவர்களும்; சிறைச்சாலைகளையும் இதர ஸ்தாபனங்களையும் உபயோகித்தலைப் பற்றிய மற்றைய அரசுகளுடன் ஏற்பாடுகள்.

5. உள்ளாட்சி அதாவது ஸ்தல சுய ஆட்சி அல்லது கிராம நிர்வாகக் காரியத்திற்காக நகராட்சி ஸ்தாபனங்கள், அபிவிருத்தி ஸ்தாபனங்கள், மாவட்டக் குழுக்கள், சுரங்கக் குடியேற்ற அதிகாரிகள் மற்ற ஸ்தல அதிகாரிகள் இவற்றின் அமைப்பும் அதிகாரங்களும்.

6. பொது ஆரோக்கியமும் சுகாதாரமும்; வைத்தியசாலைகளும் டிஸ்பென்ஸரிகளும்.

7, இந்தியாவிற்கு வெளியேயுள்ள இடங்களுக்குச் செய்யப்படும் யாத்திரைகளல்லாதனவான மற்ற யாத்திரைகள்.

8. போதை தரும் மதுசாரங்கள், அதாவது, போதை தரும் மது சாரங்களை உற்பத்தி செய்தல், தயாரித்தல், வைத்திருத்தல், அனுப்புதல், வாங்குதல், விற்பனை செய்தல்.

9. ஊனமுற்றோருக்கும் வேலைக்குத் தகுதியற்றவருக்கும் வசதி அளித்தல்,

10. புதைத்தலும், இடுகாடுகளும்; தகனம் செய்தலும் சுடு காடுகளும்.

11. 1–ஆவது பட்டியலின் 63, 64, 65, 66–ஆம் பதிவுகளிலும் 3-ஆம் பட்டியலின் 25-ஆம் பதிவுகளிலும் உள்ளவைகளுக்கு உட்பட்டுப் பல்கலைக் கழகங்கள் உட்படக் கல்வி.

12. அரசின் மேல் அதிகாரத்திற்கு உட்பட்ட அல்லது அதன் செலவில் நடைபெறும் புத்தக நிலையங்களும் பொருட் காட்சிசாலைகளும் அவை போன்ற நிறுவனங்களும், தேசிய முக்கியத்துவம் வாய்ந்தவை என்று நாடாளுமன்றத்தின் சட்டத்தால் (அல்லது அதன் கீழ்) அறிவிக்கப்படுபவை அல்லாத மற்றைய பூர்வீகமானவையும் வரலாற்றுச் சிறப்புப் பெற்றவையுமான ஞாபகச் சின்னங்களும் தஸ்தாவேசுகளும்.

13. போக்கு வரத்து மார்க்கங்கள், அதாவது, பாட்டைகள், பாலங்கள், ஓடத்துறைகள், 1-ஆம் பட்டியலில் குறிப்பிட்டிராத மற்றையப் போக்குவரத்து மார்க்கங்கள்; நகராட்சி டிராம் வேக்கன்; சாலைவழிகள்; உள்நாட்டு நீர்ப்பாதைகளும், அந்த நீர்ப்பாதைகள் சம்பந்தமாக 1-ஆம் பட்டியலிலும் 3-ஆம் பட்டியலிலும் உள்ள இனங்களுக்குட்பட்டு அவைகளில் நடைபெறும் போக்குவரத்தும்; யந்திர சக்தியினுல் செலுத்தப்படும் வண்டிகளல்லாத மற்றைய வண்டிகள்.

14. விவசாயம் — விவசாயக் கல்வியும் ஆராய்ச்சியும் தாவரத் தொத்து நோய்ப் பாதுகாப்பு, தாவர நோய்த் தடை உட்பட.

15. கால்நடைகளைப் பேணுதலும் பாதுகாத்தலும் அபிவிருத்தி செய்தலும் விலங்கு நோய்களைத் தடுத்தலும் மிருக வைத்தியப் பயிற்சியும் வைத்தியமும்.

16. கால் நடைகளை அடைக்கும் தொண்டுப் பட்டியும், கால் நடைகள் நுழைவுத் தடுப்பும்.

17. தண்ணீர், அதாவது 1–ஆம் பட்டியலின் 56–ஆம் பதிவிற்கு உட்பட்டுத் தண்ணீர் சப்ளை, நீர்ப்பாசனமும் கால்வாய்களும், வடிகால்களும், கரைகளும் தண்ணீர்த் தேக்கமும் நீர்ச்சக்தியும்.

18. நிலம், அதாவது நிலத்திலோ, நிலத்தின் மீதோ உள்ள உரிமைகள் நிலச்சுவான்தாரருக்கும் குடியானவருக்கும் உள்ள உறவு உட்படக் காணியாட்சி முறைகளும் குத்தகை

வசூலும்; விவசாய நிலத்தை மாற்றுதலும் பராதீனம் செய்தலும்; நில அபிவிருத்தியும் விவசாயக் கடன்களும்; குடியேற்றம்.

19. காடுகள்.

20. காட்டு மிருகங்களையும் பறவைகளையும் பாதுகாத்தல்,

21. மீன் பண்ணைகள்.

22. 1–ஆம் பட்டியலின் 34–ஆம் பதிவிற்குட்பட்டு, கோர்ட்–ஆப் வார்டுகள். வில்லங்கத்திற்கு உட்பட்டவைகளும் ஜப்தி செய்யப்பட்டவைகளுமான எஸ்டேட்டுக்கள்.

23. மத்திய அரசின் மேல் அதிகாரத்திற்குட்பட்டு முறைப் படுத்துதல் சம்பந்தமாகவும் அபிவிருத்தி செய்தல் சம்பந்த மாகவும் 1-ஆம் பட்டியலின் இனங்களுக்குட்பட்டுச் சுரங் கங்களை முறைப்படுத்துவதும் கனிப் பொருளை அபிவிருத்தி செய்தலும்.

24. 1–ஆம் பட்டியலின் 7-ஆம்—52–ஆம் பதிவுகளுக்குட்பட்டு, தொழில்கள்.

25. எரிவாயு, எரிவாயு உற்பத்திச் சாலைகள்.

26. 3-ஆம் பட்டியலின் 33-ஆம் பதிவிற்குட்பட்டு, அரசிற்குள் வியாபாரமும் வாணிபமும்.

27. 3-ஆம் பட்டியலின் 33–ஆம் பதிவிற்குட்பட்டு, பண்டங் களின் உற்பத்தி, சப்ளை, வினியோகம்.

28. மார்க்கட்டுகளும் சந்தைகளும்.

29. எடைகளும் அளவைகளும் — அலகுகளை ஏற்படுத்துதல் தவிர.

30. கடன் கொடுக்கும் தொழிலும் கடன் கொடுப்பவர்களும், விவசாயிகளின் கடன் நிவாரணம்.

31. விடுதிகளும் விடுதிக்காரர்களும்.

32. 1-ஆம் பட்டியலில் குறிப்பிட்டிருப்பவை யல்லாதனவான மற்றைய கார்ப்பொரேஷன்களையும் பல்கலைக் கழகங்களை யும் சட்டப்படி இணைத்தலும் முறைப்படுத்தலும் கலைத்த லும்; சட்டப்படி இணைக்கப்பட்டிராத வியாபார, இலக்கிய, விஞ்ஞான, சமயச் சங்கங்களும், கழகங்களும்; மற்றையச் சங்கங்களும் கழகங்களும்; கூட்டுறவுச் சங்கங்கள்.

33. நாடக சாலைகளும், நாடக ஆட்டங்களும் 1-ஆம் பட்டியலின் 60-ஆம் பதிவிற்குட்பட்டுச் சினிமாக்கள்; விளையாட்டுக்கள், வேடிக்கைகள்; கேளிக்கைகள்.

34. பந்தயம் ஓட்டுதலும் சூதாடுதலும்.

35. அரசிடம் நிலைபெற்றிருக்கும் அல்லது அதன் சுவாதீனத்திலுள்ள பணிகளும் நிலங்களும் கட்டடங்களும்.

36. .........(இப்பதிவு அரசியலமைப்பின் ஏழாவது திருத்தத்தில் நீக்கப்பட்டுள்ளது).

37. நாடாளு மன்றத்தால் செய்யப்படும் ஒரு சட்டத்திற்குட்பட்டு அரசின் சட்ட சபைக்குத் தேர்தல்.

38. அரசின் சட்டசபையின் உறுப்பினர்கள், சபாநாயகர், உதவி சபாநாயகர், கவுன்சில் ஒன்றிருந்தால் அதன் தலைவர், உதவித் தலைவர் இவர்களின் சம்பளங்களும் படிகளும்.

39. அசெம்பிளி(கீழ்ச்சபை) அதன் உறுப்பினர்கள் கமிட்டிகள், கவுன்சில் (மேல்சபை) ஒன்றிருந்தால் அக்கவுன்சில், அதன் உறுப்பினர்கள் கமிட்டிகள் இவற்றின் அதிகாரங்களும் சிறப்புரிமைகளும்; பாதுகாப்புக்களும் அரசின் சட்டசபையின் கமிட்டிகளின் முன்னிலையில் சாட்சியம் கொடுப்பதற்கோ தஸ்தாவேசுகள் கொணருதற்கோ நபர்கள் வந்திருக்கும்படி செய்தல்.

40. அரசின் அமைச்சர்களின் சம்பளங்களும் படிகளும்.

41. அரசின் பொதுச்சேவை வர்க்கங்கள்; அரசின் பப்ளிக் சர்வீஸ் கமிஷன்.

42. அரசுப் பென்ஷன்கள் அதாவது அரசினுல் அல்லது அரசின் திரண்ட நிதியிலிருந்து கொடுக்கலாகும் பென்ஷன்கள்.

43. அரசின் பொதுக் கடன்கள்.

44. புதையல்.

45. நிலவருமானம் வரி விதித்தலும், வசூலித்தலும், நில தஸ்தாவேசுக்களைப் பதித்து வைத்தல், அரசிறைக்கான சர்வே-நில உரிமை ரிக்கார்டுகள், அரசிறைகளைப் பராதீனம் செய்தல் இவை உட்பட.

46. விவசாய வருமானத்தின் மீது வரிகள்.

47. விவசாய நிலத்திற்கு வாரிசுப் பாத்தியம் பற்றிய தீர்வைகள்.

48. விவசாய நிலம் பற்றிய எஸ்டேட்டுத் தீர்வைகள்.

49. நிலங்கள், கட்டிடங்கள் இவற்றின் மீது வரிகள்.

50. கனிப் பொருள் பற்றி உரிமைகள் மீது வரிகள் — கனிப் பொருள் அபிவிருத்தி பற்றிப் பாராளுமன்றம் சட்டத்தினுல் விதிக்கும் எந்த வரையறைகளுக்கேனும் உட்பட்டு.

51. அரசில் தயாரிக்கப்படும் அல்லது உற்பத்தி செய்யப்படும் பின்வரும் பண்டங்களின் மீது கலால் தீர்வைகளும் இந்தியாவில், வேறெங்கேனும் தயாரிக்கப்படும் அல்லது உற்பத்தி செய்யப்படும் அதே மாதிரியான பண்டங்களின் மீது, அந்த விகிதங்களின் படியோ, அல்லது குறைந்த விகிதங்களின் படியோ எதிர்த் தீர்வைகள்.

(அ) மனிதர்கள் உட்கொள்ளும் மதுபானங்கள்.

(ஆ) அபினியும் இந்தியச் சணலும், போதை உண்டாக்கும் இதர மருந்துச் சரக்குகளும் போதைப் பொருள் களும்.

ஆனுல் மது சாரம் அல்லது இப்பதிவினில் (ஆ) உட்பிரிவில் சேர்ந்துள்ள ஒரு பொருள் அடங்கியுள்ள மருந்தும், பொருள்களும், வண்ண நறும் பொருள்களும் நீங்கலாக.

52. ஸ்தலப் பிரதேசத்திற்குள் செலவழிப்பதற்கோ, உபயோகிப்பதற்கோ அல்லது விற்பனே செய்வதற்கோ கொண்டு வருகை மீது வரிகள்.

53. மின்சாரத்தின் உபயோகம் அல்லது விற்பனேயின் மீது வரிகள்.

54. செய்தித்தாள்கள் அல்லாதனவான மற்றையப் பண்டங்களின் விற்றல் அல்லது வாங்குதல் மீது 1—ஆம் பட்டியலின் 92 (அ) பதிவிலுள்ளதற்குட்பட்டு வரிகள்.

55. செய்தித்தாள்களில் வெளியாகும் விளம்பரங்கள் அல்லாதனவான மற்றைய விளம்பரங்களின் மீது வரிகள்.

56. ரஸ்தா மார்க்கமாக அல்லது உள்நாட்டு நீர்ப் பாதைகள் மூலமாக ஏற்றிக் கொண்டு போகப்படும் பண்டங்களின் மீதும் பிரயாணிகளின் மீதும் வரிகள்.

57. ரஸ்தாக்களில் உபயோகிக்கப்படத்தக்க வாகனங்களின் மீதும் — டிராம் வண்டிகள் உட்பட — யந்திர சக்தியால்

செலுத்தப்படாவிட்டாலும் — வரிகள் 3-ஆம் பட்டியலின் 35-ஆம் பதிவிற்குட்பட்டு.

58. பிரயாணிகளின் மீதும் படகுகளின் மீதும் வரிகள்.

59. சுங்கங்கள்,

60. தொழில்கள், வியாபாரங்கள், அலுவல்கள், வேலைகள் இவைகளின் மீது வரிகள்.

61. தலைக்கட்டு வரிகள்.

62. போக்கியப் பொருள்களுக்கு வரிகள் — வேடிக்கைகள், கேளிக்கைகள், பந்தயம் ஓட்டுதல், சூதாட்டம் இவை களின் மீது விதிக்கப்படும் வரிகள்.

63. பத்திரவில்லைத் தீர்வை விகிதங்கள் சம்பந்தமாய் 1-ஆம் பட்டியலின் பதிவுகளில் குறிப்பிட்டிருப்பவை யல்லாதன வான மற்றைய தஸ்தாவேசுக்கள் பற்றிய ஸ்டாம்புத் தீர்வை விகிதங்கள்.

64. இப்பட்டியலில் உள்ளவை எது பற்றியேனும் செய்த சட்டங் களுக்கு விரோதமான குற்றங்கள்.

65. இப்பட்டியலில் உள்ளவை எதுபற்றியேனும் எல்லா நீதி மன்றங்களின் — தலைமை நீதி மன்றம் தவிர — விசாரணை அதிகாரமும் சக்திகளும்.

66. இப்பட்டியலில் உள்ளவைகளில் எதுபற்றியேனும் கட்டணங் கள், ஆனால் நீதிமன்றத்தில் வாங்கப்படும் கட்டணங்கள் நீங்கலாக.

## பொதுப் பட்டியல்

### —: மூன்றும் பட்டியல் :—

1. குற்றவியல் சட்டம் – இந்த அரசியலமைப்பின் தொடக்கத் தில் இந்தியத் தண்டனையியல் சேர்க்கப்பட்டனவும், ஆனால் முதலாவது அல்லது இரண்டாவது பட்டியலில் குறிப்பிட் டவைகளில் எது பற்றியேனும் செய்த சட்டங்களுக்கு விரோதமான குற்றங்கள் நீங்கலாக, சிவில் அதிகாரத் திற்குத் துணையாக மத்திய அரசின் கடற்படைகள் இரா ணுவப் படைகள் அல்லது விமானப் படைகளையாவது மற்றெந்த ஆயுதப் படைகளையாவது உபயோகித்தல் நீங்கலாகவும்.

2. குற்றவியல் வழக்குமுறை – இந்த அரசியலமைப்பின் தொடக்கத்தில் குற்றவியல் வழக்கு முறைச் சட்டத்தில் சேர்க்கப்பட்டிருந்தவைகள் உட்பட.

3. ஓர் அரசின் பாதுகாப்பு,பொது அமைதியைப் பாதுகாத்தல் அல்லது சமுதாயத்திற்கு அவசியமான சப்ளைகளையும் சேவைகளையும் பாதுகாத்தல்; இவை பற்றியவற்றிற்காகத் தடைப் பாதுகாவல், அத்தகைய பாதுகாவலுக்கு உட்பட்டவர்கள்.

4. கைதிகளையும் குற்றம் சாட்டப்பட்டவர்களையும் இந்தப் பட்டியலில் 3ஆம் பதிவில் குறிப்பிட்ட காரணங்களுக்காகத் தடைப் பாதுகாவலுக்கு உட்படுத்தப்பட்டவர்களையும் ஓர் அரசிலிருந்து மற்ருேர் அரசிற்கு அகற்றுதல்.

5. விவாகமும் – விவாக ரத்தும்; சிசுக்களும், மைனர்களும் சுவிகாரமும்; உயில் உயிலற்ற வாரிசுரிமை, வாரிசுரிமை ; அவிபக்த குடும்பமும் பாகப்பிரிவினையும்; இந்த அரசியலமைப்பின் தொடக்கத்திற்கு அடுத்து முன்னதாக நீதி மன்ற நடவடிக்கைகளில் சம்பந்தப்பட்ட கட்சிக்காரர்கள் எவ்வெப் பொருள்களில் தம்மினச் சட்டத்திற்குட் பட்டிருந்தார்களோ அவை எல்லாம்.

6. விவசாய நிலமல்லாத மற்றையச் சொத்தை மாற்றுதல்; பத்திரங்களையும் தஸ்தாவேசுக்களையும் பதிவு செய்தல்.

7. ஒப்பந்தங்கள், கூட்டுப் பங்கு ஏஜென்சி, பொருள்களை ஏற்றிச் செல்வதற்கான ஒப்பந்தங்கள், மற்றைய வகைச் சிறப்பு ஒப்பந்தங்கள் உட்படவும், விவசாய நிலம் பற்றிய ஒப்பந்தங்கள் நீங்கலாகவும்.

8. வழக்குத் தொடரலாகும் தவறுகள்.

9. வியாபார முறிவும் திவாலாவும்.

10. டிரஸ்டும் டிரஸ்டிகளும்.

11. அரசுப் பொறுப்புச் சொத்தின் ஆட்சியாளர்கள் (Administrator General) பொறுப்புச் சொத்து ஆட்சியாளர்களும் (Official Trustees).

12. சாட்சியமும் பிரமாணங்களும்; சட்டங்களையும் பொதுக் காரியங்களையும் ஆவணங்களையும் நீதி மன்ற நடவடிக்கைகளையும் அங்கீகரித்தல்,

13. உரிமையியல் வழக்கு முறை – இந்த அரசியலமைப்பின் தொடக்கத்தில் உரிமையியல் வழக்கு முறைச் சட்டத்தில் சேர்க்கப்பட்டவை உட்பட; காலாவதி மத்தியஸ்தம்.

14. நீதி மன்ற அவமதிப்பு. ஆனால் தலைமை நீதி மன்ற அவ மதிப்பு நீங்கலாக.

15. நாடோடிகளாகத் திரிதல்; நிலையற்றவராகவும் நாடு மாறிய வராகவும் உள்ளவர்கள்.

16. பைத்தியமும், சித்த சுவாதீனமின்மையும், பைத்தியக் காரர்களையும் சுவாதீன மற்றவர்களையும் ஏற்றுக் கொள் வதற்கோ அவர்களுக்குச் சிகிச்சை செய்வதற்கோ ஆன இடங்கள் உட்பட.

17. மிருகவதைத் தடுப்பு.

18. உணவுப் பொருள்கள் மற்றைய பண்டங்கள் இவற்றின் கலப்படம்.

19. மருந்துப் பொருள்களும் விஷங்களும் அபினி சம்பந்த மாக 1-ஆம் பட்டியலின் 59-ஆம் பதிவிற்கு உட்பட்டு.

20. பொருளாதாரச் சமூகத் திட்டங்கள் அமைத்தல்.

21. வாணிபம், தொழில் பற்றிய ஏகபோக உரிமைகளும் கூட்டு ஸ்தாபனங்களும் டிரஸ்டுகளும்.

22. தொழிற் சங்கங்கள் - தொழில் பற்றியும் - தொழில் செய்தல் பற்றியும் ஏற்படும் தகராறுகள்.

23. சமூகப் பாதுகாப்பும் சமூகக் காப்புறுதியும், வேலையில் இருத்தலும் வேலையில் இல்லாமையும்.

24. தொழிலாளர்களின் நலம், சேவை முறைகள், பிராவிடண்டு பண்டுகள், எஜமானர்களின் கடப்பாடு, வேலையாட் களுக்குக் கொடுக்கப்படும் இழப்பீடு, உடல் நலிவு காரண மாகவும் முதுமை காரணமாகவும் கொடுக்கப்படும் ஓய்வு ஊதியங்கள், கருவுற்றோருக்குச் சகாயம் இவை உட்பட.

25. தொழிலாளர்களுக்கு வேலை பற்றிய பயிற்சியும் தொழில் முறைப் பயிற்சியும்.

26. சட்டம், வைத்தியம் மற்றைய தொழில்கள்.

27. இந்தியா - பாகிஸ்தான் ஆகிய டொமினியன்களை நிலை நாட்டியதன் காரணமாகத் தங்களுடைய பழைய குடியிருப்

பிடங்களிலிருந்து வெளியேற்றப் பட்டிருப்பவர்களுக்குப் பரிகாரமும் புனர்வாழ்விப்பும்.

28. தருமங்களும் தரும நிலையங்களும் தருமம் மதம் இவை பற்றிய நிதிகளும் அறநிலையங்களும்.

29. தொத்து வியாதிகளும் அல்லது ஒட்டு வியாதிகளும் மனிதர்களையோ விலங்குகளையோ அல்லது தாவரங்களை யோ பாதிக்கும் பரவு நோய்களும், ஓர் அரசிலிருந்து மற்ருேர் அரசிற்குப் பரவாமல் தடுத்தல்.

30. பிறப்பு இறப்புப் பற்றிய புள்ளி விவரங்கள் – பிறப்புக்களை யும் இறப்புக்களையும் பதிவு செய்தல் உட்பட.

31. பாராளு மன்றச் சட்டத்தினுல் அல்லது ஏற்கனவேயுள்ள சட்டத்தினுல் அல்லது அதன் கீழ்ப் பெருந் துறைமுகங் கள் என்று அறிவிக்கப் பட்டவை அல்லாத மற்றைய துறைமுகங்கள்.

32. இயந்திர சக்தியினுல் ஓட்டப்படும் மரக்கலங்கள் சம்பந்த மாக மட்டும் உள்நாட்டு நீர்ப்பாதைகளில் கப்பல்களும் அவற்றைச் செலுத்துதலும்; அத்தகைய நீர்ப்பாதைகளின் வழியைப் பற்றிய விதிகள்; தேசிய நீர்ப்பாதைகள் பற்றிய 1-ஆம் பட்டியலுக்கு உட்பட்டு உள்நாட்டு நீர்ப்பாதை களில் பிரயாணிகளையும் பண்டங்களையும் ஏற்றிச் செல்லு தல்.

33. (அ) பொது நலனின் பொருட்டு, ஒரு தொழிலை மத்திய அரசின் மேலதிகாரத்திற்குக் கீழ்ப்பட்டிருக்கும்படிச் செய் தல் உசிதமாய் இருக்குமெனப் பாராளு மன்றம் சட்டத்தி னுல் அறிவித்தால் அத்தொழிலின் உற்பத்திப் பொருள்கள் அப் பொருள்களைப் போலவே இறக்குமதி செய்யப்பட்ட சரக்குகள்.

(ஆ) உட்கொள்ளலாகும் எண்ணெய் வித்துக்கள், எண் ணெய்கள் உட்பட உணவுப் பொருள்கள்.

(இ) பிண்ணுக்கு, இறுக்கப்பட்ட மற்றையப் பொருள்கள் உட்படக் கால்நடைத் தீவனம்.

(ஈ) விதை எடுத்த அல்லது எடுக்காத கச்சாப் பருத்தி, பருத்தி விதை.

(உ) கச்சாச் சணல்.

இவற்றில் வியாபாரமும் வாணிபமும் அப் பொருள்களின் உற்பத்தியும் சப்ளையும் வினியோகமும்.

34. விலைக் கட்டுப்பாடு.

35. இயந்திர சக்தியினால் செலுத்தப்படும் வண்டிகள் அத் தகைய வண்டிகளின் மீது வரிகள் விதிப்பதற்கான கோட் பாடுகள் உட்பட.

36. தொழிற்சாலைகள்.

37. கொதிகலங்கள்.

38. மின்சாரம்.

39. செய்தித் தாள்களும், புத்தகங்களும் அச்சகங்களும்.

40. தேசிய முக்கியத்துவம் வாய்ந்தவை என நாடாளு மன்றச் சட்டத்தினால் ( அல்லது அதன் கீழ் ) அறிவிப்பு அல்லாதன வான மற்றையப் பழம் பொருள் இடங்களும் சிதைவுகளும்.

41. அதிகச் சொத்து என்று திட்டத்தினால் தெரிவிக்கப்பட்ட சொத்தை, ( விவசாய நிலம் உட்பட ) பத்திரமாகப் பாது காத்தல் நிர்வகித்தல் பட்டுவாடா செய்தல்.

42. சொத்தினை நிரந்தரமாக அல்லது தற்காலிகமாகக் கைப் பற்றுதல்.

43. வரிகள், மற்றையப் பொதுக் கோரிக்கைகள் இவற்றைப் பற்றிய, தாவாத் தொகைகளை ஓர் அரசில் வசூலித்தல் அந்த அரசிற்கு வெளியே எழும் நிலவரிப் பாக்கிகளும் அத் தகைய பாக்கிகளைப் போல் வசூலிக்கலாகும் தொகை களும் உட்பட.

44. நீதி மன்றப் பத்திர வில்லைகள் ரூபமாக வசூலிக்கப்படும் தீர்வைகள் அல்லது கட்டணங்கள் அல்லாத மற்றையப் பத்திர வில்லைகள் தீர்வைகள். ஆனால் ஸ்டாம்புத் தீர்வை விகிதங்கள் நீங்கலாக.

45. 2-ஆம் பட்டியலிலாவது அல்லது 3-ஆம் பட்டியலிலாவது குறிப்பிட்டவைகளில் எதன் பொருட்டும் விசாரணைகளும் புள்ளி விவரங்களும்.

46. இந்தப் பட்டியலிலுள்ளவைகளில் எது பற்றியேனும் எல்லா நீதி மன்றங்களின் – தலைமை நீதி மன்றம் தவிர – அதிகார வரம்பும் அதிகாரங்களும்,

47. இந்தப் பட்டியலிலுள்ளவைகளில் எது பற்றியேனும் கட்டணங்கள் (ஆனல் ஒரு நீதி மன்றத்தில் வாங்கப்படும் கட்டணங்கள் நீங்கலாக).

மாநிலப் பட்டியலிலுள்ள மொத்த அதிகாரங்கள் 66-இல், 7–ஆவது திருத்தச் சட்டத்தால் (Seventh Amendment Act) 36-ஆம் பதிவு நீக்கப்பட்டு விட்டது. மீதியுள்ள 65 அதிகார இனங்களில் ஏறத்தாழ 20 இனங்கள் மாநிலங்களின் வரி விதிப்பு அதிகாரங்களைப் பற்றியவை (பதிவு 45 முதல் 63 முடிய, மற்றும் 66–ஆம் பதிவு).

வரி விதிப்பு இனங்கள் நீங்கலாக எஞ்சியுள்ள 45 பதிவுகள் எல்லாவற்றிலும் மாநில அரசுகள் தனித்துச் செயல்பட முடியாது. மாநிலப் பட்டியலிலுள்ள 9 அதிகாரப் பதிவுகளை (பதிவுகள் 17, 22, 23, 24, 33, 37, 50, 56, 63), மத்திய அரசு தனது மத்திய அதிகாரப் பட்டியலின் பல பதிவுகள் மூலமாகக் கட்டுப்பாடு செய்து விடுகின்றது.

மீதமுள்ள 36 மாநில இனங்களில் மூன்று அதிகாரங்களை (பதிவுகள் 26, 27, 57 )பொதுப் பட்டியல் கவர்ந்து கொள்கின்றது. எஞ்சியுள்ள 33 மாநில அதிகாரங்களில் இரண்டு இனங்கள் (பதிவு 11 மற்றும் 13) பொதுப் பட்டியலாலும், மத்தியப் பட்டியலாலும் சேர்த்துச் சுருக்கப்பட்டு விடுகின்றன.

எனவே, மாநில அரசுகள் மாநிலப் பட்டியலில் மீதமுள்ள 31 அதிகார இனங்களில் மட்டுமே, தனித்துச் செயல்படக் கூடிய வாய்ப்பைப் பெறுகின்றன.

இந்த31அதிகாரங்களில் கூட எல்லாப் பதிவுகளுமே முக்கியமான அதிகாரங்களல்ல. அதில் ஏறத்தாழ, 15 பதிவுகள் மாநில அரசின் சாதாரண நிர்வாகப் பணிகளையே உள்ளடக்கி யுள்ளன. அவைகளை ஓர் அரசிற்கு ஒதுக்கப்பட்டுள்ள இன்றியமையாத அதிகாரங்கள் எனக் கூடக் கூற முடியாது.

அவையாவன :—

1. ஊனமுற்றோருக்கு வசதி (பதிவு 9).
2. புதைத்தல், சுடுகாடு, தகனம் செய்தல் (பதிவு 10).
3. கால்நடைகளின் நோய்கள், மருத்துவம் (பதிவு 15).

4. கால்நடைத் தொண்டுப் பட்டிகள் (பதிவு 16).
5. காட்டு மிருகங்கள், பறவைகள் ஆகியவற்றைப் பாதுகாத்தல் (பதிவு 20).
6. மீன் (பதிவு 21)
7. சந்தைகள் (பதிவு 28).
8. எடை அளவுகள் (பதிவு 29).
9. விடுதிகளும் விடுதிக்காரர்களும் (பதிவு 31).
10. பந்தயம் மற்றும் சூதாட்டம் (பதிவு 34).
11. சட்டப்பேரவை, மேலவைத் தலைவர், உப-தலைவர் சம்பளம் (பதிவு 38).
12. சட்டப்பேரவை மற்றும் சட்டமேலவை உறுப்பினர்களின் சில உரிமைகள் (பதிவு 39).
13. அமைச்சர்களின் சம்பளம் (பதிவு 40).
14. ஓய்வுக் கால ஊதியம் (பதிவு 42).
15. புதையல் (பதிவு 44).

மேலுள்ள பதினைந்து இனங்கள் மாநிலப் பட்டியலில் பெயரளவிற்கு இடம் பெறினும், உண்மையில் அவை அதிகாரங்களாக மாட்டா.

எனவே, மாநிலப் பட்டியலில் மொத்தம் 66 அதிகார இனங்கள் தெளிவாக இடம் பெற்றிருப்பினும் கூட, உண்மையில் மாநில அரசுகள் தனித்துச் செயல்படுவதற்காக ஏறத்தாழ, 18 முக்கிய அதிகாரங்கள் மட்டும்தான் நமது அரசியல் சட்டத்தால் தரப்பட்டுள்ளது.

அவையாவன:—

1. பொது அமைதி (பதிவு 1).
2. காவல்துறை (பதிவு 2).
3. நிதி நிர்வாகம் (பதிவு 3).
4. சிறைச்சாலை (பதிவு 4).
5. உள்ளாட்சி (பதிவு 5).
6. பொதுச் சுகாதாரம் மருத்துவம் (பதிவு 6).

7. யாத்திரைகள் (பதிவு 7).
8. போதை தரும் மது உற்பத்தி, விநியோகம் (பதிவு 8).
9. நூல் நிலையங்கள், பொருட்காட்சி சாலைகள் (பதிவு 12).
10. வேளாண்மை (பதிவு 14).
11. நிலம் (பதிவு 18).
12. காடுகள் (பதிவு 19).
13. எரிவாயு (பதிவு 25).
14. கடன் தொழில், கடன் நிவாரணம் (பதிவு 30).
15. மத்திய அரசுப் பட்டியலுக்குட்பட்ட கல்வி (பதிவு 32).
16. மாநில அரசின் நிலங்கள், பணிகள், கட்டிடங்கள் (பதிவு 35).
17. பப்ளிக் சர்வீஸ் கமிஷன் (பதிவு 41).
18. அரசின் கடன்கள் (பதிவு 43).

மேற்கூறியவை மட்டுமே குறிப்பிடத்தக்க மாநில அதிகாரங்களாகும். அவற்றுள்ளும் வேளாண்மை, நிலம், காடுகள், கல்வி ஆகியவை மத்திய அரசு வகுக்கும் அகில இந்தியாவிற்கான சீர்மைக் கொள்கைகளுக்கு உட்பட்டவையாகும்.

மத்திய அரசு, அதன் அதிகாரப் பட்டியலிலுள்ள சில மறைமுக ஏற்பாடுகள் மூலமாகவும் அரசியல் சட்டத்தின் சில விதிகளின் வாயிலாகவும் நாடாளுமன்றத்தின் மூலமாகவும் குடியரசுத் தலைவரின் தடை அதிகாரத்தைப் பயன்படுத்தியும் மாநில அரசுகளின் சட்டமியற்று அதிகாரங்களில் ஊடுருவல் செய்கிறது. அவை பற்றி இனிக் காண்போம்.



# 4. மாநில அதிகாரங்களைச் சுருக்கும் சில மறைமுக ஏற்பாடுகள்

> "...(மாநிலப் பட்டியலில் உள்ள) 66 அதிகாரங்களில் சுமார் 30 அதிகாரங்கள், முக்கியமற்ற வெறும் 'போலீஸ் கடமை'களைப் பற்றியவை; இன்னும் சுமார் 22 இனங்கள் வரி விதிப்புப் பற்றியவை. மாநிலச் சட்ட மன்றம் கொஞ்சமாவது உற்சாகம் காட்டக் கூடிய 'வளர்ச்சிப் பணிகள்' பற்றியவை மீதமுள்ள 14 தலைப்புகளில் வரும் அதிகாரங்கள் மட்டுமே..." [1]
>
> — திரு. கே. வி. ராவ் அவர்கள்

மத்திய அரசுப் பட்டியலிலிருக்கும் 97 அதிகாரங்களையும், மாநிலப்பட்டியலில் இருக்கும் 66 அதிகார இனங்களையும் மேலோட்டமாகப் பார்த்து விட்டு, "மத்திய அரசுப் பட்டியலில் 96 அதிகார இனங்கள் இருந்தா லென்ன; இருந்து விட்டுப் போகட்டுமே. மாநிலப் பட்டியலில்தான் மொத்தம் 66 அதி கார இனங்கள் மாநிலங்களுக்குத் தரப்பட்டுள்ளனவே; அவற்றி லுள்ள 19 தலைப்புக்கள் வரி போடும் பேருரிமைகளை வழங்கக் கூடிய முக்கிய அதிகாரங்களாயிற்றே. இத்துணை அதிகாரங்கள் மாநிலங்களுக்குப் போதாதா? எனவே, மாநில சுயாட்சி பறி போகிறது; மாநில உரிமைகள் நசுக்கப்பட்டு விட்டன எனக் கூறுவதெல்லாம் வீண் பிரமை, வெற்று வாதங்கள்" என்ற அவசர முடிவுக்கு யாரும் வந்துவிட வேண்டாம்.

மாநிலப் பட்டியலென்னவோ, சற்று நீண்ட பட்டியலாகத் தான் உள்ளது; உண்மைதான். ஆனால் அரசமைப்புச் சட்டத் திலுள்ள வேறு பல சட்ட விதிகளின் கலப்புச் செயல்களால் அந்த 66 மாநில அதிகார இனங்களிலும் மாநில அரசுகள் தனித்து, முழுமையாகச் சட்டமியற்ற முடிவதில்லை. ஏறத்தாழ 34 அதிகார இனங்களில் மட்டும் தான், நடைமுறையில் மாநிலச் சட்ட மன்றங்கள், சட்டமியற்றிச் செயல்பட முடிகிறது.

---

1 Mr. K. V. Rao, "Parliamentary Democracy in India," P. 278

அஃதாவது "கழுதை தேய்ந்து கட்டெறும்பாகி விடுகிறது", நமது அரசமைப்பில் கையாளப்பட்டுள்ள பலவகை மறைமுக ஏற்பாடுகள் மூலமாக மாநிலப் பட்டியலில் கண்டுள்ள 66 அதிகார இனங்கள் சுருங்கி, மிகக் குறைந்த பட்ச அதிகாரங்களாகத் தேய்ந்து விடுகின்றன. அது எப்படி? இவண் ஆய்வோம்.

## I
## மத்தியப் பட்டியலில் மாநிலச் சொத்துக்கள்

நமது அரசமைப்புச் சட்டத்திலுள்ள மூவகை அதிகாரப் பட்டியல்களை உற்று நோக்கினால், அவற்றில் மத்திய அரசுப் பட்டியல், வெகு நீண்டதொரு பட்டியலாக இருப்பதும் மாநிலப் பட்டியலிலுள்ள சில அதிகார இனங்களின் விரிவாக்கச் (Extensions) சாயலைக் கொண்ட அதிகார இனங்களும் மத்தியப் பட்டியலில் சேர்க்கப்பட்டிருப்பதும் நமக்குத் தெரிய வரும்.

மேலும், மாநிலங்களில் இருக்கும் பல அசையாச் சொத்துக்களைப் பற்றியும், நியாயமாக மாநில அரசின் அதிகார வரம்பிற்குள் வரவேண்டிய சொத்துக்கள் பற்றியும் மத்திய நாடாளுமன்றமே நேரடியாகச் சட்டமியற்றுவதற்கு வழிவகை செய்யும் பல அதிகார இனங்களும் மத்தியப் பட்டியலில் இடம் பெற்றுள்ளன.

அவையாவன:—

1) மத்தியப் பட்டியலில் 22-ஆம் பதிவான "ரயில் பாதைகள்"
2) 23-ஆம் பதிவான "தேசியப் பெருவழித் துறைகள்."
3) 24-ஆம் பதிவான "தேசிய நீர்ப் பாதைகளில் செல்லும் கப்பல்கள், அவைகளைச் செலுத்துதல் பற்றியன."
4) 26-ஆம் பதிவான "கலங்கரை விளக்குகள், கப்பல்கள், விமானங்கள், பாதுகாப்பு ஏற்பாடுகள்."
5) 27-ஆம் பதிவான "பெருந் துறைமுகங்கள்—அதன் எல்லைகளை வரையறுத்தல்—அதன் அதிகாரிகளை அமைத்தல்."
6) 29-ஆம் பதிவான "ஆகாய விமானப் பாதைகள், விமானங்கள், அவை பற்றிய நிர்வாக ஏற்பாடுகள்."

7) 30-ஆம் பதிவான "ரயில் - கடல் - மற்றும் ஆகாய வழி செல்லும் பிரயாணிகள், பண்டங்கள்."

8) 52-ஆம் பதிவான "பொதுநலன் கருதி மத்திய அரசின் மேலதிகாரத்திற்குட் படுத்தப்படும் கைத்தொழில்கள்."

9) 53-ஆம் பதிவான "எண்ணெய் வயல்கள், கனி, எண்ணெய்ப் பொருட் சாதனங்கள் - அவை பற்றிய சட்டங்கள், விதிகள்."

10) 56-ஆம் பதிவான "மத்திய அரசின் மேலதிகாரத்திற்குட் படுத்தப்பட்ட சுரங்கங்களை ஒழுங்கு முறைப்படுத்தும் விதிகளும், கனிப் பொருள்களை அபிவிருத்தி செய்தலும்."

11) 56-ஆம் பதிவான "பல மாநிலங்களிலுள்ள ஆறுகள், பள்ளத்தாக்குகள் பற்றி முறைப்படுத்தும் நெறிகள்."

12) 67-ஆம் பதிவிலுள்ள "புராதனமானதும் சரித்திர சம்பந்தமுமான ஞாபகச் சின்னங்களும் பழம்பொருள், புதைபொருள் இடங்களும் அதன் சிதைவுகளும் பற்றி வளர்ச்சி, காப்பு, விதி செய்தல்."

மத்திய அரசுப் பட்டியலில் வரும் மேற்சொன்ன 12 அதிகாரங்களால், மாநில அதிகார எல்லைக்குட்பட்ட சொத்துக்களை மத்திய அரசு. தனதாக்கிக் கொள்கிறது. மத்திய அரசின் உரிமம் (License) மற்றும் அனுமதி இல்லாமல் (மேற் சொன்ன 12 அதிகார இனங்களில் உள்ளடங்கும்) மாநிலச் சொத்துக்களின் மேல் மாநில அரசுகள் எவ்வகை உரிமையையும் பெற இயலாது. அவை பற்றித் தேவையான சட்டமியற்றவோ, அதிகாரம் செலுத்தவோ மாநிலங்களுக்கு அருகதையில்லை.

அரசமைப்புச் சட்டத்திலுள்ள வெளிப்படையான சில விதிகளுக்கு உட்பட்டு மத்திய அரசு எந்த மாநிலத்திலுள்ள எந்தச் சொத்தை வேண்டுமானாலும் கையகப்படுத்தி, தனது அதிகார வரம்பிற்குள் அவற்றைக் கொண்டு வந்து விடலாம்.

ஒரு சான்று :- மத்தியப் பட்டியல் 67-ஆம் பதிவின் அதிகாரத்தின் மூலமாக, இந்தியத் துணைக்கண்டத்திலுள்ள எல்லா "புராதன, சரித்திர சம்மந்தமான ஞாபகச் சின்னங்களும்" மத்திய அரசின் நேரடி நிர்வாகத்திற்குள்ளடங்கி விடுகின்றன. அவற்றில்தமிழகத்திலுள்ள தஞ்சைப் பெரிய கோயிலும் ஒன்று. 1972-ஆம் ஆண்டில் தமிழகத்தில், தஞ்சைப் பெரிய கோயிலினுள் அதனைக் கட்டிய தமிழ் மன்னன் இராசராச சோழனின் சிலையை நிறுவுவதற்குத் தமிழக அரசு, பலமுறை மத்திய அரசை

வேண்டியும், அதற்குரிய அனுமதியை, இறுதி வரை மத்திய அரசு வழங்கவில்லை. திராவிட முன்னேற்றக் கழக அரசினுல் வடிக்கப்பட்ட அப்பேரரசனின் சிலை இன்னும் கோயிலின் வெளிப்புறத்தில் வாயிற் காவலன் போல் நிறுத்தப் பட்டிருப் பதற்குக் காரணம் தமிழ் மாநிலச் சொத்தான, தஞ்சைசப் பெரிய கோயில், (புராதன ஞாபகச் சின்னங்கள் என்ற) பதிவின் மூலமாக மத்திய அரசிற்குப் பாத்தியப்பட்டு விடுவ தால்தான்.

## II
## பாம்புக்குத் தலை மீனுக்கு வால்

மாநிலப் பட்டியலில் உள்ள இன்னும் சில அதிகாரப் பதிவு கள், தோற்றத்திற்கு மாநில அதிகாரத்திலிருப்பதைப் போல் காணப்படினும் மத்தியப் பட்டியலுடனும், பொதுப் பட்டிய லுடனும், அந்தச் சில மாநிலப் பதிவுகளைச் சேர்த்துப் படித்தால் அவற்றில் சில - பொதுப்பட்டியலில் இடம் பெற்றவையாக இருக்கும்; இன்னும் சில—மத்தியப் பட்டியலில் இடம் பெற்றவை யாக இருக்கும்—''பாம்புக்குத் தலை மீனுக்கு வால்'' என்பார்களே அதைப் போல். இப்படி ஒரே மாதிரி தெரியும் சில அதிகாரங் களை மாநிலங்களுக்குத் தந்திருப்பதன் மூலம், அவற்றை மத்திய அரசு தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்கிறது.

சான்று:- மாநிலப் பட்டியலின் 18-ஆம் பதிவான ''நிலம், விளைநிலம்'' என்பது ஒரு மாநில அதிகாரம். ஆனுல் பொதுப் பட்டியலின் 42-ஆம் பதிவான ''நிலத்தை கையகப் படுத்திக் கொள்ளுதல்'' என்ற இனம், மேற்சொன்ன மாநில இனத்தைப்போலவே தோற்றமளிக்கிறது. பொதுப்பட்டியலில் உள்ள எந்த இனத்தில் வேண்டுமானுலும் மத்திய அரசும் சட்டம் செய்யலாம். எனவே, மாநிலப் பட்டியலிலுள்ள ''நிலம், விளைநிலம்'' என்ற மாநில அதிகாரம், மத்திய அரசும் மாநில அரசும் தனித்தனியாகச் சட்டமியற்றக்கூடிய ஒரு பொது அதிகாரமாக உண்மையில் மாற்றப்பட்டு விடுகிறதல்லவா?

## III
## அலாவுதீனின் அற்புத விளக்கு

இதைப் போலவே,மத்தியப் பட்டியலிலுள்ள சில அதிகாரங் களையும், பொதுப் பட்டியலில் உள்ள சில அதிகாரங்களையும் அடிப்படையாக வைத்து, அவைகளில் சட்டமியற்றும் பாணி

யில்-(மாநிலங்களே சட்டமியற்றக் கூடிய)மாநிலப் பட்டியலின் நியாயமான சில அதிகாரங்களில் கூட, மத்திய அரசு கூடுவிட்டுக் கூடு பாய்ந்து கொள்கின்றது.

அவையாவன :

1) மத்தியப் பட்டியலில் உள்ள ''பாதுகாப்பு'';
2) பொதுப்பட்டியலின் 33-ஆம் பதிவான ''சில பொருட்களின் வர்த்தகமும் வாணிகமும்'';
3) பொதுப்பட்டியல் 20-ஆம் பதிவான ''சமுதாயம் மற்றும் பொருளாதாரத் திட்டமிடுதல்'';
4) பொதுப் பட்டியல் 34-ஆம் பதிவான ''விலைவாசிக் கட்டுப்பாடு'';

மேற்சொன்ன நான்கு அதிகார இனங்களில் முதல் தலைப்பில் வரும் ''பாதுகாப்பு'' என்பது மத்தியப் பட்டியலில் இடம் பெற்றிருப்பதால் அது மத்திய அரசிற்கே முழுமையாகப் பாத்தியப்பட்டது. 2 முதல் 4 வரையுள்ள மற்ற அதிகாரங்கள் பொதுப் பட்டியலில் இருப்பதால், அவற்றில் மாநிலங்களும் சட்டமியற்றலாம்; மத்திய அரசும் சட்டமியற்றலாம். ஆனல் மத்திய அரசு இவற்றில் சட்டம் செய்து விட்டால், மாநில அரசுகள் அதில் சட்டமியற்ற முடியாது. எனவே, மத்திய அரசிற்கு, அத்தனி உரிமை ஏற்பட்டு விடுகிறது.

இந்த நால்வகை (மத்திய) அதிகாரங்கள் மிகமிகச் சிறிய அதிகாரங்களாகத் தோன்றும். ஆனல் இந்த அதிகாரங்களில் கற்பனைக் கெட்டிய எந்த வகை மாநில அதிகாரத்தை வேண்டுமானுலும் நுழைத்து விடலாம். அஃதாவது, இந்த நால்வகை அதிகாரங்களுக்குள் மத்திய அரசு, சட்டம் செய்வதாகச் சொல்லி, இந்த அதிகாரங்களின் சாயலைப்போல உள்ள -மாநிலப் பட்டியலின் பல அதிகாரங்களில்-மாநிலங்கள் சட்டம் செய்ய முடியாதவாறு தடுத்து விடலாம். எப்படி?

1) ''நாட்டுப் பாதுகாப்பு'':- என்ற மத்தியப் பட்டியலில் உள்ள அதிகாரத்தை வைத்து, பீரங்கி தயாரிக்கும் தொழிற்சாலையிலிருந்து மாவரைக்கும் இயந்திரம் வரை, மத்திய அரசு சட்டமியற்றிக் கட்டுப்பாடுகளை விதிக்கலாமல்லவா?

மேலும் இந்தியப் பொருளாதாரத்தை இயக்குகின்ற எல்லாச் சக்திகளையும் மத்திய அரசு, கட்டுப்படுத்துவதற்குத் தேவையான சட்டங்களை ''பாதுகாப்பு'' என்ற இந்த அதிகாரத்தின் துணைக் கொண்டு இயற்றி, அவற்றைத் தன் வயப்படுத்திக் கொள்ளலாமல்லவா? எனவே, மாநிலப் பட்டியலில் உள்ள வேறு பல அதிகாரங்களும் அந்த மத்திய அரசுச் சட்டத்தின் மூலமாக முழுமையாகப் பாதிக்கப் பட்டு விடுகின்றன. எனினும், ''மாநிலப் பட்டியலில் உள்ள அதிகாரத்தை நாங்கள் தொடவில்லையே; 'பாதுகாப்பு' என்ற அதிகாரம் மத்தியப் பட்டியலிலுள்ள ஒரு அதிகார இனம் தானே; அதில் மத்திய அரசுக்குச் சட்டம் செய்ய எல்லா உரிமையும் உண்டு'' எனக்கூறி மாநில அதிகார இனங்களில் மத்திய அரசு, சட்டப்பூர்வமாக ஊடுருவல் செய்து கொள்ளலாம்.

2) ''பொருளாதாரத் திட்டமிடுதல்'': பொதுப் பட்டியலிலுள்ள இந்த அதிகாரத்தைப் பயன் படுத்தி நிறைவேற்றப்பட்ட மத்திய அமைச்சரவையின் 1950-ஆம் வருடத்திய ஒரு சாதாரணத் தீர்மானத்தை வைத்துத்தான், மத்திய அரசுச் செயலகத்தைக் காட்டிலும் விரிவானதும், அகில இந்தியாவையே ஆட்கொண்டு விட்டதுமான ''திட்டக்குழு'' (Planning Commission) உருவாயிற்று. அது பின்னால் மிகப் பெரிய பேயுரு எடுத்து 4 ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றியது. மத்திய அரசின் பல நிறுவனங்களையும், துறைகளையும், மாநில அரசுகளையும் ஒன்றாகச் சேர்த்து அந்தத் திட்டக்குழு தன் வயிற்றிலடக்கிக் கொண்டது. மாநிலங்களின் சட்டமியற்று மதிகாரங்கள், நிதி ஒதுக்கீடுகள், ஆட்சி அதிகாரங்கள் எல்லாமே, திட்டக்குழு என்ற சர்வ வல்லமை வாய்ந்த வல்லரக்கனின் இயக்கத்திற்குக் கட்டுப்பட்டவைதான். அந்த வல்லரக்கனை இயக்குவது யாரெனில், ''திட்டமிடுதல்'' என்ற இந்தச் சிறிய அதிகாரத்தைப் பொதுப் பட்டியலிலிருந்து பெற்றுக் கொண்ட மத்திய அரசுதான். ''திட்டமிடுதல்'' பற்றி இந் நூலின் நான்காம் பகுதி முதலிரண்டு அத்தியாயங்களில் விரிவாக ஆய்வு செய்யப்பட்டுள்ளது. அவற்றை இதன் தொடர்பாகக் காண்க.

3) ''விலைவாசியைக் கட்டுப்படுத்துதல்'':- பொதுப் பட்டியலின் இந்த அதிகார இனம், வெங்காய விலையை நிர்ணயிப்பதி லிருந்து ஆகாய விமானத்தின் விலையைக் கட்டுப்படுத்தக் கூடிய அளவிற்குப் பரந்து விரிந்து நிற்கின்றது. இந்திய நாட்டில் தயாரிக்கப்படும் எந்தப் பொருள் பற்றிய உற்பத்தி விலை நிர்ணயம் மற்றும் விநியோகம் ஆகியவற்றை இந்த அதிகாரத்தின் மூலமாக மத்திய அரசு பெற்றுக் கொள்கிற தல்லவா? மாநிலங்களின் அதிகாரங்களில் வரும் பல அதி காரங்கள் இதனல் பாதிக்கப்பட்டாலும் அதைப் பற்றி மத்திய அரசு கவலைப்பட வேண்டியதில்லை. எனினும் 24 ஆண்டுகளாகியும், மத்திய அரசால் பல அத்தியாவசியப் பொருள்களின் விலைவாசியைக் கூட இதுவரை கட்டுப் படுத்த முடியவில்லை. ஆனல், அது ''பொருளாதாரம்''; அரசமைப்புச் சட்டத்தைப் பொறுத்த தல்ல. அதனல், மாநிலங்களே அதன் (மத்திய அரசுடைய நடவடிக்கை களின்) விளைவுகளை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

4) ''சில உற்பத்திப் பொருள்கள் - உணவுப் பொருள்கள் ஆகி யவைகளின் வர்த்தகமும் வாணிகமும்'':- இந்தச் சின்னஞ் சிறு அதிகாரத்தின் மூலமாகத்தான் மாநிலங்களைச் சுண்டி யடக்கும் சாட்டையை மத்திய அரசு பெற்றிருக்கிறது. உற்பத்திப் பொருள்கள் மற்றும் உணவுப் பொருள்கள் பற்றிய வணிகத்தையும் வர்த்தகத்தையும், வளைத்துக் கொள்ளும் பல்வகைச் சட்டங்களை யெல்லாம் இந்த அதி கார இனத்தின் மூலமாக மத்திய அரசு செய்து கொள்கிறது. ஆனல், அது எந்த மாநிலத்தை எப்படிப் பாதித்தாலும் மத்திய அரசிற்குக் கவலையில்லை. ஏனெனில் அது பொதுப் பட்டியலில் உள்ள ஓர் அதிகார மல்லவா? மாநிலத்திற் கான தனி அதிகார மல்லவே.

சான்று: சென்ற 1973-ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் தமிழக அரசு, கேரளாவிற்கு அரிசியை அனுப்புவதற்காக - இரு மாநில அரசுகளிடையே ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. அதை அனுமதிக்க விரும்பாத மத்திய அரசு, ''தன்னை அறியாமல் அவ்வகை வர்த்தகம் நடைபெறக்கூடாது'' என்ற ஆணையைப் பிறப்பித்தது. வேறு துறையில் வரும் அதிகாரத் துடன், இந்த வகை அதிகாரத்தையும் மத்திய அரசு கைக் கொண்டிருப்பதால் தான், மாநிலங்களுக்கு மத்திய அரசு அவ்வகைக் கட்டளைகளைப் பிறப்பிக்க முடிந்தது.

**அற்புதவிளக்கு**

அரேபிய இரவுக் கதைகளில் வரும், அலாவுதீனின் அற்புத விளக்கு, மிகமிகச் சிறிய விளக்கு என்பர். அது தோற்றத்திற்கு, மற்ற சாதாரண விளக்குகளைப் போலவே இருக்குமாம். எனினும், அந்த அற்புத விளக்கைத் தேய்த்தால், உலகிலுள்ள எந்தப் பொருளை வேண்டுமானாலும் வரவழைத்துக் கொள்ள முடியுமாம். அப்படிப்பட்ட பூதமொன்று அச்சிறு விளக்கினுள் இருப்பதாகக் கதை கூறுகிறது. அது எவ்வளவு தூரம் உண்மை என்பது நமக்குத் தெரியாது. ஆனால் நமது அரசமைப்புச் சட்டத்தால் பிரித்து வழங்கப்பட்ட தனித்தனி அதிகாரப் பட்டியல்களைப் பார்த்தால், அலாவுதீனின் அற்புத விளக்கிற்குள் இருக்கும் சர்வ சக்தி வாய்ந்த பூதத்தைப் போன்ற சின்னஞ்சிறு அதிகாரங்கள், மத்தியப் பட்டியலிலும், பொதுப்பட்டியலிலும் இடம் பெற்றிருக்கின்றன என்பது தெரிய வரும்.

மத்திய அரசு, மனம் வைத்து அந்த(பூத)அதிகாரங்களைப் பயன்படுத்திச் சட்டம் செய்ய நினைத்தால், மாநிலப் பட்டியலின் பல அதிகாரங்களை அந்தச் சின்னஞ்சிறு அதிகாரங்கள் மத்திய அரசின் காலடியில் கொண்டு வந்து சேர்த்து விடுகின்றன. மத்திய அரசின் மேற்சொன்ன நான்கு சிறு பதிவுகள் மாநிலத்திற்கே உரிய பல அதிகாரங்களை அரசமைப்புச் சட்டத்தின் எந்த மூலையிலிருந்தாலும் (அவை மாநிலப் பட்டியலிலிருந்தாலும் சரி அல்லது பொதுப் பட்டியலில் இடம் பெற்றிருந்தாலும் சரி) அவற்றை மத்திய அரசின் கைப்பிடிக்குள் கொண்டு வந்து விடுகின்றன. யாருக்கும் தெரியாத அலாவுதீனின் அற்புத விளக்கின் மந்திரசக்தி ''நமது அரசமைப்பைப் படைத்த வல்லுநர்களுக்கு மட்டும் எப்படியோ தெரிந்துள்ளது''. அச்சூத்திரத்தைப் பயன்படுத்தி மாநில அதிகாரங்களையெல்லாம் மறைமுகமாகச் சுருக்கக் கூடிய ஏற்பாடுகளை நமது அரசமைப்பிலும் செய்து வைத்துள்ளனர், நமது அரசமைப்புச் சட்டத்தின் கர்த்தாக்கள்.

## IV

## இரு கோடுகள்

ஆசிரியர் ஒருவர், கரும்பலகையில் செங்குத்தான ஒரு நீண்ட கோட்டைப் போட்டு, மாணவர்களைப் பார்த்து, ''இந்தக் கோட்டை அழிக்காமல்–குறைக்காமல்–சிறிய கோடாக மாற்ற

முடியுமா?'' என்ருர். கூர்த்த மதி படைத்த மாணவன் ஒருவன் எழுந்து, ''என்னுல் அது முடியும்'' எனக் கூறினுன். அவன் ஆசிரியரால் போடப்பட்ட கோட்டுக் கருகில் இன்னுமொரு நீண்ட கோட்டைப் போட்டான். ஆசிரியரைப் பார்த்து ''இந்த இரண்டு கோடுகளில் நீங்கள் போட்ட கோடு சிறியதா? நான் போட்ட கோடு சிறியதா?'' என்று வினவினுன். ஆசிரியரும் '' நான் போட்ட கோடுதான் சிறிய கோடு '' என்று ஒத்துக் கொண்டார். மாணவன் ஆசிரியர் போட்ட கோட்டை அழிக்கா மல், குறைக்காமல் எப்படிச் சிறியதாக்கினுன்? முதலில் ஆசிரிய ரால் போடப்பட்ட கோடு, பின்னுல் மாணவனுல் போடப் பட்ட நீண்ட பெரிய கோட்டினுல் ''அழிக்காமல் குறைக்காமல்'' தானே சிறியது ஆக ஆக்கப்பட்டு விட்டது.

மாநிலப் பட்டியலில், மாநிலங்களுக்குச் சொந்தமான 66 அதிகாரங்களுண்டு. அவை தவிர, மாநிலங்கள் விரும்பினுல், பொதுப் பட்டியலில் உள்ள 47 அதிகாரங்களிலும் கூட, அவை சட்டம் செய்து கொள்ளலாம். அரசியலமைப்புச் சட்டத்தால் தீட்டப்பட்ட மாநிலப் பட்டியலின்படி, மாநிலங் களுக்கு இவ்வளவு உரிமைகளும் அதிகாரங்களும் உண்டு— ஆசிரியர் போட்ட கோட்டைப் போல.

ஆனுல் அந்த அதிகாரங்களின் எண்ணிக்கையை அழிக்கா மல் குறைக்காமல், அரசமைப்புச் சட்டத்தில் உருவாக்கப் பட்டுள்ள வேறு சில விதிகள், பொதுப் பட்டியலிலுள்ள பல அதிகாரங்களை மாநிலங்கள் பெறமுடியாத வகையிலும், மாநிலப் பட் டியலிலுள்ள பல அதிகாரங்களில் மாநிலங்கள் முழுமையாகச் சட்ட மியற்றமுடியாத முறையிலும், அவை செயல்படும் அளவிலிருந்து குறைத்து விடுகின்றன-மாணவன் போட்ட நீண்ட கோட்டைப் போல. மாநில அதிகாரங்களைத் தாளுகவே குறைத்து விடுவ தற்கு, நமது அரசியலமைப்புச் சட்டத்தில் இப்படியும் ஒரு முறை கையாளப்பட்டுள்ளது. அச்சட்ட விதிகள் பற்றி இனிப் பார்ப்போம்.

பொதுப் பட்டியலிலுள்ள அதிகார இனங்களில், மாநில அரசும், மத்திய அரசும் தனித்தனியாகச் சட்டமியற்றலாம். ஆனுல், மாநிலங்களின் இந்த உரிமை பூரணமான தல்ல.

I) சட்ட விதி 254 (1) இன் படி, பொதுப் பட்டியலின் எந்த வோர் இனத்திலாவது மத்திய அரசு சட்டமொன்று செய்து விட்டால், அதற்கு முன்னரே இயற்றப்பட்ட மாநிலச் சட்டத்தின்

சில பகுதிகள், புதிதாக இயற்றப்பட்ட மத்தியச் சட்டத்திற்கு முரணானவையா யிருந்தால், பழைய மாநிலச் சட்டம் தானாகவே செல்லாமல் போய்விடும். புதிய மத்திய அரசுச் சட்டமே, அமுலிலிருக்கும். இதற்கொரு விதிவிலக்கு முண்டு. அந்தக் குறிப்பிட்ட பொதுப் பட்டியலின் இனத்தில், மாநில அரசு ஒரு மசோதாவை ( Bill ) நிறைவேற்றி அந்த மசோதா, குடியரசுத் தலைவரின் ஒப்புதலுக்குப் போய், அவரும் தப்பித் தவறி அதற்குரிய இசைவை அளித்துவிட்டால் அந்த மாநிலச் சட்டம், மத்தியச் சட்டத்தையும் மீறி உடனே அமுலுக்கு வந்து விடும்.

ஆனால், மத்திய அரசு, மாநிலச் சட்டத்தைச் செல்லாமலாக்குவதற்காக, அதே இனத்தில் இன்னொரு புதிய சட்டத்தைப் பின்னால் இயற்றிவிட்டால், மத்திய அரசின் புதுச் சட்டம் தான் அமுலிலிருக்கும். அப்போது இந்தியக் குடியரசுத் தலைவரின் ''புனிதமான'' இசைவைப் பெற்ற பழைய மாநிலச் சட்டம் தானாகவே இறந்து படும்.

II) மாநிலப் பட்டியலிலுள்ள ஒரு குறிப்பிட்ட அதிகார இனத்திலோ, அல்லது பொதுப்பட்டியலிலுள்ள ஓர் அதிகார இனத்திலோ, மாநிலச் சட்டமன்றம், சட்டம் செய்திருந்தாலும், அந்தக் குறிப்பிட்ட அதிகார இனத்தைச் சார்ந்ததைப் போல் தோற்றமளிக்கும் மத்திய அரசுப் பட்டியலின் அதிகார இனத்தில்— மத்திய நாடாளுமன்றம் ஒரு சட்டத்தைச் செய்து விட்டால், நியாயமாகத் தன்னுடைய அதிகார வரம்பிற்குள் நின்று மாநிலச் சட்டமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டத்தையும் மீறி, அதன் நிழல் படிந்த நாடாளுமன்றத்தின் புதிய சட்டமே மேம்பட்டு நிற்கும்; செல்லுபடியுமாகும்.

மேற்சொன்ன இவ்விரண்டு மூலக் கொள்கைகளினால், மத்திய அரசுப் பட்டியலின் சட்டத்திற்கு உட்பட்டுத்தான் மாநிலப் பட்டியலின் எந்த வோர் அதிகாரத்திலும், மாநிலங்கள் சட்டமியற்ற முடியும் என்பது பெறப்படுகிறது. மேலும் மத்திய அரசு, மாநிலச் சட்டங்களைப் பற்றிக் கவலைப்படாமல், பொதுப் பட்டியலிலுள்ள எந்தவோர் அதிகார இனத்திலும் தனது இச்சைக்குரிய வகையில் சட்டத்தை நிறைவேற்றி ஏற்கனவே அமுலிலிருக்கும் அவ்வகை மாநிலச் சட்டங்களை, வேண்டுமென்றே கூட செல்லாமல் செய்து விடலாம்.

இதை வேறு சொற்களில் கூற வேண்டுமெனில், பொதுப் பட்டியலிலுள்ள 45 அதிகார இனங்கள் மத்திய அரசிற்கும், மாநில அரசிற்கும் பொதுவானவையாக இருந்தாலும், மத்திய அரசு, அதில் சட்டமியற்றி விட்டால், மாநிலச் சட்டம் தானுகவே தாழ்ந்து போகும்; அல்லது முரணுக இருந்தால் செல்லாமல் போய் விடும். எனவே, பொதுப் பட்டியலின் அதிகார இனங்களில் செய்யப்பட்ட மாநிலச் சட்டங்களை அழித்தொழிக்கும் வகையில், மத்திய அரசே வேண்டும்போது பொதுப் பட்டியல் முழுவதையும் கையகப் படுத்திக் கொள்ளலாம்.

ஆக, மத்தியப் பட்டியலின் 97 அதிகார இனங்களோடு, பொதுப் பட்டியலின் 45 அதிகார இனங்களையும் சேர்த்து மொத்தம் 142 அதிகார இனங்களில் மத்திய அரசு சட்டமியற்றலாம் என்பது புலனுகும்.

மேலும், அதிகாரப் பூர்வமாக மாநிலப் பட்டியலில் இடம் பெற்றுள்ள அதிகார இனங்களில் செய்யப்படும் மாநிலச் சட்டங்களையும் கூட அந்த அதிகார இனத்தின் சாயலைக் கொண்ட (உண்மையில் மத்தியப் பட்டியலில் வெளிப்படையாக இல்லாத) மத்தியப் பட்டியல் அதிகார இனத்தைப் பயன்படுத்தி மத்திய அரசு சட்டமியற்றுவதன் மூலம், மாநிலச் சட்டங்களை அமுலுக்கு வராமல் தடைசெய்து விடலாம்.

இந்த ஏற்பாடுகள் மூலம் மாநிலத்திற்குச் சொந்தமான 66 அதிகாரங்களில் பல தானுகவே பறிபோய் விடுகின்றன. மத்திய அரசு தனது சட்டமியற்றுத்துறை அதிகாரங்கள் என்ற இராட்சசச் சிறகை விரித்து மாநிலங்களின் அதிகாரங்களை அதனுள் அடக்கிக் கொள்ளலாம். பெயரளவில் தரப்பட்டிருக்கும் மாநிலப் பட்டியலில் உள்ள பல அதிகாரங்களை மத்திய அரசு நெருக்கிச் சுருக்கி விடுகின்ற ஒரு தலைப்பட்சமான போக்கினையே நமது அரசமைப்புச் சட்டம் உருவாக்கி வைத்துள்ளது.

மாநிலங்களிலுள்ள பல அசையாச் சொத்துக்கள் மத்திய அதிகாரப் பட்டியலில் உள்ள சில அதிகாரங்களில் மறைமுகமாகச் சேர்ந்து விடுகின்றன. ‘‘பாம்புக்குத் தலையும் மீனுக்கு வாலும்’’ காட்டுவதைப் போன்ற ஒரே சாயல் படைத்த இன்னும் சில அதிகாரங்கள் மாநிலப் பட்டியலிலும் பொதுப் பட்டியலிலும், இடம் பெற்றிருப்பதன் காரணமாக மத்திய

அரசு, இன்னும் சில மாநில அதிகாரங்களை மறைமுகமாகக் கையகப் படுத்திக் கொள்கிறது. அலாவுதீனின் அற்புத விளக்கைப் போன்ற மத்தியப் பட்டியலில் உள்ள 'பாதுகாப்பு' என்ற அதிகாரத்தையும், பொதுப்பட்டியலில் உள்ள 'விலைவாசியைக் கட்டுப்படுத்துதல்', 'பொருளாதாரத் திட்டமிடுதல்' மற்றும் 'உணவு – மற்றும் வேறு பொருள்களின் வர்த்தகமும் வாணிகமும்' என்ற அதிகாரங்களையும் பயன்படுத்தி, மாநிலப் பட்டியலில் உள்ள இன்னும் பல அதிகாரங்களை, மத்திய அரசு மறைத்துக் குறைத்து விடுகின்றது. 'இருகோடுகளின் முறையைப் பின்பற்றி, மத்திய நாடாளு மன்றம் பொதுப் பட்டியலில் உள்ள அதிகார இனங்களில் சில சட்டங்களை இயற்றி, மாநிலத்திற்கே உரிய இன்னும் சில அதிகாரங்களைப் பறித்துக் கொள்கிறது மத்திய அரசு.

இத்துணை வகைகளிலும் மறைமுகமாகச் சுருக்கப்பட்ட பின்னர் எஞ்சியுள்ள அதிகாரங்களில் தான் மாநில அரசுகள் சட்டமியற்றி, ஆட்சி செய்ய முடியும். ஒரு தோராயமாகக் கணக்கிட்டால், மாநிலப் பட்டியலில் 66இனங்கள், அரசமைப்புச் சட்டத்தால் செய்து வைக்கப்பட்ட மேற்சொன்ன மறைமுக ஏற்பாடுகளால், வெறும் 34 அதிகாரங்களாகச் சிறுத்து விடுகின்றன. மேலும் பொதுப் பட்டியலில் உள்ள பல அதிகாரங்களும், மாநில அரசுக்குப் பயன்படாமல் போய் விடுகின்றன; மத்திய அரசின் அதிகார எல்லைக்குள் பொதுப் பட்டியலின் அதிகாரங்கள் போய் விடுகின்றன.

எனவே, மாநிலப் பட்டியலில் உள்ள 66 அதிகாரங்கள் சுருங்கி, மறைந்து, தேய்ந்து, இறுதியாக 34 அதிகாரங்களாகி விடுவதை, "கழுதை தேய்ந்து கட்டெறும் பாயிற்று" என்ற கொச்சைப் பழமொழி, தெளிவாக எடுத்துக் காட்டுகிறதல்லவா ?



## 5. மாநில சுயாட்சியை முடமாக்கும் நேரடிச் சட்ட விதிகள்

### — மத்திய அரசுப் பட்டியல் மற்றும் பொதுப்பட்டியல் மூலமாக —

"மத்தியப் பட்டியலில் உள்ள நிறைந்த அதிகாரங்க்ளும், பொதுப் பட்டியலில் இடம் பெற்றுள்ள பல இனங்களும்,சட்டமியற்றும் துறையில் மத்திய அரசு எத்துணைப் பெருவலிவினைப் பெற்றிருக்கிறது என்பதனைக் காட்டும். மாநில அதிகாரத் தொகுப்பினுல், மத்திய அரசின் சட்டமியற்றும் பேரதிகாரம், கிஞ்சித்தும் பாதிக்கப்படுவ தில்லை. ஏனெனில், மாநிலப் பட்டியலின் பல தலைப்புக்களில் வரும் முக்கிய அதிகாரங்கள் - மத்திய அரசுடைய தனித்த-முழுமையான, அதிகாரங்களுக்கும், பொதுப் பட்டியலில் உள்ளவற்றிற்கும் (நேரடியாகக்) கட்டுப் பட்டு விடுகின்றன."[1]

— பேராசிரியர். அலிஸ் ஜேக்கப்.

சென்ற இயலில், மாநிலச் சட்டமியற்று அதிகாரங்களைச் சுருக்கும் மறைமுகமான சில ஏற்பாடுகளைப் பார்த்தோம். அவை தவிர, மாநில அதிகாரங்களைக் கவர்ந்து கொள்ளக் கூடிய வேறு சில வெளிப்படையான விதிகளும் நமது அரசமைப்புச் சட்டத்தில் இடம் பெற்றுள்ளன.

அவையாவன :—

1) மாநிலப் பட்டியலில் தரப்பட்ட சில அதிகார இனங்களை, மத்திய அரசு - தனது அதிகாரப் பட்டியல் மூலமாகவும், இரண்டு பட்டியலையும் சேர்த்தும் நேரடியாகக் கைப் பற்றிக் கொள்வது ஒரு முறை.

---

1. Prof- Alice Jacob, "The Union and the states" [1972], by S N Jain & others. P, 24.

2) அரசமைப்புச் சட்டத்தில் குறித்துள்ள சில சூழ்நிலைகளில், நாடாளு மன்றம் தனது சட்டமியற்றும் அதிகாரத்தின் மூலமாக மாநிலச் சட்டமியற்றுத் துறையின் சில அதிகார வினங்களை, தனக்குத் தானே வழங்கிக் கொள்வது இரண்டாவது முறை.

3) சில மாநிலச் சட்ட மசோதாக்கள், மாநிலச் சட்ட மன்றங்களில் வைக்கப்படுவதற்கும் முன்பே குடியரசுத் தலைவரின் அனுமதிக்கு அனுப்பப்பட வேண்டுமென்ற கட்டாய விதிகளும், இன்னும் சில மாநிலச் சட்ட மசோதாக்கள் சட்ட மன்றங்களில் நிறைவேறிய பின்னரும் கூட, குடியரசுத் தலைவரின் ஒப்புதலைப் பெற்றேயாக வேண்டும் எனக் கட்டாயப்படுத்தும் விதியும், இன்னும் சில மசோதாக்கள் மாநில ஆளுநர்களின் விருப்ப அதிகாரம் மூலமாக (இசைவு பெறுமல்) குடியரசுத் தலைவரின் பரிசீலனைக்காக ஒதுக்கி வைக்கப்படும் முறையும் மாநிலங்களின் சட்டமியற்றும் அதிகாரங்களை நேரடியாக முற்றுகைப் படுத்தும் மூன்றும் வகை.

4) மாநிலங்களில் ''அரசமைப்பு நெருக்கடி நிலை'' (Constitutional Break Down) எனக் காரணம் காட்டி, மத்திய அமைச்சரவையால் ஆட்டுவிக்கப்படும் குடியரசுத் தலைவர், தனது சாற்றுணை (Emergency Proclamation) மூலமாக, மாநிலச் சட்டமியற்றும் அதிகாரங்கள் முழுவதையும் நாடாளுமன்றத்திற்கே தந்து, அவற்றை மத்திய அரசின் சூத்திரக் கயிற்றால் ஆட்டுவிப்பது நான்காவது வகை.

மாநிலங்களின் சட்டமியற்றும் அதிகாரங்களும் அவற்றின் அடிப்படையில் கிடைக்கும் நிர்வாக அதிகாரங்களும், மத்திய அரசின் மேற்சொன்ன நால்வகைக் கட்டுப்பாட்டெல்லைகளுக்குள்ளேயே நடைபோட வேண்டும் என்பதுதான், நமது அரசமைப்பு விதித்துள்ள கட்டளை நெறியாகும். இவை ஒவ்வொன்றைப் பற்றியும் இனி, தனித்தனி அத்தியாயங்களில் ஆய்வோம்.

மாநிலப் பட்டியலின் 9 அதிகார இனங்கள் மத்தியப் பட்டியலிலுள்ள சில அதிகாரங்களுக்குட் பட்டவையாயிருக்கின்றன. மாநிலப் பட்டியலின் மற்ற மூன்று இனங்கள் பொதுப் பட்டியலால் கட்டுப்படுத்தப்படுகின்றன. இன்னும் இரண்டு மாநில அதிகாரங்கள் மத்தியப் பட்டியலாலும், பொதுப் பட்டியலாலும் சேர்ந்து கட்டுப்படுத்தப்படுகின்றன.

அ) மத்தியப் பட்டியலுக்குட்பட்ட சில மாநில அதிகாரங்கள்

1. மாநிலப் பட்டியல் 17-ஆவது பதிவில் காணப்படும் ''நீர் வழங்குதல் (Water Supply); நீர்ப்பாசனம்; வாய்க்கால்கள்; கழிவு நீர்ப் போக்கிகள்; நீர்த் தேக்கங்கள்; நீர் விசைகள்'' ஆகியவை மாநிலங்களின் அதிகார வரம்பிலுள்ளவை. ஆனால், அவை மத்தியப் பட்டியலில் உள்ள ''நாட்டு முக்கியத்துவம் என்று நாடாளுமன்றத்தால் அறிவிக்கப்படும் (மாநிலங்களினூடே பாய்கின்ற) ஆறுகள், ஆற்றுப் பள்ளத் தாக்குகள்'' என்ற 56-ஆம் பதிவின் அதிகாரத்தின் மூல மாகக் கட்டுப்படுத்தப்படுகின்றன. அஃதாவது மாநிலங்களி லிருக்கும் மேலே சொன்ன தண்ணீர் சார்ந்த பலதுறை களில், மாநிலங்களால் செய்யப்படும் சட்டங்கள் யாவும்— பின்னதில் (மத்தியப் பட்டியலில்) சொல்லப்பட்ட ஒரு நாடாளுமன்றச் சட்டத்தால் செல்லாமல் போய்விடும்; அல்லது கட்டுப்பாடு செய்யப்பட்டு விடும். மத்திய அரசின் சட்டத்திற்குட்பட்டே, மாநில அரசுகள், நீர் சார்ந்த பல துறைகளிற் சட்டமியற்ற முடியும்.

2. மாநிலப் பட்டியல் 22-ஆவது பதிவில் காணும், ''காப்பாளர் அமைவு'' (Court of Wards), என்ற சட்டமியற்றும் அதிகாரம், மாநிலங்களுக்குச் சேர்ந்தது. ஆனால், அது மையப் பட்டியல் 34-ஆம் பதிவான ''சொத்துக்களின் வாரிசுதாரரை நிர்ணயித்தல்'' என்ற மத்திய அரசின் அதிகாரத்தின் மூலம் கட்டுப்படுகிறது.

3. மாநிலப் பட்டியல், 33-ஆம் பதிவின், ''நாடகங்கள், படக் காட்சிகள்'' ஆகியவை, மத்தியப் பட்டியலின் 60-ஆம் பதிவான ''விளையாட்டுகள், களியாட்டங்கள்'' என்ற (மத்திய) அதிகாரத்தின் மூலமாய் அமுக்தப்பட்டு விடு கின்றன.

4. மாநிலப் பட்டியல் 23-ஆம் பதிவில் கூறப்பட்டுள்ள, ''சுரங்கம் மற்றும் கனிவளங்கள் ஆகியவற்றை முறைப்படுத் தல்'' என்ற மாநில அதிகார இனம், மத்தியப் பட்டியலின் மற்ற இனங்களுக்குக் கட்டுப்படுத்தப்பட்டுள்ளது.

5. மாநிலப் பட்டியல் 24-ஆவது பதிவில் சொல்லப்பட்ட, ''தொழில்கள்'' (Industries) என்ற அதிகார இனம், மத்தியப் பட்டியலின் 7-ஆவது மற்றும் 52-ஆவது பதிவு

களுக்குக் கட்டுப்பட்டுள்ளது. தொழில்களைப் பற்றிய அதிகாரம், மேல் நோக்காக மாநிலங்களுக்கே கொடுக்கப் பட்டுள்ளன. ஆனால் உண்மையில், தொழிலைத் தொடங்கும் உரிமம் முதற்கொண்டு, அதன் மூலதனம், விரிவாக்கம், இதன் நிர்வாகக் கொள்கை, உற்பத்தி மற்றும் விநியோகம், ஆகிய தொழில் சார்ந்த அனைத்தையும் மாநில அரசு கட்டுப் படுத்த முடியாது. உண்மையில் அவை யாவும் மத்திய அரசிடம் உள்ளன. இது பற்றி, இந்நூலின் நான்காம் பகுதியில் ஆய்வு செய்யப்பட்டுள்ளது, அதனைக் காண்க.

6. மாநிலப் பட்டியல் 37–ஆவது அதிகாரமான ''மாநிலச் சட்ட மன்றங்களுக்குத் தேர்தல்'' என்ற இனம், நாடாளு மன்றச் சட்டமான(Representatives of Peoples Act – 1951) என்ற ''மக்கள் பிரதிநிதித்துவச் சட்டத்திற்கு''க் கட்டுப் பட்டுள்ளது. இந்த இனம் மாநிலப் பட்டியலில் குறிக்கப் பட்டிருந்தாலும், மாநிலச் சட்ட மன்றங்களுக்கான தேர்தல்களைப் பற்றிய சட்டங்களை இயற்றவோ, தேர்தல் களை நடத்தவோ, மாநில அரசுகளுக்கு உரிமையில்லை. ஆனால் வெகு கம்பீரமாகத் ''தேர்தல்'' என்ற இனம் மாநிலப் பட்டியலில் இடம் பெற்றுள்ளது.

7. மாநிலப் பட்டியல் 50–ஆவது பதிவான, ''கனிப் பொருட் களின் வரிகள் மற்றும் உரிமை'', என்ற மாநில அதிகாரம் மையப் பட்டியலிலுள்ள ''கனிவளம்'' என்பதைப் பற்றிய நாடாளு மன்றச் சட்டங்களின் மூலம் மறுக்கப்பட்டு விடு கிறது. உண்மையில் கனிப் பொருள்கள் மீதான முழு உரிமைகளை வழங்கவோ முழுமையாகச் சட்டங்களைச் செய்யவோ மாநில அரசுகளுக்கு உரிமை இல்லை.

8. மாநிலப் பட்டியல் 56–ஆவது பதிவில் சொல்லப்பட்ட ''செய்தித்தாள்கள் நீங்கலாக, மற்றப் பொருள்களின் வாங்கு தல், விற்றல் ஆகியவற்றின் மேல் விதிக்கப்படும் வரிகள்'' மாநில அதிகாரங்கள் தான். ஆனால், மத்தியப் பட்டியல் 92 (A) பதிவான, ''அரசுகளிடையே செய்தித்தாள்கள் நீங்கலாக, மற்றப் பண்டங்களை விற்றல் அல்லது வாங்குதல் வர்த்தகம் நடைபெறும் போது பெறப்படும் வரிகள்'' என்ற அதிகாரத்தின் கீழ் அவை கட்டுப் படுத்தப்படுகின்றது.

9. மாநிலப் பட்டியல் 63–ஆம் பதிவான ''ஆவணங்கள் பற்றிய முத்திரைத்தாள் தீர்வை'' (Rates of Stamp duty in Respect of Documents) மாநில அரசின் அதிகாரமாகும். ஆனால், அது மத்தியப் பட்டியலின் மூலமாகக் கட்டுப்பாடு செய்யப் பட்டுள்ளது.

ஆ) பொதுப் பட்டியலுக்குட்பட்ட சில மாநில அதிகாரங்கள்

1. மாநிலப் பட்டியல் 23–ஆம் பதிவான, ''மாநிலங்களுக்குள் நடைபெறும் வர்த்தகமும் வணிகமும்'' என்ற அதிகாரம் மாநிலத்திற்குரியது. ஆனால், அது பொதுப் பட்டியல் 33–ஆம் பதிவில் குறிப்பிடப்பட்ட ''பொதுநலன் கருதி ஒரு தொழிலை மத்திய அரசு அதிகாரத்திற்குக் கீழ்ப் பட்டிருக்கும்படி செய்தல் உசிதமாய் இருக்குமெனப் பாராளுமன்றத்தால் அறிவிக்கப்பட்ட, உற்பத்திப் பொருள்கள் முதலியன'' என்ற பேரதிகாரத்தின் கீழ், கட்டுப்படுத்தப்படுகிறது.

2. மாநிலப் பட்டியல் 27-ஆம் பதிவான ''பொருள்களின் உற்பத்தி மற்றும் விநியோகம்'' ஆகியவை மாநில அதிகாரத் திற்குள் வருகிறது. அதைப் பொதுப் பட்டியலின் 33-ஆவது (மேற்சொன்னபடி) அதிகார இனம் கட்டுப்படுத்துகிறது.

3. மாநிலப் பட்டியலின் 57–ஆம் பதிவான, ''சாலைகளின் மேல் ஊர்ந்து செல்லும், வாகனங்களின் மேல் விதிக்கப்படும், வரிகள்'', என்ற மாநில அதிகாரம், பொதுப் பட்டியலின் 35–ஆம் பதிவான, ''பொறிகளால் இயங்கும் வண்டிகள், அதன் வரிகள்'' ஆகிய இனத்தால் கட்டுப்படுத்தப்படுகிறது.

(இ) மத்தியப் பட்டியல்—பொதுப் பட்டியல் ஆகிய இரண்டும் சேர்ந்து கட்டுப்படுத்தும் மாநில இனங்கள்

1. மாநிலப் பட்டியல் 11–ஆவது பதிவான பல்கலைக் கழகம் உட்படக் கல்வி'' என்பதில் சட்ட மியற்றும் அதிகாரம் மாநில அரசுக்குச் சேர்ந்தது. ஆனால் அவை மத்தியப்பட்டியல் 63 முதல் 66 வரையான பதிவுகளில் கண்ட மத்திய அதிகார இனங்களாலும் பொதுப் பட்டியலின் 25 ஆவது பதிவில் கண்ட

அதிகாரத்திஞலும் கட்டுப்படுத்தப்பட்டுள்ளது. மத்திய அரசில், கல்வித் துறை என்ற ஒரு தனி அமைச்சரகமும், மாநிலங்களில் ''கல்விக்கான ஒரு தனித் துறையும்'' ஏன் இடங்குகின்றன என்பது இப்போது புலனுகிறதல்லவா?

2. மாநிலப் பட்டியல் 13-ஆவது பதிவான ''(மத்தியப் பட்டியலில் குறிப்பிடப்படாத), சாலைகள், பாலங்கள், சந்தைகள் நகராட்சி டிராம் வண்டிகள், உள்நாட்டு நீர்வழிகள், அவை மேல் போக்குவரத்து'' ஆகிய யாவும் மாநில அதிகாரங்கள். ஆனுல் அவை மத்தியப் பட்டியலாலும், பொதுப் பட்டியலாலும் சேர்ந்து கட்டுப்படுத்தப்படுகின்றன.

**தோலிருக்கச் சுளை விழுங்கி**

மாநிலப் பட்டியலில், முழுமையாகவும் அழகாகவும் குறிப்பிடப்பட்டிருக்கும், 14முக்கியஅதிகார இனங்களை மேற்சொன்ன வகையில் மத்தியப்பட்டியலும் பொதுப்பட்டியலும் இரண்டும் சேர்ந்தும் கட்டுப்பாடு செய்கின்றன. அதாவது மத்திய அரசு, அந்த இனங்களில் சட்டமியற்றுவதால், மாநிலங்கள் அந்த அதிகாரங்களின் உரிமைகளை இழந்துவிடக் கூடிய நிலையினுக்கு ஆட்படுத்தப்படுகின்றன. நடைமுறையில் அந்த அதிகாரங்கள் பற்றிய மத்திய ஆணைகளிஞலும் கட்டுப்பாடுகளிஞலும் மாநிலங்களின் உரிமை சிதைக்கப்பட்டு விட்டது. எனினும், மேற்சொன்ன அந்தப் பதினுன்கு இனங்களும் மாநிலப் பட்டியலில், சுளை நிறைந்த பழங்கள் போல் காட்சிக்கு வைக்கப் பட்டுள்ளன. ஆனுல் உண்மையில், பழங்களின் தோல்கள் மட்டும் தான், மாநிலங்களுக்கு மிஞ்சி நிற்கின்றன. சுளைகளை மத்திய அரசு விழுங்கி விட்டது. நாட்டுப் பகுதியில், ஒரு மிருகத்தை (யானையை)க் குறிப்பதற்காக—அதன் பெயரைச் சொல்லாமல் மறைமுகமாக ''தோலிருக்கச் சுளைவிழுங்கி'' என்ற விடுகதையைச் சொல்லி, அந்த மிருகம் என்ன மிருகம் என்ற புதிர் விஞவைக் கேட்பார்கள். அந்த மிருகம் வேறெதுவுமல்ல; நமது மத்திய அரசுதான் — என்று சொல்லி நமது அரசமைப்புச் சட்டம் அந்தப் புதிரை விடுவிக்கின்றது.



## 6. மாநில சுயாட்சியை மூடமாக்கும் நேரடிச் சட்டவிதிகள்

**— மத்திய நாடாளு மன்றத்தின் ஊடுருவல் —**

"அரசமைப்புச் சட்டத்திஞல் மாநிலங்களுக்கு ஒதுக்கப்பட்டுள்ள அதிகாரங்களை (மத்திய) நாடாளுமன்றம் ஒரு தலைப்பட்சமாகத் தன்னிடம் மாற்றிக் கொள்வதற்கு அனுமதிப்பது, கூட்டாட்சிக் கொள்கையிலிருந்து அடியோடு விலகிச் செல்வதாகும். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் (மத்தியச்) சட்டப் பேரவை, மாநிலங்களுக்குச் சொந்தமான அதிகாரங்களைத் தன்னிடம் முறையாக மாற்றிக் கொள்ள முடியாது. அதற்குரிய ஒரே வழி அரசமைப்புச் சட்டத்தைத் திருத்துவதேயாகும்." 1

—டாக்டர் பி. வி. இராசமன்ஞர் குழு அறிக்கை.

மாநிலச் சட்டமியற்று அதிகாரப் பட்டியலில், மத்திய அரசு, தனது மத்திய அதிகாரப் பட்டியலின் மூலமாகவும் பொதுப் பட்டியல் மூலமாகவும் தலையிட்டு, அதன் வரம்பைச் சுருக்கி விடுவது பற்றிச் சென்ற இயலில் பார்த்தோம். அவை தவிர மாநிலச் சட்டமியற்றும் வேறு அதிகாரங்கள் சிலவற்றிலும் — மாநில உரிமைகளிலும், நாடாளுமன்றம் ஊடுருவி விடுகிறது. அவை பற்றி, இவண் ஆய்வோம்.

அரசியலமைப்புச் சட்டத்தின் விதிகள் 3, 4, 154 (2) (b) 169 (1), 249, 252, மற்றும் 253 ஆகியவை மாநில அதிகாரங்களில் மத்திய நாடாளு மன்றம் நேரடியாகத் தலையிட்டு, சட்டம் செய்யக் கூடிய சில அதிகாரங்களை நாடாளுமன்றத்திற்கு வழங்குகின்றன.

---

1 Report of the Centre-State Relations Inquiry Committee (1971) P 47.

## 1) சட்டவிதிகள் 3, 4 மாநிலத்தின் நிலப்பகுதிகள் - மத்திய அரசிற்குச் சொந்தம்

அரசமைப்புச் சட்டத்தின் 3-ஆம் 4-ஆம் விதிகளின்படி, நாடாளுமன்றத்தால் சாதாரணப் பெரும்பான்மையுடன் நிறைவேற்றப்படும் ஒரு சாதாரணச் சட்டத்தின் மூலமாக, இந்திய நாட்டிலுள்ள எல்லா மாநிலங்களின் பரப்பளவையும், எல்லைகளையும் மத்திய அரசு கூட்டலாம்; குறைக்கலாம்; மாற்றலாம், ஏன்? ஒரு மாநிலத்தையே, இந்திய வரைபடத்திலிருந்து அடியோடு நீக்கி அழித்தும் விடலாம். நாளையே மத்திய அரசு நினைத்தால், இந்தியத் துணைக்கண்டத்திற்குள், 'தமிழ் நாடு' என்ற ஒரு மாநிலத்தை இல்லாமலே கூடச் செய்து விடலாம். அல்லது தற்போது இருக்கும் அதன் பரப்பளவை மாற்றி—எல்லைகளை நீக்கி—வேறு ஒரு மாநிலத்தோடு சேர்த்து விடலாம். அரசமைப்புச் சட்டத்திலிருந்து ''தமிழ் நாட்டையே'' அகற்றி விடலாம். இதற்காக அரசியல் சட்டத் திருத்தமே தேவையில்லை. நமது புனிதமான அரசமைப்புச் சட்டத்தில் தமிழ் மாநிலம் என்று ஒன்றிருந்தால் தானே, அதற்கான சுயாட்சியினைக் கேட்பதற்கு? மத்திய அரசு நினைத்தவுடன் 'ஆந்திர மாநிலம்' உருவானதும், 'அரியானு'' உற்பத்தியானதும் மற்ற சில பெரிய மாநிலங்கள் சுருங்கினதும், சென்னை மாநிலத்திற்குத் ''தமிழ் நாடு'' என்ற பெயர் கிடைத்ததும், இந்தச் சட்டவிதிகளின் தயவினுல்தான். இவ்வகை மாநில அழிப்பு அதிகாரம் வேறு எந்த நாட்டிலும் இல்லை என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

## 2) சட்டவிதி 154 (2) (b) மாநில அதிகாரிகள்-மத்திய அரசின் பணியாளர்கள்

நாடாளுமன்றம் விரும்பினுல், மாநில ஆளுநருக்குக் கீழுள்ள எந்த மாநில அதிகாரிக்கும், மத்திய அரசின் பணிகளைச் செய்யச் சொல்லிக் கட்டளையிடலாம். இதற்காக, சம்பந்தப்பட்ட மாநிலச் சட்டமன்றத்தில் அனுமதியையோ அல்லது அந்த மாநில அரசின் அனுமதியையோ நாடாளுமன்றம் முன்கூட்டிப் பெற வேண்டிய அவசியமில்லை.

### 3) மாநிலங்களின் சட்ட மேலவைகள் - மத்திய அரசின் படைப்புகள்

நாடாளுமன்றம், ஒரு சட்டத்தை இயற்றி, மாநிலங்களிலுள்ள மேலவைகளை (Legislative Councils) உருவாக்கலாம். அல்லது இயங்கிக் கொண்டிருக்கும் ஒரு மாநிலத்தின் மேலவையை இல்லாமலும் அழித்துவிடலாம். இதற்குத் தேவையானதெல்லாம், அந்த மாநிலச் சட்டப்பேரவைகளில், ''அந்த மாநிலத்திற்கு மேலவை தேவையில்லை'' என்ற ஒரு தீர்மானமே. ஆனால், மாநிலச் சட்டப் பேரவை அப்படி ஒரு தீர்மானத்தை நிறைவேற்றி விட்டதனாலேயே, நாடாளுமன்றம் அதை ஏற்றுக் கொண்டு, அதன்படி செயல்படும் முறையில் மாநில மேலவையை உருவாக்கும் சட்டத்தை இயற்றித் தீரவேண்டிய கட்டாய மில்லை.

மாநிலத்தின் சுயாட்சியுரிமைகளின் மூலத்தைப் பாதிக்கும் இந்தச் சட்டவிதி, அமெரிக்க ஐக்கிய நாடுகள், ஸ்விட்சர் லாந்து, ஆஸ்திரேலிய நாடுகளின் அரசமைப்புச் சட்டங்களில் கிடையாது என்பதும் இங்கு நினைவு கூறத்தக்கது. மாநிலச் சட்ட மன்ற மேலவைகள் இருக்க வேண்டுமா? அல்லது இருக்க வேண்டாமா? என்று நிர்ணயிக்கக் கூடிய உரிமை, மாநில மக்களின் அடிப்படை உரிமையே தவிர அதில் மத்தியச் சட்டசபையான நாடாளுமன்றத்திற்குத் தலையிடும் உரிமை கிடையாது.

### 4) சட்டவிதி 249 மாநிலங்களவைத் (Council of States) தீர்மானம்—மாநில உரிமைகளை அழிக்கும்

நாடாளுமன்றத்தின் மாநிலங்கள் சபையில் ஆசராகும் உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பங்குப் பேர் வாக்களித்து, ஒரு தீர்மானத்தை நிறைவேற்றினால் மாநில அதிகாரப் பட்டியலில் இருக்கும் எந்த ஓர் அதிகார இனத்தை வேண்டுமானாலும், நாடாளுமன்றமே தனது சட்டவரம்புக்குள் எடுத்துக் கொள்ளலாம்.

மாநிலங்களவையில் நிறைவேற்றப்பட்ட அவ்வகைத் தீர்மானம், ஓராண்டு காலத்திற்குச் செல்லும். மீண்டும் ஒரு முறை அதே தீர்மானம் புதுப்பிக்கப்பட்டால், மாநில அதிகாரத்தை எடுத்துக் கொள்ளும் உரிமையை இன்னும் ஓராண்டிற்கு நாடாளுமன்றம் நீட்டிப்புச் செய்து கொள்ளலாம்.

சான்று: 12—8—1950-ஆம் நாளில், நாடாளுமன்றத்தின் மாநிலங்களின் அவையில் மேற்சொன்ன வகையில் தீர்மானம் ஒன்று நிறைவேற்றப்பட்டு, மாநிலப்பட்டியலின் பதிவு எண்கள் 26, 27-இல் கண்டுள்ள ''பொருள்களின் விலைக் கட்டுப்பாடு கள்''; ''பொருள்களின் உற்பத்தி விநியோகம்'' என்ற மாநில அதிகார இனங்களை, நாடாளு மன்றமே கைப்பற்றிக்கொண்டது.

''இன்றியமையாப் பொருள்களின் வழங்குதல் — திருத்தச் சட்டம் 1950'' [ Essential Supplies ( Temporary Powers ) Amendment Act - 1950 ]; ''பொருள்களின் விலைச்சட்டம்— 1950'' ( Supply and Prices of Goods Act-1950 ) மற்றும் ''1951-இன்'' வெளியேற்றப்படுவோர் நலச் சட்டம்''(Evacuee Interest Act-1951) ஆகிய சட்டங்கள் மாநிலங்களவைத் தீர் மானம் மூலமாக நாடாளுமன்றத்தால் ( மாநில அரசுகளின் உரிமைகளைக் ) கைப்பற்றி, நிறைவேற்றப்பட்ட சட்டங்கள் ஆகும். அந்தச் சட்டங்களால் கையகப்படுத்திய மாநில உரிமையை, மற்றொரு தீர்மானத்தின் மூலம் இன்னொரு ஆண்டிற்கும் நீட்டித்துக் கொண்டது, மத்திய நாடாளுமன்றம்.

''நாடாளுமன்றத்தால் — நாட்டின் பொது நலனுக்குரியவை என அறிவிக்கப்படும் தொழிற்சாலைப் பொருள்களின் உற்பத்தி, விநியோகம், அதற்காக இறக்குமதி செய்யப்படும் பொருள்கள், எண்ணெய், எண்ணெய் வித்துக்கள் உள்பட உணவுப் பொருள்கள். பிண்ணாக்கு, கால்நடைத் தீவனம், பருத்தி, பருத்திக் கொட்டை; சணல் ஆகிய பொருள்கள் சம்பந்தப்பட்ட '' வணிகமும் வர்த்தகமும்''

என்ற மாநில அதிகாரங்கள், மத்திய அரசிற்குப் பின்னர் நிலை யாகத் தேவை என்று கருதப்பட்டதால், 1954-ஆம் ஆண்டில் ''மூன்றும் அரசியல் சட்டத் திருத்தச் சட்டத்தின் — (1954)'' மூலமாக அவை மத்திய அரசுக்குச் சேரத்தக்க வகையில் பொதுப் பட்டியலில் சேர்த்துக் கொள்ளப்பட்டு விட்டன.

ஒரு மாநிலத்திலிருந்து, இன்னொரு மாநிலத்திற்கு, உணவுப் பொருள்களைக் கொண்டு செல்லக்கூடாது என்ற கட்டுப்பாட்டினை யும், ஒரே மாநிலத்திற்குள் இருக்கும் ஒரு மாவட்டத்திலிருந்து இன்னொரு மாவட்டத்திற்கு உணவுப் பொருள்களைக் கொண்டு செல்லக்கூடாது என்ற கட்டுப்பாட்டினையும், விதிக்கவல்ல சட்டத்தை—நாடாளுமன்றம், இவ்வகை அதிகாரத்தின் மூலம் தான் நிறைவேற்றியது.

1959-ஆம் ஆண்டில் தமிழகத்திலுள்ள தஞ்சை மாவட்டத் தினின்றும் அரிசி வெளி மாநிலங்களுக்கும், மாவட்டங்களுக்கும் போகக்கூடாது என்று கட்டுப்பாடு செய்யும் ஆணைகள், இவ்வகை அதிகாரத்தின் மூலமாகவே, மத்திய அரசால் பிறப்பிக்கப்பட்டன.

அரசமைப்புச் சட்டம் உருவாக்கப்படும் பொழுதே அர சமைப்புச் சபை உறுப்பினர்களான திரு. எச். வி. பட்டாஸ்கர், திரு. ஓ. வி. அளகேசன், திரு. பி. எம். குப்தே ஆகியவர்கள், இச்சட்டவிதியை எதிர்த்து,

''கூட்டாட்சித் தத்துவத்திற்கு, இது முற்றிலும் முரணானது'' எனக் கண்டனம் செய்துள்ளனர்.

திரு. ஜெயப்பிரகாஷ் நாராயணன் அவர்கள் இந்தச் சட்டவிதி நமது அரசமைப்புச் சட்டத்திலிருந்து அறவே நீக்கப்பட வேண்டு மென்று வாதிட்டார்.

அரசமைப்பு வல்லுனர் திரு. அசோக் சந்தா அவர்கள், ''கூட்டாட்சிக் கொள்கைகள், இவ்விதியின் மூலமாக, ஆட்டங் கண்டுவிட்டன'' என்றார்.

5) சட்டவிதி 252: மாநிலங்கள் விட்டுத் தந்த அதிகாரங்கள் — மீண்டும் வாரா

மாநிலப் பட்டியலில் உள்ள ஓர் அதிகார இனத்தில் நாடாளு மன்றம் சட்டங்களை இயற்றலாம் என்ற உரிமையை வழங்கி இரண்டு அல்லது இரண்டிற்கு மேற்பட்ட மாநிலங்களின் சட்டப் பேரவைகள் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றினால் அந்தக் குறிப்பிட்ட மாநிலங் கள், அந்தக் குறிப்பிட்ட அதிகார இனத்தில் சட்டம் செய்யும் உரிமையை இழந்துவிடும். அதற்கு மாறாக அந்த அதிகார இனத் தில், சட்டம் செய்யும் உரிமையை நாடாளுமன்றமே பெற்றுக் கொள்ளும். அந்த உரிமையின் அடிப்படையில், நாடாளு மன்றத்தால் நிறைவேற்றப்படக் கூடிய சட்டம், அந்த (உரிமையை வழங்கிய) மாநிலங்களில் அமுல் படுத்தப்படும்.

இதில் கொடுமை என்னவெனில், ஒருமுறை மாநிலங்கள் தமது அதிகார உரிமையை நாடாளுமன்றத்திற்குக் கொடுத்து விட்டால், அப்படிக் கொடுக்கப்பட்ட சட்டமியற்றும் அதிகாரத் தை மீண்டும் எந்தக் காலத்திலும் அந்த மாநிலங்கள் திரும்பப்

பெற்றுக் கொள்ள முடியாது. மாநிலங்களில் ஆளும் கட்சிகள் மாறலாம். ஆனால் ஏதோ ஓர் அரசியல் கட்சியின் அரசாங்கத்தால் விட்டுக் கொடுக்கப்பட்ட அந்த மாநில அதிகாரம் போனது போனதுதான், அது மீண்டும் மாநிலத்திற்குத் திரும்பி வராது.

அந்த நாடாளு மன்றச் சட்டத்தில் தனக்குச் சாதகமான சில திருத்தங்களைச் செய்து கொள்வதற்கோ அல்லது தேவையான முறையில் அதனை மாற்றிக் கொள்வதற்கோ மாநிலங்கள் உரிமை பெறுவதில்லை.

ஆங்கில ஏகாதிபத்தியத்தின் ''1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தின்'' 103-ஆவது பிரிவில் கண்ட சட்டவிதியையே, நமது அரசமைப்புச் சட்டமும் 252-ஆம் சட்ட விதியாக ஏற்றுக் கொண்டது. பழைய சட்டத்தில் மாநிலங்கள் விரும்பினால், நாடாளு மன்றத்தால் இயற்றப்பட்ட சட்டத்தில், சில சட்டத் திருத்தங்களைச் செய்து கொள்ளலாம் என்ற விதி இருந்தது. மேலும் அந்த நாடாளு மன்றச் சட்டத்தையே மாநிலங்கள் விரும்பினால் பின்னர் அமுலில்லாமல் தள்ளுபடி கூடச் செய்து விடலாம் எனவும் ஆங்கிலேயனின் சட்டத்தில் கண்டிருந்தது. ஆனால் வெள்ளையனின் ஆதிபத்திய அரசுச் சட்டத்தில் கொடுக்கப்பட்டிருந்த அந்த உரிமைகள் கூட சுதந்திர இந்திய அரசமைப்புச் சட்டத்தால் பறிக்கப்பட்டு விட்டன.

6) சட்டவிதி 253 வேற்று நாட்டுடன் செய்யும் ஒப்பந்தங்கள், அகில உலக மாநாடுகள்

நமது மத்திய அரசு, வேறு ஒரு நாட்டுடன் ஏற்படுத்திக் கொண்ட ஒப்பந்தத்தையோ, அல்லது உடன்படிக்கையையோ, அல்லது அகில உலக மாநாடுகளிலும் அகில உலகச் சங்கங்களிலும் எடுக்கப்பட்ட தீர்மானங்களையோ, அமுல் படுத்துவதற்காக, இந்தியத் துணைக் கண்டத்தின் எல்லாப் பகுதிகளுக்கும் பொருந்தும் வகையிலோ அல்லது குறிப்பிட்ட சில மாநிலங்களில் அமுலாக்கத் தக்க வகையிலோ தேவையான பல சட்டங்களை, நமது நாடாளு மன்றம் [எந்த மாநிலத்தையும் கலந்து கொள்ளாமல்] நிறைவேற்றி விடலாம்.

சான்று :—

அகில உலகப் பல்கலைக் கழகங்களின் மாநாடு ஒன்று நடந்தால் அதில் ஒருக்கால் இந்தியாவும் பங்கேற்றுக் கொண்டால் அந்த மாநாட்டில் எடுக்கப்பட்ட முடிவுகளை இந்தியாவில் அமுல் படுத்துவதற்காக நமது மத்திய அரசு, நாளையே சென்னைப் பல்கலைக் கழகத்தையும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தையும் மற்றும் மதுரைப் பல்கலைக் கழகத்தையும் ஆக்கிரமித்துக் கொண்டு, தமிழக அரசைப் பற்றிக் கடுகளவும் கவலைப்படாமல் தமிழ் நாட்டின் கல்வியைப் பற்றிக் கிஞ்சித்தும் எண்ணாமல் தன்னுடைய கட்டளைகளுக்கேற்ற முறையில் அப் பல்கலைக் கழகங்களைக் கீழ்ப்படுத்தும் முறையில் சில சட்டங்களை நாடாளு மன்றத்தில் நிறைவேற்றலாம்; அதை அமுலுக்கும் உடனே கொண்டு வரலாம். திடுக்கிட வேண்டாம். இதுவும் நமது அரசியலமைப்புச் சட்டத்தில் மாநில சுயாட்சியினைக் "கெ(ா)டுக்கும்" ஒரு சட்ட விதிதான்.

7) மாநில எல்லைக் கப்பாலுள்ள அம் மாநில மக்கள்

ஒரு மாநிலத்தின் எல்லைகளுக்கு அப்பாலுள்ள நிலப்பகுதிகளில் வாழும் சொந்த மாநில மக்களைக் கட்டுப்படுத்தக் கூடிய சட்டங்களைக் கூட ஒரு மாநிலச் சட்ட மன்றம் நிறைவேற்ற முடியாது. அந்த மாநிலத்தைச் சார்ந்த மக்கள் சிலர் வேற்று மாநிலங்களில் இருந்தாலும், அம் மக்களின் சொந்த மாநிலச் சட்டம், அவர்களைத் தழுவிச் செல்லாது. எனவே, குறிப்பிட்ட ஒரு மாநிலத்தின் நில எல்லைகளுக்குள் தான் ஒரு மாநிலச் சட்டம் செல்லுபடியாகும்; அமுலுக்கு வரும்.

8) நிகரற்ற நாடாளு மன்றச் சட்டங்கள்

மத்தியப் பட்டியலிலுள்ள அதிகாரத்தைச் சார்ந்த ஒரு மசோதாவை நாடாளு மன்றத்தில் கொண்டு வருவதற்கு முன்னால்- அது மாநிலங்களைப் பாதிக்கக் கூடியதாக இருப்பினும் கூட- மத்திய அரசு, சம்மந்தப்பட்ட மாநில அரசுகளை அம் மசோதா பற்றி கலந்தாலோசிப்ப தில்லை; அப்படியொரு தகவல் கூட மாநில அரசுகளுக்குக் கொடுக்கப்படுவ தில்லை. முழுக்க முழுக்க மத்திய அமைச்சகங்கள் மற்றும் மத்தியத் துறைகளால் மட்டுமே அம்மசோதா கையாளப்படுகிறது. அம்மசோதா நாடாளு

மன்றத்தில் நிறைவேறி சட்டமாக அமுலாக்கப்பட்டால், அதனுல் பாதிக்கப்படும் மாநிலங்கள், தங்கள் நாடாளு மன்ற உறுப்பினர்கள் மூலம் தான் அச்சட்டத்தின் குறை நிறைகளைப் பற்றி நாடாளு மன்றத்தில் விமர்சித்துக் கொள்ள முடியும். ஆனுல் நாடாளு மன்றத்தில் நிறைவேறிய சட்டம் நிறைவேறியதுதான். அது மாநிலங்களின் கண்டனத்தால் மாற்றப்பட்டு விடாது.

மத்தியச் சட்டத்தால் பாதிக்கப்பட்ட மாநிலங்கள், அதனை எதிர்த்துத் தலைமை நீதிமன்றத்தில் வழக்கிட உரிமையுண்டல்லவா? என்ற நியாயமான கேள்வி நம் உள்ளத்திலே பிறக்கும். மத்திய அரசை எதிர்த்து மாநிலங்கள் வழக்காடுவதற்குத் தேவையான ஒரு சில வழி வகைகள் நமது அரசியல் சட்டத்தில் செய்து வைக்கப்பட்டுள்ளன என்பதும் உண்மை தான்.

ஆனுல், பல துறைகளிலும், மத்திய அரசிற்குக் கீழ்ப்படிந்தும், நிதித் துறைகளில் மைய அரசின் கையையே என்றும் எதிர்பார்த்து நிற்கக் கூடிய அடிமை மாநிலங்கள், மத்திய அரசோடு ஒரு சட்டத்திற்காக மோதிக் கொள்வதற்கும் அதன் விளைவாக மத்திய அரசைப் பகைத்துக் கொள்வதற்கும் பொதுவாக முனைவதில்லை. சென்ற 24 ஆண்டுகளில் சிற்சில வழக்குகளைத் தவிர மத்திய அரசின் மேல் மாநிலங்களால் இந்த வகையில் அதிகமான வழக்குகள் தொடரப்படவில்லை.

ஆனுல், பொதுப் பட்டியலின் எந்த ஓர் அதிகாரத்திலாவது மாநிலச் சட்டசபை சட்டமியற்றினுல், அதற்கு முன்னரே, அது பற்றி மத்திய அரசைக் கலந்தாலோசித்து, அந்த இனத்தைச் சார்ந்த பாராளு மன்றத்தின் வேறு சட்டம் உள்ளதா? அல்லது வேறு பொருளில் வரும் மத்தியச் சட்டத்தின் மூலமாகத் தற்போது மாநிலச் சட்ட மன்றத்தால் நிறைவேற்றப்பட இருக்கும் சட்டம் செல்லாமல் போய்விடுமா? என்பதையெல்லாம் தெளிவாக அறிந்து கொள்ள வேண்டும். அதன் பின்னரே, பொதுப் பட்டியலின் இனத்தில் மாநிலங்கள் சட்டமியற்றுகின்றன. அதாவது மத்தியச்சட்டத்துறை அனுமதியளித்த பின்னுல்தான் மாநிலங்கள் பொதுப் பட்டியலிலுள்ள அதிகாரப் பொருட்களில் சட்டம் செய்கின்றன.

ஆக, மாநிலங்களின் நிலப்பகுதிகளை மாற்றுவதற்கும், அழிப்பதற்கும் மற்றும் திருத்துவதற்கும்; மாநில அதிகாரிகளை மத்திய அரசின் பணியாளர்களாக மாற்றுவதற்கும்; மாநிலச் சட்ட மேலவைகளைப் படைப்பதற்கும் அழிப்பதற்கும்; மாநிலங்களவைத் தீர்மானத்தின் மூலமாக மாநிலப் பட்டியலில் அதிகாரப்பூர்வமாக மாநிலங்களுக்குத் தரப்பட்ட பல அதிகாரங்களை மத்திய அரசு பறித்துக் கொள்வதற்கும்; மாநிலங்களிடம் பிடுங்கிக் கொண்ட அதிகாரங்களைத் திருப்பித் தராமல் மத்திய அரசு, தன்னிடமே இருத்தி வைத்துக் கொள்வதற்கும்; 'அயல் நாடுகளுடன் செய்து கொள்ளும் ஒப்பந்தங்களை அமுல்படுத்துவதற்காக' எனக்கூறி மாநிலங்களில் செல்லுபடியாகும் பல ஏற்பாடுகளைச் செய்து கொள்வதற்கும்; தேவையான எல்லாச் சட்டங்களையும் – நாடாளு மன்றமே இயற்றி, அமுல் படுத்துவதற்குரிய உரிமையைப் பெற்றுள்ளது. மாநிலப் பட்டியலில் தரப்பட்ட அதிகாரங்களிலும் அவ்வகை (நாடாளு மன்ற)ச் சட்டங்கள் ஊடுருவிச் செல்லலாம் எனினும், ''மாநிலங்களுக்கு அரசமைப்புச் சட்டத்தால் உறுதி செய்து தரப்பட்டுள்ள அதிகாரங்கள் பறி போகின்றனவே'' என்ற உரிமைப் பிரச்சனையை எந்த மாநில அரசும் கிளப்ப முடியாது. ஏனெனில், மாநில சுயாட்சி உரிமைகளில் நாடாளு மன்றத்தால் செய்யப்படும் மேற்சொன்ன ஊடுருவல்கள் யாவும் இன்றைய அரசியல் சட்டத்தால் ''சட்டப் பூர்வமானவை'' என ஏற்றுக் கொள்ளப் பட்டுள்ளன. அந்த ஊடுருவல்களுக்கேற்ற பல நேரடிச் சட்டவிதிகளையும் நமது இன்றைய அரசமைப்பு, படைத்து வைத்துள்ளது.



# 7. மாநில சுயாட்சியை முடமாக்கும் நேரடிச் சட்ட விதிகள்

## — குடியரசுத் தலைவரின் தடை அதிகாரம் —

"மாநிலச் சட்டங்களுக்கான இசைவினை ( Assent ) குடியரசுத் தலைவர் வழங்கும் போதெல்லாம், மத்திய அரசு - அதன் கொள்கைகளையும் கட்டளைகளையும் மாநிலங்களின் மேல் விதித்துக் கொண்டுதான் உள்ளது." 1

—பேராசிரியர் அலிஸ் ஜேக்கப்; திரு. S N. ஜெயின்.

மாநிலச் சட்டமன்றங்களின் சட்டமியற்றும் அதிகாரங்கள் நாடாளுமன்றத்தின் சட்டமியற்றும் அதிகாரங்களைப் போன்றவை யல்ல. மாநிலச் சட்டப் பேரவைகளும் மத்திய நாடாளு மன்றமும் ஒரே மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் மக்கட் பிரதிநிதிகளைக் கொண்டவைதான். எனினும் அவையிரண்டும் ஒரே ரகத்தைச் சார்ந்தவை யல்ல. மாநிலச் சட்டமன்றங்களிலுள்ள மக்கள் பிரதிநிதிகளால் (M.L.A.) நிறைவேற்றப்படும் சட்ட மசோதாக்கள் எல்லாம் உடனே சட்டமாய் விடாது; அவை தானகவே அமுலுக்கும் வந்து விடாது.

மாநிலத்தைப் பற்றிய எல்லா நிர்வாகப் பணிகளும் அதன் நிர்வாகத் தலைவரான ஆளுநரின் (Governor) பெயராலேயே நடைபெற வேண்டும் என்பதுதான் அரசமைப்புச் சட்டத்தின் மூலக்கருத்து. ஆளுநருக்குச் சில விருப்பு அதிகாரங்கள் (Discretionary Powers) உண்டு. ஆளுநருக்குத் தனி விருப்பு அதிகாரங்கள் இருந்தாலும் சனநாயக முறைப்படி, அந்த மாநில அரசின் உண்மையான நிர்வாகிகளான "அமைச்சரவையின் உதவியுடனும் ஆலோசனையுடனும் தான்" அவர் செயல்பட வேண்டும். அதாவது நடைமுறையில் மாநில அமைச்சரவைதான் உண்மையில்ஆட்சி செய்கிறது. ஆனல் ஆளுநர்—

1 Prof. Alice Jacob & Mr. S. N. Jain, "The Union and the states" [1972], P. 355.

பெயரளவில் மாநிலத்தின் நிர்வாகத் தலைவராக இருப்பதால் ஒவ்வொரு மசோதாவிற்கும் அவரது ஒப்புதல் என்ற பெயரளவு இசைவும் (Assent) சட்டமரவதற்கு (Act) இன்றியமையாத தாகும்.

எனவே, ஆளுநரின் இசைவைப் பெற்ற பின்னரே மாநிலச் சட்டமன்றத்தில் நிறைவேறிய மாநில மசோதாக்கள் உண்மையான சட்டமாக மாறும். அதன் பின்னரே அது அமுலுக்கும் வரும்.

இது தவிர, மாநில மசோதாக்கள் சட்டமாவதற்கு நமது அரசமைப்பில் வேறு சில கட்டுப்பாடுகளும் ஆக்கி வைக்கப் பட்டுள்ளன.

அவையாவன:

1. சில மசோதாக்கள் அதிகாரப்பூர்வமான சட்டங்களாக்கப் பட வேண்டுமெனில் மத்திய நிர்வாகத்தின் ஒப்புதலைக் கூடப் பெற வேண்டும்.

2. இன்னும் சில வகைச் சட்ட மசோதாக்கள் மாநிலச் சட்ட மன்றத்தில் முன்னிலைப்படுத்தும் முன்னரே ( Before Presenting the Bill ) குடியரசுத் தலைவருக்கு அனுப்பப்பட்டு, அவரது முன் அனுமதியைப் பெற வேண்டும்.

3. மாநிலச் சட்ட மன்றத்தில் நிறைவேறிய இன்னும் சில மசோதாக்களுக்கு அந்த மாநில ஆளுநர் தனது விருப்பு அதிகாரத்தைப் பயன்படுத்தி (அவை அமுலாவதற்குரிய) தனது இசைவைத் தராமல் குடியரசுத் தலைவரின் பரிசீல னைக்காக, ஒதுக்கி வைத்து விடலாம்.

அப்படி மாநில ஆளுநர்களால் ஒதுக்கி வைக்கப்பட்ட மசோதாக்களுக்குக் குடியரசுத் தலைவர்–விரும்பினல் இசைவை (Assent) வழங்கலாம்; அல்லது கால வரையறையின்றி அம் மசோதாக்களுக்கு இசைவையே கூட வழங்காமலும் விட்டு விடலாம்.

அரசமைப்புச் சட்டத்தில், குடியரசுத் தலைவருக் கென்று இதுபற்றி தனித்த விருப்ப அதிகாரங்கள் எதுவுமில்லை. எனவே, குடியரசுத் தலைவரின் ‘இசைவு’ என்பது அவருக்கு ஆலோசனை மற்றும் உதவியை வழங்குகின்ற அதிகாரத்தைப் பெற்ற மத்திய அமைச்சரவையின் ‘இசைவே’ யாகும்.

ஒரு மாநிலத்தின் மக்களெல்லாம் வாக்களித்து, அவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டமன்ற உறுப்பினர்களால் வாரக் கணக்கில் தெளிவாக விவாதிக்கப்பட்டு—நிறைவேற்றப்பட்ட—மாநில மசோதாவிற்கு மத்திய அரசின் கருணை நோக்குக் கிடைக்கப் பெருவிடின் (அம்மசோதா மாநிலங்களுக்கு எவ்வளவு நலன் பயப்பதாக இருப்பினும்) அது அமுலுக்கு வர முடியாத ஒரு மிகச் சீரிய ''சுயாட்சிக் கொள்கை''யைத்(!) தான் நமது அரசமைப்புச் சட்டம் உருவாக்கி வைத்துள்ளது. இச்'சிறப்பு' வேறு எந்த நாட்டு அரசமைப்புச் சட்டத்திலும், காணப்படாத ஒன்று! அவை பற்றி இங்கு ஆய்வோம்.

## I

## குடியரசுத் தலைவரின் இசைவு பெற வேண்டிய மாநில மசோதாக்கள்

1. சட்டவிதி 304 (b)-இன் படி, ''பொது நலன் கருதி, வர்த்தகம் மற்றும் வாணிகம் செய்யும் உரிமைகளைக் கட்டுப்படுத்தும்'' ஒரு சட்ட மசோதாவை மாநிலச் சட்டமன்றத்தில் முன்னிலைப்படுத்துவற்கும் முன்மொழிவதற்கும் முன்னர், அதற்குரிய அனுமதியைக் குடியரசுத் தலைவரிடமிருந்து மாநில அரசு முன்கூட்டியே பெறவேண்டும். அவ்வகைச் சட்ட மசோதாவை மாநில அரசு தயாரித்து மத்திய உள் நாட்டிலாகாவிற்கு (Home Department) அனுப்பி வைக்க வேண்டும். உள்நாட்டிலாகா அதனை ஆய்வு செய்து, அதன் பேரில் குடியரசுத் தலைவர் அனுமதியளித்தால் மட்டும்தான் அம்மசோதாவை மாநிலச் சட்டமன்றத்தில் விவாதிப்பதற்கும் நிறைவேற்றுவதற்கும் மாநிலச் சட்டப் பேரவை எடுத்துக் கொள்ள முடியும். இல்லையெனில் அது செல்லாது.

2. சட்டவிதி 31(3)-இன்படி ஒரு மாநிலத்தின் எல்லைக்குள்ளிருக்கும், அசையாச் சொத்தை பொதுமக்கள் நலன் கருதி, அந்த மாநில அரசு ஆர்சிதப்படுத்திக் (Acquire) கொண்டு அதற்குரிய இழப்பீட்டுத் தொகையை (Compensation) நிர்ணயிக்கும் சட்டங்களை மாநிலச் சட்ட மன்றம் இயற்றினால், அச்சட்டம் குடியரசுத் தலைவரின் (மத்திய அரசு அமைச்சரவையினது) பரிசீலனைக்கு வைக்கப்பட்டு அவரது ஒப்புதலையும் பெற வேண்டும். அவருடைய ஒப்புதலைப் பெருவிடில், அச்சட்டம் செல்லாது.

3. சட்டவிதி 31-A-இன்படி, மாநிலத்திலுள்ள தனி மனிதரின் சொத்துக்கள் மற்றும் உரிமைகள் போன்றவைகளை, 'பொது நலன் கருதி' மாநில அரசு ஆர்சிதம் செய்து அதற்குரிய சில வகைச் சட்டங்களை மாநிலச் சட்டமன்றத்தில் நிறை வேற்றினுல், குடியரசுத் தலைவரின் ஒப்புதல் பெற்ற பின்னரே அச்சட்டம் அமுலுக்கு வரும்.

4. சட்டவிதி 200-இன் காப்பு வாசகத்தின்படி ( Proviso ) ஒரு மாநிலச் சட்ட மசோதா உயர்நீதி மன்றத்தைப் பாதிக்கும் வகையில் அமைந்திருந்தால், மாநில ஆளுநர் தனது இசைவினைத் தாராமல், அதைக் குடியரசுத் தலைவரின் பரிசீலனைக்காக ஒதுக்கி வைத்துவிட வேண்டும்.

5. சட்டவிதி 246 (2)-இன் படி, பொதுப்பட்டியலில் குறிப்பிடப் பட்ட ஓர் அதிகாரத்தினடிப்படையில் மாநிலச் சட்ட மன்றம் ஒரு மசோதாவை நிறைவேற்றினுல் அதன் சில பிரிவுகள் வேருெரு மத்திய அரசுச் சட்டத்திற்கு முரணுக அமையும் நிலை இருந்தால், அது, குடியரசுத் தலைவரின் இசைவிற்காக அனுப்பப்பட வேண்டும். ஒருக்கால் குடியரசுத் தலைவரும் அதற்குத் தனது இசைவைத் தந்து விட்டால் அந்த மாநிலச் சட்டம் அமுலுக்கு வந்துவிடும். ஆனுல், நாடாளுமன்றம் அதற்குப் பின்னுல் ஒரு புதிய சட்டத்தை உருவாக்கிவிடின், குடியரசுத் தலைவரின் இசைவைப் பெற்ற முந்தைய மாநிலச் சட்டம் தாஞகவே அழிந்துவிடும். உண்மைநிலை இப்படியிருக்க, அந்தவகை மாநில மசோதா, குடியரசுத் தலைவரின் இசைவிற்காக ஏன் முன்னரே அனுப்பப்பட வேண்டும் என்பது யாருக்கும் புரியாத புதிராக உள்ளது.

6. சட்டவிதி 288 (2)-இன் படி, மத்திய அரசின் ஆதிக்கத் திற்குட்பட்ட "தேக்கிவைக்கப்பட்ட நீர், மின்விசை, அவை சார்ந்த உற்பத்தி, வழங்குதல்" ஆகியவைகளின் மீது ஒரு மாநில அரசு வரிவிதிக்கத் தேவையான சட்டத்தை உருவாக் கினுல், அது குடியரசுத் தலைவரின் இசைவைப் பெற்ற பின்னர்தான் அமுலுக்கு வரும். நடைமுறையில் இதன் பொருள் என்னவெனில், மத்திய அரசு நடத்தும் "நீர்த் தேக்கங்கள் அதில் எழும் மின்விசை முதலியவற்றின் நிறு வனங்களின் மீது, மாநில அரசுகள் வரியை விதிக்க முடி யாது" என்பதாகும்.

**"இசைவில்" உள்ள நிர்வாகச் சிக்கல்**

"குடியரசுத் தலைவரின் இசைவிற்காக", மாநிலச் சட்டங்கள், "அனுப்பப்பட வேண்டும்" என்ற சொற்றொடர்களில் எவ்வளவு சிக்கலான நிர்வாக நடைமுறைகள் தொக்கிநிற்கின்றன என்பதை நாம் அறிந்து கொள்ள வேண்டாமா?

மத்திய அரசின் உள்நாட்டிலாக்கா, அதற்குரிய விதிகளை வகுத்துள்ளது. குடியரசுத் தலைவரின் ஒப்புதல் பெறுவதற்காக அனுப்பப்படும் மாநிலச் சட்ட மசோதா, அதனை "இயக்குவதற்குரிய நோக்கங்கள்" மற்றும் "காரணங்கள்" "பொருக்குக் குழுவின் ( Select Committee ) அறிக்கை"; மாநிலச் சட்ட மன்றத்தில் நடந்த அது பற்றிய "விவாதங்கள்"; பொதுப் பட்டியல் அதிகாரத்தினடிப்படையில் அம்மசோதா நிறைவேற்றப்பட்டிருந்தால் எந்த அளவிற்கு மத்தியச் சட்டத்தோடு அம்மசோதா முரணானது என்பதன் குறிப்புக்கள் ஆகியவைகள் ஒவ்வொன்றிலும் 5 நகல்கள் எடுத்து மத்திய உள்நாட்டிலாகாவிற்கு அந்த மாநில அரசு அனுப்ப வேண்டும். மத்திய அரசின் உள்நாட்டிலாக்கா, மத்தியச் சட்ட அமைச்சகத்திற்கும் சம்மந்தப்பட்ட வேறு பல அமைச்சகங்களுக்கும் அவைகளை அனுப்பி வைக்கிறது. அவ்வளவு மத்திய அமைச்சகங்களும், மாநிலத்தினால் அனுப்பப்பட்டவைகளைக் கூர்ந்து ஆய்வு செய்கின்றன.

மேலும் அந்த மாநில மசோதா, சட்ட நுணுக்கங்களின் அடிப்படையில் சரியானதுதானா?

மத்திய அரசின் ஆளும் கட்சிக் கொள்கைகளைத் தழுவியதாக உள்ளதா?

அதற்கு முரணாக உள்ளதா?

வேறு ஏதாவது ஒரு மத்தியச் சட்டத்தின் விதிகளுக்கு, அம்மசோதா, முரண்பட்டுள்ளதா?

அரசமைப்புச் சட்டத்தினடிப்படையில், அம்மசோதா செல்லத்தக்கது தானா?

வேறு, நடைமுறை விதிகளை அம்மசோதா, முறையாக ஏற்றுள்ளதா?

அதைப்போன்ற ஒரு சட்டத்தை, இனிமேல் மத்திய அரசு கொண்டுவரும் எண்ணத்துடனிருக்கிறதா?

மத்திய அரசின் எல்லா நலன்களுக்கும் குந்தகம் ஏற்படாமல், அந்த மசோதா நிறைவேற்றப்பட்டுள்ளதா?

என்பன போன்ற பல வகையான கோணங்களில், மத்திய அரசின் பல அமைச்சகங்கள் அம்மசோதாவை ஆய்வு செய்து, தெளிந்த பின்னரே மத்திய அரசு அம்மாநில மசோதாவிற்கு ஒப்புதல் கொடுக்கும். உடனே குடியரசுத் தலைவரின் ஒப்புதலும் கிடைத்துவிடும். அதாவது, மத்திய அரசாங்கத்தின் இந்த வகை ஒப்புதலைத்தான் ''குடியரசுத் தலைவரின் ஒப்புதல்'' என அரசமைப்புச் சட்டம் கூறுகிறது.

## II

## குடியரசுத் தலைவரின் தடை அதிகாரம்—மாநிலச் சட்டங்களின் சாவு மணி

மேற்சொன்ன எல்லாவற்றையும் விட மாநிலச் சட்ட மியற்றும் அதிகாரங்களை ஒரேயடியில் தீர்த்துக் கட்டக்கூடிய இன்னும் சில சட்டவிதிகளும் நமது அரசமைப்புச் சட்டத்தில் இடம் பெற்றுள்ளன.

சட்டவிதி 200-இன் படி, ஒரு மாநிலத்தின் ஆளுநர் விரும்பினால், எந்தவொரு மாநிலச் சட்ட மசோதாவிற்கும் தன்னுடைய ''இசைவினைத்'' தராமல், குடியரசுத் தலைவரின் பரிசீலனைக்காக அதனைத் தனித்தொதுக்கி வைத்துவிடலாம்.

மாநில ஆளுநர் யார்? மத்திய அமைச்சரவையின் யோசனையின் பேரில் குடியரசுத் தலைவரால் நியமனம் செய்யப்படும் மத்திய அரசின் ஆளுங் கட்சியைச் சார்ந்தவர். எனவே, ஒரு மாநிலச் சட்ட மசோதாவை, மத்திய அமைச்சரவை விரும்பவில்லையெனில், அதற்குரிய இசைவினைத் தரவேண்டாம் என, அந்த மாநில ஆளுநருக்குக் குடியரசுத் தலைவர் மூலம் மத்திய அமைச்சரவை மறைமுகமாக ஆலோசனை கூறும். குடியரசுத் தலைவருக்கு எல்லா வகையிலும் கீழ்ப்படிதலுள்ள அந்த ஆளுநர், அவரது ஆண்டானின் ஆலோசனையைச் சிரமேற் கொண்டு, மாநிலச் சட்ட மன்றத்தில் நிறைவேற்றப்பட்ட மசோதா—அமுலுக்கு வராமல் இருப்பதற்காக—தனது ''விருப்பதிகாரம்'' என்ற பெயரால் அதற்கு இசைவினை வழங்காமல், ''குடியரசுத் தலைவரின் இசைவினைப் பெறவேண்டும்'' எனக்கூறி, அதைத் தனித் தொதுக்கி வைத்து விடுவார்.

மாநிலத்தின் நலன் கருதி, பல சிரமங்களை ஏற்றுக்கொண்டு ஒரு மாநில அரசு, அச்சட்டத்தை உருவாக்கி, உரிய பெரும்பான்மையுடன் அதை நிறைவேற்றிய பின்னரும்கூட மத்திய அரசு அதை விரும்பாவிடில் அச்சட்டத்திற்குரிய குடியரசுத் தலைவரின் இசைவைத் தாராமல் அதனைப் ''பனிப்பேழைக்கு'' (Cold Storage) அனுப்பி, உயிரோடு கொன்றுவிடலாம். இது தான் நமது சீரிய ஜனநாயகமுறை; நமது அரசியலமைப்புச் சபையால் படைக்கப்பட்ட ''அரிய தோர் மாநில சுயாட்சித் தத்துவம்.''

இதில் இன்னுமொரு கொடூரத்தன்மையும் அடங்கியுள்ளது. சட்டவிதி 201-இன்படி மாநில ஆளுநரின் இசைவினைப் பெறுத அச்சட்டம், குடியரசுத் தலைவரின் ஆலோசனைக்கு அனுப்பப்படும் போது, குடியரசுத் தலைவர் எத்துணைக் கால அளவிற்கு வேண்டுமானாலும் தனது இசைவினை வழங்காமலேயே விட்டு விடலாம். அதற்குரிய (இசைவு தருவதற்குரிய) கால எல்லை அரசமைப்பால் வரையறுக்கப்பட வில்லை.

ஒருக்கால் அவர் மனம் வைத்து,சில திருத்தங்களுடன் அச்சட்டத்தை மீண்டுமொரு முறை மாநிலச் சட்டமன்றம் நிறைவேற்ற வேண்டுமென்று கருதினால், அவ்வகை ஆணையைப் பிறப்பித்து அதனை மாநிலங்களுக்கே மீண்டும் திருப்பி அனுப்பி வைத்து விடலாம். குடியரசுத் தலைவரால் திருப்பி அனுப்பப் பட்ட மசோதாவை மாநிலச் சட்ட மன்றம் மீண்டும் ஒருமுறை நிறைவேற்றி விட்டால் அச்சட்டம் உடனே அமுலுக்கு வந்து விடும் என யாரும் கருதிட வேண்டாம். இரண்டாம் முறை நிறைவேறியபின் மீண்டும் அது குடியரசுத் தலைவருக்கே (அவரது இசைவினைப் பெறுவதற்காக)அனுப்பப்பட வேண்டும்.

''இட்டாருக்கு இட்டபடி'' யென்று, குடியரசுத் தலைவரும் ''அவரது குப்பைத் தொட்டியில்'' மீண்டும் அதைப் போட்டு வைத்து விடலாம். அல்லது, குடியரசுத் தலைவர் அதற்குரிய இசைவினைத் தரமாட்டேன் என மறுத்தும் விடலாம்.

குடியரசுத் தலைவரல்லவா? நடப்பது ஜனநாயகமல்லவா? அந்த மாநில மசோதாவிற்குத் தனது இசைவினை ஏன் கொடுக்க மறுத்தார் என்ற காரணங்களை யெல்லாம் அவர் காட்ட வேண்டிய அவசியமில்லை. ''பார்த்தேன், படித்தேன், இசைவினை மறுத்தேன்'' என்ற மூன்றே மூன்று சொற்களில் அந்த மாநிலச் சட்டத்தின் தலையெழுத்தை குடியரசுத் தலைவர் எழுதி முடித்து விடலாம்.

அந்தச் சூழ்நிலையில் நியாயத்தையும் நீதியையும் பெறுவதற்கு, இந்தியத் தலைமை நீதி மன்றம் இருக்கின்றதே; குடியரசுத் தலைவரின் ஒப்புதல் தராமையினை எதிர்த்து மாநிலங்கள் அங்கு வழக்காடலாமல்லவா? முடியாது. நமது அரசமைப்பில் அதற்கு வழியில்லை. குடியரசுத் தலைவர் மாநிலச் சட்டத்திற்குரிய இசைவினை வழங்காத போதோ — அல்லது இரண்டும் கெட்டான் நிலையில் அதனைத்தன் காகிதக் கட்டுகளில் பத்திரமாயிருத்தி வைத்துக் கொண்டாலோ—எந்த மாநிலமும், எந்தவொரு நீதி மன்றத்திலும் குடியரசுத் தலைவரின் அச் செய்கையினை எதிர்த்து வழக்குத் தொடர முடியாது.

குடியரசுத் தலைவர் எனக் குறிப்பிடும் போதெல்லாம் அவர், இந்தியத் துணைக் கண்டத்தின் அரசியல் கட்சிகளைச் சாராத உயர்தலைவர் என்று நமக்கு எண்ணத் தோன்றும். ஆனால் நமது அரசமைப்புச் சட்டத்தின் அற்புதமான நெறிமுறை என்னவெனில், 'குடியரசுத் தலைவர்' என்ற பெயர், அதில் வரும் போதெல்லாம் உண்மையில் அது மத்திய அரசின் அமைச்சரவையையே குறிக்கும். குடியரசுத் தலைவருக்கென்று தனித்த விருப்பு அதிகாரங்கள் கிடையாது. மத்திய அமைச்சரவை, "ஆலோசனை" என்ற பெயரில் எதைச் சொல்கிறதோ அதைக் குடியரசுத் தலைவர் செய்து தீரவேண்டும்.

ஆகவே, "குடியரசுத் தலைவரின் இசைவு"; "குடியரசுத் தலைவரின் ஆணை";"குடியரசுத் தலைவர் மாநிலத்தின் சட்டத்தைத் திருப்பி அனுப்புதல்";"குடியரசுத் தலைவர் இசைவினை வழங்காமல் வைத்துக் கொள்ளுதல்", ஆகிய இன்னோரன்ன சொற்றொடர்கள் யாவும் மத்திய அமைச்சரவையின் "இசைவு"; மத்திய அமைச்சரவையின் "ஆணை"; "மத்திய அமைச்சரவை திருப்பி அனுப்புதல்"; "மத்திய அமைச்சரவை இசைவை மறுத்தல்" என்றுதான் பொருள்படும்.

மத்திய அரசின் சட்டங்களுக்கும் இதே நிலைதானே? ஆகவே இதில் மாநில சுயாட்சி எங்கே பறிபோகிறது என்ற அடுத்த ஒரு வினாவும் நம்முள்ளத்தில் இயல்பாய் எழும். இவ்வளவிற்கும் வழி செய்த அரசமைப்புச் சட்டம் அதற்கும் ஒரு வழியினைக் கூறுகிறது. நாடாளு மன்றம் ஒரு சட்டத்தை நிறைவேற்றினால், குடியரசுத் தலைவர் அதற்கு இசைவை அளிக்க வேண்டும். தப்பித் தவறி அச் சட்டத்தை விரும்பாவிடில், சில யோசனைகளைக் கூறி மீண்டும் நாடாளு மன்றத்திற்கே

அதனைத் திருப்பி அனுப்பி விடலாம். ஆனால் மீண்டும் ஒருமுறை நாடாளு மன்றம் அதை நிறைவேற்றி விட்டால் அச்சட்டம் யாருக் காகவும் காத்திருக்க வேண்டிய தில்லை; தானாகவே அமுலுக்கு வந்துவிடும்.

## III
## சட்ட வல்லுனர்களின் கண்டனக் கணைகள்

மாநிலச் சட்ட மசோதாக்களை, சட்டமாக ஆக்குவதற்குரிய "இசைவை" கவர்னரும் குடியரசுத் தலைவரும் முறையே வழங்காமல், அவற்றை உயிரோடு சமாதி செய்வதில் பொதிந் திருக்கும் உள் நோக்கம் என்ன? அதனால் மத்திய அரசிற்கு ஏற்படும் பயன் என்ன?

மூன்றும் நிதிக் குழுவின் தலைவராயிருந்தவரும் அரசமைப் புச் சட்ட வல்லுநரும் பொருளாதார மேதையுமான, திரு. அசோக்சந்தா அவர்கள் "இந்தியாவில் கூட்டாட்சிக் கொள்கை" (Federalism in India) என்ற தனது நூலில் கூறுகிறார்,

"இந்தப் பிரச்சனை வெறும் தத்துவார்த்தமான ஒரு பிரச்சனை அல்ல; அல்லது முக்கியமில்லாத ஒரு சாதாரண பிரச்சனை என்றும் யாரும் கருத வேண்டாம். தலைமை அமைச்சரின் ஆலோசனையின் பேரில் குடியரசுத் தலைவர் மாநில ஆளுநர் களை நியமிக்கிறார். இரண்டொரு ஓய்வு பெற்ற அதிகாரி களைத் தவிர, ஆளுங் கட்சியிலிருந்தே, மற்ற எல்லா ஆளுநர் களும் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றனர். அதுவும் தேர்தல் களில் தோற்றுப்போன அரசியல்வாதிகளையும் வேறு வகை யில் தொல்லைகளைத் தரக் கூடியவர்களையும் ஆளுநர்களாக நியமிக்கின்றனர். தத்துவார்த்தமாக, ஆளுநர் தனது அரசியல் கட்சியின் தொடர்பை அறுத்துக் கொள்கிறார். எனினும், அரசியல் நிலைமைகளைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருக்கும் ஓர் அரசியல் கட்சியினைச் சார்ந்தவராகவே அவர் இருந்து கொண்டு வருகிறார். அவர், தான் சார்ந் திருக்கக் கூடிய கட்சிக்குத் குந்தகம் விளைவிக்கத் தக்க மாநிலச் சட்டங்களை, குடியரசுத் தலைவரின் பரிசீலனைக் கனுப்பும் போது அந்த மாநில அமைச்சரவையைக் கலந்து கொள்ள மாட்டார். மத்திய அரசில் ஆட்சிக் கட்சியாய்

இருக்கும் அரசியல் கட்சிக்கு எதிர்க் கட்சியாக இருக்கும் ஒரு கட்சி, மாநில அரசுப் பொறுப்பை ஏற்கத் தக்க நிலைமை வரலாம். அந்த எதிர்க் கட்சியின் அரசியல் பொருளாதாரக் கொள்கைகளுக்கு உருக்கொடுக்கும் வகையில், மாநிலச் சட்ட மன்றம் எந்த ஒரு சட்டத்தையும் இயற்றுவதற்குத் தகுதி பெறுகிறது. அத்தகைய மாநிலச் சட்டங்கள், மத்திய அரசின் கொள்கைகளுக்கு முற்றிலும் முரண்பாடு கொண்டவையாக இருக்கலாம். அச் சட்டத்தை, குடியரசுத் தலைவரின் பரிசீலனைக்காக அந்த மாநில ஆளுநர் ஒதுக்கி வைத்தால் குடியரசுத் தலைவர் தனது சொந்தக் கருத்தில் நடப்பதா? அல்லது மத்திய அரசின் அமைச்சரவையின் ஆலோசனைப்படி செயல்படுவதா? அல்லது மாநில அரசின் அமைச்சரவை ஆலோசனைப்படி இயங்குவதா? என்ற வினாக்கள் உடனே எழுகின்றன. மத்திய அமைச்சரவையின் ஆலோசனைப்படி அவர் இயங்க வேண்டிய நிலைமை ஏற்படின் அச் சட்டத்திற்கு, அவருடைய இசைவினைத் தாராமல் நிறுத்தி வைக்கலாம்; அல்லது அவர் அனுப்பக் கூடிய சில குறிப்பாணைகளின் படி, மாநிலச் சட்ட மன்றத்தை அச்சட்டம் பற்றி புனராலோசனை செய்ய அவர் கேட்டுக் கொள்ளலாம். வேறு சொற்களில் இதனைக் கூற வேண்டுமெனில், மத்திய அரசிலிருக்கும் ஆளுங் கட்சி, குடியரசுத் தலைவரின் தடை அதிகாரத்தைப் (Veto) பயன்படுத்தி, அந்த எதிர்க்கட்சியினை மானபங்கப்படுத்தலாம். இதனால் மாநிலங்களில் எதிர்க்கட்சிகளின் ஜனநாயக வளர்ச்சி, தடைப்படும். இந்திய நாட்டின் எல்லாப் பகுதிகளிலும், ஒரே அரசியல் கட்சியின் பேராதிக்க ஆட்சி எளிதாக அமைய வாய்ப்பேற்படும்.''2

என எச்சரிக்கை செய்கிறார்.

அரசமைப்பு வல்லுனர் திரு. அலிஸ் ஜேக்கப் (Alice Jacob) அவர்கள்,

''(மாநிலச் சட்டங்களுக்கான) இசைவினைக்குடியரசுத் தலைவர் வழங்கும் போதெல்லாம் மத்திய அரசு, அதன் கொள்கை

---

2 Mr. Ashok chanda, ''Federalism in India'' (1965), P. 99

களை – கட்டளைகளை - மாநிலங்களின் மேல் விதித்துக் கொண்டு தானுள்ளது.''[3]

எனத் தெளிவு படுத்துகிறார்.

டாக்டர். இராசமன்னார் அறிக்கையில்,

''ஒரு கூட்டாட்சி அமைப்பில், அரசியல் சட்டப்படி நடக்க வேண்டுமென்று வற்புறுத்தி வழிகாட்டிட அதன் ஓர் அங்க மான மத்திய அரசிற்கு உரிமை யில்லை. அவ்வகைப் பணி கள் உயர்நீதி மன்றங்களுக்கும், தலைமை நீதி மன்றத்திற்கும் ஒப்புவிக்கப்பட்டுள்ளன.''[4]

எனச் சுட்டிக்காட்டுகிறது.

மேற்சொன்ன சில அரசமைப்பு வல்லுனர்களின் கருத்துக் கள் இங்கு சான்றாக மட்டும் தரப்பட்டுள்ளன. ஏறத்தாழ எல்லாச் சட்ட வல்லுனர்களும், அரசமைப்புச் சட்ட அறிஞர் களும், மாநிலச் சட்டங்கள் ஆளுநர்களால் குடியரசுத் தலை வருக்கு அனுப்பப்பட வேண்டு மென்ற கட்டாய முறை பற்றி – அதனால் மாநில சுயாட்சி அழித்தொழிக்கப்படுவது பற்றி-மிகக் கடுமையான சொற்றொடர்களில் கண்டனம் செய்துள்ளார்கள்.

சில சான்றுகள் :–

1. கேரளம் :

குடியரசுத் தலைவரின் மேற் சொன்ன தடை யதிகாரத் தை, மத்திய அரசின் ஆளுங் கட்சியான காங்கிரஸ், அரசியற் காரணங்களுக்காகப் பலமுறை பயன்படுத்திக் கொண்டுள்ளது. 1959–ஆம் ஆண்டில் கேரள மாநிலத்தில், கம்யூனிஸ்டுக் கட்சி ஆட்சிக்கு வந்தது. முதலாளித்வத்தின் செல்வாக்கினைக் கொண்ட ரோமன் கத்தோலிக்கர்களால் நிர்வகித்து வந்த பல கல்வி நிறுவனங்களைக் கம்யூனிஸ்டு ஆட்சி யில் உருவான மாநிலச் சட்டங்கள், மிகவும் பாதித்தன. காங்கிரஸ் கட்சி, கம்யூனிஸ்டுக் கட்சியின் மாநில ஆட்சியை எப்படியும் அகற்றிவிட விரும்பியது. எனவே, கம்யூனிஸ்டு அரசாங்கத்தால் கேரளச் சட்ட மன்றத்தில் செய்யப்பட்ட அச் சட்டங்களை - கேரள ஆளுநர் (காங்கிரஸ் மத்திய – அரசின் தூண்டுதலினால்) குடியரசுத் தலைவரின் பரிசீலனைக்காக

---

3 Ibid, opp. cited Note 1

4 Dr. P. V. Rajamannar Committee Report, [1971], P. 55.

ஒதுக்கி வைத்து விட்டார். வழக்கம்போல், அச் சட்டங்கள் பனிப்பேழையில் வைக்கப்பட்டன. இதற்கிடையில் கேரளத்தில் 'சட்டம் ஒழுங்கு' குலேயும் அளவிற்கு ஓர் அமைதியின்மை செயற்கையாக உருவாக்கப்பட்டது. ஆளுநரின் அறிக்கைக் கிணங்கக் குடியரசுத் தலேவர் ''நெருக்கடி நிலே'' என அறிவித்தார். இறுதியில் கம்யூனிஸ்டு ஆட்சி வீழ்த்தப் பட்டது.

2. தமிழகத்தின் மால்கோ தொழிற்சாலே

1972-ஆம் ஆண்டில் ''மேட்டூர் மால்கோ'' (Malco) தொழிற்சாலேயைத் தமிழகத்தின் திராவிட முன்னேற்றக் கழக அரசு அரசுடைமையாக்கி, அதற்குரிய அனுமதியை மத்திய அரசிடம் கேட்டது. சோஷலிச மூலச் சித்தாந்தத்தின் அசல் படைப்பான (!?) தமிழக இந்திரா காங்கிரஸ் கட்சி, இதனே எதிர்த்தது. அதற்காக இத்தாலிய மூலதனம் அதில் ஈடுபடுத்தப் பட்டுள்ளது என்ற முதலாளித்துவக் காரண மொன்றும் காட்டப் பட்டது. மத்திய அரசின் பரிசீலனேக்காக அம்மசோதா அனுப்பப்பட்டது. இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னரும் குடியரசுத் தலேவரின் காகிதக் கட்டுக்குள், அச்சீரிய தமிழ் மாநில மசோதா விழிமூடி நிற்கின்றது. அதற்கு இசைவும் வரவில்லே — மறுப்பும் வரவில்லே — குடியரசு நாட்டின் கூட்டாட்சி அரசமைப்புச் சட்டத்தில், மாநிலங்களின் ''சுயாட்சி'' எத்துணே வேதனே தரத்தக்க இடத்தைப் பெற்றுள்ளது, என்பது புரிகிறதா?

3. தொழிலாளர்களுக்குத் தொழில் நிர்வாகத்தில் பங்கு (தமிழக மசோதா)

1972-ஆம் ஆண்டு ஆகஸ்டு 15-ஆம் நாள் இரவு இந்திய சுதந்திரத்தின் வெள்ளி விழாக் கொண்டாட்டத்தின் போது தமிழகச் சட்டமன்றத்தில் ''தொழிலாளிகளுக்கு நிர்வாகத்திலே பொறுப்பு; முதலீட்டில் பங்கு''... என்கின்ற ஒரு சமதர்மத் திட்டத்தை இந்தியத் துணேக்கண்ட வரலாற்றிலேயே முதன் முதலாக, தமிழக முதலமைச்சர் டாக்டர். கலேஞர் அவர்கள் அறிவித்தார்கள். பின்னர் தமிழகத்தின் அமைச்சர் அவர்கள் தமிழகச் சட்டப் பேரவையில் அதற்குரிய ஒரு மசோதாவையும் தயாரித்து முன்மொழிந்து, அந்த மாசோதா நிறைவேறிற்று. மத்திய அரசின் (குடியரசுத் தலேவரின்) ஒப்புதலுக்காகச் சென்ற இரண்டாண்டுகள் அம்மசோதா, தவம் கிடக்கிறது. ஆனல் இதுவரை அதற்கு அனுமதியோ, அல்லது

'இசைவோ' வரவில்லை. இதிலே மிக விந்தையான பகுதி என்னவெனில், நமது மாண்புமிகு தலைமை யமைச்சர் அவர்களே, தொழிலாளர் பற்றி இந்த மசோதாவைப் பாராட்டி யிருக்கிறார்கள்.

''தொழிலாளர்களின் டிவிடண்ட் பங்குகள் எனப்படும் புதுவகை யான பங்குகளை உருவாக்குவதென்பது மிகமிக அருமையான யோசனை, அதனைச் சம்மந்தப்பட்ட மத்திய அமைச்சகங்கள் நல்ல முறையில் பரிசீலிப்பதற்கு நான் உரிய நடவடிக்கைகளை எடுக் கிறேன்'' என மாண்புமிகு இந்திரா காந்தியவர்கள் தமிழக அரசிற் கெழுதிய தனது கடிதத்தில் குறிப்பிட்டார்கள். எனினும் அதற்குரிய அடிப்படை அனுமதியினை இதுவரை மத்திய அரசு மனம் விரும்பி அளிக்கவில்லை.

மாநிலச் சட்டங்களின் சோகக் கதை

சட்டமியற்றுத் துறையில், மாநிலத் தன்னாட்சி எந்தெந்த முறையிலெல்லாம் நசுக்கிச் சிதைக்கப்படுகிறது என்பது மேற் சொன்னவைகளிலிருந்து நமக்குத் தெளிவாகப் புலனாகும்.

அதிகாரங்களை வரையறுத்து, மாநிலங்கள் சட்டமியற்றுவதற் காகத் தனித்தளிக்கப்பட்ட பட்டியல் ஒன்று;

அப்பட்டியல் அதிகாரங்களில், மாநிலங்கள் எப்படிச் சட்ட மியற்றிச் செயல்பட வேண்டும் என நிர்ணயிக்கும் சட்டவிதி களின் கட்டுப்பாடுகள்;

கட்டுப்படுத்தப்பட்ட பட்டியல் அதிகாரங்களை மேலும் நெருக்கிச் சுருக்குவதற்காக மற்ற இரு பட்டியல்களிலும் (மத்தியப் பட்டியல் மற்றும் பொதுப் பட்டியல்) செய்யப் பட்டிருக்கும் மறைமுக ஏற்பாடுகள்.

அந்த ஏற்பாட்டினுள் மாநில அதிகாரங்களின் சுளைகளை மட்டும் மத்திய அரசு விழுங்குவதற்குரிய வெளிப்படையான கூடு விட்டுக் கூடுபாயும் வித்தை.

அந்த வித்தைக்கும் சிக்காமல் மிச்சம் — மீதியாய் நிற்கின்ற 'மாநில சுயாட்சி' அதிகாரங்களில் — பாயும் நாடாளுமன்றம்; இத்தனைக்கும் தப்பித்து மாநில மசோதா வொன்றை, ஒரு மாநில அரசு உருவாக்க முனைந்தால்......

அதில் எழும் அரசியல், நிர்வாகத் தொல்லைகள்; சில சட்டங்களில் மத்திய அரசினுடைய பல அமைச்சகங்களின் ஆய்வு; இவைகளையெல்லாம் கடந்துதான் அந்த மசோதா, மாநிலச் சட்டமன்றத்தில் முன்னிலைப் படுத்தப்பட வேண்டும்; அதன் பின்னரே, மாநில மக்களின் பிரதிநிதிகளுக்கு அந்த மசோதா பற்றி விவாதிக்கும் உரிமை கிடைக்கும்.

விவாதங்களுக்குப் பின்னர் அவ்வகை மசோதாக்கள் நிறைவேற்றப்பட்டால்......... உடனே அது சட்டமாகி விடாது.

ஏனெனில், அச்சட்டம் — சுதந்திர இந்தியாவின் சுயாட்சி பெற்ற ஒரு மாநிலச் சட்டமன்றத்தால், ஜனநாயக முறையில் உருவாக்கப்பட்ட சட்டமல்லவா? அதனுல், அவ்வளவு விரைவில் அது அமுலுக்கு வந்துவிட்டது!

எனவே......மீண்டும் நெருப்பாற்றைத் தாண்டி .....அகழியைக் கடந்து......வல்லரக்கனைத் தவிர்த்து......குகையை அடைய வேண்டும் என்பது போன்ற புராணக் கதை தொடரும்.....

மத்திய அரசின் கைவிரலசைவிற்கு ஆடக்கூடிய ''மாநிலத் தலைவரான''ஆளுநரின் கருணை நோக்கைப் பெறுவதற்காக— அதாவது அவரது ''இசைவை''ப் பெறுவதற்காக—அந்தச் சட்டம் அனுப்பப்பட வேண்டிய ஓர் கட்டாயம்;

இதுவரையும் சரியாகப் பொருள் விளக்கப்படாத ''விருப்பு அதிகாரங்கள்'' என்ற மாநில ஆளுநருக்களிக்கப்பட்ட மந்திரக் கோல்;

மசோதாவுக்கு, ''இசைவைத்'' தரலாமா? வேண்டாமா? என்ற ஆளுநரின் இரண்டு மற்ற நிலை (சஸ்பென்ஸ்);

ஒருக்கால் அவருடைய மந்திரக் கோலின் சக்தியினுல், அம் மசோதாவைக்குடியரசுத் தலைவருக்கு அனுப்ப வேண்டுமென்று அவர் கண்டறிந்தால், உடனே அது, குடியரசுத் தலைவரின் ''பரிசீலனைக்கு'' அனுப்பப்படும் விந்தை;

மத்திய அமைச்சரவை என்ற மூலச்சக்தியால் ஆட்டுவிக்கப்படும் ''அதிகாரம் நிறைந்த(?)'' பொம்மைக் குடியரசுத் தலைவர்;

''பரிசீலனை'' என்ற பெயரால் தன்னை ஆட்டிவைக்கும் சூட்சும சக்தியுடன் அவர் கொள்ளும் ஞானத் தொடர்பு;

அத்தொடர்பால் சூட்சும சக்தியான மத்திய அரசின் நிஷ்டை கலையும்; ஞான விழிகள் திறக்கும்;

உடனே வந்திருக்கிற மாநில மசோதா ஆளுங்கட்சியின் மசோதாவா? அல்லது எதிர்க் கட்சியின் மசோதாவா? அரசியலில் அதன் நிலை என்ன? மத்திய ஆளுங்கட்சிக்கு அடங்கியதா? அல்லது எதிர்ப்பதா? என்பன போன்ற மெய்ஞ் ஞான மூல ஆய்வு நடைபெறும் தன்மை;

அடுத்துப் பிறக்கும் ஞானோதயம்;

அந்த மாநிலச் சட்டம், தனக்கு ஏலாத ஒரு ''பாபாத்மா'' என்று, மூலச்சக்தியான மத்திய அரசு கருதினால் ''மூன்றே முக்கால் நாழிகையினுள்'' அச்சட்டத்திற்குக் ''குடியரசுத் தலைவரின் இசைவில்லை'' என்ற ''பிடிசாபத்தால்'' மாநிலச் சட்டத்தின் முழு உடலும் வெந்து சம்பலாகி விடும்.

இது புராணத்தால் உருவாக்கப்பட்ட கதை அல்ல; நமது அரசமைப்புச் சட்டத்தால் அழகுற எழுதி வைக்கப்பட்டிருக்கும் சில வகை மாநிலச் சட்டங்களின் உண்மைக் கதை. மாநில சுயாட்சி யின் சோகக் கதை.



# 8. கட்டளையிடும் மத்திய அரசும் மண்டியிடும் மாநிலங்களும்

" மாநில அரசுகளுக்குக் கட்டளைகளைப் பிறப்பிக்க மைய அரசிற்கு அதிகாரமளிக்கிற 256, 257, 339[2], 344 [6] ஆகிய [சட்டப்] பிரிவுகள் நீக்கப்பட வேண்டும். கட்டளைகள் பிறக்கும் [அத்தகைய] அதிகாரங்கள் எதையும் மத்திய அரசு கைக் கொண்டிருத்தல் கூடாது "1

— தமிழ்நாடு அரசின் கருத்துரைகள்.

ஒவ்வோர் அரசிற்கும் பொதுவாக மூவகைப் பணிகள் உண்டு. அதில் தலையாயது சட்டமியற்றும் பணி; இரண்டாவது பணி நிர்வாகம்; மூன்றும் பணி, நீதியைப் பரிபாலிப்பது. இம் மூவகைப் பணிகள், ஒன்றோடொன்று இயைபு கொண்டவை; ஆனால் தனித்தனியானவை.

நாட்டிற்குத் தேவையான சட்டங்கள் சட்ட மன்றங்களால் இயற்றப்படுகின்றன. அச் சட்டங்களைச் செயல்படுத்த வேண்டும். அதாவது அரசாங்க இயந்திரத்தின் மூலம் அவைகளை அமுல்படுத்த வேண்டும். அதுவே, ''நிர்வாகம் செய்தல்'' அல்லது ''ஆட்சி செய்தல்'' என அழைக்கப்படுகிறது. சட்டங்களிலும் நிர்வாகத்திலும் எழும் பிரச்சனைகளை நீதி மன்றங்கள் சட்ட பூர்வமாகத் தீர்த்து வைக்கும். '' நீதி பரிபாலனம் '' என்று அதற்குப் பெயர் வழங்கப்படுகிறது.

எனவே, ஓர் அரசினுடைய சட்டமியற்றும் பணிகளும் நீதி பரிபாலனப் பணிகளும் நீங்கலாக மீதமிருக்கும் அத்துணை அரசுப் பணிகளையும் சேர்த்துப் பொதுவாக அரசினுடைய ''நிர்வாகம்'' எனக் குறிப்பிடலாம். 2

---

1. ''மாநில சுயாட்சி பற்றியும் இராச மன்னர் குழுவின் அறிக்கை பற்றியும் தமிழ்நாடு அரசின் கருத்துரைகள்" (1974) பக்கம் 7.

2 1955. 2. S. C. R. Page 225 (235)

அந்த நிர்வாகத்தைச் சரிவரச் செயல்படுத்தத் தேவையான அதிகாரங்களை, நிர்வாக அதிகாரங்கள் அல்லது ஆட்சி அதிகாரங்கள் என்கிறோம்.

### சட்டமியற்றும் அதிகாரமே ஆட்சி செய்யும் அதிகாரமாகும்

ஒரு நாட்டின் நாடாளு மன்றம் எந்தெந்தப் பொருட்களில் (Subjects) சட்டமியற்றும் உரிமையைப் பெற்றிருக்கின்றதோ அது வரையில் மத்திய அரசினுடைய ஆட்சி செய்யும் [நிர்வாக] அதிகாரமும் விரிவடையும். மாநிலச் சட்ட மன்றம், எந்தெந்த ஆட்சிப் பொருட்களில் சட்டமியற்றும் அதிகாரத்தைப் பெற்றுள்ளதோ, அதனைப் பற்றிய வரைக்கும் மாநிலத்தின் நிர்வாக அதிகாரங்களும் செல்லும்.

அஃதாவது ஒரு மாநிலத்தினுடைய ஆட்சி செய்யும் [நிர்வாகம் செய்யும்] அதிகாரத்தின் அளவானது— அந்த மாநிலத்தினுடைய சட்ட மன்றத்தின் சட்டமியற்றும் அதிகாரத்தை ஒட்டியும், மத்திய அரசினுடைய ஆட்சி செய்யும் அதிகாரம் — நாடாளு மன்றத்தின் சட்டமியற்றும் அதிகாரத்தை ஒட்டியும் பொதுவாக வரையறுக்கப்படுகின்றன.

இதனைத்தான் நமது அரசமைப்புச் சட்டத்தின் 162-ஆம் சட்ட விதி "மாநில அரசின் நிர்வாக அதிகாரம், அதனுடைய சட்டமியற்றும் அதிகாரத்துடன் இணைந்த அளவினைக் கொண்டதாகும்."

எனக் கூறுகிறது.

> "Subject to the provisions of Constitution, The executive power of a State shall extend to matters with respect to which the Legislature of the State has power to make laws."
>
> — Article - 162.

### மாநில நிர்வாக அதிகாரங்களை ஒடுக்கும் சில மத்திய முறைகள்

சென்ற அத்தியாயங்களில் மத்திய - மாநில அரசுகளுடைய சட்டமியற்றும் அதிகாரங்களைத் தொகுத்து ஆய்வு செய்தோம். மாநிலத்தின் சட்டமியற்றுத் துறை அதிகாரங்கள் எவை

யெவையோ, அவைகளை அமுல் படுத்தும் அதிகாரங்களே மாநிலத்தின் ஆட்சி செய்யும் அதிகாரங்களும் (நிர்வாக அதிகாரங்கள்) ஆகும்.

ஆகவே, மாநிலத்தின் எந்தெந்த சட்டமியற்றும் அதிகாரங்கள் மத்திய அரசால் கட்டுப்பாடு செய்யப்படுகிறதோ, அந்த வகை அதிகார இனங்களிலெல்லாம் மாநிலத்தின் நிர்வாக அதிகாரங்களும் தானாகவே மத்திய அரசால் கட்டுப்பாடு செய்யப்பட்டு விடுகின்றன.

இப்படிக் கட்டுப்படுத்தப்பட்ட - நெருக்கப்பட்ட - சுருக்கப்பட்ட - மாநிலத்தின் நிர்வாக அதிகாரங்கள், மத்திய அரசால் இன்னும் வேறு வகைகளிலும் குறுக்கப்படுகின்றன. மாநிலத்தின் ஆட்சி அதிகாரங்களை [நிர்வாக அதிகாரங்களை] மேலும் அடிமைப் படுத்தக் கூடிய, வெளிப்படையான பல சட்டவிதிகளும் நமது அரசமைப்புச் சட்டத்தில் செய்து வைக்கப்பட்டுள்ளன.

அவையாவன :—

1. மாநில அரசுகளுக்கு, மத்திய அரசு ஒழுங்கு முறைக் கட்டளைகளைப் (Directions) பிறப்பிப்பதன் மூலம், மாநில அரசின் நிர்வாக அதிகாரங்கள் குலைக்கப்படுகின்றன.

2. மத்திய அரசினுடைய சில நிர்வாகப் பணிகளை, மாநில அரசுகள் நிறைவேற்றித் தர வேண்டுமெனக் கட்டாயப் படுத்தும் ஒப்படைப்பு விதிகளை (Entrusting Functions) மாநில அரசுகளின் மேல் குடியரசுத் தலைவர் விதிப்பதின் மூலம் மாநில நிர்வாக அதிகாரங்கள் மறைமுகமாகச் சுண்டியடக்கப்படுகின்றன.

3. அகில இந்திய ஊழியங்களின் (All India Services) மூலமாகவும் மத்திய அரசு, மாநில அரசாட்சியினை அடிமைப்படுத்துகிறது.

4. மாநில ஆளுநர்கள் மூலமாக மத்திய அரசு, மாநில நிர்வாகத்தை ஆட்டிப் படைக்கின்றது.

5. இவையனைத்தும் சாதாரணக் காலங்களில் மத்திய அரசால் செய்யப்படும் அடக்கு முறையெனில், குடியரசுத் தலைவ

ரால் ''நெருக்கடி நிலை'' என அறிவிக்கப்படும் காலங்களில் மாநில நிர்வாகமே கூட மத்திய அரசிடம் சென்று விடுகின்றது.

ஆளுநர்கள் பற்றியும், 'நெருக்கடி நிலை' பற்றியும் தனித் தனி அத்தியாயங்களில் இதனை அடுத்து ஆய்வு செய்யப்பட்டுள்ளன. எனவே, மாநிலத் தன்னாட்சி யுரிமையை அடிமை கொள்ளக் கூடிய மத்திய அரசின் நிர்வாக ஒழுங்கு முறைக் கட்டளைகளைப் பற்றியும் மத்திய அரசின் நிர்வாகப் பணிகளை மாநிலங்களின் மேல் திணிப்பதன் மூலம் மாநிலங்களை ஆட்கொள்ளும் சட்டவிதிகளைப் பற்றியும், அனைத்திந்திய ஊழியங்களின் மூலமாக மாநில நிர்வாகம் மத்திய அரசிற்குக் கட்டுப்பட்டு விடும் புதிய முறை பற்றியும் மட்டும் இவண் ஆய்வோம்.

## I
## மத்திய அரசு - கட்டளையிடும் ஆண்டான்

மத்திய – மாநில நிர்வாக உறவுகளைப் பற்றி நமது அரசமைப்புச் சட்டம் 11–ஆம் பகுதியின் இரண்டாம் அத்தியாயம் பேசுகிறது. அந்த இயலில் வரும் சட்டவிதிகளும் வேறு பல சட்டவிதிகளும் மாநிலங்களின் ஆட்சி அதிகாரங்களை மத்திய அரசு வரையறைப் படுத்துவதற்குரிய வழி வகையைச் செய்கின்றன.

அவையாவன :—

சட்டவிதிகள் 256, 257, 339 ( 2 ), 344 (6), 350-A, 353(a), 356, 360 (3) மற்றும் 365 ஆகியவை, மாநில அரசுகளின் மேல் மத்திய அரசு பிறப்பிக்கும் நிர்வாக நெறிமுறைக் கட்டளைகளைப் பற்றிப் பேசுகின்றன.

(i) ஒரு மாநில அரசு – அதனுடைய ஆட்சி அதிகாரத்தை எவ்வகையில் செயல்படுத்த வேண்டு மென்பதைப் பற்றிச் சட்டவிதி 256–இன் வாசகம் திட்ட வட்டமாகக் கூறுகிறது.

ஒரு மாநிலத்திற்குப் பொருத்த முடைய மத்தியச் சட்டங்களுக்கும், நாடாளு மன்றத்தால் இயற்றப்படும் மற்ற சட்டங்களுக்கும் எவ் வகையிலும் குந்தகம் ஏற்படாத வகையில் பணிவிணக்கப் போக்கில்[Ensuring Compliance]மாநிலத்தின் நிர்வாக அதிகாரங்கள் மாநிலங்களால் கையாளப்பட வேண்டும். மேற்சொன்ன

வகையில் மாநிலங்கள் தனது ஆட்சி அதிகாரங்களைச் செயற் படுத்துவதற்குரிய பல நெறிமுறைக் கட்டளைகளை, தேவையான போது மத்திய அரசு மாநில அரசுகளின் மேல் பிறப்பிக்கலாம். மத்திய அரசின் பொதுவான பேரதிகாரக் கூறுகளை எல்லாம் உள்ளடக்கிய இச் சட்டவிதி மாநில அரசுகளின் மேல் எந்த வகைக் கட்டளைகளை வேண்டுமானாலும் மத்திய அரசு விதிப் பதற்கு வகை செய்கிறது.

(ii) 257-ஆம் சட்டவிதி, மத்திய அரசின் நிர்வாக அதி காரங்களுக்கு (ஆட்சிக்கு)க் குந்தகம் நேராமலும் – தடையினை ஏற்படுத்தாமலும் மத்திய அரசின் ஆட்சி அதிகாரத்திற்குப் பணிவிணக்கமாய், மாநில அரசுகளின் நிர்வாக அதிகாரங்கள் நடைமுறைப் படுத்தப்பட வேண்டும் எனக் கூறுகின்றது. மேலும் மத்திய அரசின் நிர்வாக அதிகாரத்திற்கு இடரேதும் விளையாத வகையில் மாநில நிர்வாக அதிகாரங்கள் ஒழுங்காகச் செயல் படுத்துவதற்குரிய எல்லா நெறிமுறைக் கட்டளைகளை யும் மத்திய அரசு மாநிலங்களின் மீது விதிக்கலாம் எனவும் அது தெளிவாக்குகின்றது.

(iii) ''இராணுவ முக்கியத்துவம்''வாய்ந்ததெனவும்(Military Importance) அல்லது ''தேசிய முக்கியத்துவம்'' (National Importance) வாய்ந்ததெனவும் கருதப்படுகிற செய்தித் தொடர்பு களை (Means of Communication) அமைப்பதற்கும் அவைகளைப் பேணிக்காப்பதற்கும் தேவையான ஆணைகளை மத்திய அரசு மாநிலங்களின் மேல் விதிக்கலாம்.

(iv) ஒரு மாநில எல்லைக்குள்ளிருக்கும் இருப்புப் பாதை களைப் பாதுகாப்பதற்குரிய எல்லா நடவடிக்கைகளை எடுப்பதற் கான நெறிமுறைக் கட்டளைகளையும் மாநிலத்தின் மீது மத்திய அரசு விதிக்கலாம்.

(v) நிலப்படை, கடற்படை, ஆகாயப்படை ஆகியவை களைச் சார்ந்த செய்தித் தொடர்புகளை அமைப்பதற்கும் அவை களைப் பேணிக்காப்பதற்கும் தேவையான கட்டளைகளை மாநில அரசுகளின் மீது மத்திய அரசு பிறப்பிக்கலாம்.

(vi) தேசிய நீர்வழித் துறை (National Waterways) அல்லது தேசியப் பெரு வழித்துறை (National Highways) ஆகியவற்றின்

மீது மத்திய அரசு செய்யும் நிர்வாகத்தை அனுசரித்து, அதற்குரிய நெறிமுறைக் கட்டளைகளை மாநில அரசுகளின் மீது மத்திய அரசு பிறப்பிக்கலாம்.

**மாநிலத்தின் நிர்வாகப் பொருள்-மத்திய அரசிற்குச் செல்கிறது?**

நாட்டினுடைய பொது நலனுக்காக இவ்வகைக் கட்டளைகளை மாநில அரசுகளின் மீது, மத்திய அரசு விதிப்பது பொருத்தமானது தானே? இதில் மாநில சுயாட்சியை நெருக்கிச் சுருக்கும் மத்திய அரசின் உள்நோக்கம் ஏதும் இருப்பதாகத் தெரியவில்லையே? என்ற ஓர் எண்ணம் இயல்பாகவே நம் மனத்தினுள் எழும்.

ஆனால், சட்ட நுணுக்கங்களை வைத்து இந்த இரு விதிகளையும் (256, 257) ஆய்ந்து பார்த்தால் – மாநிலப் பட்டியலில் அளிக்கப் பட்டதும் மாநிலத்திற்கே உரித்தானதுமான பல அதிகார இனங்களில் மாநில அரசு செய்யும் நிர்வாகத்தை - மத்திய அரசிற்குரிய அதிகார இனங்களுக்குத் தானாகவே இந்த இரண்டு விதிகளும் அடி பணிய வைக்கின்றன - என்ற பேருண்மை விளங்கும்.

''காவல் துறை'' (இருப்புப் பாதையின் காவல் துறை உட்பட) என்ற இனம், மாநிலத்தின் நிர்வாக அதிகாரத்திற்குட்பட்டது. ஆனால் ''இருப்புப் பாதை'' என்பது மத்திய அரசின் ஓர் அதிகாரப் பொருளாகும். இருப்புப் பாதையைப் பாதுகாக்க வேண்டிய ஒரு பொறுப்பு,மேற்சொன்ன 257–ஆம் சட்ட விதியில் மாநிலக் காவல் துறையினர் தலைமீது விழுகின்றது. இதில் விந்தைக் கூறு என்னவெனில், இருப்புப் பாதையைக் ''காப்பதற்குரிய கடமை'' மட்டும் மாநில அரசிற்குண்டு; ஆனால் அதை எவ்வகையில் காக்கவேண்டும்; அதற்குரிய நடவடிக்கைகள் என்னென்ன என்பனவற்றைத்''தீர்மானிக்கும் உரிமை'' மாநிலங்களுக்கு இல்லை. அவை மத்திய அரசின் கட்டளைகளிலிருந்தே பெறப்பட வேண்டும்.

எனவே, அரசமைப்புச் சட்டம் மாநிலக் காவல் துறையை மாநில அரசுக்கே முழுமையாக உரிமையாக்கினாலும், அது மத்திய அரசு விதிக்கும் கட்டளைகளை நிறைவேற்றித் தீரவேண்டிய கட்டாயத்திற்கு ஆட்படுத்தப்படுவதால், மாநில அரசின் காவல்துறை மத்திய அரசின் சேவகர்களாக இச்சட்டவிதி மூலம் மாறிவிடுகிறதல்லவா?

இருப்புப்பாதைப் பாதுகாப்பிலாவது மத்திய அரசும் மாநில அரசும், ஓரளவிற்கு சம பங்கைப் பெறுகின்றன. ஆனால் "செய்தித் தொடர்புகளைப்" பற்றிய மாநில அதிகாரம் முழுவதும் இச்சட்டவிதி மூலமாக மத்திய அரசிற்கே திரும்பிவிடும் விந்தையை நாம் காண்கிறோம். மத்திய — மாநிலப் பட்டியல்களில் பாகுபாடு செய்யப்பட்ட அதிகாரங்களின்படி, நாடாளுமன்றத்தால், "தேசிய முக்கியத்துவம் வாய்ந்தது" என அறிவிக்கப்படக் கூடிய "பெருவழித் துறைகள்" மற்றும் "நீர் வழித் துறைகள்" மட்டுமே, மத்திய அரசின் பொறுப்பிற்குள் வருகின்றன. மற்ற பெருவழித்துறையும் நீர் வழித்துறையும் மாநிலங்களுக்கே உரித்தாக்கப்படுகின்றன.

ஆனால் சட்டவிதி 257-இன்படி, எந்த ஒரு செய்தித் தொடர்பையும் இராணுவ முக்கியத்துவம் வாய்ந்தது அல்லது தேசிய முக்கியத்துவம் வாய்ந்தது என்று மத்திய அரசால் (மத்திய நிர்வாகம்) கருதப்பட்டால், அவையெல்லாம் மத்திய அரசிற்குப் போய் விடுகின்றன. அவைகளை அமைப்பதற்கும் பேணிக் காப்பதற்குமுள்ள பல நிர்வாகக் கட்டளைகளை மத்திய அரசு மாநிலங்களின் மேல் விதிக்கும்; அவைகளை மாநிலங்களும் சிரமேற் கொண்டொழுக வேண்டும்.

அஃதாவது மத்திய அமைச்சரவையால் "தேசிய முக்கியத்துவம் வாய்ந்தது" என்று சில செய்தித் தொடர்புகள் கருதப்பட்டாலே போதுமானது. அவைகளை அமைக்கவும் பேணிக் காக்கவுமுள்ள உரிமைகளை, மாநில அரசுகள் தங்கள் அதிகார வரம்பெல்லையிலிருந்து இழந்து விடுகின்றன. அவை, தேசிய முக்கியத்துவம் வாய்ந்ததென நாடாளுமன்றத்தால் அறிவிக்கப் படத் தேவை யில்லை.

எனவே, மத்திய அமைச்சரவை மனது வைத்தால், செய்தித் தொடர்பு சார்ந்த மாநிலங்களிலுள்ள எந்த வகைப் பெருவழி, நீர் வழித் துறைகளையும் தேசிய முக்கியத்துவம் வாய்ந்தது எனச் சாற்றி, மத்திய அரசின் நிர்வாக எல்லைக்குள் அவற்றைக் கொண்டு வந்து சேர்த்துவிட முடிகிறதல்லவா?

இவை தவிர, எந்த வகை நிர்வாகக் கட்டளையை வேண்டுமானாலும் மாநில சுயாட்சியை ஒடுக்கும் வகையில் மத்திய அரசு வெகு எளிமையாக மாநிலங்களின் மேல் பிறப்பிக்கலாம். அக்கட்டளைகளின் மூலமாக மாநில அரசுகளை வெறும் பொம்மைச் சர்க்கார்களாகவும் ஆக்கி விடலாம்.

அன்றைய நாட்களில் ஆங்கில ஆதிபத்தியத்தின் வசதிக்காக, ''1935-ஆம் ஆண்டில் இந்திய அரசுச் சட்டத்தில்'' செய்யப்பட்ட 122-ஆவது மற்றும் 126-ஆவது விதிகளையே, நமது அரசமைப்புச் சட்டத்தின் 256 மற்றும் 257 என்ற மேற்சொன்ன சட்டவிதிகளாக அப்படியே அவற்றின் சொற்கள்கூட மாருமல்—வைத்துக் கொள்ளப்பட்டன. உலகத்திலிருக்கும் எந்தவொரு கூட்டாட்சி அரசமைப்புச் சட்டத்திலும் மத்திய அரசு மாநிலங்கள் மேல் கட்டளைகளை விதிக்கும் இவை போன்ற கடுமையான சட்டவிதிகள் கிடையாது. இது மாநில சுயாட்சித் தத்துவத்திற்கும் கூட்டாட்சிக் கொள்கைகளுக்கும் முற்றிலும் முரணுன ஏற்பாடாகும்.

பழங்குடி மக்கள் பற்றிய மத்தியக் கட்டளைகள்

பழங்குடி மக்களுக்குரிய திட்டங்களை மாநிலஅரசுகள் வகுத்து அவற்றைச் செயல்படுத்துவதை, சாதாரணமாக அன்ருட நிகழ்ச்சிகளாக நாம் காண்கிருேம். ஒவ்வொரு மாநிலத்திலுள்ள பழங்குடி மக்களும் ஒவ்வொரு வகையில் சமுதாயத்தில் பிற்படுத்தப்பட்டுள்ளவர்களாக உள்ளனர். மாநிலத்திற்கு மாநிலம் பழங்குடி மக்களின் நிலையும் தன்மையும் மாறுபடுகின்றன. சான்ருக, தமிழகத்தின் நீலகிரி மலைப்பகுதித் தோடர்களுக்கும், மத்தியப் பிரதேசப் பழங்குடி மக்களுக்கும் பழக்க வழக்கங்களில், சமுதாய நெறிகளில், பொருளாதாரப் பண்பில், பல வேறுபாடுகள் உள்ளன. அதுபோலவே அசாம் காடுகளின் பழங்குடி மக்கள், மற்ற மாநிலப் பகுதிகளின் பழங்குடிச் சாதியினருக்கு முற்றிலும் மாறுபட்டவர்களா யுள்ளனர். ஒவ்வொரு மாநில அரசும் அதனதன் பாணியில் அந்தந்தப் பழங்குடி மக்களின் நிலைமைகளுக் கேற்ற வகையில் அவர்களை முன்னேற்றுவதற்குரிய அணுகுமுறைகளைக் கொண்டுள்ளன. அவர்கள் பற்றிய நேரடி அனுபவமும் மாநில அரசுகளுக்கே கிடைக்கின்றன. ஆனுல் அந்த மாநில உரிமையைக் கூட மத்திய அரசு விட்டு வைக்க வில்லை.

சட்டவிதி 339 (2)-இன் படி, மாநிலங்களில் வதியும் பழங்குடி மக்களின் நலன் கருதிய திட்டங்களை உருவாக்கவும், அமுல்படுத்தவும், தேவையான ஆணைகளை யெல்லாம் மத்திய அரசு மாநிலங்களுக்குப் பிறப்பிக்கலாம்

## மொழிச் சிறுபான்மையர் பற்றிய மத்தியக் கட்டளைகள்

ஒவ்வொரு மாநிலத்திலும் அந்த வட்டார மொழியில்லாத வேறு மொழி பேசும், சிறுபான்மை மக்கள் ( Minorities ) உள்ளனர். தமிழகத்தில் தெலுங்கு பேசும் சிறுபான்மையினரும் கர்நாடகத்தில் தமிழ் பேசும் சிறுபான்மையினரும் வாழ்கின்றனர். அவர்கள் தாய்மொழிக்குக் குந்தகம் நேராத மொழித் திட்டங்களை அந்தந்த மாநிலங்கள் வகுக்கின்றன. ஆனால் இந்தச் சிறு நிர்வாக ஏற்பாட்டிலும் கூட, மத்திய அரசு மாநிலங்களை நம்பத் தயாராக இல்லை. மொழிச் சிறுபான்மையினரைச் சார்ந்த குழந்தைகளின் ஆரம்பக் கல்வியை அவர்கள் தாய் மொழியிலேயே கற்றுத் தர வேண்டுமென்ற கட்டளைகளை மாநில அரசுகளின் மேல் மத்திய அரசு பிறப்பிக்கலாம் (சட்ட விதி 350 A).

## நெருக்கடி நிலையில் மத்தியக் கட்டளைகள்

மாநிலங்களில், "நெருக்கடி நிலை" ( State Emergency ) ஏற்பட்டு விட்டது என்று இந்தியக் குடியரசுத் தலைவர் அறிவிக்கலாம். அப்போது நமது அரசமைப்புச் சட்டத்தால் அளிக்கப் பட்டிருக்கும் "கேடு கெட்ட" மாநில சுயாட்சியும் கூட மத்திய அரசால் முழுமையாகப் பறிக்கப்பட்டு விடும். மாநில நிர்வாகத்தை எப்படி நடத்துவது என்பதைப் பற்றிய சகல கட்டளைகளையும் சட்டவிதி 353 (a)-இன்படி மாநிலங்களுக்கு மத்திய அரசு விதிக்கலாம். இந்தப் பகுதியின் வேறு அத்தியாயங்களில் "நெருக்கடி நிலை" பற்றித் தனியாக விரிவாக ஆராயப்பட்டுள்ளது.

சட்டவிதி 360 (3)-இன்படி, மாநிலங்களில் "பொருளாதார நெருக்கடிநிலை" (Financial Emergency) ஏற்பட்டு விட்டதெனக் குடியரசுத் தலைவரால் அறிவிக்கப்பட்டால், குறிப்பிட்ட சில பொருளாதார மற்றும் நிதி வழிமுறைகளை மட்டும் மாநிலங்கள் நடைமுறைப் படுத்த வேண்டும் என்று மத்திய நிர்வாகம் ஆணையிடலாம். மாநில அரசினுடைய ஊழியர்களின் சம்பளம், படி முதலியவைகளைக் குறைக்க வேண்டுமென்ற நேரடியான கட்டளைகளையும் மாநிலங்களின் மேல் மத்திய அரசு விதிக்கலாம்.

மொழிக் கட்டளை

சட்டவிதி 344 (6)-இன்படி, ஆட்சி மொழி பற்றிய நாடாளு மன்றக் குழுவின் அறிக்கையின் [Parliamentary Committee for Official Language] "பொது மொழி" பற்றிய கட்டளைகளையும் மத்திய அரசு மாநிலங்களின் மேல் திணிக்கலாம்.

## II

## மாநிலங்களைக் கொல்லும் மத்திய அரசின் கொலைவாள்

மேற்சொன்ன வகைகளில், மத்திய அரசால் இடப்படும் கட்டளைகளை மாநில அரசுகள் ஏற்காமல் விட்டு விட்டாலோ அல்லது அவைகளை அமுல் செய்ய முடியாது என்று மறுதளித் தாலோ, மத்திய அரசு என்ன செய்துவிடும்?

நமது மத்திய அரசு வேறொன்றும் செய்துவிடாது. அப்படிப் பட்ட மாநில நிர்வாகத்தையே கலைத்து விடும் - அவ்வளவு தான். ஒரு வேளை மத்திய அரசு பெரிய மனது வைத்துத் தன் சொற்கேளாத மாநில அரசைக் கலைக்கும் அளவிற்குத் தண்டனையைக் கொடுக்க வேண்டாம் எனக் கருதினால், நமது அரசமைப்புச் சட்டவிதிகளின் நுணுக்கங்களைப் பயன்படுத்தி, மாநில அமைச்சர்களைத் தனது அலுவலக எடுபிடி ஆட்களாக (பியூன்) மாற்றி விடலாம்.

மத்திய அரசு விதிக்கும் நிர்வாக நெறிமுறைக் கட்டளை களுக்கு மாநில அரசு அடி பணிய மறுத்து, அவற்றை அமுல் படுத்தத் தவறினால், அதற்குரிய தண்டனை நடவடிக்கைகளை எடுப்பதற்கான சட்ட வலுவை (Sanction) 365-ஆம் சட்டவிதி, குடியரசுத் தலைவருக்கு வழங்குகிறது.

அரசியலமைப்புச் சட்டவிதிகளின்படி ஒரு மாநில அரசு நடைபெற முடியாத சூழ்நிலை உருவாகி விட்டதென்ற முடி விற்குக் குடியரசுத் தலைவர் உடனே வருவார். ஏற்கனவே முன்னத்தியாயத்தில் குறிப்பிட்டதைப்போல், "குடியரசுத் தலைவரின் முடிவு" என்பது உண்மையில் மத்திய அமைச்ச ரவையின் முடிவாகும். எனவே, அரசமைப்புச் சட்டவிதிகளின் படி மாநில அரசு இயங்க முடியாதென்ற முடிவுக்கு மத்திய அமைச்சரவை வந்தவுடன், சட்டவிதி 356-இன் துணைக்

கொண்டு அந்த மாநில அரசினுடைய எல்லா அதிகாரங்களையும் குடியரசுத் தலைவரே(உண்மையில் மத்திய அமைச்சரவை) ஏற்றுக் கொண்டு, அந்த மாநில அரசாங்கத்தைத் தானே கைப்பற்றிக் கொள்வார்.

அதாவது, குடியரசுத் தலைவர் ஜனநாயக முறைப்படி, தேர்ந் தெடுக்கப்பட்ட மக்கள் பிரதிநிதிகளைக் கொண்டு இயங்கும் அந்த மாநிலச் சட்ட மன்றத்தைக் கூடக் கலைக்கலாம்; அமைச்சரவையைக் கவிழ்க்கலாம்; மாநில அரசுப் பணிகள் அவ்வளவையும் குடியரசுத் தலைவரே ஆளுநர் மூலமாக ஏற்றுக் கொள்ளலாம்.

ஒரு மாநில அரசின் மேல் மத்திய அரசு மேற்சொன்ன ஆணைகளை விதிப்பதற்கு ஒரே ஓர் அடிப்படையான காரண மிருந்தாலே போதுமானது. அதாவது மத்திய அரசு, கட்டளை களை விதிப்பதற்குத் தேவையான ''சூழ்நிலை திருப்திகரமா யுள்ளது''என மத்திய அரசு திருப்தியடைய வேண்டும்,அவ்வளவு தான். மத்திய அரசு அப்படித் ''திருப்தியடைந்தால்'' பல நிர்வாகக் கட்டளைகளை மாநிலத்தின் மேல் விதிக்கலாம். அந்தக் கட்டளைகள் அவசிய மற்றவையாகவும் இருக்கலாம். மாநில மக்களின் நலன்களுக்கு மாறானவை யாகவும் இருக்கலாம்; அரசமைப்புச் சட்ட நோக்கங்களுக்கும் – கொள்கைகளுக்கும் – முரண்பட்டதாகக் கூட இருக்கலாம். இருப்பினும் மத்திய அரசு அக்கட்டளைகளை மாநிலங்களின் மேல் விதித்து அதன்படி நடக்க வைக்கலாம்.

ஆனால் அதனை இந்தியத் தலைமை நீதிமன்றம் முதல் வேறு எந்த ஓர் அரசமைப்பு நிறுவனமும் சரியா, தவறா என்று பரிசீலிக்க முடியாது.

கொத்தடிமைகளைப் போன்று மாநிலங்கள் அக் கட்டளை களைச் சிரமேற் கொண்டு நிறைவேற்றித் தீர வேண்டும். வேறு வழி கிடையாது. இல்லையெனில் குடியரசுத் தலைவரின் முடிவு என்ற பெயரால் மத்திய அமைச்சரவை, மாநில அரசைக் கலைப்பதற்கான முடிவை மேற்கொண்டு, மாநில அரசின் எல்லா அதிகாரங்களையும் பணிகளையும் தானே ஏற்றுக் கொள்ளும். எனவே, மாநிலங்கள் மத்திய அரசிடும் கட்டளைகளை நிறைவேற்ற முடியாது என்ற முடிவுக்கு வந்தால்–மாநில அரசையே இழந்து விடும் முடிவுக்கும் வந்துவிட வேண்டும்.

## மாற்றுத் தண்டனை

மாநிலங்கள், மத்தியக் கட்டளைகளுக்கு அடி பணிய மறுத்தால், அந்த மாநில அமைச்சரவை மீது மத்திய அரசு வேறொரு நடவடிக்கையினையும் எடுக்கலாம். அந்த மாநில அமைச்சர்களையே தனது பணியாளர்களாக ஆக்கி விடலாம். எப்படி ?

ஒரு மாநிலச் சட்ட மன்றம், மாநிலப் பட்டியல்படி சட்ட மியற்ற முடியாத ஓர் அதிகார இனத்தில், அந்த மாநில அரசு பணியாற்ற வேண்டுமென அந்த மாநில அதிகாரிகளுக்கு நாடாளுமன்றம் அதிகாரத்தை வழங்கலாம். நாடாளுமன்றத் தால் அப்படிக் கொடுக்கப்பட்ட அதிகாரங்களைச் செயல்படுத்து வதற்காக, பல கடமைகளையும் ஒழுங்குமுறைகளையும் அந்த மாநில அதிகாரிகளின் மீதும் மத்திய அரசு விதிக்கலாம். (சட்டவிதி 258 (2)-இன்படி). அதற்காக, மாநில அரசின் அனுமதியை மத்திய அரசு பெற வேண்டிய தில்லை [சட்டவிதி 154 (2) (b)].

> "ஒரு மாநிலத்தின் அமைச்சர்கள் அந்த மாநில ஆளுநருக்குக் கீழ்ப்படிதலுள்ள அதிகாரிகள் என நமது தலைமை நீதிமன்றம் ஒரு வழக்கில் தீர்ப்பளித்திருக்கிறது." 3

எனவே, ஒரு மாநிலத்திற்குரிய சட்டத்தை நாடாளுமன்றம் நிறைவேற்றும் போது அந்த மாநில அமைச்சர்களை அந்த மாநில ஆளுநருக்குக் கீழாகச் செயல்படும் அரசாங்க ஊழியர் கள் எனக் கொண்டு, மாநில அரசின் மற்ற அதிகாரிகளுக்கு வழங்கும் உரிமைகளையும் கடமைகளையும் அந்தச் சட்டம் மாநில அமைச்சர்களுக்கும் வழங்கி—மத்திய அரசின் கட்டளை களை மாநில அமைச்சர்கள் நிறைவேற்ற வேண்டும் என்று பணித்து-ஒரு மேலதிகார்ரி கீழதிகாரிக்கு உத்தரவு பிறப்பிப்பது போல் — மத்திய அரசும் மாநில அமைச்சர்களுக்கு உத்தரவு போடலாம்.

சட்டவிதி 258 (2) பிரிவை அடிப்படையாகக் கொண்டு மேற்சொன்ன வகையில் நாடாளுமன்றத்தில் ஒரு சட்டத்தை இயற்றி மாநில அமைச்சர்கள் மத்தியக் கட்டளைகளைக் கொண்ட சட்டத்திற்கு அடிபணிந்து நடக்க வேண்டும் என்று மாநில

---

3 1953- 2 - Supreme Court Reporter, Page 1188 (P 1210)

அமைச்சர்களின் மீது (அந்த அமைச்சர்கள் மாநில ஆளுநருக் குட்பட்ட அதிகாரிகள் என்ற முறையில்)மத்திய அரசு உத்தரவு களைப் போடலாம். மாநில அமைச்சர்கள் அதன்படி நடக்கா விடில், ஒரு மேலதிகாரி கீழதிகாரியின் மேல் தண்டனை நட வடிக்கைகளை மேற்கொள்வதைப் போல் மாநில அமைச்சர் களையும் மத்திய அரசு தண்டனைக்காட் படுத்தலாம்.

> அஃதாவது, ''மத்திய அமைச்சரவை மாநில அமைச்சர் களை, அடிமை அதிகாரிகளைப் போல் நடாத்தி அவர்களைத் தங்களிஷ்டப்படி கட்டளைகளை நிறைவேற்றித் தர வேண்டு மென்று நிர்ப்பந்தப்படுத்துவதற்கும் கூட நமது அரசமைப்புச் சட்டவிதிகளுடைய வியாக்கியானங்களில் இடம் இருக் கிறது''. 4

என மத்திய அரசின் சட்டத் துறைச் செயலாளர் ஆர்.எஸ்.கே. (R. S. Gae) அவர்கள் கருதுகிறுர்.

மாநிலங்களின் ஆட்சி அதிகாரங்களைச் சுருக்கக்கூடிய கட்டளைகளை மத்திய அரசு விதிப்பதற்கு வகை செய்யும் சட்ட விதிகளை அரசமைப்புச் சட்டத்திலிருந்து உடனடியாக நீக்கி விட வேண்டும் என டாக்டர். இராசமன்னுர் அவர்களும், திரு. கே. சந்தானம் போன்றவர்களும், இன்னும் பல அரசமைப்பு வல்லுனர்களும் கருத்துத் தெரிவிக்கிறுர்கள்.

மத்திய அரசிடம் இருக்கும் கட்டளை அதிகாரங்கள் — மாநில சுயாட்சியினைக் கொல்லுகின்ற (மத்திய அரசின்) கொலைவாள் என்றுல் அது மிகையாகாது.

சான்று:

1968–ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்களில், மத்திய அரசாங்க ஊழியர்கள், வேலை நிறுத்தம் செய்வதென அறிவித் தார்கள். மத்திய அரசு அந்த வேலை நிறுத்தத்தை முறியடிப் பதற்காக, ஓர் அவசரச் சட்டத்தைப் பிறப்பித்தது. அதன்படி, வேலை நிறுத்தம் செய்யும் மத்திய அரசின் ஊழியர்களைக் கைது செய்து, அவர்கள் மேல் சட்ட நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்ற கட்டளைகளை எல்லா மாநில அரசுகளுக்கும் மத்திய அரசு பிறப்பித்தது.

4 Mr. R. S. Gae, "Administrative Relations Between Union and State" in "The Union and The States" (1971) Page 308

கேரள மாநிலம், கம்யூனிஸ்டு அமைச்சரவையைக் கொண்டிருந்தது. மத்திய அரசின் ஊழியர் வேலை நிறுத்தத்திற்குக் கம்யூனிஸ்டுக் (மார்க்ஸிஸ்ட்) கட்சி ஆதரவளித்தது. எனவே, கேரள மாநில அரசு, மத்திய அரசின் ஊழியர்களைக் கைது செய்யாது காவலில் வைக்காமல் விட்டுவிடும் எனக் கருதிய மத்திய அரசு, அந்த மாநில அரசாங்கத்தைக் கலந்து கொள்ளாமல் தன்னிச்சைப் போக்கில் மத்திய ரிசர்வ் காவல் படையைக் கேரளாவிற்கு அனுப்பி வைத்தது. இதனால் ஆத்திரமடைந்த மாநில முதல்வர், நம்பூதிரிபாடு அவர்கள், ''மாநிலத்தின் சட்ட ஒழுங்கை, மாநில அரசே நிலை நிறுத்திக் கொள்ளும்; மத்திய அரசின் சொத்துக்களையும் பாதுகாக்கும்; அதற்கு மத்திய அரசின் ரிசர்வ்படை தேவையில்லை''எனவும் கூறினார். மேலும், வேலை நிறுத்தம் செய்யத் தூண்டிய மற்ற ஊழியர்களைக் கைது செய்யாமல் அவர்கள் மேல் சட்டப்படி நடவடிக்கை மட்டும் எடுக்கப்படும் எனவும் அவர் அறிவித்தார்.

ஆனால்,மத்திய அரசின் அவசரச் சட்டப்படி மாநில அரசுகள் அந்த ஊழியர்களைக் கைது செய்தே நடவடிக்கை எடுக்க வேண்டும். அந்தக் கட்டாயக் கட்டளைக்கு மாநில அரசுகள் ஆட்படுத்தப் பட்டிருந்தன.

''எப்படி நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டுமென்பதை முடிவு செய்யக் கூடிய உரிமை மாநில அரசுக்குத்தான் சேர்ந்தது'' என்பது கேரள முதலமைச்சரின் வாதம். ஆனால் மத்திய அரசால் கொடுக்கப்பட்ட தாக்கீதிற்கு மாநில அரசு அடிபணிய மறுத்து விட்டது என மத்திய அரசு கருதியது. சட்டவிதிகள் 365 மற்றும் 356-இன்படி,கேரள மாநில அரசைக் கலைப்பதற்குக் கூட மத்திய அரசு முனைந்தது. ஆனால் இறுதியில் அம் முயற்சி கைவிடப் பட்டது.

மாநிலத்தினுள் ஒரு சிறு குழப்பம் விளைந்தாலும் கூட அதற்குரிய காரணங்களைக் கூற வேண்டுமென்று, மத்திய அரசு, மாநில அரசைப் பணிக்கலாம்.அதற்கு மாநில அரசு மறுத்தால், சட்டவிதி 257 (1)-இன்படி மாநிலத்தின் அந்தக் குழப்பத்திற்குரிய சூழ்நிலையையும் காரணங்களையும் காட்டித் தீரவேண்டுமென்று கட்டாயப்படுத்தி மாநில அரசிற்குத் தாக்கீது அனுப்பலாம். அக் கட்டளைக்கும் மாநில அரசு அடிபணிய மறுத்தால், அரசமைப்புச் சட்டவிதிகளின்படி, அந்த மாநிலத்தின்

அரசாங்கம் நடைபெற முடியாத நிலையை அடைந்து விட்டது எனச் சாற்றி, அந்த மாநில அரசையே மத்திய அரசு கலைத்து விடலாம்.

மற்றக் கூட்டாட்சி நாடுகளின் அரசமைப்புக்களில், மத்திய அரசும், மாநிலங்களும் சம தகுதியுடனும் சம உரிமைகளுடனும் படைக்கப்பட்டிருக்கும். ஆனால் இந்தியக் கூட்டாட்சி (?) அரசமைப்பில் நிகரற்ற நமது மத்திய அரசு, கட்டளையிடும் ஆண்டானாகவும், நமது மாநில அரசுகளெல்லாம் மண்டியிட்டு ஏவல்புரியும் அடிமைகளாகவும் ஆக்கி வைக்கப்பட்டுள்ளன.

## III

## அகில இந்தியச் சேவைகளால்
## [ ALL INDIA SERVICES ]

### ஆட்கொள்ளப்படும் மாநில அரசுகள்

மாநிலங்களின் நிர்வாகத்தை மத்திய அரசு, தன் கட்டுக்குள் வைப்பதற்குரிய இன்னோர் ஏற்பாடே அகில இந்திய ஊழியங்கள் ( All India Services ). தற்போதுள்ள "இந்தியன் அட்மினிஷ்ட்டிரேட்டிவ் சர்வீஸ்" (I. A. S.) அதிகாரிகளும், "இந்தியன் போலீஸ் சர்வீஸ்" (I. P. S.) அதிகாரிகளும் அகில இந்திய ஊழியர்கள் ஆவர். இவ்வகை அதிகாரிகள் மாநிலங்களின் மிக உயர்ந்த நிர்வாக அதிகாரிகளாகவும், காவல்துறை அதிகாரிகளாகவும் பணியாற்றுகின்றனர். இவர்கள் மாநில நிர்வாக அதிகாரத்திற்குக் கட்டுப்பட்டவர்களானாலும் இவர்களைத் தேர்ந்தெடுப்பதும், அவர்கள் பணிக்குரிய கட்டளைகள் மற்றும் நடைமுறை விதிகளை உண்டாக்குவதும், அவர்களை ஊழியங்களிலிருந்து நீக்குவதும் மத்திய அரசின் அதிகாரத்திற்குட் பட்டதாகும். எனவே, மாநிலங்களில் பணியாற்றும் இந்த அதிகாரிகளில் பலர் மாநில அரசுக்கு முழு ஒத்துழைப்பையும் தாராமல் மத்திய அரசிற்குப் பொறுப்புள்ளவர்களாகவே இயங்கி வருவதை நாம் இன்றும் காணலாம்.

அண்மையில் தலைமை நீதி மன்றத்தில் நடந்த இராயப்பா அவர்களின் வழக்கு, அகில இந்திய ஊழியங்களைச் சார்ந்த அதிகாரிகளைப் பற்றியும் அவர்கள் தன்மைகளைப் பற்றியும், அவர்கள் மாநிலங்களுக்கு அடங்காமல் இருத்தல் பற்றியும்

தெளிவாக விளக்குகிறது. எனவே மாநிலங்களை மறைமுகமாகக் கண்காணிக்கவும் அதன் ஆட்சி அதிகாரங்களில் மறைந்திருந்து தலையிடவும், மத்திய அரசிற்கு அகில இந்திய ஊழியங்களைச் சார்ந்த சிலர் முகவர்களாக இயங்குகின்றனர்.

அகில இந்தியச் சேவைகள் - சில குறிப்புகள்

ஆதியில், ஐ. சி. எஸ். என்கிற ''இந்தியன் சிவில் சர்வீஸ்'' (Indian Civil Service) ஆங்கில அரசால் ஏற்படுத்தப் பட்டது. மத்திய அரசாங்கத்திலும் மாநில அரசாங்கங்களிலும் இவர்கள் பதவி வகித்தனர். மாவட்ட மட்டத்தில் 'ஐ. சி. எஸ்.' அதிகாரிகள் நிர்வாக அதிகாரிகளாக (கலெக்டர்கள்) ஆக்கப் பட்டனர்.

பின்னர், சட்ட ஒழுங்கைக் காப்பாற்ற இந்தியக் காவல் துறை (I. P.) அனைத்திந்திய ஊழியமாகத் தனியாக உருவாக்கப் பட்டது. வைஸ்ராய் கர்சான் அவர்கள் காலத்தில், ''இந்தியப் பொறியியல் வல்லுநர்கள் சேவை'', ''இந்திய வேளாண்மைச் சேவை,'' ''இந்திய வனச் சேவை'' ஆகியவை போன்ற பல அகில இந்திய ஊழியங்கள் உருவாக்கப்பட்டன.* பின்னர் மாநில சுயாட்சிக் கொள்கை வளர வளர, அவை யாவும் மெல்ல மெல்லக் கைவிடப்பட்டன. 1924-ஆம் ஆண்டில் ''இந்தியக் காவல் சேவை'' (Indian Police) மற்றும் ''இந்திய நிர்வாகச் சேவை'' (Indian Civil Services) ஆகியவைகள் நீங்கலாக மற்ற எல்லா அனைத்திந்திய ஊழியங்களும் அழிக்கப் பட்டன.

இந்தியா விடுதலை பெற்ற காலத்தில் இந்திய நிர்வாகச் சேவையும் இந்தியக் காவல்துறையும் மட்டுமே எஞ்சி இருந்தன. நமது அரசமைப்புச் சட்டம் இந்த இரண்டு அகில இந்தியச் சேவைகளையும் அப்படியே வைத்துக் கொண்டது. பின்னர் ''I. C. S.'' மற்றும் ''I. P.'' என்ற பழைய அகில இந்தியச் சேவைகளும் ''இந்திய நிர்வாகச் சேவை'' (I.A.S.) எனவும், ''இந்தியக் காவல் சேவை'' (I. P. S.) எனவும் முறையே மாற்றியமைக்கப் பட்டன.

சட்டவிதி 312 (1)-இன்படி, நாடாளுமன்ற ராச்சிய சபையில் (மாநிலங்களின் அவை) ஆசராகும் மூன்றில் இரண்டு பங்கு உறுப்பினர்கள் வாக்களித்து, தீர்மானம் ஒன்றை நிறைவேற்றி

---

* பக்கங்கள் 166—168-இல் இவைபற்றி விளக்கம் காண்க.

னால், வேறு பல அகில இந்தியச் சேவைகளையும் மத்திய அரசு உருவாக்கலாம். அகில இந்தியச் சேவைகளைச் சார்ந்த அதிகாரிகளின் மேல் மாநில அரசுகள் மேலாண்மை செலுத்த முடியாதாகையால், மற்ற அகில இந்தியச் சேவைகளை மத்திய அரசு உருவாக்குவதை மாநிலங்கள் விரும்பவில்லை.

ஆனால், காங்கிரஸ் கட்சி, பல காலம் மத்திய அரசிலும் பல மாநிலங்களிலும் ஆளுங்கட்சியாய் இருந்த காரணத்தினாலும் அகில இந்தியத் தலைவர்களின் கட்டுக்குள் பல மாநிலக் காங்கிரஸ் முதலமைச்சர்கள் இயங்கி வந்ததாலும் ''ஐ. ஏ. எஸ்.'' மற்றும் ''ஐ. பி. எஸ்.'' ஆகியவை தவிர வேறு சில அகில இந்தியச் சேவைகளை அமைப்பதற்குக் காங்கிரஸ் கட்சி மட்டத்தில் கொள்கை வகுக்கப் பட்டது. 1961-ஆம் ஆண்டில் நடைபெற்ற முதலமைச்சர்கள் மாநாட்டில் ''அகில இந்தியப் பொறியியல்துறை'' (Indian Engineering Service) ''அகில இந்திய வனத்துறை'' (Indian Forest Service) ''அகில இந்திய சுகாதாரத்துறை'' (Indian Health Service) ஆகிய அகில இந்தியச் சேவைகளை அமைப்பதற்கு முடிவு செய்யப்பட்டது.

அந்த முடிவினை அனுசரித்து, அரசமைப்புச் சட்டவிதி 312 (1) - இன் கீழ், நாடாளுமன்ற ராச்சிய சபை ஒரு தீர்மானத்தையும் நிறைவேற்றியது. அத்தீர்மானத்திற் கேற்றபடி 1963-ஆம் ஆண்டில் ''அகில இந்திய ஊழியங்களின் சட்டம்-1951'' (All Indian Service Act 1951.) திருத்தமும் செய்யப் பட்டது.

''அகில இந்தியக் கல்விச் சேவை'' (All India Education Service) மற்றும் ''அகில இந்திய வேளாண்மைச் சேவை'' (All India Agricultural Service) ஆகிய இரண்டு பொது அகில இந்தியத் துறைகளையும் மத்திய அரசு ஏற்படுத்துவதற்குரிய ஒப்புதலைக் காங்கிரஸ் மாநில அரசுகள் அளித்தன. இந்த இரு அகில இந்தியச் சேவைகளை உருவாக்குவதற்குத் தேவையான தீர்மானமும் ராஜ்ய சபையில் நிறைவேறிவிட்டது. ஆனால், அதற்கிடையில் நாடாளுமன்றம் கலைக்கப்பட்டதால், இந்த இரு அகில இந்தியச் சேவைகளை உருவாக்குவதற்குத் தேவையான திருத்தச் சட்டத்தை உரிய காலத்தில் நாடாளுமன்றத்தால் நிறைவேற்ற முடியவில்லை. எனவே, அவை இரண்டும் இன்னும் அமுலுக்கு வரவில்லை,

இதற்கிடையில் மாநில சுயாட்சியில் மறைமுகமாகத் தலையிடக்கூடிய மேலும் சில அகில இந்தியச் சேவைகளை உருவாக்கக் கூடிய மத்திய அரசின் முயற்சியை மாநில அரசுகள் எதிர்த்தன. 1968-ஆம் ஆண்டில் தமிழகமும், அதன் பின்னர் கேரளமும் இன்னும் மற்ற மாநிலங்களும் அகில இந்தியச் சேவைகளை உருவாக்கும் திட்டத்தை எதிர்த்தன. எனவே, ''வேளாண்மைத் துறையிலும்'', ''கல்வித் துறையிலும்'' அகில இந்தியச் சேவைகளை உருவாக்கும் ஏற்பாட்டை மத்திய அரசு தற்போதைக்குக் கைவிட்டுள்ளது. ஆனால் எப்போது வேண்டுமானாலும் மத்திய அரசு இவைகளை உருவாக்கலாம்; மாநிலங்களுக்கு எதிராக அவைகளைப் பயன் படுத்தலாம்.

அகில இந்திய ஊழியங்களால் மாநிலங்களுக்கு ஏற்படும் இழப்பு என்ன?

மாநில அரசின் நிர்வாகத்தில் மிக முக்கியமான மூலக் கேந்திரங்களில் இந்த அகில இந்திய அதிகாரிகள் பணியாற்றுகின்றார்கள். ஆனால், அவர்களைத் தேர்ந்தெடுப்பதிலிருந்து—நியமனம் செய்வதுவரை—அவர்கள் பணியினுக்குரிய விதிகளை அமைப்பது முதல் அந்தந்த மாநிலங்களில் நிர்வாக அதிகாரிகளாகப் பிரித்து ஒதுக்குவது வரை—அவ்வளவையும் மத்திய அரசே மேற்கொள்கின்றது. மேலும் அவர்கள் மாநில அரசின் அதிகாரிகளானாலும் கூட அவர்கள் மேல் ஒழுங்குமுறை நடவடிக்கைகளையும் மற்ற நடவடிக்கைகளையும் அவர்கள் மேல் எடுக்கவும் தேவை ஏற்படின் அவர்களை அந்தப் பணிகளிலிருந்து நீக்கவும் மத்திய அரசுக்குத்தான் உரிமை உண்டு. எனவே, மாநில அரசுக் கொள்கைகளை அகில இந்திய அதிகாரிகள் உரிய முறையில் நிறைவேற்ற வேண்டிய பொறுப்பினைச் செவ்வனே செய்யாமல் மாநில அமைச்சரவையையும் மாநில நிர்வாகத்தையும் (மத்திய அரசின் தூண்டுதலால்) வெகு துச்சமாக மதிக்கும் போக்கினை அவ்வகை அதிகாரிகளில் பலர் பெற்றுள்ளனர்.

சில சான்றுகள்:—

(1) 1967-ஆம் ஆண்டில் மேற்கு வங்க மாநிலத்தில் ஐக்கிய முன்னணி ஆட்சிக்கு வந்தது. அப்போது இருந்த இன்ஸ்பெக்டர் ஜெனரல், ஒபனுர்த முகர்ஜி என்பவர் ஒரு

விவாத்திதற்குரிய அகில இந்திய அதிகாரியாய் மேற்கு வங்க மாநிலத்தில் பணியாற்றினர். மேற்கு வங்க இன்ஸ்பெக்டர் ஜெனரல் அவர்கள், மாநில அரசின் கொள்கைகளுக்கு மாருகப் பணியாற்றுகின்ருர் எனக் குறிப்பிட்டு மேற்கு வங்கச் சட்ட மன்றத்தில் பல உறுப்பினர்கள் பல முறை பல சான்றுகளைக் காட்டி விவாதித்துள்ளனர். அதற்குப் பின்னர் அமைந்த அரசிலும்கூட, அவரே இன்ஸ்பெக்டர் ஜெனரலாகப் பணியாற்றினர். மத்திய அரசோடு மறைமுகமாய்க் கைகோர்த்துக் கொண்டு, மேற்கு வங்க மாநிலத்தில் எதிர்க் கட்சி அரசாங்கத்தை வீழ்த்துவதற்காகப் பயன்பட்டார் என்ற மிகப் பெரிய குற்றச்சாட்டு பல முறை அவர்மேல் சாட்டப்பட்டது. ஆனல், மத்திய அரசால் நியமனம் செய்யப்பட்ட அந்த ஐ. பி. எஸ். அதிகாரி 31—3—1969 வரை இன்ஸ்பெக்டர் ஜெனரலாகப் பணியாற்றி விட்டுத்தான் ஓய்வு பெற்ருர். 1969—ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் நடந்த மேற்கு வங்கச் சட்டமன்ற இடைத்தேர்தலில் மீண்டும் காங்கிரஸ் அல்லாத அரசு, ஆட்சிப் பொறுப்பை ஏற்றது. அந்த இன்ஸ்பெக்டர் ஜெனரலைப் பதவியிலிருந்து இறக்குவதற்கு எவ்வளவு விரைவில் நடவடிக்கை எடுக்க முடியுமோ அவ்வளவு விரைவில் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று முதல் அமைச்சரவைக் கூட்டத்திலேயே முடிவு செய்யப்பட்டது. 5

(2) தமிழகத்தில் அரசுச் செயலாளராக இராயப்பா அவர்கள் பணியாற்றினர். இவர் ஓர் அகில இந்தியச் சேவையைச் சார்ந்த அதிகாரி. 1967–ஆம் ஆண்டில் திராவிட முன்னேற்றக் கழகம் தமிழகத்தில் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொண்டது. இராயப்பா அவர்கள் தமிழக அரசின் தலைமைச் செயலராக உயர்த்தப் பட்டார்.

1971–ஆம் ஆண்டில் சட்ட சபையைக் கலைத்துவிட்டு நாடாளு மன்றத் தேர்தலுடன் சட்ட மன்றங்களுக்கும் தேர்தலை நடத்த வேண்டுமென முதலமைச்சர் கலைஞர். கருணநிதி அவர்கள் ஆலோசனை கூறினர். அதன்படி முறையாக 1971–ஆம் ஆண்டில் தமிழகச் சட்ட மன்றம் கலைக்கப்பட்டுப் பொதுத் தேர்தலும் நடைபெற்றது. அதில் திராவிட முன்னேற்றக் கழகம்

---

5 By Mr. Alice Jacob, "Indian Federal System" in "The Union and the states" [1972], Foot Note P. 44

இனி ஆட்சியைக் கைப்பற்ற முடியாது எனக் கருதிய இராயப்பா அவர்கள் வெளிப்படையாகவே, காங்கிரஸ் கட்சியுடன் கூடிக் குலாவி, தேர்தலுக்குத் துணை நின்று முறை தவறி நடக்கலானார்; மறைமுகமாக அரசியலிலும் அவர் ஈடுபட்டார் எனவும் பொது வாகப் பேசப்பட்டது. ஆனால், 1971–ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் திராவிட முன்னேற்றக் கழகமே மீண்டும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டது; தமிழகத்தின் ஆட்சிப் பொறுப்பையும் கழகம் ஏற்றுக் கொண்டது.

இராயப்பா அவர்கள் வகித்து வந்த தலைமைச் செயலர் பதவியிலிருந்து அதற்கு இணையான மாநிலத் திட்டக் குழுவின் துணைத் தலைவராக அவர் மாற்றப்பட்டார். அந்தப் புதிய பொறுப்பினையும் அவர் ஏற்றுக் கொண்டு பணியாற்றினார். ஆனால், தன்னை மாநில அரசின் தலைமைச் செயலாளர் பதவியி லிருந்து, வேறு பதவிக்கு மாற்றிபதற்கு ''திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சார்ந்த முதலமைச்சரின் வஞ்சகமான உள் நோக்கம் தான் காரணம்''; ''ஆகவே அது செல்லாது'' என இந்தியத் தலைமை நீதிமன்றத்தில் இராயப்பா அவர்கள் தமிழக அரசையும் தமிழக முதல்வரையும் எதிர்வாதிகளாக்கி வழக்குத் தொடர்ந்தார். தமிழக முதல்வரின் மேல் பலவகைக் கீழ்த் தரமான குற்றச்சாட்டுக்களையும் தனது பிரமாண வாக்கு மூலத்தில் அவர் குறிப்பிட்டிருந்தார்.

ஐந்து நீதிபதிகள் கொண்ட தலைமை நீதி மன்றத்தின் பெஞ்சு [Bench] அவ்வழக்கை விசாரித்து 1973–ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் ''அந்த அதிகாரியின் குற்றச்சாட்டுக்கள் அத்தனையும் ஆதார மற்றவை'' எனவும் ''அவரை வேறு துறைக்கு மாற்றியதில் தமிழக அரசுக்கோ அல்லது தமிழக முதல்வருக்கோ உள்நோக்கம் எதுவும் இல்லை'' எனவும் தீர்ப்பளித்தது.

குடியரசு நாட்டின் நிர்வாகத்தில் பணிபுரியும் அதிகாரி கள், மக்களின் ஏவலாளர்கள் எனத் தம்மை நினைப்பதில்லை. குறிப்பாக அகில இந்தியச் சேவையைச் சார்ந்த அதிகாரிகள், மத்திய அரசிற்கு மட்டும் பணிய வேண்டியிருப்பதால், மாநில அரசை நிர்வகிப்பவர்களைப் பற்றியும் மக்கள் பிரதிநிதிகளைப் பற்றியும் பழைய ஆங்கில ஆதிக்கத்தின் அதிகார வர்க்கப் போக்கிலேயே விமர்சனம் செய்கின்றனர் என்பது கண்கூடு.

வாய்ப்பேற் பட்டால்,இராயப்பாவைப் போல மற்ற சிலர்,மாநில நலன்களுக்கெதிராகவே மாநில அரசுப் பணிகளைத் திசை திருப்பமாட்டார்கள் என்பதற்கு என்ன உத்தரவாதம் உள்ளது?

ஒரு கூட்டாட்சி நாட்டில் மாநில அரசுகளில் நிர்வாக அதிகாரிகளாகப் பணியாற்றுவதற்கு மத்திய அரசின் அதிகாரச் சேவைகளைச் சார்ந்த அதிகாரிகளை நியமனம் செய்யும் பழக்கம் கூட்டாட்சித் தத்துவத்திற்கே முரணானதாகும். ஆனால் இந்தியத் துணைக் கண்டத்தில் "அரசமைப்புச் சட்டத்திலும்" பின்னர் ஏற்பட்ட "அகில இந்தியச் சேவைகளின் சட்டத்திலும்" இந்த முறை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வருகின்றது.

27 ஆண்டுக் காலம் மாநிலங்களிலும் மத்திய அரசிலும் ஒரே அரசியல் கட்சியான காங்கிரஸ் கட்சி ஆட்சி செய்ததின் விளைவாக,கூட்டாட்சி அமைப்பு முறை நிலைகுலைந்து போயிற்று என்பதற்கும், கொடுக்கப்பட்ட சுருங்கிய மாநில சுயாட்சியும் மாநிலங்களின் கண்ணெதிரிலேயே களவாடப்பட்டு வருகிறது என்பதற்கும் முதலில் இருந்த இரண்டு அகில இந்தியச் சேவைகள் மெல்ல மெல்ல வளர்ந்து பின்னர் ஐந்தாகித்தற்போது ஏழாக உயர்த்தப்பட இருக்கும் கீழ் நிலை தெளிவாகச் சான்று பகர்கின்றது.

காங்கிரஸ் கட்சியின் மாநில முதல்வர்கள், குறுகிய கட்சிக் கண்ணோட்டத்துடன் – கொத்தடிமைகளைப் போல்–மாநிலங்களின் பல அதிகாரங்களை மத்திய அரசிற்குத் தாரை வார்த்துக் கொடுத்து விட்டதன் விளைவுதான், இன்றைய மாநிலத் தன்னாட்சியின் இழிநிலைக்கு முதற் காரணமாகும். ஆனால் மாநிலங்களால் விட்டுக் கொடுக்கப்பட்ட உரிமைகளை மத்திய அரசிடமிருந்து இனித் திரும்பப் பெற இயலாது. மாநில உரிமைகளை மத்திய அரசிற்கு அடகு வைத்த காங்கிரஸ் கட்சி-மாநிலத்தின் ஆளும் பொறுப்பிலிருந்து கீழே இறக்கப்பட்டாலும் - அல்லது மாநில சுயாட்சியினைக் கோரும் மற்றக் கட்சிகளுக்கு மாநிலத்தினை ஆளும் வாய்ப்பேற்பட்டாலும், இழந்துவிட்ட மாநில அதிகார உரிமைகள் பறிபோனது போனதுதான்; அவற்றை இனி எப்போதும் திரும்பப் பெற முடியாத அரசியல் மோசடியைச் செய்த "பெருமையினை" அகில இந்தியக் காங்கிரஸ் கட்சி "இந்திய ஒற்றுமை" என்ற பெயரால் தேடிக் கொண்டது.



# 9. மாநில ஆளுநர் - மத்திய அரசின் கங்காணி

## — நியமனமும் நடவடிக்கைகளும் —

"மாநில அரசுகள், மத்திய அரசிற்குக் கீழ்ப்படிந்து செயல்பட வேண்டுவது மிக மிகத் தேவையானது. எனவே, மாநில அரசுகள், உண்மையில் மத்திய அரசிற்கு அடிபணிந்து செயல்படுகின்றனவா என்பதனைக் கண்டறியவும் — மாநிலங்கள் அரசமைப்புச் சட்டவிதிகளின்படி இயங்குகின்றனவா என்பதையும் அப்போது அவை, மெய்யாகவே மத்திய அரசிற்கு அடிபணிந்து நடக்கின்றனவா என்பதையும் கண்காணிக்கும் வாய்ப்பைக் குடியரசுத் தலைவருக்குக் கொடுப்பதற்காகவும் ஆளுநர்களுக்கென, அதிகாரங்களை ஒதுக்கி வைத்துக் கொள்ளல் வேண்டும்."1

— டாக்டர். அம்பேத்கார் அவர்கள்

மாநில ஆளுநர் என்பவர், நமது அரசமைப்புச் சட்டத்தின் ஓர் அதிசயப் படைப்பு; ஆங்கிலேயர் விட்டுச் சென்ற ஏகாதிபத்தியத்தின் கடைசிச் சின்னம். இந்திய நாட்டின் விடுதலைக்குப் பின்னரும், நம்மால் அறுத்தெரிய முடியாத ஓர் அடிமைப் பந்தம். ஆளுநர் என்பவர், ஒரு மாநிலத்தின் ஆட்சித் தலைவர் (நிர்வாகத் தலைவர்); மாநிலச் சட்ட மன்றத்தின் மிக முக்கியக் கூறாக இருப்பவரும் அவரே. ஆனால், அப்படிப்பட்ட மாநில ஆளுநரைக் குடியரசுத் தலைவரின் மூலமாக – மத்திய அரசே நியமனம் செய்கிறது. அவருடைய நியமனத்தில் மாநில மக்களுக்கும், மாநில அரசிற்கும் எவ்வகைத் தொடர்பும் பங்கும் கிடையாது. ஏனிந்த முறைகேடு?

அரசியலமைப்புச் சபையில்...

"மாநிலத்தின் ஆளுநர், ஒரு வலிமைமிக்க மத்திய அரசின் தேவைகளை, மாநிலங்களில் நிறைவேற்ற வேண்டும்; நாட்டின்

---

1 C A. D Vol VIII, 13, Page. 502

பிரிவினைச் சக்திகளையும், ஒற்றுமைக்கு ஊறு விளைவிக்கும் அரசியல் விசைகளையும் அவர் கட்டுப்படுத்த வேண்டும்'' என நமது அரசமைப்பை உருவாக்கியவர்கள் கருதினர்கள்.

அதனல் தான், மாநிலத்தின் ஆட்சித் தலைவரான ஆளுநரை – மாநிலச் சட்ட மன்றத்தின் ஒரு கூருன ஆளுநரை-ஜனநாயகத் தத்துவத்திற்கு மாருகவும் சர்வாதிகாரச் சாயலைக் கொண்ட ஒரு நிறுவனமாகவும் மத்திய அரசு நியமிக்கிறது. ஆளுநர் பொறுப்பை ஏற்பவர், மாநில மக்களின் உண்மையான ஆட்சித் தலைவராக இருக்க வேண்டும் என, அரசமைப்புச் சட்டத்தை உருவாக்கிய பெரியவர்கள் யாரும் எண்ணவில்லை. மாநில ஆட்சித் தலைமையைப் பற்றி அவர்கள் கவலைப்படவுமில்லை. ''தேசிய ஒற்றுமை'' மற்றும் ''மாநிலங்களின் ஒருமைப்பாடு'' என்ற பெயரால், மத்திய அரசிற்குச் சாதகமாக இயங்கக் கூடிய ஒரு ''கையாள்'', மாநிலத்தில் அவர்களுக்குத் தேவைப் பட்டார். மேலும் அகில இந்திய அரசின் (மத்திய அரசு) ஆதிக்கத்தை மாநிலங்களில் முறையாக நிலைபெறச் செய்வதற்காக, மத்திய அரசிற்கு 'முகவர்' ஒருவர் தேவைப் பட்டார் — இங்கிலாந்திலிருந்த ஆங்கிலப் பேரரசின் ஏகாதிபத்தியத்தை, இந்தியாவில் நிலை நிறுத்துவதற்காகப் பிரிட்டானிய ஆதிக்க பீடத்திற்கு, கவர்னர் ஜெனரல் என்ற பெயரால் முகவர் ஒருவர் அன்றைய நாட்களில், தேவைப்பட்டாரே — அதைப்போல.

அரசமைப்புச் சபையிலிருந்த தீவிர உறுப்பினரான, திரு. மகாவீர்த்தியாகி அவர்கள், ஆளுநர்களின் பயனைப் பற்றி அரசமைப்புச் சபையில் கூறும்போது,

> ''ஆளுநர்கள் அங்கிருப்பதால் (மாநிலங்களிலிருப்பதால்) பயனில்லாமல் போகமாட்டார்கள். மத்திய அரசின் கொள்கைகள் மாநிலங்களில் அமுல் படுத்தப்படுகிறதா என்பதனைக் கண்காணிக்க வேண்டும்; மாநிலங்களை ஒன்ருக இணைத்தற்கு உதவ வேண்டும். அதற்காக ஆளுநர் (மத்திய அரசின்) முகவராக இருப்பார். மேலும், மத்திய அரசின் கொள்கைகளைப் பாதுகாத்து; அவற்றை வலியுறுத்தி, மாநிலங்களில் அமுல் நடத்தும் (மத்திய அரசின்) ஏவல் நிறுவனமாகவும், ஆளுநர் திகழுவார். பல மாநிலங்களை இணைப்பதற்காக, மத்திய அரசு பெற்றிருக்கும் ஓர் உறுதியான அமைப்பே,

அதன்-முகவரான ஆளுநராகும். அவர் - ஒருபுறம் மத்திய அரசின் கொள்கைகளின் காப்பாளராகவும் - இன்னொரு புறம் – அரசமைப்புச் சட்டத்தின் பாதுகாவலராகவும் இயங்குவார்.''2

எனத் தெளிவாக்குகிருர்.

மத்திய அரசின் இத்தகைய ''கையாளை''த்தான் நாகரிகமான சொற்களால் ''மாநிலத்தின் ஆட்சித் தலைவர்'' எனவும், ''மேதகு ஆளுநர்''எனவும், அரசமைப்புச் சட்டம் ஆக்கிவைத்திருக்கிறது. இன்னும் சொல்லப் போனால், எந்தவிலை கொடுத்தாகினும் இந்திய நாட்டின் '' ஒற்றுமையை '' பேணிக் காப்பதற்கும், மத்திய அரசின் பரந்த கொள்கைகளையும் விருப்பங்களையும் அனுசரித்தே மாநிலங்களின் நிர்வாகம் நடைபெறுவதற்கும்,உரிய ஓர் ஏவல் ஏற்பாடு தான் ஆளுநர் பதவியாகும்.

ஆளுநர்களை மத்திய அரசு (குடியரசுத் தலைவரின் மூலம்) ஏன் நியமிக்கிறது என்பதன் காரணத்தை, திரு. தேஷ்பாண்டே அவர்கள் விளக்கும்போது,

''ஆளுநர்களை மத்திய அரசு நியமனம் செய்தலானது, வலிவான மத்திய அரசை உருவாக்கும் நோக்கத்தின் பாற்பட்டது எனக்கூறி, அதன் முக்கியத்துவத்தைக் குறைவுபடுத்த முயற்சி நடந்தது. ஆனல் வலிவான மத்திய அரசு வேண்டும் என்ற அடிப்படையின் பேரிலேயே, ஆளுநர்கள் (மத்திய அரசால்) நியமிக்கப்பட வேண்டும் என்ற முடிவு பின்னர் எடுக்கப்பட்டது. இவை அரசியலமைப்புச் சபை விவாதங்களினின்றும் தெரிய வருகிறது. அகில இந்திய ஒற்றுமையைக் கருதியும், ஒருமைப்படுத்தும் சக்திகளை ஊக்குவிக்க வேண்டியும், எல்லா மாநிலங்களின் மேல் மத்திய அரசின் ஆதிக்கம் தேவையென்ற கருத்தில் ஆளுநர் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்னும் முறையிலிருந்து அவர் நியமனம் செய்யப்பட வேண்டும் என்ற முறைக்கு மாற்றியமைக்கும் ஏற்பாடு, அரசமைப்புச் சபையில் முன்மொழியப்பட்டது.''3

எனக் கூறுகிருர்,

2 C. A. D Vol. VIII, Pp. 494-495

8 "The Governor in Indian Constitution", in "Essays on Indian Federalism," Pp. 168-169

இந்திய அரசமைப்புச் சட்டத்தை உருவாக்கிய மூலக் கர்த்தாக்களில் ஒருவரான டாக்டர். அம்பேத்கார் அவர்கள், அரசமைப்புச் சபையில் ஆற்றிய சொற்பொழிவின் ஒரு பகுதியிலிருந்தே இந்த அத்தியாயத்தின் தலைப்பில் கண்டுள்ள மேற்கோள் எடுக்கப்பட்டுள்ளது. ''ஆளுநரை ஏன் படைத்தனர்?'' என்பதற்கான விளக்கத்தை அந்த மேற்கோள் தெளிவாக்குகிறது.

''மத்திய அமைச்சரவையின் கைத்தடியான'' (Passive Instrument at The Hands of Central Ministry) ஆளுநரைப் பற்றி இனி விளக்கமாய்க் காண்போம்.

## ஆளுநர் பற்றிய சில அரசமைப்புச் சட்ட விதிகள்

''ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஓர் ஆளுநர் இருத்தல் வேண்டும்.''

சட்டவிதி 153.

''மாநிலத்தின் ஆட்சி அதிகாரம் முழுவதும் ஆளுநரின் உடைமையிலிருக்கும். அவர் நேரடியாகவோ, அல்லது அவருக்குக் கீழுள்ள அதிகாரிகளின் மூலமாகவோ, அவரது ஆட்சி அதிகாரத்தைச் செயல்படுத்தலாம்.''

சட்டவிதி 154.

''மாநிலத்தின் ஆளுநர் குடியரசுத் தலைவரால், அவரது கையெழுத்தும் இலச்சினையும் பொறிக்கப்பட்ட பற்றாணை மூலமாக நியமிக்கப்படுவார்.''

சட்டவிதி 155.

''குடியரசுத் தலைவர் விரும்பும் வரை ஆளுநர் பதவி வகிப்பார்.''

சட்டவிதி 156 (1).

இந்நான்கு சட்டவிதிகளின் கலப்புச் செயல்களால் ஏற்படும் விளைவுகளென்ன?

ஒரு மாநிலத்தின் எல்லா நிர்வாக அதிகாரங்களையும் பெற்றுள்ள மாநிலத் தலைவர் - குடியரசுத் தலைவரால் - மத்திய அரசின் அமைச்சரவையின் யோசனையின் பேரில், நியமனம் செய்யப்படுகிறார். இலச்சினையும் கையெழுத்தும் மட்டும் குடியரசுத் தலைவருடையது. ஆனால், ஆளுநரை நியமிக்கும் ஆலோசனையும் அதிகாரமும் குடியரசுத் தலைவருடையதல்ல.

மாருக, அது மத்திய அமைச்சரவையினுடைய ஆலோசனை யாகும். குடியரசுத் தலைவர்''விரும்பும் வரை''ஆளுநர் பதவி வகிப் பார் என்பது மத்திய அமைச்சரவை,'' விரும்பும் வரை '' ஆளுநர் பதவி வகிப்பார் என்பதையே உண்மையில் சுட்டுகிறது. எனவே, மத்திய அமைச்சரவை விரும்பாவிடில், குடியரசுத் தலைவர் ஆளுநரையும் அகற்றி விடுவார் என்பதும் புலப்படுகிறதல்லவா? இது, நமது அரசமைப்பு விதித்த மாநிலத் தலைவரின் தலைவிதி. மற்றைய நாடுகளில், ஆளுநர் எப்படி நியமிக்கப்படுகிருர்?

அமெரிக்கா

அமெரிக்க ஐக்கிய நாடுகளில், ஒரு மாநிலத்தின் ஆளுநரை அந்த மாநிலத்தின் மக்களே நேரடியாகத் தேர்ந்தெடுக் கின்றனர் ; அந்த மாநிலத்தின் சட்ட மன்றம், ஆளுநர் மேல் குற்றஞ்சாட்டி அவரைப் பதவியிலிருந்து நீக்கலாமே தவிர, வேறு வழியில் அவரைப் பதவியிலிருந்து யாராலும் அகற்ற முடியாது.

ஆஸ்திரேலியா

ஆஸ்திரேலிய நாட்டில், ஆளுநர் தலைவர் (மத்திய அரசின் கவர்னர் ஜெனரல்) எப்படி இங்கிலாந்து நாட்டின் அரசிற்கு நேரடியாகப் பொறுப்பானவரோ, அவ் வகையிலேயே ஒரு மாநிலத்தின் ஆளுநரும், ஆங்கில அரசிற்கு நேரடியாகப் பொறுப்பானவர். அஃதாவது, ஆஸ்திரேலிய ஆளுநர் தலைவ ருக்கு (கவர்னர் ஜெனரல் அல்லது காமன் வெல்த் தலைவர்) ஒரு மாநிலத்தின் ஆளுநர் எவ்வகையிலும் பொறுப்பானவர் அல்ல.

கனடா

கானடா நாட்டின் ஆளுநர் டொமினியன் (மத்திய) அரசால் நியமிக்கப்படுகின்ருர்.டொமினியன் அரசே,ஆளுநரை நீக்குகிறது.

ஆஸ்திரேலிய நாட்டிலுள்ள ஒரு மாநிலத்தின் ஆளுநர் எப்படி இங்கிலாந்து அரசின் நேரடியான பிரதிநிதியோ, அதேபோல் கனடா நாட்டின் ஒரு மாநில ஆளுநரும் கனடா நாட்டின் மத்திய அரசிற்குப் பொறுப்பானவரல்ல. அவரை லெப்டினண்டு கவர்னர் என அழைப்பர். வெகுகாலம் நிலை

நிறுத்தப்பட்ட நாடாளுமன்றக் குடியரசுக் கொள்கைகளின் அடிப்படையில், ஒரு மாநிலத்தின் அரசாட்சியை அவர் நடைமுறைப்படுத்துகிருர். கனடா நாட்டின் தலைமை நீதிமன்றம் வழங்கிய தீர்ப்பில் குறிப்பிட்டுள்ளபடி,

> ''கனடா நாட்டின் மாநில ஆளுநர், மத்திய அரசால் நியமனம் செய்யப்பட்டாலும், அவர் மத்திய அரசின் சேவகருமல்ல; மத்திய அமைச்சரவையின் கைக்குள்ளடங்கிய ஒரு கருவியுமல்ல.''4

எனவே, கனடாவில் மாநிலங்களின் ஆளுநர்கள், கூட்டாட்சிக் கொள்கைகளுக்கு முரண்பட இயங்குவதில்லே.

கனடாவைப் போலவேதான் இந்தியாவிலும் மாநில ஆளுநர்கள் மத்திய அரசால் நியமிக்கப்படுகின்றனர். அதே முறையில் ஆளுநர்கள் பதவியிலிருந்தும் (மத்திய அரசாலேயே) நீக்கப்படுகின்றனர். எனவே, கனடாவிற்கும் இந்தியாவிற்கும் ஆளுநர் நியமனம் பற்றி, மாறுபாடு ஏதும் இல்லேயே என நமக்குத் தோன்றும். ஆனல் உண்மை அதுவல்ல. இரண்டு நாடுகளிலும் ஆளுநரை நியமிப்பது 'மத்திய அரசு'; இதில் தான் கனடாவிற்கும் நமக்குமுள்ள ஒற்றுமை. மற்ற வகைகளில் கனடாவின் ஆளுநர் இந்திய ஆளுநருக்கு முற்றிலும் மாறுபடுகிருர். ''ஆளுநர் பணிகள்,'' ''ஆளுநரின் இயக்கம்,'' ''ஆளுநரின் பதவிப் பொறுப்புகள்'' இவற்றிலெல்லாம் கனடாவிற்கும் இந்தியாவிற்கும் நிறைய வேறுபாடுகள் உண்டு.

மத்திய அரசின் ஆட்சிப் பொறுப்பை ஏற்கும் அரசியல் கட்சியைச் சார்ந்த ஒருவரே, இந்திய மாநில ஆளுநராகப் பொறுப்பேற்கிருர். அந்தக் கட்சியைச் சார்ந்த மத்திய அமைச்சரவை ''விரும்பும் வரை'' அவர் பதவியும் வகிக்கிருர். நியாயமான எந்தவொரு காரணமுமில்லாமல், அரசியல் காரணங்களுக்காகக் கூட அவர் விலக்கப் படுவார். மத்திய அரசிற்கும் மாநில அரசிற்கும் பிணக்குகள் ஏற்படும் போது, மாநில அமைச்சரவைக்கு முற்றிலும் முரணுகவும் மத்திய அரசிற்கு எல்லாவகையிலும் சார்பாகவும் இந்திய ஆளுநர் இயங்குகிருர். சட்டவிதி 356-இன்படி, அவரது ஆளுகை

---

4. Liquidators of Maritime Vs Receiver General, Quoted in ''Select Constitutions'' [1971], P. 313, Prof. A. C. Kapur.

யிலுள்ள மாநிலத்தைப்பற்றிக் குடியரசுத் தலைவருக்கு அறிக்கை ஒன்றை வழங்கி, அந்த மாநில அரசையே கலைப் பதற்கும் அந்த மாநில அமைச்சரவையையே கவிழ்ப்பதற்கும்– அந்த மாநிலச் சட்டமன்றத்தையே செயலற்ற அமைப்பாக ஆக்கி விடுவதற்கும், இந்திய மாநில ஆளுநர் பெருந்துணை செய்கிறார். இந்தக் கண்ணோட்டத்தின்படி, இந்திய ஆளுநரை ''ஒரு மாநிலத்தின் நிர்வாகத் தலைவர்'' எனக் கூறுவதைக் காட்டிலும் ''மத்திய அரசின் கங்காணி'' என அழைப்பதே சாலப் பொருத்தமானது.

கனடா நாட்டின் மாநில ஆளுநருக்கே இவ்வகை நடை முறை அதிகாரங்களும், செயலாக்கமும் கிடையாது. ஆகவே மற்ற நாடுகளின் ஆளுநருக்கும், குறிப்பாகக் கனடா நாட்டின் ஆளுநருக்கும் நமது நாட்டின் ஆளுநருக்கும் இவைதான் வேறுபாடுகள்.

ஆளுநர்கள் உருவான சுவையான கதை

அரசமைப்புச் சட்டத்தில் இன்றைய ஆளுநர்கள் இடம் பெற்றதே ஒரு சுவையான கதை. அதனைச் சுருக்கமாக இங்குக் காண்போம். அரசமைப்பு ஆலோசகர் திரு. பின். என். இராவ் அவர்கள், *30-5-1947*–இல் உருவாக்கிய தனது அரசமைப்புக் குறிப்பில், ''விகிதாச்சாரப் பிரதிநிதித்துவ ஒற்றை மாற்று வாக்கு முறையினால்'' (System of Proportional Representation by Single Transferable Vote) மாநிலச் சட்ட மன்ற உறுப்பினர் களால் ஆளுநர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் எனக் குறிப் பிட்டிருந்தார்.

5 மாதங்களில், நிலைமை மாறியது. வல்லபாய் படேல் தலைமையில் இயங்கிய ''மாநில அரசமைப்புக் குழு'', அந்த ஏற்பாட்டை விரும்பவில்லை. அதற்கேற்ப, *1947*–ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில், திரு. பி. என். இராவ் அவர்களின் குறிப்பும் மாறுதலடைந்தது.

> அதன் பின்னர், மாநில வாக்காளர்களாலேயே மாநில ஆளு நரும் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் எனப் பல அரசமைப்புச்சபை உறுப்பினர்கள் வலியுறுத்தினார்கள். இந்தச் சிறந்த முறையினைக் கூறியவர்கள் யார் தெரியுமா? நமது

முன்னுள் ஆளுநர் ஸ்ரீ பிரகாசா, நமது முன்னுள் குடியரசுத் தலைவர் திரு. வி.வி.கிரி அவர்கள், திரு. என். வி.காட்கில், டாக்டர். கே. எம். முன்சி, திரு. கைலாசநாத கட்சு போன்ற பெருந்தலைவர்கள் ஆவர். 5

இன்னும் நான்கு மாதங்களில் அந்தக் கருத்தும் மாறிற்று. ஆளுநராக நியமனம் பெற, மாநிலச் சட்ட மன்ற உறுப்பினர்களால் நான்கு பேர் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்; அவர்களில் ஒருவரை ஆளுநராகக் குடியரசுத் தலைவர் நியமிப்பார் என்ற ஒரு கருத்து உருவாயிற்று.

ஆனல் இவை எதையும், பண்டித நேரு அவர்கள் விரும்பவில்லை.

> ''ஆளுநர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டால், அது ஒவ்வொரு மாநிலத்திலும், குறுகிய மாநிலக் கண்ணேட்டத்துடன் கூடிய மாநில எண்ணத்துடன் பணியாற்றும் ஆளுநர்களையே ஊக்குவிக்கும்... எனவே, மாநில அரசியலில் நெருங்கி ஈடுபடக் கூடியவரான மாநிலப் பணிகளைச் செய்யும் ஆளுநரைக் காட்டிலும், மாநிலத்திலிருந்து ஒதுங்கி நிற்பவரும் கட்சி இயந்திரத்தின் ஒரு பகுதியாய் இல்லாதவருமான - ஆளுநர் ஒருவரைப் படைப்பதே சாலச் சிறந்ததாகும்.''6

எனப் பண்டித நேரு அவர்கள் வலியுறுத்தினர்கள்.

அரசமைப்புச் சபை இறுதியாக இவைகளை விவாதித்த போது ஒரு ''சிறு திருத்தம்'' கொண்டு வரப்பட்டது. ''அதாவது ஆளுநரைக் குடியரசுத் தலைவரே நியமனம் செய்ய வேண்டும்'' என்பது தான் அச்சிறு திருத்தம். மேற்சொன்ன மற்ற மாற்று முறைகள் எல்லாம் அத் திருத்தத்தால் ஒழிந்து போயிற்று. ''பண்டித நேரு அவர்கள் அச்சிறு திருத்தத்தை ஆதரித்ததால் இறுதியில், அத்திருத்தமே நிறைவேறி, மாநில ஆளுநர் குடியரசுத் தலைவராலேயே நியமிக்கப்பட வேண்டும்'' என்ற இன்றைய சட்ட விதி உருவாயிற்று. மத்திய அரசின் கங்காணியான இன்றைய ஆளுநர், நேருவின் ஆசிகளுடன் அன்றே உருவாகி விட்டார்.

---

5 C. A. D. Vol. VIII, Pp. 246, 431, 456, 469.

6 C A. D. Vol. VIII, Pp. 454 - 456.

## ஆளுநரின் ஆடம்பரங்கள்

நாடாளுமன்றச் சட்டத்தால், நிர்ணயிக்கப்படுகின்ற சலுகைகளையும் படிகளையும் ஊதியங்களையும் மாநில ஆளுநர் பெறுவார். அவரது சம்பளம் ரூபாய் 5500]–; இவற்றில் படியோ, ஊதியமோ, வாடகையோ மற்ற சலுகைகளோ சேராது. ஆளுநரின் படி மட்டும் ஒரிசா ஆளுநருக்கு அளிக்கப்பட்ட ரூ.1,53,400. முதல் பம்பாய் ஆளுநருக்களிக்கப்பட்ட ரூ. 4,92,500 வரையும் நீளுகிறது. ஆளுநருக்கு வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படும் பொருள்கள் மீதான சுங்கத் தீர்வைச் சலுகையும் கிடைக்கிறது. ஆளுநரின் கைச்செலவிற்காக, மிகப் பெரிய தொகையினை வைத்துக் கொள்ளும் சலுகையும் ஆளுநர்களுக் குண்டு. இவை தவிர, ஆளுநர்கள் குடியிருக்கும் ராஜபவனத்திற்கு வாடகை யில்லை. ராஜபவனங்களை அழகு படுத்தும் தட்டுமுட்டுச் சாமான்களுக்காக ரூ. 10,000 முதல் (பஞ்சாப்) ரூ. 11,300 வரை (பம்பாய்) நிர்ணயம் செய்யப்பட்டுள்ளது. ஆளுநர் பயணம் செய்யும் போது குளுகுளு வசதியோடு மற்ற எல்லா வசதிகளும் கொண்ட தனி ரயில் பெட்டி, கட்டணமின்றிப் பயன் படுத்தப்படுகிறது. மற்ற பல சலுகைகள் அவ்வப்போது தேவைக்கேற்ற வகையில் நிர்ணயிக்கப்படும். மத்திய அரசினுடைய ''மாநிலக் காவலாளிக்கு'' எத்துணைப் பெருமையும் வசதியும், நமதரசமைப்பில் அளிக்கப்பட்டிருக்கிறது எனத் தெரிகிறதா?

அதனால் தானே என்னவோ, மகாராட்டிர மாநிலத்தின் ஆளுநராய்ச் சில காலமிருந்து–பதவி விலகிய பண்டித நேருவின் சகோதரியான திருமதி. விசயலட்சுமி பண்டிட் அவர்கள், ''ஆளுநரின் பதவியை ஏற்க, ஒருவனைத் தூண்டுகின்ற முழுமுதற் காரணம் என்னவெனில், அதில் கிடைக்கும் நிறைந்த சம்பளமும்; வசதிகளும் ஆகும்'' எனக் கூறினர் போலும்!

> அவர், ''ஆளுநர் பதவி பயனற்றதென்றும்'' அப்பதவியை நமது அரசமைப்புச் சட்டத்தினின்றும் நீக்கிவிட வேண்டுமென்றும், ஆளுநரும் ராஜபவனங்களும் நியாயமாக எவ்வெவற்றிற்காகச் செய்ல்பட வேண்டுமோ அவைகளுக்

காகச் செயல்பட வில்லையெனவும், பதவி விலகிய பின்பு, தான் எழுதிய கட்டுரை ஒன்றில் வெகு தெளிவாகச் சுட்டிக் காட்டுகிறார். 7

ஆளுநர் பற்றி – ஆளுநர்கள்

திருமதி. விஜயலட்சுமி பண்டிட் மட்டுமல்ல; பல ஓய்வு பெற்ற ஆளுநர்களும் அனுபவம் பெற்ற முதலமைச்சர்களும் பத்திரிகைகளும் நாடாளுமன்றமும் மாநிலச் சட்டமன்றங் களும் ராஜபவனங்களின் மிதமிஞ்சிய செலவின ஏற்பாடுகளை யும் ஆளுநர்களுக் களிக்கப்பட்ட பெருவசதிகளையும் — ஏன்?– ஆளுநர் பதவியையும் கூடக் கண்டித்திருக்கின்றனர்.

இன்றையத் தமிழகத்தின் ஆளுங் கட்சியான திராவிட முன்னேற்றக் கழகம், முன்னர் எதிர்கட்சியாக இருந்தபோது, "ஆளுநர் பதவி அவசியமற்றது" என வலியுறுத்தி அப் பதவியே அழிக்கப்பட வேண்டுமெனப் போராடிற்று. ஆனால் ஆளுநர் பதவியும் போகவில்லை, அப்பதவியை அரசியலி லிருந்து ஓய்வு பெற்ற காங்கிரஸ் கட்சியினைச் சார்ந்த, "சோச லிச" தலைவர்கள் நிரப்பிக் கொள்வதும் மாறவில்லை. ஆங்கில ஏகாதிபத்தியம் விட்டுச் சென்ற "கவர்னர்" இந்திய நாட்டிலிருந்து இன்னமும் நீக்கப்பட வில்லை. மாறாக, சென்ற கால்நூற்றாண்டுக் காலத்தில், ஆளுநர்கள் படைத்த பல "திடுக் கிடும் சம்பவங்கள்" நிறைந்த சுவையான வரலாறுதான் வளர்ந்து நிற்கின்றன.

அரசமைப்புச் சபையில் ஆளுநரைப் பற்றிய மிகச் சீரிய தத்துவங்கள் விவாதிக்கப்பட்டன. ஆளுநர் என்பவர், "அறம் வழுவாச் செம்மலாக இயங்குவார்;" "அரசமைப்புச் சட்டத்தின் பாதுகாவலரே ஆளுநர்;" "அரசியல் கட்சிகளின் ஆபாசங்கள் ஆளுநரைத் தொடாது;" "மாநில மக்களுக்கு நீதி முறை வழுவா நிர்வாகத் தலைவராக அவர் விளங்குவார்." என்பன போன்ற பல குணநலன்கள் சித்தரித்துக் காட்டப் பட்டது.

ஆளுநர் மிக உயர்ந்த நேர்மையுடன் — மாநில ஆட்சியினை, சட்ட நுணுக்கங்களுக்குட்பட்டு நாணயமாகவும் மிகத் திறமையுட னும் நடாத்துவார். அவரது தராசு முனை மத்திய அரசை

---

7 "Select Constitutions," (1971) P. 328

நோக்கியோ, அல்லது மாநில அரசின் பக்கமோ, ஒரு தலைபட்ச மாகச் சாயாது; தேவை யேற்படின் மாநில மக்களின் நலன் கருதி மாநில அமைச்சரவைக்குக் கூட எதிராக நிற்பார்; அதேபோல மத்திய அரசு, முறை தவறி நடந்தால் தன்னைப் பலியிட்டுக் கொண்டாவது அதனை எதிர்த்து நின்று மாநில மக்களின்—மாநில அரசின் உரிமைகளைக் காப்பார். இவையெல்லாம் இந்நூலாசிரி யரின் கற்பனையில் உதித்தவையல்ல, அரசமைப்புச் சபை விவா தங்களின் எட்டாம் தொகுப்பிலும் இன்னும் பல விடங்களிலும், ஆளுநர் பற்றியும் அவரது பொறுப்பைப் பற்றியும் அழகான ஆங்கி லத்தில் சுவையாகப் பேசப்பட்ட அரசியலமைப்புச் சபை உறுப்பினர் களின் சொற்பொழிவுகளிலிருந்து எடுக்கப்பட்ட சில சுருக்கக் கருத்துக்களே மேலே தரப்பட்டவையாகும். ஆனால் நடைமுறையில் ஆளுநர்கள் படைத்த வரலாறு என்ன ?

மத்திய அரசால் நிறுவப்பட்ட ''நிர்வாகச் சீர்த்திருத்தக் குழுவினால்'' (Administrative Reforms Commission) மத்திய—மாநில, உறவுபற்றி ஆய்தலுக்காக அமைக்கப்பட்ட ''கற்றறி குழு,'' (Study Team),

> ''நொந்து போன அரசியல்வாதிகளுக்கு சில சமயங்களில் கொடுக்கப்படும் ஆறுதல் பரிசே ஆளுநர் பதவியாகும். திறமையற்ற இடைத்தரமான அரசியல்வாதிகளுக்கு, அளிக்கப்படும் நன்கொடை மானியங்களைப் போன்றதே ஆளுநர் பதவியாகும்.'' 8

எனக் கூறுகிறது.

பொதுத் தேர்தல்களில் மக்களால் தோற்கடிக்கப்பட்ட அரசியல்வாதிகளுக்கு அளிக்கப்படும் கடைசி அடைக்கல மாகவும் ஆளுநர்கள் பதவி பயன்படுகின்றன. சில சமயங் களில், சில அரசியல்வாதிகளைத் தீவிர அரசியலிலிருந்து அகற்றி வைத்து, சிறிது காலம் கழித்து அவர்களை அரசியல் சூழ்நிலைக்கும் தேவைக்கும் ஏற்ப மீண்டும் தீவிர அரசியலுக்குக் கொண்டு வந்து சேர்க்கும் வரை, இடைக்காலத்தில் அவர்களை இருத்தி வைக்கக்கூடிய ஒரு பனிப்பேழையைப் (Cold Storage) போல ஆளுநர் பதவி பயன் படுகிறது. உண்மையில், ஆளுநர் கள் தீவிர அரசியல்வாதிகளாகக்கூட இயங்குவதில்லை. ஒரே

---

8 Quoted by A. P. Jain in "The Governor", "The Union and the States" (1972) P, 333

கட்சியிலுள்ள பல கோஷ்டிகளைச் சார்ந்தவர்களாகவும் இருக்கிறார்கள். ஆளுநர் பதவிக்குரிய சிறப்பையும் மரியாதையையும் மக்களது நம்பிக்கையையும் ஆளுநரது நடவடிக்கைகள் காப்பதில்லை. மாறாக, மத்திய அரசின் கட்டளைக் கேற்பவும் மாநில நலன்களுக்கு முரணாகவும் ஆளுநர்கள் நடைமுறையில் இயங்குவதால், மக்கள் மன்றம் ஆளுநர்களை உண்மையான நிர்வாகத் தலைவர்களாக ஏற்பதில்லை. ஆளுநர்களின் சில அரசியல் நடவடிக்கைகள் அதற்குச் சான்று பகர்கின்றன.

சான்றுகள்:—

1. 1966-ஆம் ஆண்டில் கேரள மாநிலத்தின் ஆளுநராயிருந்தார் திரு. ஏ. பி. ஜெயின் அவர்கள், அப்போது அம் மாநிலத்தில் உணவுப் பஞ்சம் தலைவிரித்தாடியது. ஒரு நாளைக்கெல்லாம் ஒரு மனிதனுக்கு 4 அவுன்ஸ் அரிசிகூட வழங்க முடியாத நிலை. கேரள அரசு உணவு நெருக்கடியைத் தீர்க்க இயலாமல் தத்தளித்தது.

கேரள ஆளுநர், அந்த மாநிலத்தின் நிர்வாகத் தலைவரல்லவா? எனவே, மக்களின் பஞ்சப் பிரச்சினை அவருக்குப் பெரிதாகப் படவில்லை. அமரர் லால்பகதூர் சாஸ்திரிக்குப் பின் இந்தியத் தலைமையமைச்சராக யார் வருவது என்பது பற்றிக் காங்கிரஸ் கட்சிக்குள் கோஷ்டிச் சண்டை நடந்தது. இந்திரா காந்தியா? மொரார்ஜியா? என்ற போட்டி வலுத்தது. இந்திரா காந்திக்குத் தலைமையமைச்சர் பதவி கிடைப்பதற்காக, கட்சி மட்டத்திற்குள் தேர்தல் பணியாற்றுவதே கேரள மாநில ஆளுநருக்குத் தலையாய கடமையாகத் தோன்றியது; கேரள மாநில மக்களின் பசிக் கொடுமை பெரியதாகத் தெரியப்பட வில்லை அவருக்கு. எனவே, அதிகாரப்பூர்வமான ''கேரள கவர்னர்'', கட்சித் தேர்தல் பணியாற்றுவதற்காகத் திருவனந்த புரத்திலிருந்து கிளம்பும் முதல் விமானத்தில் டெல்லிக்குப் பறந்தார். காங்கிரஸ் கட்சியின் உட்தேர்தல் பணியை செவ்வனே செய்தார். ஆளுநரின் பதவிக்கே தரக்குறைவை அளிக்கும் அவரது செயல் பற்றிச் செய்தித்தாள்கள் கண்டித்தன.

22—1—1966-ஆம் நாளிட்ட ஸ்டேட்ஸ்மென் பத்திரிக்கை தலையங்கம் தீட்டியது. அதற்குத் திரு. ஏ.பி. ஜெயின் கொடுத்த மறுப்பு அறிக்கை 28—1—1966-இல் அதே ஸ்டேட்ஸ்மென் பத்திரிக்கையில் வெளியாயிற்று. அதில், தனது செயல்,

முறையானது என அவர் கூறி வாதாடியதோடு, ஆளுநர் பதவி பற்றிய சில நிதர்சனமான உண்மைகளையும் ஜெயின் அவர்கள் விளக்கினர்.

> ''தீவிர அரசியலில் தனது வாழ்க்கையின் 45 ஆண்டுகளைக் கழித்துவிட்ட ஒருவருடைய உணர்ச்சிகளையும், உத்வேகங்களையும் குளு குளு அறையில் அழகுக் கண்ணாடிகளுடன் கூடிய அலுவலகத்திலிருந்து யாரும் உணர்ந்து கொள்ள முடியாது. மிக முக்கியமான அரசியல் முடிவுகள் எடுக்கப் படும்போது, அப்படிப்பட்ட ஒருவர் ஒரு சாதாரணப் பார்வையாளராக இருக்கமாட்டார். தவறு ஏதாவது நடந்திருப்பின், அது என்னை ஆளுநராக நியமித்த போது ஏற்பட்ட தவறு தானே யொழிய வேறில்லை. அரசியல் வாதிகளை-அதிலும் குறிப்பாக என்னைப் போன்ற தீவிர அரசியல் வாதிகளை - ஆளுநர்களாக நியமிப்பதா? என்பதை மத்திய அரசு இறுதியாக முடிவு செய்ய வேண்டிய காலம் இப்போது வந்து விட்டது.........கேரள மாநிலத்தினுடைய உணவு நெருக்கடியின் போது நான் கடமை தவறி விட்டேன் என நீர் குற்றம் சாட்டுவது உமது அறியாமையினால் தான். உணவுப் பிரச்னையை மாநிலங்கள், ஒன்றோடொன்று இயைந்து பேசி, தாங்களே நேராகத் தீர்த்துக் கொள்வதில்லை. உணவு வழங்குவதைப் பொறுத்த பிரச்னை வரும்போது, டெல்லியில் தான் அதன் முடிவுகள் எடுக்கப்படுகின்றன...எனது செயல், சட்டத்திற்குப் புறம்பானது தானா என்பதை நிர்ணயிக்க வேண்டியது, மத்திய அரசாங்கமே தவிர நீரல்ல (செய்தித் தாளல்ல), மத்திய அரசாங்கம், நீர் நினைப்பதைப் போல் எனது நடவடிக்கைகள் முறையற்றதெனக் கருதியிருந்தால், காங்கிரஸ் உட்பட மற்றெல்லா அரசியல் கட்சிகளும், சேர்ந்து கேரளக் கடையடைப்பை (பந்த்) நடத்துவது என்ற முடிவினை மேற்கொண்டிருக்கும் இக்கட்டான ஒரு சூழ்நிலையை, உரிய முறையில் சமாளிப்பதற்காக என்னையே தொடர்ந்து மீண்டும் ஆளுநராக இருக்க வேண்டுமென்று மத்திய அரசு வலியுறுத்தியிருக்குமா?''[9]

என்று அப்பட்டமாகக் கூறினர்.

---

9 "State Governors in India" [1966], Pp. 73 - 75 by Mr. Śri prakaśa.

"அரசியல் தொடர்பே இல்லாமல்", மாநில அரசின் ஆட்சி அதிகாரங்களை நிர்வகிக்கும், ஒரு காங்கிரஸ் ஆளுநரின் "நெஞ்சத் துடிப்பு" இதில் நிர்வாணமாக வெளிப்படவில்லையா? இந்த வகை ஆளுநர்கள் தான், மாநில மக்களின் – அறம் வழுவாத முறை செய்யும் – ஆட்சித் தலைவர்கள்.

2. திரு. என். வி. காட்கில் அவர்கள், 1959–ஆம் ஆண்டு வாக்கில் பஞ்சாப் மாநிலத்தின் கவர்னராக இருந்தார். கேரளக் கம்யூனிஸ்டு அரசாங்கத்தின் மேல் எடுக்கப்பட்ட மத்திய அரசின் நேரடியான நடவடிக்கையைக் கண்டித்து, வெளிப் படையாகத் தனது கருத்துக்களை வெளியிட்டார். (7–7–1959 டிரிப்யூன் பத்திரிகை). அதைப் பற்றிக் கருத்தறிவிக்கும் போது பண்டித நேரு அவர்கள் "ஆளுநர் பொறுப்பை ஏற்குமுன், தீவிரமான அரசியலில் ஈடுபட்டிருந்த சில அரசியல் வாதிகள், தங்களது பதவியான ஆளுநரின் பொறுப்புக்களையும் வரை யறைகளையும் நன்கு தெரிந்திருந்தும் கூட, விரும்பத் தகாத சில புதிய முன்னுதாரணங்களைப் படைக்கின்றனர்".
எனத் திரு. காட்கில் அவர்களைப் பற்றி, பத்திரிகையாளர் கூட்டத்தில் கூறினார்–(8-7–1959 இந்துஸ்தான் டைம்ஸ்).

இன்னொரு சமயத்தில் திரு. காட்கில் அவர்கள் ஆளுநரா யிருக்கும் போதே சுதந்திரக் கட்சியை வெளிப்படையாகக் கண்டித்து, பத்திரிக்கைகளில் வெளியாகத் தக்க அறிக்கைகளை யும் கொடுத்தார்.

3. திருமதி. விசயலட்சுமி பண்டிட் அவர்கள் மராட்டிய மாநில ஆளுநராயிருந்த போது அரசாங்கத்தைப் பற்றித் தனது தனிப்பட்ட கருத்துக்களை வெளிப்படுத்தி யுள்ளார்.

4. தற்போது, தமிழக ஆளுநராயிருக்கும் திரு. கே.கே. ஷா அவர்கள் கூட 1973-ஆம் ஆண்டு மே மாதத்தில் அவருடைய மாநிலமான மராட்டியத்தில், முதலமைச்சராக யார் வர வேண்டும் என்ற காங்கிரஸ் கட்சி உட்பூசல் நடைபெற்ற போது, அதில் ஒரு கோஷ்டிக்கு வெளிப்படையாகவே வேலை செய்தார். (1973-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாத ஆனந்த விகடன் தலையங்கம்).

கட்சிக் கப்பாற்பட்டுச் செயல்பட வேண்டிய ஆளுநர்கள், அரசியல் கட்சி என்ற பெயரையே கொண்டிருக்காத அரசமைப்புச் சட்டத்தைக் காப்பவர்களாகிய ஆளுநர்கள் - உட்கட்சிப் பூசல்களில், தேர்தல்களில், நேரடியாக ஈடுபடுவதும் மாற்றுக் கட்சிகளைப் பற்றி அறிக்கைகளைப் பத்திரிக்கைகளில் விடுவதும் மற்ற மாநில அரசுகளைப் பற்றி விமரிசனங்களைச் செய்வதும் இந்திய அரசியலில் அன்ருட நடவடிக்கைகளாகி விட்டன. ''நல்லவன் போலிருப்பான், பரம சண்டாளன்'' என்ற தமிழ்ப் பழமொழிக்கு ஒரு நல்ல நடைமுறை எடுத்துக் காட்டாக ''ஆளுநர் பதவி'' விளங்குகிறதல்லவா? ''நல்லவர்களான'' இந்த ஆளுநர்களுக்கு அரசமைப்புச் சட்டம் வழங்கியுள்ள அரும்பெரும் அதிகாரங்களைப் பற்றி, அடுத்த அததியாயத்தில் ஆய்வு செய்வோம்.



## 10. மாநில ஆளுநர்-மத்திய அரசின் கங்காணி

— ஆளுநரின் விருப்பு அதிகாரம் -
மாநில சுயாட்சியின் புதைகுழி —

" ஆளுநர் நியமனம் குறித்து நமது அரசியலமைப்பில் வகை செய்யப்பட்டுள்ளது — மக்களாட்சி முறையில் காலத்திற்கு ஒவ்வாத ஒன்றாகும். இவர், மத்திய அரசால் நியமிக்கப்பட்டு மத்திய அரசுக்குப் பொறுப்புள்ள அதிகாரியாவார். எனவே, உள்ளூர் நிலைமைகளையும் அரசியல் நிலைமையையும் இவர் அறிந்திருக்க முடியும் என்று எதிர்பார்க்க இயலாது. ஆளுநர் பதவிக்காகச் செய்யப்படும் செலவும் சமதர்ம சமுதாய முறைக்கு ஏற்றதாக இல்லை. இச்செலவு வீணானது; இதனைக் கைவிடலாம்.(மாநில) அமைச்சர், ஆளுநருக்குக் கீழ்ப்பட்டவர் என்று உச்ச நீதிமன்றம் தீர்ப்பளித்துள்ளது. இவ்வாறாக, மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதி (மாநில அமைச்சர்) ஒருவர் சட்டக்கோட்பாட்டின்படி மைய அரசுப் பிரதிநிதியின் ஊழியராக இருக்கிறார். ஆளுநர் பதவியை எடுத்து விடுவதற்கு உற்ற தருணம் இதுவே யாகும். 1

— தமிழ்நாடு அரசின் கருத்துரைகள்.

நமது அரசமைப்புச் சட்டவிதிகளில் ஆளுநருக்களிக்கப் பட்டுள்ள அதிகாரங்களை ஐந்து தலைப்புகளில் வகைப் படுத்தலாம்.

---

1 மாநில சுயாட்சி பற்றியும் இராசமன்னார் குழுவின் அறிக்கை பற்றியும் தமிழ்நாடு அரசின் கருத்துரைகள் (1974) பக்கம்-12

அவையாவன :—

1) ஆட்சி (நிர்வாக) அதிகாரங்கள்;

2) சட்டமியற்றும் அதிகாரங்கள்;

3) நிதி அதிகாரங்கள்;

4) நீதி அதிகாரங்கள்;

5) இவைகளில் பொதிந்திருக்கும் மிக ஆபத்தான விருப்பு (உளத்தேர்வு) அதிகாரங்கள் (Discretionary Powers)

## I

## ஆளுநரின் நிர்வாக, நிதி, நீதி மற்றும் சட்டமியற்றும் அதிகாரங்கள்

### 1. ஆட்சி (நிர்வாக) அதிகாரங்கள்

i) மாநிலத்தின் நிர்வாக அதிகாரங்கள் அனைத்தும் ஆளுநரின் உடைமையிலிருக்கும். அந்த அதிகாரங்களை ஆளுநர், நேரடியாகவோ அல்லது தனது கீழுள்ள அதிகாரிகளின் மூலமாகவோ, செயலாட்சி செய்வார்.

—சட்டவிதி 154 (1).

ii) மாநிலத்தின் எல்லா நிர்வாக நடவடிக்கைகளும், ஆளுநரின் பெயராலேயே நடைபெற வேண்டும். மாநில அரசாங்கத்தின் ஆவணங்களும் (Documents) மாநில அரசின் ஆணைகளும், ஆளுநர் பெயராலேயே செய்யப்பட வேண்டும்.

— சட்ட விதி (166).

iii) தனக்கு ஆலோசனையும் அறிவுரையும் கூறவும் உதவி புரியவும், முதலமைச்சரின் தலைமையில் ஓர் அமைச்சரவையை மாநிலங்களில் ஆளுநரே நியமனம் செய்வார். அந்த அமைச்சரவை ''ஆளுநரின் உளத்தேர்வுப்படிக் கையாளும் நடவடிக்கைகள் நீங்கலாக,'' மற்ற அரசுப்பணிகளில், ஆளுநருக்கு அறிவுரையையும் உதவியினையும் வழங்கும்.

மாநில அரசின் எந்த ஒரு நடவடிக்கையையும், தனது உளத்தேர் வின்படி செயல்படுத்துவதற்குரியதா என்பதை ஆளுநரே முடிவு செய்வார்.

அப்படிச் செய்யும் ஆளுநரின் முடிவு இறுதியானது.

ஆளுநரின் அந்த விருப்ப முடிவினை எந்த நீதிமன்றமும் 'செல்லத்தக்க ஒன்றுதானு' எனப் பரிசீலனை செய்ய முடியாது.

— சட்ட விதி (163).

iv) மாநில அமைச்சரவை ஆளுநருக்கு வழங்கும் அறிவுரை, இரகசியத் தன்மை வாய்ந்தது. நீதி மன்றம் அதனை எதிர்த்துக் கேட்க முடியாது.

— சட்ட விதி (163) (3).

v) ஆளுநரின் விருப்பகாலம் வரை, அமைச்சர்கள் பதவி வகிப்பர். (ஆனல் உண்மையில், மாநிலச் சட்ட மன்றத்தின் பெரும்பான்மை பலம் இருக்கும் வரை, மாநில அமைச்சரவை பதவி வகிக்கும்) அமைச்சரவை ஒட்டு மொத்தமாக, மாநிலச் சட்ட மன்றத்திற்கே பொறுப்பானது. மாநில நிர்வாக விவகாரங்கள் பற்றிய அமைச்சரவையின் முடிவுகளையும் சட்டமியற்றுவதற்கான ஏற்பாடுகளையும் முதலமைச்சர் ஆளுநருக்குத் தெரிவிக்க வேண்டும்.

— சட்ட விதி (167) (a).

நிர்வாக விவகாரங்களைப் பற்றிய தகவல்களை யெல்லாம், ஆளுநர் கேட்கலாம்.

— சட்ட விதி (167) (b).

vi) அமைச்சரவையின் ஆலோசனைக்கு எடுத்துக் கொள்ளப்படாத எந்த ஒரு நடவடிக்கையையும் தனக்குச் சமர்ப்பிக்கப்பட வேண்டுமென்று ஆளுநர், முதலமைச்சர்களுக்கு ஆணையிடலாம்.

— சட்ட விதி (167) (c).

vii) குடியரசுத் தலைவர், மாநில உயர்நீதி மன்றத்தின் நீதிபதிகளை நியமனம் செய்யுமுன்னர், ஆளுநரைக் கலந்தாலோசிக்க வேண்டும்.

— சட்ட விதி (217) (1).

viii) தேர்வாணைக்குழுவின் உறுப்பினர்களையும் (Members of Public Service Commission), மாநில அரசின் வழக்கறிஞர் தலைவரையும் (Advocate General) ஆளுநரே நியமனம் செய்வார்.

2. சட்டமியற்றும் அதிகாரங்கள்

i) ஆளுநர் மாநிலச் சட்ட மன்றத்தினுடைய ஒரு பகுதி ஆவார். சட்டப் பேரவையையும் சட்ட மேலவையையும் மாநில ஆளுநர் கூட்டுவார்; அவை எந்தத் தேதியில் எந்த இடத்தில் கூடவேண்டுமென்று ஆளுநர் ஆணைபிறப்பிக்கலாம். ஒரு கூட்டத் தொடருக்கும் மற்ருெரு கூட்டத் தொடருக்கும் இடையில் ஆறு மாதத்திற்கு மேல் இடைவெளி இருத்தல் கூடாது.

சட்ட சபைகளைத் தற்காலிகமாகத் தள்ளி வைக்கலாம். சட்ட சபையைக் கலைத்தும் விடலாம். சட்ட மன்ற இரு அவைகளை யும் இணைத்தோ, தனித்தனியாகவோ அதில் ஆளுநர் உரை நிகழ்த்தலாம்.

ii) சட்ட மன்றத்தில் ஒரு சட்ட மசோதா பரிசீலிக்கப் படும் போது, அந்த மசோதாவிற்கான நடவடிக்கைக் குறிப்பு களை ஆளுநர் சட்ட மன்றத்திற் கனுப்பலாம். ஆளுநர் அனுப்பும் மசோதா பற்றிய குறிப்புக்களை, சட்ட மன்றம் விவாதிக்க வேண்டும்.

iii) ஒரு மசோதா, சட்டமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட பின், ஆளுநரின் இசைவினுக்காக அது சமர்ப்பிக்கப்படல் வேண்டும். தனது ஒப்புதல் அல்லது இசைவினுக்காக அனுப்பப் பட்ட சட்ட மசோதாவிற்கு, ஆளுநர், தனது இசைவினை வழங்கலாம்; அல்லது தனது இசைவினை மறுக்கலாம்; அல்லது, குடியரசுத் தலைவரின் பரிசீலனைக்காக அதனை ஒதுக்கி வைத்தும் விடலாம்.

iv) நிதி மசோதாவைத் தவிர மற்ற எந்த மசோதாவை யும், மீண்டும் புனர் பரிசீலனை செய்ய வேண்டுமென ஆணை யிட்டுக் குறிப்புக்களைச் சேர்த்து ஆளுநர் அந்த மசோதாவைச் சட்டமன்றத்திற்கே திருப்பி அனுப்பி விடலாம்.

(v) சட்ட மன்றம் நடைபெருத போது ஆளுநர், அவசரச் சட்டங்களைப் (Ordinances) பிறப்பிக்கலாம். சட்ட மன்றம் கூடிய பின் ஆறு வாரம் கழித்து ஆளுநரால் பிறப்பிக்கப்பட்ட அவசரச் சட்டம், அமுலிலிருக்காது. அல்லது அதற்கு முன்னரே, அந்த அவசரச் சட்டத்தை மாநிலச் சட்டப்பேரவை நிராகரித்து, சட்ட மேலவையும் அந்த நிராகரிப்பை ஏற்றுக் கொண்டால், அந்த நாளிலிருந்து அது தானுகவே செல்லாமல் போகும்.

(vi) ஆனுல், குடியரசுத் தலைவரின் ஒப்புதல் குறிப்புக் களில்லாமல் சில வகை அவசரச் சட்டங்களை, ஆளுநர்கள் பிறப்பிக்க இயலாது. சென்ற அத்தியாயத்தில் சில வகைச் சட்ட மசோதாக்களைச் சட்டமன்றத்தில் வைப்பதற்கு முன்னரே, குடியரசுத் தலைவரின் ஒப்புதலைப் பெறவேண்டும் என்பது பற்றிக் குறிப்பிட்டோ மல்லவா? அந்த வகைச் சட்ட மசோதாக்களைச் சார்ந்த அவசரச் சட்டங்களை, மாநில ஆளுநர் பிறப்பிக்க வேண்டுமென்ருல், அதற்குக் குடியரசுத் தலைவரின் முன் அனுமதியை ஆளுநர் பெற வேண்டும். சட்டமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட சில மசோதாக்கள் குடியரசுத் தலைவரின் இசைவிணைப்பெற வேண்டு மென்றும் சென்ற இயலில் பார்த்தோமல்லவா? அவ்வகை மசோதாக்களைச் சார்ந்த அவசரச் சட்டங்கள் பிறப்பிக்கப்பட வேண்டுமெனினும், அவற்றிற்குக் குடியரசுத் தலைவரின் முன் அனுமதி ஆளுநர் பெற வேண்டும்.

3. நிதி அதிகாரங்கள்

i) ஆளுநரின் பரிந்துரையில்லாமல் எந்த ஒரு நிதி மசோதாவையும் (Finance Bill) பண மசோதாவையும் (Money Bill) சட்டமன்றத்தில் முன் மொழியக் கூடாது.

ii) நிதி சம்மந்தப்பட்ட திருத்தங்களைச் செய்யும் எந்தச் சட்டவிதியையும், ஆளுநரின் அனுமதியின்றி — பரிந்துரை யின்றி — சட்டமன்றத்தில் நிறைவேற்றக் கூடாது. ஆனுல், விதிக்கப்பட்ட வரியை நீக்கவோ, அல்லது குறைக்கவோ, ஆளுநரின் பரிந்துரை அவசியமில்லை.

iii) ஒவ்வோர் ஆண்டும், அந்தந்த ஆண்டினுடைய நிதி நிலை அறிக்கை (Budget) சட்டமன்றத்தில் வைக்கப்படுகிறதா என்பதை ஆளுநர் கண்காணிக்க வேண்டும்.

iv) ஆளுநரின் பரிந்துரையின்றி, அந்தந்த அரசுத்துறை மானியக் கோரிக்கைகளைச் சட்டமன்றம் விவாதித்தல் கூடாது. சட்டமன்றத்திலிருந்து, துணை மானியங்களையும் கூடுதலான அல்லது தேவைக்கதிகமான மானியங்களையும் கோரக்கூடிய உரிமை ஆளுநருக்குண்டு.

4. நீதி அதிகாரங்கள்

(i) மாநில ஆட்சி அதிகார எல்லைக்குட்பட்ட குற்றத்தைச் செய்த குற்றவாளிகளின் தண்டனையைக் குறைக்கவும், மாற்றவும் நிறுத்தி வைக்கவும் நீக்கி விடவும் ஆளுநருக்கு அதிகாரமுண்டு.

(ii) குற்றம் சாட்டப்பட்ட ஒருவர் மீது விசாரணை நடந்து கொண்டிருக்கும் போதோ, அல்லது அதற்கு முன்னர் அவர் காவலில் வைக்கப்பட்டிருக்கும் போதோ, அல்லது விசாரணை முடிந்து அவர் தண்டிக்கப்பட்ட பின்னரோ, எப்போது வேண்டுமானாலும் ஆளுநர், மேற்சொன்ன தனது அதிகாரத்தைக் கையாளலாம்.

(iii) இவை தவிர, மாநிலத்தின் விவகாரங்கள் பற்றி, பதினைந்து நாட்களுக் கொருமுறை மாநில ஆளுநர் குடியரசுத் தலைவருக்கு அறிக்கை அனுப்ப வேண்டும். மாநிலத்தில் "நெருக்கடி நிலையை" குடியரசுத் தலைவர், பிரகடனப்படுத்துவதற்குரிய, மாநில நிர்வாக நிலை பற்றிய அறிக்கையையும், குடியரசுத் தலைவர் கேட்கும் போது, மாநில ஆளுநர் அனுப்ப வேண்டும்.

சட்ட விதி—(356).

## II

## ஆளுநரின் உளத்தேர்வு ( விருப்பு ) அதிகாரங்கள்

### ( DISCRETIONARY POWERS )

ஒரு மாநிலத்தின் இத்துணை அதிகாரங்களையும் நமது அரசமைப்புச் சட்டம், மத்திய அரசின் முகவரான ஆளுநருக்கு வழங்கியுள்ளது.

ஆனால், நாடாளு மன்ற ஜனநாயக முறையையே – நமது ஆட்சி முறையாக, நாம் ஏற்றுக் கொண்டுள்ளோம். மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதி நிதிகளின் - அமைச்சரவையே – உண் மையான – ஆட்சியை நடாத்தும். ஆளுநர் என்பவர் ஒப்புக்காக மாநிலத் தலைவராக இருப்பார். அவரது பெயராலேயே எல்லா நிர்வாக நடவடிக்கைகளும் நடைபெறும் என்பதே நாடாளு மன்றக் குடியரசு முறையின் உட்பொருளாகும்.

அதைப் போலவே, குடியரசுத் தலைவர் நாட்டின் தலைவ ராக (Head of State) ஒப்புக்காக இருப்பார். மத்திய அரசின் எல்லா நிர்வாக நடவடிக்கைகளும், மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்ட மத்திய அமைச்சரவையே உண்மையில் நடத்துகின்றது.

எனவே, அரசமைப்புச் சட்டத்தால் வழங்கப்பட்ட குடியரசுத் தலைவரின் அதிகாரங்கள் அனைத்தும் அழகான வெற்றுச் சொற்கள் தானா என்று கூட நமக்கு ஐயமேற்படும். அதைப் போலவே, அரசமைப்புச் சட்டத்தால் ஆளுநருக்கு வழங்கப்பட்ட அதிகாரத் தொகுப்புக்களும் வெறும் பொருளற்ற வாசகங்கள் தானா எனவும் நமக்கு ஐயமேற்படும்? மேலும், மத்திய அரசுத் தலைவரான குடியரசுத் தலைவரும், மாநில அரசுத் தலைவரான ஆளுநரும் ஒரே மாதிரியான இரண்டு பொம்மைகள் தானே? இருவருடைய நிர்வாக அதிகாரங்களை யும், உண்மையில் மத்திய அமைச்சரவையும் மா்நில அமைச் சரவையும் முறையே ஏற்றுக் கொள்ளுவதால், மாநில சுயாட்சி எங்ஙனம் முறியடிக்கப்படுகிறது என்றதொடர் வினாவும் இயல் பாக எழும். அவை பற்றி இனி ஆய்வோம்.

சட்டவிதி 163 (1)

அரசமைப்புச் சட்டத்தின் கீழ்க் கட்டுப்பாடு செய்யப்படும் ஆளுநரின் பணிகளையும் அவரது உளத்தேர்வுப்படி (விருப்பப்படி) அவரால் கையாளப்படும் பணிகளையும் தவிர்த்து, மற்ற அரசுப் பணிகளை அவர் செயல்படுத்துவதற்காக, ஆளுநருக்கு ''அறிவுரை மற்றும் உதவியை'' (To Aid And Advice) வழங்க, முதலமைச்சரின் தலைமையில் அமைச்சரவை ஒன்று இருத்தல் வேண்டும்.

சட்டவிதி 163 (2)

ஒரு பொருள், அரசமைப்புச் சட்டத்தால் கடப்பாடு செய்யப்பட்ட வகையில், அது ஆளுநரின் உளத்தேர்வின்படி (விருப்பப்படி) செயல்படுத்தப்பட வேண்டிய பொருள்தானு? அல்லவா? என்ற வினு எழுந்தால், அதைப் பற்றித் தனது விருப்பப்படி ஆளுநர் செய்யும் தீர்ப்பே இறுதி முடிவாகும். ஆளுநரின் எந்தச் செயலையும் - அவர் தனது உளத்தேர்வால் தான் (Discretion) அச்செயலைச் செய்திருக்கிருரா—அல்லது அதனைச் செய்ய அவருக்கு உளத்தேர்வே கிடையாதா—என்ற அடிப்படையில், அச்செயலின் செல்லத்தக்க நிலைபற்றி யாரும் பரிசீலனை செய்தல் கூடாது.

சட்டவிதி 164 (3)

மாநிலத்தின் சட்டப் பேரவைக்கு மாநில அமைச்சரவை, கூட்டாகப் பொறுப்பானது.

இச் சட்டவிதிகளைக் கூர்ந்து படித்தால், அதில் நான்கு கோட்பாடுகள் கூறப்பட்டுள்ளதை நாம் அறியலாம்.

அவையாவன :—

(அ) நாடாளு மன்றக் குடியரசு முறைப்படி, மாநில நிர்வாகப் பணிகளும் ஆட்சி அதிகாரங்களும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட மாநில அமைச்சரவையின் ஆலோசனை மற்றும் உதவியின் பேரிலேயே (In aid and Advice of Cabinet) ஆளுநரால் நடைமுறைப் படுத்தப்படும். அஃதாவது, மாநில அமைச்சரவை - மாநில நிர்வாகத்தைப் பொறுத்து, எதை ''ஆலோசனை'' என்ற பெயரால் ஆளுநருக்குக் கூறுகிறதோ, அவை யாவும் ஆளுநர் பெயரால் நடைபெறும்.

ஆனுல் ஆளுநரின் இந்தப் பணிகளுக்கு, இரண்டு விதிவிலக்குகள் உண்டு. அந்த விதிவிலக்குகள் தான், நாடாளு மன்றக் குடியரசு முறைக்கும், மாநில சுயாட்சிக்கும் வெடி வைக்கின்றன.

(ஆ) விதி விலக்கு (1): ஆளுநர், அவருடைய உளத்தேர் வின்படி(விருப்பப்படி)எவ்வெப்போது நடக்க வேண்டுமென்று, அரசியல் சட்டம் ஆணையிடுகிறதோ, அப்போதெல்லாம் அவர் தனது விருப்பப்படி ஆட்சி அதிகாரம் செய்வார்.

விதி விலக்கு (2): ஆளுநருக்கு அவரது விருப்பப் படி நடக்க வேண்டு மென்று எவ்வப்போதெல்லாம் தோன்றுகிற தோ, அப்போதெல்லாம் அவருடைய இஷ்டப்படி அவர் நடக்கலாம்.

மேற்சொன்ன இரண்டு வகைச் சூழல்களில் ஆளுநர், மாநில அமைச்சரவையின் ஆலோசனை மற்றும் உதவியுடன் இயங்க வேண்டுவதில்லை. சுயமாகவே இயங்கலாம். அதாவது மேற் சொன்ன இரண்டு வகைச் சூழல்களில் அமைச்சரவையைப் பற்றிக் கிஞ்சித்தும் கவலைப்படாமல், அந்த மாநில அரசுக் காரியங்களை யெல்லாம் ஆளுநரே செயல்படுத்தலாம்.

(இ) ஆளுநரின் "உளத்தேர்வுப்படி", எந்தெந்தக் காரியங் களில் அவர் செயல்படலாம் என்பதை அரசமைப்புச் சட்டத்தின் எந்தச் சட்டவிதியும் கூறுவதில்லை. எனவே, ஒரு மாநிலத்தின் ஆளுநர், எப்போது எந்தச் சூழ்நிலையில் – எதனை விரும்பினாலும் அப்போது – அந்தச் சூழ்நிலையில் - அந்தக் காரியத்தை, தனது "உளத்தேர்வுக்கு" உட்பட்டது என்று அறிவித்துக் கொள்ளலாம்.

உதாரணமாக, ஒரு மாநிலச் சட்ட மன்றத்தில், பெரும் பான்மை உறுப்பினர்களைக் கொண்ட ஓர் அரசியல் கட்சியை ஆளுநர் "விரும்பினால்", அமைச்சரவையை அமைக்கத்தக்க நிகரப் பெரும்பான்மை உறுப்பினர்களை அந்தக் கட்சி பெற் றிருக்கவில்லை என்று "உளத்தேர்வு" செய்து கொள்ளலாம். உண்மையில் பெரும்பான்மைப் பலத்தைப் பெற்றிராத ஒரு கட்சியினை, அதுதான் பெரும்பான்மையைப் பெற்றுள்ளது எனவும் "உளத்தேர்வு" செய்து கொள்ளலாம். அந்தச் சிறு பான்மைக் கட்சியை அமைச்சரவையை அமைக்குமாறு ஆளுநர் கட்டளையும் பிறப்பிக்கலாம்.

அரசமைப்புச் சட்டத்தில் சொல்லப்பட்டுள்ளதோ, இல்லை யோ அதைப் பற்றி ஆளுநர் கவலைப்படத் தேவையில்லை. "பொதுவாக அரசமைப்புச் சட்டத்தைப் பேணி, ஆதரவளித்துப் பாதுகாக்கவே (Preserve, Protect, and Defend The Constitution) தனது விருப்பு அதிகாரத்தை (உளத்தேர்வை)ப் பயன் படுத்த வேண்டிய நிலை ஏற்பட்டது", என ஆளுநர் கருதினால் கூடப் போதுமானது, அந்த அரசுக் காரியத்தையும் நடிவடிக்

கையையும் தனது விருப்பதிகாரத்திற்குள் ஆளுநர் கொணர்ந்து கொள்ளலாம்; மாநில அரசு நடவடிக்கைகள் பற்றிய மாநில அமைச்சரவையின் ஜனநாயக அதிகாரங்களைக்கூடத் தனது விருப்பதிகாரங்கள் மூலமாக ஆளுநர் பறித்துக் கொள்ளலாம். ஆனால் அது 'ஜனநாயகக் கொலை' என்று ஆகி விடாது. அரசியல் சட்டபடி நியாயமானதாக ஆகிவிடும்.

(ஈ) நீதி மன்றங்கள் ஆளுநரின் விருப்பதிகாரச் செயல்களை விசாரிக்க இயலாது. ஆளுநரின் அப்பேற்பட்ட முறைகேடான நடவடிக்கை, சட்டப்படி செல்லத் தகுந்தது தானா என எந்த அமைப்பாலும் நீதி மன்றத்தாலும் ஆய்வு செய்ய முடியாது.

எனவே, சட்டவிதிகள் 163 (1) மற்றும் 163 (2) ஆகியவைகளைப் பயன்படுத்தி மத்திய அரசின் நிர்வாக ஏவலாளான மாநில ஆளுநர், தனது ''விருப்பு அதிகாரத்தை''வைத்து, ஏன், மாநிலத்தின் ஜனநாயக ஆட்சி முறையைக் கூடச் சட்டப்படி குழிதோண்டிப் புதைத்து விடலாமல்லவா?

ஆளுநரின் ''உளத்தேர்வை'' அவர் எப்போது பயன்படுத்தலாம் என்பது தான் அரசியற் சட்டத்தில் குறிப்பிடப்பட வில்லை. போகட்டும்; ''உளத்தேர்வு'' ''அதிகாரம்'' என்றால் என்ன? அச்சொல்லின் பொருள் தான் என்ன? என்ற அதன் இலக்கணத்தை யாவது 395 சட்டப் பிரிவுகளையும், 9 அட்டவணைகளையும் கொண்ட மிக நீண்ட நமது அரசமைப்புச் சட்டத்தில் கூறி யுள்ளார்களா என்றால் அதுவுமில்லை. ஏன்?

வேண்டு மென்றுதான் சொல்ல வில்லை.

மாநிலங்களை, '' ஆளுநர்கள் '' என்ற சாட்டையை வைத்து ஆட்டிப்படைக்க வேண்டுமே அதற்காகத் தான். ஆளுநர்களின் ''விருப்பதிகாரத்தின்'' பொருளை அரசமைப்புச் சட்டத்தில் காட்டி விட்டால், பிறகு அவரது அதிகாரத்திற்கு ஒரு வரையறை கட்டியதாக ஆகிவிடுமல்லவா? பொத்தாம் பொதுவில் 'விருப்பதிகாரம்' எனக் கூறினால் மாநில நிர்வாகத்தைப் பொறுத்த எதனை வேண்டுமானாலும், அந்தச் சொல்லினுள் கொணர்ந்து கொண்டு, சமயத்திற் கேற்றபடி — நிலைமைக் கேற்றபடி—மத்திய அரசின் எண்ணத்திற் கேற்றபடி — அந்தச் சொல்லின் பொருளை வளைத்துக் கொள்ளலாம் என்பதினால் தான், விருப்ப அதிகாரங்களை ஆளுநர் எப்போது பயன் படுத்த

வேண்டும்; விருப்ப அதிகாரங்கள் என்ற சொல்லின் பொருள் என்ன? என்பவை யெல்லாம் அரசியலமைப்பில் சொல்லாமல் விடப்பட்டுள்ளன.

எனவே, ஆளுநர் நினைப்பதெல்லாம் விருப்ப அதிகாரந்தான். அந்த மந்திரக்கோலை வைத்து, மாநிலங்களின் ஆட்சி யதிகாரங்கள் எதை வேண்டுமானாலும் ஆளுநர் பெற்றுக் கொள்ளலாம். யாரை வேண்டுமானாலும் முதலமைச்சராக ஆக்கலாம். எப்போது வேண்டுமானாலும் ஓர் அமைச்ச ரவையைக் கவிழ்க்கலாம். இப்படி எத்தனையோ?

''ஓம்'' என்பதற்குள் உலகத்திலுள்ள எல்லாமே அடங்கி விடும் என்கின்றனர் வேதாந்திகள். ஆளுநரின் 'உளத்தேர்வு' அதிகாரத்திற்குள், மாநில அரசின் எல்லா அதிகாரங்களும் அடங்கி விடுகின்றன எனச் சாற்றுகின்றனர் நமது அரசமைப்புச் சட்டத்தை வடித்த வல்லுனர்கள்.

## III

## குடியரசுத் தலைவருக்கு — உளத்தேர்வு அதிகாரமுண்டா?

அரசமைப்புச் சட்டம் அமுலுக்கு வந்து இருபத்து நான்கு ஆண்டுகளாகியும் ''ஆளுநரின் விருப்ப அதிகாரங்கள்'' என்ற இந்தக் கொடுமை பற்றி யாரும் கேட்பாரில்லை. ஆனால் ஆளுநரைப் போலவே, குடியரசுத் தலைவருக்கும் இந்த விருப் பதிகாரம் (உளத்தேர்வதிகாரம்) என்ற ''மந்திரக்கோல்'' கொடுக்கப்பட்டுள்ளதா என்ற சட்டப் பிரச்சினை, அரசமைப்புச் சட்டம் அமுலுக்கு வந்த சில நாட்களுக்குள் சந்திக்கு வந்து விட்டது. அரசியல் சட்டத்தைப் பெற்றெடுத்தவர்களுக் குள்ளேயே, இது பற்றிக் கருத்து வேறுபாடுகள் தோன்றி விட்டன. அதனால் மிகப் பெரிய உட்கட்சிப் பூசலும் நடை பெற்றது.

மிகப் பெரிய தேசியத் தலைவர்களாயிற்றே — எனவே ''குடியரசுத் தலைவருக்கு விருப்பு அதிகாரம் உண்டா'' என்ற சிக்கலும் ஒரு தேசியப் பிரச்சினையாக மாறிவிட்டது. முதல் குடியரசுத்தலைவரான பாபுராசேந்திர பிரசாத் அவர்களுக்கும் முதல் பிரதம மந்திரியான பண்டித நேரு அவர்களுக்குமிடையே குடியரசுத் தலைவருக்கு விருப்பு அதிகாரங்கள் உண்டா என்ற

பிரச்சினை தீவிரமாக மூண்டு விட்டது. அதனால், அரசியலமைப்புச் சட்ட விதிகளைப் பற்றிய சில விளக்கங்களும் நமக்கு அதிகாரப் பூர்வமாகக் கிடைத்தன. ஆளுநரின் ''விருப்பதிகாரம்'' எத்துணைக் கொடுமை விளைவிக்கும் என்பதனையும் ஆளுநரின் அந்த அதிகாரங்கள் குடியாட்சி முறைக்கு எந்த அளவில் முரண்பாடு கொண்டவை என்பதையும், அந்த விளக்கங்கள் தெளிவுபடுத்துவதால் அவை பற்றி இங்கே குறிப்பிடப்படுகிறது.

ஆளுநர் பற்றிய 163 (1), 163 (2), 163 (3) ஆகிய சட்ட விதிகளைப் பார்த்தோம். அவை போலவே குடியரசுத் தலைவருக்கான 53-ஆவது 74-ஆவது மற்றும் 75-ஆவது சட்டவிதிகளைப் பார்ப்போம்.

**சட்டவிதி 53**

''மத்திய அரசின் நிர்வாக அதிகாரம் முழுவதும் குடியரசுத் தலைவரின் உடைமையில் இருக்கும். அவரால் நேரடியாகவோ அல்லது அவருக்குக் கீழ் உள்ள அதிகாரிகள் மூலமாகவோ, அரசமைப்புச் சட்டத்தின்படி அந்த அதிகாரங்கள் செயல் படுத்தப்படும்......''

**சட்ட விதி 74 (1)**

''குடியரசுத் தலைவர், அவரது அரசுப் பணிகளைச் செயல்படுத்துவதற்குத் தேவையான அறிவுரை மற்றும் உதவியினை வழங்குவதற்காக, (To Aid And Advice) தலைமை அமைச்சரை (பிரதம மந்திரி) தலைவராகக் கொண்ட ஓர் அமைச்சரவை இருத்தல் வேண்டும்.

**சட்டவிதி 74(2)**

''குடியரசுத் தலைவருக்கு (மத்திய) அமைச்சர்கள் என்ன அறிவுரையை வழங்கினார்கள் என்பதனை எந்த நீதிமன்றமும் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளலாகாது.''

**சட்டவிதி 75**

1. தலைமை அமைச்சரைக் குடியரசுத் தலைவர் நியமித்தல் வேண்டும். மற்ற அமைச்சர்களைத் தலைமையமைச்சரின் அறிவுரையின் பேரில் குடியரசுத் தலைவர் நியமித்தல் வேண்டும்.

2. குடியரசுத் தலைவர் விரும்பும் வரை (மத்திய) அமைச்சர்கள் பதவி வகிப்பர்.

3. அமைச்சரவை, நாடாளுமன்றத்திற்கே மொத்தமாகப் பொறுப்புடையது.

சட்ட விதி 53–இன் படி, மத்திய அரசினுடைய நிர்வாகத் தலைவராகக் குடியரசுத் தலைவர் ஆக்கப்பட்டாலும் கூட, சட்ட விதி 74-இன்படி நாடாளுமன்ற ஜனநாயக முறையில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைமையமைச்சரும் அவரது அமைச்சரவையும் வழங்கும் ஆலோசனையின்படியே, குடியரசுத் தலைவருடைய (மத்திய அரசாங்கத்தின்) எல்லா ஆட்சி அதிகாரங்களும் செயல் படுத்தப் படும் என்பது தெளிவாகிறது.

நாடாளு மன்றத்தின் இரு சபையின் உறுப்பினர்களும் மாநில சட்ட மன்றத்தின் மேலவை, கீழவை உறுப்பினர்களும் சேர்ந்து குடியரசுத் தலைவரை மறைமுகத் தேர்தல் மூலமாக — அதாவது விகிதாச்சார பிரதிநிதித்துவ ஒற்றை மாற்றுமுறை வாக்கினால் — தேர்ந்தெடுக்கின்றனர். ஆனால் இதற்கு நேர்மாறாக மத்திய அமைச்சரவையின் யோசனையின் பேரில் மாநில ஆளுநர் — குடியரசுத் தலைவரால் நியமிக்கப்படுகிறார்.

ஒரு மாநிலத்தின் ஆளுநருக்கு விருப்பு அதிகாரங்களை (உளத்தேர்வு அதிகாரம்) கொடுத்த அரசமைப்புச் சட்டம், இந்தியத் துணைக் கண்டத்தின் குடியரசுத் தலைவருக்கும் தன்னிச்சையாய் இயங்கும் உளத்தேர்வு அதிகாரத்தை வழங்கி இருக்கும் என நமக்குத் தோன்றும். ஆனால், குடியரசுத் தலைவருக்கு விருப்பு அதிகாரங்கள் எதையும் அரசியலமைப்புச் சட்டம் வழங்க வில்லை. ஏன்?

மாநிலங்களை மத்திய அரசின் கட்டுக்குள் வைப்பதற்காகவே மாநில ஆளுநர் படைக்கப்பட்டார்; ஆளுநருடைய விருப்பு அதிகாரங்கள், நாடாளுமன்றக் குடியரசு முறைக்கும் கூட்டாட்சித் தத்துவத்திற்கும் முரணாகப் படைக்கப்பட்டன.

ஆனால், மத்திய அரசு (மத்திய அமைச்சரவை) குடியரசுத் தலைவரின் கைக்குள் சிக்கிக் கொள்ள விரும்பவில்லை. எனவே, குடியரசு முறைப்படி மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட மத்திய அமைச்சரவையே சர்வ வல்லமையுள்ளதாக ஆக்கப்பட்டுள்ளது.

பெயரளவிற்குத்தான் குடியரசுத் தலைவர் மத்திய அரசின் தலைவர். உண்மையில் அவர் நாட்டுக்குத்தான் தலைவர். ஆனால் உண்மையான நிர்வாகத் தலைவர் அல்லர். எனவே, அவருக்கு விருப்பு அதிகாரங்கள் அளிக்கப்படவில்லை.

1948–ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் அரசியலமைப்புச் சபையில் குடியரசுத் தலைவரின் நிலைமை பற்றி வினவெழுந்த போது டாக்டர் அம்பேத்கார்,

> "குடியரசுத் தலைவர், நாட்டினுடைய தலைவர்; ஆனால், நாட்டு நிர்வாகத்தின் உண்மையான தலைவரல்ல...... பொதுவாக மத்திய அமைச்சரவையின் அறிவுரைக்கு அவர் கட்டுப் பட்டவர்; அமைச்சரவையின் அறிவுரையில்லாமல் அவரால் எதுவுமே செய்ய முடியாது."2

எனத் தெளிவாக்கினர்.

அதன் பின்னர் 10—12—1948–ஆம் நாளில் வரைவுச் சட்டத்தில் (Draft Constitution) எழுதப்பட்டிருந்த குடியரசுத் தலைவர் பற்றிய சட்டவிதி, விவாதத்திற்கு எடுக்கப்பட்ட போது, வரைவுக் குழுவின் சார்பில் டாக்டர் அம்பேத்கார் அவர்கள் பேசும்போது,

> "மத்திய அரசமைப்புக் குழுவின் அறிக்கைப்படி, குடியரசுத் தலைவர் மத்திய நிர்வாகத்தின் தலைவராக இருப்பார் எனவும், மத்திய அமைச்சரவையின் ஆலோசனையே, அவருக்கு வழி காட்டும் எனவும் அரசமைப்புச் சட்டத்தின்படி அவருக்கு அளிக்கப்பட்ட அதிகாரத்தை அவர் செயல் படுத்தும் போது, அவருடைய எல்லா நடவடிக்கைகளையும் அமைச்சரவை யின் அறிவுரையே கட்டுப்படுத்தும் எனவும் கூறுகிறது."3

என எடுத்துக் காட்டினர்.

இறுதியில் இந்தக் கருத்தைத் தாங்கியே தற்போதைய 74, மற்றும் 75–ஆம் சட்டவிதிகள் நமது அரசமைப்புச் சட்டத்தில் இடம் பெற்றுள்ளன.

---

2 C. A. D. Proceedings of 14-11-1948, Page. 32

3 C. A. D. Proceedings of 10-12-1948, P. 974

ஆளுநரும் குடியரசுத் தலைவரும்

ஆளுநர் பற்றிய 163-ஆவது சட்டவிதியையும், குடியரசுத் தலைவர் பற்றிய 74-ஆம் சட்ட விதியையும், ஒரு கணம் நாம் ஒப்பிட்டுப் பார்த்தால், ''ஆளுநருக்கு அளிக்கப்பட்ட உளத் தேர்வு அதிகாரம்'' மற்றும் ''எவையெல்லாம் ஆளுநரின் உளத் தேர்வைச் சார்ந்தது — என்பதனை முடிவு செய்து கொள்ளும் ஆளுநரின் உரிமை அதிகாரம்'' போன்றவை, சட்ட விதி 74-இல் குடியரசுத் தலைவருக்கு அளிக்கப்பட வில்லை என்பது தெற்றென விளங்கும்.

மேலும் சட்டவிதி 74-இன்படி, மத்திய அரசுப் பணிகளை ஆற்றுவதற்கு மத்திய அமைச்சரவையின் அறிவுரை மற்றும் உதவியினையே குடியரசுத் தலைவர் பெற வேண்டும். அஃதாவது மத்திய அமைச்சரவையே மத்திய அரசாங்கத்தின் நிர்வா கத்தை (குடியரசுத் தலைவரின் பெயரில்) நடத்தும்.

இந்த அடிப்படைக் கொள்கையில் இன்னும் சில விளைவு களும் தொக்கி நிற்கின்றன.ஒரு மாநிலத்தின் ஆளுநர்,தனது உளத்தேர்வு அதிகாரத்தின் மூலமாக ஒரு மாநிலத்தின் அமைச்சரவையைக் கலைப்பதைப் போல — மாநிலச் சட்ட மன்றத்தைக் கலைப்பதைப் போல — இந்திய நாட்டின் குடி யரசுத் தலைவர்கூடத் தன்னிச்சையாக (மத்திய அமைச்சரவை யின் ஆலோசனையின்றி) மத்திய அமைச்சரவையையோ அல்லது நாடாளுமன்றத்தையோ — கலைத்துவிட முடியாது.

அதைப் போலவே, மத்திய அரசாங்கம் உண்மையிலேயே இயங்காத ஒரு ''நெருக்கடி நிலை'' ஏற்பட்டாலும் கூட, மாநில ஆளுநரைப்போல்–குடியரசுத் தலைவர் மத்திய அரசாங் கத்தைத் தானே தன் மீது ஏற்றுக் கொண்டு நேரடியாகவும் ஆட்சி செய்ய முடியாது.

ஆட்காரனுன ஆளுநருக்களிக்கப்பட்ட உரிமை — பாவம் ஆண்டானுன குடியரசுத் தலைவருக்குக் கொடுக்கப்படவில்லை. மத்திய அரசு பெற்றிருக்கும் உண்மைச் சனநாயக நிலையும் மாநில அரசு பெற்றிருக்கும் அடிமை நிலையும் இதிலிருந்து தெளிவாகவில்லையா?

## IV

## பண்டித நேரு-எதிர்-இராசேந்திர பிரசாத்

நமது அரசமைப்புச் சட்டத்தின்படி, குடியரசுத் தலைவருக்குத் தரப்பட்ட அதிகாரங்கள் யாவும் வெறும் பெயரளவு அதிகாரங்கள். ஆனால் அந்த அதிகாரங்கள் எல்லாம் பிரதம அமைச்சருக்கே உண்மையில் சொந்தமான அதிகாரங்கள். இதனால் காங்கிரசின் இருபெரும் தலைவர்களுக்கிடையே "நான் பெரியவனா? நீ பெரியவனா?" என்ற பதவிப் போட்டி அரசமைப்புச் சட்டம் என்ற பந்தய மைதானத்தில் நடைபெற்றது.

அரசமைப்புச் சபையின் தலைவராய் இருந்த இராசேந்திர பிரசாத் அவர்களே, அரசமைப்புச் சட்டம் உருவாகி ஏற்றுக் கொள்ளப்பட்டு, அமுலுக்கு வந்த பின்னாலும் கூட இந்திய நாட்டின் முதல் குடியரசுத் தலைவராக வரக்கூடிய சூழ்நிலை யிருந்தது. அதைப் போலவே பண்டித நேரு அவர்கள், இந்திய நாட்டின் முதல் பிரதமராக வரக்கூடிய சாத்தியக் கூறுகளும் இருந்தன. ஆனால், அரசமைப்புச் சட்டத்தால் அளிக்கப்பட்ட அதிகாரங்களின்படி, குடியரசுத் தலைவர் இந்திய நாட்டின் பொம்மைத் தலைவர்; பிரதம மந்திரிதான் நாட்டின் உண்மையான தலைவர். எனவே, இந்திய நாட்டின் மிகப் பெரும் பதவியான குடியரசுத் தலைவர் பதவிக்கு இராசேந்திர பிரசாத் அவர்கள் வந்தாலும் கூட, தலைமையமைச்சராக வரும் நேருவுக்குக் கட்டுப்பட வேண்டிய தாழ்வு நிலைக்கு அவர் தள்ளப் படுகிறார். ஆகவே, அரசியல் குறுக்கிட்டது.

1949-ஆம் ஆண்டிலேயே இனி வரக்கூடிய முதல் குடியரசுத் தலைவர் யாரென்ற வினா எழுந்தது. நேருவைப் புகழ் பாடும் ஒரு பம்பாய்ப் பத்திரிகை 1949-ஆம் ஆண்டு சூன் மாதத்தில் அரசியல் கட்டுரை ஒன்றை எழுதிற்று. அதில் அப்போது நேருவுக்குத் துணையாய் நிற்கும் இராசாசியே முதல் குடியரசுத் தலைவராக வரலாமெனவும்—மற்ற காங்கிரஸ் தலைவர்களால் தூண்டப் பட்ட இராசேந்திர பிரசாத் அவர்களும் குடியரசுத் தலைவர் போட்டியில் பங்கு பெறுவார் எனவும் அரசியல் யூகங்களைப் பரப்பிற்று. இராசேந்திர பிரசாத்துக்கு எதிராக இராசாசியையே பண்டித நேரு அவர்கள் ஆதரிக்கிறார் எனத் தெரிந்தவுடன், அரசமைப்புச் சபையில் காங்கிரஸ் உறுப்பினர்களிடையே பெருத்த குழப்பம் நிலவிற்று. பலர் இராசேந்திரப் பிரசாத்துக்குக் கடிதங்கள் கூட எழுதலாயினர்,

இதனைக் கண்ட நேரு அவர்கள், இராசேந்திர பிரசாத்துக்கு 'திட்டக்குழுத் தலைவர்' பதவியை அளிக்க முன் வந்தார். இராசேந்திர பிரசாத் அதனை மறுத்தார். 1949-ஆம் ஆண்டு இறுதியில், காங்கிரஸ் கட்சியின் தலைவர் பொறுப்பை இராசேந்திர பிரசாத்திற்கு அளிப்பதற்கும் கூட பண்டித நேரு தயாரானார். ஆனால் இராசேந்திர பிரசாத் அதனையும் மறுத்து விட்டார். காங்கிரஸ் கட்சிக்குள் உட்பூசல் எழுந்தது. இந்திய அரசமைப்புச் சபையின் தலைவராய் இருந்தவரே அரசமைப்புச் சட்டம் நிறைவேறிய பின்னரும் குடியரசுத் தலைவராய் இருத்தல் வேண்டும் என்ற தீர்மானமும் காங்கிரஸ் காரியக் கமிட்டியில் இராசேந்திரப் பிரசாத்திற்காதரவாகக் கொண்டு வரப்பட்டது. மிகப் பெரிய வாக்கு வாதங்கள் நடைபெற்றன. நேரு கோஷ்டிக்கும் மற்றவர்களுக்கு மிடையே பெரும் போராட்டம் நடந்தது. இறுதியில் சர்தார் பட்டேல் தலையிட்டு அரசமைப்புச் சபையின் தலைவரே இந்தியக் குடியரசு நாட்டின் முதல் குடியரசுத் தலைவராகவும் இருப்பார் என மத்தியஸ்தம் செய்தபின் அந்தத் தீர்மானம் கைவிடப் பட்டது.

ஆனால், 26—11—1949-இல், டாக்டர் இராசேந்திர பிரசாத் அவர்கள், தன்னுடைய நெஞ்சை அரித்துக் கொண்டிருந்த குடியரசுத் தலைவரின் பதவி பற்றிய ஐயப்பாடுகளை - அரசமைப்புச் சபையில் எடுத்தியம்பினார் :

“தேர்ந்தெடுக்கப்பட்ட குடியரசுத் தலைவரின் நிலையையும் தேர்ந்தெடுக்கப்பட்ட நாடாளு மன்றத்தையும் சரி செய்து கொண்டு நாம் செல்ல வேண்டும். அதற்காகக் குடியரசுத் தலைவர் பதவியை ஏறத்தாழ இங்கிலாந்து அரசரின் பதவியைப் போல் நாம் ஏற்றுக் கொண்டுள்ளோம். இந்த முறை திருப்திகரமானதாகவும் இருக்கலாம் ; திருப்தியற்றதாகவும் இருக்கலாம். குடியரசுத் தலைவருக்கு மிக அதிகமான அதிகாரங்களைக் கொடுத்து விட்டதாகச் சிலர் நினைக்கின்றனர். குடியரசுத் தலைவர் தேர்ந்தெடுக்கப்படக் கூடிய ஒரு தலைவராக இருக்கும் காரணத்தினால்,அவருக்குத் தற்போது கொடுக்கப்பட்டுள்ளதைக் காட்டிலும் இன்னும் சில அதிகாரங்கள் கொடுக்கப்படவேண்டும் என்றும் பலர் கருதுகின்றனர். நாடாளு மன்ற உறுப்பினர்கள், சட்ட மன்ற உறுப்பினர்கள் ஆகியோர் வாக்களித்து, குடியரசுத் தலைவர் தேர்ந்தெடுக்கப்பட்டாலும் கூட, அரசமைப்புச் சட்டப்படி அவர் ஒரு பொம்மைத் தலைவராக உருவாக்கப்பட்டுள்ளார். அவர் உண்மையான தலைவராக ஆக்கப்

படல் வேண்டும். நான் அறிந்தவரை, ''அமைச்சரவையின் அறிவுரை மட்டுமே குடியரசுத் தலைவரைக் கட்டுப்படுத்தும்'' என்ற சட்டவிதிகள், நமது அரசமைப்புச் சட்டத்தில் தெளிவாக இல்லை. எனினும், இங்கிலாந்தின் அரசர், இங்கிலாந்து அமைச்சரவையின் அறிவுரையின் மேல், எப்படி இயங்குகிறாரோ – அதே மரபை இந்த நாட்டிலும் நிலை நிறுத்தச் செய்ய வேண்டுமென நாம் நம்புவோமாக. அரசமைப்புச் சட்டத்தில் வெளிப்படையாக எழுதப்பட்டுள்ள சொற்களால் மட்டுமல்ல ; இந்த ஆரோக்கியமான மரபை ஒட்டி இந்தியக் குடியரசுத் தலைவர் எல்லா வகையிலும் ஓர் அரசமைப்பின் உண்மைத் தலைவராக உருவாக வேண்டும்.''4

என இராசேந்திர பிரசாத் அவர்கள் தனது உள்ளக் கிடக்கையை வெளியிட்டார்.

விவகாரம் இத்தோடு முடியவில்லை. இராசேந்திர பிரசாத் அவர்கள் 26—1—1950–ஆம் நாளில் குடியரசுத் தலைவராகப் பதவி ஏற்ற பின், இரண்டு திங்களில் – குடியரசுத் தலைவர் பதவி பற்றிய சில வியாக்கியானங்கள் அவரால் மீண்டும் தொடரப்பட்டது. அவர் சில அரசியலமைப்புச் சட்ட வினாக்களை எழுப்பினார்.

அவையாவன :—

1) அமைச்சரவையின் அறிவுரையைத் தவிர, குடியரசுத் தலைவர் சுதந்திரத்தோடு தனியாக இயங்கத் தக்க சூழ்நிலைகள் அரசியல் சட்டத்தில் இடம் பெற்றுள்ளதா ?

2) நாடாளு மன்றத்தால் நிறைவேற்றப்பட்ட ஒரு சட்ட மசோதாவைக்குடியரசுத் தலைவர் தன்னுடையவிருப்பப்படி இசைவினைத் தாராமல் திருப்பி அனுப்பிவிட முடியுமா? அல்லது குடியரசுத் தலைவரின் இசைவைத் தானாகவே கொடுத்துத் தீர வேண்டிய கட்டாயமுள்ளதா ?

3) ஒரு சட்டத்தை – நாடாளு மன்றத்தில் இயற்றுவதற்குரிய பொறுப்பினை மத்திய அமைச்சரவை ஏற்றுள்ளது ; அந்த மத்திய அமைச்சரவையின் ஆலோசனைப்படியே அச்சட்டத்திற்குண்டான இசைவினையும் குடியரசுத் தலைவர் வழங்க வேண்டும் என்பது எவ்வகையில் பொருந்தும்?

---

Dr. Rajendra Prasad, C. A. D., Proceedings of 26-11-1949 Pp. 281 - 282

தலைமை அமைச்சர் நேருவுக்கு இது பற்றி அவர் கடிதம் எழுதினார். இந்தியாவின் அட்டார்னி ஜெனரலான சட்ட வல்லுநர் திரு. எம். செதல்வாடு (M. SETALVAD) அவர்களை, இதுபற்றிச் சட்ட ஆலோசனையை வழங்குமாறு, பண்டித நேரு பணித்தார். 6—10—1950-இல் செதல்வாடின் சட்ட ஆலோசனை வெளியாயிற்று. பதவிப் போட்டிப் பிரச்சனையும் ஒரு வழியாக முடிவடைந்த மாதிரித் தென்பட்டது. ஆனால் பதவி ஆசைக்கு முடிவேது? எனவே, உண்மையில் இப்பிரச்சனை இறுதி முடிவினை அடைய வில்லை.

மீண்டும் 15-9-1951-இல் இராசேந்திர பிரசாத் அவர்கள் மேற்சொன்ன அரசியல் சட்ட வினாக்களைக் கொண்ட மற்றொரு கடிதத்தைத் தலைமை அமைச்சருக்கு எழுதினார். இம்முறை நேரு அவர்கள் திரு. செதல்வாடு மற்றும் அரசியல் சட்ட வல்லுனர் திரு. அல்லாடி கிருஷ்ணசாமி ஆகியவர்களின் ஆலோசனைக்காக அதனை அனுப்பி வைத்தார். இரண்டு சட்ட நிபுணர்களும் ஒரே கருத்தை வலியுறுத்தினர்.

அக்கருத்து வருமாறு :-

''மத்திய அமைச்சரவையின் அறிவுரை நீங்கலாக, குடியரசுத் தலைவரே சுதந்திரமாகத் தனித்துச் செயல்படக் கூடிய எந்த ஓர் அரசுப் பணியும் அரசமைப்புச் சட்டத்தில் இடம் பெற வில்லை...... 'அமைச்சரவையின் அறிவுரை மற்றும் உதவி' என்ற சொற்றொடர் 1935-ஆம் ஆண்டு இந்திய அரசுச் சட்டத்திலிருந்து கடன் வாங்கப்பட்டதால் இங்கிலாந்தின் அரசமைப்பு நடைமுறை விளைவுகளே இந்தியாவின் அரசியல் சட்டவிதியாகவும் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. நமது அரசமைப்புச் சட்டவிதிகள் 53, 74, மற்றும் 75 ஆகியவை இந்திய நாட்டின் நிர்வாகத்தைப் பொறுத்த அளவில், நாடாளு மன்றத்தினுடைய மக்களவையையே முற்றிலும் முதன்மை யானதாக (Supreme) ஆக்குகின்றன... மத்திய அமைச்சரவையின் அறிவுரையையும் உதவியினையும், குடியரசுத் தலைவர் மறுக்கும் கணத்திலேயே, அரசமைப்பு இயந்திரம் தானாக முறிந்துவிடும். சட்டவிதி 74(1)-இன்படி தெளிவாகக்

குறிப்பிடலான குடியரசுத் தலைவரின் (பெயரளவு) அரசுப் பணிகளும் அந்தக் கணம் முதல் முடிவடைந்து விடும்.''5

என, செதல்வாடு அவர்கள் சட்ட ஆலோசனை வழங்கினர்.

அக் கருத்தினையே அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர் அவர் களும் வலியுறுத்திக் கூறினர்.

எனவே, குடியரசுத் தலைவருக்கு ''உளத்தேர்வு அதிகாரமோ'' அல்லது''எந்த வகைத் தனித்த அதிகாரமோ''நமது அரசமைப்புச் சட்டத்தால் வழங்கப்படவில்லை என்பதை செதல்வாடு அவர்களின் சட்ட ஆலோசனை தெளிவாக்குகிறது.

இறுதி வரை பண்டித நேரு அவர்கள், தனது தலைமை யமைச்சர் பதவியின் அதிகாரங்களைக் குறைத்துக் கொள்ள விரும்பவில்லை. எனவே, இருபெரும் தேசியத் தலைவர்களுக் கிடையில் ஏற்பட்ட மோதல்களும் இறுதி வரைத் தீரவுமில்லை.

வல்லபாய் பட்டேல் அவர்கள் இறந்தபோதுகூட, பம்பாயில் நடந்த அவரது இறுதி ஊர்வலத்தில் டாக்டர். இராசேந்திர பிரசாத் அவர்கள் நேரடியாகப் பங்கேற்றுக் கொள்ளக் கூடாது என்ற வேண்டுகோள் குறிப்பை ''அறிவுரை மற்றும் உதவி'' என்னும் பெயரால் – அரசமைப்புச் சட்டத்தின் விதிகள் என்ற கட்டுக் கோப்பினுள் அமைத்து - தலைமை யமைச்சர் என்றமுறையில் பண்டித நேரு அவர்கள் குடியரசுத் தலைவருக்கு அனுப்பித் தடைபோட்டார். ஆனால், நேருவின் வேண்டுகோளைத் துச்சமென மதித்த குடியரசுத் தலைவர் அவர்கள், அமரர். பட்டேல் அவர்களின் சவ ஊர்வலத்தில் கலந்து கொண்டார்.6

மத்திய அமைச்சரவையால் எத்துணையளவு கீழ் நிலைக்கு வேண்டுமானாலும் குடியரசுத் தலைவரைக் கட்டுப்படுத்தலாம் என்பதற்கு மேற்சொன்னது ஒரு மிகச் சிறந்த சான்றாகும்.

---

5 Legal opinion given by Mr. M C Setalvad, Date 6-10-1950 Quoted from Paras 3, 6. 7, 20, 24, 26. Appendix of "Pilgrimage to Freedom" (1967), By Dr. K. M. Munshi, Pp. 570 - 575.

6 "Pilgrimage to Freedom," (1967), P. 290 by Dr. K. M. Munshi.

பல்லாண்டுகளாக ஒரே கட்சியில் பணியாற்றிய தலைவர்கள்; இந்திய மக்களின் தலைவிதியை நிர்ணயித்த அரசமைப்புச் சட்டத்தை உருவாக்கிய தேசியத் தலைவர்கள்; காந்தியடிகளுடைய அரசியல் வாரிசுகள்; பின்வரும் தலைமுறைக்கு அரசமைப்பு விதிகளையும் மரபுகளையும் முன்னோடிகளாக நின்று வழி காட்டிய தலைவர்கள் – ஒரே கட்சியினுள் பதவிப் போட்டி வரும் பொழுது – ஒருவர் குடியரசுத் தலைவர் மற்றவர் தலைமையமைச்சர் என்ற நிலைமை வரும்போது – அரசமைப்புச் சட்டம் வல்லவனுக்கேற்றபடி வளைந்து கொடுக்கும் தன்மையைப் பெற்றுள்ளது போலும்.

அந்த இரு தலைவர்களினுடைய இன்னும் ஒரு நெருங்கிய பெருந் தலைவர் சாவிற்குக் கூடப் போகக் கூடாதென்ற தடையினை அரசியல் சட்டத்தின் அடிப்படையில், தலைமை அமைச்சரால் குடியரசுத் தலைவருக்கு விதிக்கப்படுகிறதெனில் மாநிலத்தின் நிலை என்ன?

அதற்கு நேர் மாறான நிலையே, மாநிலத்தில் நடைபோடுகிறது. அஃதாவது சட்ட வல்லுநர், செதில்வாடு அவர்கள் விளக்கிய குடியரசுத் தத்துவம் மாநிலங்களுக்குப் பொருந்துவதில்லை எனக் கூறுகிறது நமது அரசியலமைப்புச் சட்டம்.

ஒரு மாநிலத்தின் முதலமைச்சரின் உறவினர் இறந்துவிட்டால்கூட, அந்த மாநிலத்தின் ஆளுநர் தனது ''உளத் தேர்வு அதிகாரத்தைப்'' பயன்படுத்தி ஓர் அரசாணைக் குறிப்பை அந்த முதலமைச்சருக்கு அனுப்பி அவரை அந்தச் சவ ஊர்வலத்தில் கலந்து கொள்ளக் கூடாதெனத் தடைபோடலாமல்லவா? அதிர்ஷ்ட வசமாக உண்மையில் அப்படியொரு சூழ்நிலை இன்னும் வரவில்லை. எதிர்காலத்தில் அப்படி ஒன்று வந்தாலும் (அரசமைப்புச் சட்டப்படி) நாம் வியப்படையத் தேவையில்லை.

எனவே, மாநிலங்களைப் பொறுத்த வரை, தலைகீழ்ப்பாடம் நடைமுறையாக்கப்பட்டுள்ளது. மாநிலத்தில் ஆளுநர் – முதலமைச்சரை ஆட்டிப் படைக்கிறார்; ஆனால் மத்திய அரசிலோ தலைமையமைச்சர்- குடியரசுத் தலைவரை விருப்பம்போல் ஆட்டிப் படைக்கிறார்.

இந்த இரண்டு முரண்பட்ட முறைகளும் ஒரே நாட்டில் ஒரே அரசமைப்புச் சட்டத்தால், ஒரே வகைக் குடியரசு முறையில், ஒரே தன்மையோடு இயங்க வேண்டிய அரசுகளுக்குள் இருக்கும் ''ஒருமைப்பாடு''!!?

## V

## ஆளுநரின் உளத்தேர்வு அதிகாரங்கள் பற்றிய வினக்கள்

உளத்தேர்வு அதிகாரங்கள் இன்னின்னவை என அரசமைப்புச் சட்டத்தில் குறிக்கப்படவில்லை; அதன் பொருளும் இலக்கணமும் அதில் இடம் பெறவில்லை. இந்நிலையில், மாநில அமைச்சர்கள் ஆளுநரது விருப்புக் காலம் வரைதான் பதவி வகிக்க வேண்டும் எனச் சட்டவிதி 164 (1) தெளிவாக அறுதியிட்டுக் கூறுகிறது. எனவே ஒரு மாநில ''அமைச்சரவையின் ஆயுட்காலம்'' மற்றும் அதன் ''சட்ட மன்றத்தின் ஆயுட்காலம்''—ஆகியவை, ஆளுநரின் ''உளத்தேர்வுப்படி'' தான் நிர்ணயம் செய்யப்படுகிற தென்றால், அது மிகையாகாது.

சென்ற 24 ஆண்டுகளில் இங்கிலாந்தைப்போல், ஆரோக்கியமான குடியரசு மரபுகள் நமது நாட்டில் உருவாகவில்லை. மாறாக, மத்திய அரசிற்கு முகவராயிருக்கும் பணியையே—மாநில நிர்வாக நலனுக்கு முரணாகக் கூட—ஆளுநர்கள் தங்கள் முழு முதற் கடமையாகப் போற்றி வந்துள்ளனர். அவைகளை ஆய்ந்து நோக்கின், மாநில அரசுகளைச் சார்ந்த ஆளுநரின் விருப்பு அதிகாரங்களைப் பற்றிய ஆறு வகைப் பொருள் பொதிந்த அரசியலமைப்பு வினக்கள் எழுகின்றன.

அவையாவன:—

அ) மாநிலத்தின் முதலமைச்சரை நியமனம் செய்யும் அதிகாரம், ஆளுநருக்களிக்கப் பட்டுள்ளது. ஆனல், அந்த முதல்வரை ஆளுநர் எப்படித் தேர்ந்தெடுக்க வேண்டும் என்ற முறை அரசமைப்புச் சட்டத்தில் தெளிவாகச் சொல்லப்படவில்லை. அது ஆளுநரின் உளத்தேர்வுக்கே விடப்பட்டுள்ளது. எனவே, ஆளுநர் தனது உளத்தேர்வைச் செயல் படுத்தி ஒரு மாநில முதலமைச்சரைப் பதவியிலிருந்து எப்போது வேண்டுமானலும் நீக்கிவிடலாமா?

ஆ) மாநிலச் சட்டமன்ற உறுப்பினர்கள் பெரும்பான்மை யினரின் ஆதரவை ஒரு முதலமைச்சர் இழந்து விட்டாரா? அல்லது பெற்றிருக்கின்ருரா? என்பதை ஆளுநர் கண்டறிவதற் கான வழிவகை என்ன?

இ) ஒரு முதலமைச்சர் பெரும்பான்மைச் சட்ட மன்ற உறுப்பினர்களின் ஆதரவை இழந்து விட்டார் என்ற ஐயம் எழு கின்றபோது, முதலமைச்சரின் அறிவுரையின் பேரில் மற்ற அமைச்சர்களை நியமனம் செய்ய முடியாது என ஆளுநர் மறுத்துவிட முடியுமா?

ஈ) மாநிலச் சட்டமன்றத் தொடர்க்கூட்டம் ஏற்கெனவே நிர்ணயிக்கப்பட்ட தேதியிலிருந்து முன் தேதிக்குக் கொண்டு வரும்படி ஒரு முதலமைச்சரை மாநில ஆளுநர் கட்டாயப் படுத்த முடியுமா?

உ) ஒருக்கால் ஆளுநர் அந்த முதலமைச்சரை மேற் சொன்ன வகையில் கட்டாயப் படுத்தினுல் அதனை மாநில முதல்வர் மறுதளித்தால், ஆளுநருக்குரிய பரிகாரம் என்ன?

ஊ) ஒரு முதலமைச்சருக்குச் சட்டமன்றத்தில் உரிய பெரும் பான்மை பலம் உள்ளது என்பதைச் சட்டமன்றத்தில் ஆளுநர் நிர்ணயிக்க வேண்டுமா? அல்லது வேறு வகையிலும் கூட அதனை உறுதிப்படுத்த முடியுமா?

இவை போன்ற விடை பெற முடியாத பல அரசமைப்பு வினக் கள் ஆளுநரின் உளத்தேர்வு சார்ந்த அதிகாரங்களிலிருந்து எழுகின்றன. ஆனுல், இதுவரை அதற்குரிய நெறிமுறைக் கோட்பாடுகளோ அல்லது எழுத்து மூலமான சட்ட விதிகளோ நமது அரசமைப்பில் வேண்டுமென்றே தெளிவு செய்யப்பட வில்லை.

ஆனுல், இன்றிருக்கும் அரசியலமைப்புச் சட்டப்படி, ஆளுநருக்குள்ள பயங்கர உளத்தேர்வு அதிகாரங்களைப் பல அரசமைப்பு வல்லுனர்கள் ஏறத்தாழத் தொகுத்துத் தருகின்றனர்.

அவையாவன:

அ) முதலமைச்சரை நியமித்தல்;

ஆ) அமைச்சரவையைக் கலைத்தல்;

இ) சட்ட மன்றத்தைக் கலைத்தல்;

ஈ) சட்டமியற்றுத் துறையைச் சார்ந்த தகவல்களையும் நிர்வாகத்தைச் சார்ந்த தகவல்களையும் முதலமைச்சரிடமிருந்து ஆளுநர் கேட்டுப் பெறுதல்;

உ) அமைச்சரவையினால் ஆலோசனை செய்யப்படாத சில அரசியல் பிரச்சினைகளை, அமைச்சரவைக்கு ஆலோசனை செய்வதற்காக வைக்கப்படல் வேண்டுமென முதலமைச்சரை ஆளுநர் முறைப்படுத்துதல்;

ஊ) மாநிலச் சட்டமன்றத்தால் நிறைவேற்றப்பட்ட ஒரு சட்ட மசோதாவிற்கு ஆளுநர் தனது இசைவினை வழங்காமலிருத்தல்; அதனைப் புனர் பரிசீலனை செய்யக் கோரி மாநிலச் சட்ட மன்றத்திற்கே திருப்பி அனுப்புதல்;

எ) மாநிலச் சட்டமன்றத்தால் முறையாக நிறைவேற்றப் பட்ட ஒரு மசோதாவைக் குடியரசுத் தலைவரின் இசைவைப் பெறுவதற்காக ஒதுக்கி வைத்துக் கொள்ளுதல்;

ஏ) சில அரசியல் காரியங்களுக்கான அவசரச் சட்டங்களைப் பிறப்பிப்பதற்கு முன்னால் குடியரசுத் தலைவரின் குறிப்புக்களை வேண்டிப் பெறுதல்;

ஐ) மாநிலங்களின் அரசமைப்புச் சட்ட இயந்திரம் (நிர்வாகம்) கேடடைந்து விட்டது எனத் தெளிவாக்கும் அறிக்கையினைக் குடியரசுத் தலைவருக்கு அனுப்புதல்;

இவை போன்றதும் இன்னும் பல மாநில நிர்வாகச் சூழல்களும் ஆளுநரின் விருப்பதிகாரங்களின் கீழ் வருகின்றன என நடைமுறையில் தெரிய வருகின்றது.

குடியரசு முறையிலேயே மாநில அரசியல் நிர்வாகம் நடைபெறுகிறது என அரசமைப்புச் சட்டம் பொதுவாகத் தத்துவ விளக்கம் அளித்தாலும், உண்மையில் மத்திய அரசாங்கத்தின்

கையாளான ஆளுநர் எப்போது விரும்பினாலும் குடியரசுக் கோட்பாடுகளை அழித்துவிட்டு மாநிலத்தின் ஆட்சியைத் 'தனது' சர்வாதிகார ஆட்சியாக மாற்றுவதற்குரிய அத்துணை அதிகாரங்களும் ஆளுநருக்கு அரசியல் சட்டத்தால் அளிக்கப்பட்டுள்ளன.

மாநிலச் சட்டமன்றம், அதன் உறுப்பினர்கள், மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் முறை, அவர்கள் பிரதிநிதிகளான மாநிலத்தின் அமைச்சரவை, அவர்கள் சட்டமன்றத்திற்குப் பொறுப்பானவர்கள் என்ற ஜனநாயகக் கட்டுப்பாடு, மாநில அரசுகளுக்குப் பட்டியல் மூலமாக ஒதுக்கி அளிக்கப்பட்ட பல அதிகாரங்கள், அதனால் நிறைவேற்றப்படும் சட்டங்கள், அச் சட்ட ஆதிக்கத்தின் அடிப்படையில் செயல்படும் நிர்வாக அதிகாரங்கள், இவ்வளவும் ஆளுநருக்கு அளிக்கப்பட்ட உளத்தேர்வு அதிகாரத்தின்மூலமாகப் பயனற்றுப் போவதோடு, அவை கேலிக் கூத்தாகவும் முடியக் கூடிய ஓர் அற்புதமான ஜனநாயகக் கூட்டாட்சி அமைப்பு முறையைத்தான்—அகில உலக ஜனநாயக நாடுகளில் காண முடியாத ஏற்பாட்டைத்தான்—மிகப் பெரிய குடியரசு நாடான இந்திய நாட்டில் தான் செய்து வைத்துள்ளார்கள்.

தற்போதைய அரசியலமைப்பால் மாநில சுயாட்சி மரணப் படுக்கைக்கு அனுப்பப்பட்டுள்ளது என்பதற்கு, இதனைக் காட்டிலும் வேறு சிறந்த சான்றொன்றும் வேண்டுமோ?

## VI

## ஆளுநர்களின் உளத்தேர்வதிகாரத் திருவிளையாடல்கள்

''விருப்பு அதிகாரம்'' என்ற சகல சக்தி வாய்ந்த மந்திரக் கோலைக் கையிலே கொண்டிருக்கும் மாநில ஆளுநர்களின் திருவிளையாடல்களில் சிலவற்றைச் சான்றுக்காகக் கீழே தருகிறோம்.

### [1] பிரிக்கப்படாத சென்னை மாநிலம்

1952-ஆம் ஆண்டில் முதல் பொதுத் தேர்தல் முடிந்தது. பிரிக்கப்படாத சென்னை மாநிலச் சட்ட மன்றத்தின் மொத்த உறுப்பினர்கள் 375 பேர். அதில், 155 சட்டமன்ற உறுப்பினர்களை மட்டுமே காங்கிரஸ் பெற்றிருந்தது. அமைச்சரவை

அமைப்பதற்குரிய நிகரப் பெரும்பான்மையைக் காங்கிரஸ் பெற்றிருக்கவில்லை. கிசான்மஸ்தூர் பிரஜா கட்சி, சோசலிஸ்டுக் கட்சி, கம்யூனிஸ்டுக் கட்சி, கிரிசிக்லோக் கட்சி, காமன்வீல் கட்சி, ஆகியவைகளைச் சார்ந்த 159 உறுப்பினர்களும் 61 சுயேச்சை உறுப்பினர்களும் தேர்ந்தெடுக்கப் பட்டிருந்தனர்.

ஆந்திரக் கேசரி எனப் புகழ் பெற்ற காங்கிரஸ் தலைவரான டி. பிரகாசம் அவர்கள், கிசான்மஸ்தூர் பிரஜா கட்சியுடன் இணைந்து ஜனநாயக முன்னணி ஒன்றை அமைத்தார். அந்த முன்னணியில் 167 சட்டமன்ற உறுப்பினர்கள் இடம் பெற்றனர். எனவே, ஜனநாயக முன்னணி, கூட்டு அமைச்சரவை அமைக்கத்தக்க நிகரப் பெரும்பான்மையைச் சட்டமன்றத்தில் பெற்றிருந்தது. அமைச்சரவை அமைப்பதற்கு, அதன் தலைவர் தகுதி பெற்றார். பிரகாசம் அவர்கள் ஜனநாயக முன்னணியின் பட்டியலை ஆளுநரிடம் கொடுத்தார்.

அன்றைய சென்னை மாநில ஆளுநராயிருந்த ஸ்ரீ பிரகாசா அவர்கள் ''விருப்பதிகாரம்'' என்ற மந்திரக்கோலைப் பயன்படுத்தினார். காங்கிரசுக்கு எதிராகவுள்ள எந்த அரசியல் கட்சியும் அமைச்சரவையை அமைக்கக் கூடாது எனக் காங்கிரஸ் மேலிடம் வலியுறுத்தியது. எதனை வேண்டுமானாலும் ஆளுநரின் விருப்பதிகாரம் என்ற மந்திரக்கோல் செய்துவிடுமல்லவா? மேதகு ஆளுநர் ஸ்ரீ பிரகாசா அவர்களால் முதன் முதலாக சென்னை மாநிலத்தில் - ஜனநாயகக் கொலை சட்டப்படி நடைமுறைப்படுத்தப் பட்டது.

''பொதுத்தேர்தல் முடிந்த பின்னாலும் - சட்டமன்றம் கூடுவதற்கு முன்னாலும் - ஏற்பட்ட ஒரு புது அரசியல் கட்சியை நான் ஏற்றுக் கொள்ளமாட்டேன். தேர்தல் நேரத்தில் ஜனநாயக முன்னணியில் இருந்த உதிரிக் கட்சிகளின் பெயர்களை மட்டுமே கணக்கில் எடுத்துக் கொள்ளுவேன். எனவே சனநாயக முன்னணி, சென்னை மாநிலத்தில் அமைச்சரவையை அமைக்கக் கூடாது.''

என்ற புதிய அரசமைப்புச் சித்தாந்தத்தைத் தனது விருப்பதிகாரமென்ற மந்திரக்கோலின் சக்தியினால் கண்டு பிடித்து, அதனைக் காரணமாகக் காட்டினார்.

இதில் வேதனை தரும் பகுதி என்னவெனில், அரசமைப்புச் சட்டத்தில் "அரசியல் கட்சி" என்ற சொல் எங்குமே பயன் படுத்தப்படவில்லை. ஆனாலும் குடியரசு நாட்டில் "சுயாட்சி யோடு" இயங்கும் சென்னை மாநில அரசை நிர்வகிக்க, மக்க ளால் தேர்ந்தெடுக்கப்படாத மாபெரும் தலைவரான இராசாசி அவர்களை (காங்கிரஸ் கட்சி நிகரப் பெரும்பான்மையைப் பெற்றிருக்காத நேரத்தில்) அமைச்சரவையை அமைப்பதற் காக ஸ்ரீபிரகாசா அவர்கள் வருந்தி வேண்டினார். பல சுயேச்சை யாளர்களை - "அமைச்சர் பதவி தருகிறேன்; வேறு பதவிகளை வாரி வழங்குகிறேன்"- எனக்கூறி, காங்கிரஸ் கட்சியின் அரவணைப்பிற்குள் இராசாசி அவர்கள் கொண்டு வந்தார். முதலமைச்சரும் ஆனார்.

தமிழகத்தில் அரசமைப்புச் சட்டத்தையும் குடியரசு முறையையும் மாநில சுயாட்சியையும் குழிதோண்டிப் புதைத்துவிட்டு ஒரு புதிய பாரம்பரியத்தை—சிறந்த மரபை— காங்கிரஸ் கட்சி முதல் தேர்தலிலேயே உருவாக்கிற்று!! இதற்கு யார் பொறுப்பு?... உளத்தேர்வு அதிகாரம் பெற்ற ஒரு காங்கிரஸ் ஆளுநர் அல்லவா?

தமிழகத்தின் மேற்சொன்ன சோக நாடகம் முடிந்து பதி னைந்து ஆண்டுகட்குப் பின்னர் கூட - அதாவது 1967-ஆம் ஆண்டின் பொதுத் தேர்தலுக்குப் பின்னர் கூட - காங்கிரசின் மேற்சொன்ன "ஆரோக்கிய மரபுகளை" உருவாக்கும் தன்மை யும் ஆளுநர்களின் "நடுநிலை தவறாத" மேற்சொன்ன முறையும் "உண்மைக் குடியரசு முறையும்" ஏதாவது மாறுதல் அடைந் துள்ளதா எனில், இல்லை. "அரசமைப்புச் சட்டம் மாற்றி அமைக்கப்படும் வரை அது மாறாது" - என்று அந்த ஆளுநர் களே - காங்கிரஸ் தலைவர்களே - தங்களது செயல்களால் இன்றும் நிரூபித்துக் காட்டுகின்றனர்.

[2] இராஜஸ்தான்

1967-ஆம் ஆண்டின் பொதுத் தேர்தல் முடிந்த பின்னர், இராஜஸ்தானில் அமைச்சரவையை அமைக்கத்தக்க நிகரப் பெரும்பான்மை இல்லை.

பல எதிர்க் கட்சிகள் சேர்ந்து, சில சுயேச்சைகளையும் அவைகளோடு ஈர்த்துக் கொண்டு, கூட்டு மந்திரி சபை அமைப்பதற்குரிய நிகரப் பெரும்பான்மையை உருவாக்கின.

ஆனால், இராஜஸ்தான் ஆளுநர் இன்னொரு புதிய தத்துவத்தைத் தனது "விருப்பதிகாரம்" என்ற மந்திரக் கோலின் மூலம் கண்டுபிடித்தார்;

"சுயேச்சைகளைச் சேர்த்துத்தான் நிகரப் பெரும்பான்மை பலம் எதிர்க்கட்சிக்களுக்குக் கிடைத்துள்ளது; சுயேச்சைகள் இல்லாவிட்டால் எதிர்க்கட்சிகள், கூட்டு அமைச்சரவை அமைக்கத் தக்க நிகரப் பெரும்பான்மையை அடைய முடியாது. எனவே, சுயேச்சை உறுப்பினர்களையும் சேர்த்த எதிர்க் கட்சிகளின் நிகரப் பெரும்பான்மையை நான் ஏற்றுக் கொள்ள முடியாது" என அறிவித்தார்.

அதுமட்டுமல்ல; சட்ட மன்றத்தில் சிறுபான்மை உறுப்பினர்களைக் கொண்ட காங்கிரஸ் கட்சியை அமைச்சரவை அமைப்பதற்காக ஆளுநர் அழைத்தார். அந்தோ! ஆளுநர் இவ்வளவு செய்தும் இராஜஸ்தானில், காங்கிரஸ் கட்சியால் அமைச்சரவையை அப்போதும் அமைக்க முடியவில்லை.

எனவே, ஆளுநர் மீண்டும் "விருப்பதிகாரம்" என்ற தனது மந்திரக் கோலின் தயவை நாடினர். "இராஜஸ்தான் மாநிலத்தில் அரசமைப்பு இயந்திரம் பழுதுபட்டுப்போய் விட்டது; எனவே, குடியரசுத் தலைவரின் நெருக்கடி நிலை பிரகடனப் படுத்தப்பட வேண்டும்" என்ற அறிக்கை ஒன்றைத் தயாரித்தார்; குடியரசுத் தலைவருக்கும் அனுப்பினர். உடனே "மாநிலத்தில் நெருக்கடி நிலை" அமுலுக்கு வந்தது.

அந்த இடைக்காலத்தில் "தூய்மையான ஜனநாயகவாதிகளைக் கொண்ட காங்கிரஸ் கட்சி, பல சுயேச்சைகளைத் தன் வயப்படுத்திக் கொண்டு நிகரப் பெரும்பான்மையினைப் பெற்றது.

அப்போது "தொட்டால் திருநீலகண்டம்" என்ற சுயேச்சைப் பிரச்சினை ஆளுநருக்கு நினைவு வரவில்லை. மீண்டும் ஆளுநரின் மந்திரக்கோல் தனது பணியைத் தொடங்கியது. இராஜஸ்தான் மாநிலத்தின் "நெருக்கடி நிலை" திடீரென்று நீக்கப்பட்டது எனக் குடியரசுத் தலைவரின் மாற்றுத் தாக்கீது பிரகடனப்படுத்தியது, காங்கிரஸ் கட்சியும் தனது அமைச்சரவையை "முறையாக! – அரசமைப்புச் சட்டப்படி – ஜனநாயக முறையில்?" வசதியாக அமைத்துக் கொண்டது.

ஆளுநர் பற்றி ஆளுநர்கள்

சென்னை மாநில (காங்கிரஸ்) ஆளுநரின் ஆரோக்கிய மான மரபு பற்றியும் இராசஸ்தான் (காங்கிரஸ்) ஆளுநரின் அற்புதமான சனநாயகப் பணியைப் பற்றியும் ''முறையோடு நடந்த'' இன்னொரு காங்கிரஸ் (கேரள மாநில) ஆளுநரான திரு. அஜித் பிரசாத் ஜெயின் அவர்கள் விமர்சனம் செய்தார்.

> ''சுயேச்சையாளர்களின் ஆதரவை ஏற்றுக் கொள்ள முடியாது என்ற இராசஸ்தான் ஆளுநரின் முடிவில் பொதிந்திருக்கும் (அ)நியாயத்தையும், தேர்தலுக்குப் பின்னுல் ஏற்பட்ட கூட்டுக் கட்சிகளின் நிகரப் பெரும்பான்மையினை ஏற்றுக் கொள்ளாத சென்னை மாநில ஆளுநரின் மறுப்பையும் நான் முறையற்றவை என ஐயுறுகிறேன். தேர்தலுக்குப் பின்னுல் ஏற்படக் கூடிய ஐக்கிய முன்னணியின் நிகரப் பெரும் பான்மையை, நாடாளுமன்றச் சனநாயகமுறை மிகச் செம்மையாக ஏற்றுக் கொள்கிறது.''7

எனக் காங்கிரஸ் ஆளுநரே, காங்கிரஸ் ஆளுநர்களைப் பற்றிக் கருத்துரை வழங்கினுர்.

ஆனுல், திரு, ஏ. பி. ஜெயின் அவர்கள், கேரள மாநில ஆளுநராயிருந்தபோது இந்திரா காந்திக்கு உட்கட்சித் தேர் தலில் பணியாற்றச் சென்றுவிட்ட அவரது '' நல்ல மரபும் '' இங்கு நினைவு கூறத்தக்கது.

திரு ஏ. பி. ஜெயின் அவர்களது அரசியல் நடவடிக்கை பற்றி ஸ்ரீ பிரகாசா அவர்கள் கருத்தறிவிக்கையில்,

> ''ஏ. பி. ஜெயின் அவர்கள் மேல் பரிதாபப்படலாம். ஆனுல் ஆளுநர் பொறுப்பை அவர் வகிக்கும்போது, பிரச்சினைக் குரிய அரசியலில் அவர் பங்கு கொண்டது முறையற்றது என எண்ணுமல் இருக்க முடியாது .... ஆளுநர் பதவியி லிருக்கும்போது கட்சி அரசியலில் நாட்டம் கொள்வது அரசியல் சட்டப்படி கூடாது என்பது தான் உண்மை நிலை.

---

7 Mr. A. P. Jain, "The Governors", in "The Union and the States" (1972) by S. N. Jain, Page. 332.

பதவியிலிருந்து விடுபட்ட பின்னர் தான், அவர் அப்படி (இந்திராகாந்திக்குத் தேர்தல் பணி) செய்திருக்க வேண்டும்.'' 8

என்று கண்டனம் செய்தார்.

ஆளுநர்கள் மூவருமே காங்கிரஸ் கட்சியைச் சார்ந்தவர் கள்; ஒருவரது செயலைப்பற்றி மற்றவர் விமர்சிக்கும் போது, நமக்கேகூடச் சற்றுக் குழப்பம் ஏற்படுகிறது; ஆனால் அக்குழப் பத்திலிருந்து ஒரு தெளிவும் பிறக்கிறது. பாவம் ஆளுநர்களின் பேரில் தவறில்லை; அவர்களை இயக்கும் சூத்திரக் கயிறான மத்திய அரசிடம் தான் தவறுள்ள தென்பதே அந்தத் தெளிவு. இன்னும் சற்று ஆழ்ந்து பார்த்தால், ஆளுநர்களிடமும் தவ றில்லை; மத்திய அரசிடமும் தவறில்லை; மாறாக நமது அரசமைப்புச் சட்டத்தில்தான் அந்தக் கோளாறு இருக்கிறது என்பது புலனாகும்.

இவ்வளவும் தெரிந்திருந்தும், ''அதுதான் இந்திய ஒற்றுமையைக் காக்கும் சிறந்த வழி; இந்தியர்கள் எல்லாரும் ஒரு நாட்டைச் சேர்ந்தவர்கள். எனவே, குறுகிய மாநில வாதங்களைக் கிளப்பக் கூடாது; அது சட்டப்படிக் குற்றம் என்பதற்காகவே அந்தக் கோளாறை அரசியல் சட்டத்தில் செய்து வைத்திருக்கிறோம்'' என ஒரே குரலில் கூசாமல், பேசி வருகின்றனர் — அன்றையத் தலைவர்களும் — இன்றைய நமது தேசியத் தலைவர்களும். இத்தகைய தேசியத் தலைவர் கள் தான் இந்திய அரசியல் நாடகத்தில் அடிக்கடி ஆளுநரின் வேடம் கட்டுகின்றனர். மாநில ஆட்சியதிகாரத்தின் அதிகாரப்பூர்வமான தலைவர்களாகவும் சட்டப்படி அவர்கள் ஆக்கப்படுகின்றனர். மாநிலங்களின் பரிதாப நிலை தான் என்னே?

[3] திருவாங்கூர் கொச்சி

1953–ஆம் ஆண்டில் திருவாங்கூர்—கொச்சி மாநிலத்தில் காங்கிரஸ் கட்சியின் ஆட்சி வீழ்ந்தது. காங்கிரஸ் முதலமைச் சர் சட்டமன்றத்தில் தனக்கு நம்பிக்கை வாக்கு (நிறைந்த

---

8 Sri Prakasa, "State Governors in India" (1966) Pp. 66-67.

ஆதரவு) பெரும்பான்மையாக உள்ளதா? என அறிய விரும்பினர். ஆளும் கட்சி 51 வாக்குகளும் எதிர்க் கட்சிகளுக்கு 56 வாக்குகளும் கிடைத்தன. எதிர்க்கட்சித் தலைவர் ஒரு கூட்டமைச்சரவையை அமைப்பதற்குத் தனக்கு வாய்ப்பளிக்க வேண்டுமென அன்றைய இராசப் பிரமுகராய் இருந்த ஆளுநரை வேண்டினர். ஆனல் ஆளுநர் அதை மறுத்து விட்டார். சட்ட சபையையும் கலைத்து விட்டார்.

மீண்டும் தேர்தல் நடந்தது. எந்த ஒரு கட்சியும் சட்ட மன்றத்தில் நிகரப் பெரும்பான்மையைப் பெறவில்லை. சட்ட மன்றத்திலிருந்த மூன்று கட்சிகளான பிரஜா சோசலிஸ்டுக் கட்சி, காங்கிரஸ் கட்சி, கம்யூனிஸ்டுக் கட்சி ஆகியவைகளிலிருந்து ஏதோ ஒரு கட்சியை அமைச்சரவையை அமைக்க அழைக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஆளுநருக்கு ஏற்பட்டது.

மொத்தம் 118 சட்டமன்ற உறுப்பினர்களில் 19 உறுப்பினர்களை மட்டுமே கொண்டிருந்த மிகச் சிறுபான்மைக் கட்சியான ''பிரஜா சோசலிஸ்டுக் கட்சியை'' அமைச்சரவையை அமைப்பதற்காக அழைத்தார். பெரும்பான்மை உறுப்பினர்களுள்ள கம்யூனிஸ்டுக் கட்சியை அவர் ஏன் அழைக்கவில்லை என்பது யாருக்கும் புரியாத ஒரு புதிராயிருந்தது. ஒருக்கால் ''விருப்பதிகாரம்'' என்று மந்திரக் கோலின் சக்தி அவரை அப்படிச் செய்யத் தூண்டியதோ என்னவோ!

[4] ஒரிசா

1957-ஆம் ஆண்டுப் பொதுத்தேர்தலில் ஒரிசா மாநிலத்தில் எந்த ஓர் அரசியல் கட்சியும் நிகரப் பெரும்பான்மை கொண்ட சட்ட மன்ற உறுப்பினர்களைப் பெற்றிருக்க வில்லை. ஜார்க்கண்ட கட்சி, காங்கிரஸ் கட்சியை ஆதரிப்பதாக வாக்களித்தது. அப்போதிருந்த ஒரிசாவின் ஆளுநரான திரு. பீமசேனசச்சார் அவர்கள், டாக்டர் மகதாப் அவர்களை அமைச்சரவை அமைக்குமாறு அழைத்தார். அவர் காங்கிரஸ் கட்சியைச் சார்ந்தவர். அமைச்சர்கள் பதவிப் பிரமாணம் எடுக்கும்போது, ஆளுநர் அவர்கள் ஓர் அரசியல் கருத்துரையைச் சட்டமன்றத்தில் நிகழ்த்தினர்.

உட்கல் பிரஜா சோசலிஸ்டுக் கட்சியைச் சார்ந்த சுரேந்திர நாத் திவிவேதி அவர்கள் கூற்றுப்படி, ''மகதாப் அவர்களின் அரசுக்கு, மற்ற உறுப்பினர்கள் அதிகபட்சமான ஒத்துழைப்பை

நல்க வேண்டுவதற்காகத் தன்னுடைய முழு பலத்தையும் பயன்படுத்தப் போவதாக" ஆளுநர் அவர்கள் சற்று மிரட்டலோடு சட்ட மன்றத்தில் குறிப்பிட்டார்கள். அதாவது மகதாப் அமைச்சரவை மற்ற உறுப்பினர்களின் ஆதரவின்மையால் வீழ்ந்துபடின், மற்ற கட்சிகளுக்கு அமைச்சரவையை அமைக்கும் சந்தர்ப்பதை ஆளுநர் வழங்க முடியாது என்பதையே அவரது உரையில் மறைமுகமாகக் குறிப்பிட்டார். (இந்துஸ்தான் டைம்ஸ் 16—4—1957-ஆம் நாளிதழ்,புதுடெல்லி)எப்படியோ டாக்டர். மகதாப் அவர்கள் முதல்வரானர். ஆனல் அந்த அமைச்சரவை நீடிக்கவில்லை.

பின்னர் 1958-ஆம் ஆண்டில் டாக்டர். மகதாப் அவர்கள், தனது இராஜினமாவை ஆளுநரிடம் சமர்ப்பித்தார்; அவர் சட்ட சபையைக் கலைக்குமாறும் ஆளுநருக்கு ஆலோசனை கூறினர். மக்தாப் அவர்களின் அமைச்சர் பதவி விலகல் கடித்தை ஆளுநர் அவர்களும் அதிகார பூர்வமாகப் பெற்றுக்கொண்டார்.

சில நாட்களில் மகதாப் அவர்கள் தனது இராசினமாக் கடிதத்தை மீண்டும் திரும்பப் பெற்றுக் கொள்வதற்கு அதே ஆளுநர் அவர்கள் ஒப்புதல் கொடுத்தார். எதிர்க் கட்சித் தலைவர் இதனை எதிர்த்தார். எதிர்க் கட்சித் தலைவர் அமைச்சரவை அமைக்கத் தக்க பெரும்பான்மையை, சட்ட மன்றத்தில் பெற்றிருப்பதற் கடையாளமாக அந்த உறுப்பினர்களின் பட்டியலைக் கொண்டு வருமாறு,எதிர்க்கட்சித் தலைவரை ஆளுநர் கேட்டார். இதற்கிடையில் ஆளுநர் தலைமை யமைச்சரையும் குடியரசுத் தலைவரையும் கண்டு நிலைமையைத் தெளிவாக்க டெல்லிக்குச் சென்றார்.அங்கு என்ன நடந்ததோ? என்னவோ? டெல்லியிலிருந்த ஆளுநர் திரும்பி வந்ததும், எதிர்க் கட்சித் தலைவர் பெரும்பான்மை பலத்தைப் பெற்றிருக்க வில்லை எனத் தாமாகவே அறிவித்து விட்டார்.

நிகரப் பெரும்பான்மை இல்லாத காங்கிரஸ் முதல்வரை, அமைச்சரவையை அமைக்க அழைத்ததோடு மற்ற உறுப்பினர்கள் அவருக்கு எல்லா ஆதரவையும் வழங்க வேண்டுமென மாநிலத்தின் ஆளுநர் சில மாதங்களுக்கு முன்பு, மற்ற சட்ட மன்ற உறுப்பினர்களைப் பார்த்து எச்சரிக்கை செய்கிறார்.ஆனல் பெரும்பான்மை இல்லாத காரணத்தால் சில மாதங்கள் கழித்து,

காங்கிரஸ் முதலமைச்சர் கொடுத்த பதவி விலகல் கடிதத்தை அவரே பெற்றுக் கொண்டார். அப்படிப் பெற்றுக் கொண்ட பின்னரும், அதனைத் திரும்பப் பெறுவதற்கு அதே காங்கிரஸ் முதலமைச்சரை ஆளுநர் பணிக்கிறார். எதிர்க் கட்சிகளின் நிகரப் பெரும்பான்மையை ஏற்றுக் கொள்வதாக அதே ஆளுநர் கூறுகிறார். ஆனால் அவர் டெல்லி சென்று திரும்பி வந்த பின்னர் எதிர்க்கட்சிகளுக்குப் பெரும்பான்மை பலம் இல்லை என ஒரு தலைப்பட்சமாய் அறிவிக்கிறார்.

என்ன ஜனநாயகமோ? என்ன அரசமைப்பு விதிகளோ? யார் அறிவார்?

ஆளுநர்களது அரசியலில் தரக்குறைவான நடவடிக்கைகளுக்கு ஓர் எல்லையே இல்லையா? சென்ற கால் நூற்றாண்டுக் கால இந்திய வரலாற்றில், மாநில அரசுகளின் நிர்வாகத் தலைவர்கள் எனக் கூறிக் கொண்டு, மத்திய அரசின் முகவர்களாக இயங்கி வரும் ஆளுநர்களின் அரசியல் திருவிளையாடல்களால் கலைக்கப்பட்ட மாநில அமைச்சரவைகளும் சட்டமன்றங்களும் எதிர்க்கட்சி அரசுகளும் எண்ணிறந்தவை. "நெருக்கடி நிலை" பற்றிய அத்தியாயத்தில் ஆளுநர்கள் படைத்த பல சோகக் கதைகள் சான்றுகளாகத் தரப்பட்டுள்ளன. அவற்றையும் இதன் தொடர்ச்சியாகக் காண்க.

மத்திய அரசின் அதிகாரப் பற்றற்ற (Unofficial) கங்காணிகளாக இயங்கும் இவ்வகை "ஏகாதிபத்தியச் சின்னங்களான" ஆளுநர்கள் இனியும் தேவைதானா? சிந்தித்திடுவீர்!



# 11. மாநில சுயாட்சியை அழிக்கும் 'நெருக்கடி நிலை'ச் சட்ட விதிகள்

## — தேசிய நெருக்கடி நிலை —

"நெருக்கடி நிலையைப் பிரகடனம் செய்வது தொடர்பாக 352,354 பிரிவுகளின் கீழ் உள்ள அதிகாரங்கள், அவை தொடர்பான அதிகாரங்கள் ஆகியவை போரோ, அக்கிரமிப்போ இருந்தாலன்றிச் செயல் படுத்தப்படக் கூடாது...நெருக்கடி நிலைப் பிரகடனம் செய்யப்பட்டுள்ள போது,போர் அல்லது ஆக்கிரமிப்பு குறித்து மட்டுமே கட்டளைகள் பிறப்பிப்பதற்கான அதிகாரம் பயன் படுத்தப்பட வேண்டும். ஆனல் அனைத்து மாநிலக் குழுவின் (Inter State Council) அனுமதியுடன் மட்டுமே அத்தகைய கட்டளைகள் பிறப்பிக்கப்பட வேண்டும்...போர் அல்லது ஆக்கிரமிப்பின்போது மட்டுமே ஒவ்வொரு மாநிலத்தையும் பாதுகாப்பது மைய அரசின் கடமையாகும்."[1]

— தமிழ்நாடு அரசின் கருத்துரைகள்.

சாதாரணக் காலங்களில் மாநிலங்களின் சட்டமியற்றும் அதிகாரங்களும் நிர்வாக அதிகார உரிமைகளும் மத்திய அரசால் எந்தெந்த வகைகளில் சுருக்கி நெருக்கப்படுகின்றன என்பதை நாம் சென்ற அத்தியாயங்களில் பரிசீலித்தோம்.

இவை தவிர அரசமைப்புச் சட்டத்தின்படி இந்திய நாட்டைப் போர் மற்றும் வெளி நாட்டு ஆக்கிரமிப்பிலிருந்து காப்பதற்கும், உள்நாட்டுக் குழப்பத்திலிருந்து மீட்பதற்கும் மத்திய அரசே பொறுப்பேற்றுக் கொள்ளுகிறது.

---

1 மாநில சுயாட்சி பற்றியும் இராசமன்னர் குழுவின் அறிக்கை பற்றியும் தமிழ்நாடு அரசின் கருத்துரைகள் (1974) பக்கம். 13.

ஆனல் போர் மற்றும் வெளிநாட்டு ஆக்கிரமிப்பு ஏற்படும் போது, இந்திய மாநிலங்கள் முழுவதும் மத்திய அரசுடன் இணைந்து ஒத்துழைக்கத் தயாராக இருந்தாலும் அந்த ஒத்துழைப்பை மத்திய அரசு ஏற்றுக் கொள்வதற்குத் தயாரா யிருப்பதில்லை. ஏன் – மாநிலங்களை நம்பக்கூட மத்திய அரசு தயாராயில்லை.

''தேசிய நெருக்கடி நிலை'' (National Emergency) என்ற பெயரால் மாநிலங்களின் சகல உரிமைகளையும் எல்லா நிதி, நிர்வாகம், சட்டமியற்றும் அதிகாரங்களையும் மத்திய அரசே பறித்துக் கொள்ளுகிறது; அப்படிக் கையகப்படுத்திக் கொண்ட அதிகப்படியான அதிகாரங்கள் மூலமாக மத்திய அரசு தன்னைத் தானே இன்னும் வலிமைப் படுத்திக் கொள்கிறது. அவ்வகை யான ஒற்றையாட்சி முறை அதிகாரங்களை (Unitary Government's Powers) மத்திய அரசிற்கு வழங்கும் சில அரசமைப்புச் சட்டவிதிகளைத் தான் ''நெருக்கடி நிலை'' (Emergency Provisions) என்ற அத்தியாயத்தில் உருவாக்கி வைத்துள்ளனர்.

எனவே, சாதாரணக் காலங்களில் – அரை குறையாக – மூச்சு விடுமளவிற்கு - மாநில சுயாட்சியின் கழுத்து நெறிக்கப்படுகிற தென்றால் ''நெருக்கடி நிலை'' என அறிவிக்கப்படும் காலங்களில், மாநில சுயாட்சியினை முழுமையாகச் சாகடிக்கும் அளவிற்கே, அதன் கழுத்து மத்திய அரசால் முழு வலிவோடு இறுக்கப்பட்டு விடுகின்றது.

மாநில சுயாட்சியினை அழிக்கும் இந்த வகை 'நெருக்கடி நிலை' ஏற்பாடுகளைக் கொண்ட நமது அரசமைப்பைத் தான் ''சாதாரணக் காலத்தில்சுருங்கி விரியும் தன்மையையும்[Elastic] நெருக்கடி நிலைக் காலங்களில் சுருங்கி விரியாமல் முறைப்பாக (Rigid) இயங்கும் தன்மையையும் கொண்ட, ஓர் அதி அற்புத மான அரசமைப்புச் சட்டம்'' எனக்கூறி நமது தேசியத் தலைவர்கள் பெருமைப்பட்டுக் கொள்ளுகின்றனர். ஆனல் மாநில அரசுகளின் அடிப்படை உரிமைகளைக் கொல்லக் கூடிய இவ்வகை ''நெருக்கடி நிலை'' ஏற்பாடுகள், வேறு எந்தக் கூட் டாட்சி நாட்டு அரசமைப்புக்களிலும் காணக் கிடைக்கவில்லை. மாநில சுயாட்சியை வெறும் கானல் நீராக ஆக்கும் அவ்வகைச் சட்டவிதிகள் பற்றிப் பொதுவாக இவண் ஆய்வோம்.

# I

## நெருக்கடி நிலை விதிகள் உருவாக்கப் பட்டதேன்?

நமது அரசமைப்புச் சட்டத்தைப் புனைந்தவர்கள் மாநிலங்களில் ஏற்படும் பிற்கால அரசியல் விளைவுகளைத் தொலை நோக்குடன் எண்ணிப் பார்த்துக் கூட்டாட்சித் தத்துவத்தின் கொள்கைக்கு இசைந்ததாகவும் பரந்த கண்ணோட்டத்தின் அடிப்படையிலும், ''நெருக்கடி நிலை'' பற்றிய சட்டவிதிகளை, நமது அரசமைப்புச் சட்டத்தில் உருவாக்கினார்களா? இல்லை. சென்ற கால் நூற்றாண்டுக் காலமாக நெருக்கடி நிலைச் சட்டவிதிகள் பயன் படுத்தப்பட்ட அரசியல் சூழ்நிலைகளையும் முறைகளையும் நாம் உற்று நோக்கினால், அவை மாநிலங்களின் நலன் கருதியோ அல்லது நாட்டினுடைய ஆரோக்கியமான செயல் முறை கருதியோ அச்சட்டவிதிகள் பயன்படுத்தப்பட வில்லை என்பது புலனாகும்.

ஆங்கில ஏகாதிபத்திய அரசால் உருவாக்கப்பட்ட 1935—ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தின், விதி 102-இன் வாசகத்தைக் காட்டிலும், மிகக்கடுமையான வாசகங்களையும் மாநில சுயாட்சியைப் பறிக்கக் கூடிய கொடூரத் தன்மைகளையும், நமது அரசமைப்புச் சட்டத்தின் '' நெருக்கடி நிலை '' பற்றிய சட்டவிதிகள் தாங்கி நிற்கின்றன. இன்றைய அரசமைப்பின் சட்டவிதிகளைக் காட்டிலும் 1935-ஆம் ஆண்டின் நெருக்கடிநிலைச் சட்டவிதிகள் மிகமிக மென்மையானவை. ஆனால் அந்த அடிமைச் சட்டத்தின் மென்மையான விதிகளையே கூட '' மாநிலங்களுக்கு எதிரானவை '' — ''மாநில சுயாட்சியைப் பிரிட்டானிய ஆதிக்கத்தின் வல்லாட்சிக்குள் அடக்கக் கூடியவை'' என்றெல்லாம் அன்றையக் காங்கிரஸ்கட்சி விமர்சனம் செய்தது. அச்சட்ட விதிகளை இந்திய அரசுச் சட்டத்தினின்றும் அகற்ற வேண்டு மென்றும் போராடிற்று. அதற்காகவே 1939—ஆம் ஆண்டில் ஒன்பது மாநிலங்களின் ஆட்சிப் பொறுப்பிலிருந்த காங்கிரஸ் அமைச்சர்களும் பதவி விலகினார்கள்—இது வரலாறு.

ஆனால், சுதந்திர இந்தியாவின் ஆட்சியைக் காங்கிரஸ் கட்சி கைப்பற்றிக் கொண்டவுடன் தனது பழைய நிலைமையை மறந்து — வரலாற்றையும் மறைத்து — மாநிலங்களைத் தங்களது மத்திய வல்லாட்சிக்குக் கீழியங்கும் கொத்தடிமைகளாக

ஆக்கிக் கொள்ள வேண்டுமென்ற குறுகிய சுயநலக் கண்ணோட்டத்துடன் 1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்ட ''நெருக்கடி நிலை'' விதிகளைக் காட்டிலும் கொடுமை பயக்கும் சட்டவிதிகளை நமது அரசமைப்பில் படைத்து விட்டனர். ''அகில இந்திய ஒருமைப்பாட்டைக் காப்பதற்காகவே அவை உருவாக்கப் பட்டன'' என அதற்கொரு காரணத்தையும் காட்டி விட்டனர்.

காங்கிரஸ் கட்சி தவிர, அன்றைய அரசியல் சூழ்லும் இன்றைய அரசமைப்பின் நெருக்கடி நிலை பற்றிய சட்டவிதிகள் உருவாவதற்குத் துணை நின்றன. சுதந்திரத்திற்குப் பின்னர் நமது அரசமைப்புச் சட்டம் அவசரகோலமாக உருவாக்கப் பட்டுக் கொண்டிருக்கும் போதே, இந்திய நாட்டின் பல பகுதிகளில் பிரிவினைச் சக்திகள் மேலோங்கி நின்றன. காங்கிரஸ் கட்சிக்குள், பதவிப் போட்டியும் பூசலும் தலைதூக்கி நின்றது. வெளிநாட்டு ஆக்கிரமிப்பு ஏற்படும் நிலையும் இருந்தது. காஷ்மீரத்தின் போர், இந்தியாவுடன் முழுமையாக ஐக்கியம் ஆகாத சுதேச மன்னர்களின் ஊசலாட்டம், தெலுங்கானுப் பகுதியில் எழுந்த ஆயுதப் போர், ஐதராபாத்தை இந்தியாவுடன் இணைப்பதற்காக எடுக்கப்பட்ட நடவடிக்கைகள், நிர்வாக அனுபவமின்மை, இந்தியாவுடன் இணைந்த சுதேச சமஸ்தானப் பகுதிகளில் உருவான நிர்வாகச் சிக்கல்கள், இன்னோரன்ன பல நிர்வாக இடர்ப்பாடுகளும் நெருக்கடிநிலைச் சட்டவிதிகள் உருவாக ஒரு வகையில் காரணமாயின.

எந்த விலை கொடுத்தேனும் (மாநிலங்களை முழு அடிமைகளாக ஆக்கியாகிலும்) இந்திய ஒற்றுமையை நிலை நாட்டிட வேண்டுமெனக் கருதிய அன்றையத் தேசியத் தலைவர்கள் ஒற்றை ஆட்சி முறையைக் கூட மீறும் பல சட்டவிதிகளை ''நெருக்கடி நிலை'' என்ற பெயரால் நமது அரசமைப்புச் சட்டத்தில் உருவாக்கி வைத்துக் கொண்டனர். மாநிலங்களைத் தன்னிச்சைப்படியெல்லாம் ஆட்டிப் படைப்பதற்காகவும் மத்திய அரசின் ஆளுங் கட்சி (காங்கிரஸ் கட்சி) விரும்பும் போதெல்லாம் மாநில அரசுகளைக் கவிழ்ப்பதற்காகவும் மாற்றுக் கட்சி அமைச்சரவைகளைப் பழிதீர்த்துக் கொள்வதற்காகவும் இன்னும் பல குறுகிய அரசியல் இலாபங்களுக்காகவும் '' நெருக்கடி நிலைச் சட்டவிதிகள் '' பயன் படுத்தப்பட்டு வருகின்றன.

## II

## மூவகை "நெருக்கடி நிலைகள்"

நமது அரசமைப்புச் சட்டம் மூன்று வகையான நெருக்கடி நிலைகளைப் பற்றிப் பேசுகின்றது. XVIII-ஆம் பகுதியில், 352-ஆம் சட்டவிதி முதல் 360-ஆம் சட்டவிதி முடியவும் XIX-ஆம் பகுதியில் 365-ஆம் சட்டவிதியும் "நெருக்கடி நிலைகளைப்" பற்றி விளக்குகின்றன.

### 1. தேசிய நெருக்கடி நிலை (National Emergency)

இந்தியாவின் பாதுகாப்பிற்கோ அல்லது அதனுடைய ஒரு பகுதியின் பாதுகாப்பிற்கோ—போர், வெளிநாட்டு ஆக்கிரமிப்பு அல்லது உள்நாட்டுக் குழப்பம் ஆகியவற்றால் பேரபாயம் ஏற்படத்தக்க சூழ்நிலை ஏற்படும் போது அது "போர் நெருக்கடி நிலை அல்லது தேசிய நெருக்கடிநிலை" எனப்படும்.

— (சட்டவிதி 352).

### 2. மாநிலத்தின் நெருக்கடிநிலை (State Emergency)

ஒரு மாநிலத்தில், அரசமைப்புச் சட்டவிதிகளின்படி அந்த மாநில அரசால் செயல்பட முடியாத நிலை ஏற்படும் போது (நிர்வாகம் சீர்குலைவது) அது "மாநிலத்தில் அரசமைப்புச் சட்ட நெருக்கடிநிலை" அல்லது "மாநிலத்தின் நெருக்கடிநிலை" எனப்படும். — (சட்டவிதி 356).

### 3. நிதி நெருக்கடிநிலை (Financial Emergency)

இந்திய நாட்டின் செலாவணி மதிப்பிற்கு அல்லது நிதி நிலைக்கு அல்லது அதன் ஒரு பகுதியின் செலாவணி மதிப்பிற்குக் கேடு ஏற்படத்தக்க சூழ்நிலை ஏற்படும்போது, அது "நிதி நெருக்கடி நிலை" எனப்படும். — (சட்டவிதி 360)

இந்த மூன்று வகை நெருக்கடி நிலைகளில் ஏதாவது ஒரு வகை நெருக்கடி நிலை உண்மையில் உருவானாலும் அல்லது அது உருவாகத்தக்க அபாயம் இருந்தாலும் அதனை "நெருக்கடி நிலை" (Emergency) எனக் குடியரசுத் தலைவர் பிரகடனம் செய்யலாம்.

இவை தவிர, நாம் சென்ற அத்தியாயங்களில் பார்த்ததைப்போல, சட்டவிதிகள் 256 மற்றும் 257 ஆகியவைகளின் படி,மத்திய அரசு—ஒரு மாநிலத்திற்குச் சில நிர்வாகக் கட்டளைகளை விதித்து, அக் கட்டளைகளை அந்த மாநில அரசு நிறைவேற்றத் தவறிவிட்டால், அந்த மாநிலத்தில் ''நெருக்கடி நிலை'' ஏற்பட்டு விட்டதெனக் குடியரசுத் தலைவர் முடிவிற்கு வந்து, அங்கே நெருக்கடி நிலைச் சாற்றுணையைப் (Emergency Proclamation) பிறப்பிக்கலாம்.

— (சட்டவிதி 365).

மற்ற நாடுகளின் ''நெருக்கடிநிலை'' விதிகள்

நெருக்கடிநிலை பற்றிய நமது சட்டவிதிகள், எத்துணை விரிவானவையாகவும் செறிவுள்ளவையாகவும் தீவிரமானவையாகவும் விளங்குகின்றனவோ, அவைகளுக்கீடான வலிவையும் செறிவையும், தீவிரத்தையும் கொண்ட சட்டவிதிகள் வேறு எந்தக் கூட்டாட்சி நாட்டின் அரசமைப்புச் சட்டத்திலும் கிடையாது.

மற்ற கூட்டாட்சி நாடுகளில்''போர்''போன்ற நெருக்கடிக் காலங்களிலும் ''வெளிநாட்டு ஆக்கிரமிப்பு'' நேரங்களிலும் மத்திய அரசு — சிற்சில மாநில அதிகாரங்களை மட்டும்தான் அதன் வரம்பு கடந்து அவ்வப்போது கைக்கொள்கிறது; அதுவும் அந்த இடைப்பட்ட காலத்திற்கு மட்டும்தான். ஆனால், இல்லாத நெருக்கடி நிலையை இருப்பதாகச் சாற்றி மாநிலங்களின் சுயாட்சியினை மூழ்கடிக்கத் தேவையான எந்தச் சட்டவிதியும் வெளிநாட்டு அரசமைப்புக்களில் செய்து வைக்கப்பட வில்லை.

கனடா நாட்டில் போர் நெருக்கடிக் காலத்தில் மத்திய அரசு எடுத்துக் கொள்ளும் சில அதிகாரங்கள் கூட அரசமைப்புச் சட்டத்தால் ஏற்படுத்தப் பட்டவை யல்ல; நீதிமன்றத் தீர்ப்புக்களின் மூலமாக மத்திய அரசு பெற்றுக்கொண்ட அதிகாரங்களே அவை. ஆனால், இந்திய நாட்டில், ''நெருக்கடிநிலை'' சார்ந்த மத்திய அரசின் நடவடிக்கைகளை எதிர்த்து எந்த மாநிலமும் நீதி மன்றத்தில் வழக்காட முடியாது.

அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும், ஆஸ்திரேலிய நாட்டிலும் ''நெருக்கடி நிலை'' என்ற பெயரால் மாநில சுயாட்சியின் தற்கொலைச் சட்டவிதிகள் எதுவும் ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை. ''போர்''மற்றும் ''உள்நாட்டுக் குழப்பத்தால்'' மெய்யாகவே,

ஒரு நாட்டிற்கு ''நெருக்கடி நிலை'' ஏற்பட்டு விட்டாலும் கூட அந்த நாட்டின் மத்திய அரசு, அதன் மாநிலங்களின் மேல் தனக்கில்லாத பல புதிய அதிகாரங்களை உருவாக்கிக் கொள்ள முடியாது. மேலும், அரசமைப்புச் சட்டத்தால் மாநில அரசு களுக்குத் தனியாகப் பிரித்தொதுக்கப்பட்ட அதிகாரங்களில், மத்திய அரசு கை வைப்பதற்குரிய எந்தவித உரிமையையும் ''நெருக்கடி நிலை'' அமெரிக்கா மற்றும் ஆஸ்திரேலியாவின் மத்திய அரசிற்கு வழங்கி விடுவதில்லை. ஆகவே ''நெருக்கடி நிலை'' என்ற பெயரால் மத்திய அரசின் மேல் விதிக்கப்பட்டுள்ள பல அரசியலமைப்புச் சட்டக் கடப்பாடுகள் (Constitutional Obligations) நீங்கி விடுவதில்லை. இந்தத் தூய்மையான மாநில சுயாட்சி இலக்கணத்தை அடிப்படையாகக் கொண்டே, ஐக்கிய அமெரிக்க நாட்டிலும் ஆஸ்திரேலியாவிலும் நல்ல மரபு களும் நடைமுறைக் கோட்பாடுகளும் இன்றும் நிலவி வருகின்றன.

அமெரிக்க நாட்டின் '' போர் உரிமையும் '' (War Power) ஆஸ்திரேலியாவின் ''பாதுகாப்பு அதிகாரங்களும்'' (Defence Powers) இந்திய நாட்டின் ''நெருக்கடி நிலை'' விதிகள் போன்றவை யல்ல.

இனி, மாநில சுயாட்சியைக் கல்லறைக்கு அனுப்பக் கூடிய நமது அரசியலமைப்பின் மூவகை நெருக்கடி நிலைகளைப் பற்றி, தனித்தனி அத்தியாயங்களில் விளக்கமாக ஆய்வு செய்வோம்.

## III
## போர் நெருக்கடி நிலை அல்லது தேசிய நெருக்கடி நிலை ( NATIONAL EMERGENCY )

நமது அரசமைப்புச் சட்டத்தில் 352-ஆம் சட்டவிதி முதல் 354-ஆம் சட்டவிதி ஈறாக '' போர் நெருக்கடி நிலை '' அல்லது '' தேசிய நெருக்கடி நிலை '' பற்றிக் கூறப்பட்டுள்ளது.

தேசிய நெருக்கடி என்றால் என்ன என்பதைப் பற்றியும் குடியரசுத் தலைவரின் பிரகடனத்தைப் பற்றியும் 352-ஆம் சட்டவிதி பேசுகிறது. குடியரசுத் தலைவரின் நெருக்கடி நிலைப் பிரகடனத்தால் ஏற்படும் விளைவுகளைப் பற்றிச் சட்டவிதி 353 தெளிவாக்குகிறது. தேசிய நெருக்கடி நிலைப் பிரகடனம் அமுலி லிருக்கும் போது மாநிலங்களின் நிதிப் பங்கீடுகளைப் பற்றியும் அதனை நடைமுறைப் படுத்தும் விதிமுறைகளைப் பற்றியும் 354-ஆம் சட்டவிதி விளக்குகிறது.

**தேசிய நெருக்கடி நிலை என்றால் என்ன?**

**சட்டவிதி 352 (1):-**

போரினாலோ, வெளிநாட்டு ஆக்கிரமிப்பினாலோ அல்லது உள் நாட்டுக் குழப்பத்தினாலோ இந்தியாவினுடைய பாதுகாப்பும் அல்லது அதன் எந்தவொரு பகுதியின் பாதுகாப்பும் அச்சுறுத்தப்படத் தக்க அளவிற்கு நெருக்கடி நிலை நிலவுகிறது எனக் குடியரசுத் தலைவருக்குத் திருப்தி ஏற்பட்டால் அதனைத்தன் சாற்றாணை ( Proclamation ) மூலமாகக் குடியரசுத் தலைவர் பிரகடனப்படுத்தலாம்.

**சட்டவிதி 352 (2) :-**

சட்டவிதி 352 (1)-இன் கீழ்ப் பிறப்பிக்கப்பட்ட சாற்றாணையானது.

அ) அதற்கடுத்த மற்றொரு சாற்றாணை மூலம், காலாவதி ஆக்கப்படலாம்.

ஆ) நாடாளு மன்றத்தின் ஒவ்வொரு சபையிலும், அது (சாற்றாணை) வைக்கப்படல் வேண்டும்.

இ) இரண்டு மாதங்களுக்குள், நாடாளு மன்றத்தின் இரு சபைகளாலும் அச் சாற்றாணை ஏற்றுக் கொள்ளப்படாவிடில், அது பிறப்பிக்கப்பட்ட இரண்டு மாதங்களின் முடிவில் செல்லாமல் போய்விடும்.

ஒருக்கால் நாடாளு மன்றத்தின் மக்களவை (Lok Sabha) கலைக்கப்பட்டிருக்கும் நேரத்தில் மேற்சொன்ன நெருக்கடி நிலைப் பிரகடனம் பிறப்பிக்கப்பட்டிருந்தாலோ அல்லது மேற்சொன்ன சாற்றாணை பிறப்பிக்கப்பட்ட பின்னர் இரண்டு மாத காலத்திற்குள் நாடாளு மன்றத்தின் மக்களவை கலைந்துபோனாலோ, அந்த இரண்டு மாத கால அளவிற்கு அந்தச் சாற்றாணை அமுலிலிருப்பதற்காக நாடாளு மன்றத்தில் மாநிலங்களவைத் (Council of States) தீர்மான மொன்று இன்றியமையாததாகும்.

மக்களவை மீண்டும் அமைக்கப்பட்ட பின்னர் ஒரு மாத காலம் வரை அச் சாற்றாணையை நீட்டுவிக்கலாம். மக்களவை மீண்டும் அமைக்கப்பட்ட பின்னர் ஒரு மாத காலத்திற்குள் ஏற்கனவே மாநிலங்களவையில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தை அங்கீகரிக்கும் முறையில், மக்களவை ஒரு தீர்மானத்தை நிறைவேற்ற வேண்டும். இல்லாவிடில் அச் சாற்றாணை, தானாகவே செல்லாமல் போய்விடும்.

**சட்ட்விதி 352 (3):-**

போர் அல்லது வெளிநாட்டு ஆக்கிரமிப்பு அல்லது உள் நாட்டுக் குழப்பம் உண்மையில் நிகழா விட்டால் கூட, அவை போன்ற அவசர அபாயம் மட்டும் இருக்கிறதெனக் குடியரசுத் தலைவருக்குத் திருப்தி ஏற்பட்டாலும் அவர் நெருக்கடி நிலைச் சாற்றுணையைப் பிரகடனம் செய்யலாம்.

**சட்டவிதி 353 :-**

நெருக்கடி நிலைப் பிரகடனம் அமுலில் இருக்கும்போது மாநில அரசுகள் தமது நிர்வாக அதிகாரத்தை எவ் வகையில் செயல்படுத்த வேண்டுமென்ற கட்டளைகளை விதிக்கும் அள விற்கு மத்திய அரசின் நிர்வாக அதிகாரம் செல்லும்.

**சட்டவிதி 353 :-**

மத்திய அரசுப் பட்டியலில் சொல்லப்படாத பொருளில் கூட (மத்திய அரசு) செயல்படுவதற்குரிய அதிகாரங்கள் மற்றும் கடமைகளை மத்திய அரசிற்கும் - அதன் அதிகாரிகளுக்கும் - வழங்கக் கூடிய சட்டங்களை நாடாளுமன்றம் இயற்றுவதற்கு உரிமை பெறும்.

**சட்டவிதி 354 :-**

நெருக்கடி நிலைப் பிரகடனம் செய்யப்பட்ட நிதி ஆண்டு முடிய மத்திய மாநில அரசுகளின் நிதிப் பங்கீடுகள் பற்றிய சட்டவிதிகளை அமுல்படுத்தாமலிருக்கும் ஆணைகளைக் குடியரசுத் தலைவர் பிறப்பிக்கலாம்.

மேற்சொன்ன சட்டவிதிகளில் அடங்கியிருக்கும் பல பகுதி களை நாம் ஆழ்ந்து நோக்கினுல் அவற்றில் தொக்கியிருக்கும் சில நுணுக்கமான பேராபத்துகள் தெளிவாகப் புலப்படும்.

சட்டவிதி 352-இல் உள்ளடங்கியிருக்கும் மூலப் பொருள்கள்

1. (அ)போரினுலோ; (ஆ)வெளிநாட்டு ஆக்கிரமிப்பினுலோ; (இ) உள்நாட்டுக் குழப்பத்தினுலோ.
2. இந்தியாவின் பாதுகாப்போ அல்லது இந்தியாவின் ஒரு பகுதியின் பாதுகாப்போ, அச்சுறுத்தப்படல் வேண்டும்.

3. அல்லது இந்தியாவின் பாதுகாப்போ அல்லது அதன் ஒரு பகுதியின் பாதுகாப்போ அச்சுறுத்தப்படத் தக்க அபாய நிலை இருத்தல் வேண்டும்.
4. மேற்சொன்ன அபாயம் தோன்றியிருக்கிற தென்று குடியரசுத் தலைவருக்குத் திருப்தி ஏற்படல் வேண்டும்.

மேற்சொன்ன நால்வகை மூலப் பொருள்கள் இருந்தால் போதும்; இந்திய நாட்டை ஒரு கூட்டாட்சி நாட்டிலிருந்து ஒற்றை வல்லாட்சி நாடாக (Unitary State) ஆக்கக்கூடிய ஆற்றல்களையும் அதிகாரங்களையும் மத்திய அரசு பெற்றுவிடும்.

குடியாட்சித் தலைவருக்கு 'நெருக்கடி நிலை' உருவாகி யுள்ளது என எப்படித் தெரியும்?

அவர் நெருக்கடி நிலை உருவாகி யுள்ளது எனத் தெரிந்து திருப்தி அடைவதற்குரிய வழிமுறைகள் ஏதாவது உள்ளனவா?

நாட்டின் அரசியல் மற்றும் பொருளாதார நடவடிக்கைகள் பற்றிக் குடியரசுத் தலைவர் தானே திருப்தியடையக்கூடிய வகையில் அவருக்கென்று தனித்து அவரது நடுநிலையான எண்ணப்படி முடிவெடுக்கும் உரிமை எதுவும் நமது அரசமைப்புச் சட்டத்தில் தரப்பட வில்லை. சட்டவிதி 74-இன்படி மத்திய அமைச்சரவையால் வழங்கப்படும் 'உதவி மற்றும் அறிவுரையைக்' கொண்டே குடியாட்சித் தலைவர் இயங்க வேண்டும்.

எனவே, தேசிய நெருக்கடி நிலை உருவாகி யுள்ளது என்பது பற்றித் தெரிந்து கொள்ள அவருக்கு ஒரே ஒரு வழி தான் உண்டு. அதாவது தலைமையமைச்சர் மூலமாகத்தான் அவருக்கு நாட்டின் நெருக்கடி நிலை பற்றித் தெரிய வேண்டும். அவர் மூலம் தான் குடியரசுத் தலைவருக்கு "திருப்தியும்" ஏற்பட வேண்டும். எனவே, நெருக்கடி நிலைக்கான சாற்றுணையை (Proclamation) குடியரசுத் தலைவர் பிரகடனப்படுத்துவதற்கு முன், மத்திய அமைச்சரவையின் ஆலோசனை மற்றும் இசைவினைப் பெற வேண்டும். அதன் பின்னரே குடியரசுத் தலைவர் "நெருக்கடி நிலைப் பிரகடனத்தை" அறிவிக்க வேண்டும்.

குடியரசுத் தலைவருக்கு, நெருக்கடி நிலையைப் பிரகடனப் படுத்துவதற்கான ஆலோசனையை மத்திய அமைச்சரவை வழங்குவதற்கு முன்னால் "நெருக்கடி நிலையின் சாத்தியக்

கூறுகள்'' பற்றி, மாநில அரசுகளை மத்திய அமைச்சரவை கேட்பதில்லை; மத்திய அரசு அவ்வகையில் மாநிலங்களைக் கலந்து ஆலோசித்துத் தெளிவு பெறுவதுமில்லை. இதுவரையில் அப்படி ஒரு நல்ல மரபும் உருவாக வில்லை.

நெருக்கடி நிலையென்றாலே மாநிலங்களுக்குக் குலை நடுக்கம். ஏனெனில், மத்திய அமைச்சரவை வேண்டுமென்றே ''நெருக்கடி நிலை'' ஏற்பட்டு விட்டது எனக் கருதிக் கொண்டு, குடியரசுத் தலைவருக்கு ''ஆலோசனையை'' வழங்கி, ''நெருக்கடி நிலை'' சாற்றாணையை அறிவித்து விட்டால், மாநில அரசுகளின் பல உரிமைகள் மத்திய அரசிற்குச் சேர்ந்து விடும்; மத்திய அரசிலிருந்து எவ்வகைக் கருணையையும் மாநிலங்கள் பெற முடியாது; மத்திய அரசின் நிர்வாக எல்லைக்குள் மாநிலங்களின் எல்லா அதிகாரங்களும் மறைந்து போவதால் நெருக்கடி நிலைக் காலங்களில் மத்திய அரசின் அதிகாரத் தோரணையிலிருந்து மாநிலங்கள் தன்னைத்தானே காத்துக் கொள்ள வேண்டிய ஓர் அவல நிலைக்கு ஆட்படுத்தப் படுகின்றன. ஆகவே மத்திய அமைச்சரவை, நாட்டில் நெருக்கடி நிலை உருவாகியுள்ளதா என்பது பற்றி மாநில அரசுகளைக் கலந்து ஒரு முடிவெடுப்பதில்லை; தன்னிச்சையாகவே அது செயல்படுகின்றது.

## நெருக்கடிநிலைப் பிரகடனத்தின் தன்மை?

நெருக்கடி நிலையில், ''சிறிய நெருக்கடிநிலை'' யென்றும் ''நடுத்தரமான நெருக்கடி நிலை''யென்றும் இருக்க முடியாது. பேரபாயம் தரக்கூடிய நெருக்கடி நிலையைப் பற்றி மட்டுமே 352–ஆம் சட்டவிதி பேசுகிறது; நாட்டின் பாதுகாப்பிற்குப் பேரபாயம் நேரிட்டு விட்டதா என்பதை நிர்ணயிக்கும் பொறுப்பு மத்திய அமைச்சரவைக்குச் சென்று விடுகிறது. ஒருக்கால் அப்படி ஓர் அபாயகரமான சூழ்நிலை, இந்திய நாட்டில் உருவாக வில்லை யெனக்கூட மாநிலங்கள் கருதலாம்; அதனைக் காரண காரியங்களோடு, மாநில அரசுகள் மத்திய அரசிற்கு எடுத்துக் கூறினாலும், மத்திய அரசு அதனைப் பற்றிக் கிஞ்சித்தும் கவலைப்பட வேண்டிய அவசியமில்லை.

''பேரபாயமுள்ளது எனவே நெருக்கடிநிலை தேவை என்று நாங்கள் கருதுகிறோம்'' என்று மத்திய அமைச்சரவை, ''திருப்தி'' யடைந்தாலே போதுமானது. உடனே மாநிலங்களின் சுயாட்சி

குழப்பம் ஏதோ ஒரு மாநில எல்லைக்குள் தான் அல்லது சில மாநிலங்களின் எல்லைக்குள் தான் தொடங்கும். அவற்றின் நேரடியான விளைவுகளையும் மாநிலங்களே ஏற்றுக் கொள்கின்றன. அவைகளை நேரிலும் மாநிலங்கள் காண்கின்றன. ஆனால் அதை நிர்ணயிப்பதற்கும் நிலைமைகளைத் தெளிவாக்குவதற்கும் முன்னெச்சரிக்கை செய்வதற்கும் மாநிலங்களுக்கு உரிமையில்லை; வாய்ப்புமில்லை. மாநிலங்களில் நடக்கும் போர் அல்லது ஆக்கிரமிப்பு அல்லது குழப்பம் ஆகியவைகள் மத்திய அரசின் நடவடிக்கைகளுக்காகக் காத்துக் கிடக்க வேண்டும். அதுவும் மத்திய அரசுக்குத் திருப்தி எற்படும் வரை மாநில அரசுகள் காத்திருக்க வேண்டும்.

இவையேதும் இல்லாத நேரத்தில் கூட மத்திய அரசிற்கு நாட்டில் ''நெருக்கடி நிலை'' ஏற்பட்டு விட்டதெனத் திடீரென்று தோன்றி விடும். அப்போது நெருக்கடி நிலை யென்ற குடியரசுத் தலைவரின் பிரகடனத்தை வானொலியில் கேட்டோ அல்லது பத்திரிகையில் பார்த்தோ தான் மாநில அரசுகள் தெரிந்து கொள்ள வேண்டும். அதன் பின்னர் மத்திய அரசின் பிரகடனத்திற்காக அவை காத்துக் கிடக்க வேண்டும். இது தான் நமது அரசமைப்பிலும் தரப்பட்டுள்ள ''அற்புதமான மாநில சுயாட்சி''.

ஆக, மாநிலங்களுக்குத் தொடர்போ, பொறுப்போ அல்லது உரிமையோ, இல்லாத ''தேசிய நெருக்கடி நிலைப் பிரகடனம்'' மாநில சுயாட்சியை அதன் கல்லறைக்கு அனுப்பி வைத்துவிடுகிறது.

எனவே, மாநில சுயாட்சி பற்றியும், திரு. இராசமன்னார் குழுவின் அறிக்கை பற்றியும் ஆய்வு செய்த நமது தமிழ்நாடு அரசு ''தேசிய நெருக்கடி நிலை'' பற்றிய சட்டவிதிகளை 'போர்' அல்லது 'வெளிநாட்டு ஆக்கிரமிப்பு' இருந்தாலன்றிச் செயல் படுத்தக் கூடாது எனத் தெளிவாக்குகிறது. தமிழக அரசின் முழுப் பரிந்துரையையும் இந்த இயலின் தலைப்பு மேற்கோளில் தரப்பட்டுள்ளது.



# 12. மாநில சுயாட்சியை அழிக்கும் 'நெருக்கடி நிலை'ச் சட்ட விதிகள்

## — நிதி நெருக்கடி நிலை —

> "இந்தியாவின் நிதி நிலை உறுதிக்கு அல்லது நாணயத்திற்கு அபாயம் ஏற்படும் நேர்வுகளில், நெருக்கடி நிலையைப்பிரகடனம்செய்யக்குடியரசுத்தலைவருக்கு அதிகாரம் அளிக்கும் பிரிவு நீக்கப்பட வேண்டும்."[1]
>
> — தமிழ்நாடு அரசின் கருத்துரைகள்.

இந்திய நாட்டின் "நிதி நெருக்கடி நிலை"யைப் பற்றி நமது அரசமைப்பின் 360-ஆம் சட்டவிதி தெளிவுபடுத்துகிறது.

நம் நாட்டின் ஒரு பகுதியிலோ அல்லது நாடு முழுவதிலுமோ நிதித்துறை இயங்க முடியாத அளவிற்கு ஒரு நெருக்கடி நிலை உருவாகி விட்டதெனக் குடியரசுத்தலைவர் கருதினால் அவர் நிதி நெருக்கடி நிலைப் பிரகடனத்தை வெளியிடலாம்.

— (சட்டவிதி 360).

ஏற்கெனவே கூறியபடி, குடியரசுத் தலைவருக்கென்று தனிக் கருத்து எதுவும் கிடையாது; மத்திய அமைச்சரவையின் கருத்துத்தான் குடியரசுத் தலைவரின் கருத்து. எனவே மத்திய அமைச்சரவை விரும்பினால் எந்த ஒரு மாநிலத்திலும் நிதி நெருக்கடி நிலை உருவாகி விட்டதெனக் காட்டி அதன் பொருளாதாரத் துறை முழுவதையும் மத்திய அரசு தனதாக்கிக் கொள்ளலாம்.

### நிதி நெருக்கடி நிலை என்பதன் பொருளென்ன?

நிதி நெருக்கடி நிலை என்பதன் பொருளை நமது அரசமைப்புச் சட்டம் விளக்கவில்லை. ஆக, எதை வேண்டுமானாலும் நிதி நெருக்கடி நிலைக்கான காரணங்கள் என மத்திய அரசு தன்னிச்சையாக அறிவித்துக் கொள்ளலாம்.

---

1 *மாநில சுயாட்சி பற்றியும் இராசமன்னார் குழுவின் அறிக்கை பற்றியும் தமிழ்நாடு அரசின் கருத்துரைகள் (1974) பக்கம். 13.*

மாநில நிதி வாயில்கள் (Sources of Income) யாவும் மத்திய அரசின் கையில் சிக்கியுள்ளன; நிதிப் பற்றுக் குறையைச் சமாளிப்பதற்காக மாநில அரசுகள் மத்திய அரசின் உதவி மானியங்களையும் விருப்ப மானியங்களையும் கடன்களையும் பெற்றுத் தீரவேண்டிய பரிதாப நிலையிலுள்ளன. அகில இந்திய மத்திய அரசுடைய கொள்கைக்கு மாறாக மாநில அரசுகள் இயங்கினால் மத்திய அரசின் நிர்வாகக் கட்டளைகள் மூலமாக மாநில அரசின் தனிக் கொள்கைகள் மாற்றப்பட்டு விடும். எனவே, மாநிலங்களில் ''பொருளாதார நெருக்கடி நிலை'' என்று ஏற்பட்டால் நமது அரசமைப்புச் சட்ட நடவடிக்கைகளின்படி மத்திய அரசும் — அதன் கொள்கைகள் மட்டும்தான் அதற்குக் காரணங்களாக அமையுமே தவிர, உண்மையில் மாநிலங்கள் அதற்குப் பொறுப்பாக மாட்டா. ஆனால் மத்திய அரசின் தவறான பொருளாதாரக் கொள்கைகளுக்காக மாநிலங்கள் பழி தீர்க்கப்படுகின்றன — '' நிதி நெருக்கடி நிலை '' என்ற பெயரால்.

இந்தப் பயங்கரமான நிதி நெருக்கடி நிலைச் சட்டவிதி— இந்திய அரசியல் சட்டத்தின் தனித்தன்மையாகும். இதனை யொத்த சட்டவிதி வேறு எந்த நாட்டு அரசியல் சட்டத்திலும் காணப்படவில்லை. ஏகாதிபத்திய அரசான பிரிட்டானிய அரசு — அடிமை இந்தியாவிற்கு வழங்கிய ''1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தில்'' கூட, தற்போதைய அரசியல் அமைப்பில் காணப்படும் நிதிநெருக்கடி நிலை பற்றிய சட்ட விதிகள் இடம் பெற்றிருக்க வில்லை.

நிதி நெருக்கடி நிலைப் பிரகடனத்தால் ஏற்படும் விளைவுகள் என்ன ?

1. ஒரு மாநிலத்தின் நிதி நிலை சார்ந்த எந்தவொரு கட்டளையையும் மத்திய அரசு, காரணங் கூறாமல் மாநில அரசுகளின் மேல் விதிக்கலாம்;

2. அக்கட்டளைகளின்படி மாநிலங்கள் செயல்பட வேண்டுமென வலியுறுத்தும் ஆணைகளையும் மத்திய அரசு பிறப்பித்து, மாநிலங்களை அதன்படி செயல்படும்படி வற்புறுத்தலாம்;

3. மாநில அரசுக் காரியங்களைச் செயல்படுத்தும் மாநில அதிகாரிகளின் சம்பளங்களையும் படிகளையும் மத்திய அரசு தன்னிச்சையாகக் குறைந்து விடலாம்.

4. மாநிலச் சட்ட மன்றத்தில் நிறைவேறிய பண மசோதாக்களையும் (Money Bills), மாநில நிதி நிலை அறிக்கையையும் மற்ற மானியக் கோரிக்கைகளையும் அமுல் படுத்தாமல் குடியரசுத் தலைவரின் (மத்திய அரசு) பரிசீலனைக்காக அனுப்பித் தீர வேண்டுமென (மத்திய அரசு) மாநில அரசுகளைப் பணிக்கலாம்.

சுருங்கக் கூறின், ஒரு மாநிலத்தின் பொருளாதார இயக்கத்தையே மத்திய அரசு முற்றும் முடமாக்கி விடலாம்.

நிதி நெருக்கடி நிலை பற்றி, அரசமைப்பு வல்லுனரான, திரு. K. சந்தானம் அவர்கள் கருத்துக் கூறும்போது,

"........மாநில அரசின் நிதிநிலை முடக்கம் மத்திய அரசின் நடவடிக்கைகளின் விளைவாகக் கூட ஏற்படலாம். ஆனாலும் அதற்குரிய தண்டனையை மாநிலங்களே அனுபவிக்க வேண்டும்." 2

"Well; It may happen that the financial instability may be the result of the actions of the Union Government; but still the states may have to pay the penalty."

எனத் தெளிவாக்குகிறார்.

டாக்டர் ராசமன்னார் அவர்கள் தலைமையில் அமைக்கப்பட்ட "மைய-மாநில உறவு ஆய்வுக் குழுவும்" அதன் அறிக்கையில் நிதி நெருக்கடி நிலை பற்றிய சட்டவிதி 360, நமது அரசமைப்புச் சட்டத்தினின்றும் அகற்றப்பட வேண்டுமென வலியுறுத்துகின்றது.



---

2 "Union - States Relations in India", [1963], P. 12

# 13. மாநில சுயாட்சியை அழிக்கும் ''நெருக்கடி நிலை''ச் சட்ட விதிகள்

## — மாநில நெருக்கடி நிலை —

"மாநிலத்தின் சட்ட ஒழுங்கிற்குப் பங்கம் ஏற்படாத போதும் கூடக் குடியரசுத் தலைவர் (மத்திய அமைச்சரவை) மாநில உள்விவகாரத்தில் தலையிடுவதற்கு இந்த விதிகள் வாய்ப்பளிக்கின்றன. மாநில அமைச்சரவையால் ஏற்பட்ட சிக்கலைத் தவிர்க்க வேண்டும் எனக்கூறி மாநில நிர்வாகத்தில் குடியரசுத் தலைவர் தலையிடலாகாது. மாநிலத்தின் உள்நாட்டுக் குழப்பத்தை ஒடுக்க வேண்டும் என்ற பெயரால் - மாநில சுயாட்சி-மத்திய அரசால் அழிக்கப்படுகிறது. மாநில உரிமைகளும் நசுக்கப்படுகின்றன." [1]

— திரு. H. V. காமத் அவர்கள்.

அனைத்திந்திய மட்டத்தில் அமுல் செய்யத்தக்க ''தேசிய நெருக்கடிநிலை'' என்பதைப் பற்றியும் ''நிதி நெருக்கடிநிலை'' பற்றியும் சென்ற இயலில் நாம் ஆய்வு செய்தோம்.

''நெருக்கடி நிலை'' என்ற தலைப்பின் கீழ் மாநிலங்களில் நிர்வாக இயந்திரம் இயங்க முடியாமல் போகும் போது என்னென்ன நடவடிக்கைகள் எடுப்பது என்பது பற்றிய சில சட்டவிதிகளும் அரசியலமைப்பில் செய்யப் பட்டுள்ளன. அவை ''மாநிலங்களின் நெருக்கடிநிலை'' (State Emergency) என்று பொதுவாக அழைக்கப்படுகின்றன.

ஒரு நாட்டில் ''தேசிய நெருக்கடி நிலை'' ஏற்படும் போது அதன் மாநிலங்களும் தானுகவே பாதிக்கப் படுகின்றன. ஆனால் மாநிலத்திற் கென்று ஒரு தனி ''நெருக்கடி நிலை'' இயற்கையாக ஏற்பட நியாயமில்லை. ஒரு மாநிலத்திற்குள் உள் நாட்டுக் குழப்பம் ஏற்படும் போது, அது தானுகவே, தேசிய நெருக்கடியின் ஒரு பகுதியாகி விடுகிறது.

---

1 Mr. H. V. Kamath, C. A. D., Vol. IX, P. 135

எனவே, மாநில நிர்வாகத்தில் முறிவோ அல்லது மாநில அமைச்சரவை தொடர்ந்து நீடிக்க முடியாத ஒரு சூழ் நிலையோ மட்டும் தான் ஒரு மாநிலத்தின் நெருக்கடி நிலையாக உருவாக முடியும். அதற்குரிய பரிகாரங்களைத் தனிச் சட்ட விதிகள் மூலமாகத் தெளிவுபட எடுத்தியம்பலாம். ஆனால் அதற்கு மாறாக அகில இந்தியாவில் ஏற்படும் பேரபாயத்திற்குப் பரிகாரம் காணக்கூடிய ''நெருக்கடி நிலைப் பிரகடனத்தைப்'' போலவே மாநில அரசையே செயலற்றதாகச் செய்யக் கூடிய ''மாநில நெருக்கடி நிலைச் சட்டவிதிகள்'' நமது அரசமைப்பில் அசாதாரணமாகப் படைக்கப் பட்டுள்ளன. அதுவும், ''நெருக்கடி நிலை''என்ற அத்தியாயத்தின் கீழ் அகில இந்திய நெருக்கடியைக் காட்டிலும், வன்மையான நடவடிக்கைகளை மாநிலங்களின் மேல் மத்திய அரசு எடுப்பதற்குரிய விதிகள் அதில் பொறிக்கப் பட்டுள்ளன. இதிலிருந்தே ''மாநில நெருக்கடி நிலை'' என்ற பெயரில், அதன் சுயாட்சிக்கு ஊறு விளைவிக்கும் மத்திய அரசின் உள் நோக்கம் தெளிவாகப் புலனாகும்.

## I

## மாநிலத்தின் நெருக்கடி நிலை பற்றிய சட்ட விதிகள்

அரசமைப்புச் சட்ட விதிகள் 355 முதல் 359 முடிய, மாநிலங்களில் நெருக்கடி நிலை'' (State Emergency) பற்றிப் பேசுகின்றன. அவற்றில் பொதிந்திருக்கும் பொருளைக் கீழே தொகுத்துத் தந்துள்ளோம்.

**சட்டவிதி 355:-**

வெளிநாட்டு ஆக்கிரமிப்பிலிருந்தும், உள் நாட்டுக் குழப்பத்திலிருந்தும் மாநிலங்களைப் பாதுகாக்கவும் மாநில அரசுகளை அரசமைப்புச் சட்ட விதிகளின்படி முறையாக இயங்க வைக்கவும் மத்திய அரசு பொறுப்பேற்றுக் கொள்கிறது.

**356 (1)**

ஆளுநரின் அறிக்கை மூலமாகவோ அல்லது வேறு வகையிலோ ஒரு மாநில சர்க்கார், அரசமைப்புச் சட்ட விதிகளின் படி நடைபெற முடியாதென்று குடியரசுத் தலைவருக்குத் திருப்தி ஏற்பட்டால், அவர் நெருக்கடி நிலை என்ற ஆணையை அந்த மாநிலத்தில் பிரகடனப் படுத்தலாம்.

**சட்டவிதி 356 (2):-**

குடியரசுத் தலைவரால் முதலில் வெளியிடப்பட்ட நெருக்கடி நிலைப் பிரகடனத்தை வேறொரு பிரகடனத்தின் மூலமாக ரத்து செய்து விடலாம்.

ஒருக்கால் முதலில் வெளியாக்கப்பட்ட பிரகடனத்தைக் குடியரசுத் தலைவர் ரத்து செய்யாமலிருந்தால், அதனை நாடாளு மன்றத்தின் மக்களவையிலும் மாநிலங்களவையிலும் ஆய்வுக் காக வைத்தல் வேண்டும். குடியரசுத் தலைவரால் பிரகடனப் படுத்தப்பட்ட நெருக்கடி நிலைப் பிரகடனத்தை நாடாளு மன்றம் இரண்டு மாத காலத்திற்குள் ஏற்றுக் கொள்ள வேண்டும். இல்லாவிடில் அது தானாகவே ரத்தாகி விடும்.

குடியரசுத் தலைவரால் ''நெருக்கடி நிலை''என்ற சாற்றாணை பிரகடனப் படுத்தப்படும் போது ஒருக்கால் நாடாளு மன்றத் தினுடைய மக்கள் சபை கலைக்கப் பட்டிருந்தாலோ அல்லது அந்த நெருக்கடி நிலை ஆணை அமுலுக்கு வந்த பின்னர் இரண்டு மாதங்களுக்குள் மக்கள் சபை கலைக்கப் பட்டு விட்டாலோ, மேற்சொன்ன குடியரசுத் தலைவர் பிரகடனத்தை மாநிலங் களவையின் ஆய்வுக்காக வைக்க வேண்டும். அந்தப் பிரகட னத்தை ஆய்வு செய்து, தனது தீர்மானத்தின் மூலமாக மாநிலங்களவை ஏற்றுக் கொள்ளலாம் ; ஒருக்கால் மாநிலங் களவை அதனை ஏற்றுக் கொள்ளாவிடில், அந்தப் பிரகடனம் ரத்தாகி விடும்.

ஆனால், கலைக்கப்பட்ட மக்களவை — மறு தேர்தலுக்குப் பின்னர் மீண்டும் கூட்டப்பட்டால் அப்படிக் கூட்டப்பட்ட 30 நாட்களுக்குள், அந்தப் பிரகடனத்தை அங்கீகரிக்க வேண்டும். இல்லையெனில், அந்த மாநில நெருக்கடிப் பிர கடனம் ரத்தாகி விடும்.

மேற்சொன்ன வகையில் நாடாளு மன்றத்தால் அங்கீகரிக் கப்பட்ட எந்தவொரு ''மாநில நெருக்கடிப் பிரகடனமும்'' நாடாளுமன்றம் ஏற்றுக் கொண்ட பின்னர் 6 மாத காலம் வரையில் தான் அமுலிலிருக்கும். ஆனால் மீண்டும் மீண்டும் அந்தப் பிரகடனத்தையே புதுப்பித்து மூன்று ஆண்டுகள் வரை நீடித்துக் கொண்டே போகலாம்,

விளைவுகள்

மாநில நெருக்கடி நிலைப் பிரகடனத்தால், மாநிலங்களில் ஏற்படும் விளைவுகளைப் பற்றிச் சட்டவிதிகள் 356(1)(a),(b),(c), 357, 358 மற்றும் 359 ஆகியவை பேசுகின்றன.

1. ''மாநிலத்தில் நெருக்கடி நிலை'' என்று அறிவிக்கப் படும் காலத்தில், அந்த மாநிலத்தின் எல்லா அரசுப் பணிகளையும் அதிகாரங்களையும் குடியரசுத் தலைவர் தானே ஏற்றுக் கொள் வார். அப்படி யேற்றுக் கொள்ளப்பட்ட மாநிலப் பணிகள் மற்றும் மாநில அதிகாரங்களைக் குடியரசுத்தலைவர் அந்த மாநில ஆளுநருக்கே கொடுத்து விடலாம்; அல்லது வேறு ஒரு நிர்வாக அமைப்பிற்கும் கொடுத்து விடலாம்,

2. ''மாநில நெருக்கடி நிலைப் பிரகடனத்தை'' அமுல் படுத்துவதற்குத் தேவையான பல விதிகளையும் குடியரசுத் தலைவரே உருவாக்கலாம். ஒரு மாநிலத்தின் உயர்நீதி மன்ற அதிகாரத்தை மட்டும் அவரால் கைக் கொள்ள முடியாது.

3. அந்த மாநிலத்தின் சட்டமியற்றும் அதிகாரங்களைக் குடியரசுத் தலைவர் நாடாளு மன்றத்திற்கு ஒப்படை செய்து விடலாம். அப்போது நெருக்கடி நிலை அமுலிலுள்ள மாநிலத்திற்கான நிதி மசோதா முதற் கொண்டு மற்ற எல்லாச் சட்டங்களையும், நாடாளு மன்றமே இயற்றலாம். ஒருக்கால் நாடாளு மன்றத்திற்கு அந்த மாநிலத்திற்காகச் சட்டமியற்று வதற்கு நேரமில்லா விட்டால் தனக்களிக்கப்பட்ட சட்டமியற் றும் அதிகாரத்தை, வேறொரு நிறுவனத்திற்கு ஒப்படை செய்து விடுமாறு பரிந்துரைத்து நாடாளு மன்றம், குடியரசுத் தலைவருக்கே மீண்டும் அந்த மாநிலச் சட்டமியற்றும் அதிகாரத் தைத் திருப்பிக் கொடுத்து விடலாம். சுருங்கக் கூறின் மாநிலச் சட்டமன்றத்தைத் தவிர, வேறு எந்த நிறுவனம் வேண்டுமென் றாலும் அந்த மாநிலத்தின் சட்டமியற்றும் அதிகாரத்தைக் குடியரசுத் தலைவரின் ஆணையால் ஏற்றுக் கொள்ளலாம் என்பதே இதன் பொதுவான கருத்து.

4. நெருக்கடி நிலைப் பிரகடனம் முடிந்த பின்னர்க் கூட ஓராண்டு காலத்திற்கு மாநிலச் செலவினங்களுக்காக அதன் தொகுநிதியிலிருந்து (Consolidated Fund of State) பணத்தை வழங்கக் கூடிய அதிகாரத்தைக் குடியரசுத் தலைவருக்கு நாடாளு மன்றம் கொடுத்து விடலாம்.

5. ஜனநாயகக் கோட்பாடுகளி னடிப்படையில், மக்க ளுக்களிக்கப்பட்டுள்ளதும் அரசமைப்புச் சட்டத்தால் உறுதி செய்யப்பட்டுள்ளதுமான அடிப்படை உரிமைகளான (Fundamental Rights)பேச்சுரிமை,அமைதியாகக்கூடு முரிமை, சங்கங்களை ஏற்படுத்திக்கொள்ளும் உரிமை,இந்தியாவின் எந்தப் பகுதிக்கு வேண்டுமானாலும் செல்லும் உரிமை, சொத்துக்களைச் சேர்க்கும் உரிமை, சொத்தை வைத்துக் கொள்ளும் உரிமை, அவரவர்கள் விருப்பப்படி எந்த ஒரு தொழிலையும் வணிகத்தை யும் நடத்தக்கூடிய உரிமை, ஆகியவைகள் நெருக்கடி நிலையால் பாதிக்கப்பட்ட மாநில மக்களுக்குக் கிடைக்காமல் மத்திய அரசால் நிறுத்தி வைக்கப்படலாம். மக்களுக்கு வழங்கப்பட்ட அந்த அடிப்படை உரிமைகளின் மேல் கிளர்ந்தெழும் வழக்கு களைத் தலைமை நீதிமன்றமோ அல்லது வேறு நீதி மன்றமோ ஏற்றுக் கொள்ளாதவாறு மாநிலக் குடிமகனின் வழக்கிடும் உரிமையையும் நிறுத்தி வைத்து விடலாம்.

6. ஒரு மாநிலத்தில் "நெருக்கடி நிலை" என்று குடியரசுத் தலைவர் அறிவித்தாலே போதுமானது; அந்த மாநில அரசின் சட்டமியற்றும் அதிகாரம், நிதி அதிகாரங்கள், ஆட்சி செய்யும் அதிகாரங்கள் எல்லாவற்றையும் மத்திய அரசு முறையின்றிக் கையகப் படுத்திக் கொள்ளும். அது மட்டுமல்ல; அந்த மாநிலச் சட்ட மன்றம் தற்காலிகமாக இயங்காது; மாநில அமைச்சரவை யும் செயல் படாது; கவிழ்க்கப்பட்டு விடும். மாநில மக்களுக்கு அரசமைப்புச்சட்டத்தின் 19-ஆம் சட்டவிதியில் உறுதியளித்துக் கொடுக்கப்பட்ட அடிப்படை உரிமைகளும், மறுக்கப்பட்டு விடும். அரசை எதிர்த்து மாநில மக்கள் வழக்குச் செய்ய முடியாது. சுருங்கக் கூறினால், மாநிலத்தில் நெருக்கடி நிலை என்ற பிரகடனம் குடியரசுத் தலைவரால் அறிவிக்கப் பட்டால் அந்த மாநில அரசும் மாநிலச் சட்ட மன்றமும் மாநில அமைச் சரவையும் மாநில மக்களும் செயலற்ற நடைப்பிணங்களாக ஆக்கப்பட்டு விடுகின்றனர். இல்லாதவொரு நெருக்கடியை, ஒரு மாநிலத்தில் இருப்பதாகச் சாற்றி, அதற்கொரு பிரகடனத் தையும் வெளியிட்டு, அந்த மாநிலத்தையே அழித்து விடக் கூடிய பேரதிகாரங்களை மத்திய அரசு அதன் மூலம் பெற்றுக் கொள்கின்றது.

## II

## மத்திய அரசு — மாநிலங்களின் மருத்துவனா? மாநிலங்களை வதைப்பவனா?

மாநிலங்களை உள்நாட்டுக் குழப்பத்தினின்றும் பாதுகாக்கவும், வெளிநாட்டு ஆக்கிரமிப்பிலிருந்து மீட்கவும், அவைகளை முறையாக இயங்க வைக்கவும் சட்டவிதி 355-இன்படி மத்திய அரசு,பொறுப் பேற்றுக் கொண்டிருக்கும் போது,அந்த மாநிலத்தின் அரசையும் மாநில மக்களின் உரிமையையும் முற்றும் அழித்து விடக்கூடிய விளைவுகளை நெருக்கடி நிலைச் சட்ட விதிகளில் ஏன் எழுதி வைத்திருக்கின்றனர்? என நமக்கோர் ஐயம் எழும்.

சட்ட விதி 355-இன் சொற்களை நாம் கூர்ந்து படித்துப் பார்த்தால், அது மாநிலங்களைக் காப்பதற்குரிய கடமையையும் உரிமையையும் மட்டும் மத்திய அரசிற்கு வழங்கி விடுவதில்லை. மாநிலங்களைக் ''காத்தல்'' என்ற பெயரால், நமது குடியரசு நாட்டின், குடியரசு முறைக்கே உலை வைக்கக் கூடிய சர்வாதிகாரத்தையும் இந்தச் சட்டவிதி, மத்திய அரசிற்கு அளித்து விடுகின்றது.

இதில் இன்னுமொரு கொடுமையுமுண்டு. மாநிலத்தைப் பாதுகாக்கும் மத்திய அரசு — காக்கப்பட வேண்டிய மாநிலத்தின் விருப்பத்தையோ, அதற்குரிய நிலைமை விளக்கத்தையோ, அரசியல் சூழ்நிலையையோ அதனிடம் கேட்டறிய வேண்டுவதில்லை. தன்னிச்சையாக மத்திய அரசு மேற்கொள்ளும் நடவடிக்கைகளெல்லாம், ''மாநிலத்தைப் பாதுகாக்கும்'' நடவடிக்கைகள் தான்.

மாநில அரசையே ஒழித்துக் கட்டினாலும் அதுவும் மாநிலத்தைப்பாதுகாக்கக் கூடிய ஒரு நடவடிக்கைதான். மாநிலச் சட்ட மன்றத்தையே சாகடித்தாலும், அதுவும் மாநிலத்தைப் பாதுகாக்கக் கூடிய மத்திய அரசின் ஓர் அற்புதமான நடவடிக்கைதான். இவைதான் மாநிலத்தைக் காப்பதற்காகச் செய்யப்பட்ட சட்டவிதியின் தன்மை — பண்பு — ஒழுங்கு முறையாகும்.

ஆனால்,மிகப் பெரிய சட்டவல்லுநரான,டாக்டர். அம்பேத்கார் அவர்கள் சட்டவிதி 355-ஐ அரசியலமைப்புச் சபையில் முன்மொழிந்த போது, இந்தச் சட்டவிதிக் கிணையான சட்டப்பிரிவு

கள் அமெரிக்க ஐக்கிய நாட்டிலும் ஆஸ்திரேலியச் சட்டத்திலும் இருப்பதாகத் தெளிவு படுத்திஞர். அந்த மாமேதைக்கு, தலைதாழ்த்தி வணக்கம் செலுத்திவிட்டு உண்மை நிலையைக் கூற வேண்டுமெனில், நமது 355-ஆம் சட்டவிதிக்கு ஈடான, இணையான சட்டவிதிகள் வேறு எந்த நாட்டு அரசமைப்பிலும் இல்லை என்பதைத்தான் தெளிவாக்க வேண்டியுள்ளது.

சட்ட ரீதியில் கூறிஞல், டாக்டர் அம்பேத்கார் அவர்கள் ''திரித்துக் கூறிஞர்'' என்று சொல்வதே சாலப் பொருந்தும்.

இந்திய அரசியல் சட்டவிதி 355-க்கு இணையானதாக டாக்டர் அம்பேத்கார் அவர்களால் சொல்லப்பட்ட அமெரிக்க நாட்டின் சட்டவிதி IV — சட்டபிரிவு 4-க்கும் — ஆஸ்திரேலிய நாட்டின் சட்டவிதி 119-க்கும் — நமது சட்டவிதிகளுக்கும் மலைக்கும் மடுவுக்குமுள்ள ஏற்றத்தாழ்வுண்டு.

அமெரிக்கச் சட்டவிதி IV— சட்டப் பிரிவு 4:-

''உள்நாட்டுக் கலவரத்திலிருந்து (Domestic Violence) தன்னைக் காப்பாற்ற வேண்டுமென்று, ஒரு மாநிலத்தின் சட்டமன்றமோ அல்லது (மாநிலச் சட்டமன்றம் நடைபெருதபோது) அந்த மாநிலத்தின் நிர்வாகமோ, மத்திய அரசிற்கு விண்ணப்பம் செய்தால், மத்திய அரசு அந்த மாநிலத்தைப் பாதுகாக்க வேண்டும். ஒவ்வொரு மாநிலத்திலும் அமுலிலிருக்கும் குடியரசு முறை அரசாங்கத்திற்கு(Republican Form of Govt)ஊறு விளையாத வகையிலும் வெளிநாட்டுப் படையெடுப்பி லிருந்தும் (Invasion) அந்த மாநிலத்தை மத்திய அரசு காக்க வேண்டும்.''

ஆஸ்திரேலியச் சட்டவிதி 119:-

''உள்நாட்டுக் கலவரத்திலிருந்து, தன்னை மீட்க வேண்டுமென்று ஒரு மாநிலத்தின் நிர்வாகம் விண்ணப்பம் செய்துகொள்ளும் போது, மத்திய அரசு அதனைப் பாதுகாத்தல் வேண்டும். வெளிநாட்டுப் படையெடுப்பிலிருந்தும் ஒரு மாநிலத்தை மத்திய அரசு காக்க வேண்டும்.''

மேற்சொன்ன அமெரிக்கா மற்றும் ஆஸ்திரேலிய நாடுகளின் சட்டவிதிகள், நமது சட்டவிதியிலிருந்து எவ்வகையில் மாறுபடுகிறது என்பதை நாம் ஒரு கணம் ஒப்புமை செய்தாலே

அவைகளிலுள்ள வேறுபாடுகள் தெளிவாகத் தெரியும். ஆனால், மாமேதையான டாக்டர். அம்பேத்கார் அவர்களுக்கு அதன் மாறுபாடு புரியவில்லை போலும்.

ஓர் அமெரிக்க மாநிலத்திலோ அல்லது ஆஸ்திரேலிய மாநிலத்திலோ, உள்நாட்டுக் கலவரம் ஏற்படக்கூடிய காலத்தில் - அதனை அந்த மாநில சர்க்கார் அடக்க முடியாத நேரத்தில் - அதன் உதவிக்காக மத்திய அரசை விண்ணப்பத்தின் மூலம் வருந்தி யழைத்து, அந்தக் கலவரத்தைத் தீர்த்து வைக்க வேண்டுமென்று அந்த மாநிலம் வேண்டிக் கோரினால் மட்டுமே, அந்த மாநிலத்தின் உள் நாட்டு விவகாரத்தில் மத்திய அரசு தலையிடும் உரிமையைப் பெறுகின்றது.

அஃதாவது ஒரு மாநில அரசு விரும்பி மத்திய அரசிடம் விண்ணப்பிக்காத போது அந்த மாநிலத்தின் உள்நாட்டுக் கலவரம் எவ்வளவு கடுமையானதாக இருப்பினும், மத்திய அரசு — தலையிட முடியாது.

ஆனால் நமது 355-ஆம் சட்ட விதியின்படி, மத்திய அரசு மாநிலத்தைப் பாதுகாக்கும் வேடத்தில்-அந்த மாநிலத்தையே கூடக் கலந்து கொள்ளாமல்—தன்னிச்சையாக, அந்த மாநில அரசின் உள்நாட்டு விவகாரத்தில் தலையிடலாம். அது மட்டுமல்ல; சட்டவிதிகள் 356 மற்றும் 357 ஆகியவைகளைப் பயன் படுத்தி மாநில அரசையும் மாநிலச் சட்ட மன்றத்தையும் மாநில அமைச்சரவையையும் மாநில மக்களின் அடிப்படை உரிமைகளையும் ''மாநிலத்தில் நெருக்கடி நிலை'' என்ற பெயரால் மத்திய அரசு, தனதாக்கிக் கொள்ளலாம்.

அமெரிக்க மாநிலத்திற்குச் சிறு காயம் ஏற்பட்டால் அந்த மாநில அரசு — அமெரிக்க மத்திய அரசு என்கிற மருத்துவனை வருந்தி அழைத்து, உரிய சிகிச்சையினைச் செய்யுமாறு விண்ணப்பத்தின் மூலம் வேண்டிக் கொள்ளும். அந்த மாநிலத்தின் வேண்டுகோளிற் கிணங்க, அமெரிக்க மத்திய அரசு என்ற மருத்துவர் அந்த மாநிலத்தின் நோய்நாடி, அந்நோய் மூலம் நாடி, அதற்குரிய மருத்துவத்தைச் செய்வார். ஆனால் இந்திய மாநிலத்திற்குஎந்தவகைக் காயமும் ஏற்படாதபோதே, இந்திய மத்திய அரசு என்ற மருத்துவர் அழைப்பேதுமில்லாமல் அந்த மாநிலத்தில் ஆசராகி, ''உன் காலிலிருக்கும் காயம் புரையோடி விட்டது; அதனால் காலும் அழுகி விட்டது; அந்தக் காயத்தை ஆற்ற மார்க்கமேதும் இல்லை; எனவே, உன்காலையே எடுத்து

விடுவது தான் நல்லது'' எனக்கூறி, மாநிலத்தின் காயத்தைப் பாராமலேயே அதனைக் கேளாமலேயே காயமேதும் இல்லாத அந்த மாநிலத்தை ''நெருக்கடி நிலை'' என்ற பெயரால் முடமாக்கி விடுகிறான், அமெரிக்க — ஆஸ்திரேலிய மத்திய அரசுகள் அந்த நாடுகளிலுள்ள மாநிலங்களுக் கேற்படும் நோயைத் தீர்க்க மருத்துவம் செய்தால்,இந்திய மத்திய அரசு நோயென்று கூறி மாநிலத்தின் உடலையே முடமாக்கிச் சிதைக்கின்றது. இது தான் மற்ற நாடுகளின் சட்ட விதிகளுக்கும் நமது நாட்டின் மாநில நெருக்கடி நிலைச் சட்ட விதிகளுக்கும் (355) உள்ள (அம்பேத்காரின் சொல்லில் கூறினால்) ஒற்றுமை.

## III
## ஆளுநரின் அறிக்கையும் ''வேறுவகையும்''

இனி '' மாநில நெருக்கடிநிலை '' எந்த அடிப்படையை வைத்துப்பிரகடனப் படுத்தப்படுகிறது என்பதைப்பார்ப்போம்.

''ஆளுநரின் அறிக்கை மூலமாகவோ'' அல்லது ''வேறுவகையிலோ'' ஒரு மாநில சர்க்கார் — அரசமைப்புச் சட்டவிதிகளின் படி நடைபெற முடியாது எனக் குடியரசுத் தலைவருக்குத் திருப்தி ஏற்பட்டால்'' — அந்த மாநிலத்தில் நெருக்கடி நிலை ஏற்பட்டு விட்ட தெனப் பிரகடனம் செய்யலாம் என 356-ஆம் சட்டவிதி கூறுகிறது.

இந்தச் சட்டவிதியைப் பகுத்துப் பார்த்தால் அதில் மூவகைக் கூறுகள், இடம் பெறுகின்றன என்பது தெரிய வரும்.

அவையாவன:-

1, ஒரு மாநில சர்க்கார் அரசமைப்புச் சட்டத்தின்படி நடைபெற முடியாது என்று குடியரசுத் தலைவருக்குத் திருப்தி ஏற்பட வேண்டும்.

2. குடியரசுத் தலைவர் நெருக்கடி நிலை என்று திருப்தி யடைவதற்கான ஓர் அறிக்கையை அந்த மாநிலத்தின் ஆளுநரிடமிருந்து பெற வேண்டும்.

3. ஆளுநரின் அறிக்கை யில்லாமல் ''வேறு வகையில்'' கூடக் குடியரசுத் தலைவர், அந்த மாநில சர்க்கார் நடைபெற முடியவில்லை யெனத் திருப்தி கொள்ளலாம்.

இந்தப் பகுதியின் பலவிடங்களில் தெளிவாக்கப் பட்டுள்ள படி நமது அரசியலமைப்புச் சட்டத்தில்,குடியரசுத் தலைவருக்கு, தன்னிச்சைப்படி எதையும் நிர்ணயம் செய்யக் கூடிய தனி உரிமை ஏதும் கொடுக்கப்பட வில்லை. "குடியரசுத் தலைவரின் திருப்தி" என்பது உண்மையில், மத்திய அமைச்சரவையின் திருப்தியையே குறிக்கிறது. எனவே, ஒரு மாநில சர்க்கார் நடைபெற முடியாது என்பதை முடிவு செய்து "திருப்தி" அடைய வேண்டியது மத்திய அமைச்சரவையே ஆகும். ஆகவே மத்திய அமைச்சரவை பார்த்து, ஒரு மாநில அரசு அரசமைப்புச் சட்டப்படி இயங்க வில்லை எனக் கருதினால், அது குடியரசுத் தலைவரின் "திருப்தி"யாகி விடும். மத்திய அமைச் சரவையின் ஆலோசனையின் பேரில் மாநில சுயாட்சியினை அழிக்கும் குடியரசுத் தலைவரின் பிரகடனமும் உடனே அறிவிக்கப்பட்டு விடும்.

ஒரு மாநிலத்திலுள்ள நெருக்கடி நிலை பற்றிக் குடியரசுத் தலைவர் (மத்திய அமைச்சரவை) எப்படித் தெரிந்து கொள்ள முடியும்?

மத்திய அரசின் கங்காணியான மாநில ஆளுநரிடமிருந்து "அந்த மாநிலத்தின் சர்க்கார் இயங்க முடியாது; அந்த மாநிலத்தில் நிர்வாக இயந்திரம் பழுது பட்டு விட்டது; அதனால் நெருக்கடி நிலை நடவடிக்கைகள் உடனே தேவை" என்று கூறக்கூடிய ஓர் அறிக்கையை மத்திய அரசு பெற்றுக் கொள்ளும். அந்த அறிக்கையின் பேரில் "திருப்தி" அடைந்த மத்திய அரசு,குடியரசுத் தலைவர் மூலமாக நெருக்கடி நிலையைப் பிரகடனப் படுத்தி விடும். உண்மையில், ஒரு மாநிலத்தின் சர்க்கார், ஒழுங்காகக்கூடப் பணியாற்றிக் கொண்டிருக்கலாம். ஆனால் மத்திய அரசைக் கைக்கொண்ட ஓர் அரசியல் கட்சியின் திருவிளையாடலுக்காக "அந்த மாநில அரசு நிலை குலைந்து போய் விட்டது" என்ற அறிக்கையை, அந்த மாநில ஆளுநர் மூலம் மத்திய அரசு வலிந்து பெற்றுக் கொண்டு, அந்த மாநிலத்தில் இயங்கும் ஓர் எதிர்க்கட்சி அமைச்சரவையைக்கூடக் கலைத்துவிடலா மல்லவா?

இந்தச் சட்டவிதியின் மூலமாக மாற்றுக் கட்சியைச் சார்ந்த மாநில அமைச்சரவைகள் மத்திய அரசால் வேண்டும் போது கலைக்கப்படலாம் என்ற அச்சமும் ஐயமும் இந்த விதியை உருவாக்கிய காலத்தில் கூடப் பல சட்ட வல்லுனர்களுக்கு இருந்தது. ஆனால் மத்திய அரசின் இந்த ஆயுதம், விதி

விலக்காக மட்டும் பயன் படுத்தப்படும் எனப் பொதுவான மறு மொழியும் அரசமைப்புச் சபையில் கூறப்பட்டது. ஆனால் சென்ற கால் நூற்றாண்டுக் காலத்தில் 356-ஆம் சட்டவிதியின் துணையோடு மத்திய அரசின் கங்காணியான மாநில ஆளுநர் களின் அறிக்கைகளை மத்திய அரசு பெற்றுக் கொண்டு ஏறத்தாழ 29 முறை பல மாநில அரசுகளைக் கவிழ்த்துள்ளது. இந்த இயலின் இறுதிப் பகுதியில் அந்த நிகழ்ச்சிகளில் சில விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன.

இச் சட்ட விதியின்படி "ஒரு மாநில சர்க்கார் இயங்க முடியாத சூழ்நிலை ஏற்பட்டு விட்டது" என ஆளுநரின் அறிக்கையே இல்லாமல் "வேறு வகையில்" கூடக் குடியரசுத் தலைவர் (மத்திய அமைச்சரவை) அறிந்து, திருப்தியடைந்து மாநில நெருக்கடி நிலையைப் பிரகடனப்படுத்தலாம்.

"வேறு வகையில்" என்ற இந்தச் சிறு சொல்லைப் பயன் படுத்தி மிகப்பெரிய ஜனநாயகக் கொலையைக் கூட நமது மத்திய அரசால் மாநிலங்களில் செய்ய முடியும்.

குடியரசுத் தலைவர் அதாவது மத்திய அமைச்சரவை, ஒரு மாநிலத்தின் நிர்வாகம் பழுதடைந்து விட்டது என்பதை "வேறு வகையில்" எப்படித் தெரிந்து கொள்ள முடியும்? உண்மையைக் கூறினால் மத்திய அரசு, அதைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டிய அவசியமே இல்லை. மாநிலத்தின் நிர்வாக நிலை, தனக்குத் தெரிந்து விட்டது என்பதற்கான ஒரு நொண்டிச் சமாதானத்தை மத்திய அரசு காட்டுவதற்காகவே "வேறு வகையில்" என்ற சொற்றொடர் 356-ஆம் சட்ட விதியில் வலிந்து பயன் படுத்தப்பட்டுள்ளது.

மாநில அரசினை ஆளும் ஓர் அரசியல் கட்சிக் கெதிராகச் செயல்படும் சில தனி மனிதர்களோ, அல்லது மாநிலத் தேர் தலில் தோற்றோடிப் போன சில அரசியல் கட்சிகளோ, அந்த மாநில அரசின் மீது ஆதார மற்ற சில குற்றச்சாட்டுகளைக் கூறி மனுவொன்று தயாரித்து மாநில அமைச்சரவையைக் கலைக்கு மாறு குடியரசுத் தலைவருக்கு (மத்திய அமைச்சரவைக்கு)க் கோரிக்கைகளைச் சமர்ப்பிக்கலாம். அந்த ஆதார மற்ற குற்றச் சாட்டுப் பட்டியலை அடிப்படையாக வைத்தும் கூட, குடியரசுத் தலைவர் அதாவது மத்திய அமைச்சரவை அந்த மாநிலத்தில் நெருக்கடி நிலை உருவாகி விட்டதென்று "வேறு வகையில்" திருப்தியடைந்து கொள்ளலாம்.

அரசமைப்புச் சட்ட விதிகளின்படி ஜனநாயக முறையில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு மாநில அரசு செம்மை யோடு இயங்கினாலும் கூட, அதிருப்தியாளரின் குற்றப்பட்டிய லால் ''திருப்தி யடைந்த'' மத்திய அரசு, அந்த மாநிலத்தின் சட்ட மன்றத்தை அல்லது அமைச்சரவையை ஒரே நாளில் ''நெருக்கடி நிலை'' எனச் சாற்றிக் கவிழ்த்து விடலாம்.

மத்திய அரசின் ஆளும் கட்சி சில வேளைகளில் தனக்கெதி ரான மாநில அமைச்சரவையைக் கலைப்பதற்காக அந்த மாநிலத்தில், சில அதிருப்தியாளர்களையும் தானே உருவாக்கி அவர்களைத் தூண்டிவிட்டு, அவர்கள் கொடுக்கும் அறிக்கை யினை வைத்து ''வேறு வகையில் திருப்தி யடைந்ததாக''க் கொண்டு மாநில அரசைக் கவிழ்ப்பதற்காகப் பெரு முயற்சி செய்த பல நிகழ்ச்சிகளும் நமது சுதந்திர நாட்டு வரலாற்றில் காணக் கிடைக்கின்றன. அவற்றில் சிலவற்றைச் சான்றுக்காகக் கீழே தருகிறோம்.

சான்றுகள் :-

(1) கேரளச் சட்ட மன்றத்தில், பெரும்பான்மையைப் பெற்றிருந்த கம்யூனிஸ்டுக் கட்சி அரசு 1959-ஆம் ஆண்டில் நம்பூதிரிபாடு தலைமையில் இயங்கிற்று. தேர்தலில் ஆட்சியினைக் கைப்பற்ற முடியாத காங்கிரசுக் கட்சி, கம்யூனிஸ்டு அரசாங் கத்தைக் கவிழ்க்கப் பல குறுக்கு வழிகளை மேற்கொண்டது. காங்கிரசுக் கட்சியில் அன்றையத் தலைவராயிருந்த இந்திரா காந்தியம்மையாரின் ''ஜனநாயக முறை'' அதற்காக அப்போது பயன்பட்டது. காங்கிரசுக் கட்சி பல உதிரிக் கட்சிகளை ஒன்று சேர்த்துக் கொண்டு ''ஐக்கிய முன்னணி'' என்று அதற்குப் பெயர் கொடுத்துக் கம்யூனிஸ்டு அரசாங்கத்தைக் கவிழ்க்க முயற்சி செய்தது.

கேரள மாநிலத்தில் கொலை, கொள்ளை, அராஜகம், மிகுந்து விட்டதெனக்கொண்டும், பொது மக்களுக்கும் அவர்கள் சொத்துக்கும் பாதுகாப்பில்லை என்று சாற்றியும், நிர்வாகத்தில் ஊழலும் ஆளும் கட்சியின் தலையீடும் மிகுந்து விட்டன எனக் கூறியும், கம்யூனிஸ்டு ஆட்சிக்கெதிராக ஒரு குற்றப் பட்டியல் தொகுக்கப்பட்டது.

அதனடிப்படையில் மாநில அரசின் நிர்வாகத்தில் மத்திய அரசு தலையிட வேண்டுமென ஐக்கிய முன்னணி கோரிற்று. ஆனால் இறுதியில் அதே குற்றச்சாட்டுகளைக் கொண்ட ஆளுநர் அறிக்கையினைப் பெற்று''மாநில நெருக்கடி நிலை''கேரளத்தில் அமுலாக்கப்பட்டது. கம்யூனிஸ்டு அரசும் கவிழ்ந்தது.

சட்டவிதி 356-இல் திணிக்கப்பட்டுள்ள சொற்றொடரான ''வேறு வகையில் குடியரசுத் தலைவர் திருப்தியடைந்தால்'' என்பதை முகாந்தரமாக வைத்தே, ஜனநாயகத்திற்குப் புறம்பான இந்தக் கீழ்த்தரமான''கவிழ்ப்பு முறையை''மக்கள் மன்றத்தால், தேர்தலில் ஒதுக்கப்பட்ட எதிர்க் கட்சிகள், காங்கிரசின் ஆசியோடு மேற்கொண்டன.

(2) தமிழகச் சட்டமன்ற மொத்த உறுப்பினர்கள் 234 பேர்களில், 184 பேர் திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர்கள். இது 1971-ஆம் ஆண்டு, பிப்ரவரித் திங்களில் நடந்த பொதுத் தேர்தலில் மக்கள் தந்த தீர்ப்பு. பெரும்பான்மையைப் பெற்ற திராவிட முன்னேற்றக் கழகம், அரியணை யேறிற்று. அதனைக் கீழிறக்க இந்திரா காங்கிரஸ் கட்சியின் மேலிடம் சகுனித் திட்டத்தை வகுத்தது என்றும் எம். ஜி. ராமச்சந்திரன் என்ற நடிகரை இந்திரா காங்கிரஸ் கட்சி தன் வசப்படுத்திக் கொண்டது என்றும் அதற்குச் சில மத்திய அமைச்சர்களும் பயன் படுத்தப்பட்டார்கள் என்றும் தமிழகப் பத்திரிக்கைகளில் செய்திகள் வெளி வந்தன.

''கணக்கைக்கேட்டேன், தரவில்லை'' எனக் கூறிக் கொண்டு,திரு. எம். ஜி. ராமச்சந்திரன், திராவிட முன்னேற்றக் கழகத்திலிருந்து வெளியேறினார். புதிய அரசியல் கட்சியொன்றையும் பத்தே நாட்களில் உருவாக்கினார். ஆனால், அதன் கொள்கைகள் மட்டும் அப்போது உருவாக வில்லை. 13 மாதங்களுக்குப் பின் அதன் கொள்கைகள் வெளி வந்தன.

''திராவிட முன்னேற்றக் கழக அரசை ஒழிப்பதுதான் என் கட்சியின் கொள்கை — அந்த அரசின் மீது (ஆதாரமின்றிச்) சொல்லப்படும் ஊழல் குற்றச்சாட்டுப் பட்டியல் தான் எனது ஆயுதம்''-என முழங்கினார், எம்.ஜி.இராமச்சந்திரன் அவர்கள். அவர் வலதுசாரிக் கம்யூனிஸ்டுக் கட்சியின் ஆதார பலத்துடன் திராவிட முன்னேற்றக் கழக அரசின்மேல் ஊழல் குற்றச்சாட்டுப் பட்டியல் ஒன்றைத் தயாரித்தார்.1959-ஆம் ஆண்டில்

கேரளத்தில் காங்கிரஸ் கையாண்ட அரசியல் சட்ட(ஓட்டை)த் தந்திரத்தைப் புதிய மெருகுடன் திரு. எம். ஜி. இராமச் சந்திரனும் திரு. கல்யாண சுந்தரமும் 1972-இல் தமிழகத்தில் கையாள முற்பட்டனர்.

4—11—1972-ஆம் தேதியிட்டு, எம். ஜி. இராமச்சந்திரன் அவர்கள், ''பொதுவாக நம்பப்படுகிறது,'' ''பொதுவாகப் பேசப்படுகிறது'' ''என்று தெரிய வருகிறது'', ''பேசப்படு கிறது'' என்ற வினையெச்சங்களோடு முடியக் கூடிய ஆதார மற்ற 32 குற்றச்சாட்டுக்களையும், வலது கம்யூனிஸ்டுத் தலைவர் திரு.கல்யாண சுந்தரம் அதைப் போன்ற 20 குற்றச்சாட்டுக்களை யும், திராவிட முன்னேற்றக் கழக அரசின் மீது அடுக்கி, அந்த இரண்டு ஊழல் பட்டியல்களையும் குடியரசுத் தலைவரிடம் வழங்கினார்கள்.

குடியரசுத் தலைவரிடம் கொடுக்கப்பட்ட ஊழல் குற்றச் சாட்டுப் பட்டியல்களுக்கு விளக்கம் தர வேண்டுமெனக்கோரி, தலைமை யமைச்சர், தமிழக முதல்வருக்குக் கடிதம் எழுதினார். குற்றச்சாட்டுப் பட்டியலையும் தலைமையமைச்சர் அனுப்பி வைத்தார். இது எந்தச் சட்டவிதியின்பாற் பட்டதோ தெரியவில்லை.

அக் குற்றச்சாட்டுக்கள் முழுவதும் பொய்யானவை யென நிலை நிறுத்தும் ஆதாரங்களைக்கொண்ட பதில் பட்டியலொன்று, திராவிட முன்னேற்றக் கழக அரசால் தயாரிக்கப் பட்டது. இதுவரை எந்த மாநில அரசும் துணிந்து கடைப்பிடிக்காத ஒரு ஜனநாயக முறையினை இந்தியத் துணைக் கண்டத்திற்கு வழி காட்டியாகத் திராவிட முன்னேற்றக் கழகத் தமிழக அரசு கடைப்பிடித்தது. எம். ஜி. இராமச்சந்திரன் மற்றும் கல்யாண சுந்தரம் அவர்களால் சொல்லப்பட்ட ஊழல் குற்றச்சாட்டுக்களை யும் அதற்குரிய தமிழக அரசின் பதில்களையும் தமிழக அரசு அச் சடித்து வெளியிட்டது. அவைகளை மக்கள் மன்றத்திலும் வைத்தது. அக் குற்றச்சாட்டுக்கள் முழுவதும் பொய்யானவை என மக்கள் மன்றத்தில் நிரூபிக்கப்பட்டன.

சட்டவிதி 356-இல் குறிப்பிடப்பட்டிருக்கும் ''வேறுவகை யில்கூடக் குடியரசுத் தலைவர் திருப்தியடைந்தால்'' என்ற சொற் றொடர்களை ஆதாரமாகக் கொண்டே தமிழகத்தில் திராவிட முன்னேற்றக் கழக அரசு ''நெருக்கடி நிலைக்கு'' ஆளாக்கப்பட்டுக் கலைக்கப்பட்டு விடும் எனக் கருதியே இக் குறுக்கு வழியைச் சில

அதிருப்தியாளர்கள் மேற்கொண்டனர். 356-ஆம் சட்டவிதியின் வாசகத்தை வைத்து ஜனநாயக முறையில் தேர்ந்தெடுக்கப் பட்ட ஒரு மாநில அரசைக் கவிழ்ப்பது எவ்வளவு எளிமை யானது என்பது புரிகிறதா?

ஆனல், மாநில சுயாட்சியினை யழிக்கும் இந்தச் சட்டவிதி களின் நுணுக்கங்களை நாம் விளக்க முற்பட்டால் அதனைப் ''பிரிவினை வாதம்'' என்று அன்றையத் தேசியத் தலைவர்களும் இன்றையத் தேசியத் தலைவர்களும் கூறுகின்றனர். அவர்கள் கூற்றுச் சரியானவை என்ருல், இந்தச் சட்டவிதிகளே இல்லாத சில கூட்டாட்சி நாடுகளின் அரசமைப்புச் சட்டங்கள் ''அதன் மாநிலங்கள் பிரிந்து செல்வதற்கு'' வித்திடுகின்றன என்று தானே பொருள். ஆனல், உண்மையில் பல கூட்டாட்சி நாடு களில் மாநிலங்களின் பிரிவினை இதுவரை ஏற்பட்ட தில்லை.

மாநில நெருக்கடிநிலை பற்றிய 356, 357 மற்றும் 358 ஆகிய சட்டவிதிகளைப்போல் வேறு எந்த நாட்டு அரசமைப்புச் சட்டவிதி களிலும் நமக்குக் காணக் கிடைக்க வில்லை. மேலும் ''மாநிலத்தில் நெருக்கடி நிலை'' என்ற சொற் பிரயோகம் கூட, அமெரிக்கா, ஆஸ்திரேலியா, கனடா, ரஷ்யா மற்றும் ஸ்விட்சர்லாந்து ஆகிய நாடுகளின் அரசமைப்புச் சட்டங்களில் இடம் பெறவில்லை. ஆனல் அந்நாடுகளில் இதுவரை எந்த மாநிலமும் பிரிந்தும் செல்ல வில்லை.

## IV

## மத்திய அரசிற்கொரு நீதி மாநிலங்களுக்கொரு நீதியா?

''மாநிலங்களில் நெருக்கடி நிலை'' எனச் சாற்றி மாநில அரசமைப்பு இயந்திரத்தையே நிறுத்தி வைத்து விடும் ஏற்பாட்டைப் போல், அகில இந்தியாவின் 'தேசிய நெருக்கடி' காலங்களில், மத்திய அரசின் அரசமைப்பு இயந்திரத்தை நிறுத்தி வைக்கும் ஏற்பாடு எதுவும் நமது அரசின் அரசமைப்புச் சட்டத்தில் செய்யப்பட வில்லை.

''தேசிய நெருக்கடி நிலை'' என்ருலும் ''மாநில நெருக்கடி நிலை'' என்ருலும், பாதிக்கப்படுபவை மாநிலங்கள் மட்டுமே; மத்திய அரசல்ல.

அரசமைப்புச் சட்டத்தின்படி நமது மத்திய அரசு மெய்யாக வே இயங்க முடியாத போதும்கூட நமது குடியரசுத் தலைவர் மாநில அமைச்சரவையைக் கவிழ்ப்பதைப் போல் மத்திய அமைச்சரவையையும் கவிழ்த்து விட முடியுமா? அவர் மாநிலச் சட்ட மன்றத்தைக் கலைப்பதைப் போல் நாடாளு மன்றத்தையும் கலைத்து விட முடியுமா?

முடியாது.

மத்திய அமைச்சரவையையும் நாடாளு மன்றத்தையும் தேசிய நெருக்கடிக்காலத்தில், குடியரசுத் தலைவர் கலைத்துவிடக் கூடிய எந்த ஓர் ஏற்பாட்டைப் பற்றியும் நமது அரசமைப்புச் சட்டம் கூறுவதில்லை.

ஒரு மாநில அரசு, அரசமைப்புச் சட்டவிதியின்படி நடை பெற முடியாத போது, குடியரசுத் தலைவர் அதன் சட்ட மன்றத்தைக் கலைக்கலாம்; அமைச்சரவையையும் கவிழ்க் கலாம். ஆனால், மத்திய அரசிற்கு அந்த நெருக்கடி நிலை ஏற்படும் போது, குடியரசுத் தலைவர் அதைப்போல் எதனையும் செய்ய முடியாது. நாடாளுமன்றத்தால் ஒரு தலைமையமைச்சர் தோற்கடிக்கப்படும் போது இன்னொரு தலைமை யமைச்சரைத் தேர்ந்தெடுக்குமாறு நர்டாளு மன்றத்தைக் குடியரசுத் தலைவர் கோரலாம். அல்லது அவர் தானே இன்னொரு தலைமை யமைச்சரைத் தேர்ந்தெடுக்கலாம். அவரையும், நாடாளு மன்றம் ஏற்காதபோது இன்னொரு தலைமை யமைச்சரை அவர் நியமிக்கலாம். இப்படியே நிலையான ஒரு தலைமை அமைச் சரையும் அமைச்சரவையையும் நாடாளுமன்றம் ஏற்றுக் கொள்ளும் வரை, அந்தத் தலைமையமைச்சர்களைக் குடியரசுத் தலைவர் நியமிப்பார்.

தேர்ந்தெடுக்கப்பட்ட தலைமையமைச்சர் நாடாளு மன்றத்தைச் சரிக்கட்டிக் கொண்டு செல்ல வேண்டும். அல்லது நாடாளு மன்றத்தைக் கலைக்குமாறு அவர் குடியரசுத் தலைவருக்கு ஆலோசனை வழங்க வேண்டும். அதன் பின்னரே நாடாளு மன்றத்தைக் குடியரசுத் தலைவர் கலைக்க முடியும். ஒரு தலைமை யமைச்சரை, நாடாளுமன்றம் ஏற்காதபோது, குடியரசுத் தலைவரால் தன்னிச்சையாக நாடாளுமன்றத்தைக் கலைத்துவிட முடியாது.

நாடாளுமன்றம் கலைக்கப்பட்ட பின்னர் மீண்டும் ஒரு தேர்தல் நடத்தி, புதிய நாடாளு மன்ற உறுப்பினர்கள்

தேர்ந்தெடுக்கப்பட்டு, அவர்களாலும் ஒரு நிலையான அமைச்சரவையை ஏற்றுக் கொள்ள முடியா விட்டால், பழைய கதையே மீண்டும் மீண்டும் தொடரும்.

நிலையான ஓர் அமைச்சரவை கிடைக்கும் வரை தொடர்ந்து, நாட்டில் அமளி நீடிக்கலாம்; மக்களின் வரிப் பணம் வாரி யிறைக்கப்பட்டுப் பல முறை தேர்தல்கள் நடைபெறலாம். ஆனாலும் "நெருக்கடி நிலை" யெனச் சாற்றி, குடியரசுத் தலைவர் மத்திய அரசின் பொறுப்புக்களை (மாநில அரசுகளின் பொறுப்புக்களை அவர் ஏற்றுக் கொள்வது போல்) தானே ஏற்றுக் கொள்ள முடியாது. தலைமையமைச்சரின் ஆலோசனையின்றி நாடாளுமன்றத்தைக் கலைக்கவும் முடியாது.

இப்படி மத்திய அரசிற்கொரு நீதி; மாநில அரசுகளுக்கொரு நீதி; இதுதான் இந்தியக் குடியாட்சி முறை!

## V

## வல்லுனர்களின் விமர்சனங்கள்

1. அரசமைப்புச் சபை உறுப்பினரும் சட்ட வல்லுநருமான எச். என். குன்சுரு (KUNZRU) அவர்கள் மாநில நெருக்கடி நிலைச் சட்டவிதிகளைப் பற்றிக் கூறும்போது,

> "ஒரு மாநிலச் சட்ட மன்றத்திலுள்ள பல அரசியல் கட்சிகளின் இயக்கத்தால் ஏற்படும் நிலையற்ற தன்மையை அடிப்படையாக வைத்து மத்திய அரசு மாநில அரசில் தலையிடுவதற்கு எவ்வகை நியாயமு மில்லை. மத்திய அரசிற்குக் கொடுக்கப்பட்டுள்ள இந்த அதிகாரங்கள் மெய்யாகவே மிகப் பெரிய ஆபத்தை விளைவிக்கக் கூடியவை. ஒரு மாநிலத்தில் சிலருக்கு ஏற்படும் அதிருப்தியின்போது அவர்கள் அப்போது நடைபெற்றுக் கொண்டிருக்கும் மாநில அரசில் தலையிடக்கோரி, மத்திய அரசிற்கு விண்ணப்பங்களைச் செய்யலாம், அதனை முகாந்திரமாக வைத்துக்கூட மத்திய அரசு, மாநில அமைச்சரவையைக்கலைக்கமுயற்சிக்கலாம்."[2]

என மத்திய அரசின் எதேச்சதிகாரத்தைப் பற்றித் தொலை நோக்குடன் கால் நூற்றாண்டுகட்கு முன்னரே தெளிவாக்கினர்.

2 C. A. D. Vol. IX. P. 156.

அப்படியொரு சூழ்நிலை ஏற்பட்டால் மத்திய அரசு அந்த மாநில அமைச்சரவையைக் கலைக்கக் கூடாதெனவும், அடுத்த தேர்தலில் அந்த மாநில மக்களே அந்த அமைச்சரவையை அப்புறப் படுத்துவதற்கு விட்டுவிட வேண்டு மென்றும் திரு. குன்சுரு அவர்கள் அரசமைப்புச் சபையில் வலியுறுத்தினர். அந்தப் பொறுப்பினை மத்திய அரசு ஏற்றுக் கொள்ளக் கூடாது என்றும் அவர் கூறினர்.

ஒரு மாநிலத்தின் மக்கள் தவருன ஓர் அமைச்சரவையைத் தேர்ந்தெடுத்து விட்டால்,

> ''அந்தத் தவருன அரசாங்கத்தை அகற்றுவதற்குரிய பரிகாரத்தைக் காணும் உரிமையை அந்த மாநிலத்தின் வாக்காளர்களே பெற்றிருக்க வேண்டும். அவர்கள் பொறுப்புக்களை அவர்களே உணருமாறு நாம் செய்ய வேண்டும்.'' 3

என மாநில மக்களது உரிமையை அவர் தெளிவாக எடுத்துக் கூறினர்.

2. மாநில நெருக்கடி நிலை பற்றிய சட்டவிதிகள் மத்திய அரசை ஒரு சர்வாதிகார அரசாக மாற்றிவிடும் என்ற கருத்தை மூன்ரும் நிதிக் குழுவின் தலைவராயிருந்தவரும் சிறந்த அரசமைப்பு வல்லுநருமான திரு. அசோக்சந்தா அவர்கள் குறிப்பிடுகின்ருர்,

> ''மாநில அரசை முறியடிப்பதற்கும், அவற்றின் சட்டமன்றங்களைக் கலைப்பதற்கும், மாநிலங்களில் அரசமைப்புச் சட்ட நடவடிக்கைகளை நிறுத்தி வைப்பதற்கும் பயன்படும் இந்த (மாநில நெருக்கடி நிலைச்) சட்டவிதிகள், மற்ற நாட்டு அரசமைப்புச் சட்டங்களில் காணப்படாத அசாதாரணமான விதிகளாகும்.'' 4

எனத் தெளிவாக்குகிருர்.

---

3 Ibid, Opp. cited Note-2.

4 "Federalism in India" (1965), P. 100.

"மாநிலங்களின் சட்டமியற்றும் அதிகாரங்களையும் நிர்வாக அதிகாரங்களையும் (மத்திய அரசு) ஊடுருவல் செய்வதென்பது கூட்டாட்சிக் கோட்பாடுகளுக்கே முற்றிலும் முரணானதாகும். நமது அரசமைப்பு முறை குடியரசுக் கொள்கைகளைத் தன்னகத்தே கொண்டிருந்த போதிலும் கூட சர்வாதிகாரத் தன்மைகளி லிருந்து அது முழுமையாக விடுபட வில்லை." 4-A

என்ற வரிகளில் இச்சட்டவிதிகளால் ஏற்படும் சர்வாதிகார விளைவுகளைக் குறிப்பிடுகிறார்.

3. தேர்ச்சி பெற்ற நாடாளு மன்றவாதியெனப் புகழ் பெற்றிருக்கும் திரு. எச் வி. காமத் அவர்கள்,

"மாநிலத்தின் சட்ட ஒழுங்கிற்கு, பங்கமேதும் ஏற்படாத போதுகூட, குடியரசுத் தலைவர் (மத்திய அமைச்சரவை) மாநில உள்விவகாரத்தில் தலையிடுவதற்கு இச்சட்ட விதிகள் வாய்ப்பளிக்கின்றன. மாநில அமைச்சரவையால் ஏற்பட்ட சிக்கலைத் தவிர்க்க வேண்டும் என்ற பெயரால், மாநில நிர்வாகத்தில் குடியரசுத் தலைவர் தலையிடலாகாது; மாநிலத்தின் உள்நாட்டுக் குழப்பத்தை ஒடுக்க வேண்டும் என்ற பெயரால் மாநில சுயாட்சி மத்திய அரசால் அழிக்கப்படுகிறது, மாநில உரிமைகளும் நசுக்கப்படுகின்றன." 5

என்று ஆணித்தரமாக அரசமைப்புச் சபையில் எடுத்துக் கூறினார்.

4. பேராசிரியர் சிப்பன்லால் சாக்சேனா (SHIBBANLAL SAKSENA) அவர்கள் திரு. எச். வி. காமத் அவர்களின் கூற்றுக்களைப் பின்பற்றிப் பேசும்போது,

"இச்சட்டவிதிகள் மாநில சுயாட்சியை ஒருகேலிக்கூத்தாக ஆக்கி விடும்." 6

என அரசமைப்புச் சபையில் எச்சரிக்கை செய்தார்.

---

4-A Ibid, Opp. cited, Note 4, P. 67.

5 Ibid, Opp. cited, Note. 1.

6 C.A.D Vol. IX, P. 143

5. திரு. பி. எஸ். தேஷ்முக் அவர்கள்,

"மாநில விவகாரங்களில் மத்திய அரசு, தலையிடக் கூடிய இந்த வகை அதிகாரங்கள் கூட்டாட்சித் தத்துவத்திற்கே முரணானது."[7]

என அரசமைப்புச் சபையில் எடுத்து விளக்கினர்.

6. பேராசிரியர். கே டி. ஷா அவர்கள்,

"பிற்போக்கிற்கும் எதிர் விளைவுகளுக்கும் சிகரம் வைத்தாற் போன்ற இந்த அத்தியாயத்தின் (நெருக்கடி நிலை பற்றிய அத்தியாயம்) இறுதிக் கட்டத்திற்கு நாம் வந்திருக்கிறோம். இந்தச் சட்டவிதிகளின் (நெருக்கடி நிலை பற்றி) அடித் தளத்தில், இருவேறுபட்ட எண்ண அலைகள் ஓடுவதை நாம் காணாமல் இருக்க முடியாது. ஒன்று - மாநிலங்களுக்கு எதிராக மத்திய அரசை வலிவு படுத்தக்கூடிய தனி அதிகாரங்கள்; இன்னொன்று—மக்களுக் கெதிராக மத்திய அரசு பயன் படுத்தும் அதிகாரங்கள்."[8]

என்ற விளக்கத்தின் மூலமாக இச்சட்டவிதிகளால் மத்திய அரசு ஒரு சர்வாதிகார அரசாக மாறக் கூடிய தன்மையை அவர் சுட்டிக் காட்டினர்.

7. திரு. டி. டி. கிருஷ்ணமாச்சாரி அவர்கள்,

"தவிர்க்க முடியாத தீமைகளை நாம் பொறுத்துக் கொள்ளு வதைப் போல், நெருக்கடி நிலை பற்றிய இச் சட்டவிதிகளை நாம் பொறுத்துக் கொள்ளத்தான் வேண்டும்."[9]

என்ற வரிகளால் அச் சட்டவிதிகளின் தீமைகளை ஒப்புக் கொண்டார்.

## VI

## அம்பேத்காரின் கனவும் நனவும்

நெருக்கடி நிலை பற்றிய சட்டவிதிகள் மாநில சுயாட்சியை முற்ற முழுக்க அழித்து விடுகிறது என்பதை டாக்டர். அம்பேத் கார் அவர்கள் அரசமைப்புச் சபையில் மறைமுகமாக ஒத்துக் கொண்டார்.

7 C. A. D Vol. IX. P. 147.
8 C. A. D Vol. VIII, P. 196
9 C. A. D. Vol. IX, P. 125

''இந்தச் சட்டவிதிகளை, அரசியல் காரணங்களுக்காக முறையின்றிப் பயன்படுத்தக் கூடிய சாத்தியக் கூறுகள் உள்ளன என்பதை நான் மறுக்க வில்லை. ஆனால் மாநிலங்களின் மேல் மத்திய அரசு மேலாண்மை செலுத்துவதற்கான பல அதிகாரங்களை வழங்கக்கூடிய நமது அரசமைப்புச் சட்டத்தின் பல சட்டவிதிகளுக்கு, எதிராகக் கிளப்பப்படும் எதிர்ப்புக்களே (மாநில நெருக்கடி நிலை பற்றிய) இந்தச் சட்டவிதிகளுக்கும் எதிராகக் கிளப்பப்படுகின்றன...இந்தச் சட்டவிதிகள் நடைமுறைக்கு வாராத ஓர் உயிரற்ற சொற்றொடராகத் ( Dead Letter ) தான் எதிர் காலத்திலிருக்குமென நாம் எதிர்பார்ப்போமாக.''10

என டாக்டர் அம்பேத்கார் அவர்கள் கனவு கண்டார்.

டாக்டர் அம்பேத்காரின் மேற்சொன்ன மேற்கோள், இரண்டு உண்மைகளைத் தெளிவுபடுத்துகின்றன.

(அ) மாநிலங்களின் மேல், ஆட்சி செய்யக் கூடிய பல அதிகாரங்களை மத்திய அரசிற்கு நமது அரசமைப்புச் சட்ட விதிகள் தந்துள்ளன என்பது முதல் உண்மை.

(ஆ) இரண்டாவதாக, மாநிலத்தின் நெருக்கடி பற்றிய சட்ட விதிகள் எதிர் காலத்தில் அரசியல் காரணங்களுக்காக மாநிலங்களின் மேல் மத்திய அரசால் பயன் படுத்தப்படும் என்பதும் அவைகளை உருவாக்கிய காலத்திலேகூட, டாக்டர் அம்பேத்கார் அவர்களுக்குத் தெரிந்துதானிருந்தது.

ஆனாலும், மாநில சுயாட்சிக் கெதிராகப் பயன் படுத்தப் படும் மிகப் பெரிய ஆயுதத்தை வேண்டு மென்றே மத்திய அரசிற்குத் தந்திருக்கிறார்கள். எனினும், அவை எதிர் காலத்தில் அமுலாக்கப்படாமல், உயிரற்ற சொற்களாகவே வைக்கப் பட்டுவிடும் என அவரால் கனவு காணப்பட்டது. ஆனால் அம்பேத்கார் அவர்களின் அந்தக் கனவு (நெருக்கடி நிலைச் சட்ட விதிகள் அமுலாக்கப்படாது என்ற கனவு) எதிர் காலத்தில் நனவாயிற்றா? இல்லை. மாறாக, காங்கிரஸ் கட்சியின் சுயநலத்திற்காகவும் பல அரசியற் காரணங்களுக்காகவும் மாநில நெருக்கடி நிலை பற்றிய சட்டவிதிகள் தீவிரத் தன்மையோடு பலமுறை பயன் படுத்தப்பட்டிருக்கின்றன.

---

10 C. A. D. Vol, IX, P. 177

## சில சான்றுகள்

1. பெப்சு:-

முதல் பொதுத் தேர்தலுக்குப் பின்னர் பாட்டியாலா, கிழக்குப் பஞ்சாப் யூனியன் (PEPSU) மாநிலத்தில், காங்கிரஸ் ஆட்சிக்கு வந்தது. பல கட்சிகள் சேர்ந்து ஐக்கிய முன்னணியை அமைத்தன. பல காங்கிரஸ்காரர்கள், காங்கிரசிலிருந்து தாவி ஐக்கிய முன்னணிக்குச் சென்றனர். ஐக்கிய முன்னணிக் கட்சியைச் சார்ந்த சர்தார் கியான்சிங்ரார்வாலா அவர்கள் முதல் காங்கிரஸ் அல்லாத அமைச்சரவையை, பெப்சுவில் அமைத்திருந்தாலும், அவருடைய தேர்தல் செல்லாதெனப் பின்னர் அறிவிக்கப்பட்டதால் அந்த அமைச்சரவை, பதவியிலிருந்து இறங்கியது. ஆனால், ஐக்கிய முன்னணி மீண்டும் அமைச்சரவையை அமைக்க வாய்ப்புக்கொடுக்கப்படவில்லை.5-3-1953 முதல் 7-3-1954 வரை நெருக்கடி நிலைப் பிரகடனம் அமுல் படுத்தப்பட்டது. மாநிலச் சட்ட மன்றம் கலைக்கப்பட்டது. இதற்கிடையில் காங்கிரசு, தனது பலத்தைப் பெருக்கிக் கொண்டது. 1954-இல் நடந்த இடைத் தேர்தலுக்குப் பின் காங்கிரசு, அமைச்சரவையை அமைத்தது.

குடியரசுத் தலைவரின் ஆணை பிறப்பிக்கப் பட்டதால் வேறு கட்சி அரசாங்கம் பின்னர் பெப்சுவில் வர முடியவில்லை.

2. ஆந்திரா:-

1-10-1953-இல் ஏற்பட்ட தனி ஆந்திர மாநிலம், திரு.பிரகாசத்தை முதல்வராகக் கொண்ட அமைச்சரவையைப் பெற்றது. நம்பிக்கையில்லாத் தீர்மானத்தால் 15-11-1954-இல் பிரகாசம் அமைச்சரவை, பதவி விலகிற்று. உடனே எதிர்க் கட்சிகள் அமைச்சரவையை அமைக்க வாய்ப்புக் கோரினர். ஆளுநரால் மறுக்கப் பட்டது. குடியரசுத் தலைவரால் நெருக்கடி நிலை அமுல்படுத்தப்பட்டது.

காங்கிரஸ் கட்சியில் பிளவு நீங்கிய பிறகு இடைத் தேர்தல் நடைபெற்று, 1955-ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் மீண்டும் காங்கிரஸ் அமைச்சரவையை அமைக்கக் குடியரசுத் தலைவர் பிரகடனம் பயன்பட்டது.

3. கேரளா:-

பல அரசமைப்புப் பிரச்சனைகளுக்குக் கேரள மாநிலம் வேட்டைக்காடாக அமைந்ததெனில், அது மிகையாகாது. 31-7-1959-இல், திரு.நம்பூதிரிபாட்டின் கம்யூனிஸ்டு அமைச்சரவை, குடியரசுத் தலைவரின் நெருக்கடி நிலைப் பிரகடனத்தால் கவிழ்க்கப்பட்டது. மீண்டும் 1964-ஆம் ஆண்டு செப்டம்பரில் காங்கிரஸ் கட்சியைச் சார்ந்த,திரு.சங்கர் அவர்கள் தலைமையில் அமைந்த அமைச்சரவை நம்பிக்கையில்லாத் தீர்மானத்தால் பதவி விலகியது. மாற்றுக் கட்சி அமைச்சரவை ஏற்பட வாய்ப்பில்லாததால் ''நெருக்கடி நிலை'' மீண்டும் பிரகடனமாயிற்று. 1965-இல் நடைபெற்ற இடைத் தேர்தலில் எந்தக் கட்சியும் நிகரப் பெரும்பான்மை பலத்தைப் பெறவில்லை. கம்யூனிஸ்டு உறுப்பினர்களையெல்லாம் காவலில் வைத்து விட்டு இந்தத் தேர்தல் நடைபெற்றது. ஆனால் சிறைக்குள்ளிருந்தே 40 சட்டமன்ற இடங்களில், கம்யூனிஸ்டுக் கட்சி வெற்றி வாகை சூடியது. அவர்களில் 29 பேர் சிறையிலிருந்தனர். இந்த நிலையில் கூடக் காங்கிரஸ் 36 இடங்களையும் கேரள காங்கிரஸ் 24 இடங்களையும் தான் பெற்றிருந்தன. ஆனால் சட்டமன்றத்தைக் கூட்டாமலேயே, சட்டமன்ற உறுப்பினர்களுக்குப் பதவிப் பிரமாணம் கூட செய்து வைக்காமல், சனநாயகத் தத்துவத்திற்கே முரண்பாடாகக் குடியரசுத் தலைவர் பிரகடனத்தால் சட்டமன்றம் கலைக்கப்பட்டது.

1967-ஆம் ஆண்டுக்குப் பின்னர்

1967-இல் நடந்த நான்காம் பொதுத்தேர்தலுக்குப் பின்னால் பீகார், கேரளம், ஒரிசா, பஞ்சாப், தமிழ்நாடு, மேற்கு வங்கம், அரியானா,மத்தியப்பிரதேசம் மற்றும் உத்தரப் பிரதேசம் ஆகிய 9 மாநிலங்களில் காங்கிரஸ் அல்லாத கட்சிகள் ஆட்சியைக் கைப்பற்றின. அவைகளைக் கவிழ்ப்பதற்குரிய வழிகளைக் காண்பதற்காகக் காங்கிரஸ் கட்சி எல்லா வழி முறைகளையும் மேற்கொண்டது. காங்கிரஸ் கட்சிக்குள் கோஷ்டிகளும் வகுப்பு வாதமும் தலைதூக்கி நின்றன. மாநிலச் சட்டமன்றங்களில்காங்கிரஸ்எதிர்க்கட்சியாகப் பணியாற்றத் தயாராயில்லை. எனவே, அது பல மாநிங்களில் நெருக்கடி நிலைக்குரிய சூழ்நிலைகளை முறையில்லாமல் உருவாக்கிற்று. நெருக்கடி நிலைப் பிரகடனங்களைக் குடியரசுத் தலைவர், காங்கிரஸ் கட்சிக்குச் சாதகமாக அவ்வப்போது பிறப்பித்தார்.

1. இராஜஸ்தான்

மொத்தம் 184 உறுப்பினர்களைக் கொண்ட இராஜஸ்தான் சட்டமன்றத்தில், 89 பேர் காங்கிரஸ் கட்சியைச் சார்ந்தவர்களாகவும் 95 பேர் எதிர்க் கட்சியைச் சார்ந்தவர்களாகவும் இருந்தனர். இரு தரப்பாருமே அமைச்சரவையை அமைக்கத் தயாராயினர். பெரும்பான்மையுடைய எதிர்க்கட்சிகளை அமைச்சரவையை அமைக்குமாறு இராஜஸ்தான் ஆளுநர் பணிக்கவில்லை; மாறாக அந்தந்தத் தரப்பினர் வலிவினை (பெரும்பான்மையை) ஆளுநர் அறிந்து கொள்வதற்காக அவர் முன்னிலையில் சட்ட மன்ற உறுப்பினர்கள் நிறுத்தப்பட்டனர். ஆனால், காங்கிரஸ் கட்சியை அமைச்சரவை அமைக்குமாறு ஆளுநர் கட்டளையிட்டார்.

ஆளுநரின் ஒரு தலைப் பட்சத் தீர்ப்பை எதிர்த்து, மாநிலத்தில் போராட்டங்கள் நடை பெற்றன. அதனைக் காரணமாகக் கொண்டு நெருக்கடி நிலை அமுல் படுத்தப்பட்டது.

காங்கிரஸ் கட்சியிலிருக்கும் உட் பூசல்களைச் சரி செய்து கொள்வதற்கும், மீண்டும் காங்கிரஸ் அமைச்சரவை ஆட்சிக்கு வரத்தக்க சூழ்நிலையை ஏற்படுத்துவதற்கும், நெருக்கடி நிலைக் காலம் பயன் படுத்திக் கொள்ளப்பட்டது. காங்கிரஸ் கட்சியின் வசதிக்கேற்ப, மீண்டும் நெருக்கடி நிலை ரத்து செய்யப்பட்டது.

2. மணிப்பூர்

காங்கிரஸ் கட்சி உறுப்பினர்கள் வேறு கட்சிக்குத் தாவியதால் 1967-இல் அமைக்கப்பட்ட மணிப்பூர் காங்கிரஸ் அரசு நிலைக்கவில்லை. சட்ட மன்ற அவைத் தலைவர் பதவி விலகினார். அமைச்சரவை, தற்காலிகமாக நிறுத்தப்பட்டது. அந்த இடைக்காலத்தில் காங்கிரசை விட்டுப் பிரிந்து சென்றவர்களைச் சரி செய்து, காங்கிரஸ் அமைச்சரவையை மீண்டும் ஏற்படுத்தத் தக்க சூழ்நிலையை உருவாக்குவதற்கு அதைக் காங்கிரஸ் பயன் படுத்திக் கொண்டது. காங்கிரஸ் மீண்டும் அமைச்சரவையை அமைத்தது. 1969-ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் மீண்டும் குடியரசுத் தலைவரின் ''நெருக்கடி நிலை'' பிரகடனப்படுத்தப் பட்டது.

### 3. மேற்கு வங்கம்

14 கட்சிகளைக் கொண்ட ஐக்கிய முன்னணிக்கு மேற்கு வங்க மக்கள் பெரும்பான்மையாக வாக்களித்தனர். 1967-ஆம் ஆண்டில் அஜாய் முகர்ஜி, ஐக்கிய முன்னணி அரசை மேற்கு வங்கத்தில் ஏற்படுத்தினர். பி. சி. கோஷ் என்ற அமைச்சர் 1967-ஆம் ஆண்டு நவம்பரில், தனது பதவியை இராஜினமா செய்து விட்டுக் கட்சிமாறி, 17 பேர்களைக் கொண்ட ஒரு தனிக் குழுவைத் தொடங்கினர்.

எதிர்க் கட்சியான காங்கிரஸ் ஐக்கிய முன்னணி சார்ந்த அமைச்சரவையைப் பதவி விலகவேண்டுமென வற்புறுத்திற்று. உடனே சட்ட மன்றத்தை 30—11—67-இல் கூட்ட வேண்டு மென்று ஆளுநர் முதலமைச்சரைப் பணித்தார். ஆனால் அமைச்சரவை ஏற்கெனவே அறிவித்த தேதியான 18—12—1967-இல் தான் சட்ட சபையைக் கூட்டுவோம் என உறுதியாகச் சொன்னது.

ஆளுநர் 21-11-1967-ஆம் தேதியில் தனது விருப்பதிகாரங் களைப் பயன் படுத்தி ஐக்கிய முன்னணி அரசைக் கவிழ்த்தார்.

இதற்கிடையில் சிறுபான்மை உறுப்பினர்களைக் கொண்ட பி. சி. கோஷ் அரசை, காங்கிரஸ் ஆதரித்தது. சட்டமன்றம் கூட்டப்பட்ட போது சட்டப் பேரவைத் தலைவர் காலக் கெடுவைக் குறிக்காமல் சபையைத் தள்ளி வைத்தார். அர சமைப்புச் சிக்கல் தோன்றியது, அதற்காகக் காத்திருந்த காங்கிரஸ் மத்திய அரசு 1968-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் குடியரசுத் தலைவரின் நெருக்கடிப் பிரகடனத்தை அமுல் செய்தது. பின்னர் சட்ட மன்றம் கலைக்கப்பட்டது.

ஆனால் இடைத்தேர்தலில் காங்கிரஸ் பரிதாபமாகத் தோற்கடிக்கப்பட்டது.

1969-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் ஏ. கே. முகர்ஜி அவர்கள் ஐக்கிய முன்னணி அரசாங்கத்தை மீண்டும் நடை முறைக்குக் கொண்டு வந்து முதல்வர் ஆனர். 1972-ஆம் ஆண்டில் நடைபெற்ற தேர்தலில் இந்திரா காங்கிரஸ் கட்சியைச் சார்ந்த சித்நார்த்த சங்கர்ரே முதல்வரானர்.

4. உத்தரப் பிரதேசம்

இந்தியாவை ஆள்வது டெல்லி சர்க்கார் அல்ல; உத்தரப் பிரதேச மாநிலம் என்றால் அது மிகையாகாது. 1967-ஆம் ஆண்டுப் பொதுத் தேர்தலில் இந்தியாவை ஆட்டிப் படைக்கும் உத்தரப் பிரதேசத்தில் காங்கிரசுக் கட்சி வலிமை யிழந்தது. வழக்கம் போல், கட்சி தாவுதலைக் காங்கிரசு ஊக்குவித்தது. தற்போதைய பழைய காங்கிரசின் தலைவர்களில் ஒருவரான திரு. சி. பி. குப்தா அவர்களை உத்தரப் பிரதேசத்தின் முதல்வராக ஆக்கினார் திருமதி இந்திரா. குப்தா அவர்கள் 18 நாட்கள் முதல்வராக இருந்தார். 1967-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் முதல் நாளில் பதவியை விட்டு விலகிய காங்கிரசு முதல்வர் ''ஏப்ரல் கோமாளி''யானார்.

திரு. சரண்சிங் ஜன காங்கிரசைத் தோற்றுவித்தார். எஸ். வி. டி. கட்சியுடன் சேர்ந்து அமைச்சரவை அமைத்தார். சோசலிஸ்டுக் கட்சியும் வலது கம்யூனிஸ்டும் சரண்சிங்கிற்குக் கொடுத்த தங்கள் ஆதரவைத் திரும்பப் பெற்றுக் கொண்டதால், சரண்சிங்கும் பதவி விலகினார்.

சட்ட மன்றத்தில் பெரும்பான்மை பலம் எந்தக் கட்சிக்கு உள்ளது என்பதை யெல்லாம் கண்டு பிடிக்கும் ''சாதாரண வேலையை'' அந்த மாநிலத்தின் ஆளுநர் செய்ய வில்லை, டெல்லி பீடத்தைப் பார்த்தார். துண்டான காங்கிரசுக்கு ஒட்டுதல் வேலை செய்வதற்கு இடை வெளி தேவைப்பட்டது. எனவே, சட்ட மன்றத்தைக் கலைக்காமல் காங்கிரசுக் கட்சிக்குக்காலம் கனிய வேண்டுமென்பதற்காகச் சட்டமன்றம் செயல்படாமல் நிறுத்தி வைக்கப்பட்டது.

ஆனால் காங்கிரசின் கணக்குத் தவறாகி விட்டது. 1968-ஆம் ஆண்டு பிப்ரவரியில் குடியரசுத் தலைவர் ஆட்சி உத்தரப்பிரதேசத்தில் புகுத்தப்பட்டது. 1968-ஆம் ஆண்டு ஏப்ரல் வரை, கலைக்கப் படாமலிருந்த சட்ட மன்றம் காங்கிரசின் வசதிக்காகப் பின்னர் கலைக்கப் பட்டது. பின்னர் நடந்த இடைத் தேர்தலில் காங்கிரசு, பெரும்பான்மை பெற்று, 1969-இல் ஆட்சி அமைத்தது.

காந்தி பிறந்த நாளில் (2—10—1970) உத்தரப் பிரதேசத்தில் மீண்டும் ஒரு ஜனநாயகக் கொலை நடாத்தப்பட்டது—காந்தியவாதிகளால். பாரதிய கிரந்தி தளத்தின் தலைவரான,

திரு. சரண்சிங், இந்திரா காங்கிரசோடு சேர்ந்து அமைத்த அமைச்சரவையில் பிளவு ஏற்பட்டது. மாநில அமைச்சரவையி லிருந்து 13 அமைச்சர்களை நீக்குமாறு மாநில முதல்வரான, திரு. சரண்சிங் மாநில ஆளுநரான திரு. கோபால ரெட்டியை வேண்டினர். காங்கிரசுக் கட்சி மாற்றுக் கட்சிகளின் அமைச்ச ரவையை அழிப்பதற்குப் புதிய முறை ஒன்றை உருவாக்கிற்று. மத்திய அரசைச் சார்ந்த அட்டார்னி ஜெனரலுடன் திரு. கோபால் ரெட்டி அவர்கள் சட்ட ஆலோசனை கேட்டார். உத்தரப் பிரதேச மாநில அரசுக்குச் சட்ட ஆலோசகரே இல்லை போலும்!

மத்திய அரசின் தூண்டுதலால் அதன் சட்ட ஆலோசகர் ஒரு புதிய ஆலோசனையையும் வழங்கினர்-ஆளும் காங்கிரசுக்கு-சாதகமாக. மாநில அமைச்சரவையின் சில அமைச்சர்களை நீக்குவதற்கு மாருக மாநில முதல்வரைப் பதவி விலக வேண்டுமென ஆளுநர் பணிக்கலாமென்பதே அவ்வரிய சட்ட ஆலோசனையாகும். ஒருக்கால் மாநில முதல்வர் பதவி விலக மறுத்து விட்டால் மாநில ஆளுநரே மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட மாநில முதல்வரைப் பதவி நீக்கம் செய்து விடலாம் என்பதும் அந்த ஆலோசனையின் இன்னெரு பகுதி. மாநில ஆளுநர், திரு. கோபால் ரெட்டி, மாநில முதல்வரைப் பதவி நீக்கம் செய்யப் பணித்தார்.

குடியரசுத் தலைவரின் ஆட்சியை உத்தரப் பிரதேசத்தில் பிரகடனம் செய்யக்கோரினர். திரு. கோபால் ரெட்டி அவர்கள், வெளிநாட்டில் சுற்றுப்பயணம் செய்து கொண்டிருந்த குடியரசுத் தலைவர் உடனே மாநில நெருக்கடி நிலை அதிகாரத்தைப் பயன் படுத்தி, வெளி நாட்டிலிருந்தவாறே உள் நாட்டு மாநிலத்தைத் தனது ஆட்சியின் கீழ்க் கொண்டு வந்தார். அங்கு அரசமைப் புச் சட்டத்தால் கொடுக்கப்பட்ட அரைகுறைத் தன்னுட்சியும் அடியோடு பறிக்கப்பட்டு விட்டது.

நமது இன்றைய அரசமைப்பிலுள்ள பல சட்ட விதிகள் மாநில சுயாட்சியினை முடமாக்கி விடுகின்றன. இன்னும் சில விதிகள் மாநிலங்களையே அழிக்க முற்படுகின்றன; இன்னும் சில விதிகள் மாநிலத்தின் நியாயமான அடிப்படை அதிகாரங் களை நெருக்கிச் சுருக்கி மாய்த்து விடுகின்றன. ஆனல் இவற்றிற்கெல்லாம் சிகரம் வைத்தாற் போல மாநில அரசுகளை யும் மாநிலச் சட்ட மன்றங்களையும் மாநில அமைச்சரவை

களையும் மாநில அரசமைப்பு நடவடிக்கைகளையும் "மாநில நெருக்கடி நிலை" பற்றிய சட்ட விதிகள் வேறோடு சாய்க்கத் தக்க அசாதாரணமான அதிகாரங்களை மத்திய அரசிற்கு வழங்கி விடுகின்றன; அதன் வழி மாநில சுயாட்சியினை முற்றும் அழித்து விடுகின்றன.

எனவே தான் மாநில சுயாட்சி பற்றியும் இராசமன்னார் குழுவின் மத்திய மாநில உறவு குறித்துத் தரப்பட்ட அறிக்கை பற்றியும் ஆய்வு செய்து,கருத்துரைகளை வழங்கிய நமது தமிழக அரசு,

> "356, 357 ஆகிய பிரிவுகள், மாநிலங்களில் குடியரசுத் தலைவரின் நேரடி ஆட்சியைத் திணிக்க நெருக்கடிக் கால அதிகாரங்களை அளிக்கின்றன. இப்பிரிவுகள் நீக்கப்பட வேண்டும்."11

எனப் பரிந்துரை செய்துள்ளது.



---

11 "தமிழ்நாடு அரசின் கருத்துரைகள்" (1974) பக்கம் 12.

# 14. வறுமையில் உழலும் அடிமை மாநிலங்கள்

"இப்போது மத்திய-மாநில உறவுகள் ஓர் இக்கட்டான நெருக்கடிக்கு வந்திருக்கின்றன. தகராறின் மூலக் காரணம், நிதிமூலங்களாகும். அரசமைப்புச் சட்டம் படைக்கப்பட்ட காலத்திலிருந்து மாநிலங்கள் அரசியல் துறையைக் காட்டிலும், நிதித்துறையில் தன்னுரிமைகளை இழந்து விட்டதென்று உணர்ந்து வந்திருக்கின்றன......"

"நிர்வாக அதிகாரப் பிரிவினையை, வரியினப்பாகு பாட்டோடு ஒப்பிட்டால், முன்னதிற்கு நேர்முரணாகப் பின்னது அமைகிறது! எனவே மத்திய அரசை எப்போதும் மாநிலங்கள் நம்பியிருக்க வேண்டுமென்பது இப்போது முழுமையாக்கப்பட்டு விட்டது...1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தின் நிதி பற்றிய விதிகளை நமது அரசமைப்புச் சட்டம் ஏற்றுக் கொள்ளும் போதே, மாநிலங்கள் மத்திய அரசின் நிதிஆதரவினை நோக்கிச்சாய்ந்திருக்க வேண்டுமென் பதை அரசமைப்புச் சபை அறியாமலில்லை......... ஆனால், காரணமெதுவாயிருந்தாலும் மீண்டும் மீண்டும் பெறக் கூடியதும் விரிவடையக் கூடியதுமான வருவாய்களை நமது நிதி அதிகாரப் பாகுபாடுகள் மத்திய அரசிற்குக் கொடுத்திருக்கிறது. நெகிழ்வுத் தன்மையில்லாததும், மத்திய அரசால் ஊடுருவக் கூடியதுமான வருவாய் வழிகளை மட்டுமே மாநிலங்களுக்கு வழங்கியுள்ளது." 1

— மூன்றும் நிதி ஆணைக் குழுத் தலைவர்
திரு. அசோக்சந்தா அவர்கள்.

---

1 "The Financial Aspect of Union-State Relations" by A. K. Chanda, in "The Union and the States" (1972) Mr. S. N. Jain & Others page 249 and 251.

நமது அரசமைப்பில், நிதி ஆணைக் குழு ஏற்பாட்டைத் தவிர நிதித் துறை சார்ந்த மற்ற சட்டவிதிகள் யாவும், ஆதிபத்திய அரசான ஆங்கில அரசால் படைக்கப்பட்ட 1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தையே ( Government of India Act-1935 ) பெரிதும் தழுவி நிற்கிறது. அன்றைய நாட்களில் மாநிலத்தின் நிதிவாயில்களெல்லாம் ஏகாதிபத்திய மத்திய அரசிற்கு அடிமைப்படுத்தப் பட்டிருந்தது. ஆனால் இந்தியாவிற்கு விடுதலை வந்தும்கூட இந்திய மாநிலங்களுக்கு நிதித்துறைச் சுதந்திரம் வரவில்லை. இன்றைய அரசமைப்புச் சட்டத்தால் மாநில அரசுகளின் நிதிச் சுதந்திரம், இந்திய மத்திய அரசின் ஏகாதிபத்தியத்திற்கு அடிமையாக்கப்பட்டு விட்டது. இந்திய அரசியலமைப்புச் சட்டம் அமுலுக்கு வந்த பின்னர், சென்ற 24 ஆண்டுகளில் மத்திய அரசின் ஏகபோக நடவடிக்கைகளால் மீத்திருந்த மாநில நிதி உரிமைகளும் களவாடப்பட்டு விட்டன. மத்திய அரசின் நீங்கா நிதி அழுத்தங்களால் மாநில அரசுகள் தீராத மிடிமையைப் பெற்று விட்டன. அதன் வழி அவை நிலையான அடிமைகளாகி விட்டன. மாநிலங்களின் நிதி நிலை பற்றி இவண் ஆய்வோம்.

## I
## மாநில நிதி சுயாட்சி?

மக்களது பாதுகாப்பும் நல்வாழ்வும் அரசாங்கத்தின் நோக்கங்கள். மாநில அரசுகளுக்கு மக்கள் நல்வாழ்வுப் பணிகள் ஒப்படைக்கப்பட்டுள்ளன. மக்கள் நலத் திட்டங்களையும் நல்வாழ்வுப் பணிகளையும் மாநில அரசுகள் திறம்படச் செய்து முடிப்பதற்குத் தேவையான நிதி வசதிகள் இருக்க வேண்டும். ஏனெனில், நிதியின்றி அரசில்லை.

**நிதி வசதிகளை எப்படிப் பெறுவது ?**

மாநில மக்கள் மேல் வரிகளை விதித்து, வசூலித்துத்தான் மாநில அரசு, நிதியைப் பெற முடியும். வரியினங்கள் போக மாநில அரசுகள், தொழில் மற்றும் வணிகம் ஆகியவைகளில் ஈடுபட்டும் நிதி வசதிகளைப் பெருக்கிக் கொள்ளலாம், இப்படி நிதியைப் பெறக் கூடிய வழி வகைகளை " நிதி மூலங்கள் " ( Financial Resources ) என்று சொல்கிறோம். மாநில அரசிற்குரிய நிதி வசதிகளைப் பெற்றுத் தரக்கூடிய வழி வகைகளை

''மாநில அரசின் நிதி மூலங்கள்'' எனவும், மத்திய அரசின் நிதி பெறும் வழிகளை ''மத்திய அரசின் நிதி மூலங்கள்'' என்றும் கூறலாம்.

மாநில அரசுகள் தத்தம் அதிகார எல்லைக்குள் நின்று, தமக்கென்று ஒப்படைக்கப்பட்ட அரசுக் காரியங்களைச் செவ்வனே நிறைவேற்றுவதற்கு, சுதந்திரமான நிதி மூலங்கள் மிக மிக இன்றியமையாதனவாகும். அஃதாவது மாநிலங்கள் தம் நிதி வசதிகளைப் பெருக்கிக் கொள்வதற்கும், அவைகளுடைய செலவினங்களை ஈடுகட்டிக் கொள்வதற்கும், தேவையான முழு உரிமையையும் சுதந்திரத்தையும் கைக் கொண்டிருக்க வேண்டும். அதற்காக மாநில அரசுக்குத் தரப்பட்ட அரசியல் மற்றும் நிர்வாகச் சட்டமியற்று அதிகாரங்களைப் போலவே மாநிலத்தின் நிதி அதிகாரங்களும் மத்திய அரசிலிருந்து பரவலாக்கப் பட்டிருக்க வேண்டும்.

இப்படி ஒரு மாநில அரசு செயல்படுவதற்கு, அதன் நிதி வசதிகள் அடிப்படையாயும் உயிர் மூச்சாயும் அமைகின்றன. எனவே நிதித் துறையில் சுதந்திரமாக இயங்கும் தன்மையை அந்த மாநிலம் பெற்றிருக்காவிடில், அதன் அரசியல் சுதந்திரமும் சுயாட்சியுரிமையும் நிர்வாகப் பொருளாதார உரிமைகளும் தாமாகவே சுருங்கிவிடும். நாளடைவில் அவை மறைந்தும் போகும்.

> ''மத்திய அரசும் மாநிலச் சர்க்கார்களும், அவைகளுடைய நடவடிக்கைகளைச்செயல் படுத்துவதில்,இக்கட்டான உணர்வினைப் பெருமலிருக்கும் வகையிலும், அந்த அரசுகளின் சமுதாயப் பொருளாதார முன்னேற்றத்தையடைய வேண்டுமென்ற நியாயமான குறிக்கோள்கள் நிறைவேறும் வகையிலும் அவற்றின் நிதி அமைப்புக்கள், செயலாற்றும் சுதந்திரத்துடன் இருக்க வேண்டும்.''2

எனப் பேராசிரியர் அதர்க்கார் (Prop. Adarkar) அவர்கள் குறிப்பிடுகிருர்.

இந்திய அரசமைப்புச் சட்டத்தில் விரிவடையாத தன்மையைக் (Inelastic) கொண்டதும், குறைந்த வருவாயைப் பெற்றுத்தரக் கூடியதுமான சில வரியினங்கள்மட்டுமே மாநிலங்

2 "Principles and Problems of Federal Finance" P 219.

ளுக்காக ஒதுக்கப்பட்டுள்ளன. மேலும் நமது அரசமைப்புச் சட்டத்தால் மாநிலங்களுக் கொதுக்கப்பட்ட வரியினங்கள் ஒரே யளவு வருவாயை மட்டுமே தரக் கூடியவை. வேண்டும் போது விரிவு செய்து கொள்ளக் கூடிய வரியினங்களல்ல.

மிக அதிகமான வருவாயைத் தருவதும், மேலும் மேலும் விரிவடையக் கூடியதுமான வரியினங்கள் யாவும் மத்திய அரசிற்கே தரப்பட்டுள்ளது. இந்திய நாட்டினுடைய மொத்த வருமானத்தில் ஏறத்தாழ 3/5 பங்கு வருவாயைத் தரக்கூடிய பல முக்கிய வரியினங்களை, நமது அரசமைப்புச் சட்டம் மத்திய அரசிற்கே ஒதுக்கிக் கொடுத்து விட்டது.

மாநில அதிகாரப் பட்டியலில் கண்டுள்ள பல சட்ட மியற்றும் அதிகாரங்களை மாநிலங்கள் முறையாகச் செயற் படுத்துவதற்கும், மாநில மக்களுக்குத் தேவையான பல சமுதாய நலப்பணிகளை மாநில அரசுகள் முழுமையாக நிறை வேற்றுவதற்கும், போதிய நிதி வசதிகள் மாநிலங்களுக்களிக் கப்பட வில்லை. அஃதாவது மாநிலங்களுக் கென்று நிர்வாகம் செய்ய ஒதுக்கப்பட்டிருக்கும் அரசுப் பணிகளுக்கும் அவைகளை நிறைவேற்றுவதற்காகக் கொடுக்கப்பட்ட மாநில நிதிவசதிகளுக் கும் ஒன்றுக் கொன்று சம்மந்த மில்லை. மக்களுக்காற்ற வேண்டிய பல கடமைகள் மாநிலப் பட்டியலில் குறிக்கப் பட்டுள்ளனவே யன்றி, அவைகளை மாநில அரசுகள் செயல் படுத்துவதற்கு ஆதாரமான போதிய மாநில நிதி வசதிகள் மாநிலங்களுக்குத் தரப்பட வில்லை.

இவ்வகை ஓர வஞ்சனையின் விளைவாக மாநிலங்கள், நிதித்துறையில் நிரந்தரமாக மத்திய அரசை நம்பிப் பிழைக்க வேண்டிய கட்டாயத்திற்குள்ளாக்கப் பட்டுள்ளன. மாநிலங் களுக்கு, பூரணமான நிதிச் சுதந்திரமில்லை. அதனுல் அவற்றின் சுயாட்சி அதிகாரங்களும் தானுகவே அடிமைப்படுத்தப் படுகின்றன.

நிதித் துறையில், மத்திய அரசும் — மாநில அரசுகளும், சுதந்திரமாக இயங்கக் கூடிய வகையில், நாட்டின் நிதி வாயில் களை அமைத்துக் கொள்வதற்கு இரண்டு வழி வகைகள் உண்டு.

வரி விதிப்பதிகாரத்தையும் (Tax Levy) வரி வசூல் செய்யும் அதிகாரத்தையும் (Tax Collection) மத்திய அரசிற்கும் மாநில அரசிற்கும் பொதுவான அதிகாரங்களாகச் செய்து விடுவது,

ஒரு முறை. இந்த முறையின்படி மாநில அரசுகளும் மத்திய அரசும் அவைகளின் தேவைகளுக்கேற்றபடி, எந்தவித வரிகளை வேண்டுமானாலும் அந்தந்த மக்களின் மேல் விதித்து வசூல் செய்து கொள்ளலாம்.

எல்லா வரியினங்களையும் மொத்தமாக எடுத்துக் கொண்டு, மாநிலங்களுக்குரிய வரியினங்கள் இவையிவை — மத்திய அரசிற்கான வரியினங்கள் இவையிவை எனத் தெளிவாகப் பிரித்து ஒதுக்கி விடுவது இன்னொரு முறை. இந்த முறைப்படி, மாநில அரசுகளுக்காகத்தனித் தொதுக்கப்பட்ட வரியினங்களை மட்டும் மாநிலங்களே விதித்து வசூல் செய்து கொள்ளும்,

நமது அரசமைப்புச் சட்டம் இவையிரண்டில் இரண்டாம் முறையை ஏற்றுக் கொண்டுள்ளது. ஆனால், முழுமையாக அல்ல. நமது அரசமைப்புச் சட்டம், முக்கியமான வரியினங்களை எல்லாம் வேண்டு மென்றே, மாநிலங்களுக்குக் கொடுக்காமல் விட்டுவிட்டது. அதற்கு மாருக, மத்திய அரசினுடைய சில வரியினங்கள் மூலம் கிடைக்கக் கூடிய வருவாயிலிருந்து அவ்வப்போது நிர்ணயம் செய்யப்பட்டபடி, மாநிலங்களுக்கு ஒரு பகுதியைப் பிரித்துக் கொடுக்கக் கூடிய ஒரு தேவையற்ற ஏற்பாட்டைச் செய்து வைத்துள்ளது. எதிர்காலத்தில் பல துறைகளிலும் வளர்ச்சி யடையக் கூடிய மாநில மக்களுக்குத் தேவையான நிதி வசதிகளைப் பற்றி, நமது அரசமைப்பை உருவாக்கியவர்கள் உணர்ந்திருந்தார்களா என்ற ஐயம் நமக்குத் தோன்றுகிறது.

**சீரிய கொள்கை**

ஒரு கூட்டாட்சி நாட்டில் மாநிலங்களின் சுயாட்சிக்கு இடர்ப்பாடு ஏற்படாத வகையில் மத்திய — மாநில நிதி உறவுகள் நல்ல முறையில் அமைய வேண்டுமெனில், அந்தக் கூட்டரசால் மூவகை அடிப்படையான கோட்பாடுகள் கடைப்பிடிக்கப்பட வேண்டுமென, பேராசிரியர் அதர்க்கார் அவர்கள் குறிப்பிடுகிருர்கள்.

அவையாவன:

1. நிதித் துறையில், மத்திய அரசும் மாநிலங்களும் ''சுதந்திரமாகவும், பொறுப்புடனும்'' இயங்க வேண்டும்.

2. மத்திய — மாநில அரசுகளின் நிதி மூலங்கள், ''தனித் தனியானவையாகவும்'', ''போதுமானவையாகவும்'', ''நெகிழ்வுத் தன்மை'' கொண்டவையாகவும் இருத்தல் வேண்டும்.

3. நிதித்துறையில் ஒவ்வோர் அரசும், ''நிர்வாகச் சிக்கனத்தை''க் கைக்கொண்டதாயிருக்க வேண்டும்.

பேராசிரியர் அதர்க்காரின் மூவகைக் கொள்கைகள் செயலுக்கு வரவேண்டுமெனில் தனித்தனியான, சுதந்திரமாய் இயங்கும் இருவேருன அரசுகள் (மத்திய அரசு—மாநில அரசுகள்) இணைந்து செயல்படுதல் இன்றியமையாததாகும்.

### சுதந்திரமும் பொறுப்பும்

முதற் கோட்பாடு அமுலாக்கப்பட வேண்டுமெனில், நிதித் துறையில் ஒவ்வொரு மாநிலத்திற்கும் வருவாய்களைப் பெருக்கிக் கொள்ளத் தேவையான சுயாட்சி யுரிமை இருத்தல் அவசியம். அதே போல, மத்திய அரசிற்கென்று வரி வசூல் செய்து கொள்ளக் கூடிய பொருளாதார எல்லைப் பகுதியைத் தனித்து ஒதுக்கப்பட வேண்டியதும் அவசியமானதாகும். அஃதாவது மத்திய அரசும் மாநிலங்களும் தனித்தனி வருவாய் தரத்தக்க நிதி மூலங்களைப் பெற்றிருத்தல் வேண்டும்.

### நெகிழ்வுத் தன்மையும் போதிய தன்மையும்

மாநிலத்தின் மக்கட் பணிகளைச் செம்மையாகவும் திறமையுடனும், மாநில அரசு நிறைவேற்றுவதற்காக மாநில வருவாய் இனங்கள் போதுமானவையாக இருப்பது அவசியம். தவிர, மாநிலத் தேவைகளையும் வளர்ச்சிகளையும் ஒட்டி, அந்த வருவாயினங்கள் விரிவடையத் தக்கதாகவும் இருத்தல் வேண்டும். இந்தக் கருத்துக்களை அதர்க்காரின் இரண்டாம் கோட்பாடு விளக்குகிறது.

### நிர்வாகச் சிக்கனம்

மாநிலங்களின் நிர்வாக வசதியினை அதர்க்காரின் மூன்றும் கோட்பாடு, கோடிட்டுக் காட்டுகின்றது. வரிகளை வசூலிக்கும் போது சிக்கனத்தையும், வரியேய்ப்பில்லாத சூழ்நிலையையும், அந்தந்த அரசு (மாநில அரசும் மத்திய அரசும்) கைக்கொள்ள வேண்டும்.

## நிதி சுயாட்சி

மேற்சொன்ன மூவகைக் கோட்பாடுகளை ஒரு கூட்டாட்சி நாடு பெற்றிருக்க வேண்டுமெனில், மாநில நிதி ஏற்பாடுகளில் மத்திய அரசு, தலையிடாமல் இருக்க வேண்டும். ஆனால் மாநில நிதிக் குறைபாடுகளைக் களைவதற்காக, தேவையான போது மட்டும் மத்திய அரசு குறைந்த பட்ச அளவில் தலையீடு செய்யலாம். மத்திய அரசின் விருப்பத்தை யொட்டியே மாநிலத்தின் நிதிவாயில்கள் செயல்படுதல் கூடாது.

மாநில நிதி மூலங்கள் தானாகவே இயங்கத் தக்க அளவில் அரசமைப்புச் சட்டம் மேற்சொன்ன கோட்பாடுகளை உள்ளடக்கியதாக உருவாக்கப்படல் வேண்டும். எதற்கெடுத்தாலும் மத்திய அரசையே நம்பிக் கொண்டிருக்கும் நிலைமை மாறி, மத்திய அரசினைப் பெரிதும் சாராத நிலையை, மாநிலங்களின் நிதி சுயாட்சி எனக் கூறுகிறோம்.

பேராசிரியர் அதர்க்கார் அவர்களால் குறிப்பிடப்பட்ட எந்த ஒரு நிதிக்கோட்பாடும் நமது அரசமைப்புச் சட்டத்தில் முறையாகப் பின்பற்றப்பட வில்லை. மாநிலங்களின் நிதி ஏற்பாடுகளில் நிரந்தரமான, அவிழ்க்க முடியாச் சிக்கல்களையே நமது அரசமைப்பு உருவாக்கி வைத்துள்ளது.

## II

## நிதி பற்றிய அரசியல் சட்டவிதிகள்

அ) அரசமைப்புச் சட்டத்தின் XII-ஆம் பகுதியிலுள்ள, முதலாவது அத்தியாயம் “மத்திய - மாநில நிதியுறவுகளைப் பற்றிப்” பேசுகின்றது.

ஆ) சட்ட விதிகள் 264, 280, மற்றும் 281 ஆகியவை, “நிதியாணைக்குழு” பற்றிக் கூறுகின்றன.

இ) 266-ஆம் சட்டவிதி “மத்திய அரசின் தொகுநிதி” (Consolidated Fund of Union) பற்றியும் மாநில அரசின் தொகுநிதி” (Consolidated Fund of State) பற்றியும் தெளிவு படுத்துகின்றன.

ஈ) 267-ஆம் சட்ட விதி “அவசர நிதி” (Contingent Fund) பற்றிப் பேசுகிறது.

உ) 268-இலிருந்து 279 வரை உள்ள சட்ட விதிகள் மத்திய அரசிற்கும் மாநில அரசுகளுக்கு மிடையிலான ''நிதி வருவாய்களை''ப்பற்றி விளக்குகின்றன.

ஊ) கொடூரத் தன்மையுள்ள சட்ட விதி 282, விருப்ப மானியங்கள் பற்றிய விளக்கத்தைச் சொல்லுகிறது.

எ) சட்ட விதிகள் 285 முதல் 289 வரை மத்திய அரசின் சொத்துக்கள் மேல் மாநிலங்களுக் கிருக்கும் கட்டுப்பாடுகளைப்பற்றியும் விதிவிலக்குகளைப் பற்றியும் பேசுகின்றன.

ஏ) மத்திய அரசும் மாநில அரசுகளும், பொது மக்களிடமிருந்து கடன் பெறுவதைப் பற்றி முறையே, சட்டவிதிகள் 292, 293, வரையறைப்படுத்துகின்றன.

ஐ) இவை தவிர, மத்திய அதிகாரப் பட்டியலின் 82 முதல் 92-ஏ வரையிலான பதிவுகள், ''மத்திய அரசிற்குச் சேர்ந்த வரியினங்களைப்'' பற்றியும், மாநிலப் பட்டியலின் 45 முதல் 63 வரை யுள்ள பதிவுகள், ''மாநில அரசிற்குரிய வரியினங்களைப்'' பற்றியும் விளக்குகின்றன.

நமது அரசமைப்பில் மத்திய அரசிற்குரிய வரியினங்களும் மாநில அரசிற்குச் சொந்தமான வரியினங்களும், தனித்தனியாகப் பிரித்தொதுக்கப் பட்டுள்ளதால்,மத்திய அரசு விதிக்கும் வரிகளை, மாநில அரசு விதிக்க முடியாது. அதைப் போலவே மாநில அரசின் வரிகளை மத்திய அரசு விதிக்க முடியாது. இரண்டிற்கும் பொதுவான வரியினங்கள் கிடையாது. ஆனால் மாநிலங்களின் நலன் கருதி, குறிப்பிட்ட சில தனி வரிகளை மத்திய அரசே விதித்து, வசூலிக்கவும் இவை தவிரச் சில மத்திய வரிகளின் வருவாயை மத்திய அரசு, மாநிலங்களுக்குப் பங்கு போட்டுக் கொடுப்பதற்குரிய சட்ட விதிகளும் செய்யப் பட்டுள்ளன.

## III

## நிதிச் சுதந்திரமா? தர்மக் கட்டளையா?

மத்திய அரசின் வரிகள்:-

மத்திய அரசின் அதிகாரப் பட்டியலில் பன்னிரண்டு வகையான வரியினங்கள் இடம் பெற்றுள்ளன. இவை மத்திய அரசிற்குச் சொந்தமானவை. ஆனால் அந்தப் பன்னிரண்டு வகை வரிகளின் வருவாய் முழுவதையும் மத்திய அரசே

வைத்துக் கொள்வதில்லை. மூன்று வரிகளில் கிடைக்கும் தொகைகளை மட்டும் மத்திய அரசு முழுமையாக வைத்துக் கொள்கிறது.

அவையாவன:-

1. கார்ப்பொரேசன் வரி.
2. சொத்து வரி.
3. சுங்கத் தீர்வைகள்.

வருமான வரியிலும், கலால் வரிகளிலும் மத்திய அரசு மாநிலங்களுக்குப் பங்கு தருகின்றது.

வருமானவரி:- நிதி ஆணைக்குழு அவ்வப்பொழுது செய்யும் பரிந்துரையின்படி, வருமான வரி, மத்திய அரசிற்கும் மாநிலங்களுக்குமிடையேயும் பங்கிட்டுக் கொடுக்கப்படும்.

கலால் வரி:- நாடாளு மன்றம் நிர்ணயம் செய்யும் கொள்கைப் படி, கலால் வரிகளும் மத்திய அரசிற்கும் மாநில அரசுகட்கும் பங்கிடப்படும்.

இவை தவிர, மத்தியப் பட்டியலின் 87 முதல் 90–ஆம் பதிவு வரை கூறப்பட்ட வரிகளையும் 92 மற்றும் 92ஏ ஆகிய பதிவுகளிலும், கூறப்பட்ட 6 வகை வரிகளையும் மத்திய அரசே விதித்து வசூலிக்கின்றது. ஆனால் அவைகளுக்கான செலவுகள் நீங்கலாக மீதித் தொகையை மாநிலங்களுக்கு மத்திய அரசு பங்கிட்டுக் கொடுத்து விடுகிறது.

மத்தியப் பட்டியல் 84 பி, பதிவின் பிற்பகுதியில் சொல்லப்பட்ட வரியினையும் 91-ஆம் பதிவில் சொல்லப்பட்ட வரியும் மத்திய அரசு விதித்தாலும் அந்தந்தப் பகுதியில் மாநிலங்கள் வசூலித்து வைத்துக் கொள்ளும்.

மாநில அரசின் வரிகள்:-

மாநில அரசுகள் மாநில அதிகாரப் பட்டியலில் குறிப்பிடப் பட்ட 19 வரியினங்களில் ( பதிவு 45 முதல் 63 முடிய ) வரிகளை விதித்து வசூலித்துக் கொள்ளலாம்.

மானியங்கள்:-

மாநிலங்களுக்குரிய பத்தொன்பது வகை வரியினங்களில் வரும் தொகையும் வருமான வரி மற்றும் கலால் வரிகளில் மத்திய அரசு கொடுக்கும் பங்குத் தொகையும் சேர்ந்தாலும் மாநிலங்களுக்குநிதிவசதிகள் போருது என்பதை அரசமைப்புச் சட்டத்தை உருவாக்கியவர்கள் அன்றே தெரிந்து தான் வைத்திருந்தனர். அந்த பற்றுக்குறையைச் சரி செய்வதற் காக ஐந்தாண்டுகளுக்கு ஒரு முறை நிறுவப்படும் நிதி ஆணைக் குழு செய்யும் பரிந்துரைகளின்படி மத்திய அரசு, குறிப்பிட்ட சில மாநிலங்களுக்கு ''உதவி மானியங்களை'' ( Grants in Aid ) அவ்வப்போது வழங்குகிறது.

மேலும் மத்திய அரசு, தான் விரும்பிய நேரத்தில் எந்த வகைச் சட்டமுமில்லாமல் ''விருப்ப மானியங்கள்'' (Discretionary Grants) என்ற பெயரால் பெருந்தொகைகளை மாநிலங்களுக்கு மனமுவந்து அளிக்கிறது.ஐந்தாண்டுத் திட்டத்தொகைகளை மத்திய அரசு விருப்ப மானியங்களின் மூலம் தான் மாநிலங்களுக்களிக்கிறது.

மாநில அரசுக்கு ஒதுக்கப்பட்டுள்ள 19வரியினங்களிலிருந்து வரும் தொகையும், அவை போக மத்திய அரசின் வரிகளான ''கலால் வரி'' மற்றும், ''வருமான வரி'' ஆகியவைகளிலிருந்து பிரித்து வழங்கப்படும் பங்குத் தொகையும், மத்திய அரசால் தரப்படும் உதவி மானியங்களும் மற்றும் விருப்ப மானியங்களும், மாநில அரசின் நிதி வாயில்களாகின்றன.

ஆனால் மத்திய அரசிற்குக் கார்ப்பொரேசன் வரி, சொத்து வரி மற்றும் சுங்கத் தீர்வைகள் ஆகிய மூன்று வகையான வரியினங்களும் வருமான வரி, கலால் வரி ஆகியவைகளில் மாநிலங்களுக்குக் கொடுத்த அதிக அளவு பங்குத் தொகை போக, மீதியிருக்கும் தொகையும் மத்திய அரசின் நிதி மூலங்களாகின்றன.

இவைகளை மேலோட்டமாகப் பார்க்கும் போது, ''மாநில அரசுகளுக்குத்தான் எத்தனை சலுகைகள். மாநில அரசுகளின் நிதி நிலையில் பற்றுக்குறை ஏற்படுவதற்கு எவ்வகை நியாயமும் இல்லையே'' என நமக்குத் தோன்றும். ஆனால் உண்மையில் இவைகளெல்லாவற்றையும் சேர்த்து, மாநிலங்கள் பெறும் நிதித் தொகைகள் மிக மிகக் குறைந்தவை.

சட்டமியற்றுத் துறையைப் பற்றி நாம் ஆய்வு செய்த போது, மாநில அதிகாரப் பட்டியல் மூலமாக, பெயரளவில் பல அதிகாரங்கள் மாநிலங்களுக்குக் கொடுக்கப்பட்டிருந்ததையும் ஆனல், நடைமுறையில் அவற்றிலிருந்து பல அதிகாரங்கள் மாநில அரசுகளுக்குக் கிடைக்காமல் போய்விட்ட தன்மையைப் பற்றியும் நாம் பார்த்தோ மல்லவா ? அதைப் போலவே நிதித் துறையில் பல வகையான வரியினங்களும் மானியங்களும் மற்ற வருவாய்களும் மாநிலங்களுக் களிக்கப் பட்டிருந்தாலும் கூட, அவை அனைத்தும் சேர்ந்து மத்திய அரசின் ஒரு வரியினத்தில் கிடைக்கும் தொகைக்குக் கூட ஈடாகாது.

இந்திய நாட்டின் எல்லா மாநிலங்களும் சேர்த்துப் பெறக் கூடிய மொத்த வரித் தொகையோடு மத்திய அரசுக்குத் தனித் தொதுக்கப்பட்ட 3 வரியினங்களில் மட்டும் பெறக்கூடிய தொகையை ஒப்பிட்டுப் பார்த்தால் இந்திய மாநிலங்களின் மொத்த வருமானத்தில் ஏறத்தாழ 3/5 பங்குத் தொகையை மத்திய அரசு மூன்றே மூன்று வரியினங்களால் பெற்றுக்கொள் கிறது என்பது தெரிய வரும்.

இந்தியாவிலுள்ள வணிகக் கழகங்கள், தொழில் கம்பெனி கள் ஆகியவைகளின் வருமானத்தின் மேல் விதிக்கப்படும் வரியே ‘‘கார்ப்பொரேசன் வரி’’ அல்லது ‘‘கம்பெனி வரி’’ என அழைக்கப்படுகிறது.

அஃதே போல் இந்திய நாட்டில் வசிக்கும் ஒரு மனிதன் இறந்து போனல், அவனுடைய சொத்துக்களின் மேல் விதிக் கப்படும் வரி ‘‘சொத்து வரி’’ எனப்படுகிறது.

இந்தியத் துணைக் கண்டத்திலுள்ள எல்லாத் துறைமுகங் களின் மூலமாக ஏற்றுமதி, இறக்குமதி செய்யப்படும் அத்துணைப் பொருட்களின் மேல் விதிக்கப்படும் வரிக்குப் பெயர்தான் சுங்கத் தீர்வை எனப்படும்.

எனவே, எல்லாத் தொழில் மற்றும் வணிக நிறுவனங் களுக்கும் கிடைக்கும் இலாபத்தின் மேல் வரி மூலமாகப் பெறப் படும் வருவாயும் பொது மக்களின் சொத்துக்கள் மேல் கிடைக் கும் வருவாயும் இந்தியாவின் அத்துணை இறக்குமதி, ஏற்றுமதிப் பண்டங்களின் மூலம் தீர்வையாகப் பெறப்படும் வருவாயும் மத்திய அரசிற்கே சென்று விடுகின்றன.

இதனைச் சற்று ஆழமாகப் பார்த்தால், அந்தந்த மாநிலங்களிலுள்ள கம்பெனிகளும் துறைமுகங்களும் தனி மனிதர்களின் சொத்துக்களும், மாநில எல்லேக்குள்ளேயே இயங்கி வருவதால் அவைகளிலிருந்து கிடைக்கும் வரி வருவாய்களும் நியாயமாக மாநிலங்களுக்குத் தரப்பட வேண்டாமா? என்ற பேருண்மை புலப்படும்.

இவை மட்டுமல்ல, ஒரு நாட்டினுடைய பொருளாதார முன்னேற்றத்திற்கு ஏற்ற வகையில் அந்நாட்டின் கம்பெனிகளும் ஏற்றுமதி, இறக்குமதிப் பண்டங்களும், தனி மனிதர் சொத்தும் வருவாய்களும், நாளும் பெருகி விரிவடைந்து கொண்டே வரும். அப்போது அவைகளில் கிடைக்கும் மொத்த வரித் தொகையும் வரிச் சதவிகிதமும் தானுகவே பெருகி விடும்.

ஆகவே, இம்மூன்று வரிகள், மிக அதிகமான தொகைகளே மத்திய அரசிற்குப் பெற்றுக்கொடுப்பதோடல்லாமல், வளர்ந்து வரும் பொருளாதாரத்தை அனுசரித்து வரி விதிப்பில் விரிவையும் வரியீட்டத்தில் நாளுக்கு நாள் பெருக்கத்தையும் தருகின்றன.

இவை போக வெளி நாடுகளிலிருந்து கிடைக்கும் உதவித் தொகைகளேயும் கடன் தொகைகளேயும் மத்திய அரசே பெற்றுக் கொள்கிறது. வானெலி, தந்தி, அஞ்சல், இரயில் போக்குவரத்து, ஆயுட்காப்பீட்டுக் கழகம், வங்கிகள் போன்ற பல அகில இந்திய வணிகங்களிலும் மிகப் பெருந் தொகைகளே மத்திய அரசே ஈட்டிக் கொள்கிறது.

மாநிலங்களுக்கு நியாயமாகக் கிடைக்க வேண்டிய பெருந் தொகையீட்டும் இவ்வரிகளே மத்திய அரசு பெற்றுக் கொண்டு, மாநில அரசுகளுக்கு நிரந்தரமான நிதிப் பற்றுக்குறையை உண்டாக்கி விடுகின்றது. பின்னர், மாநிலங்களின் நிதிப் பற்றுக்குறையைத் தீர்ப்பதைப்போல், ''உதவி மானியங்கள்'' என்ற பெயரில் தன் விருப்பம் போல் மாநிலங்களுக்குத் தொகைகளே வழங்குகின்றது. மாநிலங்கள் கெஞ்சிக் கூத்தாடி அவைகளேப் பெற வேண்டும்.

இது ஏதோ தர்மக் கட்டளேயைப் போல் தெரிகிறதேயல்லாமல், மாநிலங்கள் நிதித்துறையில் சுதந்திரமாக இயங்கக் கூடிய வழி வகைகளாகத் தென்பட வில்லே யல்லவா? மாதம் தவறி

னலும், மாநில முதல்வர்கள் மத்திய அரசிடமிருந்து பிச்சை கேட்பதற்காக டெல்லிக்குக் காவடி தூக்குவது தவறுவதில்லை. இதற்கு யார் காரணம்?

மாநிலங்களில் அரசுப் பொறுப்பேற்றிருக்கும் அரசியல் கட்சிகளா?...இல்லை. மத்திய அரசா?... ஆம் ஓரளவிற்கு;

அடிமை ஏற்பாட்டினை நிரந்தரமாகச் செய்து வைத்திருக்கும் நமது அரசமைப்புச் சட்டமா?...ஆம்.

அரசமைப்புச் சட்டம்தான் மாநிலங்களின் இந்த அவலநிலைக்கு முற்றிலும் காரணகர்த்தா.

மத்திய வரிகள் சிலவற்றில் பங்குத் தொகை, மானியங்கள், விருப்ப மானியங்கள், கடன்கள் என்ற பெயரால் மத்திய அரசு போடும் பிச்சைக் காசுகளை மாநிலங்கள் போராடிப் பெற்று, அதனையே நம்பித் தனது அரசுப் பணிகளை நிறைவேற்றக்கூடிய கேடுகெட்ட நிலையிலிருந்து மாறி, மாநில அரசுகள் நிதித் துறையில் தனித்து இயங்குவதற்குத் தேவையான சுதந்திரமான நிதி மூலங்களைப் பெற்றிருக்க வேண்டும் என்பதைத் தற்போது, எல்லா மாநிலங்களுமே உணர்ந்து கொண்டன. அவை வாய்ப்பேற்படும் போது மத்திய அரசை வலியுறுத்தியும் வருகின்றன. மத்திய—மாநில உறவுகளைப் பற்றி ஆய்வு செய்த பல சட்ட வல்லுனர்கள், மத்திய—மாநில நிதியுறவுகள் முற்றிலும் விரைந்து மாற்றியமைக்கப்பட வேண்டும் என ஒரு முகமாய் வலியுறுத்துகின்றனர்.

மேற்சொன்ன பல அடிப்படைக் கருத்துக்களையும் கொள்கைகளையும் தெளிவு படுத்துவதற்காக மத்திய—மாநில அரசுகளின் நிதித்துறை பற்றிய ஒவ்வோர் ஏற்பாட்டையும் தனித்தனியாக இனிப் பரிசீலிப்போம்.

## IV

## மத்திய அரசின் நிதி மூலங்கள்

மத்திய அரசிற்கு வருவாய் கிடைக்கக் கூடிய வழிகளைப் பொதுவாக ஐந்து வகையாகப் பிரிக்கலாம்.

1. மத்திய அரசே விதித்து வசூலித்துத் தனக்கே வைத்துக் கொள்ளும் வரியினங்கள்,

2. மேல் வரிகள் (Sur Charges).
3. வருமான வரியில் மத்திய அரசு பெறும் பங்குத் தொகை.
4. கலால் வரிகளில் மாநிலங்களுக்கு அளித்த பங்கு போக மத்திய அரசிற்குக் கிடைக்கக் கூடிய பங்குத் தொகை.
5. வரியினங்கள் நீங்கலாக இதர வருவாய்கள்.

மத்திய அரசின் நிதி மூலங்களைப் பற்றி 632–ஆம் பக்கத்திலுள்ள முதற் பட்டியலில் தெளிவான விளக்கங்கள் தரப்பட்டுள்ளன.

1. மத்திய அரசு விதித்து, வசூலித்துக் தனக்கே வைத்துக் கொள்ளும் வரியினங்கள்:-

அரசமைப்புச் சட்ட VII-ஆம் இணைப்பில் மத்திய அரசுப் பட்டியலில் பதிவு 82 முதல் 92ஏ முடிய குறிப்பிடப் பட்டிருக்கும் மத்திய அரசிற்கொதுக்கப்பட்ட மொத்தம் பன்னிரண்டு வகையான வரியினங்களில், மூன்று வகை வரியினங்களில், மட்டும் மத்திய அரசு வரிகளை விதித்து,வசூலித்துத் தனக்கே வைத்துக் கொள்ளலாம்.

அவையாவன:–

அ) பதிவு 83 :– ஏற்றுமதித் தீர்வை உட்பட, சுங்கத் தீர்வைகள் (Customs Including export duties).

ஆ) பதிவு 85 :- கார்ப்பொரேஷன் வரி அல்லது கம்பெனி வரி (Corporation Tax).

இ) பதிவு 86 :– சொத்து வரி (அதாவது தனி மனிதர்களுடையவும் கம்பெனிகளினுடையவும் ஆன சொத்து மற்றும் மூலதன மதிப்பின் மீதான வரிகள் விவசாய நிலம் நீங்கலாக) (Estate Duty).

2. மேல் வரிகள் (Sur Charges)

ஒரு குறிப்பிட்ட வரியின் மேல் குறிப்பிட்ட சதவிகிதத்தைச் சேர்த்துக் குறிப்பிட்ட ஒரு காரியத்திற்காக, வசூலிக்கப் படும் கட்டணத்திற்கு ''மேல் வரி'' எனப்படும்.

சட்டவிதி 269–இன் கீழ் வரும் 6 வரி இனங்களில் வரும் தொகை மாநிலங்களுக்குச் சேர்ந்தவை. ஆனல் மாநிலங்கள், அந்த வரிகளை வசூலிக்கக் கூடாது. மாநிலங்களுக்குச் சேரும்

## முதற் பட்டியல்

## மத்திய அரசின் நிதி வருவாய் மூலங்கள்

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| **மத்திய அரசு விதித்து வசூலித்து, தானே வைத்துக் கொள்ளும் மத்திய வரிகள்.**<br>1. சுங்கத் தீர்வைகள். [ஏற்றுமதி-இறக்குமதித் தீர்வைகள் உள்பட] (Customs Duties)<br>2. கார்ப்போரேஷன் வரி (Corporation Tax)<br>3. சொத்து வரி (Estate Duty)<br>**குறிப்பு**<br>இந்தியாவின் மொத்த வரி வருமானத்தில் [மாநில வருவாய் உள்பட] 3/5பங்கு வருவாய் இந்த மூன்று இன வரிகளில் மட்டும் கிடைக்கின்றன. | **மேல்வரிகள் (Surcharges)**<br>1. வாரிசு வரியின் மேல் விதித்துக் கிடைக்கும் வரியின் மேல், போடப்படும் **மேல் வரி**<br>2. எஸ்டேட் வரியுடன் சேர்த்து வசூலிக்கப்படும் மேல்வரி.<br>3. பயணவரியின் மேல் போடப்படும் மேல்வரி.<br>4. ஸ்டாக் எக்ஸ்சேஞ்சு வரியுடன் கிடைக்கும் மேல்வரி.<br>5. பத்திரிக்கை வரியுடன் விதிக்கப்படும் மேல்வரி.<br>6. மாநிலங்களிடையே நடைபெறும் வணிகங்களின் மேல் விதிக்கப்படும் மேல்வரி.<br>7. வருமான வரியின் மேல் போடும் மேல்வரி.<br>8. தனிக் கலால் மேல்வரி. | **வரி விதிப்பு நீங்கலாக வேறுவகையில் மத்திய அரசிற்குக்கிடைக்கும் வருமானங்கள்.**<br>1. ரயில். 2. விமானம்.<br>3. அஞ்சல் துறை.<br>4. தொலைபேசி.<br>5. வானொலி.<br>6. கம்பில்லாத் தந்தி. [Wireless Telegraph]<br>7. மத்திய அரசின் சொத்துக்களிலிருந்து கிடைக்கும் பல வருவாய்கள்.<br>8. வெளிநாட்டு செலவாணி.<br>**9. நோட்டச்சடித்தல்**<br>10. நாணயம்<br>11. இந்திய ரிசர்வு வங்கி.<br>12. பரிசுச்சீட்டுவருமானம்<br>13. கட்டணங்கள்.<br>14. இன்சூரன்ஸ்.<br>இன்னும் பிற. | வருமான வரியில் மாநிலங்களுக்குக் கொடுத்த பங்குத் தொகை போக, மத்திய அரசு பெறும் மீதிப் பங்குத் தொகை<br>**குறிப்பு**<br>தற்போது 20·/. | கலால்வரிகளில் மாநிலங்களுக்குக் கிடைக்கும் பங்குத் தொகை போக மத்திய அரசு பெறும் பங்குத் தொகை கொடுத்த<br>**குறிப்பு**<br>தற்போது ·/. | வெளி நாட்டு நிதி உதவி | வெளி நாட்டிலிருந்து பெறும் கடன்கள் | மக்களிடமிருந்து திரட்டும் பொதுக் கடன்கள் | மற்ற வகைகளில் பெறும் இதர நிதி வசதிகள் |

அந்த 6 வகை வரிகளை மத்திய அரசே விதித்து வசூல்செய்து கொண்டு, அவைகளை மாநிலங்களுக்குக் கொடுக்கும். மாநிலங் களுக்குச் சேரும் அந்த ஆறுவகை வரிகளின் மேல் மத்திய அரசு, தனது சொந்த வருவாயாகப் பெறக் குறிப்பிட்ட சதவிகிதத்தை மேல்வரியாக விதித்து, வசூல் செய்து கொள்ளும் வரித்தொகை மாநிலங்களுக்குச் சேரும்; ஷ வரியின் மேல் விதிக்கப்பட்ட ''மேல் வரி'' மத்திய அரசிற்குச் சேரும்.

''வருமான வரி'' மத்திய அரசே வசூலிக்கும் வரி. இதில் குறிப்பிட்ட பங்கை மாநிலங்களுக்கு மத்திய அரசு தர வேண்டும். வருமான வரியின் மேல் மத்திய அரசு, தனது சொந்த வரியாக ''மேல் வரியையும்'' வசூலித்துக் கொள்ள லாம். அந்த மேல் வரி மத்திய அரசிற்குச் சேர்ந்தது.

மத்தியக் ''கலால் வரிகளில்'' மாநிலங்களுக்குப் பங்குண்டு. ஆனால் தனக்கு மட்டும் சேரக்கூடிய வகையில் மத்திய அரசு, தனிக்கலால் வரிகளையும் (Special Excise duties) கலால் வரியுடன் சேர்த்து விதித்து வசூல் செய்து கொள்ளலாம்.

வருமான வரியின் மேல் வரித் தொகையிலும் தனிக்கலால் வரிகளிலும், மாநிலங்களுக்குப் பங்கில்லை. வருமான வரி மற்றும் கலால் வரிகளின் மேல் மத்திய அரசு, தனித்து விதித்து வசூல் செய்து கொள்ளும் 'தனி வரித் தொகைகளை' இதன்கீழே தரப் பட்டுள்ள பட்டியல்களில் (பட்டியல் எண். 2 மற்றும் 3—பக்க எண். 634, 635-இல்) காணலாம்.

### மாநிலங்களுக்குச் சேரவேண்டிய 6 வகை வரிகளின் பேரில் மேல்வரி :-

அ) 'வாரிசு வரியுடன்' சேர்த்து விதிக்கப்படும் ''மேல் வரி'' :- சொத்துடைய ஒருவர் இறந்த பின் அவருடைய வாரிசு களுக்கு அந்தச் சொத்தின் பகுதிகள் வந்து சேரும்போது அந்த வாரிசுகளின் பேரில் விதிக்கப்படும்வரிக்கு ''வாரிசு வரி'' எனப் பெயர். அந்த வரியுடன் சேர்த்து மத்திய அரசால் ''மேல் வரி'' வாங்கப்படும். அந்த மேல் வரியை மத்திய அரசு வைத்துக் கொள்ளும்.

## இரண்டாம் பட்டியல் *

### மத்திய அரசின் தனித்த வருவாய் — வருமான வரியின் மேல் மத்திய அரசு தனித்து விதித்து வசூல் செய்து கொள்ளும் மேல்வரி

(SURCHARGE ON INCOME TAX)

[ ரூபாய் கோடிகளில் ]

| திட்டக் காலங்கள் (1) | மொத்த வருமான வரி வசூல் (2) | மத்திய அரசின் மொத்த மேல் வரிகள் (3) | மொத்த வருமான வரியில் மேல்வரி சதவீதம் (4) | குறிப்பு |
|---|---|---|---|---|
| முதல் ஐந்தாண்டுத் திட்டம் | 683 | 26 | 3.81 % | மாநிலங்களுக்குத் தரவேண்டிய வருமான வரித் தொகைப் பங்கில் மத்திய அரசின் மேல்வரி சேராது. |
| இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம் | 838 | 35 | 4.18 % | |
| மூன்றாம் ஐந்தாண்டுத் திட்டம் | 1,178 | 45 | 3.82 % | |
| 1966-67 to 1968-69 | 989 | 32 | 3.23 % | |
| 1969-70 (B E ) | 377 | 15 | 3.98 % | |

மூலம் :- மத்திய அரசின் நிதி நிலை அறிக்கைகள் (Budget).

* Taken From P. 204, "The Union and The States", (1972) By. JAIN.

## மூன்றும் பட்டியல் *

### மத்திய அரசின் தனித்த வருவாய் — கலால் வரிகளின் மேல் மத்திய அரசு தனித்து விதித்து வசூல் செய்து கொள்ளும் தனிக்கலால் வரிகள்.

[ரூபாய் - கோடிகளில்] [ SPECIAL EXCISE DUTIES ]

| ஆண்டு | மொத்தக் கலால் வரித் தொகைகள். [ கூடுதல் கலால் நீங்கலாக. ] | தனிக் கலால் வரிகள் [Special Excises] | மொத்தக் கலால் வரித் தொகைகளில் தனிக்கலால் வரிகளின் சத வீதம் |
|---|---|---|---|
| 1963 — 1964 | 686.5 | 54.8 | 7.88%. |
| 1964 — 1965 | 757.0 | 60.3 | 7.97%. |
| 1965 — 1966 | 851.0 | 58.1 | 6.83%. |
| 1966 — 1967 | 983.6 | 56.1 | 5.70%. |
| 1967 — 1968 | 1,115.3 | 65.7 | 5.89%. |
| 1968 — 1969 | 1,232.8 | 77.[illegible] | 6.29%. |
| 1969 — 1970 [B.E.] | 1,458.9 | 83.1 | 5.69%. |

குறிப்பு :- தனிக் கலால் வரித் தொகைகள் மத்திய அரசிற்கே சேர்ந்தவை. அதில் மாநிலங்கள் பங்கு பெறுவதில்லை.

மூலம் :- மத்திய அரசின் நிதி நிலை அறிக்கைகள் (Budget).

* Taken From P. 204, "The Union and The States", (1972) By. JAIN.

ஆ) ''எஸ்டேட் வரியுடன்'' சேர்த்து விதிக்கப்படும் மேல் வரி:- இறந்துபட்ட ஒருவரின் சொத்தின் பேரில் விதிக்கும் வரிக்கு எஸ்டேட் வரி எனப் பெயர். அச்சொத்து அவனுடைய வாரிசுகளுக்குப் போகும் முன்னர், அந்த முழுச் சொத்தின் மேலும் மொத்தமாக விதிக்கப்படும் வரிக்கு எஸ்டேட் வரி எனப் பெயர். அதன் பேரிலும் மேல் வரியை மத்திய அரசு, தனியாக வசூல் செய்து கொள்ளும்;

இ) இரயில், கப்பல், விமானம் மூலம் சரக்குகள் அல்லது பயணிகள் மீது விதிக்கப்படுகிற பயண முடிவிடத்து வரியுடன் (Terminal Tax) சேர்த்து விதிக்கப்படும். மேல் வரி; இரயில் கட்டணங்கள் மீது பெறக்கூடிய வரிகளுடன் சேர்த்து விதிக்கப்படும் மேல் வரி;

ஈ) பங்கு வாணிகங்கள் (Stock Exchanges) மேல் கொடுக்கல் வாங்கலில் பெறப்படும் வரியோடு சேர்த்து விதிக்கப்படும் மேல் வரி;

உ) பத்திரிக்கைகளின் விற்பனை, கொள்முதல், விளம்பரம் ஆகியவற்றிலிருந்து பெரும் வரியுடன் சேர்த்து விதிக்கப்படும் மேல் வரி;

ஊ) பத்திரிக்கைகள் நீங்கலாக மற்றப் பண்டங்களில் விற்பனை மற்றும் கொள்முதல் ஆகியவற்றில் மாநிலங்களுடைய வணிகமாக நடைபெறும் போது கிடைக்கக்கூடிய வரியுடன் சேர்த்து விதிக்கப்படும் மேல்வரி;

எ) வருமான வரியுடன் சேர்த்து வாங்கப்படும் மேல்வரி ;

வருமான வரி :-

மத்திய அரசு விதித்து, வசூலித்து, நிகரத் தொகையை மத்திய அரசும் மாநிலங்களும் பங்கிட்டுக் கொள்ள வேண்டிய வரி:-

(சட்ட விதி 270)

*1. விவசாய வருமானங்கள் நீங்கலாக மற்ற வருமானங்களின் மேல் மத்திய அரசு விதித்து, வசூல் செய்யக்கூடிய ஒரு வரியினத்தை வருமான வரி என நாம் அழைக்கிறோம்.*

இதை வசூல் செய்வதற்கு ஏற்பட்ட செலவு போக எஞ்சிய நிகரத் தொகையை மத்திய அரசும் மாநிலங்களும் பிரித்து வைத்துக் கொள்ள வேண்டும்.

எவ்வளவு சதவிகிதத்தை மாநிலங்களுக்கு அளிப்பது? எவ்வகையில் அளிப்பது? எந்தெந்த மாநிலங்களுக்கு அளிப்பது? என்பன போன்ற கொள்கைகளை ஐந்தாண்டிற்கொரு முறை குடியரசுத் தலைவரால் நியமிக்கப்படும் நிதி ஆணைக்குழு பரிந்துரை செய்யும். அந்தப்பரிந்துரைகளின்படி குடியரசுத் தலைவரால் (மத்திய அமைச்சரவை) நிர்ணயிக்கப்படும் வருமான வரிப் பங்குத் தொகையை, மாநிலங்கள் பெறுகின்றன. வருமான வரியில் எஞ்சிய பங்குத் தொகை, மத்திய அரசிற்குச் சேர்ந்தது.

**கலால் வரி :-**

மத்திய அரசு விதித்து வசூலித்து, அது 'விரும்பினால்' மாநிலங்களுடன் சேர்ந்து பங்கிட்டுக் கொள்ளும் வரியினம் :- (சட்ட விதி 272)

இந்தியாவில் தயாரிக்கப்படுகிற அல்லது உற்பத்தி செய்யப் படுகிற பண்டங்களின் மேல் விதிக்கக் கூடிய கலால் வரியை (அபினி, சணல், போதை உண்டாக்கும் மருந்துச் சரக்கு இவை நீங்கலாக) மத்திய அரசு தானே விதித்து வசூல் செய்து, அந்தத் தொகையை மாநிலங்களுடன் பங்கிட்டுக் கொள்ளலாம். எந்தப் பொருளின் கலால் வரியை, எப்படிப் பங்கிட்டுக் கொள்வது என்பதனையும், அப்படிப் பங்கிட்டுக் கொள்வதற்கு ஏற்ற கொள்கைகள் எவை என்பதனையும், நாடாளுமன்றம் அவ்வப்போது நிர்ணயம் செய்யும். ஆனால், நடைமுறையில் மத்திய அரசு கலால் வரியை, மாநிலங்களுடன் பங்கிட்டுக் கொள்வது எப்படி என்பது பற்றிய அடிப்படைக் கோட்பாடுகளை வகுக்க, நிதி ஆணைக்குழுவின் பரிந்துரைக்கே விட்டு விடுகின்றது. நிதி ஆணைக்குழு, எந்தெந்த மாநிலங்களுக்கு எவ்வளவு சதவீதம் தர வேண்டுமென்ற பரிந்துரைகளைச் செய்த பின்னர், நாடாளு மன்றம் இறுதி முடிவினை எடுக்கும்.

### மத்திய அரசின் வருவாய்கள்:-

மேற்சொன்னவை யாவும் வரியினங்கள் மூலமாக, மத்திய அரசு பெறக்கூடிய வருவாய்களாகும். வரிவிதிப்பில்லாமல் வேறுவகைகளில்கூட, மத்திய அரசிற்குப் பல வருவாய்கள் கிடைக்கின்றன.

அவையாவன:-

1. இரயில் துறையிலிருந்து கிடைக்கக்கூடிய வருமானம் (பதிவு 22).
2. விமானங்களிலிருந்து கிடைக்கும் வருமானம் (பதிவு 29).
3. அஞ்சல் துறை, தொலைபேசி, கம்பியில்லாத் தந்தி, வானொலி, ஆகியவையின் மூலம் கிடைக்கும் வருமானங்கள் (பதிவு 31).
4. மத்திய அரசிற்கு உரிமையான பல சொத்துக்களிலிருந்து கிடைக்கக்கூடிய வருமானங்கள் (பதிவு 32).
5. மத்திய அரசு பெறும் பொதுக் கடன் (பதிவு 35).
6. நோட்டு அச்சடித்தல்; நாணயம்; வெளிநாட்டுச் செலாவணி, (பதிவு 36).

   (இவை மூலம் மத்திய அரசு எத்துணைக் கோடி ரூபாய் வேண்டுமானாலும் உருவாக்கிக் கொள்ளலாம்).
7. வெளிநாட்டுக் கடன் (பதிவு 37).
   (வெளி நாடுகளிலிருந்து) கிடைக்கக் கூடிய உதவித் தொகைகள், கடன்கள், மானியத் தொகைகள் ஆகியவை இந்த வருவாயில் உள்ளடங்கும்).
8. இந்திய ரிசர்வு வங்கி (பதிவு 38).
9. அஞ்சல் துறை சேவிங்ஸ் பாங்கு (பதிவு 39).
10. மத்திய அரசால் நடத்தப்படும், பரிசுச்சீட்டு வருமானங்கள் (பதிவு 40).
11. வெளிநாடுகளுடன் வர்த்தகம் மற்றும் வாணிகம்.
12. மத்தியப் பட்டியலில் சொல்லப்பட்டிருக்கும் மற்ற பதிவுப் பொருள்களிலிருந்து கட்டணங்களாக (Fees) கிடைக்கும் வருமானம் (நீதி மன்றக் கட்டணங்கள் நீங்கலாக) (பதிவு 96).

இந்திய நாட்டின் மொத்த வருமானத்தில் 3/5 பங்கை மேற்சொன்ன பல வழிகளின் மூலமாக மத்திய அரசே பெற்றுக் கொண்டு மாநிலங்களுக்கு நிதி வசதிகள் பற்ருத நிலைமையை உண்டாக்கியுள்ளது.

## V

## நிதி ஆணைக் குழு

எல்லாக் காலங்களுக்கும், எல்லாச் சூழ்நிலைகளுக்கும், பொருந்தக்கூடிய வகையில், நிதித்துறை பற்றிய ஒரு நல்ல ஏற்பாட்டை, அரசமைப்புச் சட்டத்தால் உருவாக்கிவிட முடியாதென்பதை, அதனை வகுத்தவர்கள் நன்கு உணர்ந்திருந்தனர்.

வளரக் கூடிய ஒரு நாட்டில், குறிப்பாக இந்தியத் துணைக் கண்டத்தில் மத்திய மாநில உறவுகள் எப்போதும் சிக்கல் நிறைந்ததாக இருக்கும். ஏனெனில், விரிவடையக் கூடியதும், பெருந்தொகையினைக் கொண்டுவந்து சேர்க்கக் கூடியதுமான, பல நிதி மூலங்களை, மத்திய அரசு கைக்கொண்டுவிட்டது. ஆனால், மக்களுக்கான அடிப்படைத் தேவைகளை, நேரடியாக நிறைவேற்றி வரும் மக்கள் நலத் திட்டங்களை, செயல்படுத்துவது மாநிலங்களின் பொறுப்பாக உள்ளது. இதற்கு மாநில வரியினங்களில் கிடைக்கும் தொகை பற்ருது. இதனை நன்கு உணர்ந்திருந்த நமது அரசமைப்புச் சட்டத்தை உருவாக்கியவர்கள் மாநில நிதிப் பற்ருக்குறையை, ஓரளவேனும் தீர்த்து வைக்க மத்திய அரசால் வசூலிக்கப்படக்கூடிய, சில வரியினங்களில் கிடைக்கும் தொகையை, மாநிலங்களுக்குப் பங்கிட்டுக் கொடுக்கும் முறையை நமது அரசமைப்பில் செய்து வைத்துள்ளனர்.

ஆனால், மாநிலங்களுக்கு அந்தத் தொகையும் பற்ருத நிலையிருப்பதால் மத்திய அரசு தன் மேலாண்மையைச் செலுத்தக் கூடிய உதவி மானியங்களையும் (Grants In Aid) விருப்ப மானியங்களையும் ( Discretionary Grants ) மாநிலங்களுக்குத் தரக் கூடிய இன்னெரு புதிய முறையும் அரசமைப்புச் சட்டத்தில் உருவாக்கப்பட்டுள்ளது. "விருப்ப மானியங்களைத்" தரும் முறையும் வரிப் பங்குகளைத் தரும் முறையும் மாநிலங்களின் தனிப்பட்ட அதிகாரங்களில் மத்திய அரசு உரிமை மீறி, பிரவேசிக்கத்தக்க சூழ்நிலையை மத்திய அரசிற்குத் தந்து விடுகின்றன.

கூடிய வரை மாநில உரிமைகளிலும்—மாநில சுயாட்சியிலும்—மத்திய அரசு தலையிடாமலிருப்பதற்காக ஒரு வழி வகை செய்யப் பட்டது. அதற்காக நமது அரசமைப்புச் சட்டத்தில் ஓர் அமைப்பு உருவாக்கப்பட்டது. அந்தச் சுதந்திரமான அமைப்பே ''நிதி ஆணைக் குழு''.

''நிதி ஆணைக் குழு'' மாநிலங்களுக்கும் மத்திய அரசிற்கும் பொதுவானதோர் அரைகுறை நீதி மன்றத்தைப் போல் இயங்கி, மத்திய அரசின் நிதியிலிருந்து மாநிலங்களுக்கு நிதி வசதிகளைப் பெற்றுத் தரும் பணியை ஆற்றி வருகிறது. மத்திய அரசு தன்னிச்சைப்படி, தான் விரும்பும் மாநிலங்களுக்கு நிதி உதவிகளை வழங்குவதைத் தடுப்பதற்காகவும் மாநிலங்களின் மாறுபட்ட தேவைகளுக்கு ஏற்பவும் நன்மைகளுக்கேற்பவும் நிதி வசதிகளுக்கேற்பவும் நிதி ஆணைக் குழு, தனது பரிந்துரைகளைச் செய்கிறது. அதன் பரிந்துரைகள் மூலமாக மாநிலங்களுக்குரிய மத்திய நிதியைப் பெற்றுத் தருவதே, நிதி ஆணைக் குழுவின் தேர்ந்தெடுத்த பணியாகும்.

''ஆஸ்திரேலிய நாட்டின் காமன்வெல்த் கிரேன்ட்ஸ் கமிஷனை'' (Commonwealth Grants Commission of Australia) ஒத்திருக்கக்கூடிய வகையில் நமது 'நிதி ஆணைக் குழுவும்' அமைக்கப்பட்டுள்ளது. அது அரசமைப்புச் சட்டத்தின் அடிப்படையில் உருவாக்கப்படுகிறது. இதை ஓர் அரைகுறை நீதிமன்றம் போன்ற குழு வெனலாம். சட்டவிதி 280, 281 மற்றும் 264 ஆகியவை நிதிக் குழுவினை நிறுவுதல், ஏற்பாடு, அமைப்பு முறைகள், பணிகள் ஆகியவை பற்றிப் பேசுகின்றன.

அரசமைப்புச் சட்டம் அமுலுக்கு வந்த இரண்டாண்டுகளுக்குள் தலைவர் ஒருவரையும் நான்கு உறுப்பினர்களையும் கொண்ட நிதி ஆணைக் குழுவை, குடியரசுத் தலைவர் நியமித்தல் வேண்டும். அதன் பின்னர் அந்தக் குழு ஐந்தாண்டுகளுக்கு ஒருமுறை மீண்டும் குடியரசுத் தலைவரால் நியமனம் செய்யப்படும். ''1951-ஆம் ஆண்டின் நிதி ஆணைக் குழுச் சட்டம்'' (Finance Commission Act 1951) என்ற தனிச் சட்டத்தை நாடாளு மன்றம் நிறைவேற்றி, அதன் பின்னர் 1955-இல் அதில் சில திருத்தங்களையும் ஏற்படுத்திற்று. மாநிலங்களின் நலன்களைப் பிரதிபலிக்கும் உறுப்பினர் ஒருவரும்

பொருளாதார நிபுணர் ஒருவரும் மத்திய நிதி அமைச்சகத்தின் உயர்மட்ட அதிகாரி ஒருவரும் அதன் உறுப்பினர்களாக நியமிக்கப்படுகின்றனர்.

சட்டவிதி 280 (3)-இன்படி, மாநிலங்களுக்கும் மத்திய அரசுக்குமிடையில் "பங்குபோட்டுக் கொள்ளக்கூடிய" வரித் தொகையையும் (வருமான வரி), "பங்கு போடலாம்" எனக் கருதக் கூடிய வரியினத் தொகையையும் (கலால்வரி), எந்தெந்த மாநிலங்களுக்கு எந்த அளவு பங்குகளைத் தர வேண்டுமென்று நிர்ணயம் செய்து நிதி ஆணைக் குழு பரிந்துரைகளை வழங்கும். மேலும் மத்திய அரசின் தொகுநிதியிலிருந்து எந்தெந்த மாநிலங்களுக்கு எவ்வளவு தொகைகளை உதவி மானியங்களாக வழங்க வேண்டுமென்றும் அதன் முறைகளைக் கொள்கைகளாகச் செய்தும் நிதி ஆணைக் குழு பரிந்துரைக்கும். இவை போக நாட்டின் நிதி நலன் கருதி எந்தப் பொருளைப் பற்றி வேண்டுமானாலும் ஆய்வு செய்து பரிந்துரை வழங்க வேண்டுமெனக் குடியரசுத் தலைவர் நிதி ஆணைக் குழுவிற்கு ஆணை பிறப்பிக்கலாம்.

1951–ஆம் ஆண்டில் பொருளாதார நிபுணர் கே.சி.நியோகி (K. C. Neogi) அவர்களைத் தலைவராகக் கொண்ட முதல் நிதி ஆணைக் குழு நியமிக்கப் பட்டது. 1952–ஆம் ஆண்டில் அதன் அறிக்கை வெளியாயிற்று.

திரு. கே. சந்தானம் அவர்களைத் தலைவராகக் கொண்ட இரண்டாவது நிதி ஆணைக் குழு 1956–ஆம் ஆண்டில் நியமனம் செய்யப்பட்டு, 1957–ஆம் ஆண்டில் அதனுடைய அறிக்கை வெளி வந்தது.

பொருளாதார வல்லுனரும் இந்தியாவின் ஆடிட்டர் ஜெனரலாகப் பணியாற்றியவருமான திரு. ஏ. கே. சந்தா (A. K. Chanda) அவர்களைத் தலைவராகக் கொண்ட மூன்றும் நிதி ஆணைக் குழு, 1960–ஆம் ஆண்டில் நியமனம் செய்யப் பட்டது. 1961–ஆம் ஆண்டில் அதன் பரிந்துரைகள் குடியரசுத் தலைவருக்குத் தரப்பட்டது.

1964-ஆம் ஆண்டில் நிறுவப்பட்ட நான்காம் நிதி ஆணைக் குழுவிற்குத் தமிழக உயர்நீதி மன்றத் தலைமை நீதிபதியாக இருந்து ஓய்வு பெற்றவரும், மத்திய மாநில உறவுகள் பற்றி வரலாற்றுப் புகழ் பெற்ற அறிக்கையைப் பின்னர் தமிழக

அரசுக்கு வழங்கியவருமான டாக்டர் P. V. இராசமன்னார் அவர்களைத் தலைவராக நியமனம் செய்தனர். 1965-ஆம் ஆண்டில் நான்காம் நிதி ஆணைக் குழு, தனது பரிந்துரைகளைச் செய்தது.

15—8—1968-ஆம் தேதியில் ஐந்தாம் நிதி ஆணைக் குழு திரு. மகாவீர்த் தியாகி அவர்களின் தலைமையில் நிறுவப்பட்டு, 31—7—1969-ஆம் தேதியில் அதன் பரிந்துரைகள் வெளியிடப் பட்டன.

28—6—1972-ஆம் தேதியில் திரு. பிரும்மானந்த ரெட்டி அவர்கள் தலைமையில் (ஆந்திரப் பிரதேசத்தின் முன்னாள் முதல்வர்) ஆறும் நிதி ஆணைக் குழு அமைக்கப் பட்டது. அதன் பரிந்துரைகள் 28—10—1973-ஆம் தேதியில் வெளியிடப்பட்டது.

வருமான வரியிலும், கலால் வரிகளிலும் மத்திய அரசு மாநிலங்களுக்குத் தரவேண்டிய பங்குத் தொகை சதவீதங்கள் பற்றியும் அந்தத் தொகைகள் எந்தெந்த அடிப்படைகளில்தரப் பட வேண்டும் என்ற கொள்கை பற்றியும், ஆறு நிதி ஆணைக் குழுக்கள் செய்த பரிந்துரைகளைத் தொகுத்து வகையாகப்பகுத்தும் 644, 645, 649-ஆம் பக்கங்களில் முறையே நான்காவது மற்றும் ஐந்தாவது பட்டியல்களில் சுருக்கமாகத் தரப்பட்டுள்ளன. மாநிலங்களின் நிதி மூலங்களில் மிக முக்கிய பங்கை வகிக்கும் மத்திய வருமான வரி மற்றும் கலால் வரிகளின் பங்குத் தொகைகள் பற்றி, பின் வரும் அத்தியாயங்களில் சொல்லப் பட்ட கருத்துக்களைப் புரிந்து கொள்வதற்கு இந்தப் பட்டியல் பெரிதும் துணை செய்யும்.

## VI

## மாநில அரசின் நிதி மூலங்கள்.

மாநில அரசிற்கு வருவாய் கிடைக்கக் கூடிய வழிகளைப் பொதுவாக ஆறுவகையாகப் பிரிக்கலாம்.

1. மாநில அரசே விதித்து வசூலித்துத் தானே வைத்துக் கொள்ளக்கூடிய வரியினங்கள்.
2. மத்திய அரசே விதித்து வசூலித்து, மாநிலங்களுக்குத் தரவேண்டிய சில வரியினங்களின் தொகை.

3. மத்திய அரசால் விதித்து வசூலிக்கப்பட்ட வருமான வரியிலிருந்து மாநிலத்திற்குக் கிடைக்கக் கூடிய பங்குத் தொகை.

4. மத்திய அரசின் கலால் வரியிலிருந்து மாநிலங்களுக்குக் கிடைக்கக் கூடிய பங்குத் தொகை.

5. மத்திய அரசிடமிருந்து உதவி மானியங்களாகப் பெறக் கூடிய தொகை.

6. மத்திய அரசிடமிருந்து விருப்ப மானியங்களாகக்கிடைக்கக் கூடிய பங்குத் தொகை.

644, 645-ஆம் பக்கங்களில் தரப்பட்டுள்ள 4-ஆவது பட்டியலில் மாநில வருவாய் மூலங்களைப் பற்றித் தெளிவான விபரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

1. மாநில அரசு விதித்து வசூலிக்கும் வரியினங்கள்:-

மாநில அதிகாரப் பட்டியலில் 45 முதல் 63 வரையுள்ள பதிவுகள், 19 வகையான மாநில வரியினங்களைப் பற்றிப் பேசுகின்றன. ஒவ்வொரு மாநிலமும் இந்த வரிகளை மாநில மக்களின் மீது விதித்து வசூல் செய்து, அவைகளை மாநில நிதிக்காக வைத்துக் கொள்கின்றன.

அவையாவன:-

1. நிலவரி (பதிவு 45).

2. விவசாய வருமான வரி (பதிவு 46).

3. விவசாய நிலத்திற்கு வாரிசுரிமை பற்றித் தீர்வைகள் (பதிவு 47).

4. விவசாய நிலம் பற்றிய எஸ்டேட் தீர்வைகள் (பதிவு 48).

6. கனிப் பொருள் அபிவிருத்தி பற்றிய நாடாளு மன்றச் சட்டத்திற்குட்பட்ட கனிப் பொருள் பற்றிய உரிமைகள் மீது விதிக்கும் வரிகள் (பதிவு 50).

7, மனிதர் உட்கொள்ளும் மது வகைகள், அபினி, இந்தியச் சணல், போதை உண்டாக்கத் தக்க இதர மருந்துச் சரக்குகள் ஆகியவற்றின் மீது விதிக்கக் கூடிய வரிகள் (போதைப் பொருள் அடங்கியுள்ள மருந்துப் பொருள்கள் வாசனைப் பொருட்கள், நீங்கலாக) (பதிவு 51).

## நான்காம் பட்டியல்

## மாநில அரசின் நிதி வருவாய் மூலங்கள்




**குறிப்பு:**

[மாநிலங்களுக்குச் சொந்தமான இந்த 6 வரிகளை-மத்திய அரசு வசூலித்துத்தர வேண்டும். ஆனால் மத்திய அரசு இவைகளை விதித்து, வசூலித்து மாநிலங்களுக்குத் தரவில்லை.

**இவை-மாநிலங்கள் இழந்து நிற்கும் வரிகள்].**

**விபரங்கள்:**

I (1) (2) (3) மாநில அரசுக்கு நேரடியாகக் கிடைக்கும் நிதி வசதிகள்.

II (அ) (1) (2) (3) (i) மத்திய அரசிலிருந்து-நிதி ஆணைக் குழு செய்யும் பரிந்துரைகள் மூலமாக-மாநிலங்கள் பெறும் நிதி உதவிகள்.

(ii) இவை-மத்திய அரசு தரும் மொத்த நிதி உதவிகளில் அரசியல் சட்டப்படி கிடைக்கக் கூடிய நிதி உதவிகளாகும்.

(iii) அஃதாவது மத்திய அரசு தருகின்ற மொத்த நிதி உதவிகளிலிருந்து **35. /. மட்டுமே** இவை மூலம் மாநிலங்களுக்குக் கிடைக்கின்றன.

II (ஆ) (1) (2) சட்டப்படி உருவாகாத திட்டக் குழுவின் மூலமாக - திட்டக் குழு செய்யும் பரிந்துரைகள் மூலமாக—மாநிலங்கள் பெறும் நிதி உதவிகள்.

(i) இவை-அரசியல் சட்டத்திற்குப் புறம்பாக மத்திய அரசால் கொடுக்கப்படும் ஐந்தாண்டுத் திட்டங்களுக்கான ஒரு பகுதி நிதி உதவிகளாகும்.

(ii) அஃதாவது மத்திய அரசு தனது விருப்பம் போல்—தான் விரும்பும் மாநிலங்களுக்கு-இவ்வகை நிதி உதவிகளை 5 ஆண்டுத் திட்டங்களுக்காகத் தருகின்றன.

(iii) மத்திய அரசால் தரப்படும் மொத்த நிதி உதவிகளிலிருந்து **ஏறத்தாழ 65%** இவை மூலம் மாநிலங்களுக்குக் கிடைக்கின்றன.

8. வேற்று மாநிலத்திலிருந்து, ஒரு மாநிலத்திற்குள் விற்பனை செய்வதற்காகக் கொண்டு வரும் போது, விதிக்கப்படும் வரிகள் (பதிவு 52).

9. மின்சாரம் (பதிவு 53).

10. செய்தித் தாள்கள் அல்லாத, மற்றையப் பண்டங்களை, விற்கும் போதும் வாங்கும் போதும்(மத்திய அரசின் பட்டியலுக்குட்பட்டு), விதிக்கப்படும் வரிகள் (பதிவு 54).

11. செய்தித்தாள்களில் வரும் விளம்பரங்களைத் தவிர, மற்ற வகை விளம்பரங்கள் மேல் விதிக்கப்படும் வரிகள்(பதிவு55).

12. நிலப்பாதை அல்லது உள்நாட்டுப் பாதை மூலமாகக் கொண்டு செல்லப்படும் பண்டங்கள் மீதும் பிரயாணிகள் மீதும் விதிக்கப்படும் வரிகள் (பதிவு 56).

13. வாகன வரிகள் (பதிவு 57).

14. விலங்குகள் மீதும், படகுகளின் மீதும், விதிக்கப்படும் வரிகள் (பதிவு 58).

15. சுங்கங்கள் (பதிவு 59).

16. தொழில்கள், வியாபாரங்கள், அலுவல்கள், வேலைகள் ஆகியவற்றின் மீது விதிக்கக்கூடிய தொழில் வரிகள் (பதிவு 60).

17. தலைக்கட்டு வரிகள் (பதிவு 61).

18. சொகுசுப் பொருள்களின் மீது வரிகள்; வேடிக்கைகள், கேளிக்கைகள், பந்தயம் ஓட்டுதல் மற்றும் சூதாட்டம் ஆகியவை மீது விதிக்கப்படும் வரிகள் (பதிவு 62).

19. மத்தியப்பட்டியலில் கூறப்படாத மற்ற ஆவணங்கள் பற்றிய பத்திர வில்லைகளின் மேல் விதிக்கப்படும் வரிகள் (பதிவு 63).

2. மத்திய அரசு விதித்து, வசூல் செய்து, நிகரத் தொகையை மாநிலங்களுக்கே தரக்கூடிய சில மாநில வரியினங்கள் :-

மத்தியப்பட்டியல் பதிவு 87 முதல் பதிவு 90 வரையிலும் 92, 92(அ) ஆகிய பதிவுகளும்; சட்டவிதி 269-இல் சொல்லப் பட்ட வரியினங்களும் இந்த வகையைச் சார்ந்தவை.

அவையாவன;-

1. விவசாய நிலமில்லாத மற்றைய சொத்துப் பற்றிய எஸ்டேட் தீர்வைகள் (பதிவு 87).
2. வாரிசு வரி (விவசாய நிலம் நீங்கலாக) (பதிவு 88).
3. இரயில், அல்லது ஆகாயமார்க்கமாக ஏற்றிச் செல்லப்படும் பண்டங்கள், அல்லது பிரயாணிகள் மீது விதிக்கப்படும் முடிவிடத்து வரிகள் (Terminal Tax) மற்றும் இரயில் கட்டணங்கள் மீது போடப்படும் வரிகள். (பதிவு 89).
4. பங்கு வாணிகங்கள், கொடுக்கல் வாங்கல்கள் மீது விதிக்கப் படும் வரிகள். (ஸ்டாம்புத் தீர்வை நீங்கலாக) (பதிவு 90).
5. பத்திரிக்கைகளின் விற்பனை, கொள்முதல், விளம்பரம் ஆகியவற்றின் மீது விதிக்கப்படும் வரிகள் (பதிவு 92).
6. பத்திரிக்கைகள் நீங்கலாக, மற்ற பண்டங்கள் விற்பனை மற்றும் கொள்முதல் ஆகியவை மாநிலங்களிடையே வணிகமாக நடைபெறும் போது, விதிக்கக் கூடிய வரிகள். (பதிவு 92-A).

மேற்சொன்ன 6 வகை வரியினங்கள் மாநில அரசிற்குச் சேர்ந்தவை; ஆனால், மத்திய அரசு அவைகளை விதித்து வசூலித்து அதற்கேற்படும் செலவுகள் போக மீதித் தொகையை அந்தந்த மாநில அரசுகளுக்குத் தந்து விடும்.

உண்மையில் மாநிலங்களின் நிதி வாயில்களை, இந்த வகை வரிகள் பெருக்குகின்றன. ஆனால், இவை மத்திய அரசிற்குச் சேராத காரணத்தினால், இந்த வரிகளை மத்திய அரசு விதித்து, வசூல் செய்வதற்கு எந்த விதமான ஆர்வத்தையும் இதுவரை காட்டவில்லை.

நியாயமாக, மாநில அரசுகளுக்குச் சேர வேண்டிய, இந்த வரியினங்களில் கிடைக்கும் தொகைகளை, மாநில அரசே விதித்து, வசூல் செய்யும் உரிமைகளும் மாநிலங்களுக்களிக்கப் படவில்லை. மத்திய அரசும் வசூலித்துக் கொடுப்பதில்லை. ஆகவே மேற்சொன்ன வரியினங்களில் பலவற்றில் கிடைக்கக் கூடிய வருவாய்களை மாநில அரசுகள் இழந்து நிற்கின்றன.

**3. மத்திய அரசால் விதித்து வசூலிக்கப்பட்ட "வருமான வரியிலிருந்து" மாநிலத்திற்குக் கிடைக்கக் கூடிய பங்குத் தொகை:-**

இதைப் பற்றி மத்திய அரசின் நிதி மூலங்கள் என்ற தலைப்பில் மூன்ரும் துணைத் தலைப்பான "மத்திய அரசினுல் வசூலிக்கப்பட்டு மாநிலங்களுக்கிடையே பங்கிட்டுக் கொள்ளக் கூடிய வரி" என்பதில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. அருள் கூர்ந்து அதனைக் காண்க.

மத்திய அரசு விதித்து வசூல் செய்யும் வருமான வரியில் அதன் செலவு போக நிகரத் தொகையில் மாநிலங்களுக்குப் பங்களிக்கப்படுகிறது. முதலில் 50·/. பங்குத் தொகை எல்லா மாநிலங்களுக்கும் மொத்தமாக அளிக்கப்பட்டு வந்தது. முதல் நிதி ஆணைக்குழுவின் பரிந்துரைப்படி 55·/. வீதமாகவும் இரண்டாம் நிதி ஆணைக்குழுவின் பரிந்துரைப்படி 60·/. வீதமும் மூன்ரும் நிதி ஆணைக்குழுவின் பரிந்துரைப்படி 66⅔·/. வீதமும் நான்காம் ஐந்தாம் நிதி ஆணைக்குழுக்களின் பரிந்துரைப்படி 75·/. வீதமும் ஆரும் நிதி ஆணைக் குழுவின் பரிந்துரைப்படி 80·/. வீதமும் வருமான வரியின் பங்குத் தொகை மாநிலங்களுக்கு மத்திய அரசால் அளிக்கப்பட்டன. தற்போது மாநிலங்கள் 80·/. நிகர வருமானவரித் தொகையைப் பெற்றுக் கொண்டு வருகின்றன. விளக்கங்களுக்கு 649–ஆம் பக்கத்தில் உள்ள 5–ஆம் பட்டியலைப் பார்க்கவும்.

**4. மத்திய அரசின் "கலால் வரியிலிருந்து" கிடைக்கக் கூடிய மாநிலப் பங்குத் தொகை:-**

இதைப்பற்றி மத்திய அரசின் நிதி மூலங்கள் என்ற தலைப்பில் நான்காம் துணைத் தலைப்பான "மத்திய அரசு விதித்து, அது விரும்பினுல் மாநிலங்களுக்குப் பங்கிடக்கூடிய வரியினம்" என்பதில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. அருள் கூர்ந்து அதனையும் காண்க. மற்ற விளக்கங்களுக்கு 650, 651-ஆம் பக்கங்கலிலுள்ள 6-ஆம் பட்டியலைப் பார்க்கவும்.

## கலால் வரிகளின் பங்குத் தொகையும் நிதி ஆணைக் குழுக்களும் :-

1952-ஆம் ஆண்டு வரையும் மத்திய அரசால் வசூலிக்கப்பட்ட கலால் வரிகளிலிருந்து மாநிலங்கள் பங்கு பெறவில்லை. முதன் முதலாக மூன்று பொருள்களுடைய கலால் வரியிலிருந்து

## ஐந்தாம் பட்டியல்

**ஆறு நிதி ஆணைக் குழுக்கள் செய்த பரிந்துரைகளின்படி "வருமான வரியை" மத்திய – மாநில அரசுகள் பங்கீடு செய்து கொண்ட விதம்.**

| நிதி ஆணைக்குழு | பங்கீடு செய்து கொண்ட வரி யினம் வருமான வரி | மாநிலங் கள் பெற்ற சத வீதம் | எந்த அடிப்படைக் கொள்கைகளில் பங்கீடு செய்யப்பட்டது? |
|---|---|---|---|
| முதல் நிதி ஆணைக்குழு | நிகர வருமான வரி [மத்திய அரசு தரும் சம்பளங்கள் மீது போடும் வருமான வரியும் விவசாய வருமான வரியும் நீங்கலாக ] | 55·/. | { மக்கள் தொகை அடிப்படையில் 80·/. வசூல் அடிப்படையில் 20./. |
| இரண்டாம் நிதி ஆணைக்குழு | | 60·/. | { மக்கள் தொகை அடிப்படையில் 90·/. வரி வசூல் ஆன அடிப்படையில் 10·/. |
| மூன்றும் நிதி ஆணைக்குழு | | 66⅔·/. | { மக்கள் தொகை அடிப்படையில் 80·/. வரி வசூல் ஆன அடிப்படையில் 20·/. |
| நான்காம் நிதி ஆணைக்குழு | ,, | 75·/. | { மக்கள் தொகை அடிப்படையில் 80·/. வசூலாகும் அடிப்படையில் 20·/. |
| ஐந்தாம் நிதி ஆணைக்குழு | ,, | 75·/. | { மக்கள் தொகை அடிப்படையில் 90·/. வரி வசூலான பிரதேச ,, 10·/. |
| ஆறும் நிதி ஆணைக்குழு | ,, | 80·/· | { மக்கள் தொகை அடிப்படையில் 90·/. வரி வசூலாகும் பிரதேச ,, 10·/. |

SOURCE: Reports of The Finance Commissions

[Taken From, "The Union and The States" (1972), By. Mr. S. N. JAIN & Others. Page - 200.]

## ஆறும் பட்டியல்

### ஆறு நிதி ஆணைக்குழுக்கள் செய்த பரிந்துரைகளின்படி கலால் வரிகளை மத்திய - மாநில அரசுகள் பங்கீடு செய்து கொண்ட முறைகள்

[ EXCISE DUTIES ]

| நிதி ஆணைக்குழு | மத்திய-மாநில அரசுகளுக்கிடையே பங்கீட்டில் இடம் பெறும் பொருள்களின் கலால் வரிகள் | மாநிலங்கள் பெற்ற சதவீதம் | எந்த அடிப்படைக் கொள்கைகள்படி கலால் வரியினங்கள் மத்திய-மாநிலங்களுக்கிடையே பிரித்துக் கொடுக்கப்பட்டன ? |
|---|---|---|---|
| முதல் நிதி ஆணைக்குழு | புகையிலை; தீப்பெட்டி; தாவரப் பண்டங்கள்; | 40% | முழுவதும் மக்கள் தொகையின் அடிப்படையில். |
| இரண்டாம் நிதி ஆணைக்குழு | ஷெபண்டங்களோடு,சர்க்கரை; காப்பி; தேயிலை; காகிதம்; தாவர எண்ணெய் ஆகியவைகள் சேர்க்கப்பட்டன. | 25% | 90·/. மக்கள் தொகை அடிப்படையிலும்; 10·/. வசூலான பிரதேச அடிப்படையிலும். |
| மூன்றும் நிதி ஆணைக்குழு | 1960-61-ஆம் ஆண்டில் கலால்வரிகள் விதிக்கப்பட்ட எல்லாப் பொருள்கள். [அதில் ரூ 50 இலட்சத்திற்குக் குறைந்துமொத்த வசூல் தருபவையும் மோட்டார் ஸ்பிரிட்டும் இடம் பெறுது] | 20% | பங்கீட்டிற்கு அடிப்படைக் கொள்கை மக்கள் தொகை தான். ஆனல்,i)மாநிலங்களின் பொருளாதார வலிவின்மை; ii)வளர்ச்சி வேறுபாடுகள்; iii)தாழ்த்தப்பட்டோர்; iv)மலை சாதி மக்கள்எண்ணிக்கை போன்றவைகளும் மாநிலப் பங்கீட்டுத் தொகையை நிர்ணயப்படுத்தும் கொள்கைகளாகக் கணக்கில் எடுத்துக் கொள்ளப்பட்டன. |
| நான்காம் நிதி ஆணைக்குழு | தனிக்கலால் வரிகள் [Special Excises] Regulatory Duties, Cess. [செஸ்கள்]ஆகியவை தவிர, மற்றெல்லாக் கலால் வரிகளும். | 20% | மக்கள் தொகை அடிப்படையில் தரவேண்டிய தொகை 80·/. பொருளாதாரப் பின் தங்கிய நிலை அடிப்படையில் தரப்படவேண்டுவது 20·/. குறிப்பாக மாநிலங்களின் பின் தங்கிய நிலை அடிப்படைக் கொள்கையாயிற்று. |

| | | | |
|---|---|---|---|
| ஐந்தாம் நிதி ஆணைக்குழு | (அ) 1969-70 முதல் 71-72 வரை மேற்சொன்ன வகையில் | 20·/. | மக்கள் தொகை அடிப்படையில் 80·/.; மீத முள்ள 20·/. தொகையில் மூன்றில் இரண்டு பங்குத் தொகையை அகில இந்திய சராசரி தனி நபர் வருமானத்திற்கும் குறைவாக உள்ள சராசரி தனி நபர் வருமானத்தைப் பெறும் மாநிலங்களுக்குத் தரப்படும். |
| ஐந்தாம் நிதி ஆணைக்குழு | (ஆ) 1972-73 முதல் 73-74 வரை தனிக்கலால் வரிகள் (**Special Excie Duties**) உட்பட எல்லாக் கலால் வரிகளும் (பொருள்கள்). | 20·/. | 20·/. தொகையில் ⅘ பங்குத் தனி நபர் சராசரி அடிப்படையில் போக மீதி ⅕ பங்கில் 6 வகை அடிப்படைகளை வைத்துத் தரவேண்டும். 1. ஆதி வாசிகள் எண்ணிக்கை; 2. 1 இலட்சம் மக்களில் ஆலைத் தொழிலாளிகளின் எண்ணிக்கை; 3. ஒரு விவசாயிக்குப் பாசன நிலம் எவ்வளவு என்ற எண்ணிக்கை; 4. சதுர கிலோ மீட்டருக்கு ரயில்-சாலை ஆகியவைகளின் நீளத்தைப் பொறுத்த கணக்கு; 5. பள்ளிக் குழந்தைகளுக்கான பள்ளிகளின் குறைவான கணக்கு; 6. ஆயிரம் பேருக்கு எவ்வளவு மருத்துவமனை என்கிற கணக்கு. |
| ஆறும் நிதி ஆணைக்குழு | (அ) 1974-75 முதல் 75-76 வரை எல்லாப் பொருட்களின் மீதும் வாங்கும் கலால் வரிகள் (**Auxiliary Duties of Excise** செஸ்கள் தவிர) | 20·/. | 75·/. மக்கள் தொகை அடிப்படையில் [மாநிலங்கள்]<br>25·/. பின் தங்கிய நிலை அடிப்படையில் [மாநிலங்கள்] |
| | (ஆ) 1976-77 முதல் 77-78 வரை 1978-79 வரையும்–எல்லாப் பொருட்களின் மீதும் வாங்கும் கலால்வரிகள் **Auxiliary Duties** (ஆனால் செஸ்கள் தவிர). | 20·/. | 75·/· மக்கள் தொகை அடிப்படையில்<br>25·/. மாநிலங்களின் பின் தங்கிய அடிப்படையில் (**Backwardness of States**). |

**Source:** Reports of the Finance Commissions

**Taken From "The Union and The States", By. Mr. S. N. Jain & Others. (1972), P. 201.**

அதாவது புகையிலை, தீப்பெட்டி, தாவரப் பொருட்கள் ஆகியவை களின் மேல் விதித்து, வசூலிக்கப்பட்ட கலால் வரியிலிருந்து 40·/. தொகையை மட்டும் மத்திய அரசு மாநிலங்களுக்கு வழங்க வேண்டு மென்று, ''முதல் நிதி ஆணைக்குழு'' பரிந்துரை செய்தது.

''இரண்டாம் நிதி ஆணைக்குழு'' மேற்கண்ட மூன்று பொருள் களோடு, இன்னும் ஐந்து பொருட்களைச் சேர்த்தது. அதாவது புகையிலை, தீப்பெட்டி, தாவரப் பொருட்கள், சர்க்கரை டீ, காபி, காகிதம் மற்றும் தாவர எண்ணெய்கள் ஆகிய எட்டுப் பொருள்களிலிருந்து கிடைக்கும் கலால் வரித் தொகையிலிருந்து மொத்தம் 25·/. தொகையை மத்திய அரசு மாநிலங்களுக்கு வழங்க வேண்டு மென்று பரிந்துரைத்தது.

பின்னர் எல்லாப் பொருட்களின் கலால் வரிகளிலிருந்து, மாநிலங்கள் பங்கு பெற வேண்டு மென்ற மரபை ஏற்படுத்திக் கொள்ள வேண்டு மென்று, ''மூன்றும் நிதி ஆணைக்குழு'' ஒரு புதிய கொள்கையினை முதன் முதலாகப் பரிந்துரை செய்தது.

அதாவது மோட்டார் எண்ணெய்யைத் தவிர (பெட்ரோல் ஆகியவை) மற்ற 35 பொருட்களின் மேல் மத்திய அரசு பெறக் கூடிய கலால் வரியினிருந்து 20·/. பங்குத் தொகையை மத்திய அரசு மாநிலங்களுக்குத் தர வேண்டுமென, அது கொள்கை வகுத்தது

மோட்டார் எண்ணெய்யிலிருந்து கிடைக்கக் கூடிய கலால் வரியில் 20·/. (ஏறத்தாழ 9 கோடி ரூபாய்) மாநிலங்களின் பாதை வசதிகளின் முன்னேற்றத்திற்காக மட்டும் நான்காண்டு காலத்தில் செலவிடுவதற்குரிய மானியங்களாகத் தரப்பட வேண்டு மென்று அது பரிந்துரை செய்தது.

''நான்காம் நிதி ஆணைக்குழு'', இதற்கும் ஒருபடி மேலே சென்று மத்திய அரசு ''இனிமேல் கலால் வரி விதிப்பதற்காகத் தேர்ந்தெடுக்கப்படும் பொருட்களிலிருந்து வரும் கலால் வரியில் கூட'' 20·/. பங்குத் தொகையை மாநிலங்களுக்குத் தர வேண்டு மென வற்புறுத்தியது.

ஆகவே தற்போது மத்திய அரசு விதித்து வசூலிக்கக்கூடிய எல்லாப் பொருள்களின் நிகரக் கலால் வரித் தொகையினின்றும் 20·/. பங்குத் தொகையை மாநிலங்கள் பெற்று வருகின்றன.

1956-ஆம் ஆண்டில் "தேசிய வளர்ச்சிக் குழுவில்" (National Devolopment Council) மத்திய அரசிற்கும் மாநிலங்களுக்கும் ஏற்பட்ட ஒப்பந்தப்படி ஜவுளி, சர்க்கரை, புகையிலை மற்றும் பட்டுத் துணிகள் ஆகியவற்றின் மீது மாநிலங்கள் விதித்து வசூல் செய்த விற்பனை வரியை, மத்திய அரசு தானே ஏற்றுக் கொண்டு அதற்கு மாறாக, கலால் வரியுடன் சேர்த்து அந்த விற்பனை வரியையும் தனிக் கலால் வரியாக வசூல் செய்து அந்தத் தொகையில் ஒரு பகுதியையும் மாநிலங்களுக்குக் கொடுத்து வருகிறது. மாநிலங்கள் நான்கு ஐந்தாண்டுத் திட்டக்காலங்களில் பெற்றுக் கொண்ட வருவானவரி மற்றும் கலால் வரி ஆகியவைகளின் பங்குத் தொகைகளை, பக்கம் 654, 655-இல் (7,8-ஆவது பட்டியல்களில்) தந்துள்ளோம். அவற்றைக் காண்க.

வருமானவரி மற்றும் கலால் வரிகளின் பங்குத் தொகைகள் மாநில நிதி வாயில்களை ஓரளவு பெருக்குகின்றதே தவிர அதன் நிதித் தேவைகளை முழுவதும் தீர்த்து விடுவதில்லை அதற்காகவே, "உதவி மானியங்கள்" தரப்படுகின்றன. ஆனால், 5-ஆண்டுத் திட்டங்களுக்காகத் தரப்படும் விருப்ப மானியங்கள் இவை யெல்லாவற்றையும் மாற்றி அமைத்து விடுகின்றன.

### 5. உதவி மானியங்கள் (Grants in Aid)

மாநிலங்களை மத்திய அரசின் கட்டுக்குள் வைப்பதற்கு "உதவி மானியங்கள்" பயன் படுகின்றன.

சட்ட விதி 275-இன்படி, மாநிலங்களுக்கு நிதிப்பற்றுக் குறை ஏற்படும் பொழுது, தேவையான நிதி உதவிகளை நாடாளுமன்றம் செய்வதற்குப் பொறுப்பு ஏற்றுக் கொண்டுள்ளது. ஒரு கூட்டாட்சி நாட்டில், ஒரு மாநிலத்திற்கும் இன்னொரு மாநிலத்திற்கும் பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் இருப்பது இயற்கையே. ஒரு மாநிலத்தின் பரப்பளவு, தட்ப வெப்ப நிலை, சுற்றுச் சார்புகள், இயற்கைக் கூறுகள், மக்கள் தொகை, உற்பத்திச் சக்தி, வருமான அளவு, செலவின அளவு ஆகியவைகள் காரணமாக நிதித்துறையில் மாநிலத்திற்கு மாநிலம் ஏற்றத் தாழ்வுகள் உள்ளன. இந்த ஏற்றத் தாழ்வுகளை நீக்குவதற்காகச் சில பிற்பட்ட மாநிலங்களுக்கு அதிக மானியத் தொகைகளையும் ஏற்கனவே முன்னேற்றத்தைப் பெற்ற

## ஏழாம் பட்டியல்

## வருமான வரியிலிருந்து மாநிலங்கள் பெற்ற பங்குத் தொகைகள்

(ரூபாய் கோடிகளில்)

| வருமான வரி | முதல் 5-ஆண்டுத் திட்டம் | இரண்டாம் 5-ஆண்டுத் திட்டம் | மூன்றும் 5-ஆண்டுத் திட்டம் | 1966-67 to 1968-69 | 1969-70 -இன் மதிப்பீடு |
|---|---|---|---|---|---|
| மத்திய மேல்வரியையும் சேர்த்து வசூலான நிகர வருமான வரி. | 668 | 814 | 1,144 | 962 | 364 |
| மாநிலங்களுக்களிக்கப்பட்ட பங்குத் தொகை. (வருமான வரி) | 278 | 375 | 556 | 506 | 245 |
| நிகர வருமான வரியிலிருந்து மாநிலங்கள் பெற்ற பங்குத் தொகையின் சதவீதம் | 41 6·/. | 46 1·/. | 46.9· /. | 52.6./. | 70.0·/. |

மூலம்: மத்திய அரசின் நிதி நிலை அறிக்கையிலிருந்து.

Taken From, "The Union and The States" (1972), By S. N. Jain and others. Page. 202.

## எட்டாம் பட்டியல்

### மத்தியக் கலால் வரிகளிலிருந்து மாநிலங்கள் பெற்ற பங்குத் தொகைகள்

(ரூபாய் கோடிகளில்)

| மத்தியக் கலால் வரிகள் | முதல் 5-ஆண்டுத் திட்டம் | இரண்டாம் 5-ஆண்டுத் திட்டம் | மூன்றாம் 5-ஆண்டுத் திட்டம் | 1966-67 to 1968-69 | 1969-70 -இன் மதிப்பீடு |
|---|---|---|---|---|---|
| கலால் வரிகளிலிருந்து வசூலான நிகரத் தொகை (கூடுதல் கலால் வரி நீங்கலாக) | 493 | 1,458 | 3,274 | 3,318 | 1,456 |
| மாநிலங்களுக்களிக்கப்பட்ட பங்குத் தொகை (கலால் வரி) | 46 | 153 | 399 | 627 | 266 |
| நிகரக் கலால் வரிகளிலிருந்து மாநிலங்கள் பெற்ற பங்குத் தொகையின் சதவீதம் | 9.3% | 10.4% | 12.2% | 18.9% | 18.3% |

மூலம்: மத்திய அரசின் நிதி நிலை அறிக்கைகளிலிருந்து

Taken From, "The Union and the States" (1972), By S. N. JAIN and others. Page. 202.

மாநிலங்களுக்குக் குறைந்த மானியத் தொகைகளையும் சூழ்நிலைக் கேற்றபடியும், தேவைக்கேற்றபடியும் மத்திய அரசு ''மானியங்களாக'' வழங்குகின்றது.

## உதவி மானியங்களும் நிதி ஆணைக் குழுக்களும்

275-ஆம் சட்ட விதியில் மத்திய நாடாளுமன்றச் சட்டத்தின் மூலமாக மாநிலங்களுக்கு ''உதவி மானியங்கள்'' தரப்பட வேண்டுமென்று பொதுவாகக் கண்டுள்ளதே தவிர ஒரு மாநிலத்திற்கு நிதிப் பற்றுக்குறை உள்ளதா; அப்படியானால், எந்த அளவிற்கு அதற்கு நிதி தேவை என்பனவற்றைத் தீர்மானம் செய்யக்கூடிய வழிமுறைகளைப் பற்றி அதில் சொல்லப்படவில்லை. ஆனால் எந்த மாநிலத்திற்கு எவ்வளவு உதவி மானியத் தொகை தரப்பட வேண்டும் என்பதை நிர்ணயிப்பதற்காக ஐந்தாண்டு காலத்திற்கு ஒரு முறை ஒரு ''நிதி ஆணைக்குழு'' நியமனம் செய்யப்படுகிறது. நிதியாணைக்குழு செய்யும் அந்தப் பரிந்துரைகளை அடிப்படையாக வைத்து நாடாளு மன்றம் சட்டமியற்றுகிறது. அதன்படி மத்திய அரசு மாநிலங்களுக்கு உதவி மானியங்களை அளித்து வருகின்றது.

இதுவரை ஆறு நிதி ஆணைக் குழுக்கள் நியமனம் செய்யப்பட்டுள்ளன. இந்த அத்தியாயத்தின் முற்பகுதியில் ஆறு நிதி ஆணைக் குழுக்கள் பற்றிக் கூறப்பட்டுள்ளது. அவற்றைக் காண்க. மாநிலங்களின் நிதி பற்றிய கொள்கைகளையும் வருமான வரி மற்றும் கலால் வரிகளின் பங்குத் தொகைகளை மாநிலங்களுக்கு அளிப்பது பற்றிய கோட்பாடுகளையும் அவை வகுத்துக் கொடுத்திருக்கின்றன. மாநிலங்களின் நிதி வருவாய்களைப் பெருக்குவதற்கு நிதி ஆணைக்குழுக்களின் அறிக்கைகள் உறுதுணையாக நிற்பதால் மாநிலங்களைப் பொறுத்தவரை அந்த அறிக்கைகள் மிக மிக இன்றியமையாததாகும். எனவே மாநிலங்களுக் குதவியாக நிதி ஆணைக்குழுக்கள் செய்த உதவி மானியக் கொள்கைகளைப் பற்றி இனிப் பார்ப்போம்.

அ) உதவி மானியங்கள் பற்றி முதல் நிதி ஆணைக்குழு செய்த பரிந்துரைகள்:-

முதல் நிதி ஆணைக்குழு, மாநிலங்களுக்களிக்கப்படும் உதவி மானியங்களைப் பற்றிக் கீழ்க்கண்ட கொள்கைகளை உருவாக்கிற்று:-

i) ஒரு மாநிலம் மானியத் தொகையைப் பெறும் தகுதியையும் அதற்குரிய மானியத் தொகை அளவையும் கண்டறிவதற்கு அந்த மாநிலத்தின் ''நிதி நிலை அறிக்கைத் தேவைகள்'' (Budgetary Needs) மூலாதாரமானவையாகும்.

ii) அசாதாரணமானதும் வழக்கத்திற்கு மாறானதும் மீண்டும் மீண்டும் உற்பத்தியாகாததுமான மாநில வருவாய் மற்றும் செலவு இனங்களை நேர் (Adjust) செய்து விட்டு, மற்றபடி அம்மாநில நிதி நிலை அறிக்கையினையே உதவி மானியங்களை நிர்ணயப்படுத்துவதற்குரிய ஓர் அடிப்படையாக வைத்துக் கொள்ள வேண்டும்.

iii) ஒரு மாநிலத்தின் சுய முயற்சியை-அதாவது ஒரு மாநிலம் வரிகளைப் போட்டு வசூலிப்பதில் காட்டும் முனைப்பையும், முயற்சியையும்—அது வரை அம்மாநிலம் பெற்ற வரித் தொகையையும் மத்திய அரசின் உதவி மானியங்களைப் பெறுவதற்கான இன்னோர் அடிப்படையான கருத்தாகக் கொள்ள வேண்டும்.

iv) மாநிலத்தின் செலவினங்கள் அளவுக்கு மீறியனவாக உள்ளனவா என்பதனை நன்கு ஊடுருவிப் பார்த்து, அதன் செலவினங்களில் நியாயமான, பொருளாதார முயற்சிகள் உள்ளனவா? என்பதையும் மானியங்களைக் கொடுப்பதற்குரிய மற்றோர் அடிப்படையாக வைத்துக் கொள்ள வேண்டும்.

v) மாநில மக்களுக்கான பணிகளை, ஒரு மாநிலம் எந்த அளவிற்கு நிறைவேற்றி உள்ளது என்பதனையும் கருத்தில் கொள்ள வேண்டும். மக்களுக்கான பொதுப் பணிகள் பலவற்றை, ஒரு மாநில அரசால் செய்ய முடியாமல் இருந்தால், உதவி மானியத் தொகையையும் கூடுதலாக அம்மாநிலத்திற்கு அளிக்க வேண்டும்.

vi) ஒரு மாநிலம், ''தேசிய முக்கியத்துவம் வாய்ந்த'' சில பொறுப்புக்களின் சுமையைத்தனித்து ஏற்றுக்கொள்ளும் போது, உதவி மானியத்தொகையும் அதற்குக் கூடுதலாக அளிக்கப்படல் வேண்டும்.

இந்த ஆறுவகை அடிப்படைக் கோட்பாடுகளை மையமாக வைத்துத் தான் ஒவ்வொரு மாநிலத்திற்கும், எந்த அளவிற்கு உதவி மானியங்களை மத்திய அரசு தர வேண்டுமென்று நிதி ஆணைக்குழு நிர்ணயம் செய்கிறது.

மேற்கு வங்காளம், ஒரிஸா, சௌராஷ்ட்ரா, பஞ்சாப், அசாம், மைசூர், கொச்சி ஆகிய 7 மாநிலங்களுக்கு மட்டும் ரூபாய் 5¼-க் கோடியை உதவி மானியத்தொகையாகத் தர வேண்டுமென்று முதல் ஆணைக்குழு பரிந்துரை செய்தது.

மக்கள் சமூகநலப் பணிகளுக்காக, சில தனி மானியங்களையும் (Special Grants) சில மாநிலங்களுக்கு வழங்கலாமெனவும் முதல் நிதி ஆணைக்குழு, பரிந்துரைத்தது. சான்றாக 6 முதல் 11வயது வரை உள்ள குழந்தைகளின் முதல் நிலைக் கல்விக்காக (Primary Education) 8 மாநிலங்களுக்குத் தனி மானியங்கள் தர வேண்டும் என்றும் முதல் நிதி ஆணைக்குழு பரிந்துரை செய்தது.

ஆ) இரண்டாம் நிதி ஆணைக்குழு பரிந்துரைத்த உதவி மானியங்கள்:-

இதற்கிடையில் ஐந்தாண்டுத் திட்டங்களை மத்திய அரசு மேற்கொண்டது. எனவே, முதல் ஐந்தாண்டுத் திட்டத்தால், மாநிலங்களுக்குக் கிடைத்த பல வசதிகளையும், இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்திற்கான மாநிலத் தேவைகளையும் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. ஆகவே அவற்றையும் மாநிலங்களுக்கு உதவி மானியத்தொகைகளை வழங்குவதற்குரிய கொள்கைகளாக இரண்டாம் நிதி ஆணைக்கு ஏற்றுக் கொண்டது.

மாநிலங்களின் வரியினைப் பெருக்கும் சுயமுயற்சிக் கொள்கையை, இரண்டாம் நிதி ஆணைக்குழு அதிகமாய் வலியுறுத்த வில்லை.

மாநிலங்களில் ஏற்படும் வெள்ளம், பஞ்சம், வறட்சி போன்ற எதிர்பாரா இயற்கையின் கொடுமைகளால் ஏற்படும் எதிர்பாராச் செலவினங்களையும் கருத்தில் கொள்ள வேண்டுமென இந்த

இரண்டாம் நிதி ஆணைக்குழு வலியுறுத்திற்று. பத்தாண்டுகளில் இயற்கைக் கொடுமைகளால் ஒரு மாநிலத்திற்கு ஏற்படும் எதிர் பாராத அதிகச் செலவினங்களைக் கணக்கிட்டு, அதில் ஓராண்டிற்குரிய சராசரித் தொகையை அளவையாக வைத்து உதவி மானியத் தொகை தரப்பட வேண்டுமெனவும் அது பரிந்துரை செய்தது. மேலும் ஐந்தாண்டுத் திட்டங்களில் ஒரு மாநிலம் செயல் படுத்த வேண்டிய பல காரியங்களுக்கான நிதித் தேவைகளையும், அதனுல் ஏற்படும் செலவினங்களையும் அடிப்படைக் கூருக வைத்துக் கொள்ள வேண்டு மென்றும் இந்த நிதி ஆணைக்குழு பரிந்துரைத்தது.

திட்டச் செலவினங்களையும் மக்களுக்குச் செய்து தீர வேண்டிய பணிகளின் தேவைகளையும் அடிப்படையாகக் கொண்டு, 11 மாநிலங்களுக்கு மொத்தம் 187.9 கோடி ரூபாய் மானியங்களாகத் தரப்படல் வேண்டு மென்று, இரண்டாம் நிதி ஆணைக்குழு பரிந்துரை செய்தது.

முதல் நிதி ஆணைக்குப் பரிந்துரைத்த உதவி மானியத் தொகைகளைப் போல், 7 மடங்கு அதிகமான உதவி மானியத் தொகைகளை மாநிலங்களுக்கு வழங்க வேண்டு மென்ற பரிந்துரைகளைச் செய்த பெருமை இரண்டாம் நிதி ஆணைக் குழுவிற்கே சாரும். இரண்டாம் நிதி ஆணைக்குழுவின் தலைவராக மாநில உரிமைகளை வலியுறுத்தும் தமிழகத்தைச் சார்ந்த நமது கே. சந்தானம் அவர்கள் இருந்தார் என்பது இங்கு நினைவு கூறத்தக்கது.

இ)மூன்ரும் நிதி ஆணைக்குழு பரிந்துரைத்த உதவி மானியங்கள்:-

மூன்ரும் நிதி ஆணைக்குழு, முதல் இரண்டு நிதி ஆணைக் குழுக்களைக் காட்டிலும் வேறு வகையான பரிந்துரைகளைச் செய்தது.

ஐந்தாண்டுத் திட்டங்களுடைய செலவினங்களின் 75 ·|. (சதவீதத்தை) ஒவ்வொரு மாநிலத்தினுடைய நிதித் தேவையாக, மத்திய அரசு கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டு மென்று மூன்ரும் நிதி ஆணைக்குழு கருதியது. அதன் அடிப்படையிலேயே மாநில மக்கள் பணிகளுக்கான உதவி மானியத் தொகை வழங்கப்படல் வேண்டு மென்றும், அது ஆலோசனை கூறிற்று. அப்படி வழங்கப்படும் மானியத் தொகைகளுக்கு, எவ்வகையான கட்டுப்பாடுகளையும் மத்திய அரசு விதிக்கக் கூடாதெனவும் அது வலியுறுத்திற்று. இதனுல், மாநிலங்களின் மேல் மத்திய அரசு,கட்டுப்பாடுகளை விதிக்க முடியாது போகும்.

மேலும், மத்திய அரசு, தனது விருப்பம்போல் கொடுக்கும் ''விருப்ப மானியங்களை'' (Discretionary grants) தரும் பழக்கத்தை நிறுத்தி விட வேண்டுமெனவும், மூன்றும் நிதி ஆணைக் குழு பரிந்துரை செய்தது.

ஒவ்வோராண்டிற்கும், எல்லா மாநிலங்களுக்கான மொத்த உதவி மானியத் தொகையாக ரூபாய் 110.25 கோடி வீதம், அந்த ஐந்தாண்டுகளுக்கு மத்திய அரசு வழங்க வேண்டுமென்று, மூன்றும் நிதி ஆணைக்குழு பரிந்துரை செய்தது. இந்த மானியத் தொகையின் அளவு, முதல் நிதி ஆணைக் குழுவால் பரிந்துரைக்கப்பட்ட உதவி மானியத் தொகை போல் 21 மடங்கு ஆகும்; இரண்டாம் நிதி ஆணைக் குழுவால் பரிந்துரைக்கப்பட்ட தொகையினைப்போல், மூன்று மடங்கு தொகையும் ஆகும்.

ஆனல், மத்திய அரசு, மூன்றும் நிதி ஆணைக் குழுவின் இந்தப் பரிந்துரைகளை ஏற்றுக் கொள்ளவில்லை. இவை தவிர, மாநிலத்தின் தனிக் காரியங்களுக்காக உதவி மானியத் தொகைகள் அளிக்க வேண்டுமென்றும், இந்தக் குழு முடிவு செய்தது. மாநிலங்களில் பாதைகளை அமைப்பதற்காக, நான்காண்டுகளுக்கு மொத்தம் ரூபாய் 36 கோடி வழங்க வேண்டுமென்றும் அந்தத் தொகையை மத்திய அரசு பெட்ரோல் மற்றும் எண்ணெய்கள் மீது வசூல் செய்யும் கலால் வரியின் 20 ·[. தொகையிலிருந்து சரிக் கட்டிக் கொள்ள வேண்டுமென்றும் இக்குழு பரிந்துரை செய்திருந்தது.

### (ஈ) நான்காம் நிதி ஆணைக் குழு பரிந்துரைத்த உதவி மானியங்கள்:-

உதவி மானியத் தொகையினை மாநிலங்களுக் களிப்பதில், ஏற்கனவே செய்யப்பட்ட சில கொள்கைகளை, இந்த நிதி ஆணைக் குழு, சற்று மாற்றி அமைத்தது.

இக்குழு, திட்டச் செலவினங்களுக்காகத் தரப்படும் தொகையை, உதவி மானியத் தொகைகளின்றும் தனித்து ஒதுக்கி வைத்து விட்டது.

இயற்கையின் இடர்ப்பாடுகளால் ஏற்படும் எதிர்பாராத மாநிலச் செலவினங்களுக்கு வழி வகை செய்யும் உதவி மானியத் தொகையை அதிகப்படுத்தி இக்குழு பரிந்துரை செய்தது.

மாநிலத்தின் மக்கள் நலப் பணிகளுக்கான தனிக் காரியங்களுக்கு உதவி மானியத் தொகைகள் வழங்குப்படுவதை இந்தக் குழு விரும்ப வில்லை.

பீகார், குஜராத், மகாராஷ்டிரம், பஞ்சாப், உத்தரப்பிர தேசம் மற்றும் மேற்கு வங்காளம் ஆகிய ஆறு மாநிலங்களுக்கு எந்த வகை உதவி மானியமும் தேவையில்லை என இந்த நிதி ஆணைக்குழு கருதியது. மற்றப் பத்து மாநிலங்கள் மொத்தமாக ஆண்டொன்றுக்கு ரூபாய் 122 கோடி உதவி மானியத் தொகை வீதம் பெற வேண்டும் என்றும் நான்காம் நிதி ஆணைக்குழு பரிந்துரைத்தது.

(உ) ஐந்தாம் நிதி ஆணைக் குழு பரிந்துரைத்த உதவி மானியங்கள்:-

1969-ஆம் ஆண்டு டிசம்பரில் வெளியிடப்பட்ட ஐந்தாம் நிதி ஆணைக் குழுவின் அறிக்கையில் பீகார், குஜராத், அரியானா, மத்தியப் பிரதேசம், மகாராஷ்டிரம், பஞ்சாப் மற்றும் உத்தரப் பிரதேசம் ஆகிய 7 மாநிலங்களுக்கு உதவி மானியத் தொகைகள் பரிந்துரைக்கப்பட வில்லை.

1969 – 70 முதல் 1973 – 74 முடிய ஐந்தாண்டுக் காலத்திற்கு மொத்தம் ரூபாய் 637.85 கோடித் தொகையை மற்றப் பத்து மாநிலங்கள் உதவி மானியத் தொகையாகப் பெற வேண்டுமென இந்த நிதி ஆணைக் குழு பரிந்துரை செய்தது.

(ஊ) ஆறும் நிதி ஆணைக் குழு செய்த பரிந்துரைகள்:-

1974 – 75 முதல் 1975 – 1979 முடிய ஐந்தாண்டுகளுக்கு, மாநிலங்களுக்கு உதவி மானியத் தொகையாக 9608 கோடி ரூபாய் தரப்பட வேண்டுமென இந்தக்குழு பரிந்துரை செய்துள்ளது,

கலால் வரி மற்றும் வருமான வரிகளிலிருந்து மாநிலங்களுக்குரிய பங்குத் தொகையாக 7098 கோடி ரூபாய் கிடைக்க வேண்டுமெனவும் இக்குழு தீர்மானித்துள்ளது.

1973–ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் முடிய இந்திய மத்திய அரசிற்கு இந்திய மாநிலங்கள் தர வேண்டிய கடன் தொகை ரூபாய் 8010 கோடி. 1974–ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் மாநிலங்களின் கணக்கு ரூபாய் 8500 கோடியாகக் கூடிவிடும். மத்திய அரசின் நிரந்தரமான கடனாளிகளாக மாநிலங்கள் இருந்து வருவதை ஓரளவிற்கு மாற்றியமைப்பதற்கான சில நல்ல பரிந்துரைகளையும் இந்தக் குழு செய்துள்ளது. கடன்களைத் திருப்பித் தரக்கூடிய, தற்போதைய முறைகளையும் இந்தக் குழு மாற்றி அமைத்துப் பரிந்துரை செய்துள்ளது. மொத்தம் ரூபாய் 1970 கோடி அளவுள்ள மாநிலக் கடன்களை, சலுகையாக அளித்து விட வேண்டுமெனவும் இக்குழு பரிந்துரைத்துள்ளது. 10 முதல் 30 ஆண்டுகளுக்குள் மாநிலக் கடன்களைத் திருப்பிக் கட்ட வேண்டுமென்ற சில சலுகைகளையும் இந்தக் குழு பரிந்துரைத்துள்ளது.

ராஜஸ்தானத்திற்கு ஆண்டொன்றுக்கு ரூபாய் 10 கோடி, உதவி மானியத் தொகை கிடைக்க வேண்டு மெனவும் இந்த நிதி ஆணைக்குழு பரிந்துரை செய்தது. மகாராஷ்டிரம், ஆந்திரம் ஆகிய மாநிலங்களுக்கு ஆண்டொன்றுக்கு 4 கோடி ரூபாய் உதவி மானியத் தொகையாக வழங்க வேண்டு மென்றும் இந்த நிதி ஆணைக்குழு பரிந்துரைத்துள்ளது.

எ) ஆறும் நிதி ஆணைக்குழுவும் தமிழ்நாடும்:-

ஆனால், சிக்கனப்படுத்திச் சீராக வருவாய் திரட்டி வரும் தமிழகத்திற்கு நியாயமாகக் கிடைக்க வேண்டிய மானியங்களைப் பற்றி ஆறும் நிதி ஆணைக்குழு பரிந்துரைக்கவில்லை.

ஐந்தாம் நிதி ஆணைக்குழுவின் பரிந்துரைப்படி 1969–70 முதல் 1973 – 74 முடிய, எல்லா மாநிலங்களுக்கும் சேர்த்துக் கொடுக்கப்பட்ட மானியத்தொகை 5313 கோடி ரூபாய்; அதில் தமிழகத்திற்கு மட்டும் 6.07•/. அதாவது 360/- கோடி ரூபாய் கிடைத்தது. ஆனால் நிதி ஆணைக் குழுவின் பரிந்துரைகளின் படி 1974–75 முதல் 1978-79–இற்காக ஒதுக்கீடு செய்யப்பட்ட மானியங்கள் மொத்தம் 9608 கோடி ரூபாயில் தமிழ் நாட்டிற்கு ரூ. 538 கோடி தான் கிடைக்கிறது. அதாவது மொத்த ஒதுக்கீட்டில் 5.6•/. மட்டுமே ஆறும் நிதி ஆணைக்குழுவால் தமிழகத்திற்கு அளிக்கப்பட்டுள்ளது.

மேலும் தனி மானியத் தொகையான ரூபாய் 2609 கோடி யில் தமிழகத்திற்குப் பங்கு அளிக்கப்பட வில்லை.

திராவிட முன்னேற்றக் கழக அரசு 1973-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்திலிருந்து கள்ளுக் கடைகளை மூடியதாலும் 1974-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்திலிருந்து சாராயக் கடைகளை மூடியதாலும் மாநில வருவாய்களில் நிதிப் பற்றுக் குறை அதிகமாக உள்ளது. அதனல் ஏற்படக்கூடிய இழப்பீடு களைப் பற்றி நிதி ஆணைக்குழுவிடம் தமிழக அரசு வலியுறுத் திற்று. ஆனல் இது பற்றி ஆறும் நிதி ஆணைக்குழு கருத்துத் தெரிவிக்கையில் மாநிலத்திற்கு வருவாய் வரக் கூடிய ஆயத் தீர்வைக்கு உட்பட்டுள்ள மது வகையான சாராயம் போன் றவைகளை விற்கும் கடைகளை மூடுவதன் மூலம், எதிர்பார்க்கப் படுகிற வருவாய் நட்டத்தை நாங்கள் ''சரியெனக் கருதவில்லை' எனக் கூறுகிறது. எனவே, தமிழகத்திற்குக் கிடைக்க வேண்டிய நியாயமான, தனி மானியத் தொகை கிடைக்க வில்லை.

### ஏ) தமிழக அரசின் சிக்கனத்திற்குக் கிடைத்த பரிசு !

ஒரு மாநில அரசு ''வரி'' முதலியவற்றல், தனது வருமானத்தைப் பெருக்கி, செலவுகளைச் சிக்கனப் படுத்தி, சீராக நிர்வாகம் செய்தால், அம்மாநிலம் உரிய உதவி மானியங்களைப் பெறலாம் என முதல் நிதி ஆணைக்குழு கொள்கை வகுத்திருந்தது, தமிழக அரசு, திராவிட முன்னேற் றக் கழக ஆட்சியில், தமிழ் மாநிலத்தின் மொத்த வருமானத்தை அதிகப்படுத்தி, செலவினங்களை முடிந்த அளவிற்குக் குறைத்து, சீரான நிர்வாகத்தை நடத்தி வருகிறது என மத்திய அமைச் சர்கள் சிலரும் அரசியல் தலைவர்கள் பலரும் ஒருமுகமாக ஒப்புக் கொள்கின்றனர்.

பிச்சைக்காரர்களுக்கு மறுவாழ்வுத் திட்டம் ; கண்ணொளி வழங்கும் திட்டம்; குடிசை மாற்று வாரியத் திட்டம்; பாதுகாக்கப் பட்ட குடிநீர் வடிகால் திட்டம்; பிற்பட்டவர்களுக்குக் கல்வி உதவித் தொகையாக அதிகப்பட்சத் தொகை ஒதுக்கீடு; மொத்தவருவாயில் நான்கில் ஒரு பங்கிற்கு மேலாக, கல்விக்காகச் செலவிடப்படும் சீரிய திட்டம் இன்னேரன்ன மக்கள் நலப் பணிகளுக்கான பல திட்டங்களை தமிழக அரசு செயல் படுத்துகிறது. இத்திட்டங்கள் வேறு எந்த மாநிலத்திலும் காண முடியாதவையாகும். நமது முன்னுள் குடியரசுத் தலைவர் மேதகு வி. வி. கிரி அவர்கள்

முதல், மூத்த மத்திய அமைச்சர் மாண்புமிகு. திரு. ஜெகஜீவன் ராம் அவர்கள் வரை, தமிழகத் திட்டங்களைப் பற்றிப் போற்றி யுள்ளனர். இவை மட்டுமா? காந்தியடிகளுடைய மது விலக்குத் திட்டத்தை அரசமைப்புச் சட்டத்தில் கூறியுள்ளபடி மீண்டும் அமுல் படுத்துவதற்கு முடிவு செய்து அதன் விளைவாக ரூபாய் 45 கோடி வருவாயைத் தமிழகம் தற்போது இழந்து நிற்கிறது. சீரான நிர்வாகத்திற்கும், மக்கள் பணித் திட்டங்களுக்கும், மிகுந்த நட்டத்தின் பேரில் அமுலாக்கப்படும் மதுவிலக்குத் திட்டத்திற்கும் ஆளும் நிதி ஆணைக்குழுவினால் கொடுக்கப்பட்ட பரிசு — இது தானா?

ஐ) உதவி மானியம் அளிக்கும் முறையிலுள்ள குறைபாடுகள்:-

மாநிலங்களுக்கு நியாயமாகச் சேர வேண்டிய பல நிதி மூலங்களையும் மிக அதிகமான வருவாய் தரத்தக்க வரியினங்களை யும் அரசமைப்புச் சட்டத்தின் மூலமாக மத்திய அரசு கையகப் படுத்திக் கொண்டது. விரிவடையாததும், மாநில உள் வட்டத் திற்குள் குறைவான தொகைகளை வசூலித்துக் கொள்ள ஏது வானதுமான வரியினங்களை மட்டும் மாநிலங்களுக்கு ஒதுக்கப் பட்டுள்ளன.

அகில இந்தியா முழுவதும் ஒரே சீரான முன்னேற்றம் இருக்க வேண்டு மென்றும், மக்களுக்காற்றப்படும் சமூகப்பணி கள் எல்லா மாநிலங்களிலும், ஒரே அளவுள்ளதாக இருக்க வேண்டு மென்றும் கூறிக் கொண்டு, உதவி மானியத் தொகை என்ற பெயரால், மத்திய அரசு தான் விரும்பும் போது, தான் விரும்பும் மாநிலங்களுக்குத் தொகைகளை வழங்கி வருகின்றது. நிதி ஆணைக்குழுக்கள், நியாயமாகப் பரிந்துரை செய்தாலும் கூட, எல்லாப் பரிந்துரைகளையும் மத்திய அரசு ஏற்றுக் கொள்ள வேண்டு மென்ற கட்டாயம் கிடையாது. ஆகவே, மாநிலங்கள் என்றென்றைக்கும் மத்திய அரசையே சார்ந்து நிற்கக் கூடிய—அதன் கையை எதிர்நோக்கி இருக்கக்கூடிய— பரிதாப நிலைக்கு ஆட்படுத்தப் பட்டுள்ளன.

(6) விருப்ப மானியங்கள்

எந்தக் காரணங்களை முன்னிட்டு, மாநிலங்களுக்கு மானி யத் தொகை கொடுக்கும் ஏற்பாடு செய்யப் பட்டுள்ளதோ, அந்தக் காரணங்கள், இப்போது கணக்கில் எடுத்துக் கொள் ளப்படுவதில்லை. நிதி ஆணைக்குழு பரிந்துரை செய்யக்கூடிய,

'கலால்' மற்றும் 'வருமான வரி' பங்கீட்டுத் தொகையுடன், 'உதவி மானியத் தொகையும்' சேர்ந்து மாநிலங்களுக்குக் கிடைக்கக்கூடிய தொகையைக்(35%)காட்டிலும் கூடுதலான தொகையை, ''விருப்ப மானியங்கள்'' என்ற பெயரால் எவ்வகையான அடிப்படையுமின்றி மத்திய அரசு தான் விரும்பும் மாநிலங்களுக்கு மட்டும் வழங்கி வரக் கூடிய முறையைச் சென்ற 24 ஆண்டு காலமாகப் பின்பற்றி வருகிறது. ஐந்தாண்டுத் திட்டங்களுக்கான நிதி யுதவிகளை மத்திய அரசு விருப்ப மானியங்கள் மூலமாகவே, மாநிலங்களுக்குக் கொடுத்து வருகின்றது. திட்டக் குழு இதற்குரிய பரிந்துரையைச் செய்ய வேண்டும். விருப்ப மானியங்கள் பற்றி, திட்டமிடுதலோடு சேர்ந்து இந்நூலின் 4-ஆம் பகுதியில் தெளிவாக ஆராயப் பட்டுள்ளது. இதன் தொடர்ச்சியாக அதனைக் காண்க.

## தாறுமாறான நிதி முறைகளால் ஏற்படும் விளைவுகள்

1952-ஆம் ஆண்டில் மாநிலங்களுக்கு ''விருப்ப மானியமாகக்'' கொடுக்கப்பட்ட தொகைகளைக் காட்டிலும் 40 மடங்குத் தொகைகளை, உதவி மானியங்களாகத் தரப்பட வேண்டிய அளவிற்கு, மாநிலங்கள் தற்போது நிதிப் பற்றுக் குறையைப் பெற்றுள்ளன.

உதவி மானியங்களைக் கோருவதற்காக வேண்டி, பல மாநிலங்கள் நியாயமாக வசூலிக்க வேண்டிய பல வரியினங்களை வசூலிக்காமல் விட்டு விடுகின்றன. மாநிலங்கள் தங்கள் வருவாய் இனங்களை அதிகப்படுத்திக் கொள்ளுவதற்கும், செலவினங்களைச் சுருக்கிக் கொள்வதற்கும் முடிவதில்லை. உண்மையில் மிகச் செம்மையாகவும் சீராகவும் நிதிநிலைகளைப் பெருக்கிக் கொண்டுள்ள திறமை படைத்த, பல மாநில அரசுகளுக்கும் உரிய ஊக்கத்தையும் தூண்டுதல்களையும் ''உதவி மானிய முறை'' கொடுப்பதில்லை.

மத்திய அரசு, காஷ்மீர், அசாம் போன்ற மாநிலங்களுக்கு, ''தனிச் சலுகைகள்'' என்ற பெயரால் மிகப் பெரிய தொகைகளை வழங்குகின்றது.

''எல்லா மாநிலங்களிலும், சீரான முன்னேற்றம் ஏற்பட வேண்டும்'' என்ற கொள்கையை அமுலாக்க வேண்டுமென்ற எண்ணத்தில் மத்திய அரசு செயல்படுவதால், திறம்பட்ட

மாநிலங்களுக்கும் செம்மையாக நடைபெறும் மாநிலங்களுக்கும் நிதித்துறையில் தரப்பட வேண்டிய தேவையான ஊக்கத்தை, மத்திய அரசு தருவதில்லை. எனவே, தமிழகம் போன்ற மாநிலங்கள் இன்னும் முன்னேறுவதற்குரிய நிதிவசதிகளை மத்திய அரசிடமிருந்து பெற முடிவதில்லை.

நிதிக் குழுக்களின் பரிந்துரைகள், மாநில நிதிப் பற்றுக் குறைகளை முழுமையாகத் தீர்ப்பதில்லை. பல மாநிலங்களில் நிதித் தேவைகளைக் கூர்த்தமதி படைத்த அறிஞர்களைக் கொண்ட நிதி ஆணைக் குழுக்களால் கூட, உரிய வசதிகள் பற்றுமையால் சரியானபடி கணக்கெடுக்க முடிவதில்லை. நிர்ணயிக்கப்பட்ட சில சூத்திரங்களை அடிப்படையாக வைத்தே, நிதி ஆணைக் குழுக்கள் மாநில நிதிநிலைகளைக் கணக்கெடுக்க முற்படுவதால், மாநிலங்களின் உண்மையான நிதி வசதிகளும் அவைகளின் பற்றுக்குறையும் தேவைகளும், நடைமுறைக் கேற்றபடி கணக்கெடுக்கப் படுவதில்லை.

சான்றுக்குக் கூற வேண்டுமெனில், பீகார், பஞ்சாப்,மேற்கு வங்காளம் ஆகிய மாநிலங்கள், இரண்டாம் நிதி ஆணைக்குழுவின் பரிந்துரைகளால், உதவி மானியத் தொகைகளைப் பெற்றன. ஆனால், நான்காவது நிதி ஆணைக் குழு, அவைகளுக்கு உதவி மானியத் தொகைகளைக் கொடுக்கவில்லை.

தமிழகம், இரண்டாம் நிதி ஆணைக் குழு மற்றும் 6-ஆம் நிதி ஆணைக் குழு ஆகியவைகளின் பரிந்துரைகளால், உரிய உதவி மானியத் தொகைகளைப் பெற முடியவில்லை. ஆனால், நான்காம், ஐந்தாம் நிதி ஆணைக் குழுப் பரிந்துரைகளால், உரிய மானியத் தொகையைப் பெற்றது.

குஜராத், மகராஷ்டிரம், உத்தரப்பிரதேசம் ஆகிய மாநிலங்கள், ஒன்று முதல் ஐந்தாம் ஆணைக் குழு வரையில், செய்த பரிந்துரைகளால் உதவி மானியத் தொகைகளைப் பெறவில்லை.

ஒவ்வொரு மாநில மக்களுக்குரிய சமூகப் பணிகளுக்கான உதவி மானியத் தொகைகளை மத்திய அரசு, தரவேண்டும் என ஐந்தாம் ஆணைக் குழு பரிந்துரை செய்திருந்தாலும் கூட, சமூகப் பணிகளைப் பொறுத்தவரை எல்லா மாநிலங்களிலும் ஒரே சீரான முன்னேற்றம் ஏற்படவில்லை. மாநிலத்திற்கு மாநிலம் உள்ள ஏற்றத் தாழ்வு நீக்கப்படவில்லை. ஏன்?

நமது அரசமைப்புச் சட்டத்தில், நிதி சார்ந்த ஏற்பாடுகள் குளறுபடியாகச் செய்து வைக்கப்பட்டுள்ளன. பொருளாதாரத் துறையில், முன்னேற்றம் கண்ட மாநிலங்களும் பின் தங்கிய மாநிலங்களும், நிதிக்காக மத்திய அரசின் அருள் நோக்கிற்கு எப்போதும் ஏங்கித் தவிக்கின்றன. மாநில மக்களின் தேவைகளுக்கு ஏற்ற முறையில் எந்த மாநிலமும் நிதித் துறையில் சுதந்திரமாக இயங்க முடிவதில்லை. ஆக நமது அரசமைப்புச் சட்டத்தில் செய்யப்பட்ட நிதி ஏற்பாடுகள், மாநிலங்களின் சுயாட்சியைக் கேலிக்கூத்தாக ஆக்கி விட்டது.

## VII

## நிதி ஆணைக் குழுவும் திட்டக் குழுவும்
## (FINANCE COMMISSION AND PLANNING COMMISSION)

மாநில வருவாய்களின் மிக முக்கியக் கூறுகளான ''வருமான வரி'' மற்றும் ''கலால் வரி'' பங்குத் தொகை, உதவி மானியத் தொகை ஆகியவைகளை நிதி ஆணைக் குழு நிர்ணயப்படுத்தி, பரிந்துரைகளைச் செய்வதைப்பற்றி நாம் விரிவாகப் பார்த்தோம்.

மாநிலங்களின் நிதிப் பற்றுக்குறையைச் சரிக்கட்டுவதற்காக உரிய கொள்கை வகுக்கும் நிதி ஆணைக் குழுவில் பல குறைபாடுகளுண்டு. எனவே, நிதி ஆணைக் குழுவால், மாநிலங்களுக்கு முழு நிதிச் சுதந்திரத்தையும் கொடுக்க முடிவதில்லை.

மாநில சுயாட்சி, நிதித் துறையால் பாதிக்கப்படுவதற்கு, நிதி ஆணைக் குழுவின் குறைபாடுகளும் காரணங்களாகின்றன. மேலும், மத்திய அரசின் நேரடி ஆதிக்கத்திலுள்ள 'திட்டக் குழு' (Planning Commission) அரசியலமைப்புச் சட்டத்தால் உருவாக்கப்பட்ட நிதி ஆணைக் குழுவின் நோக்கத்தையும் மாநில நிதி உரிமையையும், முற்றும் மறைத்து விட்டது. சென்ற 24 ஆண்டுகளில், மத்திய அரசின் ''திட்டக் குழு'' அரசியல் சட்ட அமைப்புக்களையே மாற்றி அமைத்து விட்டது. நிதி ஆணைக் குழுவின் உயர்வும் கொள்கை அடிப்படையும் மாநில நிதித் துறையில் நிதி ஆணைக் குழு செய்யக்கூடிய பரிந்துரைகளும், திட்டக் குழுவால் பின்னணிக்குத் தள்ளப்பட்டு விட்டன. அதனால், மாநில அரசுகள் முழுக்க முழுக்க மத்திய அரசிற்கு, நிதித் துறையில் அடிமைகளாய் விட்டன. மாநிலங்களின் அவல நிலை பற்றி இங்கு பார்ப்போம்.

## நிதி ஆணைக் குழுவின் குறைபாடுகள்

நிதி ஆணைக் குழு அளிக்கும் பரிந்துரைகள், நீதிமன்றத் தீர்ப்பைப் போன்றவை யல்ல. மத்திய அரசு, நிதி ஆணைக் குழுவில் பரிந்துரைகளைப் பொதுவாக ஏற்றுக் கொள்ளும் மரபைப் பெற்றிருந்தாலும் கூட அதன் பரிந்துரைகள் முழுவதையும் ஏற்று அமுல்படுத்த வேண்டிய கட்டாய மில்லை.

நிதி ஆணைக் குழுவின் பரிந்துரைகளை அமுல் படுத்துவதற்காக நாடாளு மன்றம் தனிச் சட்டத்தை நிறைவேற்ற வேண்டும்; நாடாளு மன்றத்தின் சட்டமில்லாமல், நிதி ஆணைக் குழுவின் பரிந்துரைகளைச் செயல்படுத்த முடியாது.

மத்திய அரசிற்கும் மாநிலங்களுக்கும் இடையேயுள்ள (நிதித் துறை பற்றிய)எல்லா உறவுகளையும் நிதி ஆணைக்குழு முழுமையாக ஆய்வு செய்வதில்லை. எனவே, மாநிலங்களின் நிதித்தேவைகள் முழுவதும், நிதி ஆணைக்குழுவின் பரிந்துரைகளுக்குள் இடம் பெற முடிவதில்லை. பாதிக் கிணறு தாண்டிய கதைதான்.

நமது அரசமைப்புச் சட்டம், மாநிலங்களின் வரியின வருவாய்களை யெல்லாம் நிதி ஆணைக்குழுவின் ஆய்வெல்லைக் கப்பால் நிறுத்தி வைத்து விடுகிறது. என்வே, மத்திய மாநில அரசுகளுக்கிடையே உள்ள நிதி மூலங்களைப் பற்றியும் நிதி வசதிகளைப் பற்றியு முள்ள அடிப்படைக் கொள்கைகளை நிதி ஆணைக் குழு ஆய்வு செய்து பரிந்துரைக்க முடிவதில்லை.

சான்றாக மத்திய அரசின் வரியினப் பங்கீட்டு முறையையும் அவற்றைப் பங்கிட்டுத் தரக்கூடிய கொள்கைகளையும் அரசமைப்புச் சட்டத்திலேயே உருவாக்கிவிட வேண்டு மென்று நான்காம் நிதி ஆணைக்குழுத் தலைவர் திரு. இராசமன்னர் அவர்கள் பரிந்துரைத்தார். ஆனால், நிதி ஆணைக்குழுவின் பணி அதிகாரங்களுக்கு அது அப்பாற்பட்டதெனக் கூறி, மத்திய அரசு அப் பரிந்துரையை ஏற்க மறுத்து விட்டது.

மத்திய அரசால் கொடுக்கப்படும் 'விருப்ப மானியங்களும்', ''கடன்களும்'', மாநில நிதித்துறையில் மிகப் பெரும் பங்கை வகித்து வருகின்றன. ஆனால் மத்திய அரசால் மாநிலங்களுக் களிக்கப்படும் அவ்வகை விருப்பு மானியங்களைப் பற்றியும் கடன்களைப் பற்றியும் நிதி ஆணைக்குழு பரிந்துரைக்க முடியாது.

இவ்வகைக் கட்டுப்பாட்டு எல்லைக்குள் தான் நிதி ஆணைக் குழுக்கள் பணியாற்ற வேண்டியுள்ளது. ஐந்தாண்டிற் கொரு முறை எந்தெந்த உதவி மானியங்களை, எவ்வளவு வரிப் பங்குத் தொகையை, நிதி ஆணைக்குழு தமக்கு சாதகமாகப் பரிந்துரைக் கின்றது என மாநிலங்கள் எதிர்பார்த்து ஏங்கிக் கொண்டிருக் கும். இதுவரை நியமிக்கப்பட்ட நிதி ஆணைக்குழுக்களும், பொதுவாக மாநில அரசுகளுக்குச் சாதகமான பரிந்துரை களையே செய்து வந்துள்ளன.

ஆனால், நிதி ஆணைக்குழுவின் செயல்படும் எல்லை, மிகச் சுருங்கியதாக உள்ளதால் மாநில சுயாட்சி பறி போகாத அளவிற்குத் தேவையான சில முக்கியமான நிதி வசதிகளைப் பற்றி நிதி ஆணைக்குழுக்களால் பரிந்துரைக்க இயலுவதில்லை. அதனால், அதன் பரிந்துரைகளும், மத்திய அரசால் மறைமுகமாகக் கட்டுப் படுத்தப்பட்டதாகவே உள்ளன.

இரண்டாம் மூன்றும் நான்காம் நிதி ஆணைக்குழுக்கள் தந்த பல முக்கியமான பரிந்துரைகளை மத்திய அரசு ஏற்காமல் ஒதுக்கித் தள்ளிவிட்டது. சர். ஐவர் ஜென்னிங்ஸ் அவர்கள் நிதி ஆணைக் குழுக்களினால் செய்யப்பட்ட பரிந்துரைகளைப் பற்றிக் கருத்து அறிவிக்கும் போது,

> “ நிதி ஆணைக்குழு, புதுக் கருத்துக்களை முன் மொழிகின்றது. ஆனால், மக்கள் வாக்குகளை நம்பிப் பிழைக்கின்ற மத்திய அரசியல்வாதிகள் அவைகளை'ஒழித்துக்கட்டி விடுகின்றனர்.”

என்று கூறுகிறார்.

எனவே, நிதி ஆணைக் குழுவின் பரிந்துரைகள் வெறும் ஆலோசனை களைப் போலவே அமைகின்றன. மத்திய அரசு, நிதி ஆணைக் குழுவின் பல பரிந்துரைகளை ஏற்றுக் கொள்வதற்கு விரும்பாத போது அவைகளைத் தள்ளுபடி செய்துவிடலாம். அப்படிச் செய்யும்போது, மத்திய அரசை யாரும் கேள்வி கேட்க முடியாது. எனவே, ‘‘சர். ஐவர் ஜென்னிங்ஸ்’’ அவர்கள் கூறும் மத்திய அரசின் போக்கால், மாநிலங்கள் நிதி நிலையில் பாதிக் கப்படக் கூடிய சூழ்நிலை எப்போதுமே இருந்து வருகிறது.

## திட்டக் குழு

திட்டக் குழு பற்றியும் திட்டமிடுதல் பற்றியும் அதனுல் மாநில சுயாட்சி எவ்வகையில் நசுக்கப்படுகிறது, என்பதைப் பற்றியும் இந்நூலின் நான்காம் பகுதியில் தெளிவாக விவாதிக் கப்பட்டுள்ளது. எனவே, நிதி ஆணைக் குழுவுடன் ஒப்புமை செய்யக்கூடிய அளவிற்குத் தேவையான, திட்டக் குழுவின் தன்மை பற்றி மட்டும் இங்கு சுருங்கக் குறிப்பிடப்படுகிறது.

நமது அரசமைப்புச் சட்டத்தில் பொதுப் பட்டியலின் 20–ஆம் பதிவு—''பொருளாதாரச் சமூகத் திட்டங்களை அமைத்தல்'' என்று கூறுகிறது. இந்த அதிகாரம் பொதுப் பட்டியலில் இருப்பதால் மாநிலங்களும் திட்டமிடலாம். ஆனல், அதற்குரியதோர் அடிப்படையான சட்டம் இயற்றப்படல் வேண்டும். மத்திய அரசு இந்த அதிகாரத்தைப் பயன்படுத்திக் கொண்டு ஐந்தாண்டுத் திட்டங்களை வகுக்கக் கூடிய ''திட்டக் குழுவைப்'' படைத்து விட்டதால், பொதுப் பட்டியலின் விதிப்படி மத்திய அரசிற்குக் கட்டுப்பட்டே (தேவையானல்) மாநிலங்களும் திட்டமிடலாம்.

இப்போதிருக்கும் திட்டக் குழு, சட்ட அடிப்படையில் உரு வானதா? இல்லை. நாடு விடுதலை யடைந்து 27 ஆண்டுகளாகி யும் திட்டக் குழுவை உருவாக்குவதற்கான எந்த ஒரு சட்டத் தையும், நாடாளுமன்றம் நிறைவேற்ற வில்லை. நமது திட்டக் குழு நிதி ஆணைக் குழுவைப் போல், அரசமைப்புச் சட்டத்தால் உருவாக்கப்பட்ட தல்ல. சுருங்கக்கூறின், இப்போதிருக்கும் ''திட்டக் குழு'' நமது அரசமைப்பாலும் படைக்கப்படவில்லை; நாடாளு மன்றச் சட்டத்தாலும் உருவாக்கப்பட வில்லை. பின்னர் அதனை யார்தான் உருவாக்கினர்கள்?

அரசமைப்புச் சட்டத்தில் உருவாகாத—நாடாளு மன்றச் சட்டத்தால் உருவாக்கப்படாத—'திட்டக் குழு' என்ற ஓர் அமைப்பைப் படைத்துவிடக் கூடிய சர்வ சக்தியும், தனக்கே உள்ளது எனக் கருதி அந்தத் திட்டக் குழுவை மத்திய அமைச் சரவையே படைத்து வைத்துள்ளன. இப்படிச் சட்டத்திற்குப் புறம் பான முறையில் திட்டக் குழுவை மத்திய அரசு படைத்த தோடல்லாமல், சென்ற 24 ஆண்டுகளாக அதனை முறையின்றி நடாத்தியும் வருகிறது.

15-3-1950-ஆம் தேதியிட்ட ''தீர்மான எண் 1-பி (சி) 50'' என்ற ஒரு மத்திய அமைச்சரவைத் தீர்மானத்தின் மூலமாக, அகில இந்தியாவையே ஆட்டிப்படைக்கக் கூடியதும் மாநிலங்களையெல் லாம் அடிமைப்படுத்தக் கூடியதுமான நமது 'திட்டக் குழு', பண்டித நேரு அவர்களின் ஆசியோடு சட்டத்திற்கு மாறாக உருவாயிற்று.

## மாநிலங்கள் தரும் இருவகைப் புள்ளி விபரங்கள் :-

நாம் ஏற்கனவே பார்த்தபடி, மாநிலங்களுக்களிக்கப்படும் சில மத்திய வரிகளின் பங்குத் தொகைகளைப் பற்றியும் உதவி மானியத் தொகைகளைப் பற்றியும், உரிய கோட்பாடுகளை வகுப்பதற்கு மட்டும் நிதி ஆணைக்குழு பயன்படுகிறது. ஆனால், மத்திய அரசு தான் விரும்பும் போது தன்னிச்சைப்படி, தனக்கு வேண்டிய பல மாநிலங்களுக்கு, விருப்பு மானியங்களைக் கொடுப்பதற்குரிய அறிவுரையினைத் திட்டக் குழுவே மத்திய அரசிற்கு வழங்குகின்றது.

மையமாக்கப்பட்ட திட்டமிடுதலின் விளைவாக, நிதிக்குழு வின் பணிகளும் திட்டக் குழுவின் பணிகளும் ஒன்றன் மேல் ஒன்று பிரிக்க முடியாமல் படிந்து விட்டன. நீங்காத பற்றுக் குறையினைப் பெற்றிருக்கக் கூடிய மாநிலங்கள், ஏதோ ஒரு வகையில் அதிகத் தொகைகளை மத்திய அரசிலிருந்து பெறு வதற்காக, இந்த இரண்டு குழுக்களையும் அதிக பட்ச அளவிற்குப் பயன் படுத்திக் கொள்ளத் துணிகின்றன.

நிதியாணைக்குழு, மாநில வருவாய்களின் பற்றுக் குறையை, மத்திய அரசின் வரிப்பங்கின் மூலமாகவும், உதவி மானியத்தின் மூலமாகவும், ஈடுகட்டுவதற்குப் பரிந்துரை செய்வதால் அவ் வகையில் அதிகத் தொகையினைப் பெற வேண்டும் என்ற நோக்கத்துடன், மாநிலங்கள் தங்களது நிதி வருவாய் மூலங் களை, நிதியாணைக் குழுவின் கருணைக் கண்ணோட்டத்தைப் பெறுவதற்காகக் குறைத்துக் காண்பிக்கின்றன.

ஆனால், திட்டக்குழு, மாநிலங்களுக்கு விருப்பு மானியங் களை வழங்கும்போது, மாநிலங்களின் நிதி வருவாய் மூலங்கள், அதிக வருவாயினை ஈட்டித் தருகின்றதா, என்பதனைக் கணக்

கெடுப்பதால் திட்டக்குழுவின் பரிந்துரை மூலமாகவும் மானியங்களை அதிகம் பெறுவதற்காக, அதே மாநிலங்கள் தங்களது நிதி வருவாய் மூலங்களை அதிகமாகத் திட்டக் குழுவிற்குக் காண்பிக்கின்றன.

கொடிய வறுமையில் மாநிலங்கள் உழலும் காரணத்தினுல், தனக்குள்ள ஒரே வகையான வருமான மூலங்களைப் பற்றி நிதி ஆணைக்குழுவிற்குக் குறைவு படுத்தியும், திட்டக் குழுவிற்கு அதிகப்படுத்தியும் காட்டுகின்ற மாநிலங்களின் அவல நிலையைப் பற்றி சிந்தித்துக் கொள்ளுங்கள். இரு வேறுபட்ட புள்ளி விவரங்கள் மாநிலங்களால் உருவாக்கப்படுகின்றன.

## வினைவுகள்

ஐந்தாண்டுத் திட்டகாலத்தின், ஒவ்வோர் ஆண்டிலும், மாநிலத் திட்டங்களுக்காக மாநிலங்களால் பங்காகக் கொடுக்கப்படும் தொகைகளையும் மாநில வருவாய்த் துறையையும் திட்டக்குழு பரிசீலனை செய்வதால், ஒரு மாநிலத்தின் உண்மையான நிதி மூலங்களை, திட்டக்குழுவால் சரியாகக் கணக்கெடுக்க முடிகிறது. மேலும், திட்டக்குழு ஒரு நிரந்தரமான அமைப்பாக இருப்பதால், மாநிலக் கணக்குகளை நேரடியாகக் கணிக்க அதற்குப் பல வழிகள் கிடைக்கின்றன.

ஆனுல் நிதி ஆணைக் குழு, 5 ஆண்டுகட் கொருமுறை நியமனம் செய்யப்பட்டு, அது தன் அறிக்கையை வழங்கியவுடன் கலைக்கப்பட்டு விடுகிறது. எனவே, மாநிலங்களின் வருவாய்களையும் செலவினங்களையும் பற்றுக் குறையையும் நிதி ஆணைக் குழு சரியாகக் கணக்கெடுப்பதற்குரிய வழிகளையும் வாய்ப்புக்களையும் பெறுவதில்லை.

3-ஆம் நிதி ஆணைக்குழுவால் மாநிலங்களின் பொருளாதாரத் திறனையும் நிதி நிர்வாகத் திறனையும் சரியாகக் கணிக்க முடியவில்லை. ஏனெனில் நம்பத்தக்க புள்ளி விபரங்கள் போதுமான அளவில் அந்த நிதிக் குழுவிற்குக் கொடுக்கப்படவில்லை. எனவே, வேறு வழியின்றி ஒவ்வொரு மாநிலத்தின் வருடாந்திர நிதி நிலை அறிக்கையை மட்டும் அடிப்படையாக வைத்தே, அதன் சில கொள்கைகளை 3-ஆம் நிதி ஆணைக் குழு வகுத்துக் கொள்ள வேண்டியதாயிற்று. இந்தக் குறையினைப் போக்குவதற்காக மாநில நிதிமூலங்களையும் வருவாயினையும், செலவினங்களையும்

பற்றுக்குறைத் தேவைகளையும் சரியான முறையில் கணக்கெடுப்பதற்கு ஒரு ''தனிக் குழுவை'' (Special Committee) நியமனம் செய்ய வேண்டுமென்று 3-ஆம் நிதி ஆணைக் குழு வலியுறுத்திற்று.

மாநில நிதி நலன்களுக்காகவே நிதி ஆணைக்குழுக்கள் இயங்குவதால் 3-ஆம் நிதி ஆணைக்குழுவின் மேற் சொன்ன முக்கியமான பரிந்துரைக்கு மத்திய அரசு செவி சாய்க்க வில்லை.

எனவே, மாநில நிதிப் பற்றுக்குறைப் பிரச்சனையைச் சரியானபடி எந்த நிதி ஆணைக் குழுவினாலும் தீர்க்க முடிவதில்லை.

## திட்டக் குழு—நிதி ஆணைக் குழுவை ஆட்கொள்கிறது

மத்தியத் திட்டக் குழுவினால் நிதி ஆணைக்குழுவின் பல பணிகள் மறைமுகமாகக் கையகப்படுத்திக் கொள்ளப்படுகின்றன.

ஓர் ஐந்தாண்டுத் திட்டம் தொடங்குவதற்கு முன்பே மாநிலங்களும் திட்டக் குழுவும் அதைப்பற்றி முழுமையாக விவாதித்துவிடுவதால், மாநிலத்தின் ஒவ்வொரு வருட நிதிநிலை அறிக்கையின் கருப்பொருளும் ஒவ்வோர் ஆண்டின் திட்டத்திற்கேற்ற வகையில் (ஐந்தாண்டுத் திட்டத்திற் கேற்ற வகையில்) முன்கூட்டியே உருவாக்கப்பட்டு விடுகின்றன. இதனால், புது வகையான ஒரு செலவினத்தைப்புகுத்துவதற்கோ அல்லது புதுவகை வருவாய்த் திட்டத்தைச் செயல்படுத்துவதற்கோ, பின்னர் மாநிலங்களால் முடிவதில்லை. ஆகவே, புதியதொரு வரவைப் பற்றியும் புதியதொரு செலவைப் பற்றியும் மாநில அரசுகள் சேர்க்கவோ, குறைக்கவோ முடியாமல், அதன் நிதி நிலையறிக்கை வரையறைப்படுத்தப் படுகின்றது. எனவே மத்திய அரசிடமிருந்து மாநிலத்திற்கு வர வேண்டிய சில வரியினப் பங்குத் தொகையையும், உதவி மானியத்தையும், நிதி ஆணைக் குழுவிடமும் திட்டச் செலவுகளுக்காக மத்திய அரசிடமிருந்து பெறும் விருப்ப மானியங்களை, இன்னொரு குழுவான திட்டக் குழுவிடமும் ஒப்படைக்க வேண்டிய அவசியமில்லாமல் போய்விடுகிறது.

உண்மையில், ஒரு மாநிலத்தின் வரவு செலவுத் திட்டம், திட்டச் செலவுகளால் ஏறத்தாழ முன்னரே நிர்ணயிக்கப்பட்டு விடுகிறது. எனவே, குறைந்த நிதி ஒதுக்கீடுகளை அளிக்கும் நிதி ஆணைக் குழுவினது பணியானது திட்டக் குழுவின் பணியோடு சங்கமமாய் விடுகிறது.

இவ்வகையில் அரசமைப்புச் சட்டத்தால் உருவாக்கப்பட்ட சட்டப்பூர்வமான நிதி ஆணைக் குழுவானது, அரசமைப்புச் சட்டத்தாலோ அல்லது வேறு எந்தவொரு சட்டத்தாலோ முறையாக உருவாக்கப்படாத மத்திய அரசின் திட்டக் குழுவிற்கு, கட்டுப்பட்டு விடுகிறது.

1950-ஆம் ஆண்டு முதல் 1970-ஆம் ஆண்டு வரை மத்திய அரசு சட்டப்பூர்வமான நிதியாணைக் குழுக்களின் மூலமாக மாநிலங்களுக்கு அளித்த தொகைகளையும் சட்ட முகாந்திரமில்லாத திட்டக் குழு மூலமாக மாநிலங்களுக்குக் கொடுத்த தொகைகளையும் 675-ஆம் பக்கத்திலுள்ள 9-வது பட்டியலில் தொகுத்துத் தந்துள்ளோம். நிதி ஆணைக் குழு மூலமாகத் தரப்பட்ட தொகைகளைக் காட்டிலும் ஏறத்தாழ 2½ மடங்குத் தொகைகளைச் சட்ட அடிப்படையின்றி மத்திய அரசு, தான் விரும்பும் வகைகளிலெல்லாம் மாநிலங்கட்குத் திட்டக் குழு மூலமாகத் தந்து வந்திருப்பதை அப்பட்டியலில் நாம் காணலாம். குறிப்பாக ஐந்தாண்டுத் திட்டங்கள் வளர வளர நிதித் துறைப் பங்கீட்டு ஏற்பாடுகள் அரசமைப்புச் சட்ட விதிகளின்படி, நடைபெறாமல் மத்திய அரசின் தன்னிச்சைப் படி அதன் ஏவல் நிறுவனமான திட்டக் குழுவின் மூலமாக நடைபெற்று வருவதையும் அப்பட்டியல் விளக்குகின்றது. ஆக, மாநிலங்களின் நிதிப் பாதுகாவலனான நிதியாணைக் குழு மத்திய அரசின் ஊழியனான திட்டக் குழுவிற்கு அடிமைப்பட்டு விடுகிறது; அதன் வழி மாநில நிதி பற்றிய அரசமைப்புச் சட்ட விதிகளும் மத்திய அரசால் நடைமுறையில் மறைக்கப் பட்டு விடுகின்றன.

## மத்திய அரசின் ஊழியனும் மாநில அரசின் காவலனும்

மத்திய அரசிடமிருந்து மாநிலங்களுக்கு அளிக்கப்படும் எல்லா நிதி ஒதுக்கீட்டுத் தொகைகளைப் பற்றியும், நிதி ஆணைக் குழுவே பரிந்துரைகளைச் செய்ய வேண்டுமென, மூன்றும் நிதி ஆணைக் குழு வலியுறுத்திற்று. உரிய காலம் வரும்போது திட்டக் குழுவையே சட்டப்பூர்வமான நிதி ஆணைக் குழுவோடு இணைத்துவிட வேண்டுமெனவும், மூன்றும் நிதி ஆணைக் குழு பரிந்துரை செய்தது.

## ஒன்பதாம் பட்டியல்

**மத்திய அரசு—நிதி ஆணைக் குழு மூலமாகவும், திட்டக் குழு மூலமாகவும், மாநில அரசுகளுக்குக் கொடுத்த நிதிப் பங்கீடுகளும் நிதி மானியங்களும் கடன்களும்.**

(ரூபாய்கள் கோடிகளில்)

| ஐந்தாண்டுத் திட்டங்கள் | மத்திய அரசு நிதி ஆணைக் குழு மூலம் கொடுத்த தொகைகள் | | | | மத்திய அரசு திட்டக்குழு மூலம்-தன்னிச்சையாகக் கொடுத்த தொகைகள் | | | | மாநிலங்கள் பெற்ற மொத்த தொகைகள் (இரண்டிலும் சேர்த்து) |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஆண்டுகள் | மத்திய வரிகளில் பங்கு | மானியம் | மொத்தம் | சதவீதம் | மானியம் | கடன்கள் | மொத்தம் | சதவீதம் | |
| 1950-1951-இல் | 48 | 16 | 64 | 47 % | 11 | 61 | 72 | 53 % | 136 |
| முதல் திட்டம் 1951-1956 | 353 | 103 | 456 | 35 % | 112 | 720 | 832 | 65 % | 1288 |
| 2-ஆம் திட்டம் 1956-61 | 710 | 207 | 917 | 33 % | 493 | 1375 | 1868 | 67 % | 2785 |
| 3-ஆம் திட்டம் 1961-66 | 1196 | 330 | 1526 | 27 % | 973 | 3101 | 4074 | 73 % | 5600 |
| 4-ஆம் திட்டம் 1966-67 | 373 | 153 | 526 | 31 % | 260 | 920 | 1180 | 69 % | 1706 |
| ... ... 1967-68 | 416 | 150 | 566 | 31 % | 329 | 878 | 1207 | 69 % | 1773 |
| ... ... 1968-69 | 491 | 150 | 641 | 34 % | 357 | 895 | 1252 | 66 % | 1893 |
| ... ... 1969-70 | 622 | 150 | 772 | 36 % | 386 | 1036 | 1422 | 64 % | 2194 |

**Source:** Finance of State Govts. 1970 — 71. Reserve Bank of India, August-1970.
First and Fifth Finance Commissions' Reports.

ஆனால் நிதி ஆணைக்குழுவோடு திட்டக்குழுவை இணைக்கும் இத்திட்டம், மத்திய அரசின் கையிலுள்ள ''விருப்ப மானியங்கள்'' என்ற நஞ்சு கலந்த சாட்டையினைப் பிடுங்கிவிடும். பின்னர் விருப்ப மானிய மென்ற பெயரால் அது மாநிலங்களை ஆட்டிப் படைக்க முடியாமல் போய்விடும். எனவே, மத்திய அரசு மூன்றும் நிதி ஆணைக்குழுவின் அப்பரிந்துரையைக் கால்தூசுக்குச் சமமாகக் கூட மதிக்காமல் தூக்கி எறிந்துவிட்டது.

அதுமட்டுமல்ல; பின்னர் உருவாக்கப்பட்ட நான்காம் நிதி ஆணைக்குழு செய்யவேண்டிய பணிகளைப் பற்றி, கொடுக்கப்பட்ட ஆணைக் குறிப்பில், திட்டமிடுதல் சார்ந்த வரவு செலவினங்களைப் பற்றி எவ்வகைக் கருத்தையும் நான்காம் நிதி ஆணைக்குழு கூறக் கூடாதென்றும் வரையறை செய்துவிட்டது.

மத்திய வரிப் பங்கீடுகளைப் பற்றியும், உதவி மானியத் தொகைகளைப் பற்றியும் மட்டுமே நான்காம் நிதி ஆணைக்குழு பரிந்துரைக்க வேண்டு மென்றும் நான்காம் நிதி ஆணைக்குழு விற்குக் குறிப்பு கொடுக்கப்பட்டது. நான்காம் நிதி ஆணைக் குழுவும் மத்திய அரசின் (குடியரசுத் தலைவரின்) ஆணைக்குக் கட்டுப்பட்டு, தன்னுடைய வேலையை மட்டும் ஒழுங்காகச் செய்து முடித்தது. மத்திய அரசின் போக்கினைப் பற்றியோ, விருப்ப மானியத் தொகையினைப் பற்றியோ, நிதி ஆணைக்குழு வினால் கீழ்நிலைப்படுத்தப் பட்டது பற்றியோ, அதனால் மாநிலங் களின் நிதிச் சுதந்திரம் முழுமையாகப் பறிபோவது பற்றியோ, நான்காம் நிதி ஆணைக்குழு கருத்தேதும் வழங்க வில்லை.

எனவே, கூடியவரையில் மத்திய அரசின் தலையீடில்லாமல் மாநிலங்களுக் களிக்கப்படும் வரிப்பங்குத் தொகையையும், உதவி மானியத் தொகைகளையும், மாநிலங்கள் காப்பாற்றிக் கொள்வதற்கு நிதி ஆணைக்குழு பயன்படுகிறது. ஆகவே மாநிலக் கண்ணோட்டத்தில் நிதி ஆணைக்குழு மாநில உரிமைகளின் பாதுகாவலனாகக் காட்சி தருகிறது.

அகில இந்தியக் கொள்கைகள் என்ற பெயரால், ''விருப்ப மானியங்கள்'' மூலமாகவும் ஐந்தாண்டுத் திட்டத்தின் மூல மாகவும் மாநிலங்களை நிரந்தரமாக அடிமைப்படுத்தி வைத்துக் கொள்வதற்கு, ''திட்டக்குழு'' பயன்படுவதால், மத்திய அரசுக் கண்ணோட்டத்தில், ''திட்டக்குழு'' மத்திய அரசின் நாணயமான ஊழியனாகக் காட்சியளிக்கிறது.

மாநிலங்களுக்காக நிதி ஆணைக்குழுவும், மத்திய அரசிற்காகத் திட்டக்குழுவும், இணையாக இயங்கி வருகின்றன.

இருவகைக் குழுக்கள் இயங்குகின்ற இந்த விநோதமான ஏற்பாடும்கூட ''தீமையிலும் நன்மை'' என்ற பழமொழிப்படி ஓரளவிற்கேனும் மாநிலங்களுக்கு நன்மை பயக்கிறது. ஒருக்கால், நிதி ஆணைக்குழுவைத் திட்டக்குழுவோடு இணைத்துவிட்டால் அது மாநில சுயாட்சியின் முடிவுக்கு முதலாக அமைந்து விடும். அப்போது மாநில சுயாட்சியின் நிதித்துறையின் கழுத்திலிடப் பட்ட சுருக்கு, திட்டக்குழு என்ற கொலையாளியால் முழுமை யாகவே இறுக்கப்பட்டு விடும்; அப்போது ''சர்வமும் மத்திய அரசே'' என்ற நிலைமையும் தவிர்க்க முடியாததாகி விடும்.

மாநிலங்களின் நிதி பற்றிய அடிமைத்தனத்தை நிதி ஆணைக்குழுவின் மூலமாக ஓரளவிற்கு நீக்கக் கருதிய தமிழக அரசு, அந்த நிதி ஆணைக்குழு எத்தகையதாக இருக்க வேண்டு மென்ற ஆலோசனையைக் கூறும்போது,

> ''அரசியலமைப்பில் உத்தேசிக்கப்பட்டுள்ள நிதி ஆணைக் குழு; மாநிலங்களின் நிதி வாயில்களையும் தேவைகளையும் பரிசீலிக்கிறது. ஆனால், அது மைய அரசு நிதி நிலைமை யைப் பொறுத்து இதைப் போன்ற அலுவலை நிறை வேற்றுவதில்லை. எனவே, மைய அரசின் நிதி வாயில் களையும் தேவைகளையும்கூட அவ்வப்போது மதிப்பிட வேண்டு மென்பது அவசியம். இதற்கிணங்க, மாநிலங் களின் நிதி வாயில்களையும் தேவைகளையும்கூட ஆய்வு செய்வதற்கான அதிகாரம் நிதி ஆணைக்குழுவிற்கு வழங் கிட வேண்டும் அப்போது மைய அரசு அதன் பொறுப்புக் களை நிறைவேற்றுவதற்குத் தேவையான தொகைகளை நிதி ஆணைக் குழு பரிந்துரை செய்யும். அவ்வாறு பரிந் துரை செய்யப்பட்ட தொகைகள், மைய அரசு விதிக்கும் வரிகளிலிருந்து ஒதுக்கப்பட வேண்டும். நிதி ஆணைக்குழு அதற்கு உரித்தான செயலகத்துடன் நிலையான அமைப் பாக விளங்க வேண்டும். அனைத்து மாநிலக் குழுவைக் (Inter State Council) கலந்தாலோசித்துக் கொண்டு நிதி ஆணைக்குழுவின் உறுப்பினர்கள் நியமிக்கப்பட

வேண்டும். நிதி ஆணைக்குழுவின் பரிந்துரைகள், மைய அரசு, மாநிலங்கள் ஆகிய இரு தரப்பினர்களையும் கட்டுப் படுத்துமென்று அரசியலமைப்பில் வகை செய்யப்பட வேண்டும்.''[3]

## VIII

## மாநிலங்களின் வேதனையும் விரக்தியும்

1. பெருந்தொகைகளை ஈட்டித் தரும், சிறந்த வருவாயினங்களை மத்திய அரசு பெற்றுக் கொண்டது; சிறு தொகைகளையே கொடுக்கக் கூடிய-நெகிழ்வுத் தன்மையற்ற-உள் நாட்டு வரியினங்களை மட்டும் மாநிலங்கள் பெற்றுள்ளன. எனவே, அரசமைப்புச் சட்டத்தின் நிதி பற்றிய பாகுபாட்டினுல் மாநிலங்கள் நிரந்தரமான நிதிப் பற்ருக்குறையைப் பெற்று விட்டன.

2. மாநில மக்களுக்குரிய சமுதாய நலப் பணிகளை முறையாக நிறைவேற்றுவதற்கு மாநிலங்களுக்கே பொறுப்பளிக்கப் பட்டு விட்டது. ஆனல் அதற்குத் தேவையான ஒரு பகுதி நிதி வருவாயும் கூட மாநில வரியினங்கள் பெற்றுத் தருவதில்லை. எனவே, என்றென்றும் மத்திய அரசின் காலடியைச் சுற்றி வந்து, பிச்சை கேட்டுப் பெற்றுத் தன்னுடைய அரசுப் பணிகளை ஆற்றக் கூடிய மீளா மிடிமையை மாநிலங்கள் பெற்று விட்டன.

3. போதாக் குறைக்கு, 5-ஆண்டுத் திட்டங்களின் ஒரு பகுதிச் செலவினங்களுக்காக, மாநிலங்கள் புதிய வருவாயினைத் தேட வேண்டும்; அதற்காக மத்திய அரசின் விருப்ப மானியத்தை வாய் பிளந்து எதிர்நோக்கிக் காத்திருக்க வேண்டும்; அல்லது மாநிலங்களால் கட்ட முடியாத கடனை, மத்திய அரசிடமிருந்து முட்டி மோதிப் பெற வேண்டும்.

4. மத்திய நிதி உதவிக்காக, மாநிலங்கள் தன்மானத்தை இழந்து சுயாட்சி உரிமையை அடகு வைத்து-நிதி ஆணைக் குழுவின் பரிந்துரைக்காக-காத்து நிற்க வேண்டும். அதில்

---

*3 மாநில சுயாட்சி பற்றியும் இராசமன்னர் குழுவின் அறிக்கை பற்றியும் தமிழ்நாடு அரசின் கருத்துரைகள், பக்கம் 9.*

கிடைக்கும் வரிப் பங்குத் தொகையினையும், உதவி மானியங்களையும் பொய் சொல்லிப் பெற வேண்டும். அதைப் பெற்ற பின், வாங்கிய கடனுக்கு வட்டியாகவோ, திட்டச் செலவினுக்குச் செலுத்த வேண்டிய பங்காகவோ, மத்திய அரசிற்குக் கொடுத்துவிட்டு, மீண்டும் மத்திய அரசின் கடைக்கண் பார்வைக்காகத் தனது உயிர் மூச்சான சுயாட்சி உரிமையினை இழந்து நிற்க வேண்டும். இப்படி நச்சு வட்டத்தில் உழன்றுழன்று அதிலிருந்து மீளா நிலையினை மாநிலங்கள் வேண்டி விரும்பி ஏற்றுக் கொள்கின்றன.

5. பல்லாண்டு காலமாக இந்த மிடிமை நிலை நீடித்து விட்டதால், சுயாட்சி உரிமை முழுவதும் எப்படிப் பறி போயிற்றென்றே மாநிலங்களுக்குத் தெரியாமல் போய், மாநில அரசென்ற ஒரு தனி அமைப்பே இந்திய ஆட்சி இயலில் இல்லாத ஒரு நிலை உருவாகி விட்டதால், மத்திய அரசின் ஒற்றை ஆட்சி முறையே பெருமிதமாக நடைபோடுகிறது.

6. தன்னிலை தாழ்ந்து தன்னாட்சியை இழந்த மாநிலங்கள், நிதித்துறையில் சுயமாகச் செயல்பட முடியாத நிலையால் உந்தப்பட்டு, "பொறுப்பின்றி"யும் "திறனின்றியும்" "செயலற்றதாகவும்" மாறி விட்டன.

7. அரசமைப்புச் சட்டத்தால் "மாநிலங்கள்" என்று அழைக்கப்படும் இந்திய நிலப் பகுதிகள் மத்திய ஐந்தாண்டுத் திட்டங்களால், தன்மையிலும் நிலையிலும் சாதாரண நகராட்சிகளாக ஆக்கப்பட்டு, அந்நிலையை மாற்றியமைத்துக் கொள்ள முடியாமல் தவித்து, வெந்து சாகின்றன.

8. உதவி மானியத் தொகையையும் மத்திய அரசு வரியினப் பங்குகளையும், உளமாறக் கொடுக்கும் நிதி ஆணைக்குழுவினை அதிகார மற்றதாகவும், ஒரு வலிவற்ற ஆலோசனை நிறுவனமாகவும், மத்திய அரசின் திட்டக்குழு மாற்றியமைத்து விட்டதைத் தெளிவாகப் புரிந்திருந்தும் கூட, அதனை எதிர்க்க வக்கில்லாமல், வழியில்லாமல், மத்திய அரசின் பிச்சைக் காசுகளைப் பெறுவதற்காக மாநிலங்கள் கையறு நிலையில் கலங்கி நிற்கின்றன.

9. 1958–59-ஆம் ஆண்டு முதல் இன்று வரை மத்திய அரசு போடும் பற்றுக் குறை பட்ஜெட்டின் (வரவு செலவுத் திட்ட அறிக்கை) நேரடித் தாக்குதல்கள் யாவும் மாநிலங்

களின் மேல் விழுந்து வந்துள்ளன. திட்டச் செலவுகளுக் காகப் பல்லாயிரம் கோடிக் காகித நோட்டுகளை மத்திய அரசு அச்சடித்து அதன் விளைவாக மாநிலங்களின் பொருளாதாரமே அடியோடு சீர்குலைந்து போயிற்று.

மேலும் மத்திய வரியினங்களின் சதவீதம் உயர உயர மாநிலப் பண்டங்களின் விலையும் உயர்ந்து, மக்கள் கொதிப் பின் நேரடியான விளைவுகளை மாநில அரசுகளே ஏற்றுக் கொள்ள வேண்டியுள்ளது. அது மட்டுமல்ல; பண வீக்கத்தின் காரணமாக, மாநில வரியினங்களின் உண்மை மதிப்பீடும் மேலும் குறைந்து போயிற்று.

10. ஏற்கனவே பற்றுக் குறையைக் கொண்டுள்ள மாநிலங்கள், இருக்கும் வரிகளையே உயர்த்தி, சீர்குலைந்து போன பொரு ளாதாரத்திற்கு ஈடுகட்டுமா? அல்லது மாநில மக்களின் கொதித்த உணர்ச்சிக்குத் தான் தடைபோடுமா?

## அண்ணாவின் கருத்து

### பிச்சைக்கார மாநிலங்கள்

இவைகளை யெல்லாம் ஆய்வு செய்த மாமேதையான பேரறிஞர் அண்ணா அவர்கள், 1967–ஆம் ஆண்டு ஜூன் மாதம் பதினேழாம் நாளில் தமிழகச் சட்டப் பேரவையில் தமிழக அரசின் வரவு செலவுத் திட்டத்தை முன் மொழிந்து உரை யாற்றுகையில்,

"......இந்திய அரசமைப்புச் சட்டம் உருவாக்கப்பட்ட நேரத்தில் யாரும் எதிர்பார்த்திராத பல புதிய போக்கு களும் மாற்றங்களும் தற்போது நிகழ்ந்துள்ளன......இப் புதிய போக்கு பொருளாதாரத் திட்டம் சம்மந்தப்பட்ட தாகும். திட்டத்திற்காக நிதி ஆதாரங்களைத் திரட்டுதல், ஒதுக்கீடு செய்தல், அதைப் பயன் படுத்துதல் சம்பந்த மாக மத்திய அரசு பெற்றுள்ள அதிகாரங்கள் யாவும், மாநிலங்களை மத்திய அரசிடம் உதவிக்காக மன்றாடும் பிச்சைக்காரர்களின் தகுதிக்கு குறைத்து விட்டன...... மாநிலங்கள், தங்களின் விருப்பப்படி நிதி மானியங்களைப் பயன்படுத்தும் முழு உரிமையினைப் பெறவேண்டும். அவ்வகையில் தங்களது வருவாய்களைப் பெருக்க நிதி

வாயில்களை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். மாநிலங்கள் ஒப்புக் கொண்ட அடிப்படையில் திட்டத்தின் (5 ஆண்டு) ஆதாரங்களை ஒதுக்கீடு செய்து, மாநிலங்களின் நிதி வருவாய் மூலங்கள் அதிக அளவிற்கு வலிவாக்கப் பட்டாலன்றி புதிய சமுதாயம் காண வேண்டு மென்ற, மக்களுடைய விருப்பத்தினை மாநில அரசுகள் சமாளிக்க முடியாது; அவற்றின் பொறுப்புக்களையும் நிறைவேற் றிடவும் இயலாது. இவைகளைப் பல மாநில அரசுகளின் முதலமைச்சர்கள் உணர்ந்துள்ளனர்.''

என மாநிலங்களின் வேதனைகளைப் பலரும் உணரும் வகையில் எடுத்தியம்புகிறார்.

திரு. ஏ. கே. சந்தா அவர்களின் கருத்து

மத்திய அரசில் பல பொறுப்புக்களை வகித்தவரும் மூன்றும் நிதி ஆணைக்குழுவின் தலைவராயிருந்தவரும், பொருளாதார அரசமைப்புச் சட்ட வல்லுநருமான திரு. ஏ. கே. சந்தா அவர்கள், தற்போதிருக்கும் மாநில நிதி அவலநிலையை அகற்றுவதற்குரிய வழிவகைகளைக் கூறும்போது,

''மத்திய மாநில அரசுகளின் நிதி மூலங்களும் பணிகளும் ஒன்றோடொன்று பிணைந்து நிற்கும்வரை, மாநிலங்களின் நிர்வாக நிதிப் பொறுப்புக்களை அறிவுறுத்த முடியாது. திட்டக்குழுவின் பங்கேற்பினால் மாநில அதிகாரங்கள் அழிக் கப்பட முடிகிறதென்றால், அரசியல் சட்டவிதிகளுக்குட்பட்டு நிதி மூலங்களைப் பிரிப்பதற்காக ஒரு செயல்படத் தக்க நியாயமான முறையின் நரம் வகுத்துக் கொள்ள முடியாதா? ...வருமான வரியின் 95·/. தொகையை மாநிலங்களுக்கு அளிக்க வேண்டும் என்ற நிரந்தரமான ஏற்பாட்டையும் தேவை யேற்படும் பொழுது மேல் வரிகளை வசூலிக்கும் உரிமையை மட்டும் மத்திய அரசு நிறுத்தி வைத்துக்கொள்ள வேண்டும் என்ற ஏற்பாட்டையும் செய்ய வேண்டும். இந்த ஏற்பாடு, 3–ஆம் வட்ட மேசை மாநாட்டில் நிறுவப்பட்ட ''வல்லுநர் குழு'' (Expert Committee) வருமான வரியை மாநில வரியாக ஆக்க வேண்டுமென வழங்கிய பரிந்துரையைப் போன்றதாகும்.''4

என்கிறார்.

4 Ibid, Opp. Cited Note. 1 Page 256. 257

உதவி மானியங்கள் கொடுக்கப்படுவதைப் பற்றிக் கூறும் போது திரு. ஏ. கே. சந்தா அவர்கள், மேலும் கூறுவதாவது,

''உதவி மானியத் தொகைகளை வழங்கும் முறையினை அடியோடு நிறுத்திவிட்டு, மொத்தக் கலால் வரியில் 40·/. பங்கை மாநிலங்களுக்கு வழங்கிவிட வேண்டும். தேவையான மாநிலங்களுக்குத் தனி மானியங்களாக வழங்குவதற்காக வருமான வரியின் ஒரு பகுதியை மத்திய அரசு தன்னிடம் வைத்துக் கொள்ள வேண்டும்.''

மத்திய-மாநில உறவு பற்றி அவர் கூறும்போது,

''மத்திய மாநிலப் பணிகளையும் நிதி மூலங்களையும் ஒன்றுடன் ஒன்று கலந்து சிறப்பாகச் செயல்படுத்த முடியாத அளவிற்கு மத்திய-மாநில உறவுகள் பழுதடைந்து விட்டன. எனவே அவைகளில் தெளிவான ஒரு பங்கீட்டு முறையைச் செய்வதே சாலச் சிறந்ததாகும்.''5

எனக் கோடிட்டுக் காட்டுகிறார்.

## தக்கதொரு பரிகாரம்

மத்திய மாநில அரசுகளின் நிதி உறவு பற்றிப் பேசும் அரசமைப்புச் சட்டத்தின் 12-ஆம் பகுதியை (Part XII) முழுக்க அழித்தொழித்து விட்டு நிதித் துறையில் மத்திய-மாநில அரசுகளின் புதிய வகை உறவுகளைத் தோற்றுவிக்க வேண்டுமென்று திரு. கே. சந்தானம் போன்ற பல அரசமைப்பு அறிஞர்கள் வலியுறுத்துகின்றனர்.

ஆனால், அதனால் மட்டுமே மாநிலங்களின் வேதனைகள் தீர்ந்துவிடாது. நிதி பற்றி மத்திய-மாநில உறவுகளை, அரசமைப்புச் சட்டத்தில் மாற்றி எழுதப்பட வேண்டுமெனில், அதனைச் செயல்படுத்தும் மாநில அரசியலதிகாரங்களையும், சீர்மைப் படுத்த வேண்டும். மாநில அரசின் அதிகாரங்களைப் புதுப்பிக்க வேண்டுமெனில், மத்திய—மாநில அரசுகளின்

---

5 Ibid. Opp. Cited Note 4

பல்வகை உறவுகளிலும் புதிய சிந்தனைகளின் அடிப்படையில், மாற்றம் செய்யப்பட வேண்டும். அஃதாவது உண்மைக் கூட்டாட்சி நாட்டின் இலக்கணத்தைக் கொண்ட மத்திய—மாநிலப் புதிய உறவுகள், அரசியலமைப்புச் சட்டத்தில் உரு வாக்கப்பட வேண்டும். முழுமையான மாநில சுயாட்சிக் கொள்கையின் ஆதார அடிப்படையில், மத்திய அரசின் ஏகபோக உரிமைகள், மாற்றி யமைக்கப்பட வேண்டும். எனவே, மாநிலங்களின் வேதனைகளும் விரக்தியும் தீருவதற்கு முழு மாநில சுயாட்சிதான் தக்கதோர் பரிகாரமாகும்.



# 15. உரிமைப் பட்டயமா? அடிமைச் சாசனமா?

"நமது மாநிலங்கள்-மாநிலங்களல்ல; நமது சுயாட்சியும்-சுயாட்சியல்ல; நாம் பெற்ற மாநில சுயாட்சியும்-மாநில சுயாட்சி அல்ல."[1]

— திரு. தீரேந்திர நாத்சென்.

இன்றைய அரசியல் சட்டத்தில் மாநிலங்களுக்கு முழு சுயாட்சி தரப்பட்டுள்ளதா? இல்லையா? என்பதை, இந்த மூன்றும் பகுதியின் பல்வேறு அத்தியாயங்களிலும் வகைப் படுத்தி நாம் ஆய்வு செய்தோம்.

ஆனால், அதில் உண்மைக் கூட்டாட்சி முறையும் இல்லை; அதன் கூறான முழு மாநில சுயாட்சியும் இல்லை. மாறாக, கூட்டாட்சி முறையைப் போன்றதும் மாநில சுயாட்சியைப் போன்றதுமான பொய்த்தோற்றத்தையே நமது அரசியலமைப்புச்சட்டம் உருவாக்கித் தந்துள்ளது என்பது மெய்ப்பிக்கப் படுகிறது.

அந்தப் "பொய்த்தோற்றத்தையே" இன்றையத் தேசியத் தலைவர்களும் அன்றையத் தேசியத் தலைவர்களும் "மெய்யான கூட்டாட்சி", "மெய்யான மாநில சுயாட்சி" என்றெல்லாம் சத்தில்லாத மாயாவாதங்களைக் காட்டி நிலைநாட்டிட முனை கின்றனர். புதிய குழப்பத்தையும் அதன் மூலம் நாட்டில் உருவாக்குகின்றனர். அவர்களில் தலையாயவர் டாக்டர் அம்பேத்கார் அவர்கள். அவர் அரசமைப்புச் சபையில் மாநில சுயாட்சிக்கெதிரான பல திரிபு வாதங்களைக் கூறி, "இன்றைய அரசமைப்பு மாநிலங்களின் உரிமைப் பட்டயம் தான்" எனப் பகட்டுச் செய்து காட்டினார். பின்னர் வந்த பல அகில இந்தியத் தலைவர்களும் அதனையே கிளிப்பிள்ளையைப் போல் திருப்பிக் கூறுகிறார்கள். எனவே, டாக்டர் அம்பேத்கார் அவர்களின் கூற்றுக்களில் 'முரண்பாடுகள் உண்டு; பொய் வாதங்கள் உண்டு;' என்பதை நாம் எடுத்துக் காட்டினால் அதுவே இன்றையத் தலைவர்களின் மாநில சுயாட்சி பற்றிய "புதுத் திரிபு விளக்கங்களுக்கும்" உரிய மறுமொழியாகி விடும்.

---

1 Mr. Dhirendranath Sen, "The Paradox of Freedom." (1958) P 19

அவர்களுடைய சொத்தை வாதங்களில் பொருளில்லை என்பதை இந்த இறுதி அத்தியாயத்தில் எடுத்துக் காட்டி, அதற்காதாரமாகப் பல வல்லுனர்களின் கருத்துக்களையும் தொகுத்துக் கூறி, ''நமது அரசமைப்புச் சட்டம் மாநிலங்களின் கொத்தடிமைச் சாசனமே'' என்பதை நிலை நாட்டுவோம்.

## அம்பேத்காரின் திரிபு வாதங்கள்

நமது அரசியல் சட்டத்தைப் படைத்தவர்களின் தலைவரான, டாக்டர் அம்பேத்கார் அவர்கள் ''இந்திய அரசியல் சட்டம் ஒரு கூட்டாட்சி அரசமைப்புச் சட்டம்தான்'' என்பதை நிலைநாட்டுவதற்காக, அரசியலமைப்புச் சபையில் நடந்த விவாதங்களின் போது பல கருத்துக்களை எடுத்தியம்பியுள்ளார். அவர் இந்திய மாநிலங்களுக்கு முழுமையான அதிகாரங்களும் உரிமைகளும் தரப்பட்டுள்ளன என்பதை வலியுறுத்த முற்பட்ட போது,

''நமது அரசமைப்புச் சட்டம் பெருமளவு மத்திய மயமாக்கப் பட்ட ஒன்று; அதனால் மாநிலங்கள் யாவும் வெறும் நகராட்சிகளின் தகுதிக்கு சிறுமைப் படுத்தப்பட்டுள்ளன எனக் குற்றம் சாட்டுகிறார்கள். இக்கூற்று மிகைப் படுத்திக் கூறப்பட்டது மட்டுமல்ல; அரசியல் சட்டம் செய்த சரியான ஏற்பாட்டைத் தவருகப் புரிந்து கொண்டதின் விளைவுமாகும். மத்திய மாநிலங்களின் உறவைப் பொறுத்தவரை அவை ஓர் அடித்தளமான கொள்கையின் மேல் அமைக்கப்பட்டுள்ள தென்பதை நாம் கருத்தில் கொள்ள வேண்டும். சட்ட மியற்றுத் துறை அதிகாரங்களும் நிர்வாக அதிகாரங்களும் மத்திய - மாநிலங்களுக்கிடையே அரசமைப்புச் சட்டத்தின் மூலமாகவே, பகுக்கப்பட்டிருக்க வேண்டு மென்பதும் அந்த அதிகாரப் பிரிவினை மத்திய அரசினுடைய ஒரு சட்டத்தால் செய்யப்படக் கூடாதென்பதும் தான் கூட்டாட்சித் தத்துவத் தின் அடிப்படைக் கோட்பாடாகும். நமது அரசியல் அமைப் பில் உருவாக்கப் பட்டுள்ள மாநிலங்கள் தங்கள் நிர்வாகம் மற்றும் சட்டம் செய்யும் அதிகாரங்களுக்காக மத்திய அரசை எவ்வகையிலும் அண்டிக் கிடக்க வேண்டுவதில்லை........ மத்திய அரசும் - மாநிலங்களும் சம தகுதியைக் கொண் டவை. மத்திய அரசிற்கும் அதன் அங்கங்களுக்கு மிடை யில் சட்டம் செய்யக் கூடிய அதிகாரத்தையும் நிர்வாக அதிகாரத்தையும் அரசமைப்புச் சட்டத்தின் மூலமாகப்

பிரித்து வழங்குவதே கூட்டாட்சித் தத்துவத்தின் அடிப் படைக் குறிக்கோளாகும். நமது அரசியலமைப்பில், இந்தத் தத்துவம் தான் கையாளப் பட்டுள்ளது. அதைப் பொறுத்த வரை, தவறேதும் நடக்கவில்லை. எனவே, மத்திய அர சிற்குக் கீழ்ப்படியத் தக்க நிலையில் மாநிலங்கள் வைக்கப் பட்டுள்ளன என்ற வாதம் தவறான தாகும்.'' 2

''நமது அரசமைப்புச் சட்டம், இரட்டை அரசுகளை உருவாக்கு கிறது; ஒன்றியத்தில் மத்திய அரசையும், மாநிலங்களில் மாநில அரசுகளையும் உருவாக்கியுள்ளது. அரசியலமைப்புச் சட்டத்தால் அறுதியிட்டுச் சொல்லப்பட்ட அதிகார வட்டத் தினுள் அந்தந்த அரசுகள் (தத்தம்) இறைமை அதிகாரங் களைப் பெற்றுள்ளன. நமது ஒன்றியம் தளர்ந்த உறவைக் கொண்ட மாநிலங்களின் ஒரு கூட்டுக்கழகமுமல்ல; மத்திய அரசிடமிருந்து, அதிகாரங்களைப் பெற்றுக் கொண்டு இயங்கக் கூடிய மத்திய அரசின் வெறும் முகவர்களுமல்ல. 'மத்திய அரசு' — 'மாநிலங்கள்' ஆகிய இவை இரண்டுமே அரசமைப்புச் சட்டத்தால் உருவாக்கப்பட்டுள்ளன. (தத்தம்) தனி அதிகாரங்களை அரசமைப்புச் சட்டத்திலிருந்தே அவை பெறுகின்றன. தனக்கென ஒதுக்கப்பட்ட அதிகாரத் துறை யில், ஒன்று – மற்றொன்றுக்குத் தாழ்ந்த தல்ல; ஒன்றி னுடைய அதிகாரங்கள் — இன்னொன்றினுடைய அதிகாரங் களோடு இணைத் தகுதியை (Co-Ordinate) பெற்றுள்ளன.'' 3

என்று குறிப்பிட்டார்கள்.

டாக்டர் அம்பேத்கார் அவர்கள், ஓர் உண்மைக் கூட் டாட்சி நாட்டின் தன்மையையும் மேற்சொன்ன வாசகங்களால் குறிப்பிட்டிருக்கிறாரே யன்றி, இந்திய அரசமைப்புச் சட்டத்தில் அவர் சுட்டிக் காட்டிய கூட்டாட்சியின் – மாநில சுயாட்சியின்– பல முக்கியக் கூறுகள், உண்மையில் இடம் பெற்றிருக்க வில்லை என்பதை இப்பகுதியின் பல அத்தியாயங்களில் நாம் தெளி வாகப் பார்த்தோம்.

அவரது விளக்கத்தில் ஏழு முக்கிய அம்சங்கள் இடம் பெற்றிருப்பதை நாம் காணலாம்.

---

2 C. A. D Vol. VII, Page. 33.

3 C. A. D. Vol. VII, Page. 33.

அவையாவன:

1. சட்டம் செய்யும் அதிகாரங்களையும் நிர்வாக அதிகாரங்களையும் மத்திய அரசிற்கும், மாநில அரசிற்குமிடையே நமது அரசமைப்புச் சட்டம் பிரித்து வழங்கியுள்ளது.
2. அதுவே ஒரு கூட்டாட்சி அரசமைப்பின் கோட்பாடு.
3. இந்திய மாநிலங்கள் தங்கள் நிர்வாக, சட்டமியற்றும் அதிகாரங்களுக்காக மத்திய அரசைச் சார்ந்திருக்க வேண்டுவதில்லை.
4. மத்திய அரசும் மாநிலங்களும் அதனதன் அதிகார வட்டத்தினுள் முழு "இறைமை" (Full Sovereignty) அதிகாரங்களைப் பெற்றுள்ளன.
5. மத்திய அரசும் — மாநில அரசுகளும் சமமான தகுதியைக் கொண்டவை.
6. மாநில அதிகாரங்கள் மத்திய அரசின் அதிகாரங்களோடு இணைத் தகுதியைப் பெற்றுள்ளன.
7. எனவே, மாநிலங்கள் மத்திய அரசிற்குக் கீழான தகுதியில் வைக்கப்படவில்லை.

மேற்கூறிய ஏழு அம்சங்களில் முதல் இரண்டு அம்சங்களைத் தவிர மற்ற ஐந்து அம்சங்களையும் நமது அரசியல் சட்டம் மாநிலங்களுக்குத் தரவில்லை.

அதாவது, இந்திய மாநிலங்கள் மத்திய அரசை அண்டிக் கிடக்காததொரு தன்மையைப் பெற்றிருக்கவில்லை; அவைகளுக்கு, மத்திய அரசோடு சம தகுதியும் இணை தகுதியும் இல்லை. மாநிலங்களுக்கு 'இறைமையும்' இல்லை.

மாநிலங்களின் அதிகாரங்களும் உரிமைகளும் சாதாரண காலங்களில்கூட மத்திய அரசால் கட்டுப்படுத்தப்பட்டுள்ளன; நெருக்கிச் சுருக்கப்பட்டுள்ளன. 'நெருக்கடிநிலை'யென அறிவிக்கப்படும் காலங்களில் மாநில உரிமைகள் முழுவதும், மத்திய அரசால் பறிக்கப்பட்டு விடுகின்றன. நிதித் துறையில் மாநிலங்கள் நிரந்தரமான அடிமைகளாக ஆக்கப்பட்டுள்ளன. உண்மையில் மாநிலங்களை ஆட்டிப் படைக்கும் எல்லா உரிமைகளையும் அதிகாரங்களையும் தன்னகத்தே கொண்டுள்ள ஒரு வலிமையான மத்திய அமைப்பையே நமது அரசியல் சட்டம் ஏற்படுத்தியுள்ளது; அதன் வழி மாநிலங்களை வலுவற்றவை

களாகவும் அது ஆக்கி வைத்துள்ளது, மேலும் இன்றைய மத்திய அரசு ஒற்றை ஆட்சித் தன்மையைக் கொண்டதாகவும் திகழ்கிறது; அதாவது மாநிலங்களுக்கு முழுத் தன்னாட்சி அளிக்கப்படவில்லை.

உண்மையான கூட்டாட்சி முறையையோ, முழுமையான மாநில சுயாட்சியையோ, இன்றைய அரசியல் சட்டம் ஏற்றுக் கொள்ளவில்லை என்பதை, மற்ற சட்ட வல்லுநர்களைக் காட்டிலும், அதனை உருவாக்கிய பண்டித நேரு அவர்களே தெளிவாகக் கூறுகிறார்,

"அகில உலக மட்டத்தில் இந்திய நாட்டை உறுதியாகப் பிரதிபலிக்க முடியாததும் மிக முக்கியமான பொதுச் செயல்களை யெல்லாம் இணைக்க முடியாததும் சமாதானத்தை நிலைநிறுத்த முடியாததுமான ஒரு வலிமையற்ற மத்திய அரசாங்கத்தை நாம் உருவாக்கினால்; அது நம் நாட்டு நலன்களுக்குத் தீமையையே விளைவிக்கும். அதே நேரத்தில் பல அதிகாரங்களும் மாநிலங்களிடமே 'இருக்க வேண்டும் என்பதும் நமக்குத் தெளிவாகிறது. எனவே, ஒற்றை ஆட்சி முறையின் அடிப்படையில் ஓர் அரசமைப்புச் சட்டத்தை உருவாக்கினாலும் அரசியல் நிர்வாக ரீதியில் அது ஒரு பிற்போக்கு முறையாக அமைந்துவிடும்." 4

மேற்சொன்ன அரிய கருத்துக்களை இந்திய நாடு விடுதலையடைந்த ஐந்தாம் நாளில், பண்டித நேரு அவர்கள் நமது அரசியல் நிர்ணய சபையில் குறிப்பிட்டார்கள். இந்த அடிப்படையில்தான் இன்றைய அரசியல் சட்டமும் அமைக்கப்பட்டுள்ளது.

அரசமைப்புச் சட்டத்தில் மாநிலங்களுக்குப் பல அதிகாரங்கள் பிரிவினை செய்யப்பட்டுத் தரப்பட்டுள்ளன; உண்மைதான். ஆனால் அவை யாவும் மத்திய அரசால் கட்டுப்படுத்தவும் படுகின்றன. மத்திய அரசே எல்லா மாநிலங்களின்மேல் மேலாட்சியையும் செலுத்துகின்றது. அதனால் மத்திய அரசிற்கே முதன்மையும் (Supreme) தரப்படுகிறது.

---

4 C. A. D. The Proceedings of 20-8-1947.

எனவே, நமது அரசியல் சட்டத்தில் மாநிலங்கள் சுதந்திர மாக இயங்குவதற்கு வழி வகையுள்ளது என்பதும் அவை மத்திய அரசோடு சமதகுதியைப் பெற்றிருக்கின்றன என்பதும் டாக்டர் அம்பேத்காரின் சொல் அலங்காரமே தவிர அவை முழு உண்மை அல்ல. நமது மத்திய அரசு மாநிலங்களைவிட மிக உயர்வான நிலையையும் வலிவான அதிகாரங்களையும் தெளிவான தனித்தன்மையையும் பெற்றுள்ளது என்பதை யாரும் மறுக்க முடியாது.

பேராசிரியர் எஸ். வி. கோஜேக்கர் (PROF. KOGEKAR) அவர்கள்,

> ''இறைமை கொண்ட இந்தியக் குடியாட்சியின் அரசியல் சட்டத்தை உருவாக்குவதற்காகக் கூடிய அரசியலமைப்புச் சபை, மாநில அரசுகளுக்கு வழங்கப்பட்ட அதிகாரங்களைக் காட்டிலும், விரிவான பல அதிகாரங்களைத் தேசிய (மத்திய) அரசிற்கு அளித்து விட்டது. அது ஆச்சரியப்படத் தக்க ஒன்றல்ல.''5

எனக் கூறுகிறார்.

இந்திய அரசின் பல்கலைக் கழக மானியக் குழுவின் ஆலோசனை வாரியத்தின் (Advisory Board of University Grants Commission) உறுப்பினரும் இந்திய அரசியல் கழகத்தின் பொதுச் செயலாளரும் ஆன அரசியல் சட்ட நிபுணர் திரு. S. A. H. ஹக்கி (S. A. H. HAQQUI) அவர்கள்,

> ''இந்திய ஒன்றியம் (Indian Union) ஓர் உண்மையான கூட்டாட்சி நாடல்ல. அதனை, 'அழிக்க முடியாத மாநிலங்களைக் கொண்ட அழிக்க முடியாத ஓர் ஒன்றியம் (Indestructable Union of Indestructable States) என்று அழைக்க முடியாது. கூட்டாட்சியின் துணை அம்சங்களைப் பெற்ற ஓர் ஒற்றை ஆட்சி நாடு என்றுதான் அதனைச் சொல்ல முடியும். அளவுக்கு மீறிய முறையில் மத்திய மயப்படுத்தும் தன்மை அதற்குண்டு. அரசியல் சட்டத்தால் உருவான மாநிலங்கள், பெரிது படுத்தப்பட்டதும் புகழ் மிக்கதுமான வெறும் நகராட்சிகளைக் காட்டிலும் உயர்வானவை யல்ல.''6

என நமது ''கூட்டாட்சி'' நாட்டைப் பற்றியும் மாநிலங்களின் நிலை பற்றியும் குறிப்பிடுகிறார்.

---

5 "Federalism in India" in "The Union-State Relations in India" (1967) Edited by Mr S. A. H. Haqqui. page 34.

6 "Position of the States under the Indian Constitution" Ibid, Note. 5 Page. 57.

பேராசிரியர் ஆர். பி. பாண்டே (R. P.PANDEY) அவர்கள் மாநில அதிகாரப் பட்டியல் எவ்வகையில் மத்திய அரசின் கட்டுக்குள் இருக்கிற தென்பதைக் கூறும்போது,

"குறிப்பான அரசியல் சட்டத் திருத்தங்கள் இல்லாமலேயே மிக முக்கியமான மாற்றங்களெல்லாம் தற்போது நிகழ்ந் துள்ளதைக் கூர்ந்து பார்த்தால், இந்திய மாநிலங்களின் மேல் மத்திய அரசு செலுத்தக் கூடிய கட்டுப்பாட்டின் அள வும் தன்மையும் தெரிய வரும். இந்திய அரசமைப்புச் சட்டத் தில் கொடுக்கப்பட்ட அரசியல் அதிகாரங்களில், 50·/· அதிகாரப் பொருள்கள் மத்திய அரசுப் பட்டியலுக்கும் ஏறத் தாழ 25·/. அதிகாரப் பொருள்கள் பொதுப்பட்டியலுக்கும் மீதமுள்ள 25·/. அதிகாரப் பொருள்கள் மட்டும் மாநில அதிகாரப் பட்டியலுக்கும் தரப்பட்டுள்ளன. மாநில அரசுப் பட்டியலிலுள்ள அந்த 25·/. அதிகாரப் பொருள்களில் கூட மாநில அரசுகள், சட்டமியற்றுவதற்கு, உரிமை படைத்தவை யல்ல. மத்திய அரசு விரும்பினுல், அவற்றில் தீவிரமாகத் தலையிடும்."[7]

எனக் குறிப்பிடுகிருர்.

அலிகார் பல்கலைக் கழக அரசியல் துறைத் தலைவர், பேராசிரியர் ஜி. பி. சிரீவஸ்தாவா (PROF. SRIVASTHAVA) அவர்கள் இன்றைய அரசியல் சட்டம் 1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தைக் காட்டிலும் குறைந்த அதிகாரங்களையே மாநிலங்களுக்கு அளித்துள்ளது என்பதனைச் சுட்டிக் காட்டும் போது,

"வெளி ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்ற இந்தியத் துணைக் கண்டம் ஓர் அரைகுறைக் கூட்டாட்சி அரசியலமைப்பைத் தனக்குத் தானே வழங்கிக் கொண்டது. இந்தியாவை, முதன் முதலாக ஒரு கூட்டாட்சி அமைப்பாக உருவாக்க முயன்ற 1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தையே இன்றைய அரசியலமைப்புச் சட்டம் ஆதாரமாகக் கொண் டுள்ளது. ஆனுல், 1935-ஆம் ஆண்டுச் சட்டத்தினுடைய மாகாணங்களைக் காட்டிலும், இன்றைய அரசியல் சட்டத்

---

7 "The Presidential veto over State Legislations", in Ibid, Opp. cited, Note. 5, Page 99

தில் உள்ள மாநிலங்கள் மிகக் குறைந்த உரிமைகளையே பெற்றிருக்கின்றன. அதனால் இந்தியாவில் ஒரு மத்திய மயமாக்கப்பட்ட கூட்டாட்சி அமைப்பு [Centralised Federal Set up] உருவாயிற்று.''8

எனக் கூறுகிறார்.

மேற்சொன்ன வல்லுநர்களும் இன்னும் பல அரசியல் சட்ட மேதைகளும் இந்திய அரசமைப்புச் சட்டத்தில் மாநிலங்களுக்கு முழுத் தன்னாட்சி அளிக்கப்பட வில்லை என்பதையும் அது ஓர் உண்மைக் கூட்டாட்சி அரசமைப்பே அல்ல என்பதையும் தெளிவாகச் சுட்டிக் காட்டுகிறார்கள். ஆகவே, இன்றைய அரசமைப்புச் சட்டத்தால் நமக்கு வழங்கப்பட்டிருப்பது முழு மாநில சுயாட்சியு மல்ல; உண்மையான கூட்டாட்சியு மல்ல.

## மாநிலங்களின் அடிமைச் சாசனம்

மாநிலங்களின் எல்லைகளையும் அவற்றின் பரப்பையும் பெயர்களையும் மத்திய நாடாளு மன்றம் நினைத்தபடி மாற்ற லாம். மத்திய நாடாளு மன்றத்தின் மூலமாக புதிய தொரு மாநிலத்தையும் உருவாக்கலாம்; தற்போது உள்ள மாநிலத் தையும் இல்லாது ஒழிக்கலாம்; தேவையேற்படின், அண்டைய நாடுகளுக்கும் மாநிலப் பகுதிகளைத் (பெருபாரி, கச்சத்தீவு) தாரையும் வார்க்கலாம்; தனது இச்சைக் கிணங்க இந்திய வரை படத்தையே கூட, முற்ற முழுக்க மத்திய அரசு மாற்றியும் அமைத்து விடலாம்.

மாநிலச் சட்டமன்றத்தின் சட்ட மேலவையை நமது மத்திய அரசு நினைத்தால் உருவாக்கலாம்; முனைந்தால் அழிக்கலாம்.

நாடாளுமன்றத்தின் ஒரு பகுதியான மாநிலங்களின் அவை யிலுள்ள (Council of States) மாநில உறுப்பினர்களின் எண்ணிக்கையை மத்திய அரசு, தனது விருப்பத்திற் கேற்ற வகையில் கூட்டலாம்; அல்லது குறைக்கலாம்.

நாடாளு மன்றத்தின் சிறப்புக் கூறான ''மாநிலங்களவை யில்'' நமது மாநிலங்கள் சமமான பிரதிநிதித்துவத்தைப் பெறு வதில்லை. சில மாநிலங்களுக்கு ஒரே ஓர் உறுப்பினரும், இன்னும்

8 "Impact of planning on Union - State relations in india" Ibid, Opp. cited, Note. 5, Page. 115

சில மாநிலங்களுக்கு 34 உறுப்பினர்களும் மாநிலங்கள் அவையில் உறுப்பினர்களாக அமர்ந்திருக்கும் அவலநிலை நமது அரசமைப்பு வழங்கியுள்ள சம (அ) நீதி.

தமிழ் நாட்டிற்கு 18 ( மாநிலங்களவை ) உறுப்பினர்களும், ஆந்திரப் பிரதேசத்திற்கு 18 உறுப்பினர்களும், கர்னுடக மாநிலத்திற்கு 12 உறுப்பினர்களும், கேரளத்திற்கு 9 பேரும், புதுச்சேரிக்கு ஒரு பிரதிநிதியும் ஆக மொத்தம் 58 நாடாளு மன்ற உறுப்பினர்கள் தென்னக மாநிலங்களை மாநிலங்களவையில் (இராச்சிய சபை) பிரதிபலிக்கின்றனர். ஆனல் உத்தரப் பிரதேச மாநிலத்திலிருந்து 34 உறுப்பினர்களும், பீகாரிலிருந்து 22 பேரும் ஆக மொத்தம் 56 உறுப்பினர்கள் இந்தி பேசும் இரண்டே இரண்டு வட மாநிலங்களிலிருந்து மாநிலங்கள் அவைக்குத் தேர்ந்தெடுக்கப் படுகின்றனர். மாநிலங்களுக்கு நமது அரசமைப்புச் சட்டம் வழங்கியிருக்கும் சம தகுதி(!) இதுதான்.

மாநிலங்களவையில் அந்தந்த மாநில மக்களின் கருத்தையும் கொள்கையையும் பிரதிபலிப்பதற்காகத் தேர்ந்தெடுக்கப் படும் மொத்த உறுப்பினர்களில் 12 பேரை மத்திய அமைச்சரவையின் ஆலோசனையைப் பெற்ற குடியரசுத் தலைவரே நியமிக்கின்றூர்.

மத்திய அரசின் சட்டங்களின் அடிப்படையில் எழும் வழக்குகளையும் மாநிலச் சட்டங்களில் எழும் வழக்குகளையும் ஒரே வகை நீதி மன்றங்களே விசாரித்துத் தீர்ப்பளிக்கின்றன.

மாநில மக்களுக்குத் தனி மாநிலக் குடியுரிமை (State Citizenship) இல்லை. மற்றக் கூட்டாட்சி நாடுகளில் இருப்பதைப்போல் மாநிலங்களுக்கெனத் தனிக் கொடியோ, தனி அரசமைப்போ, தனி நீதி மன்றமோ, தனி நிர்வாக அதிகாரிகளோ இந்திய மாநிலங்களுக்கு இல்லை. அவற்றிற்கு இறைமையுமில்லை.மாநில அரசுகள் மத்திய அரசின் ஏவல் அமைப்புக்கள்.

''மாநிலம்'' என்ற சொல்லுக்கு நமது அரசமைப்புச் சட்டத்தில் இது தான் பொருள்; ஆனல் கூட்டாட்சிக் கொள்கையின்படி உண்மையில் அது ''மாநிலம் அல்ல''.

மாநிலச் சட்ட மன்றத் தேர்தல்களை மத்திய அரசே முடிவு செய்யும்; மத்தியத் தேர்தல் ஆணைக்குழு (Election Commission) மூலமாகத் தனது வசதிக்கேற்ற முறையில் அவற்றை மத்திய

அரசே நடத்தும். அக்குழுவின் உறுப்பினர்களை மத்திய அமைச்சரவையின் ஆலோசனைப்படி, குடியரசுத் தலைவரே நியமனம் செய்வார்.

மத்திய அரசின் வரவு செலவு மற்றும் நிதிக் கணக்குகளையும் மாநில அரசுகளின் வரவு செலவு மற்றும் நிதிக் கணக்குகளையும் மத்திய அமைச்சரவையின் ஆலோசனையின்படி, குடியரசுத் தலைவரால் நியமனம் செய்யப்படும் "தணிக்கைத் துறைத் தலைவரே" (Comptroller and Auditor General) தணிக்கை செய்வார். அவர் இந்திய நாட்டின் பணப் புழக்கத்தைக் கட்டுப்படுத்துவதோடு மாநில அரசுகளின் வரவு செலவுகளுக்கான நிதி ஆதாரங்களையும் முறைப்படுத்துகிறார். அதற்குரிய கொள்கைகளையும் ஆண்டிற் கொருமுறை அவரே வகுத்துக் கொடுக்கிறார்.

மத்திய அரசின் தேர்வுக் குழு மூலமாக நியமனம் செய்யப்படும் அதிகாரிகளே மாநிலங்களின் உயர்மட்ட அதிகாரிகள். அந்த அகில இந்தியச் சேவைகளைச் சார்ந்த அதிகாரிகளின் பணியின் காலம், நிபந்தனைகள், விதிமுறைகள், பணிப் பொறுப்பு மற்றும் ஒழுங்குமுறை நடவடிக்கைகள் போன்றவைகளை நிர்ணயித்து நடைமுறைப்படுத்தி, தேவை யேற்படின் மாற்றியமைத்துச் செயல்பட வைக்கும் பொறுப்பு, மத்திய அரசையே சார்ந்ததாகும். மாநிலங்களில் பணியாற்றும் உயர் மட்ட அதிகாரிகள் மாநில அரசுகளுக்குக் கட்டுப்பட்டவர்கள். ஆனால் அவர்கள் மத்திய அரசிற்கே பொறுப்புடையவர்கள்.

மத்திய நாடாளுமன்றத்தால் நிறைவேற்றப்படும் மத்தியச் சட்டங்களுக்கு இசைந்தே மாநில நிர்வாகம் இயங்குதல் வேண்டும்.

மத்திய அரசின் நிர்வாக அதிகாரத்திற்குக் குந்தகம் விளையாமல்தான் மாநில நிர்வாகம் நடைபெற வேண்டும்.

அவற்றிற்குரிய கட்டுப்பாடுகளையும் கட்டளைகளையும் மாநில அரசுகளின்மேல் மத்திய அரசு விதித்து நடைமுறைப்படுத்தும்.

"இராணுவ முக்கியத்துவம்" அல்லது "தேசிய முக்கியத்துவம்" வாய்ந்தவை என மத்திய அரசால் கருதப்படும் செய்தித் தொடர்புகளை (Means of Communications) அமைப்பதற்கும் பேணிக் காப்பதற்கும் தேவையான கட்டளைகளை மாநில அரசுகளின் மேல் மத்திய அரசே பிறப்பிக்கும்.

மத்திய அரசின் கட்டளைகள் மாநில அரசுகள் சிரமேற் கொண்டு நிறைவேற்றத் தவறினால் மத்திய அமைச்சரவையின் ஆலோசனையின் பேரில் குடியரசுத் தலைவரால் அவசர நிலைப் பிரகடனம் செய்யப்பட்டு மாநில அமைச்சரவையோ, அல்லது மாநிலச் சட்டமன்றமோ, கலைத் தெரியப்படும்.

மத்திய அரசின் கொள்கைகளையும் எண்ணக் கருத்துக்களை யும் முறை கெடாமல் நிறைவேற்றுவதற்கு மாநில ஆளுநர் மத்தியக் குடியரசுத் தலைவரால் (மத்திய அமைச்சரவையால்) நியமனம் செய்யப்படுகிறார். அவர் மாநில அரசின் தலைவர்; மத்திய அரசிற்கும் ஒரு முகவர். மத்திய அமைச்சரவை விரும்பினால் குடியரசுத் தலைவர் மூலமாக மாநில ஆளுநரை விலக்கலாம். மாநில அரசுகளையும் ஆட்டிப் படைக்கலாம்.

மாற்றுக் கட்சிகள் மாநில அரசைக் கைப்பற்றினால் மத்திய ஆளும் கட்சியின் கொள்கைகளை மாநில ஆளுநரின் விருப்பு அதிகாரத்தின் மூலமாகவும் நிர்வாகக் கட்டளைகள் மூலமாகவும் மாநில அரசுகளின்மேல் விதிக்கலாம். குடியாட்சி என்ற பெயரில் மத்திய அரசின் சர்வாதிகார ஆட்சியை ஆளுநர்களின் மூலமாக மாநிலங்களில் நிலை நிறுத்தலாம்.

மாநில மக்களால் மாநிலச் சட்ட மன்ற உறுப்பினர்கள், குடியாட்சி முறையில் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். மாநில அரசின் அமைச்சரவையை அந்த மக்கட் பிரதிநிதிகள் தேர்ந் தெடுக்கின்றனர். எனவே, மாநில முதலமைச்சரும் அமைச் சரவையும் குடியாட்சிக் கொள்கையின்படி மாநிலச் சட்ட மன்றங்களுக்கே பொறுப்பானவர்கள். அதன்மூலம் மாநில மக்களுக்குப் பொறுப்பானவர்கள். மாநில மக்களுக்குத் தேவையான சட்டங்களை மாநில அமைச்சரவை அதன் சட்ட மன்றத்தில் முன்னிலைப்படுத்தி, விவாதித்து, இறுதி முடிவெடுத்து அவற்றை நிறைவேற்றும். ஆனால் மத்திய அரசின் முகவரான மாநில ஆளுநர் ஜனநாயக முறையில் மாநிலச் சட்ட மன்றத்தால் நிறைவேற்றப்பட்ட அந்தச் சட்ட மசோதாக்களுக்கு ''இசைவை'' அளித்தால்தான் அவை சட்டங்களாக மாறும் என்ற அரசியல் சட்ட நியதி ஏன்?

அச்சட்டங்களை அமுலுக்கு வாராமல் தடுப்பதற்காக மத்திய அரசின் (குடியரசுத் தலைவர்) பரிசீலனைக்காக அதனை ஆளுநர் ஒதுக்கலாம். அப்படிப் பரிசீலனைக்கனுப்பப்பட்ட சட்ட

மசோதாக்களுக்குக் குடியரசுத்தலைவர்விரும்பினால் இசைவைத் தரலாம்; இல்லையேல் மறுக்கலாம். கூட்டாட்சி முறைக்கும் குடி யாட்சிக் கொள்கைக்கும் முற்றிலும் முரண்பட்ட இந்தச் செயல் முறை நமது அரசமைப்பின் அரியதோர் படைப்பு.

கொழுத்த வருவாயினை வழங்கும் நிதி மூலங்களை மத்திய அரசு பெற்றுக் கொள்ளும். விரிவு படுத்த முடியாததும், மிகக் குறைந்த வருவாயை நல்குவதுமான சில பல வரியினங்களை மட்டுமே மாநிலங்கள் பெற்றுக் கொள்ளும். எனினும் மாநில மக்களின் அடிப்படைப் பொருளாதாரத் தேவைகளையும் நல் வாழ்வுத் திட்டங்களையும் சமூகநலப் பணிகளையும் நிறை வேற்றக் கூடிய பெரிய பொறுப்பு,மாநில அரசுகளுக்கே உண்டு. ஆனால் அப்பொறுப்புக்களைச் சரிவர நிறைவேற்றுவதற்குத் தேவையான ஊதியங்கள் மட்டும் மாநிலங்களுக்கு இல்லை; நிதி ஏற்பாடுகளும் இல்லை. அதற்காக மாநிலங்கள் மத்திய அரசிடமிருந்து மானியங்களைக் கோரி, கெஞ்சிக் கூத்தாடிப் பெற வேண்டும்.

மாநில மக்களுக்குரிய பொறுப்பையும் சமூகப் பணிகளையும் முறையாக நிறைவேற்றவும் முடியாமல் அவற்றிற்குரிய நிதி வசதிகளைப் பெருக்கிக் கொள்ளவும் இயலாமல் மாநிலங்கள் நிதித் துறையில் தத்தளிக்கும்.

ஆனால், தனக்குத் தேவையான மாநிலங்களுக்கு மட்டும் மத்திய அரசு 'மானியங்கள்' என்ற பெயரால் பெரு நிதியை வாரி வழங்கும்; கடன்களையும் தரும்; திட்டத் தொகையை யும் மட்டுப் படுத்தாமல் கொடுக்கும்

''விருப்ப மானியங்கள்'', ''தனி மானியங்கள்'' என்ற தூண்டி லிட்டு மாநிலங்களைப் பிடித்து ''நிபந்தனை மானியங்கள்'' என்ற கூரிய கொடுக்கால் மத்திய அரசு, தனக் கடங்கா மாநிலங் களைக் கொட்டி அடக்கும்.

திட்டக் குழுவின் துணை கொண்டு மாநில நிதி உரிமைகளைச் சூறையாடும்.

குறைந்த வரியினங்களைக் கொடுத்த நிறைந்த மக்கள் பணி யினைச் செய்ய வேண்டு மென்ற புதிய தொரு நிதிச் சித்தாந் தத்தினை அமுல் படுத்தும்.

நிதி வசதி போதாது எனக் கூக்குரலிடும் மாநிலங்களுக்கு மத்திய அரசு கருணை வைத்தால், மானியங்கள் என்ற எலும்புத் துண்டுகளை எடுத்து வீசும்.

அதுவும் போதவில்லையே என ஊளையிடும் மாநிலங்களுக்கு, ‘கடனுதவி’’ என்ற முட்கள் செருகப்பட்ட ரொட்டித் துண்டுகளையும் மத்திய அரசு மனமுவந்து கொடுக்கும்.

போதாத நிதி வசதிகள்; தீராத வறுமை; மண்டியிட்டுக் கேட்டுப் பெறும் நிதி உதவிகள்; விருப்பத்திற்கு மாருக வாங்கப் படும் மத்தியக் கடன்கள் இந்த இழிநிலையே மாநிலத்தின் நிதி நிலை.

இந்த நச்சு வட்டத்திற்குள் சுற்றிச் சுற்றி வந்து அதிலிருந்து விடுபட இயலாமல் மீண்டும் மீண்டும் மத்திய அரசின் காலடியிலேயே வீழ்கின்ற பரிதாபத் தன்மையே மாநிலங்களின் தனித் தன்மை.

‘‘சுயாட்சி’’ என்ற சொல்லுக்கு நமது அரசமைப்புச் சட்டத்தில் இவைதான் பொருள். ஆனுல், கூட்டாட்சிக் கொள்கையின்படி உண்மையில் அவை ‘‘சுயாட்சி அல்ல’’.

ஆங்கிலேய ஆதிபத்திய அரசு நமக்களித்த அடிமை நாட்டின் அரசுச் சட்டத்தில் (இந்திய அரசுச் சட்டம்—1935) தரப் பட்ட மத்திய-மாநில அதிகாரப் பிரிவினைகளும்‘ நிர்வாக நிதி உறவுகளும் இன்றைய நமது விடுதலை இந்தியாவின் அரசமைப்புச் சட்டத்தின் முக்கியக் கூறுகள். வெள்ளையனின் மத்திய அரசு எத்துணை அதிகாரங்களைத் தன்னகப் படுத்திக் கொண்டிருந்ததோ, அவற்றைக் காட்டிலும் பல அதிக அதிகாரங்களைக் குடியரசு நாட்டின் மத்திய அரசு, தற்போது பெற்றுள்ளது. ஆ னு ல் மாநிலங்களுக்குத் தேவையான அடிப்படையான சட்டமியற்றும், நிதி நிர்வாக அதிகாரங்கள் மாநில அரசுகளுக்குத் தரப்பட வில்லை. ஆகவே அடிமை நாட்டின் அரசுச் சட்டத்திற்கும் குடியரசு நாட்டின் இன்றைய அரசமைப்புச் சட்டத்திற்கும் மாநிலங்களைப் பொறுத்தவரையில் வேறுபாடு எதுவுமில்லை.

மாநிலங்கள் அவையில் ( Council of States ) மூன்றில் இரண்டு பங்கு உறுப்பினர்கள் ‘‘தேசிய நலன்’’ எனக் கருதி மாநிலப் பட்டியலின் அதிகாரத்தில் நாடாளு மன்றம் சட்டமியற்றலாம் என வாக்களித்துத் தீர்மானம் செய்தாலும், மாநில அரசின் அந்த அதிகாரம் மத்திய அரசிற்குச் சென்று விடும்.

பொதுப் பட்டியலின் எந்த ஓர் அதிகாரத்திலும் நாடாளு மன்றம் சட்டமியற்றினுலும் அதற்கெதிரான எந்தவொரு சட்டத்தையும் மாநிலச் சட்டப் பேரவை இயற்ற முடியாது.

இரண்டிற்கு மேற்பட்ட மாநிலங்கள் தமக்களிக்கப்பட்ட அதிகாரங்களில் எந்த ஓர் இனத்திலாவது நாடாளு மன்றம் சட்டமியற்றலாம் என்று தீர்மானித்தால் அந்த அதிகார இனத்தில் அந்த மாநிலங்களுக்குரிய சட்டங்களை நாடாளு மன்றம் இயற்றலாம். அம்மாநிலங்கள் இழந்த அதிகாரங்களை மீண்டும் திரும்பப் பெற இயலாது.

"நெருக்கடி நிலை" என அறிவிக்கப்பட்டால் மாநிலப் பட்டியலில் உள்ள எந்த ஓர் அதிகாரத்திலும் மத்திய நாடாளு மன்றம் சட்டமியற்றலாம்.

வேற்று நாடுகளுடன் செய்து கொள்ளும் ஒப்பந்தங்களையும், உடன்படிக்கைகளையும், மரபு சார்ந்த தொடர்புகளையும் அமுல் படுத்துகிறோம் எனக்கூறி மாநில அதிகார இனங்களில் மத்திய நாடாளு மன்றம் சட்டம் செய்யலாம்.

அகில உலக மாநாடுகளிலும் அகில உலகச் சங்கங்களிலும் மற்றும் "எந்த ஓர் அமைப்பிலும் எடுக்கப்பட்ட முடிவுகளை" அமுல் படுத்துகிறோம் எனக் கூறி மாநிலப் பட்டியலின் பல அதிகாரங்களில் நாடாளு மன்றம் சட்டமியற்றலாம். இதில் வரும் "எந்த ஓர் அமைப்பிலும் எடுக்கப்பட்ட முடிவுகள்" என்ற சொற்றொடர் தெளிவற்ற மொட்டைச் சொற்றொடராய் இருத்தலால் அதனைப் பயன்படுத்தி மாநில அரசிற்குட்பட்ட எந்த ஓர் அதிகாரத்திலும் மத்திய நாடாளு மன்றம் ஊடுருவலாம்.

ஆக, மாநில அதிகாரங்களில் மத்திய நாடாளுமன்றம் ஒரு புறம் ஊடுருவல் செய்யும்; மாண்புமிகு மத்திய அமைச்சரவை—குடியரசுத்தலைவர் மூலமாக—மாநில அதிகாரங்களில் இன்னொரு புறம் குறுக்கீடுகளைச் செய்யும். இவை இரண்டும் சேர்ந்த மத்திய அரசு, பல கட்டளைகளை மாநிலங்கள் மேல் விதிக்கும்; தனது மேலாண்மையையும் நிலை நிறுத்தும்.

"தேசிய நெருக்கடி நிலை", "நிதி நெருக்கடி நிலை", "மாநில நெருக்கடி நிலை"எனச் சாற்றி மாநில அமைச்சரவை களையும் மாநிலச் சட்டமன்றங்களையும் கவிழ்ப்பது மத்திய

அரசிற்கே உரிய ஒரு பொழுதுபோக்கு அரசியல் விளையாட்டு. ''உயிரற்ற சொல்லாக'' நெருக்கடி நிலை விதிகள் பயன்படுத்தப் படும் என டாக்டர் அம்பேத்காரால் அன்றைய நாட்களில் உறுதியளிக்கப் பட்டது; ஆனால் சென்ற கால் நூற்றாண்டுக் காலத்தில் மாநில உரிமைகளை முழுமையாகப் பறித்து விடும் பல மாநில நெருக்கடி நிலைப் பிரகடனங்கள் உயிர்ப்போடும் வீரியத்தோடும் நடைமுறைப் படுத்தப் பட்டுள்ளன. மத்திய ஆளும் கட்சியின் குறுகிய அரசியல் கண்ணோட்டங்களுக்கும் கோஷ்டிச் சண்டைகளுக்கும் கூட அவை பயன் படுத்தப் பட்டுள்ளன.

ஆக நெருக்கடிநிலை பற்றிய அதிகாரங்கள் மத்திய அரசிற் களிக்கப்பட்ட வரப் பிரசாதம். ஆனால் அவை மாநிலங்களுக்குத் தரப்பட்ட தீராத சாபக்கேடு.

ஆளுநர்களின் விருப்பதிகாரம் என்ற மந்திரக்கோலினால் மாநில சுயாட்சி உரிமைகள் புதைகுழிக்கு அனுப்பப்படும். 'நெருக்கடி நிலை' என அறிவிக்கப்பட்டால் மாநிலங்களும் போய் விடும்; அதன் சுயாட்சி உரிமைகளும் பறிபோய் விடும். மாநிலங் களின் சட்டம் செய்யும் துறையிலும் நிர்வாக முறையிலும் நிதி நிலையிலும் அதிகாரப் பங்கீடுகளிலும் அடிப்படை உரிமை களிலும் கூட்டாட்சி முறைக்கெதிரான மத்திய அரசின் காட்டாட்சித் தர்பார்-ஊடுருவல்-கட்டளைகள் மற்றும் கட்டுப் பாடுகள் ஆகியவை உடனே அமுல்படுத்தப்படும்.

''மாநில சுயாட்சி'' என்ற சொற்றொடருக்கு நமது அர சமைப்புச் சட்டத்தில் இவைதான் பொருள்; ஆனால் கூட் டாட்சிக் கொள்கையின்படி அவை ''மாநில சுயாட்சி அல்ல''.

ஆக இன்றைய இந்திய அரசமைப்புச் சட்டத்தால் தரப்பட்ட(?) ''நமது மாநிலங்கள் மாநிலங்களல்ல''; ''நமது சுயாட்சியும் சுயாட்சி யல்ல''; ''நாம் பெற்ற மாநில சுயாட்சியும் மாநில சுயாட்சியே அல்ல.''

இதனை விளக்கப் போந்த அரசமைப்புச் சட்ட வல்லுநர் திரு. தீரேந்திரநாத் சென் அவர்கள் ஒரு நகைச்சுவைத் துணுக்கை நம் முன் படைக்கிறார்,

''அறிஞர். கூவியர் (CUVIOUS) அவர்களிடம் ஒருநாள் பிரான்சு நாட்டின் கல்விக் கழகத்தைச் சார்ந்த கற்றறிவாளர் ஒருவர் வந்து, 'ஐயா, உயிரியல் பற்றிய ஓர் வினாவைத் தங்களிடம்

கேட்க விரும்புகிறேன். நான் எழுதிக் கொண்டிருக்கும் அகராதியில் - 'நண்டு' என்ற சொல்லிற்குப் பக்கவாட்டில் நகர்ந்து செல்லக் கூடிய - சிகப்பு நிறத்தையுடைய - ஒரு வகை மீன் - என நான் இலக்கணம் கூறியுள்ளேன். சரி தானே? என்ருர்.

அதற்குக் கூவியர் அவர்கள், 'நீங்கள் (நண்டிற்கு) தந்த இலக்கணம் மிக மிக நேர்த்தியானது; உங்களுடைய இந்த விளக்கத்தால் நண்டு உண்பவர்கள் எல்லாம், அதைப் பற்றி நிச்சயம் புரிந்து கொள்வார்கள்!' என மறுமொழி கூறினுர்கள்.

பின்னர் அந்தப் புகழ் பெற்ற கற்றறிவாளரைக் கூவியர் அவர்கள் அழைத்து, அவரது காதில் 'இது நமக்குள் இருக்கட்டும்; நண்டு என்பது மீன் அல்ல — அது சிகப்பு நிறத்தைக் கொண்டதுமல்ல — அது பக்கவாட்டில் நகர்ந்து செல்வதும் இல்லே. இந்த விதிவிலக்குகளேத் தவிர நண்டுக்கு நீங்கள் தந்த விளக்கம் முற்றிலும் சரியானதே' எனத் தணிந்த குரலில் கூறினுர்.

நண்டுக்கு இலக்கணம் தந்த கற்றறிவாளரிடம் கூவியர் அவர்கள் தணிந்த குரலில் கூறியதையே நாமும் பின்பற்றி, நமது அரசமைப்புச் சட்டத்தை உருவாக்கிய தலேவர்களிடம், 'பெருமைக்குரிய பண்பாளர்களே!, நமது மாநிலமும் ஒரு மாநில மல்ல; நமது மாநில சுயாட்சியும் ஒரு சுயாட்சியல்ல; நாம் அடைந்த மாநில சுயாட்சியும் — மாநில சுயாட்சியே அல்ல; இந்த விதி விலக்குகளேத் தவிர நமது மாநில சுயாட்சி, வேறு எல்லா வகைகளிலும் நிறைவுடையது தான் — எவ்வகைக் குறையை உடையதும் அல்ல' என்று தணிந்த குரலில் நாமும் கூறுவோமாக...''9

எனக்கூறி நம்மைச் சிரிக்க வைத்து, பின்னர் மாநில சுயாட்சி பற்றி சிந்திக்கவும் வைக்கிருர்.

---

9 Ibid, Opp. cited, Note-1. Pages 18-19.

எனவே, இன்றைய இந்திய அரசமைப்புச் சட்டம் மாநிலங்களின் உரிமைப் பட்டயமுமல்ல; உண்மையான கூட்டாட்சி அரசமைப்பும் அல்ல; மாறாக அது மாநிலங்களின் கொத்தடிமைச் சாசனமே.

இந்நிலை மாற வேண்டாமா?

மாநில மக்களின் அடிமைத்தளை நீங்க வேண்டுமெனில் முழு மாநில சுயாட்சியும் மலர வேண்டும்.

மலர்க மாநில சுயாட்சி!



# நான்காம் பகுதியின் தோற்றுவாய்

இன்றைய அரசமைப்புச் சட்டம், இந்தியத் துணைக் கண்டத்தை முழு மாநில சுயாட்சி கொண்ட உண்மையான ஒரு கூட்டாட்சி நாடாக உருவாக்கவில்லை என்பதையும் அது மத்திய அரசின் பக்கமே, பெரிதும் சாய்ந்திருக்கக் கூடிய ஓர் அரைகுறைக் கூட்டாட்சியையே தோற்றுவித்துள்ளது என்பதையும் மூன்றும் பகுதியில் பார்த்தோம்.

ஓர் உண்மையான கூட்டாட்சி நாட்டில் மாநிலங்களுக்கு நியாயமாகத் தரப்படவேண்டிய முழுத் தன்னுட்சியினை நமது இன்றைய அரசமைப்புச் சட்டம் மாநிலங்களுக்குத் தரவில்லை. சட்டமியற்றுத் துறை, நிதி, நிர்வாகம், ஆட்சி அதிகாரங்கள் போன்ற எல்லாவற்றிலுமே மத்திய அரசை அண்டிக்கிடக்கத் தக்க ''கட்டுப்படுத்தப்பட்ட சுயாட்சியையே'' அரசியல் சட்டப் படி நமது மாநிலங்கள் பெற்றுள்ளன என்பது வெள்ளிடைமலை.

ஒரு கூட்டாட்சி நாட்டினுடைய அரயசிலமைப்புச் சட்டம் அந்நாட்டின் மத்திய–மாநில உறவுகளை அறுதி செய்யக்கூடிய ''ஒரு மூலச்சுருதி'' என்ற அளவிற்கு மட்டும்தான் பயன்படும். அரசியலமைப்பு விதித்த சட்ட அரண்களுக்குள்ளேயே அந் நாட்டிலுள்ள மாநில மக்களின் முழு அரசியல், சமுதாய, பொருளாதார வாழ்க்கையும் இயங்கி விடுவதில்லை. அந்நாட் டின் அரசியலமைப்புச் சட்டம் இயற்றப்பட்ட பின்னர், அது அமுல் படுத்தப்படும் போது, தீவிரத் தன்மை மிக்க வேறு பல எதிர்பாரா அரசியல் சக்திகளும் அந்நாட்டில் உருவாகின்றன. அந்தத் தீவிரச் சக்திகள், சில அரசியல் சமுதாய மாற்றங்களை யும், அடிப்படைப் பின் விளைவுகளையும் அரசியல் சட்ட விதி களுக்கு மீறிய வகையில் வடிவமைத்து விடுகின்றன; அந் நாட்டின் மத்திய–மாநில உறவுகளையும் அச்சக்திகள் மாற்றி யமைத்து விடுகின்றன.

இத்தகைய சக்திகள் நாட்டிற்கு நாடு மாறுபடுகின்றன. கனடா நாட்டின் அரசமைப்புச் சட்டம், இந்திய அரசியல் சட்டத்தைப் போலவே அதன் மாநிலங்கள் மத்திய அரசை அண்டிக் கிடக்கத்தக்க பல ஒற்றை ஆட்சிக் கூறுகளைக் கொண்டதாக அமைக்கப்பட்டுள்ளது. ஆனால் கடந்த பல

ஆண்டுகளாக, கனடா நாட்டின் அரசியல் சட்டம் நடைமுறைப் படுத்தப்பட்டதில்–அதன் மத்திய அரசு, கனடிய அரசியல் சட்டத்தால் தரப்பட்ட மேலாதிக்க அதிகாரங்களை அமுல் படுத்தவில்லை. அதனுல், கனடா நாட்டிலுள்ள மாநிலங்களும் பாதிக்கப்படவில்லை. மாநில சுயாட்சியைக் கெடுத்து அவற்றைப் பல வழிகளிலும் கட்டுப்படுத்தக் கூடிய பல சட்ட விதிகள் கனடாவில் அமுல் படுத்தப்படாத காரணத்தால் அவை உயிரற்ற விதிகளாகவே (Dead Letter) நடைமுறையில் ஆகி விட்டன. எனவே, அரைகுறைக் கூட்டாட்சித் தன்மையைக் கொண்ட அரசியல் சட்டத்தைப் பெற்றிருக்கும் கனடா நாடு, நடைமுறையில் ''உண்மையான கூட்டாட்சி அரசாங்கமாக'' இன்றும் இயங்கி வருகிறது. முழு மாநில சுயாட்சிக்கு நல்லதோர் எடுத்துக்காட்டாகவும் அந்நாடு நடைமுறையில் திகழ்ந்து வருகிறது.

ஆனுல் இந்தியத் துணைக் கண்டத்தைப் பொறுத்தவரை, கனடியக் கூட்டாட்சி அரசாங்கத்திற்கு நேர்மாருக, இந்திய மத்திய அரசு நடைமுறையில் செயல்பட்டு வருகிறது. அஃதாவது இந்திய அரசியலமைப்புச் சட்டம் தந்த அரைகுறை மாநில சுயாட்சியைக்கூட முற்றும் அழித்தொழித்து விடும் வகையில், பல ஒற்றை ஆட்சி நடவடிக்கைகளை நமது மத்திய அரசு சென்ற 24 ஆண்டுகளாக மேற்கொண்டு நடைமுறைப்படுத்தி வருகின்றது. அதன் வழி அரசியல் சட்டத்திற்கு அப்பாற்பட்ட பல தீவிரச் சக்திகளையும் காங்கிரஸ் கட்சியின் நீண்ட மத்திய ஆட்சி உருவாக்கி வைத்துவிட்டது. அத்தகைய சக்திகள் இந்திய மாநிலங்களையும் மாநில அரசுகளையும் மாநிலத் தன்னுட்சியையும் மத்திய அரசிற்கு அடிமையாக்கி விட்டன.

''சமுதாயப் பொருளாதாரத் திட்டமிடுதல்'' (Social and Economic Planning) என்பது, அரசாங்கத்திற்கு அப்பாற்பட்டு நடுநிலையோடு இயங்க வேண்டிய ஒரு திட்டக்குழு (Planning Commission) வால் இயக்கப்படவேண்டும். ஆனுல், நமது மத்தியத் திட்டக்குழு ஓர் ஆலோசனைக்குழுவைப் போல் பணியாற்றுவதற்கு மாருக மத்திய அரசோடும், பல மத்திய அமைப்புக்களோடும், மிக நெருங்கிய தொடர்பு கொண்டிருப்பதின் காரணமாக அகில இந்தியாவையே ஆட்டிப்படைக்கக் கூடியதொரு மிகப் பெரும் மத்திய அமைப்பாக நடைமுறையில்

செயல்பட்டு வருகிறது. அதனுல் அரசமைப்புச் சட்டத்தால் உருவாக்கப்பட்ட மத்திய - மாநில உறவுகளும் குறிப்பாக மாநிலங்களின் தன்னுட்சியும் சென்ற 24 ஆண்டுகளாக மெத்தவும் பாதிக்கப்பட்டுள்ளன. அரசாங்கத்திற்கும் அப்பாற் பட்ட ஒரு ஸ்தாபனம் அரசியல் சட்டத்திற்கும் மீறிய ஒரு சக்தியாகவே மாறிவிடுகின்ற தன்மைக்கு ''இந்தியத் திட்டக் குழு'' ஒரு நல்ல எடுத்துக்காட்டாகும்.

திட்டக்குழுவானது ஒருவகையில் இந்தியப் பொருளா தாரத்தை நேரடியாக இயக்குகிறது; எனவே அதை அரசாங் கத்தோடு தொடர்பு கொண்ட ஒரு சக்தி யென்றுகூடச் சொல்ல லாம். ஆனுல் ''இந்தியத் தேசியக் காங்கிரஸ் கட்சி'' ஓர் அரசியல் கட்சியாகும். அது அரசியல் சட்டத்தால் அறுதி செய்யப்பட்ட மத்திய-மாநில உறவுகளே ஒடுக்குகின்ற அளவிற்கு ஒரு தனிப் பெரும் அரசியல் சக்தியாக விளங்குவதேன்?

சனநாயக நாட்டின் அரசாங்கத்தோடு அரசியல் கட்சி களும் நெருங்கிய தொடர்பு கொண்டவைதான்; இல்லை யென்று நாம் மறுக்கவில்லை. ஆனுல், அவை அரசியல் சட்ட விதிகளின்படி அரசாங்கத்தின் அமைப்புக்களுக்கும் அப்பாற் பட்டவை என்பதை யாரும் மறந்துவிட முடியாது. இந்திய அரசியல் சட்டத்தில் ''அரசியல் கட்சி'' என்ற சொற்றெடரே கூட எங்கும் பயன்படுத்தப்பட வில்லை. இந்தியா போன்ற ஒரு கூட்டாட்சி நாட்டில் அதன் மத்திய-மாநில உறவுகள் முதலில் அரசியல் சட்டத்தால் வகுக்கப்படுகின்றன; அதன் பின்னர் அவை நீதிமன்றங்களாலும் அரசாங்க அமைப்புக்களாலும் முறையாக நிலைநிறுத்தப்படல் வேண்டும்.

சிக்கல் நிறைந்த மத்திய - மாநில அரசுகளின் உறவுகளில், அரசியல் கட்சிகள் (காங்கிரஸ்) நேரடியாகத் தலையிடுவதும் அதன்வழி (அரசமைப்புச் சட்டத்தால் உறுதி செய்யப்பட்ட) மத்திய - மாநில அரசுகளின் உறவுகளை, அக்கட்சிகள் மாற்றி யமைத்து விடுவதும் பொதுவாக ஒரு கூட்டாட்சிநாட்டினுடைய ஆரோக்கியமான அரசியல் வாழ்க்கைக்கு ஏற்றதல்ல.

ஆனுல் இந்தியத் துணைக் கண்டத்திலுள்ள மத்திய-மாநில அரசுகளுக்கிடையே அரசியல் சட்டத்தால் உறுதி செய்யப் பட்டுள்ள அரசியல், நிர்வாகம் மற்றும் பொருளாதார உறவு களை '' அகில இந்தியத் தேசியக் காங்கிரஸ் கட்சி '' முற்றிலும்

மாற்றியமைத்து விட்டது. குறிப்பாக, அரசியல் சட்டவிதிகளை ஒதுக்கி வைத்துவிட்டு, அவற்றையும் மீறிய வகையில் இந்திய மாநிலங்களை மத்திய அரசின் பேராதிக்கத்தின் கீழ் அடிமைப் படுத்தும் மிகப்பெரிய பணியினைக் காங்கிரஸ் கட்சி சென்ற கால் நூற்றாண்டு காலமாகச் செய்து வருகிறது.

நமது அரசியல் சட்டத்தில், மாநில நிதிவாயில்கள் எல்லாம் குறுக்கப்பட்டு, மாநில அரசுகள் சுயாட்சியோடு முறையாகச் செயல்பட முடியாத அளவிற்குக் குளறுபடியான பல சட்டவிதிகள் ஏற்கனவே உருவாக்கி வைக்கப்பட்டுள்ளன. மத்திய அரசிற்குத் தரப்பட்ட அப்பேரதிகாரங்கள் போதாதென்று கருதிய காங்கிரஸ் கட்சியின் மத்திய அரசு, மாநிலங்களை மேலும் அடிமை கொள்ளும் நோக்கத்துடன் மத்திய - மாநில நிதி உறவுகளில் சட்ட நிலையையும் மீறிய சில ஏற்பாடுகளை உருவாக்கி அவற்றைத் தொடர்ந்து கடைப்பிடித்தும் வருகிறது. நமது மத்திய அரசு, தான் விரும்பும் சமயங்களில் தனக்கு வேண்டிய மாநிலங்களுக்கு "விருப்ப மானியங்கள்" என்ற பெயராலும் "கடன்கள்" என்ற பெயராலும் மிகப்பெரிய தொகைகளை வழங்கி வருகிறது. அப்படி விருப்பம் போல வழங்குவதற்கு நமது அரசியல் சட்டவிதிகளில் நியாயமான சட்ட முகாந்தரம் எதுவும் இல்லை. எஞ்சி நிற்கும் 282-ஆம் சட்டவிதியை, வேண்டுமென்றே தனது புதிய நிதி ஏற்பாடுகளுக்காகத் திரித்துப் பயன்படுத்தி வருகிறது நமது (காங்கிரசின்) மத்திய அரசு. அதன் மூலம் மாநிலங்களை மண்டியிட வைத்தும் விட்டது.

மாநில சுயாட்சியின் உயிர்க்கூறு, தாய்மொழி. மாநில மக்களின் அடிப்படை உரிமைகளில் ஒன்று, மொழியுரிமை. ஆனால், இந்திய அரசியல் சட்டத்தில், 'இந்தி' ஆட்சிமொழி ஆக்கப்பட்டு விட்டது. அதனை அமுல்படுத்தும் காலக்கெடு 15 ஆண்டுகளுக்குத் தள்ளிப்போடப்பட்டது. இடைக் காலத்தில் ஆங்கிலம் "இணை ஆட்சிமொழியாக" இருந்தது. இந்தி வெறியர்கள், கடந்த 24 ஆண்டுகளில் மாநிலங்களின் மொழியுரிமையை இந்தி மொழி ஆதிபத்தியத்திற்கு அடிபணிய வைப்பதற்காக, காங்கிரஸ் கட்சியையேகூட, தமக்குச் சாதகமாக வலிமை மிகுந்த ஒரு கருவியாகப் பயன்படுத்திக் கொண்டனர்.

இன்று இந்திய மாநிலங்களில் இந்தியே மறைமுகமாகக் கோலோச்சுகிறது. அதனைத் தடுக்க முனைந்த மற்ற இந்தி பேசாத மாநிலங்கள் கையறுநிலையில் ஆங்கிலத்தை ஒரு

கேடயமாக்கிக் கொண்டனவே தவிர, அதனதன் தாய் மொழியை உண்மையான ஆட்சி மொழித் தகுதிக்கு உயர்த்திட முடியவில்லை. மாநில சுயாட்சியின் உயிரான மொழி உரிமையும் மெல்ல மெல்ல மடிந்து கொண்டிருக்கிறது. அரைகுறை மாநில சுயாட்சியினைப் பெற்றுக்கொண்ட மாநிலங்கள் மொழியுரிமையையும் மெல்ல மெல்ல இழந்து நிற்பதால் இன்றைய நிலையில் அவை உயிரற்ற உடல்போல் இயங்கி வருகின்றன. அரசியல் சட்டத்தால் தமக்களிக்கப்பட்ட பல அதிகாரங்களைக் கூட மத்திய அரசின் ஆதிக்க நடவடிக்கைகளால், தற்போது மாநிலங்கள் இழந்து விட்டன. ஆக, அரைகுறைக் கூட்டாட்சி அரசியலமைப்பைக் கொண்ட இந்தியா, ஏறத்தாழ ஓர் ஒற்றையாட்சி நாடாகச் சென்ற 24 ஆண்டு காலத்தில், மாற்றியமைக்கப்பட்டு விட்டது.

அரசியல் சட்டத்திற்கும் அப்பாற்பட்ட "அகில இந்தியக் காங்கிரஸ் கட்சியும்", "இந்திமொழி ஏகாதிபத்தியமும்", "ஐந்தாண்டுத் திட்டங்களும்", "திட்டக்குழுவும்", "விருப்ப மானியங்களும்", "மத்தியக் கடன்களும்" மற்றும் பல்வேறு துறைகளில் மத்திய அரசின் மற்ற ஒற்றையாட்சி நடவடிக்கைகளும் இதற்கு மூலகாரணங்களாக அமைகின்றன.

இந்திய நாடு விடுதலை பெற்ற பின்னர் — அரசமைப்புச் சட்டத்தால் அது "குடியரசுக் கூட்டாட்சி நாடு" என வகைப் படுத்தப்பட்ட பின்னர்—சென்ற கால் நூற்றுண்டுக் காலத்தில் எவ்வகையில் மாநிலங்களின் அரைகுறைத் தன்னாட்சியும் மத்திய அரசால் மாய்க்கப்பட்டு விட்டது என்பதையும் அதன் காரணங்களையும் தனித் தனியாக இனி வரும் இயல்களில் ஆய்வு செய்வோம்.



# 1. மாநிலங்களை அடிமை கொண்ட ஐந்தாண்டுத் திட்டங்கள்

"பொருளாதார வளர்ச்சிக் காரியங்களுக்கான "திட்ட மிடுதல்" (Planning), மாநிலங்களைப் பொறுத்த மட்டிலும் கூட்டாட்சி அரசியலமைப்பைக்கூட நடை முறையில் மீறிவிட்டது. திட்டமிடுதலின் இந்த அத்து மீறிய செயல், சட்டப்படியோ அல்லது அரசியல் அமைப்பு விதிகளின் படியோ நடைபெற்று விட்ட தல்ல. மாருக மாநிலங்களின் ஒப்புதலினுலும் இணக் கத்தினுலுமே ஏற்பட்டதாகும். திட்டமிடுதல் என் பது பரந்து விரிந்த ஒன்று. அது மத்திய-மாநில அரசு களுடைய சகல நடவடிக்கைகளையும் தன்னகத்தே ஆட்கொண்டு விட்டது. கலை, இலக்கியம் மற்றும் பந்தய விளையாட்டுக்களைக் கூட அது விட்டு வைக்க வில்லை ..... எனவே, திட்டமிடுதலை ஒரு வகையில் "சர்வாதிகாரத் தன்மையைக் கொண்டது" என்று கூட நாம் குறிப்பிடலாம். ஆனல் "சர்வாதிகாரத் தன்மை" என்ற சொல் கொடுமையுடன் தொடர் புடையதால் 'திட்டமிடுதல்' என்பதை "விரிவான தொன்று" (Comprehensive) என்று மட்டும் நாம் கூறித் திருப்தி கொள்வோமாக."[1]

— கே. சந்தானம்.

பண்டித நேரு அவர்களால் தரப்பட்ட அரிய திட்டங்களில் ஒன்ருன "சமுதாய, பொருளாதாரத் திட்டமிடுதல்" (Social and Economic Planning) மாநிலங்களின் கட்டுப்படுத்தப்பட்ட, குறுகிய சுயாட்சிக்குள் ஊடுருவிச் சென்று, கடந்த 25 ஆண்டு களில் மத்திய அரசை மிகப் பெரிய ஒரு வல்லரக்கனைப் போல் மாற்றியமைத்து விட்டது. அரசமைப்புச் சட்டத்தை உருவாக் கியவர்கள் கூடத் திட்டமிடுதலின் மூலமாக மத்திய அரசு இத் துணைச் சர்வாதிகாரத் தன்மையை எதிர்காலத்தில் பெற்று விடும் என்பதை அன்றைய நாளில் எதிர்பார்க்க வில்லை.

---

1 Union State Relations in India [1963] Pages 47-48

அரைக் குறைக் கூட்டாட்சி அமைப்பைக் கொண்ட இந்தியத் துணைக் கண்டம் " திட்டமிடுதல் " மூலமாக ஒரு முதன்மை யான ஒற்றை ஆட்சி நாடாகத் தற்போது மிளிர்ந்து நிற்கிறது. அதன் வழி " மாநில சுயாட்சியும் " வெறும் கானல் நீராக ஆகி விட்டது. அதனைப் பற்றி இங்கு விரிவாகப் பரிசீலிப்போம்.

## I
## திட்டக்குழுவிற்குச் சட்ட மூலமில்லை

அரசமைப்புச் சபையில் நடந்த விவாதங்களை நாம் ஊன்றிப் பார்த்தால், "திட்டமிடுதல்" பற்றிய கொள்கை விளக்கங்களும் விவாதங்களும் அங்கு அதிகமாக நடந்திருப்ப தாகத் தெரியவில்லை. அரசியல் மற்றும் நிதி அதிகாரங்களின் சின்னஞ்சிறு கூறுகள் பற்றிக்கூட, நமது அரசமைப்புச் சட்டத் தில் விரிவான சட்டவிதிகள் செய்யப்பட்டிருப்பதை நாம் காணலாம். ஆனால் திட்டமிடுதல் பற்றித் தனிச் சட்டவிதிகள் எதுவும் அதில் செய்யப்பட வில்லை.

அரசமைப்பின் நான்காம் பகுதியில் "அரசினுடைய நெறி முறைக் கொள்கைகள்" (Directive Principles of State Policy) என்ற தலைப்பின் கீழ் வரும் பல சட்டவிதிகள் மத்திய - மாநில அரசுகள் எவ்வகையில் இந்திய மக்களின் பொருளர்தார, சமுதாய முன்னேற்றங்களைப் பெருக்க வேண்டும் என்பது பற்றிப் பேசுகின்றன. அதிலும் கூட, " திட்டமிடுதல் " என்ற சொல்லும் " சமுதாயப் பொருளாதாரத் திட்டமிடுதல் "(Social and Economic Planning) பற்றிய விளக்கங்களும் முழுமையாகத் தரப்படவில்லை.

ஆனால் VII-ஆம் இணைப்பில் (VII - Schedule) கொடுக்கப் பட்டுள்ள மத்திய - மாநிலப் பொதுப் பட்டியலில் (Concurrent list) 20-ஆம் பதிவில் மட்டும் "பொருளாதாரச் சமூகத் திட்டங்கள் அமைத்தல் " எனக் கண்டுள்ளது. இந்தப் பதிவு, பொதுப் பட்டியலில் வருவதால் மத்திய அரசும் மாநில அரசுகளும் "திட்டமிடுதலைச் செய்வதற்குரிய சட்டங்களைச் செய்யும் அதிகாரத்தைப் பெறுகின்றன. எனவே, "திட்டமிடுதலை"ச் செய்வதற்கு முன்பாக சம்பந்தப்பட்ட மத்திய-மாநில அரசுகள் முறையே நாடாளு மன்றத்திலோ அல்லது மாநிலச் சட்ட மன்றத்திலோ அதற்குரிய தெளிவானதொரு சட்டத்தை நிறை வேற்ற வேண்டும். அதன் பின்னரே " திட்டமிடுதலை " செயல் படுத்தவேண்டும் என்பது தெளிவாகிறதல்லவா ?

திட்டமிடுதலுக்காக, முதலில் சட்டமியற்றப்பட வேண்டு மெனக் கூறும்போதே, ''திட்டமிடுதல்'' என்ற அரசுக் கொள் கை எப்படி, யாரால், எந்த வித அமைப்பின் மூலமாக, எந் தெந்த முறையில் செயல்படுத்தப்பட வேண்டு மென்ற சட்ட விதிகளை யெல்லாம் அச் சட்டத்தில் அரசமைப்புச் சட்டத்திற் குட்பட்ட முறையில் தொகுக்க வேண்டும் என்பதும் பெறப் படுகிறது. சான்ருக நமது மத்திய அரசு திட்டமிடுதலை அமைத்து நடைமுறைப்படுத்த வேண்டு மெனில் நாடாளு மன்றத்தின் மூலமாக அதற்குரிய சட்டத்தை முதலில் நிறை வேற்ற வேண்டும். அச் சட்டத்தில் பொருளாதாரத் திட்டங் களைத் தீட்டக்கூடிய ஒரு குழு (Commission), அதற்குரிய அதி காரங்கள், அதற்கும் மாநில அரசுகளுக்கு மூள்ள தொடர்பு, மற்ற அதிகாரிகளுக்கும்-அரசமைப்பு நிர்வாகிகளுக்கும்-அந்தத் திட்டக் குழுவிற்குமுள்ள தொடர்பு போன்ற பல செயல்முறைக் கூறுகள் ஆகியவை அச்சட்டத்தில் இடம் பெற வேண்டும். ஒருக்கால் அச்சட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ள விதி முறைகள், அரசமைப்புச் சட்டவிதிகளுக்கு முரணனவையாக இருந்தாலோ அல்லது அரசமைப்பில் தரப்பட்டுள்ள மாநில அதிகாரங்களைப் பாதிப்பதாக இருந்தாலோ அச் சட்டத்தை எதிர்த்து அதற் குரிய பரிகாரங்களை அரசியல் சட்ட ரீதியாக மாநிலங்கள் தேடிக் கொள்ள முடியும்.

நமது நாட்டில் சென்ற 24 ஆண்டுகளில் பல ஐந்தாண்டுத் திட்டங்கள் நிறைவேறி முடிந்து விட்டன. அவைகளை உரு வாக்கிச் செயல்படுத்தும் " திட்டக் குழுவும் " ( Planning Commission ) பல்லாண்டுகளாக இயங்கிக் கொண்டிருக்கிறது. ஆனல் அத்திட்டக் குழுவிற்குரிய சட்ட முகாந்தரம் எதுவும் இதுவரை மத்திய அரசால் செய்யப்படவில்லை. ஐந்து ஆண்டு களுக்கொருமுறை உருவாகும் நிதி ஆணைக்குழு (Finance Commission) கூட அரசமைப்புச் சட்டத்தின் 280-ஆம் சட்ட விதியால் நியமனம் செய்யப்படுகிறது. ஆனல் ஐந்தாண்டுத் திட்டங்களை உருவாக்கும் ''மத்தியத் திட்டக் குழு'' (Planning Commission) ஏற்படுத்தப்பட்டதற்கும் நடைமுறையில் இயங் குவதற்கும் நமது அரசமைப்புச் சட்டம் ஆதாரமாய் அமைவ தில்லை; வேறு எந்த ஒரு தனி நாடாளு மன்றச் சட்டமும் அதற்குரிய சட்ட அனுமதியை வழங்கவுமில்லை.

மத்திய அரசையும் மாநில அரசுகளையும் இந்தியப் பொருளா தாரத்தையும் மத்திய-மாநில நிர்வாக நிதி உறவுகளையும் மாநில சுயாட்சியினையும், தன்னிச்சைபோல ஆட்டிப்படைக்கும் திட்டக்

குழுவை 1950-ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் பதினைந்தாம் நாளில் மத்திய அமைச்சரவை ஒரு சாதாரணத் தீர்மானத்தை மட்டும் (தீர்மான எண். 1. P (c) 1950) நிறைவேற்றி உருவாக்கி வைத்துள்ளது. எனவே, திட்டக்குழுவே சட்டத்திற்குப் புறம்பான தோர் அமைப்புத்தான்,

"திட்டக்குழு சட்டப்படி உருவாக்கப்பட வில்லை. எனவே அதனுடைய முடிவுகளுக்கு நான் கட்டுப்பட வேண்டிய அவசி மில்லை" என்று ஒருக்கால் எந்த மாநிலமாவது வாதிட்டதெனில் அரசியலமைப்புச் சட்டப்படி அது சரியான–முறையான–வாத மாகும். தவிர, திட்டக்குழுவின் முடிவுகளுக் கேற்றபடி, மாநில அரசுகள் நடக்க வேண்டுமென மத்திய அரசு சட்டப்படி கட்டாயப் படுத்தவும் முடியாது. ஆனால், அவ்வகை விவா தத்தை எந்த மாநில அரசும் கிளப்புவதற்குத் தயாராயில்லை. ஏன்?

கேரளா நீங்கலாக மற்ற எல்லா இந்திய மாநிலங்களிலும் ஏறத்தாழ 1967–ஆம் ஆண்டுவரை, காங்கிரஸ் கட்சியே அரசோச்சிற்று. அவ்வப்போது சில மாநிலங்களில் மட்டும் குடியரசுத் தலைவரின் ஆட்சியும் நடைபெற்றது. அதாவது மத்திய அரசின் ஆட்சியும் நடைபெற்றது. மத்திய – மாநில அரசமைப்புச் சட்டவிதிகளை அகில இந்தியக் காங்கிரஸ் கட்சி ஒரு பக்கம் தனியாக ஒதுக்கி வைத்துவிட்டு, தனது காரியக் கமிட்டி (Working Committee) என்ற கட்சி அமைப்பின் மூல மாகக் கொள்கை வகுத்து இந்தியாவைத் தன்னிச்சைப்படி ஆண்டு வந்தது. எனவே, திட்டக்குழுவிற்குச் சட்டமூலமில்லாத தால், அது மாநில அதிகாரங்களையும் உரிமைகளையும் ஊடுருவி விட்டதென உரிமைக்குரல் கொடுப்பதற்கு எந்த மாநிலக் காங்கிரஸ் அரசுக்கும் நாதியில்லாமல் போய்விட்டது.

"காங்கிரஸ் மேலிடம்" செய்யும் முடிவை—அரசமைப்புச் சட்டத்திற்கு உட்பட்டதானாலும் சரி, அல்லது மீறியதானாலும் சரி—மாநிலக் காங்கிரஸ் கமிட்டிகள் அப்படியே ஏற்றுக்கொண் டன. மாநிலக்காங்கிரஸ் கமிட்டிகள் ஏற்றுக் கொண்ட அம்முடிவு களை—அவை மாநில உரிமைகளை ஊடுருவினாலும் சரி, அல்லது மாநில சுயாட்சியையே அழித்தாலும் சரி, அதைப் பற்றிக் கிஞ் சித்தும் கவலைப்படாமல்—மாநில அரசுகள் அப்படியே ஏற்றுக் கொண்டு செயல்பட்டன. அஃதாவது அன்றைய மாநிலக் காங்கிரஸ் அரசுகள், மத்தியக் காங்கிரசிற்கும் அதன் மூலமாய்

மத்திய அரசிற்கும் கீழ்ப்படிந்து நடக்கும் உண்மையான ஊழியர்களாக, மத்திய அரசின் கட்டளைகளை நிறைவேற்றி வந்தன. எனவே, ''திட்டமிடுதல்'' பற்றி மத்திய அரசைச் சாடுவதற்கு எந்த மாநிலக் காங்கிரஸ் அரசும் தயாராயிருக்க வில்லை.

திட்டக் குழுவின் முடிவுகளையும் திட்டங்களையும் மாநில அரசுகள் தாமாகவே ஏற்றுக் கொள்வதற்கு இன்னொரு காரணமும் உண்டு. அதாவது திட்டத்திற்கு நிதியளித்தல்; திட்டங்களுக்காக மத்திய அரசு அளிக்கக்கூடிய பிருமாண்டமான நிதி உதவிகளை எந்த மாநிலமும் புறக்கணிக்கத் தயாராயில்லை.

ஆகவே, இவ்வகையில் ''அரசியல்'' மற்றும் ''நிதி''க் காரணங்களால் மாநிலங்கள் திட்டக்குழுவின் கட்டுக்குள் வந்து, தாமாகவே சிக்கிக் கொள்ளும் என்று தேசியத் தலைவர்கள் கருதினார்கள். அதன்படியே மாநிலங்களும் மத்திய அரசு விரித்த பட்டு வலைக்குள் தாமாகவே வீழ்ந்து விட்டன. '' திட்டக் குழு '' பற்றிய சட்டப் பிரச்சினையும் எழவில்லை; திட்டக்குழுவும் சட்ட அனுமதியின்றியே இன்னும் இயங்கி வருகிறது. மத்திய அரசுக்கும் மாநில அரசுகளுக்கும் இடையில் அரசமைப்புச் சட்டத்தால் உருவாக்கப்பட்ட அதிகார எல்லைக் கோடு மெல்ல மெல்ல மங்கி, 'திட்டமிடுதல்' காரணமாக இப்போது முழுமையாக மறைந்தும் போயிற்று. மாநிலங்களே அவற்றின் சுயாட்சி உரிமைகளை மத்திய அரசிற்கு அடகு வைத்து விட்டன. அதற்குக் காங்கிரஸ் கட்சியே முழுப் பொறுப்பாகும்.

பண்டித நேரு அவர்கள், திட்டக் குழுவைப் பற்றிக் குறிப்பிடும் போது,

> ''நாம் ஒரு கூட்டாட்சி அமைப்பைச் சார்ந்தவர்கள்; திட்டக் குழு, பல மாநிலங்களை ஒருங்கிணைத்துத் திட்டம் போடுவதன் மூலமாக அவைகளை வளர்ச்சியடையச் செய்துள்ளது. அந்தத் திட்டக் குழு இல்லாவிட்டால் இக்காரியங்களை மத்திய அரசு செய்திருக்க முடியாது. ஏனெனில் மத்திய அரசு மாநில உரிமைகளில் அத்துமீறிப் பிரவேசிக்கின்றது என்ற சிக்கல்கள் உடனே எழுந்திருக்கும்.'' 2

என விளக்குகிறார்.

---

2 Loksabha Debates, 3rd Series, Vol. XXIII, No. 16, 11-12-1963, Coln. 4206

பண்டிதநேரு அவர்களின் இந்தக் கூற்றிலிருந்தே, திட்டக் குழு சட்டப்படி ஏன் அமைக்கப்பட வில்லை என்பதற்குரிய காரணம் தெளிவாக விளங்கும். சட்டப்படித் திட்டக் குழுவை அமைத்திருந்தால், மாநில அரசுகளின் உரிமைகளை மத்திய அரசு மறைமுகமாகப் பறித்திருக்க முடியாது.

எனவே மாநில அதிகாரங்களை மத்திய அரசு மறைமுகமாகக் கைக் கொள்வதற்காகத் தான். "திட்டக் குழுவையும்", "திட்ட மிடுதலையும்" மத்திய அமைச்சரவையின் ஒரு தீர்மானத்தால் உருவாக்கினார்கள் என்பதை, பண்டித நேரு அவர்களே ஒப்புக் கொள்கிறார்.

இந்தியத் தலைமை நீதிமன்றத்தின் (Supreme Court of India) முன்னாள் தலைமை நீதிபதியான டாக்டர் கே. சுப்பாராவ் அவர்கள் திட்டக் குழுவைப் பற்றிக் குறிப்பிடும் போது,

> "......இந்தியாவில் உருவாக்கப்பட்ட 'திட்டக்குழு, அரசிய லமைப்புச் சட்டவிதிகளுக்கு முரணாகச் செயல்படுகிறது. மாநிலங்களிலும் மத்திய அரசிலும், ஒரே கட்சி (காங்கிரஸ்) அரசோச்சி வந்ததால், இது சாத்தியமா யிருந்தது. மத்திய அரசின் பல அமைச்சர்களுடன், திட்டக் குழு நெருங்கிய தொடர்பைக் கொண்டிருந்ததாலும் நாட்டினுடைய பொருளாதாரத்தைக் கட்டி ஆளக்கூடிய அதிகாரத்தை அது பெற்றிருந்ததாலும் திட்டக் குழு, பெருமையில் உயர்ந்து நின்றது. பல்லாண்டு காலமாக இத்திட்டக் குழு, மத்திய அமைச்சரவைக்கும் மேற்பட்ட ஓர் 'உயர்மட்ட அமைச்ச ரவையாக' (Super Cabinet) வளர்ந்து விட்டது. திட்டக் குழுவின் மூலமாக, மாநிலப் பகுதிக்கான திட்டத்தையும் அதைச் செயற்படுத்தும் அதிகாரத்தையும் மத்திய அரசு, தன்னிடமே இருத்தி வைத்துக் கொண்டது." 3

எனக் கருத்தறிவிக்கிறார்.

திட்டக்குழு, சட்டத்திற்குப் புறம்பானதோர் அமைப்பாக இருந்தாலும்கூட, மிகப் பெரிய செல்வாக்கோடு அது அமைச் சரவைக்கும் மீறியதோர் அமைச்சகத்தைப் போல், மாநிலங் களின் எஜமானாக, எப்படி இயங்கி வர முடிந்தது என்பதனை டாக்டர் கே. சுப்பாராவ் அவர்கள் தெளிவுபடுத்துகிறார்.

---

3 The Indian Federation, by Dr. K. Subba Rao. P. 51.

## II
## திட்டக் குழு

சமுதாயப் பொருளாதாரத் திட்டமிடுதலுக்காகவே உரு வாக்கப்பட்ட திட்டக்குழுவிற்குப் பல நோக்கங்களும் பணிகளு முண்டு. தொடக்கத்தில் அதன் பணிகள் தெளிவாக வரை யறுக்கப் பட்டிருந்தன. ஆனால் ஐந்தாண்டுத் திட்டங்கள் வளர வளரத் "திட்டக் குழுவும்" தனக்கு விதிக்கப்பட்ட பணி எல்லைகளிலிருந்து வெகுதூரம் முன்னேறிச் சென்று, தற்போது மத்திய அரசின் "உயர் மட்டப் பொருளாதார அமைச்சகம்" (Super Economic Ministry) என்று சொல்லக்கூடிய அளவிற்கு வளர்ந்து விட்டது. திட்டக் குழுவின் இவ்வகைப் பயங்கர மான வளர்ச்சி நிலைக்கு மத்திய அமைச்சரவையும் உறு துணை யாக நின்றன.

ஆரம்ப காலத்தில் திட்டக் குழுவிற்கு வரையறை செய்யப் பட்ட நோக்கங்களையும் அதன் பணிகளையும் இப்போது பார்ப் போம். 4

1. நாட்டினுடைய பொருள்கள், மூலதனம், மனித சக்தி, தொழில் நுணுக்க வல்லுநர்கள் ஆகியவை பற்றிக் கணக் கெடுத்தல்; நாட்டினுடைய தேவைக்கு இவை போத வில்லையெனில், இவற்றைப் பெருக்கக் கூடிய வழி வகை களைப் பற்றி ஆராய்தல்.

2. நாட்டினுடைய ஆதார வளங்களை (Resources) தக்கமுறை யில் பயன்படுத்தித் திட்டங்களைத் தீட்டுதல்.

3. திட்டங்களின் முதன்மையை (Priority) வரிசைக் கிரமமாக நிர்ணயப்படுத்துதல். திட்டத்தை நிறைவேற்றுவதற்குரிய மட்டங்களைத் (Stages) தீர்மானித்தல்; ஒவ்வொரு மட்டத்தி லும் அவை முறையாக நடைபெறுவதற் குண்டான ஆதாரங்களைப் பிரித்தொதுக்குதல்,

4. பொருளாதார வளர்ச்சியைத் தடுக்கக் கூடிய சிறப்புக் கூறு களைச் சுட்டிக் காட்டுதல்.

---

4 Cabinet Secretariat Resolution (Planning), No. 1. P (c) - 1950 Dated 15—3—1950;

5. அவ்வப்போது உருவாகும் அரசியல் சமுதாய சூழ்நிலைகளை யொட்டி, திட்டத்தை வெற்றிகரமாக நிறைவேற்றுவதற் கான நிலைமைகளைத் தீர்மானித்தல்.

6. திட்டங்களை, அதன் ஒவ்வொரு மட்டத்திலும், முழுமையாக வெற்றியடைவதற்குத் தேவையான திட்ட இயந்திரத்தின் (Planning Machinary) தன்மையைத் தீர்மானித்தல்.

7. திட்டத்தின் ஒவ்வொரு பகுதியை நிறைவேற்றும் போதும் அதன் வளர்ச்சியை அவ்வப் போது தெளிவாக்குதல் ; அப்படித் தெளிவாக்கும்போது அதற்குத் தேவையான கொள்கை மற்றும் வழி முறைகளைச் சரிக்கட்டிக் கொள் வதைப் பற்றிப் பரிந்துரைத்தல்.

8. அவ்வப் போது நாட்டில் இருக்கக் கூடிய பொருளாதார சூழ்நிலை, நடப்புக் கொள்கைகள், வழி முறைகள் மற்றும் வளர்ச்சித் திட்டங்கள் ஆகியவற்றைக் கருத்தில் கொண்டு, அதற்குத் தேவையான இடைக்காலப் பரிந் துரைகளையும் (Interim Recommendations) துணைப் பரிந் துரைகளையும் (Subsidiary Recommendations) வழங்குதல்.

9. திட்டக்குழுவிற்கு அளிக்கப்பட்டுள்ள கடமைகளை ஒழுங் காக நிறைவேற்றக் கூடிய வகையில், மத்திய அரசாலும் மாநில அரசுகளாலும் பரிசீலனைக்குத் தரப்படும் குறிப்பான பிரச்சனைகளைப் பரிசீலனை செய்து அதற்குரிய பரிந்துரைகளைச் செய்தல்.

திட்டக் குழுவின் பணிகளையும் கடமைகளையும் ஒரு கணம் ஆழ்ந்து படித்தால், இந்திய நாட்டினுடைய பொருளாதாரக் கொள்கைகளை உருவாக்குவதில், அது எத்துணைப் பெரும்பங்கை வகிக்கிறது என்பதை நாம் புரிந்து கொள்ளலாம். இந்தியாவி னுடைய முழுப் பொருளாதாரத் தலைவிதியையும் எழுதக்கூடிய மிகப் பெரிய பணியே, திட்டக்குழுவின் பணி.

ஆனால் திட்டக்குழுவின் வரையறுக்கப்பட்ட பணிகளிலும் நோக்கங்களிலும், ''கணக்கெடுத்தல்;'' ''வழி வகைகளை ஆராய் தல்;'' ''திட்டங்களைத் தீட்டுதல்;'' ''ஆதாரங்களைப் பிரித்தொதுக் குதல்;'' ''சிறப்புக் கூறுகளைச் சுட்டிக் காட்டுதல்;'' ''நிலைமை களைத் தீர்மானித்தல்;'' ''திட்ட இயக்கத்தின் தன்மையைத்

தீர்மானித்தல்;'' ''பரிந்துரைத்தல்'' என்றசொற்களேபயன்படுத்தப் பட்டுள்ளன. பொதுவாக, அது ஓர் ஆலோசனைக் குழுவின் பணிகளை மட்டும் செய்ய வேண்டும் என்பதே அச்சொற்களின் பொருளாகும்.

மத்திய அரசோ, அல்லது மாநில அரசுகளோ, சில குறிப்பிட்ட பிரச்சனைகளின் பேரில் ஆலோசனை வழங்க வேண்டுமென்றுத் திட்டக்குழுவைப் பணித்தால், திட்டக் குழுவும் அவை பற்றித் தன் பரிந்துரைகளைச் செய்ய வேண்டும்.

ஆனால், உண்மையில் நடப்பதென்ன ?

திட்டக்குழு அதற்கு வழங்கப்பட்ட அதிகார எல்லைக்குள் நின்று, திட்டங்களைத் தீட்டும் அளவோடும் அதற்குரிய கணிசமான பொருளாதார மூலங்களைச் சேகரித்துக் கொள்கை வகுப்பதோடும் பரிந்துரைகளைச் செய்வதோடும் நின்று விடுவதில்லை.

மாறாக், நிர்வாகப் பொறுப்பைக் கொண்ட சர்வ சக்தி வாய்ந்த ஓர் அரசு நிறுவனத்தைப் போன்றே, நடைமுறையிலும் செயலாக்கத்திலும் திட்டக்குழு பணியாற்றி வருகிறது.

அரசியலமைப்புச் சட்டத்திற்கு உட்படாத ஓர் ஆலோசனைக்குழு (திட்டக்குழு) அரசமைப்புச் சட்டத்தின் விதிகளையெல்லாம் மீறி அரசமைப்பில் குறிப்பிட்ட மாநில அரசுகளின் அதிகாரங்களுக்கு முரணாகவும் செயல்பட்டு வருகிறது.

நாட்டின் எல்லாப் பொருளாதாரத் துறைகளையும் அது ஆட்கொண்டு விட்டது. மத்திய அரசையும் உள்ளடக்கிக் கொண்டு விட்டது; மாநிலத் தன்னாட்சியையும் அடிமை கொண்டு விட்டது; திட்டக்குழுவின் இந்தப் பயங்கர வளர்ச்சியை எல்லா அரசமைப்பு வல்லுநர்களும், ''ஒற்றை ஆட்சியைப் பேணும் வளர்ச்சியெனக்'' கண்டிக்கின்றனர்.

அரசியல் சட்ட வல்லுனர் திரு. அமல்ரே அவர்கள், திட்டக் குழுவைப் பற்றிக் கருத்துச் சொல்லும் போது,

''ஐந்தாண்டுத் திட்டங்களைச் செயல்படுத்துவதால், நாட்டினுடைய கூட்டாட்சி முறை, பொதுவாக ஓர் ஒற்றை ஆட்சி

> முறையில் இயங்கி வருகிறது. மாநில சுயாட்சி அதனுடைய மிகக் கீழான நிலைக்குத் தள்ளப்பட்டுள்ளது என்ற வலிவான புகார் இந்தியாவில் பரவலாக நிலவுகிறது.''5

எனக் குறிப்பிடுகிறார்.

இந்த அளவிற்குத் திட்டக்குழு வளர்ந்து விட்டதற்குக் காரணம் அதனுடைய அமைப்பும் செயல்முறையுமாகும். அது பற்றி இனிப் பார்ப்போம்.

## திட்டக்குழுவின் அமைப்பு

''திட்டக்குழுவிற்கு''ச் சட்ட மூலம் இல்லை என்பதைப் பார்த்தோம். திட்டக்குழுவில் எத்துணை உறுப்பினர்கள் இருக்க வேண்டும்? அவர்கள் தகுதி என்ன? என்பது பற்றியெல்லாம் வரையறைப்படுத்தி, இதுவரை நிர்ணயிக்கப்படவில்லை. யாரை வேண்டுமானாலும் - எத்துணை உறுப்பினர்களை வேண்டுமானாலும்-அதில் இடம் பெறச் செய்யக் கூடிய உரிமைகளை மத்திய அரசு, தன்னகத்தில் வைத்துக் கொண்டுள்ளது. திட்டக்குழு எத்துணைக் காலம் இயங்க வேண்டும் என்றும் வரையறுக்கப்பட வில்லை.

திட்டக்குழுவின் அமைப்பே கூட அசாதாரணமானது. அரசியல் உறவே இருக்கக் கூடாத திட்டக்குழுவிற்கு நாட்டின் தலைமையமைச்சரே தலைவர்; பல மத்திய அமைச்சர்கள் அதன் உறுப்பினர்கள். எனவே, திட்டக்குழுவை ஓர் அரசியல் நிறுவனமாகவே கொள்ளலாம். நியாயமான அறிவுரை கூறுவது மட்டும் தான் அதனுடைய வேலையாக இருக்க வேண்டும். ஆனால் நாட்டின் பொருளாதாரத் துறைகள் முழுவதையும் மத்திய அரசையும் மாநில அரசுகளையும் கூடத் தன்னுடைய கைப்பிடிக்குள் கொண்டு வந்து விட்டது திட்டக்குழு.

## உறுப்பினர்களும் ஆலோசகர்களும்

திட்டக்குழுவின் உறுப்பினர்கள் எண்ணிக்கையும் அவர்களை நியமனம் செய்யும் முறையும் அவ்வப்போது மாறி வந்துள்ளன. மூன்றும் ஐந்தாண்டுத் திட்டம் வரை மொத்தம் 13 உறுப்பினர்கள் திட்டக்குழுவில் இடம் பெற்றிருந்தனர்.

---

5 Inter Governmental Relations in India by Dr. Amal Ray, (1966) Page 114.

தலைமையமைச்சர் அதன் தலைவர். மிக முக்கியமான 5 மத்திய அமைச்சர்கள் அதன் உறுப்பினர்கள். மத்திய அமைச்சரவையின் அரசுச் செயலாளரே திட்டக் குழுவின் செயலாளராவார். 1967-ஆம் ஆண்டினளவில், அதில் 446 உயர்மட்ட அதிகாரிகள் பணி புரிந்தனர். அதனுடைய மொத்தப் பணியாளர்கள் 1816 பேர். ஆண்டொன்றுக்கு அதன் செலவு ஏறத்தாழ 1½ கோடி ரூபாய்; இந்திய அரசின் மிகப் பெரிய நிறுவனங்களில் திட்டக் குழுவும் ஒன்று.

எனவே மத்திய அரசின் கருத்தே, திட்டக்குழுவின் கருத்தாகிவிடும். திட்டக்குழுவுக்கும் மாநிலங்களுக்குமிடையே அதன் ''நான்கு திட்ட ஆலோசகர்கள்'' (Programme Advisers) பாலம் போல இயங்குகின்றனர். மத்திய உதவி பெறும் மாநிலத் திட்டங்களைக் கண்காணிக்கவும் அவற்றின் நிதி நிர்வாகச் சிக்கல்களைத் தீர்த்து வைக்கவும் திட்ட ஆலோசகர்கள் பொறுப்பானவர்களாவர். அவை போக, மத்திய அமைச்சகங்களுக்கும் மாநில அமைச்சகங்களுக்கும் அக்கறையுள்ள தனிப் பிரச்சினைகளிலும் அவர்கள் பணிபுரிகின்றனர்.

**திட்டக் குழுவின் பகுதிகள்:**

திட்டக் குழுவில் இருபதுக்கும் மேற்பட்ட தொழிற்துறைப் பகுதிகளும் பிரிவுகளும் உண்டு. அவைகளை ஐந்து வகைப் பகுதிகளாகப் பிரிக்கலாம்.

1. ஒருமுகப்படுத்தும் பகுதிகள் (Co-ordination Divisions).
2. பொதுப் பகுதிகள் (General Divisions).
3. பொருள் பகுதிகள் (Subjects Divisions).
4. தனி வளர்ச்சித் திட்டங்களைப் பற்றிய பகுதிகள் (Special Development Programme Divisions).
5. திட்ட நிர்வாகப் பகுதிகள் (Programme Administrative Divisions).

இவை ஒவ்வொன்றிலும், பல சிறு பகுதிகள் தனித்துப் பணிபுரிகின்றன. இவற்றில் ஐந்தாவதாகக் குறிப்பிடப்பட்டிருக்கும் ''திட்ட நிர்வாகப் பகுதிகள்'' திட்டக்குழுவின் மிக முக்கியமான பகுதியாகும்.

திட்டக் குழுவுடனும் மாநில அரசுகளுடனும் தொடர்பு கொள் வதற்குரிய பணிகளை இந்தத் திட்ட நிர்வாகப் பகுதிகளே செயல் படுத்துகின்றன.

திட்ட ஆலோசகர்களுக்கும் திட்டக் குழுவிற்கும் தொழில் துறை நுணுக்க அடிப்படையில் மாநில வளர்ச்சித் திட்டங்களை ஆய்வு செய்ய உதவுவதற்கும், மாநிலங்களின் ஒவ்வொரு ஆண்டுத் திட்ட வேலைகளையும் ஐந்தாண்டுகளின் திட்ட வேலை களையும் ஒருமுகப் படுத்துவதற்கும் இப்பகுதி துணை புரிகிறது.

மேலும் இவை மாநில அரசிற்கும் திட்டக்குழுவிற்கு மிடையே பேச்சு வார்த்தைகள் நடைபெறவும் ஏற்பாடு செய் கின்றன. மாநிலத் திட்டங்களுக்கான மத்திய உதவியினை நிர்ண யிக்கக் கூடிய ''பொருளாதாரப் பகுதியின் நிதி மூலப்பிரிவுடன்'' (Financial Resources Section of Economic Division) இவை இணைந்து பணியாற்றுகின்றன.

''திட்ட ஆலோசகர்கள்'' என்னும் அதிகாரிகள் திட்டக் குழு வினுடைய ''கண்களையும் காதுகளையும்'' போன்றவர்கள். 1952–ஆம் ஆண்டு முதல் 1970-ஆம் ஆண்டு வரை இந்தப் பொறுப்பினை 21 அதிகாரிகள் தாங்கி வந்துள்ளனர். ஆனால் இவர்களில் ஒருவர்கூட ஓராண்டு காலத்திற்குத் தொடர்ந்து இப்பதவியை வகிக்கவில்லை.

### திட்டங்களை அமைத்தல்

மாநிலங்களின் உரிமைகளைப் பற்றிக் கவலைப்படாமல், அகில இந்தியா முழுவதற்குமான பொருளாதாரத் திட்டங்களை யெல்லாம் 'திட்டக்குழு' தானே வகுத்து நிறைவேற்றுகின்றது. பரந்து விரிந்த அதன் பணிகளைப் பற்றி நாம் மேலோட்டமாகப் பார்த்தால் கூடத் தெரிந்து கொள்ள முடியும்.

திட்டக்குழு, மத்திய அரசிற்கும் மாநில அரசுகளுக்கு மிடையே பொதுவாக இயங்கக் கூடிய ஒரு நடுநிலையான நிறுவன மாக அமைக்கப்படவில்லை. மத்திய அரசினுடைய ஒரு பகுதி யாகவே அதனுடைய அமைப்பும் நடைமுறைகளும் அமைந்திருப்பது கண்கூடு.

திட்டக்குழு ஓர் ஐந்தாண்டுத் திட்டத்திற்கான பொது வடிவைத் தேசிய மட்டத்தில் முதலில் அமைத்துக் கொள்கிறது. பின்னர் அதற்காகும் செலவினத் தொகைகளையும், (அந்தத் திட்டத்தை நடைமுறைப்படுத்துவதற்குரிய)பரவலான கொள்கைகளையும், திட்டக்குழு வகுத்துக் கொள்கிறது. தேசிய மட்டத்தில் உருவாக்கப்பட்ட ஐந்தாண்டுத் திட்டத்தின் கூறுகளான மாநிலத் திட்டங்களுக்காகும் செலவுகளையும் மாநிலத் திட்டங்களை நிறைவேற்றுவதற்கான நடைமுறைக் கொள்கைகளையும் திட்டக்குழு, பின்னர் மாநிலங்களுக்குச் சுட்டிக் காட்டுகின்றது. திட்டக்குழுவால் சுட்டிக் காட்டப்பட்ட மாநில, ''மாநில நகல் திட்டத்தை'', (Draft Plan) அடிப்படையாகக் கொண்டு,மாநில அரசுகள் மாவட்ட மட்டங்களிலும், இலாக்கா மட்டங்களிலும் மாநிலத் திட்டத்தின் பகுதிகளை அமைக்கக் கோருகின்றன. அவை தரும் திட்டங்களை ஆய்வு செய்து மாநில அரசுகள் இறுதி முடிவெடுத்து, அந்த முடிவுகளைத் திட்டக்குழுவிற்கு அனுப்பி வைக்கின்றன. ஆனால் மாநில அரசுகளால் அனுப்பப்பட்ட மாநிலத் திட்டங்களை, மத்தியத் திட்டக்குழு அப்படியே ஏற்றுக் கொள்ளாது.

தமிழகத்தைப் பொறுத்த வரை, திராவிட முன்னேற்றக் கழக அரசு,10 ஆண்டுகளுக்குரிய தமிழகத் திட்டங்களை வகுப்பதற்காக ஒரு மாநிலத் திட்டக்குழுவையே நியமனம் செய்துள்ளது. அந்த மாநிலத் திட்டக்குழுவில்,பொருளாதார நிபுணர்களும் தொழில் துறை வல்லுநர்களும் மற்ற வகைகளில் துறை போகிய வல்லுனர்களும் அங்கம் வகிக்கின்றனர். தமிழகத் திட்டங்களைச் சமைப்பதற்காக மாவட்ட அதிகாரிகளையும் அரசு இலாக்காக்களையும் மட்டுமே மற்ற மாநில அரசுகளைப் போல் நமது தமிழக அரசு நம்பியிருக்க வேண்டுவதில்லை. அதற்கென்று ஒரு மாநிலத் திட்டக் குழுவே நமது மாநிலத்தில் செயல்படுகிறது,

மாநில அரசு அனுப்பிய மாநிலத் திட்டங்கள் பற்றி ''தேசிய வளர்ச்சி மன்றத்தில்'' (National Development Council) விவாதிக்கப் படுகின்றன. அதில் பங்கேற்கும் முதலமைச்சர்கள் மாநிலத் தேவைகளைப் பற்றிப் பொதுவாக வலியுறுத்துவார்களேயன்றி,மாநிலத் திட்டத்தில் நுணுக்கமான பகுதிகளைச் செம்மையாக எடுத்துரைக்க அவர்களால் இயலுவதில்லை. ஏனெனில், மாநிலங்களின் நகல் திட்டங்களை (Draft Plans) பொதுவாகத் ''தேசிய வளர்ச்சி மன்றம்'' விவாதிக்கும் போது, அத்திட்டங்களிலுள்ள நுணுக்கங்களையும் பொருளாதார விவரங்களுடன் கூடிய ஆலோசனைகளையும் தெளிவாக ஆராய்வதற்கு, போதிய

வாய்ப்புத் தரப்படுவதில்லை. மேலும் தேசிய வளர்ச்சி மன்றத்தின் உறுப்பினர்களாக இடம் பெறுபவர்கள், மத்திய அமைச்சர்களாகவும் மாநில முதல்வர்களாகவும் இருப்பதால் நீண்ட நெடிய ஆலோசனைகளைத்தேசிய வளர்ச்சி மன்றக்கூட்டங்களில் தர்க்கரீதியாகச் செய்வதற்கு அவர்களுக்குப் போதிய அவகாசமோ, தெளிவான பொருளாதார விபரங்களோ கிடைப்பதில்லை.

தேசிய வளர்ச்சி மன்றக் கூட்டங்கள் ஆண்டிற்கு இரண்டொரு நாட்களுக்கு மட்டும் கூடிக் கலைக்கிறதே யன்றி, திட்ட ஆலோசனைகளைப் பற்றி, மாநில அரசுகளை உண்மையிலேயே கலந்து செயல்படக் கூடிய அளவிற்குத் தேவையான, நிரந்தரமானதோர் அமைப்பாக, அது இயங்குவதில்லை. மாநிலங்கள் தத்தம் பொதுவான கோரிக்கைகளை வெளியிட்டுக் கொள்வதற்கான ஒரு மாமன்றமாக மட்டுமே இதுகாறும் தேசிய வளர்ச்சி மன்றம் பயன் பட்டு வந்திருக்கிறது. ஆக, ஒவ்வொரு மாநிலத்தின் திட்டங்கள், செலவினங்கள், குறைநிறைகள், நிதிப்பங்கீடுகள் ஆகியவை பற்றித் தேசிய வளர்ச்சி மன்றத்தில் அறுதியிட்டு இறுதியாக முடிவு செய்யப்படுவதில்லை.

சுருங்கக் கூறினால், மாநில ஆலோசனைகளைக் கேட்கக் கூடினோம்; பேசினோம்; கலைந்தோம் என்ற அளவிற்கு மட்டுமே, தேசிய வளர்ச்சி மன்றத்தின் நடவடிக்கைகள் நடைபெறுகின்றன.

இவ்வகையில் இயங்கும் தேசிய வளர்ச்சி மன்றத்தில் மாநில முதல்வர்கள் கலந்து கொள்வதைத்தான் ‘ஐந்தாண்டுத் திட்டங்களைத் தீட்டுவதில் மாநில அரசுகளும் பெரும் பங்கு பெறுகின்றன’ எனக் கூறுகின்றனர். அக்கூற்று எத்துணையளவிற்கு மெய்யானது என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டுமெனில் தேசிய வளர்ச்சி மன்றத்தைப் பற்றியும் நாம் அறிந்து கொள்ள வேண்டுமல்லவா?

## III

## தேசிய வளர்ச்சி மன்றம்
## (NATIONAL DEVELOPMENT COUNCIL)

1952ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்களில், இந்திய அரசின் தீர்மானம் மூலமாக (இந்திய அரசுத் தீர்மான எண்: 62/C.F. 50, 1952 ஆகஸ்டு,) திட்டங்களைப் பற்றி, பரிசீலிக்கக்கூடிய ஓர் உயர் மட்ட நிறுவனமான ‘‘தேசிய வளர்ச்சி மன்றம்’’ அமைக்கப்பட்டது.

திட்டக் குழுவின் உறுப்பினர்களும் மாநில முதல்வர்களும் மத்திய நிதி அமைச்சரும் அதன் உறுப்பினர்கள்; அதன் தலைவர் இந்தியத் தலைமை அமைச்சர்.

ஆண்டிற்கு ஒருமுறை அல்லது இருமுறை – இரண்டு நாட்களுக்கு மட்டும்—இம்மன்றம் கூடுகிறது. மத்திய அரசாங்கத்தினுடைய, பொதுக் கொள்கையைப் பற்றிய விளக்கத்தை, அவ்வப்போது தலைமையமைச்சர் தருவதற்கும் மாநிலங்களின் தேவைகளையும் இன்னல்களையும் மாநில முதல்வர்கள் வெளியிடுவதற்கும், இந்த மன்றம் ஒரு பொது நிறுவனமாக அமைந்துள்ளது.

### தேசிய வளர்ச்சி மன்றத்தின் நோக்கங்கள்

1. ஐந்தாண்டுத் திட்டங்களுக்கு ஆதரவாக, நாட்டினுடைய எல்லா வளங்களையும் திரட்டி வலிவாக்குதல்.
2. மிக முக்கியமான துறைகளில் பொதுவான பொருளாதாரக் கொள்கைகளை உருவாக்கி வளர்த்தல்.
3. நாட்டினுடைய எல்லாப் பகுதிகளும் பொருளாதாரச் சமத்துவத்தோடு இருக்கும் வகையில் அப்பகுதிகள் மிக விரைவாக வளர்ச்சியடைவதற்கும் உறுதுணையாக இருத்தல்.

   மேற்சொன்ன மூன்று நோக்கங்களை அடைவதற்காக, தேசிய வளர்ச்சி மன்றத்திற்கு சில பணிகளும் தரப்பட்டுள்ளன.

### தேசிய வளர்ச்சி மன்றத்தின் பணிகள்

1. ஐந்தாண்டுத் திட்டங்கள் செயல்படுவதை அவ்வப்போது ஆய்வு செய்தல்.
2. தேசிய வளர்ச்சியைப் பாதிக்கக்கூடிய மிக முக்கியமான சமுதாயப் பொருளாதாரக் கொள்கைகளைப் பரிசீலித்தல்.
3. ஐந்தாண்டுத் திட்டங்களில் உருவாக்கப்பட்ட குறிக்கோள்களை முறைப்படி அடைவதற்கும், ஐந்தாண்டுத் திட்டங்களில், பொதுமக்கள் தங்கள் பங்கினையும் முழு ஒத்துழைப்பையும் செலுத்துவதற்கான வாய்ப்பை ஏற்படுத்துவதற்கும் வளர்ச்சி பெறாத அனைத்துப் பிரிவு மக்களுக்கும் முன்

னேற்றத்தைக் கொடுப்பதற்கும், தேசிய வளர்ச்சிக்காக எல்லாக் குடிமக்களும் சரிசமமான தியாகத்தைச் செய்வதற்கான வழி முறைகளைக் காண்பதற்கும் தேவையான பல பரிந்துரைகளைச் செய்தல்.

எனவே, ஐந்தாண்டுத் திட்டங்களைப் பற்றிப் பொதுவாக விவாதிப்பதற்கும், குறைநிறைகளைத் தெளிவு படுத்திக் கொள்வதற்கும் தேசிய வளர்ச்சி மன்றத்தைத் தவிர வேறு கருத்தரங்குகள் கிடையாது. எல்லா மாநில முதல்வர்களும் மிகப் பெரிய ஐந்தாண்டுத் திட்டங்களைப் பற்றியும் மாநிலங்களுக்குக் கிடைக்க வேண்டிய பல திட்டங்கள், நிதி உதவிகள் மற்றும் இன்னபிற பொருள்களைப் பற்றியும், இக்குழுவில் ஆண்டிற்கொரு முறை விவாதிப்பதோடு மத்திய அரசின் திட்டம் பற்றிய நிலையும், அதன் தலைவரால் ( பிரதம மந்திரியால் ) அங்கே தெளிவாக்கப்படும்.

1952, 1953, 1954 ஆகிய ஆண்டுகளில் ஆண்டிற்கொரு முறையும்; 1955–இல் இரண்டு முறையும்; 1961-இல் மூன்று முறையும்; 1962–இல் ஒரு முறையும்; 1963–இல் இரண்டு முறையும்; 1964, 1965 மற்றும் 1966 ஆகிய ஆண்டுகளில் ஆண்டிற்கு ஒவ்வொரு முறையும் தேசிய வளர்ச்சி மன்றக் கூட்டங்கள் நடைபெற்றிருக்கின்றன என "நிர்வாகச் சீர்திருத்தக் குழுவினுடைய கற்றறிகுழு" (Study Teams of Administrative Reforms Commission) கூறுகிறது.

தேசிய வளர்ச்சி மன்றத்தில் மாநிலங்கள் எந்த அளவிற்கு ஐந்தாண்டுத் திட்டங்களைப் பற்றி விவாதித்து முடிவிற்கு வந்திருக்கும் என்பதை, 14 ஆண்டுகளில் நடைபெற்ற மொத்தம் 14 கூட்டங்களின் எண்ணிக்கையிலிருந்தே நாம் ஒருவாறு அறிந்து கொள்ளலாம். 14 ஆண்டுகளில் மூன்று ஐந்தாண்டுத் திட்டங்கள் நிறைவேறி முடிந்து விட்டதென்பதை நாம் கருத்தில் கொண்டு, அவற்றிற்காக நடைபெற்ற தேசிய வளர்ச்சி மன்றத்தின் கூட்டங்களையும் அவற்றோடு ஒப்பு நோக்கினால், எந்த அளவிற்கு ஐந்தாண்டுத் திட்டங்களில் பங்கேற்கும் வாய்ப்புக்கள் கிடைத்திருக்கும் என்பதை நாம் ஒருவாறு பரிந்து கொள்ளலாம்.

சகலமும் காங்கிரஸ் மயமாயிருந்தபோது ''தேசிய வளர்ச்சி மன்றம்'', காங்கிரஸ் காரியக் கமிட்டியின் ஒரு கூருகவே இயங்கி வந்தது என்று சொன்னுல் அது மிகையாகாது. அஃதாவது, மத்திய அரசின் சர்வ வல்லமை வாய்ந்த திட்டக்குழு எடுக்கும் முடிவுகளுக்கு இரப்பர் முத்திரையைக் குத்தும் பணியினை மட்டும் வெகு தீவிரமாய் நிறைவேற்றி வந்தது, தேசிய வளர்ச்சி மன்றம்.

1964–ஆம் ஆண்டுவரை, பண்டித நேரு அவர்கள் இதன் தலைவராக இருந்த காரணத்தினுல், மாநில முதல்வர்கள் கை கட்டி, வாய்பொத்தி நின்ற புனித இடம் இது. ஆனுல் 1967–ஆம் ஆண்டில் நடைபெற்ற பொதுத் தேர்தலுக்குப் பின் மாநிலங்களின் நிலை பற்றிய சில விளக்கங்களைத் தருவதற்காக வும் ஓரளவு இம்மன்றம் பயன்பட்டு வருகிறது.

திட்டக்குழுவினுடைய நூற்றுக்கணக்கான பகுதிகளும் (Divisions) ஆயிரக்கணக்கான பணியாளர்களும் இந்தியா முழு வதிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட பல வல்லுநர்களும் ஆண்டுக் கணக்கில் உட்கார்ந்து இலட்சக்கணக்கான புள்ளி விவரங்களைச் சேகரித்து, பல்லாயிரங்கோடி ரூபாய்கள் செலவிடப்படும் திட்டங் களை யெல்லாம் உள்ளடக்கி யிருக்கக்கூடிய ஐந்தாண்டுத் திட்டங் களை அலசிப் பார்த்து, ஆராய்ந்து, பரிசீலித்து, மாநிலங்களோடு விவாதித்து, உரிய முடிவுகளைச் செய்வதற்காக ஆண்டொன்றுக்கு 48 மணி நேர அவகாசத்தை மட்டுமே செலவழிக்கின்ற தேசிய வளர்ச்சி மன்றத்தின் உறுப்பினர்களது ''சாதனையை மந்திர சக்தி யின் சாதனைக்கெல்லாம் மீறிய ஒரு சாதனை'' என்று சொல்லலா மல்லவா? திட்டமிடுதலில் ஆண்டுக்கொருமுறை மாநிலங்களின் முதல்வர்கள் பங்குபெறும் அற்புதத்தை இந்தியத் துணைக் கண்டத்தைத் தவிர வேறு எந்த நாட்டிலும் காண முடியாது!

திட்டக் குழுவினுடைய ஆலோசனைகளின் பேரில் மத்திய அமைச்சரவை எடுக்கும் பல முடிவுகளையும், மாநிலங்கள் அட்டி யின்றி ஏற்றுக் கொள்வதற்கான ''மத்திய அரசின் ஒரு தனி இயந்திரத்தைப்'' போலவே ''தேசிய வளர்ச்சி மன்றம்'' செயல் பட்டு வந்துள்ளது.

தேசிய வளர்ச்சி மன்றத்தினுடைய சென்ற பல ஆண்டு களின் நடவடிக்கைகளை ஆய்ந்து பார்த்தால், அரசியல் அமைப்புச் சட்டத்தில் வரையறுக்கப்பட்ட பல மாநில

அதிகாரங்களைக் கூட நேரடியாகப் பாதிக்கக் கூடிய அளவிற்கு, மத்திய அரசின் சில முடிவுகளைத் தேசிய வளர்ச்சி மன்றம் ஏற்றுக் கொண்டுள்ளது என்பது தெரிய வரும். மாநில அரசுகளைக் கலந்து கொள்ளாமலே கூட, சற்றும் எதிர்பாரா முறையில் மாநிலங்களின் அதிகாரங்கள் பற்றிய சில அடிப்படையான முடிவுகளை அவசரகோலமாகத் தேசிய வளர்ச்சி மன்றம் எடுத்துள்ளது. அந்த முடிவுகள் மாநில சுயாட்சி உரிமைகளை முற்றிலும் பாதித்துள்ளன.

சான்றுகள்:—

1. ஆலையில் தயாரிக்கப்பட்ட துணிகள், சர்க்கரை, புகையிலை ஆகிய பொருட்களின் விற்பனை வரிகளை 1957–ஆம் ஆண்டு வரை மாநில அரசுகளே வசூலித்து வந்தன. அப்பொருள்களின் வரி விதிப்புரிமையை மத்திய அரசு எடுத்து கொண்டு, அந்த விற்பனை வரிக்கு மாறாக— குறிப்பிட்ட சதவீத அளவிற்குக் கூடுதல் கலால் வரியை (Additional Excise Duties) அப்பொருள்களின் மேல் மத்திய அரசு விதித்து, வசூலித்து — மாநிலங்களுக்கு அளிக்க வேண்டு மென்ற ஒரு திடீர்த் தீர்மானத்தை மாநில அரசு களின் பரிசீலனைக்குக் கூட அனுப்பாமல், தேசிய வளர்ச்சி மன்றக் கூட்டத்திலேயே முடிவு செய்யப்பட்டது.

மாநிலங்களைப் பொறுத்தவரை, மேற்சொன்ன பொருள் களைச் சார்ந்த விற்பனை வரி, மிக இன்றியமையாத மாநில வருவாயாகும். குறிப்பிட்ட மாநில அதிகாரங்களை ஒருமுறை மத்திய அரசிற்கு மாநிலங்கள் தந்துவிட்டால் அவற்றை மீண்டும் மாநிலங்கள் திருப்பிப் பெற முடியாது.

காங்கிரஸ் கட்சியின் ஆட்சி, மத்திய அரசிலும் மாநிலங் களிலும் நிலவி வந்ததால், தேசிய வளர்ச்சி மன்றக் கூட்டத்தில் கலந்து கொண்ட காங்கிரஸ் முதல்வர்கள், அதன் தலைவரான பண்டித நேரு அவர்களின் இந்த முடிவுக்குத் தலையாட்டி விட்டுக் கையொப்பமிட்டுவிட்ட காரணத்தினால், ஜவுளி, பட்டு, புகையிலை மற்றும் சர்க்கரை மீதான விற்பனை வரி உரிமையை என்றென்றும் மாநிலங்கள் இழந்து விட்டன.

மாநில வரிகளில், ''காமதேனுவைப்'' போன்றது அதன் விற்பனை வரி. விற்பனை வரி விதிக்கப்படும் பல பண்டங்களில், மிக அதிகமான வருவாயை ஈட்டிக் கொடுப்பவை, புகையிலை, பட்டு, ஜவுளி மற்றும் சர்க்கரை போன்ற பண்டங்கள். இத்துணை அளவு முக்கியமான மாநில வருவாய் இனங்களை மத்திய அரசிற்குக் கொடுத்துவிட்டு அதற்கு மாறாக ஒரு குறிப்பிட்ட கலால் வரிப் பங்கை மட்டும் மாநிலங்கள் பெற்றுக் கொள்ளக் கூடிய ஓர் அடிப்படையான முக்கிய முடிவைத் தேசிய வளர்ச்சி மன்றம், உடனடி முடிவாகச் செய்து கொண்டதிலிருந்தே, அதில் அங்கம் வகித்த மாநிலக் காங்கிரஸ் முதல்வர்களுடைய அடிமை நிலை, தெளிவாகப் புரியவில்லையா?

இழந்துவிட்ட இந்த உரிமையை (4 பொருள்களின் விற்பனை வரி அதிகாரத்தை) மீண்டும் திரும்பப் பெறுவதற்காகப் பல்லாண்டுகளாக மாநிலங்கள் முயற்சித்தும், இதுவரை அவைகளைத் திரும்பப் பெற இயலவில்லை. ஒவ்வொரு முறையும் அதற்கீடாக மத்திய அரசால் தரப்படும் கூடுதல் கலால் வரித் தொகையை அதிகப்படுத்தித் தரவேண்டுமென்று மத்திய அரசை, மாநிலங்கள் கெஞ்சிக் கூத்தாடி வருகின்றன.

2. 1962-ஆம் ஆண்டில் தேசிய வளர்ச்சி மன்றக் கூட்டத்தில் மத்திய அமைச்சர் ஒருவர் மிகப் பெரிய் ஆலோசனையொன்றை வெளியிட்டார்.

 பொது மக்களிடமிருந்து கடன்களைப் பெறுவதற்கு ஒரு குறிப்பிட்ட காலம் வரை, மத்திய அரசு மட்டும்தான் செல்ல வேண்டும். மாநிலங்கள், பொது மக்களிடம் கடன் பெறுவதற்காகச் செல்லக் கூடாது என்பதே அந்த அற்புத யோசனை.

தேசிய வளர்ச்சி மன்றத்தில் கலந்து கொண்ட பல காங்கிரஸ் முதல்வர்கள் அந்த யோசனைக்கு உடனே தலையாட்டி விட்டனர். தேசிய வளர்ச்சி மன்றத்திலேயே அதைப் பற்றித் திடீர் முடிவும் எடுக்கப்பட்டு விட்டது.

மக்களிடம் கடன் பெறக் கூடிய உரிமை, ஒரு மாநில அரசுக்குள்ள தனி உரிமை. அதில் தலையிடுவதற்கு மத்திய அரசுக்கு உரிமையில்லை. சில சூழ்நிலைகளில் தவிர மத்திய அரசு, கடன் பெற்ற பின்னர் தான் மாநில அரசுகள் கடன் பெற வேண்டும்

என்ற அரசமைப்புச் சட்டத்திற்கு மீறிய வகையில் தேசிய வளர்ச்சி மன்றம் மாநிலங்களைப் பாதிக்கின்ற திடீர் முடிவை எடுத்து விட்டது.

காரணம் என்ன?

மத்திய அரசிலும் மாநில அரசுகளிலும் ஒரே கட்சியின் (காங்கிரஸ் கட்சியின்) நீண்ட ஆட்சி.

அந்தக் கட்சிக்கு (காங்கிரஸ்) மாநில உரிமைகளைப் பற்றியோ, மாநில அதிகாரங்களைப் பற்றியோ - ஏன் - அரசமைப்பைப் பற்றியோ கூடக் கவலையில்லை. அக் கட்சியின் மாநில முதல்வர்களுக்கும் மாநில அதிகாரங்கள் பற்றிக் கவலையில்லை. அவர்களின் கவலையெல்லாம், டெல்லி பீடத்தைத் திருப்தி செய்வது எப்படி? அடுத்த முறை மீண்டும் முதல்வராக வருவதற்குக் காங்கிரஸ் தலைமையின் மூலச் சக்திக்கு நல்ல பிள்ளையாக நடப்பது என்பது தான்.

ஒற்றைக் கட்சி[காங்கிரஸ்]யால் உருவான ஒற்றையாட்சியைப் பற்றி இப்பகுதியின் இறுதி அத்தியாயத்தில் விரிவாக ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

தேசிய வளர்ச்சி மன்றத்தால், மாநில சுயாட்சியுரிமை எப்படிப்பாழடிக்கப்படுகிறது என்பதை அரசியலமைப்பு நிபுணர், அமல்ரே அவர்கள் குறிப்பிடும்போது,

> ''மாநில சுயாட்சியை நேரடியாகக் குழிக்குள் ஆழ்த்தக் கூடிய சில தீர்மானங்களைத் தேசிய வளர்ச்சி மன்றம் உருவாக்குகின்றது. இது ஒரு பெரிய அரசியல் அமைப்புப் பிரச்சனை. எனினும் இதை யாரும் ஏனோ பெரிது படுத்துவதில்லை.''6

எனத் தெளிவாக்குகிறார்.

## IV

## மாநிலத் திட்டங்களில் மாநிலங்களுக்குப் பங்கில்லை

ஒவ்வோர் ஐந்தாண்டுத் திட்டத்திலும் இடம் பெறும் மாநிலத் திட்டங்களையும் அந்த ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் மாநிலங்களுக்கு ஒதுக்கீடு செய்யக் கூடிய நிதி உச்சவரம்பையும் திட்டக் குறியீடுகளையும் ( Targets ) மாநிலத் திட்டங்கள்

---

6 Inter Govermental Relations in India [1966], P. 119

நிறைவேற்றப்பட வேண்டிய வரிசைக் கிரமத்தையும் (Priorities) மத்திய அரசே நிர்ணயம் செய்து விடுகிறது. மத்திய அரசு வகுக்கும் மேற்சொன்ன கட்டுப்பாட்டு எல்லைகளுக்குள் தான் மாநிலங்கள் தங்கள் திட்டங்களை உருவாக்கிக் கொள்ள வேண்டும்.

இவ்வகையில் முறைப்படுத்தப்பட்ட மாநிலத் திட்டங்களை மத்திய அரசு மீண்டும் அங்கீகரிக்க வேண்டும். அதன் பின்னரே அவைகளைச் செயல் படுத்துவதற்கு மாநிலங்கள் உரிமை பெறுகின்றன.

மிகப்பெரிய திட்டங்களைக் குறிப்பிட்ட மாநிலங்களில் நிறைவேற்றும் போது, அத் திட்டங்களுடைய ஒவ்வொரு கட்டத்தின் நிறைவேற்றத்தையும் மத்திய அரசு, தனித் தனியாக அங்கீகரிக்க வேண்டும்.

மாநிலங்கள் தாங்களே நிறைவேற்றிக் கொள்வதாக ஏற்றுக் கொண்ட மாநிலத் திட்டங்களைக் கூட அதன் நிதி நிலையை அனுசரித்து மாற்றிக் கொள்ளக்கூடாது. மாநிலங்கள் நிறைவேற்றுவதாக ஒப்புக் கொண்ட திட்டங்களை அவ்வ மாற்றியமைத்துக் கொள்ளாமல் இருப்பதற்காக, பல வகையான நிதி ஏற்பாடுகளையும் கட்டுப்பாடுகளையும் மத்திய அரசு விதிக்கின்றது.

திட்டமிடுதலால் ஏற்பட்ட இந்த மத்திய-மாநிலப் புதிய உறவிற்கு (மத்திய அரசு ஆண்டானாகவும், மாநில அரசுகள் அடிமைகளாகவும் மாறிவிட்ட புதிய உறவிற்கு)க் காரணம் மத்திய அரசால் கொடுக்கப்படும் நிதி உதவிகளே.

ஓர் ஐந்தாண்டுத் திட்டம், முழுமையாக வெற்றி பெற வேண்டுமெனில் அதன் அடிப்படையான அம்சங்கள் மத்திய அரசாலும், மாநில அரசுகளாலும் சம உரிமையுடன் பங்காளிகளைப் போன்ற சம தகுதியுடன் மனம் திறந்து பேசப்படல் வேண்டும்; மத்திய-மாநில அரசுகளின் ஒன்றுபட்ட ஆலோசனைகளுக்குப் பின்னர் மாநிலங்களுக்கேற்ற திட்டக் குறியீடுகளையும் அவற்றைச் செயல் படுத்தும் முறைகளையும் உறுதிப்படுத்திக் கொள்ளல் வேண்டும். ஆனால் ஐந்தாண்டுத் திட்டங்களில் இவ்வகை சீரிய முறைகள் எதுவும் மத்திய-மாநில அரசுகளுக்கிடையில் மேற்கொள்ளப்படுவதில்லை. ஐந்தாண்டுத் திட்டங்களைப் பொறுத்தவரை இறுதி முடிவெடுப்பது திட்டக்குழுவும் மத்திய அரசும் தான்,

மாநிலங்களுக்குத் திட்டங்களுக்கான நிதி உதவிகளைச் செய்வதற்கு மத்திய அரசு மிகச் சிக்கலான முறைகளைக் கையாளுகின்றது.

## சிக்கல் நிறைந்த நிதியுதவிகள்

அ. பொதுவாக மானியங்கள் மூலமாகவும் கடன்களின் மூலமாகவும் மாநிலத் திட்டச் செலவினங்களுக்கான தொகைகள் மத்திய அரசால் வழங்கப்படுகின்றன.

ஆ. இந்த மானியங்களும் கடன் தொகைகளும் ஒரே மாதிரியானவையாய் இருப்பதில்லை.

இ. மத்திய அரசின் உதவியுடன் மத்திய அரசிற்காக, மாநிலங்களால் நிறைவேற்றப்படும் சில திட்டங்களுக்குத் தரப்படும் மானியங்களும் கடன்களும், ஒருவகை நிபந்தனைகளையும் கட்டுப்பாடுகளையும் கொண்டிருக்கும்.

ஈ. குறிப்பிட்ட சில திட்டங்களுக்காகக் (Specific Schemes) கொடுக்கப்படும் கடன்கள், வேறு வகையான நிபந்தனைகளையும் கட்டுப்பாடுகளையும் கொண்டிருக்கும்.

உ. பல்வேறு வகையான வளர்ச்சித் திட்டங்களுக்காகத் (Miscelaneous Schemes) தரப்படும் கடன்கள் இன்னொரு வகையான நிபந்தனைகளை உள்ளடக்கிக் கொண்டிருக்கும்.

ஊ. இவை தவிர, கடன்களை வழங்கக் கூடிய முறைகளில் அவற்றைத் திருப்பிக் கட்டும் கட்டங்களிலும் மாறுபட்ட நெறி முறைகள் இருக்கும்.

எ. கடன்களைத் திருப்பிக் கட்டும் காலவரையறைகளும் நிபந்தனைகளும் கடனுக்குக் கடன் மாறுபடுகின்றன.

ஏ. மாநிலத் திட்டங்களில் இன்னொரு வகையுண்டு. மத்திய அரசினுடைய நேரடித் திட்டங்கள்; இவ் வகையைச் சார்ந்த திட்டங்களை மத்திய அரசே உருவாக்கித் தனது நேரடி மேற்பார்வையில் மாநில அரசுகளின் மூலமாக நிறைவேற்றுகின்றது. இத் திட்டங்களுக்கான செலவுத் தொகைகள் மாநிலத் திட்டங்களுக்கு ஒதுக்கப்பட்ட மொத்தத் திட்டத் தொகையுடன் சேராது. எனவே, மத்திய அரசின் நேரடித் திட்டங்களில் நிதி பெறும் முறை, நிர்வாக முறை, திட்ட நிறைவேற்றப்பாணி, அதனைச் சார்ந்த பற்று வரவுகள் ஆகியவை முழுக்க முழுக்க மாறுபடுகின்றன.

இதில் வேடிக்கை என்ன வென்றல் மேற்சொன்ன பல வகைத் திட்டங்களும் ஒரே மாநிலத்தில் தான் நடைபெறு கின்றன. அவை ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு வகையான நிதியேற்பாடுகள். அவை ஒன்றுக் கொன்று தொடர்பின்றியும் இயங்குகின்றன.

இவற்றின் இறுதி விளைவு என்ன? முடிவாக மாநில அரசு களின் அதிகாரங்களும் உரிமைகளும் பலவகைகளிலும் திட்டக் குழுவால் பறிக்கப்பட்டு விடுகின்றன.

மத்திய அமைச்சரவையின் எண்ணங்களில் சில திட்டங்கள் உருவாகும். அவைகளை சம்மந்தப்பட்ட மத்திய அமைச்சகங் களே வகுத்தும் விடும். அதற்குப் பல அரசியல் காரணங்களும் இருக்கும். அந்த மத்திய அமைச்சகத் திட்டங்களை, ஏதோ ஒரு வகையில் ஐந்தாண்டுத் திட்டங்களுடன் இணைத்து விட வேண்டு மென்று, திட்டக் குழுவை மத்திய அமைச்சகங்கள் வற்புறுத்தும். வேறு வழியின்றி அவற்றின் பலாபலன்களையும் செலவினங்களையும் விரிவாக ஆய்வு செய்யாமல் அவைகளை ஐந்தாண்டுத் திட்டங்களுடன் திட்டக்குழு சேர்த்துக்கொள்ளும். இதே முறையில் மத்திய அரசின் விருப்பத்திற்கேற்றபடி, சில முக்கியத் திட்டங்களும் திட்டக்குழுவால் கைவிடப்படும். இதனுல் மத்திய அரசும் பாதிக்கப்படுவ தில்லை. திட்டக்குழுவும் பாதிக்கப்படுவதில்லை. இறுதியில் பாதிக்கப்படுவது உரிமை யிழந்த மாநிலங்களே.

ஐந்தாண்டுத் திட்டங்கள் செயற்கையானவையாகத் தோற்றமளிக்க வேறு சில காரணங்களும் உண்டு. தேசிய வளர்ச்சி மன்றத்தில் மாநிலங்களோடு ஒப்புக்காக விவாதித்த பின்னர், எல்லா மாநிலத் திட்டங்களையும் உண்மையில் நிர்ண யம் செய்வது திட்டக்குழுவே.

சில சமயங்களில் ஓர் ஐந்தாண்டுத் திட்டம் தொடங்கும் காலம் வரையும் கூட, திட்டக்குழுவிற்கும் மத்திய நிதி இலாக்காவிற்கும் கருத்தொற்றுமை ஏற்படாது. அதே மாதிரி, திட்டச் செலவுகளைப் பற்றியும் திட்டமில்லாத வேறு மாநிலச் செலவுகளைப் பற்றியும் ஓர் உறுதியான முடிவும் கடைசி வரை ஏற்படுவ தில்லை.

மாநிலங்களும், ‘‘இறுதியாகக் கிடைப்பது கிடைக்கட்டும் அதுவரை பேரம் பேசலாம்’’ என்ற எண்ணத்தில் மிகப் பெரிய மாநிலத் திட்டங்களை, திட்டக்குழுவிற்குச் சமர்ப்பிப்பதும் அவைகளைக் குறைக்க வேண்டுமென்று மத்திய அரசு மாநில அரசுகளை வலியுறுத்துவதும், இறுதிக் கட்டம்வரை, தெளிந்த முடிவு ஏற்படாமல் இருப்பதும் இறுதியில் இரண்டு மூன்று நாட்களுக்குள் இவையெல்லாம் பற்றிய ஏதோ ஒரு வகையான அவசர முடிவு ஏற்படுவதும் ஒவ்வோர் ஐந்தாண்டுத் திட்டத் தொடக்கத்திலும் வழக்கமாக நடைபெறக் கூடிய நிகழ்ச்சிகளாகும்.

எனவே, மாநிலத் திட்டங்களில் எவையெவை கண்டிப்பாக இருக்க வேண்டும், எவை முதன்மையான தகுதியைப் பெற வேண்டும்? விடுபட வேண்டியவை எவை? என்பதை நிர்ணயிக்கும் பொறுப்பு, திட்டக் குழுவிற்கே விடப்படுகின்றன. கடைசி நேரத்தில் திடீரென்று சில திட்டங்கள் திட்டக்குழுவால் சேர்த்துக் கொள்ளப்படும்; அதே மாதிரி சில திட்டங்கள் கைவிடப்பட்டும் விடும். ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஒதுக்கப்பட்ட திட்டச் செலவும் கூடக் கடைசி வரை அறுதியிட்டு முடிவு செய்யப்படாமல் இருப்பதும் உண்டு.

இவ் வகையில் ஐந்தாண்டுத் திட்டத்தில் மாநிலங்களுக்குரிய திட்ட ஏற்பாடுகள், நிலையில்லாமலேயே இறுதிவரை ஊசலாடுகின்றன.

ஏனிந்தக் குழறுபடி?

ஒவ்வொரு மாநிலத்திற்குரிய திட்டங்களையும் திட்டச் செலவுகளையும் சரியான முறையில் திட்டக்குழுவால் நிர்ணயம் செய்ய முடிவதில்லை; மாநிலங்கள் எதிர்பார்ப்பதைக் காட்டிலும், மிகக் குறைந்த அளவு திட்ட ஏற்பாடுகளே திட்டக்குழுவால் செய்யப்படுகின்றன. மத்திய அரசு மாநிலங்களுக்களிக்கும் திட்ட நிதி உதவிகளைப் பொறுத்தே மாநிலத் திட்டங்களின் அமைப்பும் ஏற்பாடுகளும் அவைகளுக்குரிய திட்டச் செலவுகளும் நிர்ணயிக்கப்படுவதால் தான் இவ்வளவு சிக்கல்களும் உண்டாகின்றன.

சென்ற கால் நூற்றாண்டு காலத்தில் இச் சிக்கல்களெல்லாம் மென்மேலும் வளர்ந்துள்ளனவே யன்றிக் குறைந்த பாடில்லை. இன்றையத் திட்டக்குழுவும், அதன் அமைப்பும் நடைமுறையும்

வரம்பிற்கு மீறிய பணிகளும், மத்திய அரசின் உள்ளத்தைப் பிரதிபலிக்கும் அதன் செயல் முறைகளும் மற்றும் அரசமைப்புச் சட்டத்தால் தரப்பட்ட மாநில அதிகாரங்களைக் களவாடிக் கொள்ளும் அதன் சர்வாதிகாரத் தன்மையுமே மாநிலங்களை இன்று, திட்டக்குழுவிடமும் அதன் வழி மத்திய அரசிடமும் மண்டியிட வைத்து விட்டன. மத்திய அரசிடமுள்ள நிதி என்கிற நெம்புகோலின் மூலமாக, ஐந்தாண்டுத் திட்டங்களைச் சார்ந்த மாநில அதிகாரங்களும் உரிமைகளும் மத்திய அரசிற்குச் சென்று விடுவதால், மாநிலத் திட்டங்களில் பங்கேற்கும் அடிப்படை உரிமையை, தற்போது மாநிலங்கள் இழந்து நிற்கின்றன.

## V

## மாநில அதிகாரங்கள் மங்கி மறைகின்றன

மாநில மக்களின் சமுதாயப் பொருளாதார வளர்ச்சிக்குரிய பணிகளை மத்திய அரசும் மாநில அரசும் தனித் தனியாக நிறைவேற்றுதல் வேண்டும் எனக் கருதியே அந்தந்த அரசுகளுக்குரிய அதிகாரங்களைத் தனித்தனிப் பட்டியல்களில் நமது அரசமைப்புச் சட்டம் தொகுத்து வைத்துள்ளது, மக்கள் நல்வாழ்வுக்குரிய பல பணிகளை மேற்கொள்வதற்கும்; பொருளாதார வளமையைப் பெருக்குவதற்கும் தேவையான பல திட்டங்களை மத்திய அரசும் மாநில அரசும் தனித்துத் தீட்டுவதற்காகவே, ''சமுதாயப் பொருளாதாரத் திட்டமிடுதல்'' என்ற அதிகார இனம் அரசமைப்பின் ''பொதுப் பட்டியலில்'' இடம் பெற்றுள்ளது. ஆனால் சுதந்திர இந்தியாவில் தற்போது நடைபெறுவதென்ன ?

ஐந்தாண்டுத் திட்டங்களெல்லாம் மத்திய அரசின் கீழுள்ள திட்டகுழுவாலேயே வகுக்கப்படுகின்றன ; அவற்றில் மாநிலங்கள் உரிய பங்கு பெறுவதில்லை. மாநில அரசுகள் 'திட்டமிடுதலை' தனித்தும் செயல்படுத்த முடியாது எனவே, அரசமைப்புச் சட்டத்தால் மாநிலங்களுக்குத் தரப்பட்ட பல அதிகாரங்களும் உரிமைகளும் திட்டக்குழுவின் மூலமாக மங்கி மறைந்து, மத்திய அரசின் கைக்குள் சென்று விடுகின்றன. அஃதெப்படி? இவண் ஆய்வோம்.

### மத்திய அரசின் உள்ளம் காட்டும் கண்ணாடி

திட்டக்குழு இந்தியாவினுடைய ''பொருளாதார உயர்மட்ட அமைச்சரவை'' போல் (Super Economic Cabinet) இயங்கி வருகிறது எனப் பார்த்தோம். அது மாநிலங்களின் மேல் பொருளாதாரக் கொள்கைகளை மட்டும் திணிப்பதில்லை; மாநிலங்கள்

எதிர்பாராத — அவை விரும்பாத — அவற்றின் பொருளாதார முடக்கடிக்குக் காரணமான — பல திட்ட ஏற்பாடுகளையும் மாநிலங்களின் மேல் – திணிக்கின்றது. இதனால் மத்திய அரசு, மாநில அரசிற்குரிய அதிகார இனங்களில் "திட்டமிடுதல்" மூலமாக ஆதிக்கம் செய்கிறது.

திட்டக்குழுவின் அமைப்பும் திட்டமிடும் முறையும் திட்டக் குழுவின் பணிகளும், மத்திய அரசையும் அதை நிர்வகிக்கும் அரசியல் கட்சியையும் பொதுவாகச் சார்ந்ததாயிருக்கின்றன. ஓர் ஐந்தாண்டுத் திட்டத்தையோ, அல்லது அதன் – வருடாந்திரத் திட்டத்தையோ "திட்டக்குழு" உருவாக்கும்போது, மத்திய அரசின் முடிவுகளையும் கொள்கைகளையும் நடைமுறைக் கட்டளைகளையும் ஏற்றுக் கொண்டு தான் அவற்றை உருவாக்கு கின்றது.

எனவே, ஐந்தாண்டுத் திட்டங்கள் மத்திய அரசின் ஆதிக்கத் தையும் மத்திய அரசின் "உள்ளத்தையும்" (Mind) பிரதி பலிக் கின்றன.

'மாநிலங்களைக் கலந்தாலோசித்த பின்னர்தானே ஐந் தாண்டுத் திட்டங்கள் உருவாகின்றன', என்று தத்துவார்த்த மாகச் சொல்லப் பட்டாலும் மத்திய அரசு, தன்னுடைய மேலாதிக்கத்தை வைத்து மாநிலங்களைத் தனது திசையில் திருப்பிக் கொள்வதை நாம் நடைமுறையில் காண்கிறோம். எனவே — விரும்பியோ விரும்பாமலோ மாநிலங்கள், மத்திய அரசின் ஆதிக்கத்திற்கு — ஐந்தாண்டுத் திட்டங்களின் மூல மாகக் கட்டுப்பட்டு விடுகின்றன.

## அடக்கு முறை

திட்டங்களைச் சமைக்கும் போது திட்டக்குழு, ஒரு சாதா ரணமான ஆலோசனை மன்றம் போல் தோற்ற மளித்தாலும், உண்மையில் மாநிலங்களின் மேல் அது நேரடியான அடக்கு முறையினைச் செயல்படுத்துகின்றது. அதனால் மாநிலங்களின் உரிமைகள் பறி போகின்றன.

சான்றாக நிலச் சீர்திருத்தத் திட்டங்களை மாநிலச் சட்ட மன்றங்களில் வைக்கப்படும் முன்னர் அவைகளைத் திட்டக்குழு, தனது "நிலச் சீர்திருத்தப் பகுதிகள்" மூலமாக ஆய்வு செய் கிறது.

சமுதாய வளர்ச்சித் துறைத் திட்டங்களுக்கான அடிப்படைக் கொள்கைகளும் நடவடிக்கை முறைகளும் மாநிலங்களுக்குத் திட்டக் குழுவாலேயே அனுப்பப்படுகின்றன. அந்தக் கொள்கைகளின் அடிப்படையிலேயே சமுதாய வளர்ச்சித் திட்டங்களை மாநில அரசுகள் நிறைவேற்ற வேண்டும்.

இவை தவிர, சில குறிப்பிட்ட வளர்ச்சித் திட்டங்களுக்கு, திட்டக்குழுவின் தனிப்பட்ட இசைவும் தேவை.

திட்டக்குழு, தனது ''திட்ட ஆலோசகர்கள்'' மூலமாக மாநிலங்களில் நடைபெறும் திட்ட வேலைகளை மேற்பார்வை செய்கின்றது.

### மத்திய அமைச்சகங்களில் மாநிலத் திட்டங்கள்

'' திட்டக்குழு '', திட்டங்களைத் தானே வகுத்து மத்திய அமைச்சகங்களின் மூலமாகவே அவைகளை நிறைவேற்றுகின்றது. எனவே, மாநிலங்களுடைய அதிகாரப் பொருள்களில் வரக் கூடிய மாநிலப் பணிகளின் மேல் மத்திய அமைச்சகங்கள் கட்டுப்பாடுகளைச் செய்கின்றன.

மாநிலங்களுக்கான தனிப்பட்ட சில திட்டங்களுக்கு, ''திட்டக்குழு'' ஒப்புதலை அளிப்பதோடு அவற்றிற்குரிய நிதி உதவிகளைப் பற்றியும் அது மத்திய அரசிற்குப் பரிந்துரை செய்ய வேண்டும். திட்டக்குழுவால் செய்யப்படும் பரிந்துரைகளை மத்திய அமைச்சகங்கள் ஏற்றுக் கொண்டு அவைகளைச் செயல்படுத்துகின்றன. மாநிலத் திட்டங்களுக்குரிய '' நிதி '' மற்றும் ''செயல் துறை'' பற்றித் திட்டக்குழுவால் செய்யப்பட்ட பரிந்துரைகளை மத்திய அமைச்சகங்கள் ஏற்றுக் கொண்டு, அதன்படியே நிதி உதவிகளை மாநிலங்களுக்குக் கொடுக்க முன் வருகின்றன. அப்போது பல வகையான கட்டுப்பாடுகளையும் நெறிமுறைகளையும் திட்ட நிதி உதவி பெறும் மாநிலங்களின் மேல் மத்திய அமைச்சகங்கள் விதிக்கின்றன. வேறு வழியின்றி மாநிலங்களும் மத்திய அமைச்சகங்களால் விதிக்கப்படும் அக் கட்டளைகளை ஏற்றுக் கொண்டு மத்திய நிதியைப் பெற்று, திட்டக்குழுவால் அங்கீகரிக்கப்பட்ட சில மாநிலத் திட்டங்களை செயல்படுத்துகின்றன.

## நிதி உதவி ஓர் நெம்புகோல்

மாநிலத் திட்டங்களில், எந்தத் திட்டத்திற்கு முதன்மை தரப்பட வேண்டும் என்பதை மத்திய அரசும், திட்டக்குழுவுமே நிர்ணயம் செய்கின்றன. மாநில மக்களுக்காக நிறைவேற்றப் படும் திட்டங்களில் எது மிக முக்கியமானது ; எது முதன்மை இடத்தைப் பெற வேண்டும்; எந்தத் திட்டத்தை இறுதியாகச் செயல்படுத்த வேண்டும் என்பவையெல்லாம் ஒரு மாநில அரசிற்குத்தான் தெரிய வாய்ப்புள்ளது. ஆனால் மாநிலங் களுக்குத் தரும் நிதி உதவிகளின் மூலமாக, மேற்சொன்ன மிக முக்கியமான மாநில உரிமையைக் கூட மத்திய அரசு, தானே பறித்துக் கொள்கிறது. இவ்வகையில், மத்திய அரசு தனது ''நிதியுதவி'' என்ற நெம்பு கோலைக் கொண்டு மாநில சுயாட்சியினைத் தகர்த்தெறிகிறது.

உண்மையில், மத்திய அரசால் வழங்கப்படும் (திட்ட) நிதி உதவிகளே, மாநிலங்களின் மேல் மிகப்பெரிய ஆதிக்கத்தை மத்திய அரசுக்கு அளித்து விடுகின்றன.

| | |
|---|---|
| நிதி ஆணைக்குழு செய்த பரிந்துறைகளின்படி மத்திய அரசால் 1960 – 61-இல் மாநிலங் களுக்குத் தரப்பட்ட உதவி மானியங்கள். | ரூ. 4,881கோடி. |
| திட்டக்குழு செய்த பரிந்துரையின் பேரில் 1960-61-இல் மத்திய அரசால் மாநிலத் திட்டங்களுக்குத் தரப்பட்ட விருப்பு மானியத் தொகை | ரூ. 11,378கோடி. |

மத்திய அரசால் நிதி ஆணைக்குழுவின் மூலம் தரப்படும் உதவி மானியத்தொகையைப்போல் (Grants in aid) ஏறத்தாழ 2¼ மடங்கு அதிகத் தொகையைத் திட்டச் செலவுகளுக்காக மத்திய அரசு விருப்ப மானியங்களாக (Discretionary Grant) மாநிலங்களுக்குத் தந்துள்ளது. இந்த விருப்பு மானியத் தொகைகள் மூலமாகவே மத்திய அரசு மாநிலங்களின் மேல் பேராதிக்கத்தைச் செலுத்துகின்றது என்பது தெளிவாகிற தல்லவா?

மாநில மக்கள் கட்டக்கூடிய மத்திய வரிகள் மூலமாகவும், வெளிநாட்டுக் கடன்கள் மூலமாகவும் வெளிநாட்டு உதவிகள் மூலமாகவும், மத்திய அரசு மிகப் பெரிய தொகைகளைத் திரட்டுகிறது. அந்தக் கடன் சுமைகளிலும் வெளிநாட்டு உதவித் தொகைகளிலும்-மத்திய வரிகளிலும் மாநில மக்களுக்குப் பெரும் பங்கு உண்டு. ஆனால் அந்த மாநில மக்களுக்குரிய பணிகளை ஐந்தாண்டுத் திட்டங்களின் மூலமாக மத்திய அரசு செயல்படுத்தும்போது மட்டும் மத்திய அரசு மாநிலங்களின் மேல் பல நிபந்தனைகளை விதிக்கிறது; பின்னரே விருப்ப மானியங்களைத் தருகின்றது.

மாநிலங்களுக்கு நியாயமாக்ச் சேர வேண்டிய தொகைகளை, மாநிலங்களுக்குக் கொடுக்கும்போது, மாநிலங்கள் மேல் நிபந்தனைகளை விதிப்பதற்கு மத்திய அரசிற்கு உரிமை யேது?

## நிபந்தனை மானியங்கள் (Conditional Grants)

விருப்ப மானியங்களில் ஒருவகையே ''நிபந்தனை மானியங்கள்'' ஆகும். ஒரு குறிப்பிட்ட பணிக்காக, குறிப்பிட்ட ஒரு தொகையைப் பல நிபந்தனைகளோடு வழங்கும் ஏற்பாட்டிற்கு, நிபந்தனை மானியம் எனப் பெயர். அந்தக் குறிப்பிட்ட திட்டப் பணி, மாநிலத்திற்குத் தேவையற்றதாகக் கூட இருக்கலாம்; எனினும், வேறு வழியின்றி மாநிலங்கள் அவற்றைப் பெற்றுக் கொள்ளுகின்றன.அதன்வழி மத்திய அரசின் மேலாட்சியையும் மாநிலங்கள் ஏற்றுக் கொள்கின்றன.

## பங்கீட்டு மானியங்கள் (Matching Grants )

மத்திய அரசு, பங்கீட்டு மானியம் என்ற பெயரில் மற்றொரு வகையான நிதி மானியத்தையும் மாநிலங்களுக்கு அளிக்கிறது. வளர்ச்சித் திட்டங்களுக்கான ஒரு பகுதித் தொகையை ஒரு மாநிலம் செலுத்தினால் அதற்கிணையான தொகையையோ, அல்லது அதற்கும் மேற்பட்ட தொகையையோ, மத்திய அரசு அம்மாநிலத்திற்கு மானியமாக வழங்குகிறது. இதற்குப் பங்கீட்டு மானியம் (Matching grant) எனப் பெயர்.

சிற்றூர்களின் குடி தண்ணீர் வசதி, சுகாதார வளர்ச்சி ஆகியவை போன்ற பல வளர்ச்சித் திட்டங்களுக்கு மத்திய அரசு இந்த வகைப் பங்கீட்டு மானியத்தின் மூலமாகப் பாதித் தொகையை வழங்குகிறது. எனவே,மீதிப் பாதித் தொகையை மாநிலங்களே ஏற்றுக் கொள்ள வேண்டும்.

மாநிலத்தின் எல்லாச் சிற்றூர்களுக்கும் குடிநீர் வசதியையும் சுகாதார வசதியையும் செய்து தர வேண்டுமென்று எல்லா மாநில அரசுகளும் தான் விரும்புகின்றன. ஆனால், அதற்குரிய நிதி வசதி பல மாநிலங்களுக்குப் போதுவதில்லை. அதற்காகும் செலவின் பாதித் தொகையை ஏற்றுக் கொள்ளக்கூட, பல மாநிலங்களுக்கு வழியிருப்பதில்லை. எனினும், இச்சீரிய திட்டங்களை எப்படியும் நிறைவேற்ற வேண்டுமென்ற பேராசையால் உந்தப்பட்ட மாநில அரசுகள் மத்திய அரசின் பங்கீட்டு மானியத்தொகைகளை ஏற்றுக் கொள்கின்றன. அப்படி ஏற்றுக் கொள்ளாவிடில் அந்த மாநில அரசு, மாநில மக்களின் கோபத்திற்காளாக வேண்டிய நிலை ஏற்படுமல்லவா? எனவே, கையறு நிலையில் மாநிலங்கள், மத்திய அரசின் பங்கீட்டு மானியங்களை ஏற்றுக் கொண்டு, அவற்றிற்குரிய பாதித் தொகையைக் கூடக் கட்டமுடியாமல் பின்னல் தவிக்கின்றன. அந்தப் பாதித் தொகையை (அல்லது பங்குத் தொகையை) மாநிலங்கள் ஈடுகட்டுவதற்காக வேறு சிலவேண்டா முறைகளையும் கையாளத் தொடங்குகின்றன. இதனைச் சரிக்கட்ட, அரசியல் துறைக்குப் பொருத்தமற்றதும் புத்திசாலித்தனமற்றதுமான சில கொள்கைகளைக்கூட அந்த மாநிலங்கள் வகுத்துக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தத்திற்கு உள்ளாக்கப்படுகின்றன.

சான்று:—

மூன்றும் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில், உத்தரப் பிரதேச மாநில அரசு, பல வளர்ச்சித் திட்டங்களை நிதிப் பற்றுக்குறை காரணமாக நிறைவேற்ற முன் வரவில்லை. மேற்சொன்ன பங்கீட்டு மானியத்தை, மத்திய அரசு கொடுக்க முன்வந்தும் கூட, மாநிலப் பங்குத் தொகையைத் தர முடியாத நிலையில் உத்தரப் பிரதேச மாநிலம் அந்த மானியங்களை ஏற்றுக் கொள்ளவில்லை. அந்தப் பாதித் தொகையை ஈட்டுவதற்குரிய வேறு ஒரு வழியை மேற்கொள்ளுமாறு மத்திய அரசு அம்மாநிலத்தைப் பணித்தது. அதாவது நில உடைமைகளுக்கான வரியை அதிகரிக்கும் வகையில் புதுச் சட்டமொன்றை இயற்றக் கூறி உத்தரப் பிரதேச சர்க்காரை மத்திய அரசு வற்புறுத்தியது. அந்த வரியுயர்வை எதிர்த்து, பொது மக்கள் போராட்டங்களை நடத்தினர். அதனல் மிகப் பெரிய அரசியல் நெருக்கடி உத்தரப் பிரதேசத்தில் உருவாயிற்று. அந்த மாநில அரசு ஆட்சிப் பொறுப்பை விட்டு இறங்குவதற்கு அதுவும் ஒரு மூல காரணமாயிற்று.[7]

---

7 Statesman issues, 8-9-1962, 12-9-1962, 27-9-1972

1959–60-ஆம் ஆண்டில் மட்டும் 60 வகையான வளர்ச்சித் திட்டங்களுக்கு இவ்வகை மானியங்களை மத்திய அரசு தந்தது.

அவைகளில் சில :—

(i) வேளாண்மை மற்றும் மின்துறைக்காக ரூபாய் 8 கோடி;
(ii) சமுதாய வளர்ச்சி மற்றும் தேசிய விரிவுச் சேவைக்காக ரூ. 17 கோடி;
(iii) பொதுக் கல்விக்காக ரூ. 20 கோடி;
(iv) மலேரியா ஒழிப்புக்காக ரூ. 7½ கோடி;
(v) பிற்பட்ட வகுப்பினர் மற்றும் பழங்குடி மக்களுக்கான திட்டங்களுக்கு ரூ. 8 கோடி;

இப்படி மாநிலங்கள் விரும்பாத ஒரு குறிப்பிட்ட பொருளாதாரக் கொள்கையை அமுல் படுத்த வேண்டுமென மத்திய அரசு, பங்கீட்டு மானியத்தின் மூலமாக வற்புறுத்துகிறது; அதனால் மாநில சுயாட்சியும் பாதிக்கப்படுகிறது.

## பங்கீட்டு மானியமும் சந்தானமும்

பங்கீட்டு மானியங்களால் ஏற்படும் மாநிலங்களின் பரிதாப நிலை பற்றி, திரு. K. சந்தானம் அவர்கள் கருத்துத் தெரிவிக்கையில்,

> ''பங்கீட்டு மானியங்களால் பல தொல்லைகள் ஏற்படுகின்றன... எல்லா மானியங்களும் மத்திய அமைச்சகங்களின் மூலமாகவே வழங்கப்பட வேண்டும்; கல்விக்கான மானியம் மத்தியக் கல்வி இலாக்கா மூலமாகவும், உணவு மற்றும் விவசாய மானியங்கள் மத்திய உணவு இலாக்கா மூலமாகவும் வழங்கப்படவேண்டும். எனவே, எல்லா மத்திய இலாக்கா அமைச்சகங்களும் சம்பந்தப்பட்ட மாநில இலாக்காக்களுக்குக் கட்டளையிடும் எசமான் நிலையினைப் பெறுகின்றன. வேறு சொற்களில் கூற வேண்டுமெனில், திட்டக்குழு ஒருவகையான செங்குத்தான கூட்டாட்சியை (Vertical Federation) உருவாக்குகின்றது. நில எல்லைகளால் அமைக்கப்படும் ஒரு கூட்டாட்சியை நமது அரசமைப்புச் சட்டம் ஏற்படுத்தி யுள்ளது. நமது அரசமைப்புச் சபையுங்கூட ஒரு படுகிடையான கூட்டாட்சியைத்தான் (Horizontal Federation) ஏற்படுத்தி யுள்ளது. ஆனால், ''பங்கீட்டு மானியங்கள்'' (மேலிருந்து கீழிறங்கக்கூடிய)

ஒரு செங்குத்தான கூட்டாட்சியாக (Vertical Federation) அதனை மாற்றி விட்டன. அதாவது, திட்டக் காரியங்களுக் காகவும் மிக முக்கியமான வேறு செலவினங்களுக்காகவும் கல்வி போன்ற பலதுறைகளிலும், மத்திய அரசின் இலாக் காக்களும் மாநில அரசின் இலாக்காக்களும் ஒரே அமைப் பினுடைய இரண்டு கூறுகளைப்போல் இயங்குகின்றன.''[8]

எனச் சுட்டிக் காட்டுகிறார்.

"There is one distressing feature of this matching grants... All the grants have to be issued through the Central Ministries. For Education through the Central Ministry of Education; for Food or Agriculture through the Food and Agriculture Ministries and so on. Therefore, all the Central Ministries are in a position to dictate to corresponding State Departments. In otherwords, a Sort of *"Vertical Federation" has been sets up under the Planning Commission.* The constitution sets up a *"Territorial Federation"*; it is a *"Horizontal Federation"* that was set up by the constituent Assembly. The matching grants have set up a vertical Federation by which the Central Departments and the State Departments on the same subject as 'education', etc., form a unit for the purposes of programmes, projects and most important of all, for expenditure."

## VI

## இரட்டை இலாக்காக்கள் ஏன்?

கல்வி, சமுதாய வளர்ச்சி, இன்னோரன்ன பல மக்கள் பணித் திட்டங்கள் நிறைவேற்றுவதற்கும் மாநிலப் பட்டியலில் உள்ள அதிகாரங்களை முறையாக அமுல் படுத்துவதற்கும் ''கல்வி யிலாக்கா'', ''உணவு இலாக்கா'', ''சமுதாய வளர்ச்சி இலாக்கா'' போன்ற பல தனித்துறைகள் மாநில அரசுகளில் இருக்க வேண்டும். அவ்வகை இலாக்காக்கள் மத்திய அரசிற்குத் தேவையில்லை.

---

8 "Union-States Relations in India", (1963), Pp. 53-54.

ஆனால் நடைபெறுவதென்ன?

மாநிலத்திற்கொரு கல்வித்துறை — மத்திய அரசிற்கொரு கல்வித்துறை.

மாநிலத்திற்கொரு சமுதாய வளர்ச்சித்துறை மத்திய அரசிற்கொரு சமுதாய வளர்ச்சித்துறை;

மாநிலத்திற்கொரு விவசாயத்துறை — மத்திய அரசிற்கொரு விவசாயத்துறை.

இப்படி, ஒரே பொருளைச் சார்ந்த இரண்டு இலாக்காக்கள் மாநிலத்தில் ஒன்றும் மத்திய அரசில் ஒன்றும் இருந்து வருவதை நாம் பார்க்கிறோம். நியாயமாகப் பார்த்தால் அந்த வகை மத்திய இலாக்காக்களுக்கு வேலையில்லை. அவசிய மில்லை.

ஆனால், திட்டக்குழுவின் நிதியுதவி மற்றும் பரிந்துரைகள் ஆகியவற்றை மாநிலங்களில் செயல்படுத்துவதற்கும் அந்த நிதியுதவிகளைக் கொண்டு சம்பந்தப்பட்ட மாநில அரசுகளையும் அதன் இலாக்காக்களையும் மேலாட்சி செய்வதற்கும் மத்திய அரசின் அவ்வகை இலாக்காக்கள் இயங்கி வருகின்றன.

"மத்திய அரசிற்கொரு துறை; மாநிலத்திற் கொரு துறை" என்ற ஏற்பாடு அரசமைப்புச் சட்டத்தால் செய்யப்பட்ட தல்ல. ஆனால், அவைகளைத் திட்டக்குழு உருவாக்கி விட்டது. இதனைத்தான் "செங்குத்துக் கூட்டாட்சி" என்று, திரு. சந்தானம் அவர்கள் கூறுகிறார்.

1967-ஆம் ஆண்டு ஜூன் திங்கள் 27-ஆம் நாளில் பேரறிஞர் அண்ணா அவர்கள், தமிழகச் சட்ட மேலவையில் உரையாற்றுகையில்,

> "மத்திய அரசு, இன்று கூறப்படுவதுபோல் இந்தியாவின் இறைமையையும் ஒருமைப்பாட்டையும் நிலைநிறுத்தப் போதுமான அளவுக்கு வலிமையுடையதாக இருக்க வேண்டுமென்றுதான் நானும் விரும்புகிறேன். இதை நான் வேறு வகையாகவும் கூற முடியும். இந்நாட்டின் சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்காகவே மத்திய அரசு வலிமையுடையதாக இருக்க வேண்டுமென்று கூறுகிறேன். இந்திய நாட்டின் பாதுகாப்பிற்கு மத்திய அரசைப் பொறுப்புடையதாகச் செய்யத் தேவையான இந்த அதிகாரங்கள் எல்லாம் மைய அரசிடமே நிலை பெற்றிருக்க வேண்டும் என்று தயக்கமின்றியும் எவரும் ஒப்புக் கொள்வார்கள் என்று நான் கூறத்

தயங்க மாட்டேன். ஆனால் இந்தியாவைப் பாகிஸ்தான் அபாயத்திலிருந்தோ, சீன, பலுசிஸ்தான் அபாயத்திலிருந்தோ பாதுகாப்பதற்கு மைய அரசு இங்கே ஒரு சுகாதாரத் துறையை வைத்திருக்க வேண்டுமென்கிற அவசியமில்லை. அது எந்த வகையில் இந்தியாவின் இறைமையையும் சுதந்திரத்தையும் வலிவுடைய தாக்கும்? அவர்கள் இங்கே ஒரு கல்வித் துறையை வைத்திருக்க வேண்டுமா? அது அங்கே இராணுவத்தினருடன் போரிடும் திறனை எந்த வகையில் அதிகப்படுத்தும்?''

எனக் கூறி மத்திய அரசின் பல இலாக்காக்கள் அவசியமற்றது என வாதிடுகிறார்.

"I want the Centre to be strong enough to maintain the sovereignty and integrity of India as It is the fashion to call it. I would put it in another way. It is to safeguard the independence of the country. I am prepared to say that anybody will accept without any remorse or without any reservation that all these powers needed to make the Centre responsible for the safety of this country ought to be with the Centre. But that does not mean that the Centre in order to safeguard India from Pakistanis or the Chinese or the Baluchis, should think of having a Health department here. In what way does that strengthen the sovereignty and independence of India? Should they have an Education Department here? In what way does that improve the fighting capacity of the military personnel there?"

## VII
## சுயாட்சி உரிமையா? அடகுப் பொருளா?

அரசமைப்புச் சட்டப்படி விவசாயம், கல்வி, சுகாதாரம், சமுதாய வளர்ச்சித் திட்டங்கள் போன்ற மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாத பணிகளுக்கு மாநில அரசுகள் நேரடியாகப் பொறுப்பேற்றுக் கொள்கின்றன. ஆனால், அதற்குத் தேவையான நிதி பெறும் வழிகள் மாநிலங்களுக்கு அளிக்கப்படவில்லை.

ஐந்தாண்டுத் திட்டங்களுக்காக மத்திய அரசால் கொடுக்கப் படும் ''நிபந்தனை மானியங்கள்'', ''பங்கீட்டு மானியங்கள்'', ''விருப்ப மானியங்கள்'' ஆகியவை மூலமாக மாநில அரசினுடைய அதிகாரத்திற்குட்பட்டதும் மாநில மக்களுக்கு நேரடியாகப் பொறுப் பேற்றுக் கொண்டிருக்கக் கூடியதுமான மாநில அரசுத்துறைகளில் மத்திய அரசு கொள்கைத் தலையீடுகளையும் கட்டுப்பாடுகளையும் செய்வதுடன் நேரடியாகவே நிர்வாகத் தலையீடுகளையும் செய்கிறது.

மேலும் மத்திய அரசு, தனது மத்தியத் திட்டங்களுக்காக, அதிக நிதி ஒதுக்கீடுகளையும் செய்து கொள்கின்றது. அரசமைப்புச் சட்ட விதிகளுக்குப் புறம்பாக மாநிலங்களின் மேல், மேலாட்சியும் செய்கின்றது. மாநிலத் திட்டங்களிலும் அவற்றை நிறைவேற்றுவதிலும் தன்னுடைய இச்சைப்படி மத்திய அரசு மாநிலங்களை ஆட்டி வைக்கின்றது. இதனால் மாநில சுயாட்சியும் பறி போகின்றது.

இவ்வளவு தெரிந்திருந்தும், மத்திய அரசின் ஆதிக்க ஆட்சிக்கு மாநிலங்கள் ஏன் கட்டுப்பட வேண்டும்?

மாநிலப் பட்டியலிலுள்ள அதிகாரங்களில் திட்டக்குழு மூல மாக மத்திய அரசு தலையிட்டால் அதன் கட்டளைகளுக்கு மாநிலங்கள் அடிபணிய முடியாதென்று மறுத்து விடலா மல்லவா?

மேலும், திட்டக் குழுவினால் அங்கீகாரம் கொடுக்கப் படாத வளர்ச்சித் திட்டங்களை ஒரு மாநில அரசு, தானே ஏன் நிறைவேற்றிக் கொள்ளக் கூடாது?

இப்படிப் பல வினாக்கள் நம் உள்ளத்தே தோன்றும்.

அரசமைப்புச் சட்ட வல்லுநர், திரு. அமல்ரே (Amal Ray) அவர்கள் இவ்வினாக்களுக்கெல்லாம் உரிய விடை கூறுகிறார்:

> ''அரசமைப்புச் சட்டக் கண்ணோட்டத்தின்படி (மத்திய அரசினுடைய திட்டக்குழுவின்) நெறிமுறைக் கட்டளைகளை மாநிலங்கள் மறுத்து விடலாம். ஆனால் அக்கட்டளைகளின் படி நடக்காமலிருக்கும் ஒரு மாநிலம் அதனுடைய விளைவு களையும் ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்க வேண்டும். அதாவது, எல்லா மத்திய உதவிகளும் அந்த மாநிலத்திற்கு

உடனே நிறுத்தப்பட்டு விடும். விரிவடையக் கூடியதும்-மிக அதிகத் தொகைகளை வழங்கக் கூடியதுமான-எல்லா வருவாய் மூலங்கள் மேலும் மத்திய அரசே, தனி உரிமை பெற்றுள்ளது. பற்ருக்குறையுள்ளதும் பெருக்கமடையாதது மான வருவாய்களை மட்டும், மாநிலங்கள் பெற்றுள்ளன. ஆனுல், மக்கள் நல்வாழ்வுக்கான பல பணிகள் (செய்தலை) மாநிலப் பட்டியலில் ஒதுக்கித் தரப் பட்டுள்ளன. குடியரசு முறையில் இயங்குகின்ற பொதுமக்களுடைய கருத்தால் மாநில அரசுகள் அழுத்தப்படுவதால், இவ்வகைப் பணிகளை மாநில அரசுகள் நிறைவேற்றியே தீர வேண்டும். மக்கள் நல்வாழ்வுக்கான பல பணிகளை மாநிலங்கள் நிறைவேற்ற முனையும் போது, மாநிலங்களின் நிதி வசதிகளுக்கும் அதன் பல பணிகளுக்குமிடையே தவிர்க்க முடியாத ஒரு பெரிய இடைவெளி (நிதிப் பற்ருக்குறை) உண்டாகி விடும். மத்திய அரசிடமிருந்து போதுமான நிதி உதவி கிடைத்தால் தான் இந்த இடைவெளியை (நிதிப் பற்ருக்குறையை) மாநிலங் களால் நிரப்ப முடியும்'' 9

### பத்தாம் பட்டியல்

**மாநிலங்களின் நிதிப் பற்ருக்குறை பற்றிய விளக்கக் குறிப்புகள் ×**

| ஐந்தாண்டுத் திட்டங்கள் | மாநிலத் திட்டத் தொகைகள் | மாநிலங்களின் நிதி வசதி | துண்டு விழும் தொகை | மத்திய அரசின் உதவி நிதித்தொகை |
|---|---|---|---|---|
| | (ரூபாய் கோடிகளில்) | | | |
| முதல் ஐந்தாண்டுத் திட்டம் ... | 897 | 499 | 398 | 350 |
| 2-ஆம் ஐந்தாண்டுத் திட்டம் ... | 1906 | 774 | 1132 | 1038 |
| 3-ஆம் ஐந்தாண்டுத் திட்டம் ... | 3847 | 1462 | 2385 | 2375 |

9 "Inter Governmental Relations in India", (1966) P. 122

× "Review of First Five-Year Plan," (1957), P. 24, "India (1961)", P. 106 and "Third Five-Year Plan", P. 102.

மேலே கண்ட பட்டியலைப் பார்த்தால், ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் மாநிலத் திட்டங்களை நிறைவேற்றுவதற்காகும் செலவுத் தொகையில் மாநிலங்களின் நிதி வருவாய் போகத் துண்டு விழக்கூடிய தொகைகள் மத்திய அரசின் விருப்ப மானியங்களால் சரிக் கட்டடப்படுவது விளங்கும். மாநிலத்தின் வருவாய்களைக் காட்டிலும், ஏறத்தாழ 1¼ மடங்கு அதிகத் தொகைகளை மத்திய அரசினுடைய மானியத் தொகைகள் இட்டு நிரப்புகின்றன.

மாநிலங்களின் நிதிப் பற்றுக்குறை எவ்வளவு பயங்கரமானது என்பதும் மத்திய அரசிடமிருந்து மானியத் தொகைகளைப் பெற்றுக் கொண்ட மாநிலங்கள் ஏன் தன் சுயாட்சி உரிமையை அடகு வைத்து விடுகின்றன என்பதும் இந்தப் பட்டியலிலிருந்து தெரிய வரும்.

## VIII
## சீர்மைக் கொள்கை (UNIFORM POLICY) சீரிய கொள்கையா?

இந்தியத் துணைக் கண்டத்தின் எல்லாப் பகுதிகளுக்கும் பொருந்தக்கூடிய ஒரே சீரான பொருளாதாரக் கொள்கையையே, ஐந்தாண்டுத் திட்டங்கள் வலியுறுத்திக் கடைப்பிடித்து வருகின்றன. ஒரு நாட்டின் பல மாநிலப் பகுதிகளினுடைய "இயற்கைக் கூறுகள்", "பொருளாதார நிலை", "தட்ப வெட்ப நிலை", "அதன் சூழ்நிலைகள்", "மரபுகள்", "நில நூல் நிலை" இயற்கை ஆதார வளங்கள் ஆகியவை ஒன்றுக்கொன்று மாறுபட்டிருப்பதால்தான் அந்தந்தப் பகுதியினுடைய "தன்னாட்சி" இன்றியமையாததாகிவிடுகிறது. அப்படிப்பட்ட பல வகையான மாநிலங்களையும் ஒருமைப் படுத்துவதற்காகத் தான் கூட்டாட்சி அமைப்பும் அந்நாட்டில் உருவாகிறது.

ஆனால், அந்தந்த மாநிலங்களின் இயற்கை அமைப்புக்களையும் தனித் தேவைகளையும் சிறப்புக் கூறுகளையும் கருத்தில் கொள்ளாமல், எல்லா மாநிலப் பகுதிகளுக்கும் ஒரே சீரான கொள்கையை (Uniform Policy) திட்டக்குழு வற்புறுத்துவதனால், திட்டங்களின் முழுப் பயன்களும் கிட்டுவதில்லை. அந்தந்தப் பகுதிகளின்பொருளாதார வளர்ச்சியும் தடைபட்டுப் போகின்றது.

''இந்தியாவை ஒற்றுமைப் படுத்துவோம்; அதற்காக எல்லா மாநிலங்களுக்கும் ஒரே மாதிரியான பொருளாதாரத் திட்டங்களைச் சீர்மைக் கொள்கையின் அடிப்படையில் தீட்டி நிறைவேற்றுவோம் என்ற கொள்கையை வகுத்துக் கொண்டு, அந்தந்த மாநிலங்களின் தனி நிலைமைகளுக்கேற்றபடி, திட்டம் வகுக்காமல் ஒரே மாதிரியான (சீரான) செயற்கைத் திட்டங்களைத் தேசிய மட்டத்திலிருந்து உருவாக்கி அவற்றை மாநிலங்களின் மேல் திணிக்கும் அவலநிலை, இன்றும் இருந்து வருவதை நாம் கண்கூடாகக் காணலாம். 'நிதி' என்ற மத்திய அரசின் தூண்டுகோலால் கவரப்பட்ட மாநிலங்கள் மத்திய அரசு தரும் எல்லாத் திட்டங்களையும் கைகட்டி, வாய்பொத்தி ஏற்றுக் கொள்கின்றன. தங்களுக்குத் தேவையற்ற சில திட்டங்களைக் கூட மறுப்பதில்லை. எனினும் அந்தந்த மாநில மக்களுடைய உண்மைத் தேவைகள் எல்லாவற்றையும் சர்வ சக்தியும் கொண்ட திட்டக் குழுவால் கூடத் தீர்க்க முடிவதில்லை.

''வேளாண்மை'', காடுகள்'', ''சுகாதாரம்'', ''கல்வி'', ''குடிசைத் தொழில்கள்'' மற்றும் ''சமுதாய நலம்'' ஆகியவை மாநிலத்திற்கு மாநிலம் மாறுபடும் தன்மையைக் கொண்டவை. இவைகளைச் சார்ந்த திட்டங்கள் மாநிலத் தனித் தன்மைகளுக் கேற்றபடி வகுக்கப்பட வேண்டும்; அல்லது குறைந்த பட்சம் பிராந்திய அடிப்படையிலாவது (Regional Basis) இவைகளைப் பொறுத்த திட்டங்கள் வகுக்கப்பட்டால், திட்டச் செலவின் உண்மையான பயன் கிடைக்கும். ஆனால், எல்லா ஐந்தாண்டுத் திட்டங்களிலும், வேளாண்மை, காடுகள், கல்வி, குடிசைத் தொழில் மற்றும் சுகாதாரம் ஆகியவைகளில் அகில இந்தியாவிற்கும் ஒரே சீரான கொள்கை வகுக்கப்பட்டு, மிகப் பெரிய தொகைகள் ''சீர்மைக் கொள்கை'' என்ற பெயரால் பாழடிக்கப்பட்டுள்ளன. அதன் குறைபாடுகளை மாநிலங்கள் எடுத்துச் சொல்வதற்கு உரிமை படைத்தவை யல்ல. அந்தந்த மாநிலப் பழக்க வழக்கம் மற்றும் சுற்றுச் சார்புகளுக் கேற்றபடி, திட்டங்கள் வகுக்கப்பட வேண்டுமென்று ஒருக்கால் மாநிலங்கள் எடுத்தியம்பினாலும் ''அகில இந்தியாவிற்கும் ஒரே சீரான கொள்கையை அமுல் படுத்தும் திட்டக்குழுவின்'' காதில் அது ஏறுவதில்லை. மத்திய அரசு மாநிலங்களின் நிதிவாயில்களைக் கையகப்படுத்திக் கொண்டதன் நேரடி விளைவுகளில் இதுவும் ஒன்று.

## மாநிலங்களின் வளர்ச்சியில் ஏற்றத் தாழ்வுகள் ஏன்?

சில மாநிலங்கள் நல்ல நிர்வாகத் திறனைப் பெற்றுள்ளன; அவை, குறிப்பிட்ட தொகையைச் செலவு செய்து அற்புதமான சாதனைகளைச் செய்துள்ளன. அதே தொகையைச் செலவு செய்த பிற மாநிலங்கள், அந்தக் குறிப்பிட்ட துறைகளில் அடையத் தக்க வளர்ச்சியினைப் பெறுமற் போய் விடுகின்றன. மாநிலக் குறியீடுகளில் ( Targets ) மாறுபட்ட சாதனைகள் மாநிலத்திற்கு மாநிலம் உள்ளன. எனவே, மாநிலங்களின் பொருளாதார ஏற்றத் தாழ்வுகளும் உருவாகின்றன.

மாநிலங்களுக் கிடையேயுள்ள பொருளாதார ஏற்றத் தாழ்வுகள், நான்கு ஐந்தாண்டுத் திட்டங்களுக்குப் பின்னரும்கூட, சீர்மைக் கொள்கையினைப் பேசும் இந்திய அரசால் தீர்க்கப்படவில்லை. நான்கு ஐந்தாண்டுத் திட்டங்களில், பல்லாயிரங் கோடி ரூபாய்கள் எல்லா மாநிலங்களுக்கும் பொதுவாகச் செலவழிக்கப் பட்டுள்ளன. எனினும் திறனற்ற மாநிலங்கள், முறையோடு வளர்ச்சியடையவு மில்லை; திறன் பெற்ற மாநிலங்கள் உரிய ஊக்கத்தையும் பெற வில்லை. மாநிலங்களின் பொருளாதார ஏற்றத் தாழ்வுகளைக் காட்டுவதற்காக, ஒவ்வொரு மாநிலத்தின் தனி நபரின் சராசரி வருமானம் 747-ஆம் பக்கத்தில் 11-ஆம் பட்டியலில் தரப்பட்டுள்ளது.

### ஏன் இந்தப் பொருளாதார ஏற்றத் தாழ்வு?

ஒவ்வொரு திட்ட காலத்திற்கும் பின்னால், இது பற்றி ஆராயப்படுகின்றது. ஆனால் பரிகாரம்தான் இன்னும் காண முடியவில்லை. இந்தியத் துணைக்கண்டத்திற்குரிய எல்லாத் திட்டங்களையும் டெல்லியில் அமர்ந்திருக்கும் ஒரே திட்டக்குழு அதனுடைய சில அதிகாரிகளையும், வல்லுநர்களையும் கொண்டே உருவாக்கி, அவைகளைச் ''சீர்மை'' (Uniformity) என்ற பெயரால் மாநிலங்களின் மேல் வலுக்கட்டாயமாகத் திணிப்பதால் தான் மாநிலங்களிடையே அகண்ட பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் ஏற்படுகின்றன என்பதை யாரும் மறுக்க முடியாது.

## பதினொன்ரும் பட்டியல்

### (1964–65) மாநிலங்களின் தனி நபர் சராசரி வருமானத்தைக் (PER CAPITAL INCOME) காட்டும் பட்டியல்

[மாநிலங்களிடையே இருக்கும் பொருளாதார ஏற்றத் தாழ்வுகள்]

| எண் | மாநிலங்கள் | தனி நபர் வருமானம் (ரூபாயில்) |
|---|---|---|
| 1. | பஞ்சாப் ... | 619 |
| 2. | மகாராட்டிரம் ... | 529 |
| 3. | குசராத் ... | 523 |
| 4. | அரியாணு ... | 513 |
| 5. | மேற்கு வங்கம் ... | 495 |
| 6. | ஆந்திரப் பிரதேசம் ... | 458 |
| 7. | மைசூர் (கர்நாடகம்) ... | 441 |
| 8. | தமிழகம் ... | 436 |
| 9. | அஸ்ஸாம் ... | 394 |
| 10. | கேரளா ... | 391 |
| 11. | மத்தியப் பிரதேசம் ... | 378 |
| 12. | உத்தரப் பிரதேசம் ... | 374 |
| 13. | ஒரிஸ்ஸா ... | 368 |
| 14. | இராஜஸ்தான் ... | 365 |
| 15. | பீகார் ... | 292 |
| 16. | அகில இந்தியத் தனி நபர் சராசரி வருமானம் ... | 423 |

SOURCE: "Central Statistical Organisation"

[Quoted from "India Today" (1970), P. 386]

ஆனல், மத்திய அரசு, சென்ற 24 ஆண்டுகளில் தன்னகத்தே கைப்பற்றி வைத்திருக்கும் மாநில நிதி மூலங்களை அதற்காக இழந்து விடுவதற்கும் தயாராக இல்லை என்பதையும் நாம் கருத்தில் கொள்ள வேண்டும்.

எனவே, சீர்மைக் கொள்கைகளைப் பின்பற்றுவதாலேயே மாநிலங்களின் பொருளாதார ஏற்றத் தாழ்வுகளை நீக்கிவிட இயலாது. மாருக மாநிலங்களின் நிதிவாயில்கள் பெருக்கப் பட்டு, அவைகளுக்குரிய நிதிச் சுதந்திரமும் வழங்கப்பட்டா லன்றி, பொருளாதாரத் துறையில் மாநிலங்கள் சமத்துவத்தை அடைய முடியாது. அதுவரை மத்திய அரசின் சீர்மைக் கொள்கை—சீரிய கொள்கையாகப் பயன்படாது.

## IX

## கற்றறி குழுக்களின் கருத்துரைகள்

மத்திய அரசால் நியமிக்கப்பட்ட நிர்வாகச் சீர்திருத்த ஆணைக்குழுவால் (Administrative Reforms Commission) நிறுவப்பட்ட ''திட்ட இயந்திரத்தை''ப் பற்றி ஆய்வு செய்த ''கற்றறி குழு'' (Study Team for Machinery for Planning) மத்தியத் திட்டக்குழுவைப் பற்றி, பல கருத்துரைகளைத் தந்துள்ளது.

அவையாவன:

1. திட்டக்குழு, ஐந்தாண்டுத் திட்டங்களின் குறிக்கோள்களையும் வட்டாரப் பொதுத் திட்டங்களையும், அதனதனுக்கு அளிக்கப்பட வேண்டிய வரிசைக் கிரமத் தகுதிகளையும் குறியீடுகளையும், சுட்டிக் காட்டும் பொறுப்பினை மட்டும் கொண்டதாக இருக்க வேண்டும். பிராந்தியத் திட்டங்களின் விவரங்களைத் தொகுப்பதற்கும் தனித் தனித் திட்டங்களை உருவாக்குவதற்கும் அவைகளைப் பரிசீலிப்பதற்கும் நிறைவேற்றுவதற்கும் திட்டக்குழுவிற்குத் தனித்த அதிகாரங்கள் இருக்கக்கூடாது. அவ்வதிகாரங்கள் எல்லாம், சம்மந்தப்பட்ட மத்திய – மாநில அரசுகளின் பொறுப்பில் தான் இருக்க வேண்டும். அப்பணிகளில் திட்டக்குழு நேரடியாக ஈடுபடலாகாது.

2. ''தேசிய முக்கியத்துவம் வாய்ந்தவை'' எனக் கருதப்படும் சில திட்டங்களைத் தவிர, மாநிலங்களின் அதிகாரப் பட்டியலில் வரும் திட்டங்களை நிறைவேற்றுவதில் மாநில அரசுகள் முழுப் பங்கும் பெற வேண்டும்.

3. தேசிய முக்கியத்துவமுள்ள சில திட்டங்களைத் தவிர, மற்ற தனித்தனித் திட்டங்களுக்கு, தனித்தனி நிதி உதவிகள் தரப்பட வேண்டு மென்ற முறையினை மத்திய அரசு மாற்றிக் கொள்ள வேண்டும்.

மத்திய-மாநில உறவுகளைப் பற்றி ஆய்ந்த ''மத்திய-மாநில உறவு பற்றிய கற்றறி குழு'' (Study team for Union - State Relations), ''திட்டத்தின் செலவினங்களுக்கு மத்திய அரசு கொடுக்கும் நிதி உதவிகள் யாவும் ஒட்டு மொத்தமான தொகையாகவே (Block Sums) மாநிலங்களுக்குத் தரப்பட வேண்டும்; அந்த ஒட்டு மொத்தத் தொகைகளை மாநிலங்கள் தமது விருப்பப்படி, பயன்படுத்திக் கொள்ளும் உரிமைகளைப் பெற்றிருக்க வேண்டும்.'' என மத்திய அரசை வற்புறுத்தியுள்ளது.

4. மத்திய அரசு, தானே உருவாக்கிச் செயல் படுத்தும் ''மத்தியத் திட்டங்கள்'' (Central Schemes) என்ற தனித் திட்டங்கள் எதுவும் இருக்கக் கூடாது. குறிப்பிட்ட ஓர் ஐந்தாண்டுத் திட்டத்தில் வரும் எல்லாத் திட்டங்களும் மாநிலத்தைச் சார்ந்த திட்டங்களாகவே இருக்க வேண்டும் எனவும் அக்குழு கருத்தறிவித்தது.

கற்றறி குழுக்கள் செய்த பல பரிந்துரைகளின் அடிப்படையில் திட்டக் குழுவும் அதன் பணிகளும் செயல்முறையும் பெரும்பாலும் மாற்றியமைக்கப்பட வேண்டு மென்று நிர்வாகச் சீர்திருத்த ஆணைக்குழுவும் வலியுறுத்திக் கூறிற்று.

ஆனால், மத்திய அரசு அவைகளை ஏற்றுக் கொள்ளத் தயாராயில்லை. ஆனால், 1967–ஆம் ஆண்டுத் தேர்தல்களில் காங்கிரஸ் அல்லாத வேறு கட்சிகள் 9 மாநிலங்களில் ஆட்சிக்கு வந்ததால் மத்திய அரசின் 'திட்டமிடுதல்' பற்றிய சர்வாதிகாரமும் முதல்முறையாக ஆட்டம் காணத் தொடங்கியது. மாநிலங்களுக்கு ஒரு சில அதிகாரங்களைத் தருவதற்கு மத்திய அரசு முன் வந்தது.

1969–ஆம் ஆண்டில் நடைபெற்ற, தேசிய வளர்ச்சி மன்றக் கூட்டத்தில் எதிர்க் கட்சிகளைச் சார்ந்த மாநில முதல்வர்கள் ''திட்டமிடுதலால்'' ஏற்படும் வினைவுகளைத் தீவிரமாகச் சாடினர். எனவே, ''திட்டமிடுதல்'' பற்றிய சில புதிய முறைகளும் பின்னர் அமுலுக்கு வந்தன.

## சில புதிய முடிவுகள்

அ) இந்தியத் தலைமை யமைச்சரும் நிதியமைச்சரும் தவிர, திட்டக் குழுவின் உறுப்பினர்களாக வேறு எந்த மத்திய அமைச்சரும் இருக்கக் கூடாது.

ஆ) திட்டக்குழு ஓர் ஆலோசனைக் குழுவாகவே இயங்க வேண்டும்; நிர்வாகப் பணிகளில் ஈடுபடலாகாது.

இ) நான்காம் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் மத்திய அரசால் தனித்துச் செயல்படுத்தப்படும் 90 மத்தியத் திட்டங்களிலிருந்து ( Central Schemes ) 52 திட்டங்களாகக் குறைக்கப் பட்டன.

ஈ) தேசிய வளர்ச்சி மன்றத்தால் புதிதாக உருவாக்கப்படும் ஒரு "துணைக் குழுவின்" (Sub Committee) ஆலோசனைக் கிணங்கவே மத்திய அரசு, திட்டநிதி உதவிகளைச் செய்ய வேண்டும்.

உ) மாநிலங்களின் முதலமைச்சர்களால் ஏற்றுக் கொண்டபடி, மாநிலங்களுக் களிக்கப்படும் நிதி உதவிகளை யெல்லாம் ஒட்டு மொத்தமான தொகைகளாகவே (Block grants) கொடுக்க வேண்டும்.

ஊ) நான்காம் ஐந்தாண்டுத் திட்டக்காலத்தில், மாநிலங்களுக் களிக்கப்படும் மொத்த நிதி உதவிகளில் 60% தொகை, மாநிலங்களின் மக்கள் தொகை அடிப்படையில் தரப்பட வேண்டும். மேலும் 10% தொகை, மாநிலங்களின் வரி முயற்சி, நீர்ப்பாசனம், மின் சக்தித் திட்டங்கள், மாநிலங்களின் தனித் தன்மைகள் ஆகியவைகளின் அடிப்படையில் தரப்பட வேண்டும். மற்றும் 10% நிதித் தொகை, அகில இந்தியத் தனி நபர் சராசரி வருமானத்திற்கும் குறைவான தனி நபர் வருமானத்தைக் கொண்ட ஆறு மாநிலங்களுக்கு மட்டும் தரப்பட வேண்டும். அதாவது பீகார், ஒரிசா, கேரளா, மத்தியப் பிரதேசம், உத்தரப் பிரதேசம், இராசஸ்தான் ஆகிய மாநிலங்கள் மொத்தத் திட்ட உதவிகளில் 10% தொகையைத் தனியாகப் பெற்றுக் கொள்ளும்.

எ) 1969 — 1970-ஆம் ஆண்டு முதல், திட்டங்களுக்காக மத்திய அரசால் தரப்படும் மொத்த நிதியுதவியில் 70 % தொகை மாநிலங்களுக்குக் கடன்களாகவும் 30 % தொகை மானியங்களாகவும் தரப்பட்டு வருகின்றது.

1951-ஆம் ஆண்டு தொடங்கிய ஐந்தாண்டுத் திட்டங்கள் மாநில அதிகாரங்களையும் உரிமைகளையும் பற்றிக் கவலைப்படாமல், மத்திய அரசின் ஒற்றையாட்சி முறையினை, 16 ஆண்டுகள் தொடர்ந்து இந்திய நாட்டில் செயல்படுத்தி வந்தன. மத்திய அரசிலும், மாநில அரசுகளிலும் காங்கிரஸ் கட்சியே தொடர்ந்து பதவியிலிருந்து வந்த அரசியல் விபத்தும், அதற்கு முழு முதல் காரணமாயிற்று.

1967-ஆம் ஆண்டு வரை மாநில அதிகாரங்களைப் பற்றியும் உரிமைகளைப் பற்றியும் குரல் கொடுப்பாருமில்லை; உரிமைப் பிரச்சனையைக் கிளப்புவாருமில்லை. ஆனால் மாநிலங்களிலிருந்த காங்கிரஸ் கட்சி ஆட்சியில், முதன் முதலாகக் கீறல் ஏற்பட்டவுடன் அடிமைப்படுத்தப்பட்ட மாநில சுயாட்சியின் முழக்கமும் மேலோங்கி ஒலிக்கலாயிற்று. வல்லாட்சியைக் கொண்ட மத்தியஅரசும் தனது எஜமானத்தன்மையை விட்டுக் கீழே இறங்கி வரலாயிற்று. திட்டமிடுதல் துறையில், மாநிலங்களுக்கு முதல் வெற்றியும் கிடைக்கலாயிற்று.

ஆனால் அது முழுமையான வெற்றி யல்ல. 1971-ஆம் ஆண்டில் மீண்டும் காங்கிரசுக் கட்சி, தமிழகத்தைத் தவிர மற்ற மாநிலங்களில் அரசுப் பொறுப்பை ஏற்றவுடன் தலைமையமைச்சர் இந்திரா காந்தியாரின் வல்லாட்சியில் மாநிலங்கள், மீண்டும் அடிமைப் படுத்தப்படுகின்றன. திட்டமிடுதலின் தன்மை, திட்ட விவாதங்கள் மற்றும் முறைகள் ஆகியவை மீண்டும் பின்னணிக்குத் தள்ளப்பட்டு விட்டன.

பழையபடி மாநிலங்கள் தம் உரிமைக்குக் குரல் கொடுக்கின்றன. திட்டக் குழுவும் திட்டமுறைகளும் மீண்டும் புதுப்பிக்கப்பட வில்லை. தேசிய வளர்ச்சி மன்றம் மீண்டும் காங்கிரஸ் கட்சியின் ஒரு துணை அமைப்பைப் போன்று இயங்கத் தொடங்கி விட்டது.

## X

## மாநில சுயாட்சியின் போர்க் குரல்

மாநில சுயாட்சிக்குப் போராடும் — ஒரு குரல் — வலிமையான குரல்-தேசிய வளர்ச்சி மன்றத்தில் தொடர்ந்து ஒலித்துக் கொண்டே இருக்கின்றது. அந்த ஓர் எதிர்ப்புக் குரல், நாட்டின் கவனத்தையும் மத்திய அரசின் காதுகளையும் தன் பக்கம் ஈர்க்கின்றது. அக்குரல்தான் தமிழகத்தின் தனிப் பெருங் குரல்—மாநில சுயாட்சியை மீண்டும் நிலை நிறுத்தும் குரல்— தமிழகத்தின் முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்களின் குரல்.

1973-ஆம் ஆண்டு டிசம்பர் 8-ஆம் நாள் புது டெல்லியில் நடைபெற்ற தேசிய வளர்ச்சி மன்றக் கூட்டத்தில் ஐந்தாம் ஐந்தாண்டுத் திட்டம் பற்றிய பொது விவாதம் நடந்த போது, மாநில சுயாட்சியின் குரலான டாக்டர் கலைஞர் அவர்களின் குரல் ஓங்கி ஒலிக்கலாயிற்று.

"..........வருவாய் வாயில்கள் குறைவாயிருப்பதால், மின் சக்தி போன்ற முக்கியமான திட்டங்களில், செலவுகள் குறைக் கப்பட வேண்டியிருக்கிற தெனவும், மாநிலத் திட்டங்களும் குறைக்கப்பட வேண்டியிருக்கிறது எனவும் சொல்லப்படுகிறது. அதே நேரத்தில் 'வேளாண்மை', 'கல்வி', 'சுகாதாரம்' போன்ற துறைகளுக்காக, மத்திய அரசுத் துறையில் ஏராள மான நிதி ஒதுக்கப்பட்டுள்ளது. வேளாண்மையைப் பொறுத்த வரையில் மொத்த நிதி ஒதுக்கீடான 4730 கோடி ரூபாயில் 40% தொகை அதாவது 1946 கோடி ரூபாய் மத்தியத் துறை யில் ஒதுக்கப்பட்டுத் திட்டமிடப் பட்டுள்ளது. ஆனால் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில், மொத்த நிதி ஒதுக்கீடான 690 கோடி ரூபாயில் 16 % அதாவது, 110 கோடி ரூபாய் தான் மத்தியத் துறைக்கு ஒதுக்கப் பட்டது. வேளாண்மை என்பது மாநிலப் பட்டியலில் உள்ளதாகும். இவ்வகையில், மத்தியத் துறையில் நிதி ஒதுக்கீடு பெருகி யிருப்பது ஏனென்று விளங்க வில்லை. இதைப் போலவே, கல்வியிலும் மொத்தம் 1,700 கோடி ரூபாயில் 500 கோடி ரூபாய் மத்தியத் துறையில் ஒதுக்கப் பட்டுள்ளது. சுகாதாரம் போன்ற துறைக்கு மொத்தம் நிதி ஒதுக்கியதில் 30 % அல்லது 250 கோடி ரூபாய் ஏன் மத்தியத் துறைக்கு ஒதுக்கப்பட வேண்டுமென்றும் எனக்குப் புரிய வில்லை. திட்டமிடும் நடைமுறையில், மாநில அரசுகளும் மத்தியத் திட்டக்குழுவும், ஒப்புறவுடன் இணைந்து பணியாற்றும் போது, மாநில அரசின் பொறுப்புக்குக் கீழுள்ள துறைகளில் மத்திய அரசின் திட்டங்களும் ஏன் இருக்க வேண்டுமென்று எனக்குத் தெரிய வில்லை. இந்தத் திட்ட நிதி ஒதுக்கீடுகள் மாநில அரசுத் திட்டங்களுக்கு மாற்றப்பட வேண்டும். மாநில அரசுத் திட்டங் களாக இருக்கும் பணிகளில் மத்திய அரசுத் திட்டங்கள் என்று எதுவும் இருக்கக் கூடாதென்றும் நான் அழுத்தம் திருத்தமாக எடுத்துக் கூற விழைகிறேன்............ மத்தியத் துறை, மத்திய அரசு பொறுப்பேற்கும் திட்டங்கள் ஆகியவை வளர வளர, காலப்போக்கில் இரட்டை ஆட்சி நிலை மேலும் மோசமாகி யுள்ளது.........தேசிய ஒருமைப்பாடு — தேசிய ஒற்றுமை என்ப தற்கு முழுமையான பொருளிருக்க வேண்டுமேயானால், மத்திய

நிதியுதவி, அதன் வகையில் மட்டுமின்றிப் பல்வேறு மத்தியத் திட்டங்களில் செயல்படும் முதலீட்டு வகையிலும், நியாயமான அளவிற்கு நிதி பகிர்ந்தளிக்கப்படல் வேண்டும்.''

திட்டமிடுதல் பற்றிய அடிப்படைக் கோளாறுகளைக் கோடிட்டுக் காட்டுகிறது கலைஞரின் மாநில சுயாட்சிக் குரல்.

## வல்லுநர்கள் கருத்துக்களும் வழிவகைகளும்

பழம்பெரும் காங்கிரஸ் தலைவர்களில் ஒருவரும், கேரள மாநில ஆளுநராக இருந்தவருமான திரு. அஜித் பிரசாத் ஜெயின் (AJID PRASAD JAIN) அவர்கள் ''திட்டமிடுதலால்'' மாநில சுயாட்சி எவ்வகையில் பறிபோயிற்று என்பதனைக் கீழ்க்கண்ட வரிகளில் தெளிவாகப் படம் பிடித்துக் காட்டுகிறார்,

''திட்டமிடுதலைப் பற்றிய அரசமைப்புச் சட்ட விதிகளும் சட்டப் பிரிவுகளும், இல்லாத காரணத்தினால் மாநிலங்களில் கையறுநிலை உருவாகிவிட்டது. மாநிலங்களின் நிதிவருவாய் களிலிருந்து கிடைக்கும் அதிகப்படியான தொகைகளும், ரிசர்வ் வங்கியின் அங்கீகாரத்தோடு மாநிலங்கள் வெளியி லிருந்து பெறக்கூடிய கடன் தொகைகளும் சேர்ந்து, திட்டச் செலவினுடைய ஒரு சிறு பகுதிக்காக மட்டுமே பயன்பட் டிருக்கின்றன. மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களின் போதும் மாநிலங்களுடைய திட்டச் செலவின் மொத்தத் தொகையில் 3/5 பங்குத் தொகை, மத்திய அரசிடமிருந்து கடன்களாக வும் மானியங்களாகவும் பெறப்பட்டுள்ளன.''10

''திட்ட முடிவுகளை எடுக்கும் போது சம உரிமை பெற்ற பங்காளியைப் போல் மாநிலங்கள் நடத்தப்பட வில்லை. அவை கெஞ்சிக் கேட்கிற கீழ் நிலையிலுள்ளவர்களைப் போலவே ஆக்கப்பட்டு விட்டன.'' 11

---

10 "Union-State Relationship" in "The Union and the States" (1972), Edited by S. N. Jain. P. 261.

11 Ibid, Opp. Cited, Note 10 P. 262

மத்திய அரசு மாநில சுயாட்சி உரிமைகளைத் திட்டக்குழு வின் மூலமாகப் பெரும்பாலும் அழித்து விட்டாலும்கூட, மாநிலங்கள் மீண்டும் தன்னுட்சியைப் பெறுவதற்குரிய வழி வகைகளை, திரு. ஏ. பி. ஜெயின் அவர்கள் கீழ்க் கண்ட வரி களில் கூறுகிறுர்கள்:

''சுருங்கக் கூறினுல், மத்திய அரசிற்கும் மாநிலங்களுக்கு மிடையிலான திட்டங்களின் பிரிவினை, அரசமைப்புச் சட் டத்தால் மத்திய அரசிற்கும் மாநிலங்களுக்கும் வழங்கப் பட்ட அதிகாரப் பிரிவினையையே அனுசரித்துச் செல்ல வேண்டும். அஃதாவது, மத்தியப் பட்டியலில் சொல்லப்பட்ட அதிகாரங்களில் வரும் திட்டங்கள் மத்திய அரசின் செயல் எல்லைக்குள் இருத்தல் வேண்டும். மாநிலப் பட்டியலில் கூறப்பட்ட அதிகார எல்லைக்குள் வரும் திட்டங்களும் பொதுப்பட்டியலில் சொல்லப்பட்ட அதிகார இனங்களில் வரும் திட்டங்களும்,மாநில அரசிற்கே தனித் தொதுக்கப்பட வேண்டும். அரசமைப்புச் சட்டத்தை உருவாக்கியவர்கள் மாநிலங்களிடமே இருக்க வேண்டு மென்று கருதிய சில அதிகாரங்களில், மத்திய அரசு ஆக்கிரமிப்புச் செய்து கொள்வதற்குரிய ஒரு கருவியாகப் பொதுப் பட்டியலின் 20–ஆம் பிரிவான சமுதாய, பொருளாதாரத் திட்டமிடுதல் என்ற அதிகாரத்தைப் பயன்படுத்தக் கூடாது. மாநிலங்கள் விரும்பி ஏற்காத சில மாநிலத் திட்டங்களை ஏற்றுக் கொள்ளுமாறு பலவந்தப் படுத்துவதற்கு மத்திய அரசின் நிதி அதிகாரங்களை ஒரு கருவியாகப் பயன் படுத்துவதற் கும் அனுமதிக்கக் கூடாது.''12

மூன்ரும் நிதி ஆணைக் குழுத் தலைவராயிருந்த உயர்திரு. அசோக் சந்தா அவர்கள் திட்டமிடுதல் இனி எவ்வகையில் இயங்க வேண்டு மென்பதைக் கூறும் போது,

''பிராந்தியத் திட்டங்களுக்கும் தேசியத் திட்டத்திற்கும் இடையேயுள்ள வேறுபாட்டினைத்தெளிவு படுத்துவது நல்லது. மாநிலங்களின் அபிப்பிராயங்களையும் ஆலோசனைகளையும் ஆய்வு செய்த பின்னர், திட்டக் குழுவால் தேசியத் திட்டங் கள் தீட்டப்பட வேண்டும். வட்டாரத் திட்டங்களை அந்தந்த

12 Ibid, Opp. Cited, Note. 10. P. 263

மாநிலங்களே தீட்டிக் கொள்ளும் வகையில், விட்டுவிட வேண்டும். ஒவ்வொரு மாநிலமும், தனக்குள்ள தனித் தேவைகளை ஒட்டியும், சுற்றுச் சார்புகள் மற்றும் மத்திய அரசிடமிருந்து நியாயமாக மாநிலங்கள் எதிர்பார்க்கும் நிதி உதவிப் பங்கு ஆகியவைகளை அனுசரித்தும், மத்திய நிதி உதவிகளைப் பயன் பெறத்தக்க முறையில் உபயோகப்படுத்தக் கூடிய மாநிலங்களது திறமையை அனுசரிக்கும் வகையிலும், (மாநிலத்) திட்டங்கள் தீட்டப்படுவதை மாநிலங்களிடமே ஒப்படைக்கப்பட வேண்டும். மாநிலங்களின்பால் திட்டக் குழு கொண்டிருக்கும் போக்கினை மாற்றிக் கொள்ள வேண்டும். தேசியத் திட்டங்களை உருவாக்குவதில் மாநிலங்களும் பங்கு பெறுகின்றன என்றும் அந்தத் திட்டங்கள் வெற்றியடைவதற்கு மாநிலங்களும் காரணமா யிருந்தன என்றும், மாநிலங்கள் உணரக் கூடிய வகையில் திட்டக்குழு, தனது தன்மையை மாற்றி யமைத்துக் கொள்ள வேண்டும். தேசிய முயற்சிகளில் தாங்களும் உரிய பங்கைச் செலுத்துகிறோம் என்ற உணர்வை மாநிலங்களுக்கு ஏற்படுத்துவதற்காக அரசியல், பொருளாதார உறவுகளைச் சரிக்கட்டிக் கொள்ள வேண்டும்; அப்போது தான் தற்போதுள்ள பிரிவினைச் சக்திகள் தடுக்கப்படும். மாநிலங்களுக்கு நாட்டைப் பற்றிய குறிக்கோளும் நெறிமுறையும் உருவாகும்.'' 13

எனத் தெளிவாக்குகிறார்.

மாநில சுயாட்சி பற்றியும் இராசமன்னார் குழுவின் மத்திய-மாநில உறவு பற்றிய அறிக்கை பற்றியும் ஆய்வு செய்த தமிழக அரசு,

''திட்டக் குழுவானது, மத்திய நிர்வாகத்தின் கட்டுப்பாட்டிலோ அல்லது அரசியல் கட்சி சார்புள்ளதாகவோ இல்லாமல், சுதந்திரமாகச் செயல்படும் ஓர் அமைப்பாக இருக்க வேண்டும். இந்த நோக்கத்தினை எய்த, திட்டக் குழுவை நிறுவுவதற்கு வகை செய்யும் சட்டம் நாடாளுமன்றத்தில் இயற்றப்பட்டு, அது சட்டப்படி அமைதல் வேண்டும்.''

---

13 "Financial Aspect of Union - State Relations" in Ibid, Opp. Cited, Note 10. P. 256

"சட்டப்படி அமைக்கப்படும் திட்டக் குழுவில் பொருளாதார, அறிவியல், தொழில் நுட்ப மற்றும் வேளாண்மைத் துறை வல்லுனர்களும் பிறவகைத் தேசியப் பணியைச் சார்ந்த வல்லுனர்களும் மட்டுமே இடம் பெற வேண்டும். இந்திய அரசைச் சேர்ந்த அமைச்சர் எவரும் அதில் இடம் பெற லாகாது. இது தொடர்பாக இயற்றப்பட விருக்கும் சட்டத்தில், திட்ட ஆணைக்குழு உறுப்பினர்களின் பதவிக்காலம், பணி நிபந்தனைகள் ஆகியவற்றிற்கு வகை செய்யப்படல் வேண்டும். இந்தத் திட்ட ஆணைக் குழுவிற் கென்று தனியே ஒரு செயலகம் இருத்தல் வேண்டும். தற்போதுள்ள திட்ட ஆணைக் குழு கலைக்கப்பட வேண்டும்."

"திட்ட ஆணைக் குழுவின் பணி, மாநிலங்கள் உருவாக்கும் திட்டங்கள் குறித்து அறிவுரை வழங்குவதாக இருத்தல் வேண்டும்."

"மாநிலங்களால் அல்லது மாநிலங்களில் தொடங்கப்படும் தொழில் திட்டங்களுக்காக மாநிலங்களுக்கு அன்னியச் செலாவணி வழங்குவது தொடர்பாக நிதி ஆணைக் குழுவினால் பரிசீலிக்கப்படுவதற்குப் பரிந்துரைகள் செய்ய வேண்டியதும் இதன் பொறுப்பாகவே இருக்கும். நிதி ஆணைக் குழு, மானியங்களுக்குப் பரிந்துரை செய்கையில் திட்ட ஆணைக் குழுவின் பரிந்துரைகளையும் கருத்திற் கொள்ள வேண்டும்."

"ஒவ்வொரு மாநிலமும் தனக்கென ஒரு திட்ட வாரியத்தை அமைத்துக் கொள்ளலாம்." 14

எனக் கருத்துரை வழங்குகிறது.



---

14 தமிழ்நாடு அரசின் கருத்துரைகள் (1974) பக்கம் 10.

## 2. மீளா நச்சு வட்டத்திற்குள் மாநிலங்கள்

— மத்திய மானியங்களும் கடன்களும் —

"திட்டங்களுக்காகத் தரப்படும் நிதி உதவிகளில், விருப்ப மானியங்கள் மூலமாகத் தரப்படும் தொகைகளே மிகப் பெரும் பங்கை வகிக்கின்றன. அவ்வகை மிகப் பெரிய விருப்ப மானியங்கள் தான் திட்டக் குழுவிடமும் மத்திய அமைச்சகங்களிடமும் ஏராளமான அதிகாரங்களைத் தேக்கி வைத்து விடுகின்றன." 1

— அரசமைப்பு வல்லுனர், அமல்ரே.

"மாநிலங்களுக்குக் கடன் கொடுக்கும் மிகப் பெரிய கடன் கொடுப்பவராக மத்திய அரசு ஆகிவிட்டது. மத்திய அரசின் புதிய நிதி உதவி யின்றி, (ஏற்கனவே வாங்கப்பட்ட) கடன்களின் தவணைத் தொகைகளையும், அவற்றின் வட்டியையும் திருப்பிக் கட்டும் நிலையில் எந்த மாநிலமும் இல்லை என்ற (கையறு) நிலை உருவாகி விட்டது. ஆக, நிதியைப் பொறுத்த வரை மத்திய அரசும் மாநிலங்களும் ஒரு நச்சு வட்டத்திற்குள் சிக்கிக் கொண்டன. மாநில சுயாட்சிக்கு ஏதாவது பொருள் இருக்க வேண்டுமானால், இந்த நச்சு வட்டம் உடைத் தெறியப்பட வேண்டும்." 2

— தமிழக அரசமைப்பு வல்லுனர், கே. சந்தானம்.

சென்ற 24 ஆண்டுகளில், மத்திய-மாநில உறவுகளை மிக அதிகமாகப் பாதிக்கக் கூடிய இரு வகையான நிதி பற்றிய நடைமுறைகள் மேலோங்கி வளர்ச்சி யுற்றிருப்பதை நாம்

---

1 "Inter Governmental Relations in India" (1966) by Amalray, P. 120.

2 "Crowing demand for Greater Autonomy" in "The Union and the States," (1972) by S N. Jain, P. 82.

காணலாம். அவ்விருவகையான நிதி சார்ந்த நடைமுறைகளை அரசியல் அமைப்புச் சட்டம் கூட உருவாக்கவில்லை. எனினும் மத்திய அரசு, அரசியல் சட்ட அமைப்பில் வழங்கப்பட்டுள்ள எல்லா அதிகாரங்களும் போதாது என்று கருதி மாநிலங்களை முழுமையாக அடிமை கொள்வதற்காக, சட்ட நிலையை மீறிய இந்த இருவகை ஏற்பாடுகளையும் தொடர்ந்து கடைப்பிடித்து வருகிறது.

அரசமைப்புச் சட்டத்தில் செய்யப்பட்டுள்ள மத்திய-மாநில நிதி ஏற்பாடுகளுக்கு முரணாக அரசமைப்புச்சட்டவிதி 282-ஐத் திரித்துப் பயன்படுத்தி மத்திய அரசு, தனக்கு வேண்டிய மாநிலங்களுக்கு, தான் விரும்பும்போது தனது விருப்பமான மிகப் பெரிய தொகைகளை ''விருப்ப மானியங்கள்'' (Discretionary Grants) என்ற பெயரால் வழங்கி வருகிறது. இதனால் மாநிலங்களின் நிதி நிலைகள் நிலையானவையாயிருப்பதில்லை.

அரசமைப்புச் சட்டவிதி 293-இன் மூலம் மத்திய அரசு மாநிலங்களுக்குக் கொடுக்கக் கூடிய இன்னொரு நிதி ஏற்பாடே ''கடன் உதவி'' ஆகும்.

''விருப்ப மானியங்கள்'' மற்றும் ''கடன் உதவி'' என்ற இவ்விரு வகையான நிதி சார்ந்த நடைமுறைகளும் ''திட்ட மிடுதலால்'' ஏற்பட்ட விளைவுகளாகும்.

இந்நூலின் மூன்றும் பகுதியில் 14-ஆம் அத்தியாயத்தில் மாநிலங்களுக்கு நிதி ஆணைக் குழுவின் பரிந்துரையின் பேரில் மத்திய அரசால் 'உதவி மானியங்கள்' அளிக்கப்படுவதைப் பற்றிப் பார்த்தோம். உதவி மானியங்களைக் கொடுப்பதற்கு, நிதி ஆணைக் குழுவும் ( Finance Commission ) அது பற்றிய அரசமைப்பு விதிகளும் உண்டு. ஆனால் ''விருப்ப மானியங்களைக்''கொடுப்பதற்குச் சட்ட முகாந்திரம் எதுவும் முறையாக ஏற்படுத்தப்படவில்லை. மேலும் இவை நிதி ஆணைக்குழுவின் அதிகாரத்திற்குட் பட்டதுமல்ல.

## I

## விருப்ப மானியம் – மீளா நச்சு வட்டம்

ஐந்தாண்டுத் திட்டங்களில் பொதுவாக மத்திய அரசின் உதவியினால் நிறைவேற்றப்படக் கூடிய திட்டங்களுக்கும் மத்திய அரசால் தனித்து மேற்கொள்ளப் படக் கூடிய சில

குறிப்பிட்ட வளர்ச்சித் திட்டங்களுக்கும் பயன் படுத்துவதற்காக மத்திய அரசால் மாநிலங்களுக்கு ''விருப்ப மானியங்கள்'' அளிக்கப் படுகின்றன.

ஆனல் அரசமைப்புச் சட்டத்தில் சொல்லப்பட்ட எந்த சட்டவிதியின் அடிப்படையிலும் அந்த ''விருப்ப மானியங்கள்'' வழங்கப்படுவ தில்லே. எனவே, மாநிலங்கள் அத்திட்டங்களேக் கட்டாயமாக நிறைவேற்றித் தீர வேண்டிய அவசியமும் இல்லே.

பலவகையான கட்டுப்பாடுகளேயும் செயல்முறைச் சிக்கல் களேயும் அந்த விருப்பு மானியங்கள் மூலமாக மத்திய அரசு மாநிலங்களின் மேல் திணிக்கின்றது. மத்திய அரசு கொடுக்கும் விருப்ப மானியங்கள் மூலமாகச் செயல் படுத்தப்படும் மாநிலத் திட்டங்களே, மத்திய அரசு மேற்பார்வை யிடுவதாலும் அதன் மூலமாக மாநில அரசுகளின் மேல் ஏராளமான கட்டுப்பாடுகளே அது விதிப்பதாலும் பொதுவாக இவ்வகை விருப்ப மானியங் களே மாநிலங்கள் விரும்புவ தில்லே. ஆனல் மாநிலங்கள் நிதிப் பற்ருக்குறையைக் கொண்டிருக்கும் காரணத்தினல், ஏதோ ஒரு வகையில் சில திட்டங்கள் மாநிலங்களில் நிறைவேறி நடக்கட்டும் என்ற ஆவலினல் உந்தப்பட்டு, மத்திய அரசு கொடுக்கும் வேண்டாத ''விருப்ப மானியங்களே'' மாநில அரசு கள், கையறு நிலேயில் பெற்றுக் கொண்டு, அதன் வழி மத்திய் அரசின் மேலாட்சியையும் தம் மீது வலிந்து ஏற்றுக் கொள் கின்றன.

மாநிலத்தின் போருத நிதி மூலங்கள் ( Finance Resources ) மாநில சுயாட்சியினே நெருக்கிச் சுருக்கிக் கட்டுப்படுத்துகின்ற தென்ருல், மத்திய அரசால் வழங்கப்படும் ''விருப்ப மானியங் கள்'' மாநிலங்களின் கழுத்தில் வலிமையான சுருக்குக் கயிற்றை மாநிலங்களே விரும்பி மாட்டிக் கொள்வதற்குண்டான வழி வகையினேச் செய்து விடுகின்றன. அது பற்றிக் கீழே பார்ப்போம்.

## மத்திய அரசின் சட்டத் திரிபும் ஒற்றை ஆட்சி மரபும்

சட்டவிதி 282:- ''மத்திய அரசு அல்லது ஒரு மாநிலம் ஒரு பொதுக் காரியத்திற்காக எந்த மானியத்தையும் வழங் கலாம். அந்தப் பொதுக்காரியம் பற்றி நாடாளு மன்றமோ அல்லது மாநிலச் சட்ட மன்றமோ

> சட்டங்கள் செய்ய முடியாத நிலையில் கூட அவைகளுக்காக மத்திய அரசும், மாநிலங் களும் மானியங்களை வழங்கலாம்."

இந்தச் சட்டவிதி ஒரு மிஞ்சி நிற்கும் சட்டவிதி (Residuary Article) ஆகும். மத்திய-மாநிலங்களுக்கிடையில் நிதித்துறைகளில் ஏற்படக்கூடிய பல வகையான நடைமுறைப் பரிகாரங்களை வழங்குவதற்காக, இந்தச் சட்டவிதி உருவாக்கப்படவில்லை. அப்படி ஒரு கருத்துடன் இந்தச் சட்டவிதி இயற்றப்பட்டிருந்தால், அரசமைப்புச் சட்டத்தில் வரும் மிகச் சிக்கல் வாய்ந்த மத்திய-மாநில நிதி உறவுகளைப் பற்றிய வேறு சட்ட விதிகள் அரசமைப்பில் இடம் பெற்றிருக்க வேண்டிய அவசியமில்லை.

மத்திய அரசிற்கும் மாநில அரசுகளுக்கும் எதிர்பாராமல் ஏற்படக்கூடிய சில வருவாய் மற்றும் செலவினங்களை நேர் செய்து கொள்வதற்காக மட்டுமே இந்தச்சட்டவிதி உருவாக்கப்பட்டுள்ளது. முதல் ஐந்தாண்டுத் திட்டம் தீட்டப்படுவதற்கு முன்னால் சில வகையான நிதி மானியங்களை 1947-ஆம் ஆண்டு முதல் 1952-ஆம் ஆண்டு வரை, "உணவு உற்பத்தித் திட்டம்" மற்றும் சில குறிப்பிட்டுச் சொல்லப் படாத திட்டங்களுக்கான மானியங்களை வழங்குவதற்காகவே இந்தச் சட்டவிதி பயன்படுத்தப்பட்டது. ஆனால் தற்போது 282-ஆம் சட்டவிதியின் நோக்கத்தைத் திரித்து, மத்திய அரசு, ஐந்தாண்டுத் திட்டங்களுக்காக இதனை அறுதியிட்ட ஒரு சட்ட விதியாகக் கையாளுகிறது.

அரசியலமைப்புச் சட்டப்படி மத்திய அரசிற்கு வழங்கப்படாத ஓர் உரிமையை இச்சட்டவிதியின் மூலம் மத்திய அரசு இருப்பதாக மாற்றிக் கொண்டு அதனைத் திரித்துச் செயல்படுகிறது. இச்சட்ட விதியை மாற்றிப் பயன்படுத்தி மாநில சுயாட்சியின் ஆணி வேரையே மத்திய அரசு வெட்டி யெறிகின்றது. நமது அரசமைப்புச் சட்டத்தால் உருவாக்கப்பட்ட மத்திய-மாநில நிதி உறவை இச்சட்ட விதியின் திரித்த செயல்முறை இன்னும் சிக்கலாக ஆக்குவதோடு மத்திய அரசிற்கு ஓர் அடிப்படையான நிதி அதிகாரமாகவும் அது பயன்படுகிறது. கூட்டாட்சி நாட்டின் நிதி முறைக்கு எதிரான ஒற்றை ஆட்சி முறையை, இச்சட்ட விதி மூலமாக மத்திய அரசு மாநிலங்களின் மேல் திணித்து விட்டது என்று சொன்னால் அது மிகையாகாது.

மேற்சொன்ன 282-ஆம் சட்ட விதியின் மூலம் மாநிலங்களுக்கு வழங்கப்படும் மானியங்களை "மத்திய அரசின் அடிமைத் தளை மானியங்கள்" என்று கூடக் கூறலாம். ஏனெனில் எந்த ஒரு நிதி மானியத்தையும் மத்திய அரசு, மாநிலங்களுக்கு வழங்க வேண்டுமெனில், அது பற்றி முதலில் நாடாளுமன்றம் ஆய்வு செய்ய வேண்டும். சான்ருக நிதி ஆணைக்குழு பரிந்துரைக்கும் உதவி மானியங்களை மாநிலங்கள் பெறுவதற்கு முன்னர் நாடாளு மன்றம் அனுமதி யளிக்கிறது. ஆனால், இந்தச் சட்டவிதி மூலம் அளிக்கப்படும் விருப்ப மானியங்களுக்கு நாடாளு மன்றச் சட்டமோ அல்லது வேறு வகையான சட்ட அனுமதியோ தேவை யில்லை. மத்திய நிதி நிலை அறிக்கையில் (Central Budget) "விருப்ப மானியம் வழங்கப் பட்டது" எனக் கண்டிருந்தால் கூடப் போதுமானது. மத்திய அரசு இந்த விருப்ப மானியங்களை எந்த மாநிலத்திற்கு வேண்டுமானாலும் எப்போது விரும்பினாலும் வாரி வழங்கலாம். எனவே, சட்ட மூலமில்லாத 'விருப்ப மானியங்களை' மத்திய அரசின் 'அடிமைத்தளை மானியங்கள்' என ஏன் நாம் அழைக்கக் கூடாது?

நமது அரசமைப்புச் சட்டத்தில் செய்யப் பட்டிருக்கும் எல்லா நிதி ஏற்பாடுகளையும் அடிப்படையாக வைத்து மத்திய அரசு, மாநிலங்களுக்கு வழங்கக் கூடிய எல்லா நிதியையும் ஒன்று சேர்த்துக் கணக்கிட்டால் எத்துணைத் தொகை வருமோ, அந்தத் தொகையினைக் காட்டிலும் பல மடங்கு அதிகமான தொகைகளை மத்திய அரசு, தான் விரும்பும் மாநிலங்களுக்கு "விருப்ப மானியங்களாகத்" தருகின்றது. ஐந்தாண்டுத் திட்டங்களுக்குத் தேவையான தெனக் காட்டி, சென்ற 24 ஆண்டுகளுக்கு மேலாக மத்திய அரசு நமது அரசியல் சட்டத்திற்குப் புறம்பாக, விருப்ப மானியங்கள் தரும் முறையை அமுல் படுத்தி ஒற்றை ஆட்சி முறையை நடைமுறையில் உருவாக்கி வைத்து விட்டது.

### ஓரவஞ்சனையும் கொடுக்கும்

ஐந்தாண்டுத் திட்டங்களில் மாநிலங்களின் பங்கை நிறைவேற்றுவதற்காக எல்லா "மூலதன மானியங்களையும்" (Capital Grants) "பொதுக் காரியம்" என்ற பெயரால் விருப்ப மானியங்கள் மூலமாகவே மத்திய அரசு மாநிலங்களுக்குத் தருகின்றது என்பதைப் பார்த்தோம். அதற்குரிய பரிந்துரையைச் செய்வது 'திட்டக்குழு'.

ஆனல் ''திட்டக்குழு'' என்பது ''நிதி ஆணைக்குழு''வைப் போல் நீதி தவருக்குழு எனச் சொல்ல முடியாது. அது மத்திய அரசினுடைய ஒரு பகுதியாகும். திட்டக்குழு செய்கின்ற பரிந்துரைகளின் பேரிலேயே மத்திய அரசினுடைய பல அமைச்சகங்களும் இந்த விருப்பு மானியங்களை மாநிலங்களுக்கு அளிக்கின்றன. எனவே மாநிலத்திற்கு மாநிலம் வழங்கப்படும் இந்த விருப்ப மானியங்களில் மத்திய அரசின் ஓரவஞ்சனையும் தொக்கி நிற்கும் என்பது கண்கூடு.

பொதுவாக விருப்ப மானியங்கள் யாவும் பங்கீட்டு மானிய (Matching Grants) வகையைச் சார்ந்தவை. அதாவது எந்த அளவிற்குப் பங்கீட்டு மானியத் தொகை மத்திய அரசால் கொடுக்கப்படுகிறதோ அந்தத் தொகைக்கு இணையாகவோ அல்லது அதன் ஒரு பங்கினையோ மாநிலங்களும் தர வேண்டும். எனவே, விருப்பு மானியங்களைப் பெறக்கூடிய மாநிலங்கள் தன்னுடைய நிதியிலிருந்து ஒரு பகுதித் தொகையை அல்லது சரிசமமான தொகையைக் கொடுத்து, அந்தத் திட்டத்தை நிறைவேற்றிக் கொள்ள வேண்டும். இதனல் வறிய மாநிலங் கள் திட்டத்தின் ஆசையால் உந்தப்பட்டுத் தமது குறைந்த நிதித் தொகையிலிருந்து ஒரு பகுதியைக் கொடுத்து விட்டு, அதனைச் சரிக்கட்டிக் கொள்ள முடியாமல் கடன் படுகிறது.

மத்திய அரசின் கட்டுப்பாடுகள் என்ற 'கொடுக்கோடு' சேர்த்தே விருப்ப மானியங்கள் அளிக்கப்படுகின்றன. எனவே, விருப்ப மானியங்களைப் பெறக் கூடிய மாநில அரசுகளின் மேல் மத்திய அரசு, பல கட்டுப்பாடுகளை விதிப்பதுடன் அத்திட் டத்தைத் தானே மேற்பார்வையிடுவதன் மூலமாக மாநில அரசுகளைத் தன்னுரிமை இழக்க வைக்கின்றது. ஆக, விருப்ப மானியத்துடன் மத்திய அரசின் 'கொடுக்கும்' இணைக்கப் பட்டுள்ளதை நாம் புரிந்து கொள்ளலாம்.

இந்த வகை மானியங்கள் ஒரு மாநிலத்திற்கு வழங்கப் படுவற்கு முன்னல் மாநில அரசிற்கும் திட்டக் குழுவிற்கும் மத்திய இலாக்காக்களும் இடையே விரிவான விவாதங்கள் நடைபெறுகின்றன. அந்த விவாதங்களில் எடுக்கப்படும் முடிவு களுக்கும் மத்தியக் கட்டுப்பாட்டிற்கும் உட்பட்டே மாநிலங்கள் விருப்ப மானியத்தைப் பெறுவதால், விருப்ப மானியங்கள் மாநில சுயாட்சிக்கு மறைமுகமாகக் குந்தகம் விளைவிக்கின்றது. அஃதாவது 'விருப்ப மானியங்கள்' என்ற பிச்சைக் காசிற் காக மாநிலங்கள் அரசியல் சட்டத்தால் அளிக்கப்பட்ட தமது உரிமைகளை மன மறிந்து அடகு வைத்து விடுகின்றன.

## நச்சு வட்டம்

ஓர் ஐந்தாண்டுத் திட்டக் காலத்திற்கு மட்டும் அதாவது குறிப்பிட்ட ஐந்தாண்டுகளுக்காக மட்டும் தனிப்பட்ட விருப்ப மானியங்கள் தரப்படுகின்றன. திட்ட கால முடிவில் அந்த விருப்ப மானியத்தை மாநிலங்கள் செலவழித்து விடுகின்றன. ஆனால், அந்தச் செலவிற்கு மாநிலமே பொறுப்பாகி, கடனாளியாகி விடுகிறது. இந்தக் கடனைக் காட்டி உதவி மானியம் வேண்டுமென நிதி ஆணைக்குழுவினை அந்த மாநிலம் நாடுகிறது. தானாகவே ஏற்படுத்திக் கொண்ட விரும்பாத ஒரு கடனைத் தீர்ப்பதற்காக (நிதி ஆணைக்குழு நியாயமாகக் கொடுத்து) வேறு வித உதவி மானியத் தொகையை அந்த மாநிலம் உபயோகிக்க வேண்டிய கட்டாயத்திற்கு ஆட்படுகிறது. இவ்வகையில் வேண்டாத ஒரு திட்டத்திற்கான விருப்ப மானியத்தை மாநிலங்கள் தம் நிதிப் பற்றுக்குறை காரணமாகப் பெற்றுக் கொண்டு, பின்னர் அதனை மத்திய அரசின் மேற்பார்வையுடனும் அதனுடைய விருப்பத்திற்கு இணங்கவும் செலவழித்து அந்தக் குறிப்பிட்ட திட்டத்தை நிறைவேற்றி விட்டு, செலவழித்த தொகையை ஈடுகட்டிக் கொள்வதற்காக நிதி ஆணைக்குழு வழங்கும் உதவித் தொகையைக் கூட இழந்து விட்டு, மீளா ஒரு நச்சு வட்டத்திற்குள் சிக்கிக் கொள்ளுகின்றன—வட்டிக்கடை மார்வாடியிடம் ஏழை விவசாயி மீளாமல் சிக்கிக் கொள்வதைப் போல்.

மாநில அதிகார எல்லைக்குள் — மாநிலப் பட்டியலில் கண்டுள்ள — சில அதிகார இனங்களைச் சார்ந்த திட்டங்களுக்காகவே விருப்ப மானியத் தொகைகளை மத்திய அரசு வழங்குகிறது. அரசமைப்பின் மாநில அதிகாரப் பட்டியல்படி, அத்திட்டங்களைப் போடுவதும் செயல்படுத்துவதும் நிறைவேற்றுவதும் முழுக்க முழுக்க மாநில அரசினுடைய அதிகார உரிமையாகும்.

ஆனால், உண்மையில் நடைபெறுவதென்ன?

மாநில அதிகாரத்திற்குட்பட்ட திட்டத்தை நிறைவேற்றுவதற்காக விருப்ப மானியத்தை மத்திய அரசு கொடுக்கும் போதே, பல கட்டுப்பாடுகளையும் கொடுக்கினையும் அதனுடன் சேர்த்து அளித்து விடுகிறது. மானியத் தொகையை வழங்குவதால் அத்திட்டத்தை மேற்பார்வை யிடுவதற்காகவும் தன்

விருப்பத்திற்கு அதனைச் செயல் படுத்துவதற்காகவும் மாநிலங்களின் மேல் மத்திய அரசு கட்டுப்பாடுகளை விதிக்கின்றது. மாநில அரசு வேறு வழியின்றித் தன்னையும் அறியாமல் அந்த மத்தியக் கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டு விடுகிறது.

தனது எல்லைக்குட்பட்ட அதிகாரக் கதவை மத்திய அரசின் வருகைக்காக, மாநில அரசே திறந்து வைத்து, அதற்கடிமையாவதற்காகத் தானே நடை பாவாடையும் விரித்து வைக்கிறது. இப்படி அரசமைப்புச் சட்டத்தாலளிக்கப்பட்ட தனது அதிகாரங்களை – தன்னுரிமைகளை – விருப்ப மானியத்திற்காக மாநிலங்களே விட்டுக் கொடுத்து, மத்திய அரசிற்குத் தம்மைத் தாமே அடிமைப்படுத்திக் கொள்கின்றன.

## மகத்தான ஆயுதம்

மேற்சொன்ன வகையில் மாநிலங்கள், தம் கண்களைத் தாமே குத்திக் கொள்வதற்கு மத்திய அரசின் விருப்ப மானியங்கள் பயன் படுகின்றன. இக் கொடுமையைப் பல வல்லுநர்களும் பொருளாதார மேதைகளும் கண்டனம் செய்துள்ளனர்.

சில குறிப்பிட்ட காரியங்களுக்காக மத்திய அரசு விருப்ப மானியங்களைக் கொடுக்கக் கூடாதென்றும், ஒரு மாநிலத்தின் நிதிப் பற்றுக் குறையைத் தீர்க்கக் கூடிய மானியங்களைப் பற்றி நிதி ஆணைக்குழுவே தீர்மானித்து சிபாரிசு செய்ய வேண்டுமென்றும், திட்டச் செலவிற்காக என்று விருப்ப மானியங்கள் தரப்படும் முறையினை முற்றிலும் மாற்றியமைக்க வேண்டுமென்றும், இந்த நல்ல நோக்கங்கள் நிறைவேறுவதற்காகத் திட்டக்குழுவையே நிர்வாக ஆணைக்குழுவுடன் இணைத்து விட்டால் மாநிலங்களுக்கு ஓரவஞ்சனை ஏற்படாமல் நியாயமான திட்டத் தொகைகளும் மானியங்களும் கிடைக்க ஏதுவாகுமென்றும் மூன்றும் நிதி ஆணைக்குழு வலியுறுத்திப் பரிந்துரை செய்தது.

ஆனால், விருப்ப மானிய முறை ஒழிக்கப்பட்டால் மத்திய அரசினுடைய செல்வாக்கும் எஜமானத் தன்மையும் பழுது பட்டுவிடும் அல்லவா? எனவே, மூன்றும் நிதி ஆணைக்குழுவின் அந்தப் பரிந்துரைகளை, மத்திய அரசு ஏற்றுக் கொள்ளவில்லை.

மாநிலங்களை அடிமைப் படுத்தி, அவைகளின் மிடிமையையும் நீங்காத நிதிப் பற்ருக் குறையையும் பயன் படுத்திக் கொண்டு, மாநிலங்களை நிதி அடிமைத்தனம் என்ற நச்சு வட்டத்தினுள்ளிருந்து வெளியேற விடாமல் செய்து, தனது எதேச்சாதிகார ஆதிக்கத்தை மாநிலங்களின் மேல் நிரந்தரமாக நிலை நிறுத்திக் கொள்வதற்கு வகை செய்யும் விருப்ப மானியக் குறுக்கு வழியை மத்திய அரசு கைவிடத் தயாராக இல்லை. நிதித் துறையிலும் சட்டம் இயற்றும் துறையிலும் நிர்வாகத்திலும், மாநிலங்களை இந்தக் குறுக்கு வழி நிதி ஏற்பாட்டின் மூலம் மடக்குவதற்கும், தனது கட்டுப்பாட்டினுள் மாநில அரசுகளை வைத்துக் கொள்வதற்கும், தனது விருப்பப்படி ஆட்டுவிப்பதற்கும் மத்திய அரசு ''திட்டமிடுதலையும்'' அதற்காக ''விருப்ப மானியங்களை'' வழங்குதலையும் தனது மகத்தான ஆயுதங்களாகப் பயன் படுத்துகிறது.

பேரறிஞர் அண்ணு அவர்கள் இதனை மாநிலங்களை ஆட்டிப் படைக்கும் ''மத்திய அரசின் சாட்டை'' எனக் குறிப்பிடுகிருர்.

1967–ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் 6–ஆம் நாளில் தமிழக அரசின் முதலமைச்சராகப் பொறுப்பெற்றுக் கொண்ட அறிஞர் அண்ணு அவர்கள் திருத்தி அமைத்த தனது முதல் வரவு செலவுத் திட்டத்தைச் சட்ட மன்றத்தில் தாக்கல் செய்து, அதன் மேல் நடைபெற்ற விவாதத்திற்கு 27—6—1967-ஆம் நாளில் பதில் அளிக்கையில் தனது உரையில் மேற்சொன்ன நிதி ஏற்பாடு மற்றும் விருப்ப மானிய முறைகளைப் பற்றிக் குறிப்பிடும் போது,

> ''மாநில அரசு, மைய அரசுடன் கொண்டுள்ள நிதித் தொடர்பில் மூன்று வகைகள் இருக்கின்றன வென்பதை நினைவில் கொள்ளுமாறு மாண்புமிகு உறுப்பினர்களைக் கேட்டுக் கொள்கிறேன். முதல் வகை, இங்கு மைய அரசு வசூலிக்கும் வரிகளை, பங்கீடு மூலம் அளிப்பது; இரண்டாவது வகை மானியம் (உதவி மானியம்) வழங்குவது; மூன்ருவது வகை திட்ட நிதி ஒதுக்கீடு (விருப்ப மானியங்கள் மூலமாக) செய்வது. நீங்கள் 1950 முதல் 1967 வரையிலான புள்ளி விவரங்களை ஆழ்ந்து பகுத்தாராய்ந்தால், காலம் செல்லச் செல்ல முதல் இரண்டு இனங்களுக்கும் (வரிப்பங்கீடும் உதவி மானியமும்) உள்ள சிறப்புக் குறைந்து, மூன்ருவது இனமான திட்ட ஒதுக்கீடு

(விருப்ப மானிய முறை) மட்டும் அதிக முக்கியத்துவம் அல்லது மிகுந்த ஆதிக்கம் அடைந்து வருவது தெரிய வரும்; இது, நிதி ஆணைக்குழுவின் அதிகார வரம்பிற்குள் வருவதில்லை.''

''மானியங்கள் என்ற போர்வையில் மைய அரசு, அத னிடம் சாட்டையை வைத்துள்ளது. ஏனெனில், மைய அரசு அதன் உளத்தேர்வின்படி மானியங்களை வழங்கு கிறது. திட்டக்குழு உறுப்பினர்கள் எனப்படுவோரின் விருப்பு வெறுப்பிற்கேற்ற வகையில் திட்ட ஒதுக்கீடு செய்யப்பட்டு வருகின்றதென்பதைக் கூறிக் கொள் கிறேன். நமது நாட்டின் முன்னேற்றத்திற்காகத் தேவைப்படும் பெருமளவுத் தொகை, மற்றொரு குழுவின் விருப்பு வெறுப்பிற் கேற்ப விடப்பட்டுள்ளது. இவற்றை மறு ஆய்வு செய்யும் அவசரத் தேவை எழுந்துள்ள தென்று நான் கருதுகிறேன். இந்தக் குழு (திட்டக்குழு) எந்த ஓர் அதிகாரப் பூர்வமான அமைப்பின் நிர்வாகத்தின் கீழும் இல்லை. திட்டத் தொகையைப் பொறுத்த வரை யில் நிதித் தொடர்புகள் மறு ஆய்வு செய்யப்பட வேண் டும். நமக்குச் சேர வேண்டியது, நம்மிடமிருந்து கொள்ளை போகக் கூடாது. மாநில அரசுக்கும் மைய அரசுக்குமுள்ள தொடர்புகளும் மறு ஆய்வு செய்யப்பட வேண்டும்.''

என மாநிலங்களின் அடிமை நிலையையும் மத்திய அரசின் ஆண்டான் தன்மையையும் எடுத்து விளக்குகிறார்.

## II

## கொத்தடிமையாக்கும் மத்தியக் கடன்

அரசமைப்புச் சட்டம் உருவானதற்குப் பின்னர், மாநிலத் தன்னாட்சியை, மாநிலங்களே கொடுத்துக் கொள்வதற்கு, மத்திய அரசால் செய்யப்பட்ட பிறிதொரு வகையேற்பாடே, ''மத்தியக் கடன்கள்'' ஆகும்.

ஐந்தாண்டுத் திட்டங்களில் வழங்கப்படும் விருப்ப மானியங் களின் மூலமாக மத்திய அரசு, மாநிலத் தன்னாட்சியின் ஒரு கண்ணை மாநிலத்தின் கையாலேயே குத்திக்கொள்ள வைக்கிற

தெனில், மத்தியக் கடன்களை மாநிலங்களுக்கு வழங்குவதன் மூலம் மாநிலத் தன்னாட்சியின் மற்றொரு கண்ணும் மத்திய அரசால் குத்தப்படுகிறது. மாநிலங்களால் கடன்களை மறுக்க வும் முடிவதில்லை; ஆனால் திருப்பிக் கட்டவும் முடிவதில்லை.

கம்பராமாயணத்தின் ''இலங்கை வேந்தன்'', தான் இறக்கும் முன்னர், கடன் பட்ட நெஞ்சத்தைப் போல் கலங்கி னானோ என்னவோ, நமக்குத் தெரியாது. ஆனால், மத்திய அரசிடமிருந்து கடன் பட்ட மாநில நெஞ்சங்கள், தீராத வேதனையால் துடித்துச் சாகாமல் சாகும் நிலையை, நாம் நாளும் காண்கிறோம்.

## உலக ரெக்கார்டு

முதல் ஐந்தாண்டுத் திட்டத்திற்கு முன்னால், மாநில அரசு கள் மிகப் பெரிய கடன்களை மத்திய அரசிடமிருந்து பெற்ற தாகத் தெரியவில்லை. மத்திய அரசும் மாநிலங்களுக்குக் கடன் கொடுத்தலை, தனது அரசுப் பணிகளில் ஒரு கடமையாகக் கருதவில்லை. 1948–ஆம் ஆண்டு முதல் 1951–ஆம் ஆண்டு முடிய, எல்லா மாநிலங்களுக்கும் சேர்த்து மத்திய அரசால் வழங்கப்பட்ட கடன் தொகை, ஏறத்தாழ 50 கோடி ரூபாய்.

20 ஆண்டுகள் கழித்து, 1971 – 1972–ஆம் ஆண்டு வரை மத்திய அரசிடமிருந்து மாநிலங்கள் பெற்ற கடன் தொகை, ரூபாய் 6510.17 கோடி.

அஃதாவது 20 ஆண்டுகளில், மாநில அரசுகள் 1951–ஆம் ஆண்டு வரை பெற்றிருந்த கடன்களைப் போல் 130மடங்குக்குச் சமமான கடன் தொகையை, மத்திய் அரசிடமிருந்து பெற் றுள்ளன. அகில உலகத்திலிருக்கும் எந்தக் கூட்டாட்சி நாட்டி லுள்ள மாநிலங்களாவது அதன் மத்திய அரசுக்கு இந்திய மாநிலங்களைப் போல், இத்துணையளவிற்குக் கடன் பட்டிருக்குமா என்பது ஐயத்திற்குரிய ஒன்றாகும்.

## கடன் வேண்டுமா? திட்டத்தை ஏற்றுக் கொள்

நிதித்துறையில் மாநிலங்கள் என்றென்றும் தீராப் பற்றுக் குறையினைக் கொண்டியங்குகின்றன. அவை, தமது நியாய மான செலவினங்களையும் சமுதாயப் பணிகளையும் ஏதோ ஒரு வகையில், ஈடுகட்டித் தீர வேண்டிய அவல நிலைக்குத் தள்ளப் பட்டிருப்பதையும் நாம் மூன்றாம் பகுதியில் பரிசீலித்தோம்.

மத்திய அரசால் வழங்கப்படும், கலால் மற்றும் வருமானவரிப் பங்குத் தொகையும் உதவி மானியத் தொகையும் மாநிலங் களுக்குப் போதுவதில்லை. இறுதியில் தமது உயிர் மூச்சான, மாநில சுயாட்சியினையே அடகு வைத்து மத்திய அரசு அளிக் கும் விருப்ப மானியங்களைப் பெற்றால் கூட நிதிப் பற்றாக் குறை யைத் தவிர்க்க முடிவதில்லை. அதற்காகவே மாநிலங்கள் மத்திய அரசிடமிருந்து கடன் பெறுகின்றன.

இந் நிலையில் மீண்டும் மத்திய அரசின் கையினை நம்பிப் பிழைப்பதைத் தவிர மாநிலங்கட்கு வேறு வழி இல்லை. இந்திய மாநிலங்களின் தனித் தன்மை பெற்ற, இந்த இக் கட்டான நிதிப் பற்றாக்குறைச் சூழ்நிலையை, அதன் சுயாட்சி உரிமைகளைப் பறிப்பதற்காக மத்திய அரசு, மேலும் பயன் படுத்திக் கொள்கின்றது.

மத்திய அரசு, மாநிலங்களின் எந்தச் செலவிற்கு வேண்டு மானாலும் கடன் கொடுத்துவிடாது. மத்திய அரசு, குறிப்பிடு கின்ற சில வகைக் குறிப்பிட்ட பணிகளுக்கு மட்டுமே கடன் களைக் கொடுக்கும். அக்கடன்களை மாநிலங்கள் ஏற்றுக் கொண்டு, மத்திய அரசு குறிப்பிடும் அத்திட்டங்களைச் சூட் டோடு சூடாக நிறைவேற்றிக் கொள்ள வேண்டும்; மத்திய அரசு குறிப்பிடும் திட்டத்தை ஒரு மாநில அரசு விரும்புகிறதோ இல்லையோ, அதைப் பற்றிக் கவலையில்லை. கடன் வேண்டு மென்றால் அந்தக் குறிப்பிட்ட திட்டத்தை மாநிலங்கள் நிறைவேற்ற வேண்டும். அல்லது அந்தக் குறிப்பிட்ட கடனை மாநில அரசு இழந்துவிட வேண்டும்.

### கடனை வாங்கிக் கடனைக் கட்டு

1969–ஆம் ஆண்டின் பிற்பகுதியிலிருந்து, அந்தக் கொடிய முறையில் சிறிது மாற்றம் ஏற்பட்டுள்ளது. தேசிய வளர்ச்சி மன்றத்தின் தீர்மானத்திற்கு இணங்க மொத்தமாகக் கடன் களைக் கொடுப்பதற்கு, மத்திய அரசு ஒப்புதல் கொடுத்தது. குறிப்பிட்ட சில திட்டங்களுக்காக மட்டும் கடன்கள் கொடுக்கப் படும் முறை தற்போது தளர்த்தப் பட்டுள்ளது. ஆகவே மாநிலங்கள் இப்போது புதியதொரு வழியைக் கடைப்பிடிக் கின்றன. அதுதான் புதிய கடனை வாங்கிப் பழைய கடனைத் திருப்பிக் கட்டும் முறையாகும்.

மத்திய அரசு, திட்ட நிதி வழங்குவதில் இந்த விந்தையான கடன் முறையைப் பல காலம் செயல்படுத்தி வருகிறது. அதன் விளைவாக மாநிலங்கள் மத்திய அரசுக்குக் கட்ட வேண்டிய வட்டி, தற்போது ஒரு கோரமான வடிவத்தை எடுத்துள்ளது. மத்திய அரசின் பலவகைக் கடன்களுக்கும் பல்வேறு வகையான வட்டி விகிதங்கள் விதிக்கப்படுகின்றன. மத்தியக் கடன்களின் தன்மையைப் பொறுத்து, 1% முதல் 7% வரை அவற்றின் வட்டி விகிதங்களும் மாறுபடுகின்றன. வாங்கிய கடன்களுக்குத் தர வேண்டிய வட்டி போக அசலின் தவணைத் தொகைகளுக்காக மாநில அரசுகள் மிகப் பெருந்தொகைகளை ஒவ்வோர் ஆண்டும் செலுத்தி வருகின்றன.

மத்திய அரசு இந்த ஆண்டில் ஒரு கடனை மாநிலங்களுக்குக் கொடுக்கும். அந்தக் கடனின் முழுத் தொகையையோ அல்லது பெரும் பகுதியையோ, அந்த மாநிலத்தால் கட்டப்பட வேண்டிய வேறொரு பழைய கடனின் தவணைத் தொகைக்காகவும் வட்டிக்காகவும் மத்திய அரசு, இந்த ஆண்டே திரும்பப் பெற்றுக் கொள்ளும். அஃதாவது மத்திய அரசால் புதிதாகக் கொடுக்கப்படும் கடன் தொகை, மாநில அரசின் பேரேட்டில் வரவினமாகப் பொறிக்கப்படும். ஆனால், பழைய கடன்களின் அசலுக்காகவோ, வட்டிக்காகவோ புதிதாக வரவினத்தில் காட்டப்பட்ட தொகை உடனே செலவினத்தில் வைக்கப்பட்டு விடும். பின்னர், புதிய கடனுக்கும் சேர்த்து அசலும் வட்டியுமாகத் திருப்பிக் கட்ட வேண்டிய பொறுப்பு மாநிலங்களுக்கேற்படுகிறது. அதனால் புதிய கடனின் உண்மையான பயன் அவற்றிற்குக் கிட்டுவதில்லை. பேரேட்டில் மட்டும்தான் வரவும் செலவும் காண்பிக்கப்பட்டிருக்கும். உண்மையில் புதிய வருவாயும் வருவதில்லை; அதற்குரிய செலவும் செய்யப்படுவதில்லை; ஆனால் புதிய ஒரு சுமை மட்டும் மாநிலங்களின் மேல் ஏறி விடுகிறது.

மாநிலங்களின் இந்த அவலநிலையைத் தமிழக முதல்வர், டாக்டர். கலைஞர் அவர்கள் வெகு அழகாகக் குறிப்பிடுகிறார்,

> ‘‘நான்காவது ஐந்தாண்டுத் திட்ட கால முழுவதற்கும் சேர்த்து 6441 கோடி ரூபாயை, மத்திய அரசு மாநிலங்களுக்குக் கடனாக வழங்கும். இந்தத் தொகை பெரிதாகத் தெரியும். ஆனால், மத்திய அரசிற்கு இதே ஐந்தாண்டு காலப் பகுதி

யில் மாநில அரசுகள் திருப்பிச் செலுத்த வேண்டிய (பழைய கடன்களின்) அசலும், வட்டியும், ரூபாய் 5280 கோடி அளவினதாக இருக்கும். எனவே, மத்திய அரசிலிருந்து மாநிலங்களுக்கு நான்காவது ஐந்தாண்டுத் திட்ட காலப் பகுதியில் உண்மையில் கிடைக்கக் கூடிய மொத்தக் கடன் ரூபாய் 1,166 கோடி மட்டுமே யாகும்.''

''......நான்காம் திட்ட காலத்தில் தமிழ்நாடு அசலும் வட்டியுமாக மத்திய அரசிற்குத் திருப்பிச் செலுத்த வேண்டிய தொகை ஏறத்தாழ 363 கோடி. இது மத்திய அரசிடமிருந்து தமிழ்நாடு எதிர்பார்க்கக் கூடிய கடன் தொகைகளைக் காட்டிலும் கூடுதலாக உள்ளது. அதாவது மத்திய அரசிற்குத் தமிழ்நாடு திருப்பிச் செலுத்தும் தொகையின் அளவு (மத்திய அரசால் கொடுக்கப்படும் புதிய கடன் தொகையைக் காட்டிலும்) கூடுதலாகவுள்ளது. இம்மாதிரியான, முரண்பாடான நிலை நீடிக்கிற வரை, வளர்ச்சிப் பணிகளுக்கென வழங்கப்படும் மத்திய உதவி என்பது, வெறும் கானல் நீராகவே இருந்து வரும்.''[3]

மாநிலங்கள், தாம் வாங்கக்கூடிய கடன்களை லாபம் தரக் கூடிய துறைகளில் முதலீடு செய்திருந்தாலோ அல்லது மாநில அரசிற்குக் கட்டுப்பட்ட அமைப்புகளுக்கும் வாரியங்களுக்கும், அத்தொகையைப் பயன்படுத்திக் கடனைக் கொடுத்திருந்தாலோ, அவைகளிலிருந்து திரும்பி வரும் லாபத் தொகையினையும் அசல் வட்டித் தொகையினையும் சேர்த்து, மத்திய அரசின் கடனினுடைய அசல் வட்டிக்காகத் தரமுடியும். ஆனால் மத்திய அரசிடமிருந்து வாங்கப்படும் கடன்கள் யாவும், அநேகமாக ஆதாயமில்லாத திட்டங்களுக்காக மாநிலங்களால் செலவு செய்யப்படுகின்றன. அவைகளிலிருந்து வட்டியும் முதலும் மாநிலங்களுக்குத் திரும்பக் கிட்டுவதில்லை. எனவே, மத்திய அரசின் கடன்களைப் புதியதொரு கடன் தொகையால் மாநிலங்கள் சரிக்கட்டிக் கொள்வது வழக்கமாகி விட்டது. இவ்வகையில் கடனை வாங்கி அவற்றைப் பயன்படுத்த முடியாமல் மீண்டும் வேறொரு கடனை வாங்கி அதன்மூலம் பழைய கடனைக்

3 *28—9—73-இல் சென்னை இராசாசி மண்டபத்தில் நடைபெற்ற அரசாங்கக்கடன் பற்றிய அனைத்திந்தியக்கருத்தரங்கில் கலைஞர் ஆற்றிய தலைமையுரையின் ஒரு பகுதி. தமிழரசு 10—10—73 பக்கம் 2-3.*

கட்டி, இறுதியில் கடனுக்குக் கடனும் வட்டிக்கு வட்டியும் அதன் குட்டியும் சேர்த்து மாநிலங்கள் கட்ட வேண்டிய மொத்தக்கடன் தொகைகள் வானுயர ஓங்கி வளர்ந்து விட்டன. மாநிலங்களின் கடன் சுமை தீர்வதற்குரிய மார்க்கம் எதுவும் இதுவரை காணப்படவில்லை.

### பனிரண்டாம் பட்டியல்

#### மாநிலங்களின் கடன்நிலைப் பட்டியல்

| 1947 முதல் 1950முடிய நிகரக் கடன் தொகை | 1951–52-இல் நிகரக் கடன் தொகை | 1965–66-இல் நிகரக் கடன் தொகை | 1968–69-இல் நிகரக் கடன் தொகை | 1970–71-இல் நிகரக் கடன் தொகை | 1972–73-இல் நிகரக் கடன் தொகை |
|---|---|---|---|---|---|
| | (ரூபாய் கோடிகளில்) | | | | |
| சுமார் 50 கோடி | 240·48 | 4102·87 | 5503·63 | 6282·92 | 6510·17 |

இந்திய மாநிலங்கள், சென்ற 20 ஆண்டு காலத்தில், மத்திய அரசிற்குத் தர வேண்டிய கடன்களைப் பொறுத்தவரை எத்தனை பெரிய கடனாளிகளாக ஆக்கப்பட்டு விட்டன என்பதனை மேலே கண்ட பட்டியல் தெளிவாகக் காட்டுகிறது.

### தமிழகத்தின் நிலையும் கலைஞரும்

தமிழகத்தைப் பொறுத்த வரையில், 1973-ஆம் ஆண்டு மார்ச்சு 31-ஆம் தேதி அளித்த நிதிநிலை அறிக்கையின்படி, மத்திய அரசிற்குத் தர வேண்டிய நிகரக் கடன் தொகை 339,13,42,000 ரூபாய்; 31–3–1974-இல் இக்கடன் தொகை 422,22,00000 ரூபாயாக உயர்ந்து விடுமென எதிர்பார்க்கப் படுகிறது.

தமிழ்நாடு அரசிற்கு இந்திய அரசு கொடுத்த கடன்களுக்கான வட்டி மட்டும் கீழே தரப்பட்டுள்ளது:—

| | | | | |
|---|---|---|---|---|
| 1968—69-ஆம் ஆண்டில் | | ரூபாய் | 14.75 | கோடி |
| 1969—70 | ,, | ரூபாய் | 15.37 | ,, |
| 1970—71 | ,, | ரூபாய் | 12.95 | ,, |
| 1971—72 | ,, | ரூபாய் | 21.74 | ,, |
| 1972—73 | ,, | ரூபாய் | 19.17 | ,, |
| 1973—74 | ,, | ரூபாய் | 19.98 | ,, |

(திட்டமான மதிப்பீடு)

மேற்சொன்ன பட்டியலை ஒரு கணம் கூர்ந்து நோக்கினால், 1968-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்திலிருந்து 1974-ஆம் ஆண்டு மார்ச்சு முடிய 6 ஆண்டு காலத்தில், மத்திய அரசிற்கு, தமிழகம் செலுத்திய வட்டித் தொகை மட்டும் ஏறத்தாழ 104 கோடி ரூபாய்.

இவை போக மாநில அரசுகள், மக்களிடமிருந்தும் வெளிச் சந்தையிலும் மற்ற வகைகளிலும் கடன்களைப் பெறுகின்றன. இவை அனைத்திற்கும் மாநில அரசுகள், வட்டியும் முதலும் ஆண்டு தோறும் தர வேண்டியுள்ளது. தமிழக அரசின் வருமானம் முழுவதும் அதன் வரிகள் மூலமாகவே வந்து விடுவதில்லை. மத்திய அரசின் வரிப் பங்குகள், மானியங்கள், மேற்சொன்ன கடன்கள் மூலமாகத் தமிழக அரசின் மொத்த வருமானத்தில் ஏறத்தாழப் பாதியளவை நிரப்புகின்றது. எனவே, அவைகளுக்குரிய வட்டி போன்ற தனிச் செலவினங்களும் உண்டு.

31—3—1972-ஆம் தேதியில் தமிழக அரசின் மொத்த வருமானம், ரூபாய் 397 கோடியாக இருந்தாலும் அதில், தமிழக அரசால் வசூலிக்கும் வரிகள் மூலமாக ரூபாய் 210 கோடி அளவிற்கே கிடைக்கின்றது. மத்திய அரசிடமிருந்து, வரிகளின் பங்குத் தொகையாக ரூபாய் 75 கோடியும், மத்திய அரசின் மானியமாக ரூபாய் 33 கோடியும், மாநிலத்தின் வரியற்ற வேறு வருவாயாக ரூபாய் 78 கோடியும் கிடைக்கிறது. ஆக, மொத்த வருமானம் ஏறத்தாழ ரூபாய் 400 கோடியில் வரி வருமானத்தின் மூலம், 50 சதவிகிதத் தொகை மட்டும் தான் கிடைக்கிறது. மத்திய அரசின் கடன், மானியங்கள், மற்ற வகைகள் ஆகியவைகளின் மூலமாக மீதி 50 சதவிகிதத் தொகை கிடைக்கிறது.

26—2—1970-ஆம் தேதியில் தமிழக நிதிநிலை அறிக்கையைச் சட்ட மன்றத்தில் தாக்கல் செய்து, தமிழகத்தின் முன்னாள் நிதி அமைச்சரான திரு. மதியழகன் அவர்கள் பேசுகையில், மாநிலங்கள் வாங்கிய கடனை மத்திய அரசிற்குத் திருப்பிச் செலுத்த வேண்டியதற்கு, 20 முதல் 25 ஆண்டுகள், காலத் தவணைகள் தரப்பட வேண்டுமென்று வரையறுக்கப்பட வேண்டும் எனவும், கடன் அளித்தல் கடனைத் திருப்பிச் செலுத்துதல் ஆகியவை பற்றிய முறைகள் முற்றிலும் சீராக்கப்படும் நோக்கத்துடன் இந்தப்பிரச்சினைகளை முழுவதும் ஆராய்வதற்கு ஒரு கூட்டாட்சிக் கடன் ஆணைக்குழுவை (Federal Debt Commission) மத்திய அரசு அமைக்க வேண்டிய காலம் வந்துவிட்டதெனவும் அவர் வலியுறுத்தினர். ஆனல், மத்திய அரசு ஐந்தாண்டுத் திட்டங்களுக்காக மாநிலங்களுக்கு அளிக்கும் கடன்களை 15 ஆண்டுத் தவணைகளில் திருப்பிக் கட்ட வேண்டுமென எதிர்பார்க்கிறது.

தமிழகத்தின் முதல்வர் மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்கள்,

> "........(ஐந்தாண்டுத் திட்டத்தில் வாங்கிய கடன்களைப் பதினைந்து ஆண்டுகளுக்குள் கட்ட வேண்டுமென்ற ஏற்பாடு) நாம் செய்கின்ற மூலதன முதலீடுகள், மெல்ல மெல்லத்தான் பலனளிக்கத் தொடங்குகின்றன என்ற உண்மை நிலையை ஒட்டிய ஏற்பாடாக இல்லை. இத்தகைய சமுதாயப் பணிகளுக்கான கடன்கள் சொற்ப வட்டிக்கு — அதாவது, மத்திய அரசு அனைத்து நாட்டு வளர்ச்சிக் கழகத்தாரிடமிருந்து எந்த நிபந்தனைகளில் கடன் பெறுகிறதோ, அதே போன்று மாநிலங்களுக்கு அளிக்கும் கடன்களும் இருக்க வேண்டும். 50 ஆண்டு கால அளவில் திருப்பிச் செலுத்தக் கூடியதாகவும் இக்கடன்கள் இருக்க வேண்டும். இந்தக் கடன்களை ஒட்டி, வசூலிக்கப்படுகிற பணிக் கட்டணம் (வட்டி) ½% அல்லது ¾%க்கு மேல் போகக் கூடாது." 4

என வலியுறுத்தினர்.

இக்கோரிக்கைகளின் அடிப்படையில் ஆரும் நிதி ஆணைக் குழுவும், மாநிலங்களின் கடன் தொல்லைகளைக் குறைப்பதற்காகச் சில பரிந்துரைகளைச் செய்துள்ளது. சில வகையான

---

4 Ibid, Opp. Cited, Note. 3

கடன்களை 10 ஆண்டு முதல் 30 ஆண்டு காலம் வரை, திருப்பிச் செலுத்தலாம் எனவும் கடன்களைத் திருப்பிச் செலுத்தும் முறைகளில் சில மாற்றங்களைச் செய்தும், தனது பரிந்துரைகளைச் செய்துள்ளது. ஆரும் நிதி ஆணைக் குழுவின் பரிந்துரைகளின் படி மாநிலங்களால் கட்டப்பட வேண்டிய 2000 கோடி ரூபாய் கடன் தொகைகளுக்குச் சில சலுகைகளும் தரப்பட்டுள்ளன. மாநிலங்களின் கடன் தொல்லைகளைப் பற்றி அறிஞர் பெருமக்களும் பொருளாதார வல்லுநர்களும் மாநில அரசுகளும் ஒரு சேர மத்திய அரசைக் கண்டிக்கின்றனர். அவ்வப்போது, பல நிதி ஆணைக் குழுக்களும், மாநிலங்களின் சுமையைக் குறைக்க வழி வகைகளைப் பரிந்துரைத்துள்ளன. ஆனால் மத்திய அரசு, மாநிலங்களின் அவல நிலையைப் போக்குவதற்கு முயற்சியேதும் மேற்கொள்ளுவதில்லை.

## சந்தானம் காட்டும் சரியான வழி

திரு. கே. சந்தானம் அவர்கள் மாநிலங்களின் கடன் பற்றிய அவல நிலையைச் சுட்டிக் காட்டி, நிதித் துறையில் மாநில சுயாட்சியினைக் காப்பதற்கான சில வழி வகைகளையும் அவர் கூறுகிறார்,

> ''மாநில சுயாட்சிக்கு ஏதாவது பொருள் இருக்க வேண்டுமெனில், இந்த நச்சு வட்டம் உடைத்தெறியப்பட வேண்டும். உண்மையான தகுதியின் அடிப்படையில் பார்த்தால் அரசமைப்புச் சட்டத்தின் XII-ஆம் பகுதியை (மத்திய-மாநில நிதி உறவுகள் பற்றியது) முற்றிலும் மாற்றியமைக்கப்பட வேண்டும். மத்திய - மாநில நிதி உறவுகள் பற்றிய அரசமைப்பு விதிகளை மாற்றியமைப்பதற்கு இனி வரும் அண்மைக் காலத்தில் அநேகமாக முயற்சி செய்ய மாட்டார்கள் என்ற காரணத்தால் மாநில சுயாட்சியினை உறுதிப்படுத்தும் கீழ்க்கண்ட நடவடிக்கைகளை நான் ஆலோசனையாகக் கூறுகிறேன். ஒவ்வோர் ஐந்தாண்டு காலப் பகுதிக்கும் தேவையான திட்ட மானியங்களையும் மற்ற மானியங்களையும், தீர்மானம் செய்யும் பொறுப்பினை நிதி ஆணைக் குழுவினுக்கு ஒப்படைத்துவிட வேண்டும். அந்த நிதி ஆணைக் குழுவின் பரிந்துரைகளை, நீதி மன்றத் தீர்ப்பைப் போல் மத்திய அரசு ஏற்றுக் கொள்ள வேண்டும்; அப்படியேற்றுக் கொண்டால், அரசியல் ஆதாயம் கருதி,

மாநிலங்களிடையே மத்திய அரசு பாரபட்சம் காட்டுவதற்கு வாய்ப்பேற் படாது. நிதி ஆணைக் குழுவின் உறுப்பினர்களை, மாநிலங்களிடை உறவு மன்றத்தைக் (Inter State Council) கலந்தாலோசித்தே நியமனம் செய்ய வேண்டும். மாநிலங் களின் தற்போதைய கடன்களை யெல்லாம் ஒன்று திரட்டி ரிசர்வு வங்கியின் ஒரு தனிப் பகுதிக்கு அவைகளை மாற்றி விட வேண்டும், அல்லது அந்தக் கடன்களைப் புதிதாக உருவாக்கப்படும் மாநிலங்களின் வளர்ச்சி வங்கிக்கு (States Development Bank) மாற்றிவிட வேண்டும். எதிர்காலத் தில் கொடுக்கப்படும் கடன்களுக்கு அந்த வங்கியே (இனி ஏற்படுத்தப்படும் மாநிலங்களின் வளர்ச்சி வங்கியே)பொறுப் பானது; முழுக்க முழுக்க வணிகக் கொள்கையின் அடிப் படையில் ஆக்க வேலைகளுக்காக மட்டும் மாநிலங்களுக்கு எதிர் காலக் கடன்கள் அந்த வங்கியால் அளிக்கப்பட வேண்டும். மாநிலக் கடன்களை மேற்சொன்ன வகையில் மாற்றுவதற்கு முன்னுல் அவைகளின் ஒருபகுதியினைத்தள்ளு படி செய்துவிட வேண்டுவது நியாயமானதாகும். ஆக்க வேலையல்லாத செலவினங்களுக்குரிய மூலதனம் மாநிலங் களுக்கு வேண்டுமென விரும்பினுல் அவைகளைப் பொது மக்களிடமிருந்து மாநிலங்கள் கடனுக எழுப்ப வேண்டும். மாநிலங்கள் தங்களது நிதி வருவாயிலிருந்து வட்டியினையும், தவணைத் தொகைகளையும், கட்டுவதற் கேற்ற முறையில் இக் கடன்கள் வரையறுக்கப்பட்ட கடன்களாயிருக்க வேண்டும். இந்தவகை யேற்பாடு மாநிலங்களுக்கு சுயாட்சி உரிமை யினை வழங்குவதோடல்லாமல் மாநிலங்களின் தொடர்ந்த நச்சரிக்கும் கோரிக்கைகளால் மத்திய அரசிற் கேற்படும் இக்கட்டிலிருந்து மத்திய அரசினைக் காக்கவும் வழி செய்யும்.'' 5

## கொத்தடிமைகள்

மத்திய அரசின் பற்ருக்குறை நிதிநிலை அறிக்கையின் காரணமாகப் பல்லாயிரங் கோடி ரூபாய் காகித நோட்டுகளை மத்திய அரசு அச்சடித்து வெளியிடுகின்றது. அவைகளின் ஒரு பகுதியைத்தான் மாநிலங்களுக்குக் கடனுகத் தருகிறது.

---

5 Ibid, Opp. Cited, Note, 1

நோட்டு உற்பத்தியால் பண வீக்கம் ஏற்பட்டு, விலைவாசிகள் உயர்ந்து, மாநிலப் பொருளாதாரம் முடக்க நிலையை அடைகிறது. தவிர அச்சடிக்கப்பட்ட மத்திய நோட்டுக்களுக்கு வட்டியையும் சேர்த்து மாநிலங்கள் கொடுக்க வேண்டும்.

மாநில அரசிற்குரிய நிதி மூலங்களைத் தாராமல், மாநிலங்களுக்கு இயற்கையாகவே நிலைத்திருக்கும் பற்றுக்குறையை உண்டாக்க, மிகப் பெரிய வருவாய்களை ஈட்டித் தரக் கூடிய மாநில வரியினங்களையும் மத்திய அரசு, தன் கையகப்படுத்திக் கொண்டு, அவைகளையே மாநிலங்களுக்கு மானியங்கள் எனவும், கடன்கள் எனவும் கொடுத்து அதற்கீடாக மாநில சுயாட்சி உரிமைகளைத்தன் கைவசப்படுத்திக் கொண்டு,வட்டிக் கடை முதலாளியைப் போல் மாநிலங்களின் கடனைத் திருப்பி வாங்குவதற்காக வேறு வகையில் மேலும் கடன்களைக் கொடுத்து, அதற்கு வட்டியை வசூலித்து, பற்றுக்குறை நிதி நிலை அறிக்கையில்( Budgets) துண்டு விழும் தொகைகளுக்காக, கோடிக்கணக்கான காகித நோட்டுகளை அச்சடித்து, அவற்றின் ஒரு பகுதியை மாநிலங்களுக்குக் கடன் என்ற பெயரால் வழங்கி, பொருளாதாரத் துறையில் மாநிலங்கள் தலையெடுக்க முடியாத நிலையினைச் செயற்கையாக உருவாக்கி, மாநிலங்களை ஓட்டாண்டிகளாகச் செய்து, என்றென்றும் தன்னை வலம் வந்து காலடியில் வீழ்ந்து, தங்கள் சீர்கெட்ட பொருளாதாரத்தை அவ்வப்போது சீர் செய்து கொள்ளக் கூடிய கொத்தடிமைகளாக மத்திய அரசு மாநிலங்களைச் செய்து விட்டது.

இது தான் சுதந்திர இந்தியாவிலுள்ள மாநிலங்களின் தற்போதைய நிலை. சென்ற 24 ஆண்டுகளாக மத்திய அரசு தரும் விருப்ப மானியங்களும், கடன்களும் மாநில சுயாட்சியினை மீள முடியாத ஒரு நச்சு வட்டத்திற்குள் ஆழ்த்தி விட்டன. அந்த வட்டத்திற்குள்ளிருந்து விடுபட வழிவகை தெரியாமல் சுதந்திர இந்திய நாட்டின் மாநிலங்கள், அதனுள்ளேயே சுற்றிச் சுற்றி வந்து, மென்மேலும் வறுமையில் உழன்று நிதி சுயாட்சியை இழந்து நிற்கின்றன.

இந்த மிடிமைநிலை மாற்றப்பட வேண்டாமா?

"ஆம்! மாற்றப்படத்தான் வேண்டும்" எனில், மாநில சுயாட்சியும் வேண்டும்.

மலர்க மாநில சுயாட்சி.

## 3. தொழில்கள் (Industries) மாநிலங்களின் கானல் நீர்

"மத்திய அரசின் அதிகார எல்லைக்குள் வரத் தக்க வகையில் சில வகைத் தொழில்களை மட்டும் குறிப்பிட்டு அறுதி செய்து விட்டு மற்றெல்லாத் தொழில்களையும் மாநிலங்களுக்கே விட்டு விட வேண்டும்; மத்திய அதிகாரப் பட்டியலில் மென்மேலும் பல தொழில்களை நாடாளு மன்றம் சேர்த்துக் கொண்டே போவதற்கு வாய்ப்பளிக்கும் வகையில் எந்த ஒரு தொழிலையும் (எந்த அரசின்பாற் பட்டது என) அறுதியிட்டுச் சொல்லாமல் விடுதல் கூடாது. குறிப்பிட்ட மூலதனத்தை அடிப்படையாக வைத்து மத்திய அரசின் கீழ் வரக்கூடிய தொழில்களை நிர்ணயப் படுத்தும் மாற்று முறை பற்றிக் கூட ஆலோசனை செய்யலாம் உதாரணமாக, பத்துக் கோடி ரூபாய்க்கும் மேல் மூலதனத்தைப் பெற்ற தொழில்களை மத்திய அரசின் தனிப் பொறுப்பின் கீழ் விட்டு விடலாம்; மற்ற எல்லாத் தொழில்களையும் மாநில அரசுகளின் அதிகாரத்திற்கே விட்டு விடலாம்." 1

— தமிழக அரசமைப்பு வல்லுநர் கே. சந்தானம்.

சென்ற 24 ஆண்டுகளில், "திட்டமிடுதலால்" வளர்ந்த "தொழில் துறை" மாநிலங்களில் உருவாக்கிய பொருளாதாரச் சிக்கல்களையும், அடிமைத்தனத்தையும் நமது அரசமைப்புச் சட்டத்தை உருவாக்கியவர்களே கூட எண்ணிப் பார்த்திருக்க மாட்டார்கள். ஒருக்கால் அவர்களுக்கு இந்தப் பின் விளைவுகளைப் பற்றித் தெரிந்திருந்தாலும் அவற்றிற்குரிய பரிகாரங்களை அரசமைப்புச் சட்டத்தில் அவர்களால் உருவாக்கி யிருக்க முடியுமா என்பதும் ஐயத்திற் கிடமானதே.

---

1 "Growing Demand for Greater Autonomy" in "The Union and States" (1972) By. S. N. Jain, P. 81

அந்த அளவிற்கு மத்திய அரசு, தொழில் மற்றும் தொழிற் சாலைகளைப் பொறுத்த அளவில், ஏகபோகமான பேராதிக் கத்தைச் செலுத்தி வருகிறது. சென்ற கால் நூற்றுண்டு காலத் தில் மாநிலங்களுக்கு அளிக்கப்பட்ட, தொழில் மற்றும் தொழிற் சாலைகள் சார்ந்த சகல உரிமைகளையும், மத்திய அரசே களவாடிக் கொண்டது. அரசாங்கத் தொழில் நிறுவனங்களை ஒரு மாநில அரசு படைக்க வேண்டுமெனில் கூட ஒரு தனி மனிதனைப் போல் மத்திய அரசிற்கு விண்ணப்பம் செய்து, கெஞ்சிக் கூத்தாடி, உரிமங்களைப் (Licenses) பெற வேண்டிய அளவிற்கு, அவை அடிமைப் படுத்தப்பட்டு விட்டன.

## மாநில அதிகாரப் பட்டியலில் உள்ள "தொழில்கள்"

மாநிலப் பட்டியல் 24-ஆம் பதிவில்,

"மத்தியப் பட்டியலின் 7-ஆவது மற்றும் 52-ஆவது பதிவு களுக்குட்பட்ட தொழில்கள்" (Industries Subject to Entries 7 & 52 of List I.) என்ற அதிகார இனம் மாநில அரசிற்குச் சொந்த மானது. ஆனுல் மாநிலத்தின் "தொழில்கள்" பற்றிய அதிகாரம் மத்தியப் பட்டியலில் இரண்டு அதிகாரங்களால் (7-ஆவது பதிவு மற்றும் 52-ஆவது பதிவு) கட்டுப்படுத்தப்படு கிறது.

## மாநில அதிகாரத்திலுள்ள தொழில்கள் மத்திய அரசுக்குப் போவது எப்படி ?

மத்தியப் பட்டியலின், 7-ஆவது பதிவின்படி—"பாதுகாப்பின் பொருட்டோ அல்லது போரை நடத்துவதற்காகவோ தேவை யானவை" என்று நாடாளு மன்றச் சட்டத்திஞல் அறிவிக்கப் பட்ட, "தொழில்கள்", யாவும் மத்திய அரசின் அதிகார எல்லைக்குட்பட்டு விடுகின்றன.

இதன் உட்பொருளை ஆய்ந்து பார்த்தால், "நாட்டுப் பாது காப்பின் பொருட்டுத் தேவையானது" என்று கூறி, மத்திய அரசு எந்தவிதத் தொழிலை வேண்டுமானுலும் தனது அதிகார எல்லைக் குள் கொண்டு வந்து கொள்ளலாமல்லவா?

நாட்டுப் பாதுகாப்பிற்கு நேரடியாகத் தொடர்பில்லாத பல தொழில்களைக் கூட, மத்தியப் பட்டியலின் 7-ஆம் பதிவிலுள்ள மேற்சொன்ன வாசகத்தைப் பயன்படுத்தி, மத்திய அரசே கைப்பற்றிக் கொள்ளலாம்.

ஆகவே, ''தொழில்கள்'' பற்றிய பொது அதிகாரம் மாநில அரசிற்குத் தரப்பட்டிருந்தாலும், மத்திய அரசால் தனக்கு வேண்டாம் என்று தள்ளப்படும் மிச்சம் மீதித் தொழில்களை மட்டும்தான் மாநிலங்கள் பெற்றுக் கொள்ள வேண்டும்.

மத்தியப் பட்டியல் 52-ஆம் பதிவுப்படி,—''பொது நலனுக்காக மத்திய அரசின் கட்டுப்பாட்டில் இருப்பதற்குத் தகுந்ததென்று நாடாளு மன்றத்தால் அறிவிக்கப்பட்ட தொழில்கள்'' யாவும் மத்திய அரசின் நேரடி ஆட்சிக்குள் வந்து விடும்.

இப்பதிவில் வரும் ''பொது நலன்'' என்ற சொல், மிகமிக விரிந்த பொருளுடையது. அச்சொல்லிற்கு மத்திய அரசின் எண்ணப்படி, எதனை வேண்டுமென்றாலும், எப்படி வேண்டுமென்றாலும் பொருள் கொள்ளலாம்.

''மத்திய அரசின் கட்டுப்பாட்டிற்குள் இருப்பதற்குத் தகுந்த தொழில்கள்'' என்ற சொற்றொடர்கள் மத்திய அரசு, தனது கட்டுப்பாட்டுக்குள் வரவேண்டும் என்று, எந்தெந்தத் தொழில்களையெல்லாம் விரும்புகிறதோ''அந்தந்தத் தொழில்கள் எல்லாம்'' என்ற பொருளைத் தருகின்றன.

மத்திய அரசின் விருப்பத்தின்படி, சட்டமியற்ற வேண்டிய பொறுப்பு மத்திய அமைச்சரவை சார்ந்திருக்கும் ஆளும் கட்சியின் பெரும்பான்மை பலத்தைக் கொண்ட நாடாளு மன்றத்திடமே உள்ளது.

எனவே ''பொது நலன் கருதி'', என்பதை நிர்ணயிப்பதும் மத்திய அமைச்சரவையே; ''மத்திய அரசின் கட்டுப்பாட்டில் இருப்பதற்குத் தகுந்தது'' என்று முடிவு செய்வதும், மத்திய அமைச்சரவையே யாகும்.

அவ்வகைத் தொழில்கள் மத்திய அரசிடம் இருக்க வேண்டுமெனச் சட்டம் செய்யக் கூடிய பொறுப்பு யாரிடமுள்ளது? நாடாளு மன்றத்திடம் தான் உள்ளது. அதாவது மத்திய அரசை நிர்வகிக்கும் அமைச்சரவையைச் சார்த்திருக்கக் கூடிய நாடாளு மன்றத்திடமே சட்டம் செய்யும் பொறுப்பு உள்ளது.

ஆகவே, இந்தியத் துணைக் கண்டத்தில் தற்போது நடைபெற்றுக் கொண்டிருக்கும் எந்தத் தொழிலை வேண்டுமானாலும், இனிமேல் புதிதாக உருவாக்கக் கூடிய எந்தத் தொழிற்சாலையை வேண்டுமானாலும் மத்திய அரசின் கட்டுப்பாட்டுக்குள் இருப்பதற்குத் தகுதியானவை என மத்திய அமைச்சரவையின் முடிவுப்படி நாடாளு மன்றம் அறிவித்து விடலா மல்லவா?

இந்திய நாட்டின் எந்த வகைத் தொழில்களையாவது "மத்திய அரசின் கட்டுக்குள் இருக்கத் தகுந்தது", என மத்திய அமைச்சரவை முடிவு செய்து—அதற்குக் காரணம் "பொது நலன்", என்பதையும் மத்திய அமைச்சரவையே கூறி விட்டு — ஆகவே "அத் தொழில்கள் மத்திய அரசைச் சார்ந்தவை" என்று நாடாளு மன்றச் சட்டத்தின் மூலமாக அறிவித்துக் கொண்டால் அத் "தொழில்கள்" மற்றும் "தொழிற்சாலைகள்" யாவும் மாநில அதிகாரத்திலிருந்து, மத்திய அரசின் அதிகாரத்திற்குப் போய் விடும். மாநிலப் பட்டியலிலுள்ள, "தொழில்கள்" என்ற மாநில அதிகாரமும் வெற்றுச் சொற்களாக ஆகி விடும்.

## 1951-ஆம் ஆண்டின் தொழில்கள் (வளர்ச்சி மற்றும் ஒழுங்குமுறை) சட்டம்

அரசமைப்புச் சட்டம் அமுலுக்கு வந்த ஓராண்டு காலத்திற்குள், மத்தியப் பட்டியலின் 52–ஆம் பதிவுக் கேற்றபடி, மத்தியச் சட்டமொன்று நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்டது.

"1951-ஆம் ஆண்டின் தொழில்கள் வளர்ச்சி மற்றும் ஒழுங்கு முறைச் சட்டம்." (மத்தியச் சட்டம் 65[1951) (Industries-Development and regulation-Act of 1951.) என்பதே அச்சட்டம்.

இந்தியத் துணைக் கண்டத்தின் பல்வேறு தொழில்கள் இந்தச் சட்டத்தால் மத்திய அரசினுடைய அதிகாரத்திற்குக் கொண்டு வரப்பட்டன. தொழில் வளர்ச்சித்துறையில் மத்திய அரசினுடைய நெறிமுறை மற்றும் நடவடிக்கைகளை இச்சட்டம் அமுலுக்குக் கொண்டு வருகிறது.

இச்சட்டத்தின் பின்னுலுள்ள முதலாம் இணைப்பில் (Schedule-I) மத்திய அரசின் கட்டுப்பாட்டிற்குள் எந்தெந்தத் தொழில்கள் இயங்க வேண்டும் என்பதைப் பட்டியல் போட்டு சொல்லப் பட்டுள்ளது.

38 தலைப்புகளுக்குக் கீழ் வரும் 163 தொழில்களும், அத் தொழில்களுக்குத் தேவையான உறுப்புக்களையும், துணை—இணைக் கருவிகளைத் தயாரிக்கும் தொழில்களும், அந்தச் சட்டத்தின் இணைப்பில் இடம் பெற்றுள்ளன. அத்தொழில்களுக் கான உரிமம் பெறுவதும் பதிவு செய்வதும் மற்ற அனைத்துச் செயல்முறை நடவடிக்கைகளும், மத்திய அரசால் கட்டுப் படுத்தப் படுகிறது; ஒழுங்குமுறையும் செய்யப் படுகிறது.

மத்திய அரசு, ''மத்திய ஆலோசனைக் கழகத்தையும்'' (Central Advisory Council), ''மத்தியத் தொழில் வளர்ச்சிக் கழகத்தையும்'' (Central Development Council), இச்சட்டத் தின் மூலம் உருவாக்கி ''தொழில் வளர்ச்சி'' மற்றும் ''தொழில் ஒழுங்கு முறை'' ஆகியவைகளைச் செயல் படுத்துகிறது.

தொழில்களுக்குரிய உரிமம் கொடுப்பதற்கும்; தேவை ஏற் பட்டால் வழங்கிய உரிமங்களை ரத்து செய்வதற்கும்; அத்தொழில் களின் மூலதனம், செயல் திட்டம், இடம் உற்பத்திப் பண்டங்கள், இன்னோரன்னவை பற்றிப் புலன் விசாரிப்பதற்கும்; இயங்கிக் கொண் டிருக்கும் ஒரு தொழில் நிர்வாகத்தைக் கட்டுப்படுத்துவதற்கும்; தேவை யேற்பட்டால் மத்திய அரசே அதன் நிர்வாகத்தை எடுத்துக் கொள்வதற்கும்; தொழில் சட்டவிதிகளை, தொழிற்சாலைகள் மீறும் போது அத்தொழிற்சாலைகளுக்கு உரிய தண்டனைகளைக் கொடுப் பதற்கும்; அவற்றை மேற்பார்வை யிடுவதற்கும்; கைத்தொழில் களில் உற்பத்தியாகும் பண்டங்களின் விலைகளை நிர்ணயிப்பதற்கும்; பண்டங்களின் உற்பத்தி மற்றும் விநியோகங்களைச் செய்வதற்கும் தேவையான எல்லா அதிகாரங்களையும் இச்சட்டம் மத்திய அரசிற்கு வழங்குகின்றது.

இச்சட்டத்தில் ''தொழில்கள்'' என்பதன் இலக்கணத்தைக் கூறும்போது, ''மாநில அரசுகளால் நடத்தப்படும் தொழில்களும்'' என்று அதில் இடம் பெறுகின்றது. எனவே, மாநில அரசுகள் தமது வருவாயைப் பெருக்கிக் கொள்ளும் நோக்கத்துடன் சில தொழில்களைத் தேசியமயமாக்கித் தாமே அவற்றை ஏற்று நடத்துவதற்கும் கூட மத்திய அரசிடமிருந்து அவைகளுக்குரிய உரிமத்தைப் (License) பெற வேண்டும். மற்றத் தொழில்களை நடத்தும் தனி அமைப்புக்களின் மேலும் முதலாளிகளின் மேலும் மத்திய அரசால் விதிக்கப்படும் எல்லாக் கட்டுப்பாடுகள் மாநில அரசுகளுக்குச் சொந்தமான தொழில்களை மாநில அரசுகள் நடத்தும் போதும் விதிக்கப் படுகின்றன.

மாநில அதிகாரப் பட்டியலில் ''தொழில்கள்'' என்ற அழகான சொற்றொடர் கம்பீரமாக இருப்பினும், மாநில அரசுகள் தமக்குரிய தொழில்களைத் தாமே நடத்துவதற்குக்கூடத் தனித்த உரிமையைப் பெற வில்லை.

ஆக மாநிலங்களிலுள்ள தனி அமைப்புக்களால் நடத்தப் படும் தொழில்களும் மத்திய அரசின் கட்டுக்குள் உள்ளன. மாநில அரசே எடுத்து நடக்கக் கூடிய தொழில்களும் மத்திய அரசின் இரும்புக் கட்டுப்பாட்டினுள் சிக்கி உள்ளன. இவை தவிர, மத்திய அரசு விரும்பும்போது வேறு எந்தத் தொழிலை வேண்டுமானாலும் மேற்சொன்ன தொழிற் சட்ட இணைப்பில் சேர்த்துக் கொண்டு அவற்றையும் மத்திய அரசு தனதாக்கிக் கொள்ளலாம்.

அந்தச் சட்டத்தின் இணைப்பில் கண்டுள்ள தொழில்களை நாம் ஒரு கணம் உற்று நோக்கினால், குடிசைத் தொழில்கள் மற்றும் மிகச் சிறிய தொழில்கள் நீங்கலாக இந்தியாவிலுள்ள ஏறத்தாழ எல்லாத் தொழில்களும் அதில் அடங்கி விடுகின்றன. அவைகளைத் தெளிவாகப் புரிந்து கொள்வதற்காக, மத்திய அரசின் அதிகாரத்திற்குட்பட்ட பலவகைத் தொழில்களின் நீண்ட பட்டியல் இவண் கீழே தரப்படுகிறது.

I. உலோகத் தொழில்கள்

(அ) இரும்பு பற்றியவை

1. இரும்பும், எஃகும் (உலோகம்); 2. இரும்பு உலோகக் கலவைகள்; 3. இரும்பு எஃகு வார்ப்புக்கள்; 4. இரும்பு எஃகுக் கட்டுமானப் பொருள்கள் (Structurals); 5. இரும்பு எஃகுக் குழாய்கள்; 6. தனி எஃகுகள்; 7. இரும்பு மற்றும் எஃகின் பிற பொருள்கள்.

(ஆ) இரும்பல்லாத உலோகங்கள்

*8.* விலையுயர்ந்த உலோகங்கள், தங்கம், வெள்ளி, அவற்றின் கலவை உட்பட; *9.* இரும்பைத் தவிர மற்ற உலோகங்கள் அதன் கலவைகள்; *10.* அரைகுறை உற்பத்தியாளர்களும் உற்பத்திகளும்.

II. எரி பொருள்கள்

*11.* நிலக்கரி, லிக்னைட், கோக், அவற்றில் பெறப்படும் துணைப் பொருள்கள்; *12.* உலோக எண்ணெய்கள் (குருடா

யில், மோட்டார் ஸ்பிரிட், டீசல், மண்ணெண்ணெய், செயற்கை எரி பொருள்கள், லூப்ரிகேட்டிவ் எண்ணெய் போன்றவை); 13. எரி வாயுகள் (கரி வாயு, இயற்கை வாயு போன்றவை).

III. கொதிகலன்கள்

14. கொதிகலன்களும், ஆவியுற்பத்தி ஆலைகளும்.

IV. தலைமை எந்திரம்

15. நீராவி எந்திரம்; 16. உள்தகன எஞ்சின்கள்.

V. மின்சாரப் பொருள்கள்

17. மின்சார சாதனங்கள் (மின்சார ஜெனரேட்டர், மாற்றிகள் முதலியன); 18. மின்சார மோட்டார்கள்; 19. மின் விசிறிகள்; 20. மின் விளக்குகள்; 21. மின் அடுப்புகள்; 22. மின் கம்பிகள்; 23. எக்ஸ்ரே சாதனங்கள்; 24. எலெக்டிரானிக் சாதனங்கள்; 25. மின்சாரத்தால் இயக்கப்படும் வீட்டுச் சாமான்கள் அதாவது சலவைப் பெட்டி, ஹீட்டர் போன்றவை; 26. பேட்டரிகள்; 27. உலர்ந்த செல்கள்.

VI. தொலை தொடர்புகள்

28. தொலைபேசி; 29. தந்தி சாதனங்கள்; 30. கம்பியில்லாச் செய்தித் தொடர்புகளுக்குரிய சாதனங்கள்; 31. வானொலி, மைக்செட் வகையரு; 32. டெலிவிசன் (தொலைக்காட்சி); 33. டெலி பிரிண்டர்.

VII. போக்குவரத்துகள்

34. விமானங்கள்; 35. கப்பல்கள், நீராவிக் கப்பல்கள்; 36. இரயில் என்ஜின்கள்; 37. இரயில் உருளைகள்; 38. மோட்டார், கார், பஸ், ஸ்கூட்டர் போன்ற உந்து வண்டிகள்; 39. மிதிவண்டிகள் (Cycle); 40. டிரக்லிப்டர்கள் போன்றவை.

VIII. தொழில் இயந்திரங்கள்

41. நூற்பாலை இயந்திரங்கள்; 42. சணல் ஆலை இயந்திரங்கள்; 43. இரயான் ஆலை இயந்திரங்கள் (செயற்கைப் பட்டு); 44. சர்க்கரை ஆலை இயந்திரங்கள்; 45. தேயிலைத் தொழில் இயந்திரங்கள்; 46. சுரங்க இயந்திரங்கள்;

47. உலோக சம்பந்தப்பட்ட இயந்திரங்கள்; 48. சிமெண்டுத் தொழில் இயந்திரங்கள்; 49. இரசாயன இயந்திரங்கள்; 50. மருந்து தயாரிப்பு இயந்திரங்கள்; 51. காகித ஆலை இயந்திரங்கள்; 52 முதல் 65 வரை: பல தொழில்களுக்குப் பயன்படுத்தப்படும் இயந்திர உறுப்புக்களும் அதனைச் சார்ந்த 14 வகைத் தொழில்களும்; 66 முதல் 68 வரை: தொழிற் சாலை இயந்திரங்களைச் சார்ந்த மூன்று தொழில்கள்.

IX. மெஷின் டூல்ஸ்

69. மெஷின் டூல்ஸ்.

X. விவசாய இயந்திரங்கள்

70. டிராக்டர்கள், அறுவடை இயந்திரங்கள்; 71. விவசாய சாதனங்கள்.

XI. மண் எடுப்பு சாதனங்கள்

72. புல்டௌசர், ரோலர்கள், டம்பர், ஸ்கிரேப்பர், ரோடு உருளைகள் இவை போன்ற பல.

XII. பல்வகைப் பொறியியல் தொழில்கள் [Engineering Industries]

73. பிளாஸ்டிக் வார்ப்பு; 74. டூல்ஸ் (ஸ்பேனர்ஸ்); 75. ரேசர் பிளேடுகள்.

XIII. வியாபார – வீட்டு – சாதனங்கள்

76. தட்டெழுத்தியந்திரம்; 77. கணக்கெடுக்கும் இயந்திரம்; 78. குளிர்சாதனப் பெட்டி; 79. வேஃகுவம் கிளீனர் (Vaccuam cleaner); 80. தையல் மற்றும் பின்னல் இயந்திரங்கள்; 81. அரிக்கன் விளக்கு.

XIV. மருத்துவ அறுவை சாதனங்கள்

82. அறுவை சிகிச்சை சாதனங்கள்.

XV. தொழில் கருவிகள்

83. தண்ணீர் மீட்டர்கள், நீராவி மீட்டர்கள், மின்சார மீட்டர்கள் போன்றவை; 84. அழுத்தங்கள், வெப்பம், எடை ஆகியவற்றைக் காட்டும் – பதிவு செய்யும் – ஒழுங்குபடுத்தும் – பல சாதனங்கள்; 85. எடை அளவை இயந்திரங்கள்.

XVI. விஞ்ஞானக் கருவிகள்

86. விஞ்ஞானக் கருவிகள்.

XVII. கணக்கு, சர்வே சாதனங்கள்

87. கணக்கு, சர்வே, வரைபட சாதனங்கள்.

XVIII. உரங்கள்

88. இயற்கை உரங்கள் (Inorganic); 89. செயற்கை இரசாயன உரங்கள் (Organic); 90. கலப்பு உரங்கள் (mixed).

XIX. இரசாயனம்

91. செயற்கைக்கனரக ரசாயனத் தொழில்கள் (Inorganic); 92. கரியகச் சேர்க்கைக் கனரக ரசாயனத் தொழில்கள் (Organic); 93. நிழற்பட ரசாயனத் தொழில்கள் மற்றும் நுண் ரசாயனத் தொழில்கள் (fine); 94. செயற்கைப் பிசின் (ரெசின்) மற்றும் பிளாஸ்தர்கள்; 95. செயற்கை ரப்பர்கள்; 96. சாயம், வார்னிஷ், எனுமல்; 97. மனிதனுல் உருவாக்கப்படும் நூல் இழைகள், மற்றும் ரயான்-நைலான் போன்றவை; 98. கோக் என்ற நிலக்கரியின் துணைப் பொருள்கள்; 99. கோல்தார் வடிப்புப் பொருள்கள்; நாப்தலின் போன்ற பொருள்கள்; 100. வெடிகள், வெடி மருந்துகள்; 101. பூச்சிக் கொல்லிகள் போன்ற தொழில்கள்; 102. நெசவாலைத் துணைக் கருவிகள்; 103. தரம் பிரிக்கும் கருவிகள், கஞ்சிப்பசை உள்ளிட்டது; 104. பலவகை ரசாயனங்கள்.

XX. போட்டோகிராப் - மூலப் பொருள் (நெகட்டிவ்)

105. சினிமா பிலிம்; 106. போட்டோ பிலிம்; 107. போட்டோ அச்சடிக்கும் தாள்.

XXI. வண்ணச் சரக்குகள்

108. வண்ணச் சரக்குகள்.

XXII. மருந்துகள்

109. மருந்துகள்.

XXIII. நெசவு ஆலை

110. பருத்தி நூல், பின்னல், நூல் கயிறு; 111. சணல் கயிறு உட்பட, சணல்; 112. கம்பளி, கம்பளிப் பொருள்கள்;

113. பட்டு, பட்டுப் பொருள்கள்; 114. செயற்கை நூலிழைகள், இரசாயன இழைகள்.

XXIV. காகிதப் பொருட்கள்

115. எழுதும், அச்சடிக்கும், கெட்டித்தாள்கள்; 116. செய்தி அச்சடிப்புத்தாள்; 117. காகித அட்டைகள், கெட்டி அட்டைகள்; 118. காகித உறைகள், அதுபோன்ற இதர உறைத்தாள்கள்; 119. காகிதக் கூழ், மரக்கூழ்.

XXV சர்க்கரை

120. சர்க்கரை.

XXVI. புளிப்புப் பண்டப் பொருள்கள் – தொழில்கள்

121. சாராயம்; 122. புளிப்புப் பொருள் தொழில்கள்.

XXVII. பக்குவப்படுத்தப்பட்ட உணவுத் தொழில்கள்

123, உலர்ந்த பழங்கள், அதன் பொருள்கள்; 124. பால் உணவு; 125. மாவு உணவு; 126. மாவு; 127. பக்குவப் படுத்தப்பட்ட மற்ற உணவுகள்.

XXVIII. தாவர எண்ணெய் வனஸ்பதி

128. தாவர எண்ணெய்கள், (பிழிந்தெடுக்கும் எண் ணெய் உட்பட); 129. வனஸ்பதி.

XXIX. சோப்பு மற்றும் ஒப்பனைத் தயாரிப்புகள்

130. சோப்புகள்; 131. கிளிசரின்; 132. ஒப்பனைப் பொருள்கள் (Cosmetics); 133. வாசனைப் பொருள்கள்; 134. உடல் சிங்காரிப்புப் பொருள்கள் (Toilets).

XXX. ரப்பர் பொருள்கள்

135. டயர்கள், டியூப்கள்; 136. அறுவை மற்றும் மருந்துப் பொருள்கள்; 137. காலணிகள் மற்றும் ரப்பர் பொருள்கள்.

XXXI. தோல்—தோல் பொருள்கள்

138. தோல் - தோல் பொருள்கள்.

XXXII. குளுபசை

139. குளு பசை (Glue), எலும்புப் பசை (Geletine).

XXXIII. கண்ணுடித் தொழில்

*140.* கண்ணுடிப் பாத்திரங்கள்; *141.* கண்ணுடிச் சீட்டுகள், கண்ணுடி பிளேட்டு; *142.* கண் கண்ணுடிகள்; *143.* கண்ணுடிக் கம்பிளி (Glass wool); *144.* ஆய்வுக்கூடப் பாண்டங்கள்; *145.* பலவகைக் கண்ணுடிப் பாண்டங்கள்.

XXXIV. மட்பாண்டங்கள்

*146.* நெருப்பால் பாதிக்கப்படாத செங்கல்; *147.* எளிதில் உருகாத மண் கருவிகள்; *148.* ஆலை அடுப்புச் செங்கல்; *149.* சைனுமண் பண்டங்கள் (பீங்கான் பாத்திரங்கள் மட்பாண்டம் (சைனுமண் சட்டிபானைகள்); *150.* சுகாதாரப் பாண்டங்கள்; *151.* மின் தடுப்பு மண் பொருள்கள்; *152.* ஓடுகள்.

XXXV. சிமெண்டு, ஜிப்சம் (Gypsum) தொழில்கள்:

*153.* போர்ட்லேண்ட் சிமெண்டு; *154.* ஆஸ்பெஸ்டோ சிமெண்டு; *155.* மின்சாரம் பாயாத ஜிப்சம் பலகைகள்; *156.* ஜிப்சம் பலகைகள்; *157.* சுவர் ஜிப்சம் - அட்டைகள் போன்றவை.

XXXVI. மரம்

*158.* பினைவுட்; *159.* ஹார்டு போர்டு (Hard Board); *160.* தீக்குச்சி; *161.* மரத் தட்டுமுட்டுச் சாமான்களின் துணைப் பொருள் உள்படப் பலவகை மரப் பொருள்கள்.

XXXVII. போர்க் கருவிகளும் படைக்கலன்களும்

*162.* போர்க் கருவிகளும் படைக்கலன்களும்.

XXXVIII. சிகரட்டுகள்

*163.* சிகரட்டுகள்.

முதல் விளக்கம்: III, IV, V, VI, VII, VIII, X, XI மற்றும் XIII ஆகிய தலைப்புக்களின் கீழ்வரும் பொருள்களின் துணை உறுப்புக்களைச் செய்யும் தொழில்களுக்கும் அவை பொருந்தும். அதாவது, அந்தந்தத் தலைப்புகளில் குறிப்பிடப்பட்டிருக்கும் துணை — இணைப் பொருள்களைத் தயாரிக்கக்கூடிய தொழில்களும் கூட மத்திய அரசின் அதிகாரத்திற்கு உட்பட்டவை.

இரண்டாம் விளக்கம் : XVIII, XIX, XXI மற்றும் XXII ஆகிய தலைப்புக்களின் கீழ்வரும் பொருள்களின் உற்பத்திக்குத் தேவையான பண்டங்கள் சம்பந்தப்பட்ட தொழில்களும் மத்திய அரசின் அதிகாரத்திற்குக் கீழ் வருகின்றன.

மேற்சொன்ன 163 வகையான தொழில்களையும் அவற்றைச் சார்ந்த 'துணை', 'இணைப்' பண்டங்கள் பற்றிய தொழில்களையும் சேர்த்தால், ஏறத்தாழ இந்திய நாட்டின் தொழில்கள் அத்தனையும் மத்திய அரசின் கீழ் வந்து விடுகின்றன. மேற்கண்ட பட்டியலில் இடம் பெற்றிருக்கும் தொழில்களில் மிகச் சாதாரணமான பல தொழில்கள்கூட இடம் பெற்றிருப்பதை நாம் காணலாம் இவைகளில் எதிலும் மாநில அரசிற்கு எவ்வகை அதிகாரமும் கிடையாது.

## மத்திய அரசின் கீழ்க் கொண்டு வரப்பட்ட மற்றத் தொழில்கள்

தொழில்களின் சட்டத்தில் கூறப்பட்ட 163 தொழில்களும் அவைகளின் துணை, இணைப் பொருள்களின் தொழில்களும் போக, வேறு பல தொழில்களையும் "பொது நலனுக்"கானவை எனக் கூறி, பல சட்டங்களின் மூலமாக மத்திய அரசு, தன் வசப்படுத்திக் கொண்டு, தனது ஏகபோக அதிகாரத்தை நிலை நாட்டியுள்ளது.

அவையாவன:—

1. 1947-ஆம் ஆண்டின் ரப்பர் சட்டம் (Rubber Act, 1947).
2. 1948-ஆம் ஆண்டின் இந்திய சாராயச் சட்டம் (Indian Alcoholic Act, 1948).
3. 1948-ஆம் ஆண்டில் மத்தியப் பட்டு வாரியச் சட்டம் (Central Silk Board Act, 1948).
4. 1953-ஆம் ஆண்டின் தேயிலைச் சட்டம் (Tea Act. 1953).
5. 1953-ஆம் ஆண்டின் கயிற்றுத் தொழில் சட்டம் (Coir Industries Act-1953).
6. 1958-ஆம் ஆண்டின் அரிசி ஆலைத் தொழில் சட்டம்.

7. 1965–ஆம் ஆண்டின் ஏலக்காய்ச் சட்டம் (The Cardimum Act–1965).

8. 1942-ஆம் ஆண்டின் காப்பிச் சட்டம் (Coffee Act-1942.)

சான்றுக்காக இவை கூறப்பட்டன. மேற்சொன்ன சட்டங்களைப் போல பல தொழில்களைச் சார்ந்த சட்டங்களை யும் மத்திய அரசு நிறைவேற்றி, ஏறத்தாழ எல்லாத் தொழில் களையும் தன்னுடைய வல்லாட்சி அதிகாரங்களின் கீழ்க் கொண்டு வந்து விட்டது.

## தொழில் முதலீடுகளில் (INVESTMENTS) மத்திய அரசின் ஆதிக்கம்

தொழில்கள், பொதுத்துறையைச் சார்ந்தவையாயும் இருக் கலாம்; தனியார் துறையைச் சார்ந்தவையாயும் இருக்கலாம். ஆனால் தொழில்களின் முதலீட்டுத் தொகைகள், அமைப்பு முறை, முதலீட்டுக் கொள்கை, நிர்வாகம் ஆகியவற்றில் மத்திய அரசின் பேராதிக்கம் இடம் பெறாமல் போகாது. அதனால் தொழில்களின் சர்வ இயக்கமும், மத்திய அரசின் அதிகார வட்டத்திற்குள் வந்து விடுகின்றன. அதற்காக மத்திய அரசு, பல கட்டுப்பாட்டு முறைகளையும் ஏற்பாடுகளையும் பயன் படுத்துகின்றது.

அவையாவன:

1. தொழில்களுக்கான உரிமத்தை (License) வழங்கும் ஏற்பாடு.
2. முதலீட்டுத் துறைகளின்மேல் செலுத்தப்படும் கட்டுப்பாடு.
3. வெளிநாட்டு நிதி மற்றும் தொழில் நுணுக்க ஏற்பாடுகள்.
4. பண்டங்களின் விலைகளின்மேல் செய்யும் கட்டுப்பாடு.
5. பண்டங்களின் விநியோகத்திற்கான கட்டுப்பாடு.
6. மத்திய அரசின் நிதிக் கொள்கைகளின் அடிப்படையில் இயங்கக் கூடிய மத்திய அரசின் தொழில் மற்றும் வர்த்தகக் கொள்கைகள்.
7. ரிசர்வு வங்கியின் நிதிக் கொள்கை,
8. ஐந்தாண்டுத் திட்டங்களின் பெரும்பான்மையான மூலதனத்தை உள்ளடக்கிக் கொண்டிருக்கும் மத்திய அரசுப் பொறுப்பிலிருக்கும் கனரகத் தொழில்கள்.

மேற்சொன்ன வழிகளில் இந்திய நாட்டின் தொழில்கள் முழுவதும் மத்திய அரசின் சுட்டு விரலசைவிற்கு ஆடக்கூடிய நிலையில் வைக்கப்பட்டுள்ளன.

## மத்திய அரசினுடைய முன் அனுமதி பெற வேண்டிய தொழில் திட்டங்கள் (செதல்வாட்குழு அறிக்கைப்படி)

1. ரூபாய் 5 இலட்சத்திற்கு மேற்பட்ட நிலையான மூலதனமுடைய நடுத்தரத் தொழில்களை மத்திய நுணுக்க வளர்ச்சி இயக்குநர் அலுவலகத்தில் (Directorate General of Technical Development) பதிவு செய்து கொள்ள வேண்டும்.
2. ரூபாய் 10 இலட்சத்திற்கும் மேற்பட்ட நிலையான மூலதனமுடைய (Fixed assets) அச்சட்டத்தின் அட்டவணையில் குறிப்பிட்டிருக்கக் கூடிய தொழில்களை மத்திய அரசில் பதிவு செய்ய வேண்டும்.

   நிலக்கரி, துணி, ரோலர், மாவு ஆலை, எண்ணெய் விதைகளைப் பிழிதல், வனஸ்பதி, தீக்குச்சிகள் சம்மந்தப்பட்ட தொழில்களுக்கும் அப்படிப் பதிவு செய்ய வேண்டும்.
3. ரூபாய் 25 இலட்சத்திற்கும் மேற்பட்ட நிலையான மூலதனமுடைய தொழில்கள் அனைத்தும் மத்திய அரசில் பதிவு செய்து லைசென்ஸ் பெற வேண்டும்.
4. தொழிற்பேட்டைகளை (Industrial estate) அமைப்பதற்குச் சிறு தொழில்கள் வளர்ச்சி ஆணையரின் (Development Commissioner, Small Scale Industries) முன் அனுமதி பெற வேண்டும்.

   மேலும் 1951-ஆம் ஆண்டுத் தொழில்கள் (வளர்ச்சியும் கட்டுப்பாடும்) சட்டத்தின் கீழ், தொழில்களின் வகைக்கு ஏற்றவாறு அனுமதி பெற வேண்டும்.
5. மேற்சொன்னவாறு பதிவு செய்வதற்கோ, லைசென்ஸ் பெறுவதற்கோ விண்ணப்பங்கள் அனுப்பி வைக்கப்படுகிற போது உற்பத்தித் திட்டங்கள், மூலப் பொருளின் தேவை, இயந்திர வசதி, மூலதன அளவு, எத்தனை 'ஷிப்டு'கள் வைக்கப்படுகின்றன என்பது, தேவையான வெளிநாட்டுச் செலாவணி, உற்பத்தியாகப் போகிற பண்டத்திற்கு இருக்கப் போகும் கிராக்கி போன்றவை பரிசீலிக்கப் படுகின்றன.

6. தொழிற் கல்வியில் புதிய திட்டங்கள் புகுத்தப்பட்டால் அவை அகில இந்தியத் தொழிற் கல்விக் கவுன்சிலின் (All India Council of Technical Education) பரிசீலனைக்கு அனுப்பி வைக்கப்பட்டு அதன் முன் அனுமதி பெற வேண்டும்.

தொழில் வளர்ச்சிகளுக்கான உரிமைகளையும் அதிகாரங்களையும் மேற்சொன்ன பல முறைகளால் மத்திய அரசு கட்டுப்படுத்துகின்றது. இந்நிலையை, ஐந்தாண்டுத் திட்டங்கள் இன்னும் மோசமாக்கி, மத்திய அரசின் ஊடுருவலை மேலும் விரிவாக்கி விட்டன. அதனால் மாநிலங்களின் தொழில் அதிகாரங்களும் முற்றிலும் பாதிக்கப்பட்டுள்ளன.

மேலும் ஐந்தாண்டுத் திட்டங்களில் தொழில்களின் வளர்ச்சிக்குத் தரப்படும் நிதியின் பெரும்பங்கை, மத்திய அரசே பெற்றுக் கொள்கிறது. ஐந்தாண்டுத் திட்டங்கள் மூலமாக கனரகத் தொழில்களின் வளர்ச்சிக்குக் கொடுக்கும் ஆக்கமும், சிறு தொழில்கள் மற்றும் குடிசைத் தொழில்களின் வளர்ச்சிக்காக மத்திய அரசின் மூலமாக மாநிலங்களுக் களிக்கப்படும் ''நிதி உதவிகளும்'', அந்த உதவிகளுடன் தரப்படும் நிர்வாக — ஆலோசனைகளும் தொழில் துறையில் மத்திய அரசிடமிருக்கும் மற்ற பெரும் அதிகாரங்களும் சேர்ந்து மாநிலங்களை மத்திய அரசின் உயிரற்ற கைப் பொம்மைகளாக ஆக்கி வைத்துள்ளன. மாநிலங்களுக்குத் தொழில்களைத் தொடங்கத் தேவையான ஊக்கமும், தொழில்களையும் பேணிக் காக்கத் தேவையான அதிகாரங்களும் இல்லாததால் மாநிலங்கள் தங்கள் தொழில் முயற்சிகளையும் இழந்து நிற்கின்றன.

### ஒற்றை வரி கொண்ட ஒரு சட்டம்

மாநில அரசினுடைய அதிகாரங்களில் வேறு எந்தத் தொழில்கள் தான் வருகின்றன?

அநேகமாக எந்த முக்கியத் தொழிலும் வருவதில்லை.

உண்மைநிலை இவ்வாறிருக்க, தொழில்களைப் பற்றிய அதிகாரத்தை, நமது அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்கியவர்கள் மாநிலப் பட்டியலில் எதற்காக இடம் பெறச் செய்தார்கள்?

அரசமைப்புச் சட்டத்தை உருவாக்கியவர்கள் ''தொழில் கள்'' என்ற அதிகார இனத்தின் மூலமாக மாநிலங்களுக்கும் பல தொழில்களைக் கொடுக்க வேண்டும் என்ற கருத்தில்தான் ''தொழில்கள்'' என்ற அதிகார இனத்தை மாநிலப் பட்டியலில் சேர்த்தார்கள்.

ஆனால், அரசியலமைப்புச் சட்டம் பின்னால் அமுல் படுத்தப் பட்டபோது, மத்திய அரசு அரசமைப்புச் சட்டத்தைத் திரிபு படுத்திப் பொருள் கொண்டு, மத்தியப் பட்டியலின் 52-ஆம் பதிவின் துணை கொண்டு ஏறத்தாழ எல்லாத் தொழில்களையுமே தன் வசமாக்கிக் கொண்டது.

நெருக்கிச் சுருக்கப்பட்ட மாநில சுயாட்சியையே நமது அரசியலமைப்புச் சட்டம் மாநிலங்களுக்குத் தந்திருந்தது. அதனையும் மீறிய நமது மத்திய அரசு, எல்லா அதிகாரங்களை யும் தனதாக்கிக் கொள்ள வேண்டும் என்ற கருத்தில் தனது வல்லாட்சியை, சென்ற 24 ஆண்டுகளில் மேற்சொன்ன வகை யில் மாநிலங்களின்மேல் அமுல் படுத்தயதின் விளைவுதான் மாநில அரசுகளின் தற்போதைய அவலத்திற்குக் காரணமாகும்.

மெத்தச் சிரமப்பட்டு, அரசியலமைப்புச் சட்ட விதிகளின் நுணுக்கத்தை மாற்றிப் பொருள் கொண்டு, அதனை மீறும் வகையில் நாடாளுமன்றச் சட்டங்களை நிறைவேற்றி, அச் சட்டங்களில் எல்லாத் தொழில்களையும் வலியச் சேர்த்து, அப்படிச் சேர்க்கப்பட்டதற்கான முகாந்திரங்களையும் காரணங் களையும் கூறி, அவைகளை மத்திய அரசு, தன்னுடைய ஆளுகை யின் கீழ்க் கொண்டு வந்து, பின்னர் ஐந்தாண்டுத் திட்டங்கள் மூலமாகவும் தனது பேராதிக்கத்தை நிலை நிறுத்திக் கொள்வ தைக் காட்டிலும் மத்திய அரசுப் பட்டியல் 52-ஆவது பதிவில் வரக்கூடிய ''பொது நலன் கருதி'' என்ற சொற்றொடர்களைப் பயன்படுத்தி,

''அகில இந்தியாவில் இயங்கிக் கொண்டிருக்கக்கூடிய எல்லாத் தொழில்களும் இனிமேல் உருவாகும் புதிய தொழில்களும் மத்திய அரசினுடைய அதிகாரத்திற்குக் கீழ் வரக் கூடியவை.''

என்ற ஒரே வரியில் ஒரே ஒரு சட்டத்தை இயற்றிவிட்டால் மாநில அரசுகளின் அதிகாரத்தின் கீழ் எவ்வகைத் தொழில் களும் இல்லாமற் செய்திருக்கலாமே? தொழில்துறையில் மாநிலங் களை முழுமையாகவும் அடிமைப்படுத்தி யிருக்கலாமே?

மத்திய அரசில் இன்னும் ஒரே அரசியல் கட்சி (காங்கிரஸ்) தொடர்ந்து ஆட்சியில் இருக்குமானல் தொழில்களைப் பற்றிய அப்படிப்பட்ட ஒற்றை வரி கொண்ட ஒரு சட்டம் கூட வந்தாலும் வரலாம்.

## அயர்லாந்தின் "பாம்புகள்" — நகைச்சுவை!!
## மாநிலத்தின் "தொழில்கள்" — அவலச்சுவை??

நமது மாநிலப் பட்டியலில் "தொழில்கள்" எனக் கண்டிருக்கும் பதிவைப் பார்க்கும்போது, ஆங்கில நகைச் சுவைத் துணுக்கொன்று நினைவுக்கு வருகிறது.

பனிப் பகுதிகளையே கொண்ட அயர்லாந்து நாட்டில், பாம்புகள் தோன்றவும் முடியாது. வாழவும் முடியாது. ஆனல், அயர்லாந்தைப் பற்றி நில நூல் புத்தகம் எழுதத் துணிந்த ஆசிரியர் ஒருவர், தனது புத்தகத்தில், "அயர்லாந்தில் பாம்புகள்", என்ற கம்பீரமான தலைப்பிட்டு, ஒரு தனி அத்தியாயத்தையும் சேர்த்திருந்தார்.

"அயர்லாந்தில் பாம்புகளா?" என்ற கேள்விக் குறியோடு அப்புத்தகத்தைப் புரட்டிய ஒருவர் அந்த அத்தியாயத்தை வெகு ஆவலுடனும் வியப்புடனும் கூர்ந்து பார்க்கலானர். ஆனல் அந்த அத்தியாயத்தின் கீழ் ஒரே ஒரு வரி மட்டும் எழுதப் பட்டிருந்தது.

"அயர்லாந்தில் பாம்புகளே இல்லை" என்ற வரியோடு, "அயர்லாந்தில் பாம்புகள்" என்ற அந்த அத்தியாயம் முடிக்கப்பட்டிருந்தது.

இந்திய அரசமைப்புச் சட்டத்தின் மாநிலப் பட்டியலில் "தொழில்கள்" என்ற அதிகார இனம், வெகு கம்பீரமாகக் காட்சியளிக்கிறது — "அயர்லாந்தில் பாம்புகள்" என்ற அத்தியாயத்தைப் போல்.

ஆனல், மத்தியப் பட்டியலின் 52-ஆம் பதிவிலுள்ள வாசகங்களும் மத்திய அரசின் சட்டங்களும் ஐந்தாண்டுத் திட்டங்களும் மாநில அதிகாரத்தின் கீழ் "தொழில்களே இல்லை" எனச் சாற்றுகின்றன — "அயர்லாந்தில் பாம்புகளில்லை" என்பதைப் போல.

அயர்லாந்து பற்றி நிலநூல் எழுதிய ஆசிரியர் செய்த பிழை நமக்கு நகைச்சுவையைத் தருகின்றது. ஆனால் அரசமைப்பும் மத்திய அரசும் துணிந்து செய்த வஞ்சக ஏற்பாடுகள் இந்திய மாநிலங்களுக்குத் தீரா அவலத்தைத் தருகின்றன.

## கானல் நீர்

கூட்டாட்சித் தத்துவப்படி, மத்திய அரசிற் கிணையான அதிகாரத்தைப் பெற வேண்டிய மாநிலங்கள், மாநில மட்டத்தில் அமைக்கப்படக் கூடிய தொழில்களுக்கான உரிமங்களைப் பெறுவதற்காக, டெல்லிக்கு விண்ணப்பங்களைப் போட்டுவிட்டு, மத்திய அரசின் செயலகத்தையும், மத்திய-தொழில் வளர்ச்சிக் கழக அலுவலகங்களையும் பல்லாண்டுகளாகச் சுற்றி வலம் வந்து கொண்டிருக்கும் கேவலமான நிலையை யடைந்து விட்டன. மாநிலங்களுடைய அவல நிலைக்கு நமது அரசியலமைப்புச் சட்டம் மட்டும் பொறுப்பானதல்ல.

சென்ற இருபத்து நான்கு ஆண்டுகளில் மத்திய அரசால் உருவாக்கப்பட்ட பல தொழிற்சாலைகளும் பல ஐந்தாண்டுத் திட்டங்களும், மத்திய அரசிலும் மாநிலங்களிலும் அரசோச்சிய அனைத்திந்தியக் காங்கிரஸ் கட்சியும், அக்கட்சியைச் சார்ந்த தேசியத் தலைவர்களும் மாநிலக் குட்டித் தலைவர்களுமே, மாநிலங்களின் இன்றைய இழிநிலைக்கு மூல காரணமாவார்கள்.

தொழில்களைப் பொறுத்த அளவில் மத்திய அரசு தற்போது ஒரு சர்வாதிகார அரசாகவே மாறி விட்டது. எனவே, மாநிலங்களுக்களிக்கப்பட்ட சுயாட்சி அதிகாரங்களும் உரிமைகளும் வெறும் கானல் நீராகி விட்டது.

மத்திய அரசின் சர்வாதிகாரத் தன்மையை மாற்றி மாநிலங்கள் நியாயமான சுயாட்சி உரிமைகளைப் பெறுவதற்குரிய வழிவகைகளைப் பற்றித் தமிழக அரசு கூறும்போது,

> "1951-ஆம் ஆண்டு தொழில்கள் (வளர்ச்சியும் ஒழுங்கு முறையும்) சட்டம் (மத்தியச் சட்டம் 65/1951) ரத்து செய்யப்பட வேண்டும். புதிய தொழில் நிறுவனங்களைத் தொடங்கி நடத்தி வருவதற்கும் மாநிலத்திற்குள் புதிய தொழில் நிறுவனத்தைத் தொடங்குவதற்காக உரிமம் வழங்குவதற்கும் மாநிலத்திற்கு அதிகாரம் இருத்தல் வேண்டும்,

> ஒரு மாநிலத்தால் உரிமம் வழங்கப்பட்ட அல்லது தொடங்கப்பட்ட ஒரு தொழில் நிறுவனத்திற்கு அன்னியச் செலாவணி தேவைப்படுமானல், தேசியத் திட்ட முன்னுரிமைகள், தேசியத் தேவை மதிப்பீடு, செய்திப் பகிர்வு ஆகியவற்றுக்கு உட்பட்டு ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஒதுக்கப்படும் மொத்த மானிய வடிவில் அவ்வுதவி அளிக்கப்படல் வேண்டும்.''2

என்ற கருத்துரையைத் தருகின்றது.

எனவே மாநிலங்களுக்குத் 'தொழில்கள்' வேண்டுமெனில்,

மலர்க, மாநில சுயாட்சி!



2 மாநில சுயாட்சி பற்றியும் இராசமன்னர் குழுவின் அறிக்கை பற்றியும் தமிழ் நாடு அரசின் கருத்துரைகள் பக்கம் 10–11.

## 4. இந்தி ...யா ? இந்தியா ...வா ?

இந்தி ஆட்சி மொழி ஆக்கப்படுவது பல பெரியவர்கள் தெரிவித்ததுபோல அநீதியானது. இந்தி பேசாத மக்கள் வாழும் பகுதியை அவமதிப்புக்கு உள்ளாக்குவது - அதிலும் ஈராயிரம் ஆண்டுகளாக ஓர் உயர் தனிச் செம்மொழிக்கு உரியவர்கள் வாழும் தமிழ் நாட்டுக்குப் பெரிய அவமதிப்பு - என்று நாங்கள் மனதார நம்புகிறோம்.

மொழிகளிலே எம்மொழி, மற்ற எந்த மொழியை விடச் சிறப்புடையது என்று ஒப்பிட்டு உண்மை உணர்வது ஒரு புறமிருக்க, ஒரு பகுதி மக்களுக்கு மட்டுமே தாய்மொழியாக உள்ள ஒரு மொழியை, இந்தியாவின் எல்லாப் பகுதி மக்களுக்கும் சேர்த்து, ஒரே ஆட்சி மொழியாக ஆக்கி விடுவது, கொடுங்கோன்மை என்றும், அதன் விளைவாக, இந்தியாவின் ஒரு பகுதிக்கு நிரந்தரமான சலுகையும் உயர்வும் ஏற்பட்டு, மற்ற பகுதிகள் இருட்டறையில் தள்ளப் பட்டுவிடும் என்றும் நாங்கள் திடமாக எண்ணுகிறோம். முழு வளர்ச்சி பெருததும், மற்றத் தேசிய மொழிகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் போது, தனிச் சலுகை பெறுவதற்கு எந்தவிதத் தகுதியும் பெற்றிராததுமாகிய இந்தியை ஆட்சி மொழி யாக்குவது தமிழகத்தின் தொன்மை வாய்ந்த மொழி, பண்பாடு, ஆகியவற்றைப் பாழ்படுத்தி விடும். சான்றோர் பலரும் இதனைத்தான் இந்தி மொழி ஏகாதிபத்தியம் என்று இடித்துரைத்துள்ளனர்............

...நாட்டு மக்கள் அனைவரும் சமமாக நடத்தப் படுவார்கள்;நாட்டின் ஒரு பகுதி,பிற பகுதியின் மீது ஆதிக்கம் செலுத்தாது என்பதைச் சொல்லளவிலே மட்டுமல்ல, செயல் வடிவிலேயும் மெய்ப்பித்துக் காட்டுவதன் மூலமாகத்தான் தேசிய கௌரவம் நிலை நாட்டப்பட முடியும்......

...அரசியல் சட்டத்தின் 17-ஆவது பிரிவு, நடைமுறையாக்கப்பட்டு விடுமே யானால்—நான் நிச்சயமாக நம்புகிறேன்—தேசத்தின் ஒரு பகுதி, தாழ்நிலைக்குத் தள்ளப்பட்டு, மதிப்பிழக்கும். ஒரு பகுதி மதிப்பிழப்பதன் காரணமாக, தேசிய அவமதிப்பு ஏற்பட்டு விடுகிறது. இந்தியை ஆட்சிமொழி ஆக்கும் விஷயத்தில் தவறான போக்கை மேற்கொள்வதன் மூலம் இந்தி பேசாத மக்களை இரண்டாந்தரக் குடிமக்களாக்கி, அதன் மூலம் தேசிய அவமதிப்பைத் தேடுகிறார்கள் என்பதை இந்தி மொழி விஷயத்தில் பிடிவாதப் போக்குக் காட்டும் ஆளவந்தார்களுக்கு உணர்த்தவே 17-ஆவது பிரிவைக் கொளுத்த முற்பட்டோம். ...இந்திய அரசியல் சட்டத்தின் 17-ஆவது பிரிவுதான் உள்ளபடி தேசிய அவமதிப்பை ஏற்படுத்தி வைக்கிறது. 1

—பேரறிஞர் அண்ணா அவர்கள்.

## ஆட்சி மொழியின் தோற்றம்

அகில உலக மட்டத்தில் ஏறத்தாழ 80 கோடி மக்களால் பேசப்படக் கூடியதும் எண்ணிறந்த அறிவியல் மற்றும் தொழில் நுணுக்க நூல்களை யெல்லாம் தன்னகத்தே பெற்றுள்ளதுமான உலக மொழியாம் ஆங்கிலம், அரசியல், பொருளாதாரம், கல்வி, நிர்வாகம், தொழில் மற்றும் வர்த்தகம் ஆகிய அனைத்துத் துறைகளிலும் பொது மொழியாகப் பலகாலம் இயங்கி வந்திருந்தும் கூட இந்திய மக்களில் நூற்றுக்கு ஆறு பேர் மட்டுமே அம் மொழியில் பயிற்சியையும் குறைந்த அளவு அறிவினையும் பெற முடிந்ததெனில், ஆங்கில மொழியின் தகுதிகளில் எதனையும் பெற்றிராததும் வளமற்றதுமான ஓர் அண்மைக் கால மொழியான இந்தி மொழி, மிகக் குறுகிய காலப்பகுதிக்குள் 50 கோடி மக்களின் "பொது மொழியாகவும்" இந்தியாவின் "ஆட்சி

1 டி. எம். பார்த்தசாரதி அவர்கள் எழுதிய தி. மு. க. வரலாறு (முதற்பகுதி) மூன்றாம் பதிப்பு (1973) பக்கங்கள் 456, 463, 464. அறிஞர் அண்ணா அவர்களின் மேல் இ. பி. கோ. 120 (பி) படி, குற்றம் சாட்டப்பட்டு நடைபெற்ற வழக்கில் 7-12-1963-இல் நீதி மன்றத்தில் கொடுத்த வாக்கு மூலத்தின் ஒரு பகுதி.

மொழியாகவும்'' எவ்வகையில் ஆக்கப்பட்டது என்பதை நாம் சற்றுச் சிந்தித்துப் பார்க்க வேண்டாமா?

அடிமை இந்தியாவில், ஆங்கிலத்தையே ''மக்கள் மொழியாக'' ஆக்கிவிட வேண்டும் என்று கருதிய ஆங்கிலப் பேரரசு, அதனை இருநூறு ஆண்டு காலமாகத் திட்டமிட்டுத் தீவிரமாகச் செயற்படுத்தியும் கூட அதனைச் சாதிக்க முடியவில்லை. ஆனால் அரசமைப்புச் சட்டத்தின் சில விதிகளையும், நாடாளு மன்றத்தின் ஓரிரு சட்டங்களையும் வைத்து, 'இந்திய ஒருமைப்பாடு' என்ற ஒரு நோக்கத்தையும் காட்டி, வளமில்லா இந்தியை, இந்திய நாட்டின் 'மக்கள் மொழியாக'ச் செய்து விட முடியும் என இன்னும் பலர் துணிந்து கூறுவதற்குக் காரணம் என்ன?

பேரதிகாரங்கள் பலவற்றைக் கையகப்படுத்திக் கொண்ட வலிமை நிறை மத்திய அரசும், அதன் ஒற்றை வல்லாட்சியும், தன்னாட்சி (சுயாட்சி) யற்ற மாநிலங்களும், அந்த மாநிலங்களை ஒடுக்குகின்ற நிதி, நிர்வாக, சட்டமியற்றுத் துறைகளைச் சார்ந்த அதிகாரச் சாட்டையும் தம் கையில் அகப்பட்டு விட்டது என்ற வட இந்தியத் (தேசியத்) தலைவர்களின் செருக்கைத் தவிர, ஆதாரமான வேறு எந்தக் காரணமும் இருக்க முடியாது.

இந்நிலையில் ''இந்தி மொழி'' நாட்டின் ''பொது மொழியாக'' ஆவதற்கு அரசியற் காரணங்கள் மட்டுமல்ல, வேறுபல அடிப்படைக் காரணங்களும் உண்டு எனச் செப்புவோரும் ஆட்சி மொழிக் கொள்கை பற்றி, அடிக்கடி ஊசலாடும் அனைத்து இந்தியக் கட்சிகளைச் சார்ந்த சில சந்தர்ப்பவாதிகளும் இந்திய நாடு சின்னா பின்னமாகாமல் ஒருமைப்பாட்டைக்' காக்க வல்ல ஒரே இந்திய மொழி, இந்தி மொழிதான் எனக் கூறுகின்ற சில குழப்பவாதிகளும், குழம்பிய குட்டையில் மீன் பிடிக்கும் இராசதந்திரத்தைக் கொண்ட சில தேசியத் தலைவர்களும், ஆங்கில மொழி இல்லா விட்டால் அரசு நடவடிக்கைகள் எல்லாம் அடியோடு செயலற்று விடும் எனத் துணிந்து கூறுகின்ற ஆங்கில மொழியின் அடிவருடிகளும் இன்னும் ஏனைய இந்தி வெறியர்களும் சேர்ந்து, இந்தி பேசா மாநில மக்களிடையே ''ஆட்சி மொழி'' பற்றிய சிக்கலையும் குழப்பத்தையும் மேலும் அதிகப்படுத்தி விட்டனர்.

எனினும் மாநில உயிர்க்கூறான தாய்மொழியுரிமை மெல்ல மெல்லச் சிதைக்கப்பட்டு, தற்போது மாநில அரசுகளால் அவற்றை எவ்வகையிலும் செயற்படுத்த முடியாத அளவுக்கு பின்னணிக்குத் தள்ளப்பட்டுள்ளது என்பதைப் பற்றி யாரும் கவலை கொள்வதில்லை.

சென்ற 24ஆண்டு காலமாக மாநில சுயாட்சிக்கு எதிரிடையாகச் செயல்பட்ட பல்வேறு சிறப்புக் கூறுகளை ஆய்ந்தறிந்த நாம், இந்தி மொழி ஆட்சி மொழியாகி விட்டதால் மாநில சுயாட்சியின் அடிப்படை உரிமையான மொழியுரிமைக் கேற்பட்ட நிலையான பெருங்கேட்டைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டாமா? வளமில்லாத இந்தி மொழி இந்தியத் துணைக் கண்டத்தின் ஆட்சி மொழியாக ஆக்கப்பட்ட கறை படிந்த வரலாற்றையும், அதன் பின்னணியையும், அரசியற் சூழ்நிலைகளையும், நமது மத்திய அரசு சென்ற 24 ஆண்டுகளாக அதனை 'ஆட்சி மொழியாகச்' செயல்படுத்தியதால் மாநில சுயாட்சிக்கு ஏற்பட்டுவிட்ட நிலையான விளைவுகளையும் இங்கு நாம் ஆய்வு செய்வோம்.

## ஆங்கில மொழி அரசோச்சிற்று

வளம் பெற்ற பல பண்டைய மொழிகள், இந்தியத் துணைக் கண்டத்தின் வரையறுக்கப்பட்ட பல நிலப் பகுதிகளில் பன்னூறாண்டுகளாகப் பேசப்பட்டு வருகின்றன. அவை அந்தந்தப் பகுதி அரசுகளால் நிர்வாக மொழியாகவும் கல்வி மற்றும் நீதிமன்ற மொழியாகவும் இயங்கி வந்தன.

முகலாயப் பேரரசர்கள் இந்திய ஒற்றுமையை நிலைநாட்டுகிறோம் எனக் கூறி, வேற்றுமொழியான உருது மொழியை இந்தியத் துணைக்கண்டத்தின் 'ஆட்சி மொழி'யாக ஆக்கினர். அரசு நடவடிக்கைகளைப் பொறுத்த மட்டிலும் உருதுமொழி ஒரு காலத்தில் ஏற்றம் பெற்றிருந்தது. ஆனால், இந்திய நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் உருது மொழி ஆட்சிமொழியாக ஏற்றுக் கொள்ளப்பட வில்லை. முகலாயப் பேரரசு வீழ்ந்த பின்னர், உருது மொழிக்கு அளிக்கப்பட்ட ஆட்சிமொழிச் சிறப்பும் தனித் தகுதியும் தானாகவே மறைந்து போயின.

அந்தந்த நிலப் பகுதிகளின் அரசாங்க அலுவல்கள், நீதி மன்றங்கள், அலுவலகங்கள், கல்விக்கூடங்கள் இன்னோரன்ன பலவும் அந்தந்த வட்டார மொழிகளிலேயே வெகு காலம்

செயல்பட்டு வந்தன. தமிழகத்தில் தஞ்சை அரசர்கள் காலத்திலும், இராமநாதபுரம், சிவகங்கை, புதுக்கோட்டை போன்ற பல குறுநிலப் பகுதிகளிலும் தமிழ்மொழியே நீதிமன்ற மொழியாகவும், ஆட்சி மொழியாகவும் ஆக்கப்பட்டிருந்தது. ஆற்காடு நவாப் ஆண்ட, சென்னைக்கு அருகேயுள்ள நிலப் பகுதிகளில் 'பேர்சிய மொழி' (Persian Language) பொதுவாக ஆட்சிமொழி என்ற தகுதியில் இருந்து வந்தது. ஆனால் அங்கும் கூட, பொதுமக்களைப் பொறுத்த வரையில் எல்லாத் துறைகளிலும் தமிழ்மொழியே, ஆட்சி மொழிபோல் பயன் படுத்தப்பட்டு வந்தது.

முகமதிய நவாப்புகளின் ஆட்சிக்குட்பட்ட வேறு சில நிலப் பகுதிகளிலும் 'உருது மொழி' அல்லது 'பேர்சிய மொழி', ஆட்சி மொழி என்ற பெயரால் சில அரசுச் செயல்களுக்காக மட்டும் ஆங்காங்கே பயன் படுத்தப்பட்டு வந்தன. அவை நீங்கலாக மற்ற இந்தியப் பகுதிகளில் பொதுவாக அந்தந்த வட்டார மொழிகளில்தான் அரசுச் செயல்களும் மக்கள் பணிகளும் செயல்படுத்தப்பட்டு வந்தன என வரலாறு கூறுகிறது.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் தொடக்கத்திலிருந்தே ஆங்கிலேயப் பேரரசு இந்தியத் துணைக் கண்டத்தில் ஆங்கில மொழியைப் பரப்புவதற்குரிய நடவடிக்கைகளை மேற்கொண்டது. ஆங்கிலமும் இந்தியாவின் ஆட்சி மொழியாயிற்று. ''மெக்காலே'' (Mecauley) அவர்களின் திட்டத்தை மையமாக வைத்து நிர்வாகத் துறையிலும், வழக்கு (நீதி) மன்ற முறையிலும், கல்வித்துறையிலும் ஆங்கில மொழியின் பேராதிக்கம் இந்திய நாட்டில் செவ்வனே நிலைநிறுத்தப்பட்டது. ''சீர்மைக் கொள்கையின்'' (Uniform Policy) அடிப்படையில் அகில இந்தியாவையும் ஒருமைப்படுத்தி விட வேண்டுமென்ற நோக்கத்தில் பல்வேறு மொழி, இன மக்களின் மேல் 'ஆட்சி மொழி' என்ற பெயரால் ஆங்கில மொழி, கட்டாயமாகத் திணிக்கப்பட்டது. எனினும் ஆங்கிலம் பொதுமக்களின் மொழியாக ஆகிவிட வில்லை.

மாவட்ட வழக்கு மன்றங்களுக்குக் கீழுள்ள வழக்கு மன்றங்களில் அந்தந்த வட்டார மொழியும் ஆங்கிலத்துடன் இணைந்தே செயல்பட்டன. அரசு அலுவலகங்களிலும் கல்வித்துறையிலும் ஆங்கிலம் மட்டுமே முழுமையாகப் பயன்பட வில்லை. வட்டார மொழிகளும் பெரும் பங்கைப் பெற்றிருந்தன. இவ்வகையில்

பொது மக்கள் வாழ்க்கையின் எல்லாக் கூறுகளையும் ஆங்கிலத்தால் கைப்பற்றிக் கொள்ள இயல வில்லை யெனினும் "ஆங்கிலம் தெரிந்தவர்தான் அறிவாற்றல் பெற்றவர்" எனப் பொது மக்கள் கருதும் அளவிற்கு ஆங்கிலம் ஒரு தனிச் சிறப்பினைப் பெற்று விட்டது.

இருபதாம் நூற்றுண்டின் இடைக்காலம் வரையும் ஓர் இந்தியனுடைய ஆங்கில மொழிப் பயிற்சியையும் புலமையையும் அளவைகளாகக் கொண்டே அவனுடைய கல்வித் தரத்தையும் திறத்தையும் நுட்ப அறிவையும் சமுதாயத் தகுதியையும் அளந்து சொல்லக் கூடியதொரு கேடு கெட்ட நிலைமை, இந்திய நாட்டில் பரவலாக இருந்து வந்தது. அதனுல் தாய்மொழிக்குரிய மதிப்பும் தகுதியும் சமுதாய உயர்வும் மறைந்து போய், தாய்மொழியின் வளர்ச்சியும் தடைபட்டுப் போய் விட்டது.

## ஆட்சி மொழிக் கொள்கையின் தோற்றம்

1910-ஆம் ஆண்டு வரையும் காங்கிரஸ் கட்சியின் நடவடிக்கைகள் யாவும் பல மாநிலங்களைச் சார்ந்த கற்றறிந்த பெருமக்களால் 'ஆங்கிலத்திலேயே' நடாத்தப்பட்டு வந்தன. அவர்களுடைய பழக்க வழக்கங்கள், நடையுடை பாவனைகள், சிந்தனை மற்றும் செயற்பாடுகள் எல்லாமே ஆங்கிலப் பாணியையே எதிரொலித்தன. அந்தக் காலப் பகுதியில்தான் காந்தியடிகள் இந்திய அரசியலில் நுழைந்தார். முதல் உலகப் போருக்குப் பின்னர் காந்தியடிகளின் சீரிய தலைமையில் இந்தியத் தேசியக் காங்கிரஸ் புதிய உணர்ச்சியுடன் நடைபோடத் தொடங்கிற்று. விடுதலை இயக்கமும் புதியதோர் உத்வேகத்தினைப் பெற்றியங்கியது. காங்கிரஸ் தலைவர்களிடம் மெல்ல மெல்ல, தாய்மொழிப் பற்றும் தலைகாட்டிற்று. கற்றறிந்த பெருமக்களும் மற்ற பொதுமக்களும் "மொழி வாரி மாநிலச் சீரமைப்பையும்" "மாநில மொழிகளின் தகுநிலையையும்" பற்றி முதன் முறையாகச் சிந்திக்கத் தொடங்கினர்.

1925-ஆம் ஆண்டில் காங்கிரசுக் கட்சி அமைப்பின் 33-ஆவது விதி திருத்தப் பட்டது. அத்திருத்தத்தின் மூலமாக இந்துஸ்தானி மொழியும் மறைமுகமாகக் காங்கிரஸ் நடவடிக்கை

களில் புகுந்து கொண்டது. ஆனுல், மாநில மொழிகளிலும் காங்கிரசின் நடவடிக்கைகள் நடைபெற அது வழி வகை செய்தது.

"கூடியவரை, காங்கிரசுக் கட்சியின் நடவடிக்கைகள், இந்துஸ்தானியிலேயே நடைபெற வேண்டும். கட்சி நடவடிக்கைகளில் கலந்து கொள்பவர்களுக்கு இந்துஸ்தானி தெரியா விட்டாலோ, அல்லது தேவையை முன்னிட்டோ ஆங்கிலமும் பிராந்திய மொழிகளும் பயன் படுத்தப்படலாம். பிரதேசக் காங்கிரஸ் கமிட்டியின் நடவடிக்கைகள், அந்தந்த மாகாண மொழிகளினுல் நடத்தப்பட வேண்டும்; இந்துஸ்தானியும் பயன் படுத்தப்படலாம்."

காங்கிரஸ் கட்சியின் இந்தப் புதிய விதியின் மூலமாக, அகில இந்தியக் காங்கிரசின் அதிகாரப் பூர்வமான நடவடிக்கைகளில் இடம் பெற்றிருந்த ஆங்கில மொழி முதன் முதலாகத் தவிர்க்கப்பட்டு, அதன் இடத்தை இந்துஸ்தானி கைப்பற்றிக் கொண்டது. மாநிலக் காங்கிரஸ் கட்சி நடவடிக்கைகளில் அந்தந்த மாநில மொழிகள், ஆங்கிலத்தின் தகுதியைப் பெற்றுக் கொண்டன.

## II

## இந்தி தான் ஆட்சி மொழியா?

இந்நூலின் முதற் பகுதியின் கடைசி அத்தியாயத்தில், 1961-ஆம் ஆண்டின் மக்கட் கணிப்பின்படி (Census) இந்தியத் துணைக் கண்டத்தில் பேசப்படும் மொத்தத் தாய்மொழிகள் 1652 என்றும், அவை யாவும் ஐந்து வகையாகப் பிரிக்கப் பட்டுள்ளன வென்றும் அம்மொழிகள் ஒவ்வொன்றும் எவ்வளவு மக்களால் பேசப்பட்டு வருகின்றன என்றும் தெளிவாகக் குறிப்பிட்டுக் காட்டினேம்.

இந்திய அரசமைப்புச் சட்டத்தின் VIII-ஆம் இணைப்பில் (VIII Schedule) குறிப்பிடப் பட்டிருக்கும் 14 தேசிய மொழிகளில், இந்தியும் ஒரு தேசிய மொழியாகும். அப்பதினுன்கு மொழிகளில் 380 வகைத் தாய்மொழிகள் அடங்குகின்றன. அந்தப் 14 தேசிய மொழிகளைப் பேசுபவர்களுடைய விபரங்கள் கீழே 13-ஆவது பட்டியலில் தரப்பட்டுள்ளன.

## பதிமூன்றும் பட்டியல்

### 14 தேசிய மொழிகளைப் பேசுபவர்களின் எண்ணிக்கை விபரம்

**[1961-ஆம் ஆண்டின் மக்கள் கணிப்பின்படி] [2]**

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | அசாமி மொழி | ... | 68,03,460 | பேர்கள் |
| 2. | வங்க மொழி | ... | 3,38,88,279 | ,, |
| 3. | குசராத்தி மொழி | ... | 2,03,04,461 | ,, |
| 4. | இந்தி மொழி | ... | 13,34,33,207 | ,, |
| 5. | கன்னடம் | ... | 1,74,15,826 | ,, |
| 6. | காஷ்மீர் மொழி | ... | 19,56,114 | ,, |
| 7. | மலையாளம் | ... | 1,70,15,674 | ,, |
| 8. | மராத்தி | ... | 3,32,86,710 | ,, |
| 9. | ஒரியா | ... | 1,57,19,387 | ,, |
| 10. | பஞ்சாபி | ... | 1,09,50,660 | ,, |
| 11. | வடமொழி (சமஸ்கிருதம்) | ... | 2,544 | ,, |
| 12. | தமிழ்மொழி | ... | 3,05,62,671 | ,, |
| 13. | தெலுங்கு | ... | 3,76 68,106 | ,, |
| 14. | உருது | ... | 2,33,23,399 | ,, |
| | | | 38,23,30,498 | ,, |
| | 14 மொழிகளில் உள்ளடங்கிய தாய் மொழிகள் நீங்கலாக, மற்ற 1272 தாய்மொழிகளைப் பேசக்கூடிய மக்களின் எண்ணிக்கை | ... | 16,56,69,502 | |
| | மொத்தம் | ... | 54,80,00,000 | பேர்கள் |
| | 1961-ஆம் ஆண்டு மக்கள் தொகைக் கணிப்பின்படி, இந்தி மொழியைச் சார்ந்த பல தாய்மொழிகளையும், இந்தி மொழியையும் பேசக்கூடிய, மக்களின் எண்ணிக்கை | ... | 13,34,33,207 | பேர்கள் |
| | இந்திக்கு எவ்வகையிலும் தொடர்பில்லாததும் இந்திய அரசமைப்பில் தனித் தனித் தேசிய மொழிகள் என்று ஒத்துக் கொள்ளப்பட்டதுமான பெரும் மொழிகளைப் பேசக் கூடியவர்களின் எண்ணிக்கை | ... | 24,88,97,291 | ,, |

2 India - A Referance Annual (1973) P - 13, 14

இந்திமொழியைப் பேசக் கூடிய மொத்தம் 13,34,33,207 பேர்களில் இந்தியைத் தாய்மொழியாகக் கொள்ளாதவர்கள்—ஆனால்—இந்தியைப் பேச மட்டும் தெரிந்தவர்கள் 93,63,068 பேர்கள்.

எனவே, இந்தியாவின் மொத்த மக்கள் தொகையில் இந்தியைத் தாய்மொழியாகக் கொண்டவர்களும் இந்தி பேசத் தெரிந்தவர் களும் சேர்ந்து 14,27,96,275 பேர்கள்.

அதாவது மொத்த ஜனத் தொகையில் 27% பேர் மட்டும்தான் இந்தியைத் தெரிந்துள்ளார்கள்.

இந்தி பேசக் கூடியவர்கள் என்ற கணக்கில் கூட இந்தியைப் போல் தோற்றமளிக்கும் வேறுபல மொழிகளைப் பேசக் கூடியவர்களும் அடங்குகின்றனர்.

மறைத்திரு. மறைமலையடிகளார் அவர்கள், இந்தியைப் போன்ற வேற்று மொழிகளைப் பற்றிக் குறிப்பிடுகிறார்,

''இந்தி மொழியானது வடநாட்டவ ரெல்லாராலும் பொது மொழியாக வைத்துப் பேசப்படுகின்ற தென்பது உண்மை யாகாது. ஏனென்றால், அது வடக்கே பற்பல நாடுகளிற் பற்பல மாறுதல்களோடு பேசப்படுகின்றதே யல்லாமல், அஃதெங்கும் ஒரே வகையாகப் பேசப்பட வில்லை. அங்கே ஒரு நாட்டவர் பேசும் இந்தியை, அதற்கடுத்த நாட்டிலுள் ளார் தெரிந்து கொள்ள மாட்டாதவரா யிருக்கின்றனர். இங்ஙனம் பலவகை மாறுதல்களுடன் பேசப்படும் இந்தி மொழியை ஆராய்ச்சி செய்த ஆசிரியர்கள் அதனை 'மேல் நாட்டு இந்தி', 'கீழ்நாட்டு இந்தி', 'பிகாரி' என்னும் மூன்று பெரும் பிரிவுகளாகவும் அப்பெரும் பிரிவுகளினுள்ளே இன்னும் பல சிறு பிரிவுகளாகவும் பகுத்திருக்கின்றனர். கங்கையாற்றுக்கு மேற்கே பஞ்சாப்பின் தென்கிழக்கில் மேட்டுப் பாங்கான ஊர்களிற் பேசப்படுவது 'பாங்காரு' எனவும், வடமதுரையிலும் அதனைச் சூழ்ந்த இடங்களிலும் பேசப்படுவது, ''பிரஜ்பாஷா''எனவும், கங்கைக்கும் யமுனை யாற்றுக்கும் இடையே யுள்ள நாடுகளின் தெற்கிற் பேசப் படுவது 'கனோஜ்' எனவும், பந்தல் கண்டிலம் நருமதை யாற்றை யடுத்த இடங்களிலும் பேசப்படுவது 'பந்தலி'

எனவும், தில்லி நகரத்திலும் அதனைச் சூழ்ந்த ஊர்களிலும் பேசப்படுவது 'உருது' எனவும் வழங்கப்படுகின்றன. இவ்வாறு இந்தியாவின் வடமேற் பகுதிகளிற் பேசப்படும் இவ்வைந்து மொழிகளும் ''மேல் நாட்டு இந்தி'' என்னும் பெரும் பிரிவில் அடங்குவன வாகும்.''

''இனிக் '' கீழ் நாட்டு இந்தி '' என்னும் பெரும் பிரிவில் அடங்குவன 'அவதி', 'பகேலி', 'சத்தீஸ்கரி' என்னும் மொழிகளாகும். இம் மூன்று மொழிகளுள்ளும் 'அவதி' என்பதே முதன்மை யுடையதாய் அயோத்திய நாட்டின்கண் வழங்குகின்றது.''

''இனிப் 'பிகாரி' என்னும் பெரும் பிரிவில் அடங்குவன: 'மைதிலி', 'போஜ்புரி', 'மகதி', என்னும் மொழிகளாகும். இம் மூன்றனுள் முதன்மை வாய்ந்தது, கங்கையாற்றின் வடக்கே மிதிலை நாட்டில் வழங்கும் 'மைதிலி' என்னும் மொழியே யாகும். இப்போது இந்தி மொழி நூல்கள் என்று வழங்கப்படுவன வெல்லாம் இந்த ''மைதிலி'' மொழியிலே தான் எழுதப்பட்டிருக்கின்றன. இன்னும் இந்தி மொழியின் பிரிவுகளாக ஆங்காங்கு வடநாட்டின்கண் பேசப்படுஞ் சிறுசிறு மொழிகள் மேலும் பற்பல உள. இவ்வாறு இந்தி மொழியின் பிரிவுகளாக வழங்கும் பற்பல மொழிகளைப் பேசும் பற்பல நாடுகளில் உள்ளாரும், ஒரு நாட்டவர் மொழியை மற்ற நாட்டவர் அறியாராய் உயிர் வாழ்ந்து வருதலின், இந்தி அவரெல்லார்க்குந் தெரிந்த பொது மொழி என்றுரைப் பாருரை எங்ஙனம் பொருந்தும்?'' 3

இவ்வகையில் இந்தியைப் போன்ற வேற்று மொழிகளைப் பேசக் கூடிய அனைவரையும் சேர்த்து ''இந்தி மொழி பேசுகிறவர்கள்'' என்று வாதத்திற்காக நாம் ஏற்றுக் கொண்டாலும் கூட இந்திய நாட்டின் மொத்த சனத்தொகையில் இந்திமொழி பேசாத இந்திய மக்கள் 73% அளவிற்கு நிறைந்திருக்கிறார்கள். இந்தி மொழி பேசக் கூடியவர்கள் மொத்தத்தில் 27%அளவிற்கு மிகக் குறைந்திருக்கிறார்கள். எனவே, குறைந்தபட்ச 27% மக்களால் பேசப்படக் கூடிய இந்தி மொழி, மற்ற 73% மக்கள் மீது வலியத் திணிக்கப்பட வேண்டிய நிலையில்

3 மறைத்திரு. மறைமலை அடிகளார், ''இந்தி பொதுமொழியா?'' (1971). பக்கங்கள் 13-15.

உள்ளதே தவிர, நேரு அவர்களின் புள்ளிக் கணக்கிலும், விளக்கத்திலும் கூறப்பட்டபடி இந்தியாவின் உண்மையான பொது மொழியாக ஆவதற்கு அருகதையைப் பெறுவதில்லை. மேலும் மற்ற இந்திய மொழிகளைக் காட்டிலும் மிகமிக அண்மைக் காலத்தில் ஏற்பட்ட வளமில்லாத மொழியான இந்திமொழி, இந்தியாவின் ஆட்சி மொழி யென்ற தகுதியைப் பெறுமளவிற்கு அரசியல் ரீதியாகக் கூட இலாயக்கற்றது என்பது தெளிவாகிறது. எனவே, பண்டித நேரு அவர்கள் வரைந்த ''மொழிப் பிரச்சனை'' என்ற கட்டுரையும், அதனை ஏற்றுக் கொண்ட காங்கிரஸ் கட்சியின் ''மொழிக் கொள்கையும்'', ஆட்சிமொழிச் சிக்கலுக்கு வித்திட்டதே தவிர அதனைத் தீர்த்துவிட வில்லை.

## III

## அரசமைப்புச் சபையில் தந்தை பெரியார்!

இந்திய அரசமைப்புச் சபையில், கட்சிக் கட்டுப்பாட்டினைக் கடந்து நின்ற ஒரு பிரச்சினை, ஆட்சி மொழிப் பிரச்சினையாகும். காங்கிரஸ் கட்சி சார்ந்த இந்தி வெறியர்களுக்கும் தென்னகத்தைச் சார்ந்தவர்களுக்கும் இடையில், ஆட்சி மொழியைப் பற்றித் தீவிரமான கருத்து வேறுபாடுகள் இருந்தன.

''இந்தி'' வேண்டும் என்ற தீவிரவாதிகளில் கூட, இரு வகை இருந்தனர். ''இந்தி''தான் வேண்டுமென்றனர் பலர்; ''இந்துஸ்தானி''தான் வேண்டுமென்றனர் இன்னொரு பகுதியினர். இந்தியாவின் ஆட்சி மொழி ''இந்தியா''? அல்லது ''இந்துஸ்தானியா'' என்பதைப் பற்றி ஆழ்ந்த கருத்துச் சிக்கல்கள் இருந்தன.

அரசமைப்புச் சபை, தொடக்கத்திலிருந்து இறுதி வரை இந்தி பற்றி விவாதம் வரும் போதெல்லாம் அதன் உறுப்பினர்கள் உணர்ச்சிப் பிழம்பானார்கள்.

அரசியலமைப்புச் சபை எவ்வகையில் நடைபெற வேண்டும் என்பது பற்றிய ''சபை நடைமுறை விதிகளைத்'' (Rules of Procedure) தொகுப்பதற்காக ஒரு தனிக்குழு நியமிக்கப்பட வேண்டியதாயிற்று.

திரு. ஆர். வி. துளேகர் அவர்கள்,

‘‘அந்தக் குழு, இந்துஸ்தானியாலேயே சபை விதிகளை எழுத வேண்டும்.’’

என்ற ஒரு திருத்தத்தைக் கொண்டு வந்தார். அரசியல் அமைப்புச் சபைத் தலைவர், திரு. துளேகரை இந்தியில் பேசாமல் ஆங்கிலத்தில் பேசுமாறு பணித்தார். அதற்கு, திரு. துளேகர் அவர்கள் மறுமொழி கூறும்போது,

‘‘இந்துஸ்தானியைத் தெரியாதவர்கள் இந்தியாவில் இருக்க உரிமையற்றவர்கள்; அவர்கள் அரசமைப்புச் சபை உறுப்பினராக இருக்கவும் தகுதியற்றவர்கள்’’ என வாதாடினர்.

‘‘திருத்தம் முறையற்றது’’எனத் தீர்ப்புக் கூறி, மேற்கொண்டு அதைப் பொறுத்த விவாதங்களை நடத்தக் கூடாது என்றும் தலைவர் ஆணையிட்டார்.

பின்னர் அரசியலமைப்புச் சபை ‘‘நடைமுறை விதிகளைப் பற்றிய அறிக்கை’’, விவாதத்திற்கு எடுக்கப்பட்டது. அப்போது மறுபடியும் இந்திப் பிரச்சினை தலை நீட்டியது.

‘‘அரசமைப்புச் சபையின் நடவடிக்கைகள் இந்துஸ்தானியிலோ அல்லது ஆங்கிலத்திலோ இருக்கலாம்; அந்த இரு மொழிகளும் தெரியாதவர்கள் அவர் தம் தாய்மொழியிலேயே பேசுவதற்குத் தலைவர் அனுமதிக்கலாம். அரசமைப்புச் சபையின் அதிகாரப்பூர்வமான ஏடுகள், குறிப்புகள், ஆணைகள் முழுவதும் இந்தி, உருது மற்றும் ஆங்கிலம் ஆகிய மும்மொழிகளிலும் இருக்கலாம்.’’

என நடைமுறை விதிக்குழுவின் அறிக்கை பரிந்துரை செய்திருந்தது.

ஆனால், அரசமைப்புச் சபையின் நடவடிக்கைகள் இந்துஸ்தானியில் தான் இருக்க வேண்டும் என்றும் ஆங்கிலத்திலோ அல்லது உருது மொழியிலோ நடைபெறலாகாது எனவும், இந்தி தெரியாதவர்கள் மட்டும் ஆங்கிலத்திலேயோ அல்லது தாய்மொழியிலேயோ பேசலாம் எனவும் கோரும் ஒரு

திருத்தத்தை, திரு. சேத் கோவிந்ததாஸ் அவர்கள் கொண்டு வந்தார். அந்தத் திருத்தத்தை முன்மொழிந்து அவர் உரையாற்றும் போது,

> ''மகாத்மா காந்தியினுடைய 25 ஆண்டுகால முயற்சிக்குப் பின்னரும் கூடத் தென்னகத்தைச் சார்ந்தவர்கள் இந்துஸ்தானியைப் புரிந்து கொள்ள முடியாதவர்களாக இருந்தால், அது அவர்கள் குற்றம் தான் என்பதை நான் தென்னகத்தைச் சார்ந்தவர்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். சென்னையைச் சார்ந்த சிலருக்கு இந்துஸ்தானி தெரியாத காரணத்தினால், விடுதலை பெற்ற இந்தியாவிற்குரிய ஓர் அரசமைப்பை உருவாக்குவதற்குக் கூடியிருக்கும் இறைமை பொருந்திய அரசமைப்புச் சபையில் ஆங்கிலம் தான் கோலோச்சுவது என்று சொன்னால், அது எங்கள் பொறுமையைச் சோதிக்கிறது.'' 4

எனக் குறிப்பிட்டு, திரு. சேத் கோவிந்ததாஸ் அவர்கள் ''நமது'' அரசமைப்புச் சபையில் இந்தி பேசா மக்களின் ''குற்றத்தை'' இடித்துக் காட்டினார்.

வரைவு அரசமைப்புச் சட்டத்தின் (Draft Constitution) பேரில் பொது விவாதம் நடைபெறும் போது, இந்திப் பிரச்சினை முழுத் தீவிரத்துடன் மீண்டும் தலையெடுத்தது. உணர்ச்சி கொப்பளிக்கும் பல விவாதங்கள் நடைபெற்றன. திரு. சேத் கோவிந்ததாசும், அவர் குழுவைச் சார்ந்த சில இந்தி ஆதரவாளர்களும்,

''நாட்டினுடைய ஆட்சி மொழியாக தேவநாகிரி எழுத்தைக் கொண்ட இந்தி தான் அரசியல் அமைப்பில் இடம் பெற வேண்டும்; ஆனால் இடைக்கால ஏற்பாடாக ஆங்கிலமும் தொடரலாம்'' என்றார்கள்.

இன்னொரு சாரார், ''தேவநாகிரி மற்றும் உருது லிபியில் உள்ள இந்துஸ்தானியே ஆட்சி மொழியாக இருக்க வேண்டும்'' என்றார்கள்.

---

4 ''Framing of India's Constitution — A Study'' (1967), by B. Shiva Rao, P. 783, 784.

அப்போது இந்திமொழி பேசாத பகுதியைச் சார்ந்தவர்கள், தாங்கள் இந்திக்கு எதிரிகள் அல்லர் என்றும்,இந்தி மொழி தெரியாத பல கோடி மக்களின் மேல் ஆட்சி மொழி என்ற பெயரால் ஒரே ஒரு மொழியைத் திணிப்பது நாட்டிற்குக் கேடு விளைவிக்கும் என்றும் மெத்தப் பணிவோடும் அடக்கத்தோடும் எடுத்தியம்பினர்.

இந்தி ஆட்சி மொழியாக ஆக வேண்டும் என வற்புறுத்தப் பட்டால் ''இன்னொரு நாட்டுப் பிரிவினை தவிர்க்க முடியாததாகி விடும்'' என அமரர் திரு. டி. டி. கிருஷ்ணமாச்சாரி போன்றவர்கள் 1948–ஆம் ஆண்டிலேயே அரசமைப்புச் சபையில் வாதிட்டனர்,

> ''நாட்டுப் பிரிவினை (திராவிட நாட்டுப் பிரிவினை) வேண்டும் என்ற முழக்கத்தைச் செய்பவர்கள், (தந்தை பெரியார் அவர்கள் தலைமையில்) ஒரு பெரும் சக்தியாய் தென்னகத்தில் இருக்கிறார்கள் என்ற எச்சரிக்கையை நான் செய்ய விரும்புகிறேன். நமது முழு வலிவைப் பயன்படுத்தி அப்பிரிவினைச் சக்தியை அடக்கவேண்டுவது நமது கடமை. உத்தரப் பிரதேசத்தைச் சார்ந்த மாண்புமிகு எனது நண்பர்கள், ''இந்தி ஆதிக்கத்தை''த் திணிக்க முயற்சிக்கும் பான்மையால் எந்த வகையிலும் நமக்கு உதவி புரிவதில்லை. முழு இந்தியா வேண்டுமா? அல்லது இந்தி — இந்தியா மட்டும் அவர்களுக்கு வேண்டுமா? அவர்களே முடிவு செய்யட்டும்; இந்த இரண்டிலொன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்வதும் அந்த முடிவை அரசமைப்பில் ஏற்றி வைப்பதும் அவர்களுடைய முடிவைப் பொறுத்ததே. நாங்கள் வெளியே, தனியே விடப்பட்டால், எங்களது தலையெழுத்தை நொந்து கொண்டு இனி வரக்கூடிய நல்ல காலத்தை நம்பி இருப்போம்.'' 5

என 'நமது' இந்திய அரசமைப்புச் சபையில் 'நமது' (அகில இந்தியத்) தமிழ் தலைவர் ஒருவர், வீரத்தோடு முழங்கிப் பின்னர், சோகத்தோடு புலம்பினர்.

---

5 C A. D Vol. VII, P. 235, Quoted in Ibid. Opp. cited Note 4. P. 788, 789.

அந்த நாளிலேகூட தமிழகத்தின் தன்மானத் தலைவரும் சீர் திருத்தச் செம்மலுமான தந்தை.பெரியார் அவர்களின் நிழலடியைக் காட்டியே, திரு. டி. டி. கிருஷ்ணமாச்சாரி அவர்கள், இந்தி வெறியர்கள் நிரம்பிய அரசமைப்புச் சபையில் ''இந்தி ஆட்சி மொழி ஆகக்கூடாது எனக் கூறித் தம் தன்மானத்தைக் காத்துக் கொண்டார். பெரியார் அவர்களின் தன்மான இயக்கமும், தீவிரமான இந்தி எதிர்ப்பும் இல்லாமல் இருந்திருந்தால், தென்னகத்தைச் சார்ந்த மக்களின் மொழி உரிமைகள் அன்றே முழுமையாகப் பறிபோயிருந்திருக்கு மன்றோ?

நாடாளு மன்ற நடவடிக்கைகளில் எந்த மொழியைப் பயன்படுத்த வேண்டும் என்பது பற்றிய விவாதம் 1949-ஆம் ஆண்டு மே மாதம் 23-ஆம் நாளில் நடந்தது. மாநிலச் சட்ட மன்ற நடவடிக்கை மொழி பற்றிய பிரச்சனை 1949-ஆம் ஆண்டு சூலைத் திங்கள் 11-ஆம் நாளில் அரசமைப்புச் சபையில் எழுந்தது. இந்த இரு விவாதங்களிலும் மாநில சுயாட்சி உணர்வும் மொழி உணர்வும் பொங்கி எழுந்தது. எனவே, நாட்டின் ''ஒருமைப்பாடு''(?) கருதி அவ்விவாதங்கள் வசதியாக ஒத்தி வைக்கப்பட்டு விட்டன.

திரு. அனந்தசயனம் ஐயங்கார் உட்பட 82 பேர் கையெழுத்திட்டு அரசமைப்புச் சபையில்,

''தேவநாகரி லிபியைக் கொண்ட இந்தி மொழிதான் இந்தியாவின் ஆட்சி மொழியாக இருத்தல் வேண்டும் என்ற அரசமைப்பு அமுலுக்கு வந்த பின்னர் 10 ஆண்டுக் காலம் வரை, ஆங்கிலம் துணை ஆட்சி மொழியாயிருக்கும். அரசின் நடவடிக்கைகளுக்கு, இரு மொழிகளையும் பயன்படுத்திக் கொள்ள நாடாளு மன்றம் பின்னர் சட்டம் இயற்றிக் கொள்ள வேண்டும். மாநில அரசுகளின் நடவடிக்கைகளுக்காக, எந்த ஒரு வட்டார மொழியையும் ஏற்றுக் கொள்ளலாம்.''

என்ற ஒரு திருத்தத்தைக் கொண்டு வந்தார்.

திரு. சேத் கோவிந்ததாஸ் அவர்களாலும் அதே திருத்தம் கொண்டு வரப்பட்டது.

ஆனால், அதற்கோர் எதிர்த் திருத்தம் கொடுக்கப்பட்டது. அஃதாவது,

> "இந்தி மொழி—"ஆட்சி மொழியாக" இருக்கலாம். ஆனால், அதுகாறும் ஆங்கிலம் பயன்படுத்தப்பட்ட அரசுக் காரியங்களில் எல்லாம் மேலும் 15 ஆண்டுகளுக்குத் தொடர்ந்து ஆங்கிலமே பயன்படுத்தப்பட வேண்டும். அதன் பின்னர் நாடாளு மன்றம் எத்துணைக் கால அளவிற்கு ஆங்கிலத்தை நீட்டிப்பு செய்கிறதோ அது வரைக்கும் ஆங்கிலமே தொடர்ந்து நீடிக்க வேண்டும். நாடாளு மன்றத்தின் மூன்றில் இரண்டு பெரும்பான்மை அங்கத்தினர்களால் வாக்குச் செய்யப்பட்டு அந்த 15 ஆண்டு இடைக்காலத்தில் ஆங்கிலத்துடன் இந்தியையும் அரசு நடவடிக்கைகளில் பயன்படுத்தலாம் என மசோதா நிறைவேறினல் சில குறிப்பிட்ட காரியங்களுக்காக மட்டும் ஆங்கிலத்துடன் இந்தியையும் பயன்படுத்தலாம். எல்லா அரசு நடவடிக்கைகளிலும், அரேபிய எண்களே பயன்படுத்தப்பட வேண்டும்." 6

இந்த எதிர்த் திருத்தத்தைத் தமிழகத்தைச் சேர்ந்த, திரு. சந்தானம் அவர்களும் தென்னகத்தின் பல உறுப்பினர்களும் சேர்ந்து மொத்தம் 43 பேர்கள் கையொப்பமிட்டு அரசமைப்புச் சபையில் கொண்டு வந்தனர்.

இதில் அவலநிலை என்னவெனில், இந்தி ஆட்சிமொழி என்பதைப் பொறுத்த அளவில் இருசாராரும் ஏற்றுக் கொண்டனர். ஆனல் ஆட்சி மொழித் தகுதியுடன் ஆங்கிலம் எத்துணை (இடை)க்கால அளவிற்குப் பயன்படுத்தப்பட வேண்டும் என்ற பிரச்சினை தான் இதில் மிகுந்து நின்றது.

நமது முன்னாள் உள்நாட்டமைச்சர், திரு. கோவிந்த வல்லப பந்து அவர்கள் ஆங்கிலத்தை அகற்றுவதற்கு உண்டான கால அளவை நிர்ணயிக்கும் உரிமையை இந்தி மொழி பேசாத மக்களுக்கே விட்டுவிடலாம் என யோசனை கூறினர்.

---

6 Ibid, Opp. cited, Note. 4, P. 788.

இந்நிலையில் 5—8—1949-ஆம் நாளில் காங்கிரஸ் காரியக் கமிட்டி ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது. அதில் ''ஆட்சி மொழி'' எது என்பதைக் குறிப்பிடாமலேயே,

''மாநிலங்களுக்கும் மத்திய அரசிற்கும் இடையில் நடைபெறும் அரசாங்க நடவடிக்கைகளுக்காகவும் மத்திய அரசின் நடவடிக்கைகளுக்காகவும் ''ஒரு மொழி'' பயன்படுத்தப்பட வேண்டும். அரசமைப்புச் சட்டம் அமுலுக்கு வந்த பின்னர் 15 ஆண்டு காலத்திற்கு மத்திய அரசிற்கும் மாநிலங்களுக்கும் இடையே நடைபெறும் அரசாங்க அலுவல்களிலும்நடவடிக்கைகளிலும்ஆங்கிலமே பயன் படுத்தப்படலாம். ஆங்கிலத்தினுடைய இடத்தை, ''அந்த மொழி'' வகிக்கத் தக்க தகுதியைப் பெறும் வரை மெல்ல மெல்ல,''அந்த மொழி'' யும் பயன்படுத்தப்பட வேண்டும்.''

என்று அத்தீர்மானம் கூறிற்று.

அந்த மொழி, எந்த மொழி?

இந்தி மொழிதான்; வேறெந்த மொழி?

இதற்கிடையில் 1949-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 6, 7 நாள்களில் அகில இந்திய மட்டத்தில் ''தேசிய மொழி அறிஞர்கள் மாநாடு'' என்ற ஒரு மாநாட்டை, திரு. சேத் கோவிந்ததாஸ் அவர்கள் கூட்டினார். பல மொழிகளில் துறை போன வல்லுநர்களை யெல்லாம் அழைத்து அம்மாநாட்டில் கலந்து கொள்ளச் செய்வித்ததாகக்கூறி இறுதியில் அம்மா நாடு, இந்தி தான் இந்தியாவின் '' தேசிய மொழியாக '' (National Language – ராஷ்டிர பாஷா) ஆக வேண்டும் என்ற தீர்ப்பை வழங்கி யிருப்பதாகவும் அவர் அறிவித்தார்.

அவர் மேலும் கூறும்போது,

''உண்மையில் ஆட்சிமொழிப் பிரச்சனைக்குத் தீர்வு காண அரசாங்கம் நினைத்தால், நமது அரசமைப்பில் இந்தியைத் தான் ஆட்சிமொழியாக இடம் பெறச் செய்ய வேண்டும். அரசிற்கு அதில் ஐயமேற்படின், வேண்டு மென்றால் அதற்கொரு பொது ஜன வாக்கெடுப்பும் நடத்தலாம். 100-க்கு 90 மக்கள் இந்தியை ஆதரித்தே வாக்குச் செய்வார்கள்'' என்றும் சேத் கோவிந்ததாஸ் அவர்கள் மத்திய அரசிற்குச் சவால் விட்டார்,

11-8-1949-ஆம் நாளில் ''அரசமைப்புச் சபைக் காங்கிரஸ் கட்சி'' ஆட்சி மொழி பற்றி விவாதித்தது. ''இந்தியே ஆட்சி மொழியாக இருக்க வேண்டும்'' என அவர்கள் முடிவு செய்த னர். ஆனால், அதனைச் சார்ந்த பல துணைப் பிரச்னைகளில் ஒருமுகமான முடிவு ஏற்படவில்லை.

'இந்தி ஆட்சி மொழியாக ஆகுமா' என்ற விவாதம், 1949 ஆகஸ்டு 22, 23, 24 ஆகிய தேதிகளில் தொடர்ந்து நடைபெற்றன. காங்கிரஸ் கமிட்டிக் கூட்டங்களிலும், இந்தி தான் ஆட்சிமொழி என்பதைப் பரவலாக ஒத்துக் கொண்டார் கள். ஆனால் 'ஆங்கிலம் எதுவரை நீடிப்பது?' என்ற பிரச்சனை யில்தான் இறுதி முடிவு ஏற்படவில்லை.

ஆட்சி மொழி பற்றிய விவாதம் அரசமைப்புச் சபையில் நடந்த பின்னர் வாக்கெடுப்புக்கு விடப்பட்டது. வாக்குகள் 74-க்கு 74 என்று சமமாகப் பிரிந்து நின்றன. வாக்கு எண்ணிக்கை தொடங்கிய போது 75 வாக்குகள் இந்திக்கே ஆதரவாகக் கிடைக்கும் என இந்தி வெறியர்கள் கூறினார்கள். காரணம்—அரசமைப்புச் சபைத் தலைவர், திரு, இராசேந்திரப் பிரசாத் அவர்கள் தனக்கிருக்கும் இரண்டாவது வாக்கையும் இந்திக்கு ஆதரவாகப் போடுவார் எனக் கருதினர். எனினும் சம வாக்குகள் கிடைத்திருப்பதால்,சபை, அதனை நிறைவேற்ற வில்லை. அதற்காக முப்பெரும் தலைவர்களைக் கொண்ட ஓர் உயர்மட்டக் குழுவை அமைக்க வேண்டுமென உறுப்பினர்கள் யோசனை கூறினார்கள்.

இறுதியாக, 1949-ஆம் ஆண்டு செப்டம்பர் 12, 13, 14 ஆகிய நாட்களில் அரசமைப்புச் சபையில் ஆட்சி மொழி பற்றிய விவாதம் கட்சிக் கட்டுப்பாட்டினையும் கடந்து நின்று உணர்ச்சி பொங்க மீண்டும் நடைபெற்றது. அரசியல் அமைப்புச் சபை வரலாற்றிலேயே முதன் முறையாக 290 உறுப்பினர்களில் 210 பேர் அரசமைப்புச் சபையில் கூடியிருந்தனர். ''இந்தி வேண்டுவோர்'', மற்றும் ''இந்தி வேண்டா மென்போர்'' ஆகிய இரு தரப்பினரும் இறுதியான இந்தி விவாதத்திற்குப் பதினைந்து நாட்களுக்கு முன்பிருந்தே அவரவர் கொரடாக்களை நாடு முழுவதும் அனுப்பி, அரசமைப்புச் சபை உறுப்பினர் களைப் பிடித்து வந்து டெல்லியில் சேர்த்தனர். 300-க்கும் மேற்பட்ட திருத்தங்கள் அரசமைப்புச் சபையில் தாக்கல் செய்யப்பட்டன. மொழித் தேசியத்தால் உந்தப்பட்ட உறுப் பினர்கள், தீவிர உணர்ச்சியோடு இயங்கிக் கொண்டிருந்தனர்.

அபுல்கலாம் ஆசாத், பாபு இராசேந்திர பிரசாத், பண்டித நேரு போன்ற பெருந் தலைவர்கள், உறுப்பினர்களின் மொழி உணர்வை அரசமைப்புச் சபையில் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டு மென்று அடிக்கடி எடுத்துக் கூறினர்கள். ஆனால் உறுப்பினர்களின் மொழித் தேசிய உணர்விற்குத் தடைபோட அவர்களால் முடியவில்லை.

ஆட்சிமொழி பற்றிய விவாதம் 12-9-1949, 13-9-1949 ஆகிய இரு நாட்களிலும் தொடர்ந்து நடந்தேறியது.

தமிழகத்தைச் சேர்ந்த, கோவை. இராமலிங்கம் செட்டியார் அவர்கள் வடபுலம் தென்னகத்தின் மீது ஆதிக்கம் செலுத்து கிறது என்பதைச் சுட்டிக் காட்டிப் பேசும்போது,

> ''இந்தி பேசும் மக்கள் தங்கள் ஆதிக்கத்தை விட்டுவிட வேண்டும் என்று மீண்டும் நான் வேண்டிக் கொள்கிறேன்... தென்னகம் மனமுடைந்து போயிருக்கிறது. விடுதலையையும், தன்னுரிமைகளையும் பெற்று விட்டதாக இங்குள்ளவர்கள் உணர்கிறார்கள். ஆனால், தென்னகத்தில் அந்த உணர்வு தென்படவில்லை. நாட்டின் வடகோடியிலுள்ள தலைநகருக்கு நாங்கள் வந்தால் இந்த நாட்டுப் பகுதிக்கு, முற்றிலும் அயல் நாட்டவர்களைப் போல நாங்கள் உணர்கிறோம். நாம் எல் லாரும் ஒரே நாட்டைச் சேர்ந்தவர்கள் என்ற எண்ணமும் இந்த நாட்டிலிருப்பதெல்லாம் நமக்கும் சொந்தமானவை என்ற மனப்பான்மையும் இந்த முழு நாடே நமது நாடு என்ற உணர்வும் எங்களுக்கு ஏற்படவில்லை. தென்னகத்தைச் சார்ந்தவர்களும் ''நாட்டுப் பணிகளோடு தொடர்பு கொண்ட வர்கள்'' தான் என்ற உணர்வினைத் தென்னகத்திற்கு உணர்த்துவதற்குரிய நடவடிக்கைகள் எடுக்கப்பட்டா லொழிய, தென்னக மக்கள் திருப்தி யடைய மாட்டார்கள். ஒரு கசப்புணர்ச்சி நிலவுகிறது. அது எதில் கொண்டு போய் விடும் என்று என்னால் தற்போது சொல்வது எளிதல்ல.''7

என்று தென்னகத்தின் உண்மை நிலையைப் படம் பிடித்துக் காட்டினார்.

---

7 C. A. D. Pp. 1371 - 1373. Quoted from ''India's Language Crisis'' (1965), P. 27. ''Harijan'' (21-8-1937) by Mr. Mohan Kumaramangalam.

14-9-1949-ஆம் நாள் மாலை 5 மணிக்கு 'இறுதி வாக்கெடுப்பு' நாள். இதற்கிடையில், அன்று மாலைப் பொழுதில் ஆட்சி மொழி பற்றி இரு வேறு பிரிவினர்க்குமிடையில் சமரசம் ஏற்பட்டுவிட்டதாக அறிவிக்கப்பட்டது. அதனால் அரசமைப்புச் சபையை 30 மணித் துளிகள் ஒத்தி வைக்க வேண்டுமெனவும் கோரப்பட்டது. எனவே, அன்று மாலை 6 மணிக்கு மீண்டும் சபை கூடியது. இந்தி வேண்டும் என்பாருக்கும் ஆங்கிலம் தொடர வேண்டும் என்பாருக்கும் ஏற்பட்ட சமரசத்தின் அடிப்படையில் தரப்பட்ட பல திருத்தங்கள் அரசமைப்புச் சபையில் ஏகமனதாக ஏற்றுக் கொள்ளப்பட்டன. வாக்கெடுப்பும் நடைபெறவில்லை. இறுதியில் ''இந்தியும்'' அரியணை ஏறிவிட்டது.

அந்தச் சமரசத்தின் சாரம் தான் இன்றைய இந்திய அரசமைப்புச் சட்டத்தின் XVII-ஆம் பகுதியின் 343 முதல் 351 வரை உள்ள சட்டவிதிகளாக வரையப்பட்டன.

அரசியலமைப்புச் சபையில் ஆட்சி மொழியைப் பற்றி நடைபெற்ற இத்துணை நடவடிக்கைகளும் இந்தி ஆட்சி மொழி ஆவதா? வேண்டாமா? என்பதை முடிவு செய்வதற்காக நடைபெற்றவை யல்ல. இந்தி தான் ஆட்சிமொழி என்பதை அனைவரும் ஏற்றுக் கொண்டனர். ஆனால் ஆங்கிலம் எதுவரை நீடிக்க வேண்டும் என்பதில் தான் கருத்து வேற்றுமைகள். அதனை முடிவெடுக்கத் தான் இத்துணை நிகழ்ச்சிகளும், கோரிக்கைகளும் திருத்தங்களும், அரசமைப்புச் சபையில் நடைபெற்று முடிந்தன. இந்தி பற்றிய அரசியலமைப்புச் சபை விவாதம் வாக்கெடுப்பில்லாமல் சமரசமாய் முடிந்த பின்னர், அரசமைப்புச் சபைத் தலைவரான பாபு இராசேந்திர பிரசாத் அவர்கள்,

> ''பல நூற்றுண்டுகளுக்குப் பின்னர் நமது வரலாற்றிலேயே முதன் முறையாக இப்போது தான் இந்திய நாடு முழுவதிலும் எல்லா அரசு நடவடிக்கைகளுக்கும் பயன்படுத்துவதற்காக ஒரே மொழியை நாம் ஏற்றுக் கொண்டிருக்கிறோம்.'' 8

என அகம் மகிழ்ந்து, முகம் மலர்ந்து கூறினர்.

இந்தியத் துணைக் கண்டம் முழுவதற்குமாகப் பயன்படுத்தக் கூடிய ஒரு (தேசிய) ஆட்சி மொழி இந்திய வரலாற்றில் எக்காலத்தும் இருந்ததில்லை என்பது இதிலிருந்தே புரியவில்லையா?

8 C. A. D. Vol XI, P. 992. Quoted From Ibid. Opp. Cited, Note. 4, P. 800

ஆனால் சுதந்திர இந்தியாவின் அரசமைப்பில்தான் அகில இந்தியாவிற்கு முரிய ஒரே ஒரு தேசியமொழி, அதாவது "இந்திமொழி" ஆட்சி மொழி என்ற தகுதியைப் பெற்றுக் கொண்டதால் அரியணையில் அமர்த்தப்பட்டு விட்டது.

அரசமைப்புச் சபை நிகழ்ச்சிகளை ஆய்ந்து பார்த்தால் இந்தி ஆட்சி மொழியாகக் கூடாது என்று பொதுவாக யாருமே வலியுறுத்திப் போராடவில்லை என்பது புலனாகிறது. ஆனால், ஆங்கிலத்தைச் சில காலம் இடைக்கால ஏற்பாடாக நீடித்து வைப்பதற்காகவே இத்துணை வேதனைகளையும் விரக்தியையும் அரசமைப்புச் சபையிலிருந்த தென்னகத்தைச் சார்ந்த உறுப்பினர்கள் தாங்க வேண்டியிருந்த தென்றால் — அதற்காகத் தங்கள் வலிமை முழுவதையும் பயன்படுத்திப் போரிட வேண்டிய நிலை இருந்த தென்றால் — அரசமைப்புச் சட்டத்தில், "மாநில சுயாட்சி" மற்றும் "மத்திய மாநில உறவுகள்" பற்றிய சட்டவிதிகள், யாராலும் எதிர்க்க இயலாத நிலையில் எவ்வளவு எளிதாக ஏற்றப்பட்டிருக்கும் என்பதை நமது உள்ளுணர்வுகள் தெளிவாக எடுத்து உணர்த்துகின்றன.

சுருங்கக் கூறின் மத்திய அரசு ஆண்டானாயிற்று; மாநிலங்கள் அடிமைகள் ஆயின. தாய் மொழி உரிமை பறிபோனதால் முழு மாநில சுயாட்சியும் வெறும் கானல் நீர் ஆகி விட்டது.

## IV

## அரசமைப்பின் இந்தி விதிகளும் — ஆதிக்கமுள்ள இந்திய அரசும்

### ஆட்சி மொழி பற்றிய அரசமைப்புச் சட்டவிதிகள்

நமது அரசமைப்புச் சட்டத்தில், 120–ஆம் சட்டவிதியும் 210–ஆம் சட்டவிதியும் மற்றும் XVII–ஆம் பகுதியில் உள்ள 343 முதல் 351–ஆம் வரையுள்ள சட்டவிதிகளும் "ஆட்சி மொழி" பற்றிப் பேசுகின்றன.

நாடாளு மன்றத்தினுடைய நடவடிக்கைகள் நடைபெற வேண்டிய மொழி குறித்து, சட்டவிதி 120 மாநிலச் சட்ட மன்றத்தின் நடவடிக்கைகள் நடபெற வேண்டிய மொழி குறித்து, சட்டவிதி 210 ஆகியவை தெளிவு படுத்துகின்றன.

நாடாளு மன்றத்தில், இந்தி மொழியுடன் ஆங்கிலமும் தொடர்ந்து பயன்படுத்தப் படலாம். மாநிலச் சட்ட மன்றத்தில் அந்தந்த மாநில மொழியோடு ஆங்கிலமும் தொடர்ந்து பயன் படுத்தலாம்.

### *XVII*-ஆம் பகுதி

அரசமைப்புச் சட்டத்தின் XVII-ஆவது பகுதி மொத்தம் நான்கு அத்தியாயங்களைக் கொண்டது.

முதல் அத்தியாயம், ''மத்திய அரசாங்கத்தினுடைய மொழியினைப்'' பற்றி விளக்குகிறது (சட்டவிதி 343, 344).

மாநில ஆட்சி மொழிகள் குறித்தும் ஒரு மாநிலத்திற்கும் இன்னொரு மாநிலத்திற்கும் இடையிலும் மற்றும் மாநிலத்திற்கும்—மத்திய அரசிற்குமிடையிலும் நடைபெறும் செய்திப் போக்கு வரத்தில்,பயன்படுத்த வேண்டிய மொழி குறித்தும் ''பிராந்திய மொழிகள்''என்ற தலைப்பில் இரண்டாவது அத்தியாயம் தெளிவு படுத்துகிறது. (சட்டவிதிகள் 345, 346, 347).

மூன்றும் அத்தியாயத்தில் தலைமை நீதி மன்றத்திலும், மாநில உயர்நீதி மன்றங்களிலும் பயன் படுத்தப்பட வேண்டிய மொழி குறித்தும், மாநிலச் சட்ட மன்றங்களில் நிறைவேற்றப்படும் சட்டங்களில் பயன் படுத்தப்படும் மொழி பற்றியும் குறிப்பிடப் பட்டுள்ளது. (சட்டவிதிகள் 348, 349).

நான்காம் அத்தியாயம், மொழிகள் பற்றிய சிறப்புக் கட்டளைகளைப் பிறப்பிப்பது பற்றிப் பேசுகின்றது. (சட்டவிதிகள் 350, 350-ஏ, 350பி, மற்றும் 351).

மேற்சொன்ன நான்கு அத்தியாயங்களில் சொல்லப்பட்ட ஆட்சி மொழி பற்றிய சட்டவிதிகளின் சாரம் :—

1. இந்தி மொழியே இந்தியாவின் ஆட்சி மொழி.

2. ஆனால்,இந்திய அரசமைப்புச் சட்டம் அமுல்படுத்தப்படும் காலத்திலிருந்து,(26—1—1950) 15 ஆண்டு காலத்திற்கு, ஆங்கிலமும் தொடர்ந்து பயன் படுத்தப்படும்.

3. அந்தப் பதினைந்து ஆண்டு காலக் கெடுவிற்குள் மத்திய அரசின் காரியங்களில், ஆங்கில மொழியோடு இந்தி மொழியையும் வளமாகப் பயன் படுத்துவதற்குரிய ஆணைகளைக் குடியரசுத் தலைவர் பிறப்பிக்கலாம்.

4. அரசமைப்புச் சட்டம் அமுலுக்கு வந்த 15 ஆண்டுகளுக்குப் பின்னர் ( 1965-ஆம் ஆண்டு ), தேவை யேற்பட்டால் ஆங்கில மொழியையும் தொடர்ந்து பயன்படுத்துவதற்குரிய சட்ட மொன்றை நாடாளுமன்றம் இயற்றி அரசுக் காரியங்களுக்காக ஆங்கில மொழியையும் பயன்படுத்த ஏற்பாடு செய்யலாம்.

5. அரசமைப்புச் சட்டத்தின், தொடக்க காலத்திலிருந்து முதல் 5 ஆண்டுகள் முடிவிலும்; மீண்டும் 10 ஆண்டுகள் முடிவிலும் " ஆட்சி மொழி ஆணைக் குழுவை " (Official Language Commission) குடியரசுத் தலைவர் நியமிக்க வேண்டும். அந்த "ஆட்சி மொழி ஆணைக்குழு" ஆங்கில மொழியின் பயனை எந்தெந்த வகையில் கட்டுப்படுத்தலாம் எனவும், இந்திமொழியை எந்தெந்த வகையில் மென்மேலும் பயன்படுத்த வேண்டும் எனவும் பரிந்துரைகளைச்செய்யும்.

6. " ஆட்சி மொழி ஆணைக் குழு " செய்யும் பரிந்துரைகளை ஆராய்வதற்காக, மக்களவை உறுப்பினர்கள் 20 பேரையும் மாநிலங்களவை உறுப்பினர்கள் 10 பேரையும் ஆக மொத்தம் 30 நாடாளுமன்ற உறுப்பினர்களைக் கொண்ட ஒரு "நாடாளு மன்றக் குழு" (Parliamentary Committee) விகிதாசாரப் பிரதிநிதித்துவ அடிப்படையில் முறையே மக்களவையாலும், மாநிலங்களவையாலும் தேர்ந்தெடுக்கப்படும். "நாடாளு மன்றக் குழு" ஆட்சிமொழி ஆணைக் குழு செய்த பரிந்துரைகளைப் பரிசீலனை செய்து, தனது கருத்தினைக் குடியரசுத் தலைவருக்கு வழங்கும். அந்தப் பரிந்துரைகளை ஒட்டி, குடியரசுத் தலைவர், உரிய கட்டளைகளைப் பிறப்பிக்கலாம்.

7. ஒரு மாநில அரசு, அந்த மாநிலத்திலிருக்கும் ஒரு மொழியையோ, அல்லது இந்தியையோ, அந்த மாநிலத்தின் ஆட்சி மொழியாக ஆக்கிக் கொள்ளலாம். ஆனல் அந்த மாநிலச் சட்ட மன்றம் வேறு வகை ஏற்பாடு ஒன்றைச் செய்யும் வரை, ஆங்கில மொழியே தொடர்ந்து அம் மாநிலத்தில் பயன் படுத்தப்பட வேண்டும்.

8. ஒரு மாநிலத்திற்கும் இன்னொரு மாநில்த்திற்குமிடையே யும், மாநிலத்திற்கும் மத்திய அரசிற்குமிடையேயும் பயன் படுத்தக்கூடிய மொழி பற்றி அவ்வப்போது சட்டத்தால் நிர்ணயிக்கப்பட வேண்டும்.

9. நாடாளுமன்றம் வேறுவகை ஏற்பாடு செய்யும் வரை இந்தியத் தலைமை நீதிமன்ற (Supreme Court of India) நடவடிக்கைகளும் மாநிலங்களின் உயர்நீதி மன்ற (High Court) நடவடிக்கைகளிலும் ஆங்கிலமே பயன்படுத்தப்பட வேண்டும்.

10. 15 ஆண்டுகள் முடிவடைந்ததும் ஒரு நாடாளு மன்றச் சட்டத்தின் மூலமாக, நீதி மன்ற நடவடிக்கைகளில் இடம் பெறும் ஆங்கிலத்தை அகற்றி விடலாம்.

11. இந்த 15 ஆண்டு காலக்கெடு முடிவதற்கு முன்னுல்,மாநில உயர் நீதி மன்ற நடவடிக்கைகள் யாவும் இந்தியிலோ அல்லது பிரதேச மொழிகளிலோ, நடைபெறுவதற்குரிய சட்ட மொன்றை வேண்டுமானுல் நாடாளு மன்றம் இயற்ற லாம். ஆனுல் அச்சட்டத்திற்குக் குடியரசுத் தலைவரின் முன் ஒப்புதல் தேவை.

12. மாநிலச் சட்ட மன்றங்களின் நடைமுறைகளும், விவாதங் களும் இந்தியிலோ, அல்லது மாநில மொழிகளிலோ இருக்கலாம். ஆனுல், மாநிலச் சட்டத்தின் அதிகாரப் பூர்வமான வாசகங்கள் ஆங்கிலத்திலேயேஇருக்கவேண்டும். நாடாளு மன்றத்தில், கொண்டு வரப்படும் மசோதாக் களும், சட்டங்களும் ஆங்கிலத்திலிருக்க வேண்டும்.

13. மொழிச் சிறுபான்மையினரின் குழந்தைகளுக்குத் தொடக்க நிலைக் கல்வி,தாய்மொழியில் கற்பிக்கப் படுவதற் குரிய கட்டளைகளைக் குடியரசுத் தலைவர் பிறப்பிக்கலாம், அதற்குரிய அதிகாரிகளையும் நியமிக்கலாம்.

14. இந்தி மொழியை வளர்ப்பதற்கும் பரவச் செய்வதற்கும் வளப்படுத்துவதற்கும் தேவையான நடவடிக்கைகளை மத்திய அரசு மேற்கொள்ள வேண்டும்.

15. அரசமைப்புச் சட்டத்தின் எட்டாவது இணைப்பில் (VIII Schedule) கண்டுள்ள (1) அசாம், (2) வங்காளி, (3) குசராத்தி; (4) இந்தி; (5) கன்னடம்; (6) காஷ்மீர்; (7) மலையாளம்; (8) மராத்தி; (9) ஒரியா; (10) பஞ்சாபி; (11) சமஸ்கிருதம்; (12) தமிழ்; (13) தெலுங்கு; (14) உருது ஆகியவை இந்திய நாட்டின் தேசிய மொழிகளாக (National Languages) இருக்கும்.

குறைபாடுகள்

1. வளமில்லாத இந்தி மொழி வரலாற்றிலேயே முதன் முதலாக ஆட்சி மொழியாக்கப் பட்டது. ஆனல் பதினைந்தாண்டு காலத்திற்கு (இந்தி மொழி வளம் பெறுவதற்காக) ஆங்கிலமே தொடர்ந்திருக்க வேண்டுமென்ற இடைவெளியும் கொடுக்கப் பட்டது.

2. ஆட்சி மொழித் தகுதியைப் பெற்ற இந்தி, 14 தேசிய மொழிகளிலும் ஒன்ருக்கப் பட்டது. எனவே ஆட்சி மொழியான இந்தி மொழியை விரிவு படுத்துவதற்கும் வளப் படுத்துவதற்கும் மத்திய அரசு செலவு செய்யும். அது போக,தேசியமொழி என்ற அடிப்படையிலும் மற்றத் தேசிய மொழிகளின் ஆக்கத்திற்குத் தனியாகச் செய்யப்படும் பங்குத் தொகையும் இந்தி பெற்றுக் கொண்டிருந்தது. ஆனல்,அண்மையில் அந்தச் சலுகை நீக்கப்பட்டு விட்டது.

3, மாநில மொழிகள் அந்தந்த மாநிலங்களின் ஆட்சி மொழிகளாக ஆக்கப்படுவதற்குரிய கால வரையறை அரசமைப்பில் செய்யப்பட வில்லை. அவைகளின் வளர்ச்சிக்குரிய தனிக் கட்டளைகள் பற்றியும் அதில் குறிப்பிடப்படவில்லை.

விளைவுகள்:—

1950–ஆம் ஆண்டு முதல் இந்தி பேசும் மாநிலங்கள் தமது அரசாங்க நடவடிக்கைகளிலும் நீதிமன்றங்களிலும் கல்வித் துறையிலும் இந்தி மொழியை 'ஆட்சிமொழி' என்ற அடிப் படையில் நேரடியாகப் பயன்படுத்தி வளர்ச்சி பெறுகின்றன. அ∴தாவது இந்தி பேசும் மாநிலங்களில், ஆங்கிலம் வகித்து வந்த இடத்தை, இந்தி மொழி கைப்பற்றிக் கொண்டது.

ஆனால், இந்தி அல்லாத வேற்று மொழிகளைப் பேசும் மாநில மக்கள், இந்தியையும் ஏற்றுக் கொள்ள முடியாமல் ஆங்கிலத்தையும் அகற்ற முடியாமல், தாய் மொழியையும் ஆட்சி மொழியாக ஆக்க முடியாமல் இருதலைக் கொள்ளி எறும்பு போல் கையறு நிலையில் தவிக்கின்றனர். அதனால் அம்மக்கள் தத்தம் தாய் மொழி வளர்ச்சியையும் இழந்து நிற்கின்றனர்; அத்தோடு ஆங்கிலத்தையும் கட்டாயமாக இருத்தி வைத்துக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தத்திற்கும் ஆளாக்கப்படுகின்றனர்.

எனவே, சென்ற 24 ஆண்டுகளில் இந்தி மொழி பெற்ற வளர்ச்சியையும் இந்தி பேசும் மாநிலங்களிலுள்ள மாணவர்கள் பெற்ற வளர்ச்சியையும் இந்தியல்லாத வேற்று மொழி பேசக் கூடிய மாநிலங்களும் அம்மாநில மாணவர்களும் பெற முடியவில்லை என்பது கண்கூடு. ஒரு புறம் சில மாநிலங்களில் இந்தி வளர்ந்து கொண்டே வருகின்றது. தம் தாய்மொழி (இந்தி)யில் கல்வி பயிலும் மாணவர்களும் வளர்ந்து கொண்டே வருகின்றனர். இன்னொருபுறம் இந்தியைத் தாய்மொழியாகக் கொள்ளாத மாணவர்கள், இந்தியோடு போட்டியிட முடிவதில்லை. ஏனெனில் அவர்கள் தமது மேல்கல்வியைத் தாய்மொழியிலேயே பயிலுவதற்கு வாய்ப்பேற்படுவ தில்லை. மாறாக மேற்படிப்புகளையெல்லாம் ஆங்கிலத்திலேயே படித்து வருகின்றனர்.

இந்தி பேசா மாநிலங்கள், பல போராட்டங்களின் மூலமாகவும் இந்தி எதிர்ப்புப் புரட்சியின் வாயிலாகவும், ஆங்கில நீடிப்பைத்தான் பெற்றுக் கொள்ள முடிந்ததே யன்றி, தமது தாய் மொழியை வளர்த்துக் கொள்ள முடிய வில்லை; அம்மாநிலங்கள் தம் அரசுத் துறை நடவடிக்கைகளிலும் கல்வியிலும் தாய்மொழியைப் பயன் படுத்திக் கொள்வதற்கு வழியேற்பட வில்லை:

தேசிய மொழிகளின் (மாநில மொழிகள்) வளர்ச்சிக்காக சில தனிப்பட்ட நிறுவனங்களுக்கு நிதி உதவியையும், குறிப்பிட்ட சில மானியத் தொகைகளையும் மட்டுமே மத்திய அரசு வழங்குகிறது. கல்லூரிகளின் பாடப் புத்தகங்களை உருவாக்குவதற்கும் சில தனித் திட்டங்களைத் தீட்டுவதற்கும் மாநில அரசுகளுக்கு, சொற்ப நிதியை மட்டுமே மத்திய அரசு வழங்கி வருகிறது.

ஆனால் ''ஆட்சி மொழி'' என்ற தகுதியில், இந்தி மொழி வளர்ச்சிக்காகவும் அதனை அகில இந்திய மட்டத்தில் தீவிர மாகப் பரப்புவதற்காகவும் பல கோடி ரூபாய்களை மத்திய அரசு பல திட்டங்களின் மூலமாகச் செலவு செய்கிறது.

அவையாவன:—

## இந்தியை வளப்படுத்தும் மத்தியத் திட்டங்கள்

1. தனிப்பட்ட இந்தி நிறுவனங்களுக்கு (Hindi Institutions), தரப்படும் மானியங்கள்.

2. சட்டச் சொற்களல்லாத, வேறு சொற்களையும் சொற்றொடர்களையும் உருவாக்குவதற்காகவும் தற்போது இருக்கும் சொற்களைப் புனர்பரிசீலனை செய்து ஒழுங்கு படுத்துவதற்காகவும் உரிய சில திட்டங்கள்.,. அதற்குரிய அமைப்புக்கள்... செலவு தொகைகள்.

3. இந்தி டெலிபிரிண்டர்களை (Tele Printers)யும் தட்டெழுத்துப் பலகைகளையும் சீர்மைப்படுத்தி, முறைப்படுத்துவதற்கான திட்டங்கள்.

4. இந்திச் சுருக்கெழுத்துக்கள் (Short hand) முறையை உருவாக்கி வளர்க்கும் திட்டங்கள்.

5. இந்தி பேசாத பகுதிகளிலுள்ள இந்தி ஆசிரியர்களுக்கான பயிற்சிக் கல்லூரிகளை அமைக்கும் திட்டம்.

6. இந்தி அகராதிகளைத் தயாரித்தல்.

7. இந்தி மொழியின் லிங்குவாபோன் ரிக்கார்டுகளையும் Linguaphone Records) டேப்புகளையும் (Taps) இந்தி மொழியில் பாடங்களையும் புது முறையில் தயாரித்தல்.

8. இந்தி மொழி இலக்கியத்திற்குச் சேவை செய்யும் வகையில் ''பாஷா'' என்ற 3 மாதத்திற் கொருமுறை வெளியிடப்படும் ஏட்டையும் ''இந்தி சமாச்சார் ஜகத்'' என்ற மாதாந்திரப் பத்திரிகையையும் வெளியிடுதல்,

9. வெளி நாட்டு மக்களுக்கான பல இந்தி வெளியீடுகள்.

10. இந்தி மொழி மூலமாக, தென்னிந்திய மொழிகளைக் கற்றுக் கொள்வதற்காகத் தானே கற்பிக்கும் நூல்கள் (Self Taught Books).

11. இந்தி பேசாத பகுதிகளைச் சேர்ந்த இந்தி எழுத்தாளர்களுக்குப் பரிசுகளை வழங்கும் திட்டங்கள்.

12. இந்தி பேசாத பகுதிகளிலும் வெளிநாடுகளிலும் இந்தி மொழியைக் கற்கும் மக்களுக்கு அஞ்சல்துறை மூலமாக இலவசமாக இந்திக் கல்வி பயிற்றுவிக்கும் திட்டங்கள்.

13. தனிப்பட்ட பதிப்பகங்களுடன் சேர்ந்து, இந்திப் புத்தகங்களை வெளியிடுதல்.

14. இந்தி பேசா மாநிலங்களிலுள்ள பள்ளிகள், கல்லூரிகள், நூல் நிலையங்கள் ஆகியவற்றிற்கு இலவசமாக இந்திப் புத்தகங்களை வழங்குதல்.

15. வெளிநாடுகளில் இந்தியைப் பரப்பும் திட்டங்கள்.

16. மத்திய அரசாங்க ஊழியர்களுக்கு இந்தி மொழி கற்றுக் கொடுப்பதற்கான தீவிரத் திட்டங்கள்.

17. இந்தியைக் கற்பிப்பதற்கான பயிற்சி முறைகளை ஆராய்வதற்கான ஆராய்ச்சி நிலையங்கள்.

18. இரண்டாம் மொழியாக, இந்தியைக் கற்பிப்பதற்குரிய இந்தி மொழி சார்ந்த முக்கிய கருவிகளை உருவாக்குதல்.

19. இந்தி பேசாத மாநிலங்களிலுள்ள ஆசிரியர்களுக்கு ஆக்ராவிலிருக்கும் ''கேந்திரீய இந்தி சம்மேளனம்'' மூலமாகப் பயிற்சி அளித்தல்.

20. கல்லூரிப் பாடப் புத்தகங்களை இந்தியில் தயாரித்து வழங்குதல்.

இத்துணை வகைத் திட்டங்களுக்காகும் செலவுகளையும் மத்திய அரசே ஏற்றுக் கொள்வதுடன், அதன் நேரடிக் கண்காணிப்பிலும் இந்த அமைப்புகளை மத்திய அரசு இயக்கிவருகிறது. சென்ற 24 ஆண்டுகளில், இந்தி மொழி பெற்ற வளர்ச்சியை, வேறெந்த இந்திய மொழியும் பெறவில்லை. அதற்குக் காரணம் மத்திய அரசின் திட்டங்களும் மானியங்களும் தொகை வழங்குதலும் என்பதை யாரும் மறுக்க முடியாது.

மற்ற மாநில மொழிகளுக்கு இழைக்கப்படும் மொழி அநீதிக்கு இந்திய அரசமைப்புச் சட்டமும், தற்போதுள்ள மத்திய அரசுமே மூல காரணங்கள். இந்தி பேசும் மாநில மக்களை

முதல் தரக் குடிமக்களாகவும் இந்தி பேசா மாநில மக்களை இரண்டாந்தரக் குடிமக்களாகவும் நமது இந்திய அரசு ஆக்கி வைத்துள்ளது.

மொழித்துறையில் இந்தி பேசா மாநிலங்களின் சுயாட்சி யுரிமைகள் திட்டமிட்டுச் சுருக்கப்பட்டு விட்ட தென்பதற்கு, இதனைக் காட்டிலும் வேறு சான்றென்று வேண்டுமோ?

## V

## நேருவின் உறுதிமொழி
## தி. மு. க. வின் வெற்றி

அரசமைப்புச் சட்டவிதிகளுக்கேற்ப ஆட்சிமொழி ஆணைக் குழுவால் செய்யப்பட்ட பரிந்துரைகளைப் பரிசீலனை செய்வதற்காக, ''நாடாளு மன்ற ஆய்வுக்குழு'' (Parliamentary Committee) தேர்ந்தெடுக்கப்பட்டது. அக்குழுவில் மக்கள் சபை உறுப்பினர்கள் 20 பேரும், மாநிலங்களவையைச் சேர்ந்த உறுப்பினர்கள் 10 பேரும் ஆக மொத்தம் 30 உறுப்பினர்கள் அங்கம் வகித்தனர். ஆட்சி மொழி ஆணைக்குழு செய்த எல்லாப் பரிந்துரைகளையும் ''நாடாளு மன்ற ஆய்வுக் குழு'' அப்படியே ஏற்றுக் கொள்ள வில்லை.

### ஆய்வுக் குழு செய்த சில பரிந்துரைகள்

(i) மத்திய அரசின் பொது ஊழியருக்கான அதிகாரிகளைப் பொறுக்கி யெடுக்கும் தேர்வுகள் (U.P.S.C. Examinations) ஆங்கிலத்திலேயே நடைபெற வேண்டும்.

(ii) ஆங்கிலத்தை இப்போதைக்கு அகற்றக் கூடாது; இன்னும் சில காலம் கழித்து வேண்டுமெனில் இந்தியைக் கொண்டு வரலாம்.

(iii) அத்தேர்வுகள், மற்றத் தேசிய மொழிகளால் எழுதப் படக்கூடிய சாத்தியக் கூறுகளை ஆராய்வதற்கு, ''வல்லுநர் குழு'' (Expert Committee) ஒன்றை அமைக்க வேண்டும்.

(iv) மாநில உயர்நீதி மன்றங்களில், அந்தந்த மாநில மொழிகளோ அல்லது இந்தி மொழியோ இடம் பெற வேண்டும். எவ்வகையான எதிர்ப்பும் இல்லாத சூழ்நிலை

ஏற்பட்ட பின்னுல் மட்டுமே இந்தியத் தலைமை நீதி மன்ற நடவடிக்கைகளில் ஆங்கிலத்திற்கு மாருக, இந்தியை மெல்ல மெல்லப் பயன்படுத்திக் கொள்ள லாம்.

(v) ஆட்சி மொழி ஆணைக்குழு பரிந்துரைத்த இந்தி பற்றிய வேறு பல திட்டங்களை, நாடாளுமன்ற ஆய்வுக் குழு கை விட்டு விட்டது.

### நேருவின் உறுதிமொழி

''நாடாளு மன்ற ஆய்வுக் குழு'' கொடுத்த அறிக்கையை 1959-ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்களில் மத்திய நாடாளு மன்றம் விவாதித்தது. அப்போது பண்டித நேரு அவர்கள் நாடாளு மன்றத்தில் இந்தி வெறியர்களுக்குப் புரியும் வகையில் தந்நிலை விளக்கம் கொடுத்தார்,

''தமிழ், தெலுங்கு, மராத்தி, குசராத்தி போன்ற மாநில மொழிகளே தற்போதுள்ள பள்ளிகளில் போதனுமொழிகளாக உள்ளதென்பதை நாம் மறுக்க முடியாது. இந்தப் புதிய ஏற்பாடு நமது தலைமுறைக்கு முழுவதும் மாருனதோர் எதிர் காலத் தலைமுறையைப் படைக்கப் போகின்றது. தற்போதுள்ள சிக்கல் இந்திமொழியா? அல்லது ஆங்கிலமா? என்பதல்ல, என்பதை நாம் உணர வேண்டும். அது 14 தேசிய மொழி களைப் பற்றிய பிரச்சனை; அல்லது 14-க்கும் மேற்பட்ட அரசியல் சட்டத்தில் சொல்லப்படாத பல மொழிகளையும் சார்ந்த ஒரு பிரச்சனை. அந்த மொழிகளாலேயே தற்போது கல்வி கற்பிக்கப்படுகிறது. எனவே, தவிர்க்க முடியாத நிலை யில் ஆங்கிலம் இரண்டாம் மொழியாக ஆகி விடுகிறது. இனி அது முதன்மைத் தகுதியைப் பெற முடியாது... இந்தி யைக் காட்டிலும் நிறைந்த வளத்தையும் இலக்கியங்களையும் பல இந்திய மொழிகள் பெற்றுள்ளன என்பது என்னுடைய திடமான நம்பிக்கையாகும்...... ஆனுல், நமது நாட்டில், எல்லாருக்கும் தெரியக்கூடிய மொழியாயிருப்பதாலும் நமது நாட்டு மொழிகளில், ஏதோ ஒரு மொழி ஆட்சிமொழியாக ஆக வேண்டு மென்பதாலுமே இந்திமொழி, ஆட்சி மொழி யாகிறது... ஆனுல் அது திணிக்கப்படக் கூடாது... இந்தித் திணிப்பு—கூடாது என்று நான் சொல்வதனுடைய

பொருள் அதுதான். 'சென்னையோ', 'ஆந்திரமோ', 'கேரளமோ', அல்லது வேறு எந்த மாநிலமோ தங்கள் மேல் இந்தி திணிக்கப்படுகிறது எனக் கருதக்கூடிய வகையில் ஒரு மொழியை அம்மாநிலங்களின் மேல் திணிக்க நான் விரும்ப வில்லை. தங்கள் மேல் அழுத்தம் செலுத்தப்படுகிறது அல்லது திணிக்கப்படுகிறது என்று அம்மாநிலங்கள் கருதினால் அம்மொழியை நான் மாநிலங்கள்மேல் திணிக்க விரும்ப வில்லை. திணிக்கப்பட்ட அம்மொழியினை எதிர்த்து அவை செயல்படுகின்றன. தமிழகம் எங்களுக்குக் கட்டாய இந்தி வேண்டாம் எனக் கூறினால் அம்மாநிலப் பள்ளிகளில் கட்டாய இந்தி தேவையில்லை... அவ்வகையில் நாம் சற்று வளைந்து கொடுக்க வேண்டும். அந்தக் காரியங்களில் காலக் கெடு குறிப்பிடப்படுவதை நான் விரும்ப வில்லை. நாம் சில இயக்கங்களையும் வழி முறைகளையும் தொடங்குகிறோம். அவைகள் ஒரு துறையில் செயல்பட வேண்டுமெனவும் முயலுகிறோம். ஆனால், அவை வளரும்போது, நமது குறி யீடுகளைக் கணக்கில் எடுத்துக் கொண்டு, அவற்றைச் சரிக்கட்டிக் கொள்ளுகிறோம்.'' 9

என்று கூறி இந்தி வெறியர்களின் கொட்டத்தை நேரு அவர்கள் அடக்கினார்.

7-8-1959-ஆம் தேதியில் இந்திய நாடாளு மன்றத்தில் பண்டித நேரு அவர்களின் வரலாற்றுப் புகழ் பெற்ற வாக்குறுதி தரப்பட்டது.

''நான் இரண்டு காரியங்களை யோசனையாகக் கூற விரும்பு கிறேன். முதலாவதாக, நான் ஏற்கனவே கூறியபடி, (இந்தி) திணிப்பு இருக்கக் கூடாது. இரண்டாவதாக, முடிவில்லாத கால அளவிற்கு — எவ்வளவு நீண்ட காலம் என்று எனக்குத் தெரியாது — அரசுக் காரியங்களுக்காகப் பயன் படுத்துவதற்கு துணை — இணை — மொழியாக ஆங்கிலம் இருக்கும்... மக்கள் எத்துணைக் காலம் விரும்புகிறார்களோ அதுவரை ஆங்கிலம் மாற்று மொழியாக இருக்கும். அதனைப் பற்றி முடிவெடுப்பதை, இந்தி பேசும் மக்களுக்கு நான் விடமாட்டேன். இந்தி பேசாத மக்களே அந்த இறுதி முடிவை மேற்கொள்வார்கள்.''

9 Quoted From Ibid, Opp. cited, Note. 7. Pp. 50, 51.

## தி. மு. கழகத்தின் வெற்றி

''இந்தி பேசா மாநில மக்களின் அனுமதியைப் பெருமல், ஆங்கிலத்தை அகற்ற மாட்டோம்'' எனவும் ''அதுவரை இந்தியை ஒரே ஆட்சி மொழியாக ஆக்க மாட்டோம்'' எனவும் பண்டித நேரு அவர்கள் உறுதியளித்தார். ஆனல் அந்த உறுதி சட்டவரையறையாக ஆக்கப்பட வில்லை.

இந்தி வெறியர்களைச் சார்ந்திருந்த குடியரசுத் தலைவரான இராசேந்திரப் பிரசாத் அவர்கள், பண்டித நேரு அவர்களின் உறுதியைப் புறக்கணிக்கும் வகையில், இந்தி பற்றிய சில ஆணைகளைப் பிறப்பித்தார். ''ஆட்சி மொழி ஆணைக்குழு'' தந்த ஒரு தலைப்பட்சமான அறிக்கையின் நிழலில் இந்தி வெறியர்கள், தங்கள் ஆதிக்கத்தைப் பலப்படுத்திக் கொள்ள முயன்றனர். இந்தி வெறியர்களின் ஆதிக்கத்திற்குள் செயல்பட்ட குடியரசுத் தலைவர் அவர்கள்,

> ''இந்தி ஆட்சி மொழியாக வந்தே தீரும். அதற்கான ஏற்பாடுகளைத் துவக்க வேண்டும்.''

என அறிவித்தார்.

ஆட்சி மொழிச் சிக்கல் குறித்து, இப்படி முன்னுக்குப் பின் முரணாக நடைபோட்டுக் கொண்டிருந்த மத்திய அரசின் நிலையற்ற கொள்கையைக் கண்ட தமிழக மக்கள் தமிழ் மாநில உரிமைகளும் மொழி உரிமைகளும் பறி போவதை எதிர்த்துப் போராடத் துணிந்தனர்.

1960-ஆம் ஆண்டு சூன் திங்கள் 18, 19 ஆகிய இருநாட்களிலும் குமார பாளையத்தில் கூடிய திராவிட முன்னேற்றக் கழகப் ''பொதுக்குழு'', குடியரசுத் தலைவரின் அறிவிப்பை வன்மையாய்க் கண்டித்ததுடன், ஆகஸ்டு 30-ஆம் நாளுக்குள், அந்த அறிவிப்பைக் குடியரசுத் தலைவர் திருப்பிப் பெற்றுக் கொள்ள வேண்டுமென்றும், இந்தி பேசா மாநில மக்களைக் கலந்தாலோசிக்காமல், இந்தி பற்றி முடிவெடுப்பதில்லை என்று அவர் திட்டவட்டமாக அறிவிக்க வேண்டும் என்றும், இவ்விதமாய்க் குடியரசுத் தலைவர் செய்யத் தவறினல், தென்னகத்தில் விடுதலைப் போரை, திராவிட முன்னேற்றக் கழகம் துவக்கி விடும் எனவும் தீர்மானித்தது. அதற்கான போராட்டக் குழு ஒன்றும் அமைக்கப்பட்டது.

1960–ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் 30-ஆம் நாள் சென்னை கோடம்பாக்கத்தில், பேரறிஞர் அண்ணா அவர்களின் தலைமையில், இந்தி எதிர்ப்பு மாநாடு நடைபெற்றது. அதற்கு முந்தைய நாள் நடைபெற்ற தலைமைச் செயற்குழுவில், தமிழகத்தில் சுற்றுப்பயணம் செய்ய விருந்த, குடியரசுத் தலைவருக்குக் கருப்புக்கொடி காட்ட வேண்டு மென்றும் முடிவு செய்யப்பட்டது. இதற்கிடையில் தலைமையமைச்சர் பண்டித நேருவும் குடியரசுத் தலைவரும், மத்திய உள்துறை அமைச்சரும்,

''இந்தி பேசாத மக்களின் விருப்பத்திற்கு விரோதமாக இந்தியைத் திணிக்க மாட்டோம். ஆங்கிலமே ஆட்சி மொழியாய் நீடிக்கும்; அதற்கான மசோதாவை அண்மையில் நாடாளு மன்றத்தில் கொண்டு வருவோம்.''

என்று அறிவிக்கக் கூடிய பண்டித நேரு அவர்களின் கடிதம் போராட்டக் குழுவிற்குக் கிடைத்ததால், திராவிட முன்னேற்றக் கழகம் இந்திப் போராட்டத்தைப் பற்றிப் புனர் பரிசீலனை செய்தது.

பண்டித நேருவும் பந்த் அவர்களும் குடியரசுத் தலைவரும், நேருவின் வாக்குறுதி கைவிடப்படாது என்ற உறுதியினை வெளிப்படையாக அறிவித்ததாலும், போராட்டமின்றியே வெற்றி கிட்டி விட்டதாலும்,

''மொழிப் பிரச்சனைக்கு ஒரு நல்ல தீர்வு ஏற்பட அரசியல் சட்டம் நிச்சயம் திருத்தப்பட வேண்டும்; அது தான் சிறந்த வழி.''

என்ற கோரிக்கையை முன் வைத்தது–திராவிட முன்னேற்றக் கழகம். அப்போதைக்குப் போராட்டத்தையும் நிறுத்திக் கொண்டது.

ஆட்சி மொழி ஆணைக் குழுவினால் செய்யப்பட்ட பலபரிந்துரைகள் பண்டித நேரு அவர்களின் வாக்குறுதியினாலும் திராவிட முன்னேற்றக் கழகத்தின் போராட்ட அறிவிப்பினாலும், முழுமையாகக் கை விடப்பட்டன.

## VI

## 1963-ஆம் ஆண்டின் ஆட்சி மொழிகள் சட்டம்

## [OFFICIAL LANGUAGES ACT-1963]

அரசமைப்புச் சட்டம் அமுலுக்கு வந்த பின்னர், 15 ஆண்டு காலத்திற்கு ஆங்கிலம் நீடிக்க வேண்டுமென அரசமைப்புச் சட்டவிதி பணித்துவிட்டதால், நடைமுறையில் இந்தி ஆட்சி மொழியாகச் செயல்பட வேண்டிய நிலை, சற்றுத் தள்ளிப் போடப்பட்டு விட்டது. 'ஆட்சிமொழி ஆணைக்குழுவினால்' செய்யப்பட்ட பரிந்துரைகள் இந்தி வெறியர்களுக்கு, சாதகமாகப் பயன் பட்டாலும் தென்னக எதிர்ப்பைத் தாங்க முடியாத பண்டித நேரு அவர்கள் இந்தி பேசா மாநில மக்களுக்குக் கொடுத்த வாக்குறுதியால், இந்தியை மட்டும் ஆட்சி மொழியாக அரியணை ஏற்றும் முயற்சி, மேலும் சில காலம் தள்ளிப் போடப்பட்டு விட்டது. ஆனால், 1965-ஆம் ஆண்டுக்குப் பின்னர், எப்போது வேண்டுமானாலும் இந்தியே ஆட்சி மொழியாக ஆகிவிடும் என்ற பேரபாயம் முழுவதும் நீங்கிவிட வில்லை.

1963-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 13-ஆம் நாளில் "ஆட்சி மொழிகள் சட்ட மசோதாவை" அன்றைய உள்துறை அமைச்சர் மாண்புமிகு. லால்பகதூர் சாஸ்திரி அவர்கள் நாடாளு மன்றத்தில் முன் மொழிந்தார். அதில், 1965-ஆம் ஆண்டிற்குப் பின்னரும் கூட மத்திய அரசினுடைய காரியங்களுக்காக, இந்தியுடன் ஆங்கிலமும் தொடர்ந்து "பயன் படுத்தப்படலாம்" எனக் கண்டிருந்தது. அஃதாவது, 26—1—1965-ஆம் தேதி முதல் இந்தியே ஆட்சி மொழியாகி விடும்; ஆனால் ஆங்கிலம் இந்தியுடன் துணை மொழியாகப் பயன்படுத்தப் படலாம் என்ற பொருளையே அச்சட்டத்தில் பயன்படுத்தப்பட்ட "MAY" என்ற சொல் சுட்டிக் காட்டிற்று. ஆங்கிலம் ஆட்சி மொழியாகத் தொடர்ந்து நீடிக்கும் என்று அதில் அறுதியிட்டு உறுதியாகச் சொல்லப்பட வில்லை.

மேலும் "இந்தி பேசாத மக்களை, கலந்த பின்னர் தான் ஆட்சி மொழி பற்றி முடிவெடுக்கப்படும்," என்ற நேருவின் உறுதி மொழியும், அச்சட்டத்தில் தெளிவாக இடம் பெறவில்லை.

26—1—1965-க்குப் பின்னர், குடியரசுத் தலைவர் ஒப்புதலுடன் மத்திய அரசால் இந்தியில் வெளியிடப்படும் மத்திய அரசுச் சட்டங்கள், ஆணைகள், கட்டளைகள், நெறி முறைகள் ஆகியவை மட்டும்தான் அதிகாரப் பூர்வமானவையா யிருக்கும் மாநிலச் சட்டங்கள் மற்றும் ஆணைகள் ஆகியவை, இந்தியில் மொழி பெயர்க்கப்பட்டு மாநில ஆளுநர் அனுமதியுடன் வெளியிடப்பட வேண்டும். அப்போது தான் அவை அதிகாரப் பூர்வமானவையாகக் கருதப்படும்.

மசோதாவின் மூன்ருவது விதியின்படி, ஆங்கிலத்தின் இடத்தை இந்திமொழி மொத்தமாக ஆக்கிரமித்துக் கொள்கிறது.

1965-ஆம் ஆண்டு செப்டம்பர் முதல் I. A. S. மற்றும் I. P. S. போன்ற தேர்வுகளையும், மத்திய அரசுப் பணிகளுக்கான வேறு தேர்வுகளையும், ஆங்கிலத்தோடு இந்தியிலும் எழுதுவதற்கு அச்சட்டம் வழிவகை செய்தது.

இவை, இந்தி பேசாத மக்களுக்குப் பல சமயங்களில் கொடுக்கப்பட்ட வாக்குறுதிகளை மீறுவதால், இந்தியை மறைமுகமாக் ஆட்சி மொழி ஆக்குவதற்காகச் செய்யப்படும் ஒரு சட்டமாகவே இந்தி பேசா மாநிலங்கள் கருதின. மேலும், அதன் சட்டவிதிகளை அடிப்படையாக வைத்து, ஆங்கிலத்திற்கு மாருக, மெல்ல மெல்ல இந்தியைப் பயன்படுத்தும் வழிவகைகளை மத்திய அரசு மேற்கொண்டு விடும் என்ற ஐயமும், அச்சமும் இந்தி பேசா மாநிலங்களுக்கு மேலோங்கி நின்றன.

எனவே, இந்தி பேசா மாநிலங்களைச் சார்ந்த நாடாளுமன்ற உறுப்பினர்கள், ‘‘1963-ஆம் ஆண்டின் ஆட்சி மொழிகளின் சட்ட மசோதாவை’’ எதிர்த்தனர். நாடாளுமன்றத்தில், எதிர்க் கட்சியாக இருந்த தி.மு.க.வின் தலைவர், இந்தி பற்றித் திராவிட முன்னேற்றக் கழகத்தின் நிலையை விளக்கும்போது,

‘‘நாங்கள் இந்தியை எதிர்க்க வில்லை; இந்தியைக் கட்டாயமாக நுழைப்பதைத் தான் எதிர்க்கிறோம், என்பதை நான் முதலில் தெளிவுபடுத்த விரும்புகிறேன். இரண்டாவதாக, ஆங்கிலம் கால வரையின்றி நீடிக்கப்படல் வேண்டும்...... எனவே, இந்தி மட்டுமே நாட்டினுடைய ஒரே ஆட்சி

மொழியாக இருத்தல் கூடாது. அரசமைப்புச் சட்டத்தில் சொல்லப்பட்டுள்ள 14 தேசிய மொழிகளையும் நாட்டினுடைய ஆட்சி மொழிகள் என்று அறிவிக்க வேண்டும். பிரச்சனையைத் தீர்ப்பதற்கு இது ஒன்று தான் வழி.'' 10

எனத் திட்டவட்டமாக அறிவித்தார்.

ஆனால், இறுதியில் நேருவால் அளிக்கப்பட்ட வாக்குறுதி இடம் பெறுமலேயே இச்சட்டம் நிறைவேறி விட்டது. அதுவரை ஆட்சிமொழி என்ற தகுதியைப் பெயரளவில் பெற்றிருந்த இந்தி, 1965-ஆம் ஆண்டு ஜனவரித் திங்களிலிருந்து உண்மையாகவே ஆட்சி மொழியாகும் நிலையினை 1963-ஆம் ஆண்டுச் சட்டம் வழங்கி விட்டது. நடைமுறையில் எவ்வகை மாற்றமும் இல்லாமல், ஆட்சி மொழியா யிருந்த ஆங்கிலம், 1965-ஆம் ஆண்டு முதல் துணை மொழியாக்கப்பட்டு விட்டது.

இதனால் நடைமுறையில் ஏற்பட்ட விளைவுகள் என்ன?

1. மத்திய அரசு, பல அறிக்கைகளின் மூலமாகவும் தலைவர்களது அறிவிப்புகளின் வாயிலாகவும் 1963-ஆம் ஆண்டின் ஆட்சி மொழிகளின் சட்டத்தால் ஏந்த வகை மாற்றமும் ஏற்பட்டுவிட வில்லை என்று விளக்க முற்பட்டது. ஆனால் இந்தி மொழி பேசக்கூடிய மாநிலங்களுக்கும், மத்திய அரசிற்கும் இடையே யிருந்த கடிதப்போக்குவரத்துக்கள், இந்தி மொழியிலேயே நடைபெற வேண்டியதாயிற்று. மற்ற மாநிலங்கள் மத்திய அரசிற்கு ஆங்கிலத்தில் செய்திகளை அனுப்ப அனுமதிக்கப்பட்டாலும், டெல்லி யிலிருந்து வரக்கூடிய கடிதத் தொடர்புகளில் இந்தி மொழி பெயர்ப்பும் இருந்து வர வேண்டிய தாயிற்று. எனவே, டெல்லியிலுள்ள இந்தி தெரியாத அதிகாரிகள் பல இன்னல்களுக்கு ஆளாக்கப்பட்டார்கள்.

2. அரசுக் கோப்புகளில் (Files) இந்தியிலோ அல்லது ஆங்கிலத்திலோ குறிப்புக்களை வரையலாம். ஆனால், இந்தி தெரியாத அதிகாரிகளுக்கு மட்டும் அக் குறிப்புகளின் ஆங்கில மொழி பெயர்ப்புத் தரப்படும். ஆங்கில மொழி

10. Lok Sabha Debates, Pp. 11677, 11675.

பெயர்ப்புத் தரப்பட வேண்டும் என்பது நடைமுறையில் எவ்வளவு தூரம் பின்பற்றப்பட்டது என்பது ஐயத்திற் குரிய ஒன்றுகும்.

3. உள்நாட்டு அமைச்சகத்திலுள்ள அரசாங்க ஏடுகளின் குறிப்புக்கள் இந்தியிலேயே வரையப்பட வேண்டும் என்ற சுற்றறிக்கைகளும் இன்னேரன்ன வேறு சில சுற்றறிக்கை களும் 1965-ஆம் ஆண்டின் தொடக்கத்திலேயே தரப் பட்டு விட்டன.

4. இந்திரா காந்தியார் பொறுப்பேற்றிருந்த, ''செய்தி மற்றும் வானெலி அமைச்சகத்தில்'', 1965-ஆம் ஆண்டு ஜனவரித் திங்களுக்கு மேற்பட்டுத் தரப்படும் பல சுற்றறிக்கைகள், இந்தியில் மட்டும் இருக்க வேண்டும் என்ற ஆணை பிறப் பிக்கப்பட்டது. மிக முக்கியமானவைகள் எனக் கருதப்படும் சுற்றறிக்கைகளுக்கு மட்டுமே, ஆங்கிலப் பதிப்பும் சேர்த்து அனுப்பப்பட்டது.

அந்த அமைச்சகத்தின் இன்னெரு சுற்றறிக்கையில் அரசுக் கோப்புகளில் (Govt. Files) இந்தியால் குறிப்புகள் எழுதப் பட்ட பின்னர், வேண்டுமானுல் ஆங்கிலக் குறிப்புகள் தரப் படலாம் எனவும் கண்டிருந்தது. ஆங்கில மொழி பெயர்ப்பை நிச்சயமாகத் தந்தாக வேண்டும் என்று அதில் குறிப்பிடப்பட வில்லை.

5. அரசாங்கக் கூட்டங்களிலும் கருத்தரங்குகளிலும் அதிகாரி களின் கருத்துப் பரிமாற்றங்களிலும், முடிந்த அளவிற்கு இந்தியால் பேச வேண்டும் என்ற ஒரு விதியும் செய்யப்பட்டது. இந்தி தெரியாத அதிகாரிகளுக்கு இது குழப்பத்தைக் கொடுத்தது. இந்தி தெரிந்த அதிகாரி கள் அரசாங்கக் கூட்டங்களில் இந்தியிலேயே பேசிக் கொள்வார்களே யானுல், இந்தி தெரியாத அதிகாரிகளின் கதி என்ன ஆவது?

இன்னேரன்ன, பல அரசுக் குறிப்புகளும், விதிகளும் ஆணை களும் மத்திய அரசால் உடனே பிறப்பிக்கப்பட்டன. இந்தித் திணிப்பு நடவடிக்கைகளால் பாதிக்கப்பட்டவர்களின் ஐயத் தையும் போக்குவதற்காக மத்திய அரசு, எந்த முயற்சியும்

மேற்கொள்ளவில்லை. மாறாக, ''இந்தித் திணிப்பு'', ''இந்தி ஆதிக்கம்'' என்று சொல்பவையெல்லாம், ''தவறானதும், நியாய மற்றதும்'' ஆகுமென அப்போதைய தலைமையமைச்சர் மாண்புமிகு. லால்பகதூர் சாஸ்திரி அவர்கள் அவ்வப்போது அறிவித்துக் கொண்டிருந்தார்.

## VII

## எரிமலை வெடித்தது

### எரிமலை குமுறிற்று

*1963*-ஆம் ஆண்டின் ஆட்சி மொழிகளின் சட்டத்தைக் கண்டித்து, தமிழகத்தில் திராவிட முன்னேற்றக் கழகம் இந்தி எதிர்ப்புப் போரைத் துவக்கிற்று. *1963*-ஆம் ஆண்டு ஏப்ரல் இருபத்தொன்பதாம் நாளில் சென்னையில் நடைபெற்ற இந்தி எதிர்ப்புக் கூட்டத்தில், தமிழகத்தின் பல கட்சித் தலைவர்களும் கலந்து கொண்டனர். அப்போது பேரறிஞர் அண்ணா அவர்கள்,

> ''வடக்கே யிருக்கும் இந்தி பேசும் மக்கள்தான் நம்மை ஆட்டிப் படைப்பார்கள். நாம் மூன்றாம்தரக் குடிமக்களாக்கப் படுவோம். இந்திய அரசியல் சட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ள 14 மொழிகளும் ஆட்சி மொழியாவதற்குத் தகுதி வாய்ந்தவை. ஆட்சிமொழி மசோதா, மக்கள் எண்ணத்திற்கு மாறாக நிறைவேறி விட்டது. தென்னக மக்கள் இதைத் தடுத்தே தீர வேண்டும்.''

எனப் போர்க் குரல் எழுப்பினார்.

*1963*-ஆம் ஆண்டு ஜூன் திங்களில் சென்னையில் நடைபெற்ற திராவிட முன்னேற்றக் கழகப் பொதுக்குழு, மத்திய அரசு இந்தியை மட்டும் ஆட்சி மொழியாக ஏற்றுக் கொண்டதைப் பரிசீலனை செய்தது. அதனைத் தடுக்க இந்தி எதிர்ப்புப் போராட்டம் நடத்துவதென்ற முடிவுக்கும் வந்தது. அதற்கான போராட்டக் குழு ஒன்றையும் இன்றையத் தமிழக முதல்வரான கலைஞர் கருணாநிதி அவர்களின் தலைமையில் அமைத்தது. வரலாற்றுப் புகழ் பெற்ற அப்பொதுக் குழுவில் பேரறிஞர் அண்ணா அவர்கள் விளக்கவுரை ஆற்றியபோது,

> ''இந்தியினால் ஏற்படக் கூடிய கேடுகள் ஏராளம்; தமிழ் மொழி உட்படப் பிறமொழிகள் யாவும் சீர் கெடும்; சிதைவுறும். நமது தாய் மொழி உருக்குலைந்து உயிரற்றுப் போய்விடும். அரசுப்

பணிகள் சீரழியும். காலப்போக்கில், கல்லூரிப் பயிற்சி மொழியாக இந்தி — சட்டக் கல்லூரியிலும் இந்தி — தொலைபேசி, போக்குவரத்துத் துறை, புகைவண்டித்துறை, அஞ்சல்துறை, வானொலி, செய்தித் துறை ஆகிய துறைகளில் இந்தி பேராதிக்கம் செலுத்தும். கடைசியில் அங்காடியில் இந்தி— குடும்பங்களில் இந்தி-படுக்கையறையிலும் இந்தி—எங்கும் இந்தியாகி விடும். தமிழ் மறைந்து மண்ணாகும்.''

என்றார்.

1963-ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்களில், இந்தி எதிர்ப்புச் சிறப்பு மாநாடு சென்னையில் நடைபெற்றது. அதில், பேரறிஞர் அண்ணா அவர்கள், போராட்டத் திட்டத்தை வெளியிட்டார். அரசியல் சட்டத்திலுள்ள 17-ஆம் பகுதியை ( Part–XVII ) கொளுத்த வேண்டுமெனவும், அத்துடன் மத்திய அரசுப் பணிமனைகளின் முன்பு மறியல் நடத்த வேண்டுமென்றும்; இதை நீண்டகாலம் போராட்டமாக நடத்த வேண்டுமென்றும் அவர் கட்டளையிட்டார். தானே 1963-ஆம் ஆண்டு நவம்பர் 17-ஆம் நாளில் அரசியல் சட்டத்தின் பகுதியைக் கொளுத்தி, போராட்டத்தில் நேரடியாக ஈடுபடுவதாகவும் அறிவித்தார்.

காங்கிரஸ் அரசு அடக்கு முறைகளைக் கட்டவிழ்த்துவிட்டது. எல்லா நகரங்களிலும் குற்ற நடைமுறைச் சட்டம் 144-ஆம் பிரிவுப்படி, தடை யுத்தரவு பிறப்பிக்கப் பட்டது. ஆயுதம் தாங்கிய காவலர்கள் முக்கிய நகரங்களில் வலம் வந்தனர். எனவே, 144 தடையை மீறக் கழகம் ஆணை பிறப்பித்தது. தடையை மீறிய 4000தோழர்கள் ஒரே நாளில் கைது செய்யப் பட்டனர்.

1963-ஆம் ஆண்டு நவம்பர் 16-ஆம் நாள் பகல் 12 மணியளவில், பேரறிஞர் அண்ணா அவர்கள் கைது செய்யப்பட்டார். இந்தியக் குற்றவியல் சட்டம் 120-பி, தேசிய அவமதிப்புச் சட்டம் பிரிவு-5, சென்னைச் சட்டம்-14 ஆகிய பிரிவுகளின்படி அவர் மேல் குற்றஞ் சாட்டப் பட்டது. இந்த அத்தியாயத்தின் தலைப்பில் குறிப்பிட்டுள்ள தெளிவான வாசகத்தையும், இன்னும் பல சீரிய கருத்துக்களையும் கொண்ட தனது வரலாற்றுப் புகழ் கொண்ட வாக்குமூலத்தை, வழக்கினிடையில் அண்ணா அவர்கள் தந்தார். அவருக்கு 6 மாதச் சிறைத் தண்டனை விதிக்கப்_பட்டது.

தி.மு.க.வின் இந்தி எதிர்ப்புப் போர் தொடர்ந்து நடைபெற்றது. இந்தி எதிர்ப்புப் போராட்டம் 1965–ஆம் ஆண்டு ஜனவரி 26–ஆம் நாளில் — இந்தி அரியணை யேறும் நாளில் — இரத்தப் புரட்சியாக வெடித்து விட்டது. அந்த நாளைத் துக்க நாளாகக் கொண்டாட வேண்டுமெனக் கழகம் முடிவெடுத்தது. ஆனால், சனவரித் திங்கள் 25-ஆம் நாள் நள்ளிரவிலேயே, திராவிட முன்னேற்றக் கழக முன்னணித் தலைவர்களும், 1500-க்கும் மேற்பட்ட தொண்டர்களும் கைது செய்யப் பட்டனர்.

கழகம் மூட்டிய இந்தி எதிர்ப்புத் 'தீ' தமிழகத்தையே பற்றி யெரித்தது. தமிழ் மாநில இந்தி எதிர்ப்பு மாநாடுகள், அமரர் மூதறிஞர். இராசாசி அவர்களின் முயற்சியால் நடைபெற்றன. 18—1—1965–ஆம் தேதியில் திருச்சியில் நடைபெற்ற இந்தி எதிர்ப்பு மாநாட்டில் அமரர். இராசாசி அவர்கள்,

> ''குற்ற நடைமுறைச் சட்டம் 144–ஆம் பிரிவுப்படி, தடையுத்தரவுகள் பிறப்பிக்கப் படலாம். மூட்டை சுமக்கும் கழுதையைப் போன்றது அது. எனவே, அதைப் பற்றி யாரும் அச்சப்படத் தேவை யில்லை. நாட்டுப் பற்றில் நான் யாருக்கும் தாழ்ந்தவன் னல்ல... வடவரின் கையிலுள்ள மத்திய அரசு இந்தியை மட்டும் ஆட்சி மொழியாக்குவதைத் தொடர்ந்து அமுல் செய்தால், இந்தியத் துணைக் கண்டம், 15 பகுதிகளாகத் தனித்துப் பிரிந்து விடும். இதுவரை எனக்குப் பிரிவினை எண்ணம் துளிர்விட வில்லை. ஆனால், அண்மைக் காலத்தில் அரசு நடவடிக்கைகளால் அப்படியொரு பிரிவினை உணர்வு என் உள்ளத்தில் தோன்றி வளர்ந்திருக்கிறது.''[11]

என்று கர்ச்சனை புரிந்தார்.

ஆட்சி மொழிச் சட்டத்தால் உருவாக்கப்படும் இந்தித் திணிப்பை ''புத்திசாலித் தனமற்றதும் அநியாயமானதும் பாரபட்சமுள்ளதும் அடக்கு முறையைக் கொண்டதுமான'' ஒரு நடவடிக்கை யெனக் கூறும் இந்தி எதிர்ப்புத் தீர்மானம் அம் மாநாட்டில் நிறைவேற்றப்பட்டது. அம் மாநாட்டில், கருமுத்து. தியாகராயன் செட்டியார் அவர்களும், மறைந்த அதிசய மனிதர் ஜி. டி. நாயுடு அவர்களும், அமரர். தமிழவேள் பி. டி. இராசன் அவர்களும் மிக முக்கியப் பங்கினை ஆற்றினர்.

11 **Madras State Antihindhi Conference, Held at Trichy, on 17-1-1965. 'Hindu' Dated. 18—1—1965.**

கழகத்தின் தலைவரான நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள், 14 மாநில மொழிகளும், இந்தியாவின் ஆட்சி மொழிகளாக ஆக்கப்பட வேண்டும் என்றும், மத்திய அரசிற்கும் மாநிலங்களுக்கு மிடையேயான தொடர்பு மொழி ஆங்கிலமாக இருக்க வேண்டுமெனவும், இந்தித் திணிப்பை எதிர்க்கும் முகத்தான் குடியரசு நாளைத் துக்க நாளாகக் கொள்ள வேண்டும் என்றும் அந்த மாநாட்டில் அறை கூவல் விட்டார்.

புரட்சிப் பொறி பரந்து கொண்டிருந்த தமிழகத்தின் நிலையைத் தவறுதலாகக் கணக்கிட்டனர் காங்கிரஸ் கட்சியினர். முன்னுக்குப் பின் முரணான அறிக்கைகளைக் கொடுத்தார், திரு. பக்தவச்சலம் அவர்கள். அது எரியும் கொள்ளிக்கு எண்ணெய் ஊற்றியது போலாயிற்று.

மாணவர்கள் போர்க் கொடி யுயர்த்தினர். மத்திய அரசு, மீண்டும் சில பயனற்ற உறுதி மொழிகளைத் தர முன் வந்தது. அன்று காங்கிரசின் தலைவராக இருந்த, திரு. கு. காமராஜ் அவர்கள்,

> ‘‘நேரு அவர்கள் கொடுத்த உறுதிமொழி இன்னும் அமுலில் தான் உள்ளது; மத்திய அரசு அதனை ஏற்றுக் கொண்டுள்ளது.’’

என மனம் தெரிந்து பொய் கூறி, மக்களைத் திசை திருப்ப முயன்றார்.

## எரிமலை வெடித்தது

வியட்நாம் நாட்டில் எல்லாவற்றையும் துறந்த புத்தத் துறவிகள் தங்கள் மதத்தைக் காப்பதற்காகத் தங்கள் உடலில் மண்ணெண்ணெய்யை ஊற்றிக் கொண்டு, தீ வைத்து மாண்டார்கள் என்ற செய்தியைக் கேட்டு உலகமே அதிசயித்தது. ஆனால், தான் பிறந்த பொன்னாட்டில், தன் தாய் மொழிக்கு இடமில்லையென்று, தன் சொந்த சனநாயக அரசே மறுத்துவிட்டதைக் கண்டு மனம் கொதித்த தமிழ் மறவர்கள் தங்கள் உயிரைக் கொடுத்தாவது இந்தியினை அணை போட்டுத் தடுக்க முயன்றார்கள்.

25-1-1965-ஆம் நாளன்று ‘‘என் உயிர் தமிழுக்கு; உடல் மண்ணுக்கு’’ என்ற முழக்கமெழுப்பி, திருச்சி மாவட்டத்தைச் சார்ந்த திராவிட முன்னேற்றக் கழக உறுப்பினர் சின்னச்சாமி அவர்கள், தனது உடலில் நெருப்பிட்டுக் கொளுத்திக் கொண்டார். சென்னையில் சிவலிங்கமும், அதற்குப் பின்னர் அரங்கநாதனும், வீரப்பனும், கோவை மாவட்டம் சத்தியமங்கலத்தில் முத்துவும் மார்ச்சுத் திங்களில் மாயவரம் கல்லூரி மாணவன் சாரங்கபாணியும், ‘‘இந்தி ஒழிக; தமிழ் வாழ்க’’ எனக் கூறிக் கொண்டே எரியும் தீ நாக்குகளுக்குத் தம்மை அர்ப்பணித்துக் கொண்டனர். மொழி காக்க உயிர்த் தியாகம் செய்த, வீர வரலாறு தமிழகத்திற்கே சொந்தமானது. எந்த நாட்டிலும் காணப் படாத மொழிகாக்கும் நரபலிப் போர் முறை, உலகத்தின் கவனத்தை யெல்லாம் ஈர்த்தது. அமெரிக்கச் செய்தித் தாள்கள் தலையங்கம் தீட்டின. ஐக்கிய நாட்டுச் சபையில், தமிழக நிகழ்ச்சியைப் பற்றிய விவாதம் அரை மணி நேரம் நடைபெற்றது.

தமிழகத்தின் வீர மறவர்கள் செய்த உயிர்த் தியாகங்கள் பலனளிக்காமல் போகவில்லை. மாணவர்கள், அரசியல் கட்சித் தொண்டர்கள், பொது மக்கள், கற்றறிந்தவர்கள், ஆசிரியர்கள், தமிழ்ப் பேராசிரியர்கள் இன்னும் சமுதாயத்தின் பல துறைகளைச் சார்ந்தவர்கள் ஒரு சேர இந்தி எதிர்ப்புப் புரட்சியில் ஈடுபட்டனர்,

ஆட்சியாளரின் அடக்குமுறை, பின்னர்த் துப்பாக்கிப் பிரயோகங்களாக மாறி விட்டது. பொதுவேலை நிறுத்தம் நடந்தது. திருப்பூர், குமாரபாளையம், வெள்ளகோவில், பொள்ளாச்சி, மணப்பாறை, கரூர், திருவொற்றியூர், நெல்லை, கம்பம், சிதம்பரம் போன்ற தமிழக நகரங்களிலெல்லாம் துப்பாக்கி வெடிகள் ஓயாது ஒலித்துக் கொண்டிருந்தன. இந்தி மொழி, தமிழக மக்களின் 150 பேர்களின் உயிரைக் காவு கொண்டது.

பிப்ரவரி 16-ஆம் நாள் பகல் 12 மணியளவில் தனது இல்லத்திலிருந்த கலைஞர் கருணாநிதி அவர்களைக் காவலர்கள் கைது செய்து, கமிசனர் அலுவலகத்திற்குக் கொண்டு செல்வதாகக் கூறி, அவரை எங்கு அழைத்துச் செல்கிறார்கள் என்பதையும் கூறாமல், பலத்த போலீஸ் காவலுடன் காவலர் ஊர்தியில் போட்டுக் கடத்திச் சென்றனர். நினைவற்றுக் கிடந்த அவருக்கு,

மதுரையில் சிகிச்சை யளித்த பின்னர், பாளையங்கோட்டைத் தனிச் சிறைக்கு இட்டுச் சென்றனர். சட்டப் பேரவையில் கேட்ட போது அதற்கான காரணம் கூடக் கொடுக்கப்பட வில்லை. பின்னர் மதுரையில் நடந்த சட்ட எரிப்பில் அவரைச் சம்பந்தப் படுத்தி அவருக்கு 6 மாத சிறைத் தண்டனையும் விதிக்கப் பட்டது.

இந்தி எதிர்ப்புப் புரட்சியின் கனலைத் தாங்காத மத்திய அரசின் ஆளவந்தார்கள், இந்தி மொழி பற்றிய தங்களது கருத்துக்களைச் சற்று மாற்றிக் கொள்வதற்கும் தயாராயினர். காங்கிரஸ் கட்சியின் கொள்கையும் ஊசலாடிற்று. எனவே மத்திய அரசு, இறுதியில் பண்டித நேரு அவர்களின் வாக்குறுதியைச் சட்டவிதிகளில் இடம் பெறச் செய்வதாக வாக்களித்தது.

23-2-1965-ஆம் தேதியில் நடைபெற்ற, காங்கிரஸ் காரியக் கமிட்டியில் மூன்று முடிவுகள் ஒருமனதாக மேற் கொள்ளப் பட்டன.

1. இந்தி பேசாத மக்கள் விரும்பும் வரை ஆங்கிலமே தொடர்ந்து நீடிக்கும் என்பதைச் சட்டபூர்வமாக உறுதி செய்தல்.

2. எல்லா மாநிலங்களிலும், மும்மொழித் திட்டத்தை அமுல் படுத்துதல்.

3. மத்தியப் பொதுப் பணியாளர் பொறுக்குக் குழுவால் (யூனியன் பப்ளிக் சர்வீஸ் கமிஷன்) நடத்தப்படும் தேர்வுகள் யாவும், பங்கீட்டு முறையோடு (கோட்டா முறை) 14 தேசிய மொழிகளிலும் மற்றும் ஆங்கிலத்திலும் நடைபெறுவதற்கான வழிவகைகளைச் செய்தல்.

இந்த முப்பெரும் முடிவுகளைக் காங்கிரஸ் கட்சியின் தீர்மானம் அறிவித்தது.

இத்தீர்மானத்தால், காமராசர் தலைமையில் இயங்கிய அகில இந்தியக் காங்கிரஸ் மிகப் பெரிய உட்பூசல்களைச் சந்தித் தது. எனினும் 1965-ஆம் ஆண்டு மேத் திங்கள் 24-ஆம் நாளில், ஆட்சி மொழிச் சட்டத்தைத் திருத்துவதற்கான, ஒரு திருத்த மசோதாவை மத்திய அமைச்சரவை ஏற்றுக் கொண்டது.

ஆனால் அசல் மும் மொழித் திட்டமும், 14 தேசிய மொழிகளில் மத்திய அரசு ஊழியர்களுக்கான தேர்வை நடத்தும் முடிவும் பின்னால் நடை முறைப்படுத்தப்பட வில்லை.

''1968-ஆம் ஆண்டின் I-வது திருத்தச் சட்டத்தால்'' (Amendment Act I of 1968) ''1963-ஆம் ஆண்டின் ஆட்சி மொழிச் சட்டத்தில் சில'' திருத்தங்கள் செய்யப்பட்டன. அச் சட்டத்தின் 3-ஆவது சட்டவிதியின் 5-ஆம் பகுப்பில், இந்தியைத் தனது மாநில ஆட்சி மொழியாக ஏற்றுக் கொள்ளாத (எல்லா) மாநிலங்களும் தங்களது சட்டமன்றங்களில் ''அரசுக்காரியங்களுக் காக ஆங்கிலம் பயன்படுத்தத் தேவையில்லை'' என்ற தீர்மானங்களை நிறைவேற்றி, அத்தீர்மானங்களை நாடாளுமன்றத்தின் ஒவ்வொரு சபையும் தனித்தனியாக ஏற்றுக் கொள்ளும் காலம் வரையிலும், ஆங்கிலமே இந்தியத் துணைக் கண்டத்தில் இணை ஆட்சிமொழியாக இயங்கி வரும் என்று அறுதியிட்டுக் கூறப்பட்டுள்ளது.

அஃதாவது இந்தியும் ஆட்சி மொழியாக இருக்கும். இந்தி பேசாத மாநிலங்கள் முடிவு செய்யும் வரை, ஆங்கிலமும் இணை ஆட்சி மொழியாக இருக்கும்.

ஆனால், இச்சட்டத்தின் வாயிலாக அளிக்கப்பட்டுள்ள உறுதி நிரந்தரமான தல்ல. ஏனெனில், இத்திருத்தச் சட்டம், நாடாளு மன்றத்தால் செய்யப்பட்ட ஒரு சாதாரணச் சட்டம். சட்டவிதியில் இந்தி பேசாத மாநில மக்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள உறுதி மொழியை வேறொரு நாடாளு மன்றச் சட்டத்தின் மூலமாக மாற்றி அமைத்து விடலாம். எனவே, ஆட்சி மொழிச் சட்டம், மூன்றும் பிரிவின் 5-ஆம் பகுப்பில் கொடுக்கப்பட்டுள்ள இந்தி பேசாதவர் களின் உரிமையை, அரசியல் அமைப்புச் சட்டத்தில் இடம் பெற வைத்தாலன்றி இந்தி மொழியின் பேரபாயம் மீண்டும் மீண்டும் இருந்து கொண்டே தான் இருக்கும்.

காங்கிரஸ் காரியக் கமிட்டியினால் 1965-ஆம் ஆண்டு மே மாதத்தில் செய்யப்பட்ட மற்ற இரண்டு முடிவுகளும் இன்னும் அமுலாக்கப்பட வில்லை. அதாவது மத்திய அரசின் பொதுப் பணியாளர் தேர்வுக் குழுவால் (யூனியன் பப்ளிக் சர்வீஸ் கமி ஷன்) நடத்தப்படும் I. A. S. மற்றும் I. P. S. போன்ற பல தேர்வுகள் ஆங்கிலத்திலும் இந்தியிலுமே நடைபெறுகின்றன. மற்ற மாநில மொழிகளில் நடைபெறுவ தில்லை.

ஏற்கனவே கூறியபடி, இந்தியை ஆட்சி மொழியாக ஏற்றுக் கொண்ட பல மாநிலங்கள், இந்தி ஆங்கிலம் நீங்கலாக வேறு ஒரு மூன்றும் மொழியைக் கற்பிப்பதற்கு முயற்சி செய்யாமல், வெறும் விருப்ப பாடமாக ஆக்கிவிட்டதால் நடைமுறையில், மும்மொழித் திட்டத்தை அந்த மாநிலங்கள் கைவிட்டு விட்டன. எனவே, தமிழகத்திலும் மும்மொழித் திட்டம் தேவையில்லையெனக் கருதியே பேரறிஞர் அண்ணு அவர்கள் திராவிட முன்னேற்றக் கழகம் ஆட்சிப் பொறுப்பேற்றுக் கொண்டவுடன் 1968-ஆம் ஆண்டில் தமிழகப் பள்ளிகளிலிருந்து இந்தி மொழி கற்றுத் தருவதை அறவே நீக்கி விட்டார். தமிழகத்தில் தற்போது இந்தி யில்லை.

## VIII
## ஒரே வழி — மாநில சுயாட்சி

1968-ஆம் ஆண்டில் செய்யப்பட்ட ஆட்சி மொழிகள் சட்டத் திருத்தத்தினுலும் அறிஞர் அண்ணு அவர்கள் தமிழகத்தில் இந்தியை ஒழித்து விட்ட காரணத்தினுலும் இந்தி நம்மை விட்டு அடியோடு போய் விட்டதென நாம் இறும்பூதெய்துவதில் பயனில்லை.

அரசியல் சட்டப் படியும் 1963-ஆம் ஆண்டின் ஆட்சி மொழிகள் சட்டப்படியும், இந்தி தான் இந்தியத் துணைக் கண்டத்தின் ஆட்சி மொழியாயுள்ளது.ஆங்கிலம் வெறும் இணை ஆட்சி மொழியே. அதனைப் பயன் படுத்திக் கொண்ட இந்தி மாநிலங்கள் நிர்வாகம்,நீதி,கல்வி, மற்ற எல்லாத் துறைகளிலும் இந்தி மொழியிலேயே செயல்பட்டுக் கொண்டு, வெகு வேகமாக வளர்ச்சியடைந்து வருகின்றன.மொழித் துறையில் இந்தி மாநிலங்களின் நிலையையும் இந்தி பேசா மாநிலங்களின் இன்றைய நிலையையும் பரிசீலிப்போம்.

### இன்றைய நிலை

1. இந்தி பேசும் மாநிலங்கள் இந்தி மொழியை ஆட்சி மொழியாக 1950-ஆம் ஆண்டிலேயே ஏற்றுக் கொண்டு விட்டதால், அவை ஆங்கிலத்தைப் பற்றிக் கவலைப் படாமல் தொடக்கக் கல்வியிலிருந்து உயர்படிப்புகள் வரை மாணவர்களுக்கு மிக்க எளிமையான முறையில் தாய்மொழி மூலமாகவே

(இந்தியில்) கல்வி கற்றுக் கொடுக்கின்றன. ஆனால், இந்தி மாணவர்களுடைய எதிர்காலம் எவ்வகையிலும் பாதிக்கப்படுவதில்லை. பல் நுணுக்கக் கல்வியைக் கூடத் தாய்மொழி மூலமாகவே அவர்கள் கற்பதால் அம்மாணவர்களின் திறமையும் புலமையும் மேம்படுகின்றன.

2. எல்லாத் தேசிய மொழிகளைக் காட்டிலும் வளமை குறைந்திருந்த இந்தி மொழி, சென்ற கால் நூற்றாண்டுகாலமாக மத்திய அரசால் திட்டமிட்டுச் செய்யப்பட்ட பல வளர்ச்சித் திட்டங்களின் காரணமாகப் பலதுறையிலும் வளர்ச்சி பெற்ற பெருமொழியாகத் தற்போது திகழ்கிறது.

3. கலைச் சொற்கள், சட்டச் சொற்கள், அறிவியல் பாடங்கள், நீதி மன்ற நடைமுறைகள், அனைத்தும் இந்தி பேசும் மாணவர்களுக்கு எளிமையாக்கப்பட்டு விட்டதுடன், I. A. S. மற்றும் I.P.S.போன்ற மத்திய அரசின் பொதுப்பணியாளர் பொறுக்குக் குழுவால் (யூனியன் பப்ளிக் சர்வீஸ் கமிஷன்) நடத்தப்படும் தேர்வுகளும் இந்தியில் நடைபெறுவதால், அம் மாணவர்கள் வெகு எளிதாக, பெரு வெற்றியினை ஈட்டிக் கொள்கின்றனர்.

4. இது தவிர, மத்திய அரசின் பொது ஊழியங்களுக்காக நடைபெறும் தேர்வுகளில், இந்தியைத் தாய்மொழியாகக் கொண்ட மாணவர்கள் சிறப்பான வெற்றிகளைப் பெற்று உயர் மட்ட அதிகாரிகளாக எளிதாக வரக்கூடிய வாய்ப்பும் ஏற்படுகிறது.

5. இத்தேர்வுகள் யாவும் இந்தி, ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளில் மட்டும் நடைபெறுகின்றன. இந்தி பேசாத மாணவர்கள், தாய் மொழியில் இத்தேர்வுகளை எழுத முடிவதில்லை. இந்தி பேசாத மாநிலங்களைச் சார்ந்த மாணவர்கள் விரும்பியோ, விரும்பாமலோ மேற்சொன்ன மத்திய அரசின் தேர்வுகளைத் தங்கள் தாய்மொழி யில்லாத ஆங்கில மொழியிலேயே எழுத வேண்டிய பரிதாப நிலைக்குத் தள்ளப்பட்டுள்ளனர். உயர்ந்த பதவிகளுக்குரிய தேர்வுகளை, ஆங்கிலத்திலேயே எழுத வேண்டிய நிலைமை, இந்தி பேசா மாநில மாணவர்களுக்கு ஏற்பட்டு விட்டதால், அவைகளுக்குக் கேற்ற கல்வியினை அவர்கள் தங்கள் தாய்மொழியில் கற்பதில் எவ்வகைப் பயனுமிருப்ப தில்லை.

எனவே, இந்தி பேசாத மாநிலங்களில் கல்லூரி மட்டத்தில் அவரவர்கள் தாய் மொழியில் பாடங்கள் போதிக்கப் பட்டாலும் கூட அதனைக் கைக் கொள்ளாது, ஆங்கிலத்தில் போதிக்கப் படும் கல்வியினையே அம் மாணவர்கள் ஏற்றுக் கொள்ள வேண்டிய கட்டாயத்திற்கு உள்ளாக்கப்படுகின்றனர்.

6. இந்த அவல நிலைக்கேற்ற வகையில் ஆங்கிலத்தி லேயே கல்லூரிகளில் பாடம் கற்பிப்பதை, இந்தி பேசா மாநிலங் கள், அமுல் படுத்த வேண்டிய கட்டாய மேற்பட்டுள்ளது. இந்தி பேசா மாநிலங்கள் விரும்பினாலும், அம் மாநிலங்களின் ''கல்வி மொழி'' தாய் மொழியாக இருக்க முடிவதில்லை. எனவே மாநில மொழிகள் முழுமையான ஆட்சி மொழித் தகுதியைப் பெற முடிவதில்லை.

7. மருத்துவம், பொறியியல், அறிவியல், சட்டம், இன்னோ ரன்ன துறைகளைச் சார்ந்த தொழில் நுணுக்கக் கல்வியினைத் தாய்மொழியில் கற்பிக்க மாநில அரசுகள் விழைவதில்லை. ஏனெனில், அகில இந்திய மட்டத்தில், போட்டி போடுவதற் குரிய தகுதியைத் தாய்மொழிக் கல்வி அளிப்பதில்லை. அதற்கு இந்தியோ அல்லது ஆங்கிலமோ வேண்டும்.

8. மத்திய அரசால் நடத்தப்படும் உயர் ஆராய்ச்சிகள் மற்றும் தொழில் நுணுக்க மையங்கள் (Research and Technical Centres) 'இந்தி' மற்றும் 'ஆங்கிலத்திலேயே' நடைபெறு கின்றன. எதிர்காலத்தில் உயர்வை நல்கக்கூடிய உறுதியை இந்தி பேசா மாநிலங்களைச் சார்ந்த மாணவர்களுக்கு அவர்கள் தாய்மொழிக் கல்வி தருவதில்லை.

9. தலைமை நீதிமன்றத்தினுடைய அனைத்து நடவடிக்கை களும் ஆங்கிலத்திலேயே நடைபெற்றாலும், எதிர்காலத்தில் அவையெல்லாம் இந்தி மொழியால் இயங்குவதற்கு, ஆட்சி மொழிச் சட்டமும் அரசியல் சட்டமும் வகை செய்கிறது. எனவே, தலைமை நீதி மன்றத்தில் ஆங்கிலத்தின் இடத்தை எப்போது வேண்டுமானாலும் இந்தி மொழியே கைப்பற்றிக் கொள்ளக் கூடிய பேரபாயம் இன்னும் இருந்து கொண்டே வருகின்றது. ஒருக்கால், ஆங்கிலம் இன்னும் தொடர்ந்து நீடிப்பதாகவே வைத்துக் கொண்டாலும், இந்தி மற்றும் ஆங் கிலம் ஆகிய இரண்டு மொழிகளும் தலைமை நீதி மன்ற நட வடிக்கைகளில் பயன்படுத்தப்படும் என்ற அளவிற்கு மட்டுமே

அது வழி வகை செய்யுமே யல்லாமல் தலைமை நீதிமன்ற நடவடிக்கைகள் அந்தந்தத் தாய்மொழிகளில் நடைபெறக் கூடிய ஒரு நிச்சயம் ஏற்படாது.

10. தலைமை நீதி மன்ற மொழியினை ஒட்டியே, அதன் கீழ் இயங்குகின்ற மாநிலங்களின் உயர்நீதி மன்ற நடவடிக்கைகளும் அமையுமென்பது கண்கூடு. எனவே, தலைமை நீதி மன்றத்திற்கு, மாநில உயர்நீதி மன்றத்திலிருந்து செல்லும் வழக்கிற்காக மாநில உயர்நீதி மன்ற அளவிலும், ஆங்கிலமே தொடர்ந்து நீடிக்கவேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. அந்தந்த மாநிலத் தாய்மொழிகள், உயர்நீதி மன்றங்களின் நடவடிக்கைகளில் அரசோச்சுவதில்லை. இதனால் உயர்நீதி மன்ற நடவடிக்கைகளுக்கேற்றபடி மாவட்ட நீதி மன்றங்களும் அதன் கீழ் இயங்கும் வேறு பல துணை நீதி மன்றங்களும் அவைகளின் நடவடிக்கைகளில் தாய்மொழியை ஏற்றுக் கொள்ள முடிவதில்லை. இவ்வகையில், ஆங்கிலேய அரசின் காலத்திலிருந்த முறையிலேயே, அடிப்படை நீதி மன்றங்கள் முதல் மாநில உயர்நீதி மன்றம் வரை, மாநில அரசுகள் விரும்பியோ, விரும்பாமலோ ஆங்கிலமே தொடர்ந்து கோலோச்ச வேண்டிய நிலைதான் இன்றைய நிலை.

11. மாநில மொழிகள், அந்தந்த மாநிலத்தின் ஆட்சி மொழிகளாக ஆக்கப்பட்டாலும், உண்மையில் அவை நீதி மன்றங்களின் மொழியாகச் செயல் படுத்தப்பட முடிவதில்லை. இதனால், எளிய முறையில் புரிந்து கொள்ள வைக்கும், தாய் மொழிப் பயிற்சி, சட்டக் கல்வியிலும் இடம் பெறுவதில்லை. எல்லா சட்டக் கல்லூரிகளும் ஆங்கிலத்தின் பிடியிலேயே மீளாமல் சிக்கிக் கொண்டுள்ளன. மாணவர்களுக்கும் ஆங்கிலப் போதனை மொழியை ஏற்றுக்கொள்வதைத் தவிர வேறு வழியில்லை.

ஆனால் இந்தி மொழி பேசப்படும் மாநிலங்களில், அடிப்படை நீதி மன்றங்கள் முதல் உயர் நீதி மன்றம் வரையும், ஏன், இந்தியத் தலைமை நீதி மன்றம் வரையும்கூட இந்தியிலேயே நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுவதால் அகில இந்தியச் சட்டங்கள் அனைத்தையும் இந்தி மாணவன் ஒருவன் தன் தாய் மொழியிலேயே கற்றுத் தேர்ந்து, சட்டத் துறையில்

துறைபோகிய வல்லுநராக உருவாக்கப் படுகின்ருன். அவனைக் காட்டிலும் நுண்மதி படைத்த, இந்தி பேசா மாநிலத்தைச் சார்ந்த மாணவன் அயல் மொழியான ஆங்கிலத்தில் சட்டங்களைப் படிக்க வேண்டிய நிலை ஏற்படுவதால் – எளிதாகத் தாய் மொழியில் கற்கக் கூடிய வாய்ப்பை அவன் இழந்து விடுகிருன்– எனவே, அவனுல் இந்தி மாணவனேடு போட்டியிட முடிவதில்லை.

12. I. A. S., I. P. S. போன்ற தேர்வுகளிலும் அகில இந்தியச் சேவையினங்களிலும் தென்னகம், குறிப்பாகத் தமிழகம் இதுவரை பெற்று வந்த முன்னணியைச் சென்ற சில ஆண்டுகளாக இழந்து விட்டது. தலைமை நீதிமன்றத்தில் ஒருக்கால் இந்தியில் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டால் ஆங்கிலத்தைக் கைக்கொண்டிருக்கும் இந்தி பேசா மாநிலங்கள், அதிலும் தன் முன்னணியை இழந்து விடும். பொதுவாக, இந்தி பேசும் மாநிலங்களோடு இந்தி பேசா மாநிலங்கள் வேற்று மொழியான ஆங்கிலத்தின் துணை மட்டும் கொண்டு உரியபடி போட்டியிட முடியாத ஒரு சூழ்நிலை நாளடைவில் உருவாகி விடும். ஆகவே, இந்தி பேசும் மாநில மக்கள் எல்லா வகையிலும், இந்திய நாட்டின் முதல் தரக் குடிமகனுகி விடுகிருன். இந்தி பேசாத மாநிலத்தினர் இந்தியநாட்டின் இரண்டாம் தர, மூன்ரும் தரக் குடிமக்களாக ஆக்கப்பட்டு விடுகின்றனர். மாநில சுயாட்சிக்கு மொழியும், மொழி சார்ந்த மாநிலமும் உயிர் மூச்சென்பதைக் கண்டோம். அரசமைப்புச் சட்டத்தில் ஏற்பாடு செய்யப்பட்ட நேருக்கு மாருன, மொழிச் சிக்கலும் இன்றைய ஆங்கில நீட்டிப்பும் மொழித் துறையில் மாநில சுயாட்சி உரிமைகளை முற்றிலும் நசுக்கிவிட்ட தென்பது தெளிவாகத் தெரிய வில்லையா?

## ஒரே வழி – மாநில சுயாட்சி

இந்தி பேசாத மாநிலங்களைச் சார்ந்தவர்கள், இந்திய நாட்டின் இரண்டாந்தரக் குடிமக்களாகி விட்டனர். அதை இனித் தடுப்பது எப்படி?

தென்னக மாநிலங்கள் எல்லாம் ஒன்ருக இணைந்தாலும் நாடாளு மன்றத்தில் பெரும்பான்மையைப் பெற முடியாது. எனவே, 14 தேசிய மொழிகளையும் இந்தியத் துணைக் கண்டத்தின் ஆட்சி மொழிகளாக ஆக்குவதற்கும் இந்தி மொழி

அதனுடைய தனிப்பட்ட ஆட்சி மொழித் தகுதியினின்று நீக்கு வதற்கும், ஆங்கிலத்தை மாநிலத்திற்கு மாநிலம்—மாநிலத்திற் கும் மத்திய அரசிற்கும்—இடையே செய்தித் தொடர்புக்காக மட்டும் கைக்கொள்வதற்கும் நாம் வேறு வழிகள் கண்டாக வேண்டும்.

தற்போது ஆங்கிலம் இணைமொழியாகத்தானே இருக்கிறது என நாம் கருதலாம். ஆனுல் உண்மையில் இந்திக்கு மாருக, வேற்று மொழியான ஆங்கிலத்தை வேறு வழியில்லாமல் தான் கைக்கொண்டிருக்கிறோம் என்பதை நாம் மறந்து விடலாகாது.

பல மாநிலங்களுக்கு இந்தி தாய்மொழி. அதனுல் அவர்கள் அனைத்துத் துறையிலும் வளம் பெறுகிருர்கள். ஆனுல், இந்தி பேசா மாநிலங்களுக்கு ஆங்கிலம் தாய் மொழியல்ல; அது வேற்று மொழி. இந்தியினை எதிர்த்து ஓட்டுவதற்காக ஆங்கி லத்தை நாம் வலிந்து ஏற்றுக்கொண்டுள்ளோம். ஆங்கிலத்தை நமது வாழ்க்கை முறையிலும் மாநில அரசின் சகல துறைகளிலும் தவிர்க்க முடியாமல் நிரந்தரமாக்கிக் கொண்டு வருகிறோம். அதனுல், இந்தி பேசாத மாநிலங்களில் மாநில மொழிகளே ''மாநிலங்களின் ஆட்சி மொழியாக'' ஆக்கப் பட்டாலும், ஆங்கிலத்தின் இடத்தை அந்த மாநில மொழி களால் நிரப்பிக் கொள்ள முடிவதில்லை, மாநில ஆட்சி மொழி என்ற பெயரால் அம்மாநிலத்தின் மொழி, ஆங்கிலத்திற்கு அடுத்தபடியான இரண்டாம் நிலையையே நடைமுறையில் பெற்றுள்ளது என்பதை நாம் மறுக்க முடியாது.

தமிழே தெரியாத ஒருவனுக்கு ஆங்கிலம் மட்டும் தெரிந் திருந்தால் போதும்; தமிழகத்தின் எந்த மூலையில் வேண்டு மானுலும் எத்துணை காலத்திற்கு வேண்டுமானுலும் அவன் முறையாக வாழ்க்கை நடத்த முடியும்.

இருப்பினும், ஆங்கிலத்தை முற்றிலும் அகற்றிவிட வேண் டும் என நாம் கூறவில்லை. ஆனுல் தமிழக மாணவர்களின் முது நிலைப்படிப்பு (Post Graduate) வரையும் பல்கலைக் கழகத்தின் வளமான பயிற்று (போதனு) மொழியாகவும், சாதாரண மாவட்ட நடுவர் நீதிமன்றம் முதல், மாநிலத்தின் உச்ச நீதி மன்றமான உயர்நீதி மன்றம் வரை எல்லா நீதி மன்ற நடவடிக் கைகளும் முறையோடு நடக்கத் தக்க நுணுக்கமான நீதி மன்ற மொழியாகவும், தமிழக அரசின் எல்லாத் துறைகளும் தமிழி லேயே நடைபெறத் தக்க அரசின் மொழியாகவும்—மொத்தத் தில்—தமிழகத்தின் எல்லா நடவடிக்கைகளும் உயிர்ப்போடு

நடைபெறக்கூடிய உண்மையான ஆட்சி மொழியாகவும் தமிழ் அரியணை யேற வேண்டும். சுருங்கக்கூறின் ஆங்கிலம் தற்போது கைப்பற்றிக் கொண்டிருக்கும் இடத்தை, செந்தமிழ் நிரப்பிக் கொள்ள வேண்டும் என்றுதான் நாம் கூறுகிறோம்.

அத்துறைகளிலிருந் தெல்லாம் ஆங்கிலம் அகற்றப்பட வேண்டு மெனில் இந்தியத் துணைக் கண்டத்தின் ஆட்சி மொழி களில் ஒன்றாகத் தமிழும் ஆக்கப்பட்டாக வேண்டும். இல்லை யெனில் இந்தியை எதிர்ப்பதற்காக ஆங்கிலமும் நம்மிடையே தொடர்ந்து கொண்டே இருக்கும்.

பல மொழிகள் ஒரு நாட்டினுடைய ஆட்சி மொழிகளாக ஆக்கப்படுவ தொன்றும் புதிதல்ல. கனடா நாட்டின் நாடாளு மன்றத்தில் நடைபெறும் நடவடிக்கைகளும் அதன் நீதி மன்றங் களில் நடைபெறும் நடவடிக்கைகளும் வழக்காடுதலும் தீர்ப் பளித்தலும் ஆங்கிலம் அல்லது பிரெஞ்சு ஆகிய இரு மொழி களில் நடைபெறுகின்றன. கனடாவின் நாடாளு மன்றச் சட்டங்கள் இந்த இரண்டு மொழிகளிலும் அச்சிடப்பட்டு வெளியிடப் படுகின்றன.

மிகக் குறைவான மக்கள் தொகையைக் கொண்ட சுவிட்சர்லாந்து நாட்டில் ஜெர்மனி, பிரெஞ்சு, இத்தாலி ஆகிய மும்மொழிகள் அந்நாட்டின் ஆட்சி மொழிகளாக இருக்கின்றன. இந்த மூன்று மொழிகளோடு ரோமஞ்சி (Romanchi) மொழியும் அந்நாட்டின் தேசிய மொழியாக இருக்க வேண்டு மென்றும் "சுவிட்சர்லாந்தின் அரசமைப்புச் சட்டம்" கூறுகிறது.

தென் ஆப்பிரிக்கா, கூட்டாட்சி நாடல்ல; அது ஓர் ஒற்றை ஆட்சி நாடு. அந்நாட்டில் டச்சு மொழியும் ஆங்கிலமும் ஆட்சி மொழிகளாக விளங்குகின்றன. நாடாளு மன்ற ஆவணங் களிலும் நடவடிக்கைகளிலும் இவ்விரு மொழிகளும் பயன் படுத்தப்பட வேண்டு மென்றும், மத்திய அரசின் மசோதாக் கள், சட்டங்கள், அறிவிப்புகள் யாவும் இந்த இரண்டு மொழி களிலேயே நடைபெற வேண்டு மென்றும் தென்னாப்பிரிக்க அரசமைப்புச் சட்டத்தில் வழி வகை செய்யப் பட்டுள்ளது.

மலேசிய நாட்டிலும் சிங்கப்பூரிலும் தமிழ், சீனம், மலேசிய மொழி, ஆங்கிலம் ஆகிய நான்கு மொழிகளும் ஆட்சிமொழி களாக இயங்குகின்றன.

எனவே, பரந்த ஒரு நாட்டில் பல மொழிகள் ஆட்சி மொழிகளாக ஆக்கப்படுவது ஓர் அதிசயிக்கத் தக்க நிகழ்ச்சி யல்ல.

இந்தியத் துணைக் கண்டத்தில் 14 மொழிகளையும் ஆட்சி மொழிகளாகச் செய்தால், பல இடர்ப்பாடுகள் தோன்றுமே என வாதிடலாம். ஆனால் பல இனங்களையும், பல மொழிகளையும் பல கலாச்சாரங்களையும் உள்ளடக்கிக் கொண்டிருக்கும் இந்தியா ஒரு துணைக் கண்ட மென்பதை நாம் மறந்துவிட லாகாது. எந்தக் காலப் பகுதியிலும், ஒரே மொழி ஆட்சி மொழியாக ஈண்டிருந்ததில்லை என வரலாறு சுட்டிக் காட்டு கிறது. இவைகளை யெல்லாம் இணைத்து அகில இந்திய ஒற்று மையை நாம் நிலைநாட்ட வேண்டுமெனில் அதற்குரிய சில இடர்ப்பாடுகளையும், ஆட்சி மொழித் துறையில் ஏற்கத்தான் வேண்டும். அதற்குரிய வழிவகைகளைக் கண்டறிவது பெரும் வித்தையல்ல.

கூட்டாட்சித் தத்துவத்தை ஏற்றுக் கொண்டுள்ளதாகக் கருதப்படும் இந்திய நாட்டில் 100-க்கு 30 பேருக்கும் குறை வாகப் பேசக் கூடிய ஒரு மொழியை (இந்தியை) உலகத்தின் 1/10 பங்கு மக்கட் தொகையின் மேல், (இந்திய நாட்டின் மொத்த மக்கட் தொகையில் இந்தி பேசுவோர் நீங்கலாக வேறு மொழிகளைப் பேசும் மக்கள் தொகை) அவர்களது அன்றாட வாழ்க்கை முறையின் மேல், திணித்துவிடுதல் இயலாத செயலாகும்.

எனவே, பேசப்படும் அகில இந்திய ஒற்றுமை, காலப்போக்கில் வெறும் கானல் நீராகப் போகாமலிருக்க வேண்டுமெனில், இந்தி மட்டுமே, தனி ஆட்சி மொழித் தகுதியோடு இயங்குவதைத் தவிர்க்க வேண்டியது இன்றியமையாததாகும். எல்லா மாநில மொழிகளும் இந்தியாவின் ஆட்சி மொழித் தகுதியைப் பெற்றாக வேண்டும். அந்த நிலையைப் பெற்ற பின்தான், இந்தி பேசாத மாநிலங்களைச் சார்ந்த மக்கள், இரண்டாந்தரக் குடிமக்களாக வாழ்ந்து கொண் டிருப்பதை மாற்றி யமைக்க முடியும்.

அடுத்து, அதனைச் செயல்முறைப் படுத்துவது எப்படி யென்ற வினா எழும். பிரத்தியட்சமான அரசியல் நிலையை அப்பட்டமாகக் கூறினால் இந்தி மாநிலங்கள், அதற்கிசைவு தரப் போவதில்லை. பெரும்பான்மையான இந்தி பேசா மாநிலங்கள் இன்றைய நிலையில் நிதி, நிர்வாகம், சட்டமியற்றுதல், அரசியல்

ஆகிய துறைகளில் அடிமைப்பட்டிருப்பதைப் போலவே, மொழியாலும் அடிமைப்பட்டிருக்கத் தான் வேண்டியிருக்கும். நாளடைவில் மாநில மக்கள் விழிப்புணர்ச்சியடையும்போது, மொழிப் போராட்டங்களும் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டேயிருக்கும். மத்திய அரசு இந்தி பேசும் மாநிலத்தவரின் கைப்பொம்மையாகவே இயங்கி வரும். அதனைத் தடுக்கவும் முடியாது. எனவே, ஆட்சிமொழி என்ற பெயரால்— இந்திய ஒற்றுமையென்ற பெயரால் — இந்திபேசா மாநில மக்களின் மொழிப் போராட்டங்கள் அவ்வப்போது நசுக்கப்பட்டு விடும். மீறினுல் அப்போராட்டங்களின் காரணமாக, சிற்சில மேலோட்டமான சலுகைகளை மத்திய அரசு தருவதற்கு முன்வரும். அத்துடன் மாநிலங்கள் திருப்தியடைந்து கொள்ள வேண்டியதுதான்.

ஆனுல் சென்ற 24 ஆண்டுகளில் நடைபெற்றதைப் போலவே இனி வரக்கூடிய காலங்களிலும் இந்தி மொழி தடையில்லாத ஒரே சீரான வளர்ச்சியினைப் பெற்ருேங்கி இந்தி பேசும் மக்கள் மென்மேலும் வளர்ந்து வருவர். பேரறிஞர் அண்ணு அவர்கள் குறிப்பிட்டது போல் மொழி ஆதிக்கத்தின் வாயிலாக, இந்தி பேசும் மக்கள் அரசுப் பணிகளிலும் நிர்வாகத்திலும் நிதித் துறையிலும் அரசியல் துறையிலும் அகில இந்தியாவின் சகல துறைகளிலும் மேம்பாடு அடைந்து கொண்டே வருவார்கள். சிறு சிறு சலுகை பெற்ற இந்தி பேசா மாநிலத்தவர் மேற் சொன்ன துறைகளில் மென்மேலும் தாழ்வடைந்து கொண்டே போவார்கள். இவ் வகையில் அகில இந்தியா ஒற்றுமை என்ற பெயரால் இந்தி பேசாத மாநிலங்கள் மீளா நச்சு வட்டத்திற்குள் நிரந்தமாகச் சிக்கித் தவிக்கும்.

மாநில சுயாட்சிக்கு மொழியுரிமை உயிர் மூச்சாய்த் திகழ்வதால் மொழியால் தாழ்வடைந்த இரண்டாம் தர,மூன்ரும் தர மாநிலங்களுக்கு மற்ற துறைகளில் அதிகமான அதிகாரங்கள் வழங்கப்பட்டாலும் உண்மையில் அவை மாநில சுயாட்சியினை இழந்து நிற்கும்.

அஃதாவது, வேறு துறைகளில் கொடுக்கப்பட்ட மாநில அதிகாரங்கள் மொழியுரிமை யில்லாவிடில் முழு சுயாட்சி யுரிமையை மாநிலங்களுக்கு வழங்கி விடாது.

எனவே, சென்ற அத்தியாயங்களில் சுட்டிக் காட்டியபடி எல்லாத் துறைகளிலும் சுயாட்சியினை இழந்து நிற்கும் மாநிலங் கள், மொழியுரிமை யின்மையால் முழுக் கொத்தடிமைகளாக ஆக்கப் பட்டுள்ளன என்பதும் தெளிவாகப் புலனாகும்.

மொழியுரிமையைக் காப்பதற்கு மாநில சுயாட்சி ஒன்றுதான் உற்ற வழி என்பதும் தெளிவாகிறது, ஆக, ''மாநில சுயாட்சியே எங்கள் பிறப்புரிமை'' என்ற உயிர்த் தத்துவத்தை மாநில மக்கள் ஏற்றுக் கொள்ளும் வரை இந்திய நாட்டின் ஆட்சி மொழிச் சிக்கல் இறுதியாக முடிவடையப் போவதில்லை.

புதைசேற்றில் சிக்கிக் கொண்டு உயிருக்காகப் போராடி, இறுதியில் துணையின்றித் தானே சாகும் ஒருவனைப்போல் மாநில அரசுகளும், மத்திய அரசினுடைய மறைமுகமான ''ஆட்சி மொழி'' அதிகாரங்களில் சிக்கிக் கொண்டு மாநில உரிமை களுக்குப் போராடிக் கொண்டே இருக்கும் — அவை அழியும் வரை.

இந்த நிரந்தரமான அடிமை நிலையிலிருந்து மாநிலங்கள் காக்கப்பட வேண்டுமெனில், அதே நேரத்தில் இந்திய ஒற்றுமை யும் ஓம்பப்பட வேண்டுமெனில், உண்மைக் கூட்டாட்சித் தத்து வத்தின் அடிப்படையில் உருவாகும் ''மாநில சுயாட்சி'' தான் ஒரே சீரிய வழியென்பதை யாரும் மறுக்க முடியாது.

ஆக, இந்தி...யா? இந்தியா...வா? என்ற இரட்டை வினா விற்கு, 'இந்தி தான்' என்ற மறுமொழி கிடைத்தால் காலப் போக்கில் ''இந்தியா'' இருக்காது; ''இந்தியா தான்'' என்ற மறுமொழி கிடைத்தால் காலப் போக்கில், 'இந்தி' மட்டும் (ஆட்சி மொழி என்ற) அரியணையிலிருந்து அரசோச்சாது. ஒருக்கால் (வெறும் இணைப்பு மொழியாக) ''இந்தியும் வேண் டும்; இந்தியாவும் வேண்டும்'' என்ற நல்லதோர் இறுதி விடை கிடைக்க வேண்டும் எனில் முழு மாநில சுயாட்சியும் வேண்டும், என்பதைத் தவிர்க்க இயலாது. எப்படி?

முழு சுயாட்சி பெற்ற மாநிலங்களில் மொழியுரிமை நசுக்கப் படுவதில்லை. அயல்மொழி ஆதிக்கம் செலுத்துவதில்லை; அடிமை நிலை இல்லை; மிடிமையும் இல்லை; அந்தந்த மாநிலங் களில் அந்தந்த மாநிலத் தாய்மொழிகளே அரசோச்சும்,

எல்லா மாநிலங்களிலும் மொழி, அரசியல், பொருளாதார சமுதாயத் துறைகளில் அந்தந்த மாநில மக்களே முதல் தரக் குடிமக்களாகவும் சமத்துவத்தோடும் சுயாட்சியோடும் திகழ்வர்.

இந்தி பேசா மாநிலங்களையும் இந்தி பேசும் மாநிலங்களையும் வெளியளவில் செய்தித் தொடர்பால் இணைக்க முறையே, ஆங்கிலமும் இந்தியும் ''இணைப்பு மொழிகளாக'' இருக்கும். 'ஆட்சி மொழி' என்ற ஒன்றே இருக்காது.

எனவே, ''இந்தியா? இந்தியாவா?'' என்ற வினாவிற்கு ''இந்தியும் தான் இந்தியாவும் தான்'' என்றால்......

மலர்க மாநில சுயாட்சி.



# 5. காங்கிரஸ் கட்சி ஆட்சியால் ஏற்பட்ட ஒற்றையாட்சி முறை

"மத்திய அரசுகளிலும் மாநிலங்களிலும், மிகப் பெரும் பான்மை பலத்தோடு காங்கிரஸ் கட்சி மீண்டும் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளது. இனி வரும் சில ஆண்டு களுக்கு ஒரேகட்சி ஆட்சியின் ஆதிக்கம் நிச்சயமாகத் தொடர்ந்திருக்கும்...முன்னர் இருந்ததைக் காட்டிலும் தற்போதைய காங்கிரஸ் கட்சி, ஒரே கல்லில் செதுக் கப்பட்டதைப் போன்ற (மத்திய மயமாக்கப்பட்ட) ஒரு கட்சியாக உள்ளது. அந்த ஒரே கட்சி, அதி காரத்தி லிருக்கும் வாய்ப்பையும் பெற்றால் ஒற்றை யாட்சி முறை கொண்ட ஆட்சிக் கட்சியாக ஆகி விடும். மாநில சுயாட்சியும், வெறும் பழங்கதையாகப் போய் விடும்." [1]

— பேராசிரியர். எம். வெங்கட்டரங்கய்யா.

## I

## காங்கிரஸ் கட்சியும் குடியரசுக் கூட்டாட்சியும்

இந்தியத் துணைக் கண்டத்தில், குடியாட்சி முறை அதன் நற்பயன்களை முழுமையாக மக்களுக்குப் பெற்றுத் தரவில்லை எனப் பல அறிஞர் பெருமக்களும் அரசியல் விற்பன்னர்களும், ஒருசேரக் கருத்தறிவிக்கின்றனர். மக்களுடைய அறியாமையும் போதிய அரசியல் தெளிவின்மையுமே இதற்கு மூலகாரணங்கள் எனச் சொல்லப் படுகின்றது.

### கருவியும் உணர்வும்

நாடாளு மன்றக் குடியரசு முறைக்கு (Parliamentary Democracy) அரசியல் கட்சிகள் ஆணிவேரைப் போன்றவை. குறிப்பிட்ட ஓர் அரசியல் கட்சியின் கொள்கைகளையும்—செயல்

---

1 Weekly Round Table Dt. 30-4-1972. P. 12.

திட்டங்களையும்—மக்கள் உற்று நோக்கி, தங்களுக்குத் தேவையான நலன்களை விளைவிக்கும் அதன் தகைமையைப் புரிந்து கொண்டு, தங்களுக்கான நல்லாட்சியினை அமைத்துக் கொள்வதற்காக அதனைத் தேர்ந்தெடுத்துக் கொள்வதும், பின்னர் ஒரு கால கட்டத்தில் அந்த ஆளுங்கட்சியில் குறை காணுங்கால், அது தங்களுக்குப் பயனளிக்கத்தக்க தல்ல என்ற கருத்தில், குறிப்பிட்ட வேருேர் அரசியல் கட்சியை அதே மக்கள் விரும்பி ஆட்சி பீடத்தில் அமர்த்துவதும் ஜனநாயக நாடுகளின் சீரிய செயல் முறையாகும்.

குடியரசு முறை கொண்ட நாடுகளில், அவற்றின் அரசியல் கருவிகளான ''வாக்களிப்பு முறையும்", ''தேர்தல்களும்'', ''மக்கள் பிரதிநிதிகளும்'', ''சட்ட மன்றங்களும்'', ''நாடாளு மன்றமும்", குடியரசு சார்ந்த மற்ற அரசியல் நிறுவனங்களும் இயங்கினுல் மட்டும் போதாது. ஏனெனில், அவை யெல்லாம் ஜனநாயகத்தை நடைமுறைப் படுத்தும் வெறும் உயிரற்ற கருவிகளே. அவை தவிர அந்நாடுகளின் வாக்காளப் பெரு மக்களிடம் ''சனநாயக உணர்வும்'' மேலோங்கி நிற்க வேண்டும்.

''மக்கள் குரலே மகேசன் குரல்'' என்ற தத்துவம் மெய்யாகவே உரிய பயனை விளைவிக்க வேண்டுமெனில், மக்களாட்சிக் கருவிகளோடு, சனநாயக உணர்வும் இன்றியமையாததாகும். ''மக்களுக்காக'' ''மக்களால்'' ''மக்களுடைய'' அரசை உருவாக்கிக் கொள்வதற்கு அம்மக்களிடம் உணர்வில்லாமல், அரசியல் சட்டப்படி இயங்கும் வெறும் சனநாயகக் கருவிகள் மட்டுமே இருந்தால், அவை குடியரசின் நற்பயன்களை விளைவித்து விடாது. எனவே நாடாளு மன்ற சனநாயக முறை வெற்றி பெற வேண்டுமெனில் மக்களின் ''பழுத்த சனநாயக உணர்வே'' அடிப்படை அம்சமாகும். அந்த இன்றியமையா ''உணர்வை'' குடியரசு நாட்டின் மக்கள் பெறுவதற்கும் அவ்வுணர்வைப் போற்றி வளர்ப்பதற்கும் உரிய வகையிலேயே அரசியல் கட்சிகளும் நடைபெற வேண்டும். இல்லாவிடில் நாடாளுமன்ற ஜனநாயக முறை வெறும் கேலிக் கூத்தாகி விடும்.

1910-ஆம் ஆண்டு முதல், இந்தியா விடுதலை பெற்ற 1947-ஆம் ஆண்டு ஆகஸ்ட்டு 15-ஆம் நாள் முடிய, இந்திய அரசியல் வானில், அகில இந்தியக் காங்கிரசுக் கட்சியே

தனித்ததோர் இடத்தைப் பெற்றிருந்தது. விடுதலை இயக்கத்திலும் அது பெரும் பங்கு வகித்திருந்தது. இந்தியத் துணைக் கண்டத்தில், சுதந்திரம் அடைவதற்கு முன்னர் வேறு பல அரசியல் கட்சிகள் இயங்கி வந்தன. எனினும் அக்கட்சிகள் யாவும் இந்திய மக்களை முழுமையாகப் பிரதிபலிக்க வில்லை. அகில இந்தியக் காங்கிரஸ் கட்சியே அந்தப் பெரும் வாய்ப்பைப் பெற்றிருந்தது.

ஆனால் விடுதலை இயக்கக் காலத்தில் அகில இந்தியக் காங்கிரஸ் கட்சிக்கு எதிராக எல்லா வகை இடர்ப்பாடுகளையும் தொல்லைகளையும் தந்து வந்த ஒரே அரசியல் கட்சியாக அகில இந்திய முஸ்லீம் லீக் விளங்கி வந்தது. ''பிரித்தாளும் சூழ்ச்சியை'' இராசதந்திரக் கொள்கையாகக் கொண்டியங்கிய ஆங்கிலேயப் பேரரசும் இந்திய விடுதலையைக் குறிக்கோளாகக் கொண்டிருந்த காங்கிரஸ் கட்சிக்கு எதிராகப் பயன் படுத்துவதற்கான ஒரு கருவியாக,முஸ்லீம்லீக் கட்சியைத் தன் செல்லப் பிள்ளையாக்கிக் கொண்டிருந்தது. இந்தியாவின் அன்றைய அரசியல் பிரச்சினைகளும் காங்கிரசின் தன்னிகரில்லாத் தன்மையும் கூட முஸ்லீம் லீக் கட்சியினால் ஆட்டி வைக்கப் பட்டன. சரியோ — தவறோ, காங்கிரஸ் கட்சி, இந்திய நாட்டின் விடுதலையைக் கருதித் தனது தன்னிச்சையான கொள்கைகளையும் செயல் முறைகளையும் கூட,சற்றுவிட்டுக்கொடுத்து முஸ்லீம் லீக் கட்சிக் கேற்ற வகையில் தனது நடைமுறைக் கொள்கையை அவ்வப்போது மாற்றி யமைத்துக் கொள்ள வேண்டிய நிலைமைக்குப் பலமுறை ஆட்படுத்தப் பட்டது.

காங்கிரஸ் கட்சிக்கு ஈடானதும் இணையானது மாயிருந்த முஸ்லீம்லீக் கட்சி 1947–ஆம் ஆண்டு ஆகஸ்ட்டுத் திங்களில் ஏற்பட்ட நாட்டுப் பிரிவினைக்குப் பின்னர் அகில இந்திய அரங்கிலிருந்து திடீரென மறைந்து ஒதுங்கிப் போயிற்று. அது வரை விடுதலை இயக்கமாக இருந்த காங்கிரஸ் கட்சி, சுதந்திர இந்தியாவின் வலிமை மிக்க ஓர் அரசியல் கட்சியாகவும், எதனையும் தன் இச்சைப்படி இயக்கக்கூடிய எதிர்ப்பில்லாத ஒரு பேரியக்கமாகவும், எதிர்கால அரசியல் வரலாற்றை சமைக்கவல்ல தனிக் கதாநாயகனாகவும் பின்னர் மாறிவிட்டது.

அந்தக் கால கட்டத்தில், இந்தியப் பொது மக்களில் சராசரி நூற்றுக்குப் பத்துப் பேர் மட்டும் கல்வியறிவு பெற்றவர்களாயிருந்தனர். அரசியல் அறிவு படைத்தவர்களும் உண்மை

சனநாயக உணர்வினைக் கொண்டவர்களும் அதில் எத்துணை பேர் இருந்திருப்பார்கள் என்பதை நாம் யூகித்துக் கொள்ள லாம்.

இந் நிலையில் தான் இந்திய நாட்டில் ''சனநாயகம்'' நடை போட ஆரம்பித்தது. 'வயது வந்தவர்களுக்கு வாக்குரிமை', 'பொதுத் தேர்தல்கள்', 'மாநிலச் சட்ட மன்றங்கள்', 'மத்திய நாடாளு மன்றம்', அவற்றிற்குரிய 'மக்கள் பிரதிநிதிகள்', வேறு பல குடியரசு முறை சார்ந்த 'அரசியல் நிறுவனங்கள்' போன்ற சனநாயகக் கருவிகள் நமது அரசமைப்புச் சட்டத்தி லும் படைக்கப்பட் டிருந்தன. ஆனால், குடியரசு நாட்டின் நற்பயன்களை விளைவிப்பதற்குரிய மூலப் பொருளான சனநாயக உணர்வை மட்டும் அக் கருவிகளால் தர முடிய வில்லை. ஏனெனில் ஒரே ஆளும் கட்சியான காங்கிரஸ் கட்சி அவ்வுணர்வை நம் மக்களுக்கு ஊட்டத் தவறி விட்டது.

### கொள்கையில் ஜனநாயகப் போர்வை
### செயல் முறையில் சர்வாதிகாரம்

சென்ற கால் நூற்றாண்டு காலத்தில் ஓரிரு காலப் பகுதி களைத் தவிர இந்தியா முழுவதிலும் காங்கிரஸ் கட்சியே தொடர்ந்து அரசோச்சி வருகின்றது. 1967-ஆம் ஆண்டு வரை, கேரளத்தைத் தவிர மற்ற எல்லா மாநிலங்களிலும், காங் கிரஸ் கட்சியே தொடர்ந்து ஆளும் கட்சியாயிருந்தது. நான் காண்டுக் கால இடைவெளிக்குப் பின்னர், தமிழகம் மற்றும் கேரளம் நீங்கலாக மற்ற எல்லா மாநிலங்களிலும் காங்கிரஸ் கட்சியே மீண்டும் பதவிக்கு வரலாயிற்று. எனவே, ஏறத்தாழ 65 ஆண்டுகால இந்திய வரலாற்றில் இந்திய மக்களின் தலை விதியை, நிர்ணயிக்கக் கூடிய ஒரே அரசியல் கட்சியாகக் காங் கிரஸ் கட்சி எதிர்ப்பின்றி இயங்கி வந்துள்ளது.

கம்யூனிஸ்டு சர்வாதிகார நாடுகளாக, ரஷ்யா மற்றும் சீனா நீங்கலாக அகில உலக மட்டத்தி லிருக்கும் எந்தவொரு நாட்டை எடுத்துக் கொண்டாலும் அந்நாடுகளில் இயங்கி வருகிற எந்த வோர் அரசியல் கட்சியும் இந்தியக் காங்கிரஸ் கட்சியைப் போல் இத்துணைக் கோடி மக்களுடைய அரசியல் பொருளா தார, சமுதாயத்தலைவிதியை இத்துணை நீண்ட கால அளவிற்குத் தனித்து நிர்ணயம் செய்யும் பெரு வாய்ப்பினைப் பெற்றிருந்த தாகத் தெரிய வில்லை.

இந்திய நாட்டின் நான்கில் மூன்று பங்குப் பொருளாதாரத்தைத் தன் கைக்குள் வைத்துக் கொண்டுள்ளது — காங்கிரஸ் மத்திய அரசு. மீதமுள்ள நான்கில் ஒரு பங்குப் பொருளாதார நடவடிக்கைகளில் கூட இறுதியான முடிவெடுக்கும் உரிமை காங்கிரஸ் கட்சியிடமே உள்ளது.

இந்தியாவின் மொத்த மக்கள் தொகையில் நான்கில் மூன்று பங்கு மக்களைத் தேடிச் சென்றடையக் கூடிய செய்தித் தொடர்பு சாதனங்களைக் காங்கிரஸ் அரசு தன்னிடத்தே பெற்றுள்ளது.

இந்தியாவின் மிகப் பெரிய முதலாளிகளால் இயக்கப்படும் பல செய்தித்தாள்கள் அரசியல் காரணங்களுக்காக அகில இந்தியக் காங்கிரஸ் கட்சியின் துதிபாடும் ஒலி பெருக்கிகளாகத் திகழ்கின்றன.

சனநாயக முறை நாடுகளில் தனித்து நடுநிலையில் இயங்க வேண்டிய மேற்சொன்ன மக்கள் சாதனங்கள் யாவும் காங்கிரஸ் அரசின் காலடியைச் சுற்றிப் படர்ந்து நிற்கின்றன.

இந்திய அரசமைப்புச் சட்டத்தின் எந்தப் பகுதியை வேண்டுமானாலும் எந்த முறையில் வேண்டுமானாலும் இன்றுள்ள காங்கிரஸ் கட்சி, திருத்தி யமைக்கத் தக்க சர்வாதிகார வல்லமையைப் பெற்றுள்ளது. அது விரும்பினால் இன்றிருக்கும் அரசியல் சட்டத்தை அடியோடு அழித்துவிட்டு, புதியதோர் அரசமைப்பைக்கூட ஆக்கிக் கொள்ள முடியும். சனநாயக முறைகளைக் கொண்டே சர்வாதிகார நாடாக இன்றைய இந்தியா செயல்பட்டு வருகிறது எனில் அது மிகையாகாது.

பழம் பெரும் காங்கிரஸ் தலைவரான ஆச்சார்யா ஜே. பி. கிருபளானி அவர்கள் காங்கிரஸ் கட்சியைப் பற்றிக் கருத்துக் கூறும்போது,

''ஒரு ஜனநாயக நாட்டில் முறைப் படுத்தப் பட்ட விளம்பரத்தின் மூலமாக-விலை கொடுத்து வாங்கப்பட்ட ஆர்ப்பாட்டங்களின் மூலமாக—கொள்கைகளைத் திரிபு செய்வதன் வாயிலாக—மக்கள் உணர்வுகளை வெற்று முழக்கங்களால் தொடுவதன் மூலமாக-மக்களது வெறி யுணர்ச்சிகளைத்தூண்டி விடுதலின் வாயிலாக — நிறைவேற்ற முடியா தென மனதாரத் தெரிந்திருந்தும் மிகப் பெரிய பொய் வாக்குறுதிகளைத் தருவதன்

மூலமாக—வெறும் அரசியல் முழக்கங்களை மக்களுக்குக் கொடுப்பதன் மூலமாக—அரசிற்குச் சொந்தமான வானொலி, மற்றும் தொலைக் காட்சியினை முறையின்றிப் பயன் படுத்துவதன் மூலமாக—நிலை நிறுத்தப்பட்ட மரபுகளையும் சனநாயக முறைகளையும் மீறுவதன் மூலமாக் — செய்தித்தாள் சுதந்திரத்தின் மேல் அரசியல் சட்டத்திற்கு மாறுபட்ட முறையில் பல கட்டுப்பாடுகளை விதிப்பதன் வாயிலாக—வேறு அரசியல் கட்சிகளைச் சார்ந்த உறுப்பினர்களைப் பட்டப்பகலில் திருடி, தன்னுடைய இயக்கத்தில் சேர்த்துக் கொள்வதன் மூலமாக-சர்வாதிகாரத்தைஉருவாக்குவது மிகவும்எளிமையானகாரியமாகும். முதிர்ந்த சனநாயக நாடுகளில் கூட மேற்சொன்ன சில முறைகள் கையாளப்படுகின்றன. ஆனால் சுதந்திரமாயியங்கும் செய்தித்தாள் மற்றும் மக்களுடைய (சனநாயக) விழிப்புணர்ச்சியால், அவ்வகை முறைகள் குறுகிய கால அளவிற்கு மட்டும் செயல்பட முடியும். விரைவில் மக்கள் விழிப்படைந்து விடுவதால் சனநாயக நலன்கள் மீட்கப் படுகின்றன. ஆனால், பல நூற்றாண்டு காலமாக, சாதி, மதம், மொழி, வட்டார வேறுபாடுகளால் பிரிந்து நிற்கும் இந்தியா மூட நம்பிக்கைகள், வறுமை, அறியாமை ஆகியவைகளில் மூழ்கிக் கிடக்கும் கோடானுகோடி மக்களைக் கொண்டிருப்பதால், மேற்சொன்ன ( சர்வாதிகார ) முறைகள் புதிய சனநாயகத்திற்கு மிகப் பெரிய ஆபத்தை விளைவிக்கிறது.''2

எனத் தெளிவாக்குகிறார்.

இந்தியக் காங்கிரஸ் இயக்கத்தின் இன்றைய நிலையையும், அதன் தலைவர்களால் மேற்கொள்ளப்படும் சர்வாதிகார முறைகளையும் வெகு துல்லியமாக முதுபெரும் காங்கிரஸ் தலைவர் படம் பிடித்துக் காட்டுகிறார்.

பண்பில் ஜனநாயகப் போர்வையையும், செயல்களில் சர்வாதிகாரத்தையும் பேணிக் காத்து வருகின்ற அகில இந்தியக் காங்கிரஸ் கட்சி, தன் கால் நூற்றாண்டுக் கால ஆட்சியினால் இந்திய அரசமைப்புச் சட்டத்தால் அளிக்கப்பட்ட அரைகுறை மாநிலத் தன்னாட்சியையும் முழுக்க முறியடித்து விட்டது.

---

2 "Absolute Power and Democracy" By. J.B. Kriplani, Weekly Round Table, Dated. 18—2—1973. P. 18

## II
## காங்கிரஸ் கட்சியின் முரண்பாடுகள்

அகில இந்தியக் காங்கிரஸ் கட்சியின் அமைப்பும் வரலாறும் செயல் முறையும் மாநிலத் தன்னுட்சிக் கொள்கைக்கு முற்றிலும் முரண்பாடானவை. அதன் முரண்பாட்டு வரலாற்றைப் பார்ப்போம்.

### அநீதி மறையவில்லை

இந்திய விடுதலை வரலாற்றில் காங்கிரஸ் கட்சி சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளது. சுதந்திரத்திற்கு முந்தைய காங்கிரஸ் வரலாற்றில் நாட்டுப் பற்றும் வீரமும் தியாகமும் விடுதலையுணர்வுமே மேலோங்கி நின்றிருந்தன என்பதை யாரும் மறுக்க முடியாது. ஆனல், அவை யாவும் காங்கிரஸ் கட்சியுடைய வரலாற்றின் ஒளி பொருந்திய பகுதியைச் சித்தரிக்கின்றன. துரதிர்ஷ்டவசமாக, அதன் இருண்ட பகுதி மறைக்கப்பட்டு விட்டது. காங்கிரஸ் கட்சியின் கொள்கைக் குழப்பங்களும் மாநிலத் தன்னுட்சி பற்றிய முரண்பாட்டுக் கோட்பாடுகளும், அதன் இருண்ட பகுதியின் முக்கியக் கூறுகளாக ஊசலாடி வந்துள்ளன.

காங்கிரஸ் கட்சி, இந்தியாவிற்கு சுதந்திரக் கனியைப் பெற்றுத் தந்த காரணத்தால் இந்திய அரசியலில் அது வெகு காலம் நிலைத்து நின்றுள்ளது. ஆனல், நாட்டு விடுதலைக்குப் பின்னர் அதற்குரிய அரசியல் லாபத்தையும் அது பெற்றுக் கொள்ளத் தவறவில்லை. விடுதலை இயக்கத்தில் பெரும் பங்கேற்ற அன்றைய காங்கிரஸ் கட்சி, அரசியல் ரீதியில் செய்த பல பெரிய தவறுகளும் அதனல் ஏற்பட்ட பேரிழப்புகளும், இந்தியத் துணைக் கண்டத்தின் இன்றைய அரசியலில் ஒரு களங்கமிகு பகுதியாக அமைந்து விட்டதெனில், அது மிகையாகாது.

ஓர் அரசியல் கட்சி, தனது நீண்ட நெடும் பயணத்தில்—குறிப்பாக விடுதலை இயக்க காலத்தில்—தனது கொள்கைகளை மாற்றிக் கொள்வதும், சீரமைப்புச் செய்து கொள்வதும் முறை கேடானதல்ல. அவ்வப்போது சில கொள்கை முரண்பாடுகள் தோன்றுவதும் தவிர்க்க முடியாதவைதான். என்ருலும் அரசியல் சந்தர்ப்பங்களுக்கேற்ற வகையில் சில அடித்தளக் கொள்கைகளை மூடி மறைத்து வைத்துப் பின்னர் அவ்வப்

போதைய அரசியல் சூழலுக்கேற்ப 'பச்சோந்தி', தன் நிறத்தை மாற்றிக் கொள்வதைப் போல — முரண்பாடுகளைத் தோற்று வித்துக் கொண்டு, அதன் அடிப்படையிலே இயங்கிக் கொண்டு வருவதை "அரசியல் வித்தகத் தன்மை" என்று அழைக்க லாமே தவிர அதையும் சேர்த்து 'தியாகம்' என்றும் 'வீரம்' என்றும் கூறிவிட முடியாது. கல்வியற்ற கோடானு கோடி மக்களால் வரலாற்றின் கசப்பான பல உண்மைகளை உய்த் துணர முடியாமல் போய்விடலாம். ஆனால், காங்கிரஸ் கட்சி யின் அன்றைய முரண்பாடுகளால் இன்றைய இந்தியாவிற்கு ஏற்பட்டுவிட்ட அரசியல் பொருளாதார விளைவுகளும் மாநிலங் களுக்கும் மாநில சுயாட்சிக்கும் இழைக்கப்பட்ட அநீதியும் வரலாற்றிலிருந்து அடியோடு மறைந்து போய் விடாது.

## முரண்பாட்டுக் கொள்கையும் அதன் காரணமும்

1906-ஆம் ஆண்டில் சுயராச்சியம் (Swaraj) என்பதற்கு "இந்தியாவினுடைய அரசியல் முன்னேற்றத்திற்கான குறிக்கோள்" என்ற அளவிலேயே அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி, பொருள் கொண்டிருந்தது. சுயராச்சியம் என்ற சொல்லுக்குச் சரியான இலக்கணம்கூட அப்போது கொடுக்கப்பட வில்லை, பொதுவாக, ஒரு "குடியேற்ற நாட்டின் தன்னாட்சி யுரிமை" (Colonial Self Government) அல்லது "டொமினியன் அந்தஸ்து" (Dominion Status) என்று மட்டுமே அந்தச் சொல்லிற்கு விளக்கம் தரப் பட்டது.

இந்தியத் துணைக் கண்டத்தின் உள்நாட்டு நிர்வாகத்தைப் பொறுத்தவரை மாநிலத் தன்னாட்சியும் அதிகாரத்தைப் பரவலாக் குதலும் மத இன அடிப்படையில் தனித் தேர்தல் தொகுதிகளைப் பெறுவதும், இன்ன பிறவும் தான் சுயராச்சியத்திற்குரிய செயல் திட்டமாக அற்றைய நாளில் கருதப்பட்டன.

இந்தியாவின் அனைத்துக் கட்சிகளும் சேர்ந்து பண்டித மோதிலால் நேரு அவர்களின் தலைமையில் 1928-ஆம் ஆண்டில், உருவாக்கிய நேருகுழு அறிக்கையை (Nehru's Report) அகில இந்தியக் காங்கிரஸ் கட்சியும் அட்டியின்றி ஏற்றுக் கொண்டது. இந்தியாவிற்கு டொமினியன் அந்தஸ்து தரப்பட வேண்டு மென்ற அடிப்படையில் தான் நேருகுழு அறிக்கையும் தயாரிக் கப்பட்டிருந்தது.

ஆனால் 1929-ஆம் ஆண்டில் இலாகூரில் நடைபெற்ற அகில இந்தியக் காங்கிரஸ் மாநாட்டில், பூர்ண சுயராஜ்யம் (Purna Swaraj) வேண்டும் – அதாவது முழுமையான விடுதலை வேண்டும் – என்ற குறிக்கோள் காங்கிரஸ் கட்சியால் முதன் முதலாக முன் மொழியப்பட்டு ஏற்றுக் கொள்ளப்பட்டது.

சைமன் குழுவை ( Simon Commission ) எதிர்த்தது காங்கிரஸ். சைமன் குழு கொடுத்த அறிக்கையின் அடிப்படையில் இந்திய எதிர்காலத்திற்கான அரசியல் அமைப்பை வடிப்பதற்காக இலண்டனில் வட்டமேசை மாநாடுகள் கூட்டப்பட்டன. சைமன் குழுவையும் அதன் அறிக்கையையும் எதிர்த்த காங்கிரஸ் கட்சி இரண்டாம் வட்டமேசை மாநாட்டில் கலந்து கொண்டது.

1934-ஆம் ஆண்டிலேயே டொமினியன் தகுதியினடிப்படையிலும், கூட்டாட்சி முறையிலும் இந்தியாவிற்குச் சுயாட்சியை வழங்குவதற்கு இங்கிலாந்தின் தொழிற் கட்சி அரசு தயாராயிருந்தது. இந்தியத் தன்னாட்சியை விரைந்து பெறுவதற்கு எல்லாக் கட்சிகளும் அப்போது முடிவு செய்தன. ஆனால் இரண்டாம் வட்டமேசை மாநாட்டில், ''பூர்ண சுயராச்சியமே காங்கிரசின் குறிக்கோள்'' என்று கூறி, 1934-ஆம் ஆண்டிலேயே இந்தியாவிற்கு, தன்னாட்சி கிடைக்கும் அரிய வாய்ப்பை இழக்கச் செய்து விட்டது காங்கிரஸ்.

1942-ஆம் ஆண்டில் சர். ஸ்டாபோர்டு கிரிப்ஸ் குழுவின் திட்டப்படி (CRIPP'S PLAN) இந்தியாவிற்கு சுதந்திரம் கிடைக்கும் இன்னொரு வாய்ப்பேற்பட்டது. ''கிரிப்ஸ் திட்டம்'' மாநிலங்களின் முழுத் தன்னாட்சியையே அடிப்படை அம்சமாகக் கொண்டிருந்தது. ஆனால் முழு மாநில சுயாட்சியைக் கொடுக்கக் காங்கிரஸ் தயாராயில்லை. எனவே, கிரிப்ஸ் திட்டத்தை அது ஏற்கவில்லை. அத்திட்டத்தைக் காங்கிரஸ் ஒருக்கால் ஏற்றிருந்தால் பாக்கிஸ்தானையும் உள்ளடக்கிய அகண்ட இந்தியா 1942-ஆம் ஆண்டிலேயே விடுதலையைப் பெற்றிருக்கும்; முழுத் தன்னாட்சி கொண்ட மாநிலங்களும் இந்தியக் கூட்டாட்சியில் இடம் பெற்றிருக்கும்; இந்து - முஸ்லீம் கலவரமும் இருந்திருக்காது; 1947-ஆம் ஆண்டிலேற்பட்ட இரத்தக் களரியும் தவிர்க்கப்பட்டிருக்கும்; நாடும் துண்டாகியிருக்காது. ஆனால் காங்கிரஸ் அத்திட்டத்தை ஏற்க வில்லை. அகண்ட இந்தியா, சுதந்திரமடைவதற் கேற்பட்ட இன்னோர் அரிய வாய்ப்பினையும் தவற விட்டு விட்டது, அகில இந்தியத் தேசியக் காங்கிரஸ்.

இந்திய நாட்டின் டொமினியன் அந்தஸ்தை ஏற்றுக்கொள்வதற்கு 1934-ஆம் ஆண்டில் பிடிவாதமாக மறுத்துவிட்ட காங்கிரஸ் கட்சி, 1947-ஆம் ஆண்டு ஆகஸ்டு 15-ஆம் நாளில் அதே டொமினியன் அந்தஸ்தையே மீண்டும் ஏற்றுக் கொண்டது. ஆனால் அதில் ஒரு வேறுபாடு; 1934-ஆம் ஆண்டில் அதனை ஏற்றிருந்தால் நாடு துண்டாகி யிருக்காது; இரண களரியும் தடுக்கப்பட்டிருக்கும்.

1947-ஆம் ஆண்டில் வந்த இந்திய விடுதலை "பூரண சுயராச்சியத்தையும்" கொடுக்கவில்லை; "அகண்ட இந்தியாவையும்" அளிக்கவில்லை. ஆனால் துண்டாடப்பட்ட குறை நாட்டையும் முழுமையற்ற சுயராச்சியத்தையும் (டொமினியன் அந்தஸ்து) ஒரு சேர ஏற்றுக்கொண்டது, அகில இந்தியக் காங்கிரஸ் கட்சி. நாட்டு விடுதலை பற்றிய காங்கிரசின் முரண்பாட்டுக் கொள்கையினால், இந்திய நாட்டின் விடுதலையே கூடத் தள்ளிப் போய் விட்டது.

காங்கிரசின் இந்த அரசியல் முரண்பாட்டிற்கு அடிப்படைக் காரணமென்ன?

வெள்ளையனின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெறும் அகண்ட இந்தியாவிலிருக்கும் எல்லா மாநிலங்களையும் அடிமை கொள்ளக் கூடியதும் ஏகபோக அதிகாரங்களைப் பெற்றதுமான ஒரு மத்திய அரசைப் படைத்துக் கொள்வதுதான் "பூரண சுதந்திரம்" என்ற காங்கிரஸின் கொள்கை. ஆக, "வலிவான மத்திய அரசு" என்ற அடிப்படைக் கொள்கையே இவ்வளவு விளைவுகளுக்கும் முரண்பாட்டிற்கும் மூலகாரணமாக ஒருவகையில் அமைந்தது.

## III

## மாநில சுயாட்சிக் கொள்கையில் காங்கிரசின் ஊசலாட்டம்

சுதந்திர இந்தியாவிற்குப் பொதுவாகக் கூட்டாட்சி அமைப்பு முறைதான் சாலப் பொருத்தமானது என்று முன்னாளில் கூறி வந்தது காங்கிரஸ் கட்சி. ஆனால், அக் கூட்டாட்சியில் இணையும் மாநிலங்களின் தன்மை என்ன? அம் மாநிலங்களைப் பிணைக்கும் மத்திய அரசின் தன்மை என்ன? என்ற தன்

னிலே விளக்கத்தை இறுதி வரை, அது வெளிப்படையாக அறிவிக்கவில்லை. ''வலிமையான மத்திய அரசை''க் கொண்டு தான் இந்தியாவை ஒற்றுமைப் படுத்த முடியும் என்ற திடமான கொள்கையை மட்டும் அது தனது உள்ளக் கிடக்கையாகக் கொண்டிருந்தது.

பண்டித மோதிலால் நேருவின் தலைமையில் இயங்கிய ''நேரு குழுவால்'' 1928-ஆம் ஆண்டில் உருவாக்கப்பட்ட இந்திய அரசமைப்பை (நேரு அறிக்கையை) 31—12—1928-ஆம் தேதியில் நடைபெற்ற அகில இந்தியக் காங்கிரஸ் மாநாடு அப்படியே ஏற்றுக் கொண்டது. அதன் தீர்மானத்தில்,

> ''31—12—1929-ஆம் நாளுக்குள் இங்கிலாந்து நாடாளு மன்றம், நேருகுழு அறிக்கையை முழுமையாக ஏற்றுக் கொண்டால் காங்கிரசும் அதை இந்திய அரசமைப்புச் சட்டமாக ஏற்றுக் கொள்ளும். அத்தேதிக்குள் இங்கிலாந்து நாடாளு மன்றம் அதை ஏற்றுக் கொள்ளாவிடில் காங்கிரஸ், ஒத்துழையாமை இயக்கத்தினை ஆரம்பிக்கும்.'' 3

என்ற வாசகத்தின் மூலமாக ''நேருகுழு அறிக்கையை'' அமுல் படுத்துவதற்குண்டான காலக் கெடுவையும் கூடக் காங்கிரஸ் நிர்ணயப்படுத்திற்று.

நேரு குழுவின் அறிக்கையில் ''கூட்டாட்சி அமைப்பு முறை'' என்ற சொற்றொடர்கள் எந்த இடத்திலும் தென்படுவதில்லை. எனினும் அதன் திட்டத்தை உற்று நோக்கினால் பொதுவாக அது ஒரு கூட்டாட்சி அமைப்பு வகையையே சார்ந்திருந்தது என்பது விளங்கும். ஆனால் நேரு குழு அறிக்கை, மத்திய-மாநில [அரசியல் மற்றும் நிர்வாக] உறவுகளைப்பற்றிக் கீழ்க்கண்ட வகையில் பொதுவாக இலக்கணம் கூறுகிறது,

> ''இந்தியத் துணைக் கண்டத்தின் விசித்திரமான சூழ்நிலையை (நாங்கள்) கருத்தில் கொண்டு, நாட்டின் தேசிய நலன்களோடு (மாநிலங்கள்) சுமுகமாக இயங்குவதற்காக, கூடிய வரை மாநிலங்களின் (அரசியல்) வாழ்க்கை வளர்ச்சிக்கானவைகளை எல்லாம் நாங்கள் (மாநிலங்களுக்கு) வழங்கி

---

3 ''Constitutional History of India'' (1971) by V. D. Mahajan, P, 124

யுள்ளோம். தவிர, மாநில நடவடிக்கைகளுக்கும் பணிகளுக்கு முரிய மிக விரிந்த எல்லைகளையும் நாங்கள் தந்துள்ளோம். இந்த எல்லைகளுக்குள் மத்திய அரசின் கட்டுப்பாடுகள் இல்லாத வகையில் மாநில அரசுகள், அந்தந்த மாநிலங்களின் தலைமை அமைப்புகளாக விளங்கும். எனினும் நிலையான நிர்வாகத்தின் எந்த ஓர் அமைப்பிலும் இருப்பதைப் போல, மாநில நடவடிக்கைகளில் மிகப் பெரிய பகுதி மத்திய அரசாங்கத்தால் மட்டுமே நிர்வகிக்கக் கூடியதாக அதில் இடம் பெறும் என்பதும் வெளிப்படையான உண்மையாகும். ஏனெனில், தேசிய நலன்களைப் பாதுகாப்பதற்கும் மாநிலங்களுக்கிடையில் ஏற்படும் பிணக்குகளைத் தீர்ப்பதற்கும் அப்படிப்பட்ட தொரு மத்திய அரசினல் மட்டும்தான் முடியும்.''[4]

மாநிலங்களைக் கட்டுப்படுத்தக் கூடிய ஒரு மத்திய அரசுதான் இந்திய அரசமைப்பில் இருக்க வேண்டும் என்பதுதான், நேருகுழு அறிக்கையின் சாரமாகும். அவ்வகை மத்திய அரசு கொண்ட அரசமைப்பைத் தான் காங்கிரசும் ஏற்றுக் கொண்டது என்பது, அவ்வறிக்கையைக் காங்கிரஸ் மாநாடு ஏற்றுக் கொண்டதிலிருந்தே தெளிவாகிற தல்லவா?

எனினும், கொள்கையளவில், ஓர் அகில இந்தியக் கூட்டாட்சியைக் காங்கிரஸ் கட்சி எதிர்க்க வில்லை.

பின்னர் 1932–ஆம் ஆண்டில் ஏற்பட்ட ''காந்தி–இர்வின் ஒப்பந்தத்திலும்'', காங்கிரஸ் கூட்டாட்சிக் கொள்கையை ஏற்றுக் கொண்டது.

''...முதல் வட்டமேசை மாநாட்டில் வரையறுக்கப்பட்ட திட்டத்தில் கூட்டாட்சி ஒரு முக்கியப் பகுதியாக விளங்கிற்று...''

என்ற பகுதியைக் காந்தியடிகள் ஒப்புக் கொண்டு முதல் வட்டமேசை மாநாட்டில் ஏற்பட்ட கொள்கைகளின் அடிப்படையிலேயே இரண்டாவது வட்டமேசை மாநாட்டில் அவர் பங்கேற்றுக் கொண்டார். அதில் காங்கிரசின் தனிப் பிரதிநிதியாகக் காந்தியடிகள் பங்கெடுத்துக்கொண்டதன் மூலமாகக்காங்கிரஸ் கட்சி, ''கூட்டாட்சிக் கொள்கையை'' விடுதலை பெற்ற இந்தியாவில் உருவாக்க வேண்டும் என்பதை அட்டியின்றி ஏற்றுக் கொண்டது என்பது தெளிவாகும்.

---

4 All Party Conference (1928) - Supplemental Report. P. 11,12.

"நேரு குழு அறிக்கை" தந்த வலிமையான மத்திய அரசை ஏற்றுக் கொண்ட காங்கிரஸ் கட்சி இரண்டாம் வட்ட மேசை மாநாட்டில் நடைபெற்ற நடவடிக்கைகளில், சிறு பான்மையினங்கள் தங்கள் தனிப் பண்புகளைப் போற்றும் வகையில், அவைகளுக்கான முழு அரசியல் உரிமைகளைத் தருவதற்கு முன்வரவில்லை. வலிமை கொண்ட மாநிலங்களுக் காதாரமாகவும் மாநில சுயாட்சிக்கு அடிப்படையாகவும் அமையும் "எஞ்சிய அதிகாரங்களை" (Residuary Powers) மாநிலங் களுக்கு விட்டுக் கொடுத்து விடுவதற்கு, அது தயாராயிருக்க வில்லை. காங்கிரஸ் காரியக் கமிட்டியின் தீர்மானத்தின் அடிப் படையிலேயே காந்தியடிகள் இரண்டாம் வட்டமேசை மாநாட் டிலும் விவாதம் நடத்தினர். காங்கிரஸின் அத்தீர்மானத்தில் மிக நுணுக்கமாகக் கூறப்பட்டிருந்த பகுதியாவது:—

"எதிர்கால இந்திய அரசமைப்பு, கூட்டாட்சியமைப்பாகத் தான் இருக்கும். மாநிலங்களுக்கு எஞ்சிய அதிகாரங்களைத் தருவதென்பது இந்தியாவின் மொத்த நலனுக்குக் குந்தக மாக அமையாது என எதிர்காலத்தில் செய்யப்படும்பரிசீலனை களிலிருந்து தெரிய வந்தால் மட்டுமே கூட்டாட்சியை அமைக்கும் உறுப்புக்களுக்கு (மாநிலங்களுக்கு) எஞ்சிய அதிகாரங்கள் தரப்படும்." 5

"The future constitution shall be Federal. The Residuary Powers shall vest in the Federating units unless on further Examination it is found to be against the best interest of India."

விடுதலை இந்தியாவின் அரசமைப்பில், மத்திய – மாநில அதிகாரங்களைப் பிரித்து வழங்கிய பின் எஞ்சியிருக்கும் அதி காரங்களை மாநிலங்களுக்கு வழங்க மாட்டோம் என்பதை எதிர் மறை வாசகங்களால் நுணுக்கமாகக் குறிப்பிடுகிறது காங்கிரசின் இத் தீர்மானம். ஏனெனில் "இந்தியாவின் ஒட்டு மொத்தமான நலன்" என்பது காங்கிரசைப் பொறுத்த வரை, வலிமையான மத்திய அரசால் மட்டுமே நல்கப்படக் கூடிய ஒன்று; அதில் மாநிலங்களுக்குப் பங்கில்லை.

---

5 Quoted from "The Foundations of Indian Federalism" (1967). P. 174.

இவ்வகையில் வலிமை கொண்ட மத்திய அரசுக் கொள்கையைத் தெளிந்த சொற்ருெடர்களால் வெளிப்படையாகக் காங்கிரஸ் கூருவிடினும், அதனுடைய உள்ளக்கிடக்கை, வன்மையான மத்திய அரசே என்பது இதிலிருந்து புலப்படுகிறதல்லவா?

மீண்டும் 1936-ஆம் ஆண்டு டிசம்பரில் நடைபெற்ற பெய்ஸ்பூர் (Faizpur) 50-ஆவது காங்கிரஸ் மாநாட்டில் 1935-ஆம் ஆண்டு இந்திய அரசுச் சட்டத்தைப் பற்றி, பண்டித நேரு அவர்கள் கருத்துத் தெரிவிக்கும்போது,

> ''ஒருவகையில், 1935-ஆம் ஆண்டுச் சட்டத்தில் சொல்லப்பட்ட கூட்டாட்சி அமைப்பின் வளர்ச்சி நிலை ஆய்வு செய்யப்படவேண்டிய ஒன்று தான். நாம் கூட்டாட்சிக் கோட்பாடுகளுக்கு எதிரிகளல்லர். அநேகமாக விடுதலை பெற்ற இந்தியா ஒரு கூட்டாட்சி அமைப்பினைக் கொண்ட இந்தியாவாகத் தான் இருக்கும். ஆனல், மிக அதிகமான ஒற்றை ஆட்சி முறைகளும் (வலிமையான மத்திய அரசின்) கட்டுப்பாடுகளும், ஏதோ ஒரு வகையில் அக்கூட்டாட்சியமைப்பில் இடம் பெற வேண்டும். அரசியல் சமுதாயத் துறைகளில் நாட்டில் பிற்போக்குச் சக்திகளால் ஆட்டி வைக்கப்படுவதும் அடிமைத்தனத்தில் ஆழ்த்தக் கூடியதுமான ஒரு கூட்டாட்சி நம்மீது திணிக்கப்படுகிறது.'' 6

என்று மாநில சுயாட்சி பற்றிய காங்கிரசின் உட்கிடக்கையை வெளிப்படுத்தினர்.

வரலாற்றுப் பேராசிரியரும் இந்திய அரசின் ஆலோசகராயிருந்தவருமான, திரு. ரெஜினல்டு கப்லெண்டு அவர்கள் ''கூட்டாட்சி'' என்ற பெயரில் வலிமையான மத்திய ஆட்சியைத்தான் காங்கிரஸ் வலியுறுத்தி வந்தது என்பதைத் தெளிவுபடுத்துகிருர்,

> ''ஆனல் கூட்டாட்சி கொள்கைகளைக் காங்கிரஸ் எப்போதுமே ஏற்றுக் கொண்டதில்லை. நேரு அறிக்கையில் கோடிட்டுக் காட்டப்பட்ட ஒரு மத்திய அரசாங்கத்தைப் போன்றதுதான்

---

6 Speeches and Documents on Indian Constitution (1957), Vol. I, by A. Appadurai, P. 386.

காங்கிரஸ் விரும்பிய தேசிய அரசாங்கம் ஆகும். அதாவது சரியாகச் சொன்னால், நேரு குழுவின் அறிக்கையில் சொல்லப்பட்ட அரசு ஒரு கூட்டாட்சி அரசாங்கம் அல்ல.''7

என்பது கப்லெண்டு அவர்களின் கருத்தாகும். ஆனால் வரலாற்றுத் திருப்பத்திற்கு, காங்கிரஸ் கட்சி அடிபணிய வேண்டியதாயிற்று.

பாக்கிஸ்தான் பிரிய வேண்டுமென்பதற்கு எவ்வகை ஆதாரமும் இல்லாதிருப்பினும் பின்னர் அது முஸ்லீம் மக்களின் உணர்ச்சி கொப்பளிக்கும் பிரச்னையாக மாறிவிட்டது. எனவே, ''பிரிவினையின்றி சுதந்திரமில்லை'', என்ற சூழ்நிலையும் மிக வேகமாக வளர்ந்தது. நாடு துண்டாடப்படுவதைத் தவிர்ப்பதற்காகக் காங்கிரஸ் கட்சி எந்த விலையையும் கொடுக்கத் தயாராயிற்று. அதன் விளைவாக வலிமையான மத்திய அரசு வேண்டும் என்ற கொள்கையை விடுத்து, தேசிய நலன்களை மட்டும் பேணும் குறிப்பிட்ட சில அதிகாரங்களை ஏற்றுக்கொள்ளக்கூடிய ஒரு மத்திய அரசையும் முழு சுயாட்சியினைக் கொண்ட மாநிலங்களையும், இந்தியக் கூட்டாட்சியில் ஏற்றுக் கொள்ளும் அளவிற்கு, காங்கிரசின் மாநில சுயாட்சிக் கொள்கை 1942-ஆம் ஆண்டிலிருந்து மாற்றத்தைப் பெற்று விட்டது.

1942-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் நிறைவேற்றப்பட்ட வரலாற்றுப் புகழ் பெற்ற ''வெள்ளையனே வெளியேறு'' என்ற காங்கிரஸ் தீர்மானத்தில் முழு மாநில சுயாட்சியை நோக்கிக் காங்கிரஸ் நடைபோடத் தொடங்கியதை நாம் தெளிவாக அறியலாம்.●

1945-ஆம் ஆண்டில் வெளியிடப்பட்ட காங்கிரஸ் தேர்தல் அறிக்கையிலும் முழு மாநில சுயாட்சிக் கொள்கையே காங்கிரசால் கோடிட்டுக் காட்டப்படுகிறது.*

1946-ஆம் ஆண்டில் வெளியிடப்பட்ட ''பிரிட்டானிய அமைச்சரவைத் தூதுக்குழு''த் திட்டத்திற்கு அடிப்படையாக அமைந்த அகில இந்தியக் காங்கிரஸ் தலைவர், அமரர் அபுல் கலாம் ''ஆசாத்'' அவர்களின் திட்டமும் முழு மாநில சுயாட்சி

---

7 **" India — A Restatement " (1945), P. 142**

● *இரண்டாம் பகுதி, பக்கங்கள் 303 – 304-இல் விளக்கம் காண்க.*

* *ஷ பக்கங்கள் 304 - 307-இல் விளக்கம் காண்க.*

யையே தெளிவுபடக் கூறுகிறது. ஆசாத் அவர்களின் திட்டத்தைக் காங்கிரஸ் காரியக் கமிட்டி முழு மனதாக ஏற்றுக் கொண்டதிலிருந்தும், அதனைக் காந்தியடிகள் போற்றிப் புகழ்ந்ததிலிருந்தும், காங்கிரஸ் கட்சி முழு சுயாட்சி கொண்ட மாநிலங்களையும் பாதுகாப்பு, வெளிநாட்டுக் கொள்கை, செய்தித் தொடர்புகள் ஆகிய மூன்றே மூன்று அதிகாரங்களைப் பெற்றுக் கொள்ளும் ஒரு மத்திய அரசையும் இந்திய அரசமைப்பில் உருவாக்குவதற்கு ஒப்புக்கொண்டது புலனாகும்.○

1946-ஆம் ஆண்டின் முற்பகுதியில் முழு மாநில சுயாட்சியை மையமாகக் கொண்ட "பிரிட்டானிய அமைச்சரவைத் தூதுக்குழுத் திட்டத்தையும் காங்கிரஸ் கட்சி ஏற்றுக் கொண்டது; அதனை அமுல்படுத்தவும் தொடங்கிற்று. இதிலிருந்தே, காங்கிரஸ் கட்சி முழுக்க முழுக்க மாநிலத் தன்னாட்சிக் கொள்கையின் எழுச்சிக்கு, செயல்வடிவம் கொடுக்கத் தயாராகிவிட்ட பான்மையினை நாம் அறியலாம்.●

1946-ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்களில் நடைபெற்ற அரசியல் நிர்ணய சபையில், பண்டித நேரு அவர்களால் கொண்டு வரப்பட்ட "குறிக்கோள் தீர்மானம்", எதிர்கால இந்திய அரசமைப்பின் அடித்தளமான பல கோட்பாடுகளை விளக்கிற்று. முழு மாநில சுயாட்சியே அத்தீர்மானத்தின் உயிரோட்டம் நேருவின் அக்குறிக்கோள் தீர்மானம் மாநில சுயாட்சிக் கொள்கைக்கு முழுமையான எழுச்சியினைத் தந்ததோடு அதனை இந்திய அரசமைப்பில் செயல்படுத்துவதற்கான வாய்ப்பையும் நல்கிற்று.*

மாநிலத் தன்னாட்சி பற்றிய பல முரண்பாட்டுக் கொள்கைகளைக் காங்கிரஸ் கட்சி சூழ்நிலைகளுக்கேற்றபடி ஒரு சந்தர்ப்பவாதமாகத் தோற்றுவித்துக் கொண்டதே தவிர, உண்மையில் ஒரு வலிமையான மத்திய அரசு வேண்டுமென்பதே கடைசி வரை அதனுடைய உள்நோக்கமாயிருந்தது. இந்திய ஒற்றுமையைக் காப்பதற்குரிய எல்லா அதிகாரங்களையும் தன்னகத்தே பெற்றதோர் மத்திய வல்லாட்சியை எவ்வகையிலும் பெற்றுத் தீர வேண்டும் என்ற கொள்கையே காங்கிரஸ் கட்சியின் ஊசலாட்டத்திற்கு ஆதார மூலமாயிருந்தது.

---

○ *இரண்டாம் பகுதி, பக்கங்கள் 308 - 312-இல் விளக்கம் காண்க.*

● *ஷை பக்கங்கள் 316 - 319-இல் விளக்கம் காண்க.*

* *ஷை பக்கங்கள் 322 – 328-இல் விளக்கம் காண்க,*

நாட்டுப் பிரிவினையைத் தவிர்ப்பதற்காக முழு மாநில சுயாட்சியை ஏற்றுக் கொண்ட காங்கிரஸ் கட்சி, பாகிஸ்தான் பிரிந்து போவது உறுதியானவுடன் தனது பழைய (வலிமையான) மத்திய அரசுக் கொள்கையை மீண்டும் செயல்படுத்தத் தொடங்கிற்று. இன்றைய இந்திய அரசியல் அமைப்பின் முகப்பாக முன்னர் எழுதப்பட்டிருந்த ''நேருவின் குறிக்கோள் தீர்மானத்தைத்'' திருத்தியமைத்து, பின்னர் அரசியல் நிர்ணய சபையின் மூலமாக இப்போது இருக்கும் ( அரசியல் சட்ட ) புதிய முகப்புரையை உருவாக்கி வைத்து விட்டது. அஃதாவது பழைய முகப்பான நேருவின் குறிக்கோள் தீர்மானத்திலிருந்த முழு மாநிலத் தன்னுட்சிக் கொள்கையை நீக்கிவிட்டு, மாநில சுயாட்சிக் கோட்பாடுகளில்லாத இரண்டாம் முகப்புரையை அரசமைப்பில் ஏற்றி வைத்து விட்டது. அரசமைப்பில் கூட, தனது முரண்பாட்டுக் கொள்கையை, காங்கிரஸ் கட்சி கடைப் பிடிக்கத் தவற வில்லை.

காங்கிரஸ் கட்சி அத்தோடு திருப்தி யடைந்துவிட வில்லை. அரசியலமைப்பால் கொடுக்கப்பட்ட அரைகுறைத் தன்னுட்சியைக்கூட முழுமையாகச் சீரழிக்கும் நோக்கத்துடன், தனது மையமாக்கப்பட்ட கட்சி மட்டத்தைப் பயன் படுத்திக் கொண்டும், ஒற்றை ஆட்சிக் கூறுகளைக் கொண்ட மத்திய அரசைக் கருவியாகக் கொண்டும் சென்ற 24 ஆண்டு காலமாக மாநிலங்களின் சுயாட்சி உரிமைகளைச் சூறையாடி வருகிறது.

மத்திய அரசின் வல்லாட்சிக்கு மிக முக்கியக் கருவியாக அமைந்திருக்கும் காங்கிரஸ் கட்சியின் ஸ்தாபன அமைப்பைப் பற்றி இனிப் பார்ப்போம்.

## IV
## காங்கிரஸ் கட்சியின் ஸ்தாபன அமைப்பு

கம்யூனிஸ்டு சீனு, ரஷ்யா போன்ற சர்வாதிகார நாடுகளில் ஆளுங் கட்சியின் ஸ்தாபன அமைப்பையே காங்கிரஸ் கட்சியின் ஸ்தாபன அமைப்பும் ஏற்றுக் கொண்டுள்ளது. காங்கிரஸ் கட்சி, தனது ஸ்தாபன அமைப்பில் சனநாயக முறையைக் கைக் கொண்டிருந்தாலும் உண்மையில் அது மத்திய மயமாக்கப்பட்ட (Centralised) ஒரு கட்சியாகவே இது காறும் இயங்கி வந்திருக்கிறது.

## காரியக் கமிட்டி

ஒவ்வொரு மாநிலத்திற்கும் தனித்தனிப் பிரதேசக் காங்கிரஸ் கமிட்டிகள் உண்டு. அவற்றின் உச்ச மட்டம் ''அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி''; அந்த அகில இந்தியக் காங்கிரசுக்குப் பொறுப்பாக உள்ளது, அதன் காரியக் கமிட்டி (Congress Working Committee) காரியக்கமிட்டிதான் ''காங்கிரஸ் மேலிடம்'' (High Command) என அழைக்கப்படுகிறது. இந்திய நாட்டிலுள்ள எல்லாப் பிரதேசக் காங்கிரஸ் கமிட்டிகளுக்கும் குறிப்புகளை அனுப்புவதற்கும், அவற்றை வழிமுறைப்படுத்துவதற்கும் மேற்பார்வை செய்வதற்கும் கட்டுப்பாடு செய்வதற்கும், காங்கிரஸ் காரியக் கமிட்டிக்கு அதிகாரம் உண்டு. காங்கிரஸ் கொள்கைகளையும் திட்டங்களையும் வகுப்பதும் காரியக் கமிட்டியே.

காரியக் கமிட்டியில் பல மத்திய அமைச்சர்களும், தலைமையமைச்சரும் இடம் பெறுகிறார்கள். அமைச்சர்கள் தவிர, அகில இந்தியக் காங்கிரசின் பெருந் தலைவர்களும் காரியக் கமிட்டியில் இடம் பெறுகின்றனர். எனவே, மத்திய அமைச்சரவையைக் காங்கிரஸ் காரியக் கமிட்டியின் ஒரு மிக முக்கியமான கூறு எனச் சொன்னால்கூட அது மிகையாகாது.

மத்திய அரசும் மாநில அரசுகளும் கடைப்பிடிக்க வேண்டிய அரசியல் மற்றும் பொருளாதாரக் கொள்கைகளையும் திட்டங்களையும் காங்கிரஸ் காரியக் கமிட்டியே உருவாக்குகிறது; அதை அகில இந்தியக் காங்கிரஸ் காரியக் கமிட்டியும் தன் கொள்கைகளாக ஏற்றுக் கொள்கின்றது. அக்கொள்கைகளையும் திட்டங்களையும் பிரதேசக் காங்கிரஸ்கள் மூலமாக அகில இந்தியக் காங்கிரஸ் செயல்படுகிறது. எனவே, பிரதேசக் காங்கிரஸ் கமிட்டிகளுக்கு, தனிக் கொள்கைகளை வகுக்கவும் தனித் திட்டங்களைத் தீட்டவும் உரிமையேதும் கிடையாது. காரியக் கமிட்டியிலிருக்கும் பல காங்கிரஸ் தலைவர்களை ஆட்டிப் படைக்கும் சத்தி படைத்த பண்டித நேருவும், இந்திரா காந்தியும் போன்ற தனிப்பெரும் தலைவர்களது கருத்துக்களையும் கொள்கைகளையும் சாதாரணமாகக் காரியக் கமிட்டி ஏற்றுக் கொள்ளும். காரியக் கமிட்டியால் ஏற்றுக் கொள்ளப்பட்ட அக் கொள்கைகளை அகில இந்தியக் காங்கிரசும் பிரதேசக் காங்கிரஸ்களும் தாமாகவே ஏற்றுக் கொள்கின்றன. பிரதேசக் காங்கிரசுக் கமிட்டிகள், மாநிலங்களிலுள்ள உயர்மட்டக் கட்சி

அமைப்புக்களானாலும் கூட அவை தாமாகவே தனித்து இயங்குவதில்லை. மத்தியக் கட்சியின் ஏஜெண்டுகளாகவே அவை இயங்குகின்றன.

சின்னஞ்சிறு கட்சி நிர்வாகப் பிரச்சினைகளிலிருந்து பெரிய கொள்கைப் பிரச்சனைவரை, பிரதேசக் காங்கிரசின் தயவையே எப்போதும் நாடி நிற்கும். அகில இந்தியக் காங்கிரஸ் தனது காரியக் கமிட்டியிடம் ஆலோசனை பெறும்; காரியக் கமிட்டி அதன் உயர் மட்டத் தலைவர் அல்லது தலைவர்களை நாடும். இவ்வகையில் இன்றியங்கும் பல மாநிலக் காங்கிரசுகள், அகில இந்திய மட்டத்தில் சங்கமமாகி, மத்தியத் தலைவரோடு இறுதியில் ஒன்றறக் கலந்து விடுகின்றன.

அரசியல் அமைப்புச் சட்டத்தின்படி, மத்திய அரசின் தலைவர் இந்தியக் குடியரசுத் தலைவராவர்; மாநில அரசுத் தலைவர் மாநில ஆளுநர்; மாநில ஆளுநரைக் குடியரசுத் தலைவர் நியமிப்பதால் அவர் குடியரசுத் தலைவரின் "ஏஜெண்டு" ஆகிறார்.

அகில இந்தியக் காங்கிரஸ் கட்சியின் உயர்மட்டத் தலைவரே பிரதேசக் காங்கிரஸ் கமிட்டிகளுக்கெல்லாம் பெருந்தலைவராவார். ஆகவே, பிரதேசக் காங்கிரஸ் கமிட்டிகளும் அகில இந்தியக் காங்கிரசின் ஏஜெண்டுகள் ஆகின்றன. பொதுவாகக் காங்கிரசுக் கட்சியின் உயர் தலைவர்களில் ஒருவராக மத்திய அரசின் தலைமை அமைச்சர் இருக்கிறார். எனவே, மாநில அரசுகளின் காங்கிரஸ் முதலமைச்சர்களும் காங்கிரஸ் தலைமை யமைச்சரின் ஏஜெண்டுகளாக ஆகி விடுகின்றனர்.

காங்கிரசுக் கட்சியின் அடிமுதல் முடிவரை, மாநிலக் காங்கிரஸ் கமிட்டிகளுக்குத் தனித்த செல்வாக்கோ தனிப்பட்ட பணிகளோ அல்லது தனித்த கொள்கைகளோ எதுவும் கிடையாது. மாநில அரசுப் பொறுப்பேற்றிருக்கும் காங்கிரஸ் முதல் அமைச்சரிலிருந்து அதன் மற்ற எல்லா அமைச்சர்களும் கட்சி மட்டத்தில் மத்திய அமைச்சர்களுக்குக் கட்டுப்பட்டவர்கள்; அரசு மட்டத்தில் மத்திய அமைச்சர்களின் முகவர்கள்.

## பார்லிமெண்டரி போர்டு

காங்கிரசுக் கட்சியின் வலிமை கொண்ட மற்றோர் அங்கம் பார்லிமெண்டரி போர்டு. காங்கிரஸ் கட்சியின் நாடாளுமன்ற நடவடிக்கைகளை முறைப்படுத்தவும் இணைக்கவும் இதற்கு அதிகாரம் உண்டு.

காங்கிரஸ் கட்சியின் தலைமைப் பீடமான காரியக் கமிட்டி, கட்சி மட்டத்தில், எப்படி ஆணைகளைப் பிறப்பித்து மாநிலக் கமிட்டிகளைக் கட்டுப்பட வைக்கிறதோ அதேபோல் 'காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டு' மாநிலங்களின் சட்ட மன்றம் சார்ந்த—மாநில அரசுகளைச் சார்ந்த—நடவடிக்கை களைத் தனது கட்டுக்குள் கொண்டு வந்து விடுகிறது.

பொதுத் தேர்தல்களில் போட்டியிடும் எல்லா மாநில வேட்பாளர்களையும் பொறுக்கி எடுப்பதும் மத்திய பார்லிமெண்டரி போர்டே ஆகும். அந்தந்த மாநிலக் காங்கிரஸ் கமிட்டி களுக்குத் தனது வேட்பாளர்களைத் தேர்ந்தெடுக்கும் உரிமை கிடையாது. காங்கிரசு பார்லிமெண்டரி போர்டு இந்திய மாநிலக் காங்கிரஸ் அமைச்சர்களையும் முதல் அமைச்சர்களை யும் தயாரிக்கிறது.

அதைப் போலவே, காங்கிரஸ் மேலிட ஒப்புதலில்லாமல், மாநில முதலமைச்சர்கள் யாரும் தங்களுடைய அமைச்ச ரவையை அமைத்துக்கொள்ள முடியாது. தேர்தல்கள் முடிந்த வுடன் மாநில முதலமைச்சர் யார், மற்ற அமைச்சர்கள் யாவர், என்ற பிரச்சனைகளைத் தீர்த்துக் கொள்வதற்காக மாநிலக் காங்கிரசுக் கட்சித் தலைவர்கள் டெல்லிக்கு ஓடுவார்கள். டெல்லியில்தான் அதன் சூத்திரக் கயிறு உண்டு. அங்கே பேரங்கள் நடக்கும், ஒட்டு வேலை நடக்கும்; தேவையேற் பட்டால் புலன் விசாரணைகூட நடக்கும்—மாநில முதல் அமைச் சரைப் பொறுக்குவதற்காக. அதன் பின்னர்தான் மாநில அரசின் சகல அதிகாரங்களையும் பொறுப்பேற்றுக் கொள்ளக் கூடிய மாநில முதல்வர்களும் மற்ற அமைச்சர்களும் உற்பத்தியாகின்றனர்.

மாநிலக் காங்கிரஸ் கமிட்டிகளின் சின்னஞ்சிறிய நிர்வாகப் பிரச்சனைகளுக்குக் கூட, டெல்லியிலுள்ள காரியக் கமிட்டியின் கருணைக் கண்ணோட்டம் வேண்டும். இப்படி மாநில அரசுகளில் பொறுப்பேற்கின்ற மாநிலக் காங்கிரஸ்காரர்களை உருவாக்கு வதும் பின்னர் பேணிக் காப்பதும், மத்தியக் காங்கிரஸ் காரியக் கமிட்டி. மாநில அரசுகளை ஆக்குவதும் காப்பதும் அழிப்பதும் மத்திய காரியக் கமிட்டி. இந்தியக் குடியரசுக் கூட்டாட்சி நாட்டின் ஆளுங் கட்சியான காங்கிரஸ் கட்சியின் ஸ்தாபன அமைப்புமுறை இதுதான்.

மத்திய மயமாக்கும் தன்மையைக் கொண்ட காங்கிரஸ் கட்சியின் நடைமுறை ஏற்பாட்டால் மாநிலத்திற்கென்று தனித்த உரிமைகளும் அதிகாரங்களும் எதுவுமிருப்பதில்லை. மாநிலக் காங்கிரசுக் கட்சிகள், தகுதியிலும் நிலையிலும் மற்ற எல்லா வகையிலும் மத்தியக் காங்கிரசுக் கட்சியமைப்புக்கு அடங்கிய ஊழியர்களாகவே மாறிவிடுகின்றன.

50 கோடி மக்களுடைய அரசியல் பிரச்சனைகளையும் பல திறப்பட்ட பொருளாதாரச் சிக்கல்களையும் தீர்த்து வைப்பதும் செயல்படுத்துவதும், டெல்லியிலுள்ள காங்கிரசு மேலமைப்புத் தான்; 'அரசியல் கொள்கை'—'பொருளாதாரக் கொள்கை'—'தொழிற் கொள்கை'—'வெளிநாட்டுக் கொள்கை'—'தொழிலாளர் கொள்கை'—இன்னோரன்ன அரசு சம்மந்தமான பல கொள்கைகள்;—'அரசமைப்புச் சட்டத் திருத்தங்கள்'—'அரசமைப்பு நடைமுறை'—'நிர்வாகப் பணி' இன்னோரன்ன செயல் முறைகள்; நூற்றுக்கணக்கான காங்கிரசு அமைச்சர்களுடைய 'அரசாங்க நடவடிக்கைகள்'—'மாநில ஆளுநர்கள்'—'குடியரசுத் தலைவர்' முதலானவர்களின் நிர்வாக ஏற்பாடுகள்; இப்படி இன்னும் எத்தனை யெத்தனையோ!! அத்தனையும் டெல்லி பீடத்திலுள்ள காங்கிரசு மேலிடத்தின் தயாரிப்புகள்தான்—உருவாக்கங்க்ள்தான், இதுதான் அகில இந்தியக் க்ாங்கிரஸ் கட்சியின் செயல்முறை—நடைமுறை,

மத்தியத்தின் மேலாண்மை கொண்ட காங்கிரஸ் கட்சியின் அமைப்பு முறையும் அதன் பல்லாண்டுச் செயல் முறையும், நாட்டு மக்களிடத்தில் ஓர் அரசியல் பிரமையைத் தோற்றுவித்துள்ளது. மாநிலங்களும் மாநில அரசுகளும், மாநில மக்களின் அரசியல் பொருளாதார நலன்களுக்குப் பொறுப்பானவை யல்ல. மத்திய அரசின் ஒரு பகுதியே மாநில அரசுகளாகும். "டெல்லியில் எடுக்கும் மேலிட முடிவுகளில் தான் மாநில மக்களின் உரிமைகளும் பொருளாதார நலன்களும் நிலைபெற்று நிற்கின்றன" என்ற ஒரு பொய்த் தோற்றத்தை அகில இந்தியக் காங்கிரஸ் கட்சி மாநில மக்களிடையே ஆழமாகப் பதித்து வைத்து விட்டது.

## V

## காங்கிரஸ் மேலிடமும் மாநில சுயாட்சியும்

காங்கிரஸ் கட்சியின் இந்த அமைப்பு முறையும் செயல் முறையும் இன்று நேற்று உருவானதல்ல. விடுதலை இயக்க காலத்திலிருந்தே அகில இந்தியக் காங்கிரஸ் கட்சி மத்திய

மயமாக்கப்பட்ட அமைப்பு முறை மூலமாகத் தான் செயல்படு கிறது. பிரதேசக் காங்கிரஸ் அமைப்புக்களிலிருந்து அதிகாரங் களும் உரிமைகளும் காங்கிரஸ் மேல் மட்டத்திற்குச் செல்வ தில்லை. மாறாக, மத்தியக் கட்சி அமைப்பிலிருந்தே, மாநிலக் கட்சி அமைப்புக்களுக்கு அதிகாரங்களும் உரிமைகளும் கொள்கைகளும், செயல்முறைகளும் இறக்குமதி ஆகின்றன.

மாநிலங்களிலிருக்கும் பிரதேசக் காங்கிரசுக் கமிட்டிகள் கூட ஒரு வகையில், மத்தியக் காங்கிரசுக் கட்சியால் படைக்கப் பட்டவையே. 1908–ஆம் ஆண்டிலேயே மொழிவாரி அடிப் படையில், பீகார் பிரதேசக் காங்கிரஸ் கமிட்டியை, மத்தியக் காரியக் கமிட்டி தோற்றுவித்தது. 1920-ஆம் ஆண்டிலிருந்து, பல பிரதேசக் கமிட்டிகளைக் காங்கிரஸ் கட்சியின் மேலிடம் தனது ஆட்சி நிர்வாக வசதிக்காக, மொழிவாரி அடிப்படையில் தோற்றுவித்துக் கொண்டது. இன்றைய அரசமைப்புச் சட்டத் தில், மத்திய அரசு விரும்பினால் மாநில அரசுகளின் எல்லைக் கோட்டினையும் பரப்பையும் மாற்றுவதைப் போலக் காங்கிரஸ் கட்சியிலும் அதன் பிரதேச அமைப்புக்கள் மத்தியக் கமிட்டி யாலேயே உருவாக்கப் பட்டன.

"1917–ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டம்" அமுலுக்கு வந்தது, முதன் முறையாகத் தன்னாட்சிக் கொள்கை மாநிலங் களில் முகிழ்த்தெழுந்தபோது, மாநில அரசுகளைக் கைப்பற்று வதற்குரிய தேர்தல்களில், பிரதேசக் காங்கிரஸ் அமைப்புக்கள் ஈடுபடக்கூடாதென்று 'அகில இந்தியக் காங்கிரஸ்' முடிவெடுத் தது. அந்த மேலிடத்தின் முடிவினுக்கேற்ப மாநிலக் காங்கிரஸ் அமைப்புக்கள் மாநிலத் தேர்தல்களில் ஈடுபடவில்லை.

"1935–ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தில்" மாநில சுயாட்சிப் பகுதி மாநிலங்களில் அமுலுக்கு வந்தபோது, அதற் கான மாநிலத் தேர்தல்களில் ஈடுபட வேண்டுமென அகில இந்தியக் காங்கிரஸ் எடுத்த முடிவுப்படி, மாநிலத் தேர்தல் களில் மாநிலக் காங்கிரஸ் அமைப்புகளும் ஈடுபட்டன.

1937-ஆம் ஆண்டில் மாநிலங்களில் மட்டும் நடைபெறும் தேர்தல்களுக்காகக் காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டு, இந்தியத் துணைக் கண்டத்தை நான்கு பிராந்தியங்களாகப் (Zones) பிரித்துக் கொண்டு செயலாற்றிற்று. காங்கிரஸ் கட்சி யின் தேர்தல் அறிக்கையையும், அகில இந்தியக் காங்கிரஸ்

கட்சியே உருவாக்கி வெளியிட்டது. மாநில வேட்பாளர்களை யும், மத்திய அமைப்புத்தான் தேர்ந்தெடுத்தது. தேர்தல்களில் வெற்றியடைந்த பின்னர் மாநில அரசுகளின் பொறுப்பை ஏற்றுக் கொள்வதற்குத் தேவையான நடைமுறைகளையும் மத்தியக் கட்சி அமைப்புத்தான் வகுத்துக் கொடுத்தது.

மாநிலப் பகுதிகளிலுள்ள தனித்தன்மைகளுக்கேற்றவாறு, பிரதேசக் காங்கிரசுக் கமிட்டிகள், மாநிலப் பிரதமர்களையும் அமைச்சர்களையும் அமைச்சரவையையும் படைத்துக்கொள்ள உரிமை பெற்றிருக்க வில்லை. மத்தியக் கமிட்டியே மாநிலப் பிரதமரையும் வேறு அமைச்சர்களையும் தேர்ந்தெடுத்தது. மாநில அரசுகளில் மாநிலப் பிரதம அமைச்சர்கள் பொறுப் பேற்றுக் கொண்ட பின்னர் கூட நடைமுறையில் செயல் படுத்தக் கூடிய, பல திட்டங்களையும் கொள்கைகளையும் அந் தந்த மாநிலங்களுக்கேற்றவாறு அந்தந்த மாநில அமைச்சர் களால் உருவாக்கிக் கொள்ள முடியவில்லை. காரணம், அவர் களுக்கு அந்த உரிமையைக் காங்கிரசின் மேலிடம் தரவில்லை.

எல்லா மாநிலங்களுக்கும் உரிய அரசுக் கொள்கைகளையும் திட்டங்களையும் வார்தா ஆசிரமத்தில் இயங்கி வந்த 'காங்கிரஸ் மேலிடமே, வகுத்துக் கொடுத்தது. பண்டித நேரு, வல்லபாய்ப் பட்டேல், பாபு. இராசேந்திரப் பிரசாத் மற்றும் அபுல்கலாம் ஆசாத் ஆகிய பெருந் தலைவர்கள் தேர்தலுக்கு நிற்காமல், இந்தியா வைப் பிராந்திய வாரியாகப் பிரித்துக் கொண்டு மாநில அரசு களைக் கண்காணிப்பதற்கும், மாநில அமைச்சரவைகளை மேற் பார்வை செய்வதற்கும் மற்ற அமைச்சர்களைக் கண்காணிப் பதற்கும் நியமிக்கப்பட்டிருந்தனர். எல்லா மாநில அரசுகளுக்கு முரிய கொள்கைகளையும் திட்டங்களையும், 'வார்தா' ஆசிரமத் தில் இயங்கி வந்த இந்த 'மத்தியக் கண்காணிப்புக் குழுவே', உருவாக்கி நிறைவேற்றிற்று. ஒவ்வொரு பிராந்தியமும் ஒவ்வொரு தலைவரிடம் கண்காணிப்புச் செய்வதற்காக ஒப் படைக்கப் பட்டது.

ஆங்கிலேய ஆதிக்க மத்திய அரசை எதிர்த்து 1937–ஆம் ஆண்டு முதல் 1939–ஆம் ஆண்டு வரை நடைபெற்ற மாநில சுயாட்சிப் போராட்டங்கள், அகில இந்தியக் காங்கிரசுக் கட்சி யின் மத்திய அமைப்பால் உருவாக்கப் பட்டவைதான். பீகாரி லும், உத்தரப் பிரதேசத்திலும் மத்திய அரசோடு ஏற்பட்ட

மோதல்கள் யாவும், அந்தந்த மாநிலத்தில் உதித்தவை யல்ல; மாறுகக் காங்கிரசுக் கட்சியின் மத்திய அமைப்பினுடைய அழுத்தத்தால் உருவாக்கப் பட்டவையே அவை.

1939-ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்களில், மாநிலக் காங்கிரசு அமைச்சரவைகள் பதவி விலகுவதாக எடுத்த முடிவும் மாநில அமைப்புகள் தனித்தனியாக எடுத்த முடிவல்ல. காங்கிரசுக் கட்சியின் மேலிடமே அப்படி ஒரு முடிவைச் செய்தது. அதன்படி, மாநிலக் காங்கிரசு அமைச்சரவைகளும் பதவி விலகின.

## எல்லைக் கோடு மறைந்தது

மாநில அரசுகளின் உரிமைகளும் அதிகாரங்களும், காங்கிரசுக் கட்சியின் மேலிடத்தின் கட்டுப்பாட்டுக்குள் இயங்கி வந்தன. மாநிலக் காங்கிரசு அரசுகள் அந்தந்த மாநில மக்களுக்குப் பொறுப்பான அரசுகளாக இயங்கவில்லை. அவை, மத்தியக் காங்கிரசு மேலிடத்திற்கு ஏஜண்டுகளாகவே மாநிலங்களில் இயங்கி வந்தன.

நாடாளு மன்ற சனநாயக முறையின்படி அந்தந்த மாநிலக் காங்கிரசு அமைச்சரவை, நியாயமாக அந்தந்த மாநிலச் சட்ட மன்றத்திற்கே பொரும்பான்மையாய் இருத்தல் வேண்டும். ஆனால், காங்கிரசுக் கட்சி மட்டத்தில், அதற்கு வேறு பொருள் உண்டு. 1937-ஆம் ஆண்டில் மாநிலக் காங்கிரசு அரசுகள் (அமைச்சரவை ) அந்தந்த மாநிலச் சட்ட மன்றத்திற்கும் பொறுப்பானவையா யியங்க வில்லை. அந்தந்த மாநில மக்களுக்கும் பொறுப்பானவையா யிருக்க வில்லை. மாறுக, அவை அந்த அரசுகள் சார்ந்திருக்கும் (காங்கிரசுக்) கட்சித் தலைமைப் பீடத்திற்கே பொறுப்பானவையா யிருந்தன. கூட்டாட்சி முறைக்கும், மாநில சுயாட்சிக் கொள்கைக்கும் மத்திய மயமாக்கப் பட்ட அகில இந்தியக் காங்கிரசுக் கட்சி செய்து கொண்ட அர்த்தம் இதுதான்.

மாநிலக் காங்கிரசுக் கட்சி அமைப்புகளும், மாநிலத் தலைவர்களும் மாநிலப் பிரதம அமைச்சர்களும், மாநிலத்தின் மற்ற அமைச்சர்களும் ஏன், மாநில அரசே கூட அகில இந்தியக் காங்கிரஸ் கட்சியின் மேலிடத்திற்கு அடிமைகளாக்கப் பட்டன. மாநில சுயாட்சி உரிமைகளும் தனித் தன்மைகளும், மாநில

மக்களுடைய பல கோரிக்கைகளும் மாநில அரசுகளின் கடமைகளும், அகில இந்தியக் காங்கிரஸ் மேல் மட்டத்தின் கைவிரல் அசைவிற்கு ஏற்றபடி ஆடக்கூடிய அரசியல் சூழ்நிலையை, 1937-ஆம் ஆண்டிலிருந்தே நடைமுறைக்குக் கொண்டு வந்து விட்டது காங்கிரஸ் கட்சி.

குடியரசு நாடுகளில், குடியாட்சி முறையில் அரசு முறையோடு நடைபெறுவதற்கு அரசியல் கட்சிகள் தேவைதான்.

ஆனல் அரசு வேறு; அரசை ஆளும் கட்சி வேறு, அந்த அரசை, ஓர்அரசியல் கட்சி ஆளக்கூடிய காரணத்திஞல், அந்த அரசியல் கட்சியே அரசாகவும் மாறி விடாது. கட்சி மட்டம் தனித்துச் செயல்பட வேண்டும். அரசின் மட்டமும் தனித்துச் செயல்பட வேண்டும். இல்லாவிடில் குடியாட்சிக்குப் பொருள் இருக்காது; சர்வாதிகார நாடுகளில்தான் அதன் அரசும், ஆட்சிக் கட்சியும் ஒன்ருயிருக்கும். ஏனெனில், ஆளுங் கட்சியைத் தவிர வேறு அரசியல் கட்சிகள் அந்நாடுகளில் இல்லை.

இந்தியத் துணைக் கண்டத்தில் கூட்டாட்சி முறையும் குடியரசும் நடைபெறுகின்றன. என்ருலும்,இந்திய மாநிலக் காங்கிரஸ் அரசுகளையும் மாநிலக் காங்கிரஸ் கட்சியையும் பிரித்துக் காட்ட முடியாத அளவிற்குக் காங்கிரசுக் கட்சியின் அமைப்பு முறை சர்வாதிகார முறையைப் படைத்து விட்டது.

மத்தியக் கட்சியின் மேலிடத்திற்குக் கட்டுப்படுகின்ற மாநில அரசுகளின் அடிமைத்தனம் 1939-ஆம் ஆண்டோடு முடிவு பெற்றுவிட வில்லை. காங்கிரசின் மத்தியக் கட்டுப்பாட்டு முறையால் ஏற்பட்ட பல வெறுக்கத்தக்க அரசியல் விளைவுகள் தொடர்ந்து இன்னும் மாநில அரசுகளின்மேல் படர்ந்து நிற்கின்றன. மத்திய மயமாக்கப்பட்ட காங்கிரசுக் கட்சியமைப்பின் செயல் முறையால் 1937-ஆம் ஆண்டிலிருந்தே மாநிலத் தன்னுட்சி யுரிமைகள் எப்படிப் புதை குழிக்குள் தள்ளப்பட்டு விட்டன என்பதை, பேராசிரியர் கே. ஆர். பாம்வெல் அவர்கள் சுட்டிக் காட்டும்போது,

''மொத்தமிருந்த'' மாநிலங்களில் 8 மாநிலங்களில் நடைபெற்ற காங்கிரசின் ஆட்சிமுறை, அரசியல் கட்சிக்கும் அரசிற்கும் இடையே இருக்க வேண்டிய எல்லைக் கோட்டை முழுவதும் மங்கச் செய்து விட்டது. காங்கிரசின் இந்த

ஆட்சிமுறை, தன்னுட்சி நடைபெற்று வந்த கால கட்டத்தையும் தாண்டி, பல்லாண்டுகளுக்குப் பின்னர் (சுதந்திர இந்தியாவில்) கூட அதனுடைய நீண்ட நெடிய நிழலைப் பரப்பி வைத்து விட்டது."[8]

"The Blurring of the dividing line between Party and Government which characterised the working of the Congress Gevernment in 8 out of the 11 Provinces cast its shadow far beyond the years of Provincial Autonomy."

## VI

## மூன்று கட்டங்கள்

மத்திய - மாநில உறவுகள் (மாநில சுயாட்சி), 1950–ஆம் ஆண்டிற்குப் பின்னர் மூன்று கட்டங்களைத் தாண்டி வந்துள்ளதென அரசியல் வித்தகர்கள் கருதுகின்றனர். மாநிலத் தன்னுட்சியினைச் சுருங்கிய அளவிலும், மத்திய வல்லாட்சியை விரிந்த அளவிலும், பெற்றுத் தந்த நம் அரசியலமைப்பு, சென்ற 24 ஆண்டுகளாக இந்தியத் துணைக் கண்டத்தில் செயல்பட்டு வருகிறது. முதல் 17 ஆண்டுகளில் (1950 முதல் 1967 வரை) காங்கிரசு என்ற தனிப் பெரும் சக்தியின் ஒரு கட்சி அரசாட்சி இந்தியாவில் நிலைத்து நடைபெற்றதால் சுருங்கிய மாநிலத் தன்னுட்சி கூட இன்னும் நெருக்கடிக்கு உள்ளாக்கப் பட்டது. மாநிலங்களின் உரிமைகளும் அதிகாரங்களும் மேலும் சிதைந்தன. அரசமைப்பால் கொடுக்கப்பட்ட அரை குறைத் தன்னுட்சியாவது இனி மாநிலங்களுக்கு மிஞ்சுமா என்ற அளவிற்கு அச்சமும் ஐயமும் வளரலாயிற்று.

இது சுதந்திர இந்தியாவின் மாநிலத் தன்னுட்சியினுடைய முதல் கட்டம்.

### இரண்டாம் கட்டம்

நாட்டிற்கேலாத பல அரசியல் பொருளாதாரக் கொள்கைகளினுலும் காங்கிரசின் உட்கட்சிப் பூசலினுலும் ஒற்றைக் கட்சி (காங்கிரசு) ஆட்சி மெல்ல மெல்லச் சரியத் தொடங்கிற்று.

---

8 "The Foundations of Indian Federalism", (1967), P. 222.

மத்திய அடக்கு முறையைத் தாங்காத மாநிலங்கள், தம் அடிமைத் தனத்தை உணரலாயின. தென்னகத்தில் ''திராவிட முன்னேற்றக் கழகமும்'' பஞ்சாபில் '' பஞ்சாபிசுபாவும் '' இன்னும் பல்வேறு மாநிலக் கட்சிகளும் மாநில உரிமைகளைக் காப்பதற்காக மக்கள் மன்றத்தில் தங்களது இலட்சிய முழக்கங்களை எழுப்பின. அகில இந்தியக் காங்கிரசுக் கட்சியின் ஒப்புயர்வற்ற ஓராட்சியும் வீழ்ச்சியுறத் தொடங்கிற்று. 1967-ஆம் ஆண்டில் 9 மாநில அரசாங்கங்களைக் காங்கிரசுக் கட்சி யிழந்தது. அதுவரை அசைக்க முடியாத வலிமையைப் பெற்றிருந்த காங்கிரஸ் மத்திய அரசும் பலம் இழந்து நின்றது. மாநில சுயாட்சியை ஊடுருவிப் பாயும் காங்கிரசுக் கட்சியின் தன்னிகரில்லாத் தனி நிலையும் தாழ்வுற்றது. இது மாநிலத் தன்னாட்சியின் இரண்டாம் கட்டம்.

## மூன்றும் கட்டம்

'கெட்டுப் புத்தி வந்தது'; 'கண் கெட்டபின் சூரிய நமஸ்காரம்' என்பார்கள். 1967-ஆம் ஆண்டில் மாநிலங்களில் தோல்வியைத் தழுவிக் கொண்ட பின்னர், மாநில உரிமைகளை முதன் முதலாக உணரத் தலைப்பட்டது. காங்கிரசுக் கட்சியின் மேலிடம். 1967-ஆம் ஆண்டில் நடைபெற்ற பொதுத் தேர்தலுக்குப் பின்னால் கூடிய முதல் நாடாளு மன்றக் கூட்டத்தில் காங்கிரசு மத்திய அரசு, மாநிலங்கள் பற்றிய தனது அதிகாரப் பூர்வமான கொள்கையைக் குடியரசுத் தலைவர் உரை மூலமாக வெளியிட்டது.

மத்திய—மாநில உறவு பற்றிய தெளிவான விளக்கம், 17 ஆண்டுகளுக்குப் பின்னர் முதன் முறையாக மத்திய நாடாளுமன்றத்தில் ஒலித்தது. '' அரசியலமைப்பில் செய்த வரையறையை மத்திய அரசு இனி மீறுவதில்லை' என்றும் 'மாநிலத் தன்னாட்சியில் எவ்வகை ஊடுருவல்களையும் செய்வதில்லை' என்றும் மத்திய அரசு மாநிலங்களுக்கு உறுதியளித்தது. அதுமட்டுமா? மாநிலங்களின் ஒத்துழைப்பைக்கூட மத்திய அரசு மண்டியிட்டு வேண்டி நின்றது. மாநிலத் தன்னாட்சியின் எதிர்காலம் ஒளி பொருந்தியதாக இருக்குமென மாநிலத் தலைவர்களும் கூட்டாட்சி விற்பன்னர்களும் எதிர்பார்த்தனர்.

ஆனால், இந்த நம்பிக்கை நீண்டகாலம் நீடிக்க வில்லை. 1969-ஆம் ஆண்டில் காங்கிரஸ் கட்சி இரு கூறுகளாகப் பிளந்தது. இந்திராவின் தலைமையில் இயங்கிய மத்திய அரசு,

இன்னும் வலிமை குன்றியது. இதற்கிடையில் உருவான பாக்கிஸ்தான் போர், இந்திரா காங்கிரசிற்கும் இந்திராவிற்கும் மறைமுகமாகக் கிடைத்த வரப்பிரசாதம் ஆயிற்று. 1971-ஆம் ஆண்டில் நடைபெற்ற ஐந்தாம் பொதுத் தேர்தல்களில், தமிழகம் நீங்கலாக மற்ற மாநிலங்களை மீண்டும் இந்திரா காங்கிரசே கைப்பற்றியது. மத்திய நாடாளு மன்றத்திலும் மிகப் பெரும்பான்மை பலத்தைப் பெற்றுக் கொண்டது.

இந்திரா காந்தியாரின் 'இணையற்ற' தலைமையை இந்திய நாடும் பெற்றது; நலிந்துவிட்ட காங்கிரஸ் கட்சியும் பெற்றுக் கொண்டது. எனவே, காங்கிரசின் பழைய வரலாறும் திரும்பத் தொடங்கிற்று - வன்மை கொண்ட மத்தியத்தின் ஒற்றை ஆட்சித் தன்மைகளும் புத்துயிர் பெற்றன. மாநிலங்களை அடிமைப்படுத்தும் காங்கிரசுக் கட்சியின் ஒற்றை ஆட்சிமுறைகள் மீண்டும் தீவிரமாகச் செயல்முறைப் படுத்தப் பட்டன. இது மாநிலத் தன்னுட்சியின் மூன்றும் கட்டம்.

இந்திய நாடு சுதந்திரம் பெற்ற பின்னர், அகில இந்தியக் காங்கிரசுக் கட்சியின் ஆட்சியில், மேற்சொன்ன மூன்று கால கட்டங்களில், எவ்வகையில் குறைந்த பட்ச மாநில சுயாட்சியும் மறைந்து விட்டது என்பதை இனிப் பார்ப்போம்.

## VII

## காங்கிரஸ் ஆட்சியின் ஒற்றையாட்சி

கூட்டாட்சி நாட்டில், மத்திய - மாநில மோதல்கள் தவிர்க்க முடியாதவை. மாநில அரசுகளுக்கும் மத்திய அரசுக்கும் இடையில் பிணக்குகள் ஏற்பட்டால் அவைகளைத் தீர்த்து வைப்பதற்காக அரசியலமைப்பில் செய்யப்பட்டுள்ள பரிகாரங்களைத் தேடிக் கொள்வதுதான் கூட்டாட்சி முறையின் இலக்கணமாகும்.

அரசியலமைப்புச் சட்டத்தில் கொடுக்கப்பட்டிருக்கும் பரிகாரங்கள் ஒருக்கால் ''நியாயமானவையாக'' இல்லாவிட்டாலும் அல்லது ''போதுமானவையாக'' இல்லாவிட்டாலும் மாநிலங்களின் கருத்தை ஒட்டி நடைமுறைத் தேவைகளுக்கு ஏற்ற வகையில் அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டும்.

அரசமைப்பில் உறுதி செய்யப்பட்ட சட்டபூர்வமான ஏற்பாடுகள், அவ்வப்போது தோன்றுகின்ற மத்திய—மாநிலப் பிணக்குகளை நியாயமாகத் தீர்ப்பதோடு கூட்டாட்சி முறையையும் செம்மையாக வளர்க்கும். மேலும் அது எதிர்காலச் சந்ததிகளுக்கும் ஒரு முன் மாதிரியாக அமைந்திருக்கும்.

இதனை விடுத்து, மத்திய—மாநிலப் பிணக்குகளைத் தீர்ப்பதற்காக அரசியலமைப்புக்கு அப்பாற்பட்ட (Extra Constitutional) சில அரசியல் முறைகளை நாடுதலானது கூட்டாட்சி நாட்டில் சம தகுதியுடன் கூடிய மத்திய அரசிற்கோ அல்லது அதன் மாநிலங்களுக்கோ, ஏதோ ஒரு வகையில் அநீதியை இழைத்துவிடும்; பொதுவாக வலுவில்லாத பங்காளிகளான மாநிலங்கள் மேல்தான் அந்த அநீதியின் விளைவுகள் படிந்துவிடும்.

அரசியல் சட்டத்திற்கு அப்பாற்பட்ட அந்த வழிமுறைகள் எவை?

இந்தியத் துணைக் கண்டத்தில் இந்தியத் தேசியக் காங்கிரஸ் கட்சியால் உருவாக்கப்பட்டிருக்கும் ஒருவகையான மத்திய—மாநிலங்களின் புதுவகைத் தொடர்பில் அரசியல் சட்டத்திற்கப்பாற்பட்ட அந்தப் பரிகாரங்கள் உருவாகின்றன. காங்கிரசின் மத்திய அமைப்பு, மாநிலக்கட்சி யமைப்புக்களின் மேல் எசமானத் தன்மையையும் மேலாண்மையையும் கொண்டு விளங்குகிறது என்பதை நாம் பார்த்தோம். கட்சி மட்டத்தில், அகில இந்தியக் காங்கிரசுக் கமிட்டியும் — குறிப்பாகக் காரியக் கமிட்டியும் — ஆண்டானின் தகுதியிலுள்ளன; பிரதேசக் காங்கிரஸ் அமைப்புகள், கட்சி ஒழுங்கிற்குக் கட்டுப்பட்ட அடிமை நிலையில் உள்ளன. அதாவது, சம தகுதியின்றி மாநிலக் கட்சி மட்டம் இயங்குகின்றது. ஆக, காங்கிரசுக் கட்சியைப் பொறுத்தவரை, மத்திய - மாநிலத்திற்கு மிடையே யிருக்கும் தொடர்பானது, ஆண்டானுக்கும் அடிமைக்கும் இடையேயுள்ள தொடர்பாகும். இந்தக் கட்சியுறவே, மத்திய – மாநில அரசுகளுக்குமிடையே யிருக்கும் உறவாகவும் மாறி யிருக்கின்றது.

மத்திய–மாநில அரசுகளுக்குள் பிணக்கு ஏற்படும்போது, அவை, அரசமைப்புச் சட்ட விதிகளால் தீர்மானிக்கப்படாமல் காங்கிரசுக் கட்சி மட்டத்தில் ஏதோ ஒரு வகையில் தீர்க்கப்

பட்டு விடுகின்றன. பொதுவாக மத்தியக் கட்சி அமைப்பு திணிக்கும் அரசியல் பரிகாரங்களை யெல்லாம் மாநில அரசுகள் கட்டுப்பாட்டிற்கும் ஒழுங்கு முறைக்கும் கட்டுப்பட்டு ஏற்றுக் கொள்கின்றன. இதற்குச் சில விதிவிலக்குகளும் இருக்கலாம்; ஆனால் விதிவிலக்கு மட்டுமே பொது விதியாகி விடாதல்லவா?

மத்திய-மாநில அரசுகளின் பிணக்குகள் கட்சிப் பிரச்சினை கள் அல்ல. ஆனால், அவை கட்சி மட்டத்தில் தீர்க்கப்படும் போது, பல மாநில உரிமைகள் பறிபோய் விடுகின்றன என் பதை யாரும் மறுக்க முடியாது. அதற்காக அரசியல் சட்டவிதி கள், மீறப்படாமல் கூட இருக்கலாம். ஆனால்,அரசியற் சட்டப் பரிகாரங்கள் தனித் தொதுக்கி வைக்கப்படுகின்றன என்பது மட்டும் உண்மை.

சென்ற 24 ஆண்டுகளில் நடைபெற்ற பல சான்றுகளை இதற்காதாரமாகக் காட்டலாம்.

அவைகளில் சில:—

1. மொழிவாரியாக மாநிலங்கள் பிரிக்கப்பட வேண்டு மென்ற சீரிய கொள்கையைக் காங்கிரசுக் கட்சியின் மேலிடம், இந்திய விடுதலைக்குப் பின்னர் அறவே விட்டொழித்து விட விரும்பியது. ஆனால், அது மாநிலங்களின் அடிப்படை உரிமை. எனவே, அரசியல் நிர்ணய சபையிலும் காங்கிரசுக் கட்சி மட் டத்திலும் மத்திய – மாநிலப் பிணக்குகள் ஏற்பட்டன. இறுதி யாக அந்தப் பிணக்குகள் கட்சி மட்டத்தில் தீர்த்து வைக்கப் பட்டன. ஆனால், அதன் விளைவு—மொழிவாரி மாநிலங்களின் சீரமைப்பு ஒத்தி வைக்கப்பட்டது. காங்கிரசுக் கட்சிக்கும் அப்பாற்பட்ட பொது மக்களின் புரட்சி வாயிலாக, 15 ஆண்டு காலத்தில் அவை மெல்ல மெல்லத் தீர்க்கப்பட்டன.

2. இந்தி ஆட்சி மொழியாயிற்று. அதைப்பற்றி இதற்கு முன் அத்தியாயத்தில் தெளிவாக விளக்கப்பட்டுள்ளது. அரசியலமைப்புச் சபையில் தொடங்கிய மத்திய—மாநிலப் பிணக்கு, காங்கிரசுக் கட்சி மட்டத்தால் மூடி மறைக்கப்பட்டது; பூசி மெழுகப்பட்டது. விளைவு—மாநிலங்களின் மொழியுரிமை பறி போயிற்று. 1963–ஆம் ஆண்டில் மீண்டும் தலை தூக்கிய மத்திய—மாநிலப் பிணக்கு, காங்கிரசுக் கட்சியைத் தாண்டிய பொதுமக்களின் புரட்சியால் ஒரு பரிகாரத்தைக் கண்டது.

புரட்சி வெடிக்காமல் இருந்திருந்தால் காங்கிரசு, தனது கட்சி மட்டத்திற்குள் இதற்கும் ஒரு பரிகாரம் செய்திருக்கும், மாநிலத்தின் பிறப்புரிமைக் கெதிராக.

3. அரசியலமைப்பில் மாநிலங்களுக்கு அளிக்கப்பட்ட பல அதிகாரங்கள், மத்தியப் பட்டியலுக்கும் பொதுப் பட்டியலுக்கும் காங்கிரசுக் கட்சியின் கட்டுப்பாட்டினல் மாற்றப்பட்டு விட்டன. குட்டினல் குனிந்து போகும் மாநிலக் காங்கிரசுத் தலைவர்கள், மத்தியத் தலைவர்களுக்கு நல்ல பிள்ளையாவதற்காக அரசியல் சட்டத்தால் அறுதியிட்டுக் கொடுக்கப்பட்ட பல மாநில அதிகாரங்களை மத்திய அரசிற்குத் தூக்கிக் கொடுத்து விட்டனர். சர்க்கரை, புகையிலை, ஜவுளி, பட்டு ஆகியவைகளின் மேல் விதிக்கப்படக் கூடிய மாநிலத்திற்குச் சேர்ந்த விற்பனைவரி யுரிமையைத் தேசிய வளர்ச்சி மன்றத் தீர்மானத்தின் மூலமாக, மாநிலக் காங்கிரசு அமைச்சர்கள், தமது அரசுகளைக் கலந்து ஆலோசிக்காமல் கூட மத்திய அரசிற்குத் தாரை வார்த்துக் கொடுத்து விட்டனர்.

4. அரசியல் சட்டத்தில் செய்யப்பட்ட பல திருத்தங்களின் மூலமாகவும் வேறு வகைகளிலும் பல மாநில அதிகாரங்கள் மத்திய அரசின் கைக்குச் சென்று விட்டன. அத்திருத்தங்களுக்கும் அரசியல் ஏற்பாடுகளுக்கும் காரணம், மாநிலக் காங்கிரசுத் தலைவர்கள் கட்சி மட்டத்தில் அவைகளுக்கு ஒத்துக் கொண்டதே.

5. மாநிலங்களவையின் தீர்மானங்கள் மூலமாக, இன்னும் சில மாநில அதிகாரங்களை மத்திய அரசு பெற்றுக் கொண்டு உள்ளது. காங்கிரசுக் கட்சி மாநில நலன்களுக் கெதிரான பல அகில இந்தியச் சேவைகளை (All India Services) உருவாக்குவதற்காக மாநிலங்களவையில் தீர்மானத்தை நிறைவேற்றிற்று. இது எப்படிச் சாத்தியமாயிற்று? மாநிலங்களவையில், பெரும்பான்மையாக இருந்தவர்கள் காங்கிரசுக்காரர்கள் என்ற காரணத்தினுலும் அவர்கள் தங்கள் கட்சி மட்டத்தில் மாநில உரிமைகளை மத்திய அரசிற்குத் தந்துவிடச் சம்மதித்ததினுலும் இவை யெல்லாம் சாத்திய மாயிற்று.

## எல்லாம் நேரு மயம் எல்லாம் மத்திய மயம்

ஒற்றையாட்சியைச் சமைக்கும் மத்திய அரசிற்கு, மையப்படுத்தப்பட்ட காங்கிரசுக் கட்சி மட்டும் போதாதென்று அதன் தனிப்பெரும் தலைவராக ஏறத்தாழ 1964-ஆம் ஆண்டு வரை,

ஒரு சனநாயக சர்வாதிகாரியும் இயங்கி வந்தார்; அவர்தான் சர்வ வல்லமை படைத்த, பண்டித நேரு அவர்கள். பண்டித நேருவைப் பற்றிக் குறை கூறுவதல்ல நமது நோக்கம். அவருடைய தியாகத்திற்கும் சனநாயகக் கொள்கைகளுக்கும் சீரிய தலைமைக்கும் தலை வணங்கி, அதன் பின்னர் இதனைக் கூறுகிறோம்.

தேசிய வளர்ச்சி மன்றம் ஐந்தாண்டுத் திட்டங்களைப் பரிசீலிக்கும் ஒரு மாபெரும் மன்றம். அதில் மாநில முதல்வர்கள் உறுப்பினர்கள் — பண்டித நேரு அவர்கள் அதன் தலைவர். அவருக்கு முன்னால் மாநில உரிமைகளைப் பாதுகாக்கப் பொறுப்பேற்றுக் கொண்டிருந்த மாநில முதல்வர்கள் — சாதாரணப் பிள்ளைப் பூச்சிகள்; வாய் பேசாத ஊமைகள். ஐந்தாண்டுத் திட்டங்கள் தோற்றதற்கும் நிதித் துறையில் மாநிலங்கள் வாட்டப்பட்டதற்கும், தேசிய வளர்ச்சி மன்றத்தில் கூடிய மாநிலக் காங்கிரசு முதல்வர்கள் என்ற பேசா மடந்தைகள் தான் முதன்மையான காரணமாவார்கள் என்றால் அது வியப்புக்குரிய ஒன்றல்ல.

திட்டக் குழுவும் நேரு மயம்; தேசிய வளர்ச்சி மன்றமும் நேரு மயம்; மத்திய அரசும் மாநில அரசுகளும் நேரு வென்ற அகன்ற சக்திக்குள் அடக்கம்; காரியக் கமிட்டியும் நேரு மயம்; எல்லாக் காங்கிரசுக் கமிட்டிகளும் நேரு மயம்; அரசியல் ரீதியில் அவர் சுட்டு விரலுக்கு இந்தியாவே ஆடியதென்றால் அகில இந்தியக் காங்கிரசு எம் மாத்திரம்? அவர் கடைக் கண்பார்வையில் அகில இந்தியக் காங்கிரசிலிருந்து அலகாபாத் மண்டலக் காங்கிரசு வரை ஆடி நின்றது.

காங்கிரசுக் கட்சியின் தூண்களில் ஒருவராக இருந்தவரும் தமிழகம் உட்பட பல மாநிலங்களுக்கு ஆளுநராயிருந்தவருமான, ஸ்ரீ பிரகாசா அவர்கள் நேரு அவர்கள் இறந்த பின்னால் அவரைப் பற்றிக் கூறுகிறார்,

> "...நிலைமைகள் மாறத் தொடங்கின; பண்டித சவகர்லால் நேரு அவர்கள் தலைமையமைச்சர் ஆனார். தலைமையமைச்சரின் பொறுப்பிலிருக்கும் போதே வெகு விரைவாக அகில உலகத் தலைவர்களில் ஒருவராகவும் அவர் ஆகி விட்டார். அவருடைய செல்வாக்கு மற்றும் பெருமபுகழ் மூலமாக, அவர் நினைக்கும் எதனை வேண்டுமானாலும் அவரால் செய்ய முடிந்தது. உண்மையில் அவர் நாட்டினுடைய சர்வசக்தி

வாய்ந்த ஆட்சியாளராக (All Powerful Ruler) மாறினர். நிர்வாகக் காரியங்களைப் பொறுத்த வரையிலும் — ஏன், அரசாங்க விழாக்களிலும் கூட நேரு அவர்களுக்கு அடுத்த தகுதியையே இந்தியக் குடியரசுத் தலைவர் பெற்றிருந்தார். சான்றாக, இந்திய அரசின் தலைவர் மட்டுமே விழாக் காலங்களில் அணி வகுப்பு மரியாதையை(Salute)ஏற்க வேண்டும். ஆனால், சுதந்திர விழா நாளில் டெல்லி செங்கோட்டையில் தலைமை யமைச்சர் (நேரு) அவர்களே அந்த அணி வகுப்பு மரியாதையை ஏற்றுக் கொண்டிருந்தார். மரியாதைக்குரிய குடியரசுத் தலைவரான டாக்டர். இராசேந்திரப் பிரசாத் அவர்கள் ( சுதந்திர நாளில் ) டெல்லியிலிருந்து அ ந்த அணி வகுப்பு மரியாதையை ஏற்றுக்கொள்வதற்குப் பதிலாக ஏதாவதொரு மாநிலத் தலைநகருக்குப் போய், அதனைப் பெற்று வந்தார்.''9

இந்தியக் குடியரசுத் தலைவரின் நிலையே இது வென்றால், மாநிலக் காங்கிரசுத் தலைவர்களின் கதி என்ன? மத்திய-மாநில உறவுகளின் நிலை என்ன? நாம் புரிந்து கொள்ளலாம்.

இந்திய அரசியல் சட்டத்தால் மத்திய - மாநில அரசுகளுக்கிடையில் அறுதி செய்து தரப்பட்ட அதிகார எல்லைகள் எந்த அளவிற்கு மாய்க்கப்பட்டிருக்கும்? அரசியல் சட்டம் என்ற ஓர் அடிப்படைச் சட்டம் பல உரிமைகளையும் அதிகாரங்களையும் இந்திய மாநிலங்களுக்குத் தனித்துப் பிரித்து வழங்கி யுள்ளது என்ற உண்மை, பண்டித நேரு அவர்கள் அமரர் ஆகும் வரை, பல காங்கிரசு முதல் அமைச்சர்களுக்குக் கூடத் தெரிந்திருக்க நியாயமில்லை. மாநில அதிகாரங்களும் உரிமைகளும் மத்திய அரசோடு கலந்துவிட்ட ஓர் அவலநிலை இ ந் தி ய அரசியல் வானில் வெகு காலம் இடம் பெற்றிருந்தது.

ஓய்வு பெற்ற தலைமை நீதிபதியான, டாக்டர். கே. சுப்பாராவ் அவர்கள் கூறுகிறார்கள்,

''...அண்மைக் காலத்திய தேர்தல்கள் வரை ஒற்றையாட்சி வகையான அரசினைப் போலவே அரசமைப்புச் சட்டம் செயல் படுத்தப்பட்டு வந்தது. ஏற்கனவே மெலிந்து போன நிலையில் உள்ள மாநிலங்களின் அதிகாரங்களை அடியோடு ஒழித்து

9 ''Governer's Lot Worsening — Reappraisal Overdue'', by Sri Prakasar ''The Tribune'', Chandigarh, Dt 27-4-1969.

விடுகின்ற மனப்போக்கு இருந்தது. தொடர்ந்து நீண்ட காலமாக ஒரே கட்சி, மையத்திலும் மாநிலங்களிலும் அதிகாரத்தில் இருந்ததே இதற்கு முதன்மையான காரணமாகும். இதன் விளைவாக, ஆட்சித் துறையிலும் அமைப்புத் துறையிலும் மைய அரசு மாநில அரசுகளைக் கட்டுப்படுத்தக் கூடியதாக இருந்து வந்தது. (காங்கிரஸ்) கட்சியின் மேலிடத்திலிருந்த முன்னணி உறுப்பினர்கள் சிலர் அமைச்சரவையிலும் இடம் பெற்றிருந்தனர். உண்மையில் தலைமை அமைச்சர் மைய அரசின் அமைச்சரவையை மட்டும் அல்லாமல் (காங்கிரஸ்) மேலிடத்தையும் தமது கட்டுப்பாட்டில் வைத்திருந்தார். அந்த உயர் அதிகாரக் குழுவின் மூலமாக மாநில அரசியல் அமைப்புகளையும் மற்றும் வட்டார அமைப்புகளுக்கு நடைபெறும் தேர்தல்களையும் சட்ட மன்றத்துக்குத் தகுந்த வேட்பாளர்களைத் தேர்ந்தெடுப்பதையும் அவர் தமது கட்டுப்பாட்டில் வைத்திருந்தார். இடங்களை ஒதுக்கீடு செய்வதன் மூலம் உயர் அதிகாரக் குழுவின் வாயிலாக மாநிலச் சட்ட மன்றங்கள் மீதும் மாநில அமைச்சர்கள் மீதும் மைய அரசு ஆதிக்கம் பெற்றிருந்தது. இந்தச் செயல்முறையின் காரணமாக, நடைமுறையில் மாநிலங்கள் மைய அரசின் வெறும் நிர்வாக உறுப்புகளாக ஆகி விட்டன.''10

மத்திய அரசிலும் மாநிலங்கள் அனைத்திலும் ஒரே கட்சி தொடர்ந்து ஆட்சியிலிருந்து வந்தமையால் இந்திய நாட்டில் அரசமைப்புச் சட்டத்திற்கும் மீறிய முறையில்,ஒற்றை ஆட்சிப் போக்குகள் வளர்ந்து விட்டன. அதாவது அரைகுறை மாநில சுயாட்சியும் மிகுதியாகக் குறைக்கப்பட்டு விட்டது.

மத்திய அரசிற்கும் மாநில அரசிற்குமிடையிலான சிக்கல்கள் மிகப் பெரிய பிணக்குகளாக மாறி விட்டிருந்தும் கூட அவை வெளியில் தெரியாததற்குக் காரணம் 'காங்கிரஸ் கட்சியே' என்பதைக் கோடிட்டுக் காட்டும் போது, திரு. சி. வி. எச். ராவ் அவர்கள்,

''குறிப்பிட்ட பகுதியின் நிர்வாகத்திற்கும் நிதிப் பொறுப்பிற்கும் உரிய தன்னாட்சி உரிமையை அரசமைப்புச் சட்டம் மாநில அரசுக்கு வழங்கி இருக்கும்போது, நிதி வேண்டப்படுந் தருவாயிலும் திட்டமிடும் இடரான வேளையிலும் மைய

10 Dr. K. Subba Rao, "The Indian Federation" P. 18.

அரசு முனைந்து நடைமுறையில் இந்த உரிமையைத் குறைக் கின்றதென பல மாநில அரசுகள் கருதுகின்றன. உள்நாட்டு அமைதியையும் சட்ட ஒழுங்கையும் பாதுகாத்தல் போன்ற மாநிலங்களுக்கே உரித்தான பொறுப்புகளிலும் கூட மைய அரசு தலையிட்டதனால் மாநிலங்கள் அதிருப்தி அடைந் துள்ளன. அடுத்து உணவுக் கொள்கையும் நிர்வாகப் பிரச்சினையும் உள்ளன. இவற்றில் நாட்டின் நலனை முன்னிட்டு மாநில அரசுகளின் செயல்களில் மைய அரசின் தலையீடு தவிர்க்க முடியாததாகிறது. கடந்த சில ஆண்டுகளில் இச்சிக்கல்கள் கடுமையான நிலைக்குச் சென்றுள்ளன. ஆனால், மைய அரசிலும் மாநில அரசுகளிலும் காங்கிரசுக் கட்சியே ஆதிக்கத்திலிருந்ததால் இச்சிக்கல்கள் பெரும் தக்ராறுகளாக விரிவடையாது போயின.'' 11

எனத் தெளிவாக்குகிறார்.

மத்திய அரசிலும் மாநிலங்களிலும் காங்கிரஸ் கட்சியின் ஒரே ஆட்சி இருந்ததால் மாநிலங்களுக்கு அளிக்கப்பட்ட குறைந்த அளவு சுயாட்சியும் மத்திய அரசிற்குச் சரணடைந்து விட்டது என்பதை விளக்கப் போந்த, மூன்றாம் நிதி ஆணைக் குழுவின் தலைவராக இருந்தவரும் ஒய்வு பெற்ற இந்தியத் தலைமைத் தணிக்கை அதிகாரியுமான, திரு. அசோக் சந்தா அவர்கள்,

''மையத்திலும் மாநிலங்களிலும் ஒரே கட்சியின் ஆட்சி இயங் கியதனால் சட்டமியற்றுவதிலும் நிர்வாகப் பொறுப்பிலும் நாடாளுமன்றமே உச்ச அதிகாரம் கொண்டதாகக் கருதப் பட ஊக்கமளிக்கும் நிலை ஏற்பட்டிருந்தது. அரசமைப்புச் சட்டத்தின்படி மாநிலங்களின் பொறுப்பாக உள்ள சிக்கல் களைத் தீர்ப்பதிலும் முடிவு செய்வதிலும், தலைமை அமைச் சரும் பிற அமைச்சர்களும் மறைமுகமாகவும் சில வேளை களில் நேரடியாகவும் நடவடிக்கை மேற்கொள்ளத் தயங்க வில்லை. இவ்வாறு மாநிலங்களுக்கு அளிக்கப்பட்ட குறைந்த அளவு ஆட்சி வரம்பும் பழக்கத்தில் (மத்திய அரசிற்கு) சரணடைந்து வந்தது. ஒரு மாநிலம், அரசமைப்புச் சட்டத் தில் அதற்கு அளிக்கப்பட்ட அதிகாரத்தைப் பின்னர் வலியுறுத்தவோ மீளப்பெறவோ முடியாத நிலைக்கு ஆட்பட்டு

---

11 ''Evolving Perspectives in Central - State Relations,'' 'The Hindu' Dt. 26-1-1967.

விடுகிறது. மைய அரசின் அமைச்சர்கள் காங்கிரசின் உயர்மட்ட அமைப்பில் உறுப்பினர்களாக இருப்பதால் 'அறிவுரை' நல்க வேண்டி யிருப்பதாகக் கூறப்படுகிறது. மாநிலங்களின் ஆதிபத்தியத்திற்கு இதனுல் தலையீடோ பாதகமோ இல்லை யென்றும் சொல்லப்படுகிறது. இந்தப் புரட்டுவாதத்தினுல் எவரும் ஏமாற்ற மடைய மாட்டார்கள்." 12

ஒற்றையாட்சித் தன்மைகளைக் கொண்ட காங்கிரசுக் கட்சி நமது அரசமைப்பு அமுலுக்கு வந்த 1950-ஆம் ஆண்டு முதல் 1967-ஆம் ஆண்டுவரை ஏறத்தாழ 17 ஆண்டுகளாக மத்திய அரசுகளையும் மத்திய அரசையும் தன்னகத்தே ஆட்கொண்டு விட்டதாலும் அவற்றைத் தனிப் பெரும் தலைவர்களின் கீழ் தொடர்ந்து இயக்கி வந்ததாலும் ஏற்பட்ட விளைவு என்னவெனில், அரசியலமைப்புச் சட்டத்தில் "திருத்தங்கள்" (Amendments) செய்யப் படாமலேயே கூட மாநிலங்களின் தன்னுட்சி யுரிமைகளும் பொருளாதார-அரசியல்-அதிகாரங்களும் தாமாகவே பறிபோய் விட்டன.

## VIII

## "இந்திரா அலையில்" மாநில சுயாட்சி

1967-ஆம் ஆண்டு நடந்த பொதுத் தேர்தல்களில் காங்கிரஸ் கட்சி பரிதாபமாகத் தோற்கடிக்கப் பட்டது. 9 மாநிலங்களில் ஆளும் வாய்ப்பை முதன்முதலாக அது இழந்து நின்றது. மத்திய நாடாளு மன்றத்திலிருந்த பெரும்பான்மையும் அதற்கில்லாமற் போய், மத்திய அரசிலும் தன் நிலையை இழந்து விட்டன. தன்னிகரில்லா அதன் தனித் தன்மையும் தாழ்ந்து விட்டது. எனவே, அதன் அரசியற் கொள்கைகளிலும் முதன் முதலாக மாற்றம் ஏற்பட்டது; மாற்றுக் கட்சி அரசாங்கங்களைக் கொண்ட மாநிலங்களைப் பெரும்பான்மை பலமற்ற காங்கிரஸ் மத்திய அரசு, தன் ஆணவ பலத்தைக் காட்டி அடிபணிய வைக்காமல் முறையாக அணைத்துச் செல்ல வேண்டிய புதிய சூழ்நிலைக்குத் தள்ளப் பட்டது. எனவே, மாநிலங்கள் பற்றியும் மத்திய - மாநில உறவுகள் பற்றியும் தனது மாறிய கொள்கையைக் குடியரசுத் தலைவரின் உரை மூலம் மத்திய அரசு வெளியிடலாயிற்று.

---

12 "Federalism in India." (1965), P. 132.

1967-ஆம் ஆண்டு தேர்தல்களுக்குப் பின்னர் கூடிய புதிய நாடாளுமன்றத்தின் முதல் கூட்டத்தில் இந்தியக் குடியரசுத் தலைவர் மத்திய அரசின் கொள்கை விளக்கத்தைத் தரும் போது,

"மத்திய அரசிலிருக்கும் ஆளும் கட்சிக்கு மாறான அரசியல் வண்ணத்தை, பல மாநிலங்கள் தாங்கி நிற்கும் அரசியல் நிலை, சுதந்திரத்திற்குப் பின்னர் முதன்முறையாக இப்போது உருவாகியுள்ளது. ஒரு குடியரசுக் கூட்டாட்சி நாட்டில் இது எதிர் பார்க்கப்பட வேண்டிய ஒன்று தான். மத்திய அரசிற்கும் மாநிலங்களுக்குமிடையேயுள்ள உறவுகளையும் கடமைகளையும் வரையறைப் படுத்தி ஒழுங்கு படுத்துகிறது நமது அரசமைப்புச் சட்டவிதிகள். ஒரு மாநிலத்திற்கும்—இன்னொரு மாநிலத்திற்குமிடையிலும், மாநிலத்திற்கும்—ஒன்றியத்திற்கு மிடையிலும், சுமுகமான உறவுகளையும் ஒத்துழைப்பையும், வளர்க்கக் கூடிய பல நிறுவனங்களைச் சென்ற பல ஆண்டுகளில் நாம் வளர்த்து வந்திருக்கிறோம். தேசிய வளர்ச்சி மன்றமும் (N. D. C.) பிராந்திய மன்றங்களும் (Zonal Councils) அவ்வப்போது நடைபெறும் முதல் அமைச்சர்கள் மாநாடுகளும் இந்த வகையைச் சார்ந்த சில சான்றுகளாகும். எவ்வகையான ஏற்றத் தாழ்வுகளும் இல்லாமல் மத்திய அரசு, அரசமைப்புச் சட்டவிதிகளை அவற்றின் முழுமையான சொல்லும் பொருளும் (Letter and Spirit) மாறாமல் இனிமேல் அமுல் படுத்தும். கூட்டுறவு அணுகுமுறை ஏற்பாடுகளை இன்னும் வலிவு படுத்தித் தேசிய சிக்கல்களைத் தீர்ப்பதற்கு, மத்திய அரசு இனி முயற்சி செய்யும். இந்த வகை நிறுவனங்களின் மூலமாகப் பணிபுரியவும், அவற்றில் நடக்கும் நடவடிக்கைகள் மத்திய அரசிற்கும் மாநிலங்களுக்கும் இன்னும் அதிகமாகப் பயனைக் கொடுக்கவும் தேவையான முறையில் எல்லா மாநிலங்களும் தமது ஒத்துழைப்பை (மத்திய அரசிற்கு) நல்குமென நான் கருதுகிறேன்." 13

எனக் குறிப்பிட்டார்.

ஆனால், குறுகிய நான்காண்டு காலப் பகுதியில் மத்திய—மாநிலப் புதிய உறவுகள் பற்றிக் கொடுக்கப்பட்ட வாக்குறுதிகள் யாவும் காற்றில் பறக்கவிடப்பட்டன. 1971-ஆம் ஆண்டில்

---

13 "Centre - State Relations in India" (1972), P. 1. by Mr. A. G Noorani

பொங்கி வந்த இந்திய அரசியல் சூழ்நிலை இந்திரா காந்தியாருக்கும் காங்கிரசிற்கும் சாதகமாக அமைந்ததால், மாநிலங்களைப் பற்றிய கொள்கைகளை மீண்டும் மாற்றிக் கொண்டது இந்திரா காங்கிரசும் அதன் மத்திய அரசும்.

1972-ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 3-ஆம் நாளில் தலைமையமைச்சர், இந்திரா காந்தி அவர்கள் திருப்பதியில் பேசும்போது,

> ''மத்திய அரசினுடைய கீதத்திற்கேற்றபடியே மாநில அரசுகள் தாளம் போட வேண்டும் என்பது இன்று மிக மிகத் தேவையானது. அதன் (மத்திய அரசின்) கொள்கைகளை மாநில அரசுகள் ஏற்றுக் கொள்ள வேண்டும்; மத்திய அரசின் திட்டங்களையும் மாநில அரசுகள் செயல்படுத்துவதற்கு விரும்பி நிற்க வேண்டும்.''14

எனக் கூறி மத்திய அரசின் அதிகார பூர்வமான கட்டளைகளையும் மாநில அரசுகளின் கடமைகளையும் எடுத்தியம்பினார்.

> ''It was necessary that State Governments should be in tune with the Government at the Centre, accept its Policies, and be willing to implement its programme.''

இந்தத் திருப்பதி முன்னுரையுடன் தொடங்கிய ''இந்திராவின் அலை'' பின்னர் வெகுவேகமாக வீசத் தொடங்கியது. மத்திய அரசிலும் மாநில அரசுகளிலும் பல அரசியல் சித்து விளையாடல்களைச் செய்து காட்டினார் அவர்.

1966-ஆம் ஆண்டில் இந்தியப் பிரதமராகப் பதவியேற்ற இந்திரா காந்தியவர்கள் சென்ற எட்டு ஆண்டு காலத்திற்குள், மாநில அரசுகளைக் கவிழ்க்கக் கூடிய ''நெருக்கடி நிலைப் பிரகடனத்தை''24 முறை குடியரசுத் தலைவர் மூலமாக அமுலாக்கியிருக்கிறார். மத்திய அரசின் வசதிக் கேற்றபடியும் இந்திரா காங்கிரசின் தேவைக் கேற்றபடியும் மாற்று அமைச்சரவைகளையும் தேர்தல்களையும் மாநிலங்கள் பலமுறை சந்தித்துள்ளன. குடியரசுத் தலைவரின் ''மாநிலங்களின் நெருக்கடி நிலைப் பிரகடனம்'', சராசரியாக நான்கு மாதத்திற்கொரு முறை பிரயோகிக்கப் பட்டுள்ளது. 1950-ஆம் ஆண்டிலிருந்து 1966-ஆம்

---

14 Ibid, Opp. cited, Note 13 P. 2.

ஆண்டு வரை ஏறத்தாழ 16 ஆண்டுகளில் சுமார் 10 தடவைகள் மட்டுமே குடியரசுத் தலைவரது ஆட்சி மாநிலங்களில் அமுலுக்கு வந்துள்ளது என்பது இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.

இந்திரா காந்தியாரின் அரசியல் நோக்கங்களையும் ஒற்றை ஆட்சிக் கொள்கையையும் நிறைவேற்றிக் கொள்வதற்காக இந்திய அரசியலமைப்புச் சட்டம் எந்த அளவிற்கு வளைக்கப் பட்டுள்ளது, என்பதை உத்தரப் பிரதேச மாநிலத்தில் சென்ற ஆண்டு பிறப்பிக்கப்பட்ட குடியாட்சித் தலைவரது நெருக்கடி நிலை ஆணை தெளிவாக எடுத்துக் காட்டும்.

உத்தரப் பிரதேச மாநிலத்தில் உள்ள மூன்று காங்கிரசுக் கோஷ்டிகளுக்கிடையே ஏற்பட்ட மோதல்களின் விளைவாக, நிலைத்த ஓர் அமைச்சரவையை அங்கு நிறுவ முடிய வில்லை. ஆனால், அவ்வப்போது செய்யப்பட்ட சில ஒட்டு வேலைகளின் காரணமாக, கமலபதிதிரிபாதி மீண்டும் முதலமைச்சராகப் பதவி யேற்றார். ஆயுதந் தாங்கிய போலீஸ் படையின் பெரும் புரட்சி ஒன்று அங்கு நடைபெற்றது. உத்தரப் பிரதேசக் காங் கிரசு அரசு அதனை அடக்க முயன்று, அதில் முழுமையாக வெற்றி பெற முடிய வில்லை. அதன் விளைவாக, கமலபதிதிரி பாதிக்கிருந்த சட்ட மன்றத்தின் பெரும்பான்மை பலமும் குறைந்தது. அவர் பதவி விலக வேண்டு மென்ற கோரிக்கை தீவிரமாக எழுந்தது.

9-6-1973-ஆம் நாளில் உத்தரப் பிரதேச அமைச்சரவை இரகசியமாக டெல்லியில் கூடிற்று. போலீஸ் புரட்சி அடக்கப் பட்டு விட்டதாலும், சட்ட மன்றத்தில் முதலமைச்சர் பெரும் பான்மை பலத்தைக் கொண்டிருப்பதாலும் குடியரசுத் தலைவர் ஆட்சி உத்தரப் பிரதேசத்தில் பிரகடனப் படுத்த வேண்டிய தில்லை என்ற முடிவுக்கும் வந்தது. அது பத்திரிகைகளில் வெளியாயிற்று. 10—6—1973-ஆம் நாளில் தன்னுடைய பதவியை இராஜினமாச் செய்ய வேண்டிய தில்லை யென்றும் முதல் அமைச்சர் நிருபர்களிடம் கூறினர்.

ஆனல் முதலமைச்சரின் அறிவிப்புக்குப் பின்னர் - இரண்டு நாட்கள் கழித்துத் திடீரென உத்தரப் பிரதேச மாநிலத்தில் நெருக்கடி நிலைப் பிரகடனம் செய்யப்பட்டு, குடியரசுத் தலைவர் ஆட்சி ஏற்பட்டு விட்டது.

"அரசியல் சட்டத்திலுள்ள நெருக்கடி நிலைச் சட்டவிதிகள் (சட்டவிதி 356) காங்கிரசுக் கட்சி நலனுக்காகவும் தனிப் பட்டவர்களின் அக்கறைக்காகவும், முறை தவறிப் பயன் படுத்தப்பட்டது" என்று இந்துஸ்தான் டைம்ஸ் (Hindustan Times) பத்திரிக்கை எடுத்துக் காட்டிற்று. இந்திரா காந்தியின் அரசியல் லீலாவிநோதங்களில் மாநிலத் தன்னாட்சியின் உரிமை பறிக்கப்படுவதும் அரசியல் சட்டவிதிகள் முரணாகப் பயன் படுத்தப்படுவதும் வெகு சாதாரண மானவை. அவரது ஆட்சிக் காலத்தில் மாநிலங்களில் குடியரசுத் தலைவரின் ஆட்சி ஏற்படுவது, மிக மலிவான சரக்காய் விட்டது.

கட்சி மட்டத்தில் சர்வாதிகாரப் பாணியினையும் மாநில அரசுகளின் மட்டத்தில், முழுமையான ஒற்றை ஆட்சி முறை யையும், இந்திரா காந்தியார் சூத்திரமாக வைத்துச் செயல் பட்டார். மத்திய அரசில் மட்டு மல்ல; மாநிலங்களிலும் இந்திராவின் உறுதியான விருப்பங்கள் தடையில்லாமல் நிறை வேறின.

தான் விரும்பாத மாநில முதல்வர்களை - தனக்குத் தொல்லை கொடுப்போர் எனக் கருதப்பட்ட மாநில முதலமைச்சர்களை - பதவியிலிருந்து வலிந்து இறக்கினார். இராசஸ்தானத்தில், திரு. சுகாதியாவையும், ஆந்திராவில் திரு. பிரமானந்த ரெட்டியை யும்,மத்தியப் பிரதேசத்தில் திரு. சுக்லாவையும், அசாமில் திரு. சவுத்திரியையும் முதலமைச்சர் பதவிகளிலிருந்து வெளியேற்றி னார். அது கட்சி அரசியல்; எனவே, அதில் தலையிட நமக்கு உரிமை யில்லை—ஆனால் அந் நடவடிக்கைகளில் தொக்கியுள்ள மாநிலத் தன்னாட்சி உரிமையைப் பற்றித்தான் நாம் கவலை கொள்கிறோம்.

பதவி நீக்கப்பட்ட முதல் அமைச்சர்கள் மாநிலச் சட்ட மன்றங்களில்பெரும்பான்மை பலத்தைப்படைத்திருந்தவர்கள். ஆனால் மத்திய அரசின் வல்லாட்சியை மாநில அரசுகளின் மேல் செலுத்தக் கூடிய இந்திராவின் கட்சி மட்ட நடவடிக்கை கள், காங்கிரசுக் கட்சியின் மாநிலத் தன்னாட்சி பற்றிய பழைய வரலாற்றையே மீண்டும் உயிர்ப்பித்தன.

மாநிலச் சட்ட மன்றங்களுக்கே, மாநில முதலமைச்சர் களும் அமைச்சரவையும் பொறுப்பானவர்கள். பெரும் பான்மை பலத்தைச் சட்ட மன்றத்தில் பெற்றிருத்தல் மூலமாக, மாநில சுயாட்சிக் கொள்கைப்படியும், சனநாயக நெறிப்படியும்

அமைச்சரவையை அமைப்பதற்கு அவர்களுக்கு உரிமை யுண்டு. அது தான் அரசியல் சட்ட நெறியும் கூட. மத்திய தலைமை அமைச்சரின் ஆணைக் கிணங்க, அவர் உருவாக்கும் காங்கிரசு மேலிடத்தின் நெருக்கடிக்கு ஆட்பட்ட பல மாநில முதல்வர்கள், மக்களது எண்ணங்களுக் கெதிராகப் பதவி விலகுதல் அரசியல் அநாகரிகத்தை மட்டுமல்ல; மாநில சுயாட்சி யுரிமைக் கெதிராக அமைக்கப்பட்ட ஒரு கட்சியின் ஒற்றையாட்சி முறையையும் தெற்றெனக் காட்டுகின்றது.

மாநிலச் சட்ட மன்றங்களில் உறுப்பினர்களாகத் தேர்ந் தெடுக்கப்படாத சிலர் தலைமை அமைச்சருக்கு ஒத்துப் போகக் கூடிய காரணத்தினல் மத்திய அமைச்சர்களான, திரு. சித்தார்த்த சங்கர் ரே–மேற்கு வங்கத்திலும், திரு. ஓஜா–குஜராத் திலும், திரு. சேத்தி–மத்தியப் பிரதேசத்திலும், திருமதி. நந்தினி சத்பதி–ஒரிஸ்ஸாவிலும் மாநில முதல் அமைச்சர்களாக மத்திய அரசிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டனர். மற்ற மாநிலங் களின் முதல் அமைச்சர்களும் கூட மத்திய அரசின் தலைமை யமைச்சரான இந்திரா காந்தி அவர்களுக்கே ஓர்பு உடைய வர்கள்.

தலைமையமைச்சரின் கருணையால், மாநிலங்களின் முதல்வர் களாக ஆக்கப்பட்ட பல காங்கிரசு தலைவர்களுக்கு மாநிலக் கட்சி மட்டத்தில் ஆதரவும் அடிப்படையும் இருப்பதில்லை; தொட்டதற் கெல்லாம் டெல்லிதான். $1\frac{1}{2}$ ஆண்டு காலப் பகுதி யில், ஒரு மாநில முதலமைச்சர் 100 முறை டெல்லிக்குப் போய்த் தனது மாநில நிர்வாகத்திற்காக—கட்சியின் ஆதரவிற்காக— தலைமைப் பீடத்திலிருந்து ஞானேபதேசம் பெற்று வந்தார் எனப் பத்திரிக்கைகள் எழுதின. அவர் ஒரு மாநிலத்தை நிர்வகிக்கும் முதல் அமைச்சரா? அல்லது கிரிக்கெட் பந்தாட் டத்தில் பந்தை யடித்து 'ஓட்டங்களை' எடுக்கும் 'பேட்ஸ்மேனா' (Batsman) என்பது காங்கிரசின் தலைமை பீடத்திற்குத்தான் தெரியும்.

### "இந்திரா நாயகம்"!

மாநிலங்களின் முதல்வர்களைத் தேர்ந்தெடுப்பதற்கு இந்திரா அலையில் ஒரு விநோதமான முறையுண்டு. மாநிலச் சட்ட மன்ற உறுப்பினர்கள் தங்களது உரிமையைப் பயன் படுத்தி ஒரு முதல்வரைத் தேர்ந்தெடுப்பது சனநாயகம்.

அதற்கு மாருக, டெல்லியிலுள்ள தலைவர்கள், இந்திராவின் வாக்குச் சீட்டுகளோடும் எண்ணிக்கைப் பெட்டியோடும் முத்திரையோடும், மாநிலத் தலைநகருக்கு வந்து மறைமுக மாகத் தேர்தலை நடத்தி, வாக்குப் பெட்டிகளுக்கு முத்திரை யிட்டு, அதை அப்போதே எண்ணிப் பார்த்து வெளியிடாமல், பலத்த காவலுடன் டெல்லிக்குக் கொண்டு போய் அதைக் காங்கிரசின் தலைவர்கள் மட்டும் இரகசியமாக எண்ணிப் பார்த்து இன்னார்தான், இந்த மாநிலத்தில் முதலமைச்சர் என்று வெளி யிடும் அற்புத முறையை, ''இந்திரா நாயகம்'' என, ஏன் கூறக் கூடாது?

> ''இந்திரா நாயகமுறை'' குஜராத் மாநிலத்தின் முதல்வரைத் தேர்ந்தெடுப்பதற்குப் பயன் படுத்தப்பட்டது. இந்திரா காங்கிரசில் ஏற்பட்ட பிளவை, எப்படியோ சரி செய்வதற் காக மத்திய அமைச்சரான சர்தார் சுவரண்சிங் அவர்கள் காங்கிரசு மேலிடத்திலிருந்து அனுப்பப்பட்டார். ஒட்டு வேலை நடக்கவில்லை. இரகசிய வாக்கெடுப்பு நடந்தது. அதை உடனே எண்ணி, குசராத் மாநில முதல்வரின் பெயரை மாநிலத் தலைநகரிலேயே வெளிவிடாத மாண்புமிகு சுவரண் சிங் அவர்கள், வாக்குப் பெட்டிக்கு முத்திரையிட்டு வெகு பத்திரமாக டெல்லிக்குக் கொண்டு வந்தார். பாரத பூமியின் பழைய பாதுகாப்பமைச்சர் அல்லவா? வாக்குப் பெட்டி யைப் பத்திரமாகத் தூக்கி வர வேண்டியதும் ''இந்திரா நாயகத்தில்'' அவருக்குள்ள மிக முக்கியமான பாதுகாப்புப் பணி. டெல்லிக்கு வந்த பேழை உடனே திறக்கப்பட வில்லை. இரண்டு நாட்கள் கழித்துத்தான் இந்த நாடகத் தின் முடிவு, டெல்லியிலிருந்து அறிவிக்கப்பட்டது. அதன் இறுதி வேலையான ஓட்டு எண்ணிக்கை எங்கே நடந்தது தெரியுமா? காங்கிரஸ் கட்டிடத்தில் அல்ல. இந்திய அரசின் மத்தியச் செயலகத்திலுள்ள 'சவுத் பிளாக்' என்ற தென்புறப் பகுதியில் வெளிநாட்டு அமைச்சகத்தின் காரியா லயத்தில், காங்கிரசுக் கட்சியின் பூசலைத் தவிர்க்கும் வெட்கங்கெட்ட ஒட்டு எண்ணிக்கை நடைபெற்றுள்ளது.15

---

15 Mr. Era. Sezhiyan, "The Record of Mrs. Indra Gandhi as Prime Minister", (1973), Edited by K. Santhanam. P. 79.

ஒரு மாநிலத்தின் முதலமைச்சரின் தேர்தல்—பல கோடி மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட மாநிலச் சட்ட மன்ற உறுப்பி னர்களின் விருப்பப்படி வாக்களிக்கப்பட வேண்டிய தேர்தல் மத்திய அரசால் — அதில் இடம் பெற்றிருக்கும் ஓர் அகில இந்திய சர்வாதிகாரக் கட்சியினுல் குடியாட்சியும் மாநில சுயாட்சியும் எந்த அளவிற்குக் கேலிக் கூத்தாக்கப்பட்டுள்ள தென்பதற்கு இதைக் காட்டிலும் வேறு சான்று வேண்டுமோ? மாநிலங்களின் உரிமைகளுக்கு ஏற்பட்டிருக்கும் தாழ்நிலைக்கு இந்திரா காங்கிரசுக் கட்சி யமைப்பு எந்த அளவிற்குப் பொறுப்பேற்க வேண்டும் என்பதற்கு, குசராத் மாநிலத்தின் முதலமைச்சர் தேர்தல் நாடகமே ஒரு சிறந்த எடுத்துக்காட்டு.

## "இந்திராவின் அமைப்புச் சட்டம்?!"

குஜராத்தில் திரு. ஓஜா அவர்களையும் வெகு காலம் முதல்வ ராகக் காப்பாற்ற முடியவில்லை இந்திரா காந்தி அவர்களால். சிம்மன்பாய் படேல் முதல்வரானுர். குறுகிய காலத்திற்குள் உணவுப் பஞ்சம் தலைவிரித்தாடிற்று. மத்திய அரசின் கருணைக் கண்ணேட்டம் காந்தியார் மாநிலத்திற்குக் கிடைக்க வில்லை. வல்லபாய் பட்டேலின் வாரிசால் குசராத் மாநிலத்தின் எதிர்ப்பைச் சமாளிக்க முடிய வில்லை. சோறு வேண்டுமென்ற அரசியல் புரட்சி வெடித்தது. 1974-ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்களில், குடியரசுத் தலைவரின் 'நெருக்கடி நிலை' ஆணை பிறப்பிக்கப்பட வேண்டுமென மாநில முதலமைச்சரே மத்திய அரசாங்கத்தைக் கெஞ்சிக் கேட்குமளவிற்கு நிலைமைகள் முற்றி விட்டன. இறுதியில் குடியரசுத் தலைவரின் ''நெருக்கடி நிலைப் பிரகடனம்'' அறிவிக்கப்பட்டது. துள்ளிக் குதித்த மாநில முதல்வரின் கதி என்ன தெரியுமா? அவர் பதவியிலிருந்தும் நீக்கப்பட்டார்; கட்சியிலிருந்தும் நீக்கப்பட்டார்.

இது குசராத் மாநிலத்திற்கு மட்டும் தனியுரிமை யல்ல; காங் கிரசு மேலிடத்திலிருந்து மாநில முதல்வர்களாக இறக்குமதி செய்யப்படும் மற்ற முதல்வர்களும் இந்திரா காங்கிரசுக் கட்சி யினராலேயே பிழிந்தெடுக்கப்பட்டு விடுகின்றனர். இதற்கு முன்னர் குசராத்திற்கு அனுப்பப்பட்ட திரு. 'ஓஜா' அவர்கள், மாநிலத்தில் திரண்டெழுந்த எதிர்ப்பிற்கு ஈடுகட்ட முடியாமல்,

பதவியை விட்டு ஓடிவிட்டார். மத்தியப்பிரதேசத்தின் சேத்தியும் வெளியேறி விட்டார். இந்திராவின் கருணையினுல் ஆந்திரத்தில் உருவான முதலமைச்சர் நரசிம்மராவ் நிலைமையைச் சமாளிக்க முடியாமல் இந்திரா காந்தியாலேயே பதவியிலிருந்து விரட்டப்பட்டு விட்டார். அசாமின் முதல்வரால், அசாமின் சட்ட ஒழுங்குப் பிரச்சனையைச் சரிக்கட்ட முடியவில்லை. ஒரிசாவில், காங்கிரசுக் கட்சியினர் மாறியதால் அதன் முதல்வரான நந்தினி சத்பதியும் பதவியில் நீடிக்கவில்லை. மீண்டும் பொதுத்தேர்தல் அம்மாநிலத்தில் வர வேண்டிய நிலை ஏற்பட்டது.

தடுப்புக் காவல் சட்டத்தின்படி, ஆயிரக் கணக்கான இளைஞர்களைக் கைது செய்து, தன் அடக்கு முறையால், திரு. சித்தரத்தர் சங்கர் ரே அவர்கள், மேற்குவங்கத்தில் முதலமைச்சர் பதவியைக் காத்து வந்தார். நூற்றுக்கணக்கானவர்கள் இந்தியத் தலைமை நீதிமன்ற உத்தரவிற்கு ஏற்ப, விடுதலை பெற்று ஜாமீனில் வெளியேறினர். சட்ட மன்றக் காங்கிரசுக் கட்சியும் ஸ்தாபனக் கட்சியும் மேற்கு வங்கத்தில் இருவேறு திசையில் செயல்படுகின்றன.

இதுதான் மாநிலக் காங்கிரசுத் தலைவர்களின் இன்றைய 'தன்மானத்'திற்கு எடுத்துக் காட்டு; ஒற்றைக் கட்சி ஆட்சியினுல் ஏற்பட்டுவிட்ட மாநிலங்களின் பரிதாப நிலை; இதற்குத் தான் 'இந்திரா அலை' எனப் பெயர்.

மாநிலங்களின் எந்தப் பிரச்சனையானுலும் அது மாநிலக் கட்சி மட்டத்திலோ அல்லது மாநில அரசு மட்டத்திலோ தீர்க்கப்படுவதில்லை. டெல்லிதான் தீர்க்க வேண்டும். ஒரு முதலமைச்சருக்கெதிராக இலஞ்ச ஊழல் குற்றச் சாட்டுக்கள் காட்டப் பட்டாலும் கூட அதனை விசாரிப்பதும் டெல்லியிலுள்ள தலைமை யமைச்சர் தான். அண்மைக் காலத்தில் உத்தரப் பிரதேசம், பீகார், பஞ்சாப் மாநிலங்களின் காங்கிரஸ் முதலமைச்சர்களுக் கெதிராகக் காங்கிரசுத் தலைவர்களே இலஞ்ச ஊழல் குற்றச்சாட்டுகளைச் சாட்டினர். அவையெல்லாம் மத்தியத் தலைமை அமைச்சரின் பொறுப்பிலேயே விடப்பட்டன. மாநிலங்களின் எல்லைத் தகராறுகளும் நதி நீர்த் தகராறுகளும் அரசியல் அமைப்புச் சட்டப் பரிகாரத்திற்கு அனுப்பப்படுவ தில்லை. மத்தியத் தலைமை யமைச்சரின் மத்தியஸ்தத்திற்கே விடப்படுகிறது.

மாநிலங்கள் பற்றிய மிக முக்கியமான முடிவுகள் யாவும், தலைமையமைச்சர் என்ற ஒரு தனி மனிதராலேயே எடுக்கப்படக் கூடிய பரிதாப நிலைக்கு மாநிலங்கள் ஆட்படுத்தப் பட்டுள்ளன. இப்படி மாநிலங்களும் மாநில அரசுகளும் தலைமையமைச்சரின் தடவில் இடங்குகின்றன. மத்திய அரசும், தலைமை அமைச்சரின் கைக்குள் அடக்கம்; அகில இந்தியக் காங்கிரசுக் கமிட்டியும், இந்திரா காந்தியாரின் குறுகிய பிடிக்குள் அடக்கம்; நீதித் துறை கூட அவரது கருணை நோக்கிற்குக் கட்டுப்பட வேண்டிய சூழ்நிலை. அரசியல் அமைப்புச் சட்டம் மீண்டும் செயலிழந்து விட்டது; ''இந்திராவின் அமைப்புச் சட்டம்'' தீவிரமாகச் செயல்படுகிறது. அச்சட்டத்தில் மாநில அரசுகள் யாவும் காங் கிரசு மேலிடத்திற்கு—குறிப்பாகப் பிரதம மந்திரி அவர்களுக்கு—கட்சிக் கட்டுப்பாடு என்ற பெயரில் மண்டியிட்டு விட்டன. ஒற்றை ஆட்சி முறையும், சர்வாதிகாரப் பாணியும் நம் நாட்டினுடைய இன்றைய சாதாரண நடைமுறைகள். இதற்குப் பெயர்தான் 'இந்திராவின் அலை'. இந்த அலைக்குள் சிக்கித் தவிப்பதுதான் மாநிலத் தன்னுட்சியின் தற்போதைய நிலை.

## IX

## தன்னுட்சியும் தனி ஆட்சியும்

### — வரலாறு தரும் பாடம் —

வரலாறு, பல கால கட்டங்களில் ஒரே மாதிரியான அரசியல் சூழ்நிலைகளையும் ஒரே தன்மை கொண்ட அரசியல் சக்திகளையும் தோற்றுவித்து அவைகளின் கலப்புத் தொடர் பால் ஒரே மாதிரியான வினைவுகளையும் ஏற்படுத்துகிறது.

அதனைத் தான் ''வரலாறு திரும்பும்'' (''History Repeats Itself'') என, சரித்திர வல்லுனர்கள் கூறுகின்றனர். ஆனால், வரலாறு திரும்பத் திரும்பத் தரும் பாடத்தை அதிகாரப்போதை யிலிருப்பவர்களும், அரசு கட்டிலில் வீற்றிருப்பவர்களும் சரியாகப் புரிந்து கொள்வதில்லை.

ஏறத்தாழ 46 ஆண்டுகளுக்கு முன்னுல் (1928–இல்) நமது பிரதமர் இந்திரா காந்தி அவர்களின் தாத்தாவான ''பண்டித மோதிலால் நேரு'' அவர்களின் தலைமையில் ஓர் ''அரசியல் அமைப்பு'' (நேருகுழு அறிக்கை) அனைத்துக் கட்சிப் பிரதிநிதி களாலும் முதன் முறையாக எழுதப்பட்டது. அதில் மாநிலங்களை அடக்கி ஆளும் வலிமை கொண்ட மத்திய அரசும் உருவாக்கப் பட்டிருந்தது.

இந்திரா காந்தியார் அவர்கள் தற்போது கூறுவதைப் போல் "இந்திய நாட்டின் ஒற்றுமையைக் கருதி, தேசிய சர்க்காருக்குத் தேவையான அதிகாரங்களையெல்லாம் பெற்றுத் தரக் கூடிய" ஓர் அரசியல் அமைப்பாகவும் "நேரு குழு அறிக்கை" திகழ்ந்தது.

ஆனால், அன்று இந்தியா அடிமைநாடாக இருந்ததால் அது பிறந்த மேனியாகவே இறந்து விட்டது.

ஆனால், மாநில சுயாட்சி வரலாற்றில் 'நேரு குழு அறிக்கை', ஒரு திருப்பு மையத்தைப் படைத்து விட்டது. எப்படி?

'நேரு குழு அறிக்கை' தீட்டப்படும் காலம் வரை, மாநில சுயாட்சி பற்றித் தீவிரமாக சிந்திக்காத முஸ்லீம் லீக் கட்சியும் மற்ற மாநிலக் கட்சிகளும் அந்த அறிக்கைக்குப் பின்னால் தேசியவாதிகளின் பேரிலும் காங்கிரசுக் கட்சியின் பேரிலும் ஐயத்தையும் அச்சத்தையும் கொண்டனர்.

காரணம்—'நேரு குழு அறிக்கையில்' படைக்கப் பட்டிருந்த வன்மை யான மத்திய அரசு.

எனவே, 1928-ஆம் ஆண்டுக்குப் பின்னால், முஸ்லீம் லீக் கட்சி, இந்திய முஸ்லீம்களின் தனி நலன்களையும் பண்பாட்டையும் அரசியல் உரிமைகளைக் காத்துக் கொள்வதற்காக முழு சுயாட்சி கொண்ட மாநிலங்களையும் உண்மைக் கூட்டாட்சி (மத்திய) அரசையும் தனது இலட்சியமாக ஏற்றுக் கொள்ள வேண்டியநிலை ஏற்பட்டது. அதனால் மாநில சுயாட்சிக் கொள் கையும் வளர்ந்தது.

பின்னர் மாநிலங்களுக்கு முழுத் தன்னாட்சியைத் தர மறுத்தது காங்கிரசுக் கட்சி. எனவே, முஸ்லீம் லீக், முழு மாநிலத் தன்னாட்சிக் கோரிக்கையை விடுத்து அதனை அடுத்த கட்டாயமான பிரிவினைக் கோரிக்கைக்குத் தாவிச் சென்று விட்டது.

காரணம் – அன்று இந்திராவின் தந்தையாருக்கு (பண்டித சவகர்லால் நேரு அவர்களுக்கு), மாநிலத் தன்னாட்சித் தத்துவம் புரியவில்லை.

சில ஆண்டுகளில் பிரிவினைக் கோரிக்கையும் வலுப் பெற்றது. பிரிவினைக் கோரிக்கை வலுப் பெற்றவுடன் இந்திரா வின் தந்தையாருக்கும் கூட மாநிலத் தன்னாட்சித் தத்துவம் தெளிவாகப் புரிய ஆரம்பித்தது.

இன்று திராவிட முன்னேற்றக் கழகம் கேட்கும் மாநில சுயாட்சியை, இந்திரா காந்தியின் தந்தையாரின் இனிய அரசியல் தோழரான மாமேதை அபுல்கலாம் ஆசாத் அவர்கள், அன்றே அழகாக வடித்துக் கொடுத்தார். அதனை நேரு அவர் களும் கூட ஏற்றுக் கொண்டார்.

காரணம் மாநிலத் தன்னாட்சியைப் பற்றி முதலில் புரியா திருந்த இந்திரா காந்தி அவர்களின் தந்தையாருக்கு, பாக்கிஸ் தான் பிரிவினை செய்யப்பட வேண்டுமென்ற ''தனி ஆட்சிக் கோரிக்கை'' மாநில சுயாட்சி பற்றிப் புரிய வைத்து விட்டது.

ஆனால் காலம் கடந்துவிட்டது; நாட்டுப் பிரிவினையைத் தவிர்க்க முடியவில்லை. எனவே, பாக்கிஸ்தான் தனி ஆட்சி யைத் தேடிக் கொண்டது.

பாக்கிஸ்தான் பிரிந்து சென்றவுடன் தேசியத் தலைவர் களுக்குத் தன்னாட்சித் தத்துவம் மீண்டும் மறந்து போயிற்று. எனவே, தாத்தா (பண்டித மோதிலால் நேரு) அவர்கள் செய்த தவறை நாடு துண்டாடப்பட்ட பின்னர் தந்தையார் (பண்டித ஜவகர்லால் நேரு) அவர்களும் செய்து வைத்தார். அதாவது வலிமையும் மேலாட்சியும் கொண்டதுமான ஒரு மத்திய அரசையும் வலிவற்ற மாநிலங்களையும் ஜவகர்லால் நேரு அவர்கள் இந்திய அரசமைப்பில் படைத்து வைத்தார்.

17 ஆண்டுகளுக்குப்பின் (1967-ஆம் ஆண்டுத் தேர்தலில்) காங்கிரசுக் கட்சியின் படுதோல்விக்கு அதுவே மூல காரண மாயிற்று. வலிமையான மத்திய அரசும் வலிவிழந்து ஆட்டம் கண்டது.

1971-ஆம் ஆண்டில் பங்களா தேஷை, பாக்கிஸ்தானி லிருந்து வெட்டிப் பிரிக்க மாண்புமிகு இந்திரா காந்தியார் துணை புரிந்தார். அது, இந்திய நாட்டில் ''இந்திரா அலையைத்'' தோற்றுவித்தது.

அந்த (இந்திரா) அலையில் இந்திய மாநிலங்கள் மீண்டும் சிக்கிக் கொண்டன. இது பேத்தி காலத்தின் வரலாறு.

சரி; பங்களா தேஷ் ஏன் ஏற்பட்டது?

முஜ்பூர் ரஹிமான் அவர்கள் கேட்டது மாநிலத் தன்னாட்சி; அதனைத் தேசத் துரோகம் எனக் கூறி மறுத்தது பாக்கிஸ்தான்.

அஃதாவது ஆதியில் ''மாநிலத் தன்னாட்சி'' மறுக்கப்பட்ட தால் ''தனி ஆட்சியைத்'' தேடிக்கொண்ட பாக்கிஸ்தான் பின்னர், தன்னுடைய மாநிலங்களில் ஒன்று தன்னாட்சி கோரிய போது அதனைத் தர மறுத்தது. உடனே ''தனியாட்சி'' ஆயிற்று; பாக்கிஸ்தானிலிருந்து, இன்னொரு பாக்கிஸ்தானும் (பங்களா தேஷ்) ''தனி ஆட்சியைத்'' தேடிக் கொண்டது.

வரலாற்றில் இந்த மூன்று கால கட்டங்களையும் ஒப்பு நோக்கினால் சில உண்மைகள் தெளிவாகின்றன.

1. மத்திய வல்லாட்சி வேண்டுமென்றார்,பண்டித மோதிலால் நேரு அவர்கள்–மாநிலத் தன்னாட்சிக் கொள்கை வலிவாயிற்று.

2. 'தன்னாட்சி புரியவில்லை' என்றார் பண்டித நேரு அவர்கள்– 'தன் ஆட்சி'க் கோரிக்கை போய் 'தனியாட்சிக்' கோரிக்கை பிறந்தது; வலுப்பெற்றது.

3. தன்னாட்சியின் அர்த்தம் புரிந்தது பண்டித நேரு அவர் களுக்கு; ஆனால் அதற்குள் பாக்கிஸ்தான் தனி ஆட்சி தேடிக் கொண்டது.

4. பிரிந்து போன பாக்கிஸ்தானுக்கு 25 ஆண்டுகள் கழித்து மாநிலத் தன்னாட்சி மறந்து போயிற்று. எனவே, பங்களா தேஷ் தனியாட்சியைத் தேடிக் கொண்டது,

5. நமது மாண்புமிகு, தலைமை யமைச்சர் இந்திரா காந்தி அவர்களுக்குப் பங்களா தேஷின் ''தன்னாட்சியும்'' புரிந்தது; ''தனி ஆட்சியும்'' புரிந்தது; ஆகவே, பங்களா தேசத்தைத் தனி நாடாக ஆக்கிக் கொடுத்தார்.

6. திராவிட முன்னேற்றக் கழகம் இந்திய மாநிலங்களின் தன்னாட்சியைத் தான் தற்போது கோருகிறது,

ஆனால் பங்களா தேஷின் தன்னாட்சி புரிந்த நமது பாரதப் பிரதமருக்கு இந்திய மாநிலங்களின் தன்னாட்சிக் கோரிக்கை புரியவில்லையே.

அவருக்கு மாநிலத் தன்னாட்சியின் பொருள் புரியும்போது ......ஒருக்கால்......பழைய வரலாறு திரும்பி விடுமோ?...... பொதுவாக, தேசியத் தலைவர்களுக்கு ''மாநிலத் தன்னாட்சி'' முதலில் புரிவதில்லை. அவர்களுக்குத் தன்னாட்சி புரியும்போது தன்னாட்சித் தேவை போய், ''தனி ஆட்சி''க் கோரிக்கை பிறந்து விடுகிறது. ''தனி ஆட்சிக் கோரிக்கை'', ''மாநிலத் தன்னாட்சியைப்''புரிய வைத்து விடுக்கிறது. ஆனால் அதற்குள் காலம் கடந்து விடுகிறது.

எனவே, காலம் கடந்து விடும் முன்னரே, நமது தேசியத் தலைவர்கள் மாநில சுயாட்சியைப் புரிந்து கொண்டால் பிரிவினையைத் தவிர்க்கலாம்.

இதுதான் வரலாறு காட்டும் பாடம். அந்தப் பாடத்தைப் புரிந்து கொள்வதும் புரிந்து கொள்ளாததும் வரலாற்றின் குற்ற மல்ல.

மலர்க மாநில சுயாட்சி!



## உங்கள் சிந்தனைக்கு ......

அரசியல் விளக்கமும் அயல் நாட்டரசுகளும் மாநிலத் தன்னாட்சிக் கோட்பாடு, கூட்டாட்சிக் கொள்கையின் உயிர்க் கூறு என உறுதி செய்வதை "கூட்டாட்சியும் மாநில சுயாட்சியும்" என்ற முதற் பகுதியும்;

இந்திய வரலாறு தந்த ஈடு இணையற்ற எழிற் கொள்கையே 'மாநிலத் தன்னாட்சி' என்பதை "இந்திய வரலாற்றில் மாநில சுயாட்சி" என்ற இரண்டாம் பகுதியும்;

அன்று தோன்றிய அரசியற் சுழலுக் கேற்றபடி அமைக்கப் பட்டிருக்கும் இன்றைய இந்திய அரசமைப்பில் "மத்திய-மாநில உறவுகள்" என்ற அளவிற்கு "மாநிலத் தன்னாட்சிக்" கோட்பாடு, சிதைக்கப்பட்டு விட்டது என்பதை "இந்திய அரசமைப்பில் மாநில சுயாட்சி" என்ற மூன்றாம் பகுதியும்;

சிதைக்கப்பட்ட மாநில சுயாட்சியும் விடுதலை பெற்ற இந்திய நாட்டில் உருத்தெரியாமல் அழிக்கப்பட்டுவிட்ட தென்பதை, "சுதந்திர இந்தியாவில் மாநில சுயாட்சி" எனும் நான்காம் பகுதியும்;

முறையே அரசியல், வரலாறு, அரசமைப்புச் சட்டம், சமுதாய வளர்ச்சி ஆகிய கோணங்களில் தனித்தனியாக ஆய்வு செய்து மாநிலத் தன்னாட்சி ஏன் வேண்டும்? என்பதற்குரிய ஆக்க முறைக் காரணங்களை விளக்கி நிற்கின்றன.

ஆக, " மாநிலத் தன்னாட்சி " என்பது
"ஓர் அரசியற் கட்சியின் கொள்கை யன்று";
மாறாக, நாம் அடைந்தே தீர வேண்டிய
"ஓர் அரசியற் கொள்கை"
என்பதனை உங்கள் சிந்தனைக்கு விருந்தாக்கி உள்ளோம்.

# ஐந்தாம் பகுதியின் தோற்றுவாய்

மாநில சுயாட்சி ஏன் வேண்டும்?

இதற்குரிய பல காரணங்களை மூன்றும் நான்காம் பகுதிகளில் விரிவாகப் பரிசீலித்தோம்.

ஆனால் ''மாநில சுயாட்சி தேவையில்லை'' எனப் பலர் கூறு கின்றனர்.

மாநில சுயாட்சி கூடாது என அவர்கள் கூறும் காரணங்களுக்கு மறுமொழி தர வேண்டாமா? அவர்கள் கூறும் காரணங்களை அலசிப் பார்த்து, அந்த வாதங்களில் சத்து இல்லை என்பதை மெய்ப்பித்துக் காட்டி, இந்திய நாட்டின் பல சிக்கல்களைத் தீர்ப்பதற்குரிய ஒரே வழி முழு மாநில சுயாட்சிதான் என்பதை நிலைநாட்டி அது எவ்வகையில் மலரும் என்பதையும் ஆய்ந் தறிந்து கூறுவதே இந்தப் பகுதியின் நோக்கம்.

மாநில சுயாட்சி கூடாது என்பதற்குப் பொதுவாக இரு வகைக் காரணங்கள் காட்டப்படுகின்றன.

வலிமையான மத்திய அரசு இல்லா விட்டால், 'நாட்டின் ஒருமைப்பாட்டைக் காக்க முடியாது' என்பது ஒரு சாரார் கருத்து. ''வலிமை'' என்பதற்கு ''எண்ணிக்கையில் நிறைந்த அதிகாரங்கள்'' எனப் பொருள் கொள்கின்றனர் இவ்வகை யினர். அரசமைப்புச் சட்டத்தால் அடுக்கி வைக்கப்பட்டிருக் கும் பேரதிகாரங்களின் சுமையில் வலிமை இல்லை; மாறாக அதிகாரச் சுமை குறைந்து, திறன் மிகுந்த மத்திய அரசு சீரிய முறையில் செயலாற்றும் வகையில் நாட்டின் ஒட்டு மொத்த மான நலனுக்குத் தேவையான சில அதிகாரங்களை மட்டும் ஏற்றுக் கொண்டு—முறையோடும் செயல் திறத்தோடும்—இயங்குவதில்தான் அதன் ''உண்மையான வலிமை'' உள்ள தென்பதை இச்சாரார் புரிந்து கொள்வதில்லை.

மாநிலங்களுக்குத் தன்னாட்சி அதிகாரங்கள் தரப்பட்டால் குறுகிய மாநிலக் கண்ணோட்டமும் மொழித் தேசிய உணர்வும் மிகுந்து நின்று அதனால் ''நாட்டுப் பிரிவினை'' தவிர்க்க முடியாத தாகி விடும்; எனவே, 'மாநில சுயாட்சியும்' 'பிரிவினைக்

கோரிக்கை'யும் ஒன்றுதான் என வாதிடுபவர்கள் இன்னொரு சாரார். முரண்பட்ட மாநிலத் தனித் தன்மைகளைப் போற்றி வளர்த்தலும் அவற்றையெல்லாம் ஒரு திறன் பெற்ற மத்திய அரசின் கீழ் இணைத்தலுமே கூட்டாட்சிக் கொள்கையின் உயிர்த் தத்துவம் என்பதை அவர்கள் உணர்வதில்லை.

ஆக, மாநில சுயாட்சி கூடாது என்று கூறுபவர்கள் எதிர் மறைக் காரணங்களைத்தான் நம்முன் படைக்கின்றனரே யன்றி, ''அது ஏன் கூடாது?'' என்பதற்குரிய நேரடியான தர்க்க வாதங்களை எடுத்தியம்புவ தில்லை. ஆனால், வலிமை யான மத்திய அரசு வேண்டு மென்போரும் தனித் தன்மை களைப் போற்றும் முழுமையான மாநில சுயாட்சி கூடாது என்பாரும் பரந்து விரிந்த இந்திய நாட்டிற்கு ஒரே அரசாங்கத் தைக் கொண்ட ஒற்றையாட்சி முறைதான் வேண்டும் என்றும் வலியுறுத்துவதில்லை. மாறாகக் கூட்டாட்சி ஒன்றுதான் சாலச் சிறந்தது எனவும்—ஆனால் எண்ணிக்கையில் நிறைந்த அதி காரங்களை மத்திய அரசு பெற்றிருக்க வேண்டும் எனவும் கூறுகிறார்கள்.

கூட்டாட்சியும் வேண்டும்; அதே நேரத்தில் மாநிலங் களை முழுமையாக அடிமை கொள்ளும் ஒரு மத்திய அரசும் வேண்டும் என்று கூறுபவர்களது கோட்பாட்டின் மூலத்தை நாம் அணுகி நோக்கினால் மாநிலங்களுக்கு அதிக அதிகாரங் கள் தரப்பட வேண்டும் என்பதை அவர்கள் ஏதோ ஒருவகை யில் ஒத்துக்கொள்கிறார்கள் என்பதும், ஆனால் மாநிலங்களுக்கு, அதிகாரங்கள் எவ்வகையில் தரப்பட வேண்டும் என்று கூறும் வழிவகைகளில் (Solutions) தான் மாறுபாடுகள் உள்ள தென்ப தும் தெற்றென விளங்கும். அவர்கள் கூறும் மாறுபட்ட வழி வகைகளும் இந்த ஐந்தாம் பகுதியில் பரிசீலிக்கப்பட்டுள்ளன.

மத்திய அரசின் மெய்யான வலிமை யென்பது எது? மாநில சுயாட்சி என்பதே பிரிவினையா அல்லது அது பிரிவினை யைத் தடுக்கும் ஒரு சீரிய வழிமுறையா? இவ்விரு பெரு வினாக்களுக்கும் உரிய விடைகள் எவை என்பதையும் இந்தப் பகுதியில் பரிசீலிக்கப்பட்டுள்ளது.

இன்றைய அரசமைப்பின் பல முக்கியமான சட்ட விதிகள் சேர்க்கப்பட வில்லை. அவை ஜனநாயகத்திற்கே உலை வைக் கின்றன. அரசமைப்பில் எழுதப்படாமல் விடப்பட்ட சில சட்டப் பகுதிகளின் துணைகொண்டு, மத்திய அரசின் எண்ணிறந்த

அதிகாரங்களை முறையின்றிப் பயன்படுத்தி மத்திய அரசின் ஓரங்கமான நமது குடியரசுத் தலைவர் சட்டப்படி ஒரு சர்வாதி காரி ஆகிவிட முடியும். அஃதேபோல், அரசமைப்பில் எழுதி வைக்கப்பட்டுள்ள சட்டவிதிகளைப் பயன்படுத்தி, குவிக்கப்பட்ட அதே மத்திய அதிகாரங்களின் துணைகொண்டு, இந்தியத் தலைமை யமைச்சரும் சர்வாதிகாரியாக ஆகிவிட முடியும். எனவே, சர்வாதிகாரத்தைத் தவிர்ப்பதற்கும் மாநில சுயாட்சி வேண்டும்.

அகண்ட இந்தியாவில் மாநில சுயாட்சி படைத்த முற்பகுதி வரலாற்றை இந் நூலின் இரண்டாவது மற்றும் மூன்றும் பகுதி கள் எடுத்தியம்புகின்றன. அதன் பிற்பகுதி வரலாற்றைப் பண்டைய பாரதத்தின் இன்றைய கூறுகளான தங்க வங்கமும், சிதறுண்ட பாகிஸ்தானும்,' பொன்னெழுத்துக்களால் பொறித்து வைத்துள்ளன. அவை தரும் படிப்பினைகள் என்ன?

மலர்க மாநில சுயாட்சி.

அவை பற்றியும் இந்தப் பகுதியில் விரிவாக ஆராயப் பட்டுள்ளன.

மாநில அரசுகளின் செல்வம் கொள்ளை போகின்றன; மத்திய அரசு, மாநில அரசுகளைக் குடியேற்ற நாடுகளாக ஆக்கி, அவற்றை நிதித் துறையில் சுரண்டி வருகிறது. மாநிலங்கள், வெறும் காலனி நாடுகள் போன்றவைதானா? என்பதையும் இப்பகுதியில் தெளிவாக்கப்பட்டுள்ளது.

அரசியல் கட்சிகளின் அடிப்படைக் கோட்பாடுகளையும் அரசமைப்பு வல்லுநர்களின் ஆழ்ந்த கருத்துக்களையும் கருத் தரங்குகளின் முடிவுகளையும் ஆணைக்குழுக்களின் பரிந்துரை களையும் மத்திய—மாநிலப் பிணக்குகளின் மூலத்தையும் ஆழ்ந்து நோக்கின் மாநில சுயாட்சி ஒன்றுதான் தக்கதோர் பரிகாரம் என்பது தெளிவாகிறது. ஆனால் அவை ஒவ்வொன் றும் தரும் வழிமுறைகள் மட்டுமே மாறுபடுகின்றன.

"அதிகாரப் பரவலாக்கல்" (Decentralisation) ஒருமுறை; அரசமைப்பைத் திருத்தாமலேயே பரிகாரங்களைக் காண்பது அடுத்த தொரு வழிமுறை; தேவையான அளவில், சிற்சில அரசமைப்பு விதிகளை மட்டும் திருத்திப் பரிகாரம் காண்பது மூன்றாவது வழிவகை.

ஆனுல் இவையெல்லாம் முழுப் பயனையும் பெற்றுத் தருவ தில்லை. எனவே, மெய்யான கூட்டாட்சியைப் பெறும் முழுமை யான மாநில சுயாட்சியே தக்கதோர் பரிகாரமாகும் என்பது நமது வழிவகை.

மேற்சொன்ன முரண்பட்ட கூற்றுக்களை ஒப்பாய்வு செய்து, சான்றுகளைக் காட்டி, விளக்கங்களைத் தந்து, முழு மாநில சுயாட்சி ஏன் வேண்டும்? அது எவ்வகையில் மலரும் என்பதை இந்த இறுதிப் பகுதியான ''மலர்க மாநில சுயாட்சியில்'' தெளிவாக்க முயன்றுள்ளோம்.

மத்திய—மாநில உறவுகள் சிறக்க, சமதர்மம் செழிக்க, ஜனநாயகம் தழைக்க, அதிகாரப் பரவலாக்கம் முழுமையைப் பெற, இழந்த இறைமையை மாநிலங்கள் மீண்டும் பெற, உண்மைக் கூட்டாட்சி உருவாக, முழு மாநில சுயாட்சி மலர வேண்டும்.

எனவே, மலர்க மாநில சுயாட்சி.



# 1. மத்திய அரசு மெய்யான வலிமையைப் பெற...

— மலர்க மாநில சுயாட்சி —

"வலிமை வாய்ந்த மத்திய அரசும், வலிவு கொண்ட மாநிலங்களும், ஒன்றுக் கொன்று எதிரிடையானவை எனக் கருதும் போக்கு முற்றிலும் தவறான ஒன்றாகும். பெரிய அரசு [ Big Government ] வலிமை வாய்ந்த அரசு அல்ல. ஒரு வலிமையான மத்திய அரசும் வலிமை படைத்த மாநிலங்களும் தத்தம் எல்லைகளுக்குள் நின்று பயன் தருமுறையில் செயல்பட்டால், உண்மையில் அவை ஒன்றுக் கொன்று உறுதுணையாகவே அமையும்."

— 1972-ஆம் ஆண்டு மார்ச்சில் ஆக்ராவில் நடைபெற்ற மத்திய-மாநில உறவுகள் பற்றியக் கருத்தரங்கின் முடிவு.

## திரிபு வாதம்

இன்றைய குறை பாரதமும், பாகிஸ்தானமும், பங்களா தேசமும், பர்மாவும், ஆப்கானிஸ்தானத்தின் பெரும் பகுதியும், ஸ்ரீலங்காவும் இணைந்ததொரு பெரு நிலப்பரப்பின் மாறுபட்ட மொழியினத் தேசிய மக்களை "ஒரே நாடு" என்ற கொதிகலனுக்குள் போட்டு "ஒரே மத்திய அரசு" என்ற நீரை அதில் இட்டு "ஆதிபத்தியம்" என்ற நெருப்பிட்டுக் கொளுத்தி வாட்டி வதைத்தது ஆங்கில ஏகாதிபத்தியம். ஏன்? அடிமை நாடுகளின் செல்வங்களை யெல்லாம் "அரசாங்கம்" என்ற பெயரால் பகற் கொள்ளையடித்துச் சுரண்டிச் செல்வதற்காகத்தான். ஏகாதிபத்தியச் சுரண்டலுக் கென்றே ஒரு சீரிய முறையையும் கண்டு பிடித்து நடைமுறைப் படுத்திற்று வெள்ளையர் அரசு. அது தான் வல்லமை வாய்ந்த மத்திய அரசு.

---

1 Centre - State Relations in India (1972) Edited by Mr. A. G. Noorani, Page 146

அந்த மத்திய அரசின் வல்லாட்சி அதிகாரங்களைக் கொண்டு பல்வேறு தனிநாடுகளையும் ஆட்டிப்படைத்தான் வெள்ளையன். அந்நாடுகளுக்கு "இந்தியா" என்ற ஒரு சிறந்த பெயரையும் கொடுத்தான்.

ஆதிபத்திய அரசொன்று அழகாகப் படைத்து வைத்த, வலிவான ஆதிக்க அமைப்பான "மத்திய அரசின்" மூலமாக இந்தப் பெரு நிலப்பரப்பின் பல்வேறு தேசிய இனங்களும் ஒன்றோடொன்று உணர்ச்சிப் பூர்வமாகப் பிணைந்து விட்டது எனக் கொள்வது உண்மை நிலைக்கும் சரித்திரத் தன்மைக்கும் மாறுபாடு கொண்டதல்லவா?

ஆப்கானியர்களும் பர்மியர்களும் பாக்கிஸ்தானியர்களும் வங்க மக்களும் சிங்களவரும் இன்றைய் இந்தியர்களான நாமும் ஒரு தாய்மக்களின் உணர்வோடு கூடிய பிணைப்புடன் தான் இயங்குகின்றோமா? இல்லவே இல்லை.

அப்படி என்றால் "வலிமைநிறை மத்திய அரசு" ஒன்றை மட்டும் வைத்து, இன்றைய குறைபாரதத்திலுள்ள பன்மொழி பேசும் பல்வேறு இன மக்களை யெல்லாம் அதிகாரக் குவியலின் துணை கொண்டே உணர்ச்சி பூர்வமாகப் பிணைத்து விட முடியும் என்ற வாதம் மட்டும் எவ்வகையில் பொருந்தும்?

எப்படியோ சில நூற்றாண்டுக் காலமாவது ஒரு பெரும் மத்திய அரசின் கீழ் நாம் இணைந்து விட்டோமல்லவா? அதனை ஏன் மீண்டும் மாற்றிட வேண்டும்?

"முரட்டு மிருகங்களுக்குச் சொந்தக்காரர்கள் அந்த விலங்குகளை யெல்லாம் ஒரே கயிற்றால் கட்டி, ஒரே கொட்டடியில் அடைத்து வைப்பதுபோல இந்திய மக்களை ஒரே மாதிரியான சட்டத்தால் ஒன்றாகப் பிணைத்துக் கட்டி ஒரே இடத்தில் வசிக்க வைத்திருக்கும் சாதனைதான், (ஆங்கிலேய) மத்திய அரசு செய்த பெரும் சாதனை யாகும். அந்த மத்திய அரசு செய்திருப்ப தெல்லாம் 'இந்தியர்கள்' என்று கூறப்பட்ட மக்களிடையே ஒரு விதமான (அடிமை) அமைதியை உருவாக்கி வைத்திருப்பது தான். ஆனால் அந்த மத்திய அரசு இந்தியாவை ஒரே தேசமாக்கிவிட வில்லை......

......இந்தியர் என்ற ஒற்றுமையை ஏற்படுத்துவதற்குக் காலம் போதவில்லை யெனக் கூறிட முடியாது. இதற்காக ஒரு (வலிமையான) மத்திய அரசின் கீழ் 150 ஆண்டுகள் ஆட்சி செய்யப்பட்டது போதவில்லை யெனில், யுகயுகாந்திர மான காலம் கூடப் போதாது.'' 2

இப்படிக் கூறி யிருப்பவர் யார் தெரியுமா? டாக்டர். கலைஞரல்லர்; டாக்டர். நாவலருமல்லர்; நம் இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தில் இன்றைய வலிமையான அரசை இந்திய மக்களின் ''ஒற்றுமை''யைக் கருதிப் படைத்திருக் கிறாரே அதே டாக்டர். அம்பேத்கார் அவர்கள் தான். மொழி, இனம், தேசியம் ஆகிய அடிப்படையில் மக்கள் வேறுபாடுகளைக் கொண்டொழுகும் போது அரசாங்கம் மட்டும் அவர்களை ஒன்று படுத்தும் சக்தியாக விளங்கிட முடியாது என்பதையும் அம் மாமேதையே அறுதியிட்டுக் கூறிப் போந்தார்.

எனவே, வெள்ளையனின் ஏகாதிபத்திய மத்திய அரசைக் காட்டிலும் இன்னொரு வன்மையான மத்திய அரசைக் குடியரசு முறையில் இயங்கும் விடுதலை பெற்ற இந்தியாவில் நாம் படைத்து வெற்றி காண முடியாது. ''ஒருமைப்பாடு'' என்ற பெயரால் அதிகார பலத்தைக் கொண்டும் அடக்கு முறையைக் கையாண் டும் தனித் தன்மைகளைக் கொண்ட இந்திய மாநிலங்களை ஒருமைப் படுத்தி விடவும் முடியாது.

ஆகவே, செறிந்த அதிகாரங்களைக் கொண்ட ஒரு மத்திய அரசுதான் இந்திய மக்களின் ''ஒருமைப் பாட்டை'' பேணிக் காத்திட முடியும் என்ற வாதம் வெறும் கற்பனையானதே; மாயத் தோற்றத்தை உண்மை நிகழ்ச்சி போல் நம்பி மயங்கும் படி செய்யும் திரிபு வாதமே யாகும்.

## வலிமையான மத்திய அரசு என்றால் என்ன?

''வலிவான மத்திய அரசு'' என்ற சொற்றொடருக்கு ''அதிகாரங்களற்ற மாநிலங்களை ஆட்டிப் படைக்கக் கூடிய, எண்ணிறந்த அதிகாரங்களைச் சுமந்து கொண்டிருக்கும் மத்திய அரசு'' என்பது பொருளன்று. இந்தியத் துணைக் கண்டத்தின்

2 ''Pakistan or Partition of India'' (1945) by Dr. B. R. Ambedkar, Page 178 - 179.

பல பகுதிகளை அதன் தனித்தன்மைகளுக்கு முரணுக ஆட்டிப் படைக்கக் கூடிய செறிந்த அதிகாரங்களைக் கொண்டு இயங்கி யவை தான் மௌரியப் பேரரசு; குப்தப் பேரரசு; விஜய நகர சாம்ராஜ்யம்; மொகலாயப் பேரரசு; இறுதியில் ஏற்பட்ட ஆங் கிலப் பேரரசு. இப்பேரரசுகளின் மத்திய நிர்வாகம் எண்ணிறந்த அதிகாரங்களைத் தம்மகத்தே பெற்றியங்கியும் கூட நிலையான இந்திய ஒற்றுமையை அவை ஏன் ஏற்படுத்த முடியவில்லை? தற்போது இருக்கும் இந்தியாவின் மத்திய அரசும் ஒருவகையில் மேற்சொன்ன பேரரசுகளின் மத்திய அரசுகள் போன்றதே - காலத்திற்கேற்ற சிற்சில மாறுதல்களுடன். "ஒருமைப்பாடு" என்ற பெயரால் சரிந்த சாம்ராஜ்யங்களின் வரிசையில் இன்றைய மத்திய அரசும் சேர்ந்துவிடக் கூடாதென்பதே நம் அவாவாகும்.

செறிந்த அதிகாரங்களைக் கொண்ட மத்திய அரசுதான் வேண்டும் என்போர் இதற்கோர் எதிர் வினவை எழுப்பலாம். உலக நாடுகளின் பரப்பளவிலேயே ஏழாவது இடத்தை வகிக் கும் அகண்ட நிலப்பரப்பைக் கொண்ட இந்தியத் துணைக் கண்டத்தை, பழுதடையாமல் கட்டிக் காப்பதற்கு வலிமையற்ற ஒரு மத்திய அரசுதான் தகுதியுள்ளதா?

உண்மைதான்; வலிவற்ற மத்திய அரசு இந்தியத் துணைக் கண்டத்தை ஆள்வதற்குத் தகுதியற்றது தான்.

இந்தியாவின் மத்திய அரசு வலிவிழந்ததாக இருந்தால் தான் இந்நாட்டின் பல்வேறு தேசிய இனங்களையும் ஒற்றுமைப் படுத்த முடியும் என்பது நம் வாதமல்ல. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் மத்திய அரசைப் போல சோவியத் ருஷ்யாவின் மத்திய அரசைப்போல—நம் இந்திய மத்திய அரசும் "மெய் யான வலிவோடும் பொலிவோடும் திகழ வேண்டுமென்பதே நம் பேரவாவும்கூட. இந்தியாவின் பலமொழித் தேசிய இனங்களும் உண்மையான வலிவைக் கொண்ட மத்திய அரசின் கீழ் உணர்ச்சிபூர்வமாக இணைந்து நின்று வரலாற்றுக் காலங்களில் எல்லாம் நம்மால் காணமுடியாத "நிரந்தரமான ஒருமைப்பாடு" உருவாக வேண்டுமென்பதே மாநில சுயாட்சிக் கோரிக்கை யாளர்களின் பேரவாவுமாகும்.

## ''மெய்யான'' வலிமை கொண்ட மத்திய அரசு என்பது எது?

மாநிலங்களுக்கே உரிய பல அதிகாரங்களையும், மையத்திற்குத் தேவையான அடிப்படையான ஆட்சி அதிகாரங்களையும் ஒன்ருகச் சேர்த்துக் கொண்டு, அகில இந்திய ரீதியில் மாநிலங்களுக்குரிய பொருளாதார சமுதாயப் பணிகளை முழுமையாக நிறைவேற்ற முடியாமலும், இந்தியப் பாதுகாப்பையும் இறையாண்மையையும் சரிவர நிலைநிறுத்திக் கொள்ள இயலாத வகையிலும், அதிகாரங்களின் ஈட்டத்தின் தாங்கொணுச் சுமையினுல் தன் வலிவைத் தானே இழந்து தவிக்கும் கையறு நிலையிலுள்ள இன்றைய மத்திய அரசுதான் ஒற்றுமையைப் பேணிக் காக்கும் ''மெய்யான வலிமை'' கொண்ட மத்திய அரசு ஆகாது.

மெய்யாகவே வலிமை வாய்ந்த மத்திய அரசு என்பது. இந்திய மண்ணில் வெளி நாட்டினரின் ஆக்கிரமிப்பைத் தடுத்து நிறுத்தும் ஆற்றல் வாய்ந்ததாயும், வெல்லுந் திறமிக்கதாயும், இந்திய விடுதலையைப் பேணிக் காக்கும் வல்லமையும் திடமும் பெற்றதாயும், பொருளாதாரச் சிக்கல்களைத் தாக்குப் பிடித்து, சமத்துவத்தையும் சமநீதியையும் தனழைக்கச் செய்யும் செயல் திட்பம் மிக்கதாயும், வெளி நாடு மற்றும் உள்நாட்டு முதலாளித்துவம் இந்தியப் பொருளாதாரத்தில் ஊடுருவ இடம் தராத வலிவான பேரதிகாரங்களைக் கொண்டதாயும், இந்திய மாநிலங்களும் அம்மாநிலங்களில் வதியும் பல்வேறு இன மக்களின் அரசியல் மொழி, இன, சமுதாயத்தனித் தன்மைகளையும் உரிமைகளையும் போற்றிப் பாதுகாக்கும் திறனையும் செல்வாக்கையும் பெற்றதாயும் விளங்க வேண்டும்.

மக்கள் நல்வாழ்வுக்கு நேரடியாகப் பொறுப்பேற்றிருக்கும் மாநில அரசுகளுடைய நியாயமான பல அதிகாரங்களைத் தானே ஏற்றுக் கொண்டு அதிகாரங்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்திக் கொள்வதாலேயே மேற்சொன்ன ''மெய்யான வலிமையை'' எந்தவொரு மத்திய அரசும் பெற்றுவிட முடியாது. எனவே, வலிமை என்பது அதிகாரங்களின் ஈட்டத்திலோ அல்லது எண்ணிக்கையிலோ இல்லை. மாருக, இந்திய நாட்டையும் அதன் மக்களின் சுதந்திரத்தையும் பாதுகாத்துக் கொள்வதற்குரிய சில அடிப்படை அதிகாரங்களின் செறிவிலும், திட்பத்திலுமே உண்டு.

அரசியல் நிர்ணய் சபையில் காங்கிரஸ் உறுப்பினராக இருந்தவரும் தமிழகத்தைச் சார்ந்த முதுபெரும் அரசமைப்பு அறிஞருமான, திரு. K. சந்தானம் அவர்கள் மெய்யாகவே வலிவுள்ள மத்திய அரசு எது என்பதை விளக்கும்போது,

"......இந்தியா சிதறி விடாமலும் குழப்பத்தில் சிக்குண்டு கலந்து விடாமலும் இருப்பதற்கு வலிவுள்ள மத்திய அரசு இன்றியமையாததுதான். ஆனால், அரசியல் அதிகாரங்கள் குவிந்திருந்தால்தான் அத்தகைய வலுவேற்படும் என்ற கூற்றினை நான் ஏற்பதற் கில்லை. மாறாக, பரந்து கிடக்கும் இந்தியா முழுமையிலும் வாழும் பெருத்த மக்கள் தொகை யினரின் சார்பான பொறுப்புக்கள் பலவற்றை ஏற்றுக் கொள் வதன் மூலம் மத்திய அரசு மீள முடியாத அளவுக்குப் பலவீன மாகி விடுகிறது என்பதே எனது திடமான கருத்தாகும். அவசியமான அனைத்திந்தியப் பொறுப்புக்களில் மட்டுமே கவனத்தைச் செலுத்தி அப்பொறுப்புக்களை மாநிலங்களோடு பகிர்ந்து கொள்ளாமல், அதே நேரத்தில், எஞ்சிய எல்லா அரசுத் துறைகளிலும் மாநிலங்களுக்கு முழு சுயாட்சி அளித் திடுவதன் வாயிலாகவே நாடாளு மன்றமும் மத்திய அரசும் உண்மையான வலுவுடன் உறுதியாக இருக்க முடியும். இந்தியா விடுதலை யடைந்து இருபதாண்டு காலமாக ஒரே கட்சியின் அரசியல் ஆதிக்கம் நிலவி வந்தது. இதன் விளைவாக இந்தியக் கூட்டாட்சி முறையில் தெளிவில்லாமல் வழி நடத்திச் செல்லும் போக்கு வலுப் பெற்றுள்ளது. இப் போக்கு மத்திய அரசுக்கு இன்னலைச் சேர்க்கிறது. மாநிலங் களுக்கு எரிச்சலை யூட்டுகிறது."[3]

என அறுதியிட்டுக் கூறுகிறார்.

கர்நாடக மாநிலத்தின் தலைசிறந்த காங்கிரசுத் தலைவரும் இன்றைய மத்திய அரசால் நியமிக்கப்பட்ட 'நிர்வாகச் சீர்திருத்தக் குழு'வுக்குத் தலைவராக இருந்தவரும் அரசியல்

---

3 "Growing Demand for Greater Autonomy", By. K. Santhanam, in "The Union and the States" (1972), Edited By. S. N. Jain and other P. 75.

நிர்ணய சபையில் தீவிர உறுப்பினராகப் பணியாற்றியவரு மான, திரு. அனுமந்தையா அவர்கள் மத்திய அரசின் மெய்யான வலிமை என்பது எது என்பதை அரசியல் நிர்ணய சபையில் எடுத்துக் கூறுகையில்,

> ''மத்திய அரசின் வலிமை என்பது, ஒரு வலிய இராணுவத்தை யும் ஒரு வலிய கடற் படையையும் ஒரு வலிமை கொண்ட விமானப் படையையும் வைத்திருப்பது இவைகளுக்குத் தேவையான நிதியைப் பெறும் நிலையைப் பெற்றிருப்பதும் தான் என்றே நான் பொருள் கொள்கிறேன்.
>
> ...அதற்கப்பால் மத்திய அரசு மிக அதிகமான அதிகாரங் களை எடுத்துக் கொண்டாலும் அதன் சட்டமிபற்றும் அதி காரங்களைக் குவித்துக் கொண்டே போனாலும் மாகாணங் களிடம் இருக்க வேண்டிய ஊக்கமும் முன்னேற்றத்திற் காகச் செயல்படும் உணர்ச்சியும் அவற்றிடம் இராது. மாகாணங்கள் வெறும் தன்னியக்கக் கருவிகள் என்ற தாழ்நிலைக்குத் தள்ளப்பட்டு விடும்... நான் அரசமைப்புப் பற்றிப் படித்துள்ளேன். ஒரு நாடு 'சுதந்திர நாடா' என்பதை முடிவு செய்வதற்காக வைக்கப்படும் சோதனை களில், அந்நாட்டின் பல உறுப்புக்களும் உள்ளாட்சிகளும் எந்த அளவிற்கு, சுதந்திர உரிமைகளையும் சுயாட்சியையும் பெற்றுத் திகழ்கின்றன எனக் காணுதலே அடிப்படைச் சோதனையாக அமைகிறது..... பல பேர் 'மத்திய அரசின் வலிமை' என்பதற்குப் பல வழிகளில் பொருள் கொள்கின்ற னர். [illegible]க அரசியல் சட்டத்தைத் தயாரித்த குழுவோ செங்கோ[illegible]டையின் (டெல்லியில்) செயலகத்தில் கோப்புக் களைக் (Files) குவித்து வைத்துக் கொள்வதில்தான் 'மத்திய அரசின் வலிமையுள்ளது' எனப் பொருள் கொண்டிருக் கிறது.'' 4

எனத் தெளிவாக்குகிறார்.

அரசியலமைப்புத் துறையில் தெளிந்த நுண்ணறிவு பெற்ற வரும் நிர்வாகத் துறையில் விற்பன்னருமான, சி. எஸ். வெங்கடாச்சார், I.C.S. அவர்கள்,

> ''தலைமை தாங்கி மேற்பார்வை செய்யும் ஒரு மத்திய அரசின் கீழ் விறிப்புடனும் செழிப்புடனும் வளர்ச்சி பெறத் துடிக்கும் மாநிலங்களை, நாம் ஆழ்ந்து சிந்திக்காமல் (மத்திய அரசின்)

---

4 ஆதாரம். 16—4—1974 ''தமிழ்நாடு சட்டப்பேரவை நடவடிக்கை கள்'' (பணித்துறை வெளியீடு) தொகுதி LVI எண். 1, பக்கம் 50, 51.

வெறும் நிர்வாகப் பகுதிகளாக மட்டுமே அவைகளைக் காண முனைகிறோம். மத்திய அரசின் அரசியல் நெறிமுறை சார்பான வலிமை என்பதற்கும், நடைமுறை அரசியலமைப் புச் சட்டத்தின்படியான வலிமை என்பதற்கும், வேறுபாடு உண்டு. அரசியல் சட்டத்திலும் மற்ற சட்டங்களிலும் மத்திய அரசுக்கு எழுத்துருவில் வழங்கப்பட்ட அதிகாரங் கள் யாவும் வல்லமை மிக்கதாகவும் அதன் ஆணையுரிமைகள் மலைக்க வைக்கத் தக்கவையாயும், அதன் செல்வாக்கு, கவர்ச்சி யூட்டி ஆட் கொள்ளத் தக்கதாயும் காணப்படுகின் றன. ஆனால் மத்திய அரசின் இந்த அதிகாரச் சுமையே அதனைச் செயலற்றதாகவும், நிர்வாக இயந்திரத்தின் மூல மாகத் தேவையான தூண்டும் திறனைச் செலுத்த இயலாத தாகவும் ஆக்கி விடுகின்றது. மாறாக, அரசியல் நெறிமுறை சார்பான வலிமையே மத்திய அரசின் உண்மையான வலிவாகும். அஃதாவது நடைமுறையில் மாநிலங்களின் கூட்டு வலிமையே மத்திய அரசின் வலிமையாகும்.'' 5

என நுட்பத்தோடு விளக்குகிறார்.

"Unconsciously we tend to look upon states as territorial units, not as so many alert, growing, thriving societies, with the centre as a paramount entity presiding over the states. *There is a distinction between the constitutional and political strength* of the Central Government. On paper the constitutional and legal powers of the centre may appear formidable, its authority massive, its strength impressive. But the very weight of such formidable power may render the centre immobile, unable to impart sufficient impetus through the machinery of administration. On the other hand, the reality lies in political strength which in practical terms implies that *the Central Government is the cumulative strength of the constituent states.*"

---

5 Swarajya Annual (1974) "Regionalism and Federal Integration", By C. S. Venkatachar I. C. S. (Retd) Page 100

## வலிமையை வழங்கும் அதிகாரங்கள் எவை?

மத்திய அரசின் மெய்யான வலிமை எது என்பதைப் பார்த்தோம். இனி அந்த வலிமையை வழங்கக் கூடிய அதிகாரங்கள் யாவை என்பதைக் காண்போம்.

ஓர் கூட்டாட்சி நாட்டில் அந்நாட்டு மக்களின் பொதுவான நலனை முன்னிட்டும், மாநிலங்களின் 'தனித் தன்மை', 'பொது அக்கறை' கருதியும் குறிப்பிட்ட சில தேசிய அதிகாரங்களை மட்டும் மத்திய அரசுக்கு வழங்குவது கூட்டாட்சித் தத்துவத்தின் சாரமாகும். அந்நாட்டின் எல்லாப் பகுதிகளுக்கும், எல்லா மக்களுக்கும் ஒரே சீராகப் பயன்படக் கூடியவையாய் அவ்வதிகாரங்கள் இருக்க வேண்டும்; மாநிலங்களே தனித்து நிர்வாகம் செய்ய இயலாத அதிகாரங்களாகவும் அவை இருத்தல் வேண்டும்.

அமெரிக்கக் கூட்டாட்சி அரசியல் வல்லுநரான ஹாமில்டன் (Hamilton) அவர்கள் மத்திய அரசின் அதிகாரங்களைப் பற்றி விளக்கு முகத்தான்,

> ''வெளிநாட்டுத் தாக்குதலில் இருந்தும், உள்நாட்டுக் குழப்பத்திலிருந்தும் பாதுகாத்தல்; நாட்டின் பொது அமைதி; மாநிலங்களுக்கு இடையிலான வணிகம், மற்றும் மற்ற நாடுகளுடன் நடாத்தும் வர்த்தகம் ஆகியவற்றை ஒழுங்குபடுத்துதல்; வெளிநாடுகளுடன் ஏற்படுத்திக் கொள்ளும் அரசியல் மற்றும் வர்த்தகத் தொடர்புகளை மேற்பார்வையிடல்; ஆகியவையே மத்திய அரசால் செயல்படுத்தப்பட வேண்டிய தலையாய பணிகள் ஆகும்.'' 6

என்றார்.

இந்திய அரசியலமைப்பு வல்லுநர்களில் தலைசிறந்தவரான, டாக்டர். B. M. சர்மா (B. M. Sharma) அவர்கள் மத்திய அரசுக்கான அதிகாரங்களைப் பற்றிக் குறிப்பிடுகையில்,

> ''வெளிநாட்டு விவகாரங்கள் பாதுகாப்பு; நாடு தழுவிய தேசியப் பணிகளான செய்தித் தொடர்புகளும் போக்குவரத்துக்களும்; நாணயம்; மாநிலங்களிடையே வணிகத்தை

---

6 The Federalist No. XXIII Quoted in, "Federal Polity" (1967), By B. M. Sharma, Page 200

வளப்படுத்துதல்; வெளிநாட்டு வர்த்தகம்; குடியுரிமை மத உரிமைகளைப் பாதுகாத்தல்; மற்றும் இவைகளுக்கான நிதி வசதிகளைப் பெற்றுக் கொள்ளும் அதிகாரங்கள் ஆகியவை கூட்டாட்சி மத்திய அரசுக்குப் போதுமான அதிகாரங்கள்.'' 7

இந்திய நாட்டை ஒரு கூட்டாட்சியாக அமைத்து அதற்கு விடுதலை நல்க வேண்டுமெனக் கங்கணம் கட்டிக் கொண்டு வந்த ''பிரிட்டானிய அமைச்சரவைத் தூதுக்குழு'' இந்திய மத்திய அரசுக்கு 'பாதுகாப்பு', 'வெளிநாட்டு உறவு', 'செய்தித் தொடர்புகள்' ஆகிய மூன்றே மூன்று அதிகாரங்கள் போதுமானவை எனப் பரிந்துரைத்தது. அதனைக் காங்கிரசுக் கட்சியும் முஸ்லீம் லீக்கும் ஏற்றுக் கொண்டன என்பதும் குறிப்பிடத் தக்கதாகும்.

முதுபெரும் காங்கிரசுத் தலைவர்களில் ஒருவரும், அகில இந்தியக் காங்கிரசுக் கட்சியின் தலைவராக இருந்தவருமான, அறிஞர் அபுல்கலாம் ஆசாத் அவர்கள், இந்திய மத்திய அரசுக்கு மேற்சொன்ன மூன்று அதிகாரங்களே போதுமானவை எனக் கருதி அவற்றை அடிப்படையாக வைத்து ''ஆசாத் திட்டத்தை'' அறிவித்தார். அதனைக் காங்கிரசுக் காரியக் கமிட்டியும் காந்தியடிகளின் ஆசியோடு ஒருமனதாக ஏற்றுக் கொண்டதும் இங்கு நினைவு கூறத்தக்கது. இதன் முழு விபரங்கள் இந்நூலின் இரண்டாம் பகுதியில் விரிவாகத் தரப்பட்டுள்ளன.

மாநில சுயாட்சி பற்றியும் இராசமன்னார் குழுவின் அறிக்கை பற்றியும் தமிழகச் சட்டப்பேரவை மற்றும் மேலவைகள் விவாதித்து மத்திய அரசிற்குத் தமிழக அரசு பரிந்துரைத்த கருத்துரைகளில்,

''எனவே, மத்திய அரசிடம் அதிகமான அதிகாரங்கள் குவிந்திருப்பதால் அது உண்மையில் பலவீனந்தான் அடைகிறது என்பது தெளிவாகும். இன்றைய அரசியல் அமைப்புச் சட்டத்தின்கீழ் மாநிலங்கள் மத்திய அரசின் கைப்பாவைகளாக மாறி, கையாலாகாத நிலையில் உள்ளன. உண்மையான கூட்டாட்சி அமைப்பில், நாட்டின் பாதுகாப்பு, வெளிநாட்டு உறவுகள், மாநிலங்களுக்கிடையே போக்குவரத்துத் தொடர்புகள், நாணயச்

7 "Federal Polity" (1967) By Dr. B. M. Sharma Page 199 - 203

செலாவணி ஆகியவை குறித்த அதிகாரங்கள் மட்டுமே மத்திய அரசிடம் இருக்க வேண்டும்; ஏனைய அதிகாரங்கள் அனைத்தும் எஞ்சிய அதிகாரங்களுடன் மாநிலங்களிடம் இருக்க வேண்டும். மத்திய அரசும் மாநில அரசுகளும் தமக்குள்ள அதிகார வட்டத்திற்குள் சுயேட்சையாகச் செயல்பட வேண்டும். இத்தகைய கூட்டாட்சி முறை நிலவினால் தான் நாடு முழுவதுமாக நலமுறுதல் இயலுமென்பதே இந்த அரசின் உறுதியான நம்பிக்கை.'' 8

எனக் கூறப்பட்டுள்ளது.

பாக்கிஸ்தான் துண்டாடப்படாமல் ஒற்றுமையோடு விளங்க வேண்டும் எனக் கருதிய வங்கச் சிங்கம் ஷேக் முஜிபுர் ரஹிமான் அவர்கள் வலிமையான மத்திய அரசின் அதிகாரங்களைப் பற்றித்தன் 'ஆறு அம்சத் திட்டத்தில்' தொகுத்துக் கூறும் போது, 'வெளிநாட்டு விவகாரம்'; 'பாதுகாப்பு'; 'மாநிலங்கள் கொள்கை வகுக்கும் உரிமையுடன் கூடிய நாணயச் செலாவணி அதிகாரம்'; 'மாநிலங்கள் விதித்து வசூலிக்கும் வரி மற்றும் நிதி வருவாய்களில் பங்குரிமை' ஆகியவை மட்டும் மத்திய அரசுக்கு இருந்தால் போதுமானது எனத் தெளிவு படுத்துகிறார்.

அகில இந்திய மக்கள் அனைவரையும் ஒரு சேர முன்னேற்றப் பாதையில் அழைத்துச் செல்வதற்கு ஏற்றதொரு சாதனமாகவே இந்திய அரசமைப்புச் சட்டத்தில் செறிந்த அதிகாரங்களைக் கொண்ட வலிவான மத்திய அரசு படைக்கப் பட்டுள்ளது எனச் சொல்லப்படுகிறது. சென்ற கால் நூற்றாண்டுக்கும் மேலாகக் காங்கிரசுக் கட்சியின் ஒரு முக வல்லாட்சியால் ஏற்கனவே எண்ணிறந்த அதிகாரங்களைக் கொண்டிருந்த மத்திய அரசு மாநிலங்களுக்குரிய இன்னும் பல அதிகாரங்களைத் தன்னகத்தே ஆட்கொண்டு விட்டது. இத்துணை அதிகாரங்களைப் பெற்றிருந்தும் கூட மக்கள் துயரை நம் மத்திய அரசால் துடைக்க முடியவில்லையெனில், அடிப்படைக் கோளாறு மத்திய அரசினுடையதோ அல்லது நிர்வாகத்தினுடையதோ அல்ல;

---

8 *மாநில சுயாட்சி பற்றியும் இராசமன்னார் குழுவின் அறிக்கை பற்றியும் தமிழ்நாடு அரசின் கருத்துரைகள் பக்கம் 5, 6.*

அரசியலமைப்புச் சட்டத்தினுடையது தான். செறிந்த பல அதிகாரங்களைக் குவித்து வைத்திருக்கும், ''திறனற்ற ஒரு மத்திய அரசை''—''வலிமையான மத்திய அரசு'' எனக்கூறும் நமது அரசமைப்பு விதிகளே இதற்குக் காரணம்.

## வலிமையான மத்திய அரசிற்கு வலிவான மாநிலங்கள்

செறிந்த அதிகாரங்களைக் கொண்ட மத்திய அரசு வேண்டுமா அல்லது வளமான நாடு வேண்டுமா?

நாட்டுக்காகத் தான் மத்திய அரசே தவிர மத்திய அரசுக்காக நாடு அல்ல. வளமான நாடு வேண்டுமெனில் தேசிய நலனைப் பெற்றுத் தரக்கூடிய குறைந்த பட்ச அதிகாரங்களை ஏற்றுக் கொண்டு அவற்றைத் திறனுடனும் செம்மையுடனும் செயல்படுத்தக் கூடியதொரு மெய்யான வலிமையைப் பெற்ற மத்திய அரசும், மக்கள் நல்வாழ்வுப் பணிகளைச் செயல்படுத்தக் கூடிய எல்லா அதிகாரங்களையும் கொண்டுள்ள வலிமையான மாநிலங்களும் இன்றியமையாதவை.

செறிந்த அதிகாரங்களை யெல்லாம் மாநிலங்களுக்கு வழங்கி விட்டால் குறைந்த பட்சத் தேசிய அதிகாரங்களுடன் இயங்கும் மத்திய அரசு பலமற்றுப் போகாதா?

மக்களுடைய அன்றாட வாழ்வுச் சிக்கல்களில் இரண்டறக் கலந்து செல்லும் மாநில அரசுகள் அம்மக்களுக்குரிய நல் வாழ்வுத் திட்டங்களைச் சீரிய முறையில் தீட்டி, செயல்படுத்தினலன்றி மாநில மக்கள் அரசியல், சமுதாய, பொருளாதார வளத்தைப் பெற மாட்டார்கள். அம்மாநில அரசும் நாளடைவில் செயல்திறன் குன்றி அரசியல் பொறுப்புக்களை முழுமையாக நிறைவேற்ருமல், துருப்பிடித்த எந்திரம்போல் பழுதுற்றுவிடும். வளங்குன்றிய மக்களையும், பலங்குன்றிய மாநில அரசுகளையும் சுமந்து செல்ல வேண்டிய கட்டாயத்திற்கு மத்திய அரசு ஆளாக்கப்பட்டு விடும். எனவே, உண்மையான வலிவையும் பொலிவையும் பெற்ற மத்திய அரசிற்கு வளமும் வலிவும் பெற்ற மாநிலங்கள்தான் அடிப்படையானவை.

மக்கள் சமுதாய வாழ்க்கையில் நேரடியாகப் பங்கேற்கும் மாநில அரசுகள் வலிவும் வளமும் பெற—அவற்றிற்குத் தேவையான சுதந்திர உரிமைகளும் அதற்கடிப்படையான நிதி,

நிர்வாக, சட்டமியற்றுத் துறை அதிகாரங்களும் இன்றியமையாதவை. ஆக, வலிவான மத்திய அரசு எனில் வளமான மாநில மக்களும். செறிவான அதிகாரங்களைப் பெற்ற மாநில அரசுகளும் திறனோடு இயங்குதல் வேண்டும் என்பது பொருள்.

இதனை, டாக்டர். நாவலர். நெடுஞ்செழியன் அவர்கள் தனக்கே உரிய அழகுப் பாணியில் தெளிவு படுத்தும்போது,

"பெரிய பாண்டம் செய்து அது உடைந்து போன பின் கவலைப்படுவதைக் காட்டிலும் சிறு பாண்டங்களாகவே செய்து முடிப்பது நலம். பிரதேச ராஜ்யங்களின் அதிகாரங்களை யெல்லாம் கேந்திர ஆட்சிக்கு உறிஞ்சிக் கொள்ளும் நடவடிக்கைகள் மிக வேகமாக நடைபெற்று வருகின்றன. இது வருங் காலத்தில் நிலைத்து நிற்க முடியாத ஓர் ஏற்பாடாகும்...... எதிர்காலத்தில் நடக்கப் போவதை உணர்ந்து அதற்குத் தகுந்தவாறு இப்பொழுதிருந்தே திட்டம் நிர்மாணிப்பது புத்திசாலித் தனம். அதாவது மத்திய ஆட்சியானது பிரதேச ராஜ்யக் கூட்டாட்சியாக இருக்க வேண்டும். சில இன்றியமையாத விஷயங்களில்தான் மத்திய நிர்வாகம், நடைபெற வேண்டும். அவை தவிர, மற்ற விஷயங்களில் பிரதேச ராஜ்யங்களுக்குப் பூரண சுதந்திரம் கொடுத்து அந்தப் பொறுப்பை வகிக்கும் தகுதியைப் போற்றி வர வேண்டும்... மற்றொன்று சொல்லுகிறார்கள்-இப்பொழுது மாநிலங்கள் சுயாட்சி பெற்று, மத்தியில் குறிப்பிட்ட அதிகாரங்கள் ஒப்படைக்கப்பட்டால் மத்திய ஆட்சி பலவீனப்பட்டு விடும் என்று சொல்லுகிறார்கள். பலவீனமாக இருக்கின்ற மாநிலங்களைப் பார்த்து ஆதிக்கம் செலுத்துகின்ற மத்திய ஆட்சி பலமாக இருக்க முடியாது. மாநிலங்கள் எல்லாம் பலமாக இருந்தால்தான் மத்தியும் பலமாக இருக்க முடியும் என்பதை நாம் நன்றாக உணர வேண்டும்... அப்படிப் பார்த்தால் மாநில சுயாட்சியைப் பொறுத்த வரையில் மாநிலங்கள் பலமாக இருக்க வேண்டும். மத்தியும் பலமாக இருக்க வேண்டும். அது மட்டுமல்லாமல் மாநில சுயாட்சி பெறுவது மூலம் மத்திய ஆட்சி பலவீனப்பட்டு விடும் என்கிறார்கள். ஓர் ஆட்சி பலமுள்ளதாக இருக்க என்னென்ன தேவையோ,

அவைகள், மத்திய அரசாங்கத்திடம் இருக்கின்றன என்பதை நாம் குறிப்பிட்டுச் சொல்லுகிறோம். ஒரு நாட்டினுடைய வலுவைக் காட்டுவது பாதுகாப்புப் படை, ஆகாய விமானப்படை, தரைப்படை, கடல் படை; ஒரு நாட்டின் மீது மற்றொரு நாடு படையெடுத்தால் தடுத்தி நிறுத்தி, அதன் உரிமையைக் காப்பாற்றி, இறையாண்மையைக் காப்பாற்றி, நாட்டின் எல்லையைக் காப்பாற்றுவதால்தான் முழு வலிமை கொண்டதாக ஆகும்...... எல்லையைக் காத்தல், இறையாண்மை பேணுதல் இன்னும் நாட்டைக் காப்பதற்கு என்னென்ன அதிகாரங்கள் வேண்டுமோ அவையெல்லாம் டெல்லியிலே இருக்கட்டும். இந்தியாவைக் காப்பாற்றுகின்ற, இந்தியாவின் சுதந்திரத்தைக் காப்பாற்றுகின்ற முழுப் பொறுப்பும் மத்திய அரசினிடத்திலே இருக்கட்டும். ஆனால் மாநில மக்களை வாழ வைக்கிற முழு அதிகாரங்களும் மாநில அரசுகளுக்கு வழங்கப்பட வேண்டும்.''[9]

எனக் கூறுகிறார்.

மூத்த அரசமைப்பு வல்லுநரான, பேராசிரியர் திரு. வெங்கட்ரங்கையா அவர்கள் இதனை விளக்கும்போது,

''மத்திய அரசிற்கு ஒதுக்கப்பட்ட துறைகளில் அது வெற்றிகரமாகப் பணியாற்ற வேண்டுமெனில் மாநில அதிகாரப் பட்டியலில் வரும் பணிகளை அம் மாநில அரசுகளும் திறனோடு நிர்வகிக்க வேண்டும்.''[10]

எனத் தெளிவாக்குகிறார்.

இதன் பொருள் என்ன?

"பாதுகாப்பு'' என்பது மத்திய அரசினுடைய பேரதிகாரம். இந்தப் பாதுகாப்பு என்ற அதிகாரத்தை மத்திய அரசு, திறனுடனும் முறையோடும் செயற்படுத்த வேண்டுமெனில் மாநிலங்களுக்கு ஒதுக்கப்பட்ட ''கல்வி'', ''சுகாதாரம்'',

---

9 19—4—1974 ''தமிழ்நாடு சட்டப் பேரவை நடவடிக்கைகள்'' தொகுதி எண். LVI. பகுதி 4, பக்கம் 531-534.

10 ''The Pattern of Public Administration in the Five year Plan'' The Indian Journal of Political Science Vol XIV No. 3 Venkatrangaiya, Page 214 and 215.

''வேளாண்மை'', மற்றும் ''மக்கள் நல்வாழ்வுப் பணிகள்'' போன்ற துறைகளில் மாநில அரசுகள் சீரிய முறையில் பணியாற்றி, வெற்றி காணல் வேண்டும். மேற்சொன்ன மாநிலத் துறைகளில் (மாநில அரசுகள்) சோடைபோக நேரிட்டால் மத்திய அரசு அவற்றை அடைவதற்குரிய திட்டங்களையும் கொள்கைகளையும் வகுப்பதுடன் நிதித் துறையிலும் சொல்லொணுச் சிக்கலுக்கு ஆட்பட்டு விடும். அதனுல், மத்திய அரசின் நேரமும் திறனும் ஊக்கமும் உழைப்பும் தவிர்க்க முடியா நிலையில் விரைய மாக்கப்பட்டு விடும். பாதுகாப்பு போன்ற மிகப் பெரிய பொறுப்பை மத்திய அரசால் செவ்வனே நிறைவேற்ற முடியாத அளவில் இடுக்கண் ஏற்பட்டு விடும்.

பேராசிரியர் வெங்கட்ரங்கையா அவர்கள் இருவகையான வாதங்களை நம்முன் படைக்கிருர்,

> ''முதலாவதாக, இந்தியாவைப் போன்ற பெரிய நாடுகளில், மாநிலப் பட்டியலில் உள்ள அதிகாரங்கள் மத்திய அரசின் நிர்வாகப் பொறுப்பில் விடப்படுமானுல் அம் மத்திய அரசு, தேவையற்ற ஒரு பெருஞ்சுமையைத் தன் மேல் ஏற்றிக் கொண்டு தாங்க முடியாமல் தத்தளிக்கும். இரண்டாவதாக, மாநிலப் பட்டியலில் குறிப்பிட்ட அதிகாரங்களை மாநில அரசுகளைக் காட்டிலும் மத்திய அரசு பொறுப்புடனும் செயல்திறனுடனும் நிர்வகிக்கும் என்பதற்கு எவ்வகை ஆதாரமு மில்லை.
>
> எனவே, நாடு தழுவிய நமது குறியீடுகளை நாம் முழுமையாக அடைய வேண்டுமெனில் மாநில அதிகாரங்களில் மத்திய அரசு நேரடியாகப் பொறுப்பேற்றுக் கொள்வதை விடுத்து மாநில அரசுகள் திறனேடும் பொலிவோடும் நிர்வாகம் செய்வதற்கு உறுதுணையாயிருந்து அவைகளின் செயல்களைத் தேசிய மட்டத்தில் ஒருங்கிணைக்கும் பணிகளைச் செய்ப வேண்டுமெனத் தெளிவாக்குகிருர்.'' 11

எனவே, போதுமான அதிகாரங்களில்லாத வலிவற்ற மாநிலங்களை இணைத்து ஒரு மத்திய அரசு மெய்யான வலிமையைப் பெற முடியாது என்பது கண்கூடு.

11 Ibid Note No. 10

மேற்கு வங்க மாநிலத்தின் புகழ் பெற்ற, காங்கிரஸ் முதல் அமைச்சரான, டாக்டர் B. C. ராய் அவர்கள்,

> ''வலிவிழந்த மாநிலங்கள் என்ற அடித்தளத்தின் மேல் வலிவான மத்திய அரசொன்றைக் கட்ட முயற்சிப்பதானது வலுவான ஒரு கட்டிடத்தைப் புதை மணல்மேல் கட்டுவதற்கு ஒப்பாகும். இவண் ''வலிவு'' என்ற சொல்லிற்கு மத்திய மாநில அரசுகளுக்கு முறையே தனித்தளிக்கப்பட்ட அரசியல் கடமைகளை முழுமையாகவும், முறையாகவும் நிறைவேற்றும் திறன் என்றே பொருள்.''12

என முதல் நிதியாணைக்குழுவிற்கு வழங்கிய குறிப்பில் 'மெய்யான வலிவு' என்பதற்கு இலக்கணம் கூறியுள்ளார்.

ஆகவே, வலிவான மாநிலங்கள் தான், குறைந்த பட்ச அதிகாரங்களைக் கொண்டு திறனோடு செயற்படும் மத்திய அரசுடன் இணைந்தும் பிணைந்தும் செயலாற்ற முடியும்.

மெய்யான வலிவைக் கொண்ட மைய அரசு எது; மேலான மாநிலங்கள் எவை; மைய அரசிற்கும் மாநிலங்களுக்கும் தற்போதுள்ள தொடர்பு என்ன? அவை எப்படி யிருந்தால் சாலும் என்பதை யெல்லாம் தமக்கே உரிய பாணியில் அழகாக விளக்குகிறார் பேரறிஞர் அண்ணா அவர்கள்.

> ''பலமான மத்திய அரசு வேண்டும் என்று கூறுகிறார்கள். மத்திய அரசுக்கு, பலம் எதற்காக? அந்தப்பலம் யாருக்கு எதிராக? என்பதையும் நாம் சிந்தித்துப் பார்த்திட வேண்டும்... பலம் என்பது தனிப்பட்ட ஆளுக்கு இருக்கலாம்; தனிப்பட்ட அமைப்புக்கு இருக்கலாம்; மாநிலத் துரைத் தனத்துக்கு இருக்கலாம்; மத்தியத் துரைத்தனத்துக்கு இருக்கலாம். ஆனால் அந்தப் பலம் யாருக்காக — எதற்காகப் பயன்படுத்துவது என்பது பற்றி விளங்கிக் கொள்ளாமலும் — விளக்கிச் சொல்லாமலும் பேசிக் கொண்டிருக்கிறார்கள்...

---

12 Memorandum to the Ist Finance Commission given by West Bengal Government, B. C. Roy, Page 33

சீனாவின் ஆக்கிரமிப்புக்கு எதிராக மத்திய அரசுக்கு வலிவு தேவை என்றால் ஒரு துளியும் தயக்கமில்லாமல் அந்த வலிவைச் சேர்த்துத் தரத் தயார். பாகிஸ்தானின் படையெடுப்பை அடக்க மத்திய அரசுக்கு வலிவு தேவை என்றால் நிச்சயம் அந்த வலிவைத் தேடித் தரத் தயார்.

ஆனால் மத்திய அரசின் வலிவு, அசாமிற்கு அச்சத்தைத் தர-தமிழ்நாடு தத்தளிக்க – கேரளத்திற்குக் கலக்கம் தருவதற்காகத்தான் என்றால், சுதந்திரச் சிந்தனையைச் சிறுகச் சிறுக அழித்து, சிந்திக்கும் திறனே இல்லாமல் ஆக்குவதற்குத் தான் என்றால், நமது கூட்டுச் சக்தியின் மூலம் நம்மில் ஒவ்வொருவருடைய வலுவையும் கொண்டு அந்த அக்கிரம வலிவைச் சிறுகச் சிறுகக் குறைப்பதுதான் எங்கள் கடமையாக இருக்கும்......

மத்திய அரசு பலமாக இருந்தது குப்த சாம்ராஜ்யத்தில்; மத்திய அரசு பலமாக இருந்தது பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில்; ஆனால் இன்று அந்த சாம்ராஜ்யங்கள் எங்கே?

சரிந்த சாம்ராஜ்யங்களுடன்—இப்போது இருக்கிற சாம்ராஜ்யத்தை ஒப்பிடுவதற்கு உள்ளபடியே வருத்தப்படுகிறேன். அந்த சாம்ராஜ்யவாதிகள் நமது சாம்ராஜ்யங்களுக்கு அதிகமான வலிவு தேட முயற்சி செய்த ஒவ்வொரு நேரத்திலும் சரிவுதான் ஏற்பட்டது என்பதை சரித்திர முணர்ந்தவர்கள் அறிவார்கள்.

ஔரங்கசீப் காலத்தில் இருந்த வலிவான மத்திய ஆட்சிக்கு ஒப்பான மத்திய ஆட்சியைச் சரித்திரத்திலே காண முடியாது. ஆனால் அந்த சாம்ராஜ்யம் என்ன ஆயிற்று என்பதைக் கொஞ்சம் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

நமக்கிருக்கிற கவலை எல்லாம் தூக்க முடியாத பாரத்தை மத்திய ஆட்சியினர் விரும்புகிறார்களே என்பது தான். மத்திய அரசின் வலிவு என்பது மாநிலங்கள் ஒவ்வொன்றின் தனித்தனி வலிவையும் கூட்டியதால் ஏற்பட்ட மொத்தவலிவு தான் என்றால் வாதத்திற்கு ஏற்றது; அரசியலுக்குநல்லது; காரியத்திற்கும் உகந்தது. ஆனால் மத்திய அரசுதான் எல்லா உரிமைகளையும் பலத்தையும் வைத்திருக்கும்,

மாநிலங்கள் தத்தித்தத்தி நடக்கும் அதிகாரம்தான் வைத்திருக்கும் என்றால் அது எதற்கும் பொருத்த முடைய தல்ல. மாநில அதிகாரங்களை எல்லாம் எடுத்து மத்திய அரசு குவித்து வைத்துக் கொள்வதால் மாநிலங்கள் பலவீன மடையும் என்பது மட்டுமல்ல, மத்திய அரசுக்கென்று புதிய வலிமை ஏதும் ஏற்பட்டு விடாது.

நாட்டுப் பாதுகாப்பைத் தவிர மற்ற அதிகாரங்கள் அனைத்தையும் பற்றிச் சிந்திப்போம். மாநிலங்களுக்குத் தேவையான அதிகாரங்களை மாநிலங்கள் எடுத்துக் கொள்ளட்டும், பின்னர் மாநிலங்கள் விரும்பித் தருகின்ற மீதியுள்ள அதிகாரங்களை மத்திய அரசு எடுத்துக் கொள்ளட்டும்...... இன்றைய தினம் மாநில அரசுக்குள்ள வேலை என்ன? மக்களுக்குச் சோறு போடுவது, வேலை வாய்ப்புத் தருவது-தொழில் நீதியை நிலைநாட்டுவது-சுகாதாரத்தைப் பேணுவது—கல்விச் செல்வத்தை வளர்ப்பது போன்ற எண்ணற்ற வேலைகளைச் செய்ய வேண்டியது மாநில அரசு......

ஆனால் மத்திய அரசின் வேலை என்ன? நாடக மேடையில் வரும் இராஜா, மந்திரியை அழைத்து 'மந்திரி நமது மாநகர் தன்னில் மாதம் மும்மாரி மழை பொழிகிறதா?' என்று கேட்பானும். அதுபோல் மாதம் ஒரு முறை மாநில மந்திரிகளை மத்திய மந்திரிகள் டில்லியில் கூட்டி, பள்ளிக்கூடங்களில் கல்வி எப்படி இருக்கிறது? காலரா நோய் தடுக்கப்பட்டதா? என்று கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். இப்படித் தர்பார்ப் பேச்சுப் பேசும் பொறுப்புத்தான் டெல்லிக்கு இருக்கிறதே தவிர வேறு ஒன்றுமில்லை. மக்களின் சுக துக்கத்தோடு பின்னிப் பிணைந்திருப்பது மாநில அரசு தானே தவிர—மத்திய அரசு அல்ல.

மக்கள் மீது அக்கறை இருக்கலாம் மத்திய அரசுக்கு; அது எப்படிப்பட்ட அக்கறை? குடிசைப் பகுதியில் தீப்பற்றியதும் மூன்றாவது மாடியிலுள்ள சீமான் 'ஏதோ கரும் புகை தெரிகிறதே', 'தீவிபத்து போலிருக்கிறதே' என்று கூறுவானே அதைப் போன்ற அக்கறைதான் மத்திய அரசின் அக்கறை.

ஆனால் குடிசைப் பகுதியில் தீப்பற்றியதும் பதறித் துடிப்பது யார்? அந்தக் குடிசைக்குப் பக்கத்தில் உள்ள குடிசைவாசிதான். அதைப்போல மாநில அரசினர்தான் மக்களின் குறைகளை நேருக்குநேர் சந்திக்க வேண்டியவர்கள்......

இப்படிக் கள்ளக்குறிச்சிச் சர்க்கரை ஆலையில் இருந்து, காட்பாடி சிறு தொழிற்சாலை வரை எல்லாவிதமான சிறு விஷயங்களிலும் (மத்திய அரசு) அதிகாரத்தை வைத்துக் கொண்டிருப்பதன் விளைவு—பெரிய விஷயங்களில் அதிகக் கவனம் செலுத்த முடியாமல் போய்விடும் என்பதால்தான் அதிகாரங்கள் டில்லியில் குவிக்கப்படக் கூடாது என்கிறோம்.

ஆகவே, வலிவான மத்திய அரசுதான் பிரச்சனைகளைத் தீர்க்க முடியும் என்பது தவறு; மாநில சுயாட்சி தரத் தடக்கம் காட்டுவார்களேயானால் அளவுக்கு மீறிய அதிகாரங்களைத் தாங்கித் தாங்கி, பாதுகாப்புப் போன்ற பெரிய விஷயங்களில்கூடச் சோடை போய்விடுவார்களோ என்பதுதான் என் சந்தேகம். மேல் அதிகாரம் அனைத்தும் டில்லியிலிருப்பதை மாற்றிடத்தான் மாநில சுயாட்சித் தத்துவம் பிறந்திருக்கிறது. மாநில சுயாட்சி என்பது தேவையின் அடிப்படையில் எழுந்த அரசியல் கோரிக்கையே தவிர அரசியல் கட்சிக் கோரிக்கை அல்ல.'' 13

எனவே, இன்றைய மத்திய அரசு மெய்யான வலிமையைப் பெற வேண்டுமெனில்...

மலர்க மாநில சுயாட்சி.



---

13 21—7—1968-இல் ம. பொ. சி. அவர்களால் சென்னையில் நடத்தப்பட்ட மாநில சுயாட்சிக் கருத்தரங்கில் பேரறிஞர். அண்ணா அவர்கள் ஆற்றிய பேருரையின் ஒரு பகுதி-ஆதாரம் 20—4—1974-இல் தமிழ்நாடு சட்டப்பேரவை நடவடிக்கைகள் (பணித்துறை வெளியீடு) LVI எண். 5. பக்கங்கள் 762முதல் 766 வரை.

## 2. நாட்டுப் பிரிவினையைத் தவிர்க்க......

— மலர்க மாநில சுயாட்சி —

"மாநில சுயாட்சியை, பிரிவினைக்கு மாற்றாகப் பெறுகிறோம்; அதுவே பிரிவினை அல்ல; அது (மாநில சுயாட்சி), பிரிவினை என்ற நோய்க்கேற்ற மருந்து. உலகில் மாநில சுயாட்சியை ஒப்புக் கொண்ட எந்தவொரு கூட்டாட்சியும் இதுவரை கலைந்து போகவில்லை. மாநில சுயாட்சியை ஒப்புக்கொள்ள மறுத்த எந்தவொரு நாடும் தன்னுடைய ஏகத் தன்மையைக் காப்பாற்றிக் கொண்டதுமில்லை."[1]

— சிலம்புச் செல்வர். ம. பொ. சி. அவர்கள்.

### வரலாறும் அச்சமும்

பரந்த இந்தியத் துணைக் கண்டத்திற்குப் பொருந்தக்கூடிய ஆட்சி முறை "கூட்டாட்சி முறைதான்", "ஒற்றையாட்சி முறை அல்ல" என்பதில் கருத்து வேறுபாடு இருக்க முடியாது. மொகலாயர்களைப் பின்பற்றிய ஆங்கிலேயர்கள் முதல் இந்திய விடுதலைப் புரட்சி (1857-ஆம் ஆண்டு) வரை ஏறத்தாழ 85 ஆண்டுகள் இந்தியாவின் மேல் ஒற்றையாட்சி முறையைத் திணித்தாலும் அது இந்தியப் பண்பிற்கு ஏற்றதல்ல என்பதைப் பின்னர் அவர்கள் உணர்ந்து கொண்டனர். எனவே, அடுத்த 80 ஆண்டுகளில் மத்தியத்தில் குவித்து வைக்கப்பட்டிருந்த அதிகாரங்களை மெல்ல மெல்லப் பரவலாக்கி 1935-ஆம் ஆண்டில் கூட்டாட்சி அரசமைப்பையும் கட்டுப்படுத்தப்பட்ட மாநில சுயாட்சியையும் இந்திய நாட்டிற்கு வழங்கிச் சென்றனர்.

பல மொழித் தேசிய இன மக்களை ஒரு குடையின் கீழ்க் கொண்டுவரவேண்டுமெனில் 'முழுமையான கூட்டாட்சியையே' இந்திய நாட்டின் அரசு முறையாக ஏற்றுக் கொள்ள வேண்டு

1 27—4—1974-இல், சிலம்புச் செல்வர். தமிழகச் சட்டமேலவையில் நிகழ்த்திய பேருரையின் ஒரு பகுதி; "சட்ட மன்றத்தில் சுயாட்சிக் குரல்" (1974) பக்கம் 14.

மென 'அகில இந்தியக் காங்கிரசும்' 1946-ஆம் ஆண்டில் இறுதி முடிவு எடுத்தது. இந்தியத் துணைக் கண்டத்தின் பல்வேறு இன மக்களை ஒற்றையாட்சி முறை உளப்பூர்வமாகப் பிணைக்காது என இந்திய அரசியல் வல்லுநர்கள் ஒரு சேர முடிவெடுத்தனர். 'பிரிட்டானிய அமைச்சரவைத் தூதுக் குழுவும்', பாதுகாப்பு வெளிநாட்டு உறவு மற்றும் உள்நாட்டுச் செய்தித் தொடர்புகள் ஆகியவை நீங்கலாக மற்றைய அனைத்து அதிகாரங்களையும் மாநிலங்களுக்குத் தந்து, மெய்யான கூட்டாட்சியையும் முழுமையான மாநில சுயாட்சியையும் உருவாக்குவது தான் இந்திய விடுதலைக்கும் ஒற்றுமைக்கும் இன்றியமையாதவை எனக் கொள்கை வகுத்தது.

இந்திய விடுதலைக்கு அது ஒன்றுதான் வழியென அகில இந்தியக் காங்கிரசு உள்ளிட்ட மற்ற அனைத்துக் கட்சிகளும் இத்திட்டத்தை ஏற்றுக் கொண்டன. இச்சீரிய கொள்கையின் அடிப்படையில் இந்திய அரசமைப்புச் சட்டமும் உருவாகத் தொடங்கிற்று. வரலாற்றுப் புகழ்பெற்ற 'நேருவின் குறிக்கோள் தீர்மானமும்' மாநில சுயாட்சியை மையக் கூருக வைத்து இந்திய அரசமைப்புச் சபையில் முன் மொழியப்பட்டு நிறைவேறிற்று.

ஆனால் இந்தியத் தலைவர்கள் உண்மைக் கூட்டாட்சியைத் திரிபு படுத்த முனைந்தவுடன் நாடு துண்டாயிற்று. மாநில சுயாட்சிக் கொள்கையைக் காங்கிரசுக் கட்சி மத்தியத்தின் சார்பாகச் சற்று மாற்றியமைக்கத் துவங்கியதும் பாகிஸ்தான் உருவாகி விட்டது.

இவை எல்லாம் வரலாறு கூறும் உண்மைகள்.

மீதியிருந்த பாதி இந்தியா எங்கே இனியும் பகுக்கப்பட்டு விடுமோ எனப் பரிதவித்தனர் - தேசியத் தலைவர்கள். அகண்ட பாரதம் இரண்டு துண்டுகளானவுடன் அதன் மூலக் காரணத்தைக்கூட ஆய்ந்து தெரிய முடியவில்லை—அவர்களால். ஏன்? அச்சம்தான் காரணம்.

வரலாற்றுப் பேருண்மைகளுக்கு மாருக வலிவான மத்தியத்தைப் படைத்துவிடின் மீதி இந்தியாவை ஏக இந்தியாவாக ஆக்கிவிட முடியும் என்ற புதிய சித்தாந்தத்தைப் புகுத்தலாயினர். ஏன்? அதுவும் அச்சம் காரணமாகத் தான்.

விளைவு? இன்றையக் கூட்டாட்சியின் சாயலைக் கொண்ட திரிபு படுத்தப்பட்ட மாநில சுயாட்சி.

அச்சத்தால் விளைந்த அவசரக் கொள்கைக்குப் பின்னர் ஆழமான காரணங்கள் கற்பிக்கப்பட்டன. நாட்டிற் கொவ்வாத நொண்டித் தத்துவத்திற்குத் தர்க்க வாதங்கள் தேடிக் கண்டு பிடிக்கப்பட்டன. இந்திய வரலாற்றின் பன்னூறு ஆண்டுகளாகப் பெறப்பட்ட உண்மை, பொய்யெனக் கைவிடப்பட்டு விட்டது.

இன்றும் கூட இந்தியாவிற்கு 'கூட்டாட்சி முறை' கூடாது என யாரும் மறுப்பதில்லை. 'மாநிலங்களுக்குத் தன்னாட்சி வழங்கக் கூடாது' என யாரும் வலியுறுத்துவதில்லை. ஆனால் "மாநிலங்கள் வலிவற்றிருந்தால்தான் தம் நிலையிழந்து இந்தியக் கூட்டாட்சியில் நிலையாக ஒன்றி நிற்கும்; வலிவுள்ள மத்திய அரசு தான் மாநிலங்களைக் கொத்தடிமைகளாக்கி ஒருமைப் பாட்டை வளர்க்கும்; இது தான் இந்திய ஒற்றுமைக்குள்ள ஒரே வழி; இவ்வாறுதான் அகண்ட இந்தியாவை ஏக இந்தியாவாக ஆக்கிடல் இயலும்; இன்றேல் மீண்டும் நாடு துண்டாகி விடும்" என்பது தான் இன்றையத் தேசியத் தலைவர்களின் அசைக்க முடியாத வாதங்கள்.

அஃதாவது முழுமையான சுயாட்சியை மாநிலங்களுக்கு அளித்தால் அவற்றின் தனித் தன்மை ஓம்பப்படும்; குறுகிய மாநில வாதங்கள் பிறக்கும், அகில இந்தியா அழிந்தொழிந்து விடும்; எனவே, முழு மாநிலத் தன்னாட்சி, பிரிவினைக்கே மூலமாகிவிடும்; அதனால் மாநில சுயாட்சி என்பதே பிரிவினைதான்— இந்த வாதங்களும் அச்சத்தாலும் பீதியாலும் எழுந்தவை.

"உண்மையான கூட்டாட்சி கூடாது; முழுமையான மாநிலத் தன்னாட்சி தேவையற்றது" என்பதற்கு அன்றும் இன்றும் அடிப்படையற்ற அச்சமே காரணமாகக் காட்டப்படுதலன்றி—ஆழமான அரசியற் கருத்துக்களோ, வரலாற்றுச் சான்றுகளோ, தர்க்கரீதியான ஆதாரங்களோ, அரசமைப்புக் காரணங்களோ காட்டப்படுவதில்லை.

''நாட்டுப் பிரிவினை;''

''அதனைத் தவிர்க்க வலிமையான மத்திய அரசு;''

இந்த இரண்டே இரண்டு மந்திரச் சொற்களை மையமாக வைத்து முப்பது நூற்றாண்டுகளாக வளர்ந்த அரசியல், இன, பண்பாட்டு உண்மைகள் மறுக்கப்படுகின்றன.

''மாநில சுயாட்சியால் தான்'' ''உண்மைக் கூட்டாட்சியால் தான்'' நாட்டுப் பிரிவினையைத் தவிர்க்க முடியும் என்பதை அகில உலக நாடுகளின் வரலாறும், ஏன், அகண்ட இந்துஸ் தானத்தின் வரலாறுங்கூடத் தெளிவாக உணர்த்துகின்றது.

அகில இந்தியத் தேசியவாதிகள் கூறுவது போல் மாநில சுயாட்சி என்பது இந்திய ஒற்றுமையைச் சுட்டெரிக்கும் தீப்பந்த மல்ல; மாறாக இந்திய ஒற்றுமையைச் சுடர்விடச் செய்யும் ஒளி பொருந்திய தீபம்.

பல நாட்டு வரலாறுகள் இதனை விளக்குகின்றன. அவற்றைப் பரிசீலிப்போம்.

**பிரிவினையைத் தவிர்க்க...**

**அமெரிக்கா**

அகில உலக நாடுகளில் வளத்திலும் திறத்திலும், தலைசிறந்த நாடு அமெரிக்க ஐக்கிய நாடுகள். குடியரசுக் கூட்டாட்சிக்கு ஓர் சிறந்த எடுத்துக் காட்டாகவும், மாநில சுயாட்சியின் தாயகமாகவும் அந்நாடு இன்றும் விளங்குகின்றது.

தனித் தனி நாடுகளாயிருந்த 13 குடியேற்ற நாடுகள் ஆதியில் அமெரிக்கக் காங்கிரசு என்ற ஒரு நேசக் கூட்டமைப்பில் இணைந்து, பிரிட்டானியப் பேரரசை எதிர்த்து விடுதலைப் போரை நடத்தின. அதற்கென்று ஒரு மத்திய அரசு கிடையாது. அதிகாரமற்ற ஒரு சங்கத்தைப் போலவே அதன் மத்திய அமைப்பு இருந்தது. எனவே, உண்மைக் கூட்டாட்சித் தத்துவத்தின் அடிப்படையில் அத் தனி நாடுகள் மாநிலங்களாக மாறி, ஒரு கூட்டாட்சி அரசமைப்பை உருவாக்கிக் கொண்ட வரலாற்றை நாம் இந்நூலின் முதற் பகுதியில் விளக்கினோம்,

1787-ஆம் ஆண்டில் உருவான ஐக்கிய அமெரிக்க நாடுகளின் கூட்டாட்சி அரசமைப்புச் சட்டம், 1789-ஆம் ஆண்டில் நடைமுறைக்கு வந்தபோது அதில் 13 மாநிலங்களே இணைந்திருந்தன.

அவையாவன:

1. டெலவார் (Delaware); 2. பென்சில்வேனியா (Pennisylvania); 3. நியூ ஜெர்சி (New Jersey); 4. ஜியார்ஜியா (Georgia); 5. கனக்டிகட் (Connecticut); 6. மேஸாசூசெட்ஸ் (Massachusetts); 7. மேரிலாந்து (Maryland); 8. தென்கரோலினா (South Corolina); 9. நியூ ஹேம்சயர் (New Hampshire); 10. வர்ஜீனியா (Virginia); 11. நியூயார்க் (New York); 12. வட கரோலினா (North Corolina); 13. ரோடு ஐலண்டு (Rhode Island).

ஆதிக் கூட்டாட்சியில் இணைந்த இந்த 13 குடியேற்ற நாடுகள் தான் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் கூட்டாட்சியில் ஆரம்ப மாநிலங்களாகத் திகழ்ந்தன.

அமெரிக்கக் கூட்டாட்சியில் இணைந்த நாடுகளின் தனித்தன்மைகளுக்கும் இனப் பண்பாட்டு உரிமைகளுக்கும் எவ்வகைக் குந்தகமும் இல்லாமல் அமெரிக்க மத்திய அரசு இயங்கி வருதலைக் கண்ணுற்ற மற்ற நாடுகளும் முழு மாநில சுயாட்சியின் அடிப்படையில் ஒவ்வொன்றாக அமெரிக்கக் கூட்டாட்சியில் பின்னர் இணையலாயின.

18-ஆம் நூற்றாண்டின் இறுதியில்,

14. வெர்மோண்ட் (Vermont); 15. கெண்டக்கி (Kentucky) மற்றும் 16. டென்னஸி (Tennessee).

ஆகிய தனிச் குடியேற்ற நாடுகள் மூன்றும் அமெரிக்கக் கூட்டாட்சியோடு இணைந்து மொத்தம் 16 மாநிலங்களாக வளர்ந்து நின்றன.

19-ஆம் நூற்றாண்டில்,

17. ஓஹியோ (Ohio); 18. லூசியானா (Louisiana); 19. இந்தியானா (Indiana); 20. மிஸிசிப்பி (Mississippi); 21. இல்லினாய்சு (Illinois); 22. அலபாமா (Alabama);

23. மெய்னே (Maine); 24. மிசெளரி (Missouri); 25. அர்கன்சாஸ் (Arkansas); 26. மிக்சிகன் (Michigan); 27. பிளோரிடா (Florida); 28. டெக்ஸாஸ் (Texas); 29. அயோவா (Iowa 1846); 30. விஸ்கான்சின் (Wisconsin 1848); 31. கலிபோர்னியா(California - 1850); 32. மின்னிசோட்டா (Minnesota - 1858); 33. ஒரேகான் (Oregon-1859); 34. கன்சாஸ் (Kansas - 1861); 35. மேற்கு வெர்ஜீனியா (West Virginia - 1863); 36. நெவாடா (Nevada - 1864); 37. நெப்ராஸ்கா (Nebraska - 1867); 38. கொலராடோ (Colorado - 1876); 39. வட டகோடா (North Dakota - 1889); 40. தென் டகோடா (South Dakota - 1889); 41. மொண்டானு (Montana - 1889); 42. வாஷிங்டன் (Washington - 1889); 43. இடாஹோ (Idaho - 1890); 44. வியோமின்ஸ் (Wyomins - 1890) மற்றும் 45. உட்டா (Utah - 1896).

ஆகிய 29 தனிக் குடியேற்ற நாடுகளும் அமெரிக்கக் கூட்டாட்சியோடு மேலும் இணைந்து 19-ஆம் நூற்ருண்டின் இறுதியில் மொத்தம் 45 மாநிலங்களாக மலர்ந்தன.

20-ஆம் நூற்ருண்டின் தொடக்கத்தில்,

46. ஒக்லஹோமா (Ohlahoma - 1907); 47. நியுமெக்ஸிக்கோ (New Mexico 1912); 48. அரிசோனு (Arixona - 1912) ஆகிய மூன்றும் சேர்ந்து 48 மாநிலங்களாக வளர்ந்து நின்றன.

15 ஆண்டுகளுக்கு முன்பாக 1959-ஆம் ஆண்டில் (49) அலாஸ்காவும் (Alaska); (50) ஹவாயும் (Hawai); அமெரிக்கக் கூட்டாட்சியுடன் அண்மைக் காலத்தே இணைந்தவை.

கூட்டாட்சிக்குத் தாயகமாய் விளங்கும் அமெரிக்க ஐக்கிய நாடுகள் முழு மாநில சுயாட்சியுடன் கூடிய 50 தனித் தன்மை வாய்ந்த மாநிலங்களை ஒன்ருக இணைத்தும் பிணைத்தும் நிலைத்து நிற்கின்றன. அதன் 200 ஆண்டு கால வரலாற்றில் எந்த மாநிலமும் கூட்டாட்சியிலிருந்து பிரிந்து போகவில்லை. மாருக, பல நாடுகள் அக்கூட்டாட்சியில் இணைந்து வந்துள்ளன. அகில உலக அரங்கில் இன்று அசைக்க முடியா வல்லரசாகவும் அந்நாடு திகழ்கிறது.

அதற்குக் காரணமென்ன?

அதன் மாநிலங்கள் முழு சுயாட்சியுடன் மக்கள் நல்வாழ்வை வளம்படுத்தியதும், அளவான அதிகாரங்களைக் கொண்ட மத்திய அரசு, தன் வலிவான அரசியற் கொள்கைகளால் அம் மாநிலங்களை முறையாகப் பிணைத்துக் கூட்டாட்சி நெறியை வழுவாது ஓம்பி வருவதுமேயாகும்.

ரஷ்யா

ஜார் மன்னனின் கொடுங்கோலாட்சியில் ரஷ்ய மக்கள் வலுவான மத்திய வல்லாட்சியின் கீழ் இயக்கப்பட்டனர். புரட்சி பூத்தது, சமதர்மம் மலர்ந்தது. ரஷ்ய நாடு விடுதலை பெற்றது. பிரிந்து போகும் உரிமையோடு கூடிய முழு மாநில சுயாட்சியை ஏற்றுக் கொண்டன,ரஷ்யக் குடியரசு நாடுகள் (மாநிலங்கள்).

விடுதலை வீரன் லெனின் அவர்களின் கீழ் இயங்கியபோது ரஷ்யாவில் தொடக்கத்திலிருந்த மாநிலங்கள் எட்டே எட்டு... பிரிந்து செல்லும் உரிமை இருந்தும் அவை பிரிந்து சென்றுவிடவில்லை; மாறாக அவை இணைந்து நின்றன. ஆனால், பிரிந்து நின்ற மற்ற தனி நாடுகள் பின்னர் ஒன்று சேர்ந்து 15 குடியரசுகளைக் கொண்ட அகண்ட ரஷ்யக் கூட்டாட்சியாக இன்று திகழ்கின்றது.

மாநில சுயாட்சியை முழுமையாக வழங்கியதன் விளைவே இன்றைய விரிந்த, பரந்த ரஷ்யா. மாநில சுயாட்சியை மறுத்த தன் விளைவே இன்றையக் கூறுபட்ட பாரதம், மாநிலத் தன்னாட்சியை வழங்காமையால் அகண்ட இந்துஸ்தானம் குறைந்த பாரதமாகவும், பிரிந்த பாகிஸ்தானமாகவும் மாறிற்று. பிரிந்த பாகிஸ்தானமும் மாநில சுயாட்சியை மறுத்ததன் விளைவாக மேற்குப் பாகிஸ்தானமாகவும் வங்காள தேசமாகவும் சிதைந்து போயிற்று.

ஆஸ்திரேலியா

ஆறு மாநிலங்களைக் கொண்டிருந்த ஆஸ்திரேலியா நூறு ஆண்டுகட்குப் பின்னரும் சிதைவுறவில்லை. அளவான அதிகாரங்களைக் கொண்ட மத்தியக் கூட்டாட்சியோடு இணைந்திருப்பதே அதன் காரணம்.

ஸ்விட்சர்லாந்து

ஐரோப்பாக் கண்டத்தின் தலையான 'விளையாட்டரங்கு' என அழைக்கப்படுவது ஸ்விட்சர்லாந்து நாடு. ஒரு காலத்தில் பிரிவினைக்குரிய பந்தைய மைதானமாகவும் விளங்கிற்று. கத்தோலிக்க மதத்தைத் தழுவி நின்ற ஏழு காண்டன்கள் (மாநிலங்கள்) சுவிஸ்நாட்டைத் துண்டாடக் கோரின. புரட்சியும் வலுத்தது; ஆனால் அந்நாட்டு மக்கள் ஒற்றுமைக்குரிய வழியைக் கண்டனர். அதுதான் முழு மாநில சுயாட்சி. சுயாட்சி கூட அல்ல; சுய நிர்ணய உரிமை—சுயாதிபத்தியத்தோடு விளங்குகின்றன, சுவிஸ் நாட்டுக் காண்டன்கள். ஆயினும் அங்கு, பிரிவினை தலைகாட்டவில்லை. மாறாகப் பிரிவினை அறவே ஒழிக்கப் பட்டது. மாநில சுயாட்சி அளிக்கப்பட்டால் நாடு துண்டாகும் என்ற மதிமயக்கம் கொள்வோர்க்கு முழு இறைமையோடு கூடிய சுவிஸ்காண்டன்களும் மிகக் குறைந்த அதிகாரங்களைக் கொண்ட அதன் மத்திய அரசும், பிரிவினை என்ற பித்தம் தெளிவிக்கத் தலைசிறந்த மாமருந்தாகும்.

கனடா

கனடா நாட்டின் அரசமைப்பிலிருந்து இந்திய அரசியல் சட்டத்தின் பல பிரிவுகள் களவாடப்பட்டுள்ளன. கனடா நாட்டின் மாநிலங்கள் பற்றிய அரசமைப்பு விதிகள் ஏறத்தாழ இந்திய நாட்டு மாநிலங்களைப் பொறுத்த சட்ட விதிகள் போன்றவையே. கனடா நாட்டின் மத்திய அரசு ஓரளவுக்கு வலிமை கொண்ட கூட்டாட்சி அரசு—இந்தியாவைப் போல்.

ஆங்கிலேய இனத்தின் பரம்பரையில் வந்தவர்க்கும், பிரெஞ்சு இனத்தின் பரம்பரையில் வந்தவர்க்கும் இடையே இடையறு இனப் போராட்டம் 'கியூபெக்' மாநிலத்தில் இருந்து வருகின்றது. எனவே நடைமுறையில் முழுமையான சுயாட்சியைக் கொண்டே இயங்குகின்றன கனடா நாட்டின் மாநிலங்கள். மத்திய அரசுக்கு வலிமையூட்டும் பல அரசமைப்புச் சட்ட விதிகள் உயிரற்ற வெற்றுச் சொற்களாக்கப்பட்டுள்ளன. எனவே, கனடிய அரசியற் சட்டம் சற்று வலுவான மத்திய அரசைப் படைத்திருப்பினும் கனடிய அரசு முழு சுயாட்சியை மாநிலங்களுக்கு அளித்துள்ளது.

1867-ஆம் ஆண்டில் ஓர் அரை குறையான கூட்டாட்சி யாக மலர்ந்த கனடா நாடு சென்ற 107 ஆண்டுகளாக முழு மாநில சுயாட்சியுடன் உலக அரங்கில் வீறுநடை போடு கின்றது.

அது கூட்டாட்சியாக மலரும் போது 1. நியூபிரன்ஸ்விக் (New Brunshwick); 2. நோவோஸ்கோசியா (Novo Scotia); 3. கியூபெக் (Quebec); 4. ஒண்டோரியோ (Ontario) ஆகிய நான்கு மாநிலங்கள் அதில் இருந்தன.

19-ஆம் நூற்றுண்டின் இறுதியில் மானிடோபா (Manitoba 1870); 6. பிரிட்டிஷ் கொலம்பியா (British Colambia - 1871); 7. பிரின்ஸ் எட்வர்டு தீவு ( Prince Edward Island - 1873 ); 8. யூகோன் நிலப்பகுதி (Yukon territory) ஆகிய 3 மாநிலங் களும் ஒரு தனி நிலப் பகுதியும் சேர்ந்து கனடியக் கூட்டாட்சி 7 மாநிலங்களாகவும் ஒரு தனி நிலப் பகுதியாகவும் பெருகி நின்றது.

1905-ஆம் ஆண்டில் 9. சஸ்கட்சிவான் (Saskatchiwan) மற்றும் 10. அல்பர்ட்டா (Alberta) என்ற இரு மாநிலங்களும் வடமேற்கு நிலப்பகுதியும்(North west territory) மேலும் அதில் இணைந்தன.

தற்போது மொத்தம் 10 மாநிலங்களையும், இரண்டு தனி நிலப்பகுதிகளையும் இணைத்த ஒரு பரந்த கூட்டாட்சியாக கனடா நாடு திகழ்கிறது. இவ்வகையில் துவக்கத்திலிருந்த 4 மாநிலங்கள் பின்னர் 10 மாநிலங்களாக, கனடியக் கூட்டாட்சி ஒற்றுமையோடு வளர்ந்து வந்துள்ளதே யன்றி எந்தவொரு மாநிலமும் அதனின்றும் பிரிந்து போய்விட வில்லை.

இந்தியா

வெள்ளை ஏகாதிபத்தியம் இந்திய மண்ணைவிட்டு அகன்ற தும்,இந்தியத் துணைக்கண்டம் நூற்றுக்கணக்கான கூறுகளாகத் துண்டாகி விடும் நிலையில் இருந்தது. 560-க்கும் மேற்பட்ட சுதேச சமஸ்தானங்களின் பேரில் ஆங்கில ஏகாதிபத்தியம் அதுகாறும் செலுத்தி வந்த 'மேலாட்சியை' (Paramouncy) 1947-ஆம் ஆண்டு ஆகஸ்டு 15-ஆம் நாளில் தானுகவே அகற்றிக் கொண்டது. ஒவ்வொரு சுதேச சமஸ்தானமும் தனி

அரசாக மாறிவிடத்தக்க பயங்கர நிலைமை இந்தியத் துணைக் கண்டத்தில் உருவாயிற்று. ஒருக்கால் அக்குறுநிலப் பகுதிகள் இன்றைய இந்தியாவின் பகுதிகளாக இணையாமற் போயிருந்தால், இந்திய நாட்டின் மொத்தப் பரப்பளவில் 2/5 பங்கு நிலப் பகுதியும் அதிலிருந்த 10-க்கோடி 'இந்திய' மக்களும் இன்றைய இந்தியாவில் இடம் பெற்றிருக்க மாட்டார்கள். இன்றைய இந்தியத் துணைக்கண்டம் 600-க்கும் மேற்பட்ட தனி நாடுகளைக் கொண்டதாக ஒருக்கால் திகழ்ந்திருக்கும்; இதனைத் தடுத்து நிறுத்தியது எது?

முழு மாநில சுயாட்சி.

'பாதுகாப்பு', 'வெளிநாட்டு உறவு', 'செய்தித் தொடர்புகள்' ஆகிய முப்பெரும் அதிகாரங்களை மட்டும் மத்திய அரசு, பெற்றுக் கொண்டு எஞ்சிய அதிகாரங்கள் உட்பட மற்ற அனைத்து அதிகாரங்களையும் (முழு மாநில சுயாட்சி அதிகாரங்கள்) அந்தந்த சுதேச சமஸ்தானங்களுக்கே தந்து விடுவது என்ற அடிப்படையில் சுனகத், ஹைதராபாத் தவிர மற்ற அனைத்து சுதேச சமஸ்தானங்களும் இன்றைய இந்தியாவில் இணைந்தன.

முழு மாநில சுயாட்சி உத்தரவாதம் செய்யப்பட்ட பின்னர் தான் ''இணைப்பு ஆவணங்களின்'' (Instruments of Accession) மூலமாக அன்றைய மத்திய அரசிற்கும் சுதேச மன்னர்களுக்கும் அரசியல் ஒப்பந்தங்கள் ஏற்பட்டன. இன்றைய இந்தியாவும் உருவாயிற்று.

இந்திய சுதேச சமஸ்தானங்களை மற்ற மாநிலங்களோடு இணைப்பதற்குரிய கொள்கையைத் தெளிவாக்கும் போது, சர்தார். வல்லபாய்ப் பட்டேல் அவர்கள்,

''சுதேச மன்னர்கள், இந்திய நாட்டின் மற்ற பகுதிகளுடன் பரஸ்பர நட்பையும் ஒத்துழைப்பையும் உறவையும் தொடர்ந்து பேணி வளர்க்க வேண்டும். இந்திய ஒன்றியத்தோடு இணைவதற்குரிய அடிப்படைக் கொள்கையாகப் பாதுகாப்பு, வெளிநாட்டு உறவு, மற்றும் செய்தித் தொடர்புகள் ஆகியவைகளை மட்டும் மத்திய அரசிற்குத் தருவதற்கு சுதேச மன்னர்கள் ஒத்துக் கொண்டனர். நாட்டின் பொது

நலனுக் குகந்த இம்மூவகை அதிகாரங்களின் அடிப்படையில் ஏற்படும் (சுதேச சமஸ்தானங்களின்) இணைப்பைத் தவிர நான் வேறு எதையும் அவர்களிடம் கேட்கவில்லை. சுதேச சமஸ்தானங்களின் மற்ற எல்லாத் தன்னாட்சி உரிமைகளையும் நாம் முழுமனதோடு ஏற்றுக் கொள்கிறோம்.'' 2

என்று குறிப்பிடுகிறார்.

காஷ்மீரத்திற்குக் கிடைத்த தனித்தகுதியும், தனிப்பிரதம அமைச்சரும், தனித்தலைவரும், தனிக்கொடியும், முழுமாநில சுயாட்சியும் 1947-ஆம் ஆண்டு அக்டோபரில் ஏற்பட்ட ஒப்பந்தத்தினால் தான். அதுமட்டு மல்ல; 1952-ஆம் ஆண்டில் கூட 'சேக் முகம்மது அப்துல்லா' அவர்களுக்கும் பண்டித நேரு அவர்களுக்கும் இடையில் முழு மாநிலத் தன்னாட்சியின் அடிப்படையிலேயே மீண்டும் ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது என்பதும் இங்கு நினைவு கூறத்தக்கது.

ஆகவே, முழு மாநில சுயாட்சி இன்றைய இந்தியக் கூட்டாட்சியை உருவாக்கியுள்ளதே தவிர, 1947-இல்இருந்த அரை குறை இந்தியத்துணைக் கண்டத்தைக்கூடப் பிரிவினை செய்யவில்லை. ஆனால் இன்றைய இந்தியா உருவானவுடன் முழு மாநில சுயாட்சி கைவிடப் பட்டது.

பரந்த நிலப்பரப்பைக் கொண்ட நாடுகளும் பல்வேறு மொழிபேசும் பகுதிகளைக் கொண்ட நாடுகளும் மாறுபட்ட இன மக்களைக் கொண்ட நாடுகளும் முழு மாநில சுயாட்சியைக் கொண்ட கூட்டாட்சி நாடுகளாகவே அகில உலக அரங்கில் இயங்கி வருகின்றன. பொதுவாக உலகப் பெரும் போர்களும் எதேச்சதிகார அரசியல் தலைவர்களும் அபூர்வமான அரசியல் சூழ்நிலைகளும் நில நூலால் வகுக்கப்பட்ட பல்வேறு நாடுகளின் இயற்கை எல்லைகளைப் பிரித்துள்ளனவே யன்றி, சரித்திரத்தால் படைக்கப்பட்ட அதன் நாட்டெல்லைகளைக் கூட்டாட்சித் தத்துவமோ அன்றி மாநில சுயாட்சிக் கொள்கையோ மாற்றியமைத்திட்ட வரலாறில்லை. மாறாக, ஒற்றையாட்சித் தத்துவம் நடைமுறைப் படுத்தப்பட்டதன் விளைவாக, பரந்த நாடுகள் பல பிளவு படுத்தப் பட்டுள்ளன என்பதை வரலாறு காட்டும் அபாய எச்சரிக்கையாகக் கொள்ள வேண்டும்.

---

2 White Paper on Indian States (1950) Page 158

## நச்சு வித்து அல்ல; நல் மருந்து

மாநிலங்கள் தனித் தன்மைகளை வளர்த்துக் கொண்டு, தேசிய நலனுக்கு முரணாக இயங்கும் நிலை வந்து விடுமென அஞ்சிய தேசியத் தலைவர்கள் 50 ஆண்டுகளாகப் போற்றி வளர்க்கப்பட்ட மொழிவாரி மாநிலச் சீரமைப்பைக் கூட ஒதுக்க முற்பட்டனர். ஆனால் விளைவு—அது பிரிவினைக்கு வழி வகுத்தது. மொழித் தேசிய உணர்வு பொங்கி யெழுந்தது; இந்தியத் துணைக் கண்டத்தின் பல பகுதிகளையும் மொழிப் புரட்சி ஆட்கொண்டது. 'பஞ்சாபிசுபா' தனி நாடே கேட்டது. நாகாலந்தும், மேகாலயாவும் இந்திய நாட்டினின்றும் வெட்டிச் செல்ல நினைத்தன. பன்மொழி பேசும் மாநிலங்களில் மிகப் பெரிய போராட்டங்கள் நடைபெற்றன. ஆனால், மொழிவாரி யாக மாநிலங்கள் முறையாகப் பிரிக்கப்பட்ட பின்னர்—மொழித் தேசியத்தின் நியாயமான கோரிக்கை நிறைவேற்றப்பட்டதும்— இந்தியா துண்டாகி விடவில்லை. இன்றைய மத்திய அரசின் கீழ் அவை ஒருங்கிணைந்தே நின்றன. பன்மொழி மாநிலங்களான ஆந்திரா, குஜராத், மகாராஷ்ட்ரா ஆகிய பெரு மாநிலங்கள் கூட மொழிவாரியாகப் பிரிக்கப்பட்ட பின்னர் இந்திய ஒற்றுமைக்குப் புறம்பானதோர் முறையை (பிரிவினையை) நாடிவிட வில்லை.

" மொழியுணர்வு " மாநிலங்களின் தனித் தன்மையைப் பேணி வளர்க்கக் கூடியது. ஆனால், அதைப் பிரிவினை உணர்வு என்று சொல்லுதல் பேதமை. பல மொழிகளைக் கொண்ட இந்திய நாட்டில் அந்தந்த மொழி பேசும் பகுதிகள் குறுகிய மொழித் தேசிய உணர்வை வளர்த்துக் கொள்வதால் அகில இந்தியத்தேசியம் மெல்ல மெல்ல அழிந்துவிடுமோ என அஞ்சிய தேசியத் தலைவர்கள், "ஒரே தேசிய மொழி" என்ற அடிப் படையில் " இந்தி மொழியை " ஆட்சி மொழியாக ஆக்கத் தலைப்பட்டனர். இந்தி மயமாக்கும் நோக்கத்துடன் எல்லா மாநில மொழிகளையும் இந்தி லிபியைக்(தேவநாகிரி)கொண்டே எழுதத் தேவையான நடவடிக்கைகளையும் மேற்கொள்ள முனைந்தனர். ஆனால், இந்தியைத் தென்னகம் ஆட்சி மொழி யாகக்கூட ஏற்றுக் கொள்ளவில்லை. உலகம் கண்டிராத உயிர்ப் பலிகளைக் கொடுத்து இந்தி ஆதிக்கத்தைத் தடுத்து நிறுத் தியது தமிழகம்; பிரிவினை தலை தூக்கிற்று. ஆனால், கட்டாய இந்தி ஆதிக்கம் தவிர்க்கப் பட்டதும் இந்தி பேசா மாநிலங்கள் இந்திய ஒற்றுமைக்கு முரணான தோர் முறையை ( பிரிவினையை ) நாடி விடவில்லை.

*சீன ஆக்கிரமிப்பின்* போதும் பாக்கிஸ்தான் படையெடுப்பின்போதும், இந்திய மாநில மக்கள் எல்லாம் சுதந்திர தாகத்துடன் 'இந்தியர்கள்' என்ற ஓர் ''இணையற்ற உணர்வுடன்'' வலிவானதோர் பெரும் சக்தியாகத் திரண்டு எழவில்லையா? அரசமைப்புச் சட்டவிதிகளின் துணை கொண்டு மத்திய அரசு இட்ட கட்டளைகளை வைத்தா அந்தப் பெரும் சக்தி இந்திய மாநிலங்களில் உருவாயிற்று? அல்லது அனைத்து அதிகாரங்களும் இந்திய மத்திய அரசில் குவித்து வைக்கப்பட்டிருந்த காரணத்தினலா சுயாட்சியற்ற மாநில மக்கள் அந்நியனை எதிர்த்துத் திரண்டெழுந்தனர்?

ஆக, இவை யாவும் எதனைக் காட்டுகின்றன?

உண்மையான கூட்டாட்சி அமைப்பிற்குத் தேவையான முழு மாநில சுயாட்சியைக் கோருவது என்பது மாநில மக்களின் அடிப்படை உரிமைகளைக் காத்துக் கொள்வதற்கே யன்றி, அகில இந்தியாவினின்றும் பிரிந்து போவதற்காக அல்ல. இயற்கையான மொழிவாரி மாநில உணர்ச்சியும், தாய்மொழிப் பற்றும் பாதுகாக்கப்பட்டு விட்டதனுல் மத்திய அரசின் வலிமை எவ்வகையில் குன்றி விட்டது? அதனுல் நாட்டுப் பிரிவினை ஏற்பட்டும் விடவில்லை... அதைப் போலவே மாநில அதிகாரங்கள் பெருக்கப் பட்டால் - மாநில சுயாட்சி வழங்கப் பட்டால் - மத்திய அரசு நிலை குலைந்து விடாது; இந்திய நாடு, பல கூறுகளாகச் சிதைந்தும் விடாது.

ஆக, அகில இந்திய ஒற்றுமைக்கும் வலிவான மத்தியத்திற்கும் தேசியத் தலைவர்கள் கூறுவதைப்போல் நிலையான தொடர்பேதும் இல்லை. முன்னது பின்னதால் பேணிக் காக்கப்படுவதுமில்லை. அஃதேபோல் மாநில சுயாட்சிக்கும் பிரிவினைக்கும் நெருங்கிய பிணைப்பேதும் இல்லை. மாநில சுயாட்சி என்பதே பிரிவினை அல்ல. நாட்டைத் துண்டாடும் நச்சு வித்து மல்ல; மாருக, மாநில சுயாட்சி யென்பது, பரந்த நாடுகள் சிதைந்து போகாமல் தடுக்கும் ஒரு சஞ்சீவி; பல இன மக்களின் ஒற்றுமையை வளர்க்கும் ஒரு மாமருந்து.

எனவே, நாட்டுப் பிரிவினையைத் தவிர்க்க வேண்டுமெனில்......

,,மலர்க மாநில சுயாட்சி..,

# 3. மாநில அரசுகளை மத்திய அரசு சுரண்டாமல் இருக்க.........

— மலர்க மாநில சுயாட்சி —

"பிரிட்டானிய ஏகாதிபத்தியச் சுரண்டல் இயந்திரத்தைச் சுக்கு நூருக உடைத்த மக்களுக்கு, "இப்போதைய மத்திய அரசும் ஒரு சுரண்டல் இயந்திரமாகத் தான் இயங்குகிறது" என்பது பட்டவர்த்தனமாஞல் அது பெரும் ஆபத்தில்தான் முடியும்." 1

— முரசொலி மாறன்.

சுதந்திர இந்தியாவிலுள்ள பல மாநிலங்கள் நிதித் துறையிலும் பொருளாதாரத்திலும் சமவளர்ச்சியை அடையவில்லை என்பது கண்கூடு. நமது குடியரசு நாட்டின் அரசமைப்புச் சட்டத்தில் உள்ள பல கோணல் சட்டவிதிகளின் காரணமாக இன்றைய டெல்லி அரசு, பழைய பிரிட்டானிய அரசைப் போலவே சர்வாதிகாரத் தன்மையுடன் இயங்கி வருகிறது. நேருக்கு மாருன அதன் பொருளாதாரக் கொள்கைகளினுலும் அரசமைப்பால் கொடுக்கப்பட்ட அதிகாரக் குவியல்களினுலும் "சமதர்மம்" என்ற பெயரால் முதலாளித்துவம் தலைவிரித்தாடுகிறது.

வடக்கத்திய மாநிலங்களிலுள்ள கொழுத்த முதலாளிகள் அன்றைய ஆங்கிலேய முதலாளிகளைப் போலவே, தென்னக மாநிலங்களில் தனியார் துறையிலும், பொதுத் துறையில் கிடைக்கும் சில வசதிகளின் அடிப்படையிலும் பல தொழில்களைத் துவக்கிக் கோடிக்கணக்கான செல்வத்தை அள்ளிச்செல்கின்றனர். இதற்குச் சான்றுகள் ஏராளமாகக் காட்ட முடியும்.

"அகில இந்திய ஒற்றுமை" என்று கூறி இன்றைய மத்திய அரசு, பொருளாதாரத் துறையில் மாநில அரசுகளைச் சுரண்டல் காடுகளாக ஆக்கி விட்டன. மாநில அரசுகளுக்குரிய பெருஞ் செல்வம் மத்திய அரசிற்குக் கொள்ளை போகிறது; மாநில

---

1 மாநில சுயாட்சி. [1974] - முரசொலி மாறன், பக்கம் 542.

அரசுகளின் இயற்கை வருவாய்களை மத்திய அரசே சுரண்டி வருகிறது. நமது இன்றைய அரசியல் சட்டமும் மத்திய அரசின் சுரண்டலுக்கு உறுதுணையாக நிற்கின்றது.

மத்திய அரசு, தன்னிடம் குவிந்து கிடக்கும் அரசியல் அதிகாரங்களைப் பயன்படுத்தி மாநில அரசுகளை யெல்லாம் அதன் ''குடியேற்ற நாடுகளாக'' மாற்றி விட்டது. இதனைத் தடுக்கவும், நிலையான பொருளாதார — நிதிச் சுதந்திரத்தை மாநிலங்கள் பெறவும் அகில இந்திய ஒற்றுமை முறையைக் காக்கவும் வேண்டுமெனில், மாநில சுயாட்சியும் வேண்டும்.

இதனைத் தமிழக முதல்வர் டாக்டர். கலைஞர் அவர்கள் ஆதாரங்களோடு எடுத்து விளக்குகிறார். தமிழகச் சட்டப் பேரவையில் 16—4—1974 முதல் 20—4—1974 முடிய நடைபெற்ற ''மாநில சுயாட்சித் தீர்மானம்'' பற்றிய விவாதத்தின் முடிவில் முதல்வர் டாக்டர். கலைஞர் அவர்கள் ஆற்றிய கருத்துரையிலிருந்து ஒரு பகுதியை இங்கு தந்துள்ளோம்.

''மத்திய அரசு, மாநில அரசைச் சுரண்டுகிறது என்ற மிக முக்கியமான வாதத்தை நாம் அனைவரும் கூர்ந்து கவனிக்க வேண்டுமென்று உங்களையெல்லாம் கேட்டுக் கொள்ளுவேன். மத்திய அரசிடம் திரண்ட நிதி ஆதாரங்கள் இருக்கின்றன. கொழுத்த வருமானங்களைக் கொடுக்கக் கூடிய வரி அமைப்புக்களெல்லாம் அவர்களுடைய கையிலிருக்கின்றன.

இதற்கும் என்ன காரணமென்றால் 1935-ஆம் ஆண்டுச் சட்டத்தை அப்படியே பெரும்பாலும் காப்பி அடித்திருக்கின்ற காரணத்தினாலே தான் நாம் இந்த சங்கடத்துக்கு ஆளாகியிருக்கின்றோம். வேறு சில விஷயங்களிலே மாற்றங்களை (1935-ஆம் ஆண்டுச் சட்டத்திலிருந்து) நாம் செய்திருந்தாலும் கூட, ''நிதி உறவுகளைப்'' பொறுத்தவரையில் எந்தவிதமான மாற்றமும் செய்யவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. அவர்கள் செய்திருக்கிற ஒரே ஒரு மாற்றம் ஐந்தாண்டுகளுக்கு ஒருமுறை ''நிதி ஆணைக்குழு'' ஏற்படும் என்பதுதான். இதைத் தவிர, மத்திய-மாநில நிதி உறவுகளைப் பொறுத்தவரையில், கொச்சையாகச் சொல்ல வேண்டுமானால் ஈயடிச்சான் காப்பி என்று சொல்வார்களே அதைத் தான் செய்திருக்கிறார்கள்.

1935-ஆம் ஆண்டுச் சட்டம் எந்தச் சூழ்நிலையில் ஏற்படுத்தப்பட்டது? அப்பொழுது நடைபெற்றது போலீஸ் ராஜ்யம். ஆகவே, அந்தக் கடமைகளை நிறைவேற்றுவதற்கு நிதி

ஆதாரங்கள் வகுக்கப்பட்டன—வரைமுறைப் படுத்தப் பட்டன. ஆனால் இப்பொழுது நடப்பது 'வெல்பேர் ஸ்டேட்'(Welfare State) என்று சொல்லுகின்றோம் — 'மக்கள் சேமநல சர்க்கார்' என்று சொல்லுகின்றோம். ஆகவே, போலீஸ் ராஜ்யத்திற்காக ஒதுக் கப்பட்ட நிதி ஆதாரங்கள் ஒரு வெல்ஃபேர் ஸ்டேட்டுக்கும் பொருந்தும் என்று வாதிப்பது சரியான தல்ல.

'மத்திய அரசு, திரண்ட நிதி ஆதாரங்களை வைத்துக் கொண்டு, மாநிலங்களை ஆட்டிப்படைக்கிறது. மாநில முதலமைச்சர்கள் பிச்சைப் பாத்திரங்களோடு அடிக்கடி டெல்லிக்குச் செல்லவேண்டிய நிலையிருக்கிறது.' என்று நானல்ல, மைசூர் முதலமைச்சராக இருந்த வீரேந்திர பாடீல் அவர்கள் பதவியில் இருக்கும் போதே குறிப்பிட்டார்.

மத்திய அரசினிடத்திலே இருக்கின்ற பணம் யாருடைய பணம்? மக்கள் தருகின்ற பணம். மாநில அரசுகளின் வாயிலாகப் போய்ச் சேருகின்ற பணம். அந்தக் கணக்கைக் கொஞ்சம் பார்த்தால் மத்திய அரசுக்கு வருமானவரி, எக்ஸைஸ் வரி, எஸ்டேட்வரி இப்படி வரிகளின் மூலமாகப் பணம் வசூலா கிறது. சிறு சேமிப்பின் மூலம் மத்திய அரசுக்குப் பணம் கிடைக் கிறது. அதிலே ஒரு பகுதி மாநில அரசுக்குத் திருப்பித் தரப் படுகிறது. கூட்டுறவு வங்கி உட்பட மற்ற வங்கிகள் மூலமாகவும் இன்சூரன்ஸ் மூலமாகவும் பிராவிடண்ட் பண்டு மூலமாகவும் மத்திய அரசு கடன் பெறுகிறது. இந்த இனங்களெல்லாம் சேர்ந்ததுதான் மத்திய அரசின் வருமானம்.

இப்பொழுது மாநில அரசின் வருமானத்தைப் பார்த்தால் அவை வசூலிக்கும் வரி, அவற்றின் கடமையை ஆற்றுவதற்குக் கூடப் போதவில்லை. அரசியல் சட்டப்படி வருமான வரி, எக்சைஸ்வரி ஆகியவைகளில் மத்திய அரசு மாநில அரசுக்கு ஒரு பங்கு கொடுக்கிறது. ஆனால் இப்பொழுது நாம் சொல்லுகின்ற கணக்கின்படி, தமிழ் நாட்டைப் பொறுத்த வரையில் 1974 - 75-இல் மாத்திரம் தமிழ் நாட்டிலேயிருந்து மத்திய அரசுக்கு மக்கள் தருகின்ற தொகை 356.75 கோடி ரூபாய். இவற்றில் வரிகளில் பங்குத் தொகையாகத் திருப்பித் தரப்படுவது 73.75 கோடி ரூபாய்.

சிறுசேமிப்பின் மூலம்1974-75-இல் தமிழ்நாட்டில் வசூலாக விருக்கிற தொகை 14.58 கோடி. அதில் திரும்பி வருவது 8.75 கோடி. மீதித் தொகையை மத்திய அரசே வைத்துக் கொள்கிறது.

வங்கிகளின் மூலம், இன்சூரன்ஸ் மூலம், பிராவிடெண்ட் பண்டு மூலம் மத்திய அரசு, தமிழ் நாட்டிலே கடன் எழுப்பப் போகிற தொகை 24.6 கோடி ரூபாய்.

வருவாய் இனத்தைப் பார்த்தால் 1974–75-இல் திட்டத் திற்கான மானியம் தமிழ் நாட்டிற்குக் கிடைக்கப் போகிற தொகை 29 கோடி ரூபாய். திட்டமில்லாத மானியமாகக் கிடைக்கப்போகிற தொகை 20 கோடி. நேரடியாக மத்திய அரசு, தமிழ் நாட்டில் முதலீடு செய்யப் போவது 111 கோடி. ஆக, 1974-75-இல் மத்திய அரசு தமிழ் நாட்டிலே இருந்து பெறும் மொத்தத் தொகை 395.43 கோடி ரூபாய். இதிலே நமக்கு வந்தது போக மத்தியிலே தங்கிவிடுவது 153.43கோடி. இந்த ஆண்டிற்கு மாத்திரம் – 153 கோடி ரூபாய் தமிழ் நாட்டின் பணம் மத்திய அரசிலே தங்கிவிடப் போகிறது.

ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்ட இறுதியில் இந்தத் தொகை 732.5 கோடி ஆக இருக்கும். அடுத்த 10 ஆண்டு களில் இந்தத் தொகை 1,748.58 கோடி ரூபாயாக இருக்கும்.

இந்தப் பணம் தமிழ் நாட்டிலேயே யிருந்தால் ஒரு கணம் எண்ணிப் பாருங்கள் நான் அதற்காகத் தமிழ்நாடு தனியாக ஆக வேண்டும் என்ற அடிப்படையில் இந்தக் கேள்வியை எழுப்புவதாக அர்த்தமல்ல–தனிநாடு கேட்பதாக அர்த்தமல்ல; பாதுகாப்புச் செலவுக்கு மத்திய அரசுக்குப் பணம் வேண்டாமா? வேண்டும்! பாதுகாப்புச் செலவுக்கு எவ்வளவு பணம் தேவை யோ அதை மாநில அரசு கணக்கிட்டுத் தரும் என்று டாக்டர். பி. சி. ராய் அப்போதே சொல்லி யிருக்கின்றார். அதற்குத் தேவையான பணத்தை ஒதுக்கலாம். 10 ஆண்டுக் காலத்தில் 1,700 கோடி ரூபாய் மத்திய அரசு, தமிழ்நாட்டுப் பணத்தை வைத்துக் கொள்ளப் போகிறது.

அண்மையில் சச்சிதானந்த சின்கா என்ற ஓர் ஆசிரியர் ஒரு புத்தகத்தில் சொல்லுகிறார்,

> ''மாநிலங்களின் நிலையையும் மத்திய நிலையையும் ஒப்பிட்டுப் பேசும்போது உள்நாட்டுக் காலனியாக இருக்கிறது.''

(இண்டர்னல் காலனி) என்று இந்த மாநிலங்களின் நிலைமையைச் சச்சிதானந்த சின்கா என்பவர் வர்ணிக்கிறார். ஆகவே, இந்த உள்நாட்டுக் காலனி நிலைமை இருக்கலாமா? 1,700 கோடி ரூபாயை மத்திய அரசிலே 10 ஆண்டுக் காலத்தில் ஒப்படைத்து விட்டு, மாநில அரசு நம்முடைய வளத்தைப் பெருக்குவதற்காக வாட்டத்தோடு உட்கார்ந்து கொண்டிருக்க வேண்டுமா? இந்த உள்நாட்டுக் காலனி முறை ஒழிக்கப்பட வேண்டாமா?

அதற்காகத் தான் எல்லாவற்றையும் அங்கே கொடுத்து மறுபடியும் எடுத்துக் கொள்வதற்குப் பதிலாக - இந்த இரண்டு வழிப் போக்குவரத்துக்குப் பதிலாக - எங்களுக்கு எவ்வளவு, உங்களுக்கு எவ்வளவு என்று நாம் கொடுத்து விடலாம் - கொடுக்கின்ற அதிகாரம் நாம் வைத்திருக்கலாம் என்பதுதான் மாநில சுயாட்சியின் தாத்பர்யம்.

அங்கே கொடுத்துவிட்டு, மறுபடி எங்களுக்குப் பங்கு பிரித்துக் கொடு என்பதை விட, பின் தங்கிய மாநிலங்கள் கஷ்டப்பட்டால் கூட அவைகளையும் கருத்திலே கொண்டு, மத்திய சர்க்காருக்கும் பணம் தேவைப்பட்டால் எவ்வளவு பணம் தேவைப்படுகிறது என்பதைக் கருத்திலே கொண்டு, இந்த மாநில சுயாட்சி அடிப்படையில் அளிக்கலாம் என்பது தான் நம்முடைய கருத்து.''‡

எனவே, மாநில அரசுகளை மத்திய அரசு சுரண்டாமல் இருக்க,

...மலர்க மாநில சுயாட்சி...



---

‡ஆதாரம்: தமிழ்நாடு சட்டப் பேரவை நடவடிக்கைகள் (பணித்துறை வெளியீடு) நாள் 20—4—1974 தொகுதி LVI எண், 5, பக்கம் 789 முதல் 793 முடிய.

# 4. குடியரசுத் தலைவர் சர்வாதிகாரி ஆவதைத் தடுக்க......

— மலர்க மாநில சுயாட்சி —

"குடியரசுத் தலைவர் சர்வாதிகாரியாக மாறி விடுவதைத் தடுப்பதற்குத் தேவையான சட்டவிதிகள் (நமது) அரசமைப்பில் இடம் பெறவில்லை. பேராசையும் பழிபாவங்களுக்கு அஞ்சாத தன்மையுமுடைய ஒருவர் குடியரசுத் தலைவரானுல், அரசமைப்புச் சட்ட விதிகளின் சொல்லும் பொருளும் வழுவாமல் செயல்படுவாரெனச் சொல்ல முடியாது. அவர், அரசமைப்புச் சட்ட விதிகளை மீறுமலே கூட, ஒரு சர்வாதிகார ஆட்சியை உருவாக்கிக் கொண்டு, தனது எண்ணத்தை, சட்டப்படி நிறைவேற்றிக் கொள்ளலாம்." 1

— அரசமைப்பு வல்லுனர். கிளெட்ஹில்.

சர்வாதிகாரமும் ஒற்றை ஆட்சியும்

ஒரு நாட்டினுடைய சகல அதிகாரங்களையும் ஒரு தனி மனிதனே அல்லது ஒரு தனி அரசியல் கட்சியோ கையகப் படுத்திக் கொண்டும், அவற்றை யெல்லாம் ஒரு மையப் புள்ளியில் குவித்து வைத்துக் கொண்டும், அந்த அதிகார மையத்திலிருந்து அரசின் பல அங்கங்களையும் மக்களையும் தம் இச்சைப்படி அடக்கி ஆள்வதைத் தான் பொதுவாக சர்வாதிகார ஆட்சி என்கிறேம்.

சர்வாதிகார நாட்டில் மக்கள் பிரதிநிதிகளோ, சட்ட மன்றங்களோ, அவர்களால் தேர்ந்தெடுக்கப்படும் அமைச்சரவையோ நடைமுறையில் இருக்காது. மக்களுக்குப் பொறுப்புள்ள அரசோ (Responsible Government) அல்லது மக்களது

---

1 "The Republic of India" by Gledhill, P. 107 - 108.

பிரதிநிதித்துவ அரசோ (Representative Government) அந் நாட்டில் செயல்படாது; பொதுமக்களின் ஜீவாதார உரிமைகள் அறவே நசுக்கப்பட்டுவிடும்; சனநாயகத்தைப் பிரதிபலிக்கும் அரசியல் கட்சிகளோ, அரசு நிறுவனங்களோ, மாற்றுக் கருத்துக்களோ, நடுநிலையான சிந்தனைகளோ, அங்கு வெளிப்படா. ஆள்பவர்களுக்கும், ஆளப்படுபவர்களுக்கும் இடையேஅடக்குமுறையைத் தவிர வேறு அரசியல் தொடர்பு இருக்காது. ''ஆள்பவர்கள் வேறு; ஆளப்படுபவர்கள் வேறு'' என்ற அரசியல் தத்துவம் அமுல்படுத்தப்படும். ஆளப்படுபவர்கள் ஆள்வோர்களாக ஆகவும் இயலாது.

மொழி, இன அடிப்படையில் பகுக்கப்பட்ட மாநிலங்கள் என்ற ''அரசியல் பகுதிகள்'' (Political Units) சர்வாதிகார ஆட்சியில் தனித்தியங்கா; சர்வாதிகாரியின் வசதிக்கேற்ற ''நிர்வாக நிலப்பகுதிகள்'' (Administrative Units) மட்டுமே அங்கு நிலை பெற்றிருக்கும். அனைத்து அரசதிகாரங்களும் குவிக்கப்பட்டதொரு மத்திய மையத்திலிருந்து அந்த நிலப் பகுதிகள் நேரடியாகவோ அல்லது சர்வாதிகாரியின் முகவர்களான அதிகார வர்க்கத்தின் மூலமோ, ஆட்சி செய்யப்படும். சுருங்கக் கூறின், மத்திய வல்லாட்சியின் அனைத்து அம்சங்களும், ஒற்றை யாட்சியின் தந்நிகரற்ற நிர்வாகமும் சர்வாதிகார நாட்டின் சிறப்புக் கூறுகளாகும்.

குடியரசு நெறியும் கூட்டாட்சி முறையும் ஒரு ஜனநாயக நாட்டின் இரு கண்கள் எனில், சர்வாதிகார நெறியும் ஒற்றை யாட்சி முறையும் சர்வாதிகார நாட்டில் ஒட்டிப் பிறந்த இரட்டைக் குழந்தைகளாகும்.

ஒரு குடியரசு நாட்டில் சர்வாதிகார ஆட்சி, தோன்றுவதற்குரிய காரணங்களும் சூழ்நிலைகளும் நாட்டுக்கு நாடு மாறுபடினும், அக்குடியரசு நாட்டின் மைய நிர்வாகத்தில் தேக்கி வைக்கப்பட்ட அதிகாரங்கள்தான், சர்வாதிகார ஆட்சி உருவாவதற்குரிய அடிப்படையான அரசியல் பின்னணியை அமைத்துக் கொடுக்கிறது என்பதை இருபதாம் நூற்றுண்டின் பல்வேறு நாட்டுச் சரித்திரங்கள் சுட்டிக் காட்டுகின்றன. அடித்தளத்திலிருந்து மேல்மட்டம் வரையுள்ள பல்வேறு அரசியல் அமைப்புகளுக்கிடையே அரசதிகாரங்கள் பரவலாக்கப்பட்டிருந்தால், குடியரசு நாடுகளில் சர்வாதிகாரிகள் எளிதில் தோன்றிவிட முடியாது. குடியரசு முறை ஆழமாக வேரூன்றுத

நாடுகளில், குவித்து வைக்கப்பட்ட வலிவான அதிகாரங்களைக் கொண்டியங்கும் மத்திய அரசிற்குத் தலைமை வகிக்கும் தனி மனிதனோ அல்லது அந்த வாய்ப்பைப் பெற்ற ஓர் அரசியல் கட்சிக் குழுவோ, அந்நாட்டின் அரசியல் சட்டவிதிகளைப் பயன்படுத்தியே சர்வாதிகாரிகளாக மாறியுள்ளனர் என ஐரோப்பிய, ஆப்பிரிக்க, ஆசிய நாடுகளின் அண்மைக் கால வரலாறுகள் தெற்றென விளக்குகின்றன.

இரண்டாம் உலகப் பெரும் போருக்குப் பின்னால், பல ஆப்பிரிக்க – ஆசிய நாடுகள் சுதந்திரம் அடைந்தன; குடியரசு களாகவும் மலர்ந்தன. ஆனால், இந்தியா, இலங்கை, பிலிப் பைன்ஸ் மற்றும் மலேசியா ஆகிய நான்கு நாடுகள் தவிர, ஏனைய நாடுகளில் எல்லாம் ஏதோ ஒரு வகையான சர்வாதிகார அரசுகள் தோன்றி விட்டன. "நாட்டின் ஒருமைப்பாடு"; பிரிவினைச் சக்திகளை ஒடுக்கும் முறை" என்ற பெயரில் நாட்டின் பேரதிகாரங்களை யெல்லாம் தம்மகத்தே பெற்றுத் திகழ்ந்த வலிமையான மத்திய அரசைப் பெற்றிருந்த பல குடியரசு நாடு கள் சர்வாதிகாரிகளின் கோரப்பிடியில் மிக எளிதில் சிக்கி விட்டன. ஆனால், அவர்கள் அந்தந்த நாட்டின் மக்களிடையே மிகப் பெரிய அரசியல் செல்வாக்கையும் மரியாதையையும் பெற்றவர்களாகத் திகழ்ந்திருந்தனர்.

ஜெர்மனியின் 'இட்லருக்கும்' இத்தாலியின் 'முசோலினிக் கும்', எகிப்தின் 'நாசருக்கும்', பாக்கிஸ்தானின் 'அயூப்கானுக் கும்' இந்தோனேசியாவின் 'சுகர்னோவிற்கும்', அல்ஜீரியாவின் 'பென்பெல்லாவிற்கும்', பர்மாவின் 'நேவின்னுக்கும்' அந்தந்த நாட்டு மத்திய அரசாங்கங்களில் குவித்து வைக்கப்பட்டிருந்த பேரதிகாரங்கள் சர்வாதிகாரிகளாவதற்குரிய பொன்னான வாய்ப்பை நல்கிய தென்றால் அது மிகையாகாது.

இந்திய நாடும் அதற்கு விதிவிலக்கல்ல. நமது அரசமைப் பின் சட்டவிதிகள் வலிமையான மத்திய அரசைப் படைக்கும் வகையில் எண்ணிறந்த அரசதிகாரங்களை மத்திய நிர்வாகத் தில் தேக்கி வைத்துள்ள தென்பதை மறுக்க முடியாது. அந்த "அதிகாரக் குவிப்புமுறை" சர்வாதிகாரத்திற்கு அடிகோலு பவை. மாறுபட்ட மொழி, இனம் சார்ந்த மக்களை 'ஒருமைப் படுத்துகிறோம்'; எனக் கூறி, 'அரைகுறைக் கூட்டாட்சி' யென்ற நிழலைக் காட்டி, சுயாட்சியற்ற 'மாநிலங்களைப் படைத்து, அவற்றைச் சாதாரண 'நிர்வாக அமைப்புகளாகச்' செய்து, 'ஒற்றையாட்சித் தன்மைகளைக்' கொண்ட அரசு

முறையைப் பேணி வளர்த்து, 'அரசியலமைப்புக்கும் அப்பாற் பட்ட' (Extra Constitutional) சில அமைப்புகளைத் தோற்று வித்து, அவற்றின் மூலம் மத்திய மயமாக்கப்பட்ட பொருளா தாரக் கொள்கைகளை அமுல் படுத்திவரும் இன்றைய வன்மை கொண்ட மத்திய நிர்வாகத்தை இயக்குகின்ற வாய்ப்பைப் பெற்றவர்கள் ''இந்தியக் குடியரசுக் கூட்டாட்சியை'', எந்த நேரத்திலும், கொடுமை நிறை சர்வாதிகார ஆட்சியாக மாற்று வதற்கு நமது புனிதமான அரசமைப்பின் எழுதப்பட்ட சட்ட விதிகளும், எழுதப்படாமல் விடப்பட்ட சில முக்கிய விதிகளும் துணைபுரிகின்றன என்பதை துறைபோகிய பல அரசியல் வல்லுநர்கள் சுட்டிக் காட்டுகின்றனர். இது நமது கற்பனை யல்ல; காலமும் சூழலும் கனிந்து நின்றால் இந்திய நாட்டில் நடைமுறைக்கு வரக்கூடிய ஓர் எதார்த்த நிலைமை.

அரசதிகாரங்களைப் பரவலாக்குவதன் மூலமாகவும் மாநி லங்களுக்கு முழு சுயாட்சி தருவதன் மூலமாகவும் தான், இன்றைய அரசியல் அமைப்பு செய்து வைத்துள்ள அதிகாரக் குவியல் முறையையும், அதன் வழி மறைமுகமாகத் தலை தூக்கும் சர்வாதிகார ஆட்சியின் சாயலையும் நாம் மாற்றிட முடியும்.

மாநில சுயாட்சிக்கும், சர்வாதிகார ஆட்சியைத் தடுப்பதற் கும் உள்ள தொடர்பென்ன? இனி ஆய்வோம்.

### அமைச்சரவை முறை (CABINET SYSTEM)

நமது இந்திய மத்திய அரசு, நான்கு அங்கங்களைக் கொண்டது.

அவையாவன:

1. இந்திய நாட்டின் தலைவரான குடியரசுத் தலைவர்;
2. மத்திய நாடாளு மன்றம்;
3. தலைமை யமைச்சரும் அவரது அமைச்சரவையும்;
4. அவர்களால் சமைக்கப்படும் கொள்கைகளையும் திட் டங்களையும் நிறைவேற்றும் அதிகாரிகள்—அதாவது அதிகார வர்க்கம் (Bureaucracy) இந்த நான்கு அங்கங்களில், 'அதிகார வர்க்கம்' என்ற அமைப்பு நிரந்தரமானது. எந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தாலும்—எவர் குடியரசுத் தலைவரானாலும்—எந்த

வகை அரசு முறை ஏற்படினும்—அந்த அரசாங்கத்தின் கொள்கைகளை அப்படியே நடைமுறைப் படுத்தக் கூடியது ''நிர்வாக இயந்திரம்''. எனவே, அது நிலையானது.

மைய அரசின் மற்ற கூறுகளான குடியரசுத் தலைவரும், தலைமை யமைச்சரும், மத்திய நாடாளு மன்றமும் ஒன்றை மற்ருென்று ஆதிக்கம் செய்யாமலும் ஒன்றுடன் ஒன்று சார்ந் திருக்கத் தக்க வகையிலும் ஒரு சமநிலையை(to balance)உண்டு பண்ணவும்; அதே நேரத்தில் ஒன்றை மற்ருென்று கட்டுப் படுத்தத் (to check) தேவையான சில நுணுக்கமான சட்ட விதிகள் நமது அரசமைப்புச் சட்டத்தில் செய்யப்பட்டுள்ளன.

ஆனுல், அவை முழுமையாகவும் அறுதியிட்டும் செய்யப்பட வில்லை. இங்கிலாந்து நாட்டின் அரசியல் பாரம்பரியத்தில் உதித்த சில சம்பிரதாயங்களையே (Conventions) நாம் பின்பற்றுகிருேம்.

நமது அரசமைப்பில் ''எழுதப்பட்டுள்ள சட்டவிதிகளை'' வியாக்கியானம் செய்து விளக்கம் தருவதற்கு நீதிமன்றங்கள் உள்ளன. ஆனுல் நீதிமன்றங்களால் கருத்து விளக்கம் தர முடியாதபடி, சில அடிப்படைச் சட்டப் பகுதிகள் நமது அரசமைப்பில் எழுதப்படவில்லை. எனவே, அவை நீதிமன்றங் களின் ஆய்வு எல்லைக்கும் அப்பால் நின்று விடுகின்றன.

நீதி மன்றங்களின் பரிசீலனைகளில் ''எழுதப்பட்ட'' சட்டவிதி களே மேலோங்கி நிற்கும்; ஆனுல் ''எழுதப்படாத'' பகுதிகளில் அரசியலே மேலோங்கி நிற்கும்.

நமது அரசமைப்பில் ''நாடாளுமன்ற ஜனநாயகமுறை'' பற்றிய அடிப்படையான சட்ட விதிகள் எழுதப்பட வில்லை.

அரசியல் சட்டப்படி இந்திய நாட்டின் அதிகாரப்பூர்வமான தலைவர் நமது குடியரசுத் தலைவர்தான். ஆனுல் நாடாளு மன்ற ஜனநாயக முறைப்படி, அவர் இந்திய நாட்டின் உண்மை யான ''நிர்வாகத் தலைவராக'' ஆவதில்லை. (The President is the head of the states; but not of the executive).

இங்கிலாந்து நாட்டின் மரபுகளையும் (conventions) நமது அரசமைப்பில் இடம் பெற்றுள்ள இரண்டொரு சட்ட விதிகளை யும் வைத்தே நமது குடியரசுத் தலைவருக்கு அரசியலமைப்பில் அளிக்கப்பட்ட எல்லா ஆட்சி அதிகாரங்களையும் இந்தியத்

தலைமை யமைச்சரின் தலைமையில் இயங்கும் அமைச்சரவை செயல்படுத்துகின்றது. இதனை ''அமைச்சரவை முறை'' அல்லது ''கேபினெட் சிஸ்டம்'' (Cabinet system) என அழைக்கிறார்கள்,

## அமைச்சரவை முறையில் குடியரசுக் கோட்பாடுகள்

''அமைச்சரவை முறையில்'' நால்வகை அடிப்படைக் கோட்பாடுகள் அடங்கி யுள்ளன.

அவையாவன:—

1. குடியரசு நாட்டின் மக்களிடம் நிலை பெற்றிருக்கும் அரசியல் இறைமையை (Political Sovereignty) அவர்களால் தேர்ந்தெடுக்கப்படும் நாடாளுமன்றம் பிரதிபலிக்கிறது.

2. நாடாளு மன்றத்தால் தேர்ந்தெடுக்கப்பட்ட அமைச்சரவை அந்நாட்டின் உண்மையான நிர்வாகக் கருவியாக (Executive instrument) ஆகிறது. அந்த அமைச்சரவை நாடாளு மன்றத்தில் பெரும்பான்மை உறுப்பினர்களின் பலத்தைப் பெற்றிருக்கும் வரை நிர்வாகம் செய்கின்றது.

3. அமைச்சரவையின் தலைவரான தலைமையமைச்சர் குடியரசுத் தலைவருக்கும் நாடாளு மன்றத்திற்கும் தனது அமைச்சரவையின் சார்பில் பொறுப்புடையவராகிறார்.

4. மத்திய அரசின் அங்கங்களான குடியரசுத் தலைவருக்கும், அமைச்சரவைக்கும் நாடாளு மன்றத்திற்கும் இடையே யுள்ள தொடர்புகளை எந்த நீதி மன்றமும் பரிசீலனை செய்ய முடியாது.

அமைச்சரவை முறையில் இயங்கும் குடியரசு நாட்டில் ஒரு நிர்வாகத் தலைவர் (Executive) இருப்பார். அவர் அந்நாட்டையும் மக்களையும் ஒருசேரப் பிரதிபலிப்பார்; ஆனால் அவர் உண்மையில் அந்த நாட்டை நேரடியாக ஆட்சி செய்வதில்லை. குடியரசு நாட்டின் அடையாளக் குறியாக (Symbol) மட்டுமே அவர் விளங்குவார். அவர் தான் குடியரசுத் தலைவர். அவருக்கென்ற தனி இலச்சினையும் (seal) நாட்டின் அடையாளத்திற்கான தனித்தன்மையும் இருக்கும். அந்நாட்டின் எல்லாக் கொள்கைகளும் அரசாங்கத்தின் முடிவுகளும் குடியரசுத் தலைவரின் பெயராலேயே எடுக்கப்படும், ஆனாலும் அந்நாட்டின் நிர்வாகத்தில் அவருக்கு எந்த நேரடித் தொடர்பும் இல்லை.

அவர் தலைமை யமைச்சரின் கீழ் இயங்கும் அமைச்சரவை யினுடைய "ஆலோசனை மற்றும் உதவி" (in aid and advice) யுடனேயே நாட்டின் நிர்வாகத்தை நடத்த வேண்டும். அஃதாவது(குடியரசுத் தலைவரின் பெயரால்) தலைமை யமைச்சரும்—அமைச்சரவையுமே—உண்மையில் அந்நாட்டின் நிர்வாகத்தை நடத்துவார்கள். அமைச்சரவை தம் அரசுச் செயல்களுக்கும் நடவடிக்கைகளுக்கும் நாடாளு மன்றத்திற்கே பொறுப்புடையது. அமைச்சரவை நிர்வாகத்தை நாடாளு மன்றம் ஒவ்வொரு கட்டத்திலும் பரிசீலிக்கிறது; நாடாளு மன்றத்தின் ஒப்புதலுக்குப் பின்னரே அமைச்சரவையின் கொள்கைகளும் திட்டங்களும் அமுல்படுத்தப்படுகின்றன.

நாடாளு மன்றம் என்ற அமைப்பு மக்களது இறைமை அதிகாரங்களைப் பிரதிபலிக்கும் ஓர் அரசமைப்பாகும். ஆகவே அமைச்சர்கள் நாடாளு மன்றத்திற்குப் பொறுப்பானவர்கள் என்ருல் அந்த நாடாளு மன்றத்தின் மூலமாக மக்களுக்கே பொறுப்பானவர்களாகி விடுகிருர்களல்லவா? எனவே, குடியரசுத் தலைவரின் பெயரால் நடாத்தப்படும் அமைச்சரவையின் ஆட்சி, உண்மையில் மக்களால் நடாத்தப் படும் ஆட்சியாகி விடுகிறது.

நமது அரசமைப்புச் சட்டத்தில் குடியரசுத் தலைவருக் கென்று பல அதிகாரங்கள் வழங்கப்பட்டிருந்தாலும் அவை அவரைப் பொறுத்த மட்டில் பெயரளவானவையே. உண்மை யில் நாடாளு மன்றத்திற்கும் அமைச்சரவைக்குமே அந்த அதிகாரங்கள் வழங்கப்பட்டுள்ளன.

## எழுதப்பட்ட 74-ஆம் விதியும் எழுதப்படாத சட்டப் பகுதியும்

பெயரளவிற்கு வழங்கப்பட்ட அவ்வளவு அதிகாரங்களையும் ஒருக்கால் குடியரசுத் தலைவர் தானே ஏற்றுக் கொண்டு செயல் படுவதாக வைத்துக் கொள்வோம். அப்போது நாடாளு மன்றமும் அமைச்சரவையும் செயலற்றுப் போகும். நாட்டின் பொம்மைத் தலைவரான குடியரசுத் தலைவரும் அந்தக் கணம் முதல் இந்திய நாட்டின் சர்வாதிகாரியாக மாறி விடுகிருர். எனவே,அதைப் பற்றிய சட்டவிதிகள் தெளிவாகத் தொகுக்கப் பட வேண்டுமல்லவா?

ஆனால்,மேற்சொன்ன ''நாடாளு மன்றக் குடியரசு முறையை'' நமது அரசமைப்புச் சட்டம் தெளிவான சட்டவிதிகளால் அறுதியிட்டு உறுதியாகக் கூறவில்லை.

அதில் வரும் " எழுதப்பட்டுள்ள சட்டவிதிகள் " குடியரசுத் தலைவருக்கே எல்லா ஆட்சியதிகாரங்களையும் நேரடியாக அளித்துள்ளது. ஆனால் ஒரே ஒரு சட்டவிதி மட்டும் குடியரசுத் தலைவரின் அவ்வளவு அதிகாரங்களையும் நாடாளுமன்றச்சனநாயக முறைப்படி மக்கள் பிரதிநிதிகளான அமைச்சரவைக்கும் நாடாளு மன்றத்திற்கும் வழங்குவதற்கு மறைமுகமாக வழிவகை செய்கிறது.

அது தான் சட்டவிதி 74.

இந்த ஒரே ஒரு விதியைத் தவிர வேறு எந்தச் சட்டவிதியும், குடியரசுத் தலைவருக்கு நேரடியாக அளிக்கப்பட்ட ஆட்சி அதிகாரங்களை மக்கள் பிரதிநிதிகளுக்குரிய (அமைச்சரவை மற்றும் நாடாளு மன்றம்) அதிகாரங்களாக மாற்றுவதற்கு வகை செய்வதில்லை. மேற்சொன்ன 74-ஆம் விதியும் கூட அதனை நேரடியாகவும் தெளிவாகவும் அறுதியிட்டுக் கூறுவ தில்லை.

சட்டவிதி 74 :—

1. குடியரசுத் தலைவருக்கு, அவரதுபணிகளைச் செயல்படுத்துவதற்காக, ஆலோசனை மற்றும் உதவி புரிவதற்குத் தலைமையமைச்சரின் தலைமையில் ஓர் அமைச்சர் அவை இருத்தல் வேண்டும்.

2. குடியரசுத் தலைவருக்கு அமைச்சர்கள் எந்த ஆலோசனையை, எப்படி வழங்கினார்கள் என்பதை எந்த நீதி மன்றமும் விசாரிக்கலாகாது.

**Article 74:—**

1. There shall be a council of Ministers with the Prime Minister at the head to aid and advise in the exercise of his functions.

2. The question whether any and if so what, advice was tendered by the ministers to the President shall not be inquired into by any court.

மேற்சொன்ன 74-ஆம் சட்டவிதியை நுணுக்கமாகப் பரிசீலனை செய்தால் குடியரசுத் தலைவரே நாட்டின் எல்லா அதிகாரங்களையும் நேரடியாக நிர்வகிப்பவர் போலவும், அவருக்கு உறுதுணையாக ''ஆலோசனையையும்'' ''உதவியையும்'' மட்டும் வழங்குவதற்காக அமைச்சரவை இருப்பது போலவும் இச் சட்டவிதி பொருள் கொடுக்கிறது. நாடாளு மன்றச் சன நாயக முறையின் அடித்தளக் கொள்கையான ''மக்கள் பிரதி நிதிகளால் தேர்ந்தெடுக்கப்பட்ட அமைச்சரவையே - குடியரசுத் தலைவரின் பெயரால் - அவருக்குத் தரப்பட்ட ஆட்சி அதிகாரங்களைச் செயல்படுத்தி நாட்டினுடைய ஆட்சியை நடாத்தும் என்ற தெளிவான வாசகங்கள் இச் சட்டவிதியில் குறிப்பாக இடம் பெறவில்லை.

மேலும் மத்திய அமைச்சரவை வழங்கும்''ஆலோசனை''மற்றும் ''உதவியை'' குடியரசுத் தலைவர் ஏற்றுத்தான் தீர வேண்டும் என்றோ அல்லது ''அமைச்சரவை கூறுகிறபடி தான் குடியரசுத் தலைவர் தனக்களிக்கப்பட்ட அதிகாரங்களைச் செயல்படுத்தித் தீர வேண்டுமென்றோ'' குடியரசுத் தலைவருக்கு இச் சட்டவிதி ஆணை யிடுவதில்லை.

எனவே, எழுதப்பட்ட நீண்ட நெடிய இந்திய அரசியல் சட்டத்தில் குடியாட்சிக்கு அடிப்படையாக அமைந்த அமைச் சரவை நிர்வாகத்தைப் பொறுத்த சட்டவிதிகள் தெளிவாகக் கூறப்படாமல் அல்லது எழுதப்படாமல் விட்டு வைக்கப்பட் டுள்ளன.

ஆங்கிலேய அரசால் தரப்பட்ட ''1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தில்'' பயன் படுத்தப்பட்டுள்ள ''உதவி மற்றும் ஆலோசனை'' என்ற வாசகங்களே நமது அரசமைப் பிலும் (சட்டவிதி 74-இல்) அப்படியே இடம் பெற்றுள்ளன. இங்கிலாந்து நாட்டின் மன்னவனுக்கு எவ்வகை அதிகாரமும் உண்மையில் வழங்கப்பட வில்லை ; ஆனால், எல்லா ஆட்சியதி காரங்களும் அம் மன்னனிடமே இருப்பதாக ஒரு மாயத் தோற் றம் உள்ளது. ஆனல், உண்மையில் இங்கிலாந்தின் நாடாளு மன்றமும் அமைச்சரவையும் மன்னனுக்குப் பெயரளவிற்குத் தரப்பட்ட அத்துணை ஆட்சி அதிகாரங்களையும் பாரம்பரிய மரபாகவும் அரசியல் சம்பிரதாயமாகவும் செயல்படுத்தி வருகின்றது.

அதனைப் பின்பற்றிய நமது சுதந்திர நாட்டின் அரசமைப்பிலும் நாடாளுமன்ற ஜனநாயகத்திற் குரிய சட்ட விதிகள் தெளிவாகவும் அறுதியிட்டும் செய்யப்பட வில்லை. குடியரசுத் தலைவருக்கு அளிக்கப்பட்ட அதிகாரங்களை எல்லாம் மத்திய அமைச்சரவைக்கு அளிக்கப்பட்ட அதிகாரங்கள் எனக் கொண்டு இங்கிலாந்து நாட்டின் மரபுகளைப் ( Conventions ) பின்பற்றி நமது அரசமைப்பின் சட்ட விதிகளையும் நாம் வியாக்கியானம் செய்து கொள்ள வேண்டும் என நமது அரசமைப்பைப் படைத்தவர்கள் விளக்கம் கூறுகின்றனர்.

ஆனல், ஒரு பேருண்மையை நாம் மறந்து விடுவதற்கில்லை. இங்கிலாந்து நாட்டில் ''எழுதப்பட்ட அரசமைப்புச் சட்டம்'' கிடையாது. எனவே, அங்கு சட்டவிதிகளின் நுணுக்கத்தை ஆராய்வதற்குத் தேவையில்லை. மரபுகளைப் பார்த்தாலே போதுமானது. ஆனல், உலக நாடுகளின் அரசமைப்புக்களிலேயே இல்லாத அளவிற்கு இந்திய அரசமைப்பில் 395 சட்டவிதிகளும் 9 அட்டவணைகளும் (தற்போது 10 அட்டவணைகள்) உருவாக்கப்பட்டுள்ளன. அவை ஒவ்வொன்றின் நுணுக்கங்களையும் இந்திய நீதி மன்றங்கள் அவ்வப்போது பரிசீலனைக் கெடுத்து ஆய்வு செய்து தீர்ப்புக் கூறுகின்றது. எனவே எழுதப்பட்ட சட்டவிதிகளில் செய்யப்படும் வியாக்கியானங்களையும் நுணுக்கங்களையும் வைத்து — அதனின்றும் சிறிதும் பிறழாமல்—இந்தியக் குடியரசுக் கூட்டாட்சி நடைபெற வேண்டும்; பொதுவாக அரசியல் சம்பிரதாயங்களுக்கு இந்திய நாட்டில் சட்ட வலிவில்லை. சென்ற 24 ஆண்டுகளில் ஆரோக்கியமான அரசியல் மரபுகளும் இந்தியாவில் உருவாக வில்லை. ஆக, 74-ஆம் சட்டவிதியை ஆங்கில மரபுகளின் அடிப்படையை வைத்தே நாம் என்றென்றும் கருத்து விளக்கம் செய்து கொண்டிருக்க முடியாது.

இங்கு இன்னெரு கசப்பான உண்மையும் நினைவு கூறற்பாலது. குடியரசுத் தலைவர், தனக் களிக்கப்பட்ட ஆட்சி அதிகாரங்களைச் செயல் படுத்தும் பொழுது—இந்தியத் தலைமையமைச்சரும் அவரது அமைச்சரவையும் குடியரசுத் தலைவருக்கு என்ன ''ஆலோசனைகளை அல்லது உதவியை'' வழங்கினர்கள் என்பதை வெளியிட முடியாது; அது அரசாங்க இரகசியம். அந்த ஆலோசனைகள் அரசமைப்புச் சட்டத்திற்கு உட்பட்டதா? அல்லது குடியாட்சித் தத்துவத்திற்கு இயைபுடையவையா?

அல்லது முரணானவையா? என்பதை எந்த நீதிமன்றமும் பரிசீலிக்க முடியாத அளவிற்கு 74-ஆம் சட்டவிதியின் இரண்டாம் பகுதி தடைப்படுத்தி விடுகிறது.

குடியரசுத் தலைவர் மத்திய அரசின் நிர்வாகத் தலைவர் மட்டுமல்லர்; முதலாவது மற்றும் 5-ஆவது சட்டவிதிகளின்படி, குடியரசுத் தலைவரே ஒவ்வொரு மாநிலத்திற்கும் தனித் தனியாகவும் நிர்வாகத் தலைவராவார்.

''இந்தியாவிற்கு ஒரு குடியரசுத் தலைவர் இருத்தல் வேண்டும் (சட்டவிதி 52).

இந்தியா என்பது எது?

''இந்தியா, மாநிலங்களின் ஒன்றியமாகும்''(சட்டவிதி 1).

எனவே, இவ்விரு சட்டவிதிகளின் கூட்டுச் செயலால் (Interaction) இந்திய நாட்டின் குடியரசுத் தலைவர் இந்தியக் கூட்டாட்சியின் தலைவருமாகின்றார்.

ஆகவே, ஒற்றையாட்சி முறையைக் கொண்ட இங்கிலாந்து நாட்டின் மரபுகளை நம் அரசியலமைப்புச் சட்டத்தில் எழுதப்படாத பகுதிகளுக்கு முன் உதாரணமாகக் கொள்ள முடியாது.

எனவே, மத்திய அமைச்சரவையால் குடியரசுத் தலைவருக்கு வழங்கப்பட்ட ''ஆலோசனைகளை'' அரசியல் சட்டத்திற்கு முரணானது எனக் குடியரசுத் தலைவர் கருதினாலும், தனது ஆட்சியதிகாரங்களைச் செயல்படுத்த அமைச்சரவையின் ''உதவியும் ஆலோசனையும்'' தேவையற்றது என அவர் கருதினாலும், தலைமையமைச்சரின் ''ஆலோசனையை'' அவர் மறுத்தொதுக்கி விடலாம். அவருக்கு அரசமைப்புச் சட்டத்தால் வெளிப்படையாகக் கொடுக்கப்பட்ட ஆட்சி அதிகாரங்களை, யாருடைய ஆலோசனையும் இன்றித் தன்னிச்சைப்படி செயல் படுத்தலாம். இவ்வகையில் இந்திய நாட்டு நிர்வாகத்தைக் குடியரசுத் தலைவர் அரசமைப்பு விதிகளின் படியே—தானே நேரடியாக—ஏற்றுக் கொண்டு நடாத்துவதற்குப் பொன்னான வாய்ப்பேற் படுகிறதல்லவா?

## அரசமைப்புச் சபையின் அச்சம்

நாடாளு மன்றச் சனநாயக முறையை வலியுறுத்தும் சட்ட விதிகள் தெளிவாக எழுதப்படாமல் விடப்பட்ட காரணத்தால் குடியரசுத் தலைவர் எந்த நேரத்திலும் சர்வாதிகாரியாக மாறி விடக் கூடிய வாய்ப்புக்கள் உண்டு என்பதை நமது அரசமைப்புச் சபை கூட வெகு ஐயத்தோடும் அச்சத்தோடும் அன்றைய நாட்களிலேயே விவாதித்துள்ளது. அரசியலமைப்புச் சபைத் தலைவராக இருந்த, பாபு இராசேந்திர பிரசாத் அவர்களுக்கும் டாக்டர். அம்பேத்கார் அவர்களுக்கும் அரசமைப்பவையில் நடைபெற்ற விவாதத்தின் ஒரு பகுதியைக் கீழே தந்துள்ளோம். [2]

தலைவர் :

"அமைச்சரவையின் அறிவுரைப்படிக் குடியரசுத் தலைவர் செயலாற்ற வேண்டுமென வரைவு அரசமைப்பின் எந்தச் சட்டவிதி கூறுகிறது?"

அம்பேத்கார் :

"அப்படி யொரு விதியுள்ளதென நான் நிச்சயம் கூறுவேன். குடியரசுத் தலைவர், தமது பணிகளைச் செயற்படுத்துவதற்காக 'உதவியினையும் அறிவுரைகளையும்' வழங்குவதற்கு ஓர் அமைச்சரவை இருத்தல் வேண்டும் என்ற விதியே அவ்விதியாகும்."

தலைவர் :

"நாம் எழுதப்பட்ட அரசியலமைப்பை ஏற்றுக் கொண்டுள்ளதால் அதனை ஏதாவது ஓரிடத்தில் தெளிவாகக் கூற வேண்டாமா?"

அம்பேத்கார் :

"தற்போது என்னால் அந்த விதியைச் சுட்டிக்காட்ட முடியா விட்டாலும் அப்படி யொரு விதி உள்ளதென்பதை நான் உறுதியாகக் கூறுவேன். உண்மையில், அமைச்சரவையின் ஆலோசனை இன்றிக் குடியரசுத் தலைவர் செயல்பட முடி

---

2 Quoted From 1974. II. M. L. J. Pp 39-40. "Powers of The President", By. E. V. Kumar.

யாது. அமைச்சரவையின் ஆலோசனையைக் குடியரசுத் தலைவர் ஏற்றுத்தான் தீர வேண்டும் என்பதற்குரிய சட்ட விதியுள்ள தென்றே நான் கருதுகிறேன்.''

தலைவர் :

''அச் சட்டவிதி அமைச்சர்களுடைய கடமையைப் பற்றி மட்டும் கூறுகின்றது. ஆனால் அமைச்சர்களரல் தரப்படும் ஆலோசனைப்படி, குடியரசுத் தலைவர் செயற்பட வேண்டு மென்று குடியரசுத் தலைவரது கடமையைப் பற்றி அது கூறுவதில்லை. மேலும் அமைச்சரவையின் ஆலோசனையைக் குடியரசுத் தலைவர் ஏற்றுத்தான் தீர வேண்டு மென்றும் அந்த விதி வற்புறுத்திக் கூறுவதில்லை. அந்த விதி தவிர வேறு ஏதாவது ஒரு விதி நம் அரசியலமைப்பில் உள்ளதா? அப்படி வேறு ஏதாவது ஒரு தெளிவான சட்டவிதி நம் அரசமைப்பில் இல்லையெனில் குடியரசுத் தலைவரின் மேல் நாம் குற்றம் சாட்ட (Impeach) இயலாமல் போய்விடும். ஏனெனில் அரசமைப்பின் எந்த ஒரு விதியையும் அவர் மீறிச் செயல்படுவதில்லை.''

அம்பேத்கார் : .........

தலைவர் :

''குடியரசுத் தலைவரை அந்த விதி கட்டுப்படுத்துமா என்பதில் எனக்கு ஐயப்பாடு உள்ளது. குடியரசுத் தலைவருக்கு அவரது பணிகளைச் செயல்படுத்துவதற்காக ஆலோசனை மற்றும் உதவி புரிவதற்குத் தலைமை அமைச்சரவையைத் தலைவராகக் கொண்ட அமைச்சர் குழு ஒன்றிருக்கும் என்று மட்டுமே கூறுகின்றது. குடியரத் தலைவரை அந்த ஆலோசனை கட்டுப்படுத்து மென்று அதில் கூறப்படவில்லை.''

சட்டவிதி 74-இல்வரும் அமைச்சரவையின் ஆலோசனை மற்றும் உதவி என்ற சொற்றொடர்கள் நாடாளு மன்றச் சனநாயக முறையைக்குடியரசுத் தலைவர் ஏற்றுத்தான் தீரவேண்டுமென, தெளிவாக ஆணையிடுவதில்லை என்பதை மேற்காட்டிய அரசமைப்புச் சபை விவாதம் தெளிவாக்குகிற தல்லவா?

### குடியரசுத் தலைவரிடம் குவிந்துள்ள அதிகாரங்கள்

இந்திய நாட்டின் உயர்மட்டத்திலிருக்கும் வலிவற்ற ஓர் அலங்கார பொம்மைதான் ''இந்திய ஜனாதிபதி'' எனப் பொது வாக எல்லாராலும் கருதப்படுகிறது. அந்த அலங்கார

பொம்மை, திடீரென்று சர்வ வல்லமை கொண்ட சர்வாதிகாரியாக மாறிவிடும் அளவிற்கு அப்படி என்னென்ன அதிகாரங்கள்தான் அவருக்குக் கொடுக்கப்பட்டுள்ளன?

உலகம் இதுவரை கண்டெடுத்த சர்வாதிகாரிகளுக்கு இன்னின்ன ஆட்சி அதிகாரங்கள்தான் இருந்தன என்று எந்த நாட்டு அரசியல் சட்டமும் வரையறுத்துக் கூறுவதில்லை. ஆனால், ஒரு கொடிய சர்வாதிகாரிக்கு என்னென்ன அதிகாரங்களெல்லாம் இருக்கும் என்பதை நாம் ஆய்ந்து பார்த்து அவைகளையெல்லாம் தொகுத்துப் பட்டியலாக்கினால் அந்தப் பட்டியலில் இடம் பெறும் அவ்வளவு அதிகாரங்களும் நமது அரசமைப்பால் பொம்மை ஜனாதிபதிக்குத் தரப்பட்டுள்ளது.

பல மொழி, இனத் தேசிய மக்கள் இந்தியாவில் இருந்தாலும் அவர்கள் எல்லாரும் ஒரே நாட்டைச் சார்ந்தவர்கள் தான் என்பதை எப்படியாவது அரசமைப்பில் உருவாக்கிடல் வேண்டும்; இனி இந்தியத் துணைக் கண்டம் துண்டாடப்படல் கூடாது என்ற நோக்கத்தில் இந்திய அரசின் எல்லா முக்கிய அதிகாரங்களையும் மத்திய அரசிற்கே தந்து விட்டனர். ''சர்வமும் மத்திய அரசே''—அதாவது ''சர்வமும் பிரதம அமைச்சரே'' என்ற வகையில் எல்லா ஆட்சி அதிகாரங்களையும் பிரதம அமைச்சருக்குக் கட்டுப்பட்ட, பொம்மைத் தலைவரான ஜனாதிபதிக்கே வழங்கி விட்டனர்.

இந்தியத் தலைமையமைச்சரையும் அவரது ஆலோசனையின் பேரில் மற்ற மத்திய அமைச்சர்களையும் குடியரசுத் தலைவரே நியமிக்கிறார். கூட்டாட்சி அதிகாரிகளான இந்தியாவின் தலைமை வழக்கறிஞரையும் (Attorney General of India), தலைமைத் தணிக்கை அதிகாரியையும் (Controller and Auditor General), இந்தியத் தலைமை நீதிமன்ற நீதிபதிகளையும் மாநில ஆளுநர்களையும் குடியரசுத் தலைவரே நியமிக்கிறார்.

மாநிலங்களிடையிலான குழுவையும் (Inter-state council), மத்தியப் பொதுச் சேவைப் பணியாளர் பொறுக்கு ஆணைக் குழுவையும் (U.P.S.C.), குறிப்பிட்ட மாநிலத் தொகுதிகளுக்கான பொது ஆணைக் குழுவையும் (Joint-commission for group of states), நிதி ஆணைக் குழுவையும், தேர்தல் ஆணைக்குழுவையும், பிற்படுத்தப்பட்டவர்களின் நலன்களுக்கு உரிய ஆணைக்

குழுவையும், தாழ்த்தப்பட்டோர் மற்றும் மலைச்சாதியினர் பற்றிய தனி அதிகாரியையும், மொழி ஆணைக் குழுவையும் குடியரசுத் தலைவரே நியமனம் செய்கிறார்.

நிலப்படை, கடற்படை, ஆகாயப்படை மற்றும் இராணுவத்தின் பிற பிரிவுகளுக்கும் இந்தியக் குடியரசுத் தலைவரே தானைத் தலைவர். இந்திய நாட்டிற்கு அவர் ஜனாதிபதி மட்டுமல்ல; இந்திய இராணுவத்திற்கும் அவர் சேனாதிபதி.

மத்திய அரசின் நேரடி ஆட்சிக்குட் பட்ட நிலப் பகுதிகளைக் குடியரசுத் தலைவர் தனது நிர்வாகிகள் மூலம் தானே ஆட்சி செய்கிறார்.

வெளிநாட்டு உறவு மற்றும் வெளிநாட்டுக் கொள்கை ஆகியவற்றில் சகல நிர்வாகமும், அகில உலக ஒப்பந்தங்களும் உடன்படிக்கைகளும் குடியரசுத் தலைவர் பெயராலேயே நடைபெறுகின்றன.

குடியரசுத் தலைவர் மத்திய நாடாளுமன்றத்தின் ஓர் அங்கம். நாடாளுமன்றத்தைக் கூட்டவோ, கலைக்கவோ, இடையில் நிறுத்தி வைக்கவோ, அவருக்கு அதிகாரம் உண்டு.

மக்களவையையும் மாநிலங்களவையையும் ஒருங்கிருத்தி உரையாற்றும் உரிமையும் அவருக்குண்டு.

நாடாளுமன்றத்தில் விவாதிக்கப்படும் சட்ட மசோதாக்களில் தனது கருத்துக்களைத் தெரிவிப்பதற்கும் அவருக்கு உரிமையுண்டு. குடியரசுத் தலைவர் மாநில எல்லைப் பகுதிகளைச் சீரமைப்பு செய்யத் தேவையான சட்ட மசோதாக்களையும் பண மசோதாக்களையும்(நாடாளுமன்றத்தில்)முன்னிலைப்படுத்த அதிகாரம் பெற்றவர்.

நாடாளுமன்றத்தின் இரு அவைகளிலும் நிறைவேற்றப் பட்ட சட்ட மசோதாக்களுக்கு இசைவு வழங்கவும் இசைவு நிறுத்தி வைக்கவும், தேவை யேற்படின், சில திருத்தங்களுடன் அது புனராலோசனை செய்யப்பட வேண்டுமெனத் திருப்பி யனுப்பவும் குடியரசுத் தலைவருக்கு உரிமை யுண்டு.

மாநிலச் சட்ட மன்றங்களில் நிறைவேற்றப்படும் சட்ட மசோதாக்களை அந்த மாநில ஆளுநர் குடியரசுத் தலைவரின் பரிசீலனைக்காக ஒதுக்கி வைத்தால் குடியரசுத் தலைவர் அம்

மாநிலச் சட்ட மசோதாக்களுக்குரிய இசைவினை வழங்கலாம்; அல்லது மறுக்கலாம்; அவைகளை இரண்டும் கெட்டான் நிலைமையிலும் வைத்து விடலாம்.

நாடாளுமன்றம் நடைபெறாத போது குடியரசுத் தலைவர் பல அவசரச் சட்டங்களைப் (Ordinances) பிறப்பிக்கலாம். ஆனால் நாடாளுமன்றம் மீண்டும் கூடும்போது அந்த அவசரச் சட்டங்களை ஏற்கலாம் அல்லது ஏற்காமலும் விடலாம். அவ்வகை அவசரச் சட்டங்கள் நாடாளுமன்றம் கூடிய பிறகு 6 வாரங்களுக்கு அமுலில் இருக்கும். ஒரு நாடாளுமன்றக் கூட்டத் தொடருக்கும் இன்னொரு நாடாளுமன்றக் கூட்டத் தொடருக்கும் இடையில் அதிக பட்சம் 6 மாத கால இடைவெளியும் கூட இருக்கும்.

எனவே, குடியரசுத் தலைவரால் பிறப்பிக்கப்பட்ட அவசரச் சட்டங்கள் முதல் கூட்டத் தொடருக்குப் பின்னால் பிறப்பிக்கப்பட்டால், அடுத்த கூட்டத் தொடருக்கு இடைவெளியில் இருக்கும் 6 மாத காலம் கூட அந்த அவசரச் சட்டங்கள் அமுலில் இருக்கும். இந்த முறை எந்தச் சனநாயக நாட்டிலும் இல்லாத முறையாகும். அவசரச் சட்டங்களைப் பிறப்பிப்பதற்குரிய காரணங்களைப் பற்றியோ, தேவை பற்றியோ எந்த நீதிமன்றமும் குடியரசுத் தலைவரைக் கேட்க முடியாது.

வெளிநாட்டு ஆக்கிரமிப்போ அல்லது உள்நாட்டுக் குழப்பமோ ஏற்படத்தக்க அபாயநிலை இருக்கிறது என்று குடியரசுத் தலைவருக்குத் தோன்றினால் நெருக்கடிநிலைப் பிரகடனத்தின் மூலமாக மாநில அமைச்சரவையைக் கலைக்கலாம்; சட்டமன்றத்தையும் கலைக்கலாம். அப்போது இந்திய மக்களின் ஜீவாதார உரிமைகளையும் அவர் தற்காலிகமாக நிறுத்தி வைக்கலாம். நாடாளுமன்றம் குடியரசுத் தலைவரின் அவசரப் பிரகடனத்தை ஏற்றுக் கொண்டால் அது 6 மாத காலத்திற்கு நீடிக்கும்.

ஒருக்கால் அதனை நாடாளுமன்றம் ஏற்காவிட்டாலும் கூட அந்த நெருக்கடிநிலைப் பிரகடனம் நாடாளுமன்றம் கூடிய தேதியிலிருந்து ஒரு மாத காலத்திற்கு அமுலில் இருக்கும்.

மத்திய அரசு இட்ட கட்டளைகளை மாநிலங்கள் ஏற்காவிடில் குடியரசுத் தலைவர் அந்த மாநிலத்தின் அரசாங்க இயந்திரம் பழுதுபட்டு விட்டதெனக் கருதி மாநில அரசையே மேற்கொள்ளலாம்.

பொருளாதார நெருக்கடி நிலைப் பிரகடனத்தையும் குடியரசுத் தலைவர் வெளியிடலாம். மாநிலப் பண மசோதாக்களை வேறு அமைப்பிற்கு அவர் மாற்றிக் கொடுத்து விடலாம்.

இன்னோரன்ன மிக வன்மை பொருந்திய பேரதிகாரங்களைக் குடியரசுத் தலைவருக்கு நமது அரசமைப்பு வழங்கி யுள்ளது.

**குடியரசுத் தலைவர் — சர்வாதிகாரி ஆகிறார்**

நாடாளு மன்றச் சனநாயக முறைப்படி, மேற்சொன்ன அதிகாரங்கள் முழுவதையும் தலைமை யமைச்சரின் பேரிலேயே குடியரசுத் தலைவர் செயல் படுத்த வேண்டும். அவைகளைத் தனது இச்சைப்படி அவரால் செயல்படுத்த முடியாது என்பது மரபு.

ஆனால், சர்வாதிகார எண்ணம் படைத்த ஒருவர் தப்பித் தவறி, குடியரசுத் தலைவர் பதவியில் அமர்த்தப்பட்டு விட்டால், இந்தியாவை அவர் ஒரு சர்வாதிகார நாடாக மாற்றி யமைத்துவிட வேண்டும் எனக் கருதிச் செயல் படுவாரே யானால், இந்திய அரசமைப்புச் சட்ட விதிகளைப் பயன் படுத்தியே அவர் தனது எண்ணத்தை (சர்வாதிகாரி ஆவதை), சட்டப்படி நிறைவேற்றிக் கொள்ள முடியும்.

அப்படி ஒருநிலை ஏற்பட்டால் நாடாளுமன்றம் அவர்மேல் குற்றம்சாட்டி, பதவி நீக்கம் செய்யும் தண்டனையை அவருக்குத் தரலாமே தவிர வேறொன்றும் செய்துவிட முடியாது. ஆனால், குடியரசுத் தலைவரின் மேல் ''குற்றம் சாட்டக் கூடிய முறை'' (Impeachment of the President) மிகச் சிக்கலானதாகவும் காலதாமதம் ஆகக் கூடியதாகவும் உள்ளது. குடியரசுத் தலைவர் மேல் குற்றம் சாட்டக் கூடிய தீர்மானத்தை நாடாளு மன்றத்தின் ஏதோ ஓர் அவையில் மொத்த உறுப்பினர்களில் ¼ பங்கு உறுப்பினர்கள் கையெழுத்திட்டு, 14 நாட்கள் கெடு வைத்து முதலில் கொடுக்க வேண்டும். 14 நாட்களுக்குப் பின்னர் அந்தக் குற்றச்சாட்டுத் தீர்மானம் நாடாளு மன்றத்தின் ஒரு சபையில் எடுக்கப்பட்டு விவாதிக்கப்படும்; அச்சபையின் மொத்த உறுப்பினர்களின் ⅔ பங்குப் பேர் வாக்களித்தால் மட்டுமே அத்தீர்மானம் நிறைவேறும். அத்தோடு முடிவ தில்லை.

முதற் சபையில் நிறைவேற்றப்பட்ட அத்தீர்மானம் நாடாளு மன்றத்தின் இன்னோர் அவைக்குப் பரிசீலனைக்காக அனுப்பப் படும். அந்த இன்னோர் அவையிலும் மொத்த உறுப்பினர்கள் ⅔ பங்குப் பேர் வாக்களித்து அந்தத் தீர்மானத்தை உறுதி செய்தால் மட்டுமே குடியரசுத் தலைவரைப் பதவி நீக்கம் செய்ய முடியும் (சட்டவிதி 61).

ஆனால், அந்த இடைக் காலத்தில் குடியரசுத் தலைவர் நாடாளு மன்றத்தையே கலைத்து விடலாம். அமைச்சரவையை யும் அகற்றி விடலாம்.

தலைமை அமைச்சராலும் அமைச்சரவையாலும் வழங்கப் பட்ட ''ஆலோசனை மற்றும் உதவியை'' குடியரசுத் தலைவர் ஏற்காமல் விடுத்து அரசமைப்புச் சட்டப்படி அவருக்களிக்கப் பட்ட நிர்வாக அதிகாரங்களை அவரே நேரடியாக ஏற்றுக் கொள்வார். அமைச்சரவை, குடியரசுத் தலைவரைப் பதவி நீக்கம் செய்வதற்காக மேற்சொன்ன 61-ஆவது சட்டவிதிப் படி, ''குற்றச்சாட்டுத் தீர்மானத்தை''க் கொண்டு வரும். அது நிறைவேறுவதற்குக் குறைந்த பட்சம் 15 நாட்கள் தேவை யேற்படும். அந்தக் குற்றச்சாட்டுத் தீர்மானம் கொடுத்து 14 நாட்களுக்குப் பின்னுல் குடியரசுத் தலைவர் நாடாளு மன்றத்தைக் கலைத்து விடுவார்; அமைச்சரவையையும் கலைத்து விடுவார்.

இதற்கிடையில் தனக்குத் தேவையான—தன் சொற்படி நடக் கும்—ஒரு தலைமை அமைச்சரை நியமித்து அவரது 'ஆலோ சனையின்' பேரில் வேறு மத்திய அமைச்சர்களையும் குடியரசுத் தலைவர் நியமித்து விடுவார். அப்படி நியமிக்கப்படும் புதிய அமைச்சர்கள் 6 மாத காலத்திற்கு நாடாளுமன்ற உறுப்பினர் களாகக் கூட இருக்க வேண்டிய அவசியமில்லை.

உடனே அரசமைப்புச் சட்டத்தில் கண்டுள்ள பல வகையான அவசரச் சட்டங்களைக் குடியரசுத் தலைவர் பிறப்பிப்பார். அந்த அவசரச் சட்டங்களும் 6 மாத காலத்திற்கு அமுலில் இருக்கும். நமது அரசியல் சட்டவிதிகளின்படி இந்திய இராணுவத்திற்கு, குடியரசுத் தலைவரே தலைமைச் சேனுதிபதியாக இருப்பதால் இராணுவத்திற்குரிய சகல கட்டளைகளையும் பிறப்பித்து இந்திய நாட்டையே தன் கைப்பிடிக்குள் கொண்டு வந்து விடுவார்.

பலவகையான நெருக்கடி நிலைப் பிரகடனங்களைப் பிறப்பித்து, எல்லா மாநில அமைச்சரவைகளையும் சட்ட மன்றங்களையும் ஒரே நாளில் கலைத்து விட்டுத் தனக்கு வேண்டிய ஆளுநர்களை ஒவ்வொரு மாநிலத்திலும் அமர்த்தி எல்லா மாநில நிர்வாகத்தையும் தன் காலடியில் கொண்டு வந்து விடுவார்.

மாநிலங்களுடைய நிதி, நிர்வாகம் போன்ற துறைகளில் அரசியல் சட்டப்படி, கட்டளைகளைப் பிறப்பித்து மாநிலங்களில் உள்ள அதிகார வர்க்கத்தைத் தனது புதுக்கொள்கைகளை நிறைவேற்றும் பணியாட்களாக மாற்றிக் கொள்வார்.

இந்திய மக்களுக்களிக்கப்பட்ட சகல ஜீவாதார உரிமைகளையும் அவர் நிறுத்தி விடுவார்.

தற்போது செயல்படும் அரைகுறையான கூட்டாட்சி இந்தியாவைச் சில மணித் துளிகளில் மாநில நிர்வாகங்களே இல்லாத ஒற்றையாட்சி நாடாக மாற்றிக் கொண்டும், நாடாளு மன்றத்தைக் கலைத்து விட்டுத் தனது காலடியில் வீழும் தலைமை யமைச்சரை நியமித்துக் கொண்டும், இராணுவத்தின் துணையோடும், அவசரநிலைப் பிரகடனங்களுடனும் எதேச்சாதிகாரத்தை மேற்கொண்டும், புனிதமான நமது அரசமைப்புச் சட்டத்தில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட்ட சட்டவிதிகளின் துணைகொண்டே இந்திய நாட்டை ஒரு சர்வாதிகார நாடாக நமது குடியரசுத் தலைவர் மாற்றி யமைத்துக் கொள்வதற்குத் தேவையான சாத்தியக் கூறுகள் நமது இன்றைய அரசமைப்பில் உள்ளன.

### கனவா? நனவா?

இது ஏதோ பயங்கரக் கனவைப் போலத் தோற்றமளிக்கலாம்; இது நடைபெறுமா? என்ற அச்சம் கலந்த வியப்பும் நமக்குத் தோன்றலாம். ஆனால் இந்தியக் குடியரசுத் தலைவர் இன்றுள்ள அரசியல் சட்டவிதிகளின் மூலமாகப் பயங்கரமான ஒரு சர்வாதிகாரி ஆவதைக் காலமும் சூழ்நிலையும் வேண்டுமெனில் தடுத்து நிறுத்தலாம். ஆனால், உற்ற தருணம் வரும் போது அப்படி ஒரு சர்வாதிகாரி தோன்ற மாட்டார் என நினைப்பது பேதமை. சிறந்த அரசியல் சட்ட ஆய்வாளரான, திரு. கிளெட்ஹில் (GLEDHILL) முதல் பற்பல அரசமைப்பு வல்லுநர்கள் வரை இந்தப் பயங்கரக் கனவு நனவாகும் வழி வகைகள் உள்ளன என எச்சரிக்கை விடுகின்றனர்.

இதற்கு மூல காரணம் என்ன?

மத்திய அரசின் வலிமை என்ற பெயரால், மத்தியத்தில் குவித்து வைக்கப்பட்டிருக்கும் அதிகார ஈட்டமே அடிப்படைக் காரணம் என்பதை யாரும் மறுக்க முடியாது.

நாடாளு மன்றச் சனநாயக முறையை அமுல் படுத்தும் சட்டவிதி ஒன்றைச் சேர்த்துவிட்டால் குடியரசுத் தலைவரை சர்வாதிகாரியாக ஆக்கும் சூழ்நிலையிலிருந்து இந்தியாவைக் காத்துவிடலாமல்லவா ? என்றுகூட நமக்கு எண்ணத் தோன்றும். ஆனால் அதுவும் சரியான வாதமல்ல. அப்போது அடிப்படை நெறிமுறைகளிலிருந்து, அதன் தொடர்புடைய எல்லாவற்றையுமே நமது அரசமைப்பில் மாற்றி யமைக்க வேண்டும். மேலும் அப்படி ஓர் மாறுதலைச் செய்யும்போது, குடியரசுத் தலைவரிடமிருக்கும் அத்துணை அதிகாரங்களும் அமைச்சரவைக்குச் சென்று விடும். அப்போது அதே முறைகளில் 'அமைச்சரவைக்குச் சர்வாதிகாரம்' ஏற்படும். ''கொதிகலனிலிருந்து அடுப்பினுள் இருக்கும் நெருப்புக்கே சென்று விடும்'' என்பதைப்போல், குடியரசுத் தலைவர் சர்வாதிகாரி ஆவது மாறி, தலைமை அமைச்சரே சர்வாதிகாரியாக ஆகி விடுவார்.

எனவே, சர்வாதிகாரத்திற்கு அடிகோலும் மத்திய அரசின் அதிகாரக் குவியலை மாற்றியமைப்பதுதான் சர்வாதிகாரத்தைத் தடுக்கும் சீரிய ஒரே வழியாகும்.

அஃதாவது இன்றையக் குடியரசுத் தலைவர் ஒரு சர்வாதிகாரியாக ஆகாமல் தடுத்து நிறுத்த வேண்டுமெனில், மாநில சுயாட்சி வேண்டும்.

எனவே, மலர்க மாநில சுயாட்சி.



## 5. தலைமை அமைச்சர் சர்வாதிகாரி ஆவதைத் தடுக்க.....

— மலர்க மாநில சுயாட்சி —

"ஒவ்வொரு பிரச்சினையிலும், தனது ஆலோசனையைக் குடியரசுத் தலைவர் ஏற்றுத்தான் தீர வேண்டுமென்று (குடியரசுத் தலைவரின்) கருத்துக்கு மாருக-மத்திய அமைச்சரவை அவரை வற்புறுத்தினுல் இந்திய ஒன்றியத்தின் அரைகுறைக் கூட்டாட்சி அமைப்பு முறையும், அரசமைப்பால் உறுதியளிக்கப் பட்ட சனநாயக உரிமைகளும், ஜனநாயக வழிகளும் ஆபத்திற்கு ஆட்பட்டு விடக் கூடிய, "அமைச் சரவைச் சர்வாதிகாரம்" தோன்றும். தனது அதிகாரத்தை எவ்வகையிலேனும் இருத்தி வைத்துக் கொள்ளவும், வாய்ப்பேற் பட்டால் இன்னும் அதிக மான அதிகாரங்களைப் பெருக்கிக் கொள்ளவும் விழைகின்ற நாடாளு மன்றத்தில் - கட்சிக் கட்டுப்பாட்டிற் குட்பட்டு - அமர்ந்திருக்கும் உறுப்பினர்களின் பேரா தரவைப் பெற்றுள்ள "அமைச்சரவைச் சர்வாதி காரம்" எல்லா வகையிலும் மிகப் பேரபாயகரமான சர்வாதிகாரமாகும்." 1

— டாக்டர் கே. எம். முன்சி.

நமது அரசமைப்புச் சட்டத்தில் மத்திய அமைப்பிற்கு வழங் கப்பட்டுள்ள பேரதிகாரங்களும் எழுதப்படாத் சில சட்டவிதி களும் குடியரசுத் தலைவரென்ற ஒரு தனி மனிதரைச் சர்வாதிகாரி யாக ஆக்கத் தக்க வாய்ப்பினைத் தருகிற தென்ருல்—குவித்து வைக்கப்பட்ட அதே மத்திய அதிகாரங்கள் நமது மத்திய அரசின் இன்னேர் அங்கமான தலைமை யமைச்சரையும், அவர் சார்ந்திருக்கக் கூடிய அரசியல் கட்சியையும் (அரசியலமைப்பில்

---

1 "The President under Indian Constitution" (1967) by Dr. K. M. Munsni, Page. 52.

எழுதப்பட்ட சட்டவிதிகளின் துணைகொண்டு) ஒரு சர்வாதி காரியாக ஆக்கி விடுவதற்குரிய வழிவகைகளைத் தேடித் தருகின்றன.

## தலைமை அமைச்சரின் "ஆமாம் சாமிகள்"

—நாடாளுமன்றச் சனநாயக முறைப்படி, இன்றைய இந்தியக் குடியரசுத் தலைவர் ஒரு பொம்மைத் தலைவர். அவருக்களிக்கப் பட்ட பேரதிகாரங்களும் பெயரளவானவையே. தலைமை யமைச்சரால் தரப்படும் 'ஆலோசனை மற்றும் உதவியைக்' கொண்டே, குடியரசுத் தலைவர் தமது பணிகளை ஆற்ற வேண்டி யுள்ளதால், அவர் தலைமையமைச்சரின் "எண்ணத்திற்கு" முழுக்க முழுக்கக் கட்டுப்பட்டவராகிறார். அஃதாவது, குடி யரசுத் தலைவர் தலைமையமைச்சரின் ஒரு கைப்பாவை ஆகி விடுகிறார்.

மேலும் குடியரசுத் தலைவர் பதவியை ஏற்க அவர் மக்களால் தேர்ந்தெடுக்கப் படவேண்டுவதில்லை. மாறாக, மாநிலச் சட்ட மன்ற உறுப்பினர்களாலும், நாடாளு மன்ற உறுப்பினர்களா லுமே அவர் மறைமுகமாகத் தேர்ந்தெடுக்கப்படுகிறார். எனவே ஒருவர் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமெனில், மத்திய – மாநிலச் சட்ட மன்றங்களில் பெரும்பான்மையினராக இருக்கும் " ஆளும் கட்சியின் " முழு ஆதரவும் அவருக்குத் தேவைப்படுகிறது.

மத்திய அரசின் ஆளும் கட்சியும் தம் கட்சி சார்ந்த தலைமை யமைச்சருக் கேதுவாக, தன் கட்சி சார்ந்த ஒருவரையோ அல்லது ஆதரவாளர் ஒருவரையோ இந்திய நாட்டின் குடியரசுத் தலைவ ராகத் தேர்ந்தெடுத்துக் கொள்கிறது. அரசமைப்புச் சட்டப்படி, குடியரசுத் தலைவர் "கட்சி சார்பற்றவர்" என்று கருதப்படு கிறார். எனினும் அவர் மத்திய அரசின் ஆளுங்கட்சியின் தீவிரத் தலைவர்களில் ஒருவராக இருப்பதைத் தவிர்க்க முடியாது.

ஆனால் கட்சியினுடைய சக்தி வாய்ந்த "மேல் மட்டம்" பொதுவாக, தலைமையமைச்சரின் அரசுக்குள் அடங்கி விடு கிறது. குறிப்பாகக் காங்கிரசுக் கட்சியைப் பொறுத்த மட்டிலும் இதுவரை தலைமையமைச்சருக்குக் கட்டுப்பட்ட வகையிலேயே 'கட்சி முனை' அடங்கிச் செயல்பட்டு வந்துள்ளது. தலைமை யமைச்சருக்கு ஆட்படும் ஒருவரே காங்கிரசின் மேலிடத்தால் அதன் தலைவராக நியமித்துக் கொள்ளப்படுவார்.

காங்கிரஸ் தலைமை அமைச்சர் தன் செல்வாக்கினையும் சக்தியையும் உத்திகளையும் கையாண்டு ஆளும் கட்சியின் மையப்புள்ளியாகத் ( Centre of The Party ) தம்மை மாற்றிக் கொண்டதுதான் இந்திய அரசியலில் இதுகாறும் நடந்து வந்த அரசியல் முறைமை.

பின்னர் 'கட்சி முனையின்' துணை கொண்டு, தன் இச்சைப் படி இயங்கும் நாடாளு மன்ற உறுப்பினர்கள் பலரை, தலைமை யமைச்சர் என்ற தகுதியினைப் பயன்படுத்தித் தேர்தல்களில் வெற்றியடைய வைக்கிறார் தலைமை யமைச்சர். இவ்வகையில் நாடாளு மன்றத்தின் பெரும்பான்மையையும் அவர் தனக்குச் சாதகமாகத் தக்க வைத்துக் கொள்கிறார்.

மத்திய அரசின் முப்பெரும் அங்கங்களான "குடியரசுத் தலைவரையும்", "அமைச்சரவையையும்", "நாடாளு மன்றத் தையும்" தலைமை அமைச்சர் "ஆளுங் கட்சியின் மையப் புள்ளி" ( Centre of Party in Power ) என்ற அடிப்படையிலும் "மத்திய அரசின் நடுநாயகம்" ( Centre of the Centre ) என்ற தகைமை யிலும் தம் கட்டுக்குள் கொண்டு வந்து விடுகிறார்.

பின்னர், தனது சர்வாதிகார நடவடிக்கைகளை அவர் அரசியல் ரீதியில் செயல்படுத்தத் தொடங்குகிறார். தலைமை யமைச்சரின் பொறுப்பை ஏற்றதும் நமது அரசமைப்புச் சட்ட விதிகளால் மத்திய அரசில் குவித்து வைக்கப்பட்ட அதிகாரங் களைப் பெயரளவில் கொண்டியங்குகின்ற 'பொம்மைக் குடியரசுத் தலைவரை' ஓர் இரப்பர் முத்திரையாகப் பயன் படுத்தி, மத்திய அரசின் பல கேந்திர ஸ்தானங்களிலும் மாநிலங்களிலும், தனக்கடிமைப்பட்டு நடக்கும் "ஆமாம் சாமி களை" ( Yes - men ) கட்சி மட்டத்திலிருந்து தேர்ந்தெடுத்து நியமித்துக் கொள்கிறார்.

பின்னர் மத்திய - மாநில அரசுகளுக்குப் பொதுவாகச் செயல்படும் மிகப் பெரிய கூட்டாட்சி அதிகாரிகளான "தேர்தல் ஆணையரையும்", "தணிக்கைத் துறைத் தலைவரையும்", "இந்தியத் தலைமை நீதி மன்ற நீதிபதிகளையும், மாநில உயர்நீதி மன்ற நீதிபதிகளையும், மாநில ஆளுநர்களையும் தனக்கடங்கிய குடியரசுத் தலைவரின் ஆணையின் மூலமாக நியமித்துக் கொள் கிறார். தலைமை யமைச்சரின் தன்னிச்சைப்படி நடக்கும் மாநில ஆளுநர்களைப் பயன் படுத்தி - மாநில அரசுகளையும், கட்சி

முனையைப் பயன் படுத்தி - மாநில அமைச்சரவைகளையும், அரசமைப்புச் சட்டவிதிகளைப் பயன் படுத்தி-மாநில நிதி, நிர்வாக, சட்டமியற்றுத் துறைகளையும், தனது கைப்பிடிக்குள் கொண்டு வந்து விடுகிறார். இறுதியில் நிலைமை என்ன?

இந்தியத் தலைமை அமைச்சருக்கு,

குடியரசுத் தலைவரும் — ஆமாம் சாமி;
மத்திய நாடாளு மன்றத்திலும் — ஆமாம் சாமிகள்;
மத்திய அமைச்சரவையிலும் — ஆமாம் சாமிகள்;
மாநிலச் சட்ட மன்றங்களிலும் — ஆமாம் சாமிகள்;
மாநில ஆளுநர்களும் — ஆமாம் சாமிகள்;
அகில இந்தியக் காங்கிரசுக் கமிட்டித் தலைவரும் — ஆமாம் சாமி;
காரியக் கமிட்டியிலும் — ஆமாம் சாமிகள்;
மத்திய - மாநிலக் கட்சி மட்டத்திலும் — ஆமாம் சாமிகள்;
நிர்வாக இயந்திரத்தின் கீழுள்ள உயர்மட்ட அதிகாரிகளும் (மறைமுகமாக) — ஆமாம் சாமிகள்;

இத்துணை ''செயல் திறத்தையும்'', ''ஆமாம் சாமிகளையும்'' தம்மகத்தே கொண்டவர் தான் இந்தியத் தலைமையமைச்சர். மத்திய அரசிற்கு வழங்கப்பட்ட எண்ணிறந்த அதிகாரங்களை அவர் இயக்கி வைத்து, அச்சட்டவிதிகளின் துணை கொண்டே இந்தியாவை ஒரு கூட்டாட்சி நாட்டிலிருந்து - ஓர் ஒற்றையாட்சி நாடாகவும், குடியாட்சி நாட்டிலிருந்து - ஒரு சர்வாதிகார நாடாகவும், மாற்றியமைக்கத் தேவையான பல சாத்தியக் கூறுகள் நமது அரசமைப்பில் உள்ளன.

## "அமைச்சரவைச் சர்வாதிகாரம்"

இந்திய அரசியல் வானில் சென்ற 24 ஆண்டுகளாகத் தொடர்ந்து மத்திய-மாநிலங்களில் அரசோச்சி வரும் இந்தியத் தேசியக் காங்கிரஸ் கட்சி ஒரு சர்வாதிகாரத் தன்மை படைத்த கட்சியாகச் செயல்பட்டு வருகின்றது. பண்டித சவகர்லால் நேரு அவர்களால் மேற்சொன்ன ''ஜனநாயக சர்வாதிகார

முறை'' தொடங்கி வைக்கப்பட்டது. மாண்புமிகு தலைமை யமைச்சர் இந்திரா காந்தி அம்மையாரால் அந்த ''ஜனநாயக சர்வாதிகார முறை'' பேணி வளர்க்கப்பட்டது; ரஷ்யா, சீனு போன்ற பொதுவுடைமை நாடுகளில் இயங்கிவரும் ''தனிச் சர்வாதிகார முறை'' இந்திய நாட்டிலும் இயங்கி வருகிறது என்ருல் அது மிகையாகாது.

மாநிலங்களைப் பொறுத்தவரை இந்திரா காந்தியவர்களின் ஒற்றையாட்சி நடவடிக்கைகள் எத்துணை அளவிற்கு மாநில சுயாட்சியைச் சிதைத்து விட்டன என்பது பற்றி நான்காம் பகுதியின் இறுதி அத்தியாயத்தில் தெளிவாக்கப்பட்டுள்ளது. அதனையும் இதன் தொடர்பாகக் காண்க.

இந்தியத் (காங்கிரஸ்) தலைமை யமைச்சரை ஒரு சர்வாதி காரியாக மாற்றக் கூடிய பல நடவடிக்கைகளை, 1966-ஆம் ஆண்டு தொடங்கிச் சென்ற எட்டு ஆண்டு காலமாக,மாண்புமிகு இந்திரா காந்தியவர்கள் பல கால கட்டங்களிலும் தீவிரமாகச் செயல்படுத்தி வந்துள்ளார் என்பதைப் பல அரசியல் வல்லுநர் கள் படம் பிடித்துக் காட்டுகின்றனர். அவர் தலைமை அமைச் சர் பொறுப்புக்கு வந்ததும், பழம்பெரும் காங்கிரஸ் தலைவர் களை—தனக்கு மீறியவர்கள்—என்ற காரணத்தால் கட்சி அர சியலிலிருந்து வெற்றிகரமாக நீக்கி விட்டு; குடியரசுத் தலைவர் தேர்தலில் பல நாடாளுமன்ற உறுப்பினர்களைத் தனது செல் வாக்கைப் பயன்படுத்தி ''மனசாட்சிப்படி'' வாக்களிக்க வைத்து அதன் வழி அரசமைப்புச் சட்டவிதிகளை வளைத்துக் கொள்ளும் வகையில் அடக்க ஒடுக்கமான ஒரு குடியரசுத் தலைவரைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு;தனது அமைச்சரவை யில் தன்னிகரற்று விளங்கிய தேசியத் தலைவர்களை யெல்லாம் அரசியல் அனுமதேயங்களாக ஆக்கிவிட்டுக் கட்சிப் பிளவைத் தனக்கு அனுகூலமாக்கிக் கொண்டு ''இந்திரா காங்கிரஸ்'' என்ற 'ஆமாம் சாமிகளை'க்கொண்டியங்கும் தனக்கடங்கிய ஒரு ஸ்தாபனத்தை உருவாக்கிக் கொண்டு; தனக்கேலா மாநில முதல்வர்களைப் பல வகைகளிலும் பதவி துறக்க வைத்து, மத்தி யத்திலிருந்த சில ''ஆமாம் சாமிகளை'' மாநிலங்களுக்கு இறக்கு மதி செய்து, தன் இச்சைப்படி மாநில அரசுகளை ஆட்டிப் படைத்துக் கொண்டு; ஆண்டிற்கொரு முறை மத்திய அமைச் சரவையை மனம் போனபடி மாற்றி யமைத்துக் கொண்டு;

இந்தியப் பொருளாதாரத்தை முடக்கடிக்கும் தொழில் அதிபர்களின் பணமூட்டைகளின் உதவியால் பெரும்பான்மைக் காங்கிரஸ் உறுப்பினர்களை நாடாளுமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்க வைத்து; பாக்கிஸ்தான் போருக்காக 1971-ஆம் ஆண்டு டிசம்பரில் பிரகடனப்படுத்தப்பட்ட ''தேசிய நெருக்கடி நிலையை''க் காரணமின்றி நான்காண்டுகளாக நீட்டடிப்புச் செய்து கொண்டு; குறுகிய மூன்று ஆண்டு காலத்தில் 9 அரசமைப்புச் சட்டத் திருத்தங்களையும் கொண்டு வந்து நிறைவேற்றி; மாநில நெருக்கடிநிலைகளை 20 முறைக்குமேல் பிரகடனப்படுத்தி மாற்றுக்கட்சி அமைச்சரவைகளை மாற்றியமைத்து; பத்திரிக்கைகளின் சுதந்திரத்தைப் பறித்துக் கொண்டு மக்கள் தொடர்பு சாதனங்களான 'தொலைக் காட்சி' 'வானொலி' போன்றவைகளைத் தனது துதிபாடச் செய்து; தனக்கடங்கிய வகையில் 'நீதித் துறை' செயல்படத் தக்க அராசக நடவடிக்கைகளை மேற்கொண்டு; மத்திய மயமாக்கப்பட்ட காங்கிரஸ் கட்சியின் மத்திய பீடத்தில் அமர்ந்து கொண்டு—பேரதிகாரங்களைப் பெற்ற மத்திய அரசின் மையப் புள்ளியாகவும் தன்னை ஆக்கிக் கொண்டு இந்திரா காந்தி அவர்கள் இந்தியத் துணைக் கண்டத்தைச் சர்வாதிகாரப் பாணியில் இயக்கி வருகிறார்—என இந்திய நாட்டின் மூத்தத் தலைவர்களும் அரசியல் விற்பன்னர்களும் அரசமைப்பு வல்லுநர்களும் ஒருமுகமான கருத்தைத் தெரிவிக்கின்றனர்.

அரசமைப்புச் சட்டத்தைப் படைத்த காலத்தில் நாடாளுமன்ற ஜனநாயக முறையே இந்திய நாட்டிற்கு உகந்தது என்று வலியுறுத்திய நமது அரசமைப்பைப் படைத்த பெருந் தலைவர்களில் ஒருவரான, அமரர். டாக்டர் கே. எம். முன்சி அவர்கள், மத்திய மயமாக்கப் பட்ட காங்கிரஸ் கட்சியாலும், அதன் மையப் புள்ளியான தலைமை யமைச்சராலும் இந்தியத் துணைக் கண்டத்தில் 'சர்வாதிகார முறை' எவ்வகையில் மெல்ல மெல்ல வளர்ந்து வந்துள்ள தென்பதைச் சுட்டிக் காட்டும் போது,

> ''தலைமை யமைச்சர் பண்டித நேரு அவர்கள், அரசமைப்புச் சட்டத்தால் தரப்பட்ட வழி வகைகளைப் பயன் படுத்திச் செயல் படாமல் பொதுவுடைமை சார்ந்த தனது (ஒரு கட்சிச் சர்வாதிகாரக்) கொள்கைகளை நிறைவேற்றிக் கொள்வதற்காக அரசமைப்புச் சட்டத்திற்கும் மீறிய அதிகாரக் குழுக்களை உருவாக்கத் தலைப்பட்டார். பொருளாதாரத் துறையில்

அரசமைப்பிற்கும் அப்பாற்பட்ட ஓர் உயர்மட்ட அமைச்சரவை போன்ற திட்டக் குழுவை அவரே நியமித்தார்; அதிகார மையத்தை மத்திய அமைச்சரவை யிலிருந்து, காங்கிரஸ் காரியக் கமிட்டிக்கு மாற்றி விட்டார். நாடாளு மன்றக் காங் கிரஸ் கட்சியை,தனக்கு ஆமாம்போடும் அமைப்பாக ஆக்கிக் கொண்டார். காங்கிரஸ் தலைவரான, காமராஜ் அவர்கள் அரசமைப்பிற்கு அப்பாற்பட்ட அதிகாரத்தைச் செயல்படுத்தி அரசமைப்பிற்கும் மீறிய ஒரு நிறுவனத்தை முதன் முறை யாகத் தோற்றுவித்தார்.........

......இவ்வகையில் அரசியலமைப்புச் சட்டம் உருத்தெரியா மல் அழிக்கப்பட்டது......மத்திய அமைச்சரவை, காங்கிரஸ் காரியக் கமிட்டியின் இரப்பர் முத்திரையாக மாற்றப்பட்டது. அரசியலமைப்புச் சட்டத்தால் அறுதியிட்டு வழங்கப்பட்ட அதிகாரங்களையும் பணிகளையும் மறுதளித்து, ஆங்கிலேய மரபுகளைப் பின்பற்றுவதாகக் கூறி, தலைமை யமைச்சரால் இந்தியக் குடியரசுத் தலைவரால் தனிமைப் படுத்தப் பட்டார்.'' 2

எனவும்,

''குடியரசுத் தலைவரின் எல்லா அதிகாரங்களும், தலைமை அமைச்சருக்கே சென்று விட்டால், குடியரசுத் தலைவர் வெறும் பொம்மைத் தலைவராக ஆகி விடுகிறார். இந்தியா வின் அரைகுறையான கூட்டாட்சித் தன்மையும் முற்ற முழுக்க அழிக்கப்பட்டு விடும்; கூட்டாட்சி நாடு ஓர் ஒற்றை யாட்சி நாடாக மாறி விடும்; நாட்டின் ஒற்றுமையை நிலை நாட்டுவதற்குரிய அதிகாரங்களும் பெருமளவில் பழுதுபட்டு விடும்.'' 3

எனவும்,

''நெருக்கடி நிலைச் சட்டவிதிகள் குடியரசுத் தலைவரின் அதி காரங்களையே குறிக்கின்றன. அரசினுடைய அதிகாரங் களும் பொது மக்களின் ஜீவாதார உரிமைகளும், நாடாளு மன்றத்தில் இருக்கும் ஆளும் கட்சியின் காலடியில் வீழ்ந்து

---

2 Ibid, Opp. cited, Note. 1. Preface. P. vi, vii.
3 Ibid, Opp. cited, Note. 1 P. 36.

கிடப்பவை அல்ல. மத்திய அரசின் ஆளும் கட்சி, மாநில அரசின் ஆளும் கட்சிக்கு மாறானதாகக் கூட இருக்கலாம்; மத்திய ஆளுங் கட்சி, தனது அதிகாரங்களை யெல்லாம் ஏதோ ஒரு வகையில் தன்னிடத்திலேயே இருத்தி வைத்துக் கொள்ள வேண்டுமென்ற நோக்கத்தோடும் சனநாயக சுதந்திரத்தை முறியடிக்கும் பேராசையாலும் தூண்டப் படலாம்.''4

எனவும் தெளிவாக விளக்குகிறார்.

## தலைமை அமைச்சராகி — சர்வாதிகாரியான இட்லர்

குடியரசுத் தலைவர் அரசமைப்பு விதிகளைப் பயன் படுத்தி ஒரு சர்வாதிகாரியாக மாறுவதும், சனநாயக முறைப்படி, தேர்ந்தெடுக்கப்பட்ட தலைமையமைச்சர் அரசமைப்புச் சட்டத்தை உருமாற்றி யமைத்து சர்வாதிகாரியாக மாறுவதும் நடைபெற முடியாதவை என நமக்குத் தோன்றும். ஆனால், வரலாற்றில் இதற்குப் பல சான்றுகள் உண்டு; அவற்றில் ஒன்று ''ஜெர்மனி.''

நமது இன்றைய அரசமைப்புச் சட்ட விதிகளின் மூலக் கருத்துக்களை மையமாக வைத்தே ''1919-ஆம் ஆண்டின் ஜெர்மானிய அரசியல் சட்டம்'' (வெய்மார் அரசமைப்பு) உருவாயிற்று. இந்திய மத்திய அரசிற்கு நமது அரசமைப்பால் தரப் பட்டுள்ள அவ்வளவு அதிகாரங்களும் '1919-ஆம் ஆண்டின் வெய்மார் அரசமைப்புச் சட்டத்தினால்' ஜெர்மன் மத்திய அரசிற்கும் தரப் பட்டிருந்தன.

இன்றைய இந்தியாவைப் போலவே, அன்றைய ஜெர்மன் நாடும் ஓர் அரைகுறைக் கூட்டாட்சியாகத் தான் இருந்தது. இன்றைய இந்திய மாநிலங்களைப் போலவே, அன்றைய ஜெர்மன் மாநிலங்களுக்கும் முழுமையான சுயாட்சி வழங்கப் பட்டிருக்க வில்லை. மத்திய அரசின் கட்டுப்பாடுகளோடு இயங்குகின்ற ஓரளவு சுயாட்சி உரிமைகளே அன்றைய ஜெர்மன் மாநிலங்களும் பெற்றிருந்தன.

'நெருக்கடி நிலைப் பிரகடனம்', 'மாநிலங்களின் சட்டப் பேரவைகளைக் கலைத்தல்', 'மாநில அமைச்சரவைகளைக் கலைத்தல்', மாநிலங்களுக்கு மத்திய அரசு கட்டளை யிடுதல்', ''மாநிலச்

4 Ibid, Opp. Cited, Note 1. P. 44.

சட்டமியற்றுத் துறையிலும் மாநிலப் பட்டியலிலும் மத்திய அரசின் ஊடுருவல்கள்", "நிர்வாகக் கட்டுப்பாடுகள்" ஆகிய இன்னோரன்ன பல வகைகளிலும் அன்றைய (1919-ஆம் ஆண்டின் அரசமைப்புப் படைத்து) ஜெர்மன் மாநிலங்களும் இன்றைய இந்திய மாநிலங்களும் ஒரே தன்மைத் தானவையே. அந்த ஜெர்மன் கூட்டாட்சிச் சட்டத்திற்கு "வெய்மார் அரசமைப்புச் சட்டம்" (Weimar Constitution) எனப் பெயர்.

சுருங்கக் கூறின் வலிமை நிறைந்த மத்திய அரசைக் கொண்டதாகவும் ஒற்றையாட்சி அம்சங்களைப் பெற்றதாகவும், முழு மாநில சுயாட்சியற்ற மாநிலங்களைக் கொண்டதாகவும் இன்றைய இந்திய அரசமைப்பு எவ்வகையில் இயங்கி வருகிறதோ அதேபோல் அன்றைய "வெய்மார் அரசமைப்புச் சட்டமும்" இயங்கி வந்தது.

ஜெர்மன் நாட்டின் கூட்டாட்சிக் குடியரசு அரசமைப்புச் சட்ட விதிகளைப் பழுதின்றிப் பயன்படுத்தியே "அடால்ப் ஹிட்லர்" இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற சர்வாதிகாரியானார் என்றால் நமக்குச் சற்று வியப்பாக உள்ளதல்லவா.

*30-1-1933*-ஆம் நாளில் ஜெர்மன் ஜனாதிபதியான, "ஹிண்டன்பர்க்" (Hindun Burg) அவர்கள்; 'அடால்ப் ஹிட்லரை' ஜெர்மன் நாட்டின் சான்சிலராக (பிரதமராக) நியமனம் செய்தார். நாடாளுமன்றத்தில் ஹிட்லரின் கட்சியான "தேசிய சோசலிஸ்டுக் கட்சிக்கு" (National Socialist Party) அறுதி பலம் இருக்கவில்லை. மொத்த உறுப்பினர்களில் *44%* உறுப்பினர்களின் பலம் மட்டுமே (*647*-க்கு *288* பேர்) ஹிட்லர் கட்சிக்கு இருந்தது. வேறோர் அரசியல் கட்சியான "தேசிய மக்கள் கட்சி" (National People's Party) யின் பலத்தையும் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டார் இட்லர்.

நாடாளுமன்றத்தில் பலமற்றிருந்த இட்லர், "ஏனேபிலிங்" ஏக்டு" (Enabling Act) என்ற ஒரு சட்டத்தை நிறைவேற்றி, *24-3-1933*-ஆம் நாளில் அதனை அமுல்படுத்தினார். அதன்படி நாடாளுமன்றம் ஒரு சட்டத்தை விவாதித்து நிறைவேற்றாமலேயே அது மத்திய அமைச்சரவையால் நிறைவேற்றப்பட்டு விட்டால், அது அமுலுக்கு வந்து விடும். இதன் பயனாக ஜெர்மன் நாடாளுமன்றத்தின் "மேலவை" "கீழவை" ஆகியவைகளில் இயற்றப்படவேண்டிய சட்டங்கள், மத்திய அமைச்சரவையாலேயே நிறைவேற்றப்பட்டால் போதுமானது என்ற அடிப்படையான மாறுதல் ஏற்பட்டது.

அதன் பின்னர், ஒரு வாரத்திற்குள் "மாநிலங்களை மத்திய அரசுடன் இணைக்கும் சட்டத்தை" (Law for Co-ordinating States with Reich) மத்திய அமைச்சரவை மூலமாக ஹிட்லர் நிறைவேற்றிப் பிரகடனப் படுத்தினார். மாநிலச் சட்ட மன்றங்கள் மாநிலத்திற்குரிய சட்டங்களை இயற்றி நிறைவேற்றுவதற்கு மாறாக, "மாநில அமைச்சரவையே" சட்டமியற்றலாம் என்ற நிலைமையை ஹிட்லரின் இரண்டாவது சட்டம் உருவாக்கிற்று.

7—4—1933-ஆம்நாளில் மாநிலங்களைப் பற்றிய இன்னொரு சட்டத்தையும் அமுல் படுத்தினார், அடால்ப் இட்லர். அதற்குப் பெயர், "ரெய்ஸ்ரீஜென்ட் சட்டம்" ( Reich Regents Act ). ஹிட்லரின் இந்த மூன்றாவது சட்டப்படி மத்திய அரசின் முகவர்களான மாநில ஆளுநர்கள் ஜெர்மன் குடியரசுத் தலைவராலேயே நியமிக்கப்படுவார்கள். ஆனால் அவர்கள் ஜெர்மன் நாட்டின் சேன்சலருக்கே (பிரதமருக்கு) பொறுப்பானவர்கள். அந்த ரீஜென்டு என்ற ஆளுநர்கள், இன்றைய இந்திய ஆளுநர்களைப் போல், ஜெர்மன் தலைமை அமைச்சரின் (ஹிட்லரின்) கொள்கைகளை மாநிலங்களில் அமுல் படுத்துவார்கள். அந்த ஆளுநர்களுக்கு மாநில அமைச்சரவைக்குத் தலைமை வகிக்கும் அதிகாரம் கூடத் தரப்பட்டது.

அந்தச் சட்டத்தை அடிப்படையாக வைத்துத் தனது கையாட்கள் பல பேரை ஜெர்மன் மாநிலங்களின் ரீஜெண்டுகளாக (ஆளுநர்களாக)ஹிட்லர் நியமித்துக் கொண்டார். அவர்களின் மூலமாக மாநில அதிகாரங்களையும் நிர்வாகத்தையும், பொருளாதாரத்தையும், ஜெர்மன் மத்திய அரசின் தலைவரான ஹிட்லர் தன் கைப்பிடிக்குள் கொண்டு வந்து விட்டார்.

ஒரே நாளில் "ஜெர்மானியக் கூட்டாட்சியானது", மாநில அரசுகள் இல்லாத "ஜெர்மானிய ஒற்றையாட்சியாக" மாறி விட்டது.

14—10—1933-ஆம் நாளில் நாடாளு மன்றத்தின் மக்களவையும் கலைக்கப்பட்டது. நவம்பர் மாதத்தில் வேறொரு புதிய நாடாளு மன்றம் கூட்டப்பட்டது. அந்த நாடாளு மன்ற உறுப்பினர் தேர்தலில் இட்லரின் 'நாசி'க் கட்சி மட்டுமே போட்டியிட்டது. மற்றக் கட்சிகள் தேர்தலில் போட்டியிட அனுமதிக்கப் படவில்லை.

30—1—1934-ஆம் நாளில் டாக்டர். பிரிக் (Dr. FRICK) என்ற உள்துறை அமைச்சரின் மூலமாக மாநில உரிமைகள் முழுவதும் மத்திய அரசிற்கே மாற்றப்பட்டு விட்டன. அஃதாவது டாக்டர் பிரிக் அவர்கள் கொண்டு வந்த சட்டம் மாநிலங்களை அழித்து விட்டது.

மாநிலங்கள் ''தனி அரசியல் பகுதி'' (Political Units) என்ற தன்மையை இழந்து ''மத்திய அரசின் நேரடியான நிர்வாகப் பகுதிகளாக'' (Territorial Administrative Units) மாற்றப்பட்டு விட்டன.

14—2—1934-ஆம் நாளில் ஜெர்மன் நாடாளு மன்றத்தின் மேலவையும் அழிக்கப்பட்டு விட்டது. அந்த அவைதான் அதுவரை மாநிலங்களைப் பிரதிபலித்துக் கொண்டிருந்த ஒரே அவை.

வெய்மார் அரசியல் சட்டவிதிகளின்படி ஜெர்மன் நாட்டின் சேன்சலராக (தலைமை அமைச்சர்)பொறுப் பேற்றுக் கொண்ட ''சனநாயக வாதியான''அடால்ப் ஹிட்லர்,வெய்மார் குடியரசுக் கூட்டாட்சி அரசமைப்புச் சட்டத்தையே அடிப்படையாக வைத்து, அதன் சட்டவிதிகளையே பயன்படுத்தி ஜெர்மன் நாட்டின் ''அதிகாரப் பூர்வமான சர்வாதிகாரியாக'' 14 மாதங்களில் மாறி விட்டான். அப்பெருமை ஜெர்மன் நாட்டிற்கே சொந்தமான தென்று நாம் கருதத் தேவையில்லை.

அன்றைய ஜெர்மன் அரசமைப்புச் சட்டமும் (வெய்மார்), இன்றைய இந்திய அரசமைப்புச் சட்டமும் மத்திய அரசைப் பொறுத்தவரையும், மாநிலங்களைப் பொறுத்தவரையும், குடியரசு மற்றும் கூட்டாட்சி முறைகளைப் பொறுத்த மட்டிலும் ஒரே வகையானவை என்பதை நாம் மறந்து விடலாகாது. காலமும் சூழ்நிலையும் ஏற்பட்டால் இன்றைய இந்திய அரசமைப்பைப் பயன்படுத்தி, இந்தியாவிலும் ஒரு ஹிட்லர் தோன்றிவிட முடியும்.

மாநிலங்களை மத்திய அரசிற்கு அடிபணிய வைத்த ஹிட்லரின் அடிவருடியாக இருந்த அன்றைய ஜெர்மனியின் உள்நாட்டு அமைச்சர். டாக்டர். பிரிக் அவர்கள் ''மாநிலங்களை அழிக்கும் சட்டம்'' அமுலுக்கு வந்த அடுத்த நாளான 31—1—1934-இல் வானொலியில் ஆற்றிய சொற்பொழிவின்

வாசகங்கள் இன்றைய இந்தியத் தேசியத் தலைவர்களுக்கும் வலிமையான மத்திய அரசு வேண்டுமென்று கூறும் அகில இந்திய வாதிகளுக்கும் ஒரு படிப்பினையாக அமைகின்றது.

டாக்டர் பிரிக் கூறுகிறார்,

''ஏற்கனவே (ஜெர்மனியில்) நடைபெற்று வந்த கூட்டாட்சியை மாற்றி யமைத்து, சர்வ வல்லமை பொருந்திய மத்திய ஒற்றை வல்லாட்சியை உருவாக்குவதுதான் நமது காலத்தில் நாம் செய்யும் மிகப் பெரிய வரலாற்றுப் புகழ் படைத்த சாதனை யாகும். ரெய்சின் ( ஜெர்மன் மத்திய அரசின் ) நிர்வாக ஆதிக்கத்தின் கீழ், வெறும் உள்ளாட்சி நிறுவனங்களைப் போலவே இனிமேல் ஜெர்மானிய மாநில அரசுகளும் இயங்கும். மத்திய அரசாங்கத்தின் புதிய அமைப்பை உருவாக்கும் இந்தச் சட்டம், இனி வரும் ஒரு புதிய மத்திய அரசாங்கத்தை உருவாக்குவதற்குத் தேவையான அரசியல் சட்ட அனுமதியை வழங்குவதற்கு ஏற்ற எல்லா அதிகாரங்களையும் தற்போதைய மத்திய அரசாங்கத்திற்கு வழங்கி யுள்ளது.'' 5

இது தான் டாக்டர். பிரிக் அவர்களின் வானொலிப் பேச்சு; பேரதிகாரங்களைக் கொண்ட வலிவான மத்திய அரசு எப்போது வேண்டுமென்றாலும் சர்வாதிகார அரசாக மாறி விடும் என்பதையே 'பிரிக்கின்' வானொலிப் பேச்சு தெளிவாக்குகிறது. எனவே, மாநில சுயாட்சி யில்லாத வலிமை யற்ற மாநிலங்களை அடக்கி ஆளும் ஒரு வலிமையான மத்திய அரசு வேண்டும் என்று கூறினால் சர்வாதிகார அரசும் வேண்டும் என்பதுதான் அதன் உண்மைப் பொருள். இதனை வரலாற்று உண்மைகள் பேசுகின்றன.

எனவே, அமைச்சரவைச் சர்வாதிகாரத்தைத் தடுக்க வேண்டுமெனில்,

.........மலர்க மாநில சுயாட்சி.



5 Quoted from "Federal Polity" (1967) br B. M. Sharma. P. 54.

## 6. பாக்கிஸ்தான் புகட்டும் படிப்பினை...?

— மலர்க மாநில சுயாட்சி —

"பாக்கிஸ்தான் இன்னும்கூட அதன் நிலப் பகுதிகளை இழக்கும் நிலையில் உள்ளது; அதன் எல்லைப்புறப் பகுதிகளான வடமேற்கு எல்லைப்புற மாகாணமும், பலுசிஸ்தான் மாகாணமும், இப்போதும் பறிபோகும் நிலையில் உள்ளது. கிழக்குப் பாக்கிஸ்தானம் வீழ்ந்துபட்டு—தங்க வங்கம்—தனி நாடாக உதய மாவதற்கு முன்னர் வங்க மக்கள் இரண்டாண்டு காலம் எவ்வகையில் நொந்த உள்ளத்தோடு பேசி வந்தனரோ அதே வகையில் தனித்தன்மை கொண்ட வீரம் நிறை பட்டாணியர்களும் தற்போது கோரிக்கை விடுக்கின்றனர்."[1]

— அமெரிக்கச் செய்தி நிறுவனம்.

"ஆங்கில அரசின் சிறைகளில் நான் 15 ஆண்டுக் காலம் அடைபட்டுக் கிடந்தேன்; அதே அளவு காலச் சிறைத் தண்டனையை நான் பாக்கிஸ்தான் சிறைகளிலும் அனுபவித்துள்ளேன்." [2]

— எல்லைப்புறக் காந்தி கான். அப்துல் கபார்கான்.

ஒரு ஜனநாயக நாட்டில் சர்வாதிகாரம் ஏன் தலையெடுக்கிறது?; ஒரு கூட்டாட்சி நாட்டில் பிரிவினைச் சக்திகள் ஏன் உதயமாகின்றன?; பல்வேறு தேசிய இனங்களைக் கொண்ட

---

1 [American News Agency (A.P.) Report, from Peshawar. (9-2-1972) Quoted from "Pakistan" - Policies that Led to Break up" (1972) by M. Farooqi. P. 4.

2 Ibid, Note. 1, P, 92.

மக்களை அரசமைப்புச் சட்டத்தால் மட்டுமே பிணைத்துவிட முடியுமா?; மதத்தின் துணை கொண்டு பல மாநிலங்களை இணைத்துவிட முடியுமா? பேரதிகாரங்களைப் பெற்று வலிமையான மத்திய அரசால் உணர்ச்சிபூர்வமான ஒருமைப்பாட்டை வளர்த்துவிட முடியுமா? முழு மாநில சுயாட்சியுடன் கூடிய உண்மைக் கூட்டாட்சிதான் அவர்களை ஒற்றுமைப்படுத்த முடியுமா? என்பன போன்ற பல அரசியல் வினுக்களுக்குரிய விடைகளை அண்மையில் துண்டாகிப் போன பாக்கிஸ்தானின் வரலாறு தெளிவு படுத்துகிறது. மாநில சுயாட்சியின் மலர்ச்சிக்கு, பாக்கிஸ்தானின் வரலாறு நடைமுறை விளக்கமாகத் திகழ்வதால் அதுபற்றி இவண் ஆய்வோம்.

## I
## சர்வாதிகாரப் பாதையில்......

சிந்து மாகாணம், வடமேற்கு எல்லைப்புற மாகாணம், பஞ்சாபில் முஸ்லீம்கள் பெரும்பான்மையாயுள்ள பகுதி, பலுஸிஸ்தானம் மற்றும் சில சுதேச சமஸ்தானங்கள் ஆகியவைகளை உள்ளடக்கிய மேற்குப் பாக்கிஸ்தானும்; இன்றைய பங்களா தேசத்தைக் கொண்ட கிழக்குப் பாக்கிஸ்தானமும் சேர்ந்து 1947-ஆம் ஆண்டு ஆகஸ்டு 14-ஆம் நாளில் விடுதலை பெற்ற தனிப் பாக்கிஸ்தான் நாடாயிற்று. முகமது அலி ஜின்ஞ அவர்கள் அதன் முதல் கவர்னர் ஜெனரல் ஆனர். லியாக்கத் அலிகான் அவர்கள் முதல் தலைமை அமைச்சர் ஆனர்.

பாக்கிஸ்தான் நாட்டின் புதிய அரசமைப்பை உருவாக்குவதற்காகக் கூடிய, பாக்கிஸ்தான் அரசியல் நிர்ணய சபையே அதன் முதல் நாடாளு மன்றமாகவும் திகழ்ந்தது. புது அரசமைப்பு உருவாகும் வரை, பிரிக்கப்படாத இந்தியாவிற்கு ஆங்கில அரசு கொடுத்த "1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டம்" பாக்கிஸ்தானின் அரசியல் அமைப்புச் சட்டமாகவும் பயன் பட்டது. 1947-ஆம் ஆண்டு ஆகஸ்டு 10-ஆம் நாளில் முதன் முறையாகக் கூடிய அரசியல் நிர்ணய சபை, 1952-ஆம் ஆண்டு முடிய ஏறத்தாழ ஐந்து ஆண்டுகளாகியும் சுதந்திரப் பாக்கிஸ்தானத்தின் அரசமைப்பிற்குரிய அடிப்படைக் கோட்பாடுகளைக் கூட வகுக்கவில்லை. 1948-ஆம் ஆண்டு செப்டம்பரில் பாக்கிஸ்தான் அரசியல் வானில் சர்வ வல்லமையைப் பெற்றிருந்த காயிதே ஆஜம் முகமதலி ஜின்ஞ அவர்கள் இயற்கை எய்தினர். குவாஜா நஜிமுதீன் அவர்கள் கவர்னர் ஜெனரல் ஆனர்.

பிரதமர் லியாக்கத் அலிகான் அவர்களும் 1951-இல் சுட்டுக் கொல்லப்பட்டார். அது வரை, கவர்னர் ஜெனரலாயிருந்த குவாஜா நஜிமுதீன் அவர்கள் அப்பொறுப்பை விட்டு நீங்கி, பாக்கிஸ்தானின் தலைமை அமைச்சர் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். நிதி அமைச்சராக இருந்த, குலாம் முகமது கவர்னர் ஜெனரல் ஆனர்.

இந்தியக் காங்கிரஸ் தலைவர்களைப்போலவே,பாக்கிஸ்தான் தேசியத் தலைவர்களும் அந்நாட்டில் 'ஒருமைப்பாட்டை' நிலை நாட்ட வேண்டுமென்ற எண்ணத்தில் அதன் மத்திய அரசை வலுப்படுத்த முயன்றனர். பஞ்சாபியர், சிந்து மக்கள், பலுஸிஸ் மக்கள், பட்டாணியர்கள் மற்றும் வங்க மக்கள் ஆகிய வர்கள் தனித் தனித் தேசிய இனங்களைச் சார்ந்தவர்கள். அவர்கள் எல்லாரும் முஸ்லீம் மதத்தைத் தழுவி யிருந்தாலும் கூடத் தத்தம் மொழித் தேசியப் பாரம்பரிய உணர்வுகளைப் போற்றி வளர்த்து வந்தார்கள்.

எனினும் அம்மக்களது தனித்தன்மைகளைப் போற்றும் வகையில் முழு மாநில சுயாட்சியுடன் கூடிய ஓர் உண்மையான கூட்டாட்சி யையும் குடியரசு முறையையும் உருவாக்குவதற்கு முஸ்லீம் லீக் தலைவர்கள் விரும்பவில்லை.

காரணம்? அச்சம்.

எனவே, பாக்கிஸ்தான் நாட்டிற்குரிய அரசியல் அமைப்புச் சட்டம், எந்த அடிப்படைக் கொள்கைகளைக் கொண்டு இயற் றப்பட வேண்டும் என்பதில் சிக்கலும் குழப்பமும் ஏற்பட்டது. அரசியலமைப்புக் கொள்கையில் இறுதி முடிவெடுக்கப்படாத தால் அந்நாடு மெல்ல மெல்லச் சர்வாதிகாரப் பாதையையும் ஒற்றை ஆட்சிமுறையையும் நோக்கிச் செல்ல அதன் தேசியத் தலைவர்கள் வழிவகை செய்தனர். முதல் பிரதமர் லியாகத் அலிகான் அவர்களாலும் அடுத்து வந்த குவாஜா நஜிமுதீன் அவர்களாலும் பாக்கிஸ்தானத்தின் அரசியல் சிக்கல்களைத் தீர்க்க முடியவில்லை. பதவிப் போட்டிகளும், ஊழல், இலஞ்ச லாவண்யமும் முஸ்லீம் லீக் கட்சியின் ஆட்சியில் மலிந்து நின்றன.

பாக்கிஸ்தானின் கவர்னர் ஜெனரலான, குலாம் முகமதின் திருவாயினின்றும்தான் முதல் முறையாகச் சர்வாதிகாரக் குரல் ஒலிக்கத் தொடங்கிற்று. வலிமையான மத்திய அரசைப் படைத்திருந்த ''1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டம்'', அன்று பாக்கிஸ்தானத்தில் அமுலில் இருந்ததால்,

அன்றைய கவர்னர் ஜெனரலாக இருந்த, குலாம் முகம்மது அவர்கள் 1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்ட விதிகளைப் பயன்படுத்தி (இன்றைய நமது அரசமைப்பில் குடியரசுத் தலைவருக்குத் தரப்பட்டுள்ள அதே அதிகாரங்களைப் பயன் படுத்தி) குவாஜா நஜிமுதினின் (மத்திய) அமைச்சரவையைக் கலைத்தார். பின்னர், திரு. முகம்மது அலிபோக்ருவின் தலைமையில் ''திறமைசாலிகள் அமைச்சரவை'' (The Cabinet of Talents) என்று அழைக்கப்பட்ட ஒரு பொம்மை அமைச்சரவையையும் அவரே உருவாக்கினார்.

பாக்கிஸ்தானின் முதல் அரசியல் நிர்ணய சபை, ஒன்பது ஆண்டுகளாகப் பாடுபட்டு, பல அரசியல் சிக்கல்களுக்கிடையே உருவாக்கிய பாக்கிஸ்தானின் ''முதல் அரசமைப்புச் சட்டத்தை'' ஜின்னா அவர்களின் பிறந்தநாளான 25—12—1954-இல் வெளியிட்டு அமுல்படுத்தத் தயாராயிருந்தது. ஆனால், கவர்னர் ஜெனரல் குலாம் முகமது அவர்கள் அந்தஅரசியல் நிர்ணய சபையையே கலைத்து விட்டார். எப்படி? நமது இன்றைய அரசியலமைப்பில் ஜனாதிபதிக்கு வழங்கப்பட்டிருக்கும் ''நெருக்கடி நிலைப் பிரகடன'' அதிகாரங்களைப் போலவே, 1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்திலும் கவர்னர் ஜெனரலுக்கு அதிகாரங்கள் அளிக்கப் பட்டிருந்ததால் — அச்சட்டத்தை அதுகாறும் அமுலில் வைத்திருந்த— பாக்கிஸ்தான் நாட்டின் கவர்னர் ஜெனரலும் அந்த நெருக்கடி நிலை அதிகாரங்களைப் பயன்படுத்தி, பாக்கிஸ்தானின் மத்திய அரசையும் கலைத்து, அதன் அரசியல் நிர்ணய சபையையும் கலைத்தார். அதன் பின்னர், பாக்கிஸ்தானிற்குப் புதியதோர் அரசியல் சட்டத்தை உருவாக்குவதற்காக ''இரண்டாவது அரசியல் நிர்ணய சபையையும்'' அவரே அந்த அதிகாரங்கள் மூலமாக உருவாக்கினார். முகமதலி போக்ரா அவர்கள் தலைமை அமைச்சராகவும், முகமது அயூப்கான் பாதுகாப்பு அமைச்சராகவும், அவரது கெழுதகை நண்பர் இஸ்கந்தர் மிர்ஸா அவர்கள் உள்நாட்டு அவைச்சராகவும் கொண்ட ஒரு புதிய மத்திய அமைச்சரவை அமைக்கப் பட்டது.

பாக்கிஸ்தானத்தின் இரண்டாவது அரசியல் நிர்ணய சபை ஓர் புதிய அரசியல் சட்டத்தைப் பாக்கிஸ்தானுக்கு அளித்தது. ''பாக்கிஸ்தான் இஸ்லாமியக் குடியரசு அரசியல் சட்டம்'' என அதற்குப் பெயர் வழங்கலாயிற்று. அச்சட்டம் 1956-ஆம் ஆண்டு மார்ச்சு 23-ஆம் நாளில் அமுலுக்கும் வந்தது.

1956-ஆம் ஆண்டின் பாக்கிஸ்தான் அரசமைப்பிலும் ஒரு வலிமை நிறைந்த மத்திய அரசே படைக்கப் பட்டிருந்தது. மத்திய-மாநில உறவுகளைப் பொறுத்தவரை இன்றைய இந்திய அரசியல் அமைப்பையேஅது பெரிதும் சார்ந்திருந்தது.மத்திய-மாநில அதிகாரப் பங்கீடுகள், குடியரசுத் தலைவரின் நெருக்கடி நிலைப் பிரகடன அதிகாரங்கள், மாநில அரசுகளுக்கு மத்திய அரசால் விதிக்கப்படும் நிர்வாகக் கட்டளைகள், ஆளுநர்கள், குடியரசு அமைப்புகள் ஆகிய இன்னோரன்ன பலவும் இன்றைய இந்திய அரசமைப்புச் சட்டத்தை அப்படியே பிரதிபலித்தன.

குடியரசுத் தலைவருக்கு (அதாவது தலைமையமைச்சருக்கு) நமது அரசமைப்பில் வழங்கப்பட்டிருக்கும் எண்ணிறந்த அதிகாரங்களையும், மாநிலங்களை முழுமையாக அடிமை கொள்ளக் கூடிய பேரதிகாரங்களையும், பாக்கிஸ்தான் அரசியலமைப்புச் சட்டமும் வழங்கியிருந்தது. சுருங்கக் கூறின், 1956-ஆம் ஆண்டு பாக்கிஸ்தான் அரசியல் சட்டத்தில் முழு மாநில சுயாசியும் தரப்படவில்லை; உண்மைக் கூட்டாட்சி முறையும் உருவாக்கப் பட்டிருக்க வில்லை. நாட்டின் ''ஒற்றுமை'' கருதி, சகல அதிகாரங்களும் (இந்தியத் துணைக் கண்டத்தைப் போலவே) மத்திய அரசிற்கே வழங்கப்பட்டிருந்தது. ஆங்கிலேயர் காலத்திலிருந்தே தனி மாகாணங்களாகச் செயல்பட்ட ''பஞ்சாப்'', ''வடமேற்கு எல்லைப்புற மாகாணம்'', ''பலுசிஸ்தானம்'', ''சிந்து'' இன்னும் மற்ற சுதேச சமஸ்தானங்கள் ஆகியவைகளைக் கலைத்துவிட்டு அவற்றை யெல்லாம் ஒன்றுக இணைத்து 'ஒரே நிர்வாகம் - ஒரே சட்ட மன்றம் - ஒரே மக்கள் (முஸ்லீம்கள்)'என்ற அடிப்படையில்'மேற்குப் பாக்கிஸ்தானம்' என்ற ஒரே மாகாணமாக மாற்றியமைத்தது, புதிய அரசமைப்புச் சட்டம்.இன்றைய ''பங்களா தேஷ்'' அன்றைய ''கிழக்குப் பாக்கிஸ்தானம்'' என்ற பிரிதொரு மாகாணமாக ஆக்கப் பட்டது. இவ்வகையில் பாக்கிஸ்தான் நாடு, அதன் வேறுபட்ட தேசிய இன மக்களது விருப்பத்திற் கெதிராக ''மேற்கு மாகாணம்''; ''கிழக்கு மாகாணம்'' என்ற இரண்டே இரண்டு மாகாணங்களைக் கொண்டதாகத் திருத்தி அமைக்கப்பட்டது.

அதனால் ஏற்பட்ட விளைவு என்ன?

பல மொழி, இன மக்கள் ''ஒருமைப்பாடு'' என்ற பெயரால் மேற்குப் பாக்கிஸ்தானம் என்ற ஒரே மாகாணத்திற்குள் அடக்கி வைக்கப்பட்டனர்; அரசியல் குழப்பங்கள் மலிந்தன;

மத்திய அரசு திறனற்றுப் போய் ஊழல் மலிந்ததாயிற்று; இலஞ்சமும் அரசியல் ஏமாற்று வேலைகளும் வளர்ந்தன. நமது உத்தரப்பிரதேசத்தைப் போல, பாக்கிஸ்தானின் பஞ்சாப் மாநிலமும், கிழக்கு மற்றும் மேற்குப் பாக்கிஸ்தானிலிருந்த வேற்றுமொழி மக்களை அரசியற் பொருளாதாரத் துறைகளில் அடிமை கொள்ளத் துணிந்தனர்.

பாக்கிஸ்தானின் 1956-ஆம் ஆண்டு அரசமைப்புச் சட்டவிதிகளைப் பயன்படுத்தி, அதன் குடியரசுத் தலைவரான, திரு. இஸ்கந்தர் மிர்ஸா அவர்கள், சகல அரசதிகாரங்களையும் தன் கையகப்படுத்திக் கொண்டார்; ஜெனரல் முகமத் அயூப்கான் அவர்களை இராணுவச் சட்ட நிர்வாகியாக நியமனம் செய்தார்.

1958–ஆம் ஆண்டு அக்டோபர் 10-ஆம் நாளன்று வெள்ளி முளைத்தவுடன் "பாக்கிஸ்தான் இஸ்லாமியக் குடியரசு", இராணுவ சர்வாதிகார நாடாக ஒரே நாளில் மாறி விட்டது. பாக்கிஸ்தான் இஸ்லாமியக் குடியரசின் அரசமைப்புச் சட்டமும் அழிக்கப்பட்டது.

இராணுவ ஆட்சி ஏற்பட்ட பின்னர், அதன் தலைவராக இருந்த இஸ்கந்தர் மிர்ஸாவை, அயூப்கான் அவர்கள் அவருடைய நெருங்கிய நண்பர் என்று கூடப் பாராமல் ஒரு மாத காலத்திற்குள் நாடு கடத்தி விட்டார். பின்னர், அயூப்கான் அவர்களே நாட்டினுடைய தலைவராகவும் ஆட்சியின் தலைவராகவும் பிரகடனப் படுத்திக் கொண்டார்.

பாக்கிஸ்தானில் சர்வாதிகார ஆட்சிக்கு வழிவகுத்தது எது? அதிகாரங்கள் குவிக்கப்பட்ட அதன் வலிமையான மத்திய அரசுதான். இந்தியத் துணைக் கண்டத்தின் அரசமைப்பில் கண்டிருக்கும் மாநில சுயாட்சிக் கெதிரான பல சட்டவிதிகளைப் போலவே, பாக்கிஸ்தானின் அரசமைப்பிலும் பொறிக்கப்பட்டிருந்தது என்பது வெள்ளிடைமலை. நாட்டினுடைய "ஒற்றுமையைக்" காப்பதற்கு வலிமையான மத்திய அரசு தான் தேவை என்ற காரணமும் அதற்குக் காட்டப்பட்டது.

ஆனால், ஒரே மையப் புள்ளியில் நாட்டின் ஆட்சி அதிகாரங்கள் குவிக்கப்பட்டால், அந்நாட்டின் குடியரசுக்கே கூட ஆபத்து ஏற்பட்டு விடும் என்பதையும், சர்வாதிகார ஆட்சி அமைவதற்கும் கூட

அதுவே உறுதுணை செய்யும் என்பதையும் பாக்கிஸ்தானத்தின் முற்பகுதி வரலாறு விளக்குகிறது. ''மாநில சுயாட்சி'' வழங்கப்படாவிடில் நாடு துண்டாகி விடும் என்பதைப் பாக்கிஸ்தானத்தின் பிற்பகுதி வரலாறு (பங்களா தேஷ் வரலாறு) தெளிவாக்குகிறது.

## II
## மாறுபட்ட மொழி, இன மக்களை மதமே பிணைக்குமா?

1940-ஆம் ஆண்டில் இலாகூரில் கூடிய அகில இந்திய முஸ்லீம் லீக் கட்சியால் நிறைவேற்றப்பட்ட ''பாக்கிஸ்தான் தீர்மானம்'', — முஸ்லீம் மதத்தைச் சார்ந்த மக்கள் ஒரு தனி இனத்தைச் சார்ந்தவர்கள் என்றும், எனவே, இந்தியத் துணைக் கண்டம் மதத்தினடிப்படையில் பிரிவினை செய்யப்பட வேண்டும் என்றும் வலியுறுத்திற்று. ஆனால், மதம் என்ற ஒரே அடிப்படையில் பல மொழித் தேசிய, இன மக்களை ஒன்றாகப் பிணைத்துவிட முடியாது என்ற பேருண்மையை அன்று ஜின்னா அவர்களால் உய்த்துணர்ந்து கொள்ள முடியவில்லை.

''இந்து மதத்தைச் சார்ந்தவர்களெல்லாம் ஒரே தேசியப் பரம்பரையைச் சார்ந்தவர்கள்; அதன் வழி ஒரே பண்பாட்டைச் சார்ந்தவர்கள்; எனவே, இந்தியத் துணைக்கண்டமும் ஓரினத் தேசிய மக்களைக் கொண்ட ஒரே நாடு'' என அன்றைய இந்தியத் தேசியத் தலைவர்கள் வரலாற்றுக்குப் புறம்பாக வலியுறுத்திக் கூறியதைப் போல், அன்றைய ஜின்னாவும் ''மதத்தின் அடிப்படையில் பிரிவினை'' என்ற அதே பிழையைச் செய்தார்.

மதத்தை வைத்தே பல்வேறு இன மக்களை உணர்ச்சி பூர்வமாகப் பிணைத்துவிட முடியாது என்பதைப் பல நாட்டு வரலாறுகள் தெளிவாக்குகின்றன. ஐரோப்பாக் கண்டத்தில் உள்ள பல நாட்டு மக்கள் கிறித்துவ மதத்தைச் சார்ந்தவர்கள். ஆனால், கீரைப் பாத்தியைப் போன்ற சின்னஞ் சிறிய 'ஸ்விட்சர்லாந்து நாடு' முதல்-உலக நாடுகளின் பரப்பளவில் முதலாம் இடத்தை வகிக்கும் 'ரஷ்ய நாடு' வரை வரலாற்றால், இன அடிப்படையால், பண்பாட்டால், தனித் தனி நாடுகளாகத் திகழ்கின்றன. எனினும், அந்நாட்டவர்கள் எல்லாரும் கிறித்துவ மதத்தைத் தழுவி யிருத்தலின் காரணமாக ஒரே நாட்டைச் சார்ந்தவர்கள் எனக் கூற முடியுமா?

துருக்கியர்களும் அராபியர்களும் ஒரே முஸ்லீம் மதத்தைச் சார்ந்தவர்கள் தான்; ஆனால், ஒரே சுல்தானின் கீழ் அவர்களால் இணைந்து வாழ முடியவில்லை. துருக்கிய சுல்தானின் மத ஆளுகைக்குட் பட்ட பல பகுதிகள் இரு கூறுகளாகப் பகுத்துக் கொள்ளப்பட்டன. முதல் உலகப் பெரும் போருக்குப் பின்னர் "கலிஃபாவின்" (Caliph) ஆட்சியும் அகன்றது.

பாக்கிஸ்தானின் வட எல்லைப் பகுதிகளிலிருந்து அட்லாண்டிக் சமுத்திரத்தின் கடல் எல்லை வரை பரவியுள்ள ஆப்பிரிக்க – ஆசிய நாடுகள் இஸ்லாமிய மதத்தைத் தழுவி நிற்கின்றன. ஒரே மதத்தைத் தழுவி இருக்கக் கூடிய காரணத்தினாலேயே அத்துணைத்தனி நாடுகளும் சேர்ந்து ஒரே நாடாகப் பிணைந்து கொள்ளவில்லை; குறைந்த பட்சம் ஒரு தளர்ச்சியான கூட்டமைப்பில் கூட, அத்தனி முஸ்லீம் நாடுகள் இணைந்து கொள்ள முடியவில்லை.

இந்தியத் துணைக் கண்டமும் அதற்கு விதிவிலக்கல்ல. இந்து மதத்தைச் சார்ந்தவர்கள் என்பதால் இந்தியாவின் பல்வேறு மொழித் தேசிய இன மக்கள் வாழும் நிலப் பகுதிகள் எல்லாம் சேர்ந்து "ஏக இந்தியாவாக" ஆகி விட முடியாது.

அதைப்போலவே, பாக்கிஸ்தான் நாட்டில் 'பஞ்சாபியர்' 'சிந்து மக்கள்' 'பலுசிஸ் மக்கள்', 'பட்டாணியர்கள்' மற்றும் 'வங்காளிகள்' – தனித்தனி மொழித் தேசிய இனத்தைச் சார்ந்தவர்கள். எனினும் அவர்களில் பெரும்பான்மையினர் இஸ்லாம் மதத்தைச் சார்ந்தவர்கள் தான். அதனால் மதம் என்ற அடிப்படையில் அவர்களை யெல்லாம் ஒரே நாட்டில் பிணைந்து விட்ட மக்கள் எனக் கூறுவது பேதைமை.

வரலாறு தந்த வேறுபாடுகளைக் கணக்கில் கொண்டு, அவர்களை முறையானதோர் அரசியல் ஏற்பாட்டில்–அதாவது முழுமையான கூட்டாட்சியில் – இணைத்தாலன்றி "இஸ்லாம்" என்ற பொன் சங்கிலியை மட்டுமே வைத்து அவர்களை ஒரே நாட்டு மக்களாகப் பிணைத்து விட முடியாது. இது பாக்கிஸ்தான் காட்டும் இன்னொரு பாடம்.

மொழியுரிமையும், சமுதாய, பண்பாட்டுத் தனித் தன்மைகளும் பொருளாதாரக் காரணங்களும், தனி வரலாறுகளும், அவர்களது தனித் தன்மைகளை எப்போதும் பேணிக்காத்துக்

கொண்டே இருக்கும். அவைகளுக்கு ஊறு நேரும்போது ஒரு மத்திய அரசின் கீழ் அத்தேசிய இன மக்கள் இணைந்து வாழ மாட்டார்கள் என்பதைப் பாக்கிஸ்தானின் அண்மை வரலாறு தெற்றெனக் காட்டுகிறது. அவர்கள் தனித் தன்மைகளுக்கும் மொழி, இன, பண்பாட்டு உரிமைகளுக்கும் கெடுதி நேரா வண்ணம் முழு மாநில சுயாட்சியுடன் கூடிய ஓர் உண்மைக் கூட்டாட்சியில் தான் அத்தேசிய இனங்களை ஒருங்கிணைக்க முடியும்; அதற்கு அரசியல் அமைப்புச் சட்டமும் துணை செய் யும்; மதமும் கூட ஒருவகையில் துணை நிற்கும்.

## III

## பலுசிஸ்தானிய மாநில சுயாட்சிப் போராட்டம்

அரசியல் சட்டத்தை மட்டும் ஆயுதமாக வைத்தோ, அன்றி எண்ணிக்கையில் நிறைந்த பேரதிகாரங்களைக் கொண்ட மத்திய வல்லாட்சியின் துணை கொண்டோ உணர்ச்சிபூர்வமான ஒருமைப் பாட்டைப்பல தேசிய இனங்களின் மேல் திணித்துவிட இயலாது என்பது பாக்கிஸ்தான் தரும் மூன்றுவது பாடமாகும்.

இனி,பாக்கிஸ்தான் தந்த மூன்றுவது பாடத்தின் வரலாற்று விளக்கத்தைப் பார்ப்போம்.

பலுசிஸ் மாநிலம் பாக்கிஸ்தானின் ஒரு பகுதி. பலுசிஸ் தானிய மக்கள் வீரம் நிறைந்தவர்கள்; சுதந்திர உணர்ச்சி கொண்டவர்கள்.ஆங்கிலேயரை இறுதிவரை எதிர்த்துப்போரா டியவர்கள். அவர்கள் பல கூறுகளாகச் சிதறுண்டு இருந்தாலும் அகமதுகான், நவ்ரோஸ்கான், பலோஸ்கான் — நவ்சேர்வாணி ஆகியவர்கள் பலுசிஸ்தானியப் பகுதிகள் எல்லாம் ஒருங் கிணைக்கப்படுவதற்காக ஆங்கிலேயரை எதிர்த்து இறுதிவரை போராடினுர்கள்.

பலுசிஸ்தான இனத்தின் பாரம்பரிய வரலாற்றை உணர்ந் திருந்த ஆங்கிலேயர் பாக்கிஸ்தான் விடுதலை பெறுவதற்கு (14-8-1947) மூன்று நாட்களுக்கு முன்னரே வெளியேறி விட்டனர்.ஜின்னு அவர்கள் பலுசிஸ்தானிய மக்களுக்கு முழுத் தன்னுட்சி வழங்குவதாகவும் அதிலிருந்த சுதேச மன்னரான

கலாட்கான் (KHAN OF KALAT) அவர்களைப் பலுசிஸ் பகுதியின் நிர்வாகத் தலைவராக ஆக்குவதாகவும் வாக்களித்து அதனைப் பாக்கிஸ்தானோடு இணைத்துக் கொண்டார்.

ஆனால், வெள்ளையன் வெளியேறியவுடன் முழுப் பலுசிஸ் தானமும் பாக்கிஸ்தான் மத்திய அரசாங்கத்தினுடைய நேரடியான ஆளுகையின் கீழ்க்கொண்டு வரப்பட்டு விட்டது. பலுசிஸ்தான மக்களுக்கும் தன்னாட்சி மறுக்கப்பட்டது. அதற்காக அவர்கள் பல்லாண்டு போரிட்டார்கள். முஸ்லீம் லீக் கட்சியும் கூடப் பலுசிஸ்தானிய மக்கள் மாநில சுயாட்சிக்காகப் போரிட்ட போது ஆதரவு கொடுத்தது.

ஆனால் ஆங்கில ஏகாதிபத்தியம் வெளியேறியவுடன் பாக்கிஸ்தான் ஏகாதிபத்தியம் பலுசிய மக்களை ஆட்கொண்டு விட்டது. மாநில சுயாட்சி மறுக்கப்பட்டதால் பலுசிஸ்தானியர் போர்க்குரல் எழுப்பினர். பலுசிஸ்தானம், வடமேற்கு எல்லைப் புற மாகாணம், சிந்து, பஞ்சாப் ஆகிய நான்கு மாநிலங்களை ஒன்றாக இணைத்த ''மேற்குப் பாக்கிஸ்தான்'' என்ற புதிய மாகாணம் 1958-ஆம் ஆண்டில் உருவானபோது அதனை எதிர்த்துப் புரட்சி செய்தனர் பலுசிஸ்தானியர். வாட்டன் (WATAN) என்று அழைக்கப்பட்ட ஓர் அமைப்பின் கீழ் அம் மக்கள், மத்திய அரசை எதிர்த்துப் போரா்டினார்கள்.

பின்னர், அயூப்கானின் இராணுவ ஆட்சியில் பலுசிஸ்தான மக்களின் தன்னாட்சி உரிமைகள் பறிக்கப்பட்ட போது, அவர்கள் பாக்கிஸ்தான் இராணுவத்தைத் துப்பாக்கி முனையில்சந்தித்தனர். பாக்கிஸ்தர்ன் படைக்கும் அதன் மர்நிலங்களில் ஒன்றான பலுசிஸ்தான் மக்கள் படைக்கும் இடையே முறையான போர் நடந்தது. பலுசிஸ்தானின் பெரும் தலைவர்களான நவ்ரோஸ் கானையும், பவல்கானையும் ( BAWALKHAN ) சிறைப் பிடிக்கப் பாக்கிஸ்தான் இராணுவம் அனுப்பப்பட்டது; ஆனால், இராணுவத்தால் இயல வில்லை.

''போர் செய்வதை விட்டு விடுங்கள்; அல்லாவின் பெயரால் கூறுகிறோம்; உங்கள் கோரிக்கைகளை யெல்லாம் நிறை வேற்றுகிறோம்''

என உறுதி கூறி, பாக்கிஸ்தான் படைத்தளகர்த்தர், குரானை வைத்து ஆணையிட்டார்.

அதனை நம்பிய பலுசிய மக்கள் போரை நிறுத்தினர். ஆனால், சமாதானத்திற்காக வெளியில் வந்த பலுசிஸ் தலைவர்களைச் சிறைப்பிடித்து, பவல்கானுக்குத் தூக்குத் தண்டனையும் இன்னும் பலருக்கு ஆயுள் தண்டனையும் விதித்தார்கள். பாக்கிஸ்தானின் பச்சைக் கொடிக்குப் பின்னால் பெரிய கருப்புத் திரை தொங்கவிடப் பட்டது. தனது நாட்டின் ஒரு பகுதியான பலுசிஸ்தான மக்களைச் சித்திரவதைக் குள்ளாக்கிய பாக்கிஸ்தான் மத்திய சர்க்கார், அக்கொடுமைகளை மற்ற மாநிலங்கள் அறியாமல் இருக்கும் வகையில் அந்தக் கருப்புத் திரையின் பின்னால் பதுங்கிக் கொண்டது — அகண்ட பாக்கிஸ்தானிய தேச பக்தி என்ற பெயரால்.

இரம்சான் பண்டிகையன்று, ''ஜலவானில்'' (Jalawan) புனிதத் தொழுகை நடத்திக் கொண்டிருந்த பலுசிஸ்தான மக்கள் மீது குண்டு மாரி பொழிந்தார்—பிற்காலத்தில் ''பங்களா தேஷின் கொலை பாவி'' என்று அழைக்கப்பட்ட மேஜர் ஜெனரல் டிக்காகான். ஆனால், பலுசிஸ் மக்களின் மாநில சுயாட்சித் தாகத்தை சர்வாதிகார மத்திய அரசால் அடக்க முடியவில்லை.

1968-ஆம் ஆண்டு ஜுலை மாதத்தில் அங்கு இரண்டாவது புரட்சி வெடித்தது. இராணுவம் அழைக்கப்பட்டது. மாநில ஆளுநராய் இருந்த-மத்திய அரசின் கைக் கூலியான-முகம்மது மூசா, பலுசிஸ் மக்களின் இரத்தத்தைக் குடித்தார். யாயாகான் அவர்கள், பாக்கிஸ்தானின் சர்வாதிகாரியாக ஆன போது பலுசிஸ் மக்களின் சுயாட்சிப் போராட்டம் மேலும் வலிவடைந்தது. ''பலுசிஸ் காந்தி'' என்று அழைக்கப்பட்ட 'அப்துல் சமத்கான்' அவர்கள் தலைமையில் பலுசியப் பகுதிகள் எல்லாம் ஒன்றிணைய வேண்டும் எனக் கோரித் தீவிரமான இராணுவப் போராட்டம் நடை பெற்றது.

அதனை இரும்புக் கரம் கொண்டு அடக்கினர், பாக்கிஸ்தானின் மத்திய அரசினர்.

1970-ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் புதிய அரசியல் அமைப்பின் கீழ் நடைபெற்ற பொதுத் தேர்தலில், மாநில சுயாட்சிக் கொள்கையைக் குறிக்கோளாக ஏற்றிருந்த 'தேசிய அவாமிக் கட்சி' (National Awamy Party) பெரும்பான்மை உறுப்பினர்களைச் சட்டமன்றத்தில் பெற்றது. பலுசிஸ் மாநில சுயாட்சியின் நாயகனான கான்வாலிகான் அவர்கள் ''தேசிய அவாமிக் கட்சியின்'' தனிப் பெரும் தலைவராக விளங்கினார்.

பாக்கிஸ்தானிலிருந்து வங்கம் பிரிந்தபோது, தேசிய அவாமிக் கட்சி தடை செய்யப்பட்டது. ஆனால், புட்டோ அவர்கள் அத்தடையைப் பின்னர் இரத்து செய்து விட்டார்.

இத்துணைப் போராட்டங்களுக்குப் பிறகும் பலுசிஸ்தான மக்களின் அடிப்படைக் கோரிக்கையான "மாநில சுயாட்சி உரிமைகள்" அவர்களுக்கு முறையாக வழங்கப்பட வில்லை. எனவே, பலுசிஸ்தானியர்களின் மாநிலத் தன்னாட்சிப் போராட்டமும் தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

தேசிய அவாமிக் கட்சியின் தலைவர்களில் ஒருவர் மேற்குப் பாக்கிஸ்தானில் வதியும் நான்கு வகைத் தேசிய இனங்களைப் பற்றிக் குறிப்பிடுகையில்,

> "நாங்கள் நான்கு தனித் தனி தேசிய இனத்தைச் சார்ந்தவர்கள் (பஞ்சாப், சிந்து, பலுசிஸ், பட்டாணியர்). கிழக்குப் பாக்கிஸ்தான் எங்களோடு இணைந்திருந்தபோது, (வங்காளிகளையும் சேர்த்து) நாங்கள் மொத்தம் ஐந்து தேசிய இனங்களைப் பாக்கிஸ்தானில் பெற்றிருந்தோம். ஆனால் பங்களா தேஷ் பிரிவினைக்குப் பின்னரும் கூட, புட்டோ அவர்கள் உண்மையான படிப்பினையைப் பெறவில்லை". 3

எனத் தெளிவாக்குகிறார்.

பலுசிஸ்தானிய மக்களின் மாநில சுயாட்சிப் போராட்டம் தந்த பாடத்தைப் புட்டோ அவர்கள் இப்போது புரிந்து கொண்டார். ஆனால் பலுசிஸ்தானிய மக்களின் போராட்டமும் வங்காள தேசப் பிரிவினையும் நமது மத்தியத் தலைவர்களுக்கு அந்தப் பழைய பாடத்தைப் புகட்ட வில்லையே.

## IV
## பட்டாணிய மாநில சுயாட்சிப் போராட்டம்

வீரத்திற்கும் விடுதலை உணர்விற்கும் விளைநிலமான வட மேற்கு எல்லைப்புற மாகாணம், பட்டாணிய இன மக்களின் தாயகமாகும். பலுசிஸ்தானிய மக்களைப் போலவே, பட்டாணிய மக்களும் தனித்த வரலாற்றுக்குச் சொந்தக்காரர்கள். தமது

---

3 Ibid, Opp. Cited, Note. 1.

தனிப் பண்பாட்டையும், தேசிய இனப் பாரம்பரியத்தையும் அவர்கள் பேணி வளர்த்தவர்கள். பிரிட்டானிய ஏகாதிபத்தியத்தின் அடக்கு முறையால் கூடப் பட்டாணிய மக்களின் சுதந்திர உணர்வுகளை அடிமை கொள்ள இயலவில்லை.

''எல்லைக் காந்தி''யென்று புகழ் பெற்ற கான் அப்துல் கபார் கானும் அவரது இளவல் ''டாக்டர். கான்சாகிப்'' அவர்களும் பட்டாணிய மக்களின் தனித்தலைவர்கள்.இந்தியத்தேசியக் காங்கிரசுக் கட்சி,விடுதலை இயக்கக் காலத்தில் வடமேற்கு எல்லைப் புற மாகாணத்தில் வே ரூ ன் றித் தழைத்து வளர்ந்திருந்தது. ஜின்னுவின்''மத அடிப்படையில் இனம்''என்ற கொள்கையைப் பட்டாணிய மக்கள் ஏற்றுக் கொள்ளாததால், முஸ்லீம் லீக் கட்சி வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தில் செல்வாக்கைப் பெற முடியவில்லை. எனினும் பாக்கிஸ்தான் பிரிவினையின் போது, எல்லைக் காந்தியையும் பட்டாணிய மக்களையும் காங்கிரசுக் கட்சி, கைவிட்டு விட்டது.

1946-ஆம் ஆண்டில் நடைபெற்ற பொதுத் தேர்தலில் காங்கிரசுக் கட்சி எல்லைப்புற மாகாணச் சட்டமன்றத்தில் பெரும்பான்மையைப் பெற்றது. எல்லைப்புற மாகாணம் இந்தியாவோடு இணைவதா? அல்லது பாக்கிஸ்தானேடு சேர்ந்து கொள்வதா? என்ற சிக்கல் எழுந்த போது, பொதுமக்கள் வாக்கெடுப்பின் மூலமாக அதனை நிர்ணயித்துக் கொள்ள வேண்டு மெனத் தீர்மானிக்கப் பட்டது. ஜின்னு அவர்கள் பட்டாணிய மக்களுக்கு முழு மாநில சுயாட்சியைத் தருவதாகவும் அப்போது மொழி, இன, பண்பாட்டுக்குக் குந்தகம் வாராத முறையில் அரசமைப்புச் சட்டம் செய்யப்படும் என்பன போன்ற பல வாக்குறுதிகளை வழங்கினர். ஆனால், அந்த வாக்குறுதிகள் நிறைவேற்றப் படமாட்டாது என்பதை அம்மக்களின் தனிப் பெரும் தலைவரான கான் அப்துல் கபார்கான் அவர்கள் அப்போதே தெளிவாக உணர்ந்திருந்தார்.

வடமேற்கு எல்லைப்புற மாகாணம் இந்தியாவோடு சேர்வதா? பாக்கிஸ்தானேடு சேர்வதா?என்பதை நிர்ணயம் செய்ய நடைபெறும் தேர்தல்களும் நேர்மையான முறையில் நடைபெருது என்பதையும் எல்லைக் காந்தி அவர்கள் புரிந்து வைத்திருந்தார்.

"1935-ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டப்படி" குறிப்பிட்ட சதவிகித (14%) வாக்காளர்களே, அன்றைய நாட்களில் தேர்தலில் வாக்களிக்க முடியும். மொத்தம், 5,73,000 வாக்காளர்களில் 2,73,000 வாக்காளர்கள் மட்டுமே எல்லைப்புற மாகாணத் தேர்தலில் பங்கேற்றனர். பாதிக்கும் மேலானவர்கள் — அதாவது 3,00,000-வாக்காளர்கள் — அத்தேர்தலில் பங்கேற்க வில்லை. நடைபெற்ற தேர்தல்கள் முறையாக நடைபெறாததால் எல்லைப்புற மாகாணம், பாக்கிஸ்தானோடு இணைய வேண்டு மென்ற "மக்கள் தீர்ப்பும்" (!) கிடைத்தது. பாக்கிஸ்தானோடு பட்டாணியர்களின் மாநிலப் பகுதியும் இணைக்கப் பட்டது.

ஜின்னா அவர்கள் வாக்களித்ததைப் போல் பட்டாணிய மக்களைக் கொண்ட எல்லைப்புற மாகாணத்திற்குத் தன்னாட்சி கிடைத்ததா? இல்லை. மாறாக, முஸ்லீம் லீக் கட்சியைச் சார்ந்த முதலமைச்சரான அப்துல் கயும்கான் (ABDUL QUIYUM KHAN) அவர்களின் அடக்கு முறையால் பட்டாணியர்கள் ஒடுக்கப் பட்டனர். பாக்கிஸ்தான் (புனித)நாடு உருவானவுடன் எல்லைப் புறக் காந்தி கான் அப்துல் கபார்கானும் டாக்டர் கான்சாகிப் அவர்களும் மற்றும்ஆயிரக்கணக்கான மாநில சுயாட்சி கோரிய தொண்டர்களும் கைது செய்யப்பட்டுக் காராக்கிரகத்தில் அடைக்கப் பட்டனர். தலைவர்களை விடுதலை செய்யக் கோரிய மக்கள் கூட்டங்களின் மேல் துப்பாக்கிப் பிரயோகங்கள் நடந்தன. 1948-ஆம் ஆண்டில் 100-க்கும் மேற்பட்டவர்கள் கொல்லப் பட்டனர்.

ஆனால், பட்டாணிய மக்கள் பாக்கிஸ்தான் மத்திய அரசின் கொடுங்கோன்மைக்கு அஞ்சவில்லை. அவர்கள் மீது ஏவப்பட்ட இராணுவத்துடன் யுத்த தளவாடத்தோடு போரிட்டனர், பட்டாணியப் பொது மக்கள். தன்னாட்சி கோரிய பன்னூறு பட்டாணியர்கள் அந்தப் போரில் பிணமாயினர். 1950-ஆம் ஆண்டு முதல் 1962-ஆம் ஆண்டு முடிய ஏறத்தாழ12ஆண்டுக் காலம், பட்டாணியர்களின் போராட்டம் தொடர்ந்து நடந்தது. பாக்கிஸ்தானின் படை விமானங்கள் பட்டாணியச் சிற்றூர்களின் மேல் பலமுறை குண்டுமாரி பொழிந்தன.

ஆங்கிலேய ஏகாதிபத்தியத்தின் வெஞ்சிறையில் 15ஆண்டுகளுக்கும் மேலாக வாடி வதங்கிய எல்லைப்புறக் காந்தி சுதந்திர பாக்கிஸ்தானத்தின் சிறைச்சாலையிலும் அதே அளவு காலப்

பகுதியைக் கழித்தார். அவர் செய்த குற்றமென்ன? பட்டாணிய மக்களுக்கு மாநில சுயாட்சி வேண்டுமெனக் கேட்ட பெருங்குற்றம் தான்.

காந்தியடிகளுக்கு இணையான இன்னொரு (எல்லைப்புறக்) காந்தியென்று, காங்கிரசுக் கட்சியினரால் மதிக்கப் பெற்றவர் அவர். ஆனால் அவர் வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தின் தன்னாட்சிக்குப் போரிட்டார்.

பட்டாணியர்களின் தன்னாட்சித் தாகத்தை முறையாகத் தணிக்க முடியாத பாக்கிஸ்தான் மத்திய அரசு, எல்லைக் காந்தியின் சகோதரரான 'டாக்டர். கான்சாகிப்' அவர்களைப் பதவி ஆசை காட்டித் தன் பக்கம் இழுத்தது; துரோகச் செயலால் பட்டாணியரது மாநில சுயாட்சிக் கோரிக்கைக்கு முற்றுப்புள்ளி வைக்கவும் முனைந்தது. அதற்காகவே, டாக்டர். கான்சாகிப் மேற்குப் பாக்கிஸ்தானின் முதல்வராகவும் ஆக்கப்பட்டார். பதவி ஏற்றவுடன் அவர் எல்லைக் காந்தியை விடுதலை செய்தார்.

மகம்மது அயூப்கான் அவர்கள் இராணுவச் சர்வாதிகாரி ஆனவுடன் ''கான்சாகிப்'' அவர்கள் மீண்டும் சிறைக்கனுப்பப்பட்டார். 1964-ஆம் ஆண்டில் அவர் விடுதலை பெற்று இலண்டன் சென்று தற்போது காபூலில் ஓர் அரசியல் அனாதையாகத் திரிகிறார்.

1957-ஆம் ஆண்டு 'எல்லைக் காந்தி' தலைமையில் அவாமிலீக் கட்சி உருவாக்கப்பட்டது. எல்லைக் காந்தி அவர்கள் சிறையில் இருந்ததால் அவருடைய மகனான 'கான்வாலிகான்' அவர்கள் அக்கட்சியின் தலைமைப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். மாநில சுயாட்சிக் கோரிக்கையை மூலக் கொள்கையாக வைத்து இயங்கும் ''தேசிய அவாமிக் கட்சி'' வெகு விரைவில் மக்கள் இயக்கமாக மாறிவிட்டது. 1970-ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்களில் நடைபெற்ற பொதுத் தேர்தலில் மிகப் பெரும்பான்மை இடங்களைத் தேசிய அவாமிக் கட்சி கைப்பற்றியது. ஆனால், 1971-ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் கிழக்கு வங்கப் போராட்டம் வீறுநடை போட்டபோது அக்கட்சியின் தலைவரான 'கான்வாலிகான்' கைது செய்யப்பட்டார். அக்கட்சியும் தடை செய்யப்பட்டது.

தங்க வங்கம் பிரிந்தவுடன் புட்டோவிற்குக் கிடைத்த புதிய பாடத்தால் மாநில சுயாட்சிக் கொள்கையின் மாவீரனை கான்வாலிகான் விடுதலை செய்யப்பட்டார். வடமேற்கு எல்லைப் புற மாகாணத்தின் பட்டாணிய மக்களின் முழு மாநில சுயாட்சிக் கோரிக்கையும் தலைமை அமைச்சரான புட்டோவினுல் ஓரளவிற்கு ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. ஆனால் மத்திய அரசின் வல்லாண்மையைத் தவிர்க்க விரும்பாத 'புட்டோ' அதன் முகவர்களான ஆளுநர்கள் மூலமாகத் தேசிய அவாமிக் கட்சியை மக்கள் மத்தியில் செல்வாக்கு இழக்கச் செய்யும் செயல்களில் ஈடுபட்டு வருகிருர்.

மேற்குப் பாக்கிஸ்தானின் (தற்போதைய பாக்கிஸ்தான்) ''ஒருமைப்பாடு'' ஓம்பப்பட வேண்டுமெனில், பட்டாணியர்களின் ஜனநாயக உரிமைகளும் முழு மாநில சுயாட்சிக் கோரிக்கைகளும், பாக்கிஸ்தான் மத்திய அரசால் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும். ''புட்டோவின் கட்சி'' என்ற இராணுவத்தை அம்மக்கள் இன்றும் சகித்துக் கொண்டிருக்கின்றனர். மத்திய அரசை எதிர்த்து நடைபெறும் பொது வேலை நிறுத்தங்களும் குடியரசுப் போராட்டங்களும், பட்டாணிய மாநிலத்தில் நடைபெறும் அன்றாட அரசியல் நிகழ்ச்சிகளாகி விட்டன. பட்டாணிய மாநிலத்தின் காவல் துறையினர் கூட புட்டோவின் (மத்திய) அரசை எதிர்த்து வேலை நிறுத்தம் செய்கிருர்கள் எனில் அம்மக்களின் மாநில சுயாட்சிப் போராட்டம் எத்துணைச்சிறப்பு வாய்ந்தது என்பது சொல்லாமலே விளங்கும்.

நியூயார்க் டைம்ஸ் பத்திரிக்கையின் நிருபரான மால்கம் என். பிரவுன் (MALCOLM. N. BROWN) அவர்கள், பாக்கிஸ்தானின் சிக்கலைப் பற்றிக் (27—2—1972) கூறும் போது,

> ''பட்டாணிய மற்றும் பலுசிஸ்தானிய மக்களது கோரிக்கைகளை, (பாக்கிஸ்தான் மத்திய அரசு) நிறைவேற்றத் தவறினுல் ஆயுதம் தரித்த பலுசிஸ்தான் மற்றும் பட்டாணியப் போர் வீரர்கள் பாக்கிஸ்தான் அரசை எதிர்த்துப் போரிடக் கூடத் தயாராக இருக்கிருர்கள்.'' 4

எனக் கூறுகிருர்.

---

4 Ibid, Opp. cited, Note. 1. Page. 93.

மேலும் அவர் பட்டாணியர் சிக்கலைப்பற்றிக் குறிப்பிடுவதாவது,

> ''பட்டாணியர்களின் சிக்கல்கள் விரைந்து தீர்க்கப் படாவிடில் அவர்களுடைய கோரிக்கைச் சிக்கல்களே எங்களை (பாக்கிஸ்தான் மத்திய அரசைச் சார்ந்தவர்களை)ப் பூண்டோடு அழித்து விடும் எனப் பாக்கிஸ்தான் உயர்மட்ட அதிகாரி ஒருவர் கருத்துத் தெரிவித்தார்.'' 5

புதிய பாக்கிஸ்தானின் ஒரு மாநிலமான பழைய பாரதத்தின் வடமேற்கு எல்லைப்புற மாகாணம், மாநில சுயாட்சிக் கொள்கையைக் கனல் தெரிக்கச் செயல்படுத்துகிறது. சென்ற 25 ஆண்டு காலமாகப் பட்டாணிய மக்களின் தன்னுட்சிப் போராட்டம் பல மத்திய அரசின் தலைவர்களை வீழ்த்தியுள்ளது. காந்தியடிகளின் நேர் வாரிசான ''எல்லைப்புறக் காந்தி'' அப் போராட்டத்திற்குத் தலைமை வகித்து நடாத்தி வருகிறார். அதற்காகவே பாக்கிஸ்தான் சிறைச்சாலையில் பல்லாண்டுகள் வாடி வதங்கினு ரெனில், இன்றிருக்கும் இந்தியாவின் அரை குறைக் 'காந்தியவாதிகள்' மாநில சுயாட்சிக் கொள்கை என்பது வெறும் தன்னுட்சி யுரிமையை மட்டும் வளர்ப்பதல்ல; அது பிரிவினைக்குரிய வித்து எனப் புலம்புவானேன்?

## V

## பாக்கிஸ்தான் தரும் பாடம்

பாக்கிஸ்தான் புகட்டும் படிப்பினைகள் யாவை?

1. அரசியல் அதிகாரங்களை மையப்படுத்தல் சர்வாதிகாரத்திற்கு வழி வகுக்கும்.

2. ஒற்றை ஆட்சி முறையும் சர்வாதிகாரமும் கொடுங்கோலாட்சியின் இரு கூறுகள்.

3. இந்தியா போன்ற பரந்த நாடு ஒற்றையாட்சி முறையில் செயல்பட்டால் ஜனநாயகம் தழைக்க முடியாது.

4. மத்திய அரசிடம் குவித்து வைக்கப்பட்டுள்ள அதிகாரங்களின் மூலமாக மட்டும் பல்வேறு மொழி, இன, மக்களை ஒற்றுமைப்படுத்த முடியாது.

---

5 Ibid, Note 4.

5. மிகுதியான அதிகாரங்களைக் கொண்ட ''வலிமை வாய்ந்த'' ஒரு மைய அரசால் அதன் பல்வேறு மொழி இன மக்களிடையே நாட்டுப்பற்றை உருவாக்கவும் இயலாது.

6. மிகுந்த அதிகாரங்களைக் கொண்டிருப்பதால் மட்டுமே மத்திய அரசு வலிவுடையதாகாது. மாறாக வளமையும் வலிமையும் கொண்ட மாநிலங்களின் கூட்டுப் பலத்தினால்தான் மத்திய அரசு உண்மையான வலிவைப் பெறுகின்றது.

7. தேசியத் தன்மைகளையுடைய பிரச்சனைகள் மற்றும் சர்வ தேசியத் தன்மைகளையுடைய பிரச்சனைகள் ஆகியவைகளை அணுகத் தேவையான அதிகாரங்களையும், நாட்டுப் பாதுகாப்புக்கான அதிகாரத்தையும் மட்டுமே கொண்டுள்ள மத்திய அரசே திறனும் வலிவும் கொண்டதாகத் திகழ முடியும்.

8. சம தகுதிகளைக் கொண்ட மாநிலங்களைப் பிணைக்கும் வகையிலேயே மத்திய அரசு திகழ வேண்டும்.

9. முழு மாநில சுயாட்சி மறுக்கப்பட்டால் எந்தக் கூட்டாட்சி நாடும் ஒன்று,சர்வாதிகார நாடாக மாறும்; அல்லது காலப் போக்கில் அது பல்வேறு துண்டுகளாகச் சிதறுண்டு போகும்.

10. பல்வேறு தேசிய இனங்களைச் சேர்ந்த மக்களை மதம் கூடப் பிணைக்க முடியாது.

11. அரசமைப்புச் சட்டம் பல்வேறு தேசிய இன மக்களைப் பிணைப்பதற்குரிய வலுவான ஒரு சங்கிலியல்ல; மாறாக மையத்தில் அதிகாரங்களைக் குவிக்கும் அரசியல் அமைப்புச் சட்டம் வலுவற்ற ஒரு நூலைப் போன்றதாகும்.

12. மக்களுக்காகத்தான் அரசியலமைப்புச் சட்டமே யொழிய அரசியலமைப்புச் சட்டத்திற்காக மக்களல்லர். பல்வேறு இன, மொழி மக்களின் இயற்கையான உள்ளுணர்வுகளுக்கு மாறாக அரசியல் அமைப்புச் சட்டம் அமையுமானால் எந்த ஒரு வேளையிலும் அது மக்களால் தூக்கி எறியப்படும்.

13. ஒரு மொழி, ஓரினம், ஒரு மாநிலம் என்ற கொள்கையின் அடிப்படையில் மாநிலங்கள் அமைக்கப்படல் வேண்டும். பல மொழித் தேசிய இனங்களை நிர்வாக நலன் கருதியோ அல்லது மத்திய ஆளுகையின் வசதிக்காகவோ ஒரு மாகாணத்திற்குள் இணைக்க முனைந்தால் அது பிரிவினைக்கே வழி வகுக்கும்.

14. பல்வேறு மொழிகளைப் பேசும் மக்களின்மேல், நாட்டின் 'ஒருமைப்பாடு' என்ற பெயரால் ஒரே மொழியைத் திணித்தல், ஒற்றுமையைக் குலைத்துப் பிரிவினையை விளைவிக்கும்.

15. பல்மொழித் தேசிய மாநிலங்களை உளப்பூர்வமாகப் பிணைப்பதற்கு உண்மையான கூட்டாட்சி முறைதான் சாலச் சிறந்த அரசியல் வழிவகை யாகும்.

16. நாட்டின் பல்வேறு பகுதி மக்களுக்கு முழுச் சுதந்திரமும் ஒருமுகமான பொருளாதார வளர்ச்சியும் கிடைக்க முழு மாநிலத் தன்னாட்சிதான் இன்றியமையாத தாகும்.

17. மாநிலங்களுக் கிடையே நிலவும் ஏற்றத் தாழ்வுகளைக் குறைப்பதற்கும் முழு மாநிலத் தன்னாட்சியே சிறந்த மாற்று மருந் தாகும்.



# 7. தங்க வங்கம் தனி நாடு ஆனதேன் ?

## — மாநிலத் தன்னுட்சி மலராததே —

“ நாங்கள் எங்கள் பங்கைத்தான் கேட்கிறோம்; உங்களுடைய (மத்திய அரசினுடைய) உரிமைகளை யல்ல; நாங்கள் சம உரிமை கொண்ட கூட்டாட்சிகளைப் போல உங்களோடு வாழ விரும்புகிறோம்; சுரண்டிப் பிழைப்பவரைப் போல் அல்ல.” 1

— வங்கச் சிங்கம். ஷேக் முஜிபுர் ரஹ்மான்.

“ இந்திய மாநிலங்களை அடிமைப்படுத்தி மேலாதிக்கம் செய்ய முயற்சிக்கும் எந்த ஓர் ஏற்பாடும் இன்றைய நிலையில் ஒருமைப் பாட்டை ஏற்படுத்தாது. மாறாக, (அந்தப் பேராதிக்கம்) இந்தியத் துணைக் கண்டத்தை மேலும் துண்டாடி விடும்.” 2

— திரு. E. M. S. நம்பூதிரிபாடு.

இந்தியத் துணைக் கண்டம் இரண்டாகப் பகுக்கப்பட்ட இருபத்தைந்து ஆண்டுகளுக்குள் அதன் வரைபடம் மீண்டுமொரு முறை மாற்றி வரையப்பட்டு விட்டது. ‘தங்க வங்கம்’ என்ற ஒரு தனிநாடு உலக நாடுகளில் ஒன்றாக இன்று திகழ்ந்து வருகின்றது.

அதற்குக் கொடுத்த விலை 30 இலட்சம் மக்களின் உயிர்ப் பலி. வங்கத் தங்கம், ஷேக் முஜிபுர் ரஹ்மான் அவர்கள் பாக்கிஸ்தான் மத்தியச் சிறைச்சாலைக்குள் போகும்போது இறுதியாகக் கேட்டது, “முழு மாநில சுயாட்சி”.

---

1 “6 Point Formula - our Right to Live”, by Sheikh Mujibur Rahman Quoted in “Bangaladesh - Documents” (Ministry of External Affairs-New Delhi ) P. 31.

2 Weekly Round Table, 30—4—1972, “Federal India”, P. 4.

முஜுபுரின் பிணத்தைப் புதைப்பதற்காக, அவர் கண்ணெதிரிலேயே பாக்கிஸ்தானிய மத்திய வல்லாட்சியால் புதைகுழி கூடத் தோண்டப்பட்டு விட்டது. ஆனால் அவர் வகுத்த வரலாற்றுப் பேருண்மையான மாநில சுயாட்சிக்கு மட்டும் மரணக் குழியைத் தோண்ட முடியவில்லை—பாக்கிஸ்தான் மத்திய அரசால். தங்க வங்கத்தின் சிங்கம் சிறைச்சாலையிலிருந்து வெளியே வந்தபோது "தனி ஆட்சியின்" தலைவராக வந்தார். தனி மொழி, இன மக்களுக்கு, முறையாகத் தன்னாட்சி வழங்கப் படாவிடில் ஏற்படும் விபரீத விளைவிற்குப் பழைய "அகண்ட பாரதத்தின்" ஒரு பகுதியான பாக்கிஸ்தானத்தின் அண்மை வரலாறே ஒரு கசப்பான படிப்பினையாகும்.

அடிமை இந்தியாவில் வங்கத்தின் மக்களும் மற்ற மாநில மக்களும் பாக்கிஸ்தானியர்களும் ஒரு நாட்டைச் சார்ந்த சகோதரர்கள்; அவர்கள் படித்த வரலாறும் நில நூலும் ஒன்றே; பொருளாதாரப் பிணைப்பிலும் இனந் தெரியாப் பண்பாட்டுப் பிணைப்பிலும் ஒன்றாக இருந்தவர்களெனக் கூறப் பட்டவர்கள் தான். எனவே, 'பாக்கிஸ்தானத்தின்' வரலாறும் 'பாரதம்' எனப் பட்ட இன்றைய இந்தியாவின் வரலாறும் ஒரே கோட்டின் இரண்டு நுனிகள். பாக்கிஸ்தான் புகட்டும் படிப்பினையை நாம் ஒதுக்கித் தள்ளி விடமுடியாது.

## I

## பாக்கிஸ்தானில் மாநில சுயாட்சிக் கொள்கையின் தோற்றம்

பிரியாத பாக்கிஸ்தானில் மாநில சுயாட்சிக் கொள்கை முகிழ்த்து வளர்ந்ததன் வரலாற்றுப் பின்னணி என்ன?

இந்தியத் துணைக் கண்டம் இரண்டாகப் பிரிந்து போகும் முன்னர் 1940-ஆம் ஆண்டில் இலாகூரில் நடந்த முஸ்லீம் லீக் மாநாட்டில் "பாக்கிஸ்தான் தீர்மானத்தை" வங்காளத் தலைவரான, ஏ.கே. பசுல்ஹக் (A. K. FAZL HAQUE) முன் மொழிந்தார். அத்தீர்மானத்தில், விடுதலை பெற்ற பாக்கிஸ்தான் அதன் மாநிலங்களுக்கு முழுத் தன்னாட்சியை வழங்கும் என்ற உறுதி கூறப் பட்டிருந்தது.

''.....இந்தியத் துணைக் கண்டத்தில் வடமேற்குப் பகுதியிலும் கிழக்குப்பகுதியிலும் இருப்பதைப் போல் முஸ்லீம் மக்கள் எண்ணிக்கையில் பெரும்பன்மையாக இருக்கும் நிலப்பகுதிகளை இணைத்து, விடுதலை பெற்ற நாடுகளாக ஆக்கிடல் வேண்டும். அந்த நாடுகளில் அடங்கி யிருக்கும் மாநிலங்கள் தனி இறைமை கொண்டவையாகவும் முழு சுயாட்சி கொண்டவையாகவும் இருக்கும்'' என அத்தீர்மானம் தெளிவாகக் குறிப்பிடுகின்றது. 1946-ஆம் ஆண்டில் டெல்லியில் நடைபெற்ற ''முஸ்லீம் சட்டமன்ற உறுப்பினர்களின் மாநாட்டில்'' மேற்சொன்ன தீர்மானத்தில் கண்டிருந்த ''இரண்டு விடுதலை பெற்ற முஸ்லீம் நாடுகள்'' என்பது ''ஒரு முஸ்லீம் நாடு'' என்று திருத்தப் பட்டது.

பிற்கால வங்க நாட்டின் மாநில சுயாட்சிக் கோரிக்கை, பாக்கிஸ்தானின் மூலக் கோரிக்கை யிலிருந்து பிறந்தது என்பதை இத்தீர்மானத்தின் மூலம் தெளிவாக உணரலாம்.

பாக்கிஸ்தான் பிரிய வேண்டும் என்ற கொள்கையைப் பேணி வளர்த்துப் பின்னர் வெற்றி கண்டவர்கள் முஸ்லீம்கள். அரசியல், மொழி, பொருளாதாரப் பண்பாட்டுத்துறைகளில் அடக்கி ஒடுக்கப்பட்டதால் பாக்கிஸ்தானிய மத்தியத் தலைவர்களை எதிர்த்து முதன் முதலில் போர்க் கொடி உயர்த்தியவர்களும் (பாக்கிஸ்தான் விடுதலைக்கு மூல காரணமாக இருந்த) அதே வங்காளிகளே.

1948-ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்களில் டாக்காவில் நடந்த பல்கலைக் கழக மாணவர் கூட்டத்தில் பாக்கிஸ்தானின் முதல் கவர்னர் ஜெனரல் முகமதலி ஜின்னு அவர்கள் உரையாற்றும் போது,
''பாக்கிஸ்தான் நாட்டுக்கு ஒரே ஆட்சி மொழிதான் இருக்க முடியும்; அதுதான் உருது மொழி.'' என்றுர்.

அப்போது பாக்கிஸ்தானின் தந்தையை எதிர்த்து முழக்கமிட்டான் ஒரு பல்கலைக் கழக மாணவன். அவன்தான் பிற்கால பங்களா தேசத்தின் தந்தை, ஷேக் முஜுபுர் ரஹ்மான்.

பாக்கிஸ்தான் விடுதலை பெற்ற ஈராண்டுகளுக்குள் அதற்கு விடுதலையை வாங்கித் தந்த முஸ்லீம் லீக் கட்சி வலுவிழந்து துவண்டு போயிற்று. 1949-ஆம் ஆண்டு சூன் திங்களில் முஸ்லீம் கட்சியைச் சார்ந்த ஒரு பகுதியினர், திரு. மௌலானு பாஷாணியையும், ஷேக் முஜுபுரையும், திரு. ஷம்சுத்ஹக்கையும்

தலைவர்களாகக் கொண்டு ''அவாமி முஸ்லீம் லீக் கட்சியைத்'' துவக்கினர். அதுவே 6-ஆண்டுகள் கழித்து, ''அவாமி லீக் கட்சியாக'' மாறிற்று. அதன் சீரிய கொள்கைகளில், அடிப் படையான கொள்கை 'மாநில சுயாட்சி'.

1952-ஆம் ஆண்டில் 'கனதந்திரக் கட்சியும்' உருவாயிற்று.

பழைய பாக்கிஸ்தான் தீர்மானத்தை முன்மொழிந்த பசுல் ஹக் அவர்கள் அதே ஆண்டில் கிருஷிக் ஷர்மித் கட்சி [Krishak Sharmite] யைத் தொடங்கினர்.

இந்த மூன்று எதிர்க் கட்சிகளும் பல வகைகளில் ஒன்றுக் கொன்று மாறுபட்டிருப்பினும் மாநில சுயாட்சிக் கொள்கையில் ஒருமித்து நின்றன. பாக்கிஸ்தானின் மாநிலங்கள் முழு மாநில சுயாட்சி பெற வேண்டும்; ''மாநிலங்களுக்குச் சுயாட்சி அளிக் கப்படா விடில் பாக்கிஸ்தான் மக்களுக்கு எவ்வகைக் குடியாட்சி நன்மைகளையும் வழங்கிட இயலாது.'' என்பதே இம் மூன்று கட்சிகளின் அடிப்படைக் கொள்கைகள்.

இந்தியத் தேசியத் தலைவர்களைப் போலவே அன்றைய பாக்கிஸ்தான் முஸ்லீம் லீக் தலைவர்களும் முழு மாநில சுயாட்சி அளிக்கப்பட்டால் பாக்கிஸ்தான் துண்டாகி விடும் எனக் கருதினர். 'கூட்டாட்சியா?' அல்லது 'ஒற்றையாட்சியா?' என்பதை முடிவு செய்யாமலேயே பாக்கிஸ்தானின் முதல் அரசியல் நிர்ணய சபை 9-ஆண்டுகள் தத்தளித்து நின்றது. கலப்பில்லாத குடியரசை நிலை நாட்டவும் முழுமையான சுயாட்சியைக் கொண்ட மாநிலங்களை இணைத்து ஓர் உண்மை யான கூட்டாட்சியைப் படைக்கவும் மேற்சொன்ன மூன்று எதிர்க் கட்சிகளும் மத்திய ஆளும் கட்சிக்கெதிராக ஓர் ஐக்கிய முன்னணியை ஏற்படுத்திக் கொண்டன.

வங்கத்தின் தன்னாட்சித் தீர்மானம்

1954-ஆம் ஆண்டில் நடந்த கிழக்கு வங்கத் தேர்தலில் ஐக்கிய முன்னணி 276 இடங்களையும் முஸ்லீம் லீக் கட்சி, பத்தே பத்து இடங்களையும் பெற்றன வெனில், அம்மக்களின் மாநில சுயாட்சிப் பற்று எத்துணை வலிவான தென்பதைத் தெளிவாகப் புரிந்து கொள்ளலாம்,

அதுவரை கிழக்கு வங்கத்தின் முஸ்லீம் லீக் முதலமைச்சராக இருந்துவந்த நூருல் அமீன் அவர்கள், அவருடைய சட்டமன்ற உறுப்பினர் பதவியைக் கூடத் தக்க வைத்துக் கொள்ள முடியவில்லை. வரலாறு காணாத வெற்றியைக் குவித்த ஐக்கிய முன்னணிக் கட்சி ''பசுல்ஹக்'' தலைமையில் கிழக்கு வங்க மாநிலத்தின் புதிய அமைச்சரவையை அமைத்தது. அதில் சேக் முஜிபுர் ரஹ்மான் வர்த்தக அமைச்சரானார்.

புதிய அரசியல் கொள்கைகள் அமுல் படுத்தப்பட்டன. புதிய முதலமைச்சர் இந்திய நாட்டிலிருக்கும் கல்கத்தாவிற்குக் கூட வருகை தந்து இந்தியாவும் பாக்கிஸ்தானும் நட்பு நாடுகளாக வேண்டுமெனச் சொற்பொழிவாற்றினார். அந்த முதலமைச்சரின் மேல் தேசத் துரோகக் குற்றம் சாட்டி அவரைச் சிறைப்படுத்தியது, பாக்கிஸ்தான் மத்திய அரசாங்கம். 31-5-1953-ஆம் நாளில் ஐக்கிய முன்னணி அமைச்சரவையும் கலைக்கப்பட்டது. இஸ்கந்தர் மிஸ்ரா, கிழக்கு வங்கத்தின் ஆளுநர் ஆனார். அவர் பயங்கர அடக்கு முறையையும், கொடுமையையும் அவிழ்த்து விட்டார். வங்க மாநிலத்தின் 'மக்கள் அமைச்சரவை' கலைக்கப்பட்டாலும் அம்மக்களின் மாநில சுயாட்சிக் கொள்கையை மத்திய அரசால் அழிக்க முடியவில்லை.

ஒற்றையாட்சிச் சாயலைக் கொண்ட முதல் பாக்கிஸ்தான் அரசியல் சட்டம் 1956-ஆம் ஆண்டில் அமுலுக்கு வந்தது. அச்சட்டம் ஏறத்தாழ இன்றைய இந்திய அரசமைப்பின் மறு பதிப்பாக இருந்தது — மாநிலங்களைப் பொறுத்தவரை. அந்த அரசமைப்பில் முழு மாநில சுயாட்சி தரப்பட வில்லை என்ற காரணத்தால் கிழக்கு வங்கம் அதனை ஏற்க மறுத்தது. 1957-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்களில் (2-4-1967), கிழக்கு வங்கச் சட்ட மன்றம் வரலாற்றுப் புகழ் பெற்ற மாநில சுயாட்சித் தீர்மானத்தை நிறைவேற்றிற்று — 1974-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 20-ஆம் நாளிலும், 25-ஆம் நாளிலும் தமிழ்நாடு சட்டப் பேரவையும் சட்ட மேலவையும் நிறைவேற்றிய மாநில சுயாட்சித் தீர்மானத்தைப் போல.

பாக்கிஸ்தான் மாநிலங்கள் முழுமையான சுயாட்சியைப் பெற்றுத் திகழ வேண்டும் எனவும் ''பாதுகாப்பு'', ''வெளி நாட்டு விவகாரங்கள்'' மற்றும் ''நாணயம்'' ஆகியவை மட்டும் மத்திய அரசின் அதிகாரங்களாக இருக்க வேண்டும் எனவும்

மற்ற அதிகாரங்கள் அனைத்தும் மாநிலங்களுக்கே அளிக்கப்பட வேண்டும் எனவும் கிழக்கு வங்கச் சட்ட மன்றத் தீர்மானம் கூறிற்று......

—"மத்தியத்தில் கூட்டாட்சி", "மாநிலங்களில் சுயாட்சி" கொண்ட உண்மையான கூட்டாட்சி முறையை உருவாக்கும் அடிப்படையில் இந்திய அரசமைப்புச் சட்டம் உடனடியாகத் திருத்தப்பட வேண்டும்" என்று தமிழக அரசின் சட்ட மன்றத் தீர்மானம் கூறுவதைப் போல—

கிழக்கு வங்கத்தின் மாநில சுயாட்சித் தீர்மானம் பாக்கிஸ்தான் மத்திய அரசைக் குலுக்கியது. பாக்கிஸ்தான் உள்நாட்டமைச்சர், திரு. மீர்குலாம் அலிதல்பூர் அவர்கள், பாக்கிஸ்தான் நாடாளு மன்றத்தில் பேசும் போது,

> "இவ்வகை நடவடிக்கைகளை எந்தச் சூழ்நிலைகளிலும் வெற்றி பெறுவதற்கு (பாக்கிஸ்தான்) மத்திய அரசு அனுமதிக்காது; இரும்புக்கரம் கொண்டு அதனை ஒடுக்கும்."

என முழங்கினர். ஆனால், சில நாட்களில் மத்திய நிர்வாகம் மாறி விட்டது.

1958-ஆம் ஆண்டில் அயூப்கானின் இராணுவ ஆட்சி ஏற்பட்டது. வங்கத்தின் மாநில சுயாட்சி இயக்கம் "இரும்புக் கரத்தால் ஒடுக்கப் பட்டது" பாக்கிஸ்தானுக்கு ஒரு புதிய அரசமைப்புச் சட்டத்தை "குடியரசு முறையில்"(?) உருவாக்குவதற்காகப் பாக்கிஸ்தான் தலைமை நீதி மன்ற நீதிபதி, திரு. ஷகபுதீன் அவர்கள் தலைமையில் ஓர் "அரசமைப்புச் சட்ட ஆணைக் குழுவை", இராணுவச் சர்வாதிகாரி அயூப்கான் நியமித்தார். அக்குழுவும் தன் அறிக்கையைத் தந்தது. இன்றைய வங்க தேசத்தின் முதல் குடியரசுத் தலைவராக அமர்த்தப்பட்ட சையீத் செளத்திரி அவர்கள் அக்குழு தந்த அறிக்கைக்கு எதிரான ஒரு மறுப்புக் குறிப்பையும் ( Dissenting Minute ) கொடுத்தார். அந்த மறுப்புக் குறிப்பில் "முழு மாநில சுயாட்சி" வலியுறுத்தப் பட்டிருந்தது. ஆனால் அக்குழுவின் அறிக்கையை ஏற்காத அயூப்கான் தனது சொந்த அரசியல் சட்டத்தை 1962-ஆம் ஆண்டில் பாக்கிஸ்தான் மீது திணித்தார்.

ஷேக் முஜிபுர் ரஹ்மானும், அவரது கட்சியும் அயூப்கானின் ''மேலாண்மை அரசமைப்பை'' (Authoritarian Constitution) ஏற்க மறுத்து விட்டனர். மாநில சுயாட்சிப் போராட்டம் தொடங்கிற்று. மாநில சுயாட்சியை உயிர் மூச்சாகக் கொண்ட முஜிபுர், நான்கே ஆண்டுகளில் கிழக்கு வங்க மக்களின் முடிசூடா மன்னனாக உயர்ந்து விட்டார். அவாமி லீக் கட்சியின் தன்னிகரற்ற தலைவரானார்.

## II

### — மாநில சுயாட்சிக் கொள்கை —

### ஷேக் முஜிபுரின் விளக்கம் 3

மாநில சுயாட்சிக்கு இலக்கணம் வகுக்கும் வரலாற்றுப் புகழ் பெற்ற தன் ஆறு அம்சத் திட்டத்தை 3 (Six Point Formula) 23—3—1966-ஆம் நாளில் ஷேக் முஜிபுர் ரஹமான் அவர்கள் அறிவித்தார்.

ஆறு அம்சத் திட்டம்

1. *1940*-ஆம் ஆண்டில் அகில இந்திய முஸ்லீம் லீக் கட்சியால் இலாகூர் மாநாட்டில் நிறைவேற்றப் பட்ட தீர்மானத்தின் அடிப்படையில் ஓர் உண்மையான கூட்டாட்சியையும், வயது வந்தவர்க்கு வாக்குரிமை என்ற அடிப்படையில் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் பிரதிநிதிகளைக் கொண்ட சட்ட மன்றங்கள் முதன்மையைப் பெரும் வகையில் நாடாளு மன்ற ஜனநாயக முறை அரசையும் பாக்கிஸ்தான் அரசமைப்புச் சட்டம் உருவாக்க வேண்டும்.

2. கூட்டாட்சி அரசு(மத்திய அரசு) ''வெளிநாட்டு விவகாரம்'' மற்றும் ''பாதுகாப்பு'' ஆகிய இரண்டே இரண்டு அதிகாரங்களை மட்டும் பெற்றிருக்க வேண்டும். மற்ற அனைத்து அதிகாரங்களும் அக் கூட்டாட்சியில் இணையும் மாநிலங்களுக்கே அளிக்கப்படல் வேண்டும்.

3. (அ) மேற்குப் பாக்கிஸ்தானுக்கும், கிழக்குப் பாக்கிஸ்தானுக்கும் தங்கு தடையின்றிப் பயன்படுத்தக் கூடிய(Convertable)தனித்தனி நாணயங்கள் இருக்கலாம்; அல்லது

---

3 Ibid, Note 1. Pp. 23 to 33.

(ஆ) பாக்கிஸ்தான் முழுவதற்கும் ஒரே நாணயம் இருக்க லாம். அப்படி ஒரே நாணயம் தான் இருக்க வேண்டு மெனில் கிழக்குப் பாக்கிஸ்தானிலிருந்து மேற்குப் பாக்கிஸ்தானுக்குச் செல்லும் முதலீடுகளைத் தடுக்கத் தேவையான அரசமைப்பு விதிகள் செய்யப்படல் வேண்டும். கிழக்குப் பாக்கிஸ்தானுக் கென்று, தனித்த வங்கித் தொகு நிதியும் [ Consolidated Fund ] நிதி மற்றும் பொருளாதாரத் துறைகளில் தனிக் கொள்கை யும் இருத்தல் வேண்டும்.

4. வரிகளை விதிப்பதற்கும், வசூலிப்பதற்கும் உரிய எல்லா அதி காரங்களும் மாநிலங்களிடமே இருத்தல் வேண்டும். அவ்வகை அதிகாரங்கள் மத்திய அரசுக்கு இருத்தல் கூடாது. மத்திய அரசுக்குரிய செலவினங்களைச் சரிக் கட்டிக் கொள்வதற் காக மாநிலங்களால் வசூலிக்கப்படும் வரித் தொகைகளி லிருந்து ஒரு பங்கை மத்திய அரசு பெற்றுக் கொள்ளும். எல்லா மாநில வரிகளிலிருந்தும் குறிப்பிட்ட சதவிகிதத்தை விதிப்பதன் முலம் பெறக் கூடிய தொகையிலிருந்தே மத்தியத் தொகு நிதி [ Federal Consolidated Fund ] ஏற்படுத்தப் பட வேண்டும்.

5. (அ) வெளிநாட்டுச் செலாவணியைப் பொறுத்த அளவில் கிழக்குப் பாக்கிஸ்தானுக் கென்றும் மேற்குப் பாக்கிஸ் தானுக் கென்றும் தனித் தனியான இரண்டு வரவு செலவுக் கணக்குகள் இருத்தல் வேண்டும்.

(ஆ) கிழக்குப் பாக்கிஸ்தானத்தின் வருவாய்கள் கிழக்குப் பாக்கிஸ்தானிய அரசின் கட்டுப் பாட்டிலும், மேற்குப் பாக்கிஸ்தானிய வருவாய்கள் மேற்குப்பாக்கிஸ்தானிய அரசின் கட்டுப்பாட்டிலும் இருத்தல் வேண்டும்.

(இ) மத்திய அரசுக்குத் தேவையான வெளிநாட்டுச் செலாவணியைச் சம அளவிலோ அல்லது குறிப்பிட்ட விகிதத்திலோ கிழக்குப் பாக்கிஸ்தானும் ஏற்றுக் கொள்ளல் வேண்டும்.

(ஈ) தனியார் சரக்குகள் யாவும் கிழக்கு மற்றும் மேற்குப் பாக்கிஸ்தானில் தீர்வை யின்றிப் புழங்க வேண்டும்.

(ஏ) வெளிநாடுகளுடன் வணிகம் மற்றும் வர்த்தக உறவுகளை ஏற்படுத்திக் கொள்வதற்கும், வர்த்தகத் தூதுக் குழுக்களைப் பரிமாற்றம் செய்துகொள்வதற்கும், வர்த்தக ஒப்பந்தங்களைச் செய்து கொள்வதற்கும் மாநில அரசுகளுக்கு அதிகாரம் வழங்கப்படல் வேண்டும்.

6. கிழக்குப் பாக்கிஸ்தானுக் கென்று முழுமையான ஓர் இராணுவமோ அல்லது ஒரு பகுதி இராணுவமோ தனியாக அமைக்கப்படல் வேண்டும்.

மேற்சொன்ன ''ஆறு அம்சங்களும் பிரிவினைக் கோரிக்கைகளல்ல; மாறாக முழு மாநிலத் தன்னாட்சியின் சிறப்புக் கூறுகளாகும்'' என முஜிபுர் அவர்கள் தெளிவாக்கினார்.

முஜிபுரும் கலைஞரும்

முதல் கோரிக்கையில் மாசு மருவற்ற உண்மைக் கூட்டாட்சி முறையைக் கோருகிறார் முஜிபுர் அவர்கள். அதில் தனி நாட்டுக் கோரிக்கையின் வாடைகூட இல்லை.

இலாகூர் தீர்மானம் என்று அழைக்கப்பட்ட 'பாகிஸ்தான் தீர்மானத்தில்',

''மாநிலங்கள் தனி இறைமை கொண்டவையாகவும் முழு சுயாட்சி கொண்டவையாகவும் இருக்கும்'' எனத் தெளிவாக்கப்பட்டிருந்தது. ''அத்தீர்மானத்தில் பொதிந்த வாசகங்களை யார் மறுத்தாலும் பாக்கிஸ்தான் என்ற தனி நாட்டை உருவாக்கி வளர்த்த தனிப் பாக்கிஸ்தான் புரட்சியும் அதற்காக அளிக்கப்பட்ட தியாகங்களும் மறுக்கப்படுகின்றன என்றும் பொருள்; எந்தத் தீர்மானத்தின் அடிப்படையில் பாக்கிஸ்தான் பிரிந்ததோ அத்தீர்மானத்தின் உயிர்த் தத்துவத்தை—கூட்டாட்சிக் கொள்கையை—நடைமுறைப் படுத்தாத எந்த ஓர் அரசும் உண்மைப் பாக்கிஸ்தான் அரசல்ல.''

என வாதிடுகிறார் முஜிபுர் அவர்கள்,

''1947-ஆம் ஆண்டு ஜனவரி 22-ஆம் நாளில் இந்திய அரசியல் நிர்ணய சபையில் பண்டித ஜவகர்லால் நேரு அவர்களால் முன்மொழியப்பட்டு ஒருமனதாக நிறை

வேற்றப்பட்ட "குறிக்கோள் தீர்மானத்தின்" (Objective Resolution) அடிப்படையில் முழு மாநில சுயாட்சியையும் உண்மை மத்தியக் கூட்டாட்சியையும் உருவாக்கி அமுல்படுத்தாத எந்தவோர் அரசும் உண்மையான இந்தியக் கூட்டாட்சி அரசாக இருக்க முடியாது."

எனத் தமிழ் மக்களின் தானைத் தலைவரான, டாக்டர். கலைஞர் அவர்கள் வாதிடுவதைப் போல.

மத்திய அரசின் அதிகாரங்களாக எவையெவை இருக்க வேண்டும்; மாநிலங்களுக்கு உரிய அதிகாரங்கள் எவை யெவை; என்பதை அறுதியிட்டுக் கூறுகிறார்—வங்கச் சிங்கம் தம் இரண்டாவது கோரிக்கையில். வலிமையான மத்திய அரசு வேண்டும், அதற்காக அடிப்படையான அதிகாரங்கள் முழுவதும் மத்திய அரசிடம்தான் குவிக்கப்பட்டிருக்க வேண்டும் எனக் கூறு பவர்களுக்கு முஜிபுரின் விளக்கமே தக்க பதிலாகும். எனவே, வங்கச் சிங்கத்தின் வாசகங்களைக் கீழே தருகிறோம்.

"இரண்டே அதிகாரங்களைப் பெற்ற மத்திய அரசு, மதிப்பு வாய்ந்த கூட்டாட்சிக்குத் தேவையான வலிமையைப் பெற்றிருக்க முடியுமா என்பதை விருப்பு வெறுப்பின்றி ஆய்வோம். ஒரு கூட்டாட்சியை வலிமையுள்ளதாக ஆக்குவது—அதில் குவித்து வைக்கப்பட்டிருக்கும் அதி காரங்களின் ஈட்டமல்ல என்பதை நாம் மனதில் கொள்ள வேண்டும்; அமைதிக் காலத்தில் நாட்டு மக்கள் செலுத் தும் நாட்டுப் பற்றும் பாசமும், போர்க்காலத்தில் அம் மக்கள் காட்டும் கடப்பாட்டுணர்ச்சியும், அரசின் ஆணைக்கு அடங்கி நடக்கும் பணிவுமே ஒரு கூட் டாட்சியை வலிவுடையதாக்கும். மத்திய அரசு பெற் றிருக்கும் அதிகாரங்களின் எண்ணிக்கையைக் காட்டிலும், வலிமையும் மகிழ்ச்சியும் கொண்டிருக்கும் மக்களைப் பிரதி பலிக்கக்கூடிய "திறனும்" 'வலிவும்' கொண்ட மாநிலங் களே அக்கூட்டாட்சியின் உண்மையான பலமாகும். மேல் மட்டத்திலிருப்பவர்களுக்குப் பணியாற்றும் அரசைக் காட்டிலும் அடித்தளத்திலிருப்பவர்களுக்கு உழைக்கும் அரசைக் கொண்ட நாடே உண்மையில் வலிவுள்ள நாடாகும்."

''ஒரே மையத்தில் குவிக்கப்பட்டுள்ள அதிகாரங்களைக் காட்டிலும் பரவலாக்கப்பட்ட அதிகாரங்களின் மூலமாக நிர்வாகத்திலும் வளர்ச்சித் துறைகளிலும் ஒரு நாட்டின் பணியைத் திறனுடையதாக ஆக்க முடியு மென்பது எல்லாராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஓர் அரசியல் கோட்பாடாகும். மிகுந்த திறமையுடனும் இலாபகரமான முறையிலும் இணைந்து நிர்வகிக்கத் தக்க அதிகார இனங்கள் மட்டுமே மத்திய அரசின் அதிகாரப் பட்டியலில் இருத்தல் வேண்டும் என்பது இன்றைய நாளில் எல்லாராலும் ஒப்புக் கொள்ளப்பட்ட கூட்டாட்சிக் கொள்கையாகும். நகராட்சி மன்றங்கள், மாவட்ட ஆட்சி மன்றங்கள் போன்ற உள்ளாட்சி நிறுவனங்களின் அமைப்பு முறையை அதே கொள்கைகள் தாம் வலியுறுத்துகின்றன.''

''வேற்றுமையில் ஒற்றுமை என்ற கொள்கையும் அதிகாரங்களை ஒருமுகமாக்காமல் ஏற்படும் ஒருமைப்பாடு என்ற கோட்பாடுமே கூட்டாட்சியின் மூலச் சித்தாந்தமாகும்.''

''மேற்சொன்ன கொள்கையின் அடிப்படையில்தான் 'பாதுகாப்பு', 'வெளிநாட்டு விவகாரங்கள்', மற்றும் 'செய்தித் தொடர்பு' ஆகிய மூன்றே அதிகாரங்களுடன் கூடிய ஓர் இந்தியக் கூட்டாட்சியைப் பிரிட்டானிய அமைச்சரவைத் தூதுக் குழு 1946-ஆம் ஆண்டில் முன்னிலைப் படுத்தியது. அதனைக் காங்கிரசும், முஸ்லீம் லீக்கும் ஏற்றுக் கொண்டன. இறுதியில் அந்த அரசமைப்பு முறை சில சூழ்நிலைகளின் காரணமாக நடைமுறைக்கு வரவில்லை என்பது வேறு. ஆனால் நம்முன் இருக்கும் பிரச்சனைக்கும் அதற்கும் யாதொரு தொடர்புமில்லை. ஆங்கிலப் பேரரசு அவ்வாறு ஒரு திட்டத்தைக் கொடுத்ததிலிருந்தும் காங்கிரசும் முஸ்லீம் லீக்கும் அதனை ஏற்றுக் கொண்டதிலிருந்தும் மூன்றே அதிகாரங்களைக் கொண்ட ஒரு கூட்டாட்சியை நிறுவ முடியும் என்பதில் அவ்விரு கட்சிகளும் கருத்தொருமித்திருந்தனர் என்பது கண்கூடு. பிரிட்டானிய அமைச்சரவைத் திட்டத்தில் அளிக்கப்பட்டிருந்த மூன்று அதிகாரங்களுக்கு மாறாக இரண்டு அதிகாரங்களை மட்டுமே எனது திட்டத்தில் நான் (மத்திய

அரசுக்கு) வழங்கி யிருக்கிறேன். இதுதான் என் திட்டத் திற்கும் அமைச்சரவைத் திட்டத்திற்கும் உள்ள வேறுபாடு. அந்த வேறுபாடும் கூட மேலோட்டமானதே யன்றி உண்மையான தல்ல என்பதை என் மூன்ருவது திட்டத் தின் விளக்கம் தெளிவுபடுத்தும். நான் மத்திய அரசிற் குத் தந்துள்ளது இரண்டு அதிகாரங்க ளல்ல, மூன்று அதிகாரங்கள் என்பதை அந்த விளக்கம் கோடிட்டுக் காட்டும். ‘‘செய்தித் தொடர்புகள்’’ என்பதற்கும் மாருக ‘‘நாணயம்’’ என்ற அதிகாரத்தை நான் பரிந்துரைத்துள் ளேன்.’’

முஜிபுரும் கழகமும்

வரையறுக்கப்பட்ட இரண்டு அதிகாரங்களை வைத்தே ஒரு நல்ல கூட்டாட்சியின் மத்திய அரசு செம்மையாகவும் வலிவுட னும் இயங்க முடியு மென்பதையும், ஒரு கூட்டாட்சி நாட்டின் மத்திய அரசு மிகுதியான பலத்துடன் விளங்க வேண்டு மெனில் அதன் மாநிலங்களும் வலிவும் பொலிவும் பெற்றுத் திகழ வேண்டு மென்பதையும் தர்க்க ரீதியாக நிலைநாட்டுகிருர் — மா நில சுயாட்சிக் கொள்கைக்கு விளக்கம் கூறிய முஜிபுர் அவர்கள். அவர் பிரிவினையை விழைந்திருந்தால் ஆறு அம்சத் திட்டத்திற்கு மாருக, ‘‘பிரிவினை’’ என்ற ஒரே அம்சத் திட்டத்தை வெகு எளிதாக விளக்கி யிருக்க முடியும்; அரசியற் தத்துவங்களை இப்படி அலசி யிருக்க வேண்டிய தில்லை.

முஜிபுர் அவர்கள் இரண்டு அதிகாரங்களைத் தான் மனமுவந்து அளிக்கிருர் மத்திய அரசுக்கு. விடுதலைக்கு வழி வகுத்த பிரிட்டானிய அமைச்சரவைத் தூதுக் குழுவும் கூட மூன்று அதிகாரங்களை மட்டுமே அன்றைய பரந்த பாரதக் கூட்டாட்சி அரசுக்குப் பரிந்துரைத்தது.

ஆனால், ‘‘திராவிட முன்னேற்றக் கழகம்’’, இன்னும் ஒருபடி மேலே சென்று இன்றைய மத்திய அரசுக்கு நான்கு அதிகாரங்களை வழங்கலா மென்று வாதாடுகின்றது. அஃதாவது ‘‘வெளிநாட்டு விவகாரங்கள்’’, ‘‘பாதுகாப்பு’’, ‘‘மாநிலங்களிடையே செய்தித் தொடர்புகள்’’ ஆகிய மூன்று அதிகாரங்களோடு, மத்திய அரசின் நிதிச் செல்வாக்கைச் சிதைக்கக் கூடா தென்ற கருத்தில் ‘‘நாணயம்’’ என்ற நான்காவது அதிகாரத்தையும் மத்திய அரசுக்கு

வழங்கி விடுவதுதான், இந்திய ஒற்றுமையை மேலும் வலுப் படுத்தும் என அது பரிந்துரைக்கின்றது. ஆனல், அதனைப் ''பிரிவினை வித்து'' எனக் கூசாமல் கூறுகின்றனர் தேசியத் தலைவர்கள். திராவிட முன்னேற்றக் கழகத்தின் சீரிய இக் கூட்டாட்சித் திட்டம் பிரிவினை வாதமெனில், அமைச்சரவைத் தூதுக் குழுவின் ''மூன்றதிகாரத் திட்டம்'' மட்டும் அகில பாரதத்தை ஓர் உண்மையான கூட்டாட்சியில் பிணைத்துவிட முடியும் என அபுல்கலாம் ஆசாத் முதல் அண்ணல் காந்தியடிகள் வரை அன்றையத் தேசியத் தலைவர்கள் அதனை எவ்வாறு ஏற்றுக் கொண்டனர்?

முஜிபுரின் இரண்டு அதிகாரத் திட்டத்தை இராணுவச் சர்வாதிகாரி ''யாகியாகான்'' பாக்கிஸ்தான் தேர்தலுக்கு முன்னுல் ஏற்றுக் கொண்டு அதன் பின்னர் அதனை முழுமையாக அமுல் படுத்த மறுத்த காரணத்திற்காகவே, மாண்புமிகு. இந்திரா காந்தி அம்மையாரவர்கள் வங்காள நாட்டைத் தனிநாடாகப் பிரித்துக் கொடுத்தா ரெனில், நான்கு அதிகாரங்களை வழங்கும் திராவிட முன்னேற்றக் கழகத்தின் முழு மாநில சுயாட்சிக் கோரிக்கையை மட்டும் ''பிரிவினைக் கோரிக்கை'', ''மத்திய அரசைப் பலவீனப்படுத்தும் முயற்சி'' எனச் சாடுவானேன்?

முஜிபுரின் மாநில நிதி சுயாட்சி

மாநில சுயாட்சிக் கோரிக்கை உலகின் ஒவ்வொரு பகுதியிலும் வலிவோடு எழுவதற்குத் தலையாய காரணம் நிதிநிலையே. மக்களின் அன்றாட வாழ்வோடு இரண்டறக் கலந்து நிற்கும் மாநில அரசுகளே — வளர்ச்சிப் பணிகளோடு மக்களின் அன்றாடத் தேவைகளையும் நிறைவேற்றும் பொறுப்புடைய அரசுகளாகும். திட்டம் தீட்டுதல், செயல் படுத்துதல் ஆகிய அனைத்திற்கும் வரையறுக்கப்பட்ட பொருளாதாரம் இன்றியமையாத தாகின்றது. வளர்ச்சிப் பணிகளுக்கு ஏற்பப் பொருளாதாரத்தை வரைமுறைப் படுத்தவும், வரி மூலங்கள் வாயிலாக நிதி வசூலிக்கவும் தக்க அதிகாரங்கள் மாநிலங்களுக்கே தேவையென்பதை முஜிபுர் அவர்கள் மிக அழகாகப் பின் வருமாறு குறிப்பிடுகிறுர்;

''என் திட்டத்தை நான்காவது அம்சத்தில் வரி விதிப்பும் வரி வசூலும் மாநிலங்களுக்கே அளிக்கப்பட வேண்டும், மத்தியத்திற்கு அளிக்கப்படக் கூடாதென வலியுறுத்து

கிறேன். மத்திய அரசின் செலவினங்களுக்காக மாநில வரிகளிலிருந்து பங்குத் தொகை அளிக்கப்பட வேண்டும்... அரைகுறைக் கூட்டாட்சி வாதிகளையும், ஒற்றையாட்சி முறையை வலியுறுத்துபவர்களையும் இத் திட்டம் மிகமிக அவதிக்குள்ளாக்குகிறது. 'பிளவுக்குக் குழி' ''நாட்டைச் சிதைக்கும் முயற்சி''என்றெல்லாம் கூறி, ''குழப்பம்'' என்கிற புழுதியை வாரி இறைக்கின்றனர். இவை யெல்லாம் பழைய மொட்டைச் சகடங்கள் கிளப்பும் நாராச ஒலி போன்றவை. எல்லாக் காலங்களிலும் எல்லாச் சீர்திருத்தங்களுக்கும் எதிராக 'அதிகார நலக் கும்பல் களால்' (Vested Interests) பயன்படுத்தப்படும் பொருளற்ற வக்கணை வாதங்களே இவை......''

''உண்மை யென்னவெனில் வரி விதிப்பு அதிகாரமில்லாமலேயே ஒரு வலிவான கூட்டாட்சியின் மத்திய அரசு வெற்றிகரமாக இயங்க முடியும். ஏன், வெற்றிகரமாய் இயங்கியும் வருகின்றன. அது மத்திய அரசை மேலும் வலிமையுள்ள தாக்குகிறது. ஏனெனில் 'வரி விதிப்பு' என்பதை ஓர் 'உரிமை' அல்லது 'அதிகாரம்' எனக் கூறுவதைக் காட்டிலும் அதனை ஒரு 'கடமை' அல்லது 'ஓர் அவசியத் தேவை' என்றுதான் சொல்ல முடியும். வரிகளை விதிப்பதும் வசூலித்தலும் ஒரு மிகப் பெரிய பொறுப்பு; தொல்லையும் கூட. ஒருவன் தன் வாழ்க்கைக் குரிய பல தேவைகளையும் தனது உடலுழைப்பை மட்டுமே வைத்துப் பெற்றுக் கொள்ளவேண்டியிருந்தால் அது எத்துணைத் தொல்லையோ,வரிவிதிப்பும் அத்துணைத் தொல்லை நிறைந்த ஒன்றாகும். சீரிய பணிகளிலும் செம்மையான தொழில்களிலும் தங்களை நல்ல முறையில் ஈடுபடுத்திக் கொள்ள விழைபவர்கள் தங்கள் சொத்துக் களை எல்லாம் குறிப்பிட்ட குத்தகைத் தொகைக்கு ஒப்படைத்துவிட்டுக் குத்தகைதாரர்களிடமிருந்து அத் தொகைகளை வசூலிக்கும் எளிய வேலையை மட்டும் தம்மகத்தே வைத்துக் கொள்பவர்கள் பலரைக் காண் கிறோம். பழைய மன்னர்களும் இன்றைய நிலக்கிழார் களும் வரி வசூல் செய்யும் தம் உரிமையை 'இஜாரா' என்ற முறையில் குத்தகைக்கு விட்டு வந்தனர். தங்கள் பராமரிப்புக்கு ஆதரவான வரிகளை வசூல் செய்யும்

தொல்லையிலிருந்து விடுபடுவதற்காக எல்லாக் காலங்களிலும் மத்திய நிர்வாகிகள் முயற்சி செய்துள்ளனர். பணம் பற்றிய எல்லா நடவடிக்கைகளையும் இன்றைய ஆட்சிப் பொறுப்பிலிருப்பவர்கள் தாங்களே ஏற்றுக் கொண்டு 'பனியாக்களைப்' போல் இருந்து வருகின்றனர். உரிமையும் அதிகாரமும் வரிவசூல் செய்யும் செயலில் இல்லை; வசூலிக்கப்படும் பணத்தில்தான் தங்கி நிற்கின்றது. அரசியலமைப்பு விதிகளின்படி ஒரு மத்திய அரசுக்குத் தேவையான பணத்துக்கு உத்தரவாதம் அளிக்கப்பட்டால், நேரடியான வரி வசூலிப்பைப் பற்றி, அது ஏன் கவலைப் பட வேண்டும்?''

''ஒரு கூட்டாட்சி நாட்டில் அந்நாட்டின் வருமானத்தைப் பற்றித்தான் மத்திய அரசு அக்கறை காட்ட வேண்டும்; வரிவிதிப்பைப் பற்றிய மற்றைய செயல் நோக்கங்கள் யாவும் மாநில அரசின் பொறுப்பில் அடங்குபவை. வரிவிதிப்புத் தொடர்பான 'பாதுகாப்பு நோக்கம்', 'சமுதாய நோக்கம்', 'வர்த்தக நோக்கம்' மற்றும் 'ஒழுக்க நோக்கம்' போன்ற செயல் நோக்கங்கள் யாவும் மாநில அரசுகளைச் சார்ந்தவையே. அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் மற்றும் பல கூட்டாட்சி நாடுகளிலும் இவ்வாறுதான் செயல்படுத்தப் படுகின்றது. ரஷ்யாவில், நாட்டு வருமானத்திற்குரிய வரிவிதிப்பும் (Tax Levy) கூட மத்திய அரசால் செயல்படுத்தப்படுவதில்லை. சோவியத் நாட்டின் மத்திய அரசில் நிதியமைச்சருமில்லை, நிதி அமைச்சகமும் இல்லை; ரஷ்யக் குடியரசுகளில் (மாநிலங்களில்) மட்டுமே அவை உண்டு. ரஷ்யக் குடியரசுகள் என்றழைக்கப்படும் மாநிலங்களே மத்திய அரசின் தேவைகளைப் பூர்த்தி செய்கின்றன. ஐக்கிய அமெரிக்க நாட்டிலும் ரஷ்ய நாட்டிலும் இருக்கும் இந்த ஏற்பாடுகள் அவற்றின் மத்திய அரசாங்கங்களை வலுவற்றதாக்கி விட்டனவா?''

''இந்தக் கூட்டாட்சி நாடு (அமெரிக்கா, ரஷ்யா)களின் நேரடி அனுபவங்களைக் கண்ட பிரிட்டானிய அமைச்சரவைக் குழு வரி விதிப்பு அதிகாரமில்லாத ஒரு மத்திய அரசைத்தான் இந்தியக் கூட்டாட்சிக்கு வழங்கியது. அதே காரணத்தினுல்தான் காங்கிரசும் முஸ்லீம் லீக்கும் அதனை ஏற்றுக் கொண்டன. எனவே,வரிவிதிப்பு மற்றும்

வருவாய் இனங்களை உறுதியாகத் தர முடியும் என்பது பெறப்படுகின்றது. என் திட்டமும் இதே பயனை அளிக்கின்றது'', ''என்னுடைய பரிந்துரையின்படி எல்லா வரித் தலைப்புக்களிலும் வசூல் செய்யப்படும் வரி வருவாய்களின் குறிப்பிட்ட சதவிகிதத் தொகை ரிசர்வ் வங்கிகளால் மத்திய அரசின் தொகுநிதியில் (Federal Consolidated Fund) தானாகவே வரவு வைக்கப்பட்டு விடும். அத்தொகைகளின் மீது மாநில அரசுகளுக்கு எவ்வகை அதிகாரமும் கிடையாது. நெருக்கடி நிலைகளில் மத்திய அரசின் நிதி எல்லைகளை விரிவு படுத்தவும், போர்க்காலங்களில் இராணுவச் செலவுகளை அதிகப்படுத்துவதற்கும், தேவையான தொகைகளைப் பெறுவதற்குரிய அதிகாரங்களை மத்திய அரசுக்கு வழங்கும் முறையைக் கொண்ட அரசியல் சட்ட விதிகள் உருவாக்கப்படும்.''

எனவே, முழு மாநில சுயாட்சி கோருபவர்களைப் பிரிவினைவாதிகள் எனக் கூறுவது பித்தலாட்டமாகும். மாறாக வரி வசூல் செய்யும் சுமையிலிருந்து மத்திய அரசு விடுதலை பெற்றால் கீழ்க் க்ண்ட பயன்கள் விளையும்.''

''(அ) மத்திய அரசுக்கு, 'பாதுகாப்பு', 'வெளிநாட்டு உறவுகள்' ஆகியவற்றில் முழுமையாக ஈடுபடுவதற்கு மிகுதியான வாய்ப்புக் கிடைக்கும். ஒருமைப் படுத்தக் கூடிய தீவிர சக்தியாகவும் செயல்படும்.

(ஆ) மத்திய - மாநில அரசுகளின் செயல்கள் ஒன்றின் மீது மற்றொன்று படிவதாலும் (Over Lapping) ஒன்றுக்கு மாறாக மற்றதன் செயல் விளைவுகள் முரண்படுவதாலும் ( Duplicating ) ஏற்படுகின்ற வழக்குகளால் ஏற்படும் விரயம் தவிர்க்கப்படுவதால் செலவு குறையும். பணம் மிஞ்சும். அதிகாரிகளின் சக்தியும் விரயமாகாது. இவற்றை மற்ற நற்பணிகளுக்குப் பயன்படுத்த ஏதுவாகும்.

(இ) வரிகளையும் மற்ற வருமானங்களையும் எளிமையாகவும், குறைந்த செலவிலும் வசூல் செய்யலாம்.

(ஈ) ஒரே அதிகார வர்க்கம் வரி வசூலில் ஈடுபடுவதால் சிக்கனத்தைப் பெற முடியும்.

(உ) நவீன கால வரி விதிப்பு முறையை அறிமுகப் படுத்தி அதனைச் செம்மையாகக் கையாள்வதற்குரிய வழிவகையும் பிறக்கும். அதாவது ஒருமுனை வரியை நடைமுறைப் படுத்தலாம்.''

சம பங்காளிகள்

மாநில மக்களின் உரிமைகளைப் பற்றிப் பேசும்போது மத்திய அரசாங்கத்துடன் சம உரிமைகளைப் போலவும் அதே நேரத்தில் மத்திய அரசு மாநிலங்களைச் சுரண்டாத வகையிலும் பாக்கிஸ் தானியக் கூட்டாட்சி முறை அமைய வேண்டுமென்று முஜிபுர் வலியுறுத்துகிறார். ஆறு அம்சத் திட்டத்தின் நோக்கங்கள் மத்திய வல்லாட்சியாளர்களால் நாட்டைத் துண்டாடும் நோக் குடையதென வர்ணிக்கப்பட்டாலும் உண்மையில் அவை தன்னுரிமைகளைக் காத்துக் கொள்ளும் தனித்தன்மை படைத் தவையே. நாட்டின் ஒருமைப்பாடு என்பதில் பரஸ்பர இனக் கமும் நல்லெண்ணமும் மத்திய — மாநில அரசுகளுக் கிடையில் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையும், ஒன்றை மற்றொன்று சமதகுதியோடு நடாத்தும் பான்மையும், ஊடுருவி நிற்க வேண்டுமென்பதைத் தெளிவுபடுத்துகிறார் முஜிபுர் அவர்கள். முழுமாநில சுயாட்சி என்பது குறுகிய பிராந்திய வாதமோ அல்லது சுயநலத்தின்பாற்பட்ட அரசியல் கொள்கையோ அல்லவென்பதைத் தெளிவாகச் சுட்டிக்காட்டிய முஜிபுர் அவர்கள்,

''நாங்கள் சகோதரர்களிடையே (மாநிலங்களிடையே) சமத்துவத்தையும் நிதியையும் நிலைநிறுத்த முடியுமென உண்மையில் நம்புகிறோம். நாடு என்பது ஒரு பெரிய குடும்பமென்பதைத் தவிர வேறொன்றுமல்ல. ஒரு குடும் பத்தில் கூட ஒருவர் உண்பது மற்றவர் வயிறுகளை நிரப் பாது. எனவே, நாங்கள், எங்கள் பங்கைக் கோரும் போது மட்டும் அதனைச் சுயநலமானது என்று எப்படி மன மறிந்து வர்ணிக்கின்றீர்கள்?......''

''நாங்கள் எங்கள் பங்கைத் தான் கோருகிறோம்; உங்களுடைய (மத்திய அரசினுடைய) உரிமைகளை அல்ல.''

## III
## தன்னுட்சி இன்றேல் தனி ஆட்சி

முஜிபுர் அவர்களுடைய அரசியல் விளக்கங்களும் தர்க்க வாதங்களும் மத்திய வல்லாட்சியாளர்களை மாற்றிட வில்லை. அவரது ஆறு அம்சத் திட்டம் பாக்கிஸ்தான் மக்களிடையே புதிய உணர்ச்சியையும் உத்வேகத்தையும் உரிமை உணர்வு களையும் தட்டி யெழுப்பின. அயூப்பின் மத்திய வல்லாட்சி ''அவாமி லீக் கட்சியின்'' தானைத் தலைவரான ஷேக் முஜிபுர் மீது, பல வகையான தேசத் துரோகக் குற்றச் சாட்டுகளைச் சாட்டி சிறையிலடைத்தது. ஆனுல் நீதி மன்றம் அவர் மீது சாட்டப்பட்ட குற்றச்சாட்டுகள் நிரூபிக்கப்பட வில்லை யெனத் தீர்ப்பளித்து விடுதலை செய்தது.

1968-ஆம் ஆண்டு அவர் சிறைக் கூடத்தை விட்டு வெளியே வந்ததும் ''அகர்தாலா'' சதி வழக்கில் தொடர்பு கொண்டாரென்ற பொய்க் குற்றத்தைச் சாட்டி உடனே அவரை மீண்டும் கைது செய்து சிறையிலடைத்தது. ஷேக் அவர்களும் அவரது தோழர்களும் இந்தியாவுடன் தொடர்பு கொண்டு, பாக்கிஸ்தான் அரசைக் கவிழ்க்க முயன்றதாகவும் அவர் மீது சதிக் குற்றம் சாட்டப் பட்டது. ஆனுல், மக்கள் மன்றம் இதனை ஏற்கவில்லை. அயூப்கானுக்கு எதிராக கிளர்ந் தெழுந்தனர் கிழக்கு வங்க மக்கள். நீதி மன்ற விசாரணையில் ஷேக் முஜிபுர் அவர்கள் குற்றமற்றவர் என்பது நிரூபிக்கப் பட்டது.

நீதி மன்றத் தீர்ப்பையும் மக்களுடைய ஆவேசத்தையும் எதிர்த்து நிற்க முடியாத அயூப்கானின் மத்திய அரசு, 1969-ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 22-ஆம் நாளில் ஷேக் முஜிபுரை விடுதலை செய்தது.

டாக்காவில் நடைபெற்ற மிகப் பெரிய பொதுக்கூட்டத்தில் ஷேக் அவர்கள் உரையாற்றும் போது,

''இது அகர்தாலா (Agarthala) சதி வழக்கு அல்ல. ஆனுல் இஸ்லாமாபாத் (மத்திய அரசு) சதி வழக்காகும். நாட்டின் முன்னேற்றத்தில் தனக்குரிய பங்கைக் கோரிக் கிழக்குப்

பாக்கிஸ்தான் மக்கள் நடத்திய பெரும் போராட்டத்தைச் சிதைப்பதற்காக மத்திய அரசு என் மீது ஏவிய ஏவுகணையாகும்.''[4]

என முழங்கினார்.

பாக்கிஸ்தான் நாட்டிற்குப் புதிதாகத் தரப்படும் அரசு அமைப்புத் திட்டங்களைப் பரிசீலனை செய்வதற்காக இராவல் பிண்டியில் 1969-ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்களில் நடைபெற்ற மாநாட்டில் அயூப்கானின் அழைப்பை ஏற்று ''ஜனநாயக நடைமுறைக் குழுவின்'' சார்பில் கிழக்கு வங்கத்தின் தனிப் பெரும் பிரதிநிதியாக முஜிபுர் பங்கேற்றார். முஜிபுர் அவர்கள் தன் ஆறு அம்சத் திட்டம் பாக்கிஸ்தான் அரசியல் சட்டத்தின் அடிப்படைக் கொள்கையாக வேண்டும் என வலியுறுத்தினார். அதனை அயூப்பின் சர்வாதிகார அரசு ஏற்காததால் அம் மாநாடு பயனின்றிக் கலைந்தது.

அயூப்பின் சர்வாதிகார ஆட்சிக் கெதிராகப் பயங்கரமான மக்கள் புரட்சி வெடித்தது. உடன் யாயாகானிடம் பொறுப்பை ஒப்படைத்து விட்டு அயூப் வெளியேறினார்.

யாயாகான் ஆட்சிப் பொறுப்பிற்கு வந்த சில மாதங்களில் பாக்கிஸ்தானிய வரலாற்றிலே முதன் முறையாக 'வயது வந்தோர்க்கு வாக்குரிமை' என்ற அடிப்படையில் பாக்கிஸ்தான் நாட்டின் பொதுத் தேர்தல் நடைபெற்றது. மக்கள் தொகை அடிப்படையில் நாடாளு மன்ற உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். முஜிபுரின் தலைமையிலான அவாமி லீக் கட்சி, பாக்கிஸ்தானின் நாடாளு மன்ற அவையின் மொத்தம் 313 இடங்களில் 167 இடங்களைக் கைப்பற்றி, அறுதிப் பெரும்பான்மை பலத்துடன் பெருவெற்றி பெற்றது. நியாயமாக முஜிபுர் அவர்கள் அகண்ட பாக்கிஸ்தானின் தலைமைப் பொறுப்பில் அமர்த்தப்பட வேண்டும்.

ஆனால், மக்கள் தீர்ப்பை ஏற்றுக்கொள்ள யாயாகான் மறுத்தார். முஜிபுருடன் பேச்சு வார்த்தை நடத்துவதுபோல் முதலில் நடித்தார். பின்னர், பேச்சு வார்த்தைகளைத் திடீரென முறித்துக் கொண்டு கராச்சிக்குப் பறந்து 1971-ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் 25-ஆம் நாள் இரவு, இராணுவ அடக்கு முறைக்கு ஆணை பிறப்பித்தார்.

---

4 "Pakistan" - by M Farooqi, P 84.

முப்பது இலட்சத்துக்கு மேற்பட்ட மக்கள் கொல்லப்பட்டனர். இலட்சக் கணக்கான பெண்டிர் கற்பழிக்கப்பட்டனர். இலட்சோப லட்சம் வீடுகள் தரை மட்டமாக்கப்பட்டன. ஒரு கோடி மக்கள் புகலிடம் தேடி இந்தியாவுக்கு விரட்டப்பட்டனர். இவையனைத்தும் ''பாக்கிஸ்தானிய இஸ்லாமியக் குடியரசு'' என்ற பெயரால், மாநில சுயாட்சியை அழித்தொழிக்க நடைபெற்ற கோர நிகழ்ச்சிகள்.

1971-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் முதல், பங்களா தேஷ் மக்கள் ''முல்கிபகினி'' எனும் பெயரில் விடுதலைப் படையை நிறுவி, யாயாகானின் காட்டுமிராண்டித்தனமான அடக்கு முறையை எதிர்த்து வீரதீரத்துடன் போரிட்டனர். இந்திய நாட்டின் தலைமை அமைச்சர், மாண்புமிகு. இந்திரா காந்தி அவர்கள், வங்கத்தின் மாநில சுயாட்சிக்கு உயிர் கொடுக்கும் வகையில் கிழக்குப் பாக்கிஸ்தானத்தைத் தனி வங்க நாடாக மாற்றுவதற்கு இந்திய இராணுவத்தையும் ஈடுபடுத்தினர்.

1971-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 17-ஆம் நாள் டாக்காவில் இந்திய - பங்களா தேஷ் கூட்டுப் படையின் முன்னர், பாக்கிஸ்தான் படை சரணடைந்தது. தீக்கனவிலிருந்து பங்களா தேசம் விடுவிக்கப் பட்டது. தங்க வங்கம் தனி நாடாயிற்று.

## IV
## பாரதமும் பாக்கிஸ்தானமும்

மத்திய அரசை, அதிகாரங்களின் குவிப்பு வாயிலாக வலிமைப்படுத்தி விட முடியுமெனக் கருதிய அன்றைய நம் தேசியத் தலைவர்கள் நமது அரசியல் சட்டத்தில் ஒற்றையாட்சி அம்சங்களைப் பெரும்பாலும் ஏற்றி வைத்ததோடு மத்தியமாக்கப் பட்ட ஆளும் கட்சியான அகில இந்தியக் காங்கிரசுக் கட்சி, சென்ற கால் நூற்றாண்டு காலத்தில் நமது அரசியல் சட்டத்தால் வழங்கப்பட்ட அரைகுறை மாநிலத் தன்னாட்சி அதிகாரங்களை யும் தன் கட்சி மட்டத்தின் மூலமாக மெல்ல மெல்லப் பறித்துக் கொண்டது. அதனால் இன்றைய இந்தியக் கூட்டாட்சி அரசு ஓர் ஒற்றையாட்சி அரசாகவே இயங்கி வருகின்றது.

தொடக்கத்தில் அரைகுறையான கூட்டாட்சியைக் கொண்டிருந்த பாக்கிஸ்தான், காலப்போக்கில் ஒற்றையாட்சி யாக மாற்றியமைக்கத் தக்க ஒரு முறையைத்தான் பாக்கிஸ் தானின் சர்வாதிகாரிகளும் கையாண்டனர். உண்மையில் அவ்வகை மாற்றம் பாக்கிஸ்தானில் மிகவும் வெளிப்படையாக வும் முனைப்புடனும் செய்யப்பட்டது.

எண்ணிறந்த அதிகாரங்கள் குவிக்கப்படுவதன் மூலமாக ஒரு மத்திய அரசு ''வலிவைப் பெற்று விடும்; அந்த வலிமையின் மூலம் ஒரு நாட்டை ஒருங்கிணைக்க முடியும்'' என்ற சர்வாதிகாரக் கொள்கை, பாக்கிஸ்தானில் நடைபெற்ற அண்மைக் கால நிகழ்ச்சி களினாலும் பங்களா தேஷின் பிரிவினையினாலும் தகர்த்து எறியப்பட்டு விட்டது.

பாக்கிஸ்தான் வரலாற்று நிகழ்ச்சிகளை இந்தியத் துணைக் கண்டத்தின் வரலாற்றோடு இணைத்து ஆய்வு செய்த, திரு. E. M. S. நம்பூதிரிபாடு அவர்கள் பாக்கிஸ்தான் நமக்குப் புகட்டும் பாடத்தை, பின் வருமாறு படம் பிடித்துக் காட்டுகிறார்,

''பல தேசிய இனங்களைச் செயற்கையாக ஒருங்கிணைக்கும் முயற்சியும், ஒருமுகப்படுத்தும் ஏற்பாடும், அவ்வாறு மையப் படுத்துவோரையே திருப்பித் தாக்குகின்ற ஏவுகணையாக மாறிவிடும். இது பாக்கிஸ்தானின் அண்மைக் கால நிகழ்ச்சிகள் தரும் பாடமாகும். பாக்கிஸ்தானின் மத்திய ஆட்சியரைப் போலவே இந்தியாவின் மத்திய ஆட்சியாளர் களுக்கும் இது ஒரு சிறந்த பாடமாகும். பாக்கிஸ்தானின் பத்தாணியர் மற்றும் பலுசியர்களால் ஏற்படும் சிக்கலைப் போலவே இந்தியாவிலும் பல்வேறு தேசிய இனங்களால் உருவாகும் சிக்கல்களை, அரசியல் மற்றும் நிர்வாக அமைப்பு களை உண்மையான கூட்டாட்சி முறையாக மாற்றியமைக்கும் வகையில்தான் சரியாகவும் முறையாகவும் தீர்க்க முடியும். பாக்கிஸ்தானிலிருந்த பல்வேறு தேசியப் பண்புகளை (யாயாகான் அவர்கள்) ஏற்றுக் கொள்ள மறுத்தமைதான் யாயாகான் செய்த மாபெரும் தவறு; 'பட்டாணியர்' 'பலுசிய மக்கள்', 'சிந்தி மக்கள்' மற்றும் 'பஞ்சாபியர்' ஆகியோரைப் பொறுத்தவரைப் பாக்கிஸ்தான் தலைவர் பூட்டோ, இந்தக் கண்கூடான உண்மையை ஏற்க மறுத்ததால் (யாயாகான் செய்த) அதே தவறையே அவர் திரும்பச் செய்தவராவார். அவ்வாறே இந்திய நாடாளுமன்றத்திலும் மாநிலச் சட்ட மன்றங்களிலும் தான் பெற்றுள்ள பெரும் பான்மை பலத்தைக் கொண்டு 'வங்காளியர்', 'மலையாளிகள்' 'தமிழர்கள்' போன்ற தனித் தேசிய இனங்களை அழித்து,

மிதித்து மேலாட்சி செய்ய முடியும் என மாண்புமிகு இந்திரா காந்தியார் அவர்கள் கருதுவார்களேயானால் யாயாகான், பூட்டோ ஆகியோர் செய்த அதே தவறையே அவரும் செய்தவராவார்......" 5

"......இந்திய மாநிலங்களை அழுத்தி மேலாதிக்கம் செய்ய முயலும் எந்த ஓர் ஏற்பாடும் இன்றைய சூழ்நிலையில் ஒருமைப்பாட்டை விளைவிக்காது. மாறாக (அந்தப் பேராதிக்கம்) இந்தியத் துணைக் கண்டத்தை மேலும் துண்டாடி விடும்." 6

ஆகவே, தங்க வங்கத்தின் தத்துவ விளக்கம் என்ன? தன்னாட்சி மறுக்கப்பட்டால் தனி ஆட்சி அமையும்.

...மலர்க மாநில சுயாட்சி!...





5 Ibid, Note- 2.

6 Ibid, Note- 2

## 8. மத்திய-மாநில உறவுகள் சீறக்க...

### — மலர்க மாநில சுயாட்சி —

> "நாட்டுப் பாதுகாப்புத் தவிர மற்ற அதிகாரங்கள் அனைத்தையும் பற்றிச் சிந்திப்போம். மாநிலங்களுக்குத் தேவையான அதிகாரங்களை மாநிலங்கள் எடுத்துக் கொள்ளட்டும். பின்னர் மாநிலங்கள் விரும்பித் தருகின்ற மீதியுள்ள அதிகாரங்களை மத்திய அரசு எடுத்துக் கொள்ளட்டும்." 1
>
> — பேரறிஞர். அண்ணா.

நில நூலாலும், நீண்ட வரலாற்றாலும் பேணி வளர்க்கப் பட்ட பல்வேறு மொழி, இன மக்களைக் கொண்ட மாநிலங்கள் ஓர் அரைகுறைக் கூட்டாட்சி அரசமைப்பின் மூலமாக ''இன்றைய இந்திய ஒன்றியத்தில்'' இணைக்கப்பட்டன. ஆனால், அவர்களது தனித்த மொழி, இன, பண்பாட்டு உரிமைகளும், அவைகளைப் பேணிக் காக்கும் அரசு அதிகாரங்களும் உள்ளிட்ட மாநிலத் தன்னாட்சி நம் இன்றைய அரசமைப்பில் முழுமையாகத் தரப்படவில்லை என்பதை இந்நூலின் மூன்றாம் பகுதியில் பல அத்தியாயங்கள் மூலம் தெளிவாகக் கண்டோம்.

ஆனால், மாநில மக்களின் பிறப்புரிமையான தன்னாட்சி சிதைக்கப்பட்டு, வெறும் ''மத்திய மாநில உறவுகளாக'' இன்றைய அரசமைப்பில் திரிபு செய்யப்பட்டுள்ளது.

மாநில மக்களின் பிறப்புரிமையான மாநிலத் தன்னாட்சிக்கு முதலிடம் தந்து அதன் அடிப்படையில் முறையான ஒரு மத்திய அரசு உருவாக்கப்படுவதற்கு மாறாக, வேறுபல காரணங்களுக்கு முதலிடம் தந்து அவற்றின் அடிப்படையில் வலிவான மத்திய அரசு படைக்கப் பட்டது. அதனை மையமாக வைத்தே மாநில

---

1 21—7—1968-இல், திரு. ம. பொ. சி. அவர்கள் நடத்திய ''மாநில சுயாட்சிக் கருத்தரங்கில்'' பேரறிஞர் பேசிய கருத்துரையின் ஒரு பகுதி. ஆதாரம். 'தமிழரசு' மாநில சுயாட்சி பற்றிய இணைப்பு. (16—5—1974) பக்கம். 22.

உரிமைகளும், அதிகாரங்களும் அரசமைப்பிலும் தொகுக்கப் பட்டன. அவ்வாறு தொகுக்கப்பட்ட முறையற்ற தொகுப்பே இன்றைய மத்திய – மாநில உறவுகளாகும்.

இன்றைய அரசமைப்பில் எழுதப் பட்டிருக்கும் மத்திய-மாநில உறவுகள், மாநில சுயாட்சியின் ஒரு கூறே தவிர, அவையே மாநில சுயாட்சி யாகா.

## மத்திய — மாநில உறவு அல்ல ;
## ஆண்டான் — அடிமைத் தொடர்பு

''மத்திய — மாநில உறவுகள்'' எனக்கூறி 'எஞ்சிய அதிகாரங்கள்' ( Residuary Powers ) உட்பட மாநிலங்களுக்கே உரித்தான பல அடிப்படை அதிகாரங்களும் மத்தியத்திற்குத் தரப்பட்டன. அதன் வழி 'சமதகுதியைப் பெற வேண்டிய மத்திய அரசு, மேலாண்மையைப் பெற்றுக் கொண்டது. ''அழிக்க முடியாத மத்தியம்'' (Indestructable Union) என்ற பெயரால் நிர்வாகக் கட்டளைகளையும், மாநில உரிமைகளில் ஊடுருவல்களையும் கூட்டாட்சிக்கும் புறம்பான ஆதிபத்திய ஆளுநர்களையும், மாநிலங்களின் தன்னாட்சியை அழிக்கும் 'நெருக்கடி நிலை அதிகாரங்களையும்' இன்னோரன்ன வேறு பல அம்சங்களையும்''மத்திய அரசு''கொண்டு திகழ்கிறது. உலகின் எந்தவொரு கூட்டாட்சி நாட்டிலும் இல்லாத அளவிற்கு மாநில அதிகாரங்களை யெல்லாம் தன்னகத்தே ஆட்படுத்திக் கொண்ட 'மத்திய அரசு' நமது அரசமைப்பின் முதற் படைப்பாயும் அமைந்து விட்டது.

இந்திய மக்களின் பண்புக்கு ஒவ்வாத ஒற்றையாட்சி முறைகளும் இன்றைய அரசமைப்பில் மலிந்து நிற்கின்றன. பன்னூறு ஆண்டுகளாக அடிமைப்பட்டுக் கிடந்த, மொழித் தேசிய மாநிலங்கள் இந்திய நாடு விடுதலை பெற்ற போது, தத்தம் இயற்கையான மொழி, இன வளத்தைப் பெறுவதற்குரிய பொன்னான வாய்ப்பைப் பெற்று விட்டது எனக் கருதின. ஆனால் நிர்வாக முறைக்கும், பாதுகாப்பு நெறிக்கும் பொருளாதாரச் சீர்மைக்கும், அவசியமானது என்ற அடிப்படையில் மாநிலத் தன்னாட்சி சிதைக்கப்பட்டு விட்டது.

அரசமைப்பு உருவாகும்போது மாநிலங்களுக்குரிய பல அடிப்படை உரிமைகள் அதில் இடம் பெருமல் எதிர்கால நாடாளுமன்றத்தின் கருணை நோக்குக்கும், அதனை இயக்கும் மத்திய மயமாக்கப்பட்ட ஓர் அரசியல் கட்சியின் விருப்பத்திற்கும் ஒத்தி வைக்கப்பட்டன. திரிபு படுத்தப்பட்ட மாநில சுயாட்சியும் (மத்திய–மாநில உறவுகள்) இந்தியத் தேசிய காங்கிரசுக் கட்சியின் எதிர்கால அரசியல் திருவிளையாடல்களுக்காக அன்றே ஒப்படைக்கப்பட்டு விட்டன.

அரசமைப்பால் சமைக்கப்பட்ட மத்திய-மாநில உறவுகள் ''சட்ட முறை உறவுகள்'' என்ற நிலையிலிருந்து விடுபட்டுக் காங்கிரசுக் கட்சியால் உருவாக்கப்பட்ட ''அரசியல் கட்சி உறவுகளாக'' மாறி விட்டன. அரசமைப்பை அமுல் படுத்தும் போது ''அரசியல்'' புகுந்து கொண்டது; இந்திய அரசியலில் ஆட்சிக் கட்சியாகக் காங்கிரசுக் கட்சி விளங்கியது; அதுவே எல்லாவற்றிற்கும் தலைமைப் பொறுப்பையும் ஏற்றுக்கொண்டது.

காங்கிரசுக் கட்சியின் உட்கிடக்கையான ஒற்றையாட்சியும், இந்திய மயமாக்கும் பண்பும், இந்திய ஒற்றுமையென்ற பெயரால் காங்கிரசுத் தலைவர்களை ஆட்டிப் படைத்தன. அரசமைப்புச் சட்டத்தால் வகுக்கப்பட்ட மத்திய – மாநில உறவுகள் அகில இந்தியக் காங்கிரசுக் கமிட்டியாலும் அதில் அங்கம் பெறும் தேசியத் தலைவர்களாலும் சிதைக்கப்பட்டுப் புது வகையான அரசியல் சார்ந்த மத்திய - மாநில உறவுகள் அமுலுக்கு வந்தன.

அரசமைப்பு இயந்திரம் இயங்கத் தொடங்கிய ஓரிரு ஆண்டுகளுக்குள் ''தொழில்கள்'' பற்றிய மத்தியச் சட்டத்தாலும், தொழில்கள் சார்ந்த வேறுபல தனிச் சட்டங்களாலும் மாநில அதிகாரத்திற்குள் தரப்பட்ட எல்லாத் தொழில்களும் மத்திய அரசுக்குச் சேர்ந்து விட்டன.

'தேர்தல் ஆணைக்குழு' நியமிக்கப் பட்டதன் மூலம் மத்திய அரசின் அதிகார எல்லைக்குள் மாநிலத் தேர்தல்களும் விதிமுறைகளும் சரணடைந்து விட்டன.

அடுத்தது, ''திட்ட ஆணைக் குழு.'' மாநிலப் பொருளாதாரம் முழுவதும் மத்திய அரசின் கூறான திட்டக் குழுவுக்கு மண்டியிட்டு விட்டது. மாநில அரசுப் பட்டியலில் அளிக்கப்பட்ட சமுதாயப் பணிகளான, 'கல்வி' 'சுகாதாரம்' 'விவசாயம்', 'கால் நடைகள்', 'குடிசைத் தொழில்கள்', 'சமுதாய வளர்ச்சி' போன்ற அனைத்துமே திட்டக் குழுவின் வரையறைக்குட் பட்டவையாகி விட்டன.

ஐந்தாண்டுத் திட்டங்களின் அமைப்பிலும் உருவாக்கத்திலும் அதன் மூலதனத்திலும் நிதி ஏற்பாடுகளிலும் அமைப்பு முறைகளிலும் மாநில அரசுகள் எவ்வகைப் பங்கையும் பெறாத சூழ்நிலை உருவாயிற்று.

ஆனால், மாநிலங்களும் சேர்ந்தே ஐந்தாண்டுத் திட்டங்களைத் தீட்டி அமுல் படுத்துகின்றன எனக் கண் துடைப்புச் செய்வதற்காக அரசமைப்புச் சட்டத்துக்கும் அப்பாற்பட்ட ''தேசிய வளர்ச்சி மன்றம்'' அமைக்கப் பட்டது.

திட்டக் குழுவுக்குச் சட்ட மூலம் இல்லை; அதன் திட்டங்களைப் பரிசீலிக்கும் ''தேசிய வளர்ச்சி மன்றத்துக்கும்'' அரசியல் சட்ட அனுமதி கிடையாது. இந்நிலையில் இவை இரண்டுக்கும் தலைமை வகிக்கும் ஆண்டானான மத்திய அரசுக்கும் அதன் அடிமைகளான மாநிலங்களுக்கும் கூட்டாட்சி முறையில் சொல்லப்பட்ட சம தகுதிகளுள்ள உறவுகள் எங்ஙனம் நிலவ முடியும்?

அவற்றின் நடை முறை, பணி முறை, அமைப்பு முறை ஆகியவற்றை உற்று நோக்கின், ஒற்றையாட்சி நாடுகளிலுள்ள மத்திய அரசுக்கும் அதன் நிர்வாகப் பகுதிகளுக்குமிடையில் இழையோடும் அடிமைத் தொடர்பு போன்ற உறவே மத்திய–மாநிலங்களிடையே நிலவி வருகிறது என்பது தெரிய வரும்.

அவ்வப்போது தோன்றி மறையும் அதிகாரமற்ற ''நிதி ஆணைக் குழுக்கள்'' வெறும் ஆலோசனைக் குழுக்கள்; அதிகாரப் பற்றற்ற நிதி ஆணைக்குழு, அரசமைப்பால் உருவாக்கப்பட்டது தான். ஆனால் அதன் பரிந்துரைகளை ஆய்வு செய்து இறுதி முடிவெடுப்பது மத்திய நாடாளு மன்றமே. மற்றப் பரிந்துரைகளைப் பரிசீலிப்பதும், இறுதி முடிவெடுப்பதும் குடியரசுத் தலைவர் என்ற பெயரால் மத்திய அமைச்சரவையே. மாநில நிதிச்

சிக்கல்களையும் தீராத நிதிப் பற்றுக்குறைகளையும் தீர்த்து வைக்கும் மாமருந்தே நிதி ஆணைக்குழுக்கள் எனக் கூறி நமது கூட்டாட்சி அரசமைப்பில் அதிகாரபலமில்லாத இவ்வகைத் தற்காலிக நிறுவனங்களைப் படைத்து வைத்துள்ளது.

நிதியின்றி மாநிலங்களுக்குக் கதியேது? அதனைத் தரும் காமதேனு போன்ற மத்திய அரசுக்கும் அதனை அண்டிக் கிடக்கும் மாநிலங்களுக்கும் இடையில் கூட்டாட்சி நாட்டிலுள்ள சமதகுதியான உறவுகள் எங்ஙனம் நிலவ முடியும்?

அடுத்தது அதிகார வர்க்க நிறுவனமான 'ஆளுநர்'. மத்திய-மாநில உறவுகள் சிறக்கப் படைக்கப்பட்ட அரியதோர் படைப்பு. மத்திய அரசின் கங்காணியான இவர் மாநிலச் சட்ட மன்றத்தின் ஓர் கூருகவும், மாநில நிர்வாகத் தலைவராகவும், மாநிலச் சட்ட மசோதாக்களுக்கு 'இசைவு' தரும் தனிப்பெரும் தலைமை யமைப்பாகவும், அறிக்கை ஒன்றைச் சமர்ப்பித்து மாநில அமைச்சரவையையும், சட்டமன்றத்தையும், மத்திய அரசால் கலைக்க வைக்கும் பேராற்றல் படைத்த ஒரு மத்தியக் கருவியாகவும் திகழும் காலம் வரை, மத்திய-மாநில உறவுகள் சம உரிமையுடன் சுமுகமாக எப்படி இயங்க முடியும்?

அதிகார வர்க்கம் (Bureacracy) என்கிற ஆதிபத்திய ஏற்பாடு, குடியரசு நாடுகளில் பழங்கதையாகி விட்டது. ஆனால் இந்திய நாட்டில் அடிமுதல் முடிவரை அதிகார வர்க்கம் தான் உண்மையில் ஆட்சியை நடத்துகின்றது. இதில் ''அகில இந்தியச் சேவைகள்' என்பது தனிப் பெருஞ் சக்தியாக விளங்கு கின்றன. மத்திய அரசுக்குக் கட்டுப்பட்ட அகில இந்தியச் சேவைகள் மாநில நிர்வாகத்தின் மையப்புள்ளிகளில் விரிந்து, பரந்து, நிலைபெற்று நிற்கும்வரை அவர்களின் எண்ணிக்கையை அரசமைப்பு விதி கொண்டும் கட்சி முனை கொண்டும் மத்திய நாடாளு மன்றம் அதிகப் படுத்திக் கொண்டு வரும் வரை, மத்திய - மாநில உறவுகள் சிறக்க வழியேது?

ஐம்பதாண்டுகள் போற்றி வளர்க்கப்பட்ட 'மொழிவாரி மாநிலச் சீரமைப்பு' காங்கிரசு மத்தியத் தலைவர்களுக்குத் திடீ ரென்று ''காட்டுமிராண்டிக் கொள்கை''யாகப் போய் விட்டது. மொழிவாரி மாநிலங்கள் மறுக்கப்பட்டன. மத்திய - மாநில உறவுகளில் ஆழ்ந்தகன்ற விரிசல் கண்டது; தனியாட்சிக் கோரிக்கைகள் தலை தூக்கின. பல போராட்டங்களுக்கும்

புரட்சிகளுக்கும் பின்னர் அரைகுறையான மொழிவாரி மாநிலங்கள் அமைக்கப்பட்டன; மாநிலப் புனரமைப்புச் சட்டத்தின் தயவால்—

எல்லைச் சிக்கல்கள் தீரவில்லை; மத்திய அரசுக்குத் தீராத தொல்லைகள் மலிந்தன. மாநிலங்களுக் கிடையே ஏற்படும் பிணக்குகளைத் தவிர்க்க அரசமைப்பு விதிகள் பயன்படுத்தப் படவில்லை. மாறாகக் கட்சி முனையும், மத்திய அரசின் பேராண்மையும் தலைமை யமைச்சரும் நடுவர்களாக்கப்பட்டனர்.

அரைகுறை மொழிவாரி மாநிலப் புனரமைப்பில் முறை கெட்டுப் பிறந்த குழந்தைதான் 'பிராந்தியக் குழுக்கள்' (Zonal Councils) "பிராந்திய உணர்வே கூடாது" எனக் கூறிய மத்திய அரசு சார்ந்த தேசியத் தலைவர்களுக்கு, மாநில மக்களின் உணர்ச்சியைத் தணிப்பதற்காகப் "பிராந்தியக் குழுக்களே" தேவைப்பட்டன. மத்திய - மாநில உறவுகளைப் போற்றுவதற்குரிய இன்னொரு "கண்டு பிடிப்புதான்" அரசியல் சட்டத்துக்கு அப்பாற்பட்ட—அதிகாரமற்ற—இந்தப் பிராந்தியக் குழுக்கள்.

இதற்குத் தலைமை வகிப்பவர்களும் மத்திய அமைச்சர்களே. கொள்கை வகுப்பதும் மத்திய அரசே. தவறு செய்யும் குழந்தைகளை (மாநிலங்களை), கண்டித்து ஒழுங்குபடுத்தும் சட்டாம்பிள்ளைக்கும் மத்திய அரசே. சட்டாம்பிள்ளைக்கும் பள்ளிக் குழந்தைக்கும் இடையில் சமநிறை உறவா நீடிக்கும்? பிராந்தியக் குழுக்களின் மூலமாக மத்திய அரசு நிறுவும் சுமுக உறவும் இத்தன்மையதே.

ஆக, இவையனைத்தும் மத்திய-மாநிலச் சிக்கல்களுக்குப் பல்வேறு அடிப்படைக் காரணங்களாக அமைந்ததோடு அரசமைப்பால் விதிக்கப்பட்ட அரைகுறை நல்லுறவையும் பாழ்படுத்தி விட்டன.

## பிறப்புரிமையும் உறவு முறையும்

இன்றைய மத்திய அரசுக்கும் மாநிலங்களுக்கு மிடையில் நிலவி வரும் அரசியல், நிர்வாக, சட்டமியற்று, பொருளாதார உறவுகளைப் பற்றி ஆய்வு செய்த பலரும் அவற்றை எவ்வகையில் திருத்தி யமைத்தால் இன்றைய மத்திய அரசுக்கும் மாநிலங்களுக்கு மிடையில் சிறந்த தொடர்பு வலிமை பெறும் என்பதைச் சுட்டிக் காட்டுகின்றனர்.

அந்தச் சீரிய உறவுக்குரிய அடிப்படைக் காரணங்களைப் பரிசீலிக்கும் போது, இன்றைய மாநிலங்கள் இன்னும் சற்று அதிக அதிகாரங்களையும் உரிமைகளையும் மட்டும் பெற்றிருப்பின் உற்ற பயன் கிட்டும் என்ற இறுதி முடிவுக்கும் அவர்கள் உடனே வரு கின்றனர். அம்முடிவில் மாநில சுயாட்சியின் சில சிறப்புக் கூறு களும் அடங்கி நிற்கின்றன என்பது உண்மை தான். ஆனால், அவையே மாநில சுயாட்சி யல்ல. மாநில சுயாட்சி யென்பது மாநில மக்களின் பிறப்புரிமை.

இன்றைய அரசமைப்பில் உருவாக்கப் பட்டிருக்கும் ''அரை குறைக் கூட்டாட்சி'' ஏற்பாட்டைப் பற்றிக் கருத்துக் கூறு வதும், ''பிறப்புரிமை'' என்ற அடிப்படையில் உண்மைக் கூட்டாட்சியின் உயிர்க் கூறான முழு மாநில சுயாட்சி வேண்டு மெனக் கோரிக்கை விடுப்பதும் இரு வேறுபட்ட துருவக் கோட் பாடுகளாகும். எனினும், சென்ற கால் நூற்றாண்டு காலமாக இந்தியாவில் நிலவி வரும் மத்திய-மாநில உறவுகளைப் பற்றிய கருத்து விளக்கங்களும் ஆய்வுகளும் விமரிசனங்களும் கண்டனங்களும் தான் எடுத்துரைக்கப் பட்டிருக்கின்றனவே யன்றி, உண்மைக் கூட்டாட்சியின் அடிப்படையான முழு மாநில சுயாட்சி பற்றிய கண்ணோட்டம் எழவே யில்லை.

அரசமைப்பு வல்லுனர், டாக்டர். என். பி. ஐயர் அவர்கள்,

> ''இன்று வரை இந்தியக் கூட்டாட்சிக் கொள்கை, ஓர் அரசமைப்பு ஏற்பாடு என்ற கண்ணோட்டத்தோடு மட்டுமே அணுகப் பட்டுள்ளது. ஆளுநர் அதிகாரங்கள், மத்திய-மாநில அரசுகளின் அதிகார எல்லைகள் போன்ற சட்டப் பிரச்சினைகளைச் சுற்றியே விரிவான சர்ச்சைகள் நடந் துள்ளன. (உண்மையான) கூட்டாட்சி அரசு என்பது அதன் அமைப்பில் சட்டப் பூர்வமானதும், அரசமைப்பை ஒட்டியதும் ஆகும். (ஆனால்) அதன் செயல் முறையில் அரசியலையே சார்ந்துள்ளது. மேலும், ஓர் கூட்டாட்சி அமைப்பில் மத்திய அரசின் தயவில் மாநில அரசுகள் இருப்பதில்லை. ஒரு மெய்யான கூட்டாட்சி நாட்டில் அதன் மாநிலங்கள் ஒற்றுமையை மட்டுமே விழைகின்றனவே யன்றி ஒருமையை யன்று (States desire Union, But not Unity.)''[2]

எனத் தெளிவாக்குகின்றார்.

---

2 Mr. S. P. Iyer, "The Political Aspect", Centre - State Relations in India (1972), by A. G. Noorani, P. 26.

அரசமைப்பில் பொறிக்கப்பட்டிருக்கும் ''மத்திய மாநில உறவுகள்'' உண்மையாக நடைமுறைப் படுத்தப்படும்போது எத்துணை அளவிற்கு மாநிலங்களைப் பாதிக்கின்றது என்பது 1967–ஆம் ஆண்டு நடைபெற்ற தேர்தலில் மாற்றுக் கட்சிகள் பல மாநில அரசுகளில் ஆளும் பொறுப்பினை ஏற்றுக்கொண்ட போது தெளிவாயிற்று. மாநில சுயாட்சி அதிகாரங்கள் இன்றைய மத்திய – மாநில உறவுகளில் தரப்படவில்லை யென்ற பேருண்மை 1967-ஆம் ஆண்டிற்குப் பின்னர் முதன் முதலாக நிலைநாட்டப்பட்டது. மத்திய அரசின் அடக்குமுறையும், மாநில அரசுக் கொள்கைகளில் மத்திய அரசின் ஊடுருவல் களும், மாநில அரசுகள்மீது மத்திய ஆளும் கட்சியின் அரசியற் கொள்கைகளின் திணிப்பும், பொதுவாக மாநிலத் தன்னாட்சி உரிமைகள் முடக்கப்பட்டிருக்கும் தன்மையும் சந்திக்கு வர லாயிற்று. குறிப்பாக அரசியல் மற்றும் பொருளாதாரத் துறை களில் பிரிட்டானிய ஆட்சிக் காலத்திலிருந்த இந்திய மாநிலங் கள் பெற்றிருந்த உரிமையைக் காட்டிலும் விடுதலை பெற்ற இந்திய நாட்டின் மாநிலங்கள் பெறவில்லை யென்பது தெளி வாயிற்று. மத்திய அரசுக்கும், மாநில அரசுகளுக்கும் இடை யில் மோதல்கள் ஏற்பட்டன. அவைகளின் விளைவாக உருவான பல சிக்கல்களை அரசமைப்பின் மத்திய - மாநில உறவு பற்றிய சட்டவிதிகளால் தீர்க்க இயல வில்லை.

மேற்கு வங்க மாநிலம் மாற்றுக் கட்சி அரசை ஏற்றுக் கொண்டவுடன் புது டெல்லிக்கும் கல்கத்தாவுக்கு மிடையில் தீராப் பிணக்குகள் ஏற்பட்டன. அவற்றைத் தீர்க்கும் வழிவகை யறியாது மாநில அரசு, மத்திய அரசுடன் பல்வேறு பிரச்சனை களில் மோதிக் கொண்டது. மத்திய அரசின் நிர்வாகக் கட்டளைகளும், அடக்கு முறையும், மாநில ஆளுநர் என்ற அமைப்பும், மத்திய அரசின் முகவர்களான சில அகில இந்தியச் சேவைகளும், தேசிய வளர்ச்சி மன்றத்தில் நடைபெற்ற கேலிக்கூத்தும் அப்பிணக்குகளை வளர்த்து விட்டன.

மாநில மக்கள் முதன் முறையாகத் தமது பிறப்புரிமைகளை நிலைநாட்ட முயன்ற வரலாறுதான் மேற்சொன்ன மேற்கு வங்க நிகழ்ச்சிகள். அதனை உய்த்துணராமல் மேற்கு வங்க மாநிலச் சிக்கல்களுக்குக் காரணம் மத்திய – மாநில உறவுகள் சுமுகமற்று இயங்கியதேயாகும் எனக் கூறப்பட்டது.

ஆனால் தமிழகத்தில் தி. மு. க. ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொண்டவுடன் மத்திய அரசோடு மோதல்களை வளர்த்துக் கொள்ளவில்லை. மாறாக, மத்திய - மாநில உறவுகள் முழுமையாக மாற்றி யமைக்கப்பட வேண்டு மென்ற, புதியதோர் அரசமைப்புக் கொள்கையை மற்ற மாநில மக்கள் முன் வைத்தது.

அரசியல், நிர்வாக, சட்டமியற்றுத்துறை மற்றும் நிதித்துறைகளில் மாநிலங்கள் மீண்டும் டெல்லி ஏகாதிபத்தியத்திற்கு அடிமைப்பட்டு விட்டன என்பதை வரலாறு, நிதி, நிர்வாகம் மற்றும் அரசமைப்புக் காரணங்களைக் காட்டி அதனை நிரந்தரமாகத் தீர்ப்பதற்கு இன்றைய அரசமைப்பின் பல பகுதிகள் மறு ஆய்வு செய்யப்படவேண்டுமென்றும், பாதுகாப்பு, மாநிலங்களிடையே செய்தித் தொடர்புகள், வெளிநாட்டு உறவுகள் மற்றும் நாணயம் நீங்கலாக மற்ற அனைத்து அதிகாரங்களும் மாநிலங்களுக்கே தரப்பட வேண்டு மென்றும் முழு மாநில சுயாட்சியை முதன் முறையாக மக்கள் மன்றத்தில் வலியுறுத்தியது.

இன்றைய மத்திய - மாநில உறவுகளில் ஏற்பட்ட சீர்கேடு, தற்காலிகமான தல்ல, நிரந்தரமானது. மாநில மக்களின் பிறப்புரிமையான மாநில சுயாட்சி, புதியதோர் அரசமைப்பின் மூலமாகவோ அல்லது இன்றைய அரசமைப்பில் செய்யப்படும் பல்வேறு அடிப்படையான சட்டத் திருத்தங்கள் மூலமாகவோ நிரந்தரமாக உறுதி செய்யப்பட்டாலன்றி ஆதிபத்திய மத்திய அரசின் ஒற்றையாட்சி நடவடிக்கைகளைத் தடுக்க முடியாது. முழு மாநில சுயாட்சி மலர்ந்தாலன்றி மத்திய - மாநிலப் பிணக்குகளும் தீரா.

எனவே, மத்திய - மாநில உறவுகள் சிறக்க...

......மலரட்டும் முழு மாநில சுயாட்சி......



# 9. அரசியற் கட்சிகளின் ஓர் இலட்சியக் கொள்கையாக...

## — மலர்க மாநில சுயாட்சி —

"...அரசியல் கட்சிகள் தத்தமது மற்றைய பிரச்சனை களை ஒதுக்கி வைத்து விட்டு, மாநில சுயாட்சியை மட்டுமே தமது இலட்சியக் கருவாக ஏற்றுக் கொண்டு ஒன்ருக இணைந்து,காங்கிரசிற்கு எதிரான ஒரு "மாநில முன்னணியை" அமைத்தால் அதுவே மாநில நலன்களையும் மாநிலத் தன்னுட்சியையும் காக்கும்..."

"...மாநிலங்களின் நலிவைத் தடுப்பதும், மத்திய வல்லாண்மைக்கு எதிரான அமைப்பினை உருவாக்கு வதும், அதன் வழி மாநில சுயாட்சியைப் போற்றிக் காப்பதும் இன்றையத் தலையான அரசியல் பணிகளாகும்..."[1]

—முதறிஞர், இராசாசி அவர்கள்.

காங்கிரஸ்

உண்மைக் கூட்டாட்சி முறை வெறும் பகற் கனவாகப் போய் விட்டதற்கும் முழு மாநில சுயாட்சி முற்றிலும் பறிபோன தற்கும் மத்திய மாநிலச் சிக்கல்கள் அதன் உச்ச கட்டத்தை அடைந்ததற்கும் சர்வாதிகாரத் தலைமை இந்திய நாட்டில் உருவானதற்கும் இந்தியத் தேசியக் காங்கிரசுக் கட்சியும் அதன் நாடியான காரியக் கமிட்டியும் அதன் தலைமையும் செயல் முறையும் எவ்வகையில் காரணங்களாக அமைந்தன என்பதை இந்நூலின் நான்காம் பகுதி, கடைசி அத்தியாயத்திலும் இப் பகுதியின் 4-ஆம் 5-ஆம் அத்தியாயங்களிலும் விரிவாகக் கண்டோம்.

---

1 Swarajya 2—11—1957

''நிறைந்த அதிகாரங்களைக் கொண்ட வன்மையான மத்திய அரசு; அதன் நிகரற்ற ஆணைகளைச் சிரமேற் கொண்டொழுகும் ஏவல் மாநிலங்கள்; அதன் வழி அமைக்கப்பட்ட ''ஒருங்கிணைந்த இந்தியா'' என்பதே ''இந்தியத் தேசியக் காங்கிரசின் (இந்திரா காங்கிரஸ்)'' கூட்டாட்சி பற்றிய கொள்கையாகும்.

பழைய காங்கிரஸ்

அதனை யொத்த ஒரு வலிமையான மத்திய அரசையே ''பழைய காங்கிரசுக் கட்சியும்'' வலியுறுத்துகின்றது; ஆனால் மத்திய – மாநிலச் சிக்கல்களைத் தீர்ப்பதற்குரிய ஒரு நடுநிலை அமைப்பு வேண்டுமென்று மட்டும் அது கோருகின்றது.

தென்னகத்தைச் சார்ந்த ''பழைய காங்கிரசு''த் தலைவர்களில் ஒருவரான, திரு. வீரேந்திர பாட்டீல் அவர்கள், மைசூர் மாநிலத்தின் முதலமைச்சராக இருந்த போது தனது கட்சிக் கொள்கையிலிருந்து மாறுபட்டு முழு மாநில சுயாட்சியையே வலியுறுத்தினார். மாநிலங்களுக்குத் தன்னாட்சி வழங்கப்படா விடில் அவை, தனியாட்சியை மேற்கொண்டு விடும் என்று கூட மத்திய அரசுக்கு அவர் எச்சரிக்கை விடுத்தார்.

> ''இந்த நிலை நீடித்தால் மாநிலங்களுக்கு அதிகத் தன்னாட்சி வேண்டுமென்ற அவசரக் கோரிக்கைகள் பிறக்கும்; டெல்லியிலிருக்கும் மாநிலங்களுக்குச் சொந்தமான விருந்தினர் மாளிகைகளும் பவனங்களும் (தனிநாடுகளுக்கான) தூதுவரகங்களாக மாறிவிடக் கூடிய ஒரு நாள் வரும்.''2

என அவர் கருத்தறிவித்தார்.

எதிர்க் கட்சிகளின் சந்தர்ப்பவாதம்

காங்கிரசுக் கட்சியாவது சில வரலாற்றுக் காரணங்களினால் ஒரு மத்திய மயமாக்கப்பட்ட (Centralised) கட்சியாகத் திகழ்கின்றது. ஆனால் மற்ற அகில இந்தியக் கட்சிகளும், மாநிலக் கட்சிகளும் (சிற்சில விதிவிலக்குகளைத் தவிர) இந்தியக் கூட்டாட்சி)முறை பற்றியோ மாநிலங்களின் அவலநிலை பற்றியோ குறிப்பாக மத்திய – மாநில அரசுகளின் சிக்கல் நிறைந்த உறவு முறை பற்றியோ-அக்கறை கொண்டவையாகத் தெரியவில்லை.

---

2 ''The States'' - 2-11-1970

அதனதன் தேர்தல் அறிக்கைகளில் ''கூட்டாட்சி அமைப்பு பற்றி'' சில பல கொள்கைகளை அவ்வப்போது அறிவிப்பதோடு சரி. ஆட்சிப் பொறுப்பை ஏற்கும் வாய்ப்புக் கிடைக்கும் போதும் கூட அவை கூட்டாட்சிக் கொள்கையை வலியுறுத்தி அமுல்படுத்த முனைவதில்லை. எதிர்க்கட்சிகளாக அமரும் போதும் அதற்குரிய பரிகாரங்களை எடுத்துக் கூறி ஆளும் கட்சியை முறைப்படுத்தவும் துணிவதில்லை. மாநிலங்களின் அடிமை நிலையையும், மத்திய – மாநிலச் சிக்கல்களையும் மாநிலத் தன்னாட்சி மறுதளிக்கப்பட்டதையும் அரசியற் சந்தர்ப்ப வாதங்களாகவே (Political Expediency) அக்கட்சிகள் பயன்படுத்தி வந்துள்ளன.

கேரளத்தில் உருவான கம்யூனிஸ்ட்டுக் கட்சி ஆட்சியும், பின்னர் மேற்கு வங்கத்தில் அமைந்த கம்யூனிஸ்டு அமைச்சரவையும் மத்திய அரசுடன் மோதிக் கொண்டதற்கு, மத்திய மட்டத்திலிருந்து காங்கிரஸ் கட்சியுடன் அக்கட்சி அகில இந்திய ரீதியில் அரசியல் பொருளாதாரக் கொள்கைகளில் மாறுபட்டு நின்றதும், வாய்ப்பு ஏற்படின் மத்திய அரசின் ஆளுங் கட்சியாக அமர்வதற்காகத் துடித்ததுமே அடிப்படைக் காரணங்கள்; இந்திய மாநிலங்களுக்கு முழு மாநில சுயாட்சி தரப்பட வேண்டுமென்பதோ அல்லது உண்மையான கூட்டாட்சி முறையில் மத்திய - மாநில உறவுகள் சிறக்க வேண்டுமென்பதோ அம்மோதலுக் குரிய காரணங்களல்ல.

கூட்டாட்சிக் கொள்கையைத் தத்தம் கட்சிகளின் அடிப்படைக் கோட்பாடாக (Ideology) எந்தவோர் அகில இந்தியக் கட்சியும் ஏற்றுக் கொள்ளவில்லை.

சுதந்திராக் கட்சி

சுதந்திராக் கட்சியை உருவாக்கிய மூதறிஞர், அமரர். இராசாசி அவர்கள்,

> ''இந்தியத் துணைக் கண்டத்தைப் போன்ற பரந்த ஒரு நாட்டுக்கு உண்மைக் கூட்டாட்சி அரசு ஒன்றே செயல் திறன் மிக்க அரசு முறையாகும்...... இந்தியா மூன்றுவது மிகப் பெரிய வல்லரசாகத் திகழ விரும்பவில்லை. நமது அரசமைப்பில் 'இந்திய ஒன்றியம்' என வழங்கப்படும் மத்திய அரசு, மாநிலங்களின் தன்னாட்சியை முழுதும்

அழித்தொழித்து விட்டு அவற்றை யெல்லாம் விழுங்கி ஏப்ப மிட்டு தன்னைத் தானே மிகப் பெரிய தொரு சக்தியாக மாற்றிக் கொள்ளாமல் நம் ஒன்றியத்திலுள்ள மாநிலங்களின் மேல் உண்மைக் கூட்டாட்சியின் அதிகாரத்தை மட்டும் செலுத்தும் ஓர் மத்திய அரசாக இருந்தாலே போதுமானது. இந்தியா மிகப் பரந்த நாடு. அதன் பல்வேறு பகுதிகளில் வாழும் மக்கள் வேறொரு கண்டத்திலிருந்து அண்மையில் குடியேறியவர்களல்லர்; அவரவர் தாயகங்களில் பல நூற்றுண்டுகளாக வாழ்ந்து வருபவர்கள்; மத்திய அரசின் கட்டுப்பாட்டிற்கோ அல்லது அதன் அச்சுறுத்தலுக்கோ அடிபணியாமல் சற்றேறக் குறையச் சுதந்திரத்தோடு வாழ்ந்து (தத்தம்) தனித்தன்மையான வாழ்க்கை முறைகளையும் மொழிகளையும் இலட்சியங்களையும் விருப்பு, வெறுப்புகளையும் வலிமையையும் வலிமை யின்மையையும் வளர்த்து வந்துள்ளன.''3

என்று வலியுறுத்துகின்றார்.

ஆனால், சுதந்திராக் கட்சி, தற்போது இருக்கும் அரசமைப்பை அப்படியே ஏற்றுக் கொள்கிறது. மத்திய – மாநில அரசுகளின் பிணக்கைத் தீர்ப்பதற்கு மட்டும் நடுநிலையான நீதித் துறை சார்ந்த அமைப்பு (Judicial body) வேண்டுமெனக் கோருகின்றது.4

ஜனசங்கம்

ஜனசங்கக் கட்சி, கூட்டாட்சி அம்சங்களோடு கூடிய ஓர் ஒற்றையாட்சி அரசமைப்பையே வலியுறுத்துகின்றது. ஆனால் மத்திய-மாநில உறவுகள் முழுவதையும் ஓர் அமைப்பு முறை மூலமாக (Institutionalisation) செயல்படுத்த வேண்டுமெனக் கோருகின்றது. 5

---

3 Exit! Over Centralisation; Enter!! True Federation. 18-3-1967 Swarajya. P. 1, 2.

4 Swathanthra Party Election Manifesto - 1971.

5 Janasangh Party Election Menifesto - 1971.

வலது கம்யூனிஸ்டுக் கட்சி

> "மாநில நடவடிக்கைகளில் தலையிடத் தக்க அபரிமிதமான அதிகாரங்களைக் கொண்டிருக்கும் மத்திய அரசின்" அதிகாரத்தைக் குலைக்க வேண்டுமென (வலதுசாரி) இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சி முன்னர்(1968-இல்)கோரி வந்தது. 6
>
> ஆனால் "நாட்டின் அடிப்படையான ஒருமைப்பாட்டுக்கு இசைந்த முறையில் மாநிலங்களுக்கு அதிக அதிகாரங்களைத் தருவதற்காக." 7

அரசியல் சட்டம் திருத்தப்பட்டால் போதுமானது எனப் பின்னர் (1971-இல்), தன் நிலையை மாற்றிக் கொண்டது.

வலதுசாரிக் கம்யூனிஸ்டுக் கட்சியின் அம்மாறிய கொள்கையும் கூட நீண்ட நாள் நீடிக்கவில்லை. அதன் தலைவரான, திரு. எஸ். ஏ. டாங்கே அவர்கள்,

> "(பாதுகாப்பு, வெளிநாட்டு விவகாரங்கள், நாணயம் மற்றும் செய்தித் தொடர்புகள்) ஆகியவற்றை மட்டும் மத்திய அரசுக்குத் தந்தால் அது தேசியப் பொருளாதார வளர்ச்சிக்கும், தேசியக் குடியரசு வளர்ச்சிக்கும் ஊறுவிளைவிப்பதாக அமையும். மகாபாரத காலத்திலும், முகலாயர் மற்றும் மராத்தியர் காலத்திலும் பின்பற்றப்பட்ட, பத்தாம் பசலிக் காட்டுமிராண்டிக் கொள்கையான பிரபுத்துவ முறை சார்ந்த அதிகாரப் பரவலாக்கும் கொள்கைக்கு (Federal Decentralisation) இந்தியா எனப்படும் பாரதம் திரும்பச் செல்லக் கூடாது; செல்லவும் முடியாது." 8

எனக் கூறுகின்றார்.

1974-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்களில் தமிழகச் சட்டப் பேரவையில், தி. மு. க. அரசால் கொண்டு வரப்பட்ட "மாநில சுயாட்சித் தீர்மானம்" விவாதத்திற் கெடுக்கப்பட்ட போது,

> "அரசியல் சட்டம் மத்திய-மாநில உறவுகளுக்காகத் திருத்தப் படத் தேவையில்லை." 9

என்ற ஒரு திருத்தத்தை வலதுசாரிக் கம்யூனிஸ்டுக் கட்சி

---

6 C. P. I. Six points programme (Eighth Party Congress - 1968)

7 Election Manifesto - 1971.

8 "Democratic Centralisation" weekly Round Table (13-8-1972) Page. 26.

9 ஆதாரம் - மாநில சுயாட்சி பற்றிய 'தமிழரசு' இலவச இணைப்பு (16—5—1974) பக்கம். 4.

அரசியற் கட்சிகளின் ஓர் இலட்சியக் கொள்கையாக 1031

கொண்டு வந்து மாநிலங்களுக்கு முழு சுயாட்சி தேவை யில்லை யென வாதாடிற்று.

இவ்வகையில் 1968-ஆம் ஆண்டு தொடங்கி 1974-ஆம் ஆண்டுக்குள் கூட்டாட்சி பற்றியும் மத்திய-மாநில உறவுகள் பற்றியும், முன்னுக்குப் பின் முரணான கருத்துக்களைத் தந்து கொண்டிருக்கும் வலதுசாரி இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சியை அரசியல் சந்தர்ப்பவாதக் கட்சி யென்பதைத் தவிர வேறு என்ன கூற முடியும்?

இந்தியக் கம்யூனிஸ்டு (மார்க்ஸிஸ்டு)க் கட்சி

> ''இன்றைய மத்திய மாநில உறவுகளைப் பற்றிய சட்ட விதிகளை முற்றும் மாற்றி யமைத்து விட வேண்டு மென்றும், பொதுப் பட்டியலில் உள்ள பல அதிகாரங்களை மாநிலங்களுக்கு மாற்றித் தர வேண்டு மென்றும், மாநில நிதி வாயில்கள் பெருக்கப்பட வேண்டு மென்றும், ஆளுநர் பதவிகளை ஒழித்து விட வேண்டு மென்றும்,மாநில நெருக்கடி நிலையெனக் கூறி, மாநில சட்டமன்றங்களையும் அமைச்சரவைகளையும் கலைக்கக் கூடிய குடியரசுத் தலைவரின் (நெருக்கடி நிலை) அதிகாரம் இரத்து செய்யப்பட வேண்டு மென்றும்.'' 10

வலியுறுத்தி வருகிறது—இந்திய மார்க்ஸிஸ்டுக் கட்சி. அதன் இன்றைய மத்திய - மாநிலக் கொள்கை, இரஷ்ய நாட்டின் பிரிந்து செல்லும் உரிமையோடு கூடிய முழு மாநில சுயாட்சிக் கொள்கையின் சிதைந்த வடிவே யாகும்.

1942-ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 19-ஆம் நாளில் பிளவு படாத ''இடதுசாரி இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சியின் மத்தியக் குழு'' முழு மாநில சுயாட்சியைத் தன் அரசியல் கொள்கை யாக ஏற்றுக் கொண்டு ஒரு தீர்மானம் நிறைவேற்றியது. அத்தீர் மானத்தை,பம்பாயில் நடந்த இந்தியக்கம்யூனிஸ்டுக் கட்சியின் மாநாடும் ஏற்றுக் கொண்டது.

அக்கட்சியின் முழு மாநில சுயாட்சித் தீர்மானம் வருமாறு:

> ''தொடர்பான பூகோள பிராந்தியத்தைத் தாயகமாகக் கொண்ட, பொதுவான வரலாற்றுப் பூர்வமான பாரம்பரியம், பொது மொழி, கலாச்சாரம், மனப் பூர்வமான ஒருமைப்

10 C. P. I. (Marksist) 1971 Election Menifesto.

> பாடு, பொதுவான பொருளாதார வாழ்வு ஆகியன கொண்ட இந்திய மக்களின் ஒவ்வொரு பிரிவும் தனித் தன்மை கொண்ட தேசிய இனமாகும். அத்தகைய தேசிய இனங்கள், சுதந்திரம் பெற்ற இந்திய யூனியன் அல்லது கூட்டாட்சிக்குள் சுயாட்சி பெற்ற மாநிலங்களாக இருப்பதற்கு உரிமை பெற்றவை. அவை விரும்பினுல் பிரிந்து போகும் உரிமை அவர்களுக்கு உண்டு.'' 11

தன்னுட்சி பெற்ற மாநிலங்கள், விரும்பினுல் தனியாட்சி கூடத் தேடிக் கொள்ளலாமென இத்தீர்மானம் தெளிவாகச் சுட்டிக் காட்டுகிறது.

அதுமட்டுமன்றி, 'தேசிய இனம்' என்ற அடிப்படையில் இந்திய முஸ்லீம்களுக்கு ஒரு தனித் தாயகம் வேண்டுமென்ற கொள்கையை இந்தியக் கம்யூனிஸ்டு (மார்க்சிஸ்டு)க் கட்சி ஏற்றுக் கொண்டு, 'பாக்கிஸ்தானம்' தனி நாடாகப் பிரிய வேண்டுமென்றும் அப்போது வலியுறுத்திற்று. ஆனுல் இந்திய நாடு விடுதலை பெற்ற பின்னர் அதன் 'மாநில சுயாட்சி பற்றிய கொள்கைகள்' மெல்ல மெல்ல மாற்றத்தைப் பெற்றன. மேற்கு வங்கத்திலும் கேரளாவிலும் அக்கட்சி ஆளும் கட்சியாக வரும் வாய்ப்பினைப் பெற்றிருந்துங் கூட மத்திய அரசோடு சில குறிப்பிட்ட அரசியல் பிரச்சினைகளுக்காக மட்டும் அது மோதிக் கொண்டதே தவிர-அதன் வேர்க் கொள்கையான முழு மாநில சுயாட்சிக் கொள்கைக்கு உருக் கொடுத்து, அதனை அகில இந்தியப் பிரச்சினையாக ஆக்கி, மத்திய நாடாளு மன்றத்திலும் மக்கள் மாமன்றத்திலும் வலியுறுத்தி இடையருது போராட முன் வரவில்லை.

ஆனுல், தேர்தல் அறிக்கைகளில் மட்டும் மத்திய – மாநில உறவுகள் பற்றிய இரண்டோர் உதிரிக் கருத்துக்களை அது தெளிக்கத் தவறுவதில்லை. திராவிட முன்னேற்றக் கழகம் இந்திய நாட்டின் ஒற்றுமைக்கு ஊறு நேரா வண்ணம் முழு மாநில சுயாட்சியை மொழி, இனம் மற்றும் அரசியல்,பொருளாதார,சமுதாயக் காரணங்களுக்காக வலியுறுத்தி முறையோடு மத்திய அரசுக்கு வேண்டுகோள் விடுக்கும்போது, அரசியல்

---

11 தமிழ்நாடு சட்டப் பேரவை நடவடிக்கைகள் தொகுதி 56, எண். 5, பக்கம். 758.

காரணங்களுக்காகஅக்கொள்கையை எதிர்க்கவும்மார்க்சிஸ்டுக் கட்சி துணிகின்றது.ஆக,மாநில சுயாட்சி பற்றிய மார்க்சிஸ்டுக் கட்சியின் ''பழைய சித்தாந்தம்'' மாறி,தற்போது ஒரு''வெறும் அரசியல் பித்தலாட்டம்'' ஆகி விட்டது.

சோஷலிஸ்டுக் கட்சி

> ''தேசிய ஒற்றுமையையும், அதனோடு இயைந்த முன்னேற்றத்தையும் நல்கும் பிணைப்புடன் கூடிய அதிகாரப் பரவலாக்கத்தை'', சோஷலிஸ்டுக் கட்சிகள் வலியுறுத்துகின்றன. ஆனால் ''வளர்ச்சி நிதிக்காக மத்திய அரசையே மாநிலங்கள் முழுதும் அண்டியிருக்கக் கூடிய அலையை,''12

அக்கட்சிகள் விரும்புவ தில்லை.

பஞ்சாபி சிரோமணி அகாலி தளக் கட்சி

> ''அதிக அளவு (மாநில) சுயாட்சி உரிமைகளும், அதிகாரங்களும் குறிப்பாக நிதித் துறையிலும் சட்டமியற்றுத் துறையிலும்,'' 13

மாநிலங்களுக்குத் தரப்பட வேண்டுமென அகாலித்தளம் வற்புறுத்துகின்றது.

தமிழரசுக் கழகம்

பழைய தேசியப் பரம்பரையைச் சார்ந்தவரும் தமிழகத்தின் மாநில சுயாட்சிக் கொள்கையின் தந்தையுமான, சிலம்புச் செல்வர். திரு. ம. பொ. சிவஞானக் கிராமணியார் அவர்கள், இந்தியத் தேசியக் காங்கிரசில் இருந்தபோதே மாநிலங்களுக்கெல்லாம் முழுத் தன்னாட்சி அளிக்கப்பட வேண்டு மென்ற மூலக் கொள்கையை வலியுறுத்தி வந்தார். அவர் இந்தியத் தேசியக் காங்கிரசு, உண்மையான கூட்டாட்சி கூடாதெனக் கொள்கை வகுத்து, செயற்கையான ஒருமைப்பாட்டை வலிமையான மத்தியம் என்ற வாள் முனையால் இந்திய மக்கள் மேல் கட்டாயமாகத் திணித்த காலத்திலும், அரசியல், பொருளாதாரக் காரணங்களுக்காக இன (Race) அடிப்படையில் தென்னகம், தனித்துப் பிரிய வேண்டுமென, தி. மு. க. போராடி வந்த காலத்திலும், எதிரிடையான இவ்விரு துருவக் (Extreme)

---

12 1971 S. S P. Election Menifesto.
13 1971 Shiroomani Akali Dal Election Menifesto.

கொள்கைகளையும் ஒரு முனையில் சந்திக்க வைப்பதற்கான தூர நோக்குடன் "முழு மாநில சுயாட்சியே" தக்கதொரு பரிகாரமெனச் சாற்றி, அதற்கென ஒரு தனிக் கழகத்தையும் கண்டு, தமிழக மக்களைத் தட்டி யெழுப்பினர்.

அவரது "தமிழரசுக் கழகத்தின்" ஒரே அரசியற் கொள்கை முழு மாநில சுயாட்சி. அக்கட்சி மாநில சுயாட்சி மாநாடுகளை நடத்தியும் போராட்டங்களை நடத்தியும் மாநில சுயாட்சிக் கொள்கையை "ஓர் அரசியற் கொள்கையாக," பீடுநடை போட வைத்தது.

தமிழகச் சட்டப் பேரவையில் மாநிலங்களுக்கு சுயாட்சி வழங்கக் கோரும் அதிகாரப் பற்றற்ற தீர்மானத்தை 21-8-1970-ஆம் நாளில், தமிழரசுக் கழகத்தின் சார்பில் திரு. ம. பொ. சி. அவர்கள் முன்மொழிந்தார்கள்,

> "மாநிலங்கள் சுயாட்சி அந்தஸ்தை உடையவையாக இருக்கும் வகையில் அவற்றிற்குக் கூடுதலான அதிகாரங்களை வழங்கவும்,மத்தியில் மேலும் மேலும் அதிகாரங்களைக் குவித்துக் கொண்டிருப்பதைத் தவிர்க்கவும் இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தைத் திருத்துவதற்கு ஆவன செய்யுமாறு மத்திய அரசினை வற்புறுத்தும்படி,தமிழ்நாடு அரசுக்கு இப் பேரவை பரிந்துரை செய்கிறது." 14

என்பதே ம.பொ.சி. அவர்களின் மாநில சுயாட்சித் தீர்மானம்.

### மாநில சுயாட்சியும் தி. மு. க. வும்

1947-ஆம் ஆண்டிலேயே சிதைந்து போன கூட்டாட்சி மற்றும் மாநில சுயாட்சிக் கொள்கைக்கு, இருபது ஆண்டுகள் கழித்து, 1967-ஆம் ஆண்டில் புத்துயிரும், செயல் வடிவமும் கொடுத்தது,திராவிட முன்னேற்றக் கழகம் தான். தி. மு. க. வின் பழைய பிரிவினைக் கொள்கை பற்றிய அரசியல் நுணுக்கத்தைத் தெளிவு படுத்த விரும்பிய மூதறிஞர். இராசாசி அவர்கள்,

> "எல்லா மாநில அரசுகளுக்கும் நியாயமான சுயாட்சி தரப்பட வேண்டுமென்ற அடிப்படையில் அமைகின்ற ஓர் உண்மையான கூட்டாட்சிக் கோரிக்கையே தி. மு. க. வின் இறுதி

---

14 "சட்டமன்றத்தில் சுயாட்சிக் குரல்" (1974) பக்கம், 56.

நிலையாகும். திறனற்றதும் செயல்பட முடியாததும் மேலாதிக்கமும் கொண்ட ஒரு மத்திய அரசை எதிர்க்கும் தேசிய எதிர்ப்புச் சக்தியைத் தான் அது பிரதிபலிக் கிறது.''15

பிரிவினைக் கோரிக்கையை வலியுறுத்தி வந்த தி. மு. க. அதன் 'இறுதி நிலைக்' கொள்கையான மாநில சுயாட்சியை நோக்கி 1963-ஆம் ஆண்டிலிருந்து நடை போடத் தொடங்கியது. பேரறிஞர் அண்ணு அவர்கள் 1963-ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 25-ஆம் நாளில் நாடாளுமன்ற மாநிலங்களவையில் கருத்துரையாற்றும் போது, அதனை மறைமுகமாகக் கோடிட்டுக் காட்டு கின்ருர்.''16

1963-ஆம் ஆண்டு சூன் திங்களில், தி. மு. க. தன் பிரி வினைக் கொள்கையை முழுக்க முழுக்கக் கைவிட்டு விட்டு அதற்கு மாருக மாநில சுயாட்சிக் கொள்கையை ஏற்றுக் கொண்டது.

1967-ஆம் ஆண்டுத் தி. மு. க.வின் தேர்தல் அறிக்கையில்,

''ஒருமைப்பாடு என்பதை வலியுறுத்தி நடைமுறைக்குக் கொண்டு வரும்போது அது, ஒரு பகுதியினர் பிற பகுதி யினர் மீது ஆதிக்கம் செலுத்துவதாக ஆகி விடாமல் பாதுகாத்திடும் பொறுப்பை, தி.மு. கழகம் மேற்கொள்ள உறுதி கொண்டுள்ளது... மாநில உரிமைகள் நசுக்கப் படாமல் பாதுகாத்திடவும் பொருளாதார வளம் ஒரே சீராக எல்லா மாநிலங்களுக்கும் அமைவதற்கான திட்டம் மேற்கொள்ளப்படவும், தி. மு. கழகம் பொறுப்புடன் பணியாற்ற உறுதி கொண்டிருக்கிறது. மாநில உரிமை களைப் பாதுகாத்திடும் முறையிலும், குறிப்பிடப் படாத எஞ்சிய அதிகாரங்கள் ( Residuary Powers ) மத்திய சர்க்காரிடம் ஒப்படைக்கப் பட்டுள்ள முறையை மாற்றி

---

15 Ibid Opp. cited Note. 3.

16 இந்நூலின் முதற்பகுதி முதல் அத்தியாயம், 4, 5, 6, பக்கங்களில் காண்க.

அவை மாநிலங்களுக்குத் தரப்பட வேண்டும் என்பதற்காகவும் கழகம் பாடுபடுவதுடன் அந்த நோக்கத்துடன் இந்திய அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டிய அவசியத்தை வலியுறுத்த விரும்புகிறது''.17

எனத் தெளிவாக்கப் பட்டுள்ளது.

முழு மாநில சுயாட்சிக் கொள்கைக்கு உருக்கொடுக்கும் முயற்சியின் முதற்படியாக ஓர் ''உயர் மட்ட ஆணைக்குழு'' அமைக்கப்பட வேண்டுமென, பேரறிஞர். அண்ணா அவர்கள் 8—4—1967-இல் புதுடெல்லியில் நடந்த செய்தியாளர் கூட்டத்தில் அறிவித்தார்.

அண்ணாவின் அக் கருத்துக்கு உயிர் கொடுக்கும் வகையில் 22-9-1969-இல் டாக்டர்.இராசமன்னார் தலைமையில் ''மத்திய-மாநில உறவு ஆய்வுக்குழு'' அமைக்கப்பட்டு அதன் வரலாற்றுப் புகழ் பெற்ற அறிக்கையும், 27—5—1971-இல் வெளியிடப் பட்டது.

தி.மு.க. வின் 1971-ஆம் ஆண்டின் தேர்தல் அறிக்கையில் முழு மாநில சுயாட்சி பற்றித்தெளிவாகக்குறிப்பிடப்பட்டுள்ளது;

''இந்திய அரசியல் முறை 'கூட்டாட்சி முறை' என்று வர்ணிக்கப் பட்டாலும் அந்தத் தராசு முனை மத்திய அரசுப்பக்கம் அதிக பட்சம் சாய்ந்திருப்பதால்; அதிகாரத் துறையிலும் நிதித் துறையிலும் மாநிலங்கள் செவ்வனே செயல்பட முடியாமல் தடைகள் இருப்பதால்; அதே நேரம் இந்தியா வலுப் பெற்றதாக இருக்க வேண்டுமென்கிற இலட்சியத்திற்கும் ஊறு தேடாமல்; வலுவான இந்தியா இயங்குவதற்காகத் தேவையானவற்றை மத்திய அரசிடம் கொடுத்து விட்டு; இதர அதிகாரங்கள், மாநிலங்களுக்கு வழங்கப்படும் வகையில் அரசியல் சட்டத்தைத் திருத்தி, மறுபரிசீலனை செய்ய வேண்டும் என்று கருதுகிறோம். இந்த நோக்கத்தோடு நமது அரசு அமைத்த வல்லுநர் குழுவின் அறிக்கை கிடைத்த பிறகு அந்த அடிப்படையில் அகில இந்திய ரீதியில் மாநில

17 தமிழ்நாடு சட்டப்பேரவை நடவடிக்கைகள் தொகுதி 56 எண். 1. பக்கம் 28 - 29.

சுயாட்சி இயக்கத்திற்கான ஆதரவு திரட்டும் இயக்கத்தைக் கழகம் மேற்கொள்ளும்...... அரசியல் துறை அதிகாரங்களும்,நிதித்துறை அதிகாரங்களும் மாநிலங்களுக்கு மேலும் தேவை என்று கேட்பது மாநிலங்களில் இருப்போர் அதிக அதிகாரங்களை நுகர வேண்டுமென்கிற ஆசையால் அல்ல; மாநில அரசுகள் மக்களுக்கு நெருங்கிய நிலையில் இருப்பதால் அந்த அதிகாரங்களை மத்திய அரசிடமிருந்து மேற்கொண்ட பிறகே, எதிர் பார்க்கும் விதத்தில் மக்களுக்குத் தொண்டாற்ற முடியும் என்பதையும் தெளிவாக்க விரும்புகிறோம்.'' 18

அதன் பின்னர், பல பொதுக் குழுக்களிலும், மாநாடுகளிலும் ''மாநிலத்தில் சுயாட்சி;மத்தியில் கூட்டாட்சி''என்ற கொள்கை முழக்கத்தை, தி. மு. க. பரப்பி வருகின்றது. முழு மாநில சுயாட்சிக்குச் செயல் வடிவம் கொடுக்கு முகத்தான், மாநில சுயாட்சி பற்றியும் இராசமன்னர் குழுவின் பரிந்துரைகள் மீதும் ஆய்வு செய்து, தி.மு.க.வின் தமிழக அரசு 16—4—1974-ஆம் நாளில் தமிழகச் சட்டப் பேரவையில் தனது கருத்துரைகளைத் தீர்மான வடிவில் முன்மொழிந்தது. அவ்வரலாற்றுப் புகழ் பெற்ற மாநில சுயாட்சித் தீர்மானம் வருமாறு,

''மாநில சுயாட்சி பற்றியும், இராசமன்னர் குழுவின் பரிந்துரைகள் பற்றியும் தமிழ்நாடு அரசின் கருத்துரைகளையும், இராசமன்னர் குழுவின் அறிக்கையையும் இப் பேரவை ஆய்வுக்கு எடுத்துக் கொண்டு,

பல்வேறு மொழி, நாகரிகம், பண்பாடு ஆகியவைகளைக் கொண்ட இந்திய நாட்டின் ஒருமைப் பாட்டைப் பேணிக் காக்கவும், பொருளாதார வளர்ச்சியை மேம்படுத்தவும், மக்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்ட மாநில ஆட்சிகள் தடையின்றிச் செயல்படவும்,

மாநில சுயாட்சி பற்றியும், இராசமன்னர் குழுவின் பரிந்துரைகள் மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று மத்தியில் கூட்டாட்சி,

---

18 Ibid Opp, cited Note, 17, Page 32-33.

மாநிலங்களில் சுயாட்சி கொண்ட உண்மையான கூட்டாட்சி முறையை உருவாக்கும் அடிப்படையில், இந்திய அரசியல் அமைப்புச்சட்டம் உடனடியாகத் திருத்தப்பட வேண்டும் என்று இப்பேரவை முடிவு செய்கிறது.''19

20—4—1974-இல் சட்டப் பேரவையிலும் 27—4—1974-இல் சட்ட மேலவையிலும் மாநில சுயாட்சித் தீர்மானம் நிறைவேறிற்று.

இவ்வகையில் சென்ற 24 ஆண்டு காலமாக அரசியல் விற்பன்னர்களுடைய ஆய்விலும், சட்டமேதைகளின் நுட்ப விளக்கங்களிலும் மங்கிக் கிடந்த மத்திய – மாநில உறவுகள்— காங்கிரசுக் கட்சியால் திட்டமிட்டுச் சிதறடிக்கப்பட்ட மத்திய – மாநில உறவுகள் — மாற்றுக் கட்சிகளால் அரசியற் சந்தர்ப்ப வாதங்களுக்கு மட்டும் அவ்வப்போது பயன்பட்டு வந்த மத்திய-மாநில உறவுகள் — தி. மு. கழகத்தாலும் அதன் அரசினாலும் புத்துயிர் கொடுக்கப்பட்டு ''முழு மாநில சுயாட்சிக் கோரிக்கையாக'' மாறி மக்கள் மன்றத்தில் தற்போது ஓர் அரசியற் கொள்கையாக நடைபோடத் துவங்கி யுள்ளது.

## அரசியற் கட்சிகளின் இலட்சியக் கரு

சென்ற 25 ஆண்டுகளில், இந்திய அரசமைப்பைப் பற்றியும், அதன் நடைமுறை பற்றியும் பல அரசியல் கட்சிகள் பல்வேறு கருத்துக்களை முன்னுக்குப் பின் முரணாகத் தெரிவித்து வந்துள்ளன. மாநிலங்கள் அடிமைப்பட்டுள்ளன என்பதையும் அதன் உரிமைகளை ஒவ்வொன்றாக மத்திய அரசு, தொடர்ந்து கையகப்படுத்தி வருகிற தென்பதையும் இந்திய நாட்டின் அத்துணை அரசியல் கட்சிகளும் ஏதோ ஒரு வகையில் ஏற்றுக் கொள்கின்றன; 'அரசமைப்பைத் திருத்த வேண்டும்' என்று கூட பல அகில இந்தியக் கட்சிகள் பெயரளவில் போராடியும் வருகின்றன. ஆனால், அரசமைப்பைப் பற்றிய தமது அரிய கொள்கைகளை அரசியல் சந்தர்ப்பங்களுக் கேற்ற வகையில் அவ்வப் போது பின்னணிக்குத் தள்ளி வைத்து வந்துள்ளன என்பதும் மறுக்க முடியாத உண்மையே.

அரசியற் கட்சிகளின் அகில இந்திய ரீதியில் அமைக்கப்பட்ட கொள்கைகளும், செயற் திட்டங்களும், பல நேரங்களில் மாநில மக்களின் தனி நலன்களுக்கு முரணானவையாக

19 Ibid Opp, cited note, 17, Page 23.

அமைந்து விடுவதும் உண்டு. அப்போது தமது தேசியக் கொள்கைகளையும் மாற்றிக் கொள்ள இயலாமல், மாநில மட்டத்திலும் உரிய வகையில் செயல்பட இயலாமல் அவை தத்தளிக்கும். ஆட்சி மொழி, மாநில சீரமைப்பு, ஐந்தாண்டுத் திட்டங்கள், அரசமைப்புத் திருத்தங்கள் போன்றவைகள் அரசியல் கட்சிகளின் முரண்பட்ட சந்தர்ப்பவாதக் கொள்கை களுக்குச் சான்ருக அமைகின்றன.

மாநிலத் தன்னுட்சிக் கொள்கையற்ற அரசியல் கட்சிகளை மாநில மக்கள் முழுமையாக ஏற்றுக் கொள்ளாததற்கு இதுவும் (சந்தர்ப்பவாதமும்) ஒரு காரணமாகும்.

மாநிலத் தன்னுட்சி உரிமைகளைப் பேணிக்காக்க வாக்களிக் கும் சில மாநிலக் கட்சிகள் அம்மக்களது நெஞ்சங்களை ஈர்த்து, அதன் வழி, காங்கிரசின் வல்லாண்மையை அகற்றி, மாநிலங் களை ஆளும் வாய்ப்பைப் பெற்று விளங்குகின்றன. காரணம் மாநில மக்களின் தன்னுரிமைகளிலும், தனி நலன்களிலும் அவ் வகைக் கட்சிகள் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளதேயாகும்.

மக்களது நல்வாழ்வுப் பணிகளைத் தேசிய மட்டத்தில் நின்று நிறைவேற்றுவதற்குக் கூட மாநிலத் தன்னுட்சி தான் உற்ற தோர் வழியெனவும், அதனை அடைவதற்காக அரசியல் கட்சி கள் தமது மற்றைய இலட்சியங்களைக் கூட ஒரு புறம் ஒதுக்கி விடவேண்டும் எனவும், இராச தந்திரியான மூதறிஞர். இராசாசி அவர்கள் பல்லாண்டுகளுக்கு முன்பிருந்தே (1957–ஆம் ஆண்டி லேயே) வலியுறுத்தி வந்துள்ளார்;

> ‘‘மாநிலத் தன்னுட்சி, கரைந்துருகி மறைந்து விட்டது. மாநில நலன்களைப் பேணுவதற்கான ஊக்க உணர்வும் காங்கிரசிடமிருந்து மடிந்து போயிற்று. மாநிலப் பொறுப்புக்களையும் அதிகாரங்களையும் முறையாகப் பெறு வதற்காகவும், இன்றைய மத்திய அரசு இன்றியமையாத குறைந்தபட்ச செயல் வட்டத்திற்குள் ஓர் உண்மைக் கூட்டாட்சி அரசாகச் செயல்படும் வகையில் அதனைக் கட்டாயப் படுத்துவதற்காகவும் தேவையான தோர் அரசியல் பாதுகாப்பு அமைப்பை ( Political Defence ) உருவாக்குவதே உற்ற பரிகாரமாகும். மத்திய மயமாக்கப் பட்ட காங்கிரசுக்கு எதிராக ஒவ்வொரு மாநிலமும் ஓர்

'மாநில ஐக்கிய முன்னணியை'(State United Front)உருவாக்கிக் கொள்ள வேண்டும். அந்தந்த மாநிலங்களின் நலன்களை மையமாக வைத்து அரசியல் ரீதியாக உருவாக்கப்படும் மாநில ஐக்கிய முன்னணிகளைக் கொண்டு, காங்கிரசிற்கு எதிரான அனைத்திந்திய (மாநில முன்னணிக்) கூட்டமைப்பை (All India Federation of State Fronts) ஏற்படுத்திக் கொள்வது மிக எளிதாகும். அதனால் இந்தியக் குடியரசில், மத்திய அரசைப் போற்றுவோருக்கும் மாநில உரிமைகளைக் காப்போருக்கும் இடையே, ஓர் ஆரோக்கியமான சமநிலை நிலவும்...''

''...அரசியல் கட்சிகள் தத்தமது மற்றைய பிரச்சினைகளை ஒதுக்கி வைத்துவிட்டு, மாநில சுயாட்சியை மட்டுமே தமது இலட்சியக் கருவாக ஏற்றுக் கொண்டு, ஒன்றாக இணைந்து, காங்கிரசுக்கு எதிரான ஒரு ''மாநில முன்னணியை'' அமைத்தால் அதுவே மாநிலத் தன்னாட்சியையும், மாநில நலனையும் காக்கும்...''

''......மாநிலங்களின் நலிவைத் தடுப்பதும், மத்திய வல்லாண்மைக்கு எதிரான அமைப்பினை உருவாக்குவதும், அதன் வழி மாநில சுயாட்சியைப் போற்றிக் காப்பதும் இன்றைய தலையாய அரசியல் பணிகளாகும்...'' 20

என மாநில சுயாட்சியைப் பெறுவதற்கான அரசியல் வழிவகைகளை இராசாசி அவர்கள் தெளிவு படுத்துகிறார்.

அரசியல் சந்தர்ப்பவாதங்கள் மாறி, மாநில மக்களின் தனி நலன்களைப் பேணி, அவர்தம் உள்ளத்தைத் தொடும் அளவில் அரசியற் கட்சிகள் செயல்பட வேண்டுமெனில், அக்கட்சிகளின் முழக்கங்களில் மாநில சுயாட்சியையும் ஒன்றாக ஏற்றுக் கொள்ள வேண்டும்.

......மலர்க மாநில சுயாட்சி......



20 Swarajya (2-11-1957.)

# 10. இழந்த இறைமையை மாநிலங்கள் மீண்டும் பெற...

— மலர்க மாநில சுயாட்சி —

" அரசினுடைய 'இறைமை' என்பதற்கு நாம் கொள்ளும் பொருள் என்ன? அரசியல் இறைமையானது பொது மக்களிடம் நிலைத்துள்ளது என நமது அரசமைப்பின் முகவுரை கூறுகிறது. "சட்டம் சார்ந்த இறைமை" யானது கூட்டாட்சி ஒன்றியத்திற்கும் அதன் அங்கங்களுக்குமிடையே (மாநிலங்கள்) பிரித்துத் தரப்பட்டுள்ளது. இன்னும் அதிகப் பயன்களை விளைவிக்கும் இறைமையைப் பெற்ற அங்கங்களாக மாநிலங்களைத் திகழச் செய்வதற்கே எங்கள் திட்டங்கள் பயன்படுகின்றன என்று நீங்கள் ஏன் எடுத்துக் கொள்ளக் கூடாது?"[1]

— பேரறிஞர் அண்ணா.

மேலாதிக்கம் செய்யும் மத்திய அரசையும் மண்டியிடும் மாநிலங்களையும் படைத்து வைத்துள்ள இன்றைய அரசமைப்பை "புனித வேதம்" என்று கூறி அதனை அப்படியே வைத்துக் கொள்ள வேண்டுமென்ற உள் நோக்கத்தைக் கொண்டவர்கள் அதற்குரிய காரணங்களைக் கூறாமல், ஓர் எதிர் மறை வினாவை மட்டுமே தொடுக்கின்றனர்.

"மாநில மக்களது மொழி, இன, பண்பாடு இன்ன பிற தனித் தன்மைகளைப் போற்றிக் காக்கத் தேவையான பல அரசதிகாரங்களை அளவுக் கதிகமாக இன்றைய மாநிலங்கள் பெற்றுத் திகழ்கின்றனவே; இருக்கும் அதிகாரங்களை முறையாகப் பயன் படுத்தி மாநிலங்கள் முன்னேற்றத்தைப் பெற முடியாதா? பிரிவினை வித்தைத் தாங்கியுள்ள மாநில சுயாட்சியென்ற கோரிக்கைதான் அதற்குப் பரிகாரமா?" என்பவர்களுக்குரிய விடையை நமது தலைமை நீதி மன்றமும் அரசமைப்பைத் திருத்தும் சட்ட விதியுமே (368-ஆம் விதி) உரிய மறுமொழியைத் தருகின்றன.

---

1 Dr. C. N. Annadurai, "Carry On! But Remember!!" (1969) Page 16

# I

# மாநிலங்களுக்கு இறைமை இல்லை—தலைமை நீதி மன்றத்தின் தீர்ப்பு

கூடுதலான அதிகாரங்கள் மாநிலங்களுக்குத் தரப்பட வேண்டும் என்று கேட்பதால் மத்திய அரசிற்குக் குறைவான அதிகாரங்கள் தான் இருக்கவேண்டும் என்பது பொருளல்ல. மத்திய அரசின் வலிமை காக்கும் அதிகாரங்கள் அங்கே இருக்க வேண்டும் என்பதும் மாநிலங்களின் வளம் பெருக்கும் அதிகாரங்கள் இங்கே இருக்கவேண்டும் என்பதும் தான் மாநில சுயாட்சியின் பொருள் என்பதை இந் நூலின் பல இடங்களில் நாம் ஆய்ந்துள்ளோம்.

வளம் பெருக்கும் அதிகாரங்களை மாநிலங்களுக்கு வழங்குவது எது?

மாநில மக்களிடம் நிலைபெற்றுள்ள ''இறைமை'' (Sovereignty).

மாநில அரசுகளின் உயிர்க் கூறு, அதன் மக்களிடம் நிலை பெற்றுள்ள அரசியல் இறைமையாகும். ஒரு கூட்டாட்சி நாட்டில் மத்திய அரசிற்கும் மாநிலங்களுக்கும் இடையே அரசதிகாரங்களை யெல்லாம் (இறைமை) பங்கிட்டுத் தர வேண்டும் என்பதே கூட்டாட்சிக் கொள்கையின் கருப்பொருள். இன்றைய இந்திய மாநிலங்களுக்கு 'இறைமை' தரப்படவில்லை. இன்றைய மாநிலங்களுக்கு 'இறைமை' தரப்பட வில்லை எனக் கூறும் போதே, அம்மாநில மக்களுக்குத் தேவையான வ்ளம் பெருக்கும் அதிகாரங்களைத் தரும் மூல அதிகாரமும் தரப்பட வில்லை என்றே பொருள்.

''இறைமை''யின்றேல் தன்னாட்சி யுரிமைகளும் இல்லை; தன்னாட்சியும் இல்லை; தன்னரசும் இல்லை. எனவே, இன்றைய அரசமைப்பால் மாநிலங்களுக்குத் தரப்பட்ட குறைந்த பட்ச அதிகாரங்களும், அதன் முழுப் பயனைப் பெற்றுத் தருவதில்லை என்பது தெளிவாகிறது.

ஒரு நாடு பெற்றிருக்கும் ஆணையிடும் அதிகாரமே 'இறைமை'' எனப்படும். அந்நாட்டின் எல்லைகளுக்குள் இருக்கும் மக்களுக்கும் பலவகை அமைப்புகளுக்கும் நிபந்தனையற்ற ஆணைகளைப் பிறப்பிக்கக் கூடிய, தலையாய அதிகாரமே 'இறைமை' ஆகும்.

குடியரசு நாட்டின் இறைமை அதிகாரங்கள் அந்நாட்டின் மக்களிடமே நிலைத்து நிற்கின்றன. கூட்டாட்சி நாட்டின் இறைமை அதிகாரங்கள் நாட்டிலுள்ள மாநிலங்களில் வதியும் மக்களிடமே உள்ளன.

கூட்டாட்சி நாட்டிலுள்ள மக்கள் தமக்குரிய மாநில அரசுகளை யும் மத்திய அரசையும் அரசமைப்புச் சட்டத்தின் மூலமாகத் தாமே படைத்துக் கொள்வதால், அந்நாட்டு மக்களிடமுள்ள ''சட்டம் சார்ந்த இறைமை'', மத்திய அரசிற்கும் மாநில அரசு களுக்கும் பகிர்ந்தளிக்கப்படுகின்றன. அஃதாவது கூட்டாட்சி முறையைக் கொண்டியங்கும் நாடுகளின் 'இறைமை' மத்திய அரசிடமே எப்போதும் தங்கி விடுவதில்லை; மாநில அரசுகளிட மும் தனித்து நின்று விடுவதில்லை. மாறாக மத்திய அரசிடமும் மாநில அரசுகளிடமும் நிலையற்றுள்ளது.

ஆனால் இந்தியா ஓர் அரைகுறையான கூட்டாட்சி நாடு; மற்ற கூட்டாட்சி நாடுகளைப்போல் இந்தியத் துணைக் கண்டத் திலுள்ள மாநிலங்களில் வதியும் மக்களிடமும் 'இறைமை' அதிகாரங்கள் இருத்தி வைக்கப்பட்டுள்ளனவா? என்பதற்குச் சட்ட வல்லுநர்கள் முரண்பட்ட கருத்துக்களைத் தந்தாலும் ''இறைமை அதிகாரங்கள்'' முழுவதும் இந்திய நாட்டின் மத்திய அரசிடம் மட்டுமே நிலைபெற்றுள்ளது என்று யாரும் கூறுவதில்லை.

இன்றைய அரசமைப்புச் சட்டம் வலிமையான மத்திய அரசின் பக்கம் சாய்ந்துள்ளதால், மாநில அரசுகளுக்கு இறைமை தரப்படவில்லையா? என்ற ஐயப்பாடு அண்மைக் காலம் வரை இருந்து வந்தது. அதனை அடிப்படையாக வைத்தே இந்தியா ஓர் உண்மையான கூட்டாட்சி நாடு அல்ல எனவும் விமர்ச்சிக்கப்பட்டு வந்தது.

இந்த உறுதியற்ற நிலை 1962-ஆம் ஆண்டு டிசம்பர் மாதத் திலிருந்து மாற்றத்தைப் பெற்று விட்டது; இந்த இந்தியத் தலைமை நீதிமன்றத்தால் ''மாநில அரசுகளுக்கு இறைமை இல்லை'' என இறுதியாக உறுதி செய்யப்பட்டு விட்டது.

இன்றைய அரசமைப்பு விதிகளின்படி மத்திய அரசின் நிர்வாக வசதிக்காகவும், அகில இந்தியப் பொருளாதாரச் சீர்மைக்காகவும், இந்தியா ''பிரிக்க முடியாத ஓர் ஒன்றியம்''

(Indestructable Union) என்பதை நிலை நாட்டுவதற்காகவும், மாநில அரசுகள் மத்திய அரசின் அடிமைகளாக நடைபெற வேண்டும் என்பதுதான் அத்தீர்ப்பால் விளைந்த விளைவாகும்.

மத்திய அரசு, "நிலக்கரி நிறைந்த பகுதிகளைக் கையகப் படுத்துதல் மற்றும் வளர்ச்சிச் சட்டம் – 1957" என்ற ஒரு நாடாளுமன்றச் சட்டத்தை இயற்றி, மேற்கு வங்க மாநிலத்தின் நிலக்கரிப் பகுதிகளைக் கையகப்படுத்த முனைந்தது. மத்திய அரசை எதிர்த்து வங்க மாநில அரசு இந்தியத் தலைமை நீதி மன்றத்தில் வழக்கிட்டது. வங்க மாநிலத்தின் எல்லைக்குட் பட்ட நிலப் பகுதிகளைக் கையகப்படுத்திக் கொள்ள மத்திய அரசுக்கு உரிமை இல்லையென மேற்கு வங்க மாநில அரசு வாதிட்டது:

> "இன்றைய அரசமைப்பு, ஓர் கூட்டாட்சி அரசமைப்பு என்பதால் மாநில அரசுகளும் மத்திய அரசோடு சேர்ந்து இறைமை அதிகாரங்களைப் பகிர்ந்து கொண்டுள்ளன; அஃதாவது மாநில அரசுக்கும் இறைமை யுள்ளது. எனவே, 'மாநில இறைமை' அதிகாரத்திற்கு உட்பட்ட மாநிலச் சொத்துக்களை மத்திய அரசின் ஓர் உறுப்பான நாடாளுமன்றம் தனது சட்டத்தின் மூலமாக மாநிலத் திடமிருந்து பிரித்துக் கொள்ள முடியாது."

என்பது மேற்கு வங்கத்தின் வாதம்.

பல மாநில அரசுகளும் அந்த வழக்கில் தத்தம் வாதங்களைத் தாக்கல் செய்தன. நீண்ட விசாரணைக்குப் பின் தலைமை நீதி மன்றம் தீர்ப்பளித்தது.

ஐந்து நீதிபதிகள் சேர்ந்து வழங்கிய "பெரும்பான்மைத் தீர்ப்பில்", 'மாநில அரசுகளுக்கு இறைமை இல்லை' என்பது தெளிவு படுத்தப்பட்டு மாநில அரசின் வழக்குத் தள்ளுபடி செய்யப்பட்டது. டாக்டர். சுப்பாராவ் அவர்கள் மட்டும் "மாறுபட்ட தீர்ப்பை" (Dissenting Judgement) வழங்கினர். அவரது தனித் தீர்ப்பில், "மாநில அரசுகளுக்கு இறைமை உண்டு" எனச் சுட்டிக் காட்டினர்.

ஆனால் பெரும்பான்மை நீதிபதிகளால் வழங்கப்பட்ட தீர்ப்பே செல்லுபடி யாயிற்று.

இன்றைய மாநிலங்கள் பற்றி, அத்தீர்ப்பில் காணப்படும் சில முக்கியப் பகுதிகள் 2 :

''மாநிலங்கள் இறைமையோடு கூடிய தன்னாட்சி உறுப்புக்கள் எனக் கொள்வதற்குரிய முகாந்தரங்கள் ஏதும் (நமது அரசமைப்பில்) இல்லை....''

''...நமது அரசமைப்புச் சட்டம் முதன்மையானது (Supreme) என்பதில் ஐயமில்லை. ஆனால் மத்திய நாடாளுமன்றத்தால் மட்டுமே அதனை மாற்றிட முடியும். அதனை மாற்றியமைப்பதற்கு மாநிலங்களுக்கு அதிகாரமில்லை...''

''... (இந்திய மக்களிடம் நிலைபெற்றிருக்கும்) அரசியல் இறைமையை, மத்திய் அரசு மிகுதியாகப் பெற்றுக் கொள்ளும் வகையிலேயே, அது மத்திய - மாநிலங்களுக்கிடையே பிரித்து வழங்கப்பட்டுள்ளது...''

''...நமது அரசமைப்பிலுள்ள பல அடிப்படை அம்சங்களைக் கருத்தில் கொண்டு அதனைப் பரிசீலிக்கும்போது, மாநில அரசுகளுடைய நிர்வாகம், சட்டமியற்றுத் துறை வரிவிதிப்பு ஆகிய அதிகாரங்களில் மத்திய அரசு செய்யும் கட்டுப்பாடுகளும், நிதித் துறையில் மாநிலங்கள் மத்திய அரசையே அண்டிக் கிடக்கும் அவல நிலையும், சேர்ந்து மாநிலங்கள் முழு இறைமையைப் பெற்றவையல்ல என்பதைக் காட்டுகின்றன.''

''...நமது அரசமைப்பின் பல சட்ட விதிகளைச் சீராய்வு செய்தால் மத்திய அரசிற்கும் மாநிலங்களுக்கும் பகிர்ந்தளிக்கப்பட்டுள்ள அதிகார முறையானது மாநிலங்களுக்கு முழு இறைமை தரப்படவில்லை என்பதையே நிலைநாட்டுகின்றது...''

## II

## அரசமைப்பைத் திருத்தம் செய்யும் சட்டவிதியின் தீர்ப்பு

அரசமைப்புச் சட்ட விதிகளைத் திருத்துவதில் (Amendments) மாநிலங்களும் பங்கு பெற வேண்டும் என்பதே, கூட்டாட்சி அரசமைப்பின் இலக்கணமாகும். அஃதேபோல், அரசமைப்புச்

2 A I R. 1963. S. C. Pp. 1255 - 1256, Paras 36, 37, State of West Bengal, V S. Union of India.

சட்டத் திருத்தங்களில் மாநில மக்களும் நேரடியாகப் பங்கு கொள்ள வேண்டுமென்பதும் ''குடியாட்சியின்'' இலக்கணமாகும்.

இன்றைய நமது அரசமைப்பை ஒரு ''குடியரசுக் கூட்டாட்சி அரசமைப்பு'' (Federal Democratic Constitution) என்கின்றனர். ஆனால் அதன் சட்ட விதிகளைத் திருத்துவதில் மாநிலங்களும் பங்கு பெறுவதில்லை; மக்களும் பெறுவதில்லை.

இந்தியாவில் உள்ள எல்லா மாநிலங்களும் சேர்ந்து அவைகளுக்குத் தேவையான ஓர் சட்ட விதியைத் திருத்த வேண்டும் என விரும்பினாலும், அதனை அவை முன்மொழிய முடியாது. மாநிலச் சட்ட மன்றங்களுக்கு அரசமைப்பைத் திருத்தம் செய்யும் உரிமையோ, முன்மொழியும் தகுதியோ தரப்படவில்லை. மத்திய அரசின் ஓர் அங்கமான நாடாளு மன்றமே, அரசமைப்புத் திருத்தங்களை முன் மொழியவும் அத்திருத்தத்தை நிறைவேற்றவும் அதிகாரத்தைப் பெற்றுள்ளது.

ஒரு கூட்டாட்சி நாட்டிலுள்ள மாநில மக்களிடம் இறைமையுள்ளதா என்பதைக் கண்டறிய வேண்டுமெனில் அதற்கு இரண்டு சோதனைகள் உண்டு; தம்மை ஆள்பவர்களைத் தேர்ந்தெடுக்கக் கூடிய உரிமையும் அதிகாரமும், அம்மக்களிடம் உள்ளதா என்பது முதல் சோதனை;

அம்மக்களே விரும்பி ஏற்றுக் கொண்ட அரசமைப்பில் அவர்கள் விரும்பினால் தேவையான திருத்தங்களைச் செய்து கொள்வதற்கும் அவர்கள் முனைந்தால் அதனை மாற்றியமைத்துக் கொள்வதற்கும் உரிமைகளைப் பெற்றிருக்கிறார்களா? என்பது இரண்டாம் சோதனை.

இன்றைய இந்திய அரசமைப்பின்படி, இரண்டாவதாகச் சொல்லப்பட்ட அரசமைப்புச் சட்டத்தைத் திருத்தம் செய்யும் இறைமை அதிகாரம் மாநில மக்களுக்கு இல்லை.

நமது அரசியல் சட்டத் திருத்த முறைகள்

இன்றைய நமது அரசியல் சட்டத்திலுள்ள எல்லாச் சட்ட விதிகளையும் திருத்துவதற்கு, ஒரே வகையான சட்டத் திருத்த முறை செய்யப்படவில்லை. மூன்றுவிதச் சட்டத்திருத்த முறைகள், நமது அரசமைப்பில் இடம் பெற்றுள்ளன;

சில சட்ட விதிகளைத் திருத்துவதற்காக "குறைந்த பெரும் பான்மை முறையும்";

இன்னும் சில சட்டவிதிகளைத் திருத்துவதற்கு "சிறப்புப் பெரும் பான்மை முறையும்";

மாநிலங்களும் சேர்ந்து கலந்து கொள்ளும் மூன்ருவதொரு திருத்த முறையும், நமது அரசமைப்புச் சட்டத்தில் உள்ளன.

இவற்றில் முதல் இரண்டு வகையான திருத்தும் முறைகளை நாடாளு மன்றமே செய்கிறது. மாநிலங்கள் அதில் கலந்து கொள்வதில்லை. மூன்ருவது திருத்தும் முறையில் மட்டும் மொத்த மாநிலங்களில், பாதியளவு மாநிலங்கள் பங்கு பெறு கின்றன.

ஆகவே, எல்லா மாநிலங்களும் பங்கு பெறக் கூடிய சட்டத் திருத்தம் முறையே, நமது அரசமைப்புச் சட்டத்தில் இல்லை.

நாடாளுமன்றத்தின் மக்கள் சபை மற்றும் மாநிலங்களின் சபை ஆகிய ஒவ்வொரு சபையிலும் ஆசராயிருக்கும் உறுப் பினர்களில் பாதிக்கும் மேற்பட்டவர்கள் வாக்களித்து அரசியல் சட்டத்தின் சில விதிகளைத் திருத்தலாம். இதற்குக் குறைந்த அளவுப் பெரும்பான்மையினுல் செய்யப்படும் திருத்தும் முறை எனப் பெயர்.

மத்திய நாடாளு மன்றத்தில் ஆசராகி இருக்கும், பாதிக்கு மேற் பட்ட உறுப்பினர்கள் வாக்களித்து, அரசமைப்புச் சட்டத் திருத்தத்தை நிறைவேற்றுதன் மூலமாக,

மாநிலத்தின் எல்லைகள், நிலப் பகுதிகள், பெயர்கள், மாநிலச் சட்டமேலவை, அதன் உறுப்பினர்கள் (M.L.C.) மாநிலத்தில் வசிக்கும் தாழ்த்தப்பட்ட பழங்குடி மக்கள், சட்ட மேலவை உறுப்பினர்களின் எண்ணிக்கை, அமைப்பு முறை ஆகியவை மாற்றப் படலாம்.

இந்த வகை அரசியல் சட்டத்தைத் திருத்தும் முறை, வேறு எந்த நாட்டு அரசமைப்பிலும் இல்லை.

சிறப்புப் பெரும்பான்மை முறை

நமது அரசியலமைப்பின் 368-ஆம் சட்டவிதியில் இந்த வகைச் "சட்டத் திருத்த முறை" இடம் பெற்றுள்ளது.

இதன்படி, நாடாளு மன்றத்திலுள்ள, ''மக்களவை'' மற்றும் ''மாநிலங்களவை'' ஆகிய ஒவ்வொன்றிலும் இருக்கும் மொத்த உறுப்பினர்களில் பெரும்பான்மை யானவர்கள் அச்சட்டத் திருத்த மசோதாவிற்கு ஆதரவாக வாக்குச் செய்ய வேண்டும்; அது தவிர, குறிப்பிட்ட அச்சட்டத் திருத்த மசோதா, வாக் கெடுப்பிற்கு வரும் போது நாடாளு மன்றத்தின் ஒவ்வொரு சபையிலும் ஆசராகி இருக்கக் கூடிய உறுப்பினர்களில் $\frac{2}{3}$ பங்கு உறுப்பினர்களும் அந்தச் சட்டத் திருத்த மசோதாவிற்கு ஆதர வாக வாக்களிக்க வேண்டும். இந்த முறைக்கு ''சிறப்புப் பெரும்பான்மைத் திருத்த முறை''(Special Majority Procedure) எனப் பெயர்.

முதல் வகைச் சட்டத் திருத்த முறையிலும், இனிமேல் விளக்கப்படும் மூன்ரும் வகைத் திருத்த முறையிலும் செய்யப் படும் சட்டவிதித் திருத்தங்கள் நீங்கலாக மற்ற சட்டவிதிகளைத் திருத்த வேண்டுமெனில், மேற் சொன்ன சிறப்புப் பெரும் பான்மை முறையே கடைப் பிடிக்கப்பட வேண்டும்.

மாநிலங்கள் பங்கு கொள்ளக் கூடிய சட்டத் திருத்த முறை

கீழே குறிப்பிடப் பட்டுள்ள சட்டவிதிகள் திருத்தப்படுவதற்கு, மேற்சொன்ன சிறப்புப் பெரும்பான்மை யுடன், இந்தியாவிலுள்ள மொத்த மாநிலங்களின் எண்ணிக்கையில் பாதிக்கும் மேலான மாநிலங்க்ள், தனது சட்ட சபைகளில் அத்திருத்தச் சட்ட மாசோ தாவை நிறைவேற்ற வேண்டும்.

அதாவது, இந்த வகையான சட்டத் திருத்தத்திற்கு மூன்று சிறப்புக் கூறுகள் தேவை.

அ) நாடாளு மன்றத்தின் ஒவ்வொரு சபையிலுள்ள மொத்த உறுப்பினர்களில் பெரும்பான்மையினர் ஆதரிக்க வேண்டும்.

ஆ) அத்துடன், நாடாளு மன்றத்தின் ஒவ்வொரு சபையிலும், ஆசராகி இருக்கக் கூடிய உறுப்பினர்களில் 2/3 பங்கு பேருக்கு மேலாகவும் ஆதரிக்க வேண்டும்.

இ) இந்திய நாட்டிலுள்ள பெரும்பான்மையான மாநிலங் களின் சட்ட மன்றங்களாலும் அத்திருத்தம் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும்.

இந்த வகைச் சட்டத் திருத்த முறையை ''மாநிலங்கள் கலந்து கொள்ளும் சட்டத் திருத்தம் முறை'' எனலாம்.

குடியரசுத் தலைவரின் தேர்வு; அது பற்றிய சட்டவிதிகள்; மாநில நிர்வாகத்தின் அளவு; இந்தியத் தலைமை நீதி மன்றம்; மாநில உயர் நீதி மன்றம்; மத்திய அரசு மற்றும் மாநில அரசுகளுடைய சட்டமியற்றும் அதிகாரங்கள்; மத்திய அரசின் அதிகாரப் பட்டியல்; மாநில அரசின் அதிகாரப் பட்டியல், பொதுப் பட்டியல்; நாடாளு மன்றத்திற்கு மாநிலங்களால் அனுப்பப்படும் உறுப்பினர்களின் எண்ணிக்கை; அரசியல் சட்டத்தையே திருத்தக் கூடிய வழிவகை ஆகியவை பற்றிய சட்டவிதிகளைத் திருத்தம் செய்வதற்கு நாடாளு மன்ற உறுப்பினர்களது சிறப்புப் பெரும்பான்மையோடு, மொத்த மாநிலங்களில் பாதி மாநிலங்களின் சட்ட மன்றங்களின் தீர்மானமும் தேவை.

மாநிலங்களுக்கு இறைமை இல்லை

மேற்சொன்ன தலைப்புக்களில் வரும் சட்டவிதிகளைத் தவிர, அரசமைப்புச் சட்டத்திலுள்ள மற்ற எல்லாச் சட்டவிதிகளையும், மத்திய அரசு நினைத்தால், நாடாளு மன்றத்தின் மூலமாகவே திருத்தங்களைச் செய்து கொள்ளலாம். ஏனெனில், அவற்றில் மாநிலங்களுக்குப் பங்கேற்கும் உரிமை இல்லை.

இந்த ஒன்பது தலைப்புக்களிலுள்ள சட்டவிதித் திருத்தங்களில் கூட இந்தியாவின் எல்லா மாநிலச் சட்ட மன்றங்களும் பங்கேற்பதில்லை. மொத்த மாநிலங்களில் பாதி மாநிலங்கள் (அவை மேகாலாயா, அசாம் போன்ற மிகச் சிறிய மாநிலங்களானாலும் போதும்) மட்டும் பங்கேற்றுக் கொண்டு, மத்திய அரசால் நிறைவேற்றப்படும் சட்டத் திருத்தங்களுக்கு ஆதரவாகத் தங்கள் சட்ட மன்றங்களில் அச் சட்டத் திருத்தத்தை நிறைவேற்றினாலும் போதுமானது. உடனே மீதியிருக்கும் பெரிய பெரிய மாநிலங்களான இன்னும் பாதி மாநிலங்களையும் கட்டுப்படுத்தக் கூடிய சட்டத் திருத்தங்கள் அமுலுக்கு வந்து விடும்.

இந்திய அரசமைப்புச் சட்டத்தைத் திருத்துவதில் மாநிலங்கள் முழுமையாகப் பங்கேற்பதில்லை என்பதை நாம் பார்த்தோம். இதுவரை, 35 முறை நமது அரசியலமைப்பைத் திருத்தி

யிருக்கிறார்கள். அவற்றில், 18 திருத்தச் சட்டங்களில் மட்டுமே மாநிலங்கள் ஓரளவு பங்கு பெற்றுள்ளன. மற்ற 17 திருத்தச் சட்டங்களில் மாநிலங்களுக்கு எவ்விதப் பங்கும் தரப் படவில்லை.

எனவே, இந்திய மாநிலங்களுக்கு ''இறைமை'' இல்லை என்பதை அரசமைப்பும் கூறுகிறது. (திருத்த விதியின் மூலமாக); தலைமை நீதி மன்றமும் கூறி விட்டது. மாநிலங்களிடமிருந்து பறிக்கப்பட்ட இறைமையை மீண்டும் பெற வேண்டுமெனில், மாநிலத் தன்னாட்சியைப் பெற வேண்டும்.

மலர்க மாநில சுயாட்சி.



# 11. மாநில சுயாட்சியா? மாற்று வழி வகைகளா?

— மலர்க மாநில சுயாட்சி —

''அரசியல் சட்டத்திருத்தம் ஏதுமின்றியே, சீர்குலைந்து கிடக்கும் இன்றைய மத்திய - மாநில உறவுகளைச் செப்பனிட்டுக் கொள்ளலாம் என்ற வாதம், 'காலுக் கேற்ற செருப்பைத்தேடுவதற்குப் பதிலாக,இருக்கும் செருப்புக் கேற்றபடி காலை வெட்டிக் கொள்ளலாம்' என்ற யோசனைக் கொப்பானதாகும்.''

முழு மாநில சுயாட்சி தேவையில்லை என்போர் கூட மாநிலங்களுக்குத் தரப்பட்ட அதிகாரங்கள் போருது; அவைகளுக்குச் சில கூடுதல் அதிகாரங்களும் வழங்கப்படத்தான் வேண்டும் என்பதை உணர்கின்றனர். ஆனுல் எவ்வளவு அதிகாரங்களைத் தருவது? எப்படித் தருவது? என்பதிலேதான் கருத்து வேறுபாடுகள் உள்ளன.

மாநில மக்களின் பிறப்புரிமை என்ற அடிப்படையில் கூட்டாட்சி (மத்திய) அரசின் கீழ் இணைக்கப்பட்ட மாநிலங்களுக்குத் தேவையான எல்லாத் தன்னுட்சி அதிகாரங்களையும், உரிமைகளையும் அரசமைப்பின் மூலமாக மாநிலங்கள் பெற்றுக் கொள்வதே மாநில சுயாட்சி எனப்படும். அதற்காக இன்றைய அரசமைப்பின் பல அடிப்படையான சட்ட விதிகள் திருத்தப்பட வேண்டும்; அல்லது மாற்றி யமைக்கப்பட வேண்டும் என்பது வெள்ளிடைமலை. ஆனுல் அரசமைப்புச் சட்ட விதிகளைத் திருத்தாமலும் இன்றிருக்கும் அரசமைப்பை அப்படியே வைத்துக் கொண்டும் உற்ற பரிகாரங்களைப் பெற்றுக் கொள்ள முடியும் என்பதே ''மாநில சுயாட்சி கூடாது'' என்போரின் வாதமாகும்; மாநில சுயாட்சிக்கு மாருக, சில தெளிவற்ற வழி வகைகளை அவர்கள் தருகின்றனர்.

அந்த மாற்று வழிவகைகளை வைத்து, அத்தகையோரை இரு வகையாகப் பாகுபடுத்தலாம்.

1. மத்திய அரசில் குவித்து வைக்கப்பட்டுள்ள அதிகாரங்களைப் பரவலாக்க வேண்டும் (Decentralisation) எனக் கூறுபவர்கள்;

2. எண்ணிக்கையில் நிறைந்த பேரதிகாரங்களைப் பெற்ற இன்றைய மத்திய அரசைச் சற்றும் குலைக்காமலும் அரசமைப்பைத் திருத்தாமலும் கூட்டாட்சி உணர்வை(!)'' வளர்த்து, மத்திய மாநிலச் சிக்கல்களுக்குரிய பரிகாரங்களைக் காண வேண்டுமென வலியுறுத்துவோர்.

இனி இவ்விரு சாராரும் தரும் மாற்று வழி வகைகளை ஒவ்வொன்றாகப் பரிசீலிப்போம்.

## I

## அதிகாரங்களைப் பரவலாக்கும் பரிகாரம்

மத்திய அரசிடம் குவித்து வைக்கப்பட்டிருக்கும் அதிகாரங்களை அதன் கீழ் இயங்கும் பல அமைப்புக்களுக்குப்பரவலாக்கித் தரப்படும் முறையையே ''அதிகாரங்களைப் பரவலாக்குதல்'' என்கின்றனர்.

இது ஓர் ''அரசியல் கொள்கையே'' தவிர ''அரசமைப்பு முறையல்ல.''

மத்திய அதிகாரங்களை, கூட்டாட்சி முறையில் முதலில் மாநிலங்களுக்குப் பிரித்துத் தந்து, அதன் பின்னர் அம்மாநில அரசுகளுக்குக் கீழ் இயங்கும் பல அமைப்புக்களுக்கு அந்த அதிகாரங்களைப் பரவலாக்கித் தருவதா? அல்லது 'மாநிலங்கள்' என்ற 'அரசியல் உறுப்புக்களே' இல்லாமல் இன்றைய மாவட்டங்கள், வட்டங்கள், ஊராட்சி ஒன்றியங்கள், மாநகராட்சிகள், நகராட்சிகள், ஊராட்சி மன்றங்கள் போன்ற அமைப்புக்களுக்கு மத்திய அரசிடமிருக்கும் அதிகாரங்களை நேரடியாகப் பகிர்ந்தளிப்பதா? ''அதிகாரப் பரவலாக்கம்'' என்ற சொல்லின் மூலமாக, இவ்விருவகைச் செய்முறைகளில் எதனைக் குறிக்கின்றனர்? அதனை யாரும் விளங்கிக் கொள்வதில்லை; விளக்கிச் சொல்வதுமில்லை.

அதிகாரப் பரவலாக்கத்தை நடைமுறையில் எப்படிப் பெறுவது? அதைப் பற்றியும் திட்டவட்டமான கொள்கைகள் சொல்லப்படுவதில்லை, . . . . . .

அரசமைப்புச் சட்டத்தைத் திருத்துவதன் மூலமாகவா? அவ்வப்போது இயற்றிக் கொள்ளும் நாடாளு மன்றச் சட்டங்களின் வாயிலாகவா? அல்லது இன்றிருக்கும் அரைகுறைக் கூட்டாட்சி அரசமைப்பை முற்றிலும் மாற்றியமைத்து விட்டு ''பரவலாக்கப்பட்ட அதிகார முறையை'' மையமாகக் கொண்ட புதியதோர் அரசமைப்பைப படைத்துக் கொள்வதன் மூலமாகவா? இந்திய நாட்டிற்கு ஏற்ற அதிகாரப் பரவலைப் பெறுவதற்கு மேற்சொன்ன மூன்று வழிகளில் எது சாலச் சிறந்த வழி வகை என்பதையும் அறுதியிட்டுக் கூறுவதில்லை.

ஜனசங்கக் கட்சி போன்றவை ஒற்றையாட்சித் தன்மையைக் கொண்ட ஒரு மத்திய அரசையும் அதன் கீழ் நேரடியாக இயங்கும் பல்வேறு அமைப்புக்கள் அதிகாரங்களைப் பெற்றுக் கொள்வதைப் பற்றிப் பேசுகின்றன. அவ்வகைக் கீழ் அமைப்புக்களுக்கு மத்திய அரசிலிருந்து நேரடியாக அதிகாரங்கள் தரப்பட வேண்டுமென அக்கட்சி வலியுறுத்தி வருகிறது. மேலும் கூட்டாட்சிப் பாணியில் மாநிலங்களுக்குரிய அதிகாரங்கள் பிரித்து வழங்கப்படத் தேவையில்லை எனவும் மாநிலங்களை மத்திய அரசின் வெறும் நிர்வாகப் பகுதிகளாகச் செய்ய வேண்டு மெனவும், அக்கட்சி வாதிடுகிறது.

''முரண்பட்ட பண்பாடுகளையும், தேசிய இனங்களையும், மொழிகளையும், பெற்ற மாநிலப் பகுதிகளின் தனித் தன்மைகளுக்கு ஏற்றவாறு ஒரே மையத்தில் குவித்து வைக்கப்பட்டிருக்கும் அதிகாரங்களைப் பிரித்து மாநிலங்களுக்கும் ஒதுக்குதல் வேண்டும்; மாநில அரசுகள் அதன் கீழ் மட்ட அமைப்புக்களுக்கும் அதிகாரங்களைப் பரவலாக்கித் தர வேண்டும்'' என்பதையே பல அரசமைப்பு வல்லுநர்களும் பொதுவாகக் கோடிட்டுக் காட்டுகின்றனர்.

ஆனல் அதனை அடைவதற்கு இன்றைய அரசமைப்பின் பல சட்டவிதிகள் திருத்தப் பட்டாக வேண்டும்; மேலும் மெய்யான கூட்டாட்சித் தன்மையை நிலை நிறுத்தும் வகையில் சில புதிய சட்ட விதிகளும் உருவாக்கப்படல் வேண்டும் என்பதும் இன்றியமையாதவை ஆகின்றன. நாடாளு மன்றத்தின் சில சட்டங்களின் துணை கொண்டோ அல்லது மத்திய அரசாங்கத்தின் சில நிர்வாக ஆணைகளின் மூலமாகவோ அவ்வகை அதிகாரப் பரவலாக்கத்தைப் பெற்றுவிட இயலாது.

கூட்டாட்சி முறையற்ற ''பொதுவான அதிகாரப் பரவல் முறை'' இந்திய மக்களின் பண்பிற்கும் இன்றைய நடைமுறைக்கும் ஏற்ற தன்று. ஏனெனில் அவ்வகை அதிகாரப் பரவலாக்கம் அரசியல்சட்டத்தால் உறுதி செய்யப்படுவதில்லை; சில நிர்வாக ஆணைகளின் மூலமாகவும் சட்டங்களின் வாயிலாகவுமே அவை அமுல் படுத்தப்படும். அஃதாவது மத்திய அரசு, கருணை வைத்துச் சிற்சில அதிகாரங்களை மட்டும் தற்காலிகமாகக் கீழ்மட்ட அமைப்புகளுக்குத் தரும். அப்படித் தரப்பட்ட அதிகாரங்களை மீண்டும் பெற்றுக் கொள்ள வேண்டுமென்று மத்திய அரசு கருதினால் வேறு சில நிர்வாக ஆணைகளின் மூலமாக அவற்றை மீண்டும் திரும்பப் பெற்றுக் கொள்ளும்.

மேலும் மத்திய அரசு என்பது என்றென்றைக்கும் ஒரே கட்சியால் ஆளப்படுவதல்ல. பல அரசியல் கட்சிகள் கூட்டுச் சேர்ந்தும் கூட மத்தியத்தின் ஆளும் பொறுப்பை ஏற்றுக் கொள்ளும் சூழ்நிலை ஏற்படலாம். சர்வாதிகார பாணியைக் கொண்ட கம்யூனிஸ்டுக் கட்சி போன்ற அரசியல் கட்சியோ அல்லது மத்திய மயமாக்கப்பட்ட காங்கிரஸ் கட்சியோ மத்திய அரசை நிர்வகிக்கும் போது, அக்கட்சிகளின் கொள்கைகளுக்கேற்றபடி ஏற்கனவே அமுல் படுத்தப்பட்ட அதிகாரப் பரவலாக்கம் முற்றிலும் மாற்றி அமைக்கப் படலாம். ஆளும் கட்சி மாறும்போது அதிகாரப் பரவல் முறையும் மாற்றத்தைப் பெறும்.

எனவே, அதிகாரப் பரவலாக்கம் என்பது ஒரு நிலையற்ற அரசியல் ஏற்பாடே தவிர, நிரந்தமானதோர் அரசமைப்பு முறையல்ல என்பது தெளிவாகிற தல்லவா?

கூட்டாட்சி முறைக்கு, குடியரசு நெறி அடிப்படையான அம்சமாகும். ஆனால், கூட்டாட்சி முறை, குடியரசிலிருந்து ஒரு வகையில் வேறு படுகின்றது. குடியரசு நாடுகளெல்லாம் கூட்டாட்சி முறையைக் கைக் கொள்ளத் தேவையில்லை. இங்கிலாந்து, பிரான்ஸ், ஜப்பான் போன்ற நாடுகளில் ஒரே மொழித் தேசிய மக்கள் வாழ்ந்து வருவதால் ஒற்றையாட்சி முறையே அந்நாடுகளில் நடைமுறையில் உள்ளது. ஆனால், பல மொழி பேசும் பல்வேறு தேசிய இன மக்களைக் கொண்ட பரந்த நாடுகள் குடியரசு முறையில் இயங்கும் போது, அந்தப்

பல்வேறு மக்களின் தனித் தன்மைகளைப் போற்றுவதற்கும் ஒற்றுமையைக் காண்பதற்கும் கூட்டாட்சி முறை இன்றியமையாததாகின்றது; அதன் மூலக் கூறான மாநில சுயாட்சியும் தவிர்க்க முடியாததாகி விடுகிறது.

அதிகாரப் பரவலின் மூலமாக இந்தியா போன்ற பரந்த நாடுகளில் அதனுள் அடங்கிய மாநிலப் பகுதிகளின் தன்னாட்சி உரிமைகளைக் காப்புறுதி செய்ய இயலாது.

பரந்து விரிந்த நாடுகளில் 'குடியாட்சியும்' வேண்டும்; 'அதிகாரப் பரவலாக்கமும்' வேண்டும்; இவை இரண்டும் நிரந்தரமாக இயங்குவதற்குரிய 'காப்புறுதியும்' வேண்டும் என்றால் முழு மாநில சுயாட்சியை உள்ளடக்கிய கலப்படமற்ற ''கூட்டாட்சி அரசமைப்புத் தான்'' தக்க பரிகாரம் ஆகும்.

மலர்க மாநில சுயாட்சி.

## II

## அரசமைப்புத் திருத்தங்கள் அவசியமில்லையா?

மத்திய அரசுக்கும் மாநிலங்களுக்குமிடையே உருவாகும் பிணக்குகளைத் தீர்ப்பதற்காக இன்றைய அரசமைப்பிலிருக்கும் மத்திய – மாநில உறவுகள் சார்ந்த சட்ட விதிகளைத் திருத்தாமல், அவற்றின் 'உயிரோட்டத்தையும்' 'நுண்பொருளையும்' கணக்கிலெடுத்துக் கொண்டு, தேவையேற்படின் சில நாடாளுமன்றச் சட்டங்களை இயற்றுமுகத்தான் உற்ற பரிகாரங்களைப் பெற முடியுமெனச் சில அரசமைப்பு வல்லுநர்களும் 'நிர்வாகச் சீர்திருத்தக் குழுவும்' அரைகுறையான வழிவகைகளைக் கூறுகின்றன.

திட்டக் குழுவைச் சட்டமூலத்தின் அடிப்படையில் மாற்றியமைப்பதும்;

நிதியாணைக் குழுக்கள் செய்த பரிந்துரைகளின் அடிப்படையில் மாநில நிதி வசதிகளைப் பெருக்கிக் கொள்வதும்;

மத்திய அரசுக்கு மாநிலங்கள் தர வேண்டிய கடன்களைக் குறைக்கும் வழிவகைகளை ஏற்படுத்திக் கொள்வதும்;

இனிமேல் உருவாக்கப்படும் 'மாநிலங்களிடையிலான உறவு மன்றத்தின்' (Inter State Council) மூலமாக மத்திய அரசின் நிர்வாகக் கட்டளைகளை மாநிலங்கள் மேல் விதித்துக் கொள்ளும் மரபை ஏற்றுக் கொள்ளுவதும்;

மாநில ஆளுநர்களின் விருப்பு அதிகாரங்களை (Discretionary Powers) முறையாகப் பயன்படுத்துவதற்குரிய அடிப்படைக் கொள்கைகளை உருவாக்கிக் கொள்வதும்;

தேசிய நெருக்கடி நிலைப் பிரகடனத்தையும், மாநில நெருக்கடி நிலைப் பிரகடனத்தையும், குடியரசுத் தலைவரின் இசைவுக்காக ஒதுக்கப்பட்ட மாநிலச் சட்ட மசோதாக்களையும் மாநிலங் களிடையிலான உறவு மன்றத்தின் மூலமாக முறைப்படுத்திக் கொள்வதும்;

மாநிலங்களிடையே உருவாகும் பொதுப் பிணக்குகளையும், 'நதிநீர்' மற்றும் எல்லைத் தகராறுகளையும் வர்த்தக வணிகச் சிக்கல்களையும், அதே "மாநிலங்களிடையிலான உறவு மன்றத் தின்" மூலமாகத் தீர்த்துக் கொள்ள வழிவகைகளைச் செய்து கொள்வதும்; அரசமைப்புத் திருத்தங்கள் கூடாது என வலி யுறுத்துவோருடைய ஆலோசனைகளாகும்.

ஆனால் அரசமைப்பு விதிகள் மூலமாக இவ்வகைப் பரிகாரங் கள் நிரந்தரமாகக் காப்புறுதி செய்யப்படுவதில்லை. இன்றைய சூழ்நிலையில் எழும் சிற்சில பிரச்சனைகளுக்குத் தற்காலிகமான மருந்தாக மட்டுமே அவை பயன்படுகின்றன.

மேலும் ஓர் அரைகுறைக் கூட்டாட்சி அமைப்பில் உருவாகும் பலவகைச் (மத்திய மாநிலச்) சிக்கல்களுக்கும் இவ்வகை ஆலோசனைகள் முழுமையான வழி வகைகளைச் செய்வ தில்லை.

இன்றைய ஒற்றையாட்சி மத்திய அரசையும் மெய்யான கூட் டாட்சி அரசாக அடிப்படையில் மாற்றியமைத்து விடுவதில்லை. மாநில்ங்களின் அடிமை நிலையையும் அவை போக்கிவிடுவ தில்லை. எப்படி? இனிப் பார்ப்போம்.

I. நிர்வாகச் சீர்திருத்தக் குழு

ஆளும் காங்கிரஸ் தலைவர்களும் அகில இந்தியக் கட்சிகள் பலவும் அரசியற் சந்தர்ப்பங்களுக்கேற்ற வகையில் மேற் சொன்ன நிலையற்ற வழிவகைகளைச் சுருக்கியும் பெருக்கியும்

கூறி வருகின்றனர். 'நமது அரைகுறைக் கூட்டாட்சி யில் உள்ள பல்வேறு குறைகளைத் தீர்த்துக்கொள்வதற்காக, அரசமைப்பு, திருத்தப்பட வேண்டியதில்லை'' என்ற கருத்தை வலியுறுத்திய ''நிர்வாக சீர்திருத்தக் குழுவின்'' பரிந்துரை களை அவர்கள் தமது வாதங்களுக்கேற்ற ஆதாரங்களாக எடுத்துக் காட்டுகின்றனர்.

நிர்வாகச் சீர்திருத்தக் குழுவினால் நிறுவப்பட்ட ''மத்திய-மாநில உறவு பற்றிய கற்றறி குழு'' (Study Team for Centre-State Relations) நிர்வாகச் சீர்திருத்தக் குழுவின் பணிகளைப் பற்றிக் கூறும்போது,

> ''எங்கள் பரிசீலனை யெல்லாம் நிர்வாகத்தைச் சீர்திருத்துவது எப்படி? என்பதைப் பற்றியவையே தவிர, அடிப்படையான அரசமைப்புச் சீர்திருத்தங்களைப் பற்றியவையோ அல்லது அரசியல் சீர்திருத்தங்களைப் பற்றியவையோ அல்ல.'' 1

என அதில் தெளிவுபடுத்தப் பட்டுள்ளது.

மத்திய அரசால் நியமிக்கப்பட்ட ''நிர்வாகச் சீர்திருத்தக் குழு''விற்குத் தலைவராக முதலில், திரு. மொரார்ஜி தேசாய் அவர்கள் நியமிக்கப்பட்டிருந்தார். அவருக்குப் பின், திரு. கே. அனுமந்தையா அவர்கள் அதன் தலைமைப் பொறுப்பை ஏற்றார். அக்குழு தனக்குத் துணைபுரிய மூன்று ஆய்வுக் குழுக் களை அமைத்துக் கொண்டது. மத்திய-மாநில உறவுகளைப் பற்றி ஆய்வதற்காகச் சட்ட வல்லுநர். திரு. செதல்வாட் அவர்கள் தலைமையில் '' மத்திய மாநில கற்றறி குழு'' நியமிக்கப் பட்டது.

சட்டமியற்றுத் துறை, நிதி, நிர்வாகம் ஆகிய துறைகளில் மாநிலங்களுக்குப் போதிய அரசதிகாரங்கள் தரப்படவில்லை என்பதையும், மாநிலங்களுக்கு அளிக்கப்பட்ட அதிகார இனங் களில் அவை முழுமையாகச் செயல்பட முடியவில்லை என்பதை யும், நிதித் துறையில் மாநிலங்கள் தன்னாட்சி யுரிமைகளைப் பெற்றிருக்கவில்லை என்பதையும், அக்கற்றறி குழு, சுட்டிக் காட்டியுள்ளது. இன்னும் மத்திய-மாநில அரசுகளுக் கிடையே ஏற்பட்டுவிட்ட பிணக்குகளுக்குக் காரணம், இன்றைய அரசமைப்பின் சட்ட விதிகளை மத்திய அரசு முறை யாகப் பயன்படுத்தாததுதான் என்பதையும் நிர்வாகச் சீர்திருத்தக் குழுவினரின் அறிக்கை எடுத்துக் காட்டுகிறது.

---

1 Report of The Study Team, A. R. C., Vol. I. P. 8

ஆனால், அவைகளை மாற்றி அமைப்பதற்குரிய வழி வகைகள் பற்றிக் கருத்தறிவிக்கும் போது, மட்டும் தந்நிலையை அக்குழு மாற்றிக் கொள்கிறது.

> ''மத்திய – மாநில உறவுகளில் எழக்கூடிய சிக்கல்களுக்கு அரசமைப்பைத் திருத்துவதன் மூலமாகப் பரிகாரங்களைக் காணுதல் கூடாது என்பதை நாங்கள் தெளிவாக உணர்ந்துள்ளோம். ஆனால், நமது அரசமைப்பை உருவாக்கியவர்கள் எந்த உணர்ச்சியுடன் அதன் சட்ட விதிகளை இயற்றினார்களோ அதே உணர்சியோடு, சம்மந்தப்பட்ட அனைவரும் அரசமைப்பு விதிகளைச் செயல் படுத்துவதனால் (மத்திய மாநிலச் சிக்கல்களுக்கு) உற்ற பரிகாரத்தைக் காண முடியும்.'' 2

எனக் கூறுகின்றது.

நிர்வாகச் சீர்திருத்தக் குழுவினர் — மத்திய-மாநில உறவுகளில் உள்ள ''நிர்வாகச் சம்பந்தமான தொடர்புகளை'' மட்டுமே தமது ஆய்வுக்கு எடுத்துக் கொண்டார்கள். எனவே, இன்றைய மத்திய-மாநிலச் சிக்கல்களுக்குக் காரணமாக அமைந்த சட்டமியற்றுத்துறை, நிதி, பொருளாதாரம், அரசமைப்பு விதிகள் ஆகியவை பற்றி அவர்கள் ஆழமாகச் சிந்திக்கவு மில்லை. முழுமையாக ஆய்வு செய்ய்வு மில்லை என்பது தெளிவாகும். அஃதாவது அதன் ஆய்வும் முழுமையான தல்ல. அதனால் தரப்பட்ட பரிகாரமும் தெளிவானதல்ல; அரைக் கிணறு தாண்டிய கதை தான்.

இந்த அரைகுறைப் பரிந்துரைகளை அச்சாணியாக்கிக் கொண்டு அப்பரிந்துரைகளின் நுணுக்கத்தையும், தன்மையையும் பரிசீலனை செய்யாமல் தத்தமக்கு ஏற்ற வகையில் இன்றைய அகில இந்தியக் கட்சிகள் சந்தர்ப்ப வாதங்களாகப் பயன்படுத்துகின்றன, நிர்வாகக் குழு செய்த அரை வேக்காட்டுப் பரிந்துரைகளை மாநில சுயாட்சிக்கு எதிரான ஓர் கேடயமாக மத்திய அரசு பயன்படுத்தி வருகிறது.

உண்மை நிலை என்ன?

---

2 Report on Centre - State Relationship A R. C. P - 7

டாக்டர். இராசமன்னார், திரு. K. சந்தானம் போன்ற பல அறிஞர் பெருமக்கள் இன்றைய அரசமைப்புச் சட்டத்தைத் திருத்தாமல் நிர்வாகச் சீர்திருத்தக் குழுவினால் எடுத்துரைக்கப் பட்ட குறைபாடுகளைக் களைய முடியாது என அறுதியிட்டுக் கூறுகின்றனர். நிர்வாகச் சீர்திருத்தக் குழுவே கூட அரசமைப் பைத் திருத்தாமல், இன்றைய குறைகளைப் போக்குவது எப்படி என்பதைத் தெளிவாகக் கூறாமல், பூடகமாக விட்டுவிட்டது.

நமது அரசமைப்பை உருவாக்கியவர்கள் ஓர் அரைகுறைக் கூட்டாட்சியைத்தான் உருவாக்கினார்கள். அந்த அரைகுறைக் கூட்டாட்சியும் கூட அகில இந்தியக் காங்கிரசுக் கமிட்டியால் ஒற்றையாட்சி அமைப்பாக மாற்றப்பட்டு விட்டது என்பதுதான் வரலாறு; அப்படியிருக்க அரசமைப்பை இயற்றியவர்களின் உணர்வு எது? என்பதை எப்படிக் கண்டறிவது?

அப்படியே ஒருக்கால் அந்தப் ''பழைய உணர்வை'' நம்மால் சூக்கும சக்தி மூலம் கண்டுபிடிக்க முடிந்தாலும் கூட ''அந்த உணர்வோடு'' மத்திய மயமாக்கப்பட்ட இன்றையக் காங்கிரசுக் கட்சி, அரசமைப்பு விதிகளைச் செயல்படுத்துவதற்குத் தயாராக உள்ளதா?

நமது மத்திய அரசு நிர்வாகச் சீர்திருத்தக் குழுவின் ஆலோசனைகளை இன்று வரை ஏற்றுக் கொள்ளவில்லை.

மேலும் அரசமைப்பு விதிகளை ''சம்மந்தப்பட்ட'' அனைவரும் செயல்படுத்துவதில்லை. மத்திய அரசிடமே அதிகாரங்கள் முழுவதும் குவிந்து கிடப்பதால் ''கூட்டாட்சி உணர்வோடு'' மத்திய அரசுதான் செயல்பட வேண்டும். இன்றைய் மத்திய அரசு அதற்கும் தயாராக இல்லை.

நமது அரசமைப்பும் ஓர் அரைகுறைக் கூட்டாட்சி அர சமைப்பு; அதனை அமுல்படுத்தி வரும் ஆளும் கட்சியும் ஒற்றை யாட்சிப் பாணியைக் கொண்ட ஓர் அரசியல் கட்சி. ஆக, கருவியும் முனை மழுங்கிய கருவி; அதைக் கையாளும் கையும் திறனற்ற கை; அப்படி இருக்க நுணுக்கமான கைவினைப் பொருள்களை அவற்றின் மூலம் பெறுவது எப்படி?

எனவே, உண்மையான கூட்டாட்சிக் கொள்கையின் அடிப் படையில் இன்றைய அரசமைப்பில் சில அடிப்படையான திருத்தங்களைச் செய்தாலன்றி, ''கூட்டாட்சி உணர்வையோ''

அல்லது ''மாநிலத் தன்னாட்சி அதிகாரங்களையோ'' இன்றைய மத்திய அரசிடமிருந்து பெற முடியாது; அதனை இயக்குகின்ற ஆளும் கட்சியிடமிருந்தும் பெற முடியாது; இன்றைய மத்திய அரசும், மாநிலங்களும் அரசமைப்பை இயற்றியவர்களின் ''அதே உணர்ச்சியோடு''(?) தாமாகவே செயல்பட்டு விடவும் இயலாது.

மாநிலங்களுக்கு அதிகத் தன்னாட்சி அதிகாரங்கள் தரப்பட வேண்டுமெனக் கூறி, அரசமைப்பில் அதற்குரிய திருத்தங்கள் செய்யக் கூடாது என்ற நிபந்தனையையும் விதிப்போர், மாநிலங் களுக்குக் கூடுதல் அதிகாரங்கள் தரப்பட வேண்டும் என மெய்யாகவே எண்ணுவதில்லை; மாறாக, மேலாண்மை கொண்ட மத்திய அரசையும் அதற்கடங்கிய மாநிலங்களையும் அப்படியே வைத்துக் கொள்ள வேண்டுமென்பதே அவர்களது உள் நோக்கம். அகில இந்தியக் கட்சிகளின் அவ்வகைச் சந்தர்ப்ப வாதங்கள் அப்பழுக்கற்ற அரசியல் பித்தலாட்டமே.

''அதிகாரப் பரவல் முறை'' எனக் கூறி, அதற்குரிய வழி முறைகளைக் கூறாமல் பொதுவாக விட்டுவிடும் அரசியல்வாதி களுக்கும் அரசமைப்புத் திருத்தங்கள் இல்லாமலேயே ''கூட் டாட்சி உணர்வோடு'' மத்திய அரசும் மாநிலங்களும் செயல் படமுடியும் எனக் கூறுவோருக்கும் அதிக வேறுபாடுகள் இல்லை. முன்னது தெளிவின்மையைக் காட்டுகிற தென்றால், பின்னது சந்தர்ப்ப வாதத்தைக் குறிக்கிறது.

கூட்டாட்சி உணர்வு வேண்டும்; மத்திய – மாநிலப் பிணக்கு களும் சுமுகமாகத் தீரவேண்டும்; அதிகாரப் பரவலாக்கமும் வேண்டும் என்றால் அவற்றிற்குரிய சரியான பரிகாரம் முழு மாநில சுயாட்சியே.

எனவே மலர்க மாநில சுயாட்சி.

2. கூட்டுறவுக் கூட்டாட்சி முறை
(Co Operative Federalism)

விவசாயம், கல்வி, கூட்டுறவு, உள்ளாட்சித்துறை, மக்கள் நல்வாழ்வு, தொழில்கள் மற்றும் சமுதாய நல்வாழ்வுப் பணிகள் (Social Services) போன்ற துறைகள் யாவும் அரசமைப்பு விதி களால் மாநிலங்களுக்கே தரப்பட்டிருந்தாலும், நடைமுறையில் மத்திய அரசு தன் கொள்கைகளையும் நிதியழுத்தங்களையும்

மாநிலங்களின் மீது திணிப்பதின் மூலமாக அந்த மாநில அதிகாரங்களை ஊடுருவி வருகின்றது. இன்றைய அரசமைப்புச் சட்ட விதிகளின்படி மத்திய அரசு மேலாண்மையைப் பெற்று விடுவதால் அதன் அடக்குமுறையை மாநிலங்களால் தவிர்க்க முடிவதில்லை. மத்திய அரசிலும் மாநிலங்களிலும் ஒரே கட்சி நீண்ட காலம் ஆட்சிப் பொறுப்பை வகித்து வந்ததால் மத்திய அரசின் அவ்வகை ஊடுருவல்களை எவ்வகை எதிர்ப்புமின்றி மாநிலங்கள் ஏற்றுக்கொண்டு விட்டன.

நில உடைமைக்கு உச்சவரம்பு கட்டுதல்; குத்தகைச் சாகுபடி, மும்மொழித் திட்டம்; ஆட்சி மொழி; மூன்றுண்டுப் பட்டப் படிப்பு; பள்ளி ஆசிரியர் சம்பளம் உள்ளிட்ட நகல்கள்; கல்விக் கொள்கை; பஞ்சாயத்து ராஜ்யம்; சமுதாய வளர்ச்சித் திட்டங்கள் மற்றும் தொழில்கள் துவக்குதல் ஆகியவற்றில் மாநிலங்கள் தன்னிச்சைப்படி செயல்பட முடியாமல் மத்திய அரசு, தன் கொள்கைகளை வலியத் திணித்து வருகின்றது. இவை யாவும் கூட்டாட்சிக் கொள்கைக்கு முரணானவை.

அரசமைப்பு விதிகளின்படி மாநில அதிகாரங்களில் மத்திய அரசுக்குப் பொறுப்பில்லை; எனவே, தொலை தூரத்தில் உள்ள மத்திய அரசு, தன் விரிவான கொள்கைகளின் மூலமாகவும், நெறிமுறைக் கட்டளைகள் மூலமாகவும், நிதியமுத்தத்தின் வாயிலாகவும் மாநில அதிகார இனங்களில் மறைமுகமாக நிர்வாகம் செய்கின்றது.

இந்த உண்மை நிலையை ஏற்றுக் கொள்ளாமல் அதனையும் ''ஒருவகைக் கூட்டாட்சிக் கொள்கை'' எனத் திரித்துக் கூறுகின்றனர். இன்றைய மத்திய அரசுக்கு வால்பிடிக்கும் சில அரசமைப்பு வல்லுநர்கள், மத்தியத்தின் மேலாண்மையை விரும்பும் சில அரசியல்வாதிகளும் மத்திய அரசின் முறை கெட்ட ஊடுருவல்களைக் கூட்டாட்சிக் கொள்கையின் ஒரு பகுதி தான் என நிலைநாட்டுவதற்காக, ''கூட்டுறவுக் கூட்டாட்சிக் கொள்கை'' (Co-operative Federalism) என்ற அழகான சொற்றொடரால் சுட்டிக் காட்டுகின்றனர்.

''கூட்டுறவு'' என்ற கோட்பாட்டை அரசியல் துறையில் செயல்படுத்தும்போது, அது ''கூட்டாட்சி'' என்ற பெயரைப் பெறுகின்றது. கூட்டுறவு இன்றிக் கூட்டாட்சி யில்லை. மாநிலங்களின் கூட்டாட்சி இன்றி ஒரு நாட்டின் கூட்டுறவும் இல்லை.

கூட்டுறவுக்கு அடிப்படை அதன் உறுப்பினர்களின் சம உரிமையும் சம தகுதியுமாகும். அதற்கொப்ப, கூட்டாட்சி நாட்டின் அடிப்படை—அதன் உறுப்புக்களின் (மாநிலங்களின்) சம உரிமையும் சம தகுதியுமாகும்.

எனவே, ''கூட்டுறவுக் கூட்டாட்சி'' என்ற சொற்றெடர் பொருளற்றது.

அரைகுறையான கூட்டாட்சி அம்சங்களைப் பெற்ற இந்திய நாட்டில் மத்திய அரசு, தன் மேலாண்மை மூலமாக மாநில அரசுகளின் அதிகாரங்களில் செய்யும் ஊடுருவல்களை மறைப்பதற்காக மத்திய அரசால் செய்யப்படும் சில கண்துடைப்பு ஏற்பாடுகளுக்குக் கூட்டுறவுக் கூட்டாட்சி எனப் பெயரிடப்படுகின்றது. இது கடைந்தெடுத்த சந்தர்ப்பவாத மல்லவா?

கூட்டுறவும் அற்ற, கூட்டாட்சியும் அற்ற அந்தக் ''கூட்டுறவுக் கூட்டாட்சி ஏற்பாடுகள்''தான் எவை?

சீர்மையான பொருளாதார முன்னேற்றம் என்ற பெயரில் அமைக்கப்பட்ட ''திட்டக் குழுவும்'', அது உருவாக்கும் திட்டங்களைப் பரிசீலிப்பது என்ற பெயரில் ''தேசிய வளர்ச்சி மன்றமும்'', (N. D. C.) மாநிலப் புனரமைப்புகளில் ஏற்பட்ட சிக்கல்களைச் சுமுகமாகத் தீர்த்து வைத்து, இந்தியத் தேசியத்தை வளர்ப்பதற்குக் கருவியாக அமையும் என்ற முறையில் அமைக்கப்பட்ட ''பிராந்தியக் குழுக்களும்'' (Zonal Councils), நாட்டின் பொது நலன் கருதி, சில தேசியப் பிரச்சனைகளை விவாதிப்பதற்கென்று கூறி அவ்வப்போது கூட்டப்படும் ''மாநில முதலமைச்சர்கள் மாநாடுகளும், மத்திய-மாநில அரசுத் துறைகளில் சுமுக உறவு ஏற்படுத்த வேண்டு மென்ற பெயரால் கூட்டப்படும் மாநில அமைச்சர்களின் தனிக் கருத்தரங்குகளும், மாநில ஆளுநர்களின் பொருளற்ற மாநாடுகளும், மத்திய — மாநில உயர்மட்ட அதிகாரிகளின் அதிகாரப் பற்றற்ற கலந்துரையாடல்களும், இம்மாநாடுகளில் நடைபெறுகின்ற பயனற்ற விவாதங்களும், அவற்றில் எடுக்கப்படும் செயலாக்க மற்ற முடிவுகளும், சட்ட அடிப்படையற்ற விளைவுகளுமே ''கூட்டுறவுக் கூட்டாட்சி ஏற்பாடுகள்'' எனக் கூறப்படுகின்றன.

மேற்சொன்ன நிறுவனங்கள் யாவும் இந்தியத் தேசியக் காங்கிரசின் தலைவர்களால் உருவாக்கப்பட்ட நிறுவனங்களே யன்றி இந்திய அரசமைப்புச் சட்டவிதிகளால் உருவாக்கப்பட்டவை அல்ல, எனவே, அவை அரசமைப்புக்கு அப்பாற்பட்டவை.

அரசமைப்புச் சட்டவிதி 263-ஐப் பயன்படுத்தி மத்திய - மாநிலப் பிணக்குகளைத் தீர்ப்பதற்குரிய வகையில் ''மாநிலங்களிடையிலான உறவு மன்றத்தை'' (Inter State Council) உருவாக்குவதற்குக் கூட முன் வராத காங்கிரசுத் தலைமையமைச்சர்கள், மத்திய அரசின் நேரடி மேற்பார்வையில் இயங்கக் கூடிய சில அமைப்புகளை அரசமைப்புக்குப் புறம்பாக ஏற்படுத்திக் கொண்டு ஒற்றையாட்சி முறையைப் பேணி வளர்த்து வருகின்றனர். அரசமைப்பு விதிகளின் ''உயிரோட்டத்தை'' செயல்படுத்தும் வகையிலும் மத்திய - மாநில உறவுகளைக் ''கூட்டுறவுத் தன்மையோடு'' சுமுகமாக்கவும் இவ்வகைநிறுவனங்கள் அமைக்கப்பட்டுள்ளன, என்ற நொண்டிக் காரணங்களும் அதற்காகக் காட்டப்படுகின்றன.

கூட்டுறவுக் கூட்டாட்சி முறையை வளர்க்கும் மேற்சொன்ன நிறுவனங்கள் மாநிலங்களைத் தாழ்வு படுத்தி மத்திய அரசை மேலாட்சி செய்யும் அமைப்பாக மாற்றியமைத்து விடுகின்றன. மாநிலங்களிடையே சமதகுதி உண்டென்று வாதிட்டாலும், மத்திய அரசு மாநிலங்களை விட உயர் தகுதி பெற்றுள்ள தென்பதை உள்ளங்கை நெல்லிக் கனிபோல் அவை தெளிவாக்குகின்றன.

மத்திய அரசும், மாநில அரசுகளும் அரசமைப்பால் பகிர்ந்தளிக்கப்பட்ட அதனதன் அதிகார எல்லைகளுக்குள் நின்று, சுயமாக இயங்க வேண்டு மென்பதே கூட்டாட்சித் தத்துவத்தின் உயர் மூச்சாகும். மத்திய அரசையே எல்லாவற்றிற்கும் மாநிலங்கள் சார்ந்திருக்க வேண்டு மென்பதே நம் ''கூட்டுறவுக் கூட்டாட்சிக் கொள்கையின்'' அடிப்படை நோக்கமாகும்.

அமெரிக்கா போன்ற கூட்டாட்சி நாடுகளில் மத்திய அரசுக்கு ஒதுக்கப்பட்ட அதிகார எல்லைகளில் மாநிலங்களும் பங்கு பெற வேண்டு மென்ற உயர்நோக்குடன் மத்திய அரசு அதன் மாநிலங்களுடன் கலந்துரையாடி தேசிய நலன்களுக்குகந்த அடிப்படையான முடிவுகளை மேற்கொள்கின்றன. ஆனால் மாநில சுயாட்சிக்கு அது எவ்வகையிலும் ஊறு விளைவிப்பதில்லை. இந்திய நாட்டில் மாநில அதிகாரங்களை யெல்லாம் ஏற்கெனவே கைப்பற்றிக் கொண்ட மத்திய அரசு, மீதியுள்ள அதிகாரங்களையும் மறைமுகமாகப் பறித்துக் கொள்வதற்காகக் கூட்டுறவுக் கூட்டாட்சி என்ற சொற்றொடரை முறைகெட்டுப் பயன்படுத்துகின்றது.

பேராசிரியர். வெங்கட்ரங்கையா அவர்கள் கூட்டுறவுக் கூட்டாட்சி என்று அழைக்கப்படும் புதுவகை ஏற்பாட்டைப் பற்றிக் கருத்தறிவிக்கும் போது,

> ''இந்தியாவில் கூட்டுறவுக் கூட்டாட்சி என்பது வலுக்கட்டாயமாகத் திணிக்கப்பட்ட ஒன்று என்பதை மறந்து விடுகின்றனர். (இந்திய) மாநிலங்கள் (மத்திய அரசுடன்) ஒத்துழைப்பதைத் தவிர வேறு வழி யில்லை. இரண்டு கூட்டாளிகள் சேர்ந்து நடத்தும் கூட்டு வணிகத்தில் ஒருவர் செயலற்றும், வணிகத்தைக் கவனிக்காமலும் இருக்கும் நிலையையே அது ஒத்துள்ளது.'' 3

எனக் கூறுகின்றார்.

கூட்டுறவுக் கூட்டாட்சி யென்பது மத்திய அரசும் மாநிலங்களும், ''ஒன்றை யொன்று சார்ந்த நிலையு மன்று''; ''ஒன்றை மற்றொன்று சாராத(தன்னாட்சி)நிலையு மன்று.'' மாறாக''ஒன்றுக் கொன்று பின்னிச் சார்ந்திருக்கும் நிலையே யாகும்.'' (Co-operative Federalism is Neither Dependence; nor Independence; But Interdependence) எனக் கூறுகின்றனர்.

ஆனால், உண்மையில் ''இந்தியக் கூட்டுறவுக் கூட்டாட்சி யென்பது, மத்திய அரசும் மாநிலங்களும் ''ஒன்றை மற்றொன்று சாராத (தன்னாட்சி) நிலையு மன்று''; ''ஒன்றுக் கொன்று பின்னிச் சார்ந்திருக்கும் நிலையு மன்று'';மாறாக''ஒன்றை (மத்திய அரசை) மட்டுமே மற்றது (மாநிலங்கள்) சார்ந்திருக்கும் நிலையே யாகும். (Indian Co-operative Federalism is Neither in Dependence; Nor Interdependence; But Dependence.)

எனவே, கூட்டுறவுக் கூட்டாட்சியில் உண்மைக் கூட்டுறவு மில்லை. முழுக் கூட்டாட்சியு மில்லை.

''கூட்டுறவும் வேண்டும்''; ''கூட்டாட்சியும் வேண்டும்'' எனில் மாநில சுயாட்சி மலர வேண்டும்.

---

3 Weekly Round Table 30-4-1972. "Federal India" P. 10.

3. மாநிலங்களுக்கிடையிலான உறவு மன்றம்
(Inter State Council)

இன்றைய அரசமைப்புச் சட்டவிதி 263-இன்படி, மாநிலப் பிரதிநிதிகளும் மத்திய அரசின் அமைச்சர்களும் அதிகாரப் பற்றற்ற முறையில் கூடிக் கலையும் ஓர் ஆலோசனை மன்றமே மாநிலங்களிடையிலான உறவு மன்றம்'' என அழைக்கப்படுகிறது. ஆனல் மத்திய அரசால் அந்த அதிகாரப் பற்றற்ற மன்றமும் கூட இது வரை அமைக்கப்பட வில்லை.

சட்டவிதி 263:— மாநிலங்களிடை உறவு மன்றம்:

''எக்காலத்திலாவது நாட்டின் பொது நலனுக்கு உகந்த ஒரு குழுவைக் குடியரசுத் தலைவர் அமைக்க வேண்டுமெனக் கருதுவாராளுல்,

(அ) மாநிலங்களிடையே உருவாகிவிட்ட பிணக்குகளை விசாரிப்பதற்கும், அறிவுரை கூறுவதற்கும்;

(ஆ) சில மாநிலங்களுக்கோ அன்றி அனைத்து மாநிலங்களுக்கோ அல்லது மைய அரசுக்கும் ஒன்று அல்லது ஒன்றுக்கும் மேற்பட்ட மாநிலங்களுக்கோ, பொதுவான அக்கறையுள்ள பொருள்களைப் (Subjects) பற்றி விவாதிப்பதற்கும் ஆய்வு செய்வதற்கும்;

(இ) அவ்வகை (ஆய்வு)ப் பொருள்களின் மீது தேவையான பரிந்துரைகளை வழங்குவதற்கும், குறிப்பாக அவ்வகைப் பொருள்களைப் பற்றிய சீரிய ஒருங்கிணைப்பு (Co ordination)க் கொள்கை மற்றும் நடவடிக்கைகளுக்கான பரிந்துரைகளைச் செய்வதற்கும்;

அதிகாரம் வழங்கி, குடியரசுத் தலைவர் அவ்வகைக் குழுவை அமைக்கலாம். அக்குழு ஆற்ற வேண்டிய பணிகள் குறித்தும், அதன் அமைப்பு மற்றும் செயல்முறை குறித்தும் வரையறை செய்து அவர் ஆணை பிறப்பிக்கலாம்.

மேற்சொன்ன சட்டவிதியின் (அ) பகுப்பில்,

''மாநிலங்களுக்கிடையே உருவாகி விட்ட பிணக்குகள்'' என்று மட்டுமே கண்டுள்ளன.

(ஆ) பகுப்பில்,

> "மைய அரசுக்கும்—ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட மாநிலங்களுக்குப் பொதுவான அக்கறையுள்ள பொருள் களைப் பற்றி"

எனக் கண்டுள்ளது.

எனவே, மத்திய அரசுக்கும் ஏதாவது ஒரு மாநிலம் அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட மாநிலங்களுக்கும் இடையில் ஏற்படும் "பிணக்குகளை" (Disputes) விசாரிப்பதற்கோ அல்லது ஆய்வு செய்வதற்கோ "மாநிலங்களுக் கிடையிலான உறவு மன்றத்துக்கு" அதிகாரம் கிடையாது. மாறாக், "மாநிலங்களுக் கிடையே உருவாகும் "பிணக்குகளை" மட்டுமே அக்குழு ஆய்வு செய்ய முடியும்.

அக்குழுவுக்கு வெறும் பரிந்துரைகளைச் செய்யும் தகுதி மட்டுமே உண்டு. பிணக்கில் தொடர்புடைய மாநிலங்கள் அப்பரிந்துரைகளுக்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டுவ தில்லை. எனவே, அதன் பரிந்துரைகள் சட்டப்பூர்வமான தீர்ப்புக்க ளாகா. மேலும் அக்குழு தரும் பரிந்துரைகளைக் குடியரசுத் தலைவர் ஏற்றுத் தீர வேண்டு மென்ற கட்டாயமும் இல்லை. ஆக, மாநிலங்களுக் கிடையில் ஏற்படும் பிணக்குகளை ஆய்வு செய்து இரு சாராரும் ஒத்துப் போகக் கூடிய அதிகாரப் பற்றற்ற சில ஆலோசனைகளை மட்டுமே அக்குழு வழங்க முடியும்.

தலைமை மற்றும் உயர் நீதி மன்ற நீதிபதிகளையும், தணிக்கைத் துறைத் தலைவரையும் தேர்தல் ஆணைக் குழுத் தலைவரையும் நிதி ஆணைக் குழு உறுப்பினர்களையும் மத்திய அமைச்சரவையின் ஆலோசனையின் பேரில் குடியரசுத் தலைவரே நியமிக்க வேண்டு மென்று சட்டவிதி 75 (1)-இன் மூலமாக ஆணையிடப்படுவதால், "மாநிலங்களிடை உறவு மன்றத்தின்" மூலமாக அவர்களை நியமிக்க முடியாது.

மாநில ஆளுநர்கள் விருப்ப அதிகாரங்களைப் பற்றி அரசமைப்புச் சட்டவிதிகள் நேரடியாகவும் மறைமுகமாகவும் தெளிவு படுத்துவதால் ஆளுநர்களுக்குரிய அறிவுரைக் குறிப் புரைகளை (Guide Lines) அம்மன்றம் வழங்க முடியாது.

கேரளப் பல்கலைக் கழகச் சட்டத்துறைத் தலைவரான, பேராசிரியர், ஏ. டி. மார்கோஸ் (A. T. MARKOSE) அவர்கள்,

> ''மாநிலங்களிடை உறவு மன்றம் என்பது கலந்துரையாடவும் அறிவுரை வழங்கவும் மட்டுமே தகுதி படைத்த ஓர் அரசியல் நிறுவனமாகும் (Political Body). இந்தியக் கூட்டாட்சி வளர்ச்சியில் குறிப்பிடத் தக்க பங்கு பெறுவதற்குரிய ஒரு குழுவாகவே அது இயங்க முடியும். ஆனால், மத்திய-மாநிலங்களிடையே எழும் தகராறுகளைத் தீர்ப்பதற்கு அது பயன் படாது.'' 4

எனக் கருத்தறிவிக்கின்றார்.

எனவே, நிர்வாகச் சீர்திருத்தக் குழுவின் பரிந்துரைகள் கூறுவதைப் போலவோ அல்லது மத்திய அரசுக்கு சார்புள்ள சில அரசமைப்பு வல்லுநர்கள் தரும் கருத்துக்களைப் போலவோ ''மாநிலங்களிடையிலான உறவு மன்றம்'' மத்திய அரசிற்கும் மாநிலங்களுக்கும் இடையே உருவாகும் பிணக்குகளைத் தீர்க்க வல்ல மாமருந்தாகாது.

காலும் காலணியும்

மத்திய—மாநிலங்களிடையே ஏற்படும் பிணக்குகளைத் தீர்ப்பதற்குரிய நிலையான வழிவகைகளை நாம் முறையோடு காண வேண்டுமெனில், கூட்டாட்சிக் கோட்பாட்டின் அடிப்படையில் உதித்த அரசமைப்புப் பரிகாரங்களைத் தேட வேண்டும்; அத்தகைய பரிகாரங்களே மத்திய - மாநில உறவுகள் சிறப்பதற்கும் வழிவகை செய்யும். ஆனால் இன்றைய நம் அரசமைப்பு உண்மைக் கூட்டாட்சி நாட்டில் கிடைக்கும் பரிகாரங்களும் இந்திய மாநிலங்களுக்குக் கிடைக்காது.

அரசியல் சட்டத் திருத்தம் ஏது மின்றியே, சீர்குலைந்து கிடக்கும் இன்றைய மத்திய-மாநில உறவுகளைச் செப்பனிட்டு விடலாம் என்ற வாதம் ''காலுக்கேற்ற செருப்பைத் தேடுவதற்குப் பதிலாக இருக்கும் செருப்புக்கு ஏற்றபடி, காலை வெட்டிக் கொள்ளலாம்'' என்ற யோசனைக் கொப்பானதாகும்.

முழு மாநில சுயாட்சி வேண்டுமென நாம் வலியுறுத்தும் போது உண்மைக் கூட்டாட்சி மலர வேண்டு மென்பதே அதன் பொருள்.

எனவே, மலர்க மாநில சுயர்ட்சி.

---

4 "Ad.Hoc. Federalism Vs. Constitutional Federalism", in "The Union and The States" By. A. P. Jain (1972) P. 90

## 12. புதியதோர் அரசமைப்புச் செய்வோம்

"அரசமைப்பு நிலையானது தான்; ஆனால் சாசுவத மானதல்ல. மக்கள் விரும்பும் காலம் வரை தான், அதன் தத்துவமும் நிலைத்திருக்கும்."[1]

— சுயராச்சியா.

இந்தியத் துணைக் கண்டத்திலுள்ள பெரும்பாலான அரசமைப்பு வல்லுநர்களும், அரசியல் கட்சித் தலைவர்களும், நடைமுறை அரசியலுக்கு அப்பாற்பட்ட மூதறிஞர்களும், பொருளாதார நிபுணர்களும் இன்றைய மாநிலங்களுக்குக் கூடுதலான அதிகாரங்களை வழங்க வேண்டுமென ஒரு சேர வலியுறுத்துகின்றனர். ஆனால் அவர்கள் யாவரும் இன்றிருக்கும் அரசமைப்புச் சட்டத்தின் நாற்புற எல்லைகளுக்குள் நின்றே, தத்தம் கண்ணோட்டத்தைச் செலுத்துகின்றனர்.

இன்றைய அரசமைப்பால் மறுக்கப்பட்ட மாநிலத் தன்னாட்சி அதிகாரங்களையும், மத்திய அரசால் பறிக்கப்பட்ட மாநில உரிமைகளையும் மீண்டும் திரும்பப் பெறுவதற்கு இன்றைய அரசமைப்புச் சட்டத்தின் குறிப்பிட்ட சிற்சில விதிகளை அங்கொன்றும் இங்கொன்றுமாகத் திருத்தினாலே போதுமானது என்பதும் இத்தகையோர் கருத்து.

ஏனெனில், இன்றைய அரசமைப்பிலுள்ள "மத்திய மாநில உறவுகள்" என்ற பருப்பொருளே இத்தகையோர் கண்ணோட்டத்தில் மிகுந்து நிற்கின்றதே தவிர, "மாநில சுயாட்சி" என்ற அதன் கருப்பொருள் அவர்கள் கண்ணுக்குப் புலப்படுவதில்லை.

அன்றைய அரசமைப்புச் சபையில் தீவிர உறுப்பினராக இருந்தவரும், பின்னர் இரண்டாம் நிதி ஆணைக்குழுத் தலைவராகப் பணியாற்றியவருமான, தமிழக அரசமைப்பு வல்லுநர், திரு. கே. சந்தானம் அவர்கள் "மத்திய மாநில உறவுகள்" என்ற குறுகிய வட்டத்தை விட்டு வெளியே வந்து, சற்றுப் பரந்த கண்ணோட்டத்துடன் "மிகுந்த தன்னாட்சி உரிமைகள்"

---

1 31—7—1971, Swarajya, P. 18.

(Greater Autonomy) என்ற கொள்கையை அமைத்து அதற்கேற்ற அரசமைப்பின் சட்டவிதித் திருத்தங்களை முதன் முறையாகத் தொகுத்துக் கூறினர். ஆனல், அதுவும் முழுமையானதல்ல.

## I

## இராசமன்னர் குழு செய்த கூட்டாட்சிப் பரிந்துரைகள்

டாக்டர். இராசமன்னர் அவர்கள் தலைமையில் தமிழக அரசால் நிறுவப்பட்ட மைய – மாநில உறவு ஆய்வுக் குழுவும் கூட,

''கூட்டாட்சி அமைப்பில் மைய அரசுக்கும் மாநில அரசுகளுக்குமிடையே நிலவ வேண்டிய உறவு பற்றிய பிரச்சனை முழுமையையும்,

......நாட்டின் ஒருமைப்பாட்டுக்கு ஊறு நேரா வண்ணம் நிர்வாகத் துறை, சட்டமியற்றுத் துறை, உயர்நீதிமன்றம் உட்பட நீதித்துறை ஆகியவற்றில் மாநிலங்கள் உச்ச அளவுத் தன்னாட்சி உரிமையை (Utmost Autonomy of the State) அடைவதற்கு''

தேவையான வழிவகைகளை மட்டுமே முதன் முதலாகத் தொகுத்து அளித்தது.

இராசமன்னர் குழு தனக்கு அளிக்கப்பட்ட பணிவரையறைக்குள் நின்று,

''அரசமைப்பின் இன்றியமையாத அடிப்படையினைக் குலைக்கவோ, நாட்டின் ஒருமைப்பாட்டுக்கு ஊறு உண்டாக்கவோ'' முயற்சிக்காமலும்;

''இப்போதுள்ள அரசமைப்புச் சட்டத்தை அழித்து—அதற்குப் பதிலாக மற்றொன்றினை உருவாக்குவது'' என்ற நோக்கம் இல்லாமலும்;

''(அரசமைப்பின்) சீர்குலைந்த நிலையைச் சாதகமாக்கிக் கொண்டு அதனை சிதறச் செய்து, பின்னர் விருப்பத்திற் கேற்றவாறு மீண்டும் உருவாக்கிட வேண்டுமென்று'' உள்ளக்கிடக்கை யில்லாமலும்;

''மாநிலங்களின் தன்ஞட்சி உரிமைக்கும் நாட்டின் ஒருமைப் பாட்டுக்கும் உடன்பட்ட தன்ஞட்சிக்கு ஆதரவாக''
பல பரிந்துரைகளைச் செய்துள்ளது.

இராசமன்னர் குழு அறிக்கையை ஆழ்ந்து நோக்கினல் மத்திய - மாநிலச் சிக்கல்களைத் தீர்ப்பதற்குரிய வழிவகைகளை அக்குழு தருவதோடு, நிர்வாகம், நிதி, நீதி சட்டமியற்றுதல் ஆகிய துறைகளில் இன்றைய அரசமைப்புச் சட்ட வரையறைக் குட்பட்ட உச்ச அளவுத் தன்ஞட்சி யுரிமையை மாநிலங்கள் அடைவதற்கான கருத்துரைகளையும் வழங்கியுள்ளது என்பது புலனுகும்.

ஆனுலும் அக்குழு, முழு மாநில சுயாட்சியை வலியுறுத்துவதில்லை. முழு மாநில சுயாட்சியைப் பெறுவதற்குரிய வேரோர் அரசமைப்பை உருவாக்கவல்ல பரிந்துரைகளையும் அக்குழுவின் அறிக்கை எடுத்தியம்புவதில்லை. மாநிலங்களின் தன்ஞட்சி உரிமைக்கு ஆதரவான, சில பல கருத்துக்களையே அக்குழு வலியுறுத்திக் கூறுகிறது.

## இராசமன்னர் குழு செய்த பரிந்துரைகளின் சுருக்கம்

(அ) நீக்கப்பட வேண்டிய சட்ட விதிகள்:-

(i) மத்திய அரசு, தன் நிர்வாகக் கட்டளைகளையும் அரசியல் கட்டுப்பாடுகளையும் மாநிலங்களின் மேல் விதிக்க வகை செய்யும் 256, 257, 339 (2) ஆகிய சட்டங்கள்;

(ii) ஆட்சி மொழி ஆணைக் குழு செய்த பரிந்துரைகளைப் ''பரிசீலித்த நாடாளு மன்றக் குழு'' (Parliamentary Committee for Official Language) தரும் அறிக்கையை அடிப்படையாக வைத்துக் குடியரசுத் தலைவர்;

(iii) மாநிலங்களின் மேல் ஆட்சி மொழி பற்றி ஆணைகளைப் பிறப்பிக்க வகை செய்யும் 344 (6)-ஆம் சட்ட விதி;

(iv) உயர் நீதி மன்ற நீதிபதிகளைப் பற்றிய 222-ஆம் சட்டவிதி; மாநில அதிகாரப் பட்டியலிலுள்ள அதிகார இனங்களை, நாடாளு மன்றத்தின் ஓர் அவையான மாநிலங்களவை, தன் தீர்மானம் மூலமாகப் பறித்துக் கொள்ள வழிவகை செய்யும் 249-ஆம் சட்ட விதி;

(v) குடியரசுத் தலைவர் "நெருக்கடி நிலைப் பிரகடனம்" செய்ய வகை செய்யும் 356, 357 மற்றும் 365 ஆகிய சட்ட விதிகள்;

(vi) 'நிதி நெருக்கடி நிலையென அறிவித்து, மாநில நிதித் துறையை முற்றிலும் மூழ்கடிப்பதற்குத் தேவையான அதிகாரங்களைக் குடியரசுத் தலைவருக்குத் தரும் 360-ஆம் சட்ட விதி;

(vii) வேறு மாநிலங்களி லிருந்து குறிப்பிட்ட மாநிலத்திற்குள் வரும் பொருள்கள் மீது வரிகளை விதிப்பதற்கும், மாநிலங்களிடையிலான வணிக முறைகளில் நியாயமான கட்டுப்பாடுகளை விதிப்பதற்கும் மாநிலங்களுக்குத் தரப்பட்ட அதிகாரத்தைப் பயன் படுத்துவதற்கு முன்னர், குடியரசுத் தலைவரின் அனுமதி பெற வேண்டும் என்ற கட்டுப்பாடு செய்யும் 304 (b) சட்டவிதியின் வரம்புரை (Proviso);

(viii) மாநிலச் சட்ட மசோதாக்களைக் குடியரசுத் தலைவரின் பரிசீலனைக்காகவும் இசைவிற்காகவும் ஒதுக்கி வைக்க வேண்டுமென்று கடப்பாடு செய்யும் எல்லாச் சட்ட விதி.

(ஆ) திருத்தப்பட வேண்டிய சட்ட விதிகள்

(i) மாநிலங்களிடையே உறவு மன்றம் பற்றிய 263-ஆம் சட்ட விதி;

(ii) நாடாளு மன்றம் மாநிலச் சட்ட மியற்றுத் துறைகளில் ஊடுருவல் செய்ய வழி செய்யும் 154 (2) மற்றும் 258 (2) ஆகிய சட்ட விதிகள்;

(iii) மாநிலச் சட்ட மேலவைகளை, ஆக்கவும், அழிக்கவும் தேவையான சட்டத்தை இயற்றுவதற்கான அதிகாரங்களை நாடாளு மன்றத்திற்கு வழங்கும் 169 (1)-ஆம் சட்ட விதி;

(iv) இரண்டு அல்லது இரண்டுக்கும் மேற்பட்ட மாநிலச் சட்ட மன்றங்கள் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றி அவற்றிற்குரிய அதிகார இனங்களை நாடாளு மன்றத்திற்கு வழங்க வகை செய்யும் 252-ஆம் சட்ட விதி;

(v) சில வகையான அவசரச் சட்டங்களை மாநில ஆளுநர் பிறப்பிக்கும் முன்னர் குடியரசுத் தலைவரின் அனுமதியைப் பெற வேண்டும் எனக் கூறுகின்ற 213 (1)-ஆம் சட்டவிதியின் வரம்புரை;

(vi) மாநில ஆளுநர் பற்றிய சட்டவிதிகள்;

(vii) தலைமை நீதிமன்றம் மற்றும் மாநில உயர்நீதி மன்றங்கள் பற்றிய பல்வேறு சட்டவிதிகள்;

(viii) பொதுமை ஊழியங்கள் (All India Services) பற்றிய சட்டவிதிகள்;

(ix) மாநிலங்களின் எல்லைப் பகுதிகளை மாற்றியமைக்க வகை செய்யும் 3 மற்றும் 4-ஆம் சட்டவிதிகள்.

(x) மக்களவை, மாநிலங்களவை ஆகியவற்றின் உறுப்பினர்கள் சார்ந்த சட்ட விதிகள்;

(xi) ஆட்சி மொழி சார்ந்த சட்ட விதிகள்;

(xii) வர்த்தகம் மற்றும் வணிகம் பற்றிய சட்டவிதிகள்;

(xiii) மத்திய அரசின் ரிசர்வு காவல் படை பற்றிய 355-ஆம் சட்ட விதி;

(xiv) தேர்தல் பற்றிய சட்டவிதி;

(xv) கடற்படுகையின் கீழ் உள்ள அடிநிலம், தாதுப்பொருள்கள் ஆகியவை மாநிலத்திற்குச் சேரும் வகையில் திருத்தப்பட வேண்டிய 297-ஆம் சட்ட விதிகள்;

(xvi) இன்னோரன்ன வேறு பல சட்ட விதிகள்;

இச்சட்ட விதிகளை முற்றிலும் மாற்றியமைத்து, மாநில சுயாட்சிக்கு ஊறு நேராமல், அவை திருந்திய புதிய வடிவுடன் திகழும் அளவிற்கு அரசமைப்புத் திருத்தங்கள் செய்யப்பட வேண்டும்.

(இ) மற்ற முக்கியப் பரிந்துரைகள்

(i) மத்திய அரசுப் பட்டியலிலுள்ள பல அதிகாரப் பதிவுகளும், பொதுப்பட்டியலிலுள்ள பல அதிகாரப் பதிவுகளும், மாநிலப் பட்டியலுக்கு மாற்றப்பட வேண்டும். இன்றிருக்கும் மத்தியப் பட்டியல், மாநிலப் பட்டியல், பொதுப் பட்டியல் ஆகியவற்றை மாற்றி அமைக்க உயர்மட்ட அதிகாரக் குழு அமைக்கப்படல் வேண்டும்;

(ii) எஞ்சிய அதிகாரங்கள் மாநிலங்களுக்கே வழங்கப்பட வேண்டும்.

(iii) அரசமைப்பைத் திருத்த வழிவகை செய்யும் இன்றைய 368-ஆம் சட்டவிதியை முற்றிலும் மாற்றி அமைக்க வேண்டும்.

(iv) மத்திய – மாநில நிதி உறவுகள் பற்றிய XII–ஆம் பகுதியின் முதல் மூன்று அத்தியாயங்கள் முழுமையாக மாற்றப்பட வேண்டும்.

(v) நிதி ஆணைக்குழு பற்றிய சட்ட விதிகள் வலிவு பெறும் அளவிற்குத் திருத்தப்பட வேண்டும்.

(vi) இவைபோக, திட்டமிடுதல், திட்டக் குழு, தொழில்கள், மாநிலங்களிடையே நீர்த் தகராறுகள் மத்திய அமைச்சரவை, அரசு ஊழியரின் தேர்வாணைக் குழு ஆகியவை பற்றிப் புதுச் சிந்தனைகள் உருவாகி அதனடிப்படையில் புதுக் கொள்கைகள் அமுலுக்கு வரும் வகையில் பல சட்டவிதிகள் புதிதாகச் செய்யப்பட வேண்டும்.

அக்குழு பரிந்துரைத்த பல திருத்தங்கள் இன்றைய அரசமைப்பில் செய்யப்பட்டாலும் அரசமைப்பின் அடிப்படையான அம்சங்கள் குலைக்கப்படுவதில்லை என்பதையும் திருத்தப்பட்ட அரசமைப்பு ''இணைப்பாட்சி அரசு முறைக்கு'' எடுத்துக்காட்டாகத் திகழும் என்பதையும் அக்குழு சுட்டிக் காட்டி இருப்பதிலிருந்தே முழு மாநில சுயாட்சியை நோக்கி விரைந்து நடைபோடக் கூடிய ஒரு திருத்தப்பட்ட அரசமைப்பைத்தான்(புதிய அரசமைப்பை அல்ல)அக்குழு வலியுறுத்துகிறது என்பது பெறப்படுகிறது.

அஃதாவது முழு மாநில சுயாட்சியை அடைய வேண்டுமெனில், புதியதோர் அரசமைப்பால் மட்டுமேதான் இயலும் என்பதை அக்குழுவின் அறிக்கை, சொல்லாமற் சொல்லுகின்றது.

## II
## தமிழக அரசு தந்த மாநில சுயாட்சிக் கருத்துக்கள்

''மாநிலத் தன்னாட்சி உரிமைக்கு ஆதரவுதேடும்'' சில பரிந்துரைகளைச் செய்த இராசமன்னார் குழுவின் அறிக்கையை, தி. மு. க. அரசு பரிசீலித்து, அதற்கடுத்த கட்டமான ''முழு மாநில சுயாட்சியை'' தமிழக அரசு வற்புறுத்துகிறது.

''மாநில சுயாட்சி உரிமைக்கு ஆதரவான'' சட்டத் திருத்தங்களுக்கு மாறாக ''மாநில சுயாட்சி''யையே வழங்கக் கூடிய பல அரசமைப்புத் திருத்தங்களைத் தனது ''குறைந்த பட்ச'' கோரிக்கைகளாக்கி, தமிழகச் சட்ட மன்றம் தீர்மானம் நிறை

வேற்றியுள்ளது. அத்தோடு தனது இறுதி இலட்சியமான முழு மாநில சுயாட்சிக் கொள்கையையும் தி.மு.க. அரசு மக்கள் மன்றத்தின் முன் வைத்துள்ளது.

''இந்தியாவின் ஒருமைப்பாட்டினையும் இறையாண்மையினையும், ஓங்குறச் செய்வதில் தனக்குள்ள திடமான உறுதிப்பாட்டினை'' அறிவித்துக் கொண்ட தமிழக அரசு,

''உண்மையான கூட்டாட்சியமைப்பில் நாட்டின் பாதுகாப்பு, வெளிநாட்டு உறவுகள், மாநிலங்களுக்கிடையே போக்குவரத்துத் தொடர்புகள், நாணயச் செலாவணி ஆகியவை குறித்த அதிகாரங்கள் மட்டுமே மத்திய அரசிடம் இருக்க வேண்டும். ஏனைய அதிகாரங்கள் அனைத்தும் எஞ்சிய அதிகாரங்களுடன் மாநிலங்களிடம் இருக்க வேண்டும். மத்திய அரசும் மாநில அரசுகளும் தமக்குள்ள அதிகார வட்டத்திற்குள் சுயேச்சையாகச் செயல்பட வேண்டும்...''

என்ற தனது அதிக பட்ச மாநில சுயாட்சி இலட்சியத்தை இந்திய நாட்டிற்கு முதன் முதலாக அறிமுகப்படுத்தி யுள்ளது.

தமிழக அரசின் ''கருத்துரை''களுக்கும், இராசமன்னார் குழுவின் ''பரிந்துரை''களுக்கும் அதிக வேறுபாடுகள் கிடையாது.

தமிழக அரசின் கருத்துரைகளை இனிக் காண்போம்.

(அ) நீக்கப்பட வேண்டிய சட்டவிதிகள்

இன்றைய அரசமைப்பிலிருந்து எந்தச் சட்டவிதிகள் முற்றிலும் நீக்கப்பட வேண்டுமென்று இராசமன்னார் குழு வலியுறுத்துகிறதோ அவை யெல்லாம் தமிழக அரசின் கருத்துரையிலும் ''நீக்கப்பட வேண்டும்'' என்றே கண்டுள்ளது.

அவை போக இன்னும் சில சட்டவிதிகளை நீக்கிவிட வேண்டு மென்றும் தமிழக அரசு கோரிக்கை விடுக்கிறது.

அவையாவன:

மாநில அரசுக்கும், மாநிலச் சட்ட மன்றங்களுக்கும் ஆணையிடுகின்ற சில சட்டங்களை நாடாளு மன்றம் செய்வதற்காக வகை செய்யும் 154 மற்றும் 258 ஆகிய சட்டவிதிகள் ;

வரையறுக்கப்படாத எஞ்சிய அதிகாரங்களையும், எஞ்சிய வரி விதிப்பு அதிகாரங்களையும், மத்திய நாடாளு மன்றத்திற்குத் தரும் 248-ஆம் சட்டவிதியும் மத்திய அரசுப் பட்டியல் 97-ஆம் பதிவு;

இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாநிலச் சட்ட மன்றங்கள் சேர்ந்து அதன் (மாநில) அதிகாரப் பட்டியலில் ஏதாவதோர் இனத்தில் சட்டம் செய்யும் உரிமையை நாடாளு மன்றத்திற்கே தந்துவிட வழிவகை செய்யும் 252-ஆம் சட்டவிதி;

அனைத்திந்தியப் பணிகள், புதிய அனைத்திந்தியப் பணியை உருவாக்குதல் ஆகிய தொடர்பான அதிகாரத்தை மத்திய அரசுக்கு அளிக்கும் 312-ஆம் சட்டவிதி;

மாநிலங்களிடையே நடக்கும் வர்த்தகம் மற்றும் வாணிகத்தின் மீது நாடாளுமன்றம் தடைகளை விதிப்பதற்கு அதிகாரம் அளிக்கும் 302-ஆம் சட்டவிதி;

மாநிலப் பகுதிகளை மாற்றவோ, குறைக்கவோ, கூட்டவோ, அழிக்கவோ மத்திய நாடாளுமன்றத்திற்கு அதிகாரத்தை வழங்கும் 3-ஆவது மற்றும் 4-ஆவது சட்டவிதிகள்.

(ஆ) திருத்தப்பட வேண்டிய சட்டவிதிகள்

இராசமன்னர் குழு எந்தச் சட்டவிதிகளைத் திருத்தவேண்டு மென்று கூறுகிறதோ, ஏறத்தாழ அத்துணை சட்டவிதிகளையும்—சில பல மாறுதல்களுடன்—திருத்த வேண்டும் எனத் தமிழ்நாடு அரசின் கருத்துரைகளும் கூறுகின்றன.

'மாநிலங்களுக் கிடையிலான உறவு மன்றம்' (Interstate Council), நிதி ஆணைக்குழு; மாநிலக் கடன்கள்; ஆட்சி மொழி; ஆளுநர்கள்; அரசமைப்புத் திருத்தத்தைச் செய்யும் சட்டவிதி; நிதி உறவுகள் மற்றும் குறிப்பிட்ட வேறு சில சட்டவிதிகள் ஆகியவை பற்றித் தமிழ்நாடு அரசு தந்த 'கருத்துரைகள்', இராசமன்னர் குழுவின் பரிந்துரைகளைக் காட்டிலும் தெளிவானவையாயும் முழுமையானவையாயும், மெய்யான மாநில சுயாட்சிக் கொள்கையை வலியுறுத்துவனவாயும் அமைந்துள்ளன.

இன்றைய அரசமைப்பின் VII-ஆவது அட்டவணையில் மத்தியப் பட்டியலுக்கும் மாநிலப் பட்டியலுக்கும் பொதுப் பட்டியலுக்கும் முறையே பிரித்து வழங்கப்பட்டுள்ள அதிகாரங்களை, மாற்றி அமைப்பதற்காக ஓர் உயர்மட்டக் குழு அமைக்கப்பட வேண்டுமென்பது இராசமன்னார் குழுவின் கருத்து. ஆனால், தமிழக அரசு, மத்தியப் பட்டியலிலும் மாநிலப் பட்டியலிலும் பொதுப் பட்டியலிலும் இனித் தரப்பட வேண்டிய அதிகாரங்களைப் பற்றித் தானே ஆய்வு செய்து, தொகுத்து, இன்றைய அரசமைப்பின் VII-ஆம் அட்டவணையை மாற்றி அமைத்துள்ளது. அதற்கான சட்டத் திருத்தத்தையும் கோருகின்றது.

(இ) தமிழக அரசின் "கருத்துரைகள்" தரும் மத்திய - மாநில மற்றும் பொதுப் பட்டியல் அதிகாரங்கள்:—

தமிழக அரசு மூன்று தனித் தனி அதிகாரப் பட்டியல்களைத் தொகுத்துள்ளது. அவை மாநில சுயாட்சிக்கு உயிர்க் கூறாக அமைவதால் அருள்கூர்ந்து அவற்றை ஆழ்ந்து படித்தறியக் கோருகிறோம்.

இந்நூல் மிக நீண்டு விட்டதால் தமிழக அரசு தந்த தனித் தனி அதிகாரப் பட்டியல்களை அப்படியே இங்கு தர இயலவில்லை. ஆனால் இந்நூலின் 439-ஆம் பக்கம் முதல் 459-ஆம் பக்கம் முடிய இன்றைய அரசமைப்பின் VII-ஆவது அட்டவணையில் உள்ள மத்திய, மாநிலப் பொதுப் பட்டியல்களின் அதிகாரப் பதிவுகள் வரிசைக் கிரமமாகக் கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றையே தமிழ்நாடு அரசும் தன் கருத்துரைகளில் மாற்றித் தந்துள்ளது. எனவே, தமிழக அரசின் கருத்துரையில் மாற்றித் தரப்பட்ட மூவகைப் பட்டியல்களின் அதிகாரப் பதிவுகளின் வரிசை எண்கள் மட்டும் கீழே தந்துள்ளோம். அவற்றைப் பழைய அரசமைப்பின் அதிகாரப் பதிவுகளுக்கு ஒப்பு நோக்கி ஆய்வு செய்து தெளிவுறுக.

இன்றைய அரசமைப்பில் தற்போது மத்திய அரசிற்கு 98 அதிகாரங்களும், மாநில அரசுக்கு 65 அதிகாரங்களும், பொதுப் பட்டியலில் 47 அதிகாரங்களும் தரப்பட்டுள்ளன.

இன்றைய மத்திய அரசுப் பட்டியலில் உள்ள மொத்தம் 98 அதிகாரப் பதிவுகளிலிருந்து, 23, 24, 39, 40, 42, 43, 44, 45, 46, 47, 48, 49, 50, 52, 53, 54, 55,

56, 58, 59, 60, 64, 65, 66, 67, 68, 78, 80 ஆகிய வரிசை எண்களைக் கொண்ட 28 அதிகாரப் பிரிவுகளை யும்; மற்றும் 82, 84, 85, 86, 87, 88, 89, 90, 91, 92, 92-ஏ, 97 ஆகிய வரிசை எண்கள் கொண்ட 12 வரிவிதிப்பு அதிகாரப் பதிவுகளையும் (ஆக மொத்தம் 40 அதி காரப் பிரிவுகளை) நீக்கி அவற்றை மாநிலப் பட்டியலுக்கு மாற்றி விட வேண்டும்.

தற்போது பொதுப் பட்டியலில் உள்ள 47 அதிகாரப் பதிவு களிலிருந்து 2, 3, 5, 8, 9, 10, 11, 12, 13, 14, 15, 16, 17, 18, 20, 21, 22, 23, 24, 25, 26, 28, 30, 34, 35, 36, 37, 38, 39, 42, 43, 44 ஆகிய வரிசை எண்களைக் கொண்ட 32 பதிவுகளையும்; மற்றும் 1, 6, 7, 19, 31, 32, 33, 40, 45 ஆகிய வரிசை எண்கள் கொண்ட 9 பதிவுகளில் சில மாற்றங்களைச் செய்து அவற்றையும்; (ஆக மொத்தம் 41 அதிகாரப் பதிவுகளை)நீக்கி அவற்றை மாநிலப் பட்டியலுக்கு மாற்றி விட வேண்டும்.

ஆக, இன்றைய அரசமைப்பின்படி மாநிலப் பட்டியலில் ஏற்கனவே உள்ள 65 அதிகாரங்களோடு (இன்றைய மத்திய அரசுப் பட்டியலிலிருந்து இனிப் பெற்றுக் கொள்ளும் 40 அதி காரங்களையும் இன்றையப் பொதுப் பட்டியலிலிருந்து இனிமேல் பெறும் 41 அதிகாரங்களையும்)சேர்த்து மொத்தம் 146 அதிகாரப் பதிவுகளோடு இனி உருவாகும். (தமிழக அரசின் கருத்துரைப் படி உருவாகும்) மாநில அரசின் அதிகாரப் பட்டியல் பெற்றுத் திகழும்.

இன்றைய மத்தியப் பட்டியலிலிருந்து 46,49,50,51,56, 68 ஆகிய 6 அதிகாரப் பதிவுகள் பொதுப் பட்டியலுக்குப் போய்விடும். மத்தியப் பட்டியலிலிருந்து மாநிலப் பட்டி யலுக்குத் தந்து விட்ட 40 பதிவுகளும் பொதுப் பட்டியலுக்குத் தரப்பட்ட மேற்சொன்ன 6 பதிவுகளும் நீங்கலாக மீதியுள்ள 52 அதிகாரப் பதிவுகள் மட்டுமே (தமிழக அரசுக் கருத்துரை களின் படி) "இனி வரும் மத்தியப் பட்டியலில்" இடம் பெறும்.

இன்றையப் பொதுப் பட்டியலிலுள்ள 47 பதிவுகளில், 41 பதிவுகள் மாநிலப் பட்டியலுக்குத் தந்த பின்னர் மீதியுள்ள 6 அதிகாரங்களோடும், மத்தியப் பட்டியலில் இருந்து நீக்கி, பொதுப் பட்டியலுக்குத் தரப்பட்ட 6 அதிகாரப் பதிவுகளையும்

சேர்த்து (தமிழக அரசுக் கருத்துரைகளின் படி) மொத்தம் 12 அதிகாரப் பதிவுகளோடு ''இனிவரும் பொதுப் பட்டியல்'' விளங்கும்.

ஆக, மாநில சுயாட்சிக்கு உறுதுணை செய்யும் வகையில் தமிழக அரசின் கருத்துரைகளால் சமைக்கப்படும் புதிய மத்திய அரசுப் பட்டியல் (இன்றிருக்கும் 98 அதிகாரங்களுக்கு மாறாக) 52 அதிகாரங்களையும், புதிய மாநிலப் பட்டியல் (இன்றிருக்கும் 65 அதிகாரங்களுக்கு மாறாக) 146 அதிகாரங்களையும் புதிய பொதுப் பட்டியல் (இன்றிருக்கும் 47 அதிகாரங்களுக்கு மாறாக) வெறும் 12 அதிகாரங்களையும் பெற்றுத் திகழும். பல பதிவுகளில் தமிழக அரசால் செய்யப்பட்ட நுணுக்கமான மாற்றங்களைப் பற்றி இங்குக் குறிப்பிடப்பட வில்லை.

மாநில சுயாட்சி பற்றித் தமிழக அரசு தந்த கருத்துரைகளில் கூறப்பட்ட மூவகை அதிகாரப் பட்டியல்களை நாம் ஆய்ந்து பார்த்தால், ''பாதுகாப்பு'', ''வெளிநாட்டு உறவுகள்'', ''மாநிலங்களுக்கிடையிலான செய்தித் தொடர்புகள்'' மற்றும் ''நோட்டச் சடித்தல்'' ஆகிய நான்கு அதிகாரங்கள் மட்டும் மத்திய அரசு பெற்றுக் கொள்ளும் பாங்கினையும், எஞ்சிய அதிகாரங்கள் உட்பட மற்ற அனைத்து அதிகாரங்களையும் மாநிலங்களே பெற்றுக் கொள்ளும் சீர்மையும் புலனாகும். மேலும், ''ஏற்றுமதித் தீர்வை உட்பட்ட சுங்கத் தீர்வையை''த் தவிர மற்ற அனைத்து வரி விதிப்பு அதிகாரங்களையும் மாநிலங்கள் பெற்றுக் கொள்ளும்.

## III

## அரசமைப்புத் திருத்தங்கள் — வெறும் கானல் நீர்

இன்றைய அரசமைப்பிலுள்ள மொத்தச் சட்டவிதிகள் 367-இல் இராசமன்னார் குழு செய்த பரிந்துரைகளும் தமிழக அரசின் கருத்துரைகளும் ஏறத்தாழ 90 சட்ட விதிகளைப் பாதிக்கின்றன. அவற்றோடு இணைந்த வேறு பல துணைச் சட்ட விதிகளையும் அவை தாக்குகின்றன.

இன்றைய அரசமைப்பின் அடித்தளக் கொள்கைகளை (வலிமையான மத்திய அரசுக் கொள்கையை)ப் பிரதிபலிக்கும் பல சட்ட விதிகள் அழித்தொழிக்கப்பட வேண்டிய நிலை ஏற்படுகின்றது.

மத்திய அரசின் மேலாண்மையை நிலைநாட்டும் வேறு சில சட்டவிதிகள் புதிய வடிவு பெறும் வகையில், திருத்தத்தைப் பெறுகின்றன.

மாநிலத் தன்னுட்சிக்கு உறுதுணையாக இன்னும் சில புதிய சட்டவிதிகளைப் புகுத்த வேண்டிய சூழ்நிலை உருவாகிறது.

இன்றைய மத்திய அரசின் வல்லாட்சி, மத்திய – மாநில உறவுகள், அவை சார்ந்த கோட்பாடுகள், நிதித் துறை, நீதித் துறை, நிர்வாகம், பொது ஒழுங்கமைதி, அரசியலமைப்புத் திருத்தம், ஆளுநர்கள், மத்திய நாடாளு மன்றம், குடியரசுத் தலைவரின் அதிகாரங்கள், மத்திய அமைச்சரவையின் ஆதிபத்தியம் ஆகியவற்றின் அடிப்படைக் கொள்கைகள் சிதறடிக்கப் படுகின்றன.

குறிப்பாக மத்திய அரசையும் மாநிலங்களையும் சார்ந்த இன்றைய அரசமைப்பின் அடித்தளக் கோட்பாடே முற்றிலும் சின்ன பின்ன மடைந்து விடும்.

சுருங்கக்கூறின், டாக்டர் இராசமன்னர் குழுவினுல் தரப்பட்ட வழி வகைகளோ அல்லது தமிழக அரசால் தரப்பட்ட கருத்துரைகளோ அமுலாக்கப்படும் வகையில் பல சட்டத் திருத்தங்களைச் செய்தால் இன்றைய அரசமைப்பின் நான்கில் ஒரு பகுதியும் அதன் அடிப் படைத் தத்துவமும் குலைந்து போகும்.

ஒருக்கால் இராசமன்னர் குழு அறிக்கையையோ அல்லது தமிழக அரசின் கருத்துரைகளையோ இன்றைய மத்திய அரசு ஏற்றுக் கொண்டு அவற்றை அரசமைப்புத் திருத்தங்கள் மூல மாகச் செயல்படுத்தினுல், இன்றைய அரசமைப்பு ஏறக்குறைய ''திருந்திய ஓர் அரசமைப்புப் படிவமாக'' (Revised Constitution) மாறிவிடும். சீர்குலைக்கப்பட்ட ஓர் அரசமைப்பைக் காட்டிலும் முழு மாநில சுயாட்சியையும், உண்மைக் கூட்டாட்சியையும் உள்ளடக்கிய புதியதோர் அரசமைப்பு, பொருத்த முடையதல்லவா ?

அனைத்திற்கும் மேலாக அவ்வகை அரசமைப்புத் திருத்தங்களை இன்றைய நிலையில் நடைமுறைப் படுத்த முடியுமா ?

முடியாது. ஏன்?

## அரசியல் காரணங்கள்

மத்திய-மாநில நிர்வாக அதிகாரங்களின் அளவைச் சுட்டும் சட்டவிதிகளையும், மத்திய அரசும் மாநில அரசுகளும் சட்டம் செய்வதற்குரிய அதிகாரங்களைப் பொறுத்த சட்டவிதிகளையும் (XI பகுதி முதல் அத்தியாயம்), மத்திய அரசின் அதிகாரப் பட்டியல், மாநிலப் பட்டியல், பொதுப் பட்டியல் ஆகியவற்றில் உள்ள அதிகாரப் பதிவுகளையும் (VII அட்டவணை), தலைமை நீதிமன்றம் மற்றும் உயர்நீதி மன்றத்தைப் பொறுத்த சட்ட விதிகளையும் முறையே V-ஆம் பகுதி 4-ஆம் அத்தியாயம், சட்டவிதி (241) அரசமைப்பைத் திருத்தும் சட்டவிதியையும் (368)திருத்துவதற்கு நாடாளு மன்றத்தின் ஒவ்வோர் அவை யிலும் வாக்குச் செய்யும் உறுப்பினர்களின் 2/3 பங்குப் பெரும் பான்மையும், ஒவ்வோர் அவையின் மொத்த உறுப்பினர்களில் பாதிக்கு மேற்பட்ட பெரும்பான்மையும் பெறப்பட வேண்டும்.

அத்தோடு அவ்வகைத் திருத்தங்களை மொத்த மாநிலச் சட்ட மன்றங்களில் பாதிக்கு மேற்பட்டவை ஏற்றுக் கொள்ளவும் வேண்டும்.

மற்ற, சட்டத் திருத்தங்களைச் செய்வதற்கு நாடாளு மன்றத் தின் ஒவ்வோர் அவையிலும் வாக்களிக்கும் உறுப்பினர்களில் 2/3 பெரும்பான்மையும் ஒவ்வோர் அவையின் மொத்த உறுப் பினர்களில் பாதிக்கு மேற்பட்டவர்களும் இசைவைத் தந்தால் போதும்.

90-க்கும் மேற்பட்ட சட்டவிதிகளின் திருத்தங்களைச் செய்ய நாடாளு மன்றத்தின் 2/3 உறுப்பினர்கள் ஒப்புதல் தருவார் களா? அப்படியே உரிய பெரும்பான்மையோடு நாடாளு மன்றத்தில் திருத்தங்கள் நிறைவேற்றினாலும் மத்திய அரசைத் தழுவி நிற்கும் பதினொரு சிறிய மாநிலங்கள் இவ்வகைத் திருத்தங்களை ஏற்க மறுக்கலா மல்லவா ?

பல வடபுலத்து மாநிலங்கள் தமது அரசியல் உயர்வைக் கருதி, அத்திருத்தங்களை ஏற்காமல் விடலா மல்லவா?

மத்திய அரசின் ஆளுங் கட்சியாக இன்றுவரை இயங்கி வரும் காங்கிரசுக் கட்சி, தன்னைத்தானே அழித்துக்கொண்டு இவ் வகைத் திருத்தங்களைச் செய்ய, நாடாளு மன்றத்தில் முன் வருமா?

உறுதியாக முன் வராது என்பதே உண்மை.

காங்கிரசுக்குப் பதிலாக மற்ற ஏதாவது ஓர் அகில இந்தியக் கட்சி, மத்திய அரசின் ஆளும் கட்சியாக வந்தாலும் மேற் சொன்ன திருத்தங்களை நிறைவேற்றத் தேவையான ⅔ பங்குப் பெரும்பான்மையைப் பெறுவது எளிதல்ல. அவ்வாறு பெற்ற லும் பனிரெண்டுக்கு மேற்பட்ட மாநிலங்களில் ஆளும் கட்சி யாக வரும் வாய்ப்பினை அக்கட்சி, தனித்துப் பெற முடியுமா என்பதும் ஐயத்திற்குரிய தாகும்.

மேலும், அத்துணை அகில இந்தியக் கட்சிகளுக்கும் உண்மைக் கூட்டாட்சியில் நாட்டமில்லை என்பதும் இங்கு நினைவு கூறத் தக்கது.

மத்திய அரசில் கூட்டணி அமைச்சரவை அமைந்து விட்டாலோ கேட்கவே வேண்டாம்; அவ்வகைத் திருத்தங் களைப் பற்றிக் கனவு கூடக் காண முடியாது.

இராசமன்னார் குழு பரிந்துரைகளின் அடிப்படையில் தேவையான அரசமைப்புத் திருத்தங்களை இன்றைய அரசமைப்பின் திருத்த முறை மூலமாகச் செய்ய இயலாமல் போகும்போது மாற்று வழிதான் என்ன?

அரசமைப்பைத் திருத்துவதற்கு வழிகூறும் இன்றைய 368-ஆம் சட்ட விதியையே மாற்றியமைப்பது தான் மாற்று வழி. ஆனால், அவ்விதியை மாற்றி யமைக்கவும் மேற்சொன்ன திருத்த முறையே கையாளப்படல் வேண்டும்.

அரசியல், பொருளாதார, வரலாற்றுக் காரணங்களுக்காக வும் வடபுலத்து மாநிலங்கள் "இந்தியா பிரிக்க முடியாத ஒன்றியம்" என்ற கொள்கையைக் காட்டி மற்ற மாநிலங்களின் மேல் ஆதிக்கம் செலுத்த விரும்புவதைத் தடுக்க முடியாது.

குறிப்பாக இந்தி மொழி பேசும் மாநிலங்கள் நிதி, நிர்வாக அழுத்தங்களை இந்தி பேசா மாநிலங்களின் மேல் செயல் படுத்தியே தீரும்; அதற்கு உறுதுணையாக இன்றைய மத்திய அரசை அவை பயன் படுத்திக் கொள்ளும். குறைந்த மக்கட் தொகையைக் கொண்ட சில சிறிய மாநிலங்களையும் தமக்கு ஆதரவாக அவை இழுத்துக் கொள்ளும்.

எனவே, இன்றைய அரசமைப்பில் அத்துணைத் திருத்தங் களைச் செய்வதற்கு அரசியல் காரணங்களும் குறுக்கே நிற்கின்றன.

## " அரசமைப்பின் கொடுங்கோன்மை " (DESPOTISM)

தமிழக அரசு நிறைவேற்றிய மாநில சுயாட்சித் தீர்மானத்தை அமுலுக்குக் கொண்டுவர வேண்டுமெனில் இராசமன்னார் பரிந்துரைகளுக்காகச் செய்யப்பட வேண்டிய திருத்தங்களைக் காட்டிலும் மிகுதியான திருத்தங்களைச் செய்ய வேண்டும் எனினும் அக்கருத்துக்களைத் தமிழக அரசு மத்திய அரசின் கருணைக் கண்ணோட்டத்திற்காக அனுப்பியுள்ளது. அஃதாவது மத்திய அரசின் மையப்புள்ளியான தலைமை யமைச்சருக்கு அக்கோரிக்கைகள் அனுப்பி வைக்கப் பட்டுள்ளன.

அதில் கண்ட திருத்தங்களை மத்திய அரசின் ஓர் அங்கமான அமைச்சரவை முதலில் ஆய்வு செய்து ஏற்றுக் கொண்ட பின்னர், மற்றோர் அங்கமான நாடாளு மன்றத்தில் முன் மொழியப்பட்டு அதனை நாடாளு மன்றமும் ஏற்றுக்கொள்ள வேண்டும்; அதன் பின்னர் மூன்ருவது அங்கமான குடியரசுத் தலைவர் அதற்குரிய இசைவினை வழங்கியபின் அவை அரசமைப் புத் திருத்தச் சட்டங்கள் என்ற செயல் வடிவத்தைப் பெறு கின்றன. சில திருத்தங்களை இந்திய மாநிலங்களில், பாதிக்கும் மேற்பட்ட மாநிலங்கள் ஏற்க வேண்டும்.

இதனையே சட்ட நுணுக்கத்துடன் கூறவேண்டுமெனில், மத்திய நிர்வாக அமைப்பும் (Executive), சட்டமியற்றும் அமைப்பும் (Legislative) அத்திருத்தங்களை ஒருசேர ஏற்றுக் கொள்ளும் நிலை உருவாக வேண்டும். இது இயலுமா?

இந்தியக் குடியரசு நாடாளுமன்ற ஜனநாயகத்தைப் பெற்றுள்ளது. எனவே, "நாடாளு மன்றமே" தலையாயது (Supreme); ஆனால் நாடாளுமன்றத்தில் பெரும்பான்மை பலத்தைப் பெற்றிருக்கும் "அமைச்சரவை", நாடாளு மன்றத்தையே ஆட்டிப் படைப்பதால் எந்தவொரு சட்ட மசோதாவையும் (குறிப்பாக அரசமைப்புச் சட்டத் திருத்த மசோதாவை) அந்த அமைச்சரவையே முன்னிலைப்படுத்தினு லன்றி நாடாளு மன்றத்தின் பெரும்பான்மை உறுப்பினர்கள் அந்த மசோதாவை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள் என்பது தெளிவு.

எனவே, அரசமைப்புத் திருத்தங்களைப் பொறுத்தவரை "நாடாளுமன்றத்தில் முதன்மை" (Parliamentary Supremacy) எனப்படுவது "அமைச்சரவையின் முதன்மை" (Supremacy of the Executive) என மருவி விடுகின்றது.

"ஒத்துக்கொள்ளப்பட்ட அரசமைப்பு வழிவகை" (Constitutional Process) என்ற பெயரில் "மத்திய அமைச்சரவையின் ஆதிபத்தியம்" நிலை நாட்டப்படுகின்றது. வேறு வார்த்தைகளில் இதனை "அரசமைப்பின் கொடுங்கோன்மை" (Constitutional Despotism) எனக் கூடக் கூறலாம்.

இந்நிலை நீடிக்கும் வரை அரசமைப்பின் வரையறைக்குள் நின்று முழு மாநில சுயாட்சியினை வழங்கும் அரசியல் சட்டத் திருத்தங்களைப் பெற முடியாது.

ஒருக்கால் நாடாளு மன்றத்தையும் குடியரசுத் தலைவரையும் அமைச்சரவையையும் ஆட்டிப் படைக்கும் வலிமை பெற்ற "தலைமை யமைச்சர்" என்ற நிறுவனம் மாநில சுயாட்சிக்குரிய அரசமைப்புத் திருத்தங்களை ஏற்றுக் கொண்டால் - அவர் சார்ந்திருக்கும் அரசியல் கட்சியையும், அக்கட்சியைச் சார்ந்த நாடாளு மன்றத்தில் பெரும்பான்மை உறுப்பினர்களையும், பாதிக்கும் மேற்பட்ட மாநிலச் சட்டப் பேரவைகளின் பெரும்பான்மை உறுப்பினர்களையும் அவரால் சரிசெய்து, தன் வழியில் இட்டுச் செல்ல முடியுமென்றால் மட்டுமே, இன்றைய அரசமைப்பின் வரையறைக்குள் நின்று மாநில சுயாட்சிக்குரிய அரசமைப்புத் திருத்தங்களை அடைய முடியும்.

நடைமுறையில் இது சாத்தியமல்ல. எனவே, இன்றைய அரசமைப்பு வரையறைக்குள் இயங்கி மாநில சுயாட்சியை அடைந்துவிட முடியுமென்பது வெறும் கானல் நீர் போன்றது.

## VI

## மாற்று வழி — புதிய அரசமைப்பே

இந்தியா போன்ற குடியரசுக் கூட்டாட்சி நாட்டில் மத்திய அரசே முழு இறைமையையும் பெற்றுக் கொள்கின்றதென்பது தவறானதோர் அடிப்படைக் கருத்தாகும். மாநிலங்களுக்கும் இறைமை பகிர்ந்தளிக்கப்பட வேண்டும். எனினும் இன்றைய இந்திய மாநிலங்களுக்கு "இறைமை இல்லை" என்று இறுதியான தீர்ப்பு வழங்கப்பட்டு விட்டது.

எனவே, இறைமை இழந்த மாநிலங்கள் மத்திய அரசிடம் கெஞ்சிக் கூத்தாடித்தான் மாநில சுயாட்சி அதிகாரங்களைப் பெற வேண்டுமா?

அல்லது அகில இந்திய ஒற்றுமை என்ற அரணுக்குள் நின்று, மத்திய அரசின் கருணை யின்றி, மாநில சுயாட்சியைப் பெற்றுக் கொள்வதற்குரிய மாற்று வழிவகை கிடையாதா?

ஏன் இல்லை? உறுதியாக உண்டு.

மாற்று வழியின் உயிர்க் கூறுகள் — "இறைமை"

அரசமைப்புத் தத்துவத்தின் ( Constitutional Philosophy ) ஆழத்தில் அம்மாற்று வழியின் உயிர்க் கூறுகள் நடைபோடுகின்றன. ஆனால் அவை இன்றைய "நிலையற்ற அரசமைப்பு" என்கிற மாயத் திரையால் மூடி மறைக்கப் பட்டுள்ளன. அம்மாயத் திரையை அகற்ற முடியா வண்ணம் இன்றைய மத்திய அரசு கட்டிக் காக்கின்றது. எனவே, மத்திய அரசு என்ற சூத்திரதாரியை ஒரு கணம் மறந்து இன்றைய அரசமைப்பு என்கிற மாயத்திரையைச் சற்றே நீக்கிப் பார்த்தால், முழு மாநில சுயாட்சியைப் பெறுகின்ற மாற்று வழியின் உயிர்க் கூறுகள் "இந்திய ஒற்றுமை" என்ற வட்டத்திற்குள்ளேயே இயங்கிக் கொண்டிருப்பதைக் காணலாம்.

குடியரசு நாட்டு மக்களிடம் என்றென்றும் நிலைத்து நிற்கும் "அரசியல் இறைமை" (Political Sovereignty) அதிகாரங்களே (மாநில சுயாட்சியைத் தரும்) உயிர்க் கூறுகளாகும்.

இன்றைய அரசமைப்பு, மாநில மக்களுக்குரிய அரசியல் இறைமையை மறுத்துவிட்டதாலேயே அவை முற்றிலும் மடிந்து விட்டதெனப் பொருளல்ல.

குடிமக்களின் அரசியல் இறைமை அதிகாரங்கள் என்பவை யாவை?

1. தமக்கேற்ற அரசமைப்பை இயற்றிக் கொள்ளும் பேரதிகாரங்கள் (Constituent Powers);

2. தமக்கேற்ற சட்டங்களை இயற்றிக் கொள்ளும் அதிகாரம் (Legislative Power);

3. தமக்குரிய ஆட்சியையும் நிர்வாகத்தையும் அமைத்துக் கொள்ளும் அதிகாரம் (Executive Power);

4. சமநீதியை வழங்கும் நீதிமுறையை அமைத்துக் கொள்ளும் அதிகாரம் (Judicial Powers);

5. தாமே இயற்றிய அரசமைப்புச் சட்டத்தில் காலத்திற்கும் சூழ்நிலைக்கும் ஏற்ற வகையில் திருத்தங்களைச் செய்து கொள்ளும் அதிகாரம் (Amending Powers);

முதலாவதாகக் கூறப்பட்ட "அரசமைப்பு அதிகாரங்களை" (Constituent Powers)ப் பயன்படுத்தி ஓர் அரசமைப்பை உருவாக்கி அதன் மூலம் மற்ற நான்கு வகை அதிகாரங்களையும் நிலைநிறுத்திக் கொள்ளும் ஏற்பாடுகளைச் செய்து கொள்கின்றனர் குடியரசு நாட்டு மக்கள்.

ஆனால் அரசமைப்பை உருவாக்கும் அதிகாரங்களை மட்டும் என்றும் தங்களிடத்திலேயே தக்க வைத்துக் கொள்கின்றனர்.

சட்டமியற்றுதல், நிர்வாகம், நீதி, அரசமைப்புத் திருத்தம் ஆகிய நான்கும் அரசமைப்பினுள் இருக்கும். ஆனால் அரசமைப்பு அதிகாரங்கள் மட்டும் அரசமைப்பிலிருந்து விலகி மக்களிடமே இருக்கும்.

அரசமைப்பு அதிகாரங்கள் என்பவை யாவை?

1. அரசமைப்பை உருவாக்குவதற்கோ அன்றி, மாற்றி அமைப்பதற்கோ, தேவையான அரசமைப்புச் சபை உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுதல்; அரசமைப்புச் சபையை அமைத்தல்;

2. அடிப்படை உரிமைகள் (Fundamental Rights);

3. வயது வந்தோர்க்கு வாக்குரிமை (Adult Franchise);

4. கூட்டாட்சி உரிமையை நிலைநாட்டும் மத்திய - மாநில உறவுகளை வரையறுத்தல்;

5. நீதி மன்ற மறு ஆய்வு (Judicial Review);

6. குடியரசுத் தலைமையின் நடுநிலை அதிகாரம்;

மக்களின் அடிப்படை உரிமைகளும் வாக்களிக்கும் உரிமையும் அரசமைப்புச் சபையை அமைக்கும் அதிகாரமும் நீதிமுறையும் குடியாட்சி முறையும், குடியரசு நாட்டின் மக்களுடைய அரசமைப்பு அதிகாரங்களாகும்.

அக்குடியரசு நாடே ''கூட்டாட்சி நாடா''கவும் அமையும்போது, அதிலிருக்கும் மாநில மக்களின் மொழி, இன, பண்பாட்டைப் போற்றும் மத்திய – மாநில உறவுகளும் அரசமைப்பு அதிகாரங் களாகின்றன.

நமது தலைமை நீதிமன்ற முன்னாள் நீதிபதியான, டாக்டர். கே. சுப்பாராவ் அவர்கள், அரசமைப்புத் தத்துவத்தைப் பற்றிக் கூறுகையில் மேற்சொன்ன கருத்துக்களைத் தெளிவாக்குகிறார்.

எனவே, கூட்டாட்சி நாட்டு மாநில மக்களிடம் நிலைத்து நிற்கும் அரசமைப்பு அதிகாரங்களின் அடிப்படையில் உருவாக்கப்படுவதே அந்நாட்டு அரசமைப்பிலுள்ள மாநில சுயாட்சியின் பருப்பொருளான ''மத்திய–மாநில உறவுகள்'' ஆகும். நிர்வாக வசதிக்காகவோ, மத்திய அரசுக்கு இயற்கை யாகவே இருக்குமெனக் கருதப்படும் அதிகாரங்களின் அடிப் படையிலோ ''மாநில சுயாட்சி'' அதிகாரங்கள் உருவாக்கப் படுவதில்லை.

முழு மாநில சுயாட்சி யென்பது மாநில மக்களிடம் என்றும் நிலைபெற்று இருக்கவேண்டிய''அரசமைப்பு அதிகாரமாகும்;'' ''இறைமை''யின் ஓர் அங்கமும் ஆகும்.

மாநில சுயாட்சி - எங்கள் பிறப்புரிமை

இந்தியத் துணைக் கண்டத்தில் வதிந்த பல்வேறு மொழி, இன மக்களின் ''அரசமைப்பை இயற்றும் அதிகாரங்களை'' ஆங்கிலப் பேரரசு அடிமைப்படுத்திக் கொண்ட காரணத் தினால், ''இந்திய நாடு விடுதலை பெற வேண்டும்; சுதந்திரம் எங்களது பிறப்புரிமை'' என்ற இறைமை தொக்கி நிற்கும் அரசியல் முழக்கங்கள் எழுந்தன. அவ்வகை உரிமைகளின் உயிரோட்டம் — இந்திய மக்களிடம் நிலைபெற்றிருந்த அரசமைப்பு அதிகாரங்கள்' தாம்.

''சுயராச்சியம்'' என்ற ஒரே ஒரு சொல்லின் மூலமாக இந்திய மக்களுடைய இறைமை அத்துணையும் அரசமைப்பு உரிமைகளும் சுட்டிக் காண்பிக்கப் பட்டன.

அதைப் போலவே இந்தியத் துணைக் கண்டத்தில் வதியும் மாறுபட்ட மொழி, இனம் சார்ந்த மாநில மக்களின் அடிப்படை அரசமைப்பு அதிகாரங்களை ''மாநில சுயாட்சி'' என்ற ஒரு சொல்

சுட்டுகின்றது. அது பிரிவினையைக் காட்டுவதல்ல. மாறாக, மாநில மக்களின் அரசமைப்பு அதிகாரத்தையே சுருங்கக் கூறி விளங்க வைக்கிறது.

எனவே, இந்தியக் குடியரசுக் கூட்டாட்சி அமைப்பில் உள்ள பல்வேறு மாநில மக்களின் மொழித்தேசிய இன உரிமைகளும் அவற்றைப் பேணிக் காக்கும் அதிகாரங்களும் - சுருங்கக் கூறின் மாநிலத் தன்னாட்சி அதிகாரங்கள் - மாநில மக்களது பிறப்புரிமை யாகும்.

இன்றைய இந்திய அரசமைப்பில் உள்ள எல்லா அரசாங்க அமைப்புக்களும் நிறுவனங்களும், இந்திய மாநில மக்களது அரசமைப்பு உரிமைகளைப் பயன்படுத்தியே அமைக்கப் பட்டவை. எனவே, இன்றைய அரசமைப்புக்குள் இருக்கும் ''மத்திய அரசு'' உள்ளிட்ட மற்ற எந்த ஒரு நிறுவனமும், அமைப்பும் மாநில மக்களது அந்த அடிப்படை அரசமைப்பு அதிகாரங்களை (பிறப்புரிமையை) அழித்துவிட முடியாது; பறித்து விடவும் முடியாது. அது என்றென்றும் மாநில மக்களிடமே நிலைத்து நிற்கக் கூடிய ஓர் நிரந்தரமான அரசுரிமை யாகும்.

கூட்டாட்சி நாட்டின் அரசமைப்பில் படைக்கப்படும் ''மத்திய - மாநில நெறிமுறை உறவுகள்'' என்ற ''மாநில சுயாட்சி''-அரசமைப்பாலோ அல்லது அரசமைப்பால் படைக் கப்பட்ட மத்திய அரசாலோ அல்லது அதன் அங்கங்களான குடியரசுத் தலைவர், நாடாளு மன்றம் போன்ற வேறு நிறுவனங் களாலோ சிதைக்கப்பட்டு விட்டால் அக்கூட்டாட்சியை அமைத்த மாநில மக்கள், தமது அரசமைப்பு அதிகாரங்களைப் பயன்படுத்தி அவ்வகையில் சிதைக்கப்பட்ட அரசமைப்பை எப்பொழுது வேண்டுமானாலும் திருத்திக் கொள்ளலாம்; அல்லது மாற்றியமைத்துக் கொள்ளலாம்.

ஒருக்கால் இன்றைய அரசமைப்புச் சட்டமே - அதன் ஒரு கூறான ''மத்திய அரசு'' என்ற ஓர் அமைப்பின் மூலமாக மாநில மக்களின் இறைமை உரிமையான 'மாநிலத் தன்னாட்சிக்கு''த் தடைச் சுவராக நின்றால்-மாநில மக்கள், தம்மிடம் தக்க வைத்துக் கொண்டிருக்கும் அரசமைப்பை இயற்றும் அதிகாரங்களைச் செயற் படுத்தி முழு மாநில சுயாட்சியுடன் கூடிய மெய்யானதோர் கூட்டாட்சி அரசமைப்பைப் புதிதாகப் படைத்துக் கொள்ள, அரசமைப்புத் தத்துவப்படி முழு உரிமை பெற்று விடுகின்றனர்.

இன்றைய அரசமைப்பு என்பது ஓர் இடைக்கால ஏற்பாடே தவிர மாநில மக்களது அடிப்படை உரிமைகளை என்றென்றைக்கும் நசுக்கி அழிக்கும் நிரந்தரமான ஓர் அடிமை ஒப்பந்தச் சாசன மல்ல; தேவை ஏற்படின் அதனை மாற்றி-புதியதோர் அரசமைப்பை உருவாக்கலாம்.

"சுயராச்சியம் எங்களது பிறப்புரிமை" என்ற விடுதலை முழக்கத்தைத் தந்தவர், பால கங்காதர திலகர் அவர்கள். அவர் இந்திய மாநிலத் தன்னாட்சி உரிமைகளைப் பற்றிக் குறிப்பிடும் போது,

"மராத்தியர்கள், பஞ்சாபியர்கள், வங்காளிகள் போன்றவர் கள் மாறுபட்ட தேசிய இனங்களைச் சார்ந்த மக்களாவர். அவர்கள் எல்லாரும் ஒரே தேசிய இனத்தைச் சார்ந்தவர்கள் என்று முடிவு கட்டுவது முற்றிலும் தவறான ஒன்றாகும்." 2

எனத் திட்டவட்டமாகக் கூறுகிறார்.

டாக்டர். கே. சுப்பாராவ் அவர்கள்,

"நடைமுறையில் இருக்கும் மேற்சொன்ன அரசமைப்பை இயற்றும் அதிகாரங்களைக் கடுமையாகச் சிதைத்தால் அது வெறும் அரசமைப்புத் திருத்தமாகாது; அடிப் படையான மாறுதல்களை ஏற்றுக் கொண்ட திருந்திய வடிவங் கொண்ட அரசமைப்பாக மாறி விடும்; புதிய தோர் அரசமைப்பு எனவும் அதனைக் கூற முடியாது. அவ்வகை மாற்றங்களை மக்கள், தங்கள் இறைமையைத் தாங்களே நேரடியாகப் பயன் படுத்தி அதற்கென அமைக்கப்படும் ஒரு தனி அரசமைப்புச் சபை (Special Constituent Assembly) மூலமாகவே அவற்றைச் செய்ய இயலும்."

என அரசமைப்புத் தத்துவத்தை எடுத்தியம்புகிறார்.

---

2 'Kasari' Dated 25-4-1901: Quoted in Swarajya. 18-4-1967. P. 2.

டாக்டர். கே. சுப்பாராவ் அவர்களது அரசமைப்புத் தத்துவத்தை விளக்கப் போந்த "சுயராச்சியா" இதழின் ஆசிரியர் அவர்கள்,

"அரசமைப்பு நிலையானது தான்; ஆனல், சாசுவதமான தல்ல; மக்கள் விரும்பும் காலம் வரை தான் அதன் தத்துவமும் நிலைத்திருக்கும்." 3

"Constitution is permanent, but not enternal, its philosophy subsists only so long as the people want it."

என அரசமைப்பின் கால வரையறையைக் கணித்துக் கூறுகின்ருர்.

எனவே, இன்றைய அரசமைப்புப் பெற்றெடுத்துள்ள மத்திய அரசின் வல்லாட்சிக்கும் கருணை உள்ளத்திற்கும் மாநில மக்களது பிறப்புரிமையான மாநில சுயாட்சி என்றென்றும் அடிமைப்பட்டவையா யிருக்க வேண்டுவது இல்லை. இன்று இருக்கும் அரசமைப்பில் இந்திய ஒற்றுமையை உள்ளடக்கிய மாநில சுயாட்சியை 'திருத்தங்கள்' மூலமாகப் பெற முடியா தெனில் இனி ஒரு புதிய கூட்டாட்சி அரசமைப்பின் மூலமாக, இந்திய ஒற்றுமையைப் பேணும் முழு மாநில சுயாட்சியைப் பெற்றுக் கொள்ளலாம்.

இன்றைய அரசமைப்பை, பல்வேறு அடிப்படையான சட்டத் திருத்தங்களால் சிதைத்து, முடமாக்கி உருத்தெரியா வண்ணம் மாற்றி யமைப்பதற்கு மாருக இந்திய ஒற்றுமையை அச்சாணியாகக் கொண்ட புதியதோர் முழுக் கூட்டாட்சி அரசமைப்பைப் படைத்துக் கொள்ளும் பிறிதோர் வழிவகையே இவண் கூறப்பட்டது. இன்றிருக்கும் அரைகுறைக் கூட்டாட்சி அரசமைப்பை இழிவுபடுத்தி அவமதிப்புச் செய்வதல்ல நமது நோக்கம்.

எனவே,

அமையட்டும் புதியதோர் அரசமைப்பு!

அதில் மலரட்டும் உண்மைக் கூட்டாட்சியும் முழு மாநில சுயாட்சியும்!!

அதன் வழி உருவாகட்டும் நிலையான இந்திய ஒற்றுமை!!!

---

3 Ibid, Note. I.

# 13. மலர்க மாநில சுயாட்சி

"அரசமைப்புச் சட்டத்தின் வரையறைக் குட்பட்டு, இந்தியாவின் ஒற்றுமையை உள்ளடக்கிய உண்மை யான ஒரு கூட்டாட்சி அமைப்பினுள் மத்தியத் தலையீடும் கட்டுப்பாடுகளும் இல்லாமல், இந்திய மாநிலங்கள் தன்னாட்சியுடன் இயங்குவதற்குத் தேவையான உரிமைகளையும் அதிகாரங்களையும் நல்கக்கூடிய புதியதோர் குடியரசுக் கூட்டாட்சி அரசமைப்பை உருவாக்குவோம்."*

இந்தியத் துணைக்கண்டத்திலுள்ள அனைத்து மாநிலங்களும் சம உரிமையையும், சம தகுதியையும், சமப் பிரதிநிதித் துவத்தையும் பெற்று, அம்மாநிலங்களில் வாழும் வயது வந்த குடிமக்கள் அனைவரும் வாக்குச் செய்து, புதிய அரசமைப்புச் சபை உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கட்டும்; சம உரிமை கொண்ட அம் மாநில மக்களின் பிரதிநிதிகள் முறையாகப் பங்கு பெறக்கூடிய "முழு இறைமை" வாய்ந்த ஓர் அரசியல் அமைப்புச் சபை உருவாகட்டும்.

ஆங்கு, அரசியல் கட்சிகளின் கட்டுப்பாட்டுக்கு அப்பாற்பட்ட புதிய சிந்தனைகள் மலரட்டும்; உரிமைக் குரல்கள் ஒலிக்கட்டும்; மாநில மக்களது வரலாறு சார்ந்த மொழி, இன, பண்பாட்டு உரிமைகளின் அடிப்படையில் நிலையான இந்திய ஒற்றுமை பிறக்கட்டும்.

நிலைத்த ஒற்றுமையை உள்ளடக்கிய இந்திய நாட்டின் பொது நலன்களைப் பேணிக் காத்ததற்குரிய "பாதுகாப்பு", "வெளி நாட்டு விவகாரங்கள்", "மாநிலங்களுக்கிடையிலான செய்தித் தொடர்புகள்" மற்றும் "நாணயமும் நோட்டு அச்சடித்தலும்" போன்ற மெய்யான வலிமையைத் தரும் அதிகாரங்களைச் சம தகுதியைப் பெற்ற அனைத்து மாநிலங்களும் கூட்டாட்சி

* *'மாநில சுயாட்சி' இந்நூலின் முதற் பகுதி, நான்காம் அத்தியாயம், பக்கம் 58—72 காண்க.*

அரசிற்கு (மத்திய அரசிற்கு) வழங்கட்டும். எஞ்சிய அதிகாரங்கள் உட்பட ஏனைய அனைத்து அதிகாரங்களையும் தம்மிடம் இருத்தி வைத்துக்கொண்டு அம்மாநிலங்கள் புதிய இந்தியக் குடியரசுக் கூட்டாட்சியில் ஒன்றாக இணையட்டும்.

அக்கூட்டாட்சி (மத்திய) அரசு இந்திய மண்ணில் வெளிநாட்டினரின் ஆக்கிரமிப்பைத் தடுத்து நிறுத்தும் ஆற்றல் வாய்ந்ததாகவும்; குடியரசு முறையை ஓம்பும் திறன் மிக்கதாகவும்; இந்திய சுதந்திரத்தைப் பேணிக் காக்கும் வல்லமையையும், திடத்தையும் பெற்றதாகவும்; இந்தியப் பொருளாதாரச் சிக்கல்களைத் தீர்த்து வைக்கும் செயல் திறனைப் பெற்றதாகவும்; வெளிநாடு மற்றும் உள்நாட்டு முதலாளித்துவம் மாநிலப் பொருளாதாரத்தில் ஊடுருவ இடம் தராத வலிமையைக் கொண்டதாகவும்; அனைத்து மாநில மக்களிடையே சமத்துவத்தையும் சமநீதியையும் தழைக்கச் செய்யும் சீரிய செயல் திட்பம் கொண்டதாகவும், அம்மாநிலங்களில் வாழும் பல்வேறு மொழித் தேசிய மக்களின் அரசியல், மொழி, இன, சமுதாயத் தனித் தன்மைகளையும் உரிமைகளையும் போற்றிப் பாதுகாக்கும் செல்வாக்கைப் பெற்றதாகவும், அமையட்டும்.

இந்தியக் குடியரசுக் கூட்டாட்சி நாட்டின் மத்திய அரசும் மாநில அரசுகளும் தத்தமக்குப் பிரித்தொதுக்கப்பட்ட அதிகார வட்டத்திற்குள் நின்று சுயேச்சையாகச் செயல்படும் வகையில் ''மத்தியில் கூட்டாட்சி, மாநிலத்தில் சுயாட்சி'' என்ற உண்மைக் கூட்டாட்சிக் கோட்பாடு அங்கு செயல்படட்டும்.

அடிமை நிலையகன்ற அத்தகையதோர் புதிய அரசியல் சூழ்நிலையில் இந்திய ஒற்றுமையையும் முழு மாநில சுயாட்சியினையும் உயிர்க்கூறுகளாகக் கொண்ட ஒரு குடியரசுக் கூட்டாட்சி அரசமைப்பு வரலாற்றிலேயே முதன் முறையாக உருவாகட்டும்.

புதிய அரசமைப்புச் சபையின் அனைத்து மாநிலப் பிரதிநிதிகளால் உருவாக்கப்பட்ட அந்த அரசமைப்பை ஒவ்வொரு மாநில மக்களின் குடியொப்பத்திற்கு (Referendum)த் தனித் தனியே விட்டு அவர்களது இசைவினைப் பெற்று, புதிய கூட்டாட்சி அரசமைப்பு முறையாக நிறைவேறட்டும்.

அதில் உண்மைக் கூட்டாட்சியும் முழு மாநில சுயாட்சியும் மலரட்டும்,

அக் கூட்டாட்சி அரசமைப்புத் தரும் முழு மாநில சுயாட்சியே,
வேற்றுமையில் ஒற்றுமை காண —
நாட்டுப் பிரிவினையைத் தவிர்க்க —
மெய்யான வலிவு கொண்ட மைய அரசைப் படைக்க —
சர்வாதிகாரத்தை ஒடுக்க —
குடியாட்சியை ஓம்ப —
ஆட்சி மொழிச் சிக்கலைத் தீர்க்க —
மத்திய அரசின் சுமை குறைய —
மையத்தின் அதிகாரக் குவியலைத் தடுக்க —
நிரந்தரமான அதிகாரப் பரவலாக்கத்தைப் பெற —
மத்திய - மாநில உறவுகள் சிறக்க —
மாநிலங்கள் சம தகுதியையும் சம உரிமையையும் பெற —
மாநிலங்களுக்கிடையே நிலவும் பொருளாதார ஏற்றத் தாழ்வைப் போக்க —
மாநிலங்கள் மைய அரசையே எப்போதும் அண்டிக் கிடக்காமல் இருக்க —

மாநிலங்களின் அடிமை நிலையையும் மிடிமையையும் ஒழிக்க —
மாநிலத்தில் தொழில்களை வளர்க்க —
மாநிலக் கடன் சுமையை மாற்றி யமைக்க —
மாநில நிதிகள் கொள்ளை போகாமல் தடுக்க —
மாநில மக்களின் மொழி, இன, பண்பாட்டு உரிமைகளைப் பேணிக் காத்திட —
மாநிலங்கள் இழந்துவிட்ட இறைமையை மீண்டும் பெற —
சமநீதி தழைக்க —
நிலையான இந்திய ஒற்றுமையை நிலைநாட்டிட —

உறுதியாக வழிவகை செய்யும்.

...மலர்க மாநில சுயாட்சி!



# தமிழ்-ஆங்கில-அருஞ்சொல் அகராதி

***********************

அகில இந்தியச் சேவைகள்—All India Services
அட்டவணை, இணைப்புப் பட்டியல்—Schedule
அதிகாரப் பங்கீடு—Division of powers
அதிகாரப்பரவலாக்கம்,
அதிகாரப் பரவல் முறை—Decentralisation
ஆட்சி அதிகாரங்கள்,
நிர்வாக அதிகாரங்கள்—Executive powers
சட்டமியற்றும் அதிகாரங்கள்—Legislative Powers
விருப்பு அதிகாரங்கள்,
உளத்தேர்வு அதிகாரங்கள்—Discretionary powers
தடை அதிகாரம்—Veto
எஞ்சிய அதிகாரங்கள்—Residuary powers
அதிகாரவர்க்கம்—Bureaucracy
அமைச்சரவை முறை—Cabinet System
அமைச்சரவையின் ஆலோசனை
மற்றும் உதவியுடன்—In aid and advice of Cabinet
அரசமைப்பு, அரசியலமைப்பு,
அரசமைப்புச் சட்டம், அரசியல் சட்டம்—Constitution
எழுதப்பட்ட அரசமைப்பு—Written Constitution
எழுதப்படா அரசமைப்பு—Unwritten Constitution
அரசமைப்புச் சபை, அரசமைப்பு
அவை, அரசியல் நிர்ணயசபை—Constitutional Assembly
அரசமைப்புச் சபை விவாதங்கள்—Constituent Assembly Debates (C. A. D.)
வரைவு அரசமைப்பு—Draft Constitution
அரசமைப்பு இயற்றும் அதிகாரம்—Constituent power
அரசு, அரசாங்கம்—Government
மைய அரசு, மத்திய அரசு—Central Government
மாநில அரசு—State Government
பொறுப்புள்ள அரசாங்கம்—Responsible Government
பிரதிநிதித்துவ அரசாங்கம்—Representative Government
அரசுப் பிரதிநிதி—Governor General
அரசுப் பிரதிநிதியின் குழு—Governor General in Council
ஆளுநர்—Governor

ஆளுநரின் குழு—Governor in Council
இசைவு—Assent
இணைப்பு ஆவணம், இணைப்பு
ஒப்பந்தம்—Instrument of Accession
இந்திய அரசுச் சட்டம் *1919*—Government of India Act 1919
இந்திய அரசுச் சட்டம் *1935*—Government of India Act 1935
இந்திய அரசுத் தலைமை வழக்கறிஞர்—Attorney General of India

இந்தியத் தலைமைத் தணிக்கை
அதிகாரி—Comptroller and Auditor General of India
இந்திய நிர்வாகச் சேவை—Indian Administrative Service (I. A. S.)

இந்தியக் காவல் சேவை—Indian Police Service (I. P. S)
இறைமை, இறைமை அதிகாரம்—Sovereignty
அரசியல் இறைமை—Political Sovereignty
சட்டம் சார்ந்த இறைமை—Legal Sovereignty
இனம்—Race
தேசிய இனம்—Nationality
உயிர்க்கூறு, சிறப்புக்கூறு—Factor
உரிமைகள்—Rights
அடிப்படை உரிமைகள்,
ஜீவாதார உரிமைகள்—Fundamental rights
அரசியல் உரிமைகள்—Political rights
சிவில் உரிமைகள்—Civil rights
சுய நிர்ணய உரிமை—Right of self determination
உருப்படி—Entity
அரசியல் உருப்படி—Political entity
வரலாற்றின் உருப்படி—Historical entity
உறுப்பு—Unit
அரசியல் உறுப்பு, அரசியல் பகுதிகள்—Political unit
நிர்வாகப் பகுதி, நிர்வாக உறுப்பு—Administrative Unit
ஒருமை—Uniformity
ஒற்றுமை—Unity
வேற்றுமையில் ஒற்றுமை—Unity in Diversity
ஒற்றையாட்சி அரசு—Unitary Government
ஒற்றையாட்சி நாடு—Unitary State
ஒற்றையாட்சி முறை—Unitary System
ஒன்றியம்—Union
இந்திய ஒன்றியம்—Union of India

கட்டுப்பாடு—Control
குடியரசு—Republic
குடியரசுத் தலைவர், ஜனாதிபதி—President
குடியாட்சி, ஜனநாயகம்—Democracy
ஆட்சி மொழி ஆணைக் குழு—Official Language Commission
இராசமன்னார், மைய-மாநில
ஆய்வுக்குழு—Rajamannar's Centre-State Relations Inquiry Committee
கற்றறிகுழு—Study team
கிரிப்ஸ் தூதுக்குழு—Crips mission
திட்டக்குழு—Planning Commission
தேசிய வளர்ச்சி மன்றம்,
தேசிய வளர்ச்சிக்குழு—National Development Council
தேர்தல் ஆணைக்குழு—Election Commission
நாடாளு மன்ற ஆய்வுக்குழு—Parliamentary Committee
நிதி ஆணைக்குழு—Finance Commission
நிர்வாக சீர்திருத்தக் குழு—Administrative reforms Commission
பிரிட்டானிய அமைச்சரவைத் தூதுக்குழு—British Cabinet Mission
மத்தியத் தேர்வு ஆணைக்குழு,
மத்திய அரசு ஊழியர் பொறுக்குக்குழு—Union Public Service Commission (U. P. S. C.)
மாநிலங்களுக் கிடையிலான
உறவு மன்றம்—Inter State Council
வட்டாரக் குழு, பிராந்தியக் குழு—Zonal Council
வல்லுநர்குழு—Expert Committee
குறிக்கோள் தீர்மானம்—Objective resolution
குறிப்பாணை—Despatch
குறிப்புரை—Memorendum
குறுக்கீடு, தலையீடு—Intereference
குறுநில மன்னர்களின் நிலப்பகுதி,
சமஸ்தானம்—Princely state
கூட்டாட்சி, இணைப்பாட்சி,
கூட்டாட்சி நாடு, இணைப்பாட்சி நாடு—Federation
கூட்டாட்சி அரசு—Federal Government
கூட்டாட்சி அரசமைப்பு,
கூட்டாட்சி அரசியலமைப்பு—Federal constitution

கூட்டாட்சிக் கொள்கை, கூட்டாட்சிக்
கோட்பாடு, கூட்டாட்சித் தத்துவம்—Federalism
கூட்டாட்சி முறை—Federal system
அரை குறைக் கூட்டாட்சி—Quasi Federation
நேசக் கூட்டமைப்பு—Confederation
கூட்டாட்சிகளின்
தளர்ச்சியான கூட்டமைப்பு—Confederated federation
கூட்டுறவுக் கூட்டாட்சி முறை—Co-operative federalism
சட்டம்—Act
சட்டவிதி, உறுப்பு, பிரிவு—Article
அவசரச் சட்டம்—Ordinance
மசோதா—Bill
சட்டப் பேரவை—Legislative Assembly
சட்ட மேலவை—Legislative Council
சட்டநிலை—Dejure
நிகழ்வு நிலை—Defacto
சமுதாயம்—Society
சாற்றுணை, பிரகடனம்—Proclamation
சீர்மைக் கொள்கை—Uniform Policy
சீராய்வு—Review
செய்தித் தொடர்புகள்—Means of Communication
தலையாயது, முதன்மையானது—Supreme
திட்டமிடுதல், திட்டம் தீட்டுதல்—Planning
சமுதாயப் பொருளாதாரத்
திட்டமிடுதல்—Social and economic Planning
வட்டாரத் திட்டங்கள்—Regional Plan
திருத்தம்—Amendment
அரசமைப்புத் திருத்தம்—Constitutional amendment
அரசமைப்பைத் திருத்துமுறை—Amending Procedure
தீர்வை—Duty
சுங்கத் தீர்வை—Customs duty
தேசிய நீர்வழித் துறை—National water ways
தேசியப் பெருவழித் துறை—National High ways
நச்சு வட்டம்—Vicious Circle
நாட்டுப் பற்று, தேசியம்—Nationalism
நாடாளு மன்றம்—Parliament
நாடாளு மன்றச் சனநாயக முறை—Parliamentary democracy

நாடு, மாநிலம்—State
நிதி மூலங்கள், நிதி ஆதாரங்கள்—Financial resources
தொகுநிதி—Consolidated fund
மத்தியத் தொகுநிதி—Consolidated fund of Union
மாநிலத் தொகுநிதி—Consolidated fund of the State
உயர்நீதி மன்றம்—High court
தலைமை நீதி மன்றம்—Supreme court
நெருக்கடி நிலை—Emergency
தேசிய நெருக்கடி நிலை—National emergency
மாநில நெருக்கடி நிலை—State emergency
நிதி நெருக்கடி நிலை—Financial Emergency
பட்டியல்—list
மத்தியப் பட்டியல், மத்திய அரசின்
அதிகாரப் பட்டியல்—Union list
மாநிலப் பட்டியல், மாநில அரசின்
அதிகாரப் பட்டியல்—State list
பொதுப் பட்டியல்—Concurrent list
பரிந்துரைகள்—Recommendations
பாதுகாப்பு—defence
மக்களவை—Lok Sabha
மாநிலங்களவை—Rajya Sabha
மத்திய அரசின் நிர்வாகப் பகுதிகள்—Union territories
மத்திய மாக்குதல், மைய மாக்குதல்—Centralisation
மறு ஆய்வு—Revision
தலைமாகாணம்—Presidency
மாகாணம்—Province
மாநிலம்—State
மாநில சுயாட்சி, மாநிலத் தன்னாட்சி—State Autonomy
மானியங்கள்—Grants
உதவி மானியங்கள்—Grants - in - aid
நிபந்தனை மானியங்கள்—Conditional grants
பங்கீட்டு மானியங்கள்—Matching grants
விருப்ப மானியங்கள்—Discretionary grants
முகப்பு, முகவுரை—Preamble
முகவர்—Agent
நிர்வாக முகவர்—Administrative Agent
மேலாண்மை, மேலாட்சி—Paramountcy

மேன் முறையீடு—Appeal
ஆட்சி மொழி—Official Language
இணைப்பு மொழி—Link Language
தாய்மொழி—Mother tongue
தேசிய மொழி—National Language
மாநில மொழி—State Language
வரி—Tax
வரி விதிப்பு—Tax levy
வரி வசூல்—Tax collection
கூட்டுருமவரி, கம்பெனி வரி—Corporation tax
சொத்து வரி—Estate duty
வருமான வரி—Income Tax
வாரிசு வரி—Succession duty.



# கருவி நூற்பட்டி (BIBLIOGRAPHY.)

—OOOOOOO—OOOOOOO—

## I. ENGLISH

### (A) Books.


Dr. Annadurai, C. N. — Carryon! But Remember!! 1969

Amalray — Inter-Governmental Relations in India-1966

Dr. Ambedkar, B. R. — Pakistan or Partition of India-1945

Anup chand Kapur — Principles of Political Science–1973; Select Constitutions-1971

Appadurai, A. — Speeches and Decuments of Indian Constitution-1957

Asok Chanda — Federalism in India–A Study of Union State Relations-1965

Bombwall, K. R. — The Foundations of Indian Fedaralism-1967

Coupland, R. — India–A Restatement-1945

Direndranath, Sen. — The Paradox of Freedom-1958

Farooqi, M. — Pakistan-Policies That Led to Break Up-1972

Gledhill — The Republic of India

Government of India-Ministry of Law and Justice — Constitution of India-1973

Ministry of Information and Broadcasting — India–A Reference Annual-1973;74

Haqqi, S. A. H. — Ed. Union State Relations in India-1967

Harrison, Seligs — India, The Most Dangerous Decades-1968

Ivor Jennigs : Some Characteristics of The Indian Constitution-1953

Jawaharlal Nehru : The Discovery of India-1947; An Autobiography; United India-1940

Jain, S. N.
Kashyap, Subhash, C.
Srinivasan, N. : Ed. The Union and the States-1972

Mahalingam, T. V. : South Indian Polity-1967

Mahajan, V. D. : Constitutional History of India-1971

Majumdar, R. C.
Rayachandhuri
Kalikinkar Datta : An Advanced History of India-1970

Michael Brecher : Nehru-A Political Biography-1969

Mohan Kumaramangalam: India's Language Crisis-1965

Dr. Munshi K. M. : Indian Constitutional Documents-Vol.I, Pilgrimage to Freedom-1967; Vol.II, Munshi Papers-1967; The President Under The Indian Constitution-1967

Noorani, A. G. : Ed. Centre-State Relations in India-1967

Panikkar, K. M. : A Survey of Indian History-1971

Pattabi Sitaramayya, B. : The History of Indian National Congress

Progress Publishers : Constitution (Fundamental Law) of the Union of Soviet Socialist Republics-1972

Pylee, M. V. : Constitutional History of India (1600-1950)-1972

Rajendra Prasad : India Divided-1947

Ramgopal : Linguistic Affairs of India-1966

Rao, K. V. : Parliamentary Democracy of India (A Critical Commentary)-1961

Raman Bombwall : Federal Financial Relations in India-1973

Ronald Segal : The Crisis of India-1971

Santhanam, K. : Transition in India-1964; Union-State Relations in India-1963; Federal Financial Relations in India and Other Essays-1967
Ed. The Record of Mrs. Indra Gandhi As Prime Minister-1973

Satyavarada Patel : World Constitutional law and Practice-1970

Sharma, B. M. & Chaudry, L. P. : Federal Polity-1967

Sinha, H. N. : The Development of Indian Polity-1963

Shiva Rao, B. : The Framing of India's Constitution-1968; A Study-Volumes, I, II, III & IV

Srinivasan, N. : Democratic Government in India-1954

Sriprakasa, : State Governors in India-1966

Subba Rao, K. : The Indian Federal System-1972

Tarachand, : History of The Freedom Movement In India-1971
Volumes I, II, III & IV

United News of India (U. N. I.) : India Today-(1970)

United states information Service : Outline of American Government-1957

Venkitarangaiya, M. : Federalism in Government

Wheare, K. C. : Federal Government-1971; Modern Gonstitution-1956.

## (B) REPORTS AND JOURNALS.

1. Constituent Assembly Debates volumes.
2. Report on Indian Constitution Reforms (Montagu Chelmsford) 1918.
3. Report of the Indian Statutory Commission-1930.
4. Report of the Joint-Committee on Indian Constitutional Reforms-1934.
5. Reports of Finance Commissions.
6. Report of the Study Team on Centre-State Relationships, Administrative Reforms Commission.
7. Report of the Administrative Reforms Commission on Centre-State Relations.
8. Report of the Centre-State Relations (Rajamannar) Inquiry Committee-1971.
9. Tamil Nadu Government' views on state Autonomy and the Rajamannar Committee Report.
10. All India Reporter-1963 Supreme Court.
11. Home Rule-Pongal Special-1969.
12. Madras Law Journal, II, 1974.
13. Swarajya Annuals.
14. Swarajya.
15. The States.
16. Weekly Round Table.

## II. தமிழ்

1. *அறிஞர் அண்ணா:* காஞ்சி பொங்கல் மலர்—1969.
2. *அபுல்கலாம் ஆசாத்:* இந்திய விடுதலை வெற்றி. (மௌலானா அபுல்கலாம் ஆசாத் சுய சரிதை—1961.
3. *அமைச்சர் சாதிக்பாட்சா,* S.J.: மாநில சுயாட்சி ஏன்?-1974.

4. *சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம்:* சட்ட மன்றத்தில் சுயாட்சிக் குரல்—1974.

5. *பார்த்தசாரதி, டி. எம்.:* தி. மு. க. வரலாறு—1973.

6. *மறைத்திரு. மறைமலை அடிகளார்:* இந்தி பொது மொழியா?—1971.

7. *முரசொலி மாறன்:* மாநில சுயாட்சி—1974.

8. *செய்தி - மக்கள் தொடர்புத்துறை, தமிழ்நாடு அரசு:* 'தமிழரசு' 10-10-1973; 'தமிழரசு' இணைப்பு 16-5-1974 மாநில சுயாட்சி.

9. *பணித்துறை வெளியீடு:* தமிழ்நாடு சட்டப் பேரவை நடவடிக்கைகள் (16-4-1974 முதல் 20-4-1974 முடிய) தொகுதி 56, எண்கள்: 1, 2, 3, 4, 5, 6).

10. மைய - மாநில உறவு ஆய்வுக் குழு அறிக்கை (இராசமன்னார் குழு)—1971.

11. மாநில சுயாட்சி பற்றியும், இராசமன்னார் குழுவின் அறிக்கை பற்றியும் தமிழ்நாடு அரசின் கருத்துரைகள்—1974.



# மலர்க மாநிலசுயாட்சி

ஒப்பற்றதோர்
ஆய்வு நூல்!
1200 பக்கங்கள்
கொண்ட
மாநிலத்
தன்னுட்சியின்
கலைக் களஞ்சியம்!



இந்திய
வரலாற்றில்
குடியரசில்
கூட்டாட்சியில்
அரசமைப்பில்
மாநில
சுயாட்சி!

நூலாசிரியரும் பேரறிஞரும்

ஆசிரியர்
**கே. எஸ். ஆனந்தம்,** பி. காம்., பி. எல்.
வழக்கறிஞர், கோபிசெட்டிபாளையம்.



வெளியீடு:
**தங்கம் பதிப்பகம்**
கோபிசெட்டிபாளையம்

## இந்நூலின் உள்ளே ...

''இந்தியக் குடும்பத்தின் ஒருமைப்பாடு எவ்வகையிலேனும் பேணிக் காக்கப்படல் வேண்டும்...... திரிபு இன்றி உயர்வு நவிற்சியை நீக்கி ஒரு சார்புநிலை தவிர்த்து நடுநிலை நின்று மாநிலத் தன்னாட்சியின் உண்மையான தன்மைகளை முறையாக ஆய்வு செய்து, தன்னிலை விளக்கம் தருதலே இந்நூலின் நோக்கம்......''

விரிவுக்கு அஞ்சி எதனையும் விடாமல்—தொகுப்புக்கு எஞ்சி எதுவும் குறைவுபடாமல் விரிவான விளக்கம் தரும் 1200 பக்கங்களைக் கொண்ட அருமையான நூல்.

அரசியல், வரலாறு, அரசமைப்பு, அயல் நாடுகளோடு ஒப்புமை, நிதி, சட்டம், சமுதாய வளர்ச்சி, இன்றைய அரசியற் சூழல், மாற்றுக் கருத்துக்கள் போன்ற ஒன்பது கோணங்களில் நின்று, மாநில சுயாட்சி பற்றி 1200 பக்கங்களில் செய்யப்பெற்ற திறனாய்வு!

ஐம்பெரும் பகுதிகள்; 52 அத்தியாயங்கள்; 306 துணைத் தலைப்புக்கள்!

நான்கு நற்சீர்த் தோற்றுவாய்கள்!

## இந்நூலினைப்பற்றி ....

''மக்களுக்கும் அரசியல்வாதிகளுக்கும்
விளக்கமளிக்கும் வண்ணம்
ஏராளமான எடுத்துக்காட்டுக்கள்—
மேதைகள் பலரின்
மேற்கோள்கள்—அடங்கிய
அருமையான கருவூலமாக இந்தப்
பெரிய நூல் விளங்குகிறது......''

— கலைஞர்.

○

''மாநில சுயாட்சிக்கான அறப்
போராட்டத்தில் ஈடுபடும் அறப்போர்
வீரர்கள் ஒவ்வொருவர் கையிலும்
இந்த நூல் ஒளிர்வாளாகத் திகழும்
என்பது உறுதி......''

— நாவலர்.

○

''பல்வேறு மாறுபட்ட கருத்துக்களைக்
கொண்ட அரசியல் வல்லுநர்கள்
எவரும் மறுக்கவொண்ணாது ஏற்குமாறு
அமைந்துள்ளது இந்நூல்......
கல்லூரிப் பாடநூலே போன்று
பகுதி பகுதியாக
விளக்கப்பட்டுள்ளது......''

— பேராசிரியர்.

தமிழக அமைச்சர் பெருமக்கள், கலைஞர், நாவலர், பேராசிரியர், மாதவன், சாதிக், கண்ணப்பன் ஆகியோரின் அரிய அணிந்துரைகள்!

சிலம்புச் செல்வரின் சீரிய சிறப்புரை!

அரசமைப்பு வல்லுனர் சந்தானம் அவர்களின் சத்தான கருத்துரை!

பல்கலைக் கழகத் துணைவேந்தரின் பாராட்டுரை!

தொழிலதிபர் கைலாசம் அவர்களின் கனிந்துரை!

112 நூல்களிலிருந்து திரட்டிப் பெறப்பட்ட நேரடி மற்றும் மறைமுகச் சான்றுகள்!

128 ஆன்றோர்களின் 342 மேற்கோள்கள்!

16 ஆய்வறிக்கைகளின் சாரம்; 18 புள்ளிவிவரப் பட்டியல்கள்!

ஒற்றையாட்சி—ரோசா மலர்!

கூட்டாட்சி—மலர் மாலை!

இன்றைய மாநில சுயாட்சி—சிவப்பு நிறம்கொண்ட பக்க வாட்டில் நகரும் ஒரு வகை மீன்! (நண்டு!) போன்றது.

*''இந்நூல் ஒரு வகையில்*
*சமஷ்டி—சுயாட்சி பற்றிய*
*அரசியல் சாத்திரம்...*
*இன்னொரு வகையில்*
*சுயாட்சிக் கிளர்ச்சி பற்றிய*
*சரித்திரம்......*
*சுயாட்சிக் கோரிக்கை—*
*கிளர்ச்சி பற்றிய ஆராய்ச்சி...*
*அவற்றின் வெற்றிக்கு*
*வழி வகுக்கும்*
*பிரச்சார நூல்......*
*'ஆயினும் கட்சி வழிப்பட்ட*
*வெறுப்புணர்ச்சி இந்நூலில்*
*இடம் பெறவில்லை.'*
*மாநில சுயாட்சியை*
*விரும்புவோர்—வெறுப்போர்*
*ஆகிய இரு திறத்தாரும்*
*இந்நூலை வாங்கிப்*
*படிக்க வேண்டுமென்பது*
*என் விருப்பம்......''*

— ம. பொ. சி.

மாநிலத் தொழில்கள்—அயர்லாந்தில் உள்ள பாம்புகள்!

இன்றைய அரசமைப்பில் மத்திய மாநில அதிகாரப் பகுப்பு அடிப்படைக் கொள்கைகள்—அலாவுதீனின் விளக்கு, பாம்புக் குத் தலை, மீனுக்கு வால், இருகோடுகள்!

இவை போன்ற 40-க்கும் மேலான சுவைமிகு உவமைகள்.

ஏராளமான எடுத்துக்காட்டுக்கள்!

அமெரிக்கா, இரஷ்யா, கனடா, ஆஸ்திரேலியா, சுவிட்சர் லாந்து, செர்மனி, பாக்கிஸ்தான், பங்களா தேஷ், அடிமை இந்தியா ஆகிய ஒன்பது நாடுகளில் கூட்டாட்சி, மாநில சுயாட்சி பற்றிய ஒப்பாய்வு.

மௌரிய, குப்த, தமிழக, முகலாய, ஆங்கிலப் பேரரசு, பண்டைய கிரேக்க நகர அரசுகள்—மத்திய மாநில உறவுகள்.

திராவிட முன்னேற்றக் கழகம், தமிழரசுக் கழகம், அகாலி தளம், வங்காள யூனியனிஸ்டுக் கட்சி, நீதிக் கட்சி ஆகிய மாநில அரசியற் கட்சிகள் 5; இந்திரா காங்கிரசு, பழைய காங்கிரசு, இந்திய முஸ்லீம் லீக், ஜன சங்கம், சுதந்திரா, சோசலிஸ்டு, வலது-இடது கம்யூனிஸ்டு ஆகிய அகில இந்தியக் கட்சிகள் 8; பாக்கிஸ்தான் முஸ்லீம் லீக், தேசிய அவாமிக் கட்சி ஆகிய இரு பாக்கிஸ்தானியக் கட்சிகள்—இவற்றில் மாநில சுயாட்சி பற்றிய கொள்கை—கோரிக்கை—விளக்கம்.

''இந்திய அரசியல் வரலாற்றில்
மாநில சுயாட்சி தொடர்ந்து
பிரச்சனையாக உருவாகி வந்துள்ள
சரித்திர நிகழ்ச்சிகளைக் கோவையாக
வடித்துத் தந்திருப்பது—
உலக நாடுகளின் அரசியல்
வரலாறுகளோடு ஒப்பிட்டு
மாநில சுயாட்சி வலியுறுத்தப்பட்டுள்ள
முறை—இந்திய அரசியல் சட்டம்
மாநில அரசுகளை—
அடிமைப்படுத்தும்—
அடிமைச் சாசனம் என அடுக்கிக்
காட்டி(யிருப்பது)—மாநில சுயாட்சி
பிரிவினை என்ற நச்சுவித்து அல்ல.
பிரிவினையைத் தவிர்க்கும்
நல்மருந்து என்று
நிலைநாட்டி(யிருப்பது)—
கடினமான பிரச்சனைகளை
எளிமையாக உள்ளத்தில்
பதியும்படி எழுதியிருப்பது
பாராட்டுதற்குரியது.

— செ. மாதவன்.

90 ஆண்டுகளில் மாநில சுயாட்சிக் கொள்கை தோன்றி, வளர்ந்து, எழுந்து, தாழ்ந்து, இறுதியில் 90 நாட்களில் வீழ்ந்துபோன சுவையான வரலாற்றுக் கதை.

இந்தி......யா? இந்தியா......வா? என்ற ஆட்சி மொழியில் மாநில சுயாட்சி—முழு ஆய்வு.

சுதந்திர இந்தியாவில் ஐந்தாண்டுத் திட்டங்கள், ஆட்சிமொழி, தொழில்கள், காங்கிரசுக் கட்சி ஆகியவற்ருல் சிதைந்த மாநில சுயாட்சி.

முஸ்லீம் லீக் கோரிக்கையில் மொழிவாரி மாநில உணர்வில், குறுநில மன்னர்களின் ஆட்சியில், ஆங்கில அரசின் திட்டங்களில், மாநிலத் தன்னுட்சியின் வளர்ந்த நிலை—அரசமைப்புச் சபையில் வீழ்ச்சியுற்ற அவலநிலை—இன்றைய இந்திய அரசமைப்பில் மாநில சுயாட்சியின் இழிநிலை—இந்திய அரசமைப்பு மாநிலங்களின் உரிமைப் பட்டயமல்ல, அடிமைச் சாசனம் என்பனவற்றின் தெளிவான விளக்கம்.

பாக்கிஸ்தான் வரலாற்றில், தங்க வங்கத்தின் தோற்றத்தில், பலுசிஸ்—பட்டாணியர் போராட்டங்களில், முழு மாநிலத் தன்னுட்சி வளர்ந்த நிலைபற்றி அகண்டதோர் ஆராய்ச்சி.

''இந்திய அரசியல் திட்டத்தில்
மத்திய அரசாங்கத்திற்கு
மீத மிஞ்சிய
அதிகாரங்களும் மாநிலங்களுக்குக்
குறைவான அதிகாரங்களும்
வழங்கப்பட்டிருக்கின்றன.
இவ்வதிகாரப் பிரிவினையைப் பற்றி
மிகவும் விரிவாக, திரு. ஆனந்தம்
தனது 'மலர்க மாநில சுயாட்சி' என்ற
நூலில் ஆராய்ந்திருக்கிருர்.
அரசியல் நிர்ணய சபையில்
நடைபெற்ற வாதங்களையும்,
பின்னர் இந்தியக்
கூட்டாட்சியைப்பற்றி
அவ்வப்பொழுது செய்யப்பட்ட
ஆராய்ச்சிகளையும் சான்றுகளுடன்
எடுத்துக் கூறியிருக்கிருர்.
பொதுவாக, இந்நூலில்
சொல்லப்பட்ட விளக்கங்கள்
நியாயமானவையே...''

— க. சந்தானம்.

ஆர்டிஞ்சின் ஆணை, கோகலேயின் கொள்கை, காங்கிரசு—லீக் ஒப்பந்தம், சாப்ரு, சீனிவாசன், மாளவியா, ஜின்னு ஆகிய 19 பேரின் அறிக்கை, 1919, 1935-ஆம் ஆண்டுகளின் அரசுச் சட்டங்கள், மோதிலால் நேருவின் அறிக்கை, லீக் மற்றும் ஜின்னுவின் தீர்மானம், ஆகாகான், இக்பால், ஹையத்கான், கப்லண்டு ஆகியோரின் தனித் தனித் திட்டங்கள்.

சைமன் அறிக்கை, வட்ட மேசை மாநாடுகள், காந்தி-இர்வின் ஒப்பந்தம், பொறுக்குக்குழு அறிக்கை, வெள்ளை அறிக்கை, கிரிப்ஸ் திட்டம் முஜிபுரின் ஆறு அம்சத் திட்டம், அபுல்கலாம் ஆசாத் திட்டம் முதலிய 22 அரசமைப்புத் திட்டங்களில் மாநில சுயாட்சியின் மலர்ச்சி.

காங்கிரஸ் கட்சியின் 1942 வெள்ளையனே வெளியேறு தீர்மானம், தேர்தல் அறிக்கை (1945), கிரிப்ஸ் அறிக்கையின் தீர்மானம், பண்டித நேருவின் குறிக்கோள் தீர்மானம், பட்டேலின் மத்திய அதிகாரக் குழுவின் முதலறிக்கை மற்றும் காங்கிரசின் பல்வேறு திட்டங்கள் ஆகியவற்றில் மாநில சுயாட்சி.

மாநில சுயாட்சி பற்றி அகில இந்தியக் காங்கிரசுக் கட்சியின் வைசலாட்டம்—முழு ஆய்வு.

''இந்நூலைப் படிப்பவர்கள் இந்திய,
மற்றும் அகில உலக
அரசியல் முறைகளை
உணர்ந்துகொள்வதோடு
இன்றைய தினம்
மைய அரசு எவ்வாறு அதிகாரக்
குவியலிடை அமைந்து
மாநில அரசுகளை
ஏவல் அரசுகளாக நடத்தி வருகின்றது
என்பதைத் தெளிவாகப் புரிந்து
கொள்வார்கள்......''

— மு.கண்ணப்பன்.

○

''மாநில சுயாட்சி பற்றிய
பொருளாய்வுக்கு பிஎச். டி. (Ph. D.)
பட்டம் வழங்கப் பல்கலைக் கழகங்கள்
முன்வந்தால், அத்தகைய பட்டம்
பெறுவதற்கு, இந்நூல் தகுந்த
அடிப்படை நூலாக அமையும்...''

— எஸ். ஜே. சாதிக் பாட்சா.

மாநில சுயாட்சியா? மாற்று வழிகளா? இராசாசித் திட்டம், அதிகாரப் பரவலாக்கம், நிர்வாகச் சீர்திருத்தக் குழு அறிக்கை, கூட்டுறவுக் கூட்டாட்சி, மாநிலங்களிடை உறவு மன்றம், இராசமன்னர் குழு அறிக்கை, தமிழக அரசின் கருத்துரை ஆகிய மாற்றுத் திட்டங்களின் திறனாய்வு.

இவ்வாறு பலதிறப்பட்ட கோணங்களில் ஆழ்ந்து ஆய்ந்து எழுதப்பட்ட எழுச்சிமிக்க புத்தகம்!

தன்னாட்சி எது? தனியாட்சி எது?

நிலையான இந்திய ஒற்றுமை பெற்றுவிட்ட முடிவா? பெற வேண்டிய இலக்கா?

மாநில சுயாட்சியற்ற இந்தியக் கூட்டாட்சி—மெய்யான கூட்டாட்சியா?

பிரிவினையைத் தடுப்பது எது?—குடியரசுத் தலைவர் அல்லது தலைமையமைச்சர் சர்வாதிகாரத்தை ஒழிப்பது எது?

வலிமைமிகு மத்திய அரசு என்றால் என்ன?

மத்திய மாநில உறவுகள் சிறக்க வழிகள் யாவை?

மாநிலங்கள் இறைமையைப் பெறும் முறை யாது!

''பொருள் விளக்கத்திற்கு
உவமை கூறி விளக்குவது
சிறந்த கலை. ஒற்றையாட்சி முறைக்கு
ரோசாமலரை ஒப்பிட்டுக் கூறி
விளக்கும் இடம் அதற்கொரு சான்று.
'அயர்லாந்தில் பாம்பு' போன்ற
இடங்களில் நகைச்சுவை
மிளிர்கிறது. இவைகளையெல்லாம்
பலமுறை படித்துப் படித்து
ரசிக்கலாம்......
''...நூலைப் பிரித்துப் படித்தால்
முடிவைப்பதற்கே மனம் வருவதில்லை...
நூலைப் படித்து முடித்தபின்
ஒரு நூல் நிலையத்தையே
ஆழ்ந்து கற்ற பிரமிப்பு வருகிறது...
இது ஒரு மாநில சுயாட்சிக்
கலைக் களஞ்சியம்......''

— வி. எம். கைலாசம்.

○

''தற்காலத்தில், அரசியல் உலகத்தில்
அடிக்கடி பேசப்பட்டு,
விவாதிக்கப்பட்டு வரும் ஒரு
பொருள் குறித்து இந்நூல்
விரிவாகவும் விளக்கமாகவும்
தெளிவாகவும் திண்மையுடனும்
எழுதப்பட்டுள்ளது......''

— நெ. து. சுந்தரவடிவேலு.

மாநில நிதிச் சிக்கல்களைத் தீர்க்கும் வகை என்ன?

நிலையான இந்திய ஒற்றுமையை நிலைநாட்டுவதெப்படி? அரசமைப்புத் திருத்தங்களினுலா? புதியதோர் அரசமைப்பினுலா?

அடுக்கடுக்கான இத்தொடர் வினுக்களுக்கு விடை என்ன?

ஒரே விடைதான்—அதுதான் இந்நூலின் ஆய்வுப் பொருளான—மலர்க மாநில சுயாட்சி!

நாட்டுப் பிரிவினை தவிர்க்க—

சர்வாதிகாரத்தைத் தடுக்க—

குடியாட்சியை ஓம்ப—

வலிமையான மைய அரசை உருவாக்க—

மத்திய மாநில உறவுகள் சிறக்க—

ஆட்சி மொழிச் சிக்கலைத் தீர்க்க—

நிலையான ஒற்றுமையை நிலைநாட்டிட—

இந்நூல் வழி வகை கூறுகிறது.

விலை ரூ. 45/-





கோவை மாவட்டம்.

அச்சிட்டோர்

மறைமலை அச்சகம்

புன்செய்ப் புளியம்பட்டி

கோவை மாவட்டம்